தமிழ்க் காப்பியம்

# சீவகசிந்தாமணி

மூலமும் உரையும்

முதல் பாகம்



கழக வெளியீடு

# சீவகசிந்தாமணி

## மூலமும் உரையும்

[முதற் பாகம்]


உரையாசிரியர்கள் :

திரு. புலவர் 'அரசு' அவர்கள்

பெருமழைப்புலவர்

திரு. பொ. வே. சோமசுந்தரனூர் அவர்கள்





திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

சென்னை 600 018.

புலவர் அரசு (1900)

பொன்னுசாமி வேலுத்தேவர் சோமசுந்தரன் (1909)



கிளைகள்

திருநெல்வேலி - 6 மதுரை - 1 கோயம்புத்தூர் - 1

கும்பகோணம் - 1 திருச்சிராப்பள்ளி - 2.

சேலம் - 1

கழக வெளியீடு 961

முதற் பதிப்பு : 1959

பதிப்பு 2 : 1968

பதிப்பு 3 : 1975

பதிப்பு 4 : 1977

பதிப்பு 5 : 1992

பதிப்பு-6 : திசம்பர் 1994

O 31, IC 81

N 94

CIVAKA - CINTAMANI

(Moolamum Uraiyum)

First Part

அப்பர் அச்சகம், சென்னை - 600 108.

# பதிப்புரை





சிந்தாமணி என்பது தேவருலகத்துள்ள பொருள்களில் ஒன்று. அது தன்பால் வந்து இரப்பார்க்கு வேண்டும் பொருள்களை யாண்டும் வழங்கும் இயல்புடையது. காமதேனு, கற்பகதரு, சங்கநிதி, பதுமநிதி இவையும் அப் பண்புடையன என இலக்கியம் கூறும். பொன்னுலகத்துப் புலவர்க்கு வேண்டும் பொருள்களை வழங்குவதற்கு மேற்காட்டிய ஐந்து பொருள்களும் ஆங்கு உள்ளன. மண்ணுலகத்துப் புலவர்க்கு வேண்டும் கல்விப் பொருள்களை இரவாமல் வேண்டியபோது கண்டு எடுத்துக் கொள்வதற்கு ஐம்பெருங்காப்பியங்கள் ஈங்கு உள்ளன. வளையாபதியும் குண்டலகேசியும் இன்னும் வெளிப்பட்டில. சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய மூன்றும் டாக்டர் உ. வே. சாமிநாதைய ரவர்கள் பெரு முயற்சியால் வெளிவந்துள்ளன. மூன்றினும் முதன்மையுடையது சிந்தாமணியே. முன்வைத் தெண்ணப்படுவதும் அதுவே. சிலப்பதிகாரமும், மணிமேகலையும் சிறந்தன எனினும் இத்துணை விரிந்த நூல்கள் அல்ல. பெருங்காப்பியச் சுவை நிறைந்த நூலாகப் புலவர் பலராலும் போற்றப்படுவது சிந்தாமணியென்னும் சிறந்த நூலேயாகும் என்பது தெளிவு. சிந்தாமணி - ஒளி கெடாத ஒரு மணி. இப்பெயர் இந்நூலிற்கு அமைந்ததற்குப் பல காரணம் இருப்பினும் ஒளிகெடாத ஒரு மணி போன்றது என்ற காரணமே இந்நூலுக்குப் பொருத்தமாகும். இந்நூல் தோன்றிய காலமுதல் புகழ் குன்றாதுநின்று நிலவுவதே அதனை புணர்த்தத் தக்க பெருஞ் சான்றாம்.

இந்நூல் நாமகள் இலம்பகத்தை மட்டும் முதலில் கி. பி. 1868-இல் ரெவரெண்ட். எச். பவர் என்பவர் பதித்து வெளியிட்டனர். பின்னர் நாமகள் இலம்பகம், கோவிந்தையார் இலம்பகம், காந்தருவதத்தையார் இலம்பகம் என்ற மூன்றும் நச்சினார்க்கினியர் உரை, பதவுரையுடன் சோடசாவதனம் தி. க. சுப்பராய செட்டியவர்கள் அவர்களால் பதித்து வெளியிடப்

பட்டன. அதன்பின் முதல் ஐந்து இலம்பகம் மூலம் மட்டும் ப. அரங்கசாமி பிள்ளை அவர்களால் கி. பி. 1883-இல் பதித்து வெளியிடப்பட்டது. கி. பி. 1887-இல் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் நூல் முழுவதும் நச்சினார்க்கினியர் உரையுடன் பதித்து வெளியிட்டனர். அப் பதிப்பு மிகவும் சிறந்ததாக விளங்குகின்றது. கி. பி. 1941-இல் சைவசித்தாந்த மகா சமாசம் இந்நூல் மூலம் மட்டும் பதித்து வெளியிட்டுள்ளது.

இந்நூலுக்கு நச்சினார்க்கினியர் நல்லுரை கண்டார் முதலில். அன்றுமுதல் இன்றுவரை அவ்வுரையே புலவர்கள் ஆய்ந்து பொருள்கண்டு வந்தனர்—வருகின்றனர்—வருவார். நச்சினார்க்கினியர் உரை சிறந்தது; தெளிவுடையது; நூலாசிரியர் கருத்தை நுணுக்கமாக எடுத்துக்காட்டுவது; புலவர்கள் எவரும் போற்றத் தக்கது என்பது மறுக்கமுடியாத உண்மையாம். ஆயினும் அது இன்ன சொல்லுக்கு இன்ன பொருள் என்பது காண இயலாத பொழிப்புரை; முறையான பொழிப்புரையும் அன்று; சுருக்கமாக உரை வரைந்துசெல்லும் இடங்களும் உள்ளன. இரு பாடல்களையும் இணைத்து மேல் கீழாக மாற்றி யுரை வரைந்திருப்பதும் காணலாம். பல பாடல்களைச் சேர்த்து மாட்டேற்றாக ஒரு பாடலில் இருக்கும் சொல்லை மற்றொரு பாடலுக்குக் கொண்டு கூட்டி யுரை வரைந்திருக்கும் இடங்களும் பல இருக்கின்றன. எவ்வாறு சொற்குப் பொருள்காண இயலும்? இவ்வுரை சிறந்த புலவர்கட்கே பொருத்தமானது. புலவர்களும் ஆய்ந்து காணும் அருமையுடையது; இளமை மாணவர் எளிதிற் பொருள் காண இயலாத தொன்று. நச்சினார்க்கினியர் உரையின் அருமை நாவலர்க்கெல்லாம் நன்கு தெரியும். அதனை எளிய புலவர் எங்ஙனம் பயில்வார்? இளைஞர்க்கு ஏற்ற வுரையும் அன்று.

இக்காலத்து இளைஞர்கள் எல்லா நூல்களுக்கும் எளிதிற் பொருள் காண முயல்கின்றார்கள் என்பதும், நச்சினார்க்கினியருரை நயத்தைக் கூறக்கேட்டு மெச்சுவாரேயன்றிக் கற்க நச்சுவார் எவரும் இலர் என்பதும் நாம் அறிந்தோம். சொற்பொருளும் விளக்கவுரையும் இந்நூலுக்கு எழுதிப் பதித்தால் எளிய புலவரும் இளைஞரும் கற்று நற்பயனடைவர் என ஆய்ந்தோம். எளிய உரைநடையிற் பொருளும் விளக்கமும் எழுதித் தரும்படி

இயம்பினேம். உயர்திரு. புலவர், "அரசு" அவர்கள் சொற் பொருளும் விளக்கவுரையும் எழுதி உதவினார்கள். பெருமழைப் புலவர் உயர்திரு. பொ. வே. சோமசுந்தரனார் அவர்கள் ஒவ் வோர் இலம்பகத்திற்கு முதலிற் கதைச் சுருக்கம் தெளிவாக வரைந்துதவினர். அன்றியும் பல பாடல்கட்குக் குறிப்புரையும் கொடுத்து உதவினார்கள். அவ்விருவர் உரைகளையும் ஆய்ந்து நன்முறையில் தொகுத்து இந்நாள் வெளியிடுகின்றோம்.

சீவக சிந்தாமணியிலுள்ள பாடல்கள் மூவாயிரத்திற்கு மேற்பட்டன. அவற்றுடன் சொற்பொருளும் விளக்கவுரையும் கூடும்போது பெரும் புத்தகமாகும். எடுத்துப் படிப்பார்க்குப் பெரும் பாரமாய்க் கைகளை வருத்தும். பலகையில் வைத்துப் படிப்பார்க்கே தகுதியுடையது. இரு கையில் வைத்துப் படிப் பார்க்கு ஏற்றதன்று என ஆய்ந்து எல்லாரும் எடுத்துப் படிக்கத்தக்க முறையில் இரு பகுதியாகப் பிரித்து அச்சிட எண்ணி, அம்முறையில் முதற் பாகம் இப்போது வெளி வந்துள்ளது. இரண்டாம் பாகமும் இனி வெளிவரும்.

இப் புத்தகத்திற் கடவுள் வாழ்த்து, அவையடக்கம், பதிகம் ஆகிய மூன்றும், நாமகளிலம்பகம் முதல் கேமசரியாரிலம்பகம் வரையுள்ள ஆறு இலம்பகங்களும் அடங்கியுள்ளன. பாடல்கள் மொத்தம் 1555 ஆகும். பாடல்கள் எல்லாம் புணர்ச்சி விதிப்படி வரைந்து சீர்மட்டும் பிரித்துக் காட்டப்பட்டுள்ளன. பாக்களில் உள்ள சொற்களைத் தனித்தனி பிரித்துக் காட்டி ஒவ்வொரு சொல்லுக்கும் பொருள் விளங்க நல்லுரை வரைந்திருப்பதனால் பாட்டிற் சொற்பிரிப்பது பயனற்றதென விடுத்தோம்.

செய்யுளைப் பிரித்தாற் சீருந்தளையும் எதுகையும் மோனை யும் சந்தமும் புணர்ச்சியிலக்கணமும் கெடும் என்பதைப் புலவர்கள் உய்த்துணரவேண்டும். செய்யுள் புணர்ச்சியிலக்கணப் படி பொருந்த நிற்பதுதான் சிறந்தது என்பது எமது கருத்து.

சொற்பொருளும் விளக்கமும் வரைந்த உயர்திரு. புலவர் "அரசு" அவர்கள் நச்சினார்க்கினியர் உரையைத் தழுவியே வரைந்திருக்கின்றனர். நச்சினார்க்கினியர் மாட்டேற்றாகப் பொருத்தமின்றி உரைவரைந்த இடங்களை எடுத்துக்காட்டி நூலாசிரியர் கருத்தோடு முரண்படு மாற்றையும் நுணுகி

யாய்ந்து விளக்கியிருப்பது பெரும் பயன் விளைக்கத்தக்கது. உயர்திரு. புலவர் பொ. வே. சோமசுந்தரனுர் அவர்கள் வரைந்த கதைச் சுருக்கம் கற்பவர்க்கு வழிகாட்டியாகத் துணைபுரி கின்றது. வேண்டும் இடங்கட்குக் குறிப்புரை எழுதி வேண்டா இடங்களை விடுத்துச் செல்வது மிகவும் நலம்பயப்பதாம். இலக் கணக் குறிப்பும், மேற்கோளும் எடுத்துக் காட்டியிருப்பது வித்துவான் புலவர் வகுப்புக்கட்குச் செல்லும் மாணவர்க்குப் பெரிதும் துணைபுரியும் என்பதிற் சிறிதும் ஐயமின்று. செய்யு ளும் உரையும் பிழையின்றிச் சீர்திருத்தமாகத் தொகுத்துப் பதித்திருக்கும் முறையும் புத்தகம் கட்டப்பட்டிருக்கும் முறை யும் கண்டோர் இதன் அருமை பெருமையையுணர்வார். இக் கால மாணவர்கட்கு ஏற்றவாறு ஆக்கியது இது.

புலவர் வகுப்பு, வித்துவான் வகுப்பு ஆகிய தேர்வுகட்குச் சிந்தாமணி பாடமாக இருந்தால் தனியே படித்துத் தேர்வுக்குச் செல்லத்தக்க துணையாகும் இது. நச்சினர்க்கினிய ருரையை எளிதில் அறிந்துகொள்ள உதவும். இன்ன சொல்லுக்கு இன்ன பொருள் என்பதை எடுத்துக்காட்டும் இவ்வுரை. இடர்ப்பா டின்றிப் பொருளை எளிதில் உணர்ந்துகொள்ளலாம். செய்யுளைப் படித்து மனப்பாடஞ் செய்வோர்க்குச் சீர் பிரித்துக் காட்டி யிருப்பது பெரிதும் உதவியாம். பெரும்புலவராக வருங் குறிக் கோள் உடையவர் எவரும் சிந்தாமணியைச் சிறப்பாகக் கற்றுப் பின் மற்றை நூல்களைக் கற்பதே நன்முறையாகும்.

சிந்தாமணி என்ற இந்நூலின் பொருளை எல்லாரும் உணர்ந்து உலகவாழ்வின் உண்மை தெரிந்து அறநெறியும் மறநெறியும் கண்டு நல்வாழ்வு வாழவேண்டும் என்பதே எமது குறிக்கோளாகும். அந் நோக்கத்தால் இதற்கு முன்னும் சிந்தாமணி வசனம், சிந்தாமணிச் சுருக்கம், சிந்தாமணி யாராய்ச்சி என்ற நூல்களைப் பதித்து வெளியிட்டனம். இன்றும் இந்நூற்கு எளிய இனிய உரைநடையில் சொற்பொருள், விளக்கம், குறிப் புரை வரைந்து பெரும் புத்தகமாக வெளியிடுகின்றோம்.

தமிழ்நாட்டு மக்கள் எல்லாரும் இந்நூலை வாங்கிக் கற்றும் கற்பித்தும் நற்பயன் எய்துவார்கள் என நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை


| | | பக்கம் |
|---|---|---|
| | பதிப்புரை | 5 |
| | அணிந்துரை | 11 |
| | நூலாசிரியர் வரலாறு | 23 |
| க. | கடவுள் வாழ்த்து | க |
| உ. | பதிகம் | எ |


நூல்


| | | |
|---|---|---|
| க. | காமகள் இலம்பகம் | உஉ |
| உ. | கோவிந்தையார் இலம்பகம் | உ௩ரு |
| ௩. | காந்தருவதத்தையார் இலம்பகம் | உ௮ரு |
| ௪. | குணமாலையார் இலம்பகம் | ௪கரு |
| ரு. | பதுமையார் இலம்பகம் | ௬௬க |
| ௬. | கேமசரியார் இலம்பகம் | எகஎ |

# அணிந்துரை

சீவக சிந்தாமணி என்பது செந்தமிழ் மொழியிற் சிறந்து திகழும் பழம்பெருங் காப்பியங்களுள் ஒன்று. பழைய காப்பியங்களிலே சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் இந்த ஐந்து காப்பியங்களையும் ஒருங்கே எண்ணி இவை ஐம்பெருங் காப்பியங்கள் என்று கூறுவாரும் உளர். ஐம்பெருங் காப்பியங்களுள்ளும் சிந்தாமணியையே முன்னிறுத்தி எண்ணியதன் நோக்கம் இவற்றுள்ளும் சிந்தாமணி தலைசிறந்ததாம் என்னும் கருத்தேயாதல் வேண்டும். காலத்தானோக்கின் சிலப்பதிகாரத்தையேமுற்படவைத்தல்வேண்டும்.

சிந்தாமணி என்பது இந்நூற்குத் தன்மையால் வந்த பெயர் என்பர் இலக்கண நூலோர் சிந்தாமணி என்பது நெஞ்சின்கண் பொதிந்து வைத்தற்குரிய சிறப்புடைய வொரு மணி போல்வது என்னும் பொருட்டு. புலனுழுதுண்போராகிய நல்லிசைப் புலவர்கட்கு வேண்டும் அறிவுப் பொருள் அனைத்தும் ஒருங்கே வழங்கும் பெற்றியுடையதாதலின் இப் பெருங் காப்பியத்தைச் சிந்தாமணி என்று போற்றுவது மிகவும் பொருத்தமே. இந் நூலின் கதைத்தலைவனாகிய சீவகனுக்கு அவனுடைய நற்றாயாகிய விசயமா தேவியார் முதன் முதலாக இட்டுவிளித்த பெயர் சிந்தாமணி என்பதேயாம். சீவகன் என்னும் பெயர் பின்னர் வானொலியாகத் தோன்றிய 'சீவ' என்னும் சொற்கொண்டு கந்துக்கடன் என்னும் வணிகனால் இடப்பட்ட பெயராகும். எனவே சிந்தாமணி என்னும் பெயரை ஆசிரியர் முதன்மையாகக் கருதி இந் நூற்குச் சிந்தாமணியின் சரிதம் என்றே பெயர் வழங்குவாராயினர்.

> "செந்தா மரைக்குச் செழுநாற்றங் கொடுத்த தேங்கொள்
> அந்தா மரையா ளகலத்தவன் பாத மேத்திச்
> சிந்தா மணியின் சரிதம்சிதர்ந் தேன்றெ ருண்டார்
> நந்தா விளக்குச் சுடர்நன்மணி நாட்டப் பெற்றே."

என்பது திருத்தக்கதேவர் திருமொழி.

இனி இந்நூலின்கண் சீவகன் மணந்து கொண்ட மகளிரின் வரலாறு கூறும் பகுதிகளை அவ்வவர் பெயரோடு கூட்டிக் காந்தருவதத்தையார் இலம்பகம் என்பன போன்று பெயர் கூறினாற் போன்றே சீவகன் சிறப்பிற்குக் காரணமான கலை செல்வம் நிலம் வீடு பேறு முதலிய நலங்களையும் மகளிராகவே உருவகஞ் செய்து நாமகள் முதலிய மகளிர்களையும் சீவகன் மணந்துகொண்டதாகத் தேவர் யாண்டும் இந்நூலில் திருமணக்

காட்சியே காணும்படி நூல் செய்திருத்தலின் இந்நூலை, 'மணநூல்' என்றும் வழங்குவதுமுண்டு.

இனி இன்னோரன்ன நூல்களைக் 'காப்பியம் என்று வழங்கும் வழக்குத் தமிழ்வழக்கன்று. இவ்வழக்கு வடமொழியாளருடைய வழக்கேயாகும். பண்டைத் தமிழிலக்கண நூலோர் இன்னோரன்ன நூல்களை வனப்பு நூல்கள் என்றே வழங்கினர். ஒரு நூல் ஒரு செய்யுளாலேயே முடிவதும் உண்டு. திருமுருகாற்றுப்படை முதலிய பத்துப் பாட்டுக்களும், தனித்தனியே ஒவ்வொரு செய்யுளாலேயே இயன்ற தனி நூல்களேயாகும். இனி நம் சங்க விலக்கியங்களிலே எஞ்சிய எட்டுத்தொகையும் பதினெண் கீழ்க்கணக்கும் பலப்பல செய்யுள்களாற் றொடர்புபட்ட வனப்பு நூல்களே என்றுணர்தல் வேண்டும். இந்த வனப்பியல் நூல்கள் எட்டுவகை வனப்புகளுள் தத்தமக்கு ஏற்கும் வனப்புகளை ஏற்பனவாம். அவ்வனப்புகள்,

"அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபு."

என வரும் இவ்வெட்டுமே யாம்.

இவற்றுள் நமது சிந்தாமணி தொன்மை என்னும் வனப்புப் பற்றி எழுந்த நூலாகும். தொன்மை என்பது பழையதொரு கதையைப் பொருளாகக் கொண்டு இயற்றப்படும் தொடர்நிலைச் செய்யுள் நூல் என்பர். பழைய கதை பொருளாகக் கொண்டு இயற்றப்பட்ட இவ்வகை வனப்பு நூல்கள் தொல்காப்பியத்திற்கு முன்னர்த் தமிழகத்திலே இருந்தன என்பது இந்த இலக்கண மிருத்தலாலே ஊகிக்கப்படுகின்றது. ஆனால் இந்தத் தொன்மை என்னும் இலக்கணத்திற்கு இலக்கியமாக இற்றைநாள் நமக்குக் கிடைத்துள்ள இச் சிந்தாமணி முதலிய வனப்புக்கள் எல்லாம் அவ்விலக்கணந் தோன்றியபின்னர்த் தோன்றிய நூல்களேயாம்.

இனி, இந்த எண்வகை வனப்புக்களில் சீவக சிந்தாமணி தொன்மை என்னும் வனப்பை அடிப்படையாகக்கொண்டு வேறு சில வனப்புக்களையும் உறுப்பாகக் கொண்டு திகழ்கின்றது. அவையாவன: அம்மை, அழகு, தோல் என்னும் இம் மூன்றுமாம். என்னை? இந்நூல், சின்மென் மொழியாலே ஐந்தடியின் ஏறாது அமைதிப்பட்டு நிற்கும் செய்யுட்களை உறுப்பாகக் கொண்டு அற முதலியவற்றிற்கும் இடையிடையே இலக்கணங் காட்டித் தாவிகடத்தலாலே 'அம்மை' என்னும் வனப்பையும், செய்யுள் மொழியாலே இரண்டு முதலிய சொற்களை இணைத்துக் கற்போர் உளத்தே என்றென்றும் நின்று நிலவும் மாண்புடைய இனிய சொற்றொடர்களை யாண்டும் தன்னகத்தே தாங்கி

திற்றலின், 'அழகு' என்னும் வனப்பையும், 'இழு'மென்னும் இனிய ஓசையமைந்த மொழியாலே அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு விழுமிய பொருள்களையும் உணர்த்திச் செல்லுதலின் 'தோல்' என்னும் வனப்பையும் தன்கண் உடைய தாகும் என்றுணர்க.

இந்த வனப்பினுள் வைத்தும், 'அழகு' என்னும் வனப்பிற்கு இச் சிந்தாமணிக்கு நிகர் சிந்தாமணியே யாகும். அழகு என்பது "செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல்" எனப்படும் செய்யுண்மொழி தேர்ந்து சீர்புணைந்து தொடைசெய்யும் ஒரு செயற்றிறமேயாகும் 'செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல்' என்று சொல் லுக்கு அடைதேர்ந்து தொடுத்த கம்பநாடரும் சிந்தாமணியின் செஞ்சொற் றொடைநினைந்தே இங்ஙனம் இனிதே மொழிந்தனர் என்று கருத இடனிருக்கிறது. கம்பநாடர் இயற்றிய பெருங் காவியம் ஏனைக் காவியங்களினும் சிறந்திருத்தற்குக் காரணம் சிந்தாமணியிற் கண்ட இத் தீஞ்சொற் காவியநடை அவர்க்கும் கைவந்தமையேதான். எனினும் கம்பநாடர் புனையும் செஞ்சொற் றொடையின்பங்கூட இந்தச் சிந்தாமணியின் செஞ்சொற்றொடை யின்பம் அளவு உயர்ந்து விடவில்லை. இவ்வகையிலே சிந்தாமணி தரும் செஞ்சொற் றமிழ்நடை யின்பத்தை வேறு எந்தக் காப்பி யத்தினும் கண்டு நுகர்தல் இயலாது. அத்தகைய பேரின்பந் தருவன தேவருடைய செய்யுணடை. இவ்விடத்தில் எடுத்துக் காட்டாக இன்பமே ததும்பி வழியும் தேவர் செய்யுணடையிலே ஒரு சில எடுத்துக்காட்டி மேற்செல்வாம். சிந்தாமணியின் சிறப்பிற்குத் தலைசிறந்த காரணமும் இதுவேயாகும். உலகம் 'மூவா முதலாவுலகம்,' மறைந்தாரை 'வெள்ளிவெண் கோனிரைத் தனபோற் கொழுந் தாரைகள்,' மாந்தர் 'தேர்ந்தநூற் கல்வி சேர் மாந்தர்,' துகில், 'ஆவியன்ன பூந்துகில்,' 'நுரை கிழித்தனைய நொய்ம்மை நுண்டுகில்,' 'பாலாராவிப் பைந்துகில்,' பீடு, பெண்வலைப்படாதவர் பீடின் ஓங்கிய அண்ணல்,' காமம் 'வாய்ப் பறையறைந்து தூற்றி யிடுவதே யன்றிப் பின்னும் இழுக்குடைத் தம்ம காமம்,' மழலை, 'மெய்பெறா எழுத்துயிர்க்கும் மழலை' குன்றிலிட்ட விளக்கு, 'குன்றில் கார்த்திகை விளக்கிட்டன்ன' சொல்வன்மை 'நாவினுள் உலகம் நடக்கும்,' போர்வை சிலம்பி வலந்ததுபோற் போர்வை. கறவை 'கன்றொளித்தகல வைத்த கறவை,' நடைவல்லார் 'பயங்கெழுபனுவல் நுண்ணூல் நடை யுளார் சொல்லிற் றெல்லாம்' கல்வி 'வாமனூர் வடித்த நுண் ணூல் உண்டு வைத்தனையரீ' சிறிது 'ஆலம் வித்தனையது,' வாய்மை 'தப்பில் வாய்மொழி,' நுண்பொருள் 'நூற்படு புலவன் சொன்ன நுண்பொருள்,' உவமை 'ஒளிநல வுப்புக் குன்றம்

ஊர்புனற் குடைந்ததே போல்; ஆடியுட் பாவைபோல்; சீருஞ் சிலம்பி நூலாற் சிமிழ்ப்புண்ட சிங்கம்' என்றின்னோரன்ன தீஞ்சொற் றொடைகள் இடந்தொறும் இடந்தொறுங் காணப் பட்டுக் கற்போர்க்குக் கழிபேரின்பம் நல்குவனவாம்.

இனி, சீவகசிந்தாமணியின்கண் சங்க இலக்கியங்களின் நலமெல்லாம் தகுந்த தகுந்த இடங்களிலே பொருத்தி அழகு செய்யப்பட்டிருக்கின்றது. தமிழருடைய ஒப்பற்ற நூலாகிய திருக்குறளைத் தகுந்த இடமறிந்து வித்தகம்படக் கையாண்டுள்ள திறத்திலே இச் சீவக சிந்தாமணியே தலைசிறந்து திகழ்கின்றது. தேவர் தமது இலக்கியத்திற்குத் திருக்குறளையே உயிராக அமைத்திருக்கின்றனர். மற்றும் பாட்டும் தொகையுமாகிய ஏனைய சங்க நூல்களினின்றும் எடுக்கப்பட்ட பொருளும் சொல்லும் சிந்தாமணியில் மிக நயமாகப் பொருத்தப்பட்டிருக் கின்றன. இன்னும் சிந்தாமணியின்கண் பண்டைக்காலத்து இலக்கிய நெறியாகிய அகப்புறப் பொருள் நெறிகள் பெரிதும் போற்றப்பட்டிருக்கின்றன. இக்காரணத்தால் பண்டைய உரை யாசிரியன்மார்க்கெல்லாம் சிந்தாமணி ஒரு சிறந்த எடுத்துக் காட்டு நூலாகவும் திகழ்வதாயிற்று.

இனி, கவிவரர் சுப்பிரமணிய பாரதியார் "திறமுடைய புலமை எனிற் பிற நாட்டார் அதை வணக்கஞ் செய்தல் வேண்டும்' என்று பாடியதற்கிணங்க நமது சிந்தாமணியை ஓதியுணர்ந்த பிறநாட்டறிஞர் அதுபற்றிக் கூறும் பாராட்டுரை ஒரு சில காட்டுதும்; காண்மின்,

"திருத்தக்கதேவர் தமிழ்க் கவிஞருள் சிற்றரசர்"

—வீரமாமுனிவர்.

இத்தாலியப் பேராசிரியர்.

"சீவக சிந்தாமணி இப்பொழுதுள்ள தலைசிறந்த தமிழிலக்கியச் சின்னமாகும்; தமிழ்ப்பெருங் காதற் காப்பியம்; உலகப் பெருங் காப்பியங்களுள் ஒன்று."

—டாக்டர் ஜி. யூ. போப்பு.

"சிந்தாமணி எல்லாத் தமிழ் இலக்கியங்களுள்ளும் பழைமை யுடையது. சமணத்தை விளக்குவதற்காக இயற்றப்பட்டது. அஃது இலக்கியச் சிறப்பு மிக்கது; இச் சிறப்பின்றேல் இது பண்டே மறைந்து போயிருக்கக்கூடும். அதன் ஆசிரியர் நடை ஒரு தனி நடையாகும். அஃது ஓர் உயரிய இலக்கிய நூலாக அமைந்துளது.

—ஜூலியேன். வேன்சோன்,

பிரஞ்சுப் பன்மொழி யாராய்ச்சியாளர்

சிந்தாமணி ஒரு சமணக் காப்பியமட்டுமன்று; தமிழ்ப் பெருங் காப்பியமட்டும் அன்று. அஃது உலகப் பெருங் காப்பியங்களிலே ஒன்று என்று பிற நாட்டாரானும் பாராட்டப் பட்டது நமது சீவக சிந்தாமணி என்க.

சீவக சிந்தாமணியின் கதைப்போக்கினைக் கூர்ந்துணரின் அது திருமால் சமயத்தவர் கதைகளில் ஒன்றாகிய கண்ணன் கதையையே பெரும்பாலும் ஒத்திருத்தல் காணலாம். சீவகனைக் கண்ணனாகவும் விசயையைத் தேவகியாகவும் சுநந்தையை யசோதையாகவும் சச்சந்தனை வசுதேவனாகவும் கந்துகனை நந்தகோனாகவும் கட்டியங்காரனைக் கஞ்சனாகவும் கொண்டு கதை நிகழ்ச்சிகளையும் நோக்கின் சீவகன் கதை கண்ணன் கதையையே அடியொற்றி நடத்தல் காணலாம்.

உலகத்திலே பற்றின்றியே எல்லாத் தொழிலினும் ஈடுபட்டு நல்வாழ்க்கை வாழலாம் என்பதற்குக் கண்ணன் கதை ஓர் எடுத்துக்காட்டாகும். கண்ணன் ஆயமகளிரோடு காம விளையாட்டுப் பல நிகழ்த்தினன்; போர் செய்தான்; அரசாட்சி செய்தான்; அன்பர்க்கு உதவினன்; மன்னுயிர் ஓம்பினன். இத்தனை தொழில்களும் செய்துகொண்டே அவன் பற்றின்றி மெய்வாழ்க்கை நடத்தினன் என்பதுதான் கண்ணன்பால் யாம் காணும் பெருந்தகைமை. இப்படிப்பட்டதொரு கதைத் தலைவனையுடைய கதை நமது சமயச்சார்பாக இருத்தல் நன்றென்று கருதிய ஆருகதச்சான்றோர் ஒருவரே அந்தக் கதையை அடியொற்றிச் சீவகன் கதையைப் படைத்திருத்தல் வேண்டும் என்று தோன்றுகிறது. முதன் முதலாக இந்தக் கதையைப் படைத்தவர் யார்? எக்காலத்தவர்? என்றெல்லாம் தெரிந்துகொள்ள முடியவில்லை. மிகப் பழைய காலந்தொட்டே ஆருகத சமயச்சார்பாக இந்தக் கதை வழங்கிவந்துளது என்றுமட்டும் தெரிகிறது. இந்தக் கதையைப் பொருளாகக் கொண்டு திருத்தக்கதேவர் சீவக சிந்தாமணியை இயற்றி யருளினர். சீவக சிந்தாமணி தோன்றியபின்னர், வடமொழி யிலும் இந்தக் கதை நூல்வடிவத்திலே தோன்றிற்று. வடமொழி யிலே சீவகன் கதை பொருளாகத் தோன்றிய நூல்கள் சத்திர சூடாமணி, கத்திய சிந்தாமணி, சீவந்தர நாடகம், சீவந்தரசம்பு என்பனவாம். மகாபுராணத்திலும், சீபுராணத்திலும் (மணிப் பிரவாள நடையில்) இக்கதை கூறப்பட்டிருக்கின்றது.

ஆராய்ச்சியாளர் சிலர் சீவக சிந்தாமணி கத்திய சிந்தாமணி யின் வழிவந்தது என்று கருதி, கத்திய சிந்தாமணியின் கால மாகிய ஒன்பதாம் நூற்றாண்டை யடுத்து இந்நூல் தோன்றி யிருத்தல் வேண்டும் என்று கூறுகின்றனர். சீவக சிந்தாமணியின்

செய்யுளிற் சில கத்திய சிந்தாமணியின் சுலோகத்தின் மொழி பெயர்ப்பாகத் தோன்றுவதையே இவர்கள் தங்கருத்திற்கு ஆதாரமாகக் கொள்வர். கத்திய சிந்தாமணியே சீவக சிந்தாமணிச் செய்யுள் சிலவற்றை மொழிபெயர்த்துக் கொண்டிருக்கலாம் என்று ஏன் கருதக்கூடாது? மேலும் சிந்தாமணி ஏழாம் நூற்றாண்டிற்கு முன்னரே தோன்றியிருத்தல் கூடும் என்பதற்கு வேறு சில சான்றுகளும் உள. அவைபாவன :

ஏழாம் நூற்றாண்டினராகிய திருநாவுக்கரசர் சமணரான வரலாற்றினை யாவரும் அறிகுவர். திருநாவுக்கரசர் தமது தேவாரத்தின்கண் உலகவாழ்வையே பெரிதென நம்பி இறைவனைக் கருதாதார் வாழ்க்கை பயனிலா வாழ்க்கை என்னும் கருத்தமைய ஒரு பாட்டில் திருத்தக்கதேவர் இயற்றிய நரி விருத்தத்தைக் குறிப்பிடுகின்றனர். அது,

"எரிபெ ருக்குவர் அவ்வெரி ஈசன
துருவ ருக்கம தாவது ணர்கிலர்
அரிய யற்கரி யானையயர்த் துப்போய
நரிவி ருத்தம தாகுவர் நாடரே."

என்பதாம் நரி விருத்தங் கூறியாங்கு வீண் போகுவர் என்பது இதன் கருத்தென்க. திருநாவுக்கரசர் தருமசேனர் என்னும் பெயரோடு ஆருகதசமயத்துத் தலைமை தாங்கியபொழுது நரி விருத்தத்தை நன்கு படித்துச் சுவைத்திருத்தல் கூடும். அங்ஙனமே சீவக சிந்தாமணியையும் திருநாவுக்கரசர் பயின்றிருப்பர் என்பதற்கு அவருடைய தேவாரங்களிலேயும் சீவக சிந்தாமணியின் தமிழ்மணங் கமழ்தலான் உணரலாம்.

"குஞ்சி நமைத்த பூந்தாமந் தோய" என்பது சிந்தாமணி.

"தம்மால் நமைப்புண்ணேன்" என்பது தேவாரம்.

இனி நமது சங்க விலக்கியங்களின்கட் காணப்படுகின்ற தமிழ்நடைக்குச் சீவக சிந்தாமணி நெருங்கிய தொடர்புடையதாதல் போன்று தேவார முதலியன நெருக்கமுடையனவாகக் காணப்படவில்லை. சீவக சிந்தாமணியைப் பின்பற்றிய நடையுடையனவேயாகும் தேவாரம் திருவாசகம் திவ்வியப் பிரபந்தம் முதலியன என்பதனை நன்கு தமிழ்ப் பயிற்சியுடையோர் உணர்தல் எளிதேயாகும். இவற்றிற்கெல்லாம் பற்பல எடுத்துக் காட்டுகள் கூறலாமாயினும் விரிவஞ்சி விடுகின்றும்.

இன்னும் திருநாவுக்கரசர் காலத்திற்குப் பின்னர் ஆருகத சமயம் பெரிதும் அழிவில் எய்தியதென்பதும் எல்லோருமறிந்த செய்தியே. அழிவில் எய்தியதொரு சமயச்சார்பாக இத்தகைய அரும்பெருங் காவியம் தோன்றுதல்கூடும் என்று நினைப்பது

தகுதியாகாது. ஆருகத சமயத்தின் பொற்காலம் கடைச்சங்க காலத்தின் இறுதியாகிய கி. பி. இரண்டாம் நூற்றாண்டிற்குப் பின்னும் தேவாரகாலமாகிய ஏழாம் நூற்றாண்டின் முன்னும் ஆகிய ஏறக்குறைய நானூறு ஐந்நூறு ஆண்டுகளேயாகும். இந்தக் காலத்தைக் காவியக்காலம் என்றும் கூறலாம். பெருங்கதையும் ஒப்பற்ற சிலப்பதிகாரமும் மணிமேகலையும் சிந்தாமணியும் பிறவுமாகிய மிகச் சிறந்த பெருங்காப்பியங்கள் இந்தக் காலத்திலேதான் தோன்றின. சமணசமயச் சான்றோராகிய கொங்குவேளிரே முதன்முதலாகக் காவியங்கட்குக் கால்கோள் விழாச் செய்தவர் ஆவர். கொங்குவேளிரும் இளங்கோவடிகளும் சீத்தலைச்சாத்தனாரும் பண்டைய அகப்புறநெறித் தமிழிலக்கிய மரபினின்றும் காவிய நெறியைக் காட்டி ஒரு புரட்சி அல்லது புதுமையைத் தோற்றுவித்தனர். இம் மூவரும் செய்யுள்நடைத் திறத்தில் பண்டைய மரபினையே பின்பற்றிக் காவியம் செய்தனர். திருத்தக்கதேவர் அந்தப் புதுமையின் மேலும் ஒரு புதுமை செய்தனர். பழைய செய்யுட் போக்கையும் மாற்றிப் புதியதொரு நெறியைப் படைத்துக் கொண்டுவிட்டனர். தேவர்க்குப் பின் இற்றைநாள்காறும் நந்தமிழன்னை தேவர் காட்டிய அப்புது நெறி பற்றியே இனிதின் நடப்பாளாயினள்.

தேவர்க்குப் பின்னர், காலப்போக்கிலே தோன்றிய நல்லிசைப் புலவர் பலரும் தேவருடைய அடிச்சுவடுபற்றியே பெரிய-சிறிய-வனப்பு நூல்களைப் படைத்தளிப்பாராயினர். சிந்தாமணிக்குப்பின் தோன்றித் தமிழகத்திலே சிறப்புற்றுத் திகழும் இலக்கியமனைத்திலும் சீவக சிந்தாமணியின் நறுந் தமிழ்மணம் விரவியிருத்தலைக் காணலாம். தேவர் நெறிபற்றிக் காப்பியமியற்றிய நல்லிசைப் புலவர்களில் கம்பநாடரே தலைசிறந்தவர் என்னலாம். கம்பநாடரின் பெரும் புகழுக்குத் திருத்தக்கதேவர் செய்தருளிய சீவக சிந்தாமணியும் ஒரு காரணம் என்பது மிகையன்று.

இனி, திருத்தக்கதேவர் தாம் மேற்கொண்டிருந்த துறவு நெறிக்குத் தகத் தமது இளமையிலேயே இயற்றிய சிறு நூலாகிய நரிவிருத்தம் தன்னகத்தே அரிய மணிகள் பலவற்றைக்கொண்டு திகழ்கின்றது. நரி விருத்தத்திலே ஒரு பாட்டு நந்தேவர் சீவக சிந்தாமணியைச் செய்தருளியதற்குரிய காரணத்தைக் குறிப்பாகத் திறம்பட வுணர்த்துகின்றது. அது,

"பற்றுளம் அகல நீக்கிப் பாசிழைப் பரவை யல்குற்
பொற்றொடி மகளிர்தங்கள் புணர்முலைக் குவட்டின் வைகிச்
சுற்றத்தார் சுற்ற வாழ்தலன் றெனின் துறந்து போகி
நற்றவம் புரிவில் லாதார் நடலை நோய்க் கடலுள் ஆழ்ந்தார்."

(நரி விருத்தம் : ௩௮)

என்பதாம். தேவர் காட்டும் ஆருகத சமயநெறி, பிற்காலத்தே காணப்பட்ட வறட்டுச் சமணநெறி போன்றதன்று. அருளுடைய திருக்குற ணெறியையே பெரிதும் தழுவியதென்று தெரி கின்றது. பற்றுளம் அகலநீக்குதல் ஒன்றே குறிக்கோள். மனிதன் அரசனுயிருக்கலாம்; அறநெறி பிறழாமல் போரிட லாம்; மகளிரை மணக்கலாம்; குறிக்கோளைமட்டும் மறந்து விடாமே இருத்தல் வேண்டும். காமஞ்சான்ற கடைக்கோட் காலைத் துறந்துபோய் நற்றவம்புரிதல் சாலும் என்பது தேவர் கொள்கை என்று தெரிகிறது. இந்தக் கொள்கையையே தேவர் இம் மாபெருங் காப்பியத்திலே உலகினர்க்கு விரித்து விளம்பி யிருக்கின்றனர்.

ஆயர்பாடியிலே கண்ணன் பற்றின்றியே மகளிர் பலரை மணந்து மெய்வாழ்க்கை காட்டினாற்போன்று சீவக சாமியும் எண்மர் மகளிரை மணந்தும் பகையை வென்றும் அருளாட்சி நடத்துகின்றான். கூர்த்த உணர்வுடையோன் ஆகலின் மிக விரைவிலேயே அவன் மெய்யுணர்ந்து விடுகின்றான். தவத்தின் முன்னர் இப் பேருலகம் ஒரு சிறு ஐயவித்துணையும் ஈடாகாது என்றுணர்ந்து விடுகின்றான். உணர்ந்தவுடன் படநாகம் தோலுரித்தாற் போன்று உலகத்தை உதறித்தள்ளி வீடுபேறடை கின்றனன். ஒவ்வொரு மனிதனும் இந்தச் சீவக சாமியைப் போலவே வாழ்ந்து கடைத்தேற வேண்டும் என்பதே அடிகளார் இந்தக் காப்பியத்தாலே உலகினர்க்குச் செய்யும் செவியறிவுறூஉ ஆகும் என்க.

ஒரு காப்பியம் மக்கள் உள்ளத்தை எதனாலே அள்ளிக் கொள்ள வல்லதாகின்றது என்னும் உண்மை ஒன்றனைத் திருத்தக்கதேவர் நன்குணர்ந்தவர். காவியங்களிலே அவலச் சுவைமட்டுமே மாந்தர் நெஞ்சத்தை உருக்கி வார்த்துவிடும் பண்புடையதாகும். மற்றொரு தேவராகிய தோலாமொழித் தேவருந்தாம் பெருங்காப்பியம் செய்திருக்கின்றனர். இந்த நுணுக்கத்தை அவர் சிறிதும் அறிந்திலர் என்றே தோன்று கின்றது. சூளாமணி முழுவதையும் படித்தாலும் ஒரு துளி கண்ணீர் சுரவாது. இஃது என்ன நுபவம். சிந்தாமணியிலோ தேவர் முதலிலம்பகத்திலேயே அவலச் சுவையினாலே கற்போர் நெஞ்சத்தைப் பாகாக உருக்கிவிடுகின்றார். பாவம்! முடிமன்னன் பெருந்தேவி யாருந் துணையின்றி "உண்டென வுரையிற் கேட்பார் உயிருறு பாவ மெல்லாம் கண்டினித் தெளிக" வென்று காட்டு வான்போல ஆகி, நெருநல் வரையில், அரண்மனையிலே தேவர் மகளிர் என மகிழ்ந்திருந்தவள் வெண்டலை பயின்ற சுடுகாட்டிலே தமியளாகிச் சீவக சாமியை ஈன்றெடுக்கும் நிகழ்ச்சிபோன்ற

அவலச்சுவைக்கு உறைவிடமான பகுதியை நான் வேறெந்தக் காப்பியத்திலும் கண்டதில்லை. இந்தப் பகுதியை நினைத்தாலே என் கண்ணில் தொடுமணற் கேணியிற் சுரந்து நீர்பாய்வது அநுபவத்தாற் கண்ட வுண்மை. இந்தச் சுவையே கற்போருளத்தே காலூன்றி நின்று இந்தக் காவிய முழுதிற்கும் சுவை பயந்து நிற்கின்றது. பின்னர் யாண்டும் பெரும்பாலும் காமச் சுவையே பேசிக் களிப்பூட்டக் கருதிய தேவர் இந்த நூலின் முதலிலம்பகத்திலேயே ஒப்பற்ற அவலச் சுவையைத் தேக்கி வைத்திருப்பது அவருடைய தெய்வத்தன்மையுடைய புலமைத் திறத்தை நன்கு விளக்குகின்றது.

இனி இந்த நூலிலே காமநெறி படர்ந்து கேடுறுவார்க்கு எடுத்துக்காட்டாகக் கதைத் தலைவன் தந்தையாகிய சச்சந்தனே அமைகின்றனன். மற்றுச் சுடுகாட்டிலே பிறந்த நம்பியோ பல்வேறு மகளிர்களை மணந்தும் பற்றுள்ளம் அகல நீக்கியே வாழும் திறத்திற்கு ஓர் ஒப்பற்ற எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றான். சீவகன் வரலாற்றிலே அவன் செயல் பலவற்றினும் அவனுடைய இந்த மேதகவு விளங்குவதை அங்கங்கே காணலாம்.

சீவகனுடைய நல்லாசிரியராகிய அச்சணந்தி அவனுடைய மனப்பரிபாகத்தை நன்குணர்ந்தே அவனுடைய இளமைப் பருவத்திலேயே காஞ்சிப் பொருளாகிய நிலையாமையை உணர்த்தி விடுகின்றனர். மேலும், அவன் பகைவனாகிய கட்டியங்காரன்பால் ஓராண்டு முடியுந்துணையும் வெகுளல் கூடாது என்றும் வேண்டிக் கொள்கின்றனர். ஆசிரியரின் வேண்டுகோட்கிணங்கிய சீவகன் சிங்கத்தைக் குறுநரிக்குழாம் வளைந்தாற்போன்று தன்னைச் சூழ்ந்துகொண்ட கட்டியங்காரன் ஏவலர்க்கடங்கிச் செல்கின்றனன். இந் நிகழ்ச்சியால் சீவகன் வெகுளியைத் தன் அறிவின் ஆட்சிக்குள்ளே அடக்கியவன் என்பது புலனும். மற்றும் சீவகன் ஊழ்தர உழுவலன்போடு வந்த குலமகளிர் பாலன்றி யாண்டும் காமத்தாலே நெஞ்சு நெகிழ்ந்திலன் என்பதையும் இந் நூலில் யாண்டுங் காணலாம். அவன் மிக்க இளமைப் பருவத்திலேயே தனக்குப் பரிசிலாக நந்தகோனால் வழங்கப்பட்ட பேரழகியாகிய கோவிந்தையாரை மனைவியாக ஏற்றுக்கொள்ளாமை அவன் காமத்தையும் தன் அறிவின் ஆட்சிக்குட்படுத்தியவன் என்பதை நன்கு விளக்கும். காட்டகத்தே தன்னைக் கண்டு காமுற்றுக் குறிஞ்சிப்பூங் கோதைபோலும் குங்கும முலையினளாகிய அநங்கமாவீணை என்பாள், காமனம்பு வீசுமுன்பே கண்ணம்பை வீசியகாலத்தே அவளை நோக்கவும் நடுங்கினன் சீவகன். இஃது அவன் ஒழுக்கத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு. சீவகன் மன்னுயிரையும் தன்னுயிரென எண்ணும் அருட்கடல்

என்பதற்குக் காட்டுத்தீயால் வளைப்புண்ட பாணைகளைக் காப்பாற் றினதும் நாய்க்கு மறைமொழி செவியுறுத்தி நற்கதியுய்த்ததும், கட்டியங்காரன் பரிசனங்கட்குப் பரிந்து விருத்தி நல்கியதும், இன்னோரன்ன பற்பல சான்றுகள் உள்ளன. சீவகனுடைய மொழிகள் பற்பல விடங்களிலே மெய்க்காட்சிகளின் விளக்க மாக விருக்கின்றன. இவ்வாறு இச் சிந்தாமணி, பல்லாற்றானும் ஒப்புயர்வற்ற தலைவனைத் தலைவனாகக் கொண்டு கற்போருக்குக் கழிபேரின்பமும் சிறந்த உறுதிப் பொருளும் வழங்கும் ஒரு சிறந்த வனப்பு நூலாகவே திகழ்கின்றது.

இனி, இச் சீவக சிந்தாமணி தொடக்கத்திலே மழையின்றி மாநிலத்தார்க்கில்லை என்பதுபற்றி மழைவளம் பேசித் தொடங்கு கின்றது. சிந்தாமணியிலே காணப்படுகின்ற ஏமாங்கத நாடு நன்னாட்டிற்கெல்லாம் எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது. வளமிக்க உழவர் ஆரவாரம் எங்கெங்கும் கேட்கப்படுகிறது. "காய்மாண்ட தெங்கின் பழம் வீழக் கமுகினெற்றிப் பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து, தேமாங்கனி சிதறி வாழைப்பழங்கள் சிந்தும் ஏமாங்கதப் பெருநாட்டின் புகழ்" திசை யெலாம் பரவுகின்றது. அந்நாட்டு மன்னனே நாவீற்றிருந்த புலமாமகளோடு நன்பொற் பூவீற்றிருந்த திருமகள் புல்ல நாளும் பாவீற்றிருந்த கலை பாரறச்சென்ற கேள்விக் கோவாகத் திகழ் கின்றான். 'தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச், செல்வருஞ் சேர்வது நாடு' என்னுந் திருக்குறட்கு எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றது ஏமாங்கதநாடு. இந்த நாடு தரும் இன்பம் எல்லை யற்றதாகும். சிந்தாமணிக்குப் பின்னர்க் காப்பியஞ் செய்த நல்லிசைப்புலவர் காட்டுகின்ற நாடுகள் எல்லாம் இந்த ஏமாங்க தத்தின் வழிவழித் தோன்றிய நாடுகளேயாம்.

நல்வாழ்க்கைக்குக் கல்வியும் செல்வமும் இன்றியமையாதன. இவற்றோடு குடிதழீஇக் கோலோச்சும் கொற்றவனும் வேண்டும் என்னும் உண்மையைச் சீவக சிந்தாமணி தொடக்கச் செய்யுள் ஒன்றிலேயே அறுதியிட்டுக் கூறுகின்றது. நாவீற்றிருந்த புலமா மகள் என்பது அறிவுச் செல்வத்தை உணர்த்துகின்றது. பொற்பூ வீற்றிருந்த திருமாமகள் என்பது செல்வத்தை உணர்த்தும். கேள்விக்கோ என்றது செங்கோன் மன்னனைக் குறிக்கும். இவ்வாறு சிந்தாமணியிலே மாந்தர் வாழ்க்கைக்குச் சிறந்த நன்னாடு மிக அழகாகப் படைக்கப்பட்டிருக்கின்றது. மேலும், அரசியல் நெறியும் போர்நெறியும் பிறவும் நன்கு விளக் கப்பட்டிருக்கின்றன. காதல் வாழ்க்கையின் மாண்பு விரித் தோதப்பட்டிருக்கின்றது. சுருங்கக் கூறுமிடத்து நல்வாழ்க்கை வாழவேண்டும் என்று விரும்புவோர்க்கெல்லாம் இன்றியமையாத

உறுதிப் பொருள் பலவற்றையும் சிந்தாமணி வழங்கும் மாண்புடையது என்னலாம். அழகாலே பன்னிற மலர்களும் மலர்ந்துள்ளதோர் அழகிய பூம்பொழிலை யொப்பது. பயனாலே பல்வேறு தீஞ்சுவைக் கனிகளும் நல்கும் பழுமரங்கள் செறிந்ததொரு பழத்தோட்டமே இப் பெருங் காப்பியம் என்பேம்.

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆட்சியாளர் திருவாளர் வ. சுப்பையா பிள்ளை யவர்கள், இந்தப் பெருங் காப்பியமும் இதற்கமைந்த நச்சினார்க்கினியர் நல்லுரையும் கற்றுவல்லார்க்கன்றி ஏனையோர் அறிவதற் கரியனவாயிருத்தல் கருதி நச்சினார்க்கினியர் நல்லுரையையே தழுவி யாவர்க்கும் எளிதிற் பொருள் விளங்கும்படி இப்பொழுது ஒரு புத்துரை வரைவித்து விளக்கவுரையும் கூட்டி வெளியிடுகின்றார்கள். இதற்கு ஒரு முன்னுரை வரைந்து தரும்படி எனக்குப் பணித்தார்கள். சிந்தாமணியினைப் போற்றிப் பயிலுமவர்களுள் யானும் ஒருவனேயாயினும் அஃது எனக்குத் தரும் இன்பத்தினை எழுதிக்காட்ட வல்லேன் அல்லேன். காவியவின்பம் பெரும்பாலும் காதலின்பத்தையே ஒத்திருக்கின்றது. கருத்தொத்து ஆதரவுபட்ட காதலரை நோக்கி 'நீயிர் நுகர்ந்த இன்பம் எத்தகையது' என்று வினவினால் அவர் எங்ஙனம் சொல்லிக்காட்ட வியலும்? சீவகசிந்தாமணியின் இலக்கிய வின்பமும் அப்படிப்பட்டதே என்பதில் ஐயமில்லை. விளங்கவில்லை என்று குறை கூறுவதற்கு இடமில்லாமல் திருவாளர் பிள்ளையவர்கள் இப்பொழுது இப்புதிய வுரையினாலே செய்துவிட்டார்கள். இந்த அருமுயற்சிக்குத் தமிழுலகம் பிள்ளையவர்கட்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது. இனி நாம் செய்யவேண்டியது அந்த நூலை நன்கு பயின்று அதுதரும் பேரின்பத்தை நுகரவேண்டும்; அத்துணையே. அந்தப் பயிற்சி நம்மை இம்மையிலேயே வானவராக்கிவிடும்.

வாழ்க சிந்தாமணி! வாழ்க திருத்தக்க மாமுனி!

வாழ்க செந்தமிழ்!

இங்ஙனம்,

மேலப்பெருமழை
21-11-1958.

பொ. வே. சோமசுந்தரன்.

# நூலாசிரியர் வரலாறு

சீவக சிந்தாமணி என்னும் இந்த ஒப்பற்ற வனப்பு நூலைச் செய்தருளியவர் திருத்தக்கதேவர் என்ப. இவர் திருத்தகு முனிவர், திருத்தகு மகாமுனிவர், திருத்தக்க மகாமுனிகள் என்னும் பெயர்களாலும் வழங்கப்படுவர். நமது செந்தமிழ்ப் புலவர்களிலே தேவர் என்னும் பெயர் மூன்று புலவர்களைக் குறிக்கும். அவர் திருவள்ளுவனார், திருத்தக்கதேவர், தோலாமொழி ஆகிய மூவருமாம் ஆயினும் தேவர் என்னும் இந்தப் பெயர் திருத்தக்க தேவர்க்கே சிறந்துரிமையுடையதாகும்.

திருத்தக்கதேவர் சோழர்குலத் தோன்றல் என்று கூறப்படு கின்றார். இவர் காலம் கி பி. இரண்டாம் நூற்றாண்டிற்கும் ஏழாம் நூற்றாண்டிற்கும் இடைநிகழ்ந்த காலத்தில் ஒரு பகுதியாக விருக்கக்கூடும் என்று தெரிகிறது. இவர் அந்தக் காலத்திலே தமிழகத்திலே பெரிதும் செல்வாக்குற்றிருந்த ஆருகத சமயத் தைச் சார்ந்தவராவார். மேலும் இளமையிலேயே இவர் துறவி யாகி யிருந்தவர். பல கலையும் கற்றுத் தேர்ந்து அறிவுக்கடலாகத் திகழ்ந்தவர்.

திருத்தக்கதேவர் சான்றோரிணக்கம் கருதி மதுரை மூதூரை யடைந்து ஆங்குச் சங்கப்புலவர்களோடு கூடி அளவளாவி யிருந்தனர் என்றும், அப்பொழுது ஆங்கிருந்த தமிழ்ப்புலவருட் சிலர் ஆருகத சமயத்தவர் துறவு முதலிய வற்றைப் பாடுவரேயன்றிக் காமச்சுவை கெழுமிய காப்பியம் பாட வறியார் என்று கூறினர் என்றும், அதுகேட்ட தேவர் தாம் அக் குறையை யகற்றக்கருதிக் காமச்சுவை மிக்க இச் சீவக சிந்தாமணியை இயற்றிப் பெரும்புகழ் எய்தினர் என்றும் ஒரு வரலாறு கேட்கப்படுகின்றது.

இன்னும் காப்பியம் செய்யக் கருதிய தேவர் தங் கருத்தினைத் தம் ஆசிரியர்க்குக் கூறியபொழுது அந்த ஆசிரியர் தேவருடைய புலமையாற்றலை அளத்தற் பொருட்டு அப்பொழுது ஆங்கே ஓடிய ஒரு நரியைச் சுட்டிக்காட்டி 'நீர் காவியம் பாடுமுன்னர் இந்த நரியைப் பொருளாகவைத்து ஒரு சிறு நூல் இயற்றிக் காட்டுக' என்று பணித்தனர் என்றும், தேவரும் அப்பொழுதே ஆசுகவியாக விரைந்தொரு சிறு நூல் பாடி அதற்கு நரி விருத்தம் என்று பெயரிட்டு ஆசிரியர்க்குக் காட்டினர் என்றும், அந் நூலின் அருமையுணர்ந்த ஆசிரியர் 'இனி நீயிர் நினைந்தபடியே பெருங்காப்பியஞ் செய்க!' என்று பணித்தனர் என்றும், அப் பணி தலைமேற்கொண்டு தேவர் அப் பெருங்காப்பியத்திற்குக் கடவுள் வாழ்த்துப் பாடி வழங்கும்படி ஆசிரியரை வேண்ட

அவரும் 'செம்பொன் வரைமேற் பசும்பொன்' என்று தொடங்கும் பாட்டைப் பாடிக் கொடுத்தனர் என்றும்; பின்னர், தேவர் "மூவா முதலா உலகம்" என்னும் கடவுள் வாழ்த்தைப் பாடிக் காப்பியந் தொடங்கினராக இந்தச் செய்யுள் தம்முடைய செய்யுளினுங் காட்டிற் சிறந்திருத்தல் கண்ட ஆசிரியர், இதனையே முதற் செய்யுளாக அமைத்துக்கொள்ளும்படி பணித்தனர் என்றும் ஆசிரியர் பணியாகலின் அதனை மறுக்கமாட்டாராய் அங்ஙனமே தம் செய்யுளையே முதலாக வைத்துப் பாடினர் என்றுங் கூறுவர்.

இன்னும் இளமையிலேயே துறவியாகிய இவர் காமச்சுவை ததும்ப இவ்வாறு எங்ஙனம் பாடவியலும் என்று சிலர் ஐயுற்ற பொழுது தேவர் தீயிற் பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்பின் துண்டினைக் கையிலேந்தித் தம்முடைய நல்லொழுக்கத்தைப் பலரும் அறியச் செய்தனர் என்றும் கூறுவர். இவை யெல்லாம் தேவரைப்பற்றிக் கன்னபரம்பரையாக வழங்கிவருஞ் செய்திகளேயாம். இவற்றிற்குச் சான்றுகள் இல்லை.

திருத்தக்க தேவருடைய ஒப்பற்ற நல்லிசைப் புலமையை என்றென்றும் உலகத்தார்க்கு நன்கு விளக்கிக்கொண்டு நின்று நிலவும் நற்சான்று அப்பெரியார் இயற்றிய சீவக சிந்தாமணி என்னும் இந்த வனப்பு நூலேயாகும். இவர் இயற்றிய இந்த நூலைக் கல்லாதார், ஒருதலையாகக் கல்லாதவரேயாவர். சிந்தாமணியின் தீஞ்சுவை தேறுதார் செந்தமிழின் தீஞ்சுவை தெரியாப் பதடிகளே.

திருத்தக்கதேவர் பொதுவாகத் தமக்கு முந்திய செந்தமிழிலக்கியங்களிலே கண்ட அறிவுச் செல்வம் பலவற்றையும் திரட்டித் தமது சிந்தாமணியிலே பொதிந்து வைத்துள்ளனர். சிறப்பாக இவர் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கினும் ஆசிரியர் திருவள்ளுவனாரையே பின்பற்றித் தமது காப்பியத்தைப் படைத்தருளி யிருக்கின்றார். இவருடைய செய்யுள் சில திருக்குறட் செய்யுள் சிலவற்றிற்கு அரிய விளக்கமாகவே அமைந்திருக்கின்றன. இறைவனைப் போன்று என்றென்றும் கட்டிளமை திகழும் கன்னிமையோடு நின்று நிலவும் நம் தமிழ்த் தெய்வத்திற்கு இவர் இயற்றி யளித்த சிந்தாமணி அழகின்மேல் அழகு செய்யும் ஓர் அருங்கலம் ஆகும் என்பதில் ஐயமில்லை.

வாழ்க! திருத்தக்க தேவர் மலரடிகள்!

மேலப்பெருமழை }
24-11-1953. }

இங்ஙனம்,
பொ. வே. சோமசுந்தரன்.

உ

# சீவகசிந்தாமணி

## மூலமும் உரையும்

### க. கடவுள் வாழ்த்து

க. மூவா முதலா வுலகமோரு மூன்றுமேத்தத்
தாவாத வின்பந் தலையாயது தன்னினெய்தி
ஓவாது நின்ற குணத்தொண்ணிதிச் செல்வனென்ப
தேவாதி தேவ னவன்சேவடி சேர்துமன்றே.

(இதன்பொருள்.) தேவாதி தேவன் - வானவர்கட்கு முதலான வானவன் என்பான்; மூவா முதலா உலகம் ஒரு மூன்றும் ஏத்த - முடிவும் தோற்றமும் இல்லாத மூன்றுலகமும் போற்ற; தாவாத இன்பம் தலையாயது - கெடாத இன்பம் தனக்கு ஒப்பற்றதனை; தன்னின் எய்தி ஓவாது நின்ற - தன்னாற் பெறுவதனால் தன்னைவிட்டு நீங்காது நின்ற; குணத்து ஒள்நிதிச் செல்வன் என்ப - பண்புகளை உடையவனாகிய சிறந்த நிதியை உடைய செல்வன் என்று பெரியோர் கூறுவர்; (ஆகையால்) அவன் சேஅடி சேர்தும் - (யாமும் இவ்விலக்கியம் இனிது முடிய) அவன் செவ்விய திருவடிகளை வணங்குவோம்.

(விளக்கம்) ஒண்ணிதிச் செல்வன் - வீடாகிய விளங்கிய நிதியை உடைய செல்வன். குணம்: எண் குணங்கள். அவை : தாவாத இன்பம் என்பதனாற் பெறப்பட்ட வரம்பிலா இன்பம் நீங்கலாக உள்ள வரம்பிலா அறிவு, வரம்பிலா ஆற்றல், வரம்பிலாக்காட்சி, பெயரின்மை, மரபின்மை, ஆயுவின்மை, அழியா இயல்பு என்பனவாம்.

இஃது அருகசரணம் சித்தசரணம் சாதுசரணம் தன்மசரணம் என்னும் நான்கனுட் சித்தசரணம்.

சித்த சரணம் - சித்தனை வணங்கும் வணக்கம். சித்தன்: காதி அகாதி என்னும் இருவகைக் கருமங்களையும் வென்று, அக்கினியிந்திரனால் உடம்பைத் துறந்து, பரிநிர்வாணம் பெற்று மூவுலகத்து உச்சியில் இருப்பவன்.

இத் தொடர்நிலைச் செய்யுள் தேவர் செய்கின்ற காலத்து நூல் அகத்தியமும் தொல்காப்பியமும் ஆதலானும், 'முந்து நூல் கண்டு முறைப்பட எண்ணி' (தொல் - சிறப்பு) என்றதனால், அகத்தியத்தின் வழிநூல் தொல்காப்பிய மாதலானும், பிறர் கூறிய நூல்கள் நிரம்பிய இலக்கணத்தன அன்மையானும், அந்நூலிற் கூறிய இலக்கணமே இதற்கிலக்கண மென்றுணர்க.

அவ்விலக்கணத்திற் செய்யுளியலின்கண்ணே ஆசிரியர் பா நான்கென்றும், அவற்றை அறம் பொருளின்பத்தாற் கூறுக என்றும் கூறிப் பின்பு அம்மை முதலிய எட்டும் தொடர்நிலைச் செய்யுட்கு இலக்கணம் என்று கூறுகின்றுழி, 'இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்' (தொல். செய். உகூஅ) என்பதனால், மெல்லென்ற சொல்லான் அறம் பொருளின்பம் வீடென்னும் விழுமிய பொருள் பயப்பப் பழையதொரு கதைமேற் கொச்சகத்தாற் கூறின், அது தோல் என்று கூறினமையின், இச் செய்யுள் அங்ஙனங் கூறிய தோலா மென்றுணர்க.

இச் செய்யுள் முன்னோர் கூறிய குறிப்பின்கண் வந்த செந்துறைப் பாடாண் பகுதியாம்; (தொல் - புறத் - உஎ). இதனானே, 'யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது' (தொல்-செய். கசகூ) என்பதற்குத் தேவபாணியும் காமமுமே யன்றி வீடும் பொருளாமென்பது ஆசிரியர் கருத்தாயிற்று.

முந்து நூல்களிற் காப்பியம் என்னும் வடமொழியால் தொடர்நிலைச் செய்யுட்குப் பெயரின்மையும் இதற்குப் பிறகு கூறிய நூல்கள் இதற்கு விதியன்மையும் உணர்க.

இனி, இத் தொடர்நிலைச் செய்யுளை இனம் என்ப. அந் நூல்கள் இனம் என்று சுட்டிய உதாரணங்கள்தாம் அவர் சேர்த்த அவ்வப் பாக்கட்கே [illegible]மாகாது, ஒழிந்த பாக்கட்கும் இனமாதற்கு ஏற்றலானும், துறையை விருத்தமாகவும் தாழிசையை விருத்தமாகவும் ஓதுதற்கு அவை ஏற்றமையானும், 'மூவா முதலா' என்னும் கவி முதலியன் தாழம்பட்ட (தாழ்தல் பொருந்திய) ஓசையான் விருத்தமாயும், சீர்வரையறையானும் மிகத்துள்ளிய ஓசையானும் துறையாயும் கிடத்தலின், இதனை விருத்தக் கலித்துறை யெனல் வேண்டும்; அது கூறவே, துறையும் விருத்தமும் எனப் பகுத்தோதிய இலக்கணம் நிரம்பாதாம் ஆகலானும் இனமென்றல் பொருத்தமின்று. இச் செய்யுட்களின் ஓசை வேற்றுமையும் மிக்கும் குறைந்தும் வருவனவும் கலிக்கே ஏற்றலிற் கொச்சகமென்றடங்கின.

'யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது' என்பதனால், இக் கவியும் மேலிற் கவியும் முன்னிலையன்றியும் தேவர்ப் பராயினவாம்.

இனி அளவியற் சந்தம், அளவழிச் சந்தம், அளவியற்றாண்டகம், அளவழித் தாண்டகம், சமசந்தத் தாண்டகம், சந்தத் தாண்டகம், தாண்டகச் சந்தமென அடக்குவார்க்கு அவற்றுள்ளும் சில வன்றி முழுதும் அடங்காமை உணர்க.

'மூவா' 'முதலா' என்பது, 'மூத்த' 'முதலிய' என்னும் பெயரெச்சங்களின் எதிர்மறை அடுக்கு; 'எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா' (தொல் - வினை. கூஉ) என்பதனால், உலகம் என்னும் வினைமுதற் பொருளோடு முடிந்தது; 'முதலா என தம் பெயர்

முதலும்' (தொல் - மொழி - ௩௩) என்பதனான், முதலும் என்பதொரு வினை உடன்பாட்டிற்கு உளதாம். ஆசிரியர், 'காலம் உலகம்' (தொல் - கிளவி - ௫௮) என்றும் பிறாண்டும் சூத்திரம் செய்தலின் அது வடமொழி அன்று. ஈண்டு உலகம் என்றது உயிர்க்கிழவனை, 'உலகம் உவப்ப' (முருகு - ௧) என்பது போல. ஒன்று + மூன்றும் : ஒரு மூன்றும். ஒன்று என்பதில் உள்ள குற்றியலுகரம் மெய்யொடுங்கெட்டு, 'முதலீ ரெண்ணின் ஒற்று ரகரம் ஆகும், உகரம் வருதல் ஆவயினான' (தொல்-குற்றியலுகரப்- ௩௩) என்னும் விதியும் பெற்று, 'அளந்தறி கிளவியும்' (தொல்-குற்றியலுகரப் - ௭௧) என்னும் சூத்திரத்துத், 'தோன்றுங்காலை' என்ற இலேசான் முடிந்தது. 'ஒரு மூன்றும் எத்த எய்தி' என்க. உம்மை, 'இனைத்தென அறிந்த சினை முதற் கிளவிக்கு வினைப்படு தொகுதியின்' (தொல் - கிளவி - ௩௩) வந்தது. உலகம் என்னும் பெயர் மூன்றென் னும் பெயர்ப் பயனிலை கொண்டு, அதுதான் எத்த என்னும் வினைப் பயனிலை கொண்டது.

வருத்தமாகிய குறிப்புணர்த்திய 'தா' என்னும் உரிச் சொல், வினைக்கு முதனிலையாய்த், 'தாவாத' எனப் பெயரெச்ச மறையாய் 'இன்பம்' என்னும் பெயரொடு முடிந்தது. 'எத்தத் தாவாத' என்பது, 'வினையெஞ்சு கிளவியும்...வல்லெழுத்து மிகுமே' (தொல். உயிர் மயங்கு- ௨) என்பதனால் ஒற்றுமிக்கது. தாவாத வின்பம் என்பது உடம்படு மெய்யாயிற்று; 'இன்பம்' என்னும் பெயர் தலையாயதென்னும் குறிப்புப் பெயரைக் கொண்டது; இன்பந் தலையாயது என்புழி 'அல்வழி யெல்லாம் மெல்லெழுத்தாகும்' (தொல் - புள்ளி - ௧௩) என்பதனான் மகரம் நகரம் ஆயிற்று. 'தன்னின் எய்தி' என்ற இன் காரக ஏதுப் பொருட்கண் ஐந்தாம் உருபு. 'தன்னில் எய்தி' என்று பாடமாயின், மணியினது ஒளியும் மலரினது நாற்றமும் போலத் 'தன்னுள்ளே பெற்று' என்க. 'எய்தி' என நின்ற செய்தெனெச்சம் காரணகாரியப் பொருட்டாய், 'நின்ற' என்னும் பெயரெச்ச வினையொடு முடிந்து, அது 'குணம்' என் னும் பொருட்பெயரோடு முடிந்தது.

'ஓவாது' என்னும் எதிர்மறை யெச்சமும் 'நின்ற' என்பதனோடு முடியும். குணத்து : அத்து : இரண்டா முருபின்கண் வந்த சாரியை. 'அத்தே வற்றே ஆயிருமொழி மேல் - ஒற்றுமெய் கெடுதல் தெற்றென் றற்றே' (தொல் - புணரியல் - ௩௧) என்பதனால் மகரங்கெட்டு, 'அத்தின் அகரம் அகர முனையில்லை' (ஷை - ஷை - ௨௩) என்பதனால் அகரம் கெட்டு முடிந்தது 'குணத்தோண்ணிதி' என்பதில், 'குற்றியலுகரமும் அற்று' (ஷை - ஷை- ௩) என்பதனால் வருமொழியின் ஒகரம் ஏறிற்று. ஒண்ணிதி: பண்புத்தொகை. ஒண்ணிதிச் செல்வன் : இகர வீற்று வேற்றுமைச் சொல்லாதலின் வல்லெழுத்து மிக்கது 'செல்வன்' என்றார், அழியாத இன்பத்தை நுகர்தலின். 'என்ப' என்னும் முற்றுச் சொல் 'பெரியார்' என்னும் தோன்றா எழுவாய்க்குப் பயனிலையாயிற்று. தேவும் தெய்வத் துக்கு ஒரு பெயர். தேவுக்கு ஆதிதேவன் என நான்கன் உருபு விரிக்க. ஆதியாகிய தேவன் என்க. செம்மை + அடி : சேவடி : பண்பு மாத்திரை யாய்க் குறைந்த சொல்லாதலின் மருவின் பாத்தியதாய் (தொல் குற்றி யலுகரப் - ௭௭) நின்றது. 'சேவடி சேர்தும்'—ஒற்று இரட்டாது நின்றது இரண்டாவதற் கோதிய திரிபில் 'அன்ன பிறவால்' (தொல் - தொகை- ௧௫). 'சேர்தும்': தும் ஈற்றுப் பன்மைத்தன்மை; ஈண்டு ஒருவரைக் கூறும் பன்மை. அன்று : அசை. ஏகாரம் : ஈற்றசை.

இனி, தான் மூவா முதலாக வேண்டி யென்றும், நாம் மூவா முதலாக வேண்டி யென்றும் வினையெச்சமாக்குவாருமுளர்; அதற்கு எய்தி என்பதனோடு முடிக்க.

மேல்வரும் செய்யுட்களுக்கும் இவ்வாறுரைப்பின் உரை பெருகும் ஆதலின், இனி நல்லறிவுடையோர் உய்த்துணருமாறு சுருங்கவுரைப்பாம். 'செம்பொன்' (சீவக - உ) என்னுங் கவியாற் குருக்கள் அருகனை வணங்குதலின் தாம் சித்தனை வணங்கினர். குருக்கள் கூறுதலானும் அருகனை வணங்குதலானும் அதனை முன்வைக்க எனின், குருக்களே, 'இது நன்று; இதனை முன்னே வைக்க' என்றலின் முன் வைத்தார். குருக்கள்: திருத்தக்க தேவரின் ஆசிரியர்.

யாமும் அவன் சேவடி சேரின் ஓவாது நின்ற குணத் தொண்ணிதிச் செல்வராய்த் தாவாத இன்பந்தலைப்படுவம் ஆகலானும், அவன் சேவடி சேர்தும் என்றார் என்றும் கொள்க. கல்விப்பயனும் அவ் வாலறிவன் நற்றாள் தொழுதலே ஆகலின் இவ்விலக்கியத்தினை ஓதுவோர்க்கு இந்நூற்பயனைக் குறிப்பாகக் கூறியவாறுமாயிற்று.

இறைவர் பற்பலர் உளர் என்பாரேனும் அவ்விறைவர்க்கெல்லாம் இறைவனுயுள்ள கடவுள் ஒருவனே என்பார் தேவாதிதேவன் என்றார்.

அவன் திருவடி நினைத்தற்குஞ் சேர்தற்கும் இனிதாயிருக்கும் என்பார், "தாவாத இன்பந்தன்னின் எய்தி ஓவாது நின்ற செல்வன் சேவடி" என்றார். இச் செய்யுளில் உலகம், தலையாய இன்பம், குணத் தொண்ணிதி, செல்வன், தேவாதிதேவன், என்னும் மங்கலச் சொற்கள் வந்துள்ளன. (க)

உ. செம்பொன் வரைமேற் பசும்பொன்னெழுத் திட்ட தேபோ
லம்பொன் பிதிர்வின் மறுவாயிரத் தெட்ட ணிந்து
வெம்புஞ் சுடரிற் சுடருந்திரு மூர்த்தி விண்ணோ
ரம்பொன் முடிமே லடித்தாமரை சென்னி வைப்பாம்.

(இ - ள்.) செம்பொன் வரைமேல் - சிறந்த பொன்மலையின் மேல்; பசும்பொன் எழுத்து இட்டதேபோல் - புதிய பொன் எழுத்தை எழுதியதே போலும்; அம்பொன் பிதிர்வின் - அழகிய பொற் பிதிரைப் போலும்; ஆயிரத்தெட்டு மறு அணிந்து - ஆயிரத்தெட்டு மறுவை அணிந்து; வெம்பும் சுடரின் சுடரும் திருமூர்த்தி - வெப்பந்தரும் இளஞாயிற்றின் ஒளியினும் மேம்பட்டு விளங்கும் உருவினையுடைய அருகப்பெருமானின்; விண்ணோர் அம்பொன்முடிமேல் - வானவரின் அழகிய பொன்முடியின்மேல் (வைத்த); அடித்தாமரை சென்னி வைப்பாம் - திருவடித் தாமரைமலர்களை யாமும் நம் முடிமேல் அணிவோம்.

(வி - ம்.) பிதிர்வின், இன்: ஐந்தன் உருபு: உவமப்பொரு. உவமப் பொரு - ஒப்புமைபுறக் கூறுதல். எழுத்திட்டதென்றது ஒற்றுமையாகக் கிடந்ததற்கும், பிதிர்வென்றது சிறியவும் பெரியவுமாகிய வடிவிற்கும் உவமை. அருகனுக்கு இரேகை நூற்றெட்டும், அடையாளங்கள் ஆயிரமும்

உண்டென வடநூல்கள் கூறும். காலை யிளஞாயிறு வெப்பந் தராதேனும் நண்பகலில் வெப்பந்தரும் ஆகையால், 'வெம்புஞ்சுடர்' என்றார். யாவரும் விரும்பும் சுடரென்று கொண்டு இளஞாயிறு என்றலுமாம். **சுடரின்: இன்**: உறழ் பொரு. உறழ் பொரு - ஒன்றனால் ஒன்றை மிகுத்துக் கூறுதல். 'முடிமேல்' என்பதன்பின் 'வைத்த' என வருவித்து 'முடிமேல் வைத்த' என்க.

செம் பொன் × பசும் பொன்: தொடைமுரண்; வண்ண வேறுபாடு இன்று. இஃது **அருகசரணம்**: திருத்தக்க தேவரின் ஆசிரியர் அளித்தது. (௨)

௩. பன்மாண் குணங்கட் கிடனாய்ப்பகை நண்பொ டில்லான்
றொன்மாண் பமைந்த புனைநல்லறந் துன்னி நின்ற
சொன்மாண் பமைந்த குழுவின்சரண் சென்று தொக்க
நன்மாண்பு பெற்றே னிதுநாட்டுதன் மாண்பு பெற்றேன்.

(இ - ள்.) பல்மாண் குணங்கட்கு இடன்ஆய் - பலவகை யானும் சிறப்புற்ற நற்பண்புகளுக்கு இடம் ஆக; பகை நண்பொடு இல்லான் - பகையும் நட்பும் இல்லாத இறைவன் (கூறிய); தொல்மாண்பு அமைந்த புனை நல்லறம் - பழைய மாட்சிமை பெற்ற அறத்தினையும்; சொல்மாண்பு அமைந்த குழுவின் - (அதனைப் பொருந்தி நின்ற) புகழ் சிறந்த சாதுக்களின் குழுவினையும்; சரண்சென்று தொக்க நல்மாண்பு பெற்றேன் - புகலாகச் சென்று சேர்ந்த நல்வினையுடையேன் (ஆதலின்); இது நாட்டுதல் மாண்பு பெற்றேன் - இக் கதையை உலகில் நிலை பெறுத்துதற்குரிய நல்வினையுடையேனானேன்.

'புனைநல்லறத்தையும் குழுவினையும் சரண் சென்று தொக்க நல்வினை உடையேன்' என்றலின் **சாதுசரணமும் தன்மசரணமும்** கூறிய தாகும் இச் செய்யுள். சாதுக்கள்: திருத்தக்க தேவரின் ஆசிரியர் களாகிய சாதுக்கள். இவர்கள் பஞ்ச பரமேட்டிகளைச் சார்ந்தவர்கள்.

சொல்-புகழ். ஆய்-ஆக: வினையெச்சத்திரிபு. 'பன்மாண் குணங்கட் கிடனாகப் புனைநல்லறம்' என்று கூட்டுக. 'பகை நண்பொ டில்லான் (கூறிய) பன்மாண் குணங்கட்கிடனாய்' என மொழிமாற்றிப் பொருள் கொள்வர் நச்சினார்க்கினியர். 'இல்லா' என்பது பாடமாயின், 'இல்லா அறம்' எனக் கூட்டுக.

இறைவன் நண்பிலனாயினும் அருஞ்சுரத்தின்கண் மரம்போல அடைந்தார்க்களித்தல் அவற்கியல்பு. (௩)

## அவையடக்கம்

௪ கற்பா லுமிழ்ந்த மணியுங்கழு வாது விட்டா
னற்பால் அழியுந் நகைவெண்மதி போனிறைந்த
சொற்பா லுமிழ்ந்த மறுவும்மதி யாற்க ழூஉவிப்
பொற்பா லிழைத்துக் கொளற்பாலர் புலமை மிக்கார்.

(இ - ள்.) கற்பால் உமிழ்ந்த மணியும் - கல்லின் பகுதி யீன்ற மணியும்; கழுவாது விட்டால் நற்பால் அழியும் - கழுவா மல் விட்டால் நன்மை கெடும்; (அதுபோல); நகை வெண்மதி போல் நிறைந்த - ஒளிவிடும் வெள்ளிய முழு மதிபோல் கலை நிறைந்த; சொற்பால் உமிழ்ந்த மருவும் - சொல்லின் பகுதி ஈன்ற வழுக்களும் (கழுவாது விட்டாற் சொல் நலம் கெடும். ஆதலின்); புலமை மிக்கார் - அறிவால் நிறைந்த சான்றோர்; மதியால் கழுவி - தம் அறிவினாலே களைந்து; பொற்புஆ இழைத் துக் கொளற்பாலர் - அழகாக அமைத்துக் கொள்ளத் தக்கா ராயினர்.

எனவே, யான் அத் தன்மையன் அல்லன் என்பது சொல்லெச்சம்; 'சொல்லொடுங் குறிப்பொடும் முடிவுகொள் இயற்கை, புல்லிய கிளவி எச்சமாகும்' (தொல் - செய் - உ0க) என்றாராதலின். மறு இல்லாத மதிக்கு மறு அடுத்தாற்போலக் கலை நிறைந்த சொற்கு அடுத்த மறுவா வது வழுவமைக்குஞ் சொல். அதனைச் சங்கத்தார் ஆராய்ந்தமை கூறவே, அவை அடக்கம் உணர்த்தியதாயிற்று. 'மதிபோல் நிறைந்த மதி' யெனவும் ஆம்.

மணியும்: உம்: உயர்வு சிறப்பும்மை. கழூஉவி: இன்னிசை யளபெடை. (௪)

ரு. முந்நீர்ப் பிறந்த பவளத்தொடு சங்கு முத்தும்
அந்நீ ருவர்க்கு மெனின்யாரவை நீக்கு கிற்பா
ரிந்நீர வென்சொற் பழுதாயினுங் கோள்ப வன்றே
பொய்ந்நீர வல்லாப் பொருளால்விண் புகுது மென்பார்.

(இ - ள்.) பவளத்தொடு சங்கும் முத்தும் முந்நீர்ப் பிறந்த- பவளமும் சங்கும் முத்தும் கடலிலே பிறந்தன; அந்நீர் உவர்க்கும் எனின் - (அவை பிறந்த) அக் கடல் நீர் உவர்ப்பாக இருக்கும் என்றாலும்; அவை நீக்குகிற்பார் யார்? - அப் பொருள்களைக் கை விடுவார் எவர்? (ஒருவருமிலர்), (அதுபோல்); பொய்ந்நீர அல்லாப் பொருளால் - மெய்யான பழம் பொருளாலே; விண் புகுதும் என்பார் - வீடு பெறுவோம் என்று நினைப்பவர்; இந்நீர என்சொல் பழுது ஆயினும் கொள்ப - உவர்க்கும், என் னுடைய இம் மொழிகள் தீய ஆயினும் (இச் சொற்களிற் பொதிந்த பொருள்களின் பயன் நோக்கி) இச் சொற்களைக் கொள்வார்கள்.

முந்நீர்: பண்பாகு பெயராய்க் கடலை உணர்த்தியது. நீர் - தன்மை. முந்நீர்: ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் முத்தன்மையும் உடையது. ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் என்னும் மூவகை நீர்க் கலப்புடையது என்றுங் கூறுவர்.

பிறந்த: பலவின்பால் வினைமுற்று. எனினும் என உம்மை விரிக்க. கோள்ப: பலர்பால் வினைமுற்று. அன்று, ஏ: அசைகள். (௫)

## உ. பதிகம்

சூ. மீனே றுயர்த்த கொடிவேந்தனை வென்ற பொற்பிற்
றானே றனையா னுளன்சீவக சாமி யென்பான்
வானேற நீண்ட புகழான்சரி தம்மி தன்னைத்
தேனூற நின்று தெருண்டாரவை செப்ப லுற்றேன்.

(இ-ள்.) *மீன் ஏறு உயர்த்த கொடி வேந்தனை வென்ற பொற்பின்* - மீன் ஏற்றை மேம்படுத்தின கொடியை உடைய காமனை வென்ற அழகையுடைய; *ஏறு அனையான் தான் உளன்* - ஆண் சிங்கம் போன்றவன் தான் ஒருவன் உளன். *சீவக சாமி என்பான்* - (அவன் யாரெனின்) சீவகசாமி யெனப்படுவான்; *வான் ஏற நீண்ட புகழான் சரிதம்* - வானிலே எழப் பரவிய புகழையுடைய அவன் ஒழுக்கம்; *நின்று தேன் ஊற*-கேட்டோர் நெஞ்சிலே நின்று இனிமை மிகும்படி; *தெருண்டார் அவை இதனைச் செப்பல் உற்றேன்* - தெளிந்தோர் அவையிலே இத் தொடர்நிலைச் செய்யுளைக் கூறலுற்றேன்.

(வி-ம்.) *மீன் ஏறு*: சுறவு. 'கடல் வாழ் சுறவும் ஏறெனப்படுமே' (தொல் - மரபு - ௪0.) *உயர்த்த* - மேம்படுத்தின. *சாமி*: பாகதம் (வடமொழிச் சிதைவு).

புகழான் என்னும் பெயர் சொல்லுவான் குறிப்பான் அவன் என்னுஞ் சுட்டுப் பெயர் மாத்திரையாக வந்தது. 'நாணி நின்றோள்' 'அணங்கருங் கடவுளன்னோள்' (அகநா-கசு) என்று அகத்திற் கூறினாற் போல. இது, 'பொருளொடு புணராச் சுட்டுப் பெயராயினும்' (தொல் - கிளவி - ௩௭) என்னுஞ் சூத்திர விதி. மேல் இங்ஙனம் வருவனவற்றிற் கெல்லாம் ஒக்கும். கதைக்கு நாயகன் ஆதலிற் சீவகனை முற்கூறினார். (இவ்வாறே சிலப்பதிகார ஆசிரியரும் கோவலனை முற்கூறாமற் கண்ணகியை முற்கூறினார்.) இதன்னை: இதனை: விரித்தல் என்னும் செய்யுள் விகாரம்.

இச் செய்யுளின்கண் இப் பெருங்காப்பியத் தலைவனுடைய அழகு மெய்வலிமை கொடை என்னும் மூன்று பண்புகளும் குறிப்பாற் பெற வைத்துள்ளமை காண்க. மீனேறுயர்த்த கொடி வேந்தனை வென்ற பொற்பினையுடையான் என்றது ஒப்பற்ற அவன் அழகுடைமையை உணர்த்தியவாறு. இந்நூலின்கண் சீவகனுடைய திருமணங்கள் சிறப்புறுதற்கும் இப் பண்பு காரணமாதலுணர்க. இனி ஏறனையான் என்றது அவனது பேராற்றலுடைமையை உணர்த்தியவாறு. இஃது அவன் கட்டியங்காரன் முதலிய பகைவரை வென்றுயர்தற்குக் காரணமாதல் உணர்க. வானேற நீண்டபுகழான் என்றது அவன் வள்ளன்மையை உணர்த்தியவாறு. என்னை? புகழ் என்பது கொடையானே உண்டாவ தொன்றாகலான் என்க.

இதனைச்சொல்லும்போது சொல்லும் எனக்கே இஃது இனிதாயிருக்கின்றது; எனவே இதனை இவ்வுலகமும் எய்துக என்னும் கருத்தால்

இதனை ஓதாநின்றேன் என்பார், "இதன்னைத் தேனூற நின்று செப்ப லுற்றேன்" என்றும், "உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன் பாத்தியுள் நீர்சொரிந் தற்று" என்பதுபற்றித் தெருண்டாரவை செப்ப லுற்றேன் என்றும் ஓதினர். (க)

எ. கோடாத செங்கோற்குளிர்வெண் குடைக் கோதை வெள்வே
லோடாத தானை யுருமுக்குர லோடை யானை
வாடாத வென்றி மிகுசச்சந்த னென்ப மன்னன்
வீடாத கற்பி னவன்றேவி விசயை யென்பாள்.

(இ - ள்.) கோடாத செங்கோல் - மாறுபடாத செங்கோலை யும்; குளிர் வெண்குடை - தண்ணிய வெண்குடையையும்; கோதை வெள்வேல் - மாலையணிந்த வெள்ளிய வேலையும்; ஓடாத தானை - புறங்கொடாத நால்வகைப் படைகளையும்; உருமுக் குரல் - இடிபோலப் பிளிறும்; ஓடை யானை - முகபடாம் அணிந்த யானையையும் (உடைய); மன்னன் - அரசன்; வாடாத வென்றி மிகு சச்சந்தன் என்ப - குறையாத வெற்றியினால் மேம்பட்ட சச்சந்தன் என்றுரைப்பர். அவன் தேவி வீடாத கற்பின் விசயை என்பாள் - அவனுக்குத் தேவி நீங்காத கற்பினையுடைய விசயை என்று பெயர் கூறப்படுவாள்.

(வி - ம்.) 'செங்கோல்' பிறிதின் இயைபு நீக்கிய விசேடணம் (அடைமொழி) ஆயினும் 'கோடாத' என்று அடை அடுத்தலிற் 'கோல்' என்னும் அளவில் நின்றது. 'வெண்குடை: இயைபின்மை மாத்திரை நீக்கிய விசேடணம். உருமுக்குரல் போலுங் குரலையுடைய யானை. வீடாத: விகாரம் ('விடாத' என்பது 'வீடாத' என விகாரப்பட்டது) (உ)

அ. சேந்தொத் தலர்ந்த செழுந்தாமரை யன்ன வாட்கட்
பூந்தொத் தலர்ந்த பசும்பொற்கொடி யன்ன பொற்பி
னேந்தொத் தலர்ந்த முலையின்னமிர் தன்ன சாயல்
வேந்தற் கமுதாய் விளையாடுதற் கேது வாமே.

(இ - ள்.) சேந்து ஒத்து அலர்ந்த - சிவந்து தம்மில் இணை யொத்து மலர்ந்த; செழுந்தாமரை அன்ன வாட்கண் - வளமிகு தாமரை மலர்போன்ற ஒளியுடைய கண்களையும்; பூந்தொத்து அலர்ந்த பசும்பொற்கொடி அன்ன பொற்பின் - மலர்க்கொத்துத் தன்னிடத்தே மலர்ந்த புதிய பொற்கொடி அனைய அழகினையும்; ஒத்து அலர்ந்த ஏந்து முலையின் - தம்மில் ஒத்து அடிபரந்த ஏந்தும் முலைகளையும் உடைய; அமிர்து அன்ன சாயல் - அமுதம் போன்ற மென்மையும் உடையாள்; வேந்தற்கு அமுதாய் - அரச னுக்கு அமுதமாகி; விளையாடுதற்கு ஏது ஆம் - கூட்டத்திற்குக் காரணம் ஆவாள்.

(வி - ம்.) அமிர்தம் கண்ணுக்கினிதாகிய மென்மையும் தன்னை நுகர்ந்தார் பிறிது நுகராமல் தடுக்கும் மென்மையும் உடைமையின்

'அமிர்தன்ன சாயல்' என்றார். 'சாயல் மென்மை' (தொல் - உரி - உஎ) எனப் பொதுப்படச் சூத்திரஞ் செய்தது ஐம்பொறியானும் நுகரும் மென்மையெல்லாம் அடங்குதற்கு. 'மயில் அன்ன சாயல்' (ஏலாதி-உஅ), 'சாயல் மார்பு' (கலி - கூஇ) என ஒளிக்கும் ஊற்றிற்கும் (பரிசத்திற்கும்) வந்தன. பிறவும் காண்க சாயல்: (பண்பு) ஆகுபெயர். மறுமையிற் சென்று பெறும் அமுதமும் இவளெனக்கொண்டு மயங்கினமை தோன்ற மீட்டும் 'அமுதாய்' என்றார். 'வாட்கண்' என்புழி வாள் 'கண்' என்பதற்கு வாளா அடைமொழியாக வந்தது எனவுங் கூறலாம். (கூ)

கூ. கல்லார் மணிப்பூ ணவன்காமங் கனேந்து கன்றிச்
சொல்லாறு கேளா னனிசூழ்ச்சியிற் றோற்ற வாறும்
புல்லார் புகலப் பொறிமஞ்ஞையிற் றேவி போகிச்
செல்லா றிழுக்கிச் சுடுகாடவள் சேர்ந்த வாறும்.

(இ - ள்.) மணிக்கல் ஆர் பூணவன் காமம் கனேந்து கன்றி-மாணிக்கக் கற்கள் பொருந்திய அணிகலனுடைய சச்சந்தன் வேட்கை செறிந்து அதிலே அடிபட்டு; சொல் ஆறு கேளான் - அமைச்சர் சொல்வழியைக் கேளாதவனாய்; புல்லார் புகலச் சூழ்ச்சியில் நனிதோற்ற ஆறும் - பகைவர் மனம் மகிழ எண்ணத்திலே மிகவும் தோற்றபடியும்; தேவி மஞ்ஞைப் பொறியில் போகி - விசயை மயிற் பொறியிலே சென்று; செல் ஆறு இழுக்கி அவள் சுடுகாடு சேர்ந்த ஆறும்-(வெற்றி முரசு கேட்டு) செல்லும் வழியிலே கலங்கி அவள் சுடுகாட்டினைச் சேர்ந்த படியும்.

(வி - ம்.) நனி : மிசேடித்து வரும் உரிச்சொல். செல் ஆறு இழுக்குதல்: வெற்றி முரசு கேட்டுக் கலங்குதல். 'தேவி போகி இழுக்கிச் சேர்ந்தாள்' என முடிவுழி 'அவள்' என்று கூறவேண்டாமையின், அது தேவியைச் சுட்டாமல், அங்ஙனம் அமுதாயவள் இங்ஙனம் ஆயினாள் எனத் தேவர் இரங்குதலின், முன்னேய கவியை நோக்கித் தகுதிபற்றி வந்தது. இனி, 'சாத்தியவள் வந்தாள்' என்றாற்போலத், 'தேவியவள்' என வினைக்கு ஒருங்கு இயன்றது என்பாரும் உளர். அது வழக்கிலது என்று மறுக்க. (௲)

கய. நாளுற்று நம்பி பிறந்தான்றிசை பத்து நந்தத்
தோளுற்றோர் தெய்வந் துணையாய்த்துயர் தீர்த்த வாறுங்
கோளுற்ற கோன்போ லவன்கொண்டு வளர்த்த வாறும்,
வாளுற்ற கண்ணாண் மகன்வாழ்கென நோற்ற வாறும்.

(இ - ள்.) நம்பி நாள் உற்றுத் திசை பத்தும் நந்தப் பிறந்தான் - சீவகன் ஒன்பது திங்களும் நிறைந்து, பத்துத் திக்கினும் உள்ள வல்லுயிர்களும் வளர்தற்காகப் பிறந்தானாக; ஓர் தெய்வம் தோள் உற்றுத் துணையாய்த் துயர் தீர்த்த ஆறும் - ஒரு தெய்வம் கூனியின் உருவாய்த் தன் கை தனக்கு உதவுதல் போலத் தேவிக்கு உதவித் துயர் தீர்த்த படியும்; கோள் உற்ற

கோன்போல் அவன் கொண்டு வளர்த்த ஆறும் - கொலையுண்ட சச்சந்தன் வளர்த்தல்போலக் கந்துக்கடன் உளம்கொண்டு வளர்த்தபடியும்; வாள்உற்ற கண்ணுள் மகன் வாழ்க என நோற்ற ஆறும் - வாளனைய கண்ணுளாம் விசயை தன் மகன் வாழ்க என்று நோற்றபடியும்;

(வி - ம்.) 'நாள் உற்று' என்பதற்கு 'நல்ல நாள் உற்று' என்றும் பொருள் கொள்ளலாம். தோள் - கை. உற்று: உவம வாசகம் (உவம உருபு). 'செப்புற்ற கொங்கை' (சிற்-௩௫௪) என்றார் பிறரும். 'ஒழியாது' (தொல் - தொகை - ௧௫) என்னும் இலேசால் 'கோனை' என்னும் (இரண்டன்) உருபு தொக்கது. கதையை உட்கொண்டு அவன் என்பது கந்துக் கடனைச் சுட்டியது. அரசன் இறத்தற்கு ஏதுவாகலின் ஈண்டும் 'வாளுற்றகண்' என்றார். வாழ்க: வியங்கோள்: இறுதி அகரம் செய்யுள் விகாரத்தால் தொக்கது. கூனி: விசயையின் தோழியான சண்பகமாலை. கோன்பு: வேட்கையுள்ளது. (௰)

௧௧. நெஞ்சம் புணையாக் கலைமாக்கட னீந்தி யாங்கே
வஞ்சம் மறவர் நிரைவள்ளல் விடுத்த வாறும்,
விஞ்சைக் கிறைவன் மகள்வீணையிற் றோற்ற வாறு
நஞ்சுற்ற காம நனிநாகரிற் றுய்த்த வாறும்,

(இ - ள்.) வள்ளல் நெஞ்சம் புணையாக் கலை மாக்கடல் நீந்தி - சீவகன் தன் நெஞ்சு தெப்பமாகக் கலைகளாகிய கடலைக் கடந்து; ஆங்கே வஞ்சம் மறவர் நிரை விடுத்த ஆறும் - அப்பொழுதே வஞ்சமுடைய வேடர்கொண்ட ஆனிரையை மீட்டபடியும்; விஞ்சைக்கு இறைவன் மகள் வீணையில் தோற்ற ஆறும் - கலுழவேகன் மகளாகிய தத்தை யாழ்ப்பாடலிலே தோற்றபடியும்; நஞ்சு உற்ற காமம் நாகரின் நனி துய்த்த ஆறும் - உளம் நைந்து இருதலையும் ஒத்த காமத்தை நாகரைப் போலச் சாலவும் நுகர்ந்த படியும்;

(வி - ம்.) கற்றபொழுதே பயன் கொள்ளுதல் அருமையாதலின் 'ஆங்கே' என்றார். மறவரைக் கொல்லாது உயிர் வழங்குதலின் 'வள்ளல்' என்றார். விஞ்சை: குணப் பண்பு. அது பண்பாகு பெயராக விஞ்சையரை உணர்த்தியது. விஞ்சையர்க்கு இறைவன் கலுழவேகன். ஒரு மகளை வென்றான் என்பது இவன் தலைமைக்கு இழிவென உன்னி அவள் செயலாகக் கூறினார். நாகர்: யவணதேவர் என அருக நூல்கள் கூறும் ஒருடம்பாதலும் நீங்கல் வன்மையும்பற்றி உவமையாயினர். நஞ்சு - நைந்து: போலி. (௧௧)

௧௨. முந்நீர்ப் படுசெங் கலறம்முர சார்ப்ப மூதூர்ச்
செந்நீர்க் கடியின் விழவாட்டினுட் டேங்கொள் சுண்ண
மைந்நீர் நெடுங்க ணிருமங்கையர் தம்முண் மாறு
யிந்நீர்ப் படியே யிவை தோற்றன மென்ற வாறும்,

(இ - ள்.) முந்நீர்ப் படு சங்கு அலற முரசு ஆர்ப்ப-கடலில் தோன்றிய சங்கு ஒலிக்கவும் முரசு முழங்கவும்; மூதூர்ச் செந்நீர்க் கடியின் விழவு ஆட்டினுள் - இராசமாபுரத்திற் புது நீர் மிகுதியால் உண்டான விழாவின்கண் ஆடும் விளையாட்டினில்; மைந்நீர் நெடுங்கண் இரு மங்கையர் - மைதீட்டிய தன்மையுள்ள நெடுங்கணார் இரு மங்கையர்கள்; தம்முள் மாறாய் இவை தோற்றனம் இந்நீர்ப் படியேம் என்ற ஆறும் - சுண்ணத்தாலே தமக்குள் மாறுபட்டு இவற்றில் தோற்றால் இப்புதுநீரில் ஆடோம் என்ற படியும்;

(வி - ம்.) அலற ஆர்ப்ப விளையாடும் விளையாட்டெனக. கடி-மிகுதி (உரிச்சொல்). தேன் கொள் சுண்ணம்: ஒளியாலும் நாற்றத்தாலும் ஊற்றாலும் இனிமைகொண்ட சுண்ணம் (வாசனைப்பொடி.) தோற்றனம்: 'மோயினள் உயிர்த்த காலை' (அகநா - ரு) என்றாற்போல வினையெச்சம் முற்றாய்த் திரிந்தது.

செந்நீர்: சிவப்பாகிய நீர்: புதுநீர். இருமங்கையர்: குணமாலை, சுரமஞ்சரி. (எ)

கஅ. சுண்ண முடைந்து சுரமஞ்சரி சோர்ந்து தோழி,
வண்ணந் நெடுங்கட் குணமாலையை வைது மாறிப்
புண்மேற் புடையிற் புகைந்தாணுரு வியாது நோக்காள்
கண்ணேக் குடைந்து கடிமாட மடைந்த வாறும்,

(இ - ள்.) சுரமஞ்சரி சுண்ணம் உடைந்து சோர்ந்து - சுரமஞ்சரி யென்பவள் சுண்ணம் தோற்றலாலே சோர்வுற்று; வண்ணம் நெடுங்கண் தோழி குணமாலையை மாறி வைது-அழகிய நெடுங்கண்ணாளாகிய தோழி குணமாலையைக் [1]கண்ணற்றுச் சீவகனை மழை வள்ளல் என்று வைது; புண்மேல் புடையில் புகைந்து கண்நோக்கு உடைந்து - புண்ணின் மேல் புடை யுண்டானாற்போல நெஞ்சம் அழன்று அழகுகெட்டு; ஆண் உரு யாதும் நோக்காள் கடிமாடம் அடைந்த ஆறும் - ஆண் மக்கள் வடிவை ஓவியத்தும் பாராமற் கன்னியாமாடத்தை அடைந்த படியும்;

(வி - ம்.) மாறி வைது என மாறிற்று, 'திங்களங்கதிர்' (சீவக - அகூஅ) 'மாற்றம் ஒன்று' (சீவக - அகூகூ) என்னுஞ் செய்யுட்களை நோக்கி. புடை - துவாரம். கண்நோக்கு: அழகு. மழை வள்ளல்: மழை இடமறிந்து பெய்யாதது போலச் சீவகனும் குணமாலையின்பாற் காதல் கொண்டான் என்று சுரமஞ்சரி கருதினாள். யாதும் என்பதனால் ஓவியமும் எனப்பட்டது. கடி - காவல். (அ)

1. 'கண்ணுற்று' என உ. வே. சாமிநாதையரவர்கள் பதிப்பில் உள்ளது பிரதி வழுவாக இருத்தல் வேண்டும், மாறி என்பதற்கு அது பொருளன்மையின். கண்ணற்று - மாறுபட்டு.

கச. பொன்றுஞ்சு மார்பன் புனலாட்டிடைப் புன்கணெய்தி
நின்றெஞ்சு கின்ற ஞமலிக்கமிர் தீந்த வாறு
மன்றைப் பகலே குணமாலையை யச்சு றுத்த
வென்றிக் களிற்றை விரிதாரவன் வென்ற வாறும்,

(இ - ள்.) பொன் துஞ்சும் மார்பன் - திருமகள் தங்கும் மார்பன்; புனல் ஆட்டிடை எஞ்சுகின்ற ஞமலிக்குப் புன்கண் எய்தி நின்று அமிர்து ஈந்த ஆறும் - நீர்விளையாட்டிலே உயிர் போகின்ற நாய்க்குத் தானும் வருத்தமுற்று நின்று பஞ்ச நமஸ்காரமாகிய மந்திரத்தைக் கொடுத்தபடியும்; அன்றைப் பகலே குணமாலையை அச்சுறுத்த வென்றிக் களிற்றை - அறம் புரிந்த அப் பகலே குணமாலையை அச்சம் ஊட்டிய (முன்பு) வென்றியுடைய களிற்றை; விரிதாரவன் வென்ற ஆறும் - (மார்பின் சிறப்பால் உலகு) புகழ்ந்த தாரணிந்த சீவகன் வென்ற படியும்;

(வி - ம்.) அச்சம் உறுத்த : அச்சுறுத்த : விகாரம். சீவகன் மார்பிலே தங்கிய சிறப்பினாலே அத் தார் உலகாற் புகழப் பெற்றது. வென்றி - வெற்றி (கச)

கரு. தேனூறு தீஞ்சொற் குணமாலையைச் சேர்ந்த வாறுங்,
கோனூறு செய்வான் கருதிச்சிறை கொண்ட வாறும்,
வானூ றிழிந்து மழைமின்னென வந்தோர் தேவ
னூனூ றொளிவே லுரவோற்கொண் டெழுந்த வாறும்,

(இ - ள்.) தேன் ஊறு தீ சொல் குணமாலையைச் சேர்ந்த ஆறும் - தேனின் இனிமை நீங்காத இனிய சொல்லையுடைய குணமாலையைச் சேர்ந்தபடியும்; கோன் ஊறு செய்வான் கருதி - கட்டியங்காரன் கொல்வதற்குக் [1]கருத; சிறை கொண்ட ஆறும் - முற்பிறப்பின் தீவினையாகிய சிறை வந்து சீவகனைக் கைக்கொண்ட படியும்; ஓர் தேவன் மழைமின் என வான் ஆறு வந்து இழிந்து - ஒரு தேவன் மழைமீது ஏறி மின்போல வான வழியாக வந்து; ஊன் நாறு ஒளிவேல் உரவோன் கொண்டு எழுந்த ஆறும் - ஊன் கமழும் ஒளிதரு வேலேந்திய சீவகனைக் கைக்கொண்டு போனபடியும்;

(வி - ம்.) செய்வான்: எதிர்கால வினையெச்சம். 'கருதி' யென்பது 'கருத' என நின்றது, 'உரற்கால்யானை ஒடித்துண்டு' (குறுந்-உஅஉ) என்னுஞ் செய்தென் எச்சம் பிறவினை கொண்டாற் போல. சிறை - அன்னப் பார்ப்பை (இவன் முற்பிறப்பிற்) சிறை செய்தது. ஒரு தேவன்

1. கருதி எனவே கொண்டு சிறை கொண்டதைக் கட்டியங்காரனுக்கு ஆக்கலே அடுத்த செய்யுளுக்கும் ஏற்புடைத்தாக இருக்கிறது.

என்பது 'ஓர் தேவன்' என விகாரப்பட்டது; இவன் சுதஞ்சணன். மழை: சுதஞ்சணன் ஊர்தி. ஆசிரியன் மொழியை உட்கொண்டு நடத்தலின் உரவோன் என்பது அறிவுடையோன் என்னும் பொருளது. (க0)

கசு. தேங்காத மள்ளர் திரடோளிணை சிக்க யாத்த
பூங்கச்சு நீக்கிப் பொறிமாண்கல நல்ல சேர்த்தி
நீங்காத காதலு டையாய்நினைக் கென்று பின்னும்
பாங்காய விஞ்சை பணித்தாங்கு விடுத்த வாறும்,

(இ-ள்.) பூங்கச்சு யாத்த தேங்காத திரள் தோளிணை மள்ளர் - பூவேலை செய்த கச்சினை உடையின்மேல் இறுகக் கட்டிய கெடாத, திரண்ட இரு தோள்களை உடைய வீரர்; சிக்க-(சீவகனை) அகப்பட வளைக்க; நீக்கி - (அச் சிறையை) நீக்கி; பொறிமாண் நல்ல கலம் சேர்த்தி - வேலைப்பாடமைந்த சிறந்த அழகிய அணிகலன் பூட்டி; நீங்காத காதல் உடையாய்! பின்னும் நினைக்க என்று - இடையறாத அன்புடையாய்! இனியும் என்னை நினைத்திடுக என்று கூறி: பாங்கு ஆய விஞ்சை பணித்து ஆங்கு விடுத்த ஆறும் - தனக்குரிய மறைகளை அவனுக்கு நிலையாக்கி அங்கிருந்து விடுத்தபடியும்;

(வி-ம்.) பூங்கச்சு யாத்த கெடாத வீரர், தோளிணையையுடைய வீரர்: இவை இகழ்ச்சி (வீரர் அல்லாதவரை வீரர் என்றதனால் இகழ்ச்சி.) கச்சு - சேலையின்மேற் கட்டினது. சிக்க - அகப்படக் கோல; திசைச் சொல் (குடநாட்டுச் சொல்). நீக்கி - அச்சிறையை நீக்கி. 'பின்னும் நினைக்க' என்றது இடர்வரின் என்றதன்றி இன்பமுறுங்காலும் நினைக்க என்றவாறு.

இது முற்கூறிய கவியிற் சிறைப்பாவத்தைத் தொடர்புபடுத்து எடுத்து விரியக் கூறிப் பின்பு அவற்குச் செய்த சிறப்புக்களும் கூறிற்று. [1]கட்டிலாமை பின்னே உணர்க. (கக)

கஎ. பைந்நாகப் பள்ளி மணிவண்ணனிற் பாயல் கொண்டு
கைந்நாகந் துஞ்சுங் கமழ்காந்தளஞ் சாரல் போகி
மைந்நாக வேலி மலிபல்லவ தேய நண்ணிக்
கோய்ந்நாகச் சோலைக் கோடியந்நகர் புக்க வாறும்,

(இ-ள்.) பை நாகப்பள்ளி மணிவண்ணனின் - படமுடைய அரவணையிலே நீல நிறமுடைய திருமால் துயிலுமாறு போல; கைநாகம் கமழ் காந்தள் பாயல்கொண்டு துஞ்சும் அம் சாரல் போகி - யானைகள் மணமிகு காந்தள் மலரைப் படுக்கை

1. தேங்காத மள்ளர் திரள் தோள் இணை சிக்க யாத்த பூங்கச்சு நீக்கி - கெடாத வீரர் (சீவகனுடைய) திரண்ட இரு தோள்களையும் அகப்படக் கட்டிய பூவேலை மிக்கதான கச்சினை நீக்கி. இவ்வாறு பொருள் கொள்ளலே சொற்கிடக்கைக்கு நேரியது.

யாகக்கொண்டு துயிலும் அழகிய சாரலைக் கடந்து; மை நாக வேலி மலிபல்லவ தேயம் நண்ணி - முகில் உறங்கும் மலையை வேலியாக உடைய வளமிகு பல்லவ நாட்டை அடைந்து; கொய் நாகச்சோலை கொடி அந்நகர் புக்க ஆறும் - மலர்களைக் கொய்யும் புன்னைமரச் சோலையையும் கொடியையுமுடைய அதன் தலை நகராகிய சந்திராபம் என்னும் நகரிலே புகுந்தபடியும்;

(வி - ம்.) மை - முகில். கொய்ந்நாகம் - புன்னை. கொடிமாநகரும் பாடம். காந்தள் வடிவிற்கும் நிறத்திற்கும் உவமம். (கஉ)

கஅ. அத்தம் மனைய களிற்றந்நகர் மன்னன் மங்கை
முத்தம் முரிஞ்சு முகிழ்மென்முலை மின்ன னாளைப்
பைத்தங்கோர் நாகம் பனிமாமதி யென்று தீண்டச்
சித்தங் குழையற் கெனத்தீர்த்தவட் சேர்ந்த வாறும்,

(இ - ள்.) அத்தம் அனைய களிற்று அந் நகர் மன்னன் மங்கை - அத்தகிரி போன்ற யானையையுடைய, அந்த நகர் மன்னனின் மகளாகிய; முத்தம் உரிஞ்சும் முகிழ் மென்முலை மின் அன்னாளை - முத்துமாலை அசையும் அரும்பனைய மெல்லிய முலையையுடைய மின்னுக்கொடி போன்ற பதுமையை; அங்கு ஓர் நாகம் பைத்து பனி மா மதி என்று தீண்ட - அப் பொழிலிடத்தே ஓர் அரவு படம் விரித்துக் குளிர்ந்த பெரிய திங்களென்று (அவள் முகத்தைக் கருதி, அது மறுவுடைய திங்களன்மையின் கையிலே) தீண்டுதலால்; சித்தம் குழையற்க எனத் தீர்த்து அவள் சேர்ந்த ஆறும் - உளம் (வருந்திய உலோக பாலனை) வருந்தற்க என்று கூறி, (அவளுக்குற்ற நஞ்சினை) நீக்கி, அவளை மணந்தபடியும்;

(வி - ம்.) அத்தகிரி என்னும் வடமொழிச் சிதைவு விகாரமாயிற்று; 'அத்த மென்னும் பொன்னஞ் சிலம்பு' (பாண்டிக்கோவை) என்றார் பிறரும். 'அங்கு' (பைத்து அங்கு ஓர் நாகம்) எனக் கதையை உட்கொண்டு சுட்டினர். குழையற்க : விகாரம். (குழையற்க என : குழையற்கென : அகரம் : தொகுத்தல் விகாரம்). (கங)

கக. பொற்பூண் சுமந்த புணர்மென்முலைக் கோடு போழ
நற்பூங் கழலா னிருதிங்க ணயந்த வாறுங்,
கற்பா டழித்த கனமாமணித் தூண்செய் தோளான்
வெற்பூ டறுத்து விரைவின்னெறிக் கொண்ட வாறும்,

(இ - ள்.) நல்பூங் கழலான் - அழகிய பூவேலை செய்த வீரக்கழல் அணிந்த சீவகன்; பொன்பூண் சுமந்த புணர் மென் முலைக்கோடு போழ - பொற்கலன் ஆகிய கிம்புரியைச் சுமந்த முலையாகிய இரு கொம்புகளும் உழ; இரு திங்கள் நயந்த ஆறும்-

இரண்டு திங்கள் விரும்பி இருந்தபடியும்; கல்பாடு அழித்த கனம் மாமணித் தூண்செய் தோளான் - உலக்கல்லின் பெருமையைக் கெடுத்த கனத்த மணித்தூணைப் போன்ற தோளையுடைய அவன்; விரைவின் வெற்பு ஊடு அறுத்து நெறிக்கொண்ட ஆறும்-காரியத்தின் விரைவாலே மலையின் இடையிலே புகுந்து வழிக்கொண்டபடியும்;

(வி - ம்.) உலத்தின் பெருமையைக் கெடுத்த கனத்த மணித்தூணைப் போன்ற தோளான். (கச)

உ0. தள்ளாத சும்மை மிகுதக்கந ளுடு நண்ணி
விள்ளா விழுச்சீர் வணிகன்மகள் வேற்கணோக்க
முள்ளாவி வாட்ட வுயிரொன்றொத் துறைந்த வாறுங்,
கள்ளாவி நாறுங் கமழ்கோதையிற் போய வாறும்,

(இ - ள்.) தள்ளாத சும்மைமிகு நல்தக்க நாடு நண்ணி - இன்ன ஒலியென்று நீக்கமுடியாத ஆரவாரம் மிகுந்த அழகிய தக்க நாட்டை அணைந்து; விள்ளா விழுச்சீர் வணிகன் மகள் வேல் கண் நோக்கம் உள் ஆவி வாட்ட - நீங்காத சிறந்த புகழையுடைய ஒரு வணிகன் மகளின் வேலனைய கண்களின் பார்வை உயிரை மனத்துள்ளே நின்று வருத்தலால்; உயிர் ஒன்று ஒத்து உறைந்த ஆறும் - (இருவர்) உயிரும் ஒருயிரைப்போல வாழ்ந்தபடியும்; கள் ஆவி நாறும கமழ் கோதையின் போய ஆறும் - தேன் மணம் கமழும் அவளைப் பிரிந்து போனபடியும்;

(வி - ம்.) விள்ளா - நீங்காத: உள் - மனம். ஆவி - மணம். (கள் ஆவி) இன் : நீக்கம், (கோதை: சினையாகு பெயர்) கோதையின் : இன் : நீக்கம். தக்கநாடு : வடமொழிச் சிதைவு. (கரு)

உக. இன்னீ ரமிர்தன் னவள்கண்ணிணை மாரி கற்பப்
பொன்னூர் கழலான் பொழிமாமழைக் காடு போகி
மின்னீர வெள்வே லவன்மத்திம தேய மன்னன்
கொன்னூர் கொடுவெஞ் சிலைகண்டெதிர் கொண்ட வாறும்,

(இ - ள்.) இன்நீர் அமிர்து அன்னவள் கண்இணை மாரி கற்ப - இனிய பண்புறும் அமுதம்போன்ற கேமசரியின் இரு கண்களும் மாறாது நீர்சொரியப் பழகும்படி; பொன் ஊர் கழலான் மாமழை பொழி காடு போகி - பொன் நெகிழும் வீரக் கழலான் பெருமழை பெய்யுங் காட்டிடைப் போதலாலே; மின் நீர வெள் வேலவன் மத்திய தேய மன்னன் - மின்னின் தன்மையையுடைய தூய வேலேந்திய மத்திம நாட்டரசன் தடமித்தனென்பான்; கொன் ஊர் கொடு வெஞ்சிலை கண்டு எதிர்கொண்ட

ஆறும் - அச்சம் பரந்த வளைந்த வில்லின் தழும்பைக் கண்டு எதிர்கொண்டபடியும்;

(வி - ம்.) 'கண்ணிணையும்' என்னும் உம்மை (செய்யுள்) விகாரத்தால் தொக்கது. [1]ஓடின பொன் [2]கிடக்க நெகிழுமாதலின் 'ஊரும்' என்றார். (சேமசரியின்) கண்ணும் (தான் செல்லும்) காடும் மழை பொழியப் போனன் என்றதனுற் காலம் கார் ஆயிற்று. 'மன் நீர வெள் வேல்' எனவும் பாடம். சிலை: (கருவி) ஆகுபெயர், (சிலைத் தழும்பை உணர்த்தியது). (க்சு)

உஉ. திண்டே ரரசர் திறற்சிங்கங்கள் வில்லும் வாளுங்
கண்டாங் குவந்து கடிபெய்திவட் காத்துமென்று
கொண்டார் குடங்கை யளவேயுள கண்ணி ளைப்
புண்டாங் கெரிவே லிளையோற்குப் புணர்த்த வாறும்,

(இ - ள்.) திண்தேர் அரசர் திறல் சிங்கங்கள் வில்லும் வாளும் கண்டு ஆங்கு உவந்து-(தடமித்தன்) வலிய தேரை யுடைய அரசர்களாகிய யானைகட்குச் சிங்கங்கள் போன்ற தன் மக்களின் விற்பயிற்சியையும் வாட்பயிற்சியையும் (சீவகன் கற்பித்து அரங்கேற்றியபோது) பார்த்து அப்பொழுதே மகிழ்ந்து; இவண் கடிபெய்து காத்தும் என்று - இவ்விடத்தே சீவகனைக் காவலிட்டுக் காப்போம் என்று; கொண்டார் குடங்கை அள வேயுள கண்ணினளை-இரப்போரின் குவிந்த கை அளவே உள்ள கண்ணையுடைய கனகமாலையை; புண் தாங்கு எரிவேல் இளையோற்குப் புணர்த்த ஆறும் - (பகைவருடைய) புண்ணைச் சுமந்த ஒளி வீசும் வேலேந்திய சீவகனுக்கு மணம்புரிவித்தபடியும்;

(வி - ம்.) கொண்டார் - ஏற்றார் (இரப்பவர்). பகைவர் புண்ணைத் தாங்குதற்குக் காரணமான வேல். (தாங்கு வேல்): வினைத்தொகை. ஏதுப் பொருள் கருவிக்கண் அடங்கும்; 'மற்றிந்நோய் தீரும் மருந்து' (கலித்தொகை: சுo) என்றாற்போல. 'அரசன் திறலும்' என்றும் பாடம்.

அரசர் திறற் சிங்கங்கள்: ஏகதேச உருவக அணி. சீவகன் தடமித்தன் புதல்வர் ஐவருக்கும் வில்லும் வாளும் கற்பித்தான். குடங்கை அளவு கண்: பெரிய கண்கள் என்பதைக் குறிக்கின்றன. (கஎ)

உங. மதியங் கெடுத்த வயமீனெனத் தம்பி மாழாந்
துதிதற் குரியாள் பணியாலுடனய் வாறு,
நிதியின் னெறியி னவன்றேழர் நிரந்த வாறும்,
பதியின் னகன்று பயந்தாளைப் பணிந்த வாறும்,

(இ - ள்.) தம்பி மதியம் கெடுத்த வயமீன் என மாழாந்து- சீவகன் தம்பியான நந்தட்டன் திங்களைப் பிரிந்த உரோகிணி

1. ஓடின - உருக்கிய. 2. கிடக்க - காலின்மேற் கிடக்கும்போது.

போல மயங்கி; உதிதற்கு உரியாள் பணியால் உடன் ஆய ஆறும்- (உலகு விளங்கத்) தோன்றினவனுக்குரிய தத்தையின் ஏவலால் அவனைக் கண்டபடியும்; நிதியின் நெறியின் அவன் தோழர் நிரந்த ஆறும் - பொருள் தேடவேண்டும் என்னும் வழியாலே அவன் தோழர் அவனைத் தேடினபடியும்; பதியின் அகன்று பயந்தாளைப் பணிந்த ஆறும் - தன் கணவனைப் பிரிந்து சென்று, தன்னைப்பெற்ற அன்னையாகிய விசயையைச் (சீவகன் கண்டு) வணங்கினபடியும்;

'வயமீன்களெனத் தோழர் நிரந்த படியும்' என்றும் ஆம். பதியினின்றும் நீங்கிப் பிள்ளையைப் பெற்றாளெனவே விசயையாம். பதி: இராசமாபுரமும் ஆம்; ஏமமாபுரமும் ஆம்.

பதி: ஏமமாபுரம் எனக்கொண்டு சீவகன் தன் தோழருடன் ஏமமாபுரத்தை விட்டுச்சென்று அன்னையை வணங்கினன் என்பதே சிறப்புடையது தொடர்ச்சியாக வருவதால். பதி: இராசமாபுரம் என்றும் கணவன் என்றும் பொருள் கொண்டால் அகன்றவள் விசயை ஆவாள். உதிதன்: தோன்றியவன். உரோகிணி என்னும் விண்மீன் திங்களை விட்டு நீங்காமல் இருக்கும். நந்தட்டனும் தோழர்களும் பிரியாமல் இருந்தவர்கள். நந்தட்டன்: கந்துக்கடன் மகன். (கஅ)

உசு. கண்வா ளறுக்குங் கமழ்தாரவன் றாயோ டெண்ணி
விண்வா ளறுக்கும் நகர்வீதி புகுந்த வாறு,
மண்மேல் விளக்காய் வரத்திற்பிறந் தாளோர் கன்னிப்
பெண்ணா ரமிர்தின் பெருவாரியுட் பட்ட வாறும்,

(இ - ள்.) கண்வாள் அறுக்கும் கமழ்தாரவன் தாயொடு எண்ணி - கண்ணின் ஒளியைத் தடுக்கும் மணமிகு மாலையான் தன் அன்னையொடும் ஆராய்ந்து; விண் வாள் அறுக்கும் நகர்வீதி புகுந்த ஆறும் - விண்ணிடத்தை வாள்போலப் பிரிக்கும் இராசமாபுரத்தின் தெருவிலே சென்றபடியும்; மண்மேல் விளக்காய் வரத்தில் பிறந்தாள் - மண்ணுலகுக்கு விளக்கென வரத்தினாற் பிறந்தவளாகிய; ஓர் கன்னிப்பெண் ஆர் அமிர்தின்-ஒரு கன்னிப் பெண்ணாகிய சிறந்த அமுதத்தின்; பெருவாரியுள்பட்ட ஆறும் - பெரிய இன்பக்கடலிலே அகப்பட்டபடியும்;

(வி - ம்.) மாலையைக் கண்ட கண் பிறிதொன்றிற் செல்லாமையின் 'கண்வாள் அறுக்கும்' என்றார். விண் - தேவருலகு. மண்மேல்: (மண்ணுக்கு என நான்காம் வேற்றுமைப் பொருளில் வந்ததால்) உருபு மயக்கம். 'கன்னிப் பெண்ணாரமிர்தின் பெருவாரி'[1] பல சொற்றொகை

1. 'கன்னிப் பெண்ணாரமிர்து' என்னுந் தொடர் ஒரு சொல்லாகவும் 'பெருவாரி' என்னுந் தொடர் ஒரு சொல்லாகவும் கொண்டு இரு சொல் தொகை யென்றார். 'கற்சுனை' ஒரு சொல் போலவும், 'குவளை யிதழ்' ஒரு சொல்லாகவும் நின்றன.

யாயினும், 'கற்சுனைக் குவளையிதழ்' போல (தொல் - எச்ச. உசு. இளம் பூரணர், நச்சினார்க்கினியர் மேற்கோள்) இருசொல் தொகையாய் நின்றது.

கன்னிப்பெண்: விமலை. கண்வாள்: கண்ணொளி. (கக)

உரு. துஞ்சா மணிப்பூட் சுரமஞ்சரி யென்னும் நாமத்
தஞ்சாயல் பூத்த வகிலார்துகி லாய்பொ னல்கு
லெஞ்சாத வின்பக் கொடிதாழ்த்ததும் பன்றி யெய்து
நஞ்சூறு வேலான் பகைநாமறக் கொன்ற வாறும்,

(இ - ள்.) துஞ்சா மணிப்பூண் சுரமஞ்சரி என்னும் நாமத்து - ஒளிமாறாத மாணிக்கப் பூணினையும் சுரமஞ்சரி என்னும் பெயரினையும், அம்சாயல் அகில்ஆர் துகில் ஆய்பொன் அல்குல் - அழகிய சாயலையும் அகில்மணம் நிறைந்த ஆடையும் பொன்னணிகலனும் உடைய அல்குலையும்; பூத்த எஞ்சாத இன்பக்கொடி தாழ்த்ததும் - மலர்ந்த, குறையாத இன்பந்தருங் கொடியை வளைத்தபடியும்; நஞ்சூறு வேலான் பன்றி எய்து பகை நாம் அறக் கொன்ற ஆறும் - நஞ்சு தோயும் வேலணிந்த சீவகன் பன்றியை வீழ்த்திப் பகைவனை அச்சம் நீங்கக் கொன்ற படியும்;

(வி - ம்.) துகிலையும் மேகலையையும் உடைத்தாகிய அல்குலையுடைய கொடி; இன்பமாகிய கொடி. பொன்: (கருவி) ஆகுபெயர். கொடி யென்றலானும் (ஆடவரை நோக்காமை மேற்கொண்ட) விரதத்தை நீக்குதலானும் 'தாழ்த்தது' என்றார். நாம் - அச்சம்: உரிச்சொல். நாமம் ஆயின் விகாரமாம். (உ0)

உசு. புண்டோய்த் தெடுத்த பொருவேலெனச் சேந்து நீண்ட
கண்போன்ற மாமன் மகள்கண்மணிப் பாவை யன்ன
பெண்பா லமிர்தின் னலம்பெற்றதும் பொற்பச் செங்கோ
றண்பான் மதிதோய் குடைதண்ணிழற் பாய வாறும்,

(இ - ள்.) மாமன் கண்போன்ற மகள்-தன் மாமன் கோவிந்தனுக்குக் கண்போன்ற மனைவி புதவியின், புண்தோய்த்து எடுத்த பொருவேல் எனச் சேந்து நீண்ட-புண்ணில் தோய்த்து எடுத்த, போருக்குரிய வேல்போலச் சிவந்த நீண்ட; கண்மணிப் பாவை அன்ன பெண்பால் அமிர்து இன்நலம் பெற்றதும் - கண் மணியிற் பாவைபோன்ற பெண்ணாகிய இலக்கணையிடத்து அமிர்தத்தைப் போன்ற இனிய நலத்தைப் பெற்றபடியும்; செங்கோல் பொற்பத் தண்பால் மதிதோய் குடை தண்நிழல் பாய ஆறும் - செங்கோல் பொலிவு பெற்றிருப்பக் குளிர்ந்த பாலனைய திங்களைப் போன்ற குடை குளிர்ந்த நிழலைப் பரப்பினபடியும்;

(வி - ம்.) தன் மாமனுடைய மகள், அவன் கண்போன்ற மகள், அவன் தேவி புதவியுடைய வேலெனச் சேந்து நீண்ட கண்மணியிற் பாவை அன்ன பெண்; 'உண்கண், மணிவாழ் பாவை' (நற்றிணை-கஅச) என்றார் பிறரும்.

வேல்படும்பொழுதே புண்ணும் உடனே நிகழ்தலின் புண்தோய்த் தென்றார். [மதி தோய்] தோய்: [1] உவமவாசகம். குடை: எழுவாய். குடைத் தண்ணிழலும் பாடம்.

மாமன் மகள் என்பதற்கு மாமன் மனைவி யென்று பொருள் கொள்ளுதலே சிறப்பாகுமென்று தோன்றுகிறது. இன்றேல் 'அவன் தேவி' என்ற சொற்களை வருவித்து 'அவளுக்குப் பெண்' என முடித்தல் வேண்டும். மகள் என்பதற்கு மனைவியெனச் சங்க நூல்களில் வருவதுண்டு. 'மனக் கினியாற்கு நீ மகளாயதூஉம்' (மணி-பதி-உக) என வருதல் காண்க 'புதவி' என்பது 'பிரிதிவி சுந்தரி' என்பதன் சிதைவு என்பர். (உக)

உஎ. திறைமன்ன ருய்ப்பத் திருநிற்பச் செங்கோ னடப்பக்
குறைவின்றிக் கோற்ற முயரத்தெவ் வர்தேர் பணிய
வுறைகின்ற காலத் தறங்கேட்டுரு முற்ற பாம்பி
னறிவன் னடிக்கீ ழரசஞ்சித் துறந்த வாறும்,.

(இ - ள்) குறைவு இன்றி மன்னர் திறை உய்ப்ப-குறைவு இல்லாமல் அரசர்கள் கப்பம் செலுத்தவும்; திருநிற்ப - செல்வம் நிலைபெற்றிருக்கவும்; செங்கோல் நடப்ப - நல்லாட்சி நடைபெற வும்; கொற்றம் உயர - வெற்றி மேம்படுமாறு; தெவ்வர் தேர் பணிய - பகைவருடைய தேர் வணங்க; உறைகின்ற காலத்து - வீற்றிருக்கும் காலத்திலே, அறம் கேட்டு உரும் உற்ற பாம்பின் அரசு அஞ்சி - அறத்தைக் கேட்டு இடியேற்றின் ஒலிகேட்ட பாம்பைப்போல அரசாட்சியினிடம் அச்சங்கொண்டு; அறிவன் அடிக்கீழ் துறந்த ஆறும் - அறிவன் திருவடியிலே துறவு மேற் கொண்டபடியும்;

(வி - ம்.) உய்ப்ப - செலுத்த. நிற்ப - கெடாது நிற்ப. குறை வின்றி: மத்திம தீபம் [இடையிலிருந்த இச்சொல் முன்னுள்ள சொற் களுக்கும் பின்னுள்ள சொற்களுக்கும் விளக்கமாக இருந்தது. எனவே, குறைவு இன்றி என்பதை யாவற்றிற்குங் கூட்டுக. மத்திமதீபம் என்பது இடைநிலை விளக்கு என்னும் அணி.]

இவனது துறவு கூறவே எல்லார் துறவும் உணர்த்தியதாயிற்று.

எல்லோரும் என்பது சீவகனுடைய தம்பியருந் தோழரும் தேவியரும் ஆகிய எல்லோரையுங் குறிக்கின்றது. அறிவன் - அருகப் பெருமான். (உஉ)

---

1. உவம வாசகம் - உவம உருபு.

உ௮. கோணைக் களிற்றுக் கொடித்தேரிவு ளிக்க டல்சூழ்
வாண்மொய்த்த தானை யவன்றம்பியுந் தோழன் மாரும்
பூண்மொய்த்த பொம்மன் முலையாரும் புலந்து றப்ப
வீணைக் கிழவன் விருந்தார்கதிச் சென்ற வாறும்,

(இ - ள்.) கோணைக் களிற்றுக் கொடித்தேர் இவுளிக் கட்ல்சூழ் வாள் மொய்த்த தானையவன் - மாறுபாடுடைய களிற்றையும் கொடித் தேரையும் குதிரைக் கடலையும் சூழ்ந்த வாளேந்திய காலாட் படையையுமுடைய சீவகனின்; தம்பியும் தோழன் மாரும் பூண்மொய்த்த பொம்மல் முலையாரும் புலம்துறப்ப - தம்பியும் தோழர் நால்வரும் பூண் அணிந்த விம்மிய முலைகளையுடைய தேவியர் எண்மரும் இந்நிலத்தை விட்டுத் துறக்கத்தை அடைய; வீணைக் கிழவன் விருந்து ஆர்கதிச் சென்ற ஆறும் - சீவகன் புதுமை பொருந்திய வீட்டினை அடைந்தபடியும்.

(வி - ம்.) கோணை : ஐ : அசை.

இவனை ஒழிந்தோர்க்கு வீடுபெற நல்வினையின்று. 'தென்புல மருங்கின் விண்டு நிறைய' (மதுரைக். உ௦உ) என்றாற்போலப் புலம் நிலம் ஆம்; "ஏசு பெண்ணொழித் திந்திரர்களாய்த்—தூய ஞானமாய்த் துறக்கம் எய்தினர்" (சீவக. ௩க௨க) என்று; தேவியரை முற்கூறி, "ஐவருந், திருவின் தோற்றம்போல் தேவராயினர்." (சீவக. ௩க௩௪) என்று பிற்கூறுவாராகலின், முலையாருந் தம்பியுந் தோழன்மாரும் எனல்வேண்டும். ஆயினும், ஆண்பாற் சிறப்புடைமையின் முற்கூறினர். பாட்டுக் காமத்தை விளைத்தலின் அதூற் பற்றற்று விரைய வீடு பெற்றமை தோன்ற 'வீணைக் கிழவன் விருந்தார்கதிச் சென்றவாறும்' என்றார்.

உ௯. தேன்வா யுமிழ்ந்த வமிர்துண்டவன் போன்று செல்வன்
வான்வாய் வணக்கும் நலத்தார்முலைப் போகம் வேண்டா
னேனோரு மேத்த வவனெய்திய வின்ப வெள்ளம்
மீனோர்க் குரைப்பாம் பதிகத்து ளியன்ற வாறே.

(இ - ள்.) செல்வன் தேன்வாய் உமிழ்ந்த அமிர்து உண்டவன் போன்று - அழியாத செல்வத்தை உடையவன் தேனை உமிழ்தற்குக் காரணமான அமிர்தத்தை உண்டவனைப்போல; வான்வாய் வணக்கும் நலத்தார் முலைப்போகம் வேண்டான் - வானிடத்து மகளிரை அழகால் வணக்கும் நலமுடைய நில மகளிரின் இன்பத்தை வேண்டாதவனாய்; ஏனோரும் ஏத்த அவன் எய்திய இன்ப வெள்ளம் - எல்லோரும் போற்ற அவன் அவ்வீட்டிலே கேவல மடந்தையை நுகர்ந்த பேரின்பத்தையும்; பதிகத்துள் இயன்ற ஆறே ஈனோர்க்கு உரைப்பாம் - பதிகத்தில் அமைத்த வழியிலே இவ்வுலகில் உள்ளோர்க்கு உரைப்பாம்.

(வி - ம்.) உமிழ்ந்த அமிர்து, 'நிலம் பூத்த மரம்' (கலி. உஎ) போல நின்றது.

'இன்ப வெள்ளத்தையும்' என்று உம்மையும் உருபும் விரித்து, 'கல்லார் மணி' (சீவக-கூ) என்னும் கவி முதலியவற்றின் உம்மைகளுக்கும் இரண்டாவது (வேற்றுமை உருபு) விரித்து, 'உரைப்பாம்' என்பதனொடு முடிக்க.

முற்கூறிய வீட்டை ('விருந்தார் கதி', சீவக. உஅ) உட்கொண்டு கூறி, அதிற் பயனும் கொண்டு கூறினர்.

வான்: இடவாகு பெயர். நலத்தார்: சீவகன் மனைவியர், கேவல மடந்தை: பேரின்பமாகிய மடந்தை. எனேரும் - எல்லோரும். ஈனேர் - இங்குள்ளோர். (உசு)

---

## க. நாமகள் இலம்பகம்

### (கதைச் சுருக்கம்)

இந்நாவலந்தண் பொழிலில் ஏமாங்கதம் ஏமாங்கதம் என்று தன்னிசையால் திசைபோய நாடொன்று உளது. நீர்வளமும் நிலவளமும் பிற வளங்களும் நிரம்பிய இவ் வேமாங்கத நன்னாட்டை இராசமாபுரம் என்னும் சிறந்த நகரத்தின்கண்ணிருந்து சச்சந்தன் என்பான் செங்கோலோச்சினன். இம் மன்னர் மன்னன் கட்டிளமையும், பேரழகும், பேராற்றலும், நுண்ணறிவும், வண்மையும், பிறவும் ஒருங்கேயுடையனாய் விளங்கினான். இவன் அருட்குடைத் தண்ணிழலில் வையகம் மகிழ்ந்து வைகியது.

இம் மன்னன் தன் மாமனாகிய விதையநாட்டரசன் மகள் விசயை என்பவளை இனிதின் மணந்தான். விசயை ஒப்பற்ற பேரழகுடையவள்; நற்குணங்கட்கு உறையுள் போன்றவள். கலங்காக் கற்புடைய காரிகை. சச்சந்தன் இவள் பெண்மை நலத்திற் பெரிதும் ஈடுபாடுடையனாய் அவளை இமைப்பொழுதும் பிரியவியலாதவனாயினன். அவளோடு உடனுறைதற்குத் தன் அரசியற் கடமைகள் இடையூறுதல் கண்டு தன் அமைச்சருள் ஒருவனாகிய கட்டியங்காரனை அழைத்து அரசாட்சியை அவன் பால் ஒப்புவித்துத் தான் உவளகத்தே விசயையோடு நொடிப் பொழுதும் பிரிவிலனாய் உறைந்தின்புற்றனன்.

இஃதிங்ஙனமாக, ஒருசில திங்களிலேயே விசயை கருவுற்றனள். ஒருநாள் விசயை மூன்று கனாக்கண்டு அவற்றைச் சச்சந்தனுக்குணர்த்தி அவற்றின் பயன்களைத் தனக்குணர்த்தும்படி வேண்டினாள். அக் கனவுகளுள் ஒன்று தனக்கு வரும் கேட்டினைக் குறிப்பதுணர்ந்த சச்சந்தன், தன் உள்ளுணர்வின் தூண்டுதலாலே ஒரு தச்சனை யழைத்து வான்வழிப் பறந்து செல்லுமொரு மயிற்பொறி செய்வித்தனன். அம் மயிற் பொறியினை வானத்தே செலுத்தவும் கீழிறக்கவும் விசயைக்குக் கற்பித்தனன்.

பெறலருந்திருப் பெற்றபின் யாவர்க்குஞ் சிந்தனை பிறிதாதல் இயல்பன்றோ? அரசாட்சிப் பொறுப்பனைத்தும் தன்பால் எய்தியிருக்கும் இச்செவ்வி இதனைத் தன்னுடையதாகவே ஆக்கிக்கொள்ளத் தகுந்ததொரு செவ்வியாகும் என்று கருதிய கட்டியங்காரன் அமைச்சரோடு ஆராய்ந்தனன்; அவருட் சிலர் இக் கருத்தினை எதிர்த்துக் கட்டியங்காரனைத் திருத்த முயன்றனர்; கட்டியங்காரன் அவர் நல்லுரை கேளானாய்த் தான்

கருதியதே முடிப்பத் துணிந்து ஆவன செய்து அரசனை அந்தப் புரத்தில் வைத்தே நால்வகைப் படைகளுடன் முற்றுகை யிட்டனன்.

இத் தீச்செயல் உணர்ந்த சச்சந்த மன்னன் சீறினன்; என் செய்வான்! மகவின் நலங்கருதி விசயையை மயிற்பொறியிலேற்றி வானத்தின் வழியே புறம்போக்கினன். தான் ஒருவனே போர்க் கோலம் பூண்டு ஒப்பற்ற தன் தறுகண்மையாலே அப் பெரும் படைகளை ஒருங்கே எதிர்த்து நீண்டபொழுது போர்செய்து இறுதியில் கட்டியங்காரனாற் கொல்லப்பட்டனன்.

வெற்றி முரசொலி நங்கை விசயையின் செவியை எட்டியது. சச்சந்தன் முடிந்தமை உணர்ந்தாள்; மயங்கினள்; மயிற் பொறியைச் செலுத்த மறந்தாள்; திகைத்தாள்; மெய்ம்மறந்தாள். பாவம்! பிறிதென்செய்வாள் பேதை!

முறுக்குடைந்த மயிற்பொறி மெல்ல மெல்ல வீழ்ந்து அந் நகரத்துப் புறங்காட்டிலிறங்கிக் கால் குவித்திருந்தது. அப் பொழுதே விசயை அவ்விடத்திலேயே கருவுயிர்த்தாள்; குண கடலில் தோன்றும் இளஞாயிறு போன்றதோர் ஆண்மகவு அவள் வயிற்றினின்றும் தோன்றியது. ஒருவாறு மயக்கந் தீர்ந்த விசயை, அவ்வருமந்த மகவின் நிலைமையையும், மன்னனுக்குற்ற கேட்டினையும், கருதிப் பெரிதும் வருந்தினள். 'திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை' என்பதற்கிணங்க அம் மயானத்துறையும் தெய்வமொன்று விசயையின் தோழி சண்பகமாலை என்பாளின் வடிவங்கொண்டு அவள்முன் வந்து தோன்றித் துணைசெய்வ தாயிற்று. "கோப்பெருந் தேவி! இப்பொழுது இக்குழவியை எடுத்துப்போய்ப் புரப்பான் ஒருவன் ஈண்டு வருவன். ஆதலால் இதனை இங்குக் கிடத்தி யாம் சிறிது பொழுது மறைந்திருத்தல் வேண்டும்" என்று விசயைக்குணர்த்த இருவரும் அயலிலே சென்று மறைந்திருந்தனர்.

அப்பொழுது அந்நகரத்துள்ள கந்துக்கடன் என்னும் வணிகன் ஒருவன் இறந்துபட்ட தன் மகவைப் புதைத்தற்கு அங்கு வந்தனன். விசயை மகவினைக் கண்டு வியந்தான்; தன் மகவைப் புதைத்துவிட்டு இம் மகவினை ஆர்வத்துடன் எடுத்துப் போய்த் தன் மனைவி சுநந்தைக்குக் காட்டி இறந்ததாகக் கருதிய தம்மகவே உயிர்பெற்றதெனக் கூறிக் கொடுத்தான். அவளும் அதனை ஏற்று உவகையுடன் வளர்த்தனள். கந்துக்கடன் மயானத்தே இக்குழவியை எடுத்தபொழுது அது தும்மிற்றாக; ஆண்டு மறைந்திருந்த தெய்வம் 'சீவ' என்று வாழ்த்தியது; அது அவன் காதிற் பட்டபடியால் அக்குழந்தைக்குச் 'சீவகன்' என்று

பெயரிட்டனன். சுநந்தை பின்னர் நந்தட்டன் என்னும் ஒரு மகவினை ஈன்றாள்.

இனி, விசயையை முன்கூறப்பட்ட தெய்வம் அழைத்துப் போய்த் தண்டகாரணியத்தே சென்று ஆண்டுறையும் துறவோருடன் கூட்டிய பின்னர் மறைந்தது. விசயை அவணிருந்து தன் மகவின் நலங்கருதி நோன்பு செய்திருந்தனள்.

கந்துக்கடன் சீவகன் நந்தட்டன் முதலியோரை நல்லாசிரியரிடத்துக் கலைகள் பலவும் பயிற்றுவித்தான். அச்சணந்தி என்னும் அப்பேராசிரியர் சீவகனுடைய நுண்மாணுழைபுலனை உணர்ந்து மகிழ்ந்தனர். சீவகனைத் தனியிடத்தே அழைத்துச் சென்று ஒரு கதை கூறுவார்போன்று அவனது வரலாற்றை உணர்த்தினர். பின்னரும், "ஓராண்டு முடியுமளவும் நீ நின்னை வெளிப்படுத்தாதே இருத்தல் வேண்டும்," என்றும் வற்புறுத்தி வரங்கொண்டனர்.

அச்சணந்தியாசிரியர் தம் வரலாற்றையும் சீவகனுக்குணர்த்தி அவன்பால் விடைபெற்றுப் போய்த் தவம் செய்து வீடுபெற்றுயர்ந்தனர். இராசமாபுரத்தில் சீவகன், நந்தட்டன் முதலியவரோடு வைகுவானாயினன்.

## நாட்டு வளம்

கூ.0. நாவீற் றிருந்த புலமாமக ளோடு நன்போற்
பூவீற் றிருந்த திருமாமகள் புல்ல நாளும்
பாவீற் றிருந்த கலைபாரறச் சென்ற கேள்விக்
கோவீற் றிருந்த குடிநாட்டணி கூற லுற்றேன்.

(இ - ள்.) பா வீற்றிருந்த கலை பாரறச் சென்ற கேள்விக்கோ - பாக்களில் வீற்றிருந்த கலைகள் தடையின்றி நடந்த கேள்வியையுடைய அரசன்; நா வீற்றிருந்த புலமாமகளோடு - தன் நாவிலே வீற்றிருந்த அறிவைத் தரும் நாமகளோடு; நன் பொன் பூ வீற்றிருந்த திருமாமகள் நாளும் புல்ல-அழகிய பொற்றாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளும் வெறுப்பின்றி நாள் தோறும் தழுவ; வீற்றிருந்த குடி நாட்டணி கூறல் உற்றேன் - தான் வீற்றிருந்த, குடிகள் நிறைந்த நாட்டின் அழகைக் கூறத் தொடங்குகின்றேன்.

(வி - ம்.) 'கேள்விக்கோ' எனவே, கல்வியும் செல்வமும் பெற்றன வேணும். அவை ஈர்டோறும் புதியவாக நிகழ்கின்றமை தோன்றப் பின்னும் 'புல்ல' என்றார்.

இனி, அவர்கள் (நாமகளும் திருமகளும்) நாட்டிலே புல்ல என்றும் ஆம்.

வீற்றிருத்தல் - சிறப்புடனிருத்தல். வீறு - சிறப்பு. புலம் - அறிவு. பார் - தடை. கேள்வி - கற்றறிந்த பெரியோர் கூறுவதைக் கேட்டல். 'கற்றலிற் கேட்டலே நன்று' என்பர். (௪)

௩௧ காய்மாண்ட தேங்கின் பழம்வீழக் கமுகி னெற்றிப்
பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசி தறிவாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையாற்றிசை போய துண்டே.

(இ - ள்.) காய்மாண்ட தெங்கின் பழம்வீழ - நன்றாகக் காய்த்த தென்னைநெற்று வீழ; கமுகின் நெற்றிப்பூ மாண்ட தீந் தேன் தொடை கீறி - கமுகின் உச்சியிற் பொலிவிற் சிறந்த இனிய தேன்போல இனிய நீரையுடைய குலையைக் கீறி; வருக்கை போழ்ந்து - பலாப் பழங்களைப் பிளந்து; தேமாங்கனி சிதறி - தேமாவின் பழங்களைச் சிதறி; வாழைப்பழங்கள் சிந்தும் - வாழைப் பழங்களைச் சிதறும்; ஏமாங்கதம் என்று இசையால் திசை போயது உண்டு - ஏமாங்கதம் என்று பெயர் கூறப்பட்டு இசையாலே திசையெல்லாம் பரவியதாகிய ஒரு நாடு உண்டு.

(வி - ம்) 'வீழ' என்னும் (வினை)எச்சம் காரணகாரியப் பொருட்கண் இறந்தகாலம் உணர்த்திற்று. [1]ஒழிந்த எச்சம் ஈண்டுச் செய்வதன் தொழில்மேலன. பூமாண்ட தீந்தேன் தொடை - பொலிவு மாட்சிமைப் பட்ட தேன்போல இனிய நீரையுடைய தாறு; 'தகைசெய் தீஞ்சேற் றின்னீர்ப் பசுங்காய்' (மதுரைக்-௪0) என்றார் பிறரும். இனித் தேனும் தொடையும் என உம்மை விரித்தலுமாம். வருக்கை: (பொருள்) ஆகுபெயர்.

இனி, வீழ அப்பழம் கீறிப்போழ்ந்து சிதறிச் சிந்தும் எனச் செய் விப்பதன் தொழிலுமாம்: 'விண்டு' (சிற்-உ௪) என்பதுபோல. [விண்டு: ஈங்குத் தன்வினைக்கும பிறவினைக்கும் பொது].

இது உயர்வு நவிற்சி யணி. (௨)

௩௨. இலங்க லாழியி னுன்களிற் றீட்டம்போற்
கலங்கு தெண்டிரை மேய்ந்து கணமழை
பொலங்கொள் கொன்றையி னுன்சடை போன்மின்னி
விலங்கல் சேர்ந்துவிண் ணேறிவிட் டார்த்தவே.

(இ - ள்.) இலங்கல் ஆழியினுன் களிறு ஈட்டம்போல் - விளங்கும் ஆழியையுடைய பரதேசுவரர் என்னும் சக்கரவர்த்தி யினுடைய களிற்றுக் கூட்டம்போலே; கணமழை கலங்கு தெண்

1. கீறி, போழ்ந்து, சிதறி, சிந்தும் என்னும் தொழில்கள் முறையே தொடை, வருக்கை, மாங்கனி, வாழைப்பழங்கள் என்னும் செய்வதன் தொழில்கள் (தன் வினைகள்) அன்றித் தெங்கின் பழத்தின் வினையாக்கிச் செய்விப்பதன் தொழில் என்றுங் கூறலாம (இது பிறவினை).

திரை மேய்ந்து - கூட்டமாகிய முகில்கள் மறுகும் தெள்ளிய திரையை உடைய கடலில் (நீரைப்) பருகி; விலங்கல் சேர்ந்து விண்ஏறி - சூல்முதிரும் அளவும் மலையைச் சூழ்ந்திருந்து, பிறகு, வானிலே ஏறி; பொலம்கொள் கொன்றையினன் சடைபோல் மின்னி - பொன்னின் நிறத்தைக் கொண்ட கொன்றை மலர் அணிந்த சிவபிரானின் சடையைப்போல் மின்னி; விட்டு ஆர்த்த- வாய்விட்டு முழங்கின.

(வி - ம்.) கலங்கு தெண்டிரை - மறுகுகின்ற தெண்டிரை: ஆகு பெயர்; (அலையாகிய சினையின் பெயர் கடலுக்கு ஆயினமையின் சினை யாகு பெயர்).

பரதேசுவர சக்கரவர்த்தி ஆதி தீர்த்தங்கரரான விருஷப சுவாமி யின் மகனென்பர். இவருக்கு எண்பத்து நான்கிலட்சம் யானைகளுண் டென்பர்; இவர் பன்னிரண்டு மகாசக்கரவர்த்திகளில் முதல்வர் என்றுங் கூறுவர். (௩)

௩௩. தேனி ரைத்துயர் மோய்வரைச் சென்னியின்
மேனி ரைத்து விசும்புற வெள்ளிவெண்
கோனி ரைத்தன போற்கொழுந் தாரைகள்
வானி ரைத்து மணந்து சொரிந்தவே.

(இ - ள்.) வான்மேல் நிரைத்து - முகில்கள் ஒன்றின்மேல் ஒன்றாக மேலே வரிசையாகத் தம்மிற் கூடி; தேன் நிரைத்து உயர் மொய்வரைச் சென்னியின் - தேன்இறால் நிரைத்து உயர்ந்த மலையின் நெருங்கிய உச்சியில்; வெள்ளி வெண்கோல் விசும்புஉற நிரைத்தன போல் - வெள்ளியாற் செய்த வெள்ளிய கோல்களை வானெங்கும் நிரைத்தாற்போல; கொழுந் தாரைகள் நிரைத்து மணந்து சொரிந்த - வளமான நீர்த்தாரைகளை நிரைத்து மணங் கொண்டு சொரிந்தன.

(வி - ம்.) வான் முகிலை யுணர்த்துவது இடவாகுபெயரால். மணந்து: நீர்த்துளி மண்ணிற் பட்டவுடன் எழும் மணத்தைப் பெற்று. சொரிந்த: பலவின்பால் வினைமுற்று. தேன் இறால் - தேன்கூடு. (௪)

௩௪. குழவி வெண்மதிக் கோடுழக் கீண்டு தேன்
முழவி னின்றதிர் மோய்வரைச் சென்னியி
னிழியும் வெள்ளரு வித்திரள் யாவையுங்
குழுவின் மாடத் துகிற்கொடி போன்றவே.

(இ - ள்.) மொய்வரைச் சென்னியின் இழியும், முழவின் நின்று அதிர்வெள் அருவித்திரள் யாவையும் - மலையின் நெருங் கிய முடிகளில் நின்று இழியும் முழவென நிலைபெற்று முழங்கும் வெண்மையான அருவிக் கூட்டங்கள் எல்லாமும்; குழவி வெண்

மதிக்கோடு உழக்கீண்டு இழியும், (முழவின் நின்று அதிர்) தேன் (திரள் யாவையும்) - வெள்ளிய பிறைத்திங்களின் நுனி உழுதலால் இருல் கிழிந்து இழியும் முழவென நிலைபெற்று முழங்கும் தேன்கூட்டங்கள் எல்லாமும்; குழுவின்மாடத் துகில் கொடி போன்ற - கூட்டமான மாடங்களில் தூகிற்கொடியை ஒத்தன.

(வி - ம்.) முழவு போல அதிர்தல் இரண்டிற்கும் ஏற்றுக. 'வெண்டுகில்' (பரி - கO - அO) என்றும், 'கோபத்தன்ன தோயாப் பூந்துகில்' (முருகு - கடு) என்றும் கூறலின் துகில் வெண்மை செம்மை இரண்டிற்கும் பொது. தேனருவிக்குச் செந்துகில் உவமை. குழவி வெண்மதிக்கோடு உழுதலும் தேனருவி முழவென்ன முழங்கி இழிதலும் உயர்வு நவிற்சி. (ரு)

நடு. இலங்கு நீண்முடி யிந்திரன் மார்பின்மேல்
விலங்கி வீழ்ந்தமுத் தாரமும் போன்றவை
நலங்கொள பொன்னொடு நன்மணி சிந்தலாற்
கலன்பெய் பேழை கவிழ்த்தவும் போன்றவே.

(இ - ள்.) (அவை) இலங்கு நீள்முடி இந்திரன் மார்பின் மேல் விலங்கி வீழ்ந்த முத்தாரமும் போன்று - அவ்வருவிகள் தாமே விழும்பொழுது விளங்கும் நீண்ட முடியையுடைய இந்திரனுடைய மார்பின்மேலே பிணைத்து வீழ்ந்த முத்துமாலையையும் போன்று; அவை நலம்கொள் பொன்னொடு நன்மணி சிந்தலால் - அவை நலந்தரும் பொன்னையும் அழகிய மணிகளையும் சிதறுவதால்; கலன்பெய் பேழை கவிழ்த்தவும் போன்ற - (இந்திரனுடைய) அணிகலப் பெட்டியைக் கவிழ்த்துக் காட்டப்பெற்ற அணிகலன்களையும் ஒத்தன.

(வி - ம்.) விலங்கி வீழ்தல் - பிணைத்திட்ட மாலைபோலே வீழ்தல். [விலங்கல் - குறுக்கிடல்] கவிழ்த்த: [1]தொழிற்பெயர். சிந்துதல் - உள் நிறைதலின் தெறித்தல்.

இது நீரிற்கு உவமை கூறிற்று.

முற்செய்யுளில் தேனருவி நீரருவி என இருவகை அருவிகள் கூறப்பட்டன. அவற்றில் நீரருவிக்குமட்டும் ஈண்டு உவமை கூறிற்று என்கிறார் நச்சினார்க்கினியர். இனி, முற்செய்யுளில் நீரருவியை மட்டுமே கொண்டு, குழவி வெண்மதிக்கோடு உழுவதால் தேன் இருல் கீண்டு, வண்டுகள் ஆரவாரிப்பது முழவென அதிர்கின்ற தென்றும் அத்தகைய மலை முடியினின்றும் இழியும் நீரருவித்திரள் யாவையும் மாடத்தின் துகிற் கொடிபோல் விளங்குகின்றன என்றும் கூறுவதே பொருத்தமாகக் காண்கிறது. தேன் - வண்டுகளில் ஒருவகை. அவ்வாறு கொள்வது ஆற்றொழுக்காகப் பொருள்படுவதையும் தேனருவி கொள்ள வேண்டின் கொண்டு கூட்டுப்பொருள் கோள் கொள்ள வேண்டி வருவதையுங் காண்க. (சு)

---

1. வினையாலணையும் பெயர் என்றலே பொருத்தமுடைத்து.

ருசு. வள்ளற் கைத்தல மாந்தரின் மால்வரைக்
கொள்ளை கொண்ட கொழுநிதிக் குப்பையை
உள்ள மில்லவர்க் கூர்தோறு முய்த்துராய்
வெள்ள நாடு மடுத்து விரைந்ததே.

(இ - ள்.) வள்ளல் கைத்தல மாந்தரின் - வண்மையை யுடைய கையினைத் தம்மிடத்தே உடைய நன்மக்களைப்போல; மால்வரைக் கொள்ளைகொண்ட கொழுநிதிக் குப்பையை-பெரிய மலையிலிருந்து வாரிக்கொண்டு வந்த வளமிகு செல்வத்திரளை; ஊர்தொறும் உள்ளம் இல்லவர்க்கு - ஊர்தொறும் சோம்பி யிருப்போர்க்கு; மடுத்து உய்த்து நாடுஉராய் வெள்ளம் விரைந்தது - கொண்டு கொடுப்பதாக நாட்டிலே தோன்றி விரைந்து சென்றது.

(வி - ம்.) உய்த்து - உய்ப்ப. உராய் - பெயர்ந்து. [உள்ளம் - ஊக்கம். மாந்தரின்: இன்: ஐந்தனுருபு; ஒப்புப் பொருள்.] (எ)

ருஎ. மையல் யானையின் மும்மத மார்ந்துதே
னைய பொன்னசும் பாடி யளைந்துராய்ச்
செய்ய சந்தனந் தீம்பழ மாதியா
நைய வாரி நடந்தது நன்றரோ,

(இ - ள்.) மையல் யானையின் மும்மதம் ஆர்ந்து - மயங்கிய யானையின் மும்மதத்தையும் உள்ளே நிறைத்து; தேன் ஆடி ஐய பொன் அசும்பு அளைந்து உராய் - தேனைப் பூசி வியப்பையுடைய பொன் துளியைக் கலந்து பெயர்ந்து, செய்ய சந்தனம் தீம்பழம் ஆதியா - நல்ல சந்தனம் இனிய பழம் என்பவை முதலாகப் பிற வற்றையும்; நைய வாரி நன்று நடந்தது - காடு வருந்துமாறு வாரிக்கொண்டு பெரிதாக வெள்ளம் நடந்தது:

(வி - ம்.) உண்டு பூசி அளைந்து செருக்கி நாட்டை நோக்கி நடந்த தென்றார்; குறிப்பு [மக்கள் செய்கையை வெள்ளத்தின் செயலாக்கின மையின் குறிப்பு] ஐய: உரிச்சொல் ஈறு திரிந்தது [ஐ' என்னும் உரிச் சொல் 'ஐய' எனத் திரிந்தது. 'ஐ வியப்பாகும்' தொல் - உரி. அஎ] 'நன்று பெரிதாகும்' (தொல் - உரி - சு௫). [அரோ: அசை]. (அ)

ருஅ. வீடில் பட்டினம் வௌவிய வேந்தெனக்
காடு கையரிக் கொண்டு கவர்ந்துபோய்
மோடு கொள்புனன் மூரி நெடுங்கட
லோடு முற்றிய தோவென நண்ணிற்றே.

(இ - ள்.) வீடு இல் பட்டினம் வௌவிய வேந்துஎன - குடி நீங்குதல் இல்லாத பட்டினத்தைக் கொள்ளைகொண்ட அரசனைப்

போல; காடு கை அரிக்கொண்டு கவர்ந்துபோய் - காட்டைத் திரைகளாகிய கைகளாலே அரித்தல் செய்து அப்பொருள்களை உள்ளடக்கிக்கொண்டுபோய்; மூரி நெடுங்கடல் நாடு முற்றியதோ என-பெரிய நெடிய கடல் நாட்டை வளைத்ததோ என்று மக்கள் வருந்துமாறு; மோடு கொள்புனல் நண்ணிற்று - பெரிய வெள்ளம் அந்நாட்டை அணுகியது.

(வி - ம்.) வீடு: விகாரம்: விடுதல் என்னுந் தொழிற் பெயர் 'தல்' விகுதி கெட்டு முதல் நீண்டு வீடு எனத் திரிந்தது; முதனிலை திரிந்த தொழிற் பெயர்.

அரி: அரித்தல்: முதனிலைத் தொழிற் பெயர். மூரி, மோடு: பெருமை என்னும் பொருளன. (கூ)

நுகூ. திரைபொரு கனைகடற் செல்வன் சென்னிமே
னுரையெனு மாலையை நுகரச் சூட்டுவான்
சரை[1]யெனும் பெயருடைத் தடங்கோள் வெம்முலைக்
குரைபுனற் கன்னிகோண் டிழிந்த தென்பவே.

(இ - ள்.) திரைபொரு கனைகடற் செல்வன் நுகரக்கொள் - அலைமோதும் ஆரவாரம் மிகும் கடலாகிய தன் கணவன் துய்ப்பதற்குத் தன்னிடத்தே முற்கூறிய பொருள்களைக்கொண்ட; சரை எனும் பெயருடைத் தடம்வெம்முலைக் குரைபுனல் கன்னி - சரை என்னும் பெயரினையும் மணல்மேடாகிய விரும்பிய முலையினையும் உடைய ஒலிக்கும் புனலாகிய கன்னி; சூட்டுவான் நுரையெனும் மாலையைச் சென்னிமேல் கொண்டு இழிந்தது - அவனுக்குச் சூட்டுவதற்கு நுரையாகிய மாலையைத் தன் தலைமேல் கொண்டுவந்தது.

(வி - ம்.) சரை யென்னும் பெயரினையும் தடமாகிய விரும்பிய முலையினையும் உடைய புனலாகிய கன்னி; தடம் முலைபோற் சுரத்தலின் முலையாம். கொள் கன்னி: வினைத்தொகை. கன்னி என்னும் விசேடிக்கப் படுஞ் சொல்லை நீர் விசேடித்து அஃறிணையாக்குதலின், இழிந்த தென்றார். என்ப: அசை; இது புறனடையாற் கொள்க (தொல் - இடை - சஅ.) இவ் விதி மேலுங் கொள்க.

சூட்டுவான்: எதிர்கால வினையெச்சம். 'தடம் கொள்' என்னுந் தொடரிலுள்ள கொள் என்னுஞ் சொல்லைக் கன்னியுடன் இயைத்துக் 'கொள் கன்னி' எனக் கூட்டிக்கொள் என்பதற்குச் செயப்படுபொருளாக முற்செய்யுளிற் கூறிய காட்டுப் பொருள்களை வருவித்துக் கூறினர். 'செல்வன் சென்னிமேல் சூட்டுவான்' என அமைந்த தொடரிலிருந்த 'சென்னிமேல்' என்பதைக் 'குரைபுனற் கன்னி சென்னிமேல்' என மாற்றிக் கூறினர். இவ்வாறு கூறுமற் செல்வன் சென்னிமேற் சூட்டுவான் நுரையெனும் மாலையைக் கொண்டு சென்றதாகக் கூறினும் பொருள் கெடுமாறில்லை. (க0)

(பாடம்) 1. சரவெனும்.

௪0. பழங்கோடெங் கிலையெனப் பரந்து பாய்புனல்
வழங்கமுன் னியற்றிய சுதைசெய் வாய்த்தலை
தழங்குரல் பம்பையிற் சாற்றி நாடெலா
முழங்குதீம் புனலக முரிய மொய்த்ததே.

(இ-ள்.) முழங்கு தீம்புனல் அகம் முரிய - ஆரவாரிக்கும் இனிய புனலாலே உட்கரை முரிதலால்; தழங்கு குரல் பம்பையின் நாடெலாம் சாற்றி - ஒலிக்கும் ஒலியையுடைய பறையினாலே நாடெங்கும் உள்ளார் அறிவித்து; பழம்கொள் தெங்கு இலையெனப் பாய்புனல் பரந்து வழங்க - காய்த்த தென்னை ஓலையென நெருங்கிப் பாய்புனல் பரவி வழங்குமாறு; முன் இயற்றிய சுதை செய் வாய்த்தலை மொய்த்தது - நீர் வரவறிந்து முன்னர் இயற்றிய சுண்ணாம்பினாற் கட்டப்பட்ட வாய்க்காலினிடத்துப் (படலிடக்) கூடினர்

(வி-ம்.) பழம் கொள் தெங்கு - காய்த்த தெங்கு. இலை நெருக்கத்திற்கு [உவமை]. தெங்கோலை னெற்பாலது தெங்கிலை எனப்படுதல் மரபு வழுவமைதியாகக் கொள்க. இலையெனப் பாய்புனல் பரந்து வழங்கும்படி நீர் வரத்தறிந்து முன்னே படுத்த வாய்த்தலை. தழங்கு குரல் : [தழங்குரல் என ஆனது] விகாரம். (௪௧)

௪௧. வெலற்கருங் குஞ்சரம் வேட்டம் பட்டெனத்
தலைத்தலை யவர்கதந் தவிர்ப்பத் தாழ்ந்துபோய்க்
குலத்தலை மகளிர்தங் கற்பின் கோட்டக
நிலைப்படா நிறைந்தன பிறவு மென்பவே.

(இ-ள்.) வெலற்கு அருங் குஞ்சரம் வேட்டம் பட்டென - முன்பே வெல்வதற்கு அரிய களிறு பின்பு வேட்டையிலே அகப்பட்டால், அதனைக் குத்துக்கோற்காரர் குத்தி அதன் மதத்தை விலக்குமாறுபோல; தலைத்தலை அவர் கதம் தவிர்ப்பத் தாழ்ந்து போய் - வாய்க்கால்களின் இடந்தொறும் இடந்தொறும் நாட்டிலுள்ளார் படலிட்டு விரைவை அடக்க, அவை தணிந்து போதலால்; குலத்தலைமகளிர்தம் கற்பின் - நற்குடிப்பிறந்த மகளிருடைய கற்பைப்போல; கோட்டகம் பிறவும் நிலைப்படா நிறைந்தன - பயிருடைய நீர்நிலையும் ஏரி முதலியனவும் நிலை கொள்ளாமல் நிறைந்தன.

(வி-ம்.) குஞ்சரத்திற்கு வாய்க்கால் உவமிக்கும்பொருள். கோட்டகம் - பயிருடைத்தான நீர் நிலை. பிற - ஏரி முதலாயின. (௪௨)

௪௨. கவ்வையுங் கடும்புன லொலியுங் காப்பவர்
செவ்வனா ருயிரஞ் சிலைக்கும் பம்பையு
மெவ்வெலாத் திசைகளு மீண்டிக் காரோடு
பவ்வநின் றியம்புவ தொத்த வென்பவே,

(இ - ள்.) கடும்புனல் ஒலியும் - படலிட்டதினின்றும் குதித்து வழிந்துசெல்லும் நீரின் ஒலியும்; காப்பவர் கவ்வையும் - கரை காப்பாருடைய ஆரவாரமும்; நூறுபிரம் சிலைக்கும் பம்பையும் - நூறுயிரக்கணக்காக ஒலிக்கும் பறையொலியும்; எவ்எலாத் திசைகளும் ஈண்டி - எல்லா எல்லாத் திசைகளிலும் கூடி; காரொடு பவ்வம் நின்று இயம்புவது ஒத்த - காரும் கடலும் மாறுமல் முழங்குதலை ஒத்தன.

(வி - ம்.) செவ்வன் - நேரே.

'காப்பவர் சவ்வையும்' எனக் கூட்டுக. கவ்வை, சிலை, இயம்பல் என்பவை பல வேறுவகை ஒலிகள். கடும்புனல் - விரையும் புனல். கடி என்னும் உரிச்சொல் திரிந்தது. (௧௩)

௪௩. மாமனு மருகனும் போலு மன்பின
காமனுஞ் சாமனுங் கலந்த காட்சிய
பூமனு மரிசிப்புல் லார்ந்த மோட்டின
தாமின மமைந்துதந் தொழிலின் மிக்கவே.

(இ - ள்.) தம் தொழிலின் மிக்க - தம் உழவுத்தொழிலிலே சிறந்து நின்றனவாகிய எருமை முதலியன; மாமனும் மருகனும் போலும் அன்பின - மாமனையும் மருகனையும் போலும் அன்பின; காமனும் சாமனும் கலந்த காட்சிய - காமனும் அவன் தம்பி சாமனும் கலந்து நின்றாலன்ன தோற்றத்தின; பூமனும் அரிசிப்புல் ஆர்ந்த மோட்டின - பூக்களையும் அரிசிப்புல்லையும் தின்ற வயிற்றினவாகி; இனம் அமைந்து (நின்றன)-திரளமைந்து நின்றன.

(வி - ம்.) இதற்கு 'நின்றன' என ஒரு சொல் வருவிக்க. ஒன்றைக் கொன்று பிற்படின் வருந்தும் என்று அன்புகூறினர். சாமன் - காமன் தம்பி. 'ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே' (தொல். எச்-௩௬) என்பதனால் மோட்டின என்பதன் பின் 'ஆக்கம்' வருவிக்க.

மோடு - வயிறு. (௧௪)

௪௪. நெறிமருப் பெருமையி ஞெருத்த ளீ்ளினஞ்
செறிமருப் பேற்றினஞ் சிலம்பப் பண்ணுறீஇப்
பொறிவரி வராலின மிரியப் புக்குடன்
வெறிகமழ் கழனியுள் ளுழுநர் வெள்ளமே.

(இ - ள்.) நெறிமருப்பு எருமையின் ஒருத்தல் நீள்இனம் - (அவ்வாறு நின்ற) அறல்பட்ட கொம்பினையுடைய எருமைகளிற் கடாக்களின் பெருந்திரளையும்; செறி மருப்பு ஏற்றினம் - திண்ணிய கொம்புகளையுடைய எருத்தின் திரளையும்; சிலம்பப் பண்

உறீஇ - முழங்குமாறு ஏரிற் பூட்டி; பொறிவரி வரால் இனம் இரிய உடன்புக்கு - புள்ளிகளையும் வரிகளையும் உடைய வராலின் திரள் ஓட அவற்றுடன் புகுந்து; வெறிகமழ் கழனியுள் உழுநர் வெள்ளம் - மணங்கமழும் கழனியில் உழுகின்றவர் வெள்ளம் என்னும் எண்ணிக்கை உடையவர் ஆயினர்.

(வி - ம்.) சிலம்ப - முழங்க. பொறி - விளக்கம்.

'ஏற்புடைத் தென்ப எருமைக் கண்ணும்' (தொல்-மரபு. ௩எ) என்பதனால் 'ஒருத்தல்' என்றார். (௪௫)

௪௬. சேறமை செருவினுட் செந்நெல் வான்முளை
வீறோடு விளைகெனத் தொழுது வித்துவார்
நாறிது பதமெனப் பறித்து நாட்செய்வார்
கூறிய கடைசியர் குழாங்கொண் டேகுவார்.

(இ - ள்.) வீறோடு விளைக எனத் தொழுது - (உழவர்கள்) சிறப்புற விளைக என்று நிலமகளைத் தொழுது; சேறு அமை செருவினுள் செந்நெல் வால்முளை வித்துவார் - சேறாக அமைந்த வயலிலே செந்நெல்லின் வெள்ளிய முளையை விதைப்பர்; இது நாறு பதம் எனப் பறித்து நாள்செய்வார் - இந் நாற்றுச் செவ்வி பெற்றது என்று பறித்து நாள்கொண்டு வைப்பர்; கூறிய கடைசியர் குழாம்கொண்டு ஏகுவர் - முதல் நாளிலேயே கூறி அமர்த்தப்பட்ட உழத்தியர் திரளை அழைத்துச் செல்வர்.

(வி - ம்.) இத்துணை நிலத்திற்கு இத்துணைக் கடைசியர் என்று கூறிய என்றும் ஆம். (௪௬)

௪௭. முலைத்தடஞ் சேதகம் பொறிப்ப மற்றவர்
குலைத்துடன் பதித்தலிற் குதித்த வாட்கயல்
புலத்திடைக் கவரிகன் றூட்டப் போந்தபா
லிலத்திடைப் பாய்ந்தவை பிறழு நீரவே.

(இ - ள்.) முலைத்தடம் சேதகம் பொறிப்ப - தங்கள் முலைப் பரப்பிலே சேறு தெறிக்க; அவர் குலைத்து உடன்பதித்தலின் - அக்கடைசியர் நாற்றின் முடியைப் பிரித்து எல்லோரும் நடுத லின்; குதித்த வாள்கயல் - வெருவி நடாத இடத்தே குதித்த ஒளிமிகுங் கயல் மீன்கள்; புலத்திடைக் கவரி கன்று ஊட்டப் போந்த பால் நிலத்திடைப் பாய்ந்து - (அக்கடைசியர் நெருங் குதலின்) குறிஞ்சி நிலத்திலே கவரி தன் கன்றை யூட்டி மிகுந்து சொரிந்த பால் மறைத்த நிலத்திலே பாய்ந்து; அவை பிறழும் நீர - அவை அந்நிலத்திலே கிடந்து பிறழும் இயல்பின் அந்நிலம்.

(வி - ம்.) மற்று: வினைமாற்று. குறிஞ்சி நிலத்தே கவரி தன் கன்றை ஊட்டுதலான் அதற்கு மிக்குச் சொரிந்த பால் மறைத்த நிலத்

திடை என்க. [மருதநிலத்துக் கயல் குறிஞ்சி நிலத்திலே வீழ்தலின் திணைமயக்கம் கூறியவாறு] 'கவரியும் கராமும் நிகரவற் றுள்ளே' (தொல். மரபு-௧எ) என்றதனுல், 'கன்று' என்றூர். (௧எ)

௪எ. பாற்சுவை யறிந்தவை பழனத் தாமரை
மேற்செலப் பாய்தலின் வெரீஇய வண்டினங்
கோற்றேடி நுளைச்சியர் முத்தங் கோப்பவ
ரேற்றிய மாலைத்தே னிரியப் பாய்ந்தவே.

(இ - ள்.) அவை பாற்சுவை அறிந்த பழனத் தாமரைமேல் செலப் பாய்தலின் - அக்கயல்கள் அப்பாலின் சுவையை அறிந்து (நீரல்லாமையால்) கழனியில் உள்ள தாமரை மேலே செல்லப் பாய்தலின்; வெரீஇய வண்டினம் - (அதற்கு) அஞ்சி யெழுந்த வண்டின் திரள்; முத்தம் கோப்பவர் கோல்தொடி நுளைச்சியர் - முத்தைக் கோப்பவராகிய திரண்ட வளையலணிந்த நுளைச்சியர்; ஏற்றிய மாலை தேன்இரியப் பாய்ந்த-சூடிய மாலையில் வண்டினம் ஓடப் பாய்ந்தன.

(வி - ம்.) 'பாற்சுவை தெரிந்தன' எனவும் பாடம்.

இச் செய்யுளும் குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் மூவகை நிலங்களும் மயக்கக் கூறலின் திணைமயக்கம் கூறியபடியாம். நுளைச்சியர் : நெய்தல் நிலமகளிர். (௧அ)

௪அ. இரிந்ததேன் குவளையி னெற்றி தைவர
முரிந்துபோ தவிழ்ந்துகோங் குயிர்க்கு முல்லையின்
அரும்புசேர்ந் தணிஞிமி றார்ப்ப வாய்பதம்
விருந்தெதிர் கொண்மெனத் தழுவி வீழ்ந்தவே.

(இ - ள்.) முல்லையின் அரும்பு போது அவிழ்ந்து கொங்கு உயிர்க்கும் - முல்லையின் அரும்பு போதாக விரிந்து தேனைச் சொரியப்படும்; குவளையின் நெற்றி இரிந்ததேன் சேர்ந்து-குவளை மலரின் நெற்றியிலே முன்பு இரிந்த தேனினம் சேர்தலால்; அணிஞிமிறு முரிந்து ஆர்ப்ப - அதிலிருந்த ஞிமிறுகள் முரிந்து ஆரவாரிக்க; ஆய் பதம் விருந்து எதிர்கொண்ம் எனத் தைவர - (அத்தேனினம்) இவ் அழகிய உணவை நமக்கு விருந்திடுகின்றேம், இதனை ஏற்றுக்கொண்மின் என்று கூறினாற்போல அவற்றைத் தடவிக்கொடுக்க; தழுவி வீழ்ந்த - அந்த ஞிமிறுகள் அத்தேனினத்தைத் தழுவி அதிலே வீழ்ந்தன.

(வி - ம்.) கொண்மின் : ('கொண்ம்' என) விகாரம். இவற்றால் நில மயக்கங் கூறினர்.

இச் செய்யுளிற் கொண்டு கூட்டுப் பொருள் கோள் மிகுதி. கொங்கு - தேன். ஞிமிறு, தேன் : வண்டின் இனங்கள். (௧௯)

சகூ. வளமுடி நடுபவர் வரம்பில் கம்பலை
இளமழை முழக்கென மஞ்ஞை யேங்கலி
னளமரு குயிலின மழுங்கிப் பூம்பொழி
லுளமெலி மகளிரி னொடுங்கு மென்பவே.

(இ - ள்.) வளம்முடி நடுபவர் வரம்புஇல் கம்பலை-செழித்த நாற்றின் முடியை நடும் உழத்தியரின் எல்லையற்ற ஆரவாரத்தை; இளமழை முழக்குஎன மஞ்ஞை ஏங்கலின் - கார்காலத் தொடக்கத்திலே முகிலின் முழக்கமென்று நினைத்து மயில்கள் ஆரவாரித்தலின்; அளமரு குயில்இனம் அழுங்கி - உளஞ்சுழலும் குயிலின் திரள் (உண்மையென்று கருதி) வருந்தி; உளம்மெலி மகளிரின் பூம்பொழில் ஒடுங்கும் - (கணவரைப் பிரிந்து) உள்ளம் வருந்திய மகளிரைப்போலப், பூஞ்சோலையிலே பதுங்கும்.

(வி - ம்.) கம்பலை - ஆரவாரம். ஏங்கல் - ஆரவாரித்தல்.

அளமரு : அலமரு : ளகர லகரப் போலி. குயில் : கார்காலத்தில் ஒடுங்கியிருக்கும்; வேனிலே இதற்குரியது. மயிலுக்குக் கார்காலமே விருப்பமூட்டும். (உ0)

டுo. வளைக்கையாற் கடைசியர் மட்டு வாக்கலிற்
றிளைத்தவர் பருகிய தேறற் றேங்குழிக்
களிப்பவுண் டிளவனங் கன்னி நாரையைத்
திளைத்தலிற் பேடைமயி றெருட்டுஞ் செம்மற்றே.

(இ - ள்.) கடைசியர் வளைக்கையால் மட்டு வாக்கலின் - உழத்தியர் வளையணிந்த கையினால் மதுவை வார்த்தலால்; திளைத்தவர் பருகிய தேறல் தேங்குழி - தொழிலிலே இடைவிடாமல் பயின்றவர் உண்ட மது தேங்கிய இடத்திலே; இள அனம் களிப்ப உண்டு - காமஇன்பம் அறிந்த அன்னம் அதனை மயங்க உண்டு; கன்னி நாரையைத் திளைத்தலின்-காமஇன்பம் அறியாத நாரையைக் கூடுதலின்; பெடைமயில் தெருட்டும் செம்மற்று - (அதனைக் கண்டு) மயிற்பெடை தன் மயிலைத் தெளிவிக்குந் தலைமைத்து.

(வி - ம்.) மீண்டும் நடவுத்தொழில் முதலாகக் கூறுகிறார் [சடு-ஆம் செய்யுளில் முன் கூறினார்.]

'திளையா வரும்அருவி' (சிற்-உகச) என்றார் பிறரும். பெடையென்றும் மயிலென்றும் பிரிக்க. நீர் கள்ளுண்டு இதுபோல் மயங்கன்மின் என்று தெருட்டிற்று. இனி, மயிலைக் கண்டாற் கள்ளின் களிப்புத் தீரும் என்றலின் அது தெருட்டிற் றென்றுமாம்.

தேங்கு உழி - தேங்கிய இடம். களித்தல் - கள்ளுண்டு மயங்குதல். (உக)

௫௧. கண்ணெனக் குவளையும் கட்ட லோம்பினர்
வண்ணவாண் முகமென மரையி னுட்புகார்
பண்ணெழுத் தியல்படப் பரப்பி யிட்டனர்
தண்வய லுழவர்தந் தன்மை யின்னதே.

(இ - ள்.) வண்ண வாள்முகம் என மரையின் உள்புகார் - காதல் மகளிரின் அழகிய ஒளிமிகும் முகம் என்று நினைத்துத் தாமரையாகிய களையின் அருகு செல்லாத உழவர்; கண் எனக் குவளையும் கட்டல் ஓம்பினர் - அவர்களுடைய கண்ணென்றே நினைத்துச் சூடுதற்குப் பறிக்குங் குவளையையும் களையாகப் பறிப்பதை நீக்கி; பண் எழுத்து இயல்படப் பரப்பியிட்டனர் - பண்ணினை எழுத்தின்வடிவு தோன்றப் பாடினர்; தண்வயல் உழவர்தம் தன்மை இன்னது - குளிர்ந்த வயலில் உழவரின் தன்மை இவ்வாறு இருந்தது.

(வி - ம்.) குவளையும்: உம்மை [இழிவு] சிறப்பும்மை. ஓம்பினர்: வினையெச்சமுற்று [வினைமுற்று வினையெச்சப் பொருளில் வந்தது.] உள் புகார்: தொழிற்பெயர் [வினையாலணையும் பெயர்]. தாமரையைக், 'கடவு ளொண்பூ அடைதலோம்பி' (பெரும்பாண்-௨௯0) எனக் கூறுதலானும் அவர் பறியாராயிற்று. 'மரையினுள்' என்னும்[1] உம்மையில் சொல், எஞ்சு பொருட் கிளவியான செஞ்சொல் அன்மை உணர்க; (தொல் இடை-௩௬) முகமும் கண்ணும் காதன்மையைத் தோற்றுவித்தலின் அதற்கேற்கப் பாடினரென்க. (௨௨)

௫௨. நித்திலப் பந்துட னீன்று பாதிரி
யொத்தபூ வுடற்றிய நாவி னாகினற்
றத்துநீர் நாரைமே லெறியத் தண்கடல்
பைத்தெழு திரையெனப் பறவை யாலுமே.

(இ - ள்.) நித்திலப் பந்துடன் ஈன்று - முத்துப் பந்து போலும் முட்டையைச் சேர ஈன்று; ஒத்த பாதிரிப்பூ உடற்றிய நாவின் நாகினல் - தன் நாவிற்கு ஒத்த பாதிரியினது பூவைக் கெடுத்த நாவினையுடைய நத்தையாலே; நாரைமேல் தத்துநீர் எறிய - நாரையின்மேல், தத்தும்நீர் எறிய; தண்கடல் பைத்து எழுதிரை எனப் பறவை ஆலும் - குளிர்ந்த கடலில் விரிந்தெழும் அலைபோல அந்த நாரை மெல்ல எழுந்து ஒலிக்கும்.

(வி - ம்.) 'நித்திலப் பந்து' உவமத்தொகையில் வந்த ஆகுபெயர்; 'கந்தருவ வழக்கம்' (இறை-௧) என்றாற்போல. 'ஈன்று [நாவினை] உடைய' என்க.

இது வேண்டிய அளவிலே நீர் பாய்கின்றமை கூறிற்று. (௨௩)

1. உம்மையில்லாத சொல். 'மரை' என இருப்பின் செஞ்சொல் ஆகும். உருபும் இருப்பதாற் செஞ்சொலன்று.

௫௩. சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போன்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே.

(இ - ள்.) சொல் அருஞ்சூல் பசும்பாம்பின் தோற்றம் போல் மெல்லவே கரு இருந்து ஈன்று - நெல்லானது சூலுண்டென்று சொல்லற்கரிய பச்சைப் பாம்பின் தோற்றம்போல மெல்லக் கருத்தங்கி ஈன்று; மேலலார் செல்வமேபோல் தலை நிறுவி - குடிப்பிறவாதார் செல்வத்தைப்போலத் தலையை நேரே நிறுத்தி; தேர்ந்த நூல் கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்த - மெய்ப்பொருளை ஆராய்ந்த நூற்கல்வி பொருந்திய மக்களைப் போல மிகவும் வளைந்து விளைந்தன.

(வி - ம்.) சொல் - நெல். அரு - சூலுண்டென்று சொல்லுதற்கரிய. மெல்ல - ஒழுக. தேர்ந்த - மெய்ப்பொருளை ஆராய்ந்த. 'தாறுபடுநெல்' என்றாற்போல, 'காய்த்த' என்றார்.

செல்வமுடைய மேலலார்போல் தலைநிறுவி என்னவேண்டிய உவமையை மேலலார் செல்வமேபோல் தலைநிறுவி என்றது, உடையார் தொழில் உடைமைமேல் ஏற்றப்பட்டதொரு உபசார வழக்கு என்க. (௨௪)

௫௪. மீன்கணி னளவும்வெற் றிடங்க ளின்மையால்
தேன்கணக் கரும்பியல் காடுஞ் செந்நெலின்
வான்புகழ் களிறுமாய் கழனி யாக்கமும்
ஊன்கணார்க் குரைப்பரி தோல்லென் சும்மைத்தே.

(இ - ள்.) மீன்கணின் அளவும் வெற்றிடங்கள் இன்மையால் - மீனினது கண்ணளவேனும் பாழ்நிலம் இன்மையால்; ஊன்கணார்க்கு உரைப்பரிது - மக்கட்குப் புகழ்தல் அரியதாய்; வான்புகழ் கழனி - வானவர் புகழும் கழனியில்; தேன்கணக் கரும்பியல் காடும் - தேன் இறாலின் திரட்சியை உடைய கரும்பு வளர்ந்த வயலும்; களிறுமாய் செந்நெலின் ஆக்கமும் - யானை நின்றால் மறையும் செந்நெல்லினது முதிர்ச்சியும்; உடைத்தாய் ஒல்லென் சும்மைத்து - ஒல்லென்னும் ஓசையை உடைத்தாயிற்று.

(வி - ம்.) முன் விளைவு கூறி, இதனால் முற்றினபடி கூறினார். மீன்கண் மிகவும் உருட்சியுடைமையின் இடங்குறித்தல் அரிது. [காடு - கழனி. ௫௫-ஆம் செய்யுளை நோக்குக.]

இதன்கண் 'களிறுமாய் கழனி' என்றதனோடு "களிறு மாய்க்கும் கதிர்க்கழனி" எனவரும் மதுரைக்காஞ்சியினை (௨௪௭)யும் நினைக. இத் தொடர்க் கருத்தை "களிறு மாய்க்குஞ் செந்நெல் அங்குலை" என்றும் (நைடதம் சுயம்வர-௧௩௮), "யானை மறையக் கதிர்த்தலைச் சாலிநீடி"

என்றும் (பிரபுலிங். மாயையுற்-௧௧); "களிறு மாய்ப்பக் கதழ்ந்தெழு பூம் பயிர்" என்றும் (தணிகை. நாட்-௧௧௪) பிற்றைநாட் புலவர் பலரும் எடுத்தாள்வாராயினர். (உ௫)

௫௫. ஆய்பிழி விருத்துவண் டயிற்றி யுண்டுதேன்
வாய்பொழி குவளைகள் சூடி மள்ளர்க
டேய்பிறை யிரும்புதம் வலக்கை சேர்த்தினு
ராய்செநே லகன்றகா டரிகுற் றூர்களே.

(இ - ள்.) மள்ளர்கள் ஆய்பிழி விருந்து வண்டு அயிற்றி உண்டு - உழவர்கள் சிறந்த கள்ளை விருந்தாக வந்த வண்டினை ஊட்டிப் பிறகு தாமும் உண்டு; தேன் வாய்பொழி குவளைகள் சூடி - தேனைச் சொரியும் குவளைமலரை அணிந்து; தேய்பிறை இரும்பு தம் வலக்கை சேர்த்தினர் - தேய்ந்த பிறைமதி அனைய இரும்பைத் தம் வலக்கையில் ஏந்தினர்; ஆய் செந்நெல் அகன்ற காடு அரிகுற்றூர்கள்-தேர்ந்த அகன்ற செந்நெற் காட்டை அரிய லுற்றார்கள்.

(வி - ம்.) குவளையை ஈண்டுக் களிப்பாற் பறித்துச் சூடினர். காடு பெருமை கூறிற்று. எறிகுற்றூரும் பாடம். விருத்துவண்டு, 'வன்றொடர் மொழியும்' (தொல். எழுத்-குற்றியலுகரப், ௯) என்னுஞ் சூத்திரத்தில், 'வல்லெழுத்திடை மிகும்' என்றது, 'ஒற்று' என்ற மிகுதியான் இயல்பு கணத்துக்கண்ணும் மெல்லொற்றுத் திரிந்தது.

இச் செய்யுளின்கண் தேவர் உழவர்க்கியல்பாக அமைந்த விருந்தோம்பற் பண்பினை நினைந்து "ஆய்பிழி விருத்து வண்டு அயிற்றி உண்டு" என்ற நுணுக்கம் உணர்க. விருந்தூட்டியுண்டல் சிறந்த தமிழர் பண்பு. அப்பண்பு உழவர்க்கே உரியதுமாம் "இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது கைசெய்தூண் மாலையவர்" என்ற வள்ளுவர் பொன் மொழியும் (குறள். ௧0௩௫) நினைக. (உ௬)

௫௬. வலியுடைக் கைகளான் மலர்ந்த தாமரை
மெலிவெய்தக் குவளைகள் வாடக் கம்பலம்
பொலிவெய்தப் பூம்பொய்கை சிலம்பிப் பார்ப்பெழ
மலைபட வரிந்துகூன் குயங்கைம் மாற்றினர்.

(இ - ள்.) வலியுடைக் கைகளால் - அந்நெல்லை அரிதற்குத் தக்க ஆற்றலுடைய கைகளினால்; மலர்ந்த தாமரை மெலிவு எய்தவும் - அக்கழனிகளில் மலர்ந்துள்ள தாமரைமலர்கள் வருந்தவும்; குவளைகள் வாட - குவளை மலர்கள் வாடவும்; கம்பலம் பொலிவு எய்த-ஆரவாரம் மிக்கெழுதலால்; பூம்பொய்கை பார்ப்பு சிலம்பி எழ - மலர்ந்த பொய்கையிலிருந்து குஞ்சுகளுட்படப் பறவைகள் ஒலியுடன் எழ; மலைபட அரிந்து கூன்குயம் கை மாற்றினர் - மலைபோலக் குவிய நெல்லை அரிந்துவிட்டு வளைந்த அரிவாளைக் கையிலிருந்து மாற்றினர்.

(வி - ம்) கம்பலம்: உரிச்சொல் திரிவு [கம்பலை]. பொய்கை பார்ப்பெழ என இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. பட: உவமவுருபு.

முன் களை பறியாதவற்றை ஈண்டுக் களிப்பினால் அரிந்தார்.

உழவர் கையே உலகெலாந் தாங்கும் கை என்பது கருதி வலி யுடைக்கைகளான் என்று தேவர் அடைபுணர்த்தனர் என்றல் சிறப்பு. என்னை? "உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம் விட்டே மென்பார்க்கு நிலை" என்பது பொய்யாமொழியன்றோ? (குறள். ௧0௩௬). (௨எ)

ருஎ. வாளையி னினந்தலை யிரிய வண்டலர்
தாளுடைத் தாமரை கிழிய வண்சுமை
கோளுடை யிளையவர் குழாங்கொண் டேகலிற்
பாளைவாய்க் கமுகினம் பழங்கள் சிந்துமே.

(இ - ள்.) கோளுடை இளையவர் குழாம் - தொழில் ஆற்ற லுடைய இளைஞர் திரள்; வாளையின் இனம் தலை இரிய - வாளை யின் குழு தம் இடத்திலிருந்து ஓடவும்; வண்டு அலர் தாளு டைத் தாமரை கிழிய - வண்டுகள் து கத்து அலர்ந்த, நாளங் களையுடைய தாமரை மலர்கள் கிழியவும்; வண்சுமை கொண்டு ஏகலின் - வளவிய நெற்சூட்டைச் சுமந்து செல்வதால்; பாளை வாய் கமுகினம் பழங்கள் சிந்தும் - அச்சுமை பட்டு மடற்கமுகு கள் பழங்களைச் சிந்தும்.

(வி - ம்) தலை - இடம். வண்டு அலர்-வண்டு துகைத்து அலர்ந்த. பாளைவாய் கமுகு - மடற் கமுகு.

கோள் - ஆற்றல்.

இச் செய்யுளின்கண்,

"நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு." (குறள். எ௩௯)

என்பதுபற்றி அந்நாட்டின்கண் மக்கள் வருந்தாமற் பெறுகின்ற வளம் கூறப்படுகின்றது. மேல்வரும் ருஅ-சு0-சுக. சுஉ-சுங-ஆம் செய்யுள்களும் இன்ன. (௨அ)

ருஅ. சோர்புயன் முகிற்றலை விலங்கித் தூநில
மார்புகொண் டார்ந்தது நரல வண்சுளை
யார்வுறு பலாப்பழ மழிந்த நீள்களம்
போர்வினுன் மலிந்துடன் பொலிந்த நீரவே.

(இ - ள்.) புயல்சோர் முகில் தலைவிலங்கி - நீரைப் பொழி யும் முகிலைத் தலைச்சென்று தடுக்குமாறு; தூநிலம் மார்புகொண்டு ஆர்ந்து - தூய நிலத்தின் மார்பையெல்லாம் தமக்கு இடமாகக்

கொண்டு நிற்பதனால்; அது நரல - அந்நிலம் பொறுக்கமாட்டேன் என்று வாய்விடும்படி; வண்சுளை ஆர்புஉறு பலாப்பழம் அழிந்த நீள்களம் - செழுவிய சுளைகள் நிறைந்த பலாப்பழங்கள் அழிந்துகிடந்த நீண்ட களங்கள்; போர்பினால் உடன்மலிந்து பொலிந்த நீர - போர்களால் மிக்குப் பொலிந்த இயல்பின.

(வி - ம்.) புயல் - நீர். விலங்கி : விகாரம்; விலங்க என்க. பழம்: களத்திற்கு அடை. நிலத்திற்குக் களம் சினையாம்.

இனி, 'நிலத்திலே முகிலை விலக்கிப் பழைய கூடுகள் [1]நிறைதல் கொள்கையாலே, அங்ஙனம் அவை நிறைந்த நிலம் இப்பொழுது இடுகின்ற போரைப் பொறேன் என்று வாய்விடும்படி' என்றுமாம். ஆர்பு கொண்டெனவே கூடுகள் பெற்றும்.

முதலிற் கூறிய பொருளுக்கு மார்பு எனவும், இரண்டாம் பொருளுக்கு ஆர்பு எனவும் பிரிக்க. 'ஆர்பு கொண்டு' என்பதற்குக் 'கூடுகள்' தோன்றா எழுவாய். (௨௯)

௫௯. ஈடுசால் போரழித் தெருமைப் போத்தினான்
மாடுறத் தெழித்துவை களைந்து காலுறீஇச்
சேடுறக் கூப்பிய செந்நெற் குப்பைகள்
கோடுயர் கொழும்பொனின் குன்ற மொத்தவே.

(இ - ள்.) ஈடுசால் போர் அழித்து - பெருமை நிறைந்த போரைத் தலையைத் தள்ளி; எருமைப் போத்தினால் மாடுஉறத் தெழித்து - எருமைக் கடாக்களினாற் பக்கத்தே உற உரப்பி; வை களைந்து - வைக்கோலைக் களைந்து; கால் உறீஇச் சேடுஉறக் கூப்பிய செந்நெற் குப்பைகள் - காற்றில் தூற்றி உயரமாகக் குவித்த செந்நெற் பொலிகள்; கோடுஉயர் கொழும்பொனின் குன்றம் ஒத்த - முடிஉயர்ந்த வளமிகு பொன்மலை போன்றன.

(வி - ம்.) ஈடு-இடுதலுமாம். 'பெற்றம் எருமை புலி மரை புல்வாய் மற்றிவை யெல்லாம் போத்தெனப் படுமே' (தொல். மரபு-௪௧.) (௩0)

௬0. கரும்புக ணுடைப்பவ ராலை தோறெலாம்
விரும்பிவந் தடைந்தவர் பருகி விஞ்சிய
திருந்துசா றடுவுழிப் பிறந்த தீம்புகை
பரந்துவிண் புகுதலிற் பருதி சேந்ததே.

(இ - ள்.) கரும்பு கண் உடைப்பவர் ஆலைதோறும் விரும்பி வந்து அடைந்தவர் எலாம் பருகி - கரும்பைச் சாறு கொள்வாருடைய ஆலைதோறும் விரும்பி வந்து சேர்ந்தவரெல்லோரும் பருகி; விஞ்சிய திருந்து சாறு அடுவுழிப் பிறந்த தீம்புகை-மிக்க

1. நிறைதல் கொள்கையால் - நிறைந்திருப்பதனால்.

சாற்றைப் பாகுசெலுத்தக் காய்ச்சும்போது உண்டான இனிய புகை; விண்பரந்து புகுதலின் பருதி சேந்தது - வானத்திற் பரவிச் செல்வதால் ஞாயிறு சிவந்தது.

(வி - ம்.) இனிக், கரும்பின் செய்தி கூறுகின்றார்.

எல்லாம் என்பது இருதிணைக்கும் பொது. பருகுதலின் திருந்திற்று.

இனி, இங்ஙனம் [1]ஒருக்கின பண்டங்களைக் கொண்டுபோகின்றமை கூறுகின்றார். [கண் - கணு.] (௬௧)

௬௧. கிணைநிலைப் பொருநர்தம் செல்லல் கீழ்ப்படப்
பணைநிலை யாய்செநெற் பகரும் பண்டியும்
கணைநிலைக் கரும்பினிற் கவரும் பண்டியும்
மணநிலை மலர்பெய்து மறுகும் பண்டியும்,

(இ - ள்.) கிணைநிலைப் பொருநர்தம் செல்லல் கீழ்ப்படப் பணைநிலை ஆய் செந்நெல் பகரும் பண்டியும் - (உழவர்) கிணைப் பொருநருடைய வறுமை நீங்கக் கொடுத்து, மிக்க நெல்லைப் பண்ணையிலிருந்து விற்றற்குக் காரணமான பண்டியும்; கணை நிலைக் கரும்பினில் கவரும் பண்டியும் - திரட்சியைப்பெற்ற கரும்பிலிருந்து பாகு முதலியன கொண்டுபோகும் பண்டியும்; மணம்நிலை மலர்பெய்து மறுகும் பண்டியும் - மணம் நிலைபெற்ற மலர்களை யிட்டுக்கொண்டு போகும் பண்டியும்;

(வி - ம்.) இதுமுதல் மூன்று கவியும் ஒரு தொடர். பண்ணை - 'பணை' என ஆனது விகாரம். நிலை - நிலைபெறுதல். கணை - திரட்சி. செல்லல் - துன்பம். கிணைப்பொருநர்: வேளாளரைப் புகழ்ந்து பாடுவோர். கிணை: தடாரி என்னும் ஒருவகைப் பறை. இவர்கள் ஏர்க்களம் பாடும் பொருநர். கவரும் - ஏற்கும். பண்டி - வண்டி. (௬௨)

௬௨. மல்லலங் தெங்கிள நீர்பெய் பண்டியு
மெல்லிலைப் பண்டியுங் கமுகின் மேதகு
பல்பழுக் காய்க்குலை பெய்த பண்டியு
மொல்குதீம் பண்டம்பெய் தொழுகும் பண்டியும்,

(இ - ள்.) மல்லல் அம் தெங்கு இளநீர் பெய்த பண்டியும் - வளமிகும் அழகிய இளநீரைப் பெய்த பண்டியும்; மெல்இலைப் பண்டியும் - வெற்றிலை பெய்த பண்டியும்; கமுகின் மேதகு பல் பழுக்காய்க்குலை பெய்த பண்டியும் - கமுகிலிருந்து கிடைத்த சிறப்புமிகும் பல பழுக்காய்களை இட்ட பண்டியும்; ஒல்கு தீம்

1. ஒருக்கின - ஒன்று சேர்த்த.

பண்டம் பெய்து ஒழுகும் பண்டியும் - குழைந்த இனிய பண்டத்தையேற்றி இடைவிடாது போகும் பண்டியும்;

(வி - ம்.) மெல்லிலே: வினைத்தொகை. பழுக்காய்-பாக்கு. (கூக)

சூக. கருங்கடல் வளந்தரக் கரையும் பண்டியு
நெருங்குபு முதிரையி னிறைந்த பண்டியும்
பெருங்கலிப் பண்டிகள் பிறவுஞ் செற்றுபு
திருந்தியெத் திசைகளுஞ் செறிந்த வென்பவே.

(இ - ள்.) கருங்கடல் வளம்தரக் கரையும் பண்டியும் - கரிய கடலின் வளத்தை நகர்க்குத் தருதற்கு முழங்கும் பண்டியும்; நெருங்குபு முதிரையின் நிறைந்த பண்டியும் - நெருங்க முதிரையால் நிறைந்த பண்டியும்; பிற செற்றுபு பெருங்கலிப் பண்டிகளும் - ஒழிந்த பண்டங்கள் நிறைத்துப் பேரொலியையுடைய வரும் பண்டிகளும்; திருந்தி எத்திசைகளும் செறிந்த-ஒழுங்காக எல்லாத் திசைகளினும் நெருங்கின.

(வி - ம்.) கடல்வளமாவன: "ஓர்க்கோலே சங்கம் ஒளிர்பவளம் வெண்முத்தம் - நீர்ப்படும் உப்பினோ டைந்து." நெருங்குபு: நிகழ்காலம் உணர்த்தும். பிறவும்: உம்மை [பண்டிகளும் என] மாறுக. 'செற்றுபு' என்னும் எச்சம் 'ஒலியை உடைய' என்னும் விரியொடு கூடும்.

நகர்க் கரையும் பாடமாயின், கரைதல் திசைச் சொல்லாய்க், 'கொண்டுபோம்' என்னும் பொருள் பயக்கும்.

முதிரை - அவரை துவரை முதலியன. (கச)

சுச. கிளிவளர் பூமரு தணிந்து கேடிலா
வளவயல் வைகலு மின்ன தேன்பதேன்
றளியொடு மதுத்துளி யறுத சோலேசூ
ழொளியமை யிருக்கையூ ருரைக்க நின்றவே.

(இ - ள்.) கிளிவளர் பூமருது அணிந்து - கிளி வாழும் மலர்ந்த மருதினுல் அணியப்பட்டு; கேடிலா வளவயல் வைகலும் இன்னது - கெடுதியில்லாத வளமுற்ற வயல் நாடொறும் இத்தன்மைத்து; உரைக்க நின்ற - இனி, யான் உரைப்பதற்கிருப்பவை; தேன் துளியொடு மதுத்துளி அறுத - தேன்துளியும் மதுவின் துளியும் நீங்காத; சோலைசூழ் ஒளிஅமை இருக்கை ஊர் - பொழில்கள் சூழ்ந்த, ஒளிபொருந்திய குடியிருப்பையுடைய (நாட்டில் உள்ள) ஊர்கள்.

(வி - ம்.) கேடு, "விட்டில் கிளி நால்வாய் வேற்றரசு தன்னரசு; நட்டம் பெரும்பெயல் கால் எட்டு." என்ப: அசை. தேன். [தேனீக்கள் கொண்டுவந்து] வைத்ததேன். மது - பூவின் மது.

'மிக்க பெயலோடு, பெய லின்மையெலி விட்டில்கிளி - அக்கணர சண்மையோ டாறு' என்பர் பரிமேலழகர்; (திருக்குறள்: எடுஉ-பரிமேலழகர்). (டு)

வேறு

சடு. சேவலன்னந் தாமரையின் தோடவிழ்ந்த செவ்விப்பூக்
காவிற்கூ டெடுக்கிய கவ்விக்கோண் டிருந்தன
தாவில்போன் விளக்கமாத் தண்குயின் முழவமாத்
தூவிமஞ்ஞை நன்மணம் புகுத்துந்தும்பிக் கோம்பரோ.

(இ - ள்.) சேவல் அன்னம் தாமரையின் தோடு அவிழ்ந்த செவ்விப்பூ - அன்னச் சேவல்கள் இதழ்விரிந்த அழகையுடைய தாமரைப் பூவை; காவில் கூடு எடுக்கிய கவ்விக்கொண்டிருந்தன - பொழிலிற் கூடு எடுத்தற்பொருட்டுக் கவ்விக்கொண்டிருந்தன; தா இல் பொன்விளக்கம் ஆ - (அவ்வன்னச் சேவல்கள்) குற்றம் இல்லாத விளக்காகவும்; தண்குயில் முழவம் ஆ - தண்ணிய குயிலோசை முழவமாகவும்; தூவி மஞ்ஞை - பீலியையுடைய மயிலே; தும்பிக் கொம்பர் நன்மணம் புகுத்தும் - வண்டுகளையுடைய மலர்க்கொம்புகள் நன்மணத்தே புகுத்திவிடும்.

(வி - ம்.) எடுக்கிய - எடுத்தற்கு: [எதிர்கால வினையெச்சம்]. தா - வலி. தூவி - பீலி. மணம் - பூவின் மணமும் கலியாணமும்.

தாமரையானும் குயிலோசையானும் இளவேனில் என்று கருதி, மயில் பூம்பொதும்பரின் மறைதலின் கொம்பு புகுத்தும் என்றார்; பேடும் தோகை மயிலும் சேரஇருந்தன [மணம் புகுத்தற்கு] என்றார்.

இனி, மயில் அன்னம் விளக்காகக் குயில் முழவமாகத் தும்பியைக் கொம்பிடத்தே மணம் புகுத்தும் என்றுமாம். கொம்பி லுலாவுமயில், விளக்காலும் முழவாலும் அக்கொம்பினின்றும் போந்து ஆடுதலின், அக் கொம்பிற் பூவின் மணத்தே தும்பியைப் புகுதவிட்டதாயிற்று. மெல்லிய ஓசையன்மையின் குயிலோசையை முழவமாகக் கருதிற்று. இதற்கு இக்கருத்து நிகழ்தல் 'ஆடமைக் குயின்ற' (அஉ) என்னும் அகப் பாட்டிற் காண்க. (டுசு)

சுசு. கூடினார்க ணம்மலர்க் குவளையங் குழியிடை
வாடுவள்ளை மேலெலாம் வாளையேறப் பாய்வன
பாடுசால் கயிற்றிற்பாய்ந்து பல்கலன் ஒலிப்பப்போந்
தாடுகூத்தி யாடல்போன்ற நாரைகாண்ப வோத்தவே.

(இ - ள்.) கூடினார்கண் அம்குவளை மலர் அம் குழியிடை - தம் கணவருடன்கூடின மகளிரின் கண்போன்ற அழகிய குவளை மலரையுடைய அழகிய ஓடையில்; வாடு வள்ளை மேலெலாம் வாளை ஏறப் பாய்வன - (நீர் குறைதலின்) சிறிது வாடின வள்ளையின் மேலே செல்ல வாளைமீன்களெல்லாம் பாய்கின்றவை; பாடு சால் கயிற்றிற் பாய்ந்து பல்கலன் ஒலிப்பப் போந்து ஆடு கூத்தி

ஆடல்போன்ற - (கழாயினின்றும் இழிந்து) பக்கத்தில் அமைந்த கயிற்றிலே குதித்துப் பலவகை அணிகலன்களும் ஒலிப்ப ஆடுங் கூத்தியின் கூத்தைப்போன்றன; நாரை காண்ப ஒத்த - (கரையில் இருந்த) நாரைகள் காண்பன போன்றன.

(வி - ம்.) குவளைக் குழியில் [வள்ளைக் கொடிபடர] நாட்டின கழையும் அதிற் படர்ந்த கொடியும், அதிற் பாய்கின்ற மீனும், கழாயும் அதன்கீழ் இழிந்து ஆடுங் கயிறும் கூத்தியும் போன்றன; வடிவும் தொழிலும் உவமம். காண்ப : அகரவீற்றுப் பலவறி சொல்; தொழிற்பெயராய் [வினையாலணையும் பெயராய்] நின்றது. [கழாய், கழை: மூங்கில். பாடு-பக்கம். ஒத்த : பலவின்பால் வினைமுற்று].

வள்ளைக் கொடியின்மேல் வாளைமீன் பாய்தல் கயிற்றிற் பாய்ந்து ஆடாநின்ற கூத்தியின் கூத்துப் போன்றிருந்தது; கரைக்கண் கூடியிருந்த நாரைக் குழாம் கூத்தாடல் காண்பாரை ஒத்திருந்தது என்பதாம். (௬எ)

௬அ. காவியன்ன கண்ணினார் கயந்தலைக்கு டைதலி
னாவியன்ன பூந்துகி லணிந்தவல்குற் பல்கலை
கோவையற் றுதிர்ந்தன கொள்ளும்நீர ரின்மையின்
வாவியாவும் பொன்னணிந்து வானம்பூத்த தொத்தவே.

(இ - ள்.) காவி அன்ன கண்ணினார் கயம்தலைக் குடைதலின் - காவியனைய கண்களையுடைய மகளிர் வாவியிடத்தே விளையாடுதலின்; ஆவி அன்ன பூந்துகில் அல்குல் அணிந்த பல் கலை கோவை அற்று உதிர்ந்தன - பாலாவியன்ன பூவேலை செய்த ஆடையையுடைய அல்குலின் மேலணிந்த பல கலைகள் வடமற்று உதிர்ந்தன; கொள்ளும் நீரர் இன்மையின் - அவற்றை எடுப்பார் இல்லாமையால்; வாவி யாவும் பொன் அணிந்து வானம் பூத்தது ஒத்த - வாவிகள் எல்லாம் மேகலையை அணிந்து, வானம் மீனைப் பூத்த தன்மையை ஒத்தன.

(வி - ம்.) கயந்தலை: விகாரம் [கயத்தலை எனல் வேண்டும்]. பொன் : [கருவி] ஆகுபெயர். மேகலைக்கு உறுப்பானவை அற்று வீழ்ந்தன.

கலை - மேகலை என்னும் அணிகலன். கொள்ளுநீரர் இன்மையின் என்றது பிறர்வீழ்த்த பொருளைத் தானும் எடுத்துக்கொள்ளாத நற்பண்புடையோர் அந்நாட்டு மக்கள் என்றற்குக் குறிப்பேதுவாய் நின்றது. எனவே, அந்நாட்டிற் கள்வாரிலாமை கூறவேண்டாதாயிற்று என்றபடி. இதனோடு,

"மண்ணு நீராட்டின் மலைந்தன ராகி
வண்ண மணியும் வயிரமும் முத்தும்
இட்டன கொள்ளும் முட்டின ராதலின்
வானமீனின் வயின்வயின் இமைக்கும்."

எனவரும் பெருங்கதையினையும் (உ-கூ : ௩௪-௬) நினைக. (௬அ)

சுஅ பாசவல் லிடிப்பவ ருலக்கைவாழைப் பல்பழ
மாசினி வருக்கைமா தடிந்துதேங் கனியுதிர்த்
தூசலாடு பைங்கமுகு தெங்கினொண் பழம்பரீஇ
வாசத்தாழை சண்பகத்தின் வான்மலர்க ணக்குமே.

(இ - ள்.) பாசவல் இடிப்பவர் உலக்கை - புதிய அவலை இடிப்பவரின் உலக்கை; வாழைப் பல்பழம் ஆசினி வருக்கை மா தடிந்து தேன்கனி உதிர்த்து - பல வாழைப் பழங்களை (உதிர்த்து) ஆசினி வருக்கை மா ஆகியவற்றை முறித்து, அவற்றின் பழங்களையும் உதிர்த்து; ஊசல் ஆடு பைங்கமுகு தெங்கின் ஒண்பழம் பரீஇ - அசைகின்ற கமுகின் பழத்தையும் தெங்கின் பழத்தையும்[1] பரிந்து; வாசம் தாழை சண்பகத்தின் வான்மலர்கள் நக்கும் - மணமுறும் தாழை மலரையும் சண்பக மலரையும் தடவும்.

(வி - ம்.) எனவே, ஏனையவும் பயன்தரும் என நிலநன்மை கூறினர்.

இத்துணையும் சோலைகளும் அவற்றிற்கு அங்கமான வாவிகளும் கூறினர்.

பசுமை + அவல் : பாசவல். பசுமை - புதுமை. ஆசினியும் வருக்கையும் பலாவின் வகைகள். இச் செய்யுள் உயர்வு நவிற்சியணி. (௩௬)

சுகூ. மன்றலு றிலஞ்சிமேய்ந்து மாமுலை சுரந்தபா
னின்றதாரை யானில நனைப்பவேகி நீண்மனைக்
கன்றருத்தி மங்கையர் கலம்நிறை பொழிதர
நின்றமேதி யாற்பொலிந்த நீரமாட மாலையே.

(இ - ள்.) மன்றல் நாறு இலஞ்சி மேய்ந்து மாமுலை சுரந்த பால் - மணங்கமழும் மடுவின் மலர்களை மேய்தலாற் பெரிய மடிசுரந்த பால்; நிலம் நனைப்ப நின்ற தாரையால் - நிலத்தை நனைக்குமாறு மாறாது பெய்த தாரையாலே; ஏகி நீள்மனைக் கன்று அருத்தி - கன்றை நினைத்துப் பெரிய மனைக்குச் சென்று அதனை ஊட்டி; மங்கையர் கலம்நிறை பொழிதர நின்ற மேதியால் - மங்கையர் கொணர்ந்த கலமும் சாலும் நிறையுமாறு பொழிய நின்ற எருமைகளால்; மாடமாலை பொலிந்த நீர - மாட வொழுங்குகள் பொலிந்த தன்மையின.

(வி - ம்.) இலஞ்சி - மடு: இடவாகு பெயர். நிறை-சால்; 'பிரிவர்வு பரந்த நீரறு நிறைமுதல்' (பதிற். கடு) என்றார் பிறரும். மாலை - ஒழுங்கு.

அந்நாட்டில் "கன்றுயிர் ஒய்ந்துகக் கறந்து பாலுண்ணும் கொடுமையில்லை" என்பார், "கன்றருத்தி மேதி கலம்நிறை பொழிதரும்" என்றார்.

1. பரிந்து - நழுவச்செய்து.

இக் கருத்தினைக் "கறவை கன்றூர்த்திக் கலநிறை பொழியும்" எனவரும் மணிமேகலையினுங் (கஉ: கூஉ) காண்க.

'இலஞ்சி மேய்ந்து' என்றது அங்ஙனம் அம்மேதிகள் பால்மிக்கன வாதற்குக் குறிப்பேது என்க. (சo)

எo. வெள்ளிப்போழ் விலங்கவைத் தனையவாய் மணித்தலைக்
கோள்பவளங் கோத்தனைய காலகுன்றிச் செங்கண
வொள்ளகிற் புகைதிரண்ட தொக்குமா மணிப்புறுக்
கிள்ளையோடு பாலுணுங் கேடில்பூவை பாடவே.

(இ - ள்.) வெள்ளிப்போழ் விலங்க வைத்தனைய வாய் மணித்தலை - (அம்மாடத்திலே) வெள்ளித்தகட்டை விலங்குதலாக வைத்தன்ன வாயினையும் அழகிய தலையினையும்; ஒள் அகிற்புகை திரண்டது ஒக்கும் மா மணிப்புறு-ஒள்ளிய அகிலின் புகை திரண்டதைப் போன்ற கரிய நிறத்தினையும் உடைய பெரிய மணிப்புறுக்கள்; கொள்பவளம் கோத்தனைய கால குன்றிச் செங்கண கேடுஇல் பூவை பாட - அறுத்துக்கொண்ட பவளத்தைக் கோத்தாலனைய கால்களையும் குன்றிமணியனைய சிவந்த கண்களையும் உடைய கெடுதியில்லாத பூவைகள் பாடா நிற்க; கிள்ளையொடு பால் உணும் - கிளிகளுடன் பால் பருகும்.

(வி - ம்.) மா - கருமை நிறம். மணி - அழகு.

கொள்ளுதல் - அறுத்துக் கொள்ளுதல். நடுவு பல வரை உண்மையின், 'கோத்தனைய' என்றார். ஒள்ளகில்: ஒண்மை, அகிற்கு அடை. சிலர் பாடப் பிள்ளைகள் பாலுண்டார் என்பதும் [தொனிப் பொருளாகத்] தோன்றிற்று.

இச் செய்யுளின்கண் சொற்கிடந்தவாறே உவமைகளைப் புறவிற்கே கொள்ளுதலே சிறப்பாம். ஆசிரியர் நச்சினார்க்கினியர் அவையிற்றில் சிலவற்றை வாளா பூவைக் கேற்றுகின்றார். புறவினுக்கே ஏற்றுங்கால் அஃதொரு சொல்லோவியமாகும் அருமை உணர்க. (சக)

எக. காடியுண்ட பூந்துகில் கழுமவூட்டும் பூம்புகை
மாடமாலை மேனலார் மணிக்குழலின் மூழ்கலிற்
கோடுயர்ந்த குன்றின்மேற் குழீஇயமஞ்ஞை தஞ்சிற
காடுமஞ்சி னுள்விரித் திருந்தவண்ண மன்னரே.

(இ - ள்.) காடி உண்ட பூந்துகில் ஊட்டும் பூம்புகை கழுமகஞ்சி யூட்டப்பெற்ற பூவேலை செய்த ஆடை அகிற்புகையிலே மயங்குதலால்; மாலை மாடம் மேல்நலார் மணிக்குழலின் மூழ்கலின் - ஒழுங்கான மாடங்களின்மேல் இருக்கின்ற நல்லாருடைய குழலில் ஊட்டும் புகையில் அக்குழல் மறைதலின்; கோடு உயர்ந்த குன்றின்மேல் குழீஇய மஞ்ஞை - உயர்ந்த முடியை

உடைய குன்றின்மேல் திரண்ட மயில்கள்; தம் சிறகு ஆடும் மஞ்சினுள் விரித்து இருந்தவண்ணம் அன்னர் - தம் சிறகை அவ் விடத்து உலாவும் முகிலினுள்ளே விரித்திருந்த தன்மையை அம் மங்கையர் ஒத்தனர்.

(வி - ம்.) காடி - கஞ்சி. சுட்டு (அக்குழல்) வருவிக்க. 'அன்னது' என்ற பாடத்திற்கு, 'மூழ்குதல் வண்ணம் என்னது அன்னது' என்க.

மங்கையர் கூந்தலுக்கும் காடி உண்ட பூந்துகிலினுக்கும் அகிற்புகை ஊட்டுகின்றனர். கூந்தலுக்குக் கலாபம் உவமை. (௬௨)

௭௨. கண்ணுளார்நுங் காதல ரோழிககாம மீங்கென
வுண்ணிலாய வேட்கையா லூடினரை யாடவர்
வண்ணமே கலைகளைப் பற்றவற் றுதிர்ந்தன
எண்ணில்பொன் சுடுநெருப் புக்கமுற்ற மொத்தவே.

(இ - ள்.) நும் காதலர் கண்ணுளார் - உம்மாற் காதலிக்கப் பட்ட மகளிர் உம் கண்களின் உள்ளனர்; ஈங்குக் காமம் ஒழிக என - ஈங்குக் காமத்தை ஒழிக என்று கூறி; உள்நிலாய் வேட்கை யால் ஊடினரை ஆடவர் - உள்ளே நிலவுகின்ற விருப்பத்தாலே ஊடிப் போகின்றவரை அவர்களின் கணவர்கள்; வண்ணம் மேகலைகளைப் பற்ற அற்று உதிர்ந்தன - அழகிய மேகலைகளைப் பிடிக்க அவை அற்றுச் சிந்தினவை (கிடந்த இடம்); எண் இல் பொன் சுடுநெருப்பு உக்க முற்றம் ஒத்த - மாற்று அற்ற பொன் னைச் சுடும் நெருப்புச் சிந்தின முற்றங்களைப் போன்றன.

(வி - ம்.) இமையாது நோக்கலின், இங்ஙனம் ஊடினர். [1]'ஈங்கு' தன்மையை உணர்த்துதல், 'செலவினும் வரவினும்' (தொல். கிளவி. உ௮) சூத்திரத்திற் கூறினும். பொன்னுக்கும் (நீல)மணிக்கும் தழலும் கரியும் உவமை

இச்செய்யுள் வள்ளுவர் ஊடல் நுணுக்கத்தே கூறுவனபோன்ற தொரு ஊடல் நுணுக்கமாதலுணர்க. மகளிர் தம்மை இமையாது நோக்கும் ஆடவர் கண்ணிலே தம்முருவந் தோன்றக் கண்டு "நுங் காதலர் நுங்கண்ணுள்ளே உள்ளனர்" என்று ஊடினர் என்பது கருத்து. (௬௩)

௭௩. கோட்டிளந் தகர்களுங் கோய்ம்மலர தோன்றிபோற்
சூட்டுடைய சேவலுந் தோணிக்கோழி யாதியா
வேட்டவற்றி னூறுளார் வெருளிமாந்தர் போர்கோளீஇக்
காட்டியார்க்கும் கௌவையுங் கடியுங்கௌவை கௌவையே.

(இ - ள்). வெருளி மாந்தர் - செல்வச் செருக்கினையுடைய மாந்தர்கள்; அவற்றின் ஊறு உளார் - அவற்றினுடைய புண்

1. 'யாவை யீங்களிப்பன தேவர்கோன்' (மணி. க௬-௬௮) என்னு மிடத்தும் 'ஈங்கு' தன்மையிடத்தை உணர்த்தியது.

ணைக் கருதாதவராய்; வேட்டு - மேலும் போரை விரும்பி; கோட்டு இளந் தகர்களும் - கொம்புகளையுடைய இளமையான ஆட்டுக் கடாக்களையும்; கொய்தோன்றி மலரபோல் - கொய்யத் தகுந்த தோன்றி மலர்களைப்போன்ற; சூட்டு உடைய - சூட்டினை யுடைய; தோணிக் கோழி ஆதியா - தோணியில் வந்த கோழி முதலாக கோழிகளையும்; சேவலும் - காடை முதலான சேவல் களையும்; காட்டிப் போர் கொளீஇ - காட்டிப் போரிற் பொருத்தி; ஆர்க்கும் கௌவையும்-ஆரவாரிக்கும் ஒலியும்; கடியும் கௌவை கௌவையே - விலக்கும் ஒலியுமே ஒலியாக (அங்குள்ளன).

(வி - ம்.) இங்ஙனமாகிய ஆரவாரமேயன்றித் துன்ப முதலியவற் றால் உண்டாகும் ஆரவாரம் இல்லை என்பது குறிப்பு. கடியும் கௌவை யும் என்னல் வேண்டிய உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. (சச)

எச. இறுநுசுப்பி னந்நலா ரேந்துவள்ளத் தேந்திய
நறவங்கோப் புளித்தலி னாகுபுன்னை பூத்தன
சிறகர்வண்டு செவ்வழி பாடமாடத் தூடெலா
மிறைகொள்வானின் மீனென அரம்பைமுலையி னிருந்தவே.

(இ - ள்.) இறும் நுசுப்பின் அம்நலார் ஏந்து வள்ளத்து ஏந்திய நறவம் கொப்புளித்தலின் - இட்டிடையுடைய அழகிய மகளிர் மணிக் கிண்ணத்திலே எடுத்த மதுவைக் கொப்புளித்த லால்; நாகு புன்னை சிறகர் வண்டு செவ்வழி பாட மாடத்து ஊடெலாம் இறைகொள் வானின் மீன்எனப் பூத்தன - இளைய புன்னை மரங்கள் சிறகையுடைய வண்டுகள் செவ்வழி பாடுமாறு மாடங்களில் எல்லாம் தங்கிய விண்மீன்போல மலர்ந்தன; (நறவம் கொப்புளித்தலின்) அரம்பை முலையின் இருந்த - அவர் கள் மதுவைக் கொப்புளித்ததால் வாழை முகை முலைபோல இருந்தன.

(வி - ம்.) 'நாகு புன்னை' வேற்றுமைத் தொகையாய், 'ஒற்றிடை யின் மிகாமொழியும்'. (தொல். குற்றியலுகரப். எ) என்னுஞ் சூத்திரத் தான், ஒற்று அடாது நின்றது. 'சொல்லிய மரபின்' (தொல். மரபு-உசு) என்னுஞ் சூத்திரத்தில், 'சொல்லுங்காலை' என்றதனால், 'நாகு' பெண்மையேயன்றி, இளமையும் உணர்த்திற்று. 'நாகுமுதிர் நுணவம்' (சிறுபாண். ருக) என்றார் பிறரும். இறை - தங்குதல்.

மகளிரின் உதைத்தல் முதலிய செயல்களால் மலரும் மரங்களைச் சேர்ந்தவை புன்னையும் வாழையும் எனவே, அவர் கொப்புளித்தலால் அவை மலர்ந்தன என்றவாறு. (சரு)

எரு. விலக்கில்சாலை யாவர்க்கும் வெப்பின்முப் பழச்சுனைத்
தலைத்தணீர் மலரணிந்து சந்தனஞ்செய் பந்தரும்
கோலைத்தலைய வேற்கணார் கூத்துமன்றி யைம்பொறி
நிலத்தலைய துப்பெலா நிறைதுளும்பு மூர்களே.

(இ - ள்.) ஊர்கள் - (நாட்டில் உள்ள) ஊர்கள்; யாவர்க்கும் விலக்கு இல் சாலை - யாவர்க்கும் விலங்குதல் இல்லாத உணவுச்சாலை முதலியனவும்; வெப்பு இல் முப்பழச் சுனைத்தலைத் தணீர் - வெப்பத்தை நீக்கும் கடுநெல்லி தான்றி சூழ இருக்கும் சுனையிலிருந்து காலையில் எடுத்த தண்ணீரிலே; மலர் அணிந்து சந்தனம்செய் பந்தரும் - பூவுமிட்டுச் சந்தனமும் இட்ட தண்ணீர்ப் பந்தரும்; கொலைத்தலைய வேற்கணார் கூத்தும் அன்றி - கொலைக்குரிய வேலனைய கண்ணையுடைய மகளிர் கூத்தாடும் இடமும் அல்லாமல்; ஐம்பொறி நிலத்தலைய துப்பு எலாம் நிறைதுளும்பும் - ஐம்பொறியும் நுகர்தற்கிடமான பொருள்கள் எல்லாம் நிறைந்து ததும்பும்.

(வி - ம்.) நோயறுத்தற்குக் கடுநெல்லி தான்றிசூழ வளர்ப்பார்கள். தலைய : இரண்டிடத்தும் வினைக்குறிப்பு.

இவை அரசன் அறம். (சசு)

எசு. அடிசில்வைக லாயிரம் மறப்புறமு மாயிரங்
கோடியஞர்செய் கோலமும் வைகறேறு மாயிர
மடிவில்கம்மி யர்களோடு மங்கலமு மாயிர
மோடிவிலைவே றுயிர மோம்புவாரி னோம்பவே.

(இ - ள்.) வைகல்தோறும் வைகல் அடிசில் ஆயிரம்-(அவ்வூர்களில்) நாடோறும் காணப்பட்ட வைகுதலையுடைய அடிசிற்சாலையும் ஆயிரம்; அறப்புறமும் ஆயிரம் - அறத்திற்கு விட்ட இறையிலி நிலங்களும் ஆயிரம்; கொடியனார் செய் கோலமும் ஆயிரம் - மகளிர் கோலஞ் செய்துகொள்ளும் இடங்களும் ஆயிரம்; மடிவுஇல் கம்மியர்களோடு மங்கலமும் ஆயிரம் - தொழிலிற் சோம்பியிராத கம்மியர்களும் ஆயிரவர்; திருமணமும் ஆயிரம்; வேறு ஆயிரம் ஓம்புவாரின் ஓம்ப ஒடிவு இலை - வெவ்வேறாகிய ஆயிரம் பாதுகாப்பாராற் காக்கப்படுதலின் தவிர்தல் இல்லை.

(வி - ம்.) இல்லையும் வேறுயிரமும் (இலை, வெறுயிரம் என வந்தன.) விகாரம் அறப்புறம் என்பதற்கு ஓதுவிக்குஞ் சாலையென்பதும் ஒன்று. ஒடிவு - தவிர்வு; 'ஒடியா விழவு' (அகநா. கசக) என்றார் பிறரும். இறையிலி - வரியில்லாத நிலங்கள். இவை முற்றூட்டெனவும் படும்.

எஎ. நற்றவஞ்செய் வார்க்கிடந் தவஞ்செய்வார்க்த மஃதிட
நற்பொருள்செய் வார்க்கிடம் பொருள்செய்வார்க்த மஃதிடம்
வெற்றவின்பம் விழைவிப்பான் விண்ணுவந்து வீழ்ந்தென
மற்றநாடு வட்டமாக வைகுமற்ற நாடரோ.

(இ - ள்.) அந்நாடு வெற்ற இன்பம் விழைவிப்பான் விண் உவந்து வீழ்ந்தது என - அவ் ஏமாங்கத நாடு வெற்றியையுடைய

தனதின்பத்தை உலகை விரும்பப் பண்ணுதற்கு வான்நாடு மகிழ்ந்து வீழ்ந்தது என்னும்படி; மற்ற நாடு வட்டம் ஆக வைகும் - தன்னை யொழிந்த நாடுகள் தனக்கு எல்லையாக நிலை பெறும்; அது நல்தவம் செய்வார்க்கு இடம் - அது வீடு பெற நல்ல தவம் புரிவார்க்கும் இடம்; தவம் செய்வார்க்கும் இடம் - மறுமை நினைந்து இல்லறம் நடத்துவார்க்கும் இடம்; நற்பொருள் செய்வார்க்கு இடம் - நல்ல பொருளைத் தருங் கல்வியைப் பயில் வார்க்கும் இடம்; அது பொருள் செய்வார்க்கும் இடம்-அதுவே நிலையில்லாத பொருளைத் தேடுவார்க்கும் இடம்.

(வி - ம்.) உம்மை இரண்டும் [தவஞ் செய்வார்க்கும் பொருள் செய்வார்க்கும் என்பவற்றிலுள்ளவை] இழிவு சிறப்பு. வெற்றம்-வெற்றி. வீழ்ந்ததென : விகாரம்.

'ஊருரைக்க நின்ற' (சீவக. சுச) என்ற கவி முதலாக முடித்த வினைகளைச் சேர்த்து, அவற்றையுடைய நாடு விண் வீழ்ந்தென வைகும்; அஃது இவை செய்வார்க்கிடம் என்க.

விழைவிப்பான் : எதிர்கால வினையெச்சம். துறவியாகையால் வீடு பெறுந் தவத்தை 'நற்றவம்' என்றார். 'அறம் எனப்பட்டதே இல் வாழ்க்கை அஃதும்—பிறன்பழிப்ப தில்லாயின் நன்று' என்று திருவள்ளுவர் உரைப்பது காண்க.

நற்றவம் என்றும் தவம் என்றும் அடையடுத்தும் அடாதும் வந்த சொற்களுக்கு முன்னையது வீடுபெறுதற்குரியது என்றும், பின்னையது இல்லறம் என்றும், நற்பொருள் பொருள் என்று வருவனவற்றில் முன்னது கல்வி என்றும், பின்னது பொன்மணி முதலிய பொருள் என்றும் நுண்ணிதின் உரை வகுக்கும் நச்சினார்க்கினியர் உரைநயம் உணர்ந்தின்புறற்பாற்று. (சஅ)

## நகர் வளம் [புடை நகர்]

வேறு

சஅ. கண்வலைக் காமுகர் என்னு மாபடுத்
தோண்ணிதித் தசைதழீஇ உடலம் விட்டிடும்
பேண்வலைப் படாதவர் பீடி ணேங்கிய
அண்ணலங் கடிநக ரமைதி செப்புவாம்.

(இ - ள்.) கண்வலை காமுகர் என்னும் மா படுத்து - கண்ணாகிய வலையாலே காமுகராகிய விலங்கை அகப்படுத்து; ஒள்நிதித் தசை தழீஇ உடலம் விட்டிடும்-ஒளிபெறும் செல்வமாகிய தசையைக் கைக்கொண்டு உடலைக் கைவிடும்; பெண்வலைப் படாதவர் பீடின் ஓங்கிய - பெண்ணின் சூழ்ச்சியில் அகப்படாத முனிவருடைய தவப்பயன் போலச் செல்வம் ஓங்கிய; அண்ணல்

கடிநகர் அமைதி செப்புவாம் - பெருமைமிகும் காவலையுடைய இராசமா புரத்தின் நிறைவு கூறுவாம்.

(வி - ம்.) அம் : சாரியை.

மா - விலங்கு. தழீஇ : சொல்லிசை அளபெடை. பீடின்: இன்: ஐந்தனுருபு. கடி: உரிச்சொல்.

இனி, இச்செய்யுளைப் பெண்வலைப்படாத சான்றோர் பெருமையோடு மிக்குள்ள அண்ணலங் கடிநகர் எனக் கோடலுமாம். என்னை? ஒரு நாட்டின் சிறப்பிற்கு அதன்கண் சான்றோர் நிரம்பியிருத்தலே சிறந்த சான்றும் என்ப. இக் கருத்தை "எவ்வழி ஆடவர் நல்லவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே" எனவரும் ஔவை மெய்ம்மொழியினும்,

"பொதியிலாயினும் இமயமாயினும்................புகாரேயாயினும் நடுக்கின்றி நிலைஇய என்பதல்லதை ஒடுக்கங்கூறார் உயர்ந்தோர் உண்மையின்" எனவரும் இளங்கோவடிகளார் கூற்றினும் காண்க.

இனி, இச் சிந்தாமணிச் செய்யுட்கு இப்பொருளே கொண்டு கம்பநாடர் தமது காப்பியத்தின்கண் தொடக்கத்திலேயே இக் கருத்தினை,

"ஆசலம்புரி ஐம்பொறி வாளியும்
காசலம்பு முலையவர் கண்ணெனும்
பூசலம்பும் நெறியின் புறஞ்செலாக்
கோசலம் புனை யாற்றணி கூறுவாம்." (ஆற்றுப். க)

என்று மேலும் அழகுற அமைத்துள்ளனர்.

'உடலம் விட்டிடும்' என்புழி உடலம் வறிய உடலம் என்பது படநின்றது. அண்ணலங் கடிநகர் என்றது தலைநகரம் என்பதுபட நின்றது.

எகூ. விண்புகு வியன்சினை மெலியப் பூத்தன
சண்பகத் தணிமலர் குடைந்து தாதுக
வண்சிறைக் குயிலொடு மயில்கண் மாறுகூய்க்
கண்சிறைப் படுநிழற் காவு சூழ்ந்தவே.

(இ - ள்.) விண்புகு வியன்சினை மெலியப் பூத்தன - வானளாவிய பெரிய கிளைகள் வளையுமாறு பூத்தனவாகிய; சண்பகத்து அணிமலர் தாதுகக் குடைந்து - சண்பகத்தின் அழகிய மலரை மகரந்தப்பொடி சிந்தக் குடைந்து; மயில்களொடு குயில்மாறு கூய் - மயில்களுடன் குயில்கள் மாறாகக் கூவி; கண் சிறைப்படும் நிழல் காவு சூழ்ந்த - நோக்கினர் கண்கள் மீளாத நிழலையுடைய பொழில்கள் அந் நகரைச் சூழ்ந்தன.

(வி - ம்.) மெலிய - வளைய. கார்காலத்து மயிலின் களிப்பைத் தான் உட்கோடலின் 'மாறு' என்றார். மயிலொடென மாறுக. செய்தென் எச்ச அடுக்கு, 'அம்முக்கிளவியும்' (தொல். வினை-௩௪) என்னுஞ் சூத்திரத்திற் பிறவினை கொள்ளும் என்றதனால், பிறவினையாகிய 'உடைய' [நிழலையுடைய] என்னும் குறிப்பினைக் கொண்டது. ['கூவி'

என்னும்] இகர ஈறு ['கூய்' எனத்] திரிந்தது. இனி மேலிற் கவிக்கும் [கண்வலை] பொருந்த மயிலை [1]உவமத்தொகைக்கண் வந்த ஆகுபெயரென்று மகளிராக்கி மகளிர் குயிலொடு மாறு கூவினர் என்றுரைப்பதும் ஒரு பொருள். இனிச், சண்பகத்தின் தேன் துளித்தலின் காரென்று [2]மயிலொடு மயிலும், வேனிலாதலிற் குயிலொடு குயிலும் கூவிற்றென்றுமாம். சிறுபான்மையில் கூவிற்றென்றலும் மரபு. (ருo)

அo. கைபுனை சாந்தமுங் கடிசெய் மாலையு
மெய்புனை சுண்ணமும் புகையு மேவிய
நெய்யோடு குங்கும நிறைந்த நாணினற்
பொய்கைகள் பூம்படாம் போர்த்த போன்றவே.

(இ - ள்.) கைபுனை சாந்தமும் - கையிற் புனைந்த சந்தனமும்; கடிசெய் மாலையும் - மணமிகு மாலையும்; மெய்புனை சுண்ணமும் - மெய்யில் அணிந்த சுண்ணப்பொடியும்; புகையும் - கூந்தலுக் கூட்டிய நறுமணப் புகையும்; மேவிய நெய்யொடு குங்குமம் - மெய்யிற் பூசிய புழுகுடன் குங்குமமும்; நிறைந்த பொய்கைகள் - நிறைந்த வாவிகள்; நாணினல் பூம்படாம் போர்த்த போன்ற - நாணத்தினற் பொலிவு மிகும் ஆடையைப் போர்த்த தன்மையை ஒத்தன.

(வி - ம்.) மேவிய நெய் - பூசின புழுகு. குங்குமம் - குங்குமமும். இவை குளிப்பார் அணிந்தன.

இனிப், பிறர் மாசுபட்டதென்னும் நாணினலே பூவாகிய படாம் போர்த்ததுவுமாம். (ருக)

அக. கடிநலக் கரும்பொடு காய்நெற் கற்றையின்
பிடிநலந் தழீஇவரும் பெருங்கைக் குஞ்சர
மடிநிலை யிருப்பெழு வமைந்த கன்மதிட்
புடைநிலை வாரிகள் பொலிந்த சூழ்ந்தவே.

(இ - ள்.) கடிநலக் கரும்பொடு காய்நெற் கற்றை - விளக்கமான நலந்தரும் கரும்பும் முற்றிய நெல் தொகுதியும் ஆகிய; இன்பிடி நலம் தழீஇ வரும் பெருங்கைக் குஞ்சரம் - இனிய கவளத்தின் நலத்தை விரும்பி வரும் நீண்ட துதிக்கையையுடைய களிறுகள் நிற்றலையுடைய; அடிநிலை இருப்பு எழு அமைந்த - அடியிளகாமல் நிற்றலையுடைய கணையமரம் அமைந்த, நன்மதிள் புடைநிலை வாரிகள் - நல்ல மதிலின் உட்புறத்திலே நிலைபெற்ற யானைக் கூடங்கள்; பொலிந்த சூழ்ந்த - பொலிவுடன் சூழ்ந்துள்ளன.

(வி - ம்.) பெருங்கையாவது: நிலந்தோய் துதிக்கை. வாரி - யானைக்கூடம். இவை மதிலின் உட்புறத்தே அமைந்துள்ளன. எழு -

1. உவமையாகு பெயர். 2. இப்பொருளே சிறப்புடையது.

கணைய மரம். யானையுண்ணும் உணவு கவளம். மதிள்: மதில் என்பதன் போலி. (௬௨)

௮௨. சலசல மும்மதஞ் சோரியத் தத்தமுட்
கோலமருப் பிரட்டைகள் குளிப்பப் பாய்ந்திரு
மலைதிளைப் பனவென நாக மான்றபோர்
குலவிய நிலைக்களங் கோல மார்ந்தவே.

(இ - ள்.) இரு மலை திளைப்பன என - இரண்டு மலைகள் தம்மிற் போர் செய்வன்போல; சலசல மும்மதம் சொரிய-சலசல என்று மும்மதங்களும் பெய்ய; கொலை மருப்பு இரட்டைகள் குளிப்பப் பாய்ந்து - கொலைபுரியும் இரு கொம்புகளும் தைத்து மறையத் தாக்கி; நாகம் தத்தமுள் ஆன்ற போர் - களிறுகள் தமக்குள் பெரும்போர் புரிய; குலவிய நிலைக்களம் கோலம் ஆர்ந்த - விளைத்த நிலைபெற்ற களங்களும் அழகு நிறைந்தன.

௮௩. முத்துடை வெண்மருப் பீர்ந்து மோய்கோளப்
புத்தியிற் குயிற்றிய மருங்கிற் பல்வினைச்
சித்திரக் கிம்புரி வைரஞ் சேர்த்துந
ரோத்திய லிடங்களு மோழுங்கு நீண்டவே.

(இ - ள்.) முத்துஉடை வெண் மருப்பு ஈர்ந்து - முத்துக்களையுடைய வெள்ளிய கொம்புகளை அறுத்துக் (கூர்மையிட்டு); மொய்கொள - அவை வலிமை கொள்ளுமாறு இடும்; பத்தி மருங்கில் பல்வினைக் குயிற்றிய சித்திரக் கிம்புரி - பத்தி மருங்கிலே பல தொழில்களைச் செய்த அழகிய தந்தப்பூணில்; வைரம் சேர்த்துநர் ஒத்துஇயல் இடங்களும் ஒழுங்கு நீண்ட - வைரம் இடுவோர் தம்மிற் பொருந்தி வாழுந் தெருக்களும் ஒழுங்குடன் நீண்டிருந்தன.

(வி - ம்.) [பத்தியின்]: இன்: அசை.

இனி, கிம்புரி வைரம் - கோளகையுமாம்: ஆகுபெயர். கோளகை - யானைத் தந்தப்பூண். (௬௩)

௮௪. ஓடுதேர்ச் சாரிகை யுகுபோற் பூமியு
மாடக மாற்றுந்தார்ப் புரவி வட்டமும்
கேடக வாட்டொழி லிடமுங் கேடிலாக்
கோடுவெஞ் சிலைத்தொழி லிடமுங் கூடின்றே.

(இ - ள்.) ஓடு தேர் சாரிகை உகுபொன் பூமியும் - ஓடும் தேரின் விரைவினாலே சிந்தும் பொன்னையுடைய தேரேறும் இடங்களும்; ஆடகம் ஆற்றும் தார்ப்புரவி வட்டமும் - பொன்னலான தாரினையுடைய குதிரையேறும் இடங்களும்; கேடக

வாள் தொழில் இடமும் - கேடகத்துடன் வாட்பயிற்சி செய்யும் இடங்களும்; கேடுஇலாக் கோடு வெஞ்சிலைத் தொழில் இடமும் கூடின்று - பயில்வதிற் குறையில்லாத வளைந்த விருப்பம் ஊட்டும் விற்பயிற்சி செய்யும் இடமும் கூடிற்று.

(வி - ம்.) ஆடகத்தார்: வேற்றுமைத்தொகை. கோடு சிலை: வினைத்தொகை. கூடின்று: ஒன்றன்பால் இறந்தகால வினைமுற்று.

இடைநகர்

அரு. புடைநகர்த் தொழிலிடங் கடந்து புக்கபி
னிடைநகர்ப் புறம்பணை யியம்பு மோசையோர்
கடலுடைந் ததுவெனக் கலந்த தக்கடன்
மடையடைத் தனையதம் மாக்க ளீட்டமே.

(இ - ள்.) புடைநகர்த் தொழில் இடம் கடந்து புக்கபின் - புறநகரில் தொழில் செய்வாரிடத்தை யான் ஒருவாற்றாற் கூறி இடை நகரினது தன்மைகூறத் தொடங்கினபின்; புறம்பணை இசைக்கும் இடைநகர் ஓசை - புடைநகர்ப் புறமாகிய மருத நிலத்தே சென்றொலிக்கும் இடைநகரின் ஓசை; கடல் உடைந்தது எனக் கலந்தது - கடல் உடைந்தாற்போல ஆங்குப் பொருந்தியது; அம் மாக்கள் ஈட்டம் - அவ்வோசை பிறத்தற்குக் காரணமான மாக்களின் தொகுதி; அக் கடல்மடை அடைத்தனையது - அதன் உடைப்பை உலகு குவிந்தடைக்குந் தன்மையை ஒத்தது.

(வி - ம்.) ஆதலால் என்னாற் கூறுதல் அரிது.

'கடந்து' என்றார் கூறுதல் அருமை பற்றி. புகுதல்: சொல்லப் புகுதல். அடைத்தனையது: [அடைக்குந் தன்மையது என்று பொருள் படுவதால்] கால மயக்கம்.

இனி, 'புடைநகரிலே தொழில் செய்யும் இடத்தைக் கடந்து உள்ளே சென்றால்.........அடைத்தனையது' என அந்நகரைக் காண்போருக்குக் கூறுதல்போலப் பொருள் கொள்வதே சிறப்புடையதாதலைக் காண்க. (ருசு)

அசு. சிந்துரப் பொடிகளுஞ் செம்போற் சுண்ணமுஞ்
சந்தன நீரொடு கலந்து தையலார்
பந்தொடு சிவிறியிற் சிதறப் பார்மிசை
யிந்திர வில்லெனக் கிடந்த வீதியே.

(இ - ள்.) சிந்துரப் பொடிகளும் செம்பொன் சுண்ணமும் சந்தன நீரொடு கலந்து - சிவப்புநிறப் பொடிகளையும் பொற் சுண்ணங்களையும் சந்தனத்தையும் பனிநீரிலே கலந்து; பந்தொடு சிவிறியில் தையலார் சிதற - மட்டத்துருத்தியாலும் நெடுந் துருத்தியாலும் மங்கையர் சிதற; பார்மிசை இந்திரவில் என வீதி

கிடந்த - (அவை) பாரிலே கிடந்த இந்திர வில்போலத் தெருவிலே கிடந்தன.

அஎ. பாத்தரும் பசும்பொனின் மாடத் துச்சிமேற்
றூத்திரண் மணிக்குட நிரைத்துத் தோன்றுவ
பூத்தன வேங்கைமேற் பொலிந்து கார்நினைந்
தேத்தரு மயிற்குழா மிருந்த போன்றவே.

(இ - ள்.) பாத்து அரும் பசும்பொனின் மாடத்து உச்சிமேல் - மாற்றற்ற அரிய புதிய பொன்மயமான மாடங்களின் உச்சியில்; தூத்திரள் மணிக்குடம் நிரைத்துத் தோன்றுவ - தூய திரண்ட நீல மணிக்குடம் நிரையாகத் தோன்றுவன; பூத்தன வேங்கைமேற் கார் நினைந்து - மலர்ந்த வேங்கை மரங்களின்மேல் முகிலை நினைத்தலால்; ஏத்தரு மயில் குழாம் பொலிந்து இருந்த போன்ற - மேனோக்கிய மயிலின் திரள் பொலிவுடன் இருந்தன போன்றன.

(வி - ம்.) 'ஏக்கழுத்தம்' (சீவக. சகூசு) என்றார் பின்னும்.

பூத்தன வேங்கை: பூத்தன: வினைமுற்றுப் பெயரெச்சமாயிற்று. 'பூத்த வேங்கை வியன்சினையேறி மயிலினம் அகவும் நாடன்' (யாப்பருங்கலவிருத்தி: ௫0 உரை மேற்கோள்). (௫அ)

அஅ. நெடுங்கொடி நிழன்மதி நெற்றி தைவர
வுடம்புவேர்த் தினமழை யுரறி நோக்கலி
னடுங்குபு நல்வரை மாடத் துச்சியி
லடங்கிவீழ்ந் தருவியி னழுவ போன்றவே.

(இ - ள்.) நெடுங்கொடி நிழல்மதி நெற்றி தைவர - நீண்ட கொடி மிக்குச்சென்று ஒளிவிடும் திங்களின் நெற்றியைத் தடவுதலின்; இனமழை உடம்பு வேர்த்து உரறி நோக்கலின் - திரண்ட மேகங்கள் மெய்புழுங்கி வேர்த்து இடித்து நோக்கிப் பெய்தலின்; அருவியின் நடுங்குபு - உள்ள அருவித் திரளால் நடுங்கியவாறு; நல்வரை மாடத்து உச்சியில் அடங்கி வீழ்ந்து அழுவ போன்ற - அழகிய மலையனைய மாடங்களின் உச்சியிலே குவிந்து வீழ்ந்து அழுவனபோலே யிருந்தன.

(வி - ம்.) சிலர் கோபத்திற்கஞ்சிச் செருக்கடங்கி அழுதனர் என்பது போதரும் [குறிப்புப் பொருள்]. (௫கூ)

அகூ. பொற்சிறு தேர்மிசைப் பைம்பொற் போதக
நற்சிறு ரூர்தலி னங்கை மார்வீஇ
யுற்றவர் கோழிமே லெறிந்த வொண்குழை
மற்றத்தே ருருள்கோடா வளமை சான்றவே.

(இ - ள்.) விரீஇ உற்றவர் நங்கைமார் கோழிமேல் எறிந்த ஒண்குழை - நெல்லுப் பார்த்திருக்கும் பெண்கள் கோழிமேல் எறிந்த ஒளிமிகுங் காதணி; பொன் சிறு தேர்மிசைப் பொலிந்த போதகம் நல்சிறார் ஊர்தலின் - பொன்னாலான சிறு தேரில் விளங்கும் யானையின்மேல் அழகிய சிறுவர்கள் ஊர்ந்து செல்கையில்; அத்தேர் உருள்கொடா வள்மை சான்ற - அத்தேரை உருளாவண்ணம் புரியும் வளங்கள் நிறைந்தன.

(வி - ம்.) 'விரீகி' என்பது 'விரீஇ' என ஆயிற்று. மற்று: அசை. விரீஇ - நெல். 'குழைகொண்டு கோழி யெறியும் வாழ்க்கையர்' (தொல். சொல். சருஉ. இளம்-உரை மேற்கோள்.)

இச் செய்யுளோடு,

"நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும்
கோழி எறிந்த கொடுங்காற் கனங்குழை
பொற்கால் புதல்வர் புரவியின் றுருட்டும்
முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்."

எனவரும் பட்டினப்பாலையை (உஉ-சு) நினைக.

இஃது அந்நகரக் குடிமக்களின் செல்வ மிகுதியைக் குறிப்பான் உணர்த்தியவாறும். (சு0)

சு0. மாலையும் பசும்பொனு மயங்கி வார்கணைக்
கோலெயுங் குனிசிலை நுதலி னாரோடு
வேலிய லாடவர் விரவி விண்ணவ
ராலய மிதுவென வையஞ் செய்யுமே.

(இ - ள்.) மாலையும் பசும்பொனும் மயங்கி-மாலையும் புதிய பொற்பூணும் கலக்கப்பட்டு; வார் கணைக்கோல் எய்யும் குனி சிலை நுதலினாரொடு - நீண்ட அலகினையுடைய அம்பை எறியும் வளைந்த வில்லைப்போன்ற புருவ மங்கையருடன்; வேல் இயல் ஆடவர் விரவி - வேல் பயிலும் ஆடவர்கள் கலக்கப்பட்டு; இது விண்ணவர் ஆலயம் என ஐயம் செய்யும் - இது வானவரின் இருப்பிடம்போலும் என்ற ஐயத்தை அந்நகர் உண்டாக்கும்.

(வி - ம்) கணை - அலகு.

பசும்பொன்: கருவியாகு பெயராகப் பூண்களை உணர்த்தியது.

சுக. கற்சுணஞ் செய்ததோண் மைந்தர் காதலா
னற்சுணப் பட்டுடை பற்ற நாணினாற்
பொற்சுணத் தால்விளக் கவிப்பப் பொங்கிய
பொற்சுணம் புறம்பணை தவழும் பொற்பிற்றே.

(இ - ள்.) கல் சுணம் செய்த தோள் மைந்தர் - கல் தூணைப் பொடிசெய்த தோளையுடைய ஆடவர்; காதலால் நல் சுணப்பட்டு உடைபற்ற - (மகளிர் புலந்து செல்லும்போது) தம் காதலால் அவர்களுடைய அழகிய சுண்ணம் கலந்த பட்டுடையைப் பற்ற; நாணினல் பொற்சுணத்தால் விளக்கு அவிப்ப - அது நெகிழ்ந்த நாணத்தால் அம்மகளிர் அழகிய சுண்ணப் பொடியைக்கொண்டு விளக்கை அவிப்ப; பொங்கிய பொற்சுணம் புறம்பணை தவழும் பொற்பிற்று - மிகுந்த சிதறிய சுண்ணப் பொடி புறத்தே உள்ள மருதநிலத்தே பரவும் பொலிவினது அந்நகர்.

(வி - ம்.) கல் - உலம் [தூண்]. சுண்ணப்பட்டு-சுண்ணம் அளைந்த பட்டு.

'காதலார்' என்றும் பாடம்.

நான்கிடத்தும் சுண்ணம் சுணம் என நின்றன. இது தொகுக்கும் வழித்தொகுக்கலாம். பொற்சுணத்தால் என்புழி ஆலுருபு ஐயுருபாகவும் அதன் பொருள் ஆகிய கருவி செயப்படுபொருளாயும் வந்தன. இதற்கு விதி "உருபினும் பொருளினும் மெய்தடுமாறி இருவயின் நிலையும் வேற்றுமை எல்லாம் திரிபிடன் இலவே தெரியுமோர்க்கே" (தொல். வேற்றுமை மயங்கியல், கஅ) என்பதாம். (௬௨)

௬௨. நலத்தகு நானநின் றிடிக்கு நல்லவ
ருலக்கையால் உதிர்ந்தன தெங்கி னொண்பழ
நிலத்தவை சோரிதலின் வெரீஇய மஞ்ஞைபோய்க்
கலத்துயர் கூம்பின்மே லாடுங் கௌவைத்தே.

(இ - ள்.) நலம் தகு நானம் நின்று இடிக்கும் நல்லவர் - விரும்பத் தகுகின்ற சுண்ணத்தை நின்று இடிக்கும் மகளிரின்; உலக்கையால் உதிர்ந்தன தெங்கின் ஒண்பழம் - உலக்கையால் கழன்றனவாகிய சிறந்த தெங்கின் பழங்களை; அவை நிலத்துச் சொரிதலின் - அம்மரங்கள் மடலில் தாங்கி நிலத்தில் விடுதலின்; வெரீஇய மஞ்ஞை போய் - அஞ்சிய மயில் ஓடிச்சென்று; கலத்து உயர் கூம்பின்மேல் ஆடும் கௌவைத்து - (அச்சம் நீங்கி) மரக்கலத்திலே உயரமான பாய்மரத்தின்மேல் ஆடும் ஆரவாரமுடையது அந்நகர்.

(வி - ம்.) நலத்தகு : வியத்தகு என்றாற்போல நின்றது.

நானம்: ஆகுபெயர்; அதிலே நனைத்திடித்தலின். [நானம்-புழுகு. இதன் பெயர் இதனில் நனைத்து இடிக்குஞ் சுண்ணத்திற்கு ஆயினமையின் சினையாகுபெயர்.] புகாரினது ஆழத்தால் நகரளவும் கலம் வந்தது; அரசன் விளையாடுதற்குச் சமைத்தனவும் ஆம்.

புகார் : துறைமுகம். (௬௩)

கூ௩. இட்டவெண் ணிலப்படா வகையி னீண்டிய
முட்டிலா மூவறு பாடை மாக்களாற்
புட்பயில் பழுமரப் பொலிவிற் றாகிய
மட்டிலா வளநகர் வண்ண மின்னதே.

(இ - ள்.) *இட்டஎள் நிலம்படா வகையின் ஈண்டிய - போகட்ட எள் நிலத்திலே வீழாதவாறு திரண்ட; முட்டிலா மூவறு பாடை மாக்களால் - குறைவற்ற பதினெட்டு மொழி பேசும் மக்களாலே; புள்பயில் பழுமரம் பொலிவிற்று ஆகிய - பறவைகள் வாழும் பழுத்த மரத்தின் இயல்பினையுடைய; மட்டு இலா வளம்நகர் வண்ணம் இன்னது - அளவற்ற வளந் தரும் நகரின் இயல்பு இதுவரை கூறியவாறாகும்.*

(வி - ம்.) *மிலேச்சராதலின் ஐயறிவிற்குரிய 'மாக்கள்' என்னும் பெயராற் கூறினர்.*

இதனானே நெருக்கமும் ஓசை வேறுபாடும் பயன்கோடலும் கூறினார்.

*'கடிநகர் அமைதி செப்புவாம்' (சீவக. ௭௮) என்றது முதலாக நடுவு கூறிய வினைகளைப், 'புடைநகர்த் தொழிலிடங் கடந்து' (சீவக. ௮௫) என்பதனோடு முடித்து, அதுமுதல் இடைகளிற் கூறிய வினைகளை, 'இன்னது' என்பதனோடு முடிக்க.* (௬௪)

*அகழி*

கூ௪. தங்கொளி நித்திலத் தாமஞ் சூடிய
வெங்களி யிளமுலை வேற்கண் மாதரார்
பைங்கிளி முன்கைமேற் கொண்டு பார்ப்பெணும்
கொங்கலர் தாமரைக் கிடங்கு கூறுவாம்

(இ - ள்.) *தங்குஒளி நித்திலத் தாமம் சூடிய - நிலைபெற்ற ஒளியையுடைய முத்துமாலையை அணிந்த; வெங்களி இளமுலை வேற்கண் மாதரார் - விருப்பமும் மகிழ்ச்சியுந் தரும் இள முலைகளையும் வேலனைய கண்களையும் உடைய மங்கையர்; பைங்கிளி முன்கைமேல் கொண்டு பார்ப்பு எணும் - பசுங்கிள்ளையை முன் கையிலேந்தி அன்னப் பார்ப்புகளை அக்கிளிக்கு எண்ணிக் காட்டுதற்குரிய; கொங்கு அலர் தாமரைக் கிடங்கு கூறுவாம் - தேன் கமழும் தாமரை மலர் நிறைந்த அகழிகளைக் கூறுவோம்.*

(வி - ம்) *'சூடிய' என்றார், 'முலைமுடி சூடிற்று' என்றாற்போல. வெம்மை - விருப்பம். மேல், தாமரை கூறுதலின் பார்ப்பு அன்னப் பார்ப்பு. [பார்ப்பு - பறவைக் குஞ்சு].* (௬௫)

௬௫. கோட்சுறு வினத்தோடு முதலைக் குப்பைக
ளாட்பெறு திரிதர வஞ்சிப் பாய்வன
மோட்டிருப் பனிக்கிடங் குழக்க மொய்த்தெழுந்
தீட்டறுப் புள்ளின மிரற்று மென்பவே.

(இ - ள்.) கோள் சுறு இனத்தொடு முதலைக் குப்பைகள் - ஆற்றல்மிகும் சுறுவின் இனத்துடன் முதலைத் திரள்கள்; ஆள் பெறு திரிதர - கரையிலே ஆட்களை எதிர்ப்படப் பெறுமல் உள்ளே திரிதலால்; அஞ்சிப் பாய்வன மோட்டு இரு - அவற்றிற் கஞ்சி விரைந்து பாயும் பெரிய இரு மீன்கள்; பனிக்கிடங்கு உழக்க - குளிர்ந்த அகழியைக் கலக்குதலால்; ஈட்டு அறுப் புள் ளினம் எழுந்து இரற்றும் - கூட்டம் பிரியாத பறவைத்தொகுதி எழுந்து ஆரவாரிக்கும்.

(வி - ம்.) முன்னே சுழியணைந்தமை (௬௨-ஆஞ் செய்யுள்) பெறுத லின் சுறவு கூறினர். [கழி: உப்பங்கழி]. கரையில் அஞ்சி ஆழத்திற் சென்றால் ஆளைக் கொல்லுதல் அவற்றிற்குத் தொழில். (௬௬)

௬௬. சிறையனப் பேடையினோ டூடிச் சேவல்போய்
அறுபத வண்டின மார்ப்பத் தாமரை
யுறைவது குழுவினி னீங்கி யோகொடு
கறையற முயல்வதோர் கடவு ளொத்ததே.

(இ - ள்.) சிறை அனம் பெடையினோடு சேவல் ஊடிப் போய் - சிறகினையுடைய அன்னப் பறவையோடு சேவல் பிணங் கிச் சென்று; அறுபத வண்டினம் ஆர்ப்பத் தாமரை உறைவது - ஆறு கால்களையுடைய வண்டின் கூட்டம் முரலத் தாமரை மலரிலே குவிந்திருப்பது; குழுவினின் நீங்கி - சுற்றத்தினின்றும் நீங்கி; கறைஅற யோகொடு முயல்வதோர் கடவுள் ஒத்தது - குற்றம் நீங்கத் (தீயிடை நின்று) யோகத்தோடு தவஞ்செய்யும் ஒரு கடவுளைப் போன்றது.

(வி - ம்.) யோகம்: 'யோகு' எனத் திரிந்தது. கறை - மும்மலம். எழுந்த வண்டு புகைக்கும், பூ நெருப்பிற்கும் உவமம். மும்மலம்: காமம், வெகுளி, மயக்கம்.

இதன்கண் 'வண்டினம் ஆர்ப்பத் தாமரை' என்று வந்தமையால் தீயிடைநின்று என்று பொருள் கூறி, மேலும் 'வண்டு புகைக்கும் பூ நெருப்பிற்கும் உவமம்' என்று விளக்குதல் போற்றத்தக்கதாம். (௬௭)

௬௭. அரும்பொனும் வெள்ளியு மணியு மல்லது
கருங்கலந் தோய்விலாக் காமர் பூந்துறை
குரும்பைமென் முலையின்மேற் குலாய குங்குமம்
விருந்துசெய் திடவெறி மேனி சேந்ததே.

(இ - ள்.) அரும்பொனும் வெள்ளியும் மணியும் அல்லது - அரிய பொன்னாலும் வெள்ளியாலும் மணியாலும் ஆன குடங்களல்லாமல்; கருங்கலம் தோய்வு இலாக் காமர் பூந்துறை - மட்குடம் முகவாத அழகிய மலர்நிறைந்த நீர்த்துறை; குரும்பை மென்முலையின்மேல் குலாய குங்குமம் - (அங்கே குளிக்கும் மகளிரின்) தென்னங் குரும்பை அனைய மெல்லிய கொங்கைகளின்மேற் பூசிய குங்குமம்; விருந்து செய்திட வெறி மேனி சேந்தது - (தன்னைப்) புதுமை செய்தலால் மணத்துடன் மெய் சிவந்தது.

(வி - ம்.) பொன் முதலிய காரணப் பெயர் அவற்றான் இயன்ற காரியத்தின்மேல் நின்ற [காரண] ஆகுபெயர். வெறி - மணம். காமம் மரு என்னும் சொல் காமர் எனக் குறைந்தது.

கருங்கலம் வனைந்து சுடப்படுதலாற் கருநிறமுடைய மட்கலம் என்பது படநின்றது. (சூஅ)

சூஅ. பட்டவர்த் தப்பலிற் பரவை யேந்தல்கு
லட்டொளி யரத்தவாய்க் கணிகை யல்லது
மட்டுடை மணமகண் மலர்ந்த போதினாற்
கட்டுடைக் காவலிற் காமர் கன்னியே.

(இ - ள்.) பட்டவர்த் தப்பலின் பரவை ஏந்து அல்குல் அட்டுஒளி அரத்தம் வாய்க் கணிகை - அகப்பட்டவரைக் கரை ஏறவிடாமற் கொல்வதனாற் கடலனைய ஏந்திய அல்குலையும், உருக்கிய ஒளிமிகும் அரக்கனைய வாயையும் உடைய பரத்தையை ஒக்கும்; அல்லது மலர்ந்த போதினால் மட்டுஉடை மணமகள் - அல்லதெனில் மலர்ந்த பூவினாற் காமபானத்தை உடைய மணஞ் செய்த மகளை ஒக்கும்; காவலின் கட்டு உடைக் காமர் கன்னி - காவலால் கற்பித்த வழிநிற்கும் அழகிய கன்னிப்பெண்ணை ஒக்கும்.

(வி - ம்.) அட்டு ஒளி அரத்தம் - உருக்கி ஒளியையுடைய அரக்கு. மட்டு - காம பானம். கட்டு - கற்பித்தல் [பெற்றோரால்].

அகழி தப்பலானே கணிகையை ஒக்கும், மலர்களையுடைமையால் புது மணமகளை ஒக்கும்; காவலில் கன்னியை ஒக்கும் என்க. தப்புதல் - கொல்லுதல். (சூகூ)

சூகூ. நிரைகதிர் நித்திலங் கோத்து வைத்தபோல்
விரைகமழ் கமுகின்மேல் விரிந்த பாளையுங்
குரைமதுக் குவளைகள் கிடங்கிற் பூத்தவு
முரையினோ ரோசனை உலாவி நாறுமே.

(இ - ள்.) நிரைகதிர் நித்திலம் கோத்து வைத்தபோல் - ஒழுங்காக ஒளிவிடும் முத்துக்களைக் கோத்துவைத்தாற்போல்;

கமுகின்மேல் விரிந்த விரைகமழ் பாளையும் - கமுகின்மேல் மலர்ந்த மணங்கமழும் பாளையும்; கிடங்கிற் பூத்த குரைமதுக் குவளைகள் - அகழியிற் பூத்த ஒலிக்கும் தேனையுடைய குவளைகளும்; உரையின் உலாவி ஓரோசனை நாறும் - புகழுற எங்கும் பரவி ஓரோசனையளவு கமழும்.

(வி - ம்.) குரைமது: வினைத்தொகை. உரை - புகழ். புகழால் எங்கும் உலாவி.

யோசனை: சைனர் கொள்கைப்படி நாற்காதம். (௭௦)

மதில்

௧௦௦. தாய்முலை தழுவிய குழவி போலவு
மாமலை தழுவிய மஞ்சு போலவு
மாய்முகில் தழீஇயசும் பருத நெற்றிய
சேயுயர் மதில்வகை செப்பு கின்றதே.

(இ - ள்.) ஆய்முகில் தழீஇ குழவி தழுவிய தாய்முலை போலவும் - நீர்சுமந் திளைத்த மேகத்தைத் தன்னிடத்தே அணைத்தலாலே குழவியை அணைத்த தாயின் முலைபோலவும்; மஞ்சு தழுவிய மாமலைபோலவும் - முகிலைத் தன்னிடத்தே அணைத்த பெரிய மலைபோலவும்; அசும்பு அருத நெற்றிய - நீர்த்துளி நீங்காத தலையையுடைய; சே உயர் மதில்வகை செப்புகின்றதே - மிகவுயர்ந்த மதிலின் கூறுபாடு இனிக் கூறப்படுகின்றது.

(வி - ம்.) குழவி தழுவிய தாய்முலை போலவும், மஞ்சு தழுவிய மாமலை போலவும் என மாறிக் கூட்டுக. ஆய்முகில் - இளைத்த மேகம். அசும்பு - நீர்த்துளி. (௭௧)

வேறு

௧௦௧. மாற்றவர் மறப்படை மலைந்துமதில் பற்றின்
நூற்றுவரைக் கொல்லியொடு நூக்கியெறி பொறியுந்
தோற்றமுறு பேய்களிறு துற்றுபெரும் பாம்புங்
கூற்றமன கழுகுதொடர் குந்தமொடு கோண்மா,

(இ - ள்.) மாற்றவர் மறப்படை மலைந்து மதில் பற்றின் - பகைவர் மறமிகும் படைகளால் பொருது அகழைக்கடந்து மதிலைப் பற்றினால்; நூற்றுவரைக் கொல்லியொடு நூக்கியெறி பொறியும் - நூறுபேரை ஒருமுறையிற் கொல்லும் 'சதக்கினி' என்னும் பொறியும் தள்ளி அடிக்கும் பொறியும்; தோற்றம் உறு பேய் - காணப்படுவதொரு பேய்போன்ற பொறியும்; களிறு,

துற்று பெரும்பாம்பும் - களிற்றுப் பொறியும் விழுங்கும் பெரிய பாம்புப் பொறியும்; கூற்றம் அன கழுகு தொடர் குந்தமொடு கோண்மா - காலனைப்போன்ற கழுகும் கட்டியிழுக்கும் சங்கிலியும் விட்டேறு என்னும் படையும் கொல்லும் புலி முதலிய விலங்குகளும் ஆகிய பொறிகளும்;

(வி - ம்.) பற்றின் என்பதைத் 'தெவ்வர் தலைபணிப்பத் திருந்தும்' என (கO௪-ஆம் செய்யுளில் உள்ள தொடருடன்) முடிக்க.

இதுமுதல் நான்கு பாட்டுகள் குளகம்.

நூற்றுவரைக் கொல்லி - சதக்கினி; நூறுபேரை ஒருகாற் கொல்வதொரு பொறி. நூக்குதல் - தள்ளுதல். எறிதல் - அடித்தல். பேய் - ஒரு பொறி. துற்றுதல் - விழுங்குதல். கோண்மா - கொலை செய்யும் விலங்குகள். (எஉ)

கOஉ. விற்பொறிகள் வெய்யவிடு குதிரைதொட ரயில்வாள்
கற்பொறிகள் பாவையனம் மாடமடு செந்தீக்
கோற்புனைசெய் கொள்ளிபெருங் கோக்கெழில்செய் கூகை
நற்றலைக டிருக்கும்வலி நெருக்குமர நிலையே,

(இ - ள்.) விற்பொறிகள் - விற்பொறிகளும்; வெய்யவிடு குதிரை - கொடிய, பகைவர்மேலே விடுங் குதிரைப் பொறிகளும்; தொடர் அயில்வாள் - தானே தொடர்ந்து செல்லுங் கூரிய வாட் பொறிகளும்; கற்பொறிகள் - வந்தவர்மேல் தாமே கற்களை வீசும் இடங்கணி முதலிய பொறிகளும்; பாவை அனம் மாடம் அடு செந்தீ - பாவையும் அன்னமும் ஆகிய பொறிகளும் நாடகசாலைகளும் அடப்படும் செந்தீயும்; கொல் புனை செய் கொள்ளி - கொல்லராற் புனையப்பட்ட இரும்புக் கொள்ளியும்; பெருங் கொக்கு - பெரிய கொக்குப் பொறிகளும்; எழில்செய் கூகை - அழகிய கூகைப் பொறிகளும்; நல்தலைகள் திருக்கும் வலி நெருக்கும் மரநிலை - அழகிய தலைகளைத் திருகிக்கொள்ளும் வலியுடனே நெருக்கும் மரமான ஐயவித் துலாமும்;

(வி - ம்.) எழில்செய் கூகை: இகழ்ச்சிக் குறிப்பு.

விற்பொறி - தானே அம்பெய்யும் இயந்திர வில். குதிரை - ஒரு பொறி. கற்பொறி - கல்லை வீசும் பொறி. இதனை இடங்கணி என்றும் கூறுப. பாவை முதலியனவும் பொறிகள். மாடம்-நாடகசாலை போன்று தோன்றித் தன்பாற் புக்காரைக் கொல்லுமொரு பொறி. நெருக்கு மரம் - ஐயவித்துலாம். (எந)

கOங. செம்புருகு வெங்களிக ளுமிழ்வதிரிந் தெங்கும்
வெம்புருகு வட்டுமிழ்வ வெந்நெய்முகந் துமிழ்வ
வம்புமிழ்வ வேலுமிழ்வ கல்லுமிழ்வ வாகித்
தம்புலங்க ளால்யவனர் தாட்படுத்த பொறியே.

(இ - ள்.) எங்கும் திரிந்து செம்பு உருகு வெங்களிகள் உமிழ்வ - எவ்விடத்துந் திரிந்து செம்புருகின நீரை உமிழ்வனவும்; வெம்பு உருகு வட்டு உமிழ்வ - பகைவர் வேதற்குக் காரணமான உருகு வட்டை உமிழ்வனவும்; வெம் நெய் முகந்து உமிழ்வ- வெப்பமான நெய்யை அள்ளிச் சொரிவனவும்; அம்பு உமிழ்வ வேல் உமிழ்வ கல் உமிழ்வ ஆகி - அம்புகளையும் வேல்களையும் கற்களையும் உமிழ்வனவாக; யவனர் தம் புலங்களால் தாள்படுத்த பொறி - யவனர்கள் தங்கள் அறிவின் திறங்களால் அமைத்த பொறிகளும்;

(வி - ம்.) ஆகி - ஆக. புலம் - அறிவு.

யவனர்-யவனநாட்டிலிருந்து வந்துள்ள தச்சர். இவர்கள் பொறிகள் இயற்றுவதில் திறமுடையோர்கள். பெருங்கதையின்கண் யவனத் தச்சன் ஒருவன் யூகிக்குப் பொறித்தேர் கொடுத்தமை இலாவாண காண்டத்துக் காணப்படுகின்றது. (எசு)

க0சு. கரும்போனியல் பன்றிகத நாகம்விடு சகடங்
குரங்குபோரு தகரினோடு கூர்ந்தரிவ நண்ணூல்
பரந்தபசும் பொற்கொடிப தாகையொடு கொழிக்குந்
திருந்துமதி றெவ்வர்தலை பனிப்பத்திருந் தின்றே.

(இ - ள்.) கரும்பொன் இயல் பன்றி - இரும்பாற் செய்யப்பட்ட பன்றிப் பொறிகளும்; கத நாகம் - சினமிகும் நச்சரவுப் பொறிகளும்; விடு சகடம் - விடப்பெறும் ஆழிப்பொறிகளும்; குரங்கு பொரு தகரினொடு - குரங்கும் பொரும் ஆட்டுக்கடாவும் ஆகிய பொறிகளும்; கூர்ந்து அரிவ நண்ணூல் - கூர்ந்து அரியும் நுண்ணிய அரிகயிறுகளும்; பரந்த பசும்பொற் கொடி பதாகையொடு - பரவிய பசும்பொன்னாலான கொடிகளும் பெருங் கொடிகளும் (கொண்டு); கொழிக்கும் திருந்தும் மதில் - மிகுந் துள்ள அழகிய மதில்; தெவ்வர் தலைபனிப்பத் திருந்தின்று - பகைவரின் தலை நடுங்கத் திருந்தியது.

(வி - ம்.) மதில் இன்னதும் இன்னதும் திருந்திற்றெனச் சினைவினை முதலொடு முடிந்தது. பற்றிற் பனிப்ப என்க.

இத் தொடர்நிலையில் சொற்களைத் துணித்துப், பலவிடத்தினும் எடுத்துக் கூட்டியது ('பற்றிப் பனிப்ப' என்பனபோல) செய்யுளுறுப்பு இருபத்தாறினும் மாட்டென்பது ஒருறுப்பாதலின்; 'அகன்று பொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும் - இயன்று பொருள் முடியத் தந்தன ருரைத்தல் - மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்' (தொல். செய். உக0) என்றும், 'மாட்டும் எச்சமும் நாட்டல் இன்றி - உடனிலை மொழியினும் தொடர்நிலை பெறுமே' (தொல். செய். உகக) என்றும் தொல்காப்பியனார் கூறினர். இதனால் நாடு முதலிய கவிகளில் மாட்டின்றி வந்தனவுங் கொள்க. இவ்விதி மேல்வருவனவற்றிற்குங் கொள்க' என்பர் நச்சினார்க்கினியர்.

கரும்பொன் - இரும்பு. கதம் - வெகுளி. அரிப : பலவறி சொல். தெவ்வர் என்றதனை முன்னர் (௧0௧) "மாற்றவர் மறப்படை மலைந்து மதில் பற்றின்" என்னும் தொடரோடு அத் தெவ்வர் என இயைத்தல் வேண்டும். திருந்தின்று - திருந்திற்று. (எ௫)

௧0௫. வயிரவரை கண்விழிப்ப போன்றுமழை யுகளும்
வயிரமணித் தாழ்க்கதவு வாயின்முக மாக
வயிரமணி ஞாயின்முலை வான்பொற்கோடிக் கூந்தல்
வயிரக்கிடங் காடைமதிற் கன்னியது கவினே.

(இ - ள்.) வயிரம் அணி ஞாயில் முலை - வயிரப்பூண் அணிந்த ஞாயிலாகிய முலையினையும்; வான் பொன்கொடிக் கூந்தல் - வானளாவும் பொற்கொடியாகிய கூந்தலினையும்; கிடங்கு வயிர ஆடை - அகழியாகிய வயிரம்போன்ற வெள்ளிய ஆடையினையும் உடைய; மதிற் கன்னியது கவின் - மதிலாகிய கன்னியின் அழகு; வயிரவரை கண்விழிப்ப போன்று மழை உகளும் வயிரமணித் தாழ்க்கதவு வாயில் முகமாக - வயிர மலைகள் கண் விழிப்பன போன்ற, முகில் புரளும், வயிரமணிகள் இழைத்த தாழ்பொருந்திய கதவுகளையுடைய நாலு வாயிலும் நாலு முகமாக (அமைந்தது.)

(வி - ம்.) 'வரைகள் கண்விழிப்பன போன்று கதவையுடைய' என வினைக்குறிப்பொடு முடிந்தது. மழை உகளும் வாயில் எனவே கோபுரமாம். ஞாயில் : புழையின் வழியே பகைவர்மேல் அம்பை எய்து மறையும் 'சூட்டு' என்னும் உறுப்பு. ["'கன்னி கவினது' என மாறுக; அஃது இடப்பொருளுணர்த்திற்று" என்பர் நச்சினார்க்கினியர்.]

இனி, ஆக என்பதை எங்குங் கூட்டி, மதில் இன்னது இன்னதாகக் கவினிடத்தது என்றும் ஆம். மதிலில் இன்னது ஆகையினாலே அம் மதிற் கன்னியதாயிருக்கும் அழகு என்றுமாம். (எ௬)

அக நகர்

௧0௬. செம்பொன்மழை போன்றடிதோ றாயிரங்கள் சிந்திப்
பைம்பொன்விளை தீவினிதி தடிந்துபலர்க் கார்த்தி
யம்பொனிலத் தேககுடி யகநகர மதுதா
னும்பருல கோப்பததன் றன்மைசிறி துரைப்பாம்.

(இ - ள்.) பைம்பொன்விளை தீவில் நிதி தடிந்து - புதிய பொன் விளையுந் தீவில் நிதியை வெட்டி; செம்பொன் மழை போன்று அடிதொறு - செம்பொன்னை மழைபோன்று அடிக்கடி சிந்தி; பலர்க்கு ஆயிரங்கள் ஆர்த்தி - பலர்க்கும் பல ஆயிரங்களைக் கொடுத்து நிறைவித்தலாலே; அம் பொன் நிலத்து ஏகு குடி அகநகரம் அது - மறுமையில் வானுலகத்திலே செல்லுங்

குடியையுடைய உள்நகரமான அது; உம்பர் உலகு ஒப்பது - (நுகர்ச்சியினல்) வானுலகைப் போன்றது. அதன் தன்மை சிறிது உரைப்பது - அதன் தன்மை (முற்றும் உரைத்தற் கரிதாயினும்) சிறிது கூறுவாம்.

(வி - ம்.) ஆர்த்தி: ஆர்த்ததால் எனத் திரிக்க.

இச் செய்யுள் மிக மிக ஆழ்ந்த கருத்துடையது. தாம் வருந்தி ஈட்டிப் பிறர்க்கு ஊட்டுவோராகிய அறக்குடிகளே நிறைந்த நகரம் என்பார், தீவின்நிதி தடிந்து பலர்க்கு ஆர்த்தி என்றார். இம்மைச் செய்தது மறுமைக் காமெனும் நினைவோடு ஆர்த்துவார் அல்லர் ஆயினும் காரணம் காரியத்தைப் பயந்தேவிடுதல் ஒருதலையாகலின், அம்பொனிலத்தே ஏகு குடி நகரம் என்றார். அந்நகரத்தே உறைவோர் உம்பருலகத்தை விரும்பவும் வேண்டா என்பார், அது சான் உம்பருல கொப்பது என்றார். வள்ளன்மையான் உம்பர் உலகிதனை ஒவ்வாது இந்நகர் நுகர்ச்சியால் அதனை ஒக்கும் என்பது கருத்து. அத்தகையதாகலின் முற்றக் கூறவியலாது என்பார் சிறிதுரைப்பாம் என்றார். (எஎ)

பரத்தையர் சேரி

வேறு

கo௭. துப்புறழ் தொண்டைச் செவ்வாய்த் தோழியர் காமத்தூதி
ஞெப்பவோன் ருதி யாக வாயிரத் தோரெட் டீருச்
செப்பித்தஞ் செம்போ னல்கு னலம்வரை வின்றி விற்கு
முப்பமை காமத் துப்பி னவரிட முரைத்து மன்றே.

(இ - ள்.) துப்பு உறழ் தொண்டைச் செவ்வாய்த் தோழியர் காமத் தூதின் - பவளம் அனைய தொண்டைச் செவ்வாயராகிய தோழியரென்னும் காமத்தை விளைவிக்குந் தூதினலே; செம்பொன் ஒன்று ஆதியாக ஆயிரத்தெட்டு ஈருஒப்பச் செப்பி - செம்பொன் ஒன்றுமுதல் ஆயிரத்தெட்டு இறுதியாக் வந்தவனுக்கு ஒப்ப விலை கூறி; தம் அல்குல் வரைவின்றி விற்கும் - தம் அல்குலை அன்பு வேறுபாடின்றி விற்கும்; உப்புஅமை காமத் துப்பின் அவர் இடம் உரைத்தும் - உவர்ப்பில்லாத காமநுகர்ச்சியையுடைய பரத்தையரின் இருப்பிடத்தைக் கூறுவோம்.

(வி - ம்.) தொண்டை: வாய்க்கு அடை. நலம் வரைவு இன்றி - அன்பு நிலைபெறுதல் இன்றி. 'உப்புடைய முந்நீர்' (சீவக. உ௮0) என்றார் உவர்ப்பிற்கு. உப்பு - இனிமையும் ஆம். இனி உவமைத் தொகையாக்கி, இதற்கு இஃது அளவென்று உப்பிடு மாறுபோலக் கொடுக்கும் பொருளளவான அன்பென்றும் உரைப்ப. துப்பை யொக்கும் தொண்டை போலும் செவ்வாய் என இரண்டு உவமையும் செவ்வாயை நோக்குதலின், அடுத்து வரலுவமையன்று.

உப்பமை காமம் - உவர்ப்பில்லாத காமம் என்ற பொருளுக்கு அமைதல் நீங்கி நிற்றல். துப்பு - நுகர்ச்சி.

கணிகையர்க்குக் கொடுக்கும் பொருளின் அளவினை "ஒன்று முதலாக ஓரெட்டிறுத்த ஆயிரங்காறும் என ஆத்த பரிசம்" (பெருங். கஙடு: அந-ச) என்றும், "நூறுபத்தடுக்கி யெட்டுக் கடைநிறுத்த வீறுயர் பசும்பொன்" (சிலப். ந-ககசு.) என்றும் பிற சான்றோரும் கூறுதல் அறிக. (எஅ)

க0அ. குங்கும மெழுகிச் சார்வுந் திண்ணையுங் குயிற்றி யுள்ளாற்
றங்குமென் சாந்தத் தோடு தாமமுந் தாழ நாற்றி
யெங்குநற் சுவர்க டோறு நாடக மெழுதி யேற்பப்
பொங்குமென் மலர்பெய் சேக்கை பொலிந்துவிண் புகற்சி யுண்டே.

(இ - ள்.) சார்வும் திண்ணையும் குயிற்றிக் குங்குமம் மெழுகி - சார்ந்திருக்கும் இடத்தையும் திண்ணையையும் இயற்றிக் குங்குமத்தாலே மெழுகி; உள்ளால் தங்கும் மென் சாந்தத்தோடு தாமமும் தாழ நாற்றி - உட்புறமெல்லாம் மெழுகின சந்தனத்திலே மாலையையும் தாழுமாறு தூக்கி; எங்கும்நல் சுவர்கள் தோறும் நாடகம் எழுதி - அழகிய சுவர்களெங்கும் காமக்குறிப்புப்பட நாடகம் எழுதி; ஏற்பப் பொங்கும் மென்மலர் பெய் சேக்கை பொலிந்து - தகுதியாக மிக்க மெல்லிய மலர்பெய்த அணை பொலிந்து; விண் புகற்சி உண்டு - விண்ணை விரும்பச் செய்யும் இயலுடையது அச்சேரி.

(வி - ம்.) விண் : ஆகுபெயரால் தேவரைக் குறித்து நின்றது- தேவமகளிரை நுகரும் தேவரும், அவரை வெறுத்து இவரை விரும்பப் பண்ணும் இடம் என்றவாறு. அவிநயத்தானும் மெய்ப்பாட்டானும் காமக்குறிப்புத் தோன்ற வரையப்பட்ட நாடகம் என்க. நாடகம் எழுதி என்றதனுல் ஓவியம் என்பது பெற்றாம். (எக)

க0கூ. தூசுசூழ் பரவை யல்குல் சுமக்கலா தென்ன வீழ்த்த
காசுசூழ் கோவை முத்தங் கதிர்முலை திமிர்ந்த சாந்தம்
வாசநற் பொடிகண் மாலை வண்டுண வீழ்ந்த முற்ற
மாசைப்பட் டரசுவைக வருங்கடி கமழு மன்றே.

(இ - ள்.) தூசுசூழ் பரவை அல்குல் சுமக்கலாது என்ன - ஆடை சூழ்ந்த பரந்த அல்குல் சுமக்கமாட்டாது என்று; சூழ் கோவை வீழ்த்த காசு முத்தம் - அவ்வல்குலைச் சூழ்ந்த கோவை சிந்திய மணிகளும் முத்துக்களும்; கதிர்முலை திமிர்ந்த சாந்தம் - ஒளிவிடும் முலையிற் பூசிய சந்தனமும்; வாசநற் பொடிகள் - மணமிகு சுண்ணப்பொடியும்; மாலை - மாலையும் ஆகிய இவைகள்; வண்டு உண வீழ்ந்த முற்றம் - வண்டுகள் உண்ணுமாறு வீழ்ந்து கிடக்கும் முற்றங்கள்; அரசு ஆசைப்பட்டு வைகும் அருங்கடி கமழும் - அரசும் விரும்பித் தங்குமாறு நன்மணம் பரப்பும்.

ககo. அஞ்சிலம் பொலியோ டல்குற் கலையொலி யணிந்த முன்கைப்
பஞ்சிமெல் விரலிற் பாணி பண்ணொலி பவழச் செவ்வாய்
யஞ்சிநேர்ந் துயிர்க்குந் தேன்சோர் குழலொலி முழவினோசை
துஞ்சலி லோசை தம்மாற் றுறக்கமும் நிகர்க்க லாதே.

(இ - ள்.) அம் சிலம்பு ஒலியோடு - அழகிய சிலம்பொலி யுடன்; அல்குல் கலையொலி - அல்குலில் அணிந்த மேகலையின் ஒலியும்; முன்கை அணிந்த பஞ்சி மெல்விரலில் பாணி - முன்பு சேடியர் கையினால் செம்பஞ்சணிந்த மெல்லிய விரலால் எழுப்பும் யாழொலியும்; பவழச் செவ்வாய் பண்ஒலி - பவழமனைய சிவந்த வாயினால் எழுப்பும் பாட்டொலியும்; பவழச் செவ்வாய் அஞ்சி நேர்ந்து உயிர்க்கும் தேன்சேர் குழல்ஒலி - பவழச் செவ்வாய் பொருந்துதற்கு முதலில் அஞ்சினும் பொருந்தியபின் நேர்ந்து ஊதும் தேனனைய இனிமை பொருந்திய குழல் ஒலியும்; முழவின் ஓசை துஞ்சல்இல் ஓசை தம்மால் - முழவின் ஒலியும் ஆகிய நீங்கா ஒலிகளாலே; துறக்கமும் நிகர்க்கலாது - (இச் சேரிக்கு) வானுலகும் ஒவ்வாது.

(வி - ம்.) செவ்வாயை முன்னும் பின்னும் பண் என்பதனோடும் குழல் என்பதனோடும் கூட்டுக. (அக)

கககக. தேனுலா மதுச்செய் கோதை தேம்புகை கமழ வூட்ட
வானுலாஞ் சுடர்கண் மூடி மாநக ரிரவு செய்யப்
பானிலாச் சோரிந்து நல்லார் அணிகலம் பகலைச் செய்ய
வேனிலான் விழைந்த சேரி மேலுல கனைய தோன்றே.

(இ - ள்.) தேன்உலாம் மதுச்செய் கோதை தேம்புகை கமழ ஊட்ட - வண்டுகள் உலவும் தேன்பொருந்திய மாலைக்கு நறும்புகையைக் கமழுமாறு ஊட்டுதலால்; வான்உலாம் சுடர்கள் மூடி மாநகர் இரவு செய்ய - வானில் உலவும் ஞாயிற்றின் கதிர் களை மறைத்து மாநகரிற் பகலிலேயே இரவை உண்டாக்கவும்; நல்லார் அணிகலம் பால்நிலாச் சொரிந்து பகலைச் செய்ய-நல்லார் அணிகலத்தின் மணிகள் பாலனைய நிலவைச் சொரிந்து இரவி லும் பகற்பொழுதை உண்டாக்கவும்; வேனிலான் விழைந்த சேரி மேலுலகு அனையது ஒன்றே - காமன் விரும்பிய அச்சேரி வானுலகு போன்ற தொன்றேயாயிற்று.

(வி - ம்.) ஏகாரம்: தேற்றம். இரவும் பகலும் இன்மையின் துறக்கம் ஒத்தது. இனி, 'பால் - பகுதி, நிலா-ஒளி' என்றும் உரைப்ப; 'நிலாத்தலைத் திகழும் பைம்பூண்' (சீவக. கசுரு0), 'பணிநிலா வீசும் பைம் பொற்கொடி' (சீவக. உருக) என்றாற்போல. (அஉ)

கக௨. இட்டநூல் வழாமை யோடி யோசனை யெல்லை நீண்டு
மட்டுவார் மாலை வேய்ந்த சதுக்கங்கண் மலிந்த சும்மைப்
பட்டமும் பசும்பொற் பூணும் பரந்தொளி நிழற்றுந் தீந்தே
னட்டுந்தா ரணிந்த மார்ப ராவணங் கிளக்க லுற்றேன்.

(இ - ள்.) இட்டநூல் வழாமை ஓடி - பிடித்த நூலின் ஒழுங்கு தவறாமல் கிடந்து; யோசனை எல்லை நீண்டு - யோசனை அளவு நீண்டு; மட்டுவார் மாலை வேய்ந்த - தேன்சொரியும் மாலைகள் வேயப்பட்டு; சதுக்கங்கள் மலிந்த சும்மை - நாற்சந்திகளிலே மிக்க ஒலியினை உடைய; பட்டமும் பசும்பொன் பூணும் பரந்து ஒளிநிழற்றும் தீந்தேன் அட்டும் தார் அணிந்த மார்பர்-தம் தரத்திற்குத் தகப் பட்டமும் புதிய பொற்கலனும் எங்கும் பரவி ஒளி செய்தற்குக் காரணமான; இனிய தேன்சொரியும் (முல்லை)மாலையும் அணிந்த மார்பரான வணிகர் முதலாயினோர் வாழும்; ஆவணம் கிளக்கல் உற்றேன் - அங்காடித் தெருவைக் கூறத் தொடங்கினேன்.

(வி - ம்.) பண்டைக்காலத்தே நகரங்களில் தெருக்களை நூல் பிடித்து ஒழுங்குற அமைக்கும் வழக்கமுண்மை உணர்க. ஆவணம் - அங்காடி ; கடைத்தெரு. (அரு)

ககரு. மணிபுனை செம்பொற் கோட்டை வம்பணி முத்த மாலைக்
கணிபுனை பவழத் திண்காழ் கம்பலக் கிடுகி னூன்றி
யணிநில மெழுகிச் சாந்தி னகில்புகைத் தம்பொற் போதிற்
றிணிநில மணிந்து தேங்கோ ளையவி சிதறி னாரே.

(இ - ள்.) மணிபுனை செம்பொன் கொட்டை வம்புஅணி கணிபுனை பவழம் திண்காழ் - மணி அழுத்தின செம்பொன்னாற் செய்யப்பட்ட கடைமணியை உடைய, கச்சுத் தூக்கின, நூலறிந்த கணிபுனைந்த திண்ணிய பவழக்காம்பை; முத்தமாலைக் கம்பலக் கிடுகின் ஊன்றி-முத்துமாலை புனைந்த கம்பலம் வேய்ந்த சட்டத்திலே பொருத்தி ஊன்றி; அணிநிலம் சாந்தின் மெழுகி - அழகிய இடத்தைச் சாந்தினாலே மெழுகி; அகில் புகைத்து - அகிற்புகை ஊட்டி; திணிநிலம் அம்பொன் போதின் அணிந்து - கற்படுத்த நிலத்தைப் பொன்மலரால் அணிந்து; தேம்கொள் ஐயவி சிதறினர் - தெய்வம் இனிதாகக்கொண்ட வெண்சிறு கடுகைத் தூவினர்.

(வி - ம்.) கணி - நூல் தேர்ந்தவன். அவன் புனைந்த காழ். திணிநிலம் - உறுதி செய்த நிலம். தேம்கொள் ஐயவி - தெய்வங்கள் இனிதாகக்கொண்ட வெண்சிறு கடுகு.

வம்பு - கச்சு. கொட்டை - உருண்டை வடிவமானது. காழ் - காம்பு. கிடுகு-சட்டம். முத்தமாலை புனைந்த கிடுகு எனக் கூட்டுக. (அச)

கககச. பொன்சொரி கதவு தாளிற் றிறந்துபொன் யவனப் பேழை
மின்சொரி மணியு முத்தும் வயிரமுங் குவித்துப் பின்னு
மன்பெரும் பவழக் குப்பை வாலணி கலஞ்செய் குப்பை
நன்பக லிரவு செய்யு நன்கலங் கூப்பி னாரே.

(இ - ள்.) பொன் சொரி கதவு தாளின் திறந்து - பொன் தானே சொரிதற்குக் காரணமான கதவைத் தாழ்க்கோலால் திறந்து; பொன் யவன பேழை - யவனர் செய்த பொற்பேழையிலிருந்து; மின்சொரி மணியும் முத்தும் வயிரமும் குவித்து - ஒளிவிடும் மணி முத்து வயிரம் ஆகியவற்றைக் குவித்து; பின்னும் - மேலும்; மன்பெரும் பவழக் குப்பை-மிகப் பெரிய பவளத் திரள்களையும்; வால் அணிகலம் செய்குப்பை -(முற்றுறாத) தூய அணிகலக் குவியல்களையும்; நன்பகல் இரவு செய்யும் நன்கலம் கூப்பினர் - நல்ல பகற்போதை இரவாக்கும் நீலமணிக்கலன்களையும் குவித்தனர்.

(வி - ம்.) நன்பகல் - கடும்பகல். (அ௫)

ககரு. விழுக்கலஞ் சொரியச் சிந்தி வீழ்ந்தவை யெடுத்துக் கொள்ளா
வொழுக்கின ரவர்கள் செல்வ முரைப்பரி தொழிக வேண்டா
பழுக்குலைக் கமுகுந் தெங்கும் வாழையும் பசும்பொன் னாலு
மெழிற்பொலி மணியி னாலுங் கடைதோறு மியற்றி னாரே.

(இ - ள்.) விழுக்கலம் சொரியச் சிந்தி வீழ்ந்தவை எடுத்துக் கொள்ளா ஒழுக்கினர் - சிறந்த அணிகலன்களைச் சொரியும் போது சிதறி விழுந்தவற்றை எடுத்துக்கொள்ளாது வாழ்வினர்; பழுக்குலைக் கமுகும் தெங்கும் வாழையும் - பழுத்த குலைகளையுடைய கமுகையும் தென்னையையும் வாழையையும்; பசும்பொன்னாலும் எழில்பொலி மணியினாலும் - புதிய பொன்னாலும் அழகு மிக்க மணிகளாலும்; கடைதொறும் இயற்றினர் - கடைகளையெல்லாம் அணிசெய்வித்தனர். (ஆதலால்); அவர்கள் செல்வம் உரைப்பரிது; வேண்டா ஒழிக-அவர்களுடைய செல்வச் சிறப்பு என்றால் உரைத்தலரிது; நீவிரும் கேட்க விரும்பவேண்டா; ஒழிக.

ககசு. மூசுதே னிருலின் மூச மொய்திரை யியம்பி யாங்கு
மோசையே னுணரி னல்லா லெழுத்துமெய் யுணர்த லாகாப்
பூசுசாந் தொருவர் பூசிற் றெழுவர்தம் மகலம் பூசி
மாசன மிடம்பெ றாது வண்கடை மலிந்த தன்றே.

(இ - ள்.) மா சனம் இடம் பெறாது - மிகுதியான மக்கள் திரள் போக்கிடம் பெறாமல்; பூசு சாந்து ஒருவர் பூசிற்று எழுவர்

தம் அகலம் பூசி - நன்கு இயற்றிய சந்தனம் ஒருவர் மார்பிற் பூசியது எழுவர் மார்பிலே பூசுறுமாறு; இறால் மூசு தேனின் மூச - தேன்கூட்டில் மொய்க்கும் வண்டுகளைப்போல நெருங்க; மொய்திரை இயம்பி யாங்கும்-(ஆங்குப் பிறந்த ஓசையும்) நெருங்கிய கடலலைபோலவும் ஒலித்து; ஓசை என்று உணரின் அல்லால் எழுத்து மெய் உணர்தல் ஆகா - ஒலியென்று உணர்தலன்றி எழுத்தின் உருவம் உணர இயலாமல்; வண்கடை மலிந்தது - வள மிகுங் கடைத்தெரு மலிவுற்றது.

(வி - ம்.) யாங்கும்: உம்: சிறப்பு. 'ஓரோசையும்' பாடம். பூசி - பூச.

நான்கு சாதியும் அநுலோமப் பிரதிலோமரும் சங்கர சாதியும்பற்றி 'எழுவர்' என்றார் என்பர் நச்சினார்க்கினியர். எழுவர் என்றது பன்மை பற்றி வந்ததென்பதே தக்கது. (௮௭)

௧௧௭. மெய்யணி பசும்போற் 'சுண்ண மேதகு நான நீரி
ஊனதுபட் டொழுகி யானை யழிமதங் கலந்து சேறாய்ச்
செய்யணி கலன்கள் சிந்தி மாலையு மதுவு மல்கி
வெய்தடி யிடுதற் காகா வீதிகள் விளம்ப லுற்றேன்.

(இ - ள்.) மெய்அணி பசும்பொன் சுண்ணம் - மெய்யில் அணிந்து மிகுந்த புதிய நல்ல சுண்ணப்பொடி; மேதகு நானம் நீரின் ஐதுபட்டு ஒழுகி - உயர்ந்த புழுகாலும் பனிநீராலும் இளகுதலுற்றுத் தெருவில் ஒழுகுவதால்; யானை அழிமதம் கலந்து - (அதனுடன்) யானையின் மிகுமத நீருங் கலந்து; மாலையும் மதுவும் மல்கி - மாலையும் தேனும் நிறைந்து; சேறாய் - சேறாகி; செய் அணிகலன்கள் சிந்தி - அருமையாகச் செய்த அணிகலன்களும் சிந்தி; வெய்து அடி இடுதற்கு ஆகா வீதிகள் - விரைய அடி யிடுதற்கு முடியாத தெருக்களைப்பற்றி; விளம்பலுற்றேன் - கூறத் தொடங்குகின்றேன்.

(வி - ம்.) அணி சுண்ணம்: 'உண்ட (பின் மிகுந்த) சோறு'போல் நின்றது; மிச்சில் கவிழ்த்தல் மரபு. மாலையினும் கலத்தினும் தீண்டுதற்கு அடி நாணிற்று, தமது நலத்தான்.

இவை பீடிகைத் தெருவொழிந்தன. (௮௮)

வேறு

௧௧௮. முழவணி முதுநகர் முரசோடு வளைவிம
விழவணி மகளிர்தம் விரைகமழ் இளமுலை
யிழையணி யொளியிள வெயில்செய விடுபுகை
மழையென மறைவின போலிவின தொருபால்.

(இ - ள்.) முழவு அணி முதுநகர் முரசொடு வளை விம - முழவொலி மிகுத்த கோயில்களில் முரசும் சங்கும் ஒலிப்பதால்; விழவு அணி மகளிர் தம் விரைகமழ் இளமுலை - அவ் விழவிற்கு அணிந்துகொண்ட மகளிரின் மணங்கமழும் இளமுலையில்; அணி இழை ஒளிஇள வெயில்செய - அணிந்த பூண்களின் ஒளி இள வெயிலை உண்டாக்கும்படி; இடுபுகை மழைஎன மறையின பொலி வினது ஒருபால் - (கோயில்களில்) இடுகின்ற புகை முகிலென ஞாயிற்றை மறைத்த பொலிவினையுடையது ஒரு பக்கம்.

(வி - ம்.) கதிரவன் ஒளியிருப்பின் இழைஒளி தோன்றாது.

விம - விம்ம; ஒலிப்ப. இச் செய்யுளின்கண் முகில் மின்னலோடு இடியும் உடையதாய் வந்து ஞாயிற்றை மறைப்பதுபோல புகை முழவு முதலியவற்றின் ஒலியோடு அணிகலன் மின்ன ஞாயிற்றை மறைத்த தென்றமை யுணர்க. (அக)

கககூ. குடையொடு குடைபல களிறொடு நெரிதர
வுடைகட லொலியினொ டுறுவரர் பலிசெல
முடியொடு முடியுற மிடைதலின் விடுசுடர்
கொடியுடை மழைமினிற் குலவிய தொருபால்.

(இ - ள்.) பல குடையொடு குடை களிறொடு (களிறு) நெரிதர - பல குடையுங் குடையும் களிறுங் களிறும் நெருங்கி; உடைகடல் ஒலியினொடு உறுவரர் பலிசெல - உடைகடல் ஒலி போலும் ஒலியினுடன் தேவர்களின் பூசனை நடத்தலால்; முடியொடு முடியுற மிடைதலின் விடுசுடர் - (அதனைச் சேவிக்கும் அரசரின்) முடியும் முடியும் நெருங்குதலால் எழும் ஒளி; மழை கொடியுடை மினின் குலவியது ஒருபால் - முகிலிடை யெழும் கொடிபோன்ற மின்போற் குலவியது ஒரு பக்கம்.

(வி - ம்.) இது செல்வமுண்டாதற்குப் பலி நடக்கும் என்றார். இனிப், பலி நடத்தலிற் குடை முதலியன நெரிதர முடிநெருங்கிற் றென்றுமாம். (கூ0)

கஉ0. பூத்தலை வாரணப் போர்த்தொழி லிளையவர்
நாத்தலை மடிவிளிக் கூத்தொடு குயில்தரக்
காய்த்துறு தமனியத் துகளொடு கடிகமழ்
பூத்துகள் கழுமிய பொலிவின தொருபால்.

(இ - ள்.) பூத்தலை வாரணம் போர்த்தொழில் இளையவர் - தோன்றிப் பூவனைய சூட்டையுடைய கோழிப்போரின் வெற்றியைத் தமதாகவுடைய இளைஞர்கள்; நாத்தலை மடிவிளிக் கூத்தொடு குயில்தர - நாவினை மடித்து ஒலிக்கும் சீழ்க்கைக் கூத்தொடு நெருங்குதலால்; காய்த்துறு தமனியத் துகளொடு - (அப்

பொழுது சிந்துகின்ற) பொற்றுகளோடு; கடிகமழ் பூந்துகள் கழுமிய பொலிவினது ஒருபால் - மணங்கமழும் மலர்த்துகளும் கலந்த பொலிவுடையது ஒரு பக்கம்.

(வி - ம்.) விளியெனினும் சீழ்க்கையெனினும் வீளையெனினும் ஒக்கும். காய்த்துறு - காய்ச்சலுற்ற. (கூக)

கஉக. மைந்தரோ டூடிய மகளிரை யிளையவ
ரந்துகில் பற்றலின் காசரிந் தணிகிளர்
சுந்தர நிலமிசைச் சோரிதலின் மின்னணிந்
திந்திர திருவிலி னெழிலின தொருபால்.

(இ - ள்.) மைந்தரொடு ஊடிய மகளிரை இளையவர் அம்துகில் பற்றலின் - கணவருடன் பிணங்கிய மகளிரின் அழகிய துகிலை அக்கணவர் பற்றும்போது; காசு அரிந்து அணிகிளர் சுந்தர நிலமிசைச் சொரிதலின் - காசு கோவையற்று அழகிய நலம் நிறைந்த நிலத்தில் சிந்துதலின்; மின் அணிந்து இந்திர திருவிலின் எழிலினது ஒருபால் - ஒளிகொண்டு வானவில்லின் அழகினையுடையது ஒரு பக்கம்.

(வி - ம) நிலமிசை என்பதனை 'நீலம் விசை' என்று நச்சினார்க்கினியர் பாடம் கொண்டனர் என்பது அவருரையான் விளங்கும். (கூஉ)

கஉஉ. வளையறுத் தனையன வாலரி யமைபத
மளவறு நறுநெயோ டடுகறி யமைதுவை
விளைவமை தயிரோடு மிசைகுவிர் விரையுமி
னுளவணி கலமேனு முரையின தொருபால்.

(இ - ள்.) வளை அறுத் தனையன வால்அரி அமைபதம் - சங்கை நுண்ணிதாக அறுத்தாற்போன்ற வெள்ளிய அரிசியால் அமைத்த சோற்றையும்; அளவறு நறுநெயொடு அடுகறி - அளவற்ற நல்ல நெய்யாற் சமைத்த கறியையும்; விளைவு அமை தயிரொடு அமைதுவை - முற்றிய தயிரால் அமைத்த துவையினையும்; மிசைகுவிர் விரையுமின் - உண்பதற்கு விரைந்து செல்லுமின்; அணிகலம் உள எனும் உரையினது ஒருபால் - (உண்டபின் தருதற்கு) அணிகலன்களும் உள்ளன என்னும் மொழியினையுடையது ஒரு பக்கம்.

(வி - ம்.) தயிரொடு: ஒடு: எண்ணுப்பொருளில் வந்த 'ஒடு'வும் ஆம். 'வாலவிழும்' என்றும் பாடம்.

அந்நகரத்து மக்கள் தம்மனையில் விருந்துண்போர்க்குக் கூலியும் கொடுக்கும் மாண்பினர் என்பது போதர 'உள அணிகலனும்' என்றார். (கூங)

கஉ௩. வரைநிரை யருவியின் மதமிசை சோரிவன
புரைநிரை களிறெடு புனைமணி யியறேர்
விரைநிரை யிவுளியோ டிளையவர் விரவுபு
குரைநிரை குளிர்புனல் யாற்றின தொருபால்.

(இ - ள்.) வரைநிரை அருவியின் மதம்மிசை சோரிவன - மலையிலிருந்து வீழும் ஒழுங்கான அருவியைத் தம்மேலே சொரிந்து கொள்வனபோல மதத்தை மேலே சொரிவனவாகிய; புரைநிரை களிறொடு - உயர்ச்சியுறும் களிற்றோடும்; புனைமணி இயல்தேர் விரைநிரை இவுளியொடு - மணிபுனைந்த தேரிற் பூட்டினால் விரைந்து செல்லும் குதிரைகளோடும்; இளையவர் விரவுபு - இளைஞர்கள் கலந்து; குரைநிரை குளிர்புனல் யாற்றினது ஒரு பால் - ஒலியுடன் நிரைத்த குளிர்ந்த நீர்செல்லும் யாறுடையது ஒரு பக்கம்.

(வி - ம்.) அருவிபோல் வீழ்கின்ற மதமென்பாரும் உளர். 'மிகை' என்றும் பாடம். (கச)

கஉச. வரிவளை யரவமும் மணிமுழ வரவமு
மரிவளர் கண்ணிய ரணிகல வரவமும்
புரிவளர் குழலொடு பொலிமலி கவினிய
திருவிழை கடிமனை திறவிதின் மொழிவாம்.

(இ - ள்.) வரிவளை அரவமும் - சங்கொலியும்; மணிமுழவு அரவமும் - முழவொலியும்; அரிவளர் கண்ணியர் அணிகல அரவமும் - செவ்வரி பரவிய கண்ணினருடைய பூண்களின் ஒலியும்; புரிவளர் குழலொடு - நரம்பிடத்து இசைவளர்தற்குக் காரணமான குழலொலியொடு; பொலிமலி கவினிய திருவிழை கடிமனை திறவிதின் மொழிவாம் - பொலிவுமிக்க அழகுடைய செல்வம் நிறைந்த மனைகளைப் பற்றிச் செவ்விதாகக் கூறுவோம்.

(வி - ம்.) புரிவளர் குழல் - நரம்பிடத்து இசை வளர்தற்குக் காரணமாகிய குழல். 'குழல்வழி யாழெழீஇத் தண்ணுமைப் பின்னர் - முழவியம்ப லாமந் திரிகை' (கூத்தநூல்.) புரி - விருப்பமுமாம்.

இஃது அரசற்குரியவர் இருப்பு. (கரு)

வேறு

கஉரு. பாவை யன்னவர் பந்து புடைத்தலிற்
றாவி யன்னம் வெரீஇத்துணை யென்றுபோய்க்
கோவை நித்தில மாடக் குழாமிசை
மேவி வெண்மதி தன்னொ டிருக்குமே.

(இ - ள்.) பாவை அன்னவர் பந்து புடைத்தலின் - பாவையனைய மகளிர் பந்தடித்தலின்; தூவி அன்னம் வெரீஇப்போய் - தூவியையுடைய அன்னப்பறவை அஞ்சி யோடி; கோவை நித்திலம் மாடம் குழாமிசை - முத்துமாலை புனைந்த மாடத்திரளின் மேலே; வெண்மதி தன்னொடு துணையென்று மேவி யிருக்கும் - வெள்ளிய திங்களைத் துணையென்று கருதி அதனுடன் இருக்கும்.

(வி - ம்.) [மதி இயங்குந்தோறும் தானும் இயங்கிற்று. என்பது குறிப்பு.] (கசு)

கஉசு. திருவந் நீணகர்ச் செம்பொனி னீடிய
வுருவ வொண்கொடி யூழி னுடங்குவ
பரவை வெங்கதிர்ச் செல்வன பன்மயிர்ப்
புரவி பொங்கழ லாற்றுவ போன்றவே.

(இ - ள்.) திருவ நீள்நகர் செம்பொனின் நீடிய உருவ ஒண் கொடி ஊழின் நுடங்குவ - அத்தகைய செல்வம் நிறைந்த நீண்ட மனைகளில், செம்பொன்னாலாகிய நீண்ட அழகிய ஒளிமிகுங் கொடிகள் முறையால் அசைவன; பரவை வெங்கதிர்ச் செல்வன பன்மயிர்ப் புரவி பொங்கு அழல் ஆற்றுவ போன்ற - பரவிய வெப்பமான கதிர்களையுடைய ஞாயிற்றினுடைய குதிரைகளின் வெப்பந் தவிர்ப்பன போன்றன.

(வி - ம்.) பரவை - பரத்தல்.

இதனால் அந்நகரத்து மாந்தர்போன்று அந்நகரமும் தன்பால் வந்த விருந்தினை உபசரிக்கும் பண்பு உடைத்தாதல் கூறப்பட்டது. இது தற்குறிப்பேற்றம். (கஎ)

கஉஎ. இழைகொள் வெம்முலை யீர முலர்த்துவார்
விழைய வூட்டிய மேதகு தீம்புகை
குழைகொள் வாண்முகஞ் சூழ்குளி ரங்கதிர்
மழையுண் மாமதி போன்மெனத் தோன்றுமே.

(இ - ள்.) விழைய இழைகொள் வெம்முலை ஈரம் உலர்த்துவார் - கணவர் விழைய இழையணிந்த விருப்பமூட்டும் முலைகளிலே கணவர் பூசிய சந்தனம் முதலியவற்றின் ஈரத்தை உலர்த்தும் மகளிர்; ஊட்டிய மேதகு தீம்புகை சூழ் - ஊட்டிய மேம்பட்ட இனிய புகை சூழ்ந்த; குழைகொள் வாள்முகம் - குழையணிந்த ஒளிமிகு முகம்; மழையுள் குளிர் அம்கதிர் மாமதி போன்ம் எனத் தோன்றும் - முகிலுட் குளிர்ந்த அழகிய கதிரையுடைய முழுமதி போலும் எனக் காணப்படும்.

(வி - ம்) உலர்த்துவார்: தொழிற்பெயர் [வினையாலணையும் பெயர்.]

புகைசூழ் முகம் மழையுள் மாமதிபோலத் தோன்றும் என்க. (கஅ)

கஉஅ. செம்பொற் கண்ணி சிறூர்களெறிந் திட்டவு
மம்பொன் மாலை யவிழ்ந்துடன் வீழ்ந்தவுந்
தம்பொன் மேனி திமிர்ந்ததண் சாந்தமும்
வம்புண் கோதையர் மாற்றும் மயலரோ.

(இ - ள்.) தம் அம்பொன் மாலை அவிழ்ந்து உடன் வீழ்ந்தவும் - (மகளிர்) தம் அழகிய பொன்மாலை கூந்தலவிழ்ந்து சோர்வதினால் வீழ்ந்தவும்; பொன்மேனி திமிர்ந்த தண் சாந்தமும் - அழகிய மெய்யிலே திமிர்ந்த குளிர்ந்த சந்தனமும்; செம்பொன் கண்ணி சிறூர் களைந் திட்டவும் - சிறுவர் களைந்திட்ட செம்பொன் கண்ணியும்; வம்புஉண் கோதையர் மாற்றும் மயல் - சேடியர் மாற்றும் குப்பைகள்.

(வி - ம்.) ஏவற் சிலதியர் என்பது தோன்ற 'வம்புஉண் கோதையர்' என்றார். வம்பு - புதுமை. புதுமையை நுகர்ந்து கழித்த மாலையையுடையர் என்பது கருத்து. எனவே, சிலதியர் என்பதாயிற்று. இதனோடு,

"கொடுப்போர் வீழ்த்த குங்குமக் குழையலும், தொடுப்போர் வீழ்த்த தூவெள்ளலரும்,......வேள்விச் சமிதையும்......வாசச் சுண்ணமும்...... கலவைச் சாந்தமும்......புதுப் பூமாலையும்......சிறூஅர் வீழ்த்த செம்பொற் கண்ணியும்.........காட்டு (மயல்) எனக் கமர்ந்து கூட்டுநர்" (உ. உ: கஉ-கoஉ) எனவரும் பெருங்கதைப் பகுதியை ஒப்புக் காண்க. "கண்டுகை விட்டமயல்" (நாலடி. சுங.) என்றார் பிறரும். (கஉஅ)

கஉகூ. வேரி யின்மெழுக் கார்ந்தமென் பூநிலத்
தாரி யாகவஞ் சாந்தந் தளித்தபின்
வாரி நித்திலம் வைப்பபொற் பூவொடு
சேரி தோறிது செல்வத் தியற்கையே.

(இ - ள்.) இன்மெழுக்கு ஆர்ந்த வேரி-நாற்றமும் தோற்றமும் இனியவற்றால் மெழுகிய மெழுக்கு ஆர்ந்த மணத்தையுடைய; மென்பூ நிலத்து - மென்மையான பூநிலத்திலே; ஆரிஆக அம் சாந்தம் தளித்தபின் - அழகாகத் தொழில்படச் சாந்தைப் பூசிய பின்பு; பொன் பூவொடு வாரி நித்திலம் வைப்ப - பொற்பூவுடன் கடல்முத்தையும் வைப்பார்கள்; சேரிதோறு இது செல்வத்து இயற்கை - சேரிதோறும் செல்வத்தின் இயற்கை, இத்தன்மைத்து.

(வி - ம்.) அரி - ஐம்மை; 'அரி' 'ஆரி' என்றாயது விகாரம். ஆரி - அழகென்றுமாம். ஆரியாக - மேலாக என்றுமாம். மேலும், 'தளித்த சுண்ணம்' (சீவக. கங௦) என்ப. வேரி - இருவேரி; வெட்டிவேர்.

கங௦. கருனை வாசமுங் காரிருங் கூந்தலா
ரருமை சான்ற வகிற்புகை வாசமுஞ்
செருமிச் சேந்துகண் ணீர்வரத் தேம்பொழி
லுரிமை கொண்டன வொண்புற வென்பவே.

(இ - ள்.) கருனை வாசமும் கார்இருங் கூந்தலார் அருமை சான்ற அகிற்புகை வாசமும் - பொரிக் கறியினது மணமிகு புகையும், கரிய நீண்ட கூந்தலில் ஆர்ந்த அருமைமிகும் அகிலின் மணப்புகையும்; செருமிச் சேந்து கண்ணீர்வர - நெருங்கிச் சிவந்து கண்ணீர் வருதலாலே; ஒண்புறவு தேம்பொழில் உரிமை கொண்ட - சிறந்த புறக்கள் பொழிலைத் தம் இருக்கையாகக் கொண்டன.

(வி - ம்.) கூந்தலில் ஆர்புகை : வினைத்தொகை. கூந்தலார் : பெயருமாம்.

*கருனை - பொரிக்கறி. வாசம் : மணம். இஃது ஆகுபெயராய் மணமுடைய புகையைக் குறித்தது. அகிற்புகை வாசமும் என்புழி அகில் வாசப்புகையும் என மாறுக. மாடத்தைவிட்டுத் தேம்பொழில் உரிமை கொண்டன என்பது கருத்து.* (கOக)

கஙக. நறையு நானமு நாறு நறும்புகை
விறகின் வெள்ளி யடுப்பினம் பொற்கல
நிறைய வாக்கிய நெய்பயில் இன்னமு
துறையு மாந்தர் விருந்தோடு முண்பவே.

(இ - ள்.) வெள்ளி அடுப்பின் - வெள்ளி அடுப்பிலே; நறையும் நானமும் நாறும் நறும்புகை விறகின் - நறைக்கொடியும் தூவியெரிக்கும் புழுகும் மணக்கும் நல்ல மணமுறு விறகினாலே; அம் பொன்கலம் நிறைய ஆக்கிய நெய் பயில் இன்னமுது - அழகிய பொற்கலத்திலே நிறையச் சமைத்த நெய்கலந்த இனிய சோற்றை; உறையும் மாந்தர் விருந்தொடும் உண்ப - அங்கு வாழும் மக்கள் விருந்தொடும் உண்பார்கள்.

(வி - ம்.) விறகு - சந்தனம் முதலியன.

*விருந்தோடுண்டலே அழகு ஆதலின் மாந்தர் விருந்தொடும் உண்பவே என்றார். எனவே, தம்மில்லிருந்து தாமே உண்டு தம் விலாப்புடைக்கும் புன்செல்வர் ஆண்டிலர் என்பது குறிப்பு ஆயிற்று.* (கOஉ)

கஙஉ. பாளை மென்கமு கின்பழ மெல்லிலை
நீள்வெண் மாடத்து நின்றுகோண் டந்நலா
ராளி மொய்ம்பர்க் களித்தணி சண்பக
நாள்செய் மாலை நகைமுடிப் பெய்பவே.

(இ - ள்.) அம்நலார் நீள்வெண் மாடத்து நின்றுகொண்டு - அழகிய மகளிர் நீண்ட வெண்மையான மாடத்திலே நின்று கொண்டு; மென்கமுகின் பாளைப்பழம் - மெல்லிய கமுகம் பாளையிலிருந்த பாக்கையும்; மெல்லிலை - வெற்றிலையையும்; ஆளி மொய்ம்பர்க்கு அளித்து - (பறித்துக்கொண்டு) ஆளியனைய வலிய ஆட

வர்கட்குக் கொடுத்து; அணி சண்பகம் நாள்செய் மாலை நகை முடிப் பெய்ப - (அவர்கள்) அணிந்த சண்பகத்தின் புதிய மலர் மாலையை வாங்கித் தம் முத்துமாலை சூடிய முடியிலே பெய் வார்கள்.

(வி - ம்.) 'ஆளி மொய்ம்பர் அணிந்திருந்த சண்பகமாலையை வாங்கி நாட்கால மன்றாயினும் வேட்கை மிகுதியால் தமது முடியிலே பெய்வர். இனி, நாட்காலத்தே செய்த சண்பகமாலை அணிந்த முடியிலே அக் காலத்திற்குரிய பூக்களைப் பெய்வர் என்றுமாம்' என்று கூறுவர் நச்சி னார்க்கினியர்.

மணம் மெல்லிய பாளை. வெள்ளிலை பாடமாயின், கொம்பிலே வெளுத்ததாம். நகைமுடி - முத்தமாலை சூடிய முடி. (௧0௩)

௧௩௩. எழுது வாணெடுங் கண்ணிணை யந்நலார்
மெழுகு குங்கும மார்பிடை வெம்முலை
யுழுது கோதையுஞ் சாந்து முவந்தவை
முழுதும் வித்தி விளைப்பர் திளைப்பவே.

(இ - ள்.) எழுதுவாள் நெடுங் கண்இணை அம்நலார் - மை எழுதிய வாளனைய நெடுங் கண்களையுடைய மகளிர்; குங்குமம் மெழுகும் மார்பிடை - கணவருடைய குங்குமம் மெழுகிய மார் பிலே; வெம்முலை உழுது கோதையும் சாந்தும் வித்தித் திளைப்ப- வெம்முலையாலே உழுது கோதையையும் சாந்தையும் விதைத்துத் திளைப்பனவற்றில்; உவந்தவை முழுதும் விளைப்பர்-தாம் விரும் பியவற்றையெல்லாம் விளைப்பார்கள்.

(வி - ம்.) திளைப்பன : [கலவிக்] காரணங்கள். (௧0௪)

௧௩௪. குஞ்சி மேலனிச் சம்மலர் கூட்டுணு
மஞ்சி லோதிய ரம்மலர்ச் சீறடி
மஞ்சு தோய்மணி மாடத்து மல்குபூம்
பஞ்சி மேலும் பனிக்கும் பனிக்குமே.

(இ - ள்.) அனிச்சம் மலர் கூட்டுணும் அம்சில் ஓதியர் அம் மலர்ச் சீறடி - அனிச்ச மலரின் மென்மையைக் கொள்ளை கொண்ட அழகிய சிலவகையான கூந்தலையுடைய மகளிரின் அழகிய மலரனைய சிற்றடி; மஞ்சுதோய் மணிமாடத்து - முகில் தவழும் மணிகளிழைத்த மாடங்களிலே; குஞ்சிமேல் பனிக்கும் - கணவருடைய சிகையின்மேலும் நடுங்கும்; மல்கு பூம்பஞ்சி மேலும் பனிக்கும் - நிறைந்த அழகிய பஞ்சிமேலும் நடுங்கும்.

(வி - ம்.) கோபத்தாலும் கரணத்தாலும் நடுங்கிற்றென ஊடலும் கூடலும் உணர்த்திற்று; 'கொல்புனல் தளிரின் நடுங்குவனள் நின்று' (பதிற். ௬உ) என்றார் பிறரும். நகராதலின் ஊடற்குக் காரணங் கூறு

ராயினர். [நகரிற் பரத்தையர் சேரி உளதாதலின் ஊடல் தோன்றியது. மருதநிலத்தின் உரிப்பொருள் ஊடல்.] 'எஞ்சு பொருட்கிளவி செஞ்சொல் ஆயின் - பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்' (தொல். இடை-நகூ) என்பதனுற் 'குஞ்சிமேலும்' என உம்மை கொடாராயினர். (க0டு)

கநடு. தூம மேகம ழுந்துகிற் சேக்கைமேற்
காம மேநுகர் வார்தம காதலால்
யாம மும்பக லும்மறி யாமையாற்
பூமி மாநகர் பொன்னுல கொத்ததே.

(இ - ள்.) தூமமே கமழும் துகில் சேக்கைமேல் காமமே நுகர்வார் - அகிற்புகை மணக்கும் வெள்ளிய துகிலிடப்பட்ட அணையின்மேற் காமத்தையே துய்ப்பவர்கள்; தம காதலால் யாமமும் பகலும் அறியாமையால் - தங்கள் காதலாலே இரவும் பகலும் அறியாததால்; பூமி மாநகர் பொன்னுலகு ஒத்தது - உலகிடை அந்நகர் பொன்னுலகைப் போன்றது.

(வி - ம்.) தூமமே: ஏகாரம், தேற்றம். காமமே: ஏகாரம், பிரிநிலை. 'யாமத்தும் எல்லையும்' (கலி. கநக) என்றார் பிறரும். 'பூமியின்' 'பூமேன் மாநகர்' என்றும் பாடம். பூ - வடமொழி. (க0சு)

கநசு. அரவு கான்றிட்ட வங்கதிர் மாமணி
யுரவு நீர்முத்து முள்ளுறுத் துள்ளன
விரவன் மாந்தர்க்கு மின்னவை யீவதோர்
புரவு பூண்டனர் பொன்னகர் மாந்தரே.

(இ - ள்.) அரவு கான்றிட்ட அம்கதிர் மாமணி - அரவம் உமிழ்ந்த அழகிய ஒளிதரும் மாணிக்கமும்; உரவுநீர் முத்தும் உள்ளுறுத்து - கடலின் முத்தும் ஆகியவை உட்பட; இரவல் மாந்தர்க்கும் இன்னவை உள்ளன - இரக்கும் மக்களுக்கும் இவை உள்ளவாயின. (ஆதலால்) பொன்னகர் மாந்தரே ஈவதோர் புரவு பூண்டனர் - செல்வமிகும் அந்நகர மக்கள் கொடுக்கும் கொடையை மேற்கொண்டனர்.

(வி - ம்.) 'இரவலரும் இல்லை; கொடுப்பவரும் இல்லை' என்பது குறிப்பு. இஃது இகழ்ச்சி. ஏகாரம்: எதிர்மறை. இனி, இன்னவை இரவல் மாந்தர்க்கும் உள்ளனவாய் இருத்தலிற் பின் மாந்தரே புரவு பூண்டார் என்றது உயிர் உறுப்பு முதலியன கொடுத்தற்குத் துணிந்தார் இவரே என்றுமாம்; ஏகாரம்: தேற்றம்.

இச் செய்யுட்கு, பொருள்களுள் வைத்துக் கிடைத்தற்கரிய அரவு மணியையும் மிக வருந்திக்கொள்வதாகிய நீர்முத்தினையும்கூட இந்நகர மாந்தர் இரவலர்க்கு வழங்குவர் என்பது கருத்தாகக்கோடல் அமைவதாம். (க0எ)

கஈஎ. முல்லை யங்குழ லார்முலைச் செல்வமு
மல்லன் மாநகர்ச் செல்வமும் வார்கழற்
செல்வர் செல்வமும் காணிய வென்பர்போ
லெல்லி யும்மிமை யாரிமை யாததே.

(இ - ள்.) இமையார் எல்லியும் இமையாதது - வானவர் இரவிலும் இமையாதது; முல்லைஅம் குழலார் முலைச்செல்வம் - முல்லையணிந்த அழகிய கூந்தலாரின் முலைச்செல்வமும் (இன்பமும்); மல்லல் மாநகர்ச் செல்வமும்-வளமிகும் மாநகரின் செல்வமும் (பொருளும்); வார்கழல் செல்வர் செல்வமும்-கழல்அணிந்த வீரரின் செல்வமும் (வீரமும்); காணிய என்பர்போல் - விடாமற் காண்பதற்கு யாம் விழித்திருந்தேம் என்று தம் கண்ணை நோக்கிக் கூறுவாரபோல் இருந்தது.

(வி - ம்.) 'என்பவே' என்பது பாடமாயின், இமையார், 'நீயிர் இவை காண்டற்கு யாங்கள் இமையாதிருந்தது' என்று கண்ணிற்குக் கூறுவாரென்க. ஏகாரம் : ஈற்றசை.

[இமையாதிருத்தல் இமையவர்க்கியல்பு.]

முலைச்செல்வம் என்றதனைப் போகம் என்றும் நகர்ச்செல்வம் என்றதனை நென்மணி முதலிய பொருள் என்றும், கழற்செல்வம் என்றதனை வீரமும் என்றும் ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறுவது இனிமை பயக்கின்றது. (௧0அ)

கஈஅ. முழவுஞ் சங்கமு முன்றின் முழங்குவ
விழவும் வேள்வும் விடுத்தலொன் றின்மையாற்
புகழ லாம்படித் தன்றிது பொன்னக
ரகழ்தன் மாக்கட லன்னதோர் சும்மைத்தே.

(இ - ள்.) விழவும் வேள்வும் விடுத்தல் ஒன்று இன்மையால் - விழவினும் வேள்வியினும் ஒன்றைக் கைவிடுதல் இல்லாமையால்; முன்றில் முழவும் சங்கமும் முழங்குவ - வாயிலில் முழவும் சங்கும் முழங்குவன; அகழ்தல் மாக்கடல் அன்னது ஓர் சும்மைத்து - தோண்டப்படும் பெரிய கடலனையதாகிய ஆரவாரமொன்றுடையது; இது பொன்னகர் புகழ்தலாம் படித்தன்று - இப் பொன்னகர் புகழத்தகுந் தன்மையதன்று.

(வி - ம்) வேள்வி - சிறப்புறு நாட்களிலே நிகழ்வன. வேள்வி என்பது வேள்வு என ஈறு திரிந்தது. (௧0௯)

கஈகூ. திங்கண் முக்குடை யான்றிரு மாநக
ரெங்கு மெங்கு மிடந்தோறு முண்மையா
லங்கண் மாநகர்க் காக்க மறுதோர்
சங்க நீணிதி யாற்றழைக் கின்றதே.

(இ - ள்.) திங்கள் முக்குடையான் திருமாநகர் - திங்களனைய முக்குடையானாகிய அருகப்பெருமானின் திருக்கோயில்; எங்கும் எங்கும் இடந்தொறும் உண்மையால் - தெருவிடம் எங்கும் இடந்தோறும் உண்டாகையினாலே; அம்கண் மாநகர்க்கு அறாதோர் ஆக்கம் - அழகிய இடமுடைய பெரிய இராசமாபுரத்திற்கு நீங்காததோர் செல்வம்; சங்கம் நீள்நிதியால் தழைக்கின்றது-சங்கம் என்னும் பேரெண்ணையுடைய நிதியால் தழையாநின்றது.

(வி - ம்.) இனி, 'மாநகருண்மையால் நகர்க்கு ஆக்கம் அறாது; அவ்வாக்கம் ஒரு சங்க நிதியாலே தளிர்க்கின்றது' என்றுமாம். சங்கநிதி - அரசன். (கக0)

வேறு

கச0. தேன்றலைத் துவலை மாலை பைந்துகில் செம்பொன் பூத்து
ஞான்றன வயிர மாலை நகுகதிர் முத்த மாலை
கான்றமிர் தேந்தி நின்ற கற்பகச் சோலை யார்க்கு
மீன்றருள் சுரந்த செல்வத் திராசமா புரம தாமே.

(இ - ள்.) தேன் தலைத் துவலைமாலை பைந்துகில் செம்பொன் பூத்து - தேனைத் தலையிலே துளியாகவுடைய மலர்மாலையும் பைந்துகிலும் செம்பொன்னும் மலர்ந்து; ஞான்றன வயிரமாலை நகுகதிர் முத்தமாலை கான்று - தூக்கப்பெற்ற வயிரமாலையும் ஒளிமிகும் முத்துமாலையும் தோற்றுவித்து; அமிர்து ஏந்திநின்ற கற்பகச்சோலை - அமிர்தத்தை ஏந்திநின்ற கற்பகச்சோலை; யார்க்கும் அருள் ஈன்று செல்வம் சுரந்த இராசமாபுரமது - யாவருக்கும் அருளை யீன்று செல்வத்தைச் சுரந்த இராசமாபுரம் என்னும் பெயரையுடையது.

(வி - ம்.) இனி, தான் சுரந்த அருளாலே யாவர்க்கும் மறுமையிற் கற்பகச்சோலையை யீன்று, அச்சோலையிற் செல்வத்தைத் தன்னிடத்தே யுடையது இராசமாபுரம் என்றுமாம்; என்றது, இதில் வாழ்வாருளைக் கண்டு பிறர்க்கும் அருள்பிறந்து, சுவர்க்கம் எய்துவர் என்றவாறு.

இத்துணையும் நகரின் சிறப்புக் கூறினர். (கக௧)

கோயிற் சிறப்பு

வேறு

கசக. வேக யானை மீளிவேல் வெய்ய தானை யைய கோன்
மாக நீண்ம ணிம்முடி மாரி வண்கை மாசில்சீ
ரேக வாணை வெண்குடை யிந்ந கர்க்கு மன்னவ
னாகி நீர நன்னகர் நன்மை தன்னஞ் செப்புவாம்.

(இ - ள்.) வேகயானை மீளிவேல் வெய்யதானை ஐயகோல் மாகம்நீள் மணிமுடி - விரைந்து செல்லும் யானையும், சிறந்த வேலேந்திய பிற கொடிய படைகளும், வியக்கத்தக்க செங்கோலும், வானம் புகழும் நீண்ட மணிமுடியும்; மாரி வண்கை மாசு இல் சீர்ஏக ஆணை வெண்குடை-முகிலனைய கொடைதருங் கையும் குற்றமற்ற மிகுபுகழும் தனியாட்சியும் வெண்குடையும் உடைய; இந் நகர்க்கு மன்னவன் - இந் நகரத்தரசனது; நாகம் நீர நல்நகர் நன்மை தன்னம் செப்புவாம் - வானுலகனைய அழகிய அரண்மனையினது நன்மையைச் சிறிது கூறுவோம்.

(வி - ம்.) தானை என்றது ஒழிந்த மூன்று படையை. தேவர் புகழும் முடி என்று குலநன்மை கூறினர். சீர் - மிக்க புகழ். ஏக ஆணை-பொதுவற ஆளுதல்.

இதன்கண் அரசற்குரிய அளியும் தெறலும் நிரலே ஐயகோல், மாரி வண்கை, வெண்குடை என்பவற்றானும், வேகயானை, மீளிவேல், வெய்ய தானை, ஏகவாணை என்பவற்றானும் உணர்த்தப்பட்டன.

நாகம் - வானுலகு, நாகருலகுமாம். நகர் என்றது அரண்மனையை. (கக௨)

க௬௨. நீணி லம்வ குத்துநீர் நிரந்துவந் திழிதரச்
சேணி லத்தி யற்றிய சித்தி ரச்சு ருங்கைசேர்
கோணி லத்து வெய்யவாங் கொடுஞ்சுறத் தடங்கி டங்கு
பூணி லத்து வைத்ததோர் பொற்பி னிற்பொ லிந்ததே.

(இ - ள்.) நீர்நிரந்து வந்து இழிதர - நீர் ஒழுங்காக வந்து இழியுமாறு; நீள்நிலம் வகுத்து - நீள் நிலத்தை வெட்டி; சேண் நிலத்து இயற்றிய சித்திரச் சுருங்கைசேர் - நகரத்தின் வெளியிலுள்ள அகழ் தொடங்கிப் படுத்த அழகிய மறைவான கற்படை சேர்ந்த; கோள்நிலத்து வெய்யஆம் கொடுஞ்சுறத் தடம்கிடங்கு-வந்தோரை அகப்படுத்திக் கொல்லுதற்குரிய ஆழமான நீரில் கொடிய சுறாமீன் வாழும் பெரிய அகழி; நிலத்துப் பூண் வைத்தது ஓர் பொற்பினில் பொலிந்தது - நிலமங்கைக்குப் பூணிட்டது போன்ற ஒப்பற்ற அழகினாற் பொலிவுற்றது.

(வி - ம்.) சுறவு என்பது ஈறு கெட்டுச் 'சுற' என வருதல் புறனடையால் (தொல். உயிர்மயங்கு-அ௨) கொள்க. சுருங்கை - கரந்த கற்படை; நகரத்தின் வெளியகழிக்கும் அரசன் அரண்மனை சூழ்ந்த அகழிக்கும் உள்ள வழி. (கக௩)

க௬௩. இஞ்சி மாக நெஞ்சு போழ்ந் தெல்லை காண வேகலின்
மஞ்சு சூழ்ந்து கொண்டணிந்து மாகம் நீண்ட நாகமு
மஞ்சு நின்னை என்றலி ஞண்டு நின்று நீண்டதன்
குஞ்சி மாண்கோ டிக்கையாற் கூவி விட்ட தொத்ததே.

(இ - ள்.) இஞ்சி மாகம் நெஞ்சு போழ்ந்து எல்லை காண ஏகலின் - மதிலானது வான நடுவைப் பிளந்து வானுலகின் எல்லையைக் காணச் சென்றதால்; மஞ்சு சூழ்ந்துகொண்டு அணிந்து-முகில் அதனைப் (போகாமல் தடுத்துக்) காலைக் கட்டிக் கொண்டு; மாகம் நீண்ட நாகமும் நின்னை அஞ்சும் - 'வானத்திலே உயர்ந்த வானுலகும் நினக்கு அஞ்சுகின்றது'; என்றலின்-என்பதனால்; ஆண்டு நின்று - தான் முகில் மண்டலத்தளவிலே நின்று; தன் குஞ்சி நீண்ட மாண் கொடிக்கையால் கூவிவிட்டது ஒத்ததே - தன் தலையில் நீண்ட கொடிக்கையாலே, 'நம்மை வந்து காண்க' என்று கூப்பிட்டுவிட்ட தன்மையை ஒத்தது (கொடிகள் அசையுந்தன்மை.)

(வி - ம்.) குஞ்சி - கொடிநாட்டுங் குழி; மூங்கிலுமாம்.

இதன்கண் இந்திரனுடைய முகில் அவன் நாட்டிற் புகும் மதில், பகைவனைச் சந்து செய்வித்தது என்றலும், அப்பகைவனைத் தன்னை வந்து காணும்படி பணித்தது என்றலும் இனிய கற்பனையாதல் உணர்க. (கக௩)

கக௪. முத்த மாலை முப்புரி மூரி மாம ணிக்கத
வொத்த நான்கு கோபுர மோங்கி நின்றொ ளிர்வன
சத்தி நெற்றி சூட்டிய தாம நீண்ம ணிவணன்
றத்தோ ளிம்ம ணிம்முடித் தாம நால்வ போலுமே.

(இ - ள்.) மூரிமா மணிக்கதவு ஒத்த நான்கு கோபுரம் - மிகப் பெரிய மணிகள் பதித்த கதவையுடைய தம்மில் ஒத்த நான்கு கோபுரங்களிலும்; ஓங்கி நின்று ஒளிர்வன சத்தி நெற்றி சூட்டிய - ஓங்கி நின்று ஒளிசெய்வனவாகிய சூலத்தின் தலையிலே அணிந்த; முப்புரி முத்தமாலை - முப்புரியாகவுள்ள முத்துமாலை; தாமம்நீள் மணிவணன் தத்துஒளி மணிமுடி - ஒளிமிகும் நெடியோனாகிய திருமாலின் பரவும் ஒளியையுடைய மணிமுடியில்; தாமம் நால்வ போலும் - மாலைகள் தொங்குவன போலும்.

(வி - ம்.) 'போன்ற'வும் பாடம். முப்புரியாகிய முத்தமாலையையுடைய கதவுமாம். (கக௪)

கக௫. சங்கு விம்மு நித்திலஞ் சாந்தோ டேந்து பூண்முலைக்
கொங்கு விம்மு கோதைதாழ் கூந்த லேந்து சாயலா
ரிங்கி தக்க ளிப்பினு லெய்தி யாடும் பூம்பொழில்
செங்க ணிந்தி ரன்னகர்ச் செல்வ மென்ன தன்னதே.

(இ - ள்.) சங்கு விம்மு நித்திலம் சாந்தொடு ஏந்து பூண் முலை - சங்கு சூல்முற்றி யீன்ற முத்துமாலையைச் சந்தனத்துடன் தாங்காநின்ற அணிகலன் பிறவும் அணிந்த முலையினையும்;

கொங்கு விம்மு கோதை தாழ்கூந்தல் ஏந்து சாயலார் - மணம் மிகும் மாலை பொருந்திக் கூந்தலினையும் உடைய மென்மையுறும் மகளிர்; இங்கிதக் களிப்பினால் எய்தி ஆடும் பூம்பொழில் - காமக் குறிப்புடன் கூடிய களிப்புடன் சென்று ஆடும் மலர்க்கா; செங் கண் இந்திரன் நகர்ச்செல்வம் என்னது அன்னது - செங்கண்ணனான இந்திரன் நகரிற் கற்பகச்சோலை எத்தகையதோ அத்தகையதாகும்.

(வி - ம்.) செல்வம் : ஆகுபெயர் ; சோலையை உணர்த்தியதால். (கககூ)

கசசூ. வெள்ளி யானை மேன்பிடி மின்னி லங்கு பைம்பொனாற்
றுள்ளு மானொ ருத்தலுஞ் செம்பொ னம்பொன் மான்பிணை
யுள்ளு காம முள்சுட வேந்த னுங்கு றைவதோர்
பள்ளி மாட மண்டபம் பசுங் கதிர்ப்ப வண்ணமே.

(இ - ள்.) வெள்ளி யானை மின்இலங்கு பைம்பொனால் மென்பிடி-வெள்ளியாற் செய்த களிறும் ஒளிவிடும் புதிய பொன்னாற் செய்த பிடியும்; செம்பொன் துள்ளும் மான் ஒருத்தலும் - செம்பொன்னாற் செய்த துள்ளும் கலைமானும் ; அம்பொன் மான் பிணை - அழகிய பொன்னாற் செய்த பிணைமானும்; உள்ளு காமம் உள்சுட வேந்தன் ஆங்கு உறைவது - ஒன்றை மற்றொன்று நோக்குங் காமநோக்கு வேந்தன் மனத்திலே வேட்கைத்தீயை எழுப்ப அவன் அச்சோலையில் தங்குவதாகிய: ஓர் மண்டபம் பள்ளிமாடம் பசுங்கதிர்ப் பவணம் - ஒரு மண்டபத்தில் உள்ள பள்ளிமாடம் புத்தொளி வீசும் நாகருலகை ஒக்கும்.

(வி - ம்.) இனி வெள்ளியாலே யானையும் பிடியும் செய்த என்றுமாம். இப்பொருள் ஆற்றொழுக்கானது. (ககள)

கசள. கோழ ரைம ணிம்மடற் கூந்த னெற்றி யேந்திய
மாழை யந்தி ரள்கனி மாம ணிம்ம ரகதஞ்
சூழ்கு லைப்ப சுங்கமுகு சூலு பாளை வெண்பொனா
லூழ்தி ரண்ம ணிக்கயி றாச லாட விட்டதே.

(இ - ள்.) மாழைதிரள் அம்கனி - பொன்னாற் செய்த அழகிய திரண்ட பழத்தையும் ; மாமரகத மணி சூழ்குலை - பெருமை மிகும் மரகத மணியாற் செய்யப்பெற்ற குலையையும்; வெண்பொனால் சூலு பாளை - வெள்ளியாற் செய்த சூலுடைய பாளையையும்; ஏந்திய கோழ் அரை - ஏந்திய கொழுவிய அடிப்பாகத்தினையும்; மணிமடல் பசுங்கூந்தல் கமுகு நெற்றி - நீலமணியாற் செய்த மடலினையும் உடைய பசிய கூந்தற் கமுகின் நெற்றியிலே;

ஊசல்ஆட இட்டது ஊழ்திரள் மணிக்கயிறு - ஊசல்ஆட இட்ட கயிறு ஒழுங்காகத் திரண்ட முத்துவடம்.

(வி - ம்.) கூந்தற் கமுகு : கூந்தற் பனைபோலக் கமுகில் ஒருவகை. கோழ் - கொழுவிய. மணிமடல்: மணி - நீலமணி. மணிக்கயிறு : மணி : ஈண்டு முத்து. (கக அ)



கசஅ. மென்றி னைப்பி றங்கலும் மிளிர்ந்து வீழ ருவியும்
குன்ற யன்ம ணிச்சுனைக் குவளை கண்வி ழிப்பவு
நின்று நோக்கு மான்பிணை நீல யானை மன்னவன்
கன்று காமம் வெஃகிய காமர் காம பூமியே.

(இ - ள்.) நீலயானை மன்னவன் கன்று காமம் வெஃகிய காமர் காமபூமி - கரிய யானையையுடைய வேந்தன் தழும்பேறிய காமத்தாலே விரும்பிய, காமனும் விரும்பும் நிலத்தில்; பிறங்கல் குன்று மென் தினையும் - திரண்ட செய்குன்றிலே மெல்லிய தினையையும், மிளிர்ந்து வீழ் அருவியும் - குதித்து விழும் அருவியையும்; மான்பிணை அயல் மணிச்சுனைக் குவளை கண்விழிப்பவும் - மானும் பிணையும் அயலில் உள்ள சுனையிற் குவளை காப்பார் கண் போல விழித்து நோக்கவும்; நின்று நோக்கும் - உண்பனவாக நின்று நோக்கும்.

(வி - ம்.) காமர் காமபூமி - காமனுக்கு விருப்பஞ் செய்யும் பூமி; 'காமரை வென்ற கண்ணோன்' (சிற். கசுச) போல.

பிறங்கல் - திரள். இவற்றைச் சித்திரம் எனிற் கோயிற்கு அங்கமாகிய செய்குன்று கூறிற்றிலராவர். (ககக)

கசக. தீங்கு யின்ம ணந்துதேன் றுஞ்ச வண்டு பாண்செய
வேங்கை நின்று பொன்னுகுக்கும் வெற்பு டுத்த சந்தன
மோங்கு பிண்டி சண்பக மூழி நாறு நாகமு
நீங்க நீங்கு மின்னுயிர் நினைப்பி னின்றி ளஃகுமே.

(இ - ள்.) தீங்குயில் மணந்து, தேன் துஞ்ச, வண்டு பாண் செய - குயிலாகிய இனிய காளங் கூடித், தேனாகிய யாழ் தங்க, வண்டுகள் பாட; வேங்கை நின்று பொன் உகுக்கும் வெற்பு உடுத்த - அவற்றிற்குப் பரிசிலாக வேங்கை நின்று பொன்னைச் சொரியும், முற்கூறிய செய்குன்றைச் சூழ்ந்தவை; சந்தனம் ஓங்கு பிண்டி சண்பகம் ஊழி நாறும் நாகமும் - சந்தனமும் உயர்ந்த அசோகும் சண்பகமும் முறைமைப்பட மணங்கமழும் சுரபுன்னையும் ஆகும். நீங்க இன்னுயிர் நீங்கும் - இவற்றை நீங்கின் இனிய உயிர் நீங்கும், நினைப்பின் நின்று இளகும் - நினைப்பின் உயிர் தளிர்க்கும்.

(வி - ம்.) ஊழ்: ஊழியெனத் திரிந்தது; முறைமைப்பட அலர்ந்து நாறும். இளஃகும் - இளகும்: செய்யுள் விகாரம். (கஉ0)

கடுஎ. முத்தம் வாய்பு ரித்தன மோய்க திர்ப்ப சும்பொனாற்
சித்தி ரத்தி யற்றிய செல்வ மல்கு பன்மணி
பத்தி யிற்கு யிற்றிவான் பதித்து வைத்த போல்வன
வித்தி றத்த பந்தெறிந் திளைய ராடு பூமியே.

(இ - ள்.) இளையர் பந்து எறிந்து ஆடு பூமி - இளநங்கையர் பந்து வீசி ஆடும் இடங்கள்; முத்தம் வாய் புரித்தன - முத்தை விளிம்பிலே அழுத்தப்பெற்றன; மொய்கதிர்ப் பசும்பொனால் சித்திரத்து இயற்றிய - பேரொளியுடைய புதிய பொன்னால் அழகுறச் செய்யப்பட்டன. செல்வம் மல்கு பன்மணி பத்தியின் குயிற்றி - செல்வம் நிறைந்த பலவகை மணிகள் பத்தியாகப் பதிக்கப்பெற்று; வான் பதித்துவைத்த போல்வன இத்திறத்த - வானுலகை இவ்வுலகிலே இருத்தினாற் போன்றனவாகிய இவ்வகையின. (கஉக)

கடுக. வைத்த பந்தெ டுத்தலு மாலை யுட்க ரத்தலுங்
கைத்த லத்தி னோட்டலுங் கண்ணி நெற்றி தீட்டலும்
பத்தி யிற்பு டைத்தலும் பைய ரவ்வி னாடலு
மித்தி றத்த பந்தினோ டின்ப மெல்லை யில்லையே.

(இ - ள்.) வைத்த பந்து எடுத்தலும் - நிலத்தில் வைத்த பந்தைக் கையால் தொடாமல் காலால் தட்டி யெடுத்தலும்; மாலை யுட் கரத்தலும் - மாலையில் மறைத்தலும்; கைத்தலத்தின் ஓட்டலும் - கையிற் கொள்ளலும் செல்ல ஓட்டுதலும்; கண்ணி நெற்றி தீட்டலும் - கண்ணியையுடைய நெற்றியிலே தீட்டலும்; பத்தியின் புடைத்தலும் - ஒரு முறைக்கு ஒருமுறை உயரப் பத்தியாக அடித்தலும்; பைஅரவின் ஆடலும் - தாம் நிலையிலே நின்று படமெடுத்த பாம்புபோலப் பரந்து உலாவுமாறு அடித்தலும் ஆகிய; இத்திறத்த பந்தினோடு இன்பம் எல்லை இல்லை - இவ்வகையினவாகிய அப் பந்தினோடு உண்டான இன்பம் முடிவில்லை. (கஉஉ)

கடுஉ. கூற்ற மன்ன கூர்நுதிக் குருதி வான்ம ருப்பிடைச்
சீற்ற முற்ற மன்னர்தஞ் சென்னி பந்த டிப்பன
வூற்றி ருந்த மும்மதத் தோடை யானை பீடுசால்
காற்றி யற்பு ரவிதேர் கலந்து கவ்வை மல்கின்றே.

(இ - ள்.) கூற்றம் அன்ன கூர் நுதிக் குருதிவான் மருப்பிடை - கூற்றுவனைப் போன்றனவாகிய, கூரிய நுனியையுடைய குருதி தோய்ந்த கொம்புகளிலே; சீற்றம் உற்ற மன்னர்தம்

சென்னி பந்து அடிப்பன - அரசன் வெகுண்ட பகைமன்னரின் தலையைப் பந்தாடுவனவாகிய; ஊற்று இருந்த மும்மதத்து ஓடை யானை - ஊற்றெடுக்கும் மும்மதத்தையும் முகபடாத்தையும் உடையனவாகிய யானைகளும்; பீடுசால் காற்று இயல் புரவி தேர் கலந்து - காற்றைப்போல ஓடும் புரவியுந் தேரும் கூடி; கவ்வை மல்கின்று - ஒலிமிக்கது அவ்விடம்.

(வி - ம்.) கூற்றம் யானைக்குவமை.

முற்செய்யுளில் மகளிர் பந்தாடுதலின்பம் கூறிய ஆசிரியர் அந் நினைவினாலே இதன்கண்ணும் "ஊற்றிருந்த மும்மதத் தோடையானை கூற்றமன்ன கூர்நுதிக் குருதிவான் மருப்பிடைச் சீற்றமுற்ற மன்னர்தஞ் சென்னி பந்தடிப்பன" என்றார்.

இவை அரசன் ஏறுவன ஆதலின் உள்நிற்றல் இயல்பு. (கஉ௩)

கரு௩. கவ்வை யங்க ருவிசூழ்ந்து கண்ப டுக்கு மாடமுந்
தெவ்வர் தந்த நீணிதி சேர்ந்த செம்பொன் மாடமு
மவ்வ லங்கு ழலினார்ம ணிக்க லம்பெய் மாடமு
மிவ்வ லந்த வல்லவு மிடங்க ளெல்லை யில்லையே.

(இ - ள்.) கவ்வை அம்கருவி சூழ்ந்து கண் படுக்கும் மாடமும் - (மனச் செருக்கால்) ஆரவாரமுடைய வீரர் திரள், அரசன் பகையை மனத்தால் நோக்கி, யாமந்தோறுங் காத்துத் துயில் கொள்ளும் மாடமும்; தெவ்வர் தந்த நீள்நிதி சேர்ந்த செம் பொன் மாடமும் - பகைவர் கொடுத்த பெருஞ்செல்வம் இருக்கும் பொன்மாடமும்; மவ்வல் அம் குழலினார் மணிக்கலம் பெய்மாட மும்-முல்லையங் குழலினார் தம் அணிகலன்களை இட்டிருக்கும் மாட மும்; இவ் வலந்த அல்லவும் - ஆகிய இங்குக் கூறப்பட்ட இடங் களும் பிற படைக்கலம் வைக்கும் இடம் முதலியனவும்; இடங் கள் எல்லை இல்லை - ஆகிய இடங்கள் அளவற்றவை.

(வி - ம்.) கருவி - தொகுதி; ஈண்டு ஆகுபெயர்; வீரர்களை உணர்த் தியதால். இனி, பகைவர்க்குக் கவ்வையைச் செய்தலையுடைய ஆயுதங் கள் சூழ்ந்து நோக்கினார் கண்ணை அகப்படுக்கும் ஆயுதசாலை என்னும் இப்பொருளே சிறப்புடையது. கவ்வை - துன்பம். (கஉ௪)

கரு௪. பூத்த கோங்கும் வேங்கையும் பொன்னி ணர்செய் கோன்றையுங்
காய்த்து நின்று கண்டேறாஉங் காமர் வல்லி மாதரார்
கூத்த ருத பள்ளியுங் கோற்ற மன்ன மங்கைய
ரேத்தல் சான்ற கோயிலு மிடைப்ப டுத்தி யன்றவே.

(இ - ள்.) காய்த்து நின்று கண் தெறாஉம் காமர் வல்லி மாதரார் கூத்து அறாத பள்ளியும் - தம் கண்கள் இளைஞர் மெய்

யைக் காய்ந்து அவர் நெஞ்சிலே சுடும், அழகிய கொடியனைய மகளிரின் கூத்து நீங்காத அரங்கும்; கொற்றம் மன்ன மங்கையர் ஏத்தல் சான்ற கோயிலும் - வெற்றியாற் கொண்டுவரப்பட்ட பகைமன்னரின் மனைவியராய்க் காவலில் இருக்கும் மங்கையர் இறைவனை வழிபடும் திருக்கோயிலும்; பூத்த கோங்கும் வேங்கையும் பொன்இணர்செய் கொன்றையும் இடைப்படுத்து இயன்ற - மலர்ந்த கோங்கு, வேங்கை, பொன்போன்று கொத்தாக மலர்ந்த கொன்றை ஆகியவற்றை இடையிலே கொண்டு இயற்றப்பட்டிருந்தன.

(வி - ம்.) 'தமது கண்ணனது இளையோர் மெய்யை வெவ்விதாக்கி அவர் நெஞ்சிலே சுடும் மாதரார்' எனச் சினைவினை முதலொடு முடிந்ததென்க.

இதனால் [கூத்தரூத பள்ளியும் கோயிலும் ஆகிய] இரண்டும் தம்மில் இடைவிட்டிருக்கு மென்றார்; மேலே, 'வண்புகழ் மாலடி வந்தனை செய்தாள்' (சீவக. உஉ0) என்ப.

ஈண்டு மன்ன மங்கையர் என்பதற்கு நச்சினார்க்கினியர் காவன் மகளிர் என்றார். அங்ஙனம் கூறியதன் கருத்தினை அவர் பட்டினப் பாலையில் "கொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி அந்திமாட்டிய நந்தா விளக்கின் மலர்அணி மெழுக்கம்," என்பதற்குப் "பகைவர் மனையோராய்ப் பிடித்து வந்த மகளிர் பலரும் நீருண்ணுந் துறையிலே சென்று முழுகி மெழுகும் மெழுக்கம்" என்று வரைந்த வுரையான் நன்கு விளங்கும். இதனால் பண்டைக்காலத்து மன்னர் பகைமன்னர் மகளிர்பால் நடந்துகொண்ட பெருந்தன்மை இனிது விளங்கும்.

காய்த்து : காய்ந்து; வலித்தல் விகாரம். (கஉரு)

கஉசு. கந்து மாம ணித்திரள் கடைந்து செம்போ னீள்சுவர்ச்
சந்து போழ்ந் தியற்றிய தட்டு வேய்ந்து வெண்பொனா
லிந்தி ரன்றி ருநக ருரிமை யோடு மிவ்வழி
வந்தி ருந்த வண்ணமே யண்ணல் கோயில் வண்ணமே.

(இ - ள்.) மாமணித் திரள் கந்து கடைந்து - மாமணித் திரளைத் தூணாகக் கடைதலானும்; செம்பொன் நீள்சுவர் சந்து போழ்ந்து இயற்றிய தட்டு வெண்பொனால் வேய்ந்து - பொன்னாலான சுவரிலே சந்தனத்தை அறுத்துச் செய்துவைத்த நெடுங்கையை வெள்ளியாலே வேய்தலானும்; அண்ணல் கோயில் வண்ணம் - இறைவன் கோயிலின் தன்மை; இந்திரன் திருநகர் உரிமையோடும் இவ்வழி வந்திருந்த வண்ணமே - இந்திரன் அரண்மனை உரிமை மகளிருடன் இவ்வழி வந்திருந்த தன்மையேயாய் இருந்தது.

(வி - ம்.) ஏகாரம்: தேற்றம். (கஉசு)

கருசு. ஆட லின்ன ரவ்வமு மங்கை கோட்டி நெஞ்சுணப்
பாட லின்ன ரவ்வமும் பணைமு ழவ்வ ரவமுங்
கூடு கோலத் தீஞ்சுவைக் கோல யாழ ரவமும்
வாட லில்ல வோசையால் வைக ஞளும் வைகின்றே.

(இ - ள்.) ஆடலின் அரவமும் - கூத்தின் ஒலியும்; அங்கை கொட்டி நெஞ்சுஉணப் பாடலின் அரவமும் - கைகொட்டிக் கேட்போர் நெஞ்சைப் பருகுமாறு பாடும் பாடலின் ஒலியும்; பணைமுழவு அரவமும் - பெரிய முழவின் ஒலியும்; கூடு கோலம் தீஞ்சுவைக் கோலயாழ் அரவமும் - (பிற கருவிகளோடு) கூடும் அழகும் சுவையும் பொருந்திய நரம்பையுடைய யாழின் ஒலியும்; வாடல்இல்ல ஓசையால் வைகல் நாளும் வைகின்று - (ஆகிய) குறைதல்இல்லாத ஓசையாலே (அண்ணலுக்கு) நாள்கள்தோறும் நாள்கழியா நின்றது.

(வி - ம்.) கொட்டி - ஒக்கடித்து (சேரக்கொட்டி.)

இனி, வைகவாயின், ஓசையோடு செல்ல நாளும் கழியா நின்றது என்க. [அண்ணல் என்ற சொல் முன்பாட்டிலிருந்து வருவிக்கப் பட்டது.]

கோயிலின் சிறப்புக் கூறினர். (கஉஎ)

சச்சந்தன் வரலாறு

வேறு

கருஎ. நச்சு நாகத்தி ஞரழற் சீற்றத்த
னச்ச முற்றடைந் தார்க்கமிர் தன்னவன்
கச்சு லாமுலை யார்க்கணங் காகிய
சச்சந் தன்னெனுந் தாமரைச் செங்கணன்.

(இ - ள்.) கச்சு உலாம் முலையார்க்கு அணங்கு ஆகிய சச்சந்தன் எனும் தாமரைச் செங்கணன் - கச்சுப் பொருந்திய முலையார்க்கு ஆசையை உண்டாக்கும் சச்சந்தன் எனப் பெயரிய தாமரை மலரனைய செங்கண்ணன்; அச்சம் உற்று அடைந் தார்க்கு அமிர்தன்னவன் - அச்சத்துடன் புகலடைந்தவர்க்கு அமிர்தம் போன்றவன்; நாகத்தின் நஞ்சு ஆர்அழல் சீற்றத்தன் - (அடையாதார்க்கு) பாம்பின் நஞ்சைப்போல நிறைந்த தீயனைய சீற்றமுடையவன்.

(வி - ம்.) [பாம்பின் சீற்றம் நஞ்சு உயிரைப் போக்கும் அளவும் இருந்து பிறகு நீங்கும்.]

இச் செய்யுளினும் வேந்தற்குரிய அளியும் தெறலும் கூறப்பட்டன. அளியினும் வேந்தற்குத் தெறலே சிறத்தலின் முதற்கண் "நச்சு நாகத்

தின் ஆரழற் சீற்றத்தன்" என்றார். அச்சம் உற்றடைந்தார்க்கு என்றமையான் செருக்குற்றுப் பகைத்தார்க்கு நாகச் சீற்றத்தன் என்று வருவித்தோதுக. ஆரழற்சீற்றத்தன் என்றதனால் அவன் பேராண்மை விதந்தோதப்பட்டது. அடைந்தார்க் கமிர்தன்னவன் என்றதனால் அதன் எஃகாகிய ஊராண்மை விதந்தோதப்பட்டது. என்னை ?

"பேராண்மை என்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு" (குறள், எஎங)

என்பவாகலான் என்க. (கஉஅ)

கருஅ. வண்கை யாற்கலி மாற்றிவை வேலினாற்
றிண்டி றற்றெவ்வர் தேர்த்தொகை மாற்றினா
னுண்க லைக்கிட னாய்த்திரு மாமகள்
கண்க ளுக்கிட னாங்கடி மார்பனே.

(இ - ள்.) திருமாமகள் கண்களுக்கு இடன்ஆம் கடி மார்பன் - திருமகள் கண்கள் வேறிடம் நோக்காமல் நோக்கும் இடமாகிய புதுமை நிறைந்த மார்பனாகிய அவன்; நுண்கலைக்கு இடன்ஆய் - நுண்ணிய கலைகளுக்கு இருப்பிடமாகி; வண்கையால் கலி மாற்றி - வண்மையுடைய கையினால் வறுமையை நீக்கி; வைவேலினால் திண்திறல் தெவ்வர் தேர்த்தொகை மாற்றினான் - கூரிய வேலினால் திண்ணிய திறலையுடைய பகைவரின் தேர்த் திரளை நீக்கினான்.

நுண்கலை என்றது, இயல், இசை, நாடகம், சிற்பம், ஓவியம் என்னும் ஐந்தனையும். இவை கண்ணினும் செவியினும் நுண்ணிதின் உணர்வனவாகலின் நுண்கலை எனப்பட்டன. (கஉகூ)

கருகூ. கோதை நித்திலஞ் சூழ்குளிர் வெண்குடை
யோத நீருல கொப்ப நிழற்றலால்
தாதை யேயவன் தாணிழற் றங்கிய
காத லாற்களிக் கின்றதிவ் வையமே.

(இ - ள்.) கோதை நித்திலம் சூழ்குளிர் வெண்குடை - பூமாலையும் முத்துமாலையும் சூழ்ந்த குளிர்ந்த வெண்குடையால்; ஓதம்நீர் உலகுஒப்ப நிழற்றலால் - கடல்சூழ்ந்த உலகை ஒப்ப நிழற்படுத்தலால்; தாதையே (அவ்வரசன்) உலகிற்குத் தந்தையே ஆயினன்; அவன்தாள் நிழல்தங்கிய - அவன் தாளின் நிழலிலே வாழ்வதற்கு; இவ் வையம் காதலாற் களிக்கின்றது - இவ்வுலகம் அவன்மேல் வைத்த அன்பினாற் களிப்புறுகின்றது.

(வி - ம்.) கோதை நித்திலம் : உம்மைத்தொகை. ஒப்ப-எல்லார்க்கும் ஒப்ப. தங்கிய: செய்திய என்னும் எதிர்கால வினையெச்சம்.

இனி, தாணிழற்றங்கிய வையம், அவன் உலகில் வைத்த காதலாலே களிக்கின்ற தென்றுமாம்.

இவற்றால் [மூன்று செய்யுட்களாலும்] தெறலும் அளியும் அழகும் கொடையும் வீரமும் கல்வியும் முறை செய்தலும் கூறினர்.

ஈண்டுத் தேவர் " தாதையே " எனச் சச்சந்தனுக் கோதியதனையே கம்பநாடர் சிறிது மாற்றித் தயரதன் "தாயொக்கும் அன்பின்" (சு. அரசிய-சு) என்று தங்காப்பியத்து அமைத்துக் கொண்டார். (கரு௦)

கசூ௦. தருமன் றண்ணளி யாற்றன தீகையால்
வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே
யருமை யாலழ கிற்கணை யைந்துடைத்
திரும கன்றிரு மாநில மன்னனே.

(இ - ள்.) திரு மாநிலம் மன்னன் - திருவையுடைய மாநிலத்தின் மன்னனான சச்சந்தன்; தண் அளியால் தருமன் - (அமிர்தத்தை யொத்தலும் உலகை நிழற்றலும் ஆகிய) தண்ணிய அருளினால் அறக்கடவுளைப் போன்றவன்; தனது ஈகையால் வருணன் - (கலிமாற்றின) கொடையால் வருணனைப் போன்றவன்; உயிர் மாற்றலின் கூற்று - (தேர்த்தொகை மாற்றுமிடத்தால் அழற் சிற்றத்தனாய்) உயிரைப் போக்குதலாற் கூற்றுவனைப் போன்றவன்; அருமையால் வாமன் - (கலைக்கிடனும்) அருமையால் வாமனைப் போன்றவன்; அழகின் கணை ஐந்துஉடை திருமகன் - (மகளிர்க்கு அணங்காகிய) அழகால் ஐங்கணை யேந்திய திருமகள் மகனான காமனைப் போன்றவன்.

(வி - ம்.) இங்ஙனம் உவமை கூறுதற்குக் கொண்டு கூறினர். எனவே, கூறியது கூறல் அன்றென்க. (கருக)

கசூக. ஏனை மன்னர்த மின்னுயிர் செற்றவேற்
றானை மன்னரிற் றானிமி லேறனான்
றேனை மாரியன் னான்றிசை காவலன்
வானந் தோய்புக ழான்மலி வெய்தினான்.

(இ - ள்.) ஏனை மன்னர்தம் இன்னுயிர் செற்ற வேல்தானை மன்னரில் தான்இமில் ஏறனான் - மற்றைய (பகை) மன்னரின் இனிய உயிரைப் போக்கிய வேற்படையையுடைய தன் மரபு மன்னர்களில் தான் செருக்கினால் இமிலையுடைய ஏறு போன்றவன்; தேன்மாரி அன்னான் திசை காவலன் - மொழியால் தேன் மழையனையவனாகிய எட்டுத் திக்கிற்கும் அரசனாகிய அவன்; வானம் தோய் புகழால் மலிவு எய்தினான் - வானிற் பொருந்திய புகழாலே மிகுதல் பெற்றான்.

(வி - ம்.) தேனை : ஐ : அசை. (கருஉ)

கசுஉ. செல்வற் கின்னணஞ் சேறலிற் றீம்புனன்
மல்கு நீர்விதை யத்தர சன்மக
ளல்லி சேரணங் கிற்கணங் கன்னவள்
வில்லி னீள்புரு வத்தெறி வேற்கணாள்,

(இ - ள்.) செல்வற்கு இன்னணம் சேறலின் - அரசனுக்கு இவ்வாறு நல்வினை நடத்தலாலே; தீம்புனல் மல்குநீர் விதையத்து அரசன் மகள் - (இதற்குத்தக) இனிய நீர்வளம்மிக்க இயல்பையுடைய விதையத்து மன்னன் மகள்; அல்லிசேர் அணங்கிற்கு அணங்கு அன்னவள் - தாமரையில் வாழும் திருமகளுக்கு ஒரு திருமகள் போன்றவள்; வில்லின் நீள்புருவத்து எறி வேற்கணாள்- வில்லனைய நீண்ட புருவத்தினையும் எறியும் வேலனைய கண்ணையும் உடையவள்;

(வி - ம்.) அல்லி: அகவிதழ்; சினையாகு பெயராகத் தாமரை மலரை உணர்த்தியது.

புனலினது வளப்பம் பொருந்திய நீர்மையையுடைய விதையம்; தண்ணீரும் விளைவிக்கும் நீருமாம். திருவிற்கு ஒரு திருவன்னவள்: இல்பொருள் [உவமை.]

சச்சந்தன் உயிர்நீத்தமைக்குக் காரணமாதல்பற்றி "வில்லின் நீள்புருவத்து எறிவேற் கணாள்" என்று கொல்படைகளை உவமை ஓதினர். (கரு௩)

கசுஙு. உருவுஞ் சாயலு மோப்ப வுரைப்பதற்
கரிய வாயினு மவ்வளைத் தோளிகட்
பெருகு காரிகை பேசுவல் பெண்ணணங்
கரிய தேவரு மேத்தரு நீரளே.

(இ - ள்.) பெண் அணங்கு அரிய தேவரும் ஏத்து அரு நீரள் - (அவள்) இவ்வுலகிற் பெண்ணால் வருத்துதற்கரிய தேவரும் புகழ்தற்கரிய பண்பினள்; உருவும் சாயலும் ஒப்ப உரைப்பதற்கு அரிய ஆயினும் - (அவளுடைய) வடிவும் மென்மையும் இத்தன்மையவெனப் பொருந்த உவமை கூறுதற்கு அரிய எனினும்; அவ் வளைத்தோளிகண் பெருகு காரிகை பேசுவல்-அழகிய வளைத்தோளியின் அழகைச் சிறிது கூறுவேன்.

(வி - ம்.) அதுமேற் கூறுகின்றார். உருவுஞ் சாயலுமாகிய காரிகை என்க.

அவை கண்ணானும் மனத்தானும் நுகரப்படுவனவேயன்றிச் சொல்லாற் கூறும் எளிமையுடையனவல்ல வென்பார் "உரைப்பதற்கு அரிய வாயினும்" என்றும், அங்ஙனமாயினும் எம்மாலியன்றவளவிற் கூறுவேம் என்பார் "பேசுவல்" என்றும் கூறினார். அக்குறை மக்கட் பிறப்பினை யுடைய எமக்கே உரியதுமன் றென்பார் "தேவரும் ஏத்தரும் நீரள்" என்றார். (க௩௪)

வேறு

௧௬௪. எண்ணெயு நானமு மிவைமூழ்கி இருடிருக்கிட்
டொண்ணறுந் துகிற்கிழி பொதிந்துறை கழித்தனபோற்
கண்ணிருண்டு நெறிமல்கிக் கடைகுழன்ற கருங்குழல்கள்
வண்ணப்போ தருச்சித்து மகிழ்வாளுத் தகையவே.

(இ - ள்.) எண்ணெயும் நானமும் இவை மூழ்கி - எண்ணெயும் புழுகும் என்னும் இவற்றிலே முழுகி; கடை குழன்ற கருங்குழல்கள் - நுனி சுருண்ட கரிய கூந்தல்கள்; இருள் திருக்கிட்டு - இருளைப் பிடித்து நீள முறுக்கி (அறல்படப் பிடித்து); ஒள் நறுந்துகில் கிழிபொதிந்து உறை கழித்தனபோல் - ஒளி பொருந்திய நல்ல துகிலாகிய உறையிலே பொதிந்து வைத்துப் பிறகு அதனை வாங்கப்பட்டவைபோல்; கண் இருண்டு நெறி மல்கி - (பார்ப்பவர்) கண்கள் இருள நெளிவு மிகுந்து; வண்ணப் போது அருச்சித்து-சேடியர் மலரைக்கொண்டு வழிபட்டாலும்; மகிழ்வு ஆனுத் தகைய - வருந்துந் தன்மைய.

(வி - ம்.) இருண்டு - இருள. குழல், மயிர் மாத்திரையாய் ஐவகையையும் உணர்த்தலிற் பன்மை கூறினர்.

கண் - இடமாக்கி, கருங்குழல்-கொடிய குழல் என்றும் ஆம். குழன்றும் பாடம். (௧௬௩)

௧௬௫. குழவிக்கோட் டிளம்பிறையுங் குளிர்மதியுங் கூடினபோ
லழகுகோள் சிறுநுதலு மணிவட்ட மதிமுகமுந்
தொழுதாற்கு வரங்கொடுக்குந் தொண்டைவாய்த் தூமுறுவ
லொழுகுபொற் கொடிமூக்கு முருப்பசியை யுருக்குமே.

(இ - ள்.) குழவிக்கோட்டு இளம்பிறையும் குளிர்மதியும் கூடினபோல் - குழவிப் பருவத்து ஒரு கலையை உடையதாய்ப் பின்பு இளம்பருவத்தே நின்ற பிறையும் குளிர்ந்த திங்களும் கூடினபோல; அழகுகொள் சிறுநுதலும் அணிவட்ட மதிமுகமும் - அழகிய சிறிய நெற்றியும் அணிமிகும் வட்டமான மதிப் புறம் முகமும்; ஒழுகுபொற் கொடிமூக்கும் - வளருகின்ற பொலிவினையுடைய நீண்ட மூக்கும்; தொழுதாற்கு வரம் கொடுக்கும் தொண்டை வாய் - தொழுத கணவனுக்கு வரம் கொடுக்கும் கொவ்வைக் கனியனைய வாயும்; தூமுறுவல் - தூய பற்களும்; உருப்பசியை உருக்கும் - உருப்பசியையும் மயக்கும்.

(வி - ம்.) இளமை - ஈண்டுக் குழவிப்பருவம் ஒழிந்ததன் மேற்று. 'இளமையுந் தருவதோ?' (கலி. கரு) 'மாக்கடல் நடுவண் எண்ணாட் பக்கத்துப் - பசுவெண்டிங்கள் தோன்றி யாங்குக் - கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்' (குறுந். ௧௨௯) என்றார் பிறரும்

உருக்குதல் : நுகர்தற்கு அவளும் ஆண்பாலாக விரும்புதல்.

'தொழுதாற்கு' என்றதற்கு நச்சினார்க்கினியர் "தான் தொழப்பட்ட கணவனுக்கு" என வேண்டாது உரைவிரித்தார். ஊடிய காலத்தே தன்னைத் தொழுகின்ற கணவன் வேண்டுகின்ற கூடலைத் தாமுறுவலே உடன்பாடுணர்த்துமாற்றான் அளித்தலின் தொழுதாற்கு வரங்கொடுக்கும் தாமுறுவல் என்றார். தொழுவோன் வேண்டுவதெல்லாம் வரமே ஆகலின் வரம் என்றார். (கந௬)

கசுசு. வண்சிலையை வனப்பழித்து வார்ந்தொழுகி நிலம்பெறா
நுண்கருமை கொண்டொசிந்து நுதலிவர்ந்து போந்துலாய்க்
கண்கூடா கடைபுடைத்துக் கைவல்லானெழுதியபோற்
பண்பார்ந்த கொடும்புருவம் பழிச்சாஅப் படியவே.

(இ - ள்.) கடை புடைத்துக் கைவல்லான் எழுதியபோற் பண்பு ஆர்ந்த கொடும் புருவம் - (எழுத்து ஒருமைப்படத் துகிலிகைக் கோலை) உதறிக் கைதேர்ந்த ஓவியன் எழுதியவற்றைப் போலத் தமக்குரிய பண்பு நிறைந்த கொடிய புருவங்கள்; வண் சிலையை வனப்பு அழித்து - வளமிகும் வில்லின் அழகைக் கெடுத்து; வார்ந்து ஒழுகி நிலம்பெறா - தமக்கு இயன்ற அளவு நீண்டு மேற்செல்லாவாகி; நுண்கருமை கொண்டு ஒசிந்து - கூரிய கருமைகொண்டு வளைந்து; நுதல் இவர்ந்து போந்து உலாய்க் கண் கூடா - நெற்றியில் தாம் செல்லுதற்குரிய அளவுஞ் சென்று போந்து பரந்து தம்மிற்கூடா (ஆதலின்); பழிச்சு ஆஅப் படிய- புகழல் அமையாத தன்மையவாயின.

(வி - ம்.) 'வனப்பிகந்து வார்ந்தொழுக' என்பதூஉம் பாடம். (கந௭)

கசுஎ. சேலனைய சில்லரிய கடைசிவந்து கருமணியம்
பாலகத்துப் பதித்தன்ன படியவாய் முனிவரையு
மாலுறுப்ப மகிழ்செய்வ மாண்பினஞ்சு மமிர்தமுமே
போல்குணத்த பொருகயற்கண் செவியுறப்போந்
தகன்றனவே.

(இ - ள்.) சில் அரிய - சில இரேகைகளையுடையவாய்; கடை சிவந்து-கடைப்புறம் சிவந்து; கருமணி அம் பாலகத்துப் பதித்த அன்ன படியவாய் - மாயோனையும் அழகிய பாற்கடலையும் முகத்தே அமைத்தாற் போன்ற தன்மையவாய்; முனிவரையும் மால்உறுப்ப-முனிவர்களையும் மயக்கூட்டுவனவாய்; மகிழ்செய்வ - களிப்பூட்டுவனவாய்; மாண்புஇல் நஞ்சும் அமிர்தமுமே போல் குணத்த - துன்பத்தால் நலம் இல்லாத நஞ்சும், இன்பத்தால் நலம் தரும் அமிர்தமும் போன்ற பண்பினவாய்; சேல்அனைய,

பொரு கயற்கண் - சேல்மீனைப் போன்று செவியுடன் பொருங் கண்கள்; செவிஉறப் போந்து அகன்றன-செவியுற நீண்டு, அதற் கேற்ப அகன்றிருந்தன.

(வி - ம்.) [சேல் உவமையாகவும் கயல் அடைமொழியளவேயாக வும் நின்றன. கருமணி, பால்: உவமையாகு பெயர்கள்.]

கன்னியாதலின் 'மாலுறுப்ப' என்றார். மகிழ்செய்வ - கணவனுக்கு மகிழ்செய்வ.

இச் செய்யுளில் 'கருமணி அம்பாலகத்துப் பதித்தன்ன படியவாய்' என்ற தொடர்க்கு "நீலமணியைப் பாலின் அகத்தே பதித்துவைத்தாற் போன்ற தன்மையவாய்" என்று உரைகூறல் எளிதாயிருப்பவும் தாம் அங்ஙனம் கூறாமைக்குக் காரணம் கூறுவார் "கருமணியைப் பாலிற் பதித்தால் பால்நிறங் கெடுமென் றுணர்க" என்று கூறினர். இதனால் அவ்வுரையாசிரியரின் நுண்மாணுழைபுலம் உணரப்படும். 'பத்தினிப் பெண்டிர் பிறர்நெஞ்சு புகார்' என்பது கருதி 'கன்னியாதலின் மாலுறுப்ப' என்றார் என்று கூறும் நயமும் உணர்க. (கருஅ)

கசுஅ. மயிரேறி கத்தரிகை யனையவாய் வள்ளைவா
டுயிர்செகுத்து முன்னொன்றிப் பின்பேரா துருவமைந்த
செயிர்மகர குண்டலமுந் திளைப்பானா வார்காதும்
வயிரவின் முகஞ்சூடி வண்ணம்வீற் றிருந்தனவே.

(இ - ள்.) மயிர்எறி கத்தரிகை அனையவாய் - மயிரை வெட்டும் கத்தரிகை போன்றனவாய்; வாடு வள்ளை உயிர் செகுத்து - வாடிய வள்ளைக் கொடியின் அழகைக் கெடுத்து; பின் பேராது முன் ஒன்றி - பின்னே மறியாமல் முன்னே பொருந்தி; உரு அமைந்த செயிர் மகர குண்டலமும் திளைப்பு ஆனா வார்காதும் - அழகு பொருந்திய மகரமீன் வடிவமான குண்டலமும் தோடும் அசைதல் அமையாத காதும்; வயிரவில் முகம்சூடி வண்ணம்வீற் றிருந்தன - வயிரத்தின் ஒளியைத் தம்மிடத்தே கொண்டு அழகு வீற்றிருந்தன.

(வி - ம்.) 'வாட்டு' ஆயின், 'வாட்டின காது' என்க. காதும் என்ற உம்மை இறந்தது தழீஇயிற்று.

குண்டலமும் என்ற உம்மையால் தோடு கொள்ளப்பட்டது.

செகுத்து என்னும் வினைக்கேற்ப அழகினை உயிர் என்றார். (கருக)

கசுக. ஈனாத விளங்கமுகின் மரகத மணிக்கண்ணு
மானாதே யிருள்பருகு மருமணி கடைந்ததூஉந்
தானாகி யிருளோடோர் தாமரைப்பூச் சுமந்தன்ன
கானார்ந்த திரள்கழுத்துக் கவின்சிறைகொண் டிருந்ததே.

(இ - ள்.) ஈனாத இளங்கமுகின் மரகத மணிக்கண்ணும் - குலையிடாத இளங்கமுகின் மரகத மணிபோலும் கணுவும்; ஆனாதே இருள் பருகும் அருமணி கடைந்ததும் - இருளை முற்றும் கெடுக்கும் அரிய மாணிக்கத்தைக் கடைந்ததுவும்; தான் ஆகி - அதுவாகி; இருளொடு ஓர் தாமரைப்பூச் சுமந்தஅன்ன - இருளையும் ஒரு தாமரை மலரையும் சுமந்தாற் போன்ற; கான் ஆர்ந்த திரள் கழுத்துக் கவின்சிறை கொண்டிருந்தது - மணம் நிறைந்த திரண்ட கழுத்து அழகு குடிகொண்டிருந்தது.

(வி - ம்.) கோட்புகாத [குலையீனாத] கன்னிக் கமுகு வரையிற்கும் செய்ப்பிற்கும், மணி திரட்சிக்கும் நிறத்திற்கும் உவமம். உதயகிரியிற் சிந்தூர அருவி வீழ்ந்த சிந்தூராகரத்திற் பதினாறு சதுர்யுகம் சிவப்பேறின முழு மாணிக்கம் இருளைக் கெடுத்தலின், 'இருள்பருகு மணி' என்றார். இருளும் தாமரையும் மயிர்க்கும் முகத்திற்கும் உவமம். கான்-மணம். (கசo)

கள0 மணிமகரம் வாய்போழ்ந்து வாழ்முத்த வடஞ்சூழ்ந்தாங்
கணியரக்கார் செம்பஞ்சி யணையனைய வாடமைத்தோ
டுணிகதிர் வளைமுன்கைத் தொகுவிரல் செங்காந்தண்
மணியரும்பு மலரங்கை குலிகமார் வனப்பினவே.

(இ - ள்.) ஆடுஅமைத் தோள் - அசையும் மூங்கிலனைய தோள்கள்; மணிமகரம் வாய்போழ்ந்து ஆங்கு வாழ்முத்த வடம் சூழ்ந்து - அழகிய சுறுமீன் வாய்திறத்தலாலே ஆங்கு வாழும் முத்துமாலை சூழப்பட்டு; அணி அரக்கு ஆர் செம்பஞ்சி அணை அனைய - அழகிய செந்நிறம் பொருந்திய செம்பஞ்சணையைப் போன்றன; துணிகதிர் வளை முன்கைத் தொகுவிரல் - தெளிந்த கதிர் சொரியும் வளையணிந்த முன்கையிற் குவிந்த விரல்கள்; செங்காந்தள் மணிஅரும்பு - செங்காந்தளின் அழகையுடைய அரும்பை அனைய; அங்கை மலர் குலிகம் ஆர்வனப்பின - அகங்கைகள் தாமரை மலரனைய; அக் கைகள் குலிகம் பொருந்திய அழகின.

(வி - ம்.) பஞ்சணை மென்மைக்கும் நிறத்திற்கும் உவமம். அமை திரட்சிக்கும் செய்ப்பிற்கும் உவமம். துணிதல் - தெளிதல்.

'போழ்ந்த'வும், வான் முத்தமும் பாடம். (கசக)

களக. தாமச்செப் பிணைமுகட்டுத் தண்கதிர் விடுநீல
மாமணிதா பித்தனபோன் மனம்பருகு கருங்கண்ண
வேமுற வடிபரந் திளம்பிறை வடஞ்சூடி
யாமணங்கு குடியிருந் தருஞ்சுணங்கு பரந்தனவே.

(இ - ள்.) தாமச்செப்பு இணை - மாலையணிந்த செப்புகளனைய இரு முலைகளும்; முகட்டுத் தண்கதிர்விடு நீலமாமணி

தாபித்தனபோல் - தம் உச்சியிலே குளிர்ந்த கதிரைச் சொரியும் நீலமணியை அழுத்தப்பட்டனபோல; மனம்பருகு கருங்கண்ண - நோக்கினார் மனத்தை யுண்ணும் கரிய கண்களையுடையவாய்; ஏம்உற அடிபரந்து - கண்டார் மயக்கமடைய அடிபரந்து; இளம் பிறை வடம்சூடி - இளம்பிறை வடிவமான வடத்தை யணிந்து; ஆம்அணங்கு குடிபிருந்து - தம்மேல் இருக்கும் அழகைச் செய்யும் வீற்றுத் தெய்வம் குடிகொள்ளப்பட்டு; அருஞ்சுணங்கு பரந்தன - அரிய தேமல் பரவியிருந்தன.

(வி - ம்.) 'தாமச் செப்பிணை' எனவே முலையாம். இனி, பூஞ் செப்பாக்கின் சினையிற் கூறும் முதலறி கிளவியும் ஆம் [சினையாகுபெயர்; பூமாலைக்கு ஆயினதால்]. ஆம்அணங்கு - மேல் ஆகக்கடவ வருத்தமுமாம், [கதையை யுட்கொண்டு]. (கசஉ)

கஎஉ. அங்கைபோல் வயிறணிந்த வலஞ்சுழி யமைகொப்பூழ்
கங்கையின் சுழியலைக்குங் கண்கோளா நுடங்கிடையை
யுண்டெனத் தமர்மதிப்பர் நோக்கினார் பிறரெல்லா
முண்டில்லை யெனவைய மல்லதோன் றுணர்வரிதே.

(இ - ள்.) அங்கைபோல் வயிறு அணிந்த - அகங்கை போலும் வயிற்றை அழகுசெய்த; வலஞ்சுழி அமை கொப்பூழ் கங்கையின்சுழி அலைக்கும் - வலஞ்சுழியாக அமைந்த கொப்பூழ் கங்கையின் சுழியை வருத்தும்; கண்கொளா நுடங்கிடையைத் தமர்உண்டு என மதிப்பர் - கண்ணுக்குத் தோன்றாத அசையும் இடையை உறவினர் பயிற்சியால் உண்டு என்று கருதுவர்; நோக்கினார் பிறர் எல்லாம் - (மற்று) நோக்கிய மற்றையர் யாவரும்; உண்டு இல்லை என ஐயம் அல்லது ஒன்று உணர்வு அரிது - பிற உறுப்புக்கள் உண்மையான் உண்டு என்றும், கட்புலனாகாமையில் இல்லை என்றும் ஐயுறுதல் அல்லது இரண்டில் ஒன்று துணிதல் அரிது.

(வி - ம்.) கங்கை - குலந்தூய்மைக்குக் கூறினார்.

இவ்வழகிய செய்யுளின் கருத்தைக் கம்பநாடர் தங்காவியத்தே,

"பல்வியல் நெறியிற் பார்க்கும் பரம்பொரு ளென்ன யார்க்கும்
இல்லையுண் டென்னநின்ற இடையினுக் கிடுக்கண் செய்தார்."
(கம்ப. கோலங். கஉ)

எனப் பின்னும் அழகுறுத்தி அமைத்துக் கொண்டார். (கசங)

கஎங. மன்னாகை விணைப்படமுந் தேர்த்தட்டு மதிமயக்கிப்
பொன்னாலை வட்டமும்போற் கலையிமைக்கும் மகலல்குற்
கொன்னிளம் பருதியுங் குறமுயலின் குருதியும் போன்
றின்னரத்தப் பட்டசைத் திந்திரற்கும் புகழ்வரிதே.

(இ - ள்.) மன்நாக இணைப்படமும் தேர்த்தட்டும் பொன் ஆலவட்டமும்போல்-பெருமை பொருந்திய அரவின் இருபுறமும் ஒத்த படமும் தேரின்தட்டும் பொன்னாலாகிய ஆலவட்டமும் போல; கலை இமைக்கும் அகல்அல்குல் - மேகலை ஒளிரும்வட்டம் அகன்ற அல்குல்; கொன்இளம் பருதியும் குறுமுயலின் குருதியும் போன்று இன் அரத்தப்பட்டு அசைத்து - காலையில் தோன்றும் இளஞாயிறும் சிறு முயலின் இரத்தமும்போலே கண்ணுக்கினிய செம்பட்டுடுக்கப்பட்டு; மதிமயக்கி இந்திரற்கும் புகழ்வு அரிது - எல்லோரையும் மதிமயக்குதலின் இந்திரனுக்கும் புகழ்தல் இயலாது.

(வி - ம்.) கொன் - விடியற்காலம் 'கொன்வரல் வாழ்க்கை' (புறநா. ௩௭௧-௧௧) போல. இந்திரற்கும்: உம்: உயர்வு சிறப்பு. (௧௬௪)

௧௭௪. வேழவெண் டிரடடக்கை வெருட்டிமற் றிளங்கன்னி
வாழைத்தண் டெனத்திரண்டு வாலரக்குண் செம்பஞ்சி
தோழமைகோண் டெனமேன்மை யுடையவா யொளிதிகழ்ந்து
மாழைகோண் மணிமகரங் கேளவிவீற் றிருந்தனவே.

(இ - ள்.) வேழவெண் திரள் தடக்கை வெருட்டி - (ஒழுங்காகக் காணப்படுதலின்) வெள்ளை யானையின் திரண்ட துதிக்கையை அஞ்சுவித்த துடை; இளங்கன்னி வாழைத் தண்டெனத் திரண்டு - இளமை பொருந்திய குலைதள்ளாத வாழையின் தண்டு போலத் திரண்டு; வால்அரக்கு உண் செம்பஞ்சி தோழமை கொண்டு என - தூய செந்நிறப் பஞ்சியின் நட்பைக் கொண்டாற் போல; மென்மை யுடையவாய் - மென்மை பெற்றனவாய்; ஒளி திகழ்ந்து - ஒளிபெற்று; மாழைகொள் மணிமகரம் கௌவி வீற்றிருந்தன - பொன்னிற் பதித்த மணிகளாலான மகரவடிவான குறங்குசெறி என்னும் அணி கௌவி மேலாயிருந்தன.

(வி - ம்.) வெருட்டி: [துடைகளை உணர்த்தியதாற்] பெயர். மற்று: வினைமாற்று. செம்பஞ்சி: பஞ்சி மாத்திரை; 'அரக்கு உண்' என நிறங்கூறினதால். பொன் தன்னிடத்தே அடக்கின மணி. மகரம்: உவமையாகுபெயர். [குறங்கு செறி: ஓர் அணிகலன்.]

'திரண்ட' என்பது பாடமாயின் பெயராம். (௧௬௫)

௧௭௫. பக்கத்தாற் கவிழியவாய் மேல்பிறங்காப் பாண்டிலா
ஒக்கநன் குணராமை பொருந்திய சந்தினவாய்
நெக்குப்பின் கூடாது நிகரமைந்த முழந்தாளு
மக்களுக் கில்லாத மாட்சியின் மலிந்தனவே.

(இ - ள்.) மேல் பக்கத்தால் கவிழிய வாய் - மேற்பக்கத்திலே கவிழ்ச்சியை உடையனவாய்; பிறங்காப் பாண்டில்ஆ -

பேராத வட்டம் ஆமாறு; ஒக்க நன்கு உணராமை பொருந்திய சந்தினவாய் - நன்மை இதற்கு ஒப்ப வேறு ஒன்றில் உணராத வாறு உள்ளே பொருந்திய சந்துகளை உடையனவாய்; நெக்குப் பின் கூடாது நிகர்அமைந்த முழந்தாளும் - நெகிழ்ந்து பின் போகாமல் இரண்டும் சமமாக உள்ள முழந்தாட்களும்; மக்க ளுக்கு இல்லாத மாட்சியின் மலிந்தன - மற்ற மக்களுக்கு அமை யாத சிறப்பினால் மிக்கன.

(வி - ம்.) ['நிகர் அமைந்த' என்பதற்கு 'உவமையில்லாத' என்பது வலிந்துகொள்ளும் பொருளாகும்.] (கசசு)

களசு. ஆடுதசை பிறங்காது வற்றாது மயிரகன்று
நீடாது குறுகாது நிகரமைந்த வளவினவாய்ச்
சேடாவ நாழிகையிற் புடைதிரண்டு தேனெய்பெய்
வாடாத காம்பேபோற் கணைக்காலின் வனப்பினவே.

(இ - ள்.) ஆடுதசை பிறங்காது வற்றாது மயிர் அகன்று - ஆடுதசை பெயராமல் வற்றாமலும் மயிர்பெருகி; நீடாது குறுகாது நிகர் அமைந்த அளவினவாய் - நீடாமலுங் குறுகாமலும் [இரண் டும்] சமமான அளவினவாய்; சேடுஆவ நாழிகையின் புடை திரண்டு - பெருமைமிக்க அம்பறாத்தூணி போலத் திரண்டு; தேன் நெய்பெய் வாடாத காம்பேபோல் - தேனும் நெய்யும் பெய்து வைக்கும் வாடாத மூங்கிலே போல்; கணைக்கால் இன் வனப்பின - கணைக்கால்கள் இனிய வனப்பின.

(வி - ம்.) தேவி நிறத்திற்கு உவமை பதுமராகமாயினும், மயிர்கள் பெருகியதனால், காம்பு உவமையாயிற்று. இனி, கணைக்காலின் வனப்பு இன்ன என்றுமாம் [இன்னஎன வருவித்தல் வேண்டும்].

அகன்று - பெருகி. நிகரமைந்த - சமமாகவுள்ள. சேடு - பெருமை. ஆவநாழிகை - அம்புக் கூடு (அம்பறாத்தூணி). வாடாத காம்பு - பச்சை மூங்கில். (கசஎ)

களஎ. பசும்பொன்செய் கிண்கிணியும் பாடகமும் பாடலைப்ப
நயந்தெரி பொற்சிலம்பு முத்தரிபெய் தகநக
வியைந்தெழிலார் மணியாமை யிளம்பார்ப்பின் கூன் [புறம்போ
லசைந்துணர்வு மடிந்தொழியு மடியிணை புகழ்வார்க்கே.

(இ - ள்.) பசும்பொன்செய் கிண்கிணியும் பாடகமும் முத்து அரிபெய்து - புதிய பொன்னாற் செய்யப்பட்ட கிண்கிணி யும் பாடகமும் முத்துக்களால் ஆகிய அரிபெய்யப்பெற்று; பாடு அலைப்ப - தாங்கிக் கிடக்கும் இடத்தை வருத்துவதாலே; எரி பொன் சிலம்பு நயந்து அகம்நக - ஒளிவிடும் பொற்சிலம்பு விரும்

பிச் சிறிதே நகைப்ப; எழில்ஆர் மணிஆமை இளம்பார்ப்பின் கூன்புறம்போல் அடியிணை - அழகு பொருந்திய யாமையின் இளம்பார்ப்பின் வளைந்த முதுகைப் போலும் அடியிணையை; இயைந்து புகழ்வார்க்கு உணர்வு அசைந்து மடிந்து ஒழியும் - புகழ விரும்பிப் புகழ்வார்க்கு உணர்வு துளங்கிக் கெட்டுப்போம்.

(வி - ம்.) "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற்றிளமை", "தவழ்பவை தாமும் அவற்றோ ரன்ன" (தொல். மரபு. ச, ரு) என்றார்.

பாடலைப்ப என்பதனைப் பரடலைப்ப என்று கோடலே பொருந்தும். கிண்கிணியும் பாடகமும் அழகுக்கிட்டனவாகவும் அலைத்தல் கண்டு நயந்தெரி சிலம்பு (அவற்றை இகழ்ந்து) "அகாக" என்றமை உணர்ந்தின்புறுக. (கசஅ)

களஅ. அரக்கியல் செங்கழுநீ ரகவிதழ்போ லுகிர்சூடிப்
பரப்பின்றி நுதியுயர்ந்து பழிப்பறத் திரண்டுநீண்
டொருக்குற நெருங்கிப்பொன் னொளியாழி யகங்கௌவித்
திருக்கவின்கோண் மெல்விரல்க டேனார்க்குந் தகையவே.

(இ - ள்.) திருக்கவின்கொள் மெல்விரல்கள் - திருவின் விரலழகைக் கொண்ட மெல்லிய விரல்கள்; நுதி பரப்பின்றி உயர்ந்து பழிப்பு அறத்திரண்டு நீண்டு ஒருக்குஉற நெருங்கி - நுனி பரப்பின்றிக் காணலுற்றுத் திரண்டு நீண்டு சேர நெருங்கி; ஒளிபொன் ஆழி அகம்கௌவி அகஇதழ்போல் உகிர்சூடி - ஒளியுடைய பொன் மோதிரம் கௌவப்பட்டு, அகஇதழ் போலும் (செம்பஞ்சூட்டிய) உகிரை யணிந்து; தேன் ஆர்க்கும் தகைய - (மலரென்று) தேன்வண்டுகள் ஆரவாரிக்கும் இயல்பின.

(வி - ம்.) குலிகம் ஊட்டின அகவிதழ் செம்பஞ் சூட்டியதற்கு உவமம். (கசகூ)

களகூ. என்போடு நரம்பின்றி யிலவம்பூ வடரனுக்கி
யின்புற வரம்புயர்ந் திருநில முறப்புல்லி
யொன்பதின்சா ணடப்பினு மொருகாத மென்றஞ்சு
மென்பஞ்சிச் சீறடியு மேதக்க விழைவினவே.

(இ - ள்) என்போடு நரம்புஇன்றி இலவம்பூ அடர் அனுக்கி - என்பும் நரம்பும் இன்றி இலவின் இதழைக் கெடுத்து; இன்புற வரம்பு உயர்ந்து இருநிலம் உறப்புல்லி - கண்ணுக்கினிய புறஎல்லை உயர்ந்து நிலத்தைப் பொருந்தத் தழுவி; ஒன்பதின் சாண் நடப்பினும் ஒருகாதம் என்று அஞ்சும் - ஏழடி நடந்தாலும் ஒருகாதம் என்று அஞ்சும்; மென்பஞ்சிச் சீறடியும் மேதக்க விழைவின - மெல்லிய பஞ்சனைய சிற்றடியும் பெருமைதக்க விருப்பின.

(வி - ம்.) எழுடியென்றல் மரபாயிருக்க 'ஒன்பதின் சாண்' என்றது ஒரு காதம் என்னும் [மோனை] எழுத்தை நோக்கி.

தம்மிடம் வந்த பெரியோர்க்கு வழிவிடுதற்குச் செல்லுங் குறைந்த தொலைவு எழுடியென்பர். இதனால் சப்தபரம ஸ்தானம் பெறுவரென்பது சைன நூற் கொள்கை. (கஊ0)

கஅ0. இவ்வுருவு நெஞ்சென்னுங் கிழியின்மே லிருந்திலக்கித்
தவ்வுருவு நினைப்பென்னுந் துகிலிகையால் வருத்தித்துக்
கவ்வியத னோக்கினாற் கண்விடுத்துக் காதனீர்
செவ்விதிற் றெளித்தானுக் காமப்பூச் சிதறினான்.

(இ - ள்.) இவ்வுருவு இருந்து நெஞ்சு என்னும் கிழியின் மேல் இலக்கித்து - (கூறிய) இவ்வடிவை ஒருப்பட்டிருந்து நெஞ்சு என்னும் படத்திலே குறித்து; அவ்வுருவு நினைப்பு என்னும் துகிலிகையால் வருத்தித்து - அதனை நினைவு என்னும் எழுது கோலால் உறுப்பு விளங்க எழுதி; கவ்விய தன் நோக்கினால் கண் விடுத்து - தான் கைக்கொண்ட தியானத்தாலே அதன் கண்ணைத் திறந்து; காதல்நீர் செவ்விதின் தெளித்து - (மாமன் மகளாகை யால்) அன்பு என்னும் நீரைச் சொரிந்து; ஆனுக் காமப்பூச் சிதறி னான் - புணர்ச்சி வேட்கையாகிய குறைவில்லாத மலர்களைச் சிதறினான்.

(வி - ம்.) இவன் எழுதிப் பிரதிட்டித்தான். இலக்கு - குறித்துப் பார்த்தல். 'இருந்து இலேகித்து' என்றும் பாடம். இலேகித்து - எழுதி.

இத்தகைய அழகியாகிய விசயையை (கசூஉ) (நல்லூழ் நடத்த லாலே) சச்சந்தன் நெஞ்சு பொருந்தக் காதலிப்பானாயினன் என்பது கருத்து. (கஊக)

கஅக. மெய்பெறு வெழுத்துயிர்க்கும் மழலைவா யின்முறுவற்
றையலா ணெடுந்தடங்கண் வலைப்பட்டுச் சச்சந்த
னையுறு னணங்கெனவே யகத்தடக்கிச் செல்கின்றான்
மொய்யருக் களியானை முழங்கித்தே னிமிர்தாரான்.

(இ - ள்.) மொய்அருக் களியானை முழங்கித் தேன்இமிர் தாரான் - போரில் நீங்காத மதயானைபோல் முழங்கி, வண்டுகள் ஒலிக்குந் தாரானாகிய சச்சந்தன்; எழுத்து மெய்பெறு உயிர்க்கும் மழலைவாய் இன்முறுவல் தையலாள் - எழுத்து வடிவு பெற்றுத் தோன்றும் இளைய மொழியையும் இனிய முறுவலையும் உடைய அம் மங்கையின்; நெடுந் தடங்கண் வலைப்பட்டு - நீண்ட அகன்ற கண்வலையிலே சிக்கி; ஐயுறுன் அணங்கு எனவே அகத்து அடக் கிச் செல்கின்றான் - கால்நிலம் தோய்தல் கண்இமைத்தல் மாலை

வாடுதல் போன்ற நிலமகளிரின் இயல் கண்டும் ஐயுறாமல் தெய்வ மகளெனவே உட்கொண்டு ஒழுகினான்.

(வி - ம்.) மழலை - எக்காலத்திற்குங் கூறுப. (௧௫௨)

வேறு

௧௮௨. வண்டின முகபடா மணிந்து வார்மத
முண்டுகுத் திடுகளிற் றுழவன் றன்மகள்
பெண்டிர்தம் பெருநலங் கடந்து பெற்றபேர்
விண்டலர் கோதைக்கு விசயை என்பவே.

(இ - ள்.) வண்டுஇனம் முகபடாம் அணிந்து - வண்டின் திரளாகிய முகபடாத்தை அணிந்து; வார்மதம் உண்டு உகுத்திடு களிற்று உழவன் தன் மகள் விசயை என்ப - ஒழுகும் மதத்தைத் தானே உண்டு சிந்தும் களிற்றையுடையவன் மகள் பெயர் விசயை என்பர்; விண்டு அலர் கோதைக்குப் பெண்டிர் தம் பெரு நலம் கடந்து பெற்றபேர் - அரும்பு நெகிழ்ந்து மலரும் கோதை யாட்கு அப்பெயர் பிற மங்கையரின் அழகினை வென்று பெற்ற காரணப் பெயராகும்.

(வி - ம்.) பெயர் பேரென மருவிற்று. [களிற்றுழவன் - களிற்றால் (போர்த்)தொழில் செய்வோன்.]

விசயை - வெற்றியுடையோள். பெண்மையானும் அழகானும் உலகி லுள்ள மகளிரை எல்லாம் வென்றவள் என்பதுபற்றி விசயை என்னும் பெயர் பெற்றனள் என்பது கருத்து. (௧௫௩)

௧௮௩. அருமணி மரகதத் தங்க ணாறிய
வெரிநிறப் பொன்னித ழேந்து தாமரைத்
திருமக ளிவளெனத் திலக வெண்குடைப்
பெருமகன் கோயிலுட் பேதை வைகுமே.

(இ - ள்.) அருமணி மரகதத்து அங்கண் நாறிய - அரிய மணியாகிய மரகதப் பாறையிற் பதுமையென்னும் பொய்கையில் தோற்றிய; எரிநிறம் பொன்இதழ் ஏந்து தாமரைத் திருமகள் இவள் என - நெருப்பின் நிறத்தையுடைய பொன்னிதழ்களை யுடைய தாமரையில் வீற்றிருக்கும் திருமகள் இவளென்னுமாறு; திலகம் வெண்குடைப் பெருமகன் கோயிலுள் - மேலான வெண் குடையையுடைய விதைய மன்னன் அரண்மனையிலே; பேதை வைகும் - விசயை இருந்தாள்.

(வி - ம்.) திலகம் - மேலாதல். திருஉவமம், வடிவிற்கும் நல்வினை யுடையோனிடத்து எகுந்தணையும் பொதுவாய் இருத்தற்கும்.

இமவானில் மரகதப் பாறையில் பதுமை என்னும் கயத்தில் பொற் றாமரை மலரின்கண் திருமகள் தோன்றினள் என்பது ஆருகதர் கொள்கை.

அங்கண்: உலகறி சுட்டு. நாறுதல் - தோன்றுதல். பெருமகன் என்றது விதைய மன்னனை. (௧௫௪)

௧௮௫. கலம்புரி யகலல்குற் றாயர் தவ்வையர்
சிலம்புரி திருந்தடி பரவச் செல்பவள்
வலம்புரி சலஞ்சலம் வளைஇய தோத்தனள்
குலம்புரிந் தனையதோர் கொடியி னீர்மையள்.

(இ - ள்.) குலம் புரிந்தனையது ஓர் கொடியின் நீர்மை யாள் - குலம் கொடியின் இயல்பை விரும்பியது போன்ற இயல்பி னள்; கலம்புரி அகல் அல்குல் தாயர் தவ்வையர் - மேகலை விரும் பின அகன்ற அல்குலையுடைய ஐவகைத் தாயரும் அவர்கள் மக்களாய்த் தனக்கு மூத்தவர்களும்; சிலம்புபுரி திருந்தடி பரவச் செல்பவள் - சிலம்பு விரும்பின அழகிய அடியைப் போற்ற வாழ் பவள்; வலம்புரி சலஞ்சலம் வளைஇயது ஒத்தனள் - வலம்புரிச் சங்குகள் சலஞ்சலத்தைச் சூழ்ந்திருப்பதைப் போன்றனள்.

(வி - ம்) 'சிலம்பு புரி' என்பது 'சிலம்புரி' என விகாரப்பட்டது.

[சலஞ்சலம்: ஆயிரம் வலம்புரிச் சங்குகள்சூழ இருக்கும் சங்கு.]

கலம் - ஈண்டு மேகலை. தவ்வையர் என்றது - செவிலியர் மக்க ளாகிய தமக்கைமார்களை. இவர்க்கு வலம்புரிச் சங்கங்கள் உவமை. சலஞ்சலம்: விசயைக்கு உவமை. (௧௫௫)

௧௮௬. இன்னகிற் கொழும்புகை யுயிர்க்கு மீர்ங்குழன்
மென்மலர்க் கோதைதன் முலைகள் வீங்கலின்
மின்னுருக் குறுமிடை மெலிய மெல்லவே
கன்னிதன் றிருநலங் கனிந்த தென்பவே.

(இ - ள்.) இன் அகில் கொழும்புகை உயிர்க்கும் ஈர்ங்குழல் மென்மலர்க் கோதைதன் முலைகள் - இனிய அகிலின் சிறந்த புகை யூட்டப்பெற்ற குளிர்ந்த குழலையும் மெல்லிய மலர்க்கோதையை யும் உடைய விசயையின் முலைகள்; மின் உருக்குறும் இடை மெலிய வீங்கலின் - மின்னின் வடிவத்தைக் கெடுக்கும் இடை மெலியப் பருத்தலால்; கன்னிதன் திருநலம் மெல்லக் கனிந்தது- கன்னியாகிய அவள் அழகின் நலம் மெல்ல முதிர்ந்தது.

(வி - ம்.) 'மின் நடுக்குறும்' என்றும் பாடம். என்ப: அசை. (௧௫௬)

௧அ௬. முந்துநாங் கூறிய மூரித் தானையக்
கந்து கோல் கடாக்களி யானை மன்னவன்
பைந்தோடிப் பாசிழைப் பரவை யேந்தல்கு
றந்தைமாட் டிசைத்தனன் றனது மாற்றமே.

(இ - ள்.) நாம் முந்து கூறிய மூரித்தானை கந்துகொல் கடாக்களி யானைஅும் மன்னவன் - நாம் முன்னர்க் கூறிய பெரும் படையையும் கட்டுத்தறியை முறிக்கும் மதயானையையும் உடைய அச் சச்சந்தன்; பைந்தொடிப் பாசிழைப் பரவை ஏந்து அல்குல் தந்தை மாட்டு - பைந்தொடியினையும் புதிய அணிகலன்களையும் பரவிய ஏந்திய அல்குலினையும் உடையாளின் தந்தையினிடம்; தனது மாற்றம் இசைத்தனன் - தான் விசயையை மணக்கவேண் டிய மொழியைக் கூறிவிடுத்தான். (௧௬௭)

௧அ௭. மருமகன் வலந்தது மங்கை ஆக்கமு
மருமதிச் சூழ்ச்சியி னமைச்ச ரெண்ணிய
கருமமுங் கண்டவர் கலத்தற் பான்மையிற்
பெருமகற் சேர்த்தினர் பிணைய னாளையே.

(இ - ள்.) மருமகன் வலந்ததும் மங்கை ஆக்கமும் - மரு மகன் கூறியதனையும் மகள் அவனிடம் அன்பை அமைத்துக் கொள்ளுதலையும்; அருமதிச் சூழ்ச்சியின் அமைச்சர் எண்ணிய கருமமும் - கூர்ந்த அறிவினையும் சூழ்ச்சியையும் உடைய அமைச் சர்கள் ஆராய்ந்த கருமத்தையும்; கண்டவர் - கண்ட தந்தையும் தாயும்; கலத்தற் பான்மையால் - மைத்துன முறைமையாலும்; பிணை அனாளை பெருமகன் சேர்த்தினர் - மான்பிணை போன்றவ ளைப் பெருமகனிடம் சேர்த்தனர்.

(வி - ம்.) ஆக்கம் களவியாக்கம் என்புழிப் போல [அமைத்துக் கொள்ளுதல் என்னும் பொருளில்] நின்றது; அவள் முதிர்ச்சியும் ஆம். கருமம் - விசயையின் தமையனாகிய கோவிந்தனுக்குச் சச்சந்தன் துணை யாதல்.

'பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே' (தொல். களவு-௧௪) என் பதனான் ஒப்பும் பெருந்திணைப் பாற்படும் கந்தருவமாமாறு பெரும்பொரு ளான் உணர்க. [பெரும்பொருள் என்பது நூலாக இருக்கலாம்.] (௧௬அ)

வேறு

௧அஅ. பொனங்கொடி யமிர்த னாளும் பொன்னெடுங் குன்ற னானு
மனங்கனுக் கிலக்க மாகி யம்புகொண் டழுத்த விள்ளா
ரினந்தமக் கெங்கு மில்லா ரியைந்தன ரென்ப முக்கட்
சினந்திகழ் விடையி னானுஞ் செல்வியுஞ் சேர்ந்த தொத்தே.

(இ - ள்.) பொன் நெடுங்குன்று அனுனும் பொன்அம் கொடிஅமிர்து அனுளும் - நெடிய பொற்குன்றம் போன்றவனும் அழகிய பொற்கொடியாகிய அமிர்து போன்றவளும்; அம்பு கொண்டு அழுத்த அனங்கனுக்கு இலக்கம்ஆகி - மணத்திற்கு முன்னர்க் காமன் அம்பினுல் அழுத்துதற்கு உரிய இலக்கங்களாக இருந்து; முக்கண் சினம்திகழ் விடையினுனும் செல்வியும் சேர்ந்தது ஒத்து - சீற்றம் விளங்கும் விடையினையுடைய முக்கட் பெருமானும் உமையம்மையும் சேர்ந்ததைப்போல; விள்ளார் - மணம் நிகழ்ந்த பின்னர் நீங்காதவராய்; தமக்கு இனம் எங்கும் இல்லார் - தங்கட்கு உவமை எங்கும் இல்லாதவராய்; இயைந்தனர் - ஒருடம்பாயினர்.

(வி - ம்) 'கொடி' என்றூர், குன்று மறையப் படர்ந்து கேடுபிறப்பித்தலின். அழுத்த இலக்கமாய். காட்சியும் நிலேயும் முயக்கமும் கூறி, அவற்றிற்கு உவமை மேற் கூறுகின்றூர்.

[அமிர்தனுளும் குன்றனுனும்' என்றது காட்சி;'அனங்கனுக் கிலக்கமாகி' என்றது நிலே; இயைந்தனர் என்றது முயக்கம்.]

இலக்கம் - வில்வித்தை கற்கும் மாணவர் அம்பைக் குறிபார்த்துத் தைத்தற்பொருட்டு நடப்படுவதோர் நார்மரம். அவர்கள் மணம் நிகழ்வதற்கு முன்னர் மிகமிகக் காமவேகத்தாலே துன்புற்றனர் என்பது அனங்கனுக்கு அம்புகொண்டழுத்த இலக்கமாகி என்றதன் கருத்தென்க. (கஙிக)

கஅசு. காதலாற் காம பூமிக் கதிரோளி யவரு மோத்தார்
மாதருங் களிற னுனு மாசுண மகிழ்ச்சி மன்ற
லாதரம் பெருகுகின்ற வன்பினு லன்ன மோத்துந்
தீதிலார் திளேப்பி னுமான் செல்வமே பெரிது மோத்தார்.

(இ - ள்) மாதரும் களிறு அனுனும் மகிழ்ச்சி மன்றல் மாசுணம் (ஒத்தும்) - விசயையும் சச்சந்தனும் மகிழ்வையுடைய முயக்கத்தால் பாம்பு போன்றும்; ஆதரம் பெருகுகின்ற அன்பினுல் அன்னம் ஒத்தும்-மேலும் மேலும் பெருகுகின்ற அன்பின் மென்மையால் அன்னத்தை ஒத்தும்; திளேப்பின் ஆமான் (ஒத்தும்) - கண் முதலிய உறுப்புக்களின் துய்ப்பினுல் ஆமானே ஒத்தும்; தீதிலார் காமபூமிச் செல்வமே பெரிதும் ஒத்தார் - குற்றமற்ற அவர்கள் இப் புணர்ச்சிக்கு முன்னர்ப் போகபூமியில் உள்ளாரின் செல்வத்தையே பெரும்பாலும் ஒத்திருந்தனர்; காதலால் கதிரொளியவரும் ஒத்தார் - இப்போது வேட்கையினுற் கதிரொளியவராகிய போகபூமியிலுள்ளாரின் தன்மையையும் ஒத்தனர்.

(வி - ம்.) காதல் - எல்லாப் பொருளேயும் நுகர்தற்குச் செல்லும் வேட்கை. காமபூமி தானப் பயனுற்பெறும் போக பூமி. உம்மை [உயர்வு]

சிறப்பு. ஆதரம் பெருகும் அன்பாவது - புணர்வதன் முன்னும் பின்னும் ஒருதன்மைத்தாய்ச் செயற்கையால் மிகும் அன்பு. அன்னம்: புணர்ச்சியால் மெய்யுருகும் மென்மைக்கு உவமம். பலரும், 'துணைபுணர் அன்னத்தின் தூவி' (கலி. எஉ, சிலப். ரு-கூகூ) என்று, புணர்ச்சியால் தூவிக்கு மென்மை பிறக்கும் என்றார். 'ஒத்தும்' என்பதனை முன்னும் பின்னும் கூட்டுக. இவ்வெச்சத்தைத் தீதிலாரில் 'தீதின்மை'யோடு முடிக்க. 'தீதிலாத் திளைப்பிற்' பாடமாயின் ஆமானை யொத்தும் தீதிலா மாதராரும் களிறனும் என்க. ஆமான் நக்குங்காற் பிறக்கும் இனிமையே ஈண்டு உவமம். ஏகாரம் (செல்வமே) தேற்றம்.

ஆமான் செல்வம் என்பதற்கு ஆமானின் திளைப்புச் செல்வம் எனப் பொருள் கொண்டு ஆற்றொழுக்காகப் பொருள்கோடலாலும் இங்கு நச்சினார்க்கினியர் கூறும் பொருள் கிடைத்தலை உணர்க. (ககூO)

ககூO. தன்னமர் காத லானுந் தையலு மணந்த போழ்திற்
பொன்னறு ளமிர்த மாகப் புகழ்வெய்யோன் பருகி யிட்டான்
மின்னவிர் பூணி னானை வேற்கணார்க் கியற்றப் பட்ட
மன்னிய மதுவின் வாங்கி மாதரும் பருகி யிட்டாள்.

(இ - ள்.) தன் அமர் காதலானும் தையலும் மணந்த போழ்தில் - தன்னால் விரும்பப்பட்ட காதலனும் அவளும் கூடியபோது; புகழ்வெய்யோன் பொன் அருள் அமிர்தம் ஆகப் பருகியிட்டான்- புகழை விரும்பிய அவன் திருவையனையாளை அமுதமாகப் பருகினான்; மாதரும் மின் அவிர் பூணினானை வேல்கணார்க்கு இயற்றப் பட்ட மன்னிய மதுவின் வாங்கிப் பருகியிட்டாள் - விசயையும் ஒளிவிளங்கும் பூணினானை மங்கையர்க்குச் சமைத்த மதுவைப் போல ஏற்று (அவன் பருகின தன்மையை அவளும் கண்டு) பருகினாள்.

(வி - ம்.) வாங்கிப் பருகல் - அவன் காட்டக் கண்டு பருகியிடுதல்; ஒரு சொல். இதனால் அதர பானமும் அல்குற் பானமும் கூறி மேல் இவற்றிற்கு உவமை கூறுகின்றார். (ககூக)

ககூக. பவழவாய் பரவை யல்கு லென்றிவை பருகும் வேலான்
கவழமார் களிறு போன்றான் காதலி கரும்பை யொத்தா
டவழ்மதுக் கோதை மாதர் தாமரைப் பூவ தாக
வுமிழ் நகை வேலி னானு மொண்சிறை மணிவண் டொத்தான்.

(இ - ள்.) பவழவாய் பரவை அல்குல் இவை என்று - பவழம் அனைய சிவந்த இதழையும் பரப்புடைய அல்குலையும் கரும்பும் தாமரைப்பூவும் என்று மனத்திற்கொண்டு; பருகும் வேலான் - நுகரும் சச்சந்தன்; கவழம்ஆர் களிறு போன்றான் - (பவழவாயைப் பருகும்போது) கவளத்தை யுண்ணும் களிற்றைப் போன்றான்; காதலி கரும்பை ஒத்தாள் - விசயை கரும்பைப் போன்றாள்; தவழ்மதுக் கோதை மாதர் தாமரைப் பூவதாக -

தேன்தவழும் மாலையை அணிந்த விசயை(யின் அல்குலைப் பருகும்போது அவள்) செவ்வி குலையாத தாமரைப் பூவாகவே எப்போதும் இருக்க; உமிழ்நகை வேலினானும் ஒண்சிறை மணிவண்டொத்தான் - ஒளிவிடும் வேலினான் ஒள்ளிய சிறகுகளையுடைய நீலநிற வண்டைப் போன்றான்.

(வி - ம்.) 'இவை' என்றது கரும்பையும் தாமரைப் பூவையும். கரும்புவமை நெருக்கி நீர் நுகர்தற்கு. பூவதாக - பூவினது தன்மை எக்காலமும் உண்டாக - இது வேறுபாடின்மையின் வேறுபடவந்த உவமமாயிற்று; எனவே [1]பதுமயோனியாம். 'வேலினானும்' என்றது களிறுபோல வன்மையுடையோனும் என்றவாறு. உம்மை: உயர்வு சிறப்பு.

செவ்வி குலையாதிருக்க நுகர்வதொரு வண்டு இல்பொருளுவமை. (கசுஉ)

கசுஉ. பளிக்கறைப் பவழப் பாவை பரிசேனத் திகழுஞ் சாயற்
களிக்கயல் பொருவ போன்று கடைசிவந் தகன்ற கண்ணா
ளொளிக்கவின் கொண்ட காமத் தூழுறு கனியை யொத்தா
ளளித்தயில் கின்ற வேந்த னஞ்சிறைப் பறவை யொத்தான்.

(இ - ள்.) பளிங்கு அறை பவழப் பாவை பரிசு எனத் திகழும் சாயல்-பளிக்குப் பாறையை அடுத்த பவழப்பாவை இவளது தன்மை என விளங்கும் மென்மையையும்; களிக்கயல் பொருவ போன்று கடைசிவந்து அகன்ற கண்ணாள் - களிப்பையுடைய கயல்கள் தம்மிற் பொருவன போன்று பொருது கடைசிவந்து அகன்ற கண்களையும் உடைய விசயை; ஒளிக்கவின் கொண்ட காமத்து ஊழுறு கனியை ஒத்தாள் - ஒளியையும் அழகையுங் கொண்ட, விருப்பம் ஊட்டும் முதிர்ந்த கனியைப் போன்றாள்; அளித்து அயில்கின்ற வேந்தன் அம்சிறைப் பறவை ஒத்தான் - அவளுக்கு மேன்மேலும் விருப்பத்தையூட்டி நுகரும் சச்சந்தன் அழகிய சிறகையுடைய வாவலைப் போன்றான்.

(வி - ம்.) பளிக்குப் பாறையை அடுத்த பவழப்பாவை இவளது தன்மையெனத் திகழும் சாயல். ஈண்டு ஒளியது மென்மை; இது செயற்கை நலம். இதற்கு அடுத்தது காட்டும் பளிங்கைப் (குறள், எ0௬) பவழம் தன் தன்மையாக்கினாற்போல, அடுத்த மகளிர் தன்மையனும் அரசனை இவளும் தன் தன்மையே ஆக்கிக்கொண்டாளெனக் கதை கருதிய நயமுமுண்டு. பொருவ போன்று பொருதென விரிக்க. கொண்ட கனி. அயிறல் - உண்டல். 'உண்டற்குரிய அல்லாப் பொருளை - உண்டனபோலக் கூறலும் மரபே' (தொல். பொருளியல்-கசு) 'தோணலமுண்டு துறக்கப்பட்டோர்' (கலி. உ௩) என்றார் பிறரும். பழமும் வாவலும் வடுப்பட நுகர்தற்குவமை. (கசு௩)

---

1. சீவக. உகஅ. உரை.

வேறு

௧௯௩. துறுமலர்ப் பிணையலுஞ் சூட்டுஞ் சுண்ணமு
நறுமலர்க் கண்ணியு நாறு சாந்தமு
மறுநிலத் தமிர்தமு மகிலு நாவியும்
பெறுநிலம் பிணித்திடப் பெரியர் வைகினார்.

(இ - ள்.) துறுமலர்ப் பிணையலும் சூட்டும் சுண்ணமும் - மலர் நெருங்கும் மார்பின் மாலையும் நெற்றிக்கட்டும் சுண்ணப் பொடியும்; நறுமலர்க் கண்ணியும் நாறு சாந்தமும்-நல்ல மலரால் ஆன முடிமாலையும் மணமுறு சந்தனமும்; அறுநிலத்து அமிர்தமும் அகிலும் நாவியும் - அறுசுவை உண்டி முதலியனவும் அகிலும் புழுகும் ஆகிய இவைகள்; பெறுநிலம் பிணித்திட - தம்மை நுகரும் ஐம்பொறிகளைப் பிணிப்ப உயர்ந்த இவர்கள் இன்பமுற்றிருந்தனர்.

(வி - ம்.) அமிர்தம் - அடிசிலும் பானமும் முதலியன. இனி, அறுநிலத்தமிர்தம் - அறுசுவையுமாம்; ஆறு காலத்திற்கு [இளவேனில் முதலியன] உரிய பானமும் ஆம். (௧௯௪)

௧௯௪. துடித்தலைக் கருங்குழற் சுரும்புண் கோதைதன்
னடித்தலைச் சிலம்பினோ டரவ மேகலை
வடித்தலைக் கண்மலர் வளர்த்த நோக்கமோ
டடுத்துலப் பரிதவ ளூறி லின்பமே.

(இ - ள்.) அவர் ஊறுஇல் இன்பம்-அவர்களுடைய இடையூறில்லாத இன்பம்; துடித்தலைக் கருங்குழல் சுரும்புஉண் கோதைதன்-ஏலம் என்னும் மயிர்ச் சாந்தணிந்த கருங்குழலையும் வண்டு நுகரும் மாலையையும் உடைய விசயையின்; வடித்தலைக் கண்மலர் வளர்த்த நோக்கமோடு - மாவடுவனைய கண்மலர்கள் ஊடலையுங் கூடலையும் விளைவித்த நோக்கத்தாலே; அடித்தலைச் சிலம்பினோடு மேகலை அரவம் அடுத்து - (அவள் ஊடினபோது) அடி அவன் தலையிற் படுதலிற் பிறந்த சிலம்பின் ஒலியோடும்; (கூடின காலத்துப் பிறந்த) மேகலையின் ஒலியோடும்; உலப்பு அரிது - முடிதல் அரிதாயிருந்தது.

(வி - ம்.) 'அவன் ஊறில் இன்பம்' என்றும் பாடம்.

துடி - ஏலம். வடித்தலைக்கண் - ஒப்பினால் வடுவகிரிடத்தே நிற்குங் கண். (௧௯௫)

௧௯௫. இழைகிள ரிளமுலை யெழுத நுண்ணிடைத்
தழைவளர் மதுமலர் தயங்கு பூஞ்சிகைக்
குழைமுகக் கோடியோடு குருதி வேலினான்
மழைமுகின் மாரியின் வைகு மென்பவே.

(இ - ள்.) இழைகிளர் இளமுலை எழுதும் நுண்இடைத் தழைவளர் மதுவலர் தயங்கு பூஞ்சிகைக் குழைமுகக் கொடியொடு - பூண் விளங்குதற்குக் காரணமான இளமுலையும், ஓவியம் எழுதுவார்; இதன் தன்மை கருதி எழுதுதற்குக் காரணமான நுண்ணிடையும், தழையிலே வளர்ந்த தேன்பொருந்திய மலர் விளங்கும் அழகிய கூந்தலும், குழைபொருந்திய முகமும் உடைய கொடியுடன்; குருதி வேலினன் மழைமுகில் மாரியின் வைகும் - குருதி தங்கிய வேலையுடைய சச்சந்தன் மாரிக்காலத்து மழை முகில்போல அருள் பொழிந்து தங்கும்.

(வி - ம்.) முலை முதலியவற்றையுடைய கொடி: இல் பொருளுவமை. (கசுசு)

கசுசு. படுதிரைப் பவழவா யமுத மாந்தியுங்
கோடிவளர் குவிமுலைத் தடத்துள் வைகியு
மிடியினுங் கொடியினு மயங்கி யாவதுங்
கடிமணக் கிழமை யோர் கடலின் மிக்கதே.

(இ - ள்.) படுதிரைப் பவழவாய் அமுதம் மாந்தியும் - கடலிற் பவழம்போலும் வாயின் அமுதத்தை உண்டும்; கொடி வளர் குவிமுலைத் தடத்துள் வைகியும் - கொடியில் வளரும் குவிந்த முலையில் தங்கியும்; இடியினும் கொடியினும் யாவதும் மயங்கி - இடிக்கப்படும் மாவைப் போலவும் நூழிற் கொடி போலவும் உணர்வும் உடம்பும் எல்லாம் மயங்கி; கடிமணக் கிழமைஓர் கடலின் மிக்கது - அவர்களுடைய மிக்கதான கூட்டத்தின் உரிமை ஒரு கடலினும் மிகுந்தது.

மாந்துதல் - பருகுதல். இடி - கூலங்களை இடித்த மா. கொடியினும் என்புழி கொடி நூழிற்கொடி. மணக்கிழமை என்றது, புணர்ச்சியின்பப்பேற்றினை. (கசுஎ)

கசுஎ. கப்புரப் பசுந்திரை கதிர்சேய் மாமணிச்
செப்பொடு சிலதிய ரேந்தத் தீவிய
துப்புமிழ்ந் தலமருங் காம வல்லியு
மொப்பரும் பாவைபோன் றுறையு மேன்பரே.

(இ - ள்.) கப்புரப் பசுந்திரை கதிர்செய் மாமணிச் செப்பொடு சிலதியர் ஏந்த - கருப்பூரத்தையும் பச்சை வெற்றிலையையும் ஒளிவிடும் மாணிக்கச் செப்பிலே சேடியர் ஏந்த; தீவிய துப்பு உமிழ்ந்து - ஐம்பொறிக்கும் இனிய நுகரும் பொருள்களைத் தானும் கணவனுமாக நுகர்ந்து; அலமரும் காமவல்லியும் - புணர்ச்சிக்கு அலமரும் காமவல்லி போன்ற விசயையும்; ஒப்பு

அரும் பாவை போன்று உறையும் - உவமையற்ற பாவைபோலத் தங்கினாள்.

(வி - ம்.) கப்புரம்: பாகதம் [கருப்பூரம் என்னும் வடமொழிச் சிதைவு.] காமவல்லியும்: உம்: உயர்வு சிறப்பு. வேறு கருத்துச் செல்லாமல் தன்னையே கருதுவித்தலின் 'பாவை' என்றார்.

இதற்கு முன்பு உலகியல் மணங் கூறிக், காமமிகுதியாற் கெடுகின்றமை மேற்கூறுகின்றார்.

பசுந்திரை - பசிய வெற்றிலைச் சுருள். சுருட்டப்படுதலால் (திரைக்கப்படுதலால்) திரை என்பது அதற்குப் பெயராயிற்று. சிலதியர் - பணி மகளிர். தீவிய - இனிய. துப்பு - நுகர்வன. கற்பக மரத்தே படர்தற்கு அலமருகின்ற காமவல்லி போல்வாள் என்பது கருத்து. பாவை - கொல்லிப்பாவை இது தன்னைக் கண்டாரை அப்பாற் போகவிடாமல் கவர்ந்து மயக்குதல்பற்றி உவமையாக எடுத்தார் என்பார் நச்சினார்க்கினியர் 'வேறு கருத்துட் செல்லாமல் தன்னையே கருதுவித்தலின் பாவை யென்றார்' என்றார். (௧௯௮)

௧௯௮. மண்ணகங் காவலின் வழுக்கி மன்னவன்
பெண்ணருங் கலத்தொடு பிணைந்த பேரருள்
விண்ணக மிருள்கொள விளங்கு வெண்மதி
யொண்ணிற வுரோணியோ டொளித்த தொத்ததே.

(இ - ள்) மன்னவன் மண்ணகம் (இருள்கொளக்) காவலின் வழுக்கி - சச்சந்தன் நிலவுலகம் இருளுறக் காவலிற் பிழை செய்து; பெண் அருங்கலத்தொடு பிணைந்த பேரருள் - பெண்களுக்கு அருங்கலமானவளுடன் கூடிய அளவிறந்த கண்ணோட்டம்; விளங்கு வெண்மதி விண்ணகம் இருள்கொள - விளக்கமான திங்கள் வானகம் இருளடைய; ஒண்ணிற உரோணியோடு ஒளித்தது ஒத்தது - ஒளிமிகும் உரோகிணியுடன் மறைந்தது போன்றது.

(வி - ம்.) காவலின்: இன்: [ஐந்தனுருபு] நீக்கப்பொருட்டு. உரோணி: உரோகிணி: விகாரம். அவ்வுரோகிணி காரணத்தின் இருடி சபிக்க மதிதேய்ந்ததொரு கதை.

பேரருள் என்றது அளவிறந்த கண்ணோட்டத்தை.

உவமைக்குக் கூறிய இருள்கொள என்பதனை மண்ணகம் இருள்கொள என்று உவமைக்குங் கூட்டுக. (௧௯௯)

வேறு

௧௯௯. குங்குமத் தோளி னானுங் கொழுங்கயற் கண்ணி னாளுந்
தங்கிய காதல் வெள்ளந் தணப்பறப் பருகு நாளுட்
டிங்கள்வெண் குடையி னாற்குத் திருவிழுக் குற்ற வண்ணம்
பைங்கதிர் மதியிற் றெள்ளிப் பகர்ந்தெடுத் துரைத்து மன்றே.

(இ - ள்.) குங்குமத் தோளினானும் கொழுங்கயற் கண்ணினாளும் - குங்குமம் அணிந்த தோளானும் மதர்த்த கயலனைய கண்ணாளும்; தங்கிய காதல் வெள்ளம் தணப்பு அறப் பருகும் நாளுள் - நிலைபெற்ற காதற் பெருக்கை நீக்கமின்றி நுகரும் காலத்தில்; திங்கள் வெண்குடையினாற்குப் பைங்கதிர் மதியில் திரு இழுக்குஉற்ற வண்ணம் - திங்களனைய வெண்குடையினையுடைய அவனுக்குப் பசிய நிலவினையுடைய மதிபோலச் செல்வம் நாளடைவிற் குறைந்த தன்மையை; தெள்ளிப் பகர்ந்து-தெரிந்து கூறி; எடுத்து உரைத்தும் - (பின்னர்) சீவகன் சரிதம் எடுத்துரைக்கத் தொடங்குகிறோம்.

(வி - ம்.) இதன் கருத்து: இச் செய்யுட்கு அங்கமாகிய [நாடு, நகர், கோயிற் சிறப்பு முதலிய] வருணனைகள் கூறி, அதற்குரிய தலைவனை நாட்டுகின்றார், இத்துணையும் அவன் தோன்றற்குக் காரணங் கூறி, அதற்கு முற்பிறப்பில் அன்னப் பார்ப்பைப் பிரித்த தீவினை வந்து குரவரைப் பிரித்தலுங் கூறவேண்டுதலின், திரு இழுக்குற்றமை முற் கூறுகின்றார் என்றுணர்க. திரு இழுக்குறுதலாவது கட்டியங்காரற்கு அரசளித்தலும் அமைச்சர்சொற் கேளாமையும்.

[சீவகன் முற்பிறப்பு வரலாறு இந்நூலின் உஅ௫௬-ஆஞ் செய்யுள் முதலியவற்றால் உணர்க].

பைங்கதிர் மதியின் திருவிழுக்குற்ற என மாறுக. மதி - தேய் பருவத்துத் திங்கள்.

இனி, பைங்கதிர் மதி என்பதற்கு அறிவு என்றே பொருள்கோடல் அமையும். ஆசிரியர் பரிமேலழகர் இப்பொருளே கொண்டனர். இதனை, அவர் "ஒளிதிகழ் உத்தி உருகெழு நாகம்" (௧உ-௪) எனவரும் பரிபாடல் அடிக்கு வாளா - நாகம் (மரம்) என்றே பொருள் கூறி, 'நெட்டிலை வஞ்சிக்கோ' (பழம்பாடல்) என்புழியும் 'புல்லிலை வஞ்சிப் புறமதில் அலைக்கும் கல்லென் பொருநை' (புறநா. ௩௮௭) என்புழியும் மரவிசேடத்திற் குள்ளன அதன் பெயர்த்தாய ஊரின்கண்ணும் 'திங்கள் வெண்குடையினாற்குத் திருவிழுக் குற்றவண்ணம் பைங்கதிர் மதியிற் றெள்ளிப் பகர்ந்தெடுத் துரைத்தும்' என்புழிச் சந்திரற்குள்ளது அவன் பெயர்த்தாய அறிவின்கண்ணும் ஏற்றப் பட்டாற் போல்" என்று கூறுதலான் உணர்க. (௧௯௦)

உ00. களிறனா னமைச்சர் தம்முட் கட்டியங் கார னென்பா
னொளிறுவாட் டடக்கை யானுக் குயிரென வொழுகு நாளுட்
பிளிறுவார் முரசிற் சாற்றிப் பெருஞ்சிறப் பியற்றி வேந்தன்
வெளிறிலாக் கேள்வி யானை வேறுகொண் டிருந்து சொன்னான்.

(இ - ள்.) களிறனான் அமைச்சர் தம்முள் கட்டியங்காரன் என்பான் - களிறுபோன்ற சச்சந்தனுக்கு அமைச்சர்களாக வுள்ளவர்களிற் கட்டியங்காரன் என்பவன்; ஒளிறுவாள் தடக்கையானுக்கு உயிரென ஒழுகும் நாளுள் - விளங்கும் வாளேந்திய

கையையுடைய மன்னனுக்கு உயிர்போலப் பழகிவரும் நாட்களில்; வேந்தன் வெளிறு இலாக் கேள்வியானைப் பிளிறுவார் முரசின் சாற்றிப் பெருஞ் சிறப்பு இயற்றி - அரசன் வெள்ளைத் தன்மையில்லாத கேள்வியையுடைய அவனுக்கு, ஒலிக்கும் முரசினால் நாட்டுக்கறிவித்துப் பெருஞ் சிறப்புகளை நல்கி; வேறு கொண்டிருந்து சொன்னான் - தனியே அழைத்து இருத்திக் கொண்டு கூறுகிறான்.

(வி - ம்.) [நச்சினார்க்கினியர் ஒளிறுவாள் தடக்கையான் கட்டியங்காரனாகவும், வெளிறிலாக் கேள்வியான் நிமித்திகன் என்னும் அமைச்சனாகவுங் கொண்டு மாட்டேற்றிப் பொருள் கூறுவர்.]

அவர் கூறுவது: 'கோதனன்' (சீவக உசo) என்றும் 'கரிமாலை நெஞ்சினன்' (சீவக. உகூச) என்றும், 'கல்லா மந்திரி' (சீவக. ௩சரு) என்றும் மேற்கூறலின், கட்டியங்காரனை, 'வெளிறிலாக் கேள்வியான்' எனலாகாது; இனி இகழ்ச்சிக் குறிப்பு என்பாருமுளர்' என்பது.

இக்கூற்றால் வெளிறிலாக் கேள்வியானைக் கட்டியங்காரன் எனவே இவருக்கு முந்திய உரையாசிரியர்கள் கூறினர் என்றும் அது 'இகழ்ச்சிக் குறிப்பு' என்று கருதினர் என்றும் அறியலாம். நிமித்திகன் என்ற பெயருடைய மந்திரி யொருவனைப் பின்னர் 'ஓர் நிமித்திகன்' (சீவக. உoச) எனக் கூறுதலானும், இங்குப் பெயர் கூறாமையானும், ஆற்றொழுக்காகப் பொருள்கோடற் கியலாவழியே மாட்டேறு வேண்டுமாதலானும் கட்டியங்காரனெனக் கோடலே தக்கது.]

மதச்செருக்காற் பாகன் தோட்டியை நீவுமாறுபோலக் காமக் களிப்பால் தன் அமைச்சர் கூற்றைக் கடத்தல் நோக்கிக், 'களிறனான்' என்றார். நிமித்திகன் கருமமே கூறுதலும் கட்டியங்காரன் அரசன் கருத்திற் சேரப் ஒழுகுதலும் இரண்டற்குங் காரணம். (கஎக)

உoக. அசைவிலாப் புரவி வெள்ளத் தரிஞ்சயன் குலத்துட் டோன்றி
வசையிலா வரத்தின் வந்தாள் வான்சுவை அமிர்த மன்னாள்
விசையையைப் பிரித லாற்றேன் வேந்தனீ யாகி வைய
மிசைபடக் காத்தல் வேண்டும் இலங்குபூண் மார்ப வென்றான்.

(இ - ள்.) இலங்குபூண் மார்ப! விளங்கும்பூண் அணிந்த மார்பனே! அசைவுஇலாப் புரவி வெள்ளத்து அரிஞ்சயன் குலத்துள் தோன்றி - தோலாத புரவிப்பெருக்கையுடைய அரிஞ்சயன் மரபிலே தோன்றி; வசையிலாள் வரத்தின் வந்தாள் - குற்றமற்றவளாய், என் முற்பிறவியில் வேண்டுகோளாலே பிறந்தவளும்; வான்சுவை அமிர்தம் அன்னாள் விசயையை - சுவைமிகும் வானுலக அமிர்தம் போன்றவளும் ஆகிய விசயையை; பிரிதல் ஆற்றேன் - பிரியும் ஆற்றல் இலேன்; நீவேந்தன் ஆகி வையம் இசைபடக் காத்தல் வேண்டும் என்றான் - (ஆகையால்) நீ அரசனாகி உலகைப் புகழ்பெறக் காப்பாயாக என்று கூறினான்.

(வி - ம்.) அரிஞ்சயன் : விசயை பாட்டன். வசையிலாள் : வினையெச்சமுற்று. 'வேண்டும்' என்பது உம்மீற்றுன் வந்ததோர் ஏவல் கண்ணிய வியங்கோள்; 'வாழ்தல் வேண்டும் இவண் வரைந்த வைகல்' (புறநா. ௩௬௭) என்றூர் பிறரும். (கஎ௨)

௨0௨. அண்ணரு னுரைப்பக் கேட்டே யடுகளிற் றெருத்தி னிட்ட
வண்ணப்பூந் தவிசு தன்னை ஞமலிமே லிட்ட தொக்குங்
கண்ணகன் ஞாலங் காத்தல் எனக்கெனக் கமழுங் கண்ணி
மண்ணகம் வளருந் தோளான் மறுத்துநீ மொழிய லென்றன்.

(இ - ள்.) அண்ணல்தான் உரைப்பக் கேட்டு - (கட்டியங்காரன்) தான் கருதியிருந்ததனை அரசனே கூறக்கேட்டு (மகிழ்ந்து); எனக்குக் கண் அகல் ஞாலம் காத்தல்-என் நிலையில் இடமகன்ற உலகை ஆளுவது; அடுகளிற்று எருத்தின் இட்ட வண்ணப் பூந்தவிசு தன்னை ஞமலிமேல் இட்டது ஒக்கும் - அடுகளிற்றின் கழுத்தில் இட்ட அழகிய கழுத்து மெத்தையை நாயின் மேல் இட்டது போலாகும்; என - என்று கூறி மறுப்ப; கண்ணி கமழும் மண்ணகம் வளரும் தோளான் - மாலை மணக்கும் நில உலகம் வாழும் தோளையுடைய மன்னன்; நீ மறுத்து மொழியல் என்றான் - என்பொருட்டாக நீ மறுத்துக் கூறாதே என்றான்.

(வி - ம்.) தவிசு - கழுத்து மெத்தை. 'மண் எழுவனைய தோள்' பாடமாயின், 'பண்ணிய எழு' ஆம்; 'ஆவுநி மண்ணி' (மதுரைக். ௪௯௪) என்றாற்போல. 'தோளாய்' என்பதும் பாடம்.

இச் செய்யுட்கு நச்சினார்க்கினியர், தன் தலைவன்பால் ஒப்பற்ற அன்புடையதாய் அவனால் செயப்படுந் துன்பத்தையும் பொருட்படுத்தாமல் எதிர்த்த வேல் மெய்யதா வால்குழைக்கும் நாயினையே தனக்கு உவமை கூறிக்கொண்டான் கட்டியங்காரன் சச்சந்தன் தன்னை ஐயுறாமைப் பொருட்டென்பதுபட "வேறோரூர்தி கூறாது ஞமலியைக் கூறினன் அவன் அயிராது தருதற்கு" என்று கூறியது ஆற்றவும் இன்பமுடைத்து. (கஎ௩)

௨0௩. எழுதரு பருதி மார்ப னிற்றென விசைத்த லோடுந்
தொழுதடி பணிந்து சொல்லுந் துன்னலர்த் தொலைத்த வேலோய்
கழிபெருங் காத லாள்கட் கழிநலம் பெறுக வையம்
பழிபடா வகையிற் காக்கும் படுநுகம் பூண்பல் என்றன்.

(இ - ள்.) எழுதரு பருதிமார்பன் இற்றுஎன இசைத்தலோடும் - காலை யிளஞாயிறு போலும் மார்பனான சச்சந்தன் என்னிலைமை இத்தன்மைத்து என்று கூறிய அளவிலே; தொழுது அடிபணிந்து - அடியைத் தொழுது கும்பிட்டு; சொல்லும் துன்னலர்த் தொலைத்த வேலோய் - கூறப்படும் பகைவரை

அழித்த வேலவனே!; கழிபெருங் காதலாள்கண் கழிநலம் பெறுக - நீ மிகப்பெருங் காதலியினிடத்திலே மிகவும் இன்பம் அடைக; பழிபடா வகையில் வையம் காக்கும் படுநுகம் பூண்பல் என்றான் - (யான்) பழிவரா வகையில் நிலவுலகைக் காக்கும் பெரிய சுமையைப் பூண்பேன் என்று கட்டியங்காரன் கூறினான்.

(வி - ம்) தன் நினைவை அவன் காரியம்போற் கூறினான்.

மார்பன் : சச்சந்தன். இற்று - இத்தன்மைத்து. 'வையம் இசை படக் காத்தல் வேண்டும்' (௨0க) என்ற மன்னனுக்கு 'வையம் பழிபடா வகையிற் காக்கும் படுநுகம் பூண்பல்' என்றதன்கண் கட்டியங்காரன் தன்னடக்கமும் நின்பொருட்டே இச் சுமையைப் பூண யான் இசையா நின்றேன் என்பதுந் தோன்றுதல் உணர்க. (கஎச)

௨0௬. வலம்புரி பொறித்த வண்கை மதவலி விடுப்ப வேகிக்
கலந்தனன் சேனை காவல் கட்டியங் கார னேன்ன
வுலந்தரு தோளி னாய்நீ யொருவன்மேற் கோற்றம் வைப்பி
னிலந்திரு நீங்கு மென்றோர் நிமித்திக னெறியிற் சொன்னான்.

(இ - ள்.) வலம்புரி பொறித்த வண்கை மதவலி விடுப்ப ஏகி - வலம்புரி தீட்டிய வண்கையினாலே, மதவலியாகிய சச்சந்தன் காட்டி விடுப்பச் சென்று; சேனை காவல் கட்டியங்காரன் கலந்தனன் என்ன - சேனையைக் காப்பதிற் கட்டியங்காரன் சேர்ந்தான் என்று கூறக்கேட்டு; உலம்தரு தோளினாய் நீ ஒருவன் மேற் கொற்றம் வைப்பின் - கற்றூண் போன்ற தோளினாய்! நீ ஒருவனிடம் உன் ஆட்சியைச் சுமத்தினால்; நிலம்திரு நீங்கும் என்று - நிலமும் திருவும் நின்னைவிட்டுப் போய்விடும் என்று; ஓர் நிமித்திகன் நெறியிற் சொன்னான் - ஒப்பற்ற நிமித்திகன் என்னும் அமைச்சன் நெறியுறக் கூறினான்.

(வி - ம்.) [நச்சினார்க்கினியர் ஓர் என்பதற்கு 'நீயே ஆராய்ந்து பார்' என்று பொருள் கூறுவர். அதற்கு முடிபு, 'என்று ஓர்' என்பதனை 'ஓர் என்று' என மாற்ற வேண்டும்.]

'பொறித்த' எனப் பிறவினையாற் கூறினார், அயன் படைத்தல் நோக்கி. மத : [வலியை] விசேடித்த உரிச்சொல். உலம் வளர்க்குந் தோள்.

அரசற்குரிய அங்கம் ஆறனுள் படையே தலைசிறந்தது ஆதல்பற்றி அரசன் ஏவல் பெற்றவுடன் கட்டியங்காரன் படைஞரை வயப்படுத்துதற்றொழிலையே முதற்கண் மேற்கொண்டான் என்பது போதரத் தேவர் "மதவலி விடுப்ப ஏகிக் கலந்தனன் சேனைகாவல் கட்டியங்காரன்" என்றோதுதல் உணர்க. மதவலி: அன்மொழித்தொகை : சச்சந்தன்.

'நீ' என்றது அரசுரிமையுடைய நீ என்பதும் 'ஒருவன்' என்றது ஏதிலான் ஒருவன் என்பதும்பட நின்றமை நினைக. (கஎ௫)

உ0௫. எனக்குயி ரென்னப் பட்டா னென்னலாற் பிறரை யில்லான்
முனைத்திற முருக்கி முன்னே மொய்யமர் பலவும் வென்றான்
றனக்கியான் செய்வ செய்தேன் தான்செய்வ செய்க வொன்று
மனக்கின மொழிய வேண்டா வாழிய ரொழிக வென்றான்.

(இ - ள்.) எனக்கு உயிர் என்னப் பட்டான் - என் உயிர் போன்றவன்; என் அலால் பிறரை இல்லான் - என்னையன்றி மற்றவரை நட்புறாதவன்; முன்னே முனைத்திறம் முருக்கி மொய் அமர் பலவும் வென்றான் - இச் சிறப்பை அவன் பெறுதற்கு முன்னேயே போர்க்களங்களின் அணிவகுப்பு முதலிய கூறுபாடு களை அழித்துச் சிறந்த போர் பலவினும் வெற்றியுற்றான்; தனக்கு யான்செய்வ செய்தேன் - (ஆகையால்) அவனுக்கு நான் செய்யுங் கடமைகளைச் செய்தேன்; தான் செய்வ செய்க - அவன் தனக்கு விருப்பமானவற்றைச் செய்துகொள்க; ஒன்றும் மனக்கு இன மொழிய வேண்டா - நீ சிறிதும் மனத்திற்குத் தீமை தரும் பொருமைச் சொற்களைச் சொல்லவேண்டா; வாழியர் - நீயும் நின்னிலையிலே நில்; ஒழிக என்றான் - இனி இம்மொழியைத் தவிர்க என்றுரைத்தான்.

(வி - ம்.) என்னலாற் பிறரை யில்லான்: இன்மை உடைமைக்கு மறுதலை. 'வென்றான்' எனவே நடத்துதற்குரியவன் என்றான். நன்மையுந் தீமையும் கருதிச் செய்க எனப் பன்மையாற் கூறினர். (கஎசு)

உ0சு. காவல குறிப்பன் றேனுங் கருமமீ தருளிக் கேண்மோ
நாவலர் சொற்கோண் டார்க்கு நன்கலாற் றீங்கு வாரா
பூவலர் கோடிய ஞர்கட் போகமே கழுமி மேலும்
பாவமும் பழியு முற்றார் பற்பலர் கேளி தென்றான்.

(இ - ள்.) காவல! நாவலர் சொற்கொண் டார்க்கு நன்கு அலால் தீங்கு வாரா - அரசே! அமைச்சர் சொற்கேட்டவர்க்கு நன்மையேயல்லாமல் தீமைகள் வாரா; குறிப்பு அன்றேனும் அருளிக் கேண்மோ - திருவுளம் இன்றேனும் அருள்கூர்ந்து கேட்க; ஈது கருமம் - ஒருவன்பால் அரசுரிமையை நல்காதிருப்பது காரியம்; (என்றான். அதற்கு உடம்படாமையின்) பூ அலர் கோடியனார்கண் போகமே கழுமிப் பாவமும் பழியும் உற்றார் மேலும் பற்பலர் இதுகேள் என்றான் - மலர் மலர்ந்த கொடியனைய மங்கையர்பால் இன்பமே கொண்டு மயங்கிப் பாவமும் பழியும் அடைந்தோர் நின்னை ஒழிய முன்னும் பற்பலர்; இதனைக் கேள் என்றான்.

(வி - ம்.) நாவலர் - அமைச்சர்; கழுமி - மயங்கி. [1]இஃது உலகியலாற் கூறினான். மேற்கூறுவன வெல்லாம் போகத்தையே நோக்குதலின், இதுவென ஒருமையாற் கூறினான். (கஎஎ)

1. அமைச்சர் சொற்கேட்டால் அரசனுக்குத் தீங்கு வாராதென்பது.

உ௦எ. பெரும்பெயர்ப் பிரம னென்னும் பீடினாற் பெரிய நீரா
னரும்பிய முலையி னாளுக் கணிமுக நான்கு தோன்ற
விரும்பியாங் கவளை யெய்தான் விண்ணக மிழந்த தன்றித்
திருந்தினாற் கின்று காறுஞ் சிறுசோல்லாய் நின்ற தன்றே.

(இ - ள்.) பெரும்பெயர்ப் பிரமன் என்னும் பீடினாற் பெரிய நீரான் - பெரும்புகழ் பெற்ற பிரமன் என்னும் தவத்தாற் பேரியல்பு பெற்றவன்; அரும்பிய முலையினாளுக்கு - அரும்பனைய முலைகளையுடைய திலோத்தமையின் பொருட்டு; அணிமுகம் நான்கு தோன்ற விரும்பி ஆங்கு அவளை எய்தான் - அழகிய முகங்கள் (முன்னிருந்த முகமன்றி) நான்கு தோன்ற விரும்பி நோக்கியும் அவளை ஆங்கு அடைய முடியாமல்; விண் அகம் இழந்தது அன்றி - வானுலகை இழந்ததோடு நில்லாமல்; திருந்தினாற்கு இன்றுகாறும் சிறுசொல்லாய் நின்றது - பின் தவத்தால் திருந்திய அவனுக்கு இன்றுவரையிற் பழிச்சொல்லாய் நின்ற தல்லவோ ?

(வி - ம்.) பெயர் - புகழ். அன்றே: ஏ வினா. முறைசெய்யாமையின் தன்னிலை யிழந்தான். 'தோற்றி' என்றும் பாடம்.

நான்முகம் தோன்றியது : பிரமனுக்கு அரம்பையரிடத்துக் காமம் உண்டாயிற்று. அவர்கள் இணங்காமையால், அவர்களை அடைதற்குரிய இந்திர பதவியை வேட்டுத் தவம் புரிந்தான். மூன்றரைக் கோடி ஆண்டுகள் கடந்தன. இந்திரன் தன் பதவிக்கு வேறொருவன் வர விருப்பமில்லாமையாற் பிரமன் தவத்தை அழிக்கத் திலோத்தமை என்னும் அரம்பையை அனுப்பினான். அவள் பிரமன் எதிரில் வந்து ஆடல் பாடலால் ஒருபுறம் நின்று மயக்கினாள். பிரமன் விழித்துப் பார்த்தான். இவள் மற்றொரு புறம் சென்று ஆடினாள். அப்புறம் திரும்பினாற் பிற தவமுனிவர்கள் இகழ்வார்கள் என்று நினைத்துத் தன் ஒரு கோடி ஆண்டின் தவச்சிறப்பால் அவளிருந்த பக்கம் ஒரு முகம் உண்டாக்கி நோக்கினான். அவள் மீறுபுறம் சென்றாள். அங்கும், மற்றொரு புறத்திலும் அவ்வாறே மற்றும் இரண்டு கோடி ஆண்டின் தவச்சிறப்பால் இரு முகமும் உண்டாக்கிக்கொண்டு இயற்கையான ஒரு முகத்துடன் நான்முகனாகி அவள் சென்ற திசையெலாம் நோக்கினான். அவள் வானிலே நின்று ஆடினாள். அரைக்கோடி ஆண்டின் தவசிறப்பால் மேனோக்கிய முகமொன்றும் அமைத்துக்கொண்டான். அவள் மறைந்தாள். காமத்தை அடக்கவியலாத பிரமன் ஐம்முகங்களுடன் வானவழியே செல்லும் தெய்வ மங்கையரை வலிதிற் பற்றித் துன்புறுத்தினான். வானவர் வேண்டுகோளாற் சதாசிவமூர்த்தி பிரமனுடைய மேனோக்கிய தலையைக் கிள்ளியெறிய, நான்முகனாகிய அவன் எல்லோராலும் பழிக்கப்பட்டுத் தன் பதவியையும் இழந்தான் - இவ்வாறு தர்ம பரீக்ஷை என்னும் சைன நூலில் மூன்றாம் படலத்திற் கூறப்படுவதாக டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களின் பதிப்பிற் கூறப்படுகிறது.

சைவ நூல்களில் இதற்கு வேறான கதைகள் கூறப்படுகின்றன.

(கஎஅ)

உ௦அ. கைம்மலர்க் காந்தள் வேலிக் கணமலை யரையன் மங்கை
மைம்மலர்க் கோதை பாகங் கொண்டதே மறுவ தாகக்
கோய்ம்மலர்க் கொன்றை மாலைக் குளிர்மதிக் கண்ணியாற்குப்
பெய்ம்மல ரலங்கல் மார்ப பெரும்பழி யாயிற் றன்றே.

(இ - ள்.) பெய்ம்மலர் அலங்கல் மார்ப - இடப்பட்ட மாலை மார்பனே!; கைம்மலர்க் காந்தள்வேலிக் கணமலை அரையன் மங்கை மைம்மலர்க் கோதை - கைபோல மலரும் காந்தள் வேலியையுடைய, தொகுதியாகவுள்ள மலைகளுக்கரசன் மனைவி மேனைபெற்ற, நீலமலராற் செய்த கோதையணிந்த இறைவியை; பாகம் கொண்டதே மறுவதுஆக - இடப்பக்கத்தில் வைத்ததே மறுவுடைய தொன்றாக; கொய்ம்மலர்க் கொன்றைமாலைக் குளிர் மதிக் கண்ணியாற்கு - கொய்த மலராலாகிய கொன்றைமாலையை யும் குளிர்ந்த பிறைக்கண்ணியையும் உடைய இறைவனுக்கு; பெரும்பழி ஆயிற்று அன்றே - பெரிய பழியாக முடிந்தது அல்லவோ?

(வி - ம்.) மைம்மலர்க் கோதை - நீலமலராற் செய்த கோதை; இறைவி: ஆகுபெயர். மாலை - அடையாளப் பூ. கண்ணி - சூடும்பூ. [1]'கண்ணியும் தாரும் எண்ணினர் ஆண்டே' (தொல். மரபு. எக) என்றார்.

மலையரையன் மங்கை: மேனை. மலர்க்கோதை: பார்ப்பதி. மதிக் கண்ணியான்: சிவன். (கஎக)

உ௦கூ. நீனிற வண்ண னன்று நெடுந்துகில் கவர்ந்து தம்முன்
பானிற வண்ண னோக்கிற் பழியுடைத் தென்று கண்டாய்
வேனிறத் தானை வேந்தே விரிபுனற் றொழுனை யாற்றுட்
கோனிற வளையி னார்க்குக் குருந்தவ னொசித்த தென்றான்.

(இ - ள்.) வேல் நிறம் தானை வேந்தே - வேலின் விளக்க முறு படையையுடைய மன்னனே!; அன்று நீல்நிறம் வண்ணன் நெடுந்துகில் கவர்ந்து - முற்காலத்தில் நீலநிறமுடைய கண்ணன் பல துகில்களைக் கவர்ந்து; தம்முன் பால்நிறம் வண்ணன் நோக்கிற் பழியுடைத்து என்று - தன் முன்னவனாகிய பலதேவன் பார்த் தாற் பழிவரும் என்று எண்ணி; விரிபுனல் தொழுனை ஆற்றுள் கோல்நிற வளையினார்க்கு அவன் குருந்து ஒசித்தது என்றான் - பரவிய நீரையுடைய யமுனையாற்றிலே நீராடிய, திரண்ட ஒளி மிகும் வளையினை யணிந்த ஆய்ச்சியருக்குக் கண்ணன் குருந்தை ஒடித்தது என்றான்.

(வி - ம்.) வேனிறம் - வேலினது விளக்கம். கோல் - திரட்சி. ஒசித்தது: மறைந்தது என்றுங் கூறுவர்.

---

1. கண்ணி கார்நறுங் கொன்றை காமர் - வண்ண மார்பிற் றாருங் கொன்றை (புறநா. கடவுள் வாழ்த்து.)

நீலநிறம் - நீல்நிறம் என நின்றது. நீனிறவண்ணன்: கண்ணன. பானிறவண்ணன் - பலதேவன். (கஅ0)

உக0. காமமே கன்றி நின்ற கழுதைகண் டருளி னாலே
வாமனார் சென்று கூடி வருந்தினீ ரேன்று வையத்
தீமஞ்சேர் மாலைபோல விழித்திடப் பட்ட தன்றே
நாமவேற் றடக்கை வேந்தே நாமிது தெரியி னென்றான்.

(இ - ள்.) நாமவேல் தடக்கை வேந்தே! - அச்சந்தரும் வேலேந்திய அரசே!; காமமே கன்றிநின்ற கழுதை கண்டு-காமத்திலேயே அடிப்பட்டு நின்ற ஆண் கழுதையைப் பார்த்து; அருளினாலே வாமனார் சென்று கூடி வருந்தினீர் என்று - அருளாலே புத்தனார் பெண் கழுதையாய்ச் சென்று கூடி, 'இக்காமத்தாலே வருந்தினீரே' என்ன; நாம் இது தெரியின் - நாம் (அவ்வாறு நிகழ்ந்த) இக்காமத்தை ஆராயின்; வையத்து ஈமம்சேர் மாலை போல இழித்திடப்பட்டது - உலகிலே சுடுகாட்டில் விழுந்த மாலைபோல இழித்துக் கூறப்பட்டது அல்லவோ?; என்றான் - என்று கூறினான்.

(வி - ம்.) காமமே: ஏகாரம், தேற்றம். என்று - என்ன.

வாமனார்: புத்தன். ஆர்விகுதி, இகழ்ச்சிக் குறிப்பு. வருந்தினீர் - வினை. ஈமம் - சுடுகாடு. நாமம் - அச்சம். (கஅக)

உகக. படுபழி மறைக்க லாமோ பஞ்சவ ரன்று பெற்ற
வடுவுரை யாவர் பேர்ப்பார் வாய்ப்பறை யறைந்து தூற்றி
யிடுவதே யன்றிப் பின்னு மிழுக்குடைத் தம்ம காம
நடுவுநின் றுலக மோம்ப னல்லதே போலு மென்றான்.

(இ - ள்.) படுபழி மறைக்கலாமோ? - காமத்தாற் பிறந்த பழியை மறைக்க முடியுமோ?; பஞ்சவர் அன்று பெற்ற வடுவுரை யாவர் பேர்ப்பார்? - அக்காலத்திற் பாண்டவர் ஐவரும் ஒருத்தியையே மனைவியாக்கலிற் பெற்ற பழியுரையை நீக்குவார் யார்?; காமம் வாய்ப்பறை அறைந்து தூற்றி இடுவதே அன்றிப் பின்னும் இழுக்கு உடைத்து - காமம் வாய்ப்பறையாலே பரப்பித் தூற்றியிடுதல் அன்றி மறுமையினும் நரகம் முதலியவற்றைத் தரும் வழுவுடையது; நடுவுநின்று உலகம் ஓம்பலே நல்லது போலும் என்றான் - (ஆதலால்) நடுவுநிலையிலே நின்று உலகைக் காத்தலே நல்லதுபோலும் என்றான்.

(வி - ம்.) போலும்: ஒப்பில் போலி. [ஓம்பலே நல்லது என மாறுக.]

பஞ்சவர்: ஐவர், பாண்டவர். அன்று: பண்டறி சுட்டு. (கஅஉ)

உசஉ. ஆரறி விகழ்தல் செல்லா வாயிரஞ் செங்க ணனுங்
கூரறி வுடைய நீரார் சொற்பொருள் கொண்டு செல்லும்
பேரறி வுடையை நீயும் பிணையனாட் கவலஞ் செய்யு
மோரறி வுடையை யென்று னுருத்திர தத்த னென்பான்.

(இ - ள்.) ஆரறிவு இகழ்தல் செல்லா ஆயிரம் செங்கணனும் - பேரறிவை மற்றோர் இகழ்தல் இயலாத ஆயிரங் கண்ணனை இந்திரனும்; கூர்அறிவு உடைய நீரார் சொற்பொருள் கொண்டு செல்லும் - கூரிய அறிவுடைய பண்பினராம் அமைச்சர் சொல்லின் பொருளைக் குறிக்கொண்டு நடப்பான்; நீயும் பேரறிவு உடையை-இந்திரனைப்போல நீயும் பேரறிவு உடையாய்; பிணை அனாட்கு அவலம் செய்யும் ஓர் அறிவுடையை என்றான் உருத்திரதத்தன் என்பான்-எனினும் இப்போது பிணைபோன்ற விசயைக்குத் துன்பம் உண்டாக்கும் ஓரறிவு உடையை ஆனாய் என்று உருத்திரதத்தன் உரைத்தான்.

(வி - ம்.) அவலம்: அரசன் கொலை செய்யப்படல்.

[நிமித்தகன் கூறியவற்றை அரசன் கேளாமையின் உருத்திரதத்தன் இங்ஙனம் உரைத்தான்.]

ஆர்அறிவு - நிரம்பிய அறிவு. கூர்அறிவு - கூர்த்த அறிவு. நீயும் என்புழி உம்மை சிறப்பு. பிணையனாள் - பெண்மான் போன்ற விசயை. ஓர் அறிவு என்றது காமமே கன்றிநின்ற இவ்வோரறிவே என்பது படநின்றது. (கஅங)

உசங. அளந்துதாங் கொண்டு காத்த வருந்தவ முடைய நீரார்க்
களந்தன போக மெல்லா மவரவர்க் கற்றை நாளே
யளந்தன வாழு நாளு மதுவெனக் குரைய லென்றான்
விளங்கொளி மணிகள் வேய்ந்து விடுசுட ரிமைக்கும் பூணான்.

(இ - ள்.) விளங்கு ஒளிமணிகள் வேய்ந்து விடுசுடர் இமைக்கும் பூணான் - ஒளிவீசும் மணிகள் பதித்து ஒளிவிடும் பூண்களையுடைய சச்சந்தன்; தாம் அளந்துகொண்டு காத்த அருந்தவம் உடையார்க்கு - தாம் அளவாகக்கொண்டு போற்றிய அரிய தவத்தினர்க்கு; அற்றைநாளே போகம் எல்லாம் அளந்தன - கருவில் அமைந்தபோதே நுகர்ச்சியெல்லாம் அளவிடப் பட்டுள்ளன; அவரவர்க்கு வாழும் நாளும் அளந்தன - அவரவர்க்கு அப்போது வாழ்நாட்களும் அளவிடப்பட்டுள்ளன; அது எனக்கு உரையல் என்றான் - (ஆகவே) நிலையாமையைப் பற்றி நீ எனக்கு உரைத்தல் வேண்டா என்று கூறினான்.

(வி - ம்.) போகமும் என்னும் உம்மை கூறிற்றிலர், செஞ்சொலாய் முற்படக் கிடத்தலின். 'நிலம்திரு நீங்கும்' (உ0ச) என நிமித்திகன்

கூறிய செல்வ நிலையாமையையும், உருத்திர தத்தன் கூறிய யாக்கை நிலையாமையையும் நிலையாமை என ஒருமையாக்கி, 'அது' என ஒருமையாற் கூறினான். உரையல் என்றான் நிமித்திகனை நோக்கி, அவன் உரியன் ஆதலின். (கஅச)

உகரு. மூரித்தேந் தாரி னாய்நீ முனியினு முறுதி நோக்கிப்
பாரித்தேன் றரும நண்ணூல் வழக்கது வாதல் கண்டே
வேரித்தேங் கோதை மாதர் விருந்துனக் காக வின்பம்
பூரித்தேந் திளைய கொங்கை புணர்கயான் போவ லென்றான்.

(இ - ள்.) மூரித்தேன் தாரினாய் - பெருமையுடைய தேன் பொருந்திய மாலையினாய்; தரும நண்ணூல் வழக்குஅது ஆதல் கண்டு உறுதி நோக்கிப் பாரித்தேன் - நண்ணிய அறநூலின் ஆணை இடித்துக் கூறல் அமைச்சர்க்கு இயல்பு என்பதை உணர்ந்து, நின்நலத்தை நோக்கி இதுவரை பரக்கக் கூறினேன்; வேரித்தேன் கோதைமாதர் பூரித்து ஏந்துஇளைய கொங்கை விருந்து இன்பம் உனக்காகப் புணர் - மணமுறு தேன் பொருந்திய மாலையணிந்த மாதரின் பூரித்து ஏந்திய இளைய கொங்கையின் புதிய இன்பம் உனக்குக் கிடைக்குமாறு புணர்க; நீ முனியினும் யான் போவல் என்றான் - நீ என்னை வெறுத்தாலும் (நின் தவறு காணமல்) யான் துறவிடத்தே செல்வேன் என்று நிமித்திகன் கூறினான்.

(வி - ம்) மூரி பண்பு மாத்திரம் உணர்த்தாத பெயராதலின், வேற்றுமைத் தொகை. முனியினும் என்பது எதிர்காலம் உணர்த்தும் எச்சம்; உம்மை ஐயம். 'இளைய கொங்கை' என்று இளமை நிலையாமை கூறினான். அரசன் போவென்னமல் தானே போவேன் என்றல் நீதியன்மையின், துறவு உட்கோள் ஆயிற்று. [1]இதனான், 'வெளிறிலாக் கேள்வியான்' (சீவக. உஎ) என்றார்.

'களிறனான்' (சீவக. உஎ) முதல் இத்துணையும் ஒருதொடர்.

பாரித்தல் - மிக மிக விரித்துப் பேசுதல். 'தரும நண்ணூல்' என்றது திருக்குறளை. அதன்கண் கூறப்படுவது,

"அறிகொன் றறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன்." (குறள், கூகஅ)

என்பது. (கஅரு)

வேறு

உகசு. இனமா மென்றுரைப் பினுமே தமெனான்
முனமா கியபான் மைமுளைத் தெழலாற்
புனமா மலர்வேய் நறும்பூங் குழலாண்
மனமா நெறியோ டியமன் னவனே.

---

1. வெளிறிலாக் கேள்வியான் நிமித்திகனென நச்சினார்க்கினியர் கருதியது முற்கூறப்பட்டது.

(இ - ள்.) புனமாமலர் வேய்நறும் பூங்குழலாள் மனம் ஆம் நெறிஓடிய மன்னவன் - முல்லை மலர்சூடிய மணமிகும் அழகிய குழலாள்பால் மனங்கொண்ட, அரச நெறிகெட்ட அரசன்; முனம் ஆகிய பான்மை முளைத்து எழலால் - முற்பிறப்பின் தீவினை முளைத்துத் தோன்றுதலாலே; இனம் ஆம்என்று உரைப்பினும் ஏதம்எண்ணான் - நின் வேட்கை முற்கூறிய தேவர்களின் வேட்கைக்கு இனமானது என்று பின்னும் கூறினும் தனக்கு வரும் தீங்கை எண்ணாதவன் ஆனான்.

(வி - ம்.) குழலாள் மனமாம் மன்னவன், நெறியோடிய மன்னவன் என இயைக்க.

இனம் என்றது யான் முற்கூறிய தேவர் காமத்திற்கு இனம் என்றவாறு. எண்ணான் - எண்ணான். பான்மை - ஊழ். ஈண்டுப் போகூழ். இச்செய்யுள் நூலாசிரியர் சச்சந்தனுக்கு இரங்கிக் கூறியது.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்."

என்றிரங்கினவாறு. நெறி - தனக்குரிய அரசியனெறி. (கஅசு)

உகசு. கலையார் துகிலேந் தல்குலுங் கதிர்சூழ்
முலையார் தடமும் முனியா துபடிந்
துலையாத் திருவின் னமிர்துண் டொளிசேர்
மலையார் மணிமார் பன்மகிழ்ந் தனனே.

(இ - ள்) திருவின் கலைஆர் துகில் ஏந்து அல்குலும் - விசயையின் மேகலையும் துகிலும் அணிந்த அல்குலையும்; கதிர்சூழ் முலைஆர் தடமும் - ஒளிவிடும் முலைத்தடத்தையும்; முனியாது படிந்து - வெறாது தோய்ந்து; உலையா அமிர்து உண்டு - கெடாத இளமைச் செவ்வியை நுகர்ந்து; ஒளிசேர் மணிமலைஆர் மார்பன் மகிழ்ந்தனன் - ஒளிபொருந்திய மலையனைய மார்பன் (வேறு மனக்கவலையின்றி) மகிழ்ந்தான்.

(வி - ம்.) மலையார் : ஆர் : ஒத்த. (கஅஎ)

உகஎ. விரிமா மணிமா லைவிளங் குமுடித்
திருமா மணிசிந் துதிளைப் பினரா
யெரிமா மணிமார் பனுமேந் திழையு
மருமா மணிநா கரின யினரே.

(இ - ள்.) எரிமாமணி மார்பனும் ஏந்து இழையும் - ஒளிவிடும் மணிமார்பனும் விளங்கும் பூணினளும்; விரிமா மணிமாலை விளங்குமுடித் திருமாமணி சிந்து திளைப்பினராய் - மார்பிற் கிடந்த விரிந்த மாமணி மாலையும் நீல மணிபோலும் மயிர்முடி

யிற் கிடந்த தெய்வ வுத்தியும் சிதறும் முயக்கத்தினராய்; அரு மாமணி நாகரின் ஆயினர் - அரிய பெரிய மாணிக்கத்தையுடைய நாகரைப்போல் ஒன்றாயினர்.

(வி - ம்.) காமவின்ப நுகர்ச்சியில் நாகர் சிறந்தவர் என்பதுபற்றி நாகரின் ஆயினர் என்றார். "நாகநீள் நகரொடு போகம் மன்னும் புகார்" (க.உக-உஉ) என்றார் இளங்கோவடிகளாரும். (கஅஅ)

உகஅ. நறவார்ந் ததோர்நா கிளந்தா மரைவா
யுறவீழ்ந் ததோரோண் மணிபோன் றுரவோ
னறவாக் கியவின் பமமர்ந் தவிருட்
கறைவேற் கணினாள் கனவுற் றனளே.

(இ - ள்.) அமர்ந்த இருள் - அவ்வாறு நாகரைப்போல இன்பம் அமர்ந்த இருளிலே; நறவு ஆர்ந்தது ஓர்நாகு இளந் தாமரைவாய் - தேன் நிறைந்த மிக்க இளமை பொருந்திய தாமரையில்; வீழ்ந்ததுஓர் ஒண்மணி போன்று உரவோன் உற - வீழ்ந்த ஒரு முத்தைப்போன்று சீவகன் விசயையின் கருவில் உற; இன்பம் அறவு ஆக்கிய கனவு கறைவேல் கணினாள் உற்றனள் - அப்பொழுதே இன்பம் அறுதலை ஆக்கிய கனவைக் குருதிக்கறை பொருந்திய வேலனைய கண்ணினாள் கண்டாள்.

(வி - ம்.) தேன் நிறைதலும் மிக்க இளமையும் மாறாத தாமரை எனவே பதுமயோனியாம். உறவோன் உற - பிள்ளையார் (சீவகன்) அவதரிக்க. அறவு : தொழிற்பெயர்.

நாகிளந் தாமரை : ஒருபொருட் பன்மொழி. கணினாள் - கண்ணினாள். இருள் : இரவிற்கு ஆகுபெயர். கனா - குறியதன்கீழ் ஆக்குறுகி உகரமேற்றுக் கனவு என்றாயிற்று. (கஅகூ)

வேறு

உககூ. பஞ்சி யடிப்பவ ளத்துவர் வாயவ
டுஞ்சு மிடைக்கன மூன்றவை தோன்றலி
னஞ்சி நடுங்கின ளாயிழை யாயிடை
வெஞ்சுடர் தோன்றி விடிந்ததை யன்றே.

(இ - ள்.) பஞ்சிஅடிப் பவளத் துவர்வாயவள் - பஞ்சி யனைய அடியும் பவளமனைய சிவந்த வாயையுமுடையவளாகிய விசயை; துஞ்சும் இடைக் கனமூன்று - துயிலிடைக் கண்ட கனவு மூன்று; அவை தோன்றலின் - அவை பின்பு மனத்தே தோன்ற லின்; ஆயிழை அஞ்சி நடுங்கினள் - ஆயிழையாள் அச்சமுற்று மெய்விதிர்ப்புற்றனள்; ஆயிடை வெஞ்சுடர் தோன்றி விடிந்தது - அக்காலத்தே வெங்கதிரவன் தோன்றி விடிவுற்றது.

(வி - ம்.) எனவே [வைகறையிற் கண்டதால்] கடிதிற் பயக்கு மாறாயின. இவை பிற்பயக்கும் கனவாதலின் பின்னும் நெஞ்சில் தோன்றின.

கனு – ஈற்றுகாரம் குறுகிக் கன என நின்றது. விடிந்ததை: ஐ: சாரியை; வினைத்திரி சொல் என்பர் நச்சினார்க்கினியர் (சீவக. உஉங). ஆயிடை: சுட்டு நீண்டது. (கக0)

உஉ0. பண்கெழு மெல்விர லாற்பணைத் தோளிதன்
கண்கழூஉச் செய்து கலைநல தாங்கி
விண்பொழி பூமழை வெல்கதிர் நேமிய
வண்புகழ் மாலடி வந்தனை செய்தாள்.

(இ - ள்.) பணைத்தோளி - மூங்கிலனைய தோளி; பண் கெழு மெல்விரலால் கண்கழூஉச் செய்து - யாழொடு பழகிய தன் மெல்லிய விரலாற் கண்களைக் கழுவி; கலைநல தாங்கி-நல்ல ஆடை யணிந்து; விண்பொழி பூமழை வெல்கதிர் நேமிய வண்புகழ் மால்அடி வந்தனை செய்தாள் - வானவர் பெய்யும் பூமழையையும் தீவினையை வெல்லும் அறவாழியையும் வளவிய புகழையும் உடைய அருகப்பெருமானடியை வணங்கினாள்.

(வி - ம்.) பண்: [யாழ் நரம்புக்கு] காரிய ஆகுபெயர்; யாழொடு பயின்ற விரலும் [வந்தனை செய்தாள் என வருதலாற் கையை உணர்த்தியது கொண்டு] சினை ஆகுபெயர். கழூஉச் செய்து, 'நல்ல, மரூஉச் செய்து' (நாலடி. உசசு) என்பதுபோல நின்றது. விண்: [இட] ஆகுபெயர். தீவினையை வெல்லும் அறவாழி.

'தெய்வம் அஞ்சல்' (தொல்-மெய்ப். உச) என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரம், தன்குல தெய்வத்தை வணங்குதற்கு விதியாமாறு உணர்க. ['தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழு தெழுவாள்' என்பது தமிழ் மறையாதலின் இவ்வாறு நச்சினார்க்கினியர் விளக்கங் கூறினார்.] (ககக)

உஉக. இம்பரி லாநறும் பூவொடு சாந்துகொண்
டெம்பெரு மானடிக் கெய்துகென் றேத்தி
வெம்பரி மானெடுந் தேர்மிகு தானையத்
தம்பெரு மானடி சார்ந்தன ளன்றே.

(இ - ள்.) இம்பர்இலா நறும் பூவொடு சாந்து கொண்டு - இவ்வுலகில் நிகர் இல்லாத நறிய மலரையும் சந்தனத்தையுங் கொண்டு; எம்பெருமான் அடிக்கு எய்துக என்று ஏத்தி - எம் பெருமானே! நின் அடிக்கு இவை பொருந்துவன ஆகுக என்று பரவி; வெம்பரிமான் நெடுந்தேர் மிகுதானை அத்தம் பெருமான் அடிசார்ந்தனள் - வெம்மையுறுங் குதிரையும் நெடுந்தேரும் மிகுந்த படையையுடைய தன் கணவன் அடியை வணங்கினாள்.

(வி - ம்.) எய்துக என்று : எய்து கென்று: அகரம் தொகுத்தல் விகாரம். பரிமான் - குதிரை. மான் : ன் : சாரியை.

அ : உலகறி பொருண் மேற்று [உலகறி சுட்டு]. (ககூஉ)

உஉஉ. தானமர் காதலி தன்னொடு மாவலி
வானவர் போன்மகிழ் வுற்றபின் வார்நறுந்
தேனெனப் பாலெனச் சில்லமிர் தூற்றெனக்
கானமர் கோதை கனமொழி கின்றாள்.

(இ - ள்.) மாவலி தான்அமர் காதலி தன்னொடு வானவர் போல் மகிழ்வு உற்றபின் - மாவலிமையுடைய ச்ச்சந்தன் தன்னால் விரும்பப்பட்ட காதலியுடன் வானவர்தம் நோக்கத்தால் நுகர்வதுபோல இவனும் மகிழ்வுற்ற பிறகு; தேன்எனப் பால் எனச் சில்அமிர்து ஊற்றுஎன - தேனும் பாலும் அமிர்தின் ஊற்றும்போல; கான்அமர் கோதை கன மொழிகின்றாள்-மணம் பொருந்திய கோதையாள் தான் கண்ட கனவைக் கூறுகின்றாள்.

(வி - ம்.) கனவு மூன்றுக்கும் தேன் முதலிய மூன்றும் உவமம்: 'பிண்டி.........வீழ்ந்தது' (சீவக. உஉ௩) என்னும் மொழி, இவள் கூறுதலின் இனிதாய்ப் பின் தீங்கு விளைத்தலின் தேனுவமம்; 'ஆர்ந் தோர் வாயிற் றேனும் புளிக்கும்' (குறுந். ௩௫௪) என்றார் பிறரும். 'எண், முத்தணி மாலை' (சீவக. உஉ௩) என்ற சொல் குலந்தூய்மை கூறுதலிற் பாலுவமம். இவன் (சீவகன்) ஆக்கத்திற்கு ஊறும் அமிர்து உவமம்; இவன் ஆக்கம் அமுதுபோல் உயிர்களைக் காத்தலின். (ககூ௩)

உஉ௩. தோத்தணி பிண்டி தொலைந்தற வீழ்ந்ததெண்
முத்தணி மாலை முடிக்கிட னாக
வொத்ததன் றாள்வழி யேமுளை யோங்குபு
வைத்தது போல வளர்ந்ததை யன்றே.

(இ - ள்.) பிண்டிஅணி தொத்துஅறத் தொலைந்து வீழ்ந்தது - ஓர் அசோகு, தான் அணிந்த கொத்துக்கள் முற்றுங் கெட்டுப் பின்பு தானும் நேராக வீழ்ந்தது; அதன் தாள்வழியே முளைஒத்து - அதன் வழியிலே ஒரு முளை அதனை ஒத்து; எண் முத்து அணிமாலை முடிக்கு இடன்ஆக - எட்டு அழகிய முத்து மாலையை ஒத்த மாலைகளையுடைய ஒரு முடிக்கு இடம்ஆக; வைத்ததுபோல ஓங்குபு வளர்ந்தது - நட்டு வைத்தாற்போல ஓங்கி வளர்ந்தது (என்று விசயை கூறினாள்).

(வி - ம்.) முத்தணி மாலை - முத்தையொத்த மாலை; அணி, 'மின்னனி நுண்ணிடை' (சிற். ௩௪உ) என்றாற்போல் உவமவுருபு; என்றது வெள்ளிய மாலையை. இது குலந்தூய்மை கூறிற்று; 'வெண் டாமரை மலர்த் தடங்கள் போலு, நங்குடி' (சீவக. ௫௪௭) என்பர்

மேலும்; முத்தமாலை யெனின், மேல், 'நறுமாலை' (சீவக. உஉரு), 'எண் கோதைத் தொகை' (சீவக. உகூ0எ) என்றல் பொருந்தாது. வளர்ந்ததை: வினைத்திரி சொல்; 'உரைத்ததை' (கலி. எகூ) போல.

மேலே, 'தளும்பு நலத்தாரோடு' (சீவக. உஅஅகூ) என்றலின், முத்தணி மாலையைக் கனவிற் கண்டாள்; அது காரணம். இதனாற் சுற்றங் கெட்டபடியும் அரசன் கெட்டபடியுங் கூறினார். அது கதையிற் காண்க. (ககூச)

உஉச. வார்குழை வில்லிட மாமுடி தூக்குபு
கார்கெழு குன்றனை யான்கன வின்னியல்
பார்கெழு நூல்விதி யாற்பயன் றான்தெரிந்
தேர்குழை யாம லெடுத்துரைக் கின்றான்.

(இ - ள்.) கார்கெழு குன்றனையான் - முகில் தவழும் மலை போலச் சலிப்பில்லாத சச்சந்தன்; கனவின் இயல் பார்கெழு நூல் விதியால்தான் பயன் தெரிந்து - கனவின் தன்மையை உலகிற் பொருந்திய கனநூலின் விதியாலே தான் பயனைத் தெரிந்து; வார் குழை வில்இட மாமுடி தூக்குபு - நீண்ட குழை ஒளிவிட முடியை அசைத்து; ஏர் குழையாமல் எடுத்து உரைக்கின்றான் - (அவற்றில் நல்லவற்றை எடுத்து) அவள் அழகு கெடாமற் கூறு கின்றான்.

(வி - ம்.) அஃது அசோகு முறிந்தது கூறாமல் மாலையையும் முடியையும் இரண்டு கனவாகப் பிரித்தது. (ககூரு)

உஉரு. நன்முடி நின்மக னாநறு மாலைக
ளன்னவ னாலம ரப்படுந் தேவியர்
நன்முளை நின்மக னாக்கம தாமெனப்
பின்னத னாற்பயன் பேசலன் விட்டான்.

(இ - ள்.) நன்முடி நின்மகன் ஆம் - அழகிய முடி உன் மகனாகும்; நறுமாலைகள் அன்னவனால் அமரப்படும் தேவியர் - மணமிகு மாலைகள் அவனால் விரும்பப்படும் தேவியர்; நன்முளை நின்மகன் ஆக்கமது ஆம்என - அழகிய முளை நின்மகனின் மேம் பாடு ஆகும் என; மூன்றாக்கிக் கூறிய பிறகு, பின்னதனாற் பயன் பேசலன் விட்டான் - இற்றதனால் உள்ள பயனைக் கூறாமல் விட்டான்.

(வி - ம்.) 'குருதிக் கோட்டுக் குஞ்சர நகரம்' (சீவக. உகஅஉ) (அத்தினபுரம்)போல, முத்த மாலையை மாலையென்னும் பெயர் கருதி நறுமாலை என்றல் ஆகாமை யுணர்க; மாலையென்னும் பெயர் பொது வாகலின். (ககூகூ)

உஉசு. இற்றத ஞற்பய னென்னென வேந்திழை
யுற்றதின் னேயிடை யூறெனக் கேன்றலு
மற்றுரை யாடல ளாய்மணி மாநிலத்
துற்றதோர் கோதையிற் பொற்றொடி சோர்ந்தாள்.

(இ - ள்.) இற்றதனல் பயன் என்னென - பிண்டி இற்று வீழ்ந்ததனுற் பயன்என் என்று விசயை வினவ; ஏந்திழை இன்னே எனக்கு இடையூறு உற்றது என்றலும் - ஏந்திழையே! இங்ஙனே எனக்கு ஓர் இடையூறு நேர்ந்தது என்றுரைத்ததும்; பொற்றொடி மற்று உரையாடலளாய் - பொன்னாலான தொடி யுடையாள் வேறு ஒன்றும் மொழியாதவளாய்; மணி மாநிலத்து அற்றது ஓர் கோதையிற் சோர்ந்தாள் - மணிநிலத்தே அற்று வீழ்ந்ததோர் கோதைபோல வீழ்ந்தாள்.

(வி - ம்.) உற்றதென இறந்த காலத்தாற் கூறினான், தெளிவு பற்றி; 'இல்லை, கண முந்துறுத வினை' (பழ. உ) என்றலின். இன்னே, உதாசீனம் போல (விருப்பு வெறுப்பின்றிக் கூறியதுபோல) நின்றது. (கசுஎ)

உஉஎ. காவி கடந்தகண் ணீரோடு காரிகை
யாவி நடந்தது போன்றணி மாழ்கப்
பாவியே ஞவி வருத்துதி யோவெனத்
தேவியை யாண்டகை சென்றுமெய் சார்ந்தான்.

(இ - ள்.) காரிகை காவி நடந்த கண்ணீரொடு - விசயை காவியனைய கண்ணீருடனே; ஆவி நடந்ததுபோன்று அணி மாழ்க - உயிர் நீங்கினாற்போல அழகு கெடுதலாலே; ஆண்டகை சென்று - ஆடவரிற் சிறந்தவன் சென்று; பாவிஎன் ஆவி வருத் துதியோ எனத் தேவி மெய்யைச் சார்ந்தான் - பாவியேனுடைய ஆவியை வருத்துகின்றனையோ என்று கூறி அவளை மெய்யைத் தழுவினான்.

(வி - ம்.) தேவியை மெய்யை என இரண்டிடத்தும் ஐயுருபு வருதல் (தொல் - வேற்றுமை மயங்-கு) 'தெள்ளிது' என்றதனான் முடியும். (கசுஅ)

உஉஅ. தண்மலர் மார்புறத் தழீஇயி னனவள்
கண்மலர்த் தாள்கன வின்னியல் மெய்யெனும்
பெண்மய மோபெரி தேமட வாய்க்கெனப்
பண்ணுரை யாற்பர வித்துயர் தீர்த்தான்.

(இ - ள்.) தண்மலர் மார்பு உறவே தழீஇயினன்-குளிர்ந்த அகன்ற மார்பிலே பொருந்தத் தழுவினான்; அவள் கண் மலர்ந்

தாள் - (அதனால்) அவள் கண்விழித்தாள்; கனவின் இயல்மெய் எனும் பெண்மயம் ஓ மடவாய்க்குப் பெரிது என - (அப்போது) மடவாய் நினக்குக் கனவின் தன்மையை மெய்யெனக் கருதும் பெண்ணியல்பு ஓ பெரிதாக இருந்தது என்று; பண் உரையாற் பரவித் துயர் தீர்த்தான் - புனைந்துரையாற் புகழ்ந்து துயர் நீக்கினான்.

(வி - ம்.) ஏகாரம்: ஈற்றிசை. ஓ: வியப்பு.

[பண் உரை - கற்பனை மொழி.] "மார்புறவே" என்பதும் பாடம்.

(உகஅ)

உஉகூ. காதலன் காதலி னாற்களித் தாய்மலர்க்
கோதையங் கோம்பனை யார்தங் குழாந்தொழத்
தாதுகு தாம மணிந்தகில் விம்மிய
போதுகு மெல்லணைப் பூமகள் சேர்ந்தாள்.

(இ - ள்.) காதலன் காதலினால் களித்து-காதலன் கொண்டாட்டத்தாலே களித்து; ஆய்மலர்க் கோதைஅம் கொம்பனையார் தம் குழாம்தொழ - ஆய்ந்த மலர்மாலையணிந்த அழகிய பூங்கொடியனைய சேடியர் திரள் வணங்க; தாதுஉகு தாமம் அணிந்து அகில் விம்மிய போதுஉகு மெல்லணைப் பூமகள் சேர்ந்தாள் - மகரந்தப்பொடி சிந்தும் மாலை சூழ்ந்து, அகிற்புகை யூட்டப் பெற்று, மலர்கள் பரப்பிய மெல்லிய அணையைப் பூமகள் போன்ற விசயை அடைந்தாள்.

உகூ0. பண்கனி யப்பரு கிப்பய னாடகங்
கண்கனி யக்கவர்ந் துண்டுசின் னாள்செல
விண்கனி யக்கவின் வித்திய வேற்கணி
மண்கனிப் பான்வள ரத்தளர் கின்றாள்.

(இ - ள்.) பண்கனியப் பருகி-இசையினைப் பழுக்கக் கேட்டும்; பயன் நாடகம் கண்கனியக் கவர்ந்து உண்டு - பயன்தரும் நாடகங்களைக் கண்ணுருக முகந்து நுகர்ந்தும்; சில்நாள் செல - (இருவர்க்கும் இங்ஙனம்) சிலநாட்கள் சென்ற அளவிலே; விண் கனியக் கவின் வித்திய வேல்கணி - விண்ணவர் உருக அழகைப் பரப்பிய வேற்கண்ணாள்; மண் கனிப்பான் வளரத் தளர்கின்றாள்- நிலவுலகை உருக்குமவன் வளர்தலாலே தளர்ச்சி உறுகின்றாள்.

(வி - ம்.) விண்: ஆகுபெயர். வித்திய - பரவிய. குழவிப் பருவத்தாலும் அரசியலாலும் வீடுபேற்றாலும் மண்ணை உருக்குமவன். (உ0க)

வேறு

உருக. கரும்பார் தோண்முத்தங் கழன்றுசெவ் வாய்விளர்த்துக்
கண்பசலை பூத்த காமம்
விரும்பார் முலைக்கண் கரிந்துதிங்கள் வெண்கதிர்கள்
பெய்திருந்த பொற்செப் பேபோ
லரும்பால் பரந்துநுசுப் புங்கண்ணின் புலனாயிற்
றாய்ந்த வனிச்ச மாலை
பெரும்பார மாய்ப்பெரிது நைந்துநற்சூற் சலஞ்சலம்போ
னங்கை நலந்தொ லைந்ததே.

(இ - ள்.) கரும்புஆர் தோள் முத்தம் கழன்று - (வயாவிற்கு) கரும்பனைய தோள் முத்தம் கழல மெலிந்து; செவ்வாய் விளர்த்துக் கண் பசலைபூத்த - செவ்வாய் வெளுத்துக் கண்கள் பசலை பூத்தன; காமம் விரும்பு ஆர்முலைக்கண் கரிந்து - (பின்பு சூல்முதிரும் அளவிற்குக்) காமத்தை விரும்புதற்குக் காரணமான முலைக்கண் கருகி; திங்கள் வெண்கதிர்கள் பெய்திருந்த பொன் செப்பேபோல் அரும்பால் பரந்து - திங்களின் வெண்கதிர்களைப் பெய்துவைத்த பொற்செப்பினைப்போல் அரிய பால் நிறைந்து; நுசுப்பும் கண்ணின் புலன் ஆயிற்று - இடையுங் கண்களுக்குக் காட்சியாயிற்று; ஆய்ந்த அனிச்சமாலை பெரும் பாரமாய் - சுருங்கிய அனிச்ச மாலையும் பெரும் பாரமாகி; நற்சூல் சலஞ்சலம்போல் பெரிதும் நைந்து நங்கை நலம் தொலைந்தது - நல்ல சூலையுடைய சலஞ்சலம்போல மிகவும் நைந்து விசயையின் அழகு தொலைந்தது.

(வி - ம்.) நுசுப்பு : உம் : சிறப்பும்மை. (உ0உ)

வேறு

உருஉ. தூம்புடை நெடுங்கை வேழந்
துற்றிய வெள்ளி லேபோற்
றேம்புடை யலங்கன் மார்பிற்
றிருமகன் றமிய னாக
வோம்படை யொன்றுஞ் செப்பா
டிருமக ளொளித்து நீங்க
வாம்புடை தெரிந்த வேந்தற்
கறிவெனு மமைச்சன் சொன்னான்.

(இ - ள்.) தேம்புஉடை அலங்கல் மார்பின் திருமகன் - கெடுதலுடைய, மாலைமார்பனான திருமகன்; தூம்பு உடை

நெடுங்கை வேழம் தூற்றிய வெள்ளிலேபோல் - துளைபொருந்திய நீண்ட கையுடைய யானையின் பெயரையுடைய நோயால் உண்ணப்பட்ட விளம் பழம்போல; தமியன் ஆக - அரசுரிமையிழந்து தனித்துப் போமாறு; ஓம்படை ஒன்றும் செப்பாள் திருமகள் ஒளித்து நீங்க-பரிகாரம் சிறிதும் கூறாளாய்த் திருமகள் மறைந்து போக; ஆம்புடை தெரிந்து அறிவு எனும் அமைச்சன் வேந்தற்குச் சொன்னான் - ஆகவேண்டிய [சீவகன் பிழைப்பதாகிய] ஒரு கூறுபாட்டைத் தெரிந்து அறிவு என்கிற அமைச்சன் வேந்தனுக்குரைத்தான்.

(வி - ம்.) வேழம்: விளவிற்கு வருவதோர் நோய்; 'குருதிக் கோட்டுக் குஞ்சர நகரம்' (சீவக. உகஅஉ) போல வேழத்திற்குக் கை அடை. தேம்புதலுடைய திருமகன்; தேம்புதல் - கெடுதல்; [தேம்பு என] விகாரம்; 'புள்தேம்பப் புயல்மாறி' (பட். ச) என்றார் பிறரும். [1]அவன் வஞ்சித்து அரசு வௌவுதலின், 'ஒளித்து நீங்க' என்றார். ஆம்புடை: பிள்ளையார் [சீவகன்] பிழைப்பதொரு கூறுபாடு.

உகூகூ. காதிவேன் மன்னர் தங்கள் கண்ணென வைக்கப் பட்ட
நீதிமேற் சேற றேற்றாய் நெறியலா நெறியைச் சேர்ந்து
கோதியல் காம மென்னும் மதுவினிற் குளித்த ஞான்றே
யோதிய பொறியற் றாயோ ரரும்பொறி புனைவி யென்றான்.

(இ - ள்.) வேல்மன்னர் காதித் தங்கள் கண்என வைக்கப்பட்ட நீதிமேல் சேறல் தேற்றாய் - வேலேந்திய வேந்தர்கள் ஊனாகிய கண்ணைக் கண்ணென்பாருடனே பொருது, தங்கள் கண்ணென்று துணிந்து வைத்த நெறியிற் செல்லாயாய்; நெறி அலா நெறியைச் சேர்ந்து - தீய நெறியிலே சென்று; கோது இயல் காமம் என்னும் மதுவினில் குளித்த ஞான்றே - குற்றம் பொருந்திய காமம் என்கிற கள்ளில் அழுந்தின அப்போதே; ஓதிய பொறிஅற்றாய் - கூறிய நல்வினையை இழந்தாய்; ஓர் அரும் பொறி புனைவி என்றான் - (ஆதலால்,) இனி ஒரு நல்ல பொறியொன்றைப் புனைந்திடுக என்று [அறிவெனும் அமைச்சன்] கூறினான்.

(வி - ம்.) இவ்விரண்டு செய்யுளும் தேவிக்கும் அவள் கருவிற்கும் உய்தியை அளிக்கும் காரணமாக அவர்களின் ஊழ் சச்சந்தன் உள்ளத்தினூடே தூண்டி எழுப்பிய அவனுடைய நினைவுகள். இவற்றை ஆசிரியர் அவன் அறிவினை அமைச்சனாக உருவகித்துக் கூறும் அழகு ஆற்றவும் இனிது.
(உ0ச)

---

1. தமியனாக - அரச வுரிமையை நீங்க. ஓம்படை ஒன்றும் செப்பாள் - தான் பரிகாரம் சிறிதும் கூறாளாய்.

### வேறு

உகூச. அந்தரத் தார்மய னேயென வையுறுந்
தந்திரத் தாற்றம நூல்கரை கண்டவன்
வெந்திற லான்பெருந் தச்சனைக் கூவியோ
ரேந்திர வூர்தி யியற்றுமி னென்றான்.

(இ - ள்.) *தந்திரத்தால் அந்தரத்தார் மயனே என ஐயுறும் தமநூல் கரைகண்டவன் - தொழிலால் வானவர் தச்சனாகிய மயனேயென்று துணிந்து வடிவால் ஐயமுறும், சிற்பநூலைக் கரைகண்டவனாகிய; வெந்திறலான் பெருந் தச்சனைக் கூவி - சிறந்த ஆற்றலுடையவனாகிய பெரிய தச்சன் ஒருவனைக் கூப்பிட்டு; ஓர் எந்திர வூர்தி இயற்றுமின் என்றான் - ஒரு பொறியூர்தியைப் பண்ணுமின் என்று மன்னன் கூறினான்.*

(வி - ம்.) *இயற்றுமின் : ஒருமை பன்மை மயக்கம். ஊர்தி - ஏறப்படுவது.*

*அந்தரத்தார் - தேவர். தந்திரம், தம: ஆருவதன் பன்மையுருபு- நூல் - ஈண்டு சிற்பநூல். வெந்திறலான் என்பதனைச் சச்சந்தன் எனினுமாம்.* (உ0இ)

உகூரு. பல்கிழி யும்பயி னுந்துகி லூலோடு
நல்லரக் கும்மெழு குந்நலஞ் சான்றன
வல்லன வும்மமைத் தாங்கெழு நாளிடைச்
செல்வதோர் மாமயில் செய்தன னன்றே.

(இ - ள்.) *நலஞ்சான்றன பல்கிழியும் பயினும் துகில் நூலொடு நல்லரக்கும் மெழுகும் அல்லனவும் அமைத்து - நலஞ் சிறந்தனவாகிய பல சீலைகளும் பயினும் வெள்ளிய நூலும் நல்ல அரக்கும் மெழுகும் ஒழிந்தனவும் பொருந்தக் கொணர்ந்து சேர்த்து; ஆங்கு எழுநாளிடைச் செல்வதோர் மாமயில் செய்தனன் - அரசன் கூறியவாறே, ஏழு நாட்களில், செல்வதொரு மயிலைச் செய்தான்.*

(வி - ம்.) *கிழி - சீலை. பயின் - பற்றுதற்குரியன. துகில்நூல் - வெள்ளை நூல்.* (உ0சு)

உகூசு. பீலிநன் மாமயி லும்பிறி தாக்கிய
கோலநன் மாமயி லுங்கோடு சென்றவன்
ஞாலமேல் லாமுடை யானடி கைதொழு
தாலுமிம் மஞ்ஞை யறிந்தரு ளென்றான்.

(இ - ள்.) *பீலிநன் மாமயிலும் பிறிது ஆக்கிய கோலம் பீலிநன் மாமயிலும் - தோகையையுடைய அழகிய உண்மை*

மயிலையும், செய்யப்பட்ட அழகிய வேறு தோகை மயிலையும்; அவன் கொடுசென்று - அத் தச்சன் கொண்டுபோய்; ஞாலம் எல்லாம் உடையான் அடிகை தொழுது - நிலவுலகு முழுதும் உடைய சச்சந்தன் அடியைக் கையால் வணங்கி: ஆலும் இம் மஞ்ஞை அறிந்தருள் என்றான் - (இம் மயில்களில்) அசையும் உண்மை மயில் அறிந்தருள்க என்றனன்.

(வி - ம்.) மயிற்பொறி என்பது தோன்ற ஆக்கிய கோல நன்மயில் என்றார். பீலியை இரண்டற்கும் ஏற்றுக. (உ0எ)

உகூஎ. நன்னெறி நூனயந் தானன்று நன்றிது
கொன்னெறி யிற்பெரி யாயிது கோள்கென
மின்னெறி பல்கல மேதகப் பெய்ததோர்
பொன்னறை தான்கொடுத் தான்புகழ் வெய்யோன்.

(இ - ள்.) இது நல்நெறி நூல் நயந்தான் நன்று நன்று - இம் மயில் நல்ல நெறியுடைய நூலின் நயத்தினைத் தான் உடையதாக இருந்தது, மிக நன்று; கொல் நெறியில் பெரியாய் இது கொள்க என - கொல்லுத் தொழிலிற் சிறந்தவனே! இதனை ஏற்றுக்கொள்க என்று; மின் எறி பல்கலம் மேதகப் பெய்தது ஓர்பொன் அறை புகழ் வெய்யோன் தான் கொடுத்தான் - மின்னைக் கெடுக்கும் பல கலன்களை நன்குறச் சேர்த்துள்ள ஒரு பொன் அறையைப் புகழை விரும்பும் அரசன் நல்கினன்.

(வி - ம்.) மின்எறி - ஒளி வீசும் என்றும் ஆம்.

நன்று நன்றென்னும் அடுக்கு வியப்பாற் றோன்றியது. இது நன்னெறி நூல்நயம் தான் என மாறுக. கொல்நெறி - கொல்லுத் தொழில். (உ0அ)

உகூஅ. ஆடியன் மாமயி லூர்தியை யவ்வழி
மாடமுங் காவு மடுத்தோர்சின் னாள்சேலப்
பாடலின் மேன்மேற் பயப்பயத் தான்றுரந்
தோட முறுக்கி யுணர்த்த வுணர்ந்தாள்.

(இ - ள்.) ஆடுஇயல் மாமயில் ஊர்தியைத் தான் பாடலின் பயப்பய மேன்மேல் துரந்து - ஆடுதல் பொருந்திய மயிலாகிய அவ் வூர்தியை விசயைதான் பாட்டுப்போலே மெல்ல மெல்ல மேலும் மேலும் செலுத்தி; மாடமும் காவும் மடுத்துச் சில்நாள் செல - மாடத்தினும் பொழிலினும் ஆகக் கொண்டுசென்று சில நாட்கள் சென்ற பிறகு; ஓட முறுக்கி உணர்த்த உணர்ந்தாள் - (ஒருநாள்) கற்பித்தவன் விசையுடன் ஓடுமாறு முறுக்கி உணர்த்த அவளும் உணர்ந்தாள்.

(வி - ம்.) பாட்டு ஆரோசையாலே மெல்ல மெல்ல உயர்ந்து செல்லுமாறுபோல என்க. இதனால் அமரோசைபோல மெல்ல இறக்கி என்பதும் கொள்க. (உ0கூ)

வேறு

உருகூ. பண்டவழ் விரலிற் பாவை பொறிவலந் திரிப்பப் பொங்கி
விண்டவழ் மேகம் போழ்ந்து விசும்பிடைப் பறக்கும் வெய்ய
புண்டவழ் வேற்கட் பாவை பொறியிடந் திரிப்பத் தோகை
கண்டவர் மருள வீழ்ந்து கால்குவித் திருக்கு மன்றே.

(இ - ள்.) கண்டவர் மருளப் பாவை பண்தவழ் விரலின் பொறிவலம் திரிப்ப - பார்த்தவர் மயங்குமாறு விசயை யாழ் நரம்பில் தவழும் தன் விரல்களாற் பொறியை வலத்தே திரிப்ப; பொங்கி விண்தவழ் மேகம் போழ்ந்து விசும்பிடைப் பறக்கும் - எழும்பி வானில் உலவும் முகிலைப் பிளந்து வானிலே பறக்கும்; புண்தவழ் வெய்ய வேற்கண் பாவை பொறிஇடம் திரிப்ப - பகைவர்க்குப் புண்ணுண்டாதற்குக் காரணமான வேலனைய கண்ணாள் பொறியை இடத்தே திரிப்ப; தோகை வீழ்ந்து கால் குவித்திருக்கும் - அம் மயில் வீழ்ந்து காலைக் குவித்திருக்கும்.

(வி - ம்.) கால் பரப்பிற் கெடும்.

பண் : யாழ் நரம்பிற்கு ஆகுபெயர். பாவை : விசயை. (உக0)

வேறு

உச0. காதி வேல்வல கட்டியங் காரனு
நீதி யானிலங் கொண்டபி னீதிநூ
லோதி னார்தமை வேறுகொண் டோதினன்
கோது செய்குணக் கோதினுட் கோதனன்.

(இ - ள்.) காதி வேல்வல கட்டியங்காரனும் நீதியால் நிலம்கொண்ட பின் - பொருது வேலை எறிவதில் வல்ல கட்டியங் காரனும் முறையால் அரசன் கொடுப்பத் தான் நிலத்தை அடிப்படுத்திய பிறகு; நீதிநூல் ஓதினார்தமை வேறுகொண்டு - அறநூல் உணர்ந்தோரை யெல்லாம் தனக்கு வேறாகக்கொண்டு; கோதுசெய் குணக் கோதினுட் கோதனன் ஓதினன் - பயனின்றென நூல்களிற் கூறிய குணங்களிலேயும் பயனிலதாகிய செய்ந் நன்றி மறக்கும் குணத்தில் நிற்கின்ற பயனிலாதவன் ஒரு மொழி யுரைத்தான்.

(வி - ம்.) [கட்டியங்காரனும்]: உம்மை இழிவு சிறப்பு. கோது செய் குணக்கோது - நூல்கள் பயனின்றாகக் கூறிய குணங்களிற் கோது; அஃதாவது செய்ந்நன்றிக்கேடு; உட்கோதனன் - அதிலே நிற்கின்ற

பயனிலாதோன்; இனிப் பயனின்மை செய்கின்ற குணத்துக்கு ஓதின் தீக்குணங்கட் குள்ளாகிய செய்ந்நன்றிக்கேடு தன்னை ஒப்பான் என்றுமாம். (உகக)

உசக. மன்ன வன்பகை யாயதோர் மாதெய்வ
மென்னை வந்திடங் கோண்டஃ திராப்பக
றுன்னி நின்று செகுத்திடு நீயெனு
மென்னை யான்செய்வ கூறுமி னென்னவே.

(இ - ள்.) மன்னவன் பகையாயது ஓர் மா தெய்வம் என்னை இடம் கொண்டுவந்து - வேந்தனுக்குப் பகையாயதொரு பெரிய தெய்வம் என்னை நிலையமாகக் கொண்டுவந்து; அஃது இராப் பகல் துன்னி நின்று நீ செகுத்திடு எனும் - அஃது இரவும் பகலும் என்னை நெருங்கி யிருந்து நீ அரசனை ஒழித்திடு என்று கூறும்; யான் செய்வ என்னை கூறுமின் என்ன - அதற்கு யான் செய்யத் தகுவன யாவை? கூறுவீராக என்று வினவ;

(வி - ம்.) 'என்ன' என்பதனை, 'உட்கினரா' (சீவக. உசஉ) என மேல் வருகின்றதனோடு முடிக்க. [இப் பாட்டும் அடுத்ததும் குளகம்] (உகஉ)

உசஉ. அருமை மாமணி நாக மழுங்கவோ
ருருமு வீழ்ந்தென வுட்கின ராவவன்
கருமங் காழ்த்தமை கண்டவர் தம்முளான்
றரும தத்தனென் பானிது சாற்றினான்.

(இ - ள்.) அருமை மாமணி அழுங்க நாகம் ஓர் உருமு வீழ்ந்தென உட்கினர் ஆ - அரிய பெருமைமிக்க மாணிக்கம் கெட நாகத்தின் மேலே ஓர் இடி வீழ்ந்தாற்போல அமைச்சர்கள் அஞ்சினராக; அவன் கருமம் காழ்த்தமை - கட்டியங்காரன் அரசனைக் கொல்லத் துணிந்ததை; அவர் தம்முளான் தரும தத்தன் என்பான் கண்டு இது சாற்றினான் - அவர்களில் ஒருவனாகிய தருமதத்தன் என்கின்றவன் உணர்ந்து இதனைப் பலரறியக் கூறினான்.

(வி - ம்.) மணி அரசனுக்கும் நாகம் அமைச்சருக்கும் 'செகுத்திடு' என்ற சொல் இடிக்கும் உவமை. காழ்த்தமை - கொல்லத் துணிந்தமை. 'ஆயவன்' என்ற பாடத்திற்கு அரசனால் ஆயவன் என்க. (உகங)

உசங. தவளைக் கிண்கிணித் தாமரைச் சீறடிக்
குவளை யேயள வுள்ள கோழுங்கணு
ளவளை யேயமிர் தாகவவ் வண்ணலு
மவள கந்தன தாக வோடுங்கினான்.

(இ - ள்.) தவளைக் கிண்கிணித் தாமரைச் சீறடிக் குவளையே அளவு உள்ள கொழுங்கணாள் அவளையே அமிர்தாக - தவளையின் குரல்போலும் ஒலியையுடைய கிண்கிணியையும் தாமரையனைய சிற்றடியையும் குவளையே அனைய மதர்த்த கண்களையும் உடைய அவளையே அமுதாகக் கொண்டு; உவளகம் தனது ஆக அவ் அண்ணலும் ஒடுங்கினான் - அந்தப்புரம் ஒன்றுமே தனக்குரியதாக ஒழிந்தவற்றில் வேட்கையின்றி அப் பெரியான் சுருங்கினான்.

(வி - ம்.) ஏகாரம் இரண்டும் தேற்றம். உம்மை: சிறப்பு; உவளகம் - ஒரு பக்கமும் ஆம்.

தவளையின் வாய்போன்ற வாயையுடைய கிண்கிணியுமாம். அவளையே என்புழி, சுட்டு உலகறிசுட்டு. அவ்வண்ணல் என்றது இகழ்ச்சி. (௨௧௪)

௨௪௫. விண்ணி னோடமிர் தம்விலைச் செல்வது
பெண்ணி னின்பம் பெரிதெனத் தாழ்ந்தவ
னெண்ண மின்றி யிரங்கியிவ் வையகந்
தண்ணந் தாமரை யாளொடுந் தாழ்ந்ததே.

(இ - ள். விண்ணினோடு அமுதம் விலைச் செல்வது பெண்- விண்ணும் அமுதும் விலைபெறுவ தொன்றாகும் பெண்மை; நின் இன்பம் பெரிது என - அதிலும் நினது அரசியலின்பம் பெரிதுகாண் என்று காரியங் கூறுதலின்; தாழ்ந்தவன் எண்ணம் இன்றி இறங்கி - நின்னினும் தாழ்ந்த நிமித்திகன் செல்வம் வேண்டுதலின்றித் துறவிலே வீழ்தலாலே; இவ் வையகம் தண் அம் தாமரையாளொடும் தாழ்ந்தது - இவ் வுலகம் குளிர்ந்த அழகிய தாமரையாளுடனே நின்னிடத்தே தங்கிற்று. (இனி நினக்கு வேறொரு மனக்கவற்சியின்று).

(வி - ம்.) 'நின்இன்பம்' என்பது அரசனை நோக்கி நிமித்திகன் கூறியது. [அதனை உட்கொண்டு தருமதத்தன் கூறினான்] 'பெண்ணி னின்பம் எனப் பெரிதாழ்ந்தவன்' என்பதும் பாடம்.

[இனி, பெண்ணினுடைய இன்பம் விண்ணும் அமுதும் விலைபெறக் கூடியதாகும் அத்துணைப் பெரிது என, அவ்வின்பத்திலே தங்கிய அரசனின் எண்ணம் ஆட்சியிலே இல்லாமையால் இவ் வையகம் இறங்கி நின்னிடத்தே தாமரையாளொடுந் தங்கியது என்று பொருள் கொள்வதும் பொருந்தும்.]

இதற்கு நச்சினார்க்கினியர் கூறும் பொருள் சிறிது வலிந்து கூறுவதாயினும் இன்பமுடைத்தாதலுணர்க. (௨௪௫)

உசரு. தன்னை யாக்கிய தார்ப்பொலி வேந்தனைப்
பின்னை வேளவிற் பிறழ்ந்திடும் பூமக
ளன்ன வன்வழிச் செல்லினிம் மண்மிசைப்
பின்னைத் தன்குலம் பேர்க்குந ரில்லையே.

(இ - ள்.) தன்னை ஆக்கிய தார்ப்பொலி வேந்தனைப் பின்னை வௌவின் - தன்னை மேம்படுத்திய, தாரிறைற் பொலிவுற்ற அரசனைப் பின்னர் அழித்தால்; பூமகள் பிறழ்ந்திடும் - தன் குலமும் திருவும் மண்மிசையினின்றும் பிறழும்; அன்னவன் வழிச் செல்லின் இம் மண்மிசை பின்னைத் தன் குலம் பேர்க்குநர் இல்லை - ஆக்கிய அரசன் வழியே சென்றால் இவ் வுலகினின்றும் தன் குலத்தையும் திருவையும் பெயர்ப்பார் இல்லை.

(வி - ம்.) பூமகள் - திரு. இஃது உலகியலாற் கூறினான். 'தார் கெழு வேந்தன்' என்பதும் பாடம். முன்னிலைப் புறமொழி எனினுமாம். (உகசு)

உசசு. திலக நீண்முடித் தேவரும் வேந்தரு
முலக மாந்தர்க ளோப்பவேன் றோதுப
குலவு தார்மன்னர்க் கியானிது கூறுவன்
பலவு மிக்கனர் தேவரிற் பார்த்திபர்.

(இ - ள்.) திலகம் நீள்முடித் தேவரும் வேந்தரும் ஒப்ப என்று உலக மாந்தர்கள் ஓதுப - முடிகளுக்கு மேலான முடியை யுடைய வானவரும் அரசரும் ஒப்பார் என்று உலகிலுள்ள மக்கள் கூறுவர்; (அவர் அறியார்) தேவரின் பார்த்திபர் பலவும் மிக்கனர்- தேவரினும் அரசர் பலவகைக் குணங்களாலும் மேம்பட்டவர்; குலவுதார் மன்னர்க்கு இது யான் கூறுவன் - விளங்கும் மாலை யணிந்த அரசர்கட்கு உள்ளதொரு சிறப்பை யான் கூறுவேன் (அதனைக் கேள்).

(வி - ம்.) 'கூறலென்' என்று பாடமாயின் ஒப்புக் கூறேன் என்றான் என்க. இதுமுதல், 'மன்னவன் பகையாயதொர் மாதெய்வம்' (சீவக. உசக) என்றதனைக் குறித்துக் கூறுகின்றான். (உகஎ)

உசஎ. அருளு மேலர சாக்குமன் காயுமேல்
வெருளச் சுட்டிடும் வேந்தனு மாதெய்வ
மருளி மற்றவை வாழ்த்தினும் வையினு
மருளி ஆக்க லழித்தலங் காபவோ.

(இ - ள்.) வேந்து எனும் மா தெய்வம் - அரசன் என்னும் பெரிய தெய்வம்; அருளுமேல் அரசு ஆக்கும் - அருளினால் அரசிலே ஆக்கமுறச் செய்யும்; காயுமேல் மன்வெருளச் சுட்

டிடும் - சீறுமேல் மிகுதியும் அஞ்சுமாறு தீய்த்துவிடும்; மற்று மருளிஅவை - இனி, மயக்கத்தையுடைய அத் தெய்வங்கள்; வாழ்த்தின் அருளி ஆக்கலும் - தம்மை ஒருவன் வாழ்த்தின் அருள்செய்து ஆக்குதலும்; வையின் அழித்தலும் அங்கு ஆபவோ? - பழித்தால் அவனை அருளாமல் அழித்தலும் அவை கட்கு அப்பொழுதே ஆகாவே.

(வி - ம்.) மன் - மிகுதி. மருளி: இ: பகுதிப்பொருள் விகுதி. மற்று: வினைமாற்று. 'தாமினி நோயும்' (புறப். வெண். கஅஎ) என்றாற் போல [வாழ்த்தினும் வையினும் என்பவற்றிலுள்ள] உம்மை மாற்றுக. ஆக்கல், அழித்தல்: காலந் தோற்றாத வினைப்பெயர் [தொழிற்பெயர்]. ஆப: எதிர்காலத்திற்குரிய பகரத்தோடு அன்பெறாது வந்த அகரவீற்றுப் பலவறி சொல். [ஆபவோ]: ஓகாரம்: எதிர்மறை. (உகஅ)

உசஅ. உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி
கறங்கு தெண்டிரை வையகங் காக்குமா
லிறங்கு கண்ணிமை யார்விழித் தேயிருந்
தறங்கள் வௌவ வதன்புறங் காக்கலார்.

(இ - ள்.) மன்னவன் உறங்கும் ஆயினும் தன்ஒளி கறங்கு தெண்திரை வையகம் காக்கும் - அரசன் உறங்குவானாயினும் அவன் ஒளி ஒலிமிகும் தெளிந்த அலைகடல் சூழ்ந்த உலகைக் காத்திருக்கும்; இறங்குகண் இமையார் விழித்தே யிருந்தும் அறங்கள் வௌவ அதன் புறம் காக்கலார் - தெய்வத்தன்மை குலையுந் தேவர்கள் விழித்தவாறே யிருந்தும் உலகினர் செய்யும் அறங்களை அசுரர் கைப்பற்ற, அவ்வுலகின் சார்பிற் காக்கமுடியாதவரானார்.

(வி - ம்.) இறங்குகண் இமையார் - தெய்வத்தன்மை குலையுந் தேவர், என்றது, மேலே, 'எல்லை மூவைந்து நாள்கள் உளவென இமைக்குங்கண்ணும்' (சீவக. உஅக0) என்பராதலின். கண்ணிமையார், தேவர்க்கு ஒரு பெயர். (உகக)

உசகூ. யாவ ராயினு நால்வரைப் பின்னிடிற்
றேவ ரென்பது தேறுமிவ் வையகங்
காவன் மன்னவர் காய்வன சிந்தியார்
நாவி னும்முரை யார்நவை யஞ்சுவார்.

(இ - ள்.) யாவர் ஆயினும் நால்வரைப் பின்னிடின் - இழிந்தோராயினும் அவர் பின்னே நால்வரைத் திரியவிட்டால்; தேவர் என்பது இவ்வையகம் தேறும்-அவரை ஊழ் வகுக்கும் தெய்வம் என்னுந் தன்மையை இவ்வுலகம் தெளியும்; (ஆதலால்) நவை அஞ்சுவார் - அரசரால் வரும் தீங்கை அஞ்சுவோர், காவல்

மன்னவர் காய்வன நாவினும் உரையார், சிந்தியார்-காவலையுடைய வேந்தர்கள் வெறுப்பவற்றை நாவினால் உவமை கூறும் இடத்தும் கூறார், நினைப்பதுஞ் செய்யார். (உ௨0)

உ௨௧. தீண்டி னார்தமைத் தீச்சுடு மன்னர்தீ
யீண்டு தங்கிளை யோடு மெரித்திடும்
வேண்டி லின்னமிர் துந்நஞ்சு மாதலான்
மாண்ட தன்றுநின் வாய்மொழித் தெய்வமே.

(இ - ள்.) *தீ தீண்டினாரைச் சுடும் - தீயானது தொட்டவரையே சுடும்; மன்னர் தீ ஈண்டு தம் கிளையோடும் எரித்திடும் - (அங்ஙனமின்றி) அரசருடைய சிற்றத்தீ தீங்கு செய்தவரைத் திரண்ட சுற்றத்தோடும் சுட்டிடும்; வேண்டில் இன்அமிர்தும் நஞ்சும் ஆதலால் - அவரை விரும்பினார்க்கு அவரது அருள் அமிர்துபோல் நலந்தரும், வெறுத்தார்க்கு நஞ்சுபோல் மறைந்து நின்று கொல்லும், ஆதலால்; நின் வாய்மொழித் தெய்வம் மாண்டதன்று - நீ கூறிய தெய்வம் என் தெய்வம்போலச் சிறப்புடையதன்று.*

(வி - ம்.) இதனாற் பகைவரையும் நட்டாரையும் தீநட்பையுங் கூறினான்.

வேண்டில்இன் அமிர்தும் (வேண்டாது பகைப்பின்) நஞ்சும் ஆதலான் என வருவித்துக் கொள்க. நினக்கு ஒரு தெய்வம் இங்ஙனம் கூறிற்றென்றல் பொய். நீயே இத் தீங்கினை நினைக்கின்றனை என்பான் 'நின் வாய்மொழித் தெய்வம்' என்றான். (உ௨௧)

உ௨௨. வேலின் மன்னனை விண்ணகங் காட்டியிஞ்
ஞால மாள்வது நன்றெனக் கென்றியேல்
வாலி தன்றெனக் கூறினன் வாண்ஞமற்
கோலை வைத்தன்ன வொண்டிற லாற்றலான்.

(இ - ள்.) *வாள்ஞமற்கு ஓலை வைத்த அன்ன ஒண்திறல் ஆற்றலான் - வாள் வலியாலே நமனுக்கு 'வல்லவனாயின் வந்து பார்க்க' என்று ஓலை வைத்தாற்போன்ற திறலை நடத்துதலுடைய தருமதத்தன்; வேலின் மன்னனை விண்அகம் காட்டி-வேலினால் அரசனை விண்ணுலகுக்குச் செலுத்தி; இஞ்ஞாலம் ஆள்வது எனக்கு நன்று என்றியேல் - இவ்வுலகை ஆள்வது எனக்கு நலம் என்றனையேல்; வாலிது அன்று எனக் கூறினன் - அது நினக்கு நன்றன்று என்றுரைத்தனன்.*

(வி - ம்.) இவன் முன்னின்று கூறிய அருமை நோக்கி, 'ஆற்றலான்' என்றார்.

இஞ்ஞாலம் என்றது இகழ்ச்சி. வாலிது - தூயதுமாம். ஞமன் - யமன். (உஉஉ)

வேறு

உஉ௨. குழற்சிகைக் கோதை சூட்டிக்
கொண்டவ னிருப்ப மற்றோர்
நிழற்றிகழ் வேலி னானை
நேடிய நெடுங்க ணாளும்
பிழைப்பிலாட் புறந்தந் தானும்
குரவரைப் பேணல் செய்யா
திழுக்கினா ரிவர்கள் கண்டா
யிடும்பைநோய்க் கிரைக ளாவார்.

(இ - ள்.) குழல்சிகைக் கோதை சூட்டிக்கொண்டவன் இருப்ப - தன் குழலிலே அவன் சிகையிலுள்ள மாலையைச் சூட்டிக் கைப்பற்றியவன் இருப்பவும்; மற்றோர் நிழல்திகழ் வேலினானை நேடிய நெடுங்கணாளும் - வேறோர் ஒளிதரும் வேலுடையவனைத் தேடிய நீண்ட கண்ணினையுடையாளும்; பிழைப்பு இளாள் புறம் தந்தானும் - குற்றம் அற்ற மனைவியை மனத்தாற் கொள்ளாது விட்டவனும்; குரவரைப் பேணல் செய்யாது இழுக்கினார் - ஐங்குரவரையும் வழிபடாமல் தவறியவர்களும் ஆகிய; இவர்கள் இடும்பை நோய்க்கு இரைகள் ஆவார் கண்டாய் - துன்பந்தரும் நோய்களுக்கு இரையாவார்கள் காண்.

(வி - ம்.) [குழற்சிகை : மயிர் முடியும் ஆம்.]

[தந்தானும் என்பதிலுள்ள] தரவு, 'செலவினும் வரவினும்' (தொல். கிளவி. உ௮) என்னும் பொதுச் சூத்திரத்தால் முடிக்க. குரவர்-அரசன், உவாத்தியான், தாய், தந்தை, தம்முன் [தமையன்] என ஐவர். (உஉ௩)

உஉ௩. நட்பிடைக் குய்யம் வைத்தான்
பிறர்மனை நலத்தைச் சேர்ந்தான்
கட்டழற் காமத் தீயிற்
கன்னியைக் கலக்கி னானு
மட்டுயி ருடலந் தின்று
னமைச்சனு யரசு கொன்றான்
குட்டநோய் நரகந் தம்முட்
குளிப்பவ ரிவர்கள் கண்டாய்.

(இ - ள்.) நட்பிடைக் குய்யம் வைத்தான் - நட்பிலே வஞ்சித்தவனும்; பிறர்மனை நலத்தைச் சேர்ந்தான் - பிறர் மனைவி

யின் இன்பத்தை நுகர்ந்தவனும்; கட்டுஅழல் காமத்தீயின் கன்னியைக் கலக்கினானும் - மிக்க அழல்போலும் காமத் தீயினாற் கன்னியைக் கெடுத்து, மணவாதவனும்; உயிர்அட்டு உடலம் தின்றான் - உயிரைக் கொன்று உடலைப் புசித்தவனும்; அமைச்சனாய் அரசு கொன்றான் - அமைச்சனாக இருந்து அரசனை ஒழித்தவனும் ஆகிய; இவர்கள் குட்டநோய் நரகந் தன்னுள் குளிப்பவர் கண்டாய் - இவர்கள் (இம்மையிற்) பெருநோயினும் (மறுமையில்) நரகத்தினும் அழுந்துவோர்காண்.

(வி - ம்.) கலக்குதல் கைக்கிளை வகையாகிய இராக்கதமென்னும் மணத்தில் தப்பியதாம்.

குய்யம் - வஞ்சகம். நலம் - இன்பம். உயிர் அட்டு உடலந் தின்றான் என மாறுக. குட்ட நோயும் நரகமும் ஆகிய இவற்றுள் என்க. (உஉ௩)

உஉ௪. பிறையது வளரத் தானும்
வளர்ந்துடன் பெருகிப் பின்னாட்
குறைபடு மதியந் தேயக்
குறுமுய றேய்வ தேபோல்
இறைவனாத் தன்னை யாக்கி
யவன்வழி யொழுகி னென்று
நிறைமதி யிருளைப் போழும்
நெடும்புகழ் விளக்கு மென்றான்.

(இ - ள்.) பிறைவளர அது தானும் வளர்ந்து உடன்பெருகி - பிறை வளரும்போது குறுமுயலும் வளர்ந்து பெருத்து; பின்னாள் குறைபடும் மதியம்தேயக் குறுமுயல் தேய்வதேபோல் - பின்னர்க் குறைதலுண்டான திங்கள் தேய அதனுடன் அச் சிறுமுயலும் தேய்வதைப்போல; தன்னை இறைவன்ஆ ஆக்கியவன் வழிஒழுகின் - தன்னை அரசனாக ஆக்கியவன் வழியிலே அவனொடும் பெருகி அவனொடுந் தேய்ந்து நடப்பானானால்; என்றும் நிறைமதி யிருளைப் போழும் நெடும்புகழ் விளக்கும் என்றான் - எப்போதும் முழுமதி இருளை நீக்குவதைப் போலப் பழியை நீக்கிப் புகழை விளைவிக்கும் என்றான்.

(வி - ம்.) பிறை வளர அதுதானும் வளர்ந்து என மாறுக. துஅ என்றது குறுமுயலை. செய்யுளாகலின் சுட்டு முன்வந்தது. பிறை வளர்பக்கத்துத் திங்கள். மதி-தேய்பக்கத்துத் திங்கள். இவ்வேற்றுமை தோன்ற பிறை வளர என்றும் மதிதேய என்றும் ஓதினார். இறைவனா என்புழி ஆக்கச்சொல்லின் ஈற்றுக் ககரம் கெட்டது. (உஉ௪)

உ௫௫. கோணிலை திரிந்து நாழி
குறைபடப் பகல்கண் மிஞ்சி
நீணில மாரி யின்றி
விளைவஃகிப் பசியு நீடிப்
பூண்முலை மகளிர் பொற்பிற்
கற்பழிந் தறங்கண் மாறி
யாணையிவ் வுலகு கேடா
மரசுகோல் கோடி னென்றான்.

(இ - ள்.) *அரசுகோல் கோடின் - அரசன் முறைமை கெடுவானானால்; கோள்நிலை திரிந்து - கோள் நிற்கும் நிலைகுலைந்து; நாழி குறைபடப் பகல்கள் மிஞ்சி - (இரவு) நாழிகை குறையப் பகற்பொழுது மிகுந்து; மாரிஇன்றி நீள்நிலம் விளைவு அஃகி - மழையில்லாமற் பெருநிலமும் விளைவு குறைந்து; பசியும் நீடி - பசியும் நீட்டித்து; பொற்பின் பூண்முலை மகளிர் கற்பு அழிந்து - அழகிய பூணணிந்த முலையையுடைய பெண்களின் கற்புக்கெட்டு; அறங்கள் மாறி இவ்வுலகு கேடாம் - அறச்சாலைகளும் இன்றி இவ்வுலகு கெடும்; ஆணை என்றான்-இது அரசனுடைய ஆணையே ஆகும் என்றான்.*

(வி - ம்.) *கட்டியங்காரன் கொலை குறித்ததும் அரசன் அவற்கு அரசளித்ததும் உட்கொண்டு இவ்விரண்டு கவியும் பொதுவாகக் கூறினான். எச்சங்கள், செயப்படுபொருளன.*

கோள் - ஞாயிறு முதலியன. நிலை என்பது நன்னிலை என்பது படநின்றது. இச் செய்யுளின்கண் கொடுங்கோலால் விளையும் தீமை நன்கு விளக்கப்படுதல் காண்க. இதனுடன்,

“ *கோனிலை திரிந்திடின் கோணிலை திரியும்*
*கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்*
*மாரிவறங் கூரின் மன்னுயிர்இல்லை.*” (மணி. எ: எ-கூ)

எனவரும் மணிமேகலைப் பகுதியையும் நினைக. (உஉகூ)

உ௫சு. தார்ப்போலி தரும தத்தன்
றக்கவா றுரைப்பக் குன்றிற்
கார்த்திகை விளக்கிட் டன்ன
கடிகமழ் குவளைப் பைந்தார்
போர்த்தத னகல மெல்லாம்
பொள்ளென வியர்த்துப் பொங்கி
நீர்க்கடன் மகரப் பேழ்வாய்
மதனன்மற் றிதனைச் சொன்னான்.

(இ - ள்.) தார்ப்பொலி தருமதத்தன் தக்கவாறு உரைப்ப-வாகைமாலையாற் பொலிவுற்ற தருமதத்தன் அமைச்சர்க்கும் அரசர்க்கும் தக்க நிலையைக் கூறினுக; குன்றில் கார்த்திகை விளக்கிட்ட அன்ன கடிகமழ் குவளைப் பைந்தார் போர்த்த தன் அகலம் எல்லாம் - குன்றிலே கார்த்திகை விளக்கிட்டாற்போல மணங்கமழும் குவளைமாலை போர்த்த மார்பு முழுதும்; பொள்ளென வியர்த்துப் பொங்கி - விரைய வியர்த்துக் கொதித்து; நீர்க்கடல் மகரப் பேழ்வாய் மதனன் இதனைச் சொன்னுன் - நீர் நிறைந்த கடலில் உள்ள மகரமீனின் வாய்போலும் பெரிய வாயையுடைய மதனன் இதனைக் கூறினுன்.

(வி - ம்.) அறிவு குன்றியவன் என்பது தோன்ற மகரப் பேழ் வாய் மதனன் என அவன் வாயை விதந்தோதினர். மேலும், "பொள் ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த் துள்வேர்ப்பர் ஒள்ளி யவர்" என்னும் திருக்குறட்கு மாருக இவன் அறிவில்லாதவன் என்பது தோன்ற அக்குறள் சொல்லையும் இதன்கண் அமைத்தனர். இச்செய்யு ளான் கார்த்திகைத் திங்கள் கார்த்திகையின்கண் குன்றின்மேல் விளக்கிடும் வழக்கம் அக்காலத்தும் இருந்தமை உணர்க. (உ௨எ)

உ௨அ. தோளினுல் வலிய ராகித்
 தொக்கவர் தலைகள் பாற
வாளினுற் பேச லல்லால்
 வாயினுற் பேச றேற்றேன்
காளமே கங்கள் சொல்லிக்
 கருணையாற் குழைக்குங் கைகள்
வாளமர் நீந்தும் போழ்தின்
 வழுவழுத் தொழியு மென்றுன்

(இ - ள்.) தோளினுல் வலியர் ஆகித் தொக்கவர் தலைகள் பாற வாளினுல் பேசல் அல்லால் வாயினுற் பேசல் தேற்றேன் - தோள் வலியுடையராகிக் கூடி எதிர்த்த பகைவர்களின் தலைகள் சிதற வாளினுல் வஞ்சினம் முடித்தல் அல்லது வாயினுற் பேசு தலை அறியேன்; காளமேகங்கள் சொல்லி - தாங்கள் கரிய முகில் போல இங்ஙனம் முழங்கக் கூறுதலால்; கருணையால் குழைக்கும் கைகள் வாள் அமர் நீந்தும் போழ்தின் - பொறிக்கறியுடன் சோற் றைத் திரட்டும் கைகள் வாளேந்திப் போர்க்கடலை நீந்தும் போழ்து; வழுவழுத்து ஒழியும் என்றுன் - (மிக வேர்த்து) வாள் வழுக்கித் தொலையும் என்றுன்.

(வி - ம்.) 'தேற்றேன்' என்பது, 'தேற்ருய் பெரும பொய்யே' (புறநா. ௫௬) என்ருற்போல நின்றது. இக்கவி முன்னிலைப் புறமொழி. (உ௨அ)

உருஅ. நுண்முத்த மேற்றி யாங்கு
மெய்யெலாம் வியர்த்து நோய்தின்
வண்முத்த நிரைகோ ணெற்றி
வார்முரி புருவ மாக்கிக்
கண்ணெரி தவழ வண்கை
மணிநகு கடக மேற்று
வெண்ணகை வெகுண்டு நக்குக்
கட்டியங் காரன் சொன்னான்.

(இ - ள்.) *நுண்முத்தம் ஏற்றியாங்கு மெய்எலாம் நொய்தின் வியர்த்து - நுண்ணிய முத்துக்களைப் பதித்தாற்போல உடலெங்கும் விரைவிலே வியர்த்து; வண்முத்தம் நிரைகொள் நெற்றி வார்முரி புருவம் ஆக்கி - அந்த வியர்வை நிறைத்த நெற்றியிலே நீண்ட வளைந்த புருவத்தை ஏற்றி; கண்எரி தவழ - கண்களில் அனல் பரவ; வண்கை மணிநகு கடகம் எற்று-வளமிகு கையிலே மணிகள் ஒளிரும் கடகத்தை உடைத்து; வெள்நகை வெகுண்டு நக்கு - வெடி நகைப்பாக வெகுண்டு நகைத்து; கட்டியங்காரன் சொன்னான் - கட்டியங்காரன் உரைத்தான்.*

(வி - ம்.) இதன்கண்ணும் கட்டியங்காரன் வெகுளுதற்கும் நகைத்தற்கும் வேண்டிய காரணமில்லாதவிடத்தும் கடுஞ்சினமும் பெருஞ்சிரிப்பும் உடையன் என அவன் பேதைமையை விளக்குதல் அறிக.

வெண்ணகை - வெண்மை காரணமாகப் பிறக்கும் நகை. வெண்மையை வெகுளிக்கும் ஏற்றுக. (உஉகூ)

உருகூ. என்னலாற் பிறர்கள் யாரே
யின்னவை பொறுக்கு நீரா
ருன்னலாற் பிறர்கள் யாரே
யுற்றவற் குறாத சூழ்வார்
மன்னன்போய்த் துறக்க மாண்டு
வானவர்க் கிறைவ னாகப்
பொன்னெலாம் விளைந்து பூமி
பொலியயான் காப்ப லென்றான்.

(இ - ள்.) *இன்னவை பொறுக்கும் நீரார் என் அலால் பிறர்கள் யார்? - நீ கூறிய இக் கடிய சொற்களைப் பொறுக்கும் இயல்பினர் என்னை அல்லாமல் வேறு யார்?; உற்றவற்கு உறாத சூழ்வார் உன்னலால் பிறர்கள் யார்? - தம்மைச் சார்ந்தவனுக்கு ஒவ்வாத செயல்களைச் சூழ்கின்றவர் உன்னையொழிய வேறு யார்? (இனி அமைக); மன்னன் துறக்கம் போய் ஆண்டு வானவர்க்கு இறை*

வன் ஆக - வேந்தன் வானுலகு சென்று ஆண்டு வானவர்களுக்குத் தலைவன் ஆக; பூமிஎலாம் விளைந்து பொன் பொலிய யான் காப்பல் என்றான் - நிலமெங்கும் விளைந்து பொன் சிறக்க யான் காப்பேன் என்றான்.

(வி - ம்.) 'உற்றவன் - சச்சந்தன் என்றும், உறாத - பொன்னுலகாளாமல் மண்ணுலகாளுதல்' என்றும் நச்சினார்க்கினியர் கூறியவை மிகவும் நுணுக்கமுடையன. இனி, உற்றவன் கட்டியங்காரனுமாம். விளைந்த பூமி என்றும் பாடம். (உருO)

உருO. விளைக பொலிக வஃதே
யுரைத்திலம் வெகுள வேண்டா
களைக மெழுக மின்னே
காவலற் கூற்றங் கொல்லும்
வளைகய மடந்தை கொல்லும்
தான்செய்த பிழைப்புக் கொல்லு
மளவறு நிதியங் கொல்லு
மருள்கொல்லு மமைக வென்றான்.

(இ - ள்.) விளைக பொலிக அஃதே உரைத்திலம் - நீ கூறியவாறே நிலமெல்லாம் விளைக! பொன்னும் விளங்குக! நினது நினைவையே கூறிலேம்; வெகுள வேண்டா - அதற்கு நீ சிற்றமுற வேண்டா; இன்னே களைகம் எழுகம் - இப்போதே களைவதற்கு எழுவோம்; காவலன் கொல்லும் கூற்றம் - அரசனைக் கொல்லுங் கூற்றம்; வளைகயம் மடந்தை கொல்லும் - வளைகள் நிறைந்த பொய்கையுடைய நிலமகளாய்க் கொல்லும்; தான் செய்த பிழைப்புக் கொல்லும் - அரசன் செய்த தவறாகிக் கொல்லும்; அளவு அறுநிதியம் கொல்லும் - எல்லையற்ற செல்வமாய்க் கொல்லும்; அருள் கொல்லும் - அருளாய்க் கொல்லும்; (ஆதலால்); அமைக என்றான் - அரசனுக்கு அக்கொலை பொருந்துவதாக என்றான்.

(வி - ம்.) இனி, 'அஃதேல் உரைக்கிலம்' என்பது பாடமாயின், 'நின் கருத்து அதுவாயின், வேறு கூறுகின்றிலேம்' என்க. இனி, கூற்றமும் கயமடந்தை முதலியனவும் காவலனாகிய கட்டியங்காரனைக் கொல்லுமென்று உட்கொண்டு [மனத்தில் அமைத்து] 'இனி வார்த்தை யமைக' என்றான் என்பாருமுளர். 'விளைக பொலிக' ஒரு வழக்கென்பாருமுளர். (உருக)

உருக. நிலத்தலைத் திருவ னுடை
னீப்பருங் காதல் கூர
முலைத்தலைப் போக மூழ்கி
முகிழ்நிலா முடிகோள் சென்னி

வெலற்கருந் தானை நீத்த
வேந்தனை வெறுமை நோக்கிக்
குலத்தொடுங் கோற லெண்ணிக்
கொடியவன் கடிய சூழ்ந்தான்.

(இ - ள்.) நிலத்தலைத் திருவனாள் தன் நீப்பருங் காதல்கூர - நிலவுலகிலே திருமகளனையாள்பால் நீக்கவியலாத தன் காதல் மிகுதலின்; முலைத்தலைப் போகம் மூழ்கி - அவளது முலை யின்பத்தே அழுந்தி; வெலற்கு அருந்தானை நீத்த - வெல்லவியலாத படைவீரரை இழந்த; முகிழ்நிலா முடிகொள் சென்னி வேந்தனை - அரும்பும் ஒளியையுடைய முடியணிந்த சென்னியுடைய வேந் தனை; வெறுமை நோக்கிக் குலத்தொடுங் கோறல் எண்ணி - தனிமை அறிந்து மகவுடனே கொல்ல நினைத்து; கொடியவன் கடிய சூழ்ந்தான் - கொடியவனை அவன் அதற்கு வேண்டும் கடிய தொழில்களைச் சிந்தித்தான்.

(வி - ம்.) நிலத்தலைத்திரு: இல்பொருளுவமை.

அரசுரிமையை இகழ்ந்து வறிய முடியொன்றையே உடையன் என்றிரங்குவார் "போகமூழ்கி முடிகொள் சென்னி வேந்தன்" என்றார். வேந்தன் - சச்சந்தன். குலம் என்றது கருவுற்றிருக்கும் தேவியை. கொடியவன் - கட்டியங்காரன். (உகஉ)

உகூஉ. கோன்றமர் நிகள மூழ்கிக்
கோட்டத்துக் குரங்கத் தன்கீ
ழேன்றநன் மாந்தர்க் செல்லா
மிருநிதி முகந்து நல்கி
யூன்றிய நாட்டை யெல்லா
மொருகுடை நீழல் செய்து
தோன்றினன் குன்றத் துச்சிச்
சுடர்ப்பழி விளக்கிட் டன்றே.

(இ - ள்.) கோன்தமர் நிகளம் மூழ்கிக் கோட்டத்துக் குரங்க - அரசனைச் சார்ந்தோர் விலங்கிலே அழுந்திச் சிறையிலே தாழ; தன்கீழ் ஏன்ற நல்மாந்தர்க் கெல்லாம் இருநிதி முகந்து நல்கி - தன் கீழ்மையை ஒப்பிய நல்ல மாந்தருக்கெல்லாம் பெருஞ் செல்வத்தை அள்ளிக் கொடுத்து; நாட்டை எல்லாம் ஒரு குடை நீழல் செய்து ஊன்றிய - நாட்டையெல்லாம் தன் ஒரு குடை யால் நிழல் பரப்பி ஊன்றுவதற்கு; குன்றத்து உச்சி இட்ட சுடர்ப்பழி விளக்கு இட்டுத் தோன்றினன் - குன்றின் உச்சி யில் இட்ட விளக்குப்போலப் பழியாகிய விளக்கையிட்டுத் தோன்றினன்.

(வி - ம்.) [தன் கீழ்]: கீழ்: இடமுமாம். நன்மாந்தர் : இகழ்ச்சி யூன்றிய: பெயரெச்சமும் ஆம்.

கோன் - சச்சந்தன். நிகளம் - தளை; விலங்கு. கோட்டம் - ஈண்டுச் சிறைக்கோட்டம். குரங்குதல் - தாழ்தல். (உகரு)

உசுரு. பருமித்த களிறு மாவும்
பரந்திய றேரும் பண்ணித்
திருமிக்க சேனை மூதூர்த்
தெருவதோ றெங்கு மீண்டி
யெரிமொய்த்த வாளும் வில்லு
மிலங்கிலை வேலு மேந்திச்
செருமிக்க வேலி னூன்றன்
றிருநகர் வளைந்த தன்றே.

(இ - ள்.) பருமித்த களிறும் மாவும் பரந்துஇயல் தேரும் பண்ணி - அணிபுரிந்த களிறும் குதிரையும் பரவிய இயலை யுடைய தேரும் தகுதியாக அமைத்துக்கொண்டு; திருமிக்க சேனை - செல்வம்மிக்க படைத்திரள்; எரிமொய்த்த வாளும் வில்லும் இலங்குஇலை வேலும் ஏந்தி - நெருப்பிலே முழுகிய வாளும் வில்லும் விளங்கு இலைமுகமுடைய வேலும் ஏந்திக் கொண்டு; மூதூர் தெருவுதொறும் எங்கும் ஈண்டி - பழமையான நகரின் தெருக்களிலும் பிற இடங்களிலும் திரண்டு; செருமிக்க வேலினான் தன் திருநகர் வளைந்தது - போர்த்தொழிலிற் சிறந்த வேலேந்திய சச்சந்த மன்னனின் அழகிய அரண்மனையைச் சூழ்ந்தது.

(வி - ம்.) உள்நிற்கும் ஊர்திகளும் உட்பட வளைந்து அந்தப் புரத்தினுட் புகுதாது நின்றது கண்டு வாயிலோன் உணர்த்துகின்றமை மேலே கூறுகின்றார். (உகச)

உசுச. நீணில மன்ன போற்றி
நெடுமுடிக் குருசில் போற்றி
பூணணி மார்ப போற்றி
புண்ணிய வேந்தே போற்றி
கோணினைக் குறித்து வந்தான்
கட்டியங் கார னென்று
சேணிலத் திறைஞ்சிச் சொன்னான்
செய்யகோல் வெய்ய சொல்லான்.

(இ - ள்.) செய்யகோல் வெய்யசொல்லான் - சிவந்த கோலையும் வெஞ்சொல்லையும் உடைய வாயிலோன்; நீள்நில மன்ன போற்றி - பெருநிலத்துக்கு வேந்தனே! காத்தருள்க!; நெடுமுடிக் குருசில் போற்றி! - நீண்ட முடியணிந்த அரசனே! காத்தருள்க!; பூண்அணி மார்ப போற்றி - பகைவர் கவசம் பூண்பதற்குக் காரணமான மார்பனே! காத்தருள்க!; புண்ணிய வேந்தே போற்றி - நலம்புரியும் மன்னனே! காத்தருள்க!; கட்டியங்காரன் நினைக்கொள் குறித்து வந்தான் - கட்டியங்காரன் உன்னைக் கொல்வது கருதி வந்துளான்; என்று சேண்நிலத்து இறைஞ்சிச் சொன்னான் - என்று தொலைவான தரையிலே (வீழ்ந்து) வணங்கிக் கூறினான்.

(வி - ம்.) போற்றி: பரிகாரம். 'அரும்பூண் அற எறிந்தாங்கு' என்பர் மேலும். போற்றி நான்கு கூறியது நிலத்திற்கும் குலத்திற்கும் வீரத்திற்கும் தருமத்திற்கும் நின்னையொழிய இல்லையென்று இரங்கினான்.

'கோண்' எனினும் மாறுபாடாம். (உரு)

உசுசு. திண்ணிலைக் கதவ மெல்லாந்
திருந்துதா ழுறுக்க வல்லே
பண்ணுக பசும்பொற் றேரும்
படுமதக் களிறு மாவுங்
கண்ணகன் புரிசை காக்குங்
காவல ரடைக வென்றான்
விண்ணுரு மேறு போன்று
வெடிபட முழங்குஞ் சொல்லான்.

(இ - ள்.) விண் உரும்ஏறு போன்று வெடிபட முழங்கும் சொல்லான் - வானத்தின்கண் பேரிடிபோல அதிர்ச்சியுண்டாக முழங்கும் சொல்லினன்; திண்நிலைக் கதவம் எல்லாம் வல்லே திருந்து தாழ் உறுக்க - அச்சமில்லாத (அரண்மனை மதிலின்) நிலைக்கதவுகளை யெல்லாஞ் செப்பமாகத் தாழிடுக; பசும்பொன் தேரும் மதம்படு களிறும் மாவும் (வல்லே) பண்ணுக - புதிய பொற்றேர்களையும் மதம்மிகுங் களிறுகளையும் குதிரைகளையும் அணிசெய்க; கண்அகன் புரிசை காக்கும் காவலர் (வல்லே) அடைக என்றான் - இடம் அகன்ற (அரண்மனை) மதிலைக் காக்கும் வீரர்கள் விரைந்து வருக என்றான்.

(வி - ம்.) 'வல்லே' என்றது, எவ்விடத்துங் கூட்டுக. வெடிபட - வெடித்தல் உண்டாக.

இஃது இராசதத்தாற் கூறினான். [இராசதம் - அரசனுக்குரிய இயல்பு; துணையில்லாத தனிமையினும் எழுந்தது.] (உசுசு)

உசுசு புலிப்போறிப் போர்வை நீக்கிப்
பொன்னணிந் திலங்கு கின்ற
வொலிக்கழன் மன்ன ருட்கு
முருச்சுடர் வாளை நோக்கிக்
கலிக்கிறை யாய நெஞ்சின்
கட்டியங் கார னம்மேல்
வலித்தது காண்டு மென்று
வாளெயி றிலங்க நக்கான்.

(இ - ள்.) *புலிப்பொறிப் போர்வை நீக்கி - புலியின் தோலாற் செய்யப்பட்ட உறையை நீக்கி; ஒலிக்கழல் மன்னர் உட்கும் பொன் அணிந்து இலங்குகின்ற உருச்சுடர் வாளை நோக்கி - ஒலிசெயும் கழல் அணிந்த வேந்தர்கள் அஞ்சும், பொன்னால் அணிசெய்யப்பெற்று விளங்கும் ஒளிமிகும் அழகிய வாளைப் பார்த்து; கலிக்கு இறைஆய நெஞ்சின் கட்டியங்காரன் நம்மேல் வலித்தது காண்டும் என்று - தீமைக்கு நிலைமையான உள்ளமுடைய கட்டியங்காரன் நம்மேல் வலிமை காட்ட வந்ததைக் காண்போம் என்று; வாள் எயிறு இலங்க நக்கான் - ஒளிமிகும் பற்கள் தோன்ற நகைத்தான்.*

(வி - ம்.) *இது வீரத்தின்கண் எள்ளுதலாற் பிறந்த நகை.*

[*'புலிப்பொறிப் போர்வை கவசம்' எனவும், 'ஊர்திகள் இன்மையின் கவசம் நீக்கினன்' எனவும், 'போர்வை உறையும் என்ப' எனவும் நச்சினார்க்கினியர் நவில்வர்.*] (உகஎ)

உசுஎ. நங்கைநீ நடக்கல் வேண்டு
நன்போருட் கிரங்கல் வேண்டா
கங்குனீ யன்று கண்ட
கனவெலாம் விளைந்த வென்னக்
கோங்கலர் கோதை மாழ்கிக்
குழைமுகம் புடைத்து வீழ்ந்து
செங்கயற் கண்ணி வெய்ய
திருமகற் கவலஞ் செய்தாள்.

(இ - ள்.) *நங்கை நீ நன்பொருட்கு நடக்கல் வேண்டும் - நங்கையே! நீ நம் நல்ல பொருளைக் காப்பதற்குச் செல்லுதல் வேண்டும்; இரங்கல் வேண்டா - இங்கிருந்து வருந்தாதே; (என் எனின்); நீ அன்று கங்குல் கண்ட கனவு எலாம் விளைந்த என்ன - நீ அன்றைய இரவு கண்ட கனவுகள் எல்லாம் பயன் பட்டன என்று (மன்னன் விசயையை அணுகிக்) கூற; செங்கயற்*

கன்னி கொங்கு அலர்கோதை மாழ்கி - செவ்வரி பரந்த கயற் கண்ணுள் மணம்விரியும் மலர்மாலைபோல வருந்தி; குழைமுகம் புடைத்து வீழ்ந்து - குழையணிந்த முகத்தி லறைந்துகொண்டு வீழ்ந்து; வெய்ய திருமகற்கு அவலம் செய்தாள் - (வயிற்றில் இருக்கும்) விருப்பம் மிகும் திருமகனுக்கு வருத்தம் உண்டாக்கினாள் (வயிற்றில் அடித்துக்கொண்டாள்).

(வி - ம்.) 'வேண்டும்' என்பது ஒரு வியங்கோள்; 'ஓஒதல் வேண்டும்' (குறள். சுருஅ) என்றாற்போல. நன்பொருள் : பிள்ளை. எல்லாம் என்றான் பிள்ளையார் ஆக்கங் கருதி (விசயையின்) உயிர் நிற்றற்கு. தெளிவுபற்றி, 'விளைந்த' என இறந்த காலத்தாற் கூறினான்.

நன்பொருள் - மகவு.

"தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தந்தம் வினையான் வரும்" (குறள். சுஙு)

(உ௲அ)

உசுஅ. மல்லலைத் தெழுந்து வீங்கி
மலைதிரண் டனைய தோளா
னல்லலுற் றழுங்கி வீழ்ந்த
வமிர்தமன் னாளை யெய்திப்
புல்லிக்கோண் டவல நீக்கிப்
பொம்மல்வெம் முலையி னாட்குச்
சொல்லுவா னிவைகள் சொன்னான்
சூழ்கழற் காலி னானே.

(இ - ள்) மல் அலைத்து எழுந்து வீங்கி மலை திரண்டனைய தோளான் - மல்தொழிலை வருத்தி வளர்ந்து பருத்து மலைதிரண்டாற் போன்ற தோள்களையும்; கழல்சூழ் காலினான் - கழல் சூழ்ந்த கால்களையும் உடைய சச்சந்தன்; அல்லல் உற்று அழுங்கி வீழ்ந்த அமிர்தம் அன்னாளை எய்தி - துன்பம் உற்றுக் கெட்டு வீழ்ந்த அமிர்தம்போன்ற விசயையை நெருங்கி; புல்லிக்கொண்டு அவலம் நீக்கி - தழுவிக்கொண்டு சோர்வைப் போக்கி; பொம்மல் வெம்முலையினாட்குச் சொல்லுவான் இவைகள் சொன்னான் - பருத்த விருப்பமூட்டும் முலையினாட்கு ஆறுதல் கூறத் தொடங்கிப் பிரிவை யுணர்த்தும் இம்மொழிகளைக் கூறினான்.

(வி - ம்.) அமுதயின்றார்க்கு நாள்[1] உலந்தால் அது வேறுபாடு தோற்றுவிக்குமாறுபோல இவற்கும் வேறுபாடு தோற்றுவித்தலின், 'அமிர்தம் அன்னாள்' என்றார்.

இவை இருந்தும் பயன் என்கொல் என்றிரங்குவார் "மல்லலைத் தெழுந்து வீங்கி மலைதிரண்டனைய தோளான்" என்றார். (உ௲க)

1. உலந்தால் - கெட்டால்.

உசசகூ. சாதலும் பிறத்த றானுந்
தம்வினைப் பயத்தி னாகு
மாதலு மழிவு மெல்லா
மவைபொருட் கியல்பு கண்டாய்
நோதலும் பரிவு மெல்லா
நுண்ணுணர் வின்மை யன்றே
பேதைநீ பெரிதும் பொல்லாய்
பெய்வளைத் தோளி யென்றான்.

(இ - ள்.) பெய்வளைத் தோளி பேதை - வளையணிந்த தோள்களையுடைய பேதையே!; தம் வினைப்பயத்தின் ஆகும் சாதலும் பிறத்தல்தானும் ஆதலும் அழிவும் அவை எல்லாம் - தம் வினையின் பயனால் நேரும் இறப்பும் பிறப்பும் ஆக்கமும் அழிவும் ஆகிய அவை யாவும்; பொருட்கு இயல்பு கண்டாய் - பொருள்களுக்கு இயற்கைகாண்; நோதலும் பரிவும் எல்லாம் நுண்ணுணர்வு இன்மை அன்றே - இவையிற்றுட் சாதல் முதலியவற்றிற்குத் துன்புறுதலும் பிறத்தல் முதலியவற்றிற்கு அன்புறுதலும் ஆகிய இச்செயற்கெல்லாம் காரணம் அறிவின்மையே அல்லவோ; நீ பெரிதும் பொல்லாய் - (இதை உணராத) நீ மிகவும் பொல்லாதவளாகிறாய்.

(வி - ம்.) சாதலும் பிறத்தல் தானும் ஆதலும் அழிவும் எல்லாம் தம் வினைப்பயத்தின் ஆகும். அவற்றுள், சாதற்கும் அழிதற்கும் நோதலும், பிறத்தற்கும் ஆதற்கும் பரிதலும் நுண்ணுணர்வின்மையாம். அவை பொருட்கு இயல்பு, என்றவாறு.

பரிதல் - அன்புறுதல். இவற்றை யுணராமையால் நீ பெரிதும் பொல்லாய் என்றான் என்க. (உசo).

உஎo. தொல்லைநம் பிறவி யெண்ணிற்
றொடுகடன் மணலு மாற்றா
வெல்லைய வவற்று ளெல்லா
மெதிலம் பிறந்து நீங்கிச்
செல்லுமக் கதிக டம்முட்
சேரலஞ் சேர்ந்து நின்ற
வில்லினு ளிரண்டு நாளைச்
சுற்றமே யிரங்கல் வேண்டா.

(இ - ள்.) தொல்லை நம் பிறவி எண்ணின் - பழமையான நம் பிறப்புக்களை ஆராய்ந்தால்; தொடுகடல் மணலும் ஆற்றா எல்லைய - தோண்டப்பெற்ற கடலின் மணலும் ஒப்பிடப்பெறாத

அளவினையுடையன; அவற்றுள் எல்லாம் பிறந்தும் ஏதிலம் - அப் பிறப்புக்களிலெல்லாம் பிறந்தும் வேறுபட்டிருந்தோம்; நீங்கிச் செல்லும் அக்கதிகள் தம்முள் சேரலம்-இனியும் பிரிந்து செல்லும் அத்தகைய பிறப்புக்களினும் ஒன்றுபடோம்; சேர்ந்து நின்ற இல்லினுள் இரண்டு நாளைச் சுற்றமே - (ஆகையால்,) இப்போது இவ்வில்லத்துட் கூடியிருந்த இரண்டு நாளைய உறவே உடையோம்; இரங்கல் வேண்டா - (இவ்வுறவைப் பெரிய உறவாக எண்ணி) வருந்தல் வேண்டா.

(வி - ம்.) கடல் மணல் அளவிடப்படாமைக்கு ஒன்று கூறியபடி.

இரண்டுநாள் என்றது சிறுமைக்கு ஒன்று கூறியபடியாம். "பத்தெட்டுநாட் பயனில்லா வாழ்க்கை" என்றாற்போல. (உசக)

உஎக. வண்டுமோய்த் தரற்றும் பிண்டி
வாமனால் வடித்த நுண்ணூ
லுண்டுவைத் தனைய நீயும்
உணர்விலா நீரை யாகி
விண்டுகண் ணருவி சோர
விம்முயிர்த் தினையை யாத
லொண்டொடி தகுவ தன்று
லொழிகநின் கவலை யென்றான்.

(இ - ள்.) வண்டு மொய்த்து அரற்றும் பிண்டி வாமனால் வடித்த நுண்ணூல் உண்டு வைத்து அனைய நீயும் - வண்டுகள் மொய்த்து முரலும் அசோகின் நீழலில் எழுந்தருளிய அருகனார் கூறிய நுண்ணிய நூல்களின் பொருளைத் தேக்கி வைத்துள்ள நீயும்; உணர்வுஇலா நீரை ஆகி - உணர்வு இல்லாத தன்மையை ஆகி; கண் அருவி விண்டுசோர விம்மு உயிர்த்து - கண் அருவி மிகுந்து பொழிய அழுது பெருமூச்சுவிட்டு; இனையை ஆதல் தகுவது அன்று - இத்தன்மையை அடைவது நன்றன்று; ஒண் தொடி நின்கவலை ஒழிக - ஒளிமிகும் வளையணிந்தவளே! நின் வருத்தத்தை நீங்குக.

(வி - ம்.) தெய்வங்கட்குரிய மலரில் வண்டு மொய்யாதாயினும் அருகன் அருளால் வண்டு மொய்த்தது. நூல்: ஆகுபெயர். அனைய: நெஞ்சறி பொருளைச் சுட்டிய சுட்டு.

வாமன் - அருகக்கடவுள். 'வேதமுதல்வன் ஓதிய வேதத்தொளி' என்பதுபற்றி வாமனால் வடித்த நுண்ணூல் என்றார். அவை, அங்காகமம், பூர்வாகமம், பகுசுருதியாகமம் என்னும் மூன்றுமாம். (உசஉ)

உஎஉ. உரிமைமுன் போக்கி யல்லா
லொளியுடை மன்னர் போகார்
கருமமீ தெனக்கு மூர்தி
சமைந்தது கவல வேண்டா
புரிநரம் பிரங்குஞ் சொல்லாய்
போவதே பொருள்மற் றென்று
னெரிமுயங் கிலங்கு வாட்கை
யேற்றிளஞ் சிங்க மன்னன்.

(இ - ள்.) எரிமுயங்கு இலங்கு வாள்கை இளஞ்சிங்க ஏறு அன்னன் - எரியில் தோய்ந்து விளங்கும் வாளேந்திய கையனுன, ஆணிளஞ்சிங்கம் போன்றவன்; புரிநரம்பு இரங்கும் சொல்லாய் - முறுக்கப்பெற்ற நரம்பிலெழும் பண்ணும் வருந்தும் இனிய சொல்லினுய்; ஒளிஉடை மன்னர் உரிமைமுன் போக்கி அல்லால் போகார் - புகழுறும் வேந்தர்கள் தம் உரிமை மகளிரை முன்னே போக்கியல்லது தாம் போகார்; எனக்கும் கருமம் ஈது - (ஆகவே) எனக்கும் இப்பொழுது இசைந்த காரியம் இதுவே; ஊர்தி சமைந்தது - ஆகூழானே ஓர் ஊர்தியும் அமைந்துவிட்டது; கவல வேண்டா-இனி வருந்தவேண்டா; போவதே பொருள் என்றுன் - (ஆகையால்) நீ முன்னர் ஏகுவது செய்யத்தக்கது என்றுன்.

(வி - ம்.) பிள்ளையாற் கதிபெறுதலும் பகை வெல்வதுங் கருதி இருவர்க்கும் கருமம் என்றுன். கவலுதல்: இருதலைக் கொள்ளி எறும்பு போற் கணவனையும் மகனையும் எண்ணி வருந்துதல். கவலை: இருபாற் பட்டது.

எனக்கும் கருமம் ஈது என மாறுக. ஊர்தியும் சமைந்தது எனல் வேண்டிய உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

ஆகூழ் உண்மையால் ஊர்தியும் சமைந்துளது என்றவாறு. ஊர்தி என்றது மயிற்பொறியை. எனக்கும் கருமம் ஈது என்றது நின்னைப் போக்குவதே என்றவாறு. நினக்கும் போவதே கருமம் என்க. (உசரு)

உஎங. என்புநெக் குருகி யுள்ள
மொழுகுபு சோர யாத்த
வன்புமிக் கவலித் தாற்று
வாருயிர்க் கிழத்தி தன்னை
யின்பமிக் குடைய சீர்த்தி
யிறைவன தாணை கூறித்
துன்பமில் பறவை யூர்தி
சேர்த்தினன் துணைவி சேர்ந்தாள்.

(இ - ள்.) என்பு நெக்குஉருகி உள்ளம் ஒழுகுபு சோர யாத்த அன்புமிக்கு - என்பு நெகிழ்ந்துருகுமாறு உள்ளம் கலங்கிச் சோர்வுறப் பிணித்த அன்பு மிகுதலால்; அவலித்து ஆற்ரு ஆருயிர்க் கிழத்தி தன்னை - அழுதல் அமையாத சிறந்த உயிர்போலுங் காதலியை; இன்பம் மிக்கு உடைய சீர்த்தி இறைவனது ஆணை கூறி - அளவற்ற இன்பம் மிகுதலாலே புகழைப் பெற்ற அருகப் பெருமானது ஆணைமொழியாகிய "ஓம்ணமோ அரஹந்தாணம்" என்னும் பஞ்ச நமஸ்கார மந்திரம் ஒன்றனைக் கூறி; துணைவி தன்னைத் துன்பம்இல் பறவை ஊர்தி சேர்த்தினன் - துணைவியைத் துன்பமில்லாது செல்லுதற்குரிய மயிற்பொறியாகிய ஊர்தியிலே அமர்த்தினன்.

(வி - ம்.) [கூறி என்பதனைக் கூற எனத் திரித்து, ஆணை கூறியதை விசயைக்கு ஆக்குவர் நச்சினார்க்கினியர்.] (உ௬௪)

வேறு

உ௬௫. நீரு டைக்கு வளையி
னெடுங்க ணின்ற வெம்பனி
வாரு டைம்மு லைம்முக
நனைப்ப மாதர் சென்றபின்
சீரு டைக்கு ருசிலுஞ்
சிவந்த ழன்றோர் தீத்திரள்
பாரு டைப்ப னிக்கடல்
சுடுவ தொத்து லம்பினன.

(இ - ள்.) நீருடைக் குவளையின் நெடுங்கண் நின்ற வெம்பனி - நீர் நீங்காத குவளைபோல, நீண்ட கண்களில் இருந்து வடியும் வெப்பமிகும் நீர்(மாருது); வார்உடை முலைமுகம் நனைப்ப மாதர் சென்றபின் - கச்சை அறுக்கும் முலைமுகத்தை நனைத்திட விசயை நீங்கின பிறகு; சீர்உடை குருசிலும் சிவந்து அழன்று - சிறப்புற்ற வேந்தனும் உள்ளம் வெதும்பிச் சீற்றங் கொண்டு; ஓர் தீத்திரள் பார்உடை பனிக்கடல் சுடுவது ஒத்து உலம்பினன் - ஒப்பற்ற வடவைத்தீ, உலகை அகத்தில் அடக்கிப் பொங்கிய குளிர்ந்த கடலைச் சுடுவதுபோல முழங்கினன்.

(வி - ம்.) உடைம் முலை: மகரஒற்று வண்ணத்தால் வந்தது. பாரை அகத்து அடக்கின கடல் என்றது ஊழிக்காலத்து நீரை. தான் அமைத்த படையைத் தானே அழிப்பதை யுன்னி நெருப்பும் நீரும் உவமை கூறினர். (உ௬௫)

உஎரு. முழைமு கத்தி டியரி
வளைத்த வன்ன மள்ளரிற்
குழைமு கப்பு ரிசையுட்
குருசி றுன கப்பட
விழைமு கத்தெ றிபடை
யிலங்கு வாட்க டலிடை
மழைமு கத்த குஞ்சரம்
வாரி யுள்வ ளைந்ததே.

(இ - ள்.) முழைமுகத்த இடிஅரி வளைத்த அன்ன - மலையின் குகையிலுள்ள இடியென முழங்கும் சிங்கத்தை வளைத்த யானைத் திரள்போன்ற; மள்ளரில் குழைமுகப் புரிசையுள் குருசில்தான் அகப்பட - வீரர்களிடையே, மகளிர் காக்கும் மதிலில் அரசன் அகப்படுமாறு; இழைமுகத்து எறிபடை இலங்கு வாள் கடலிடை - நூல் பிளக்க எறியும் வேற்படை விளங்கும் வாள் வீரராகிய கடலின் நடுவே; மழைமுகத்த குஞ்சரம் வாரியுள் வளைந்த - முகில்போல மதம் ஒழுகும் களிறுகள் (யானை குதிரைகளின்மேல் அமர்ந்து பந்து விளையாடும்) செண்டுவெளியிலே வளைந்தன.

(வி - ம்.) குழைமுக மகளிர் காக்கும் புரிசையெனவே அந்தப்புரம் ஆயிற்று; 'ஆடவர் குறுகா அருங்கடி வரைப்பின்' (நெடுநல். க0எ) என்றார் பிறரும். மழை - மதம்.

அரியை யானை வளைத்தல் இல் பொருளுவமம். (உசசு)

உஎசு. அயிலி னிற்பு னைந்தவா
ளழன்று ருத்து ரீஇயுடன்
பயில்க திர்ப்ப ருமணிப்
பன்ம யிர்ச்செய் கேடகம்
வெயிலெ னத்தி ரித்துவிண்
வழுக்கி வந்து வீழ்ந்ததோர்
கயில ணிக்க திர்நகைக்
கடவு ளொத்து லம்பினன்.

(இ - ள்.) அயிலினில் புனைந்த வாள் அழன்று உருத்து உரீஇ - கூர்மையாக அமைத்த வாளை நெஞ்சு புகைந்து சினந்து (உறையினின்றும்) உருவி; உடன்பயில் கதிர்ப் பருமணிப் பன்மயிர்செய் கேடகம் வெயில் எனத் திரித்து - அதனுடன் ஒளி தவழும் பெரிய மணிகளிழைத்துக் கரடித் தோலாற் செய்யப் பெற்ற கேடகத்தை ஞாயிறெனச் சுழற்றி; விண்வழுக்கி வந்து

வீழ்ந்தது கயில்அணிக் கதிர்நகை ஓர் கடவுள் ஒத்து உலம்பி ணன் - வானிலிருந்து வழுக்கிவந்து வீழ்ந்ததாகிய கதிராகிய மூட்டுவாய் அமைந்த முத்துமாலையையுடைய ஒரு கடவுளைப் போல முழங்கினன்.

(வி - ம்.) நல்வினை கெட்டு வீழ்ந்ததொரு கடவுள் (ஞாயிறு) உவமையாயிற்று, இவனும் துணையும் படையுமின்றி நிற்றலின். கயில் - மூட்டுவாய். நகை - முத்துவடம். (உசள)

உளஎ. மாரி யிற்க டுங்கணை
சொரிந்து மள்ள ரார்த்தபின்
வீரி யக்கு ருசிலும்
விலக்கி வெங்க ணைமழை
வாரி யிற்க டிந்துட
னகற்ற மற்ற வன்படைப்
பேரி யற்பெ ருங்களிறு
பின்னி வந்த டைந்தவே.

(இ - ள்.) மள்ளர் மாரியின் கடுங்கணை சொரிந்து ஆர்த்த பின் - வீரர்கள் மழையெனக் கொடிய அம்புகளைப் பொழிந்து ஆரவாரித்த பிறகு; வீரியக் குருசிலும் வெங்கணை மழை விலக்கி- வீரம் மிகுந்த அரசனும் கொடிய அக் கணைமழையை நீக்கி; வாரியில் உடன் கடிந்து அகற்ற - செண்டு வெளியில் நின்று அப் படைகளைச் சேரக் கெடுத்துப் போக்க; மற்றவன் படைப்பேர் இயல் பெருங்களிறு பின்னி வந்து அடைந்த - வேறாக நின்ற வலிய படையிலுள்ள புகழ்பெற்ற பெரிய களிறுகள் நெருங்கி வந்து குழுமின.

(வி - ம்.) பேர்இயல் பெருங்களிறு - தம்பேர் உலகில் இயலுதலை யுடைய பெரிய களிறுகள். (உசஅ)

உளஅ. சீற்ற மிக்க மன்னவன்
சேர்ந்த குஞ்ச ரந்நுதற்
கூற்ற ருங்கு ருதிவாள்
கோடு றவ ழுத்தலி
னூற்று டைநே டுவரை
யுருமு டன்றி டித்தென
மாற்ற ரும்ம தக்களிறு
மத்த கம்பி ளந்தவே.

(இ - ள்.) சீற்றம்மிக்க மன்னவன் சேர்ந்த குஞ்சரம் நுதல் - சீற்றம் மிகுந்த சச்சந்தன் தன்னை எதிர்ந்த யானைகளின் நெற்றியிலே; கூற்றுஅருங் குருதிவாள் கோடுஉற அழுத்தலின் - சொல்லுதற்கரிய சிறப்பினையுடைய குருதி படிந்த வாளைத் தந்தங்களிற்பட அழுத்தியபோது; ஊற்றுஉடை நெடுவரை உருமு உடன்று இடித்தென - ஊற்றினையுடைய பெரிய மலையிலே இடிசினந்து தாக்கினாற்போல ஆகி; மாற்றுஅரு மதக் களிறு மத்தகம் பிளந்த - நீங்காத மதமுடைய களிறுகளின் நெற்றிகள் பிளந்தன.

(வி - ம்.) கோடுறவ் வழுத்தலின்: வகரம்வண்ணம் நோக்கி விரிந்தது. ஊற்றருத மலை மதமருத களிறுகட்குவமை. (உசுகூ)

உஎகூ. வேன்மி டைந்த வேலியும்
பிளந்து வெங்கண் வீரரை
வான்ம யிர்ச்செய் கேடகத்
திடித்து வாள்வ லையரிந்
தூனு டைக்கு ருதியுள்
ளுழக்கு புத்தி ரிதரத்
தேன்மி டைந்த தாரினான்
செங்க ளஞ்சி றந்ததே.

(இ - ள்.) வேல் மிடைந்த வேலியும் பிளந்து - வேல் நெருங்கிய (வீரர்) வேலியையும் பிளந்து; வெங்கண் வீரரை வால் மயிர்செய் கேடகத்து இடித்து - (தடுத்த) கொடிய வீரர்களை ஒளிவிடும் மயிராற் செய்த கேடகத்தால் இடித்து; வாள்வலை அரிந்து - வாள் வலையையும் அறுத்து; ஊன் உடைக் குருதியுள் உழக்குபு திரிதர - ஊனை உடைய குருதி வெள்ளத்திலே உழக்கித் திரிதலால்; தேன் மிடைந்த தாரினான் செங்களம் சிறந்தது- வண்டுகள் மொய்க்கும் மாலையினனான சச்சந்தனின் போர்க்களம் பொலிவுற்றது.

(வி - ம்.) வேலி ஆகுபெயராதலின் பிரித்தென்னாது பிளந்தென்றார். வலையென்றார் தப்பாமற் சூழ்தலின்.

இத்துணையும் இவன் வென்றியாதலின் இவன் களம் என்றார். (உஎ0)

வேறு

உஅ0. உப்புடைய முந்நீ ருடன்றுகரை கோல்வ
தோப்புடைய தானையு ளொருதனிய னாகி
யிப்படி யிறைமக னிருங்களிறு நூற
வப்படையு ளண்ணலு மழன்றுகளி றுந்தி,

(இ - ள்.) உப்புஉடைய முந்நீர் உடன்று கரை கொல்வது ஒப்பு உடைய - உப்பினையுடைய கடல் மாறுபட்டுக் கரையை இடிப்பதை உவமையாகக்கொண்ட; தானையுள் ஒரு தனியன் ஆகி - படையிலே உவமையின்றித் தனித்த ஒருவனாகி; இப்படி இறைமகன் இருங்களிறு நூற - இவ்வாறு சச்சந்தன் பெரிய களிற்றுத் திரளைப் பிளக்கும்போது; அப்படையுள் அண்ணலும் அழன்று களிறு உந்தி - எதிர்ப்படையின் தலைவனாகிய கட்டியங் காரனுஞ் சினந்து களிற்றைச் செலுத்தி;

(வி - ம்.) அண்ணல்: இகழ்ச்சிக் குறிப்பு. இப்பாட்டுக் குளகம்.

தன் காவலனையே அழிக்கத் தொடங்கிய படைக்கு முந்நீர் உடன்று கரைகொல்வது ஒப்புடைய தானை என்ற நயம் உணர்க. அப் படையுள் அண்ணல் என்றது கட்டியங்காரனை. (உ௬க)

உ௮க. நீடக மிருந்தநிழ னேமிவல னேந்திக்
கேடக மறுப்பநடு வற்றரவு சேர்ந்தாங்
கோடுகதிர் வட்டமென வொய்யென வுலம்பிக்
காடுகவர் தீயின்மிகை சீறுபு வெகுண்டான்.

(இ - ள்.) நீடுஅகம் இருந்த நிழல்நேமி வலன்ஏந்தி-நீண்ட நாள் (பகையின்மையால்) உள்ளிருந்த ஒளிமிகும் ஆழியை வலக் கையில் எடுத்து; அரவு சேர்ந்து நடுஅற்று ஆங்குஓடு கதிர்வட்டம் என - பாம்பு சேர்தலாற் பாதி மறைந்து வானில் ஓடுகின்ற ஞாயிற்றின் வட்டம் என; கேடகம் அறுப்ப - கேடகத்தை அறுத்தலின்; ஒய்யென உலம்பி-ஒய்யென்று சச்சந்தன் முழங்கி; மிகைசீறுபு - கட்டியங்காரனின் வரம்பு மீறிய செயலுக்குச் செற்றங்கொண்டு; காடுகவர் தீயின் வெகுண்டான் - காட்டைப் பற்றிய தீயைப்போலச் சினந்தான்.

(வி - ம்.) சீறுபு: இறந்தகால வினையெச்சம். ஒய்யென: ஒலிக் குறிப்பு. (உ௬உ)

உ௮உ. நெய்ம்முக மணிந்துநிழ றங்கியழல் பொங்கி
வைம்முக மணிந்தநுதி வாளழல வீசி
மைம்முக மணிந்தமத யானைதவ நூறிக்
கைம்முத லணிந்துகளி றூழவது நோனான்,

(இ - ள்.) அழல்பொங்கி நெய்ம்முகம் அணிந்து நிழல்தங்கி வைமுகம் அணிந்த நுதிவாள் அழல வீசி - அனலிலே முழுகி நெய் பூசப்பெற்று ஒளியமைந்த கூர்மைதங்கிய நுனியையுடைய வாளைச் சினந்து வீசி; மைமுகம் அணிந்த மதயானை தவநூறி - கருமை பொருந்திய முகத்தே பட்டம் அணிந்த மதயானையை

நன்றாக வெட்டுதலால்; களிறு கைமுதல் துணிந்துஆழ அது நோனான் - அம் மதயானை துதிக்கையின் அடி வெட்டுண்டு வீழா நிற்க, அதனைக் (கட்டியங்காரன்) பொறானாகி;

(வி - ம்.) இப்பாட்டுக் குளகம்.

நுதி - முனை. தவ - மிக. முதல் - அடி. (உருங)

உஅங. மாலைநுதி கொண்டுமழை மின்னென விமைக்கும்
வேலைவல னேந்திவிரி தாமமழ கழியச்
சோலைமயி லார்கடுணை வெம்முலைக டுஞ்சுங்
கோலவரை மார்பினுறு கூற்றென எறிந்தான்.

(இ - ள்.) நுதிமாலை கொண்டு மழை மின்என இமைக்கும் வேலை வலன்ஏந்தி - நுனியில் மாலையணிந்த முகிலிடை மின் என்று ஒளிரும் வேலை வலக்கையில் எடுத்து; சோலை மயிலார்கள் துணை வெம்முலைகள் துஞ்சும் கோலவரை மார்பின் - பொழிலிடையே மயில்போன்ற மகளிரின் விருப்பமூட்டும் துணைமுலைகள் துயிலும் அழகிய மலையனைய மார்பிலே; விரிதாமம் அழகு அழிய - மலர்ந்த வாகைமாலை அழகுகெட; உறுகூற்று என எறிந்தான் - தாக்கும் கூற்று என எறிந்தான்.

(வி - ம்) மயிலின் தன்மையார் என்ற பன்மையால் தேவியர் பலராயினர். [சச்சந்தனுக்குத் தேவியர் பலருண்டென்றும் காமக்கிழத்தியர் ஐந்நூற்றுவர் என்றும், க்ஷத்திர சூளாமணி என்ற நூல் கூறும்.] 'முலைகள் துஞ்சும் மார்பு' எனவே முன் தனக்கு நிகராக எறிவாரின்மை பெறப்பட்டது; 'மகளிர் மலைத்தல் அல்லது மள்ளர் - மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப' (புறநா. க0) என்றார் பிறரும். 'யானை ஆழ எறிந்தான்' என முடிக்க. (உருச)

வேறு

உஅச. புண்ணிடங் கொண்ட வெஃகம்
பறித்தலிற் பொன்ன னார்தங்
கண்ணிடங் கொண்ட மார்பிற்
றடாயின காது வெள்வேன்
மண்ணிடங் கொண்ட யானை
மணிமருப் பிடையிட் டம்ம
விண்ணிட மள்ளர் கொள்ள
மிறைக்கொளி திருத்தி னானே.

(இ - ள்.) புண்இடங் கொண்ட எஃகம் பறித்தலின் - மார்பிலே தைத்து நின்ற வேலைப் பறித்ததால்; பொன்னனார்தம் கண் இடம்கொண்ட மார்பில் தடாயின காது வெள்வேல் - திரு

வனைய மகளிரின் கண்களுக்கு இடமான மார்பிலே தாக்கி வளைந்த அவ்வேலை; மண்இடம் கொண்ட யானை மணி மருப்பிடை இட்டு - நிலமிசை பட்டுவீழ்ந்த யானையின் மணிபொதிந்த கொம்பிடை வைத்து; விண்இடம் மள்ளர்கொள்ள மிறைக்கொளி திருத்தினன் - வீரர்கள் வானிலே இடம்பெற அவ்வளைவுக்கு உண்டான இளக்கத்தைப் போக்கினன்.

(வி - ம்.) 'தடாயின வேல்' என்க தடாயின: தட என்னும் உரிச்சொல் அடியிற் பிறந்த பெயரெச்சம். அம்ம: அசை. மிறைக் கொளி - வளைவு கொண்டது. (உருரு)

உஅரு. ஏந்தல்வே றிருத்த யானை
யிரிந்தன வெரிபோற் கண்ணி
நாந்தக வுழவர் நண்ணார்
கூற்றென நடுங்கி மள்ளர்
சாய்ந்தபின் றறுக ணாண்மைக்
கட்டியங் காரன் வேழங்
காய்ந்தனன் கடுக வுந்திக்
கப்பணஞ் சிதறி னானே.

(இ - ள்.) ஏந்தல் வேல் திருத்த சச்சந்தன் வேலைத் திருத்தியதால்; யானை இரிந்தன - யானைகள் ஓடின; எரிபொன் கண்ணி நாந்தக உழவர் நண்ணார் - ஒளிவிடும் பொற்கண்ணி அணிந்த வாள்வீரர் அணுகாராய்; கூற்று என நடுங்கி மள்ளர் சாய்ந்தபின்- கூற்றுவனைச் சச்சந்தனை எண்ணி அஞ்சி அவ்வீரர் ஓடிய பிறகு; தறுகண் ஆண்மைக் கட்டியங்காரன் காய்ந்தனன் வேழம் கடுக உந்தி - அஞ்சாத வீரனை கட்டியங்காரன் அவர்களைச் சினந்து, (மற்றொரு) யானையை விரையத் தூண்டி; கப்பணம் சிதறினான் - கப்பணம் என்னும் படையை வீசினன்.

(வி - ம்.) கப்பணம்: இரும்பால் ஆன ஆனைநெருஞ்சிமுள்போன்ற படை. முன் இவன் ஊர்ந்த யானை துதிக்கை வெட்டுண்டு வீழ்ந்ததால் இப்போது கடுகவுந்திய வேழம் வேறொன்று என உணர்க. நண்ணார், காய்ந்தனன்: முற்றெச்சங்கள். [நச்சினார்க்கினியர் மள்ளரை யானைகளைச் செலுத்துவோர் எனக்கொண்டு, 'மள்ளர் சாய்ந்தபின் யானை இரிந்தன' என மாட்டேறு செய்வர். 'நண்ணார்: வினைமுற்று' என்பர்.] (உருசு)

உஅசு. குன்றமார் பரிந்து வெள்வேற்
குடுமிமா மஞ்ஞை யூர்ந்து
நின்றமால் புருவம் போல
நேரிமுரி புருவ மாக்கிக்

கொன்றவன் வேழம் வீழ்ப்ப
மற்றுமோர் களிற்றிற் பாய்ந்து
நின்றமா மள்ளர்க் கெல்லா
நீண்முடி யிலக்கம் ஆனான்.

(இ - ள்.) வெள்வேல் குன்றம் மார்பு அரிந்து - வெள்ளிய வேலாலே கிரவுஞ்சம் என்னும் குன்றின் மார்பைப் பிளந்து; குடுமி மாமஞ்ஞை ஊர்ந்துநின்ற - உச்சிக்கொண்டையையுடைய பெரிய மயிலைச் செலுத்தி நின்ற; மால் புருவம்போல நெரிமுரி புருவம் ஆக்கி - முருகன் புருவம்போல நெரித்து வளைந்த புருவமுடையவனாய்; அவன் வேழம் கொன்று வீழ்ப்ப - கட்டியங்காரனின் வேழத்தைக் கொன்று வீழ்த்த; மற்றும்ஓர் களிற்றில் பாய்ந்து - அவன் வேறொரு யானையின்மேற் பாய்தலாலே; நின்ற மாமள்ளர்க்கு எல்லாம் நீள்முடி இலக்கம் ஆனான் - நிலைபெற்ற பெரிய வீரர்க்கெல்லாம் நீண்ட முடியையுடைய சச்சந்தன் குறிக்கோளானான்.

(வி - ம்.) ஊர்தல்: போதல்; 'வானூர் மதியம்' (நாலடி. கஉடு) போல. மால் - முருகன். நீள்முடி: சினையாகுபெயர். [சச்சந்தன் ஊர்தியின்றி நின்றதால் மயிலூர்தலாகிய உவமையை மட்டும் நீக்குக.]

(உகூஎ)

வேறு

உஅஎ. நஞ்சுபதி கொண்டவள நாகணையி னான்ற
னெஞ்சுபதி கொண்டுபடை மூழ்கநிலம் வீசு
மஞ்சுதவழ் குன்றனைய தோளொசிந்து மாத்தாட்
குஞ்சரங்க ணூறிக்கொலை வாளொடிந்து நின்றான்.

(இ - ள்.) நஞ்சுபதி கொண்டவளம் நாகஅணையினான் தன் - நஞ்சு பதிதலையுடைய வளமிகும் பாம்பணையினான் ஆகிய சச்சந்தனின்; நெஞ்சு பதிகொண்டு படைமூழ்க - மார்பை இடமாகக்கொண்டு (வீரர்) படை மூழ்கவும்; நிலம்வீசும் மஞ்சுதவழ் குன்றுஅனைய தோள்ஒசிந்து - நிலத்திலுள்ளார்க்குப் பொருள்களை வழங்கும், முகில்தவழும் குன்றம்அனைய தோள்ஒடிய; மாத்தாள் குஞ்சரங்கள் நூறி - பருத்த கால்களையுடைய யானைகளை வெட்டி; கொலைவாள் ஒடிந்து நின்றான் - அதனாற் கொலைக்குரிய வாளை முரித்து நின்றான்.

(வி - ம்.) நாக+அணை: நாகணை: அகரம் தொக்கது. நாகணையினான்: திருமால்; ஈண்டுச் சச்சந்தனுக்காயிற்று. ஒசிந்து: வினையெச்சத்திரிபு. நிலம்: இடவாகுபெயர். தன் தோளில் வலிமையுள்ளவரை யானைகளை வெட்டினான். வெட்டியதால் வாளும் ஒடிந்தது. 'நஞ்சு மதி

கொண்ட' என்பது பாடமாயின் திருமால் உட்கொண்ட சக்கரம் என்க. [மதியனைய சக்கரம்.]

'தோளசைந்து' என்றும் பாடம். (உருஅ)

உஅஅ. ஆரமரு ளாண்டகையு மன்னவகை வீழும்
வீரரெறி வெம்படைகள் வீழவிமை யானுய்ப்
பேரமரு ளன்றபெருந் தாதையொடும் பேராப்
போரமரு ணின்றவிளை யோனிற்பொலி வுற்றான்.

(இ - ள்.) ஆண்டகையும் ஆர் அமருள் அன்னவகை வீழும் வீரர்எறி வெம்படைகள் - ஆடவரிற் சிறப்புற்ற சச்சந்தனும் நிறைந்த போரில் முற்கூறியவாறு விரும்பும் வீரர் எறிகின்ற வெவ்விய படைகள்; வீழ இமையானுய் - வீழும்போதும் இமையாதவனாகி; அன்று பேர் அமருள் பெருந்தாதையொடும் பேரா - முற்காலத்திலே பெரும் போராகிய பாரதப் போரிலே தன் பெரிய தந்தையான கன்னனுடனே மாறுபட்டுப் புறங்கொடாமல்; போர் அமருள் நின்ற இளையோனின் பொலிவு உற்றான் - பொரும் போரிலே நிலைத்துநின்ற அபிமன்னனைப்போலப் பொலிவு பெற்றான்.

(வி - ம்.) வீழும் - விரும்பும். இனி, [1]'நீடும்' பாடமாயின் நெடும் பொழுதாம்; 'நீடு நின்றனன்' என்றார் பிறரும்.

ஆண்டகை - சச்சந்தன். "விழித்தகண் வேல்கொண் டெறிய அழித் திமைப்பின் ஒட்டன்றோ வன்க ணவர்க்கு" (குறள், எஎரு) என்பது பற்றி 'இமையானுய்' என்றார். பேரமர் என்றது பாரதப் போரினை. அன்று என்றது உலகறி சுட்டு. பெருந்தாதை - கன்னன். இளையோன் - அபிமன். (உருசு)

உஅகூ. போழ்ந்துகதிர் நேமியொடு வேல்பொரு தழுந்தத்
தாழ்ந்துதறு கண்ணிணைக டீயழல விழியா
வீழ்ந்துநில மாமகடன் வெம்முலை ஞெமுங்க
வாழ்ந்துபடு வெஞ்சுடரி னாண்டகை யவிந்தான்.

(இ - ள்.) கதிர் நேமியொடு வேல்பொருது போழ்ந்து அழுந்த - ஒளிவிடும் ஆழியும் வேலும் தாக்கிப் பிளந்து அழுந்தினதலாலே; தாழ்ந்து - மெய்வலி குறைந்து; தறுகண் இணைகள் தீஅழல விழியா வீழ்ந்து - அஞ்சாத இரு கண்களும் தீயைச் சொரிய விழித்தவாறு வீழ்ந்து; மாநில மகள்தன் வெம்முலை ஞெமுங்க ஆழ்ந்து - பெருநில மகளின் விருப்பமூட்டும் முலைகள்

1. 'நீடும் போரமருள்.'

அழுந்த அழுந்தி; படுவெஞ்சுடரின் ஆண்தகை அவிந்தான் - மறையும் வெவ்விய கதிரவன்போல ஆண்தகைமை குறைந்தான்.

(வி - ம்.) ஆண்டகைமை: குணப்பண்பு; 'ஆண்டகைக் குரவிர்' (சீவக. ௩௬௩) போல. அவிதல் - குறைதல். 'திரைபாடவிய' (அகநா. ௨௬௦) என்றாற்போல. ஆண்டகையைப் பண்பியாக்கிச் சச்சந்தன் பட்டான் எனின், 'பாலருவி' (சீவக. ௨௬௬) என்னுங் கவி வேண்டாவாம். இவன் பகைவர் முகம் நோக்கி வீழ்தலின், பிள்ளையார் பின்பு பகை வென்றார்.

இச் செய்யுளின்கண் நச்சினார்க்கினியர் ஆண்டகை என்பதற்குச் சச்சந்தன் என்னாது ஆண்தகைமை என்று பொருள்கூறி அதற்குக் கூறும் விளக்கம் கற்றோரை இன்பத்தில் ஆழ்த்துவதாம். நிலமாமகள் வெம்முலை ஞெமுங்க என்றது, நூலாசிரியர் சச்சந்தன் கழிகாமத்தாற் கெட்டமை கருதிக் கூறியதாம். (௨௬௦)

வேறு

௨௬௦. தோய்ந்த விசும்பென்னுந் தொன்னாட் டகந்தொழுது
புலம்பெய்தி மைந்தர் மாழ்க
ஏந்து முலையாரி னைந்திரங்கக் கொடுங்கோ
லிருள்பரப்ப வேஎ பாவ
மாய்ந்த குருகுலமா மாழ்கடலி னுண்முளைத்த
அறச்செங் கோலாய் கதிரினை
வேந்தர் பெருமானைச் சச்சந்தனை மந்திரிமா
நாகமுடன் விழுங்கிற் றன்றே.

(இ - ள்.) தோய்ந்த விசும்பு என்னும் தொன்னாட்டகம் - மக்கள் பொருந்திய விண்ணுலகம் என்று பாராட்டப்பட்ட ஏமாங்கதத்திலே; மைந்தர் தொழுது புலம்பு எய்தி மாழ்க-சான்றோர் கைகூப்பித் தனிமையுற்று வருந்த; ஏந்தும் முலையார் இனைந்து இரங்க - மகளிர் துன்புற்றழ; கொடுங்கோல் இருள் பரப்ப-கொடுங்கோல் தன் இருளைப் பரப்ப; வேந்தர் பெருமானை - மன்னர் மன்னனை; சச்சந்தனை - சச்சந்தனை; ஆய்ந்த குருகுலம் ஆம் ஆழ்கடலினுள் முளைத்த அறச்செங்கோல் ஆய்கதிரினை - நல்லதென்று தேர்ந்த குருகுலம் என்னும் ஆழமாகிய கடலில் தோன்றிய அறமாகிய செங்கோலைக்கொண்ட ஆராய்ந்த ஞாயிற்றை; மந்திரி மாநாகம் உடன் விழுங்கிற்று - அமைச்சனாகிய பெரும் பாம்பு அரசுரிமை யெல்லாஞ்சேர விழுங்கியது. ஏஎ பாவம்! - ஐயோ பாவம்!

(வி - ம்.) 'கடலாங் குருகுலம்' சிறப்பு நிலைக்களமாக முதலொடு முதலே வந்த மெய்யுவமம் (தொல். உவம-௪.) 'மந்திரி மாநாகம்' கீழான பொருள் நிலைக்களமாக முதலொடு முதலே வந்த வினையுவமம் (தொல்.

உவம-டு.) தொல்காப்பியனர் சொல்லும் பொருளும் உடன் ஆராய் தலின் உருவகவுவமை யென்றே கூறினர். செங்கோலையுடைய கதிர்: இல்பொருளுவமம்.

என: குறிப்புமொழி. இதனல், அவன் ஆண்டகைமை குறைந்த தற்கு இரங்கினர். (உசுக)

உசுக. பாலருவித் திங்கடோய் முத்தமா லைப்பழிப்பில்
நெடுங்குடைக்கீழ்ப் பாய்பரி மான்றேர்க்
கோலருவி வெஞ்சிலையான் கூர்வா ளோடு மணிக்
கே டகமு மறமு மாற்றி
வாலருவி வாமனடித் தாமரை மலர்சூடி
மந்திரமென் சாந்து பூசி
வேலருவிக் கண்ணினர்மெய் காப்போம்ப வேந்தன்போய்
விண்ணேர்க்கு விருந்தாயி னனே.

(இ - ள்.) பால்அருவித் திங்கள்தோய் முத்தம்மாலைப் பழிப்புஇல் நெடுங்குடைக்கீழ் - பால்போலுங் கதிர்களையுடைய திங்களைப்போல, முத்துமாலை அணிந்த குற்றமற்ற பெருங் குடையின் நீழலிலே; பாய்பரி மான்தேர் - தாவும் புரவிகள் பூட்டிய தேரில் அமர்ந்து; கோல்அருவி வெஞ்சிலையான் - அம்பு களை அருவிபோல வீசும் கொடிய சிலையினன் (இப்போது அவைக ளின்றி); கூர்வாளொடு மணிக்கேடகமும் மறமும் ஆற்றி - கூரிய வாளும் கேடகமும் வீரமும் துணையாகப் பொருது; வால்அருவி மந்திரமென் சாந்துபூசி வாமன் அடித் தாமரை மலர்சூடி - அரு களை நினைப்பதாகிய சுக்கிலத் தியானத்திலே முழுகி அருக மந்திரமாகிய சாந்தைப் பூசி அவன் அடிகளாகிய தாமரை மலர் களை அணிந்து; வேல்அருவிக் கண்ணினர் மெய்காப்பு ஓம்ப - வேலனைய கண்ணினையுடைய அரம்பையர் மெய்யைச் சூழ்ந்து காவல் செய்ய; போய் விண்ணேர்க்கு விருந்தாயினன் வேந்தன் - சென்று வானவர் வழிபடுதற்குப் புதியனுயினன் அரசன்.

(வி - ம்.) தோய்: உவமையுருபு. வேலருவி - வேலொழுங்கு.

உயிர் நீங்குகின்றபொழுது தியானம் வந்துதவுதலின், வீடு பெற்ருன் என்க; சுவர்க்கமுமாம்.

இடையருமையானும் மூழ்கினர்க்கு உலகியற்றுன்பம் மறைந்து குளிர்ந்திருத்தலானும் சுக்கிலத்தியானத்தை "வாலருவி" என்ருர். வாலருவியின்கண் ஆடி என்க. ஓதுங்கால் உள்ளமும் உடலும் குளிர் தலின் வாமன் மந்திரத்தை மென்சாந்தம் என்ருர். (உசுஉ)

உசுஉ. சேந்தீக் கருந்துளைய தீங்கு ழல்யாழ்
தேந்தே மென்னுமணிமுழவமுந்
தந்தாங் கிளையார் மேல்விரல்க டீண்டத்
தாந்தாமேன் றிரங்குந்தண் ணுமைகளு
மந்தீங் கிளவியா ரைஞ்ஞூற்றுவ ரவைதுறை
போயாட லரம்பை யன்ன
ரெந்தாய் வெறுநிலத்துச் சேர்தியோ வென்றினைந்
திரங்கிப் பள்ளிபடுத் தார்களே.

(இ - ள்.) செந்திக் கருந்துளைய தீங்குழல் யாழ் - செந்தீயாற் கருந்துளையவான இனிய குழலும் யாழும்; தேம்தேம் என்னும் மணிமுழவமும் - தேம்தேம் என்றொலிக்கும் முழவங்களும்; தாம்தாம் என்று இரங்கும் தண்ணுமைகளும் - தாம்தாம் என்று முழங்கும் தண்ணுமைகளும்; தந்து ஆங்கு இளையார் மெல் விரல்கள் தீண்ட - ஆங்கே கொண்டுவந்து இசைக்கும் நாடகத்திற்கும் வாச்சியத்திற்குமுரிய மகளிர் மெல்விரல்களால் தீண்டி வாசிக்க; அம்தீங் கிளவியார் ஐந்நூற்றுவர் - அழகிய இனிய மொழியார் ஐந்நூற்றுவராகிய அகப்பரிவார மகளிரும்; அவை துறைபோய ஆடல்அரம்பை அன்னர் - தமக்குரிய துறையிலே முற்றுங் கற்று அவையினில் ஆடுதல்புரியும் அரம்பையரைப் போன்ற நாடக மகளிரும்; எந்தாய்! வெறுநிலத்துச் சேர்தியோ! என்று இனைந்து இரங்கிப் பள்ளி படுத்தார்கள் - 'எந்தையே! வெறுநிலத்துக் கிடத்தியோ!' என்று துன்புற்று அழுது ஈமத்திலே படுக்கை யமைத்துக் கிடத்தினர்.

(வி - ம்.) தேந்தேம், தாந்தாம்: அநுகரணம். 'கிளவியார் ஐந்நூற்றுவர்' என்றூர் அகப்பரிவாரம் ஐந்நூற்றுவரே என்றற்கு. மேலும் நால்வரை ஒழிந்த தோழர் ஐந்நூற்றுவரும் அகப்பரிவாரம் என்று உணர்க.

'கோன்றமர் நிகளம் மூழ்கி' (சீவக. உசுஉ) எனவே ஆடவர் இன்மை உணர்க. (உசுஉ)

உசுங. மடையவிழ்ந்த வெள்ளிலை வேலம்பு பாயமணிச்
செப்பகங் கடைகின்ற வேபோற்
றேடையவிழ்ந்த மாலைபுமுத் துந்தோய்ந்த துணைமுலையி
னுள்ளரங்கி மூழ்கக் காமன்
படையவிழ்ந்த கண்பனி நீர்பாய விம்மாப்
பருமுத்தா மழலைக்கிண் கிணியினார்
புடையவிழ்ந்த கூந்தல்புல வத்தோயப் பொழிமழையுண்
மின்னுப்போற் புலம்பி யார்த்தார்.

(இ - ள்.) பருமுத்தம் நாமழலைக் கிண்கிணியினர் - பெரிய முத்துக்களாகிய நாவினாலே மழலை மொழியும் கிண்கிணி யணிந்த மகளிர்; மணிச் செப்புஅகம் கடைகின்றவே போல் - மாணிக்கச் செப்பின் உள்வாயைக் கடைகின்றவை அதனுள் அழுந்துமாறுபோல; மடைஅவிழ்ந்த வெள்ளிலைவேல் அம்புபாய - மூட்டுக் கழன்ற வெண்மையான இலைமுகமுடைய வேலும் அம்பும் என அங்கே பரவிக் கிடப்பவை; தொடை அவிழ்ந்த மாலையும் முத்தும் தோய்ந்த துணைமுலையின் உள் அழுங்கி மூழ்க - முறுக் கவிழ்ந்த மாலையும் முத்தும் பயின்ற துணைமுலைகளின் உள்ளே தைத்து அழுந்தும்படி; காமன்படை அவிழ்ந்த கண்பனிநீர் பாய விம்மா - காமன் படைகளை வென்ற கண்களிலிருந்து நீர் பெருக விம்மிப் புரண்டழுது, (பிறகு); புடைஅவிழ்ந்த கூந்தல் புலவுதோய - பக்கத்தே அவிழ்ந்து நிலத்திலே படிந்து மெய்யை மறைத்துத் தொங்குங் கூந்தலிற் குருதி படிய; பொழிமழையுள் மின்னுப்போல் புலம்பினர் - நீர்பொழியும் முகிலினூடே மின்னுப்போல இருந்து அழுதனர்.

(வி - ம்.) புலவு-குருதி: பண்பாகுபெயர் [(புலால் கமழ்வது குருதி) இனிக் குருதிபடிந்த நிலத்திற்கெனின் தானியாகுபெயர்.]

[விம்மா : செய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். விம்மிப் புலம்பினர் என்க. (உசுச)

உசுரு. அரிமானோர் மெல்லணைமேன் மஞ்ஞைசூழக் கிடந்தாங்கு
வேந்தன் கிடந்தானைத்தான்
கரிமாலை நெஞ்சினன்கண் டான்கண்டே கைதொழுதான்
கண்ணீர் கலுழ்ந்து குத்தபின்
னெரிமாலை யீமத்திழு தார்குடமே னைநூறு
மேற்பச் சொரிந்த லறியெம்
பெருமானே யெம்மை யொளித்தியோ வென்னுப்
பெரியகண் ணீர்சொரிந் தலறுவார்.

(இ - ள்.) அரிமான் ஓர்மெல் அணைமேல் மஞ்ஞைசூழக் கிடந்தாங்கு வேந்தன் கிடந்தானை - சிங்கவேறு ஒரு மெல்லிய பள்ளியின்மேல் மயில்கள்சூழக் கிடந்தாற்போலக் கிடந்த வேந்தனை; கரிமாலை நெஞ்சினன்தான் கண்டான் - இருண்ட இயல்புடைய உள்ளத்தினனாங் கட்டியங்காரன் பார்த்தான்; கண்டே கைதொழுதான் - பார்த்தவுடனே கைகூப்பி வணங்கினான்; கலுழ்ந்து கண்ணீர் உகுத்தபின் - (பிறகு) அழுது கண்ணீர் சிந்தினான்; அதற்குப்பின்; எரிமாலை ஈமத்து இழுது ஆர் குடம் ஏனைநூறும் ஏற்பச் சொரிந்து அலறி - எரியும் இயல்புடைய ஈம விறகிலே குடங்கள் நிறைந்த நெய்யும் சந்தனம்

முதலியவற்றையும் தகவுறப் பெய்து அலறி; எம்பெருமானே! எம்மை ஒளித்தியோ என்னுப் பெரிய கண்ணீர் சொரிந்து அலறு வார் - எம் இறைவனே எம்மை மறந்து மறைந்தனையோ என்று பெருங் கண்களிலிருந்து நீரைப் பொழிந்து அலறுவாராயினர்.

(வி - ம்.) கட்டியங்காரன் மனம் வழிபாட்டிற்படுதலின் தன் வயத்ததின்றிக் கலங்கியது என்பார், 'கலுழ்ந்து' என்றார். கண்ணீர் உகுத்தது இன்பத்தினல். இதனே, 'உவகைக் கலுழ்ச்சி' என்பர். 'விளிவில் கொள்கை' (தொல். மெய்ப்-ரு) என்றதனுல் இதுவும் அழுகைப் பாற்படும். அரசன் மெய்யை எரி விழுங்குவதனுல், 'ஒளித்தியோ' என்றனர். என்னு - என்று.

இச் செய்யுளும் பின்வரும் இரண்டு செய்யுட்களும் ஒரு தொடர். (உசுரு)

உசுரு. கையார் வளைகள்புடைத் திரங்குவார் கதிர்முலைமே
லாரம் பரிந்த லறுவார்
நெய்யார் கருங்குழல்மேன் மாலைசிந்தி நிலத்திடுவார்
நின்று திருவில் வீசு
மையார் கடிப்பிணையும் வார்குழையுங் களைந்திடுவார்
கையால் வயிற துக்குவா
ரையாவோ வென்றழுவார் வேந்தன்செய் கோடுமைகோடி
தேனன்பார் கோல்வ ளையினர்.

(இ - ள்.) கோல் வளையினர் - திரண்ட வளையலையணிந்த அம் மகளிர்; கைஆர் வளைகள் புடைத்து இரங்குவார் - கையி லுள்ள வளையல்களை உடைத்துக்கொண்டு அலறுவார்; முலைமேல் கதிர்ஆரம் பரிந்து அலறுவார் - முலைமேலுள்ள ஒளிவிடும் முத்து மாலைகளை அறுத்து அலறுவார்; நெய்ஆர் கருங்குழல்மேல் மாலை சிந்தி நிலத்து இடுவார் - நெய்ப்பையுடைய கரிய குழல்மேல் உள்ள மாலையைச் சிதறி நிலத்திலே வீசுவார்; திருவில் நின்று வீசும் வார்குழையும் மைஆர் கடிப்பிணையும் களைந்திடுவார் - இந்திரவில்லின் ஒளியை நிலையாக வீசும் நீண்ட குழையையும் நீலநிறம் பொருந்திய கடிப்பிணையையும் கழற்றிப் போடுவார்; கையால் வயிறு அதுக்குவார் - கைகளால் வயிற்றில் அடித்துக் கொள்வார்; ஐயா! ஓ! என்று அழுவார் - ஐயா! ஓ! என்று அழுவார்; வேந்தன் செய் கொடுமை கொடிது என்பார் - அரசன் செய்த கொடுமை அறவுங் கொடியது என்பார்.

(வி - ம்.) கடிப்பிணை: குதம்பைபோன்ற ஒரு காதணி. ஓ: இரக்கக் குறிப்பு. கொடிதென்றனர் - அரசற்குச் செய்யும் நீர்க்கடன் முறை செய்யாமை யெண்ணி. (உசுசு)

உசுசு. பாலுட் பிறைமருப்பிற் பைங்கண்வே ழம்பகுவா
யோர்பையணன் மாநாகம் வீழ்ப்பத்
தேனூர் மலர்ச்சோலைச் செவ்வரையின் மேற்சிறு
பிடிகள்போ லத்துய ருழந்துதா
மானு தடியேம்வந் தவ்வுலகி னின்னடி
யடைதுமேன் றழுதுபோ யினாரெங்
கோனூர் பறிப்ப நலம்பூத்த விக்கொடி
யினிப்பூ வாபிறர் பறிப்பவே.

(இ - ள்.) தேன்ஆர் மலர்ச்சோலைச் செவ்வரையின்மேல் - தேன் நிறைந்த மலர்ச்சோலையையுடைய செவ்விய மலையின்மேல்; பகுவாய் பைஅணல் ஓர்மா நாகம் - பெரிய வாயையும் படத்தையும் கீழ்வாயையும் உடையதொரு பெரும் பாம்பு; பால்நாள் பிறை மருப்பின் பைங்கண் வேழம் வீழ்ப்ப - அரைத்திங்களனைய மருப்பினையும் பசிய கண்ணினையும் உடைய களிற்றை வீழ்த்தியதால்; சிறு பிடிகள்போலத் தாம் துயர்உழந்து - (அக்களிறு காத்தற்குரிய) சிறுபிடிகள் அக்காவலை யிழந்து வருந்துமாறுபோலத் தாங்கள் வருந்தி; எம்கோனூர் பறிப்ப நலம்பூத்த இக்கொடி பிறர் பறிப்பப் பூவா - எம் இறைவர் பறிப்பதற்காக அழகினை மலர்ந்த இக்கொடிகள் இனியும் பிறர் பறிக்குமாறு மலரா; அடியேம் வந்து அவ்வுலகில் நின் அடி அடைதும் - (ஆகவே) அடியேங்கள் அவ்வுலகிற்கு வந்து நின் திருவடிகளை அடைவோம்; என்று ஆனாது அழுது போயினார் - என்று கூறி அமைதியின்றி அழுது நீங்கினர்.

(வி - ம்.) 'சிறுபிடிகள்' எனவே அக்களிறு கூடுதற்குரிய குலத்திற் பிறந்த கொடிகள் அல்ல என்பது பெற்றாம். 'இக்கொடி' என்றார் தம்மைப் பிறர்போல. இவர்கள் அரசற்குக் காமம் ஒழிந்த நுகர்ச்சி கொடுத்தற்குரிய [பணி] மகளிர். (உசுஎ)

உசுஎ. செங்கட் குறுநரியோர் சிங்கவேற் றைச்செகுத்தாங்
கதனிடத்தைச் சேர்ந்தா லொப்ப
வெங்கட் களியானை வேல்வேந் தனைவிற
லெரியின்வாய்ப் பெய்தவன் பெயர்ந்துபோய்ப்
பைங்கட் களிற்றின்மேல் தன்பெயரி னுற்பறை
யறைந்தான் வேன்மாரி பெய்தாலொப்ப
வெங்க ணவருமினைந் திரங்கினா ரிருண்மனத்தான்
பூமகளை யெய்தி னானே.

(இ - ள்.) செங்கண் சிறுநரி ஓர்சிங்க ஏற்றைச் செகுத்து - சிவந்த கண்களையுடைய சிறுநரி ஒன்று, ஓர் ஆண் சிங்கத்தைக்

கொன்று; ஆங்கு அதன் இடத்தைச் சேர்ந்தால் ஒப்ப - அங்கே அச் சிங்கத்தின் இடத்தை அடைந்தாற்போல; வெங்கண் களியானை வேல்வேந்தனை விறல் எரியின்வாய்ப் பெய்தவன்-கொடுமையுடைய மதயானையும் வேலுங் கொண்ட சச்சந்த மன்னனை ஆற்றலையுடைய எரியில் இட்ட கட்டியங்காரன்; பெயர்ந்து போய்ப் பைங்கண் களிற்றின்மேல் தன் பெயரினல் பறையறைந்தான் - நீங்கிச் சென்று பசிய கண்களையுடைய களிற்றின்மேல் தான் அரசன் என அறிவித்துப் பறையறைவித்தான்; வேல்மாரி பெய்தால் ஒப்ப எங்கணவரும் இனைந்து இரங்கினர் - வேல்மழை பெய்தாற்போல எங்குள்ளவரும் அப்பறையொலி கேட்டு வருந்தியழுதனர்; இருள் மனத்தான் பூமகளை எய்தினன் - இவ்வாறு கரிய மனமுடைய கட்டியங்காரன் நிலமகளை அடைந்தான்.

(வி - ம்.) நரி சிங்கத்தின் இடத்தை அடைந்தாற் சிங்கம்போலத் தொழில் நடத்ாது; தன் இழிதொழிலையே நடத்தும். கட்டியங்காரன் கருத்தால் மகளிர் சச்சந்தனை எரியிற் பெய்தலின் அதனை அவன் தொழிலாக்கினர்.

[நச்சினர்க்கினியர் 'விறலெரி' என்பதிலுள்ள 'விறல்' என்னுஞ் சொல்லையும், 'பெய்து அவன்' என்பதிலுள்ள 'அவன்' என்னுஞ் சொல்லையும் இணைத்து 'விறலவன்' எனக் கட்டியங்காரனுக்காக்கி 'இஃது இகழ்ச்சி' என்பர்.] (உசுஅ)

### சீவகன் பிறப்பு

### வேறு

உசுஅ. களிமுகச் சுரும்புண் கோதை
கயிலெருத் தசைந்து சோர
வளிமுகச் சுடரி னில்லா
மனத்தோடு மயங்கி யிப்பாற்
சுளிமுகக் களிற னன்றன்
சொன்னய நெறியிற் போய
கிளிமுகக் கிளவிக் குற்ற
திற்றெனக் கிளக்க லுற்றேன்.

(இ - ள்.) களிமுகச் சுரும்புஉண் கோதை கயில் எருத்து அசைந்து சோர - களிக்கும் நெறியினையுடைய சுரும்புகள் தேனைப் பருகும் மலர்மாலை அணிகலன் அணிந்த கழுத்திலே குலைந்து வீழ; வளிமுகச் சுடரின் நில்லா மனத்தொடு மயங்கி - காற்றின் எதிரில் நில்லாத விளக்குப்போல நிலையற்ற உள்ளத்தோடு மயக்கமுற்று; சுளிமுகக் களிறனன் தன் சொல்நய நெறியில் போய - சுளித்த முகமுடைய களிறுபோன்ற சச்சந்தன் கூறிய சொல்லின் பயனை உட்கொண்டு சென்ற; கிளிமுகக் கிள

விக்கு இப்பால் உற்றது இற்றுஎனக் கிளக்கல் உற்றேன் - கிளி யனைய மொழியாட்கு இப்பால் நேர்ந்தது இத்தன்மைத்தென்று கூறத் தொடங்கினேன்.

(வி - ம்.) களிமுகம் - களிக்கின்ற நெறி. கயில் - மூட்டுவாய்; ஆகுபெயரால் அணிகலனை உணர்த்தியது. (௨௬௯)

௨௭௦. எஃகென விளங்கு வாட்க
ணெறிகட லமிர்த மன்னா
ளஃகிய மதுகை தன்னா
லாய்மயி லூரு மங்கண்
வெஃகிய புகழி னான்றன்
வென்றிவெம் முரச மார்ப்ப
வெஃகெறி பிணையின் மாழ்கி
யிறுகிமெய்ம் மறந்து சோர்ந்தாள்.

(இ - ள்.) எஃகுஎன விளங்கு வாள்கண் எறிகடல் அமிர்தம் அன்னாள் - கூர்மையே இதன் வடிவம் என்று விளங்கும் வாளனைய கண்களையுடைய, அலைகடலில் எழுந்த அமிர்தம் அன்னாள் ஆகிய விசயை; அஃகிய மதுகை தன்னால் ஆய்மயில் ஊரும் ஆங்கண்-(கணவனை நீங்குதலால்) குறைந்த ஆற்றலுடன் விசை குறைந்த மயிலைச் செலுத்தும் அவ்வானிலே; வெஃகிய புகழினான் தன் வென்றி வெம்முரசம் ஆர்ப்ப - (அரசனாக) விரும் பிய புகழினனது கொடிய வெற்றி முரசு ஒலிக்க; எஃகு எறி பிணையின் மாழ்கி இறுகி மெய்ம்மறந்து சோர்ந்தாள் - (அது கேட்டு) வேலால் அடியுண்ட பெண்மானென மனம் மயங்கி மூர்ச்சித்துத் தன்னை மறந்து சோர்ந்தாள்.

(வி - ம்) இது கையாறுதலிற் பொறியை இடத்தே திரித்தல் இயலாமை நேர்ந்தது. [கையாறு - செயலறுதல்.]

எஃகென விளங்கு வாட்கண்-என்பதற்கு வேலென விளங்காநின்ற ஒளியுடைய கண் எனினுமாம். அஃகிய மதுகை - குறைந்த வலிமை. ஆய்மயில் - வேகஞ் சுருங்கிய மயிற்பொறி. "ஓய்தல், ஆய்தல், நிழத்தல், சாஅய் ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்" (உரி-௩௨.) என்பர் தொல்காப்பியனார். வெஃகிய புகழினான் - வேந்தன் அல்லனாகவும் அவ் வேந்தற்குரிய புகழைக் கவர்ந்தவன்; என்றது கட்டியங்காரனை. வெஃகு தல்-பிறர் பொருளைக் கவர்தல். வென்றிவெம் முரசம் என்றது இகழ்ச்சி. எஃகு - வேல். (௨௭0)

௩00. மோடுடை நகரி னீங்கி
முதுமரந் துவன்றி யுள்ளம்
பீடுடை யவரு முட்கப்
பிணம்பல பிறங்கி யெங்குங்

காடுடை யளவை யெல்லாங்
கழுகிருந் துறங்கு நீழற்
பாடுடை மயிலந் தோகை
பைப்பய வீழ்ந்த தன்றே.

(இ - ள்.) பாடுஉடை அம் தோகை மயில் - (அங்ஙனம் அவள் மூர்ச்சித்ததால் தானே) இடப்பக்கம் விசை குறைதலால் இறங்கும் மயில்; மோடுஉடை நகரின் நீங்கி - பெருமைமிகும் நகரிலிருந்து நீங்கி; முதுமரம் துவன்றி உள்ளம் பீடு உடைய வரும் உட்கப் பிணம்பல பிறங்கி - முதிய மரங்கள் நெருங்கி, மனவுறுதி யுடையோரும் அஞ்சுமாறு பிணங்கள் பலவாக மிகுத்து; காடுஉடை அளவைஎல்லாம் எங்கும் கழுகு இருந்து உறங்கும் நீழல் - காடிருக்கும் இடம் எல்லாம் எங்கும் கழுகு அமர்ந்து துயிலும் நீழலிலே (சுடுகாட்டில்); பைபய வீழ்ந்தது - மெல்ல மெல்ல விழுந்தது.

(வி - ம்.) பாடு - ஈண்டு இடப்பக்கம். உடை மயில் : உடைகின்ற மயில் என வினைத்தொகை. பொறிக்கு, 'ஓடமுறுக்கி' (சீவக. உ௩அ) என்னும் வாசகம் முன்னர் உளது, ஆதலின், அதற்கேற்ப, 'உடைகின்றது' என்றார். கையால் இடந்திரித்தாற் கடிதின் வீழ்கின்றது, ஈண்டுத் தானே இடந்திரிதலிற் பையப்பைய நிலத்திற்கு அண்ணிதாக வீழ்ந்த தென்றார். வீழ்ந்தது, நிகழ்காலத்தில் தோன்றிய இறப்பு. (உஎக)

௩0க. மஞ்சுசூழ் வதனை யொத்துப்
பிணப்புகை மலிந்து பேயு
மஞ்சுமம் மயானந் தன்னு
ளகில்வயி றார்ந்த கோதை
பஞ்சிமேல் வீழ்வ தேபோற்
பல்பொறிக் குடுமி நெற்றிக்
குஞ்சிமா மஞ்ஞை வீழ்ந்து
கால்குவித் திருந்த தன்றே.

(இ - ள்.) மஞ்சு சூழ்வதனை ஒத்துப் பிணப்புகை மலிந்து - முகில் சூழ்வதுபோலப் பிணப்புகை நிறைந்து; பேயும் அஞ்சும் அம் மயானந் தன்னுள் - பேயும் நடுங்கும் அச் சுடுகாட்டிலே; அகில் வயிறு ஆர்ந்த கோதை பஞ்சிமேல் வீழ்வதேபோல் - அகில் மணத்தைத் தன்னிடத்தே கொண்ட மலர்மாலை பஞ்சியின்மேல் வீழ்வதைப்போல; பல்பொறிக் குடுமிநெற்றிக் குஞ்சி மாமஞ்ஞை - பல புள்ளிகளையும் உச்சியிலே கொண்டையையும் மயிரையும் உடைய பெரிய மயில்; வீழ்ந்து கால்குவித்து இருந்தது - மெல்லென விழுந்து காலைக் குவித்திருந்தது.

(வி - ம்.) பேயும்: உம்: உயர்வு சிறப்பு. அகில்: அதன் மணத்திற்கு ஆகுபெயர்.

'இருக்கும்' என்றும் பாடம். இம் மயிற்பொறியைக் கூனியது உருவங்கொண்ட தெய்வம் மறைத்துக் கட்டியங்காரனும் கோவிந்தனும் தேவியைத் தேடாமற் காத்ததென்று கொள்க. அது பின்பு, 'கனியார் மொழியாட்கும் மயிற்குங் காமர்பதி நல்கி' (சீவக. உசூ0௩) எனச் சேரக் கூறியவாற்றானும் உணர்க. (உஎஉ)

௩0உ. வார்தரு தடங்க ணீர்தன்
வனமுலை நனைப்ப வேல்பெற்
றூர்கட லனைய காட்டு
ளச்சமொன் றுனு முள்ளா
ளேர்தரு மயிலஞ் சாய
லிறைவனுக் கிரங்கி யேங்கிச்
சோர்துகி றிருத்த றேற்று
டுணைபிரி மகன்றி லொத்தாள்.

(இ - ள்.) ஏர்தரும் மயில்அம் சாயல் - எழுச்சிபெறும் அழகிய மயிலனைய மென்மையுடையாள்; தடம்கண் வார்தரும் நீர்தன் வனமுலை நனைப்ப - பெரிய கண்களிலிருந்து வழிதரும் நீர் தன் அழகிய முலைகளை நனைக்க; ஏல்பெற்று - மனவெழுச்சி மிக்கு; ஊர்கடல் அனைய காட்டுள் - பரவிய கடல்போன்ற அக் காட்டிலே; அச்சம் ஒன்றுனும் உள்ளாள் - பேய் முதலிய ஒரு வகையானும் அச்சங்கொள்ளாதவளாய்; இறைவனுக்கு இரங்கி ஏங்கி - அரசன் நிலைக்கு யாது செய்வேன் என்று வருந்தி யழுது; சோர்துகில் திருத்தல் தேற்றாள் - சோரும் ஆடையையுந் திருத்தும் தெளிவில்லாதவளாய்; துணைபிரி மகன்றில் ஒத்தாள் - துணையைப் பிரிந்த மகன்றிலைப் போன்றாள்.

(வி - ம்.) உள்ளாள், தேற்றாள்: முற்றெச்சங்கள். அன்பு மிகுதியாற் கையாறு முற்படுதலின், 'இறுகி' (சீவக. உகூகூ) எனக் கையாறு கூறி, 'இரங்கி' எனக் கவலை கூறி, 'ஏங்கி' என அரற்றுக் கூறி, 'அச்சம் உள்ளாள்' என அவலங் கூறினர். வருத்தம் தோன்றி நிற்றல், அவலம். வாய்விட்டழுதல், அரற்று. யாது செய்வல் என்றல், கவலை. மூர்ச்சித்தல், கையாறு.

ஏல் - மனவெழுச்சி. தான் நிற்கின்ற நிலையிலே கலக்கத்தாலே பேய் முதலியவற்றிற்குச் சிறிதும் அஞ்சினளிலள். (உஎ௩)

௩0௩. உண்டெனு வுரையிற் கேட்பா
ருயிருறு பாவ மெல்லாங்
கண்டினித் தெளிக வென்று
காட்டுவாள் போல வாசி

விண்டோட நிவந்த கோயில்
விண்ணவர் மகளிற் சென்ருள்
வெண்டலை பயின்ற காட்டுள்
விளங்கிழை தமிய ளானுள்.

(இ - ள்.) விளங்குஇழை விண்தொட நிவந்த கோயில் விண்ணவர் மகளின் சென்ருள்-விளக்கமான அணிகளை அணிந்த விசயை, வானளாவ உயர்ந்த அரண்மனையிலே வானவர் மகளைப் போல நல்வினை வடிவாய் உலவினள்; உயிர்உறு பாவம் எல்லாம் உண்டுஎன உரையில் கேட்பார் - பல உயிர்களும் உறும் பாவங்களெல்லாம் இவை என்று நூல்களிலே உரையளவிலே உள்ளன என்று கேட்பவர்கள்; கண்டு இனித் தெளிக என்று காட்டுவாள் போல ஆகி - நேரிற் பார்த்து இனித் தெளிவுறுக என்று உலகிற்குக் காட்டுகின்றவள் போலவாகி; வெண்தலை பயின்ற காட்டுள் தமியள் ஆனுள் - மண்டையோடுகள் பழகிய சுடுகாட்டிலே தீவினையின் வடிவாய்த் தனித்தவளானுள்.

(வி - ம்.) மகப்பெறுங் காலத்துத் துணையின்றி வருந்துதலின், 'காட்டுவாள்போல ஆகி' என்ருர்.

உரை - ஆகம அளவை. கண்டினித் தெளிக என்றது காட்சியளவையானும் கண்டு உணர்வீராக என்றவாறு.

இவள் நெருநல் விண்டொட நிவந்த கோயில் விண்ணவர் மகளிற் சென்ருள் இன்று தமியளானுள் என்க. (உஎச)

௩0௪. இருள்கெட விகலி யெங்கு
மணிவிளக் கெரிய வேந்தி
யருளுடை மனத்த வாகி
யணங்கெலாம் வணங்கி நிற்பப்
பொருகடற் பருதி போலப்
பொன்னனுன் பிறந்த போழ்தே
மருளுடை மாத ருற்ற
மம்மர்நோய் மறைந்த தன்றே.

(இ - ள்.) எங்கும் இருள்கெட இகலி மணிவிளக்கு ஏந்தி எரிய - எவ்விடத்தும் இருள்இன்றி ஒட்டி மணிவிளக்குகள் மிக்குச் சுடர்வீச; அணங்கு எலாம் அருள்உடை மனத்தஆகி வணங்கி நிற்ப - ஆண்டுறையும் தெய்வமெல்லாம் (இவன் பின்னர் வீடு பெறுவான் என்று கருதி) இரக்கமுற்ற வுள்ளத்துடன் வணங்கி நிற்க; பொருகடல் பருதிபோலப் பொன்னனுன் பிறந்த போதே - அலைகடலிடை ஞாயிறுபோலப் பெறுதற்கரியவன்

பிறந்தபொழுதே; மருள்உடை மாதர்உற்ற மம்மர் நோய் மறைந்தது-மயக்கம் உற்ற விசயை கொண்ட வருத்தநோய் மறைந்தது.

(வி - ம்.) ஏந்தி - மிக்கு. இகலி - விளக்கொடு மாறுபட்டு எனினும் ஆம். இவன் வீடு பெறுவன் என்று கருதித் தெய்வம் வணங்கிற்று. 'கவாஅன் மகற்கண்டு தாய் மறந்தாங்கு' (நாலடி. உ0க) என்றார் பிறரும். முன், 'வெஞ்சுடரின் ஆண்டகை அவிந்தான்' (சீவக. உஅகூ) என்று கூறி, அச்சுடர் குழவியாய்த் தோன்றினமை [ஈண்டுக்] கூறினர். ஞாயிறு தோற்றத்தில் இருளைப் போக்கிப் பின்னர் மதியத்தைக் கெடுக்குமாறு போல, இவனும் பிறந்தபோதே தேவியின் இருளைப் போக்கிப் பின்பு பகைவெல்வான் என்பது கருத்து. இக்கருத்தாற், 'செய்யோன் செழும் பொற்சரம்' (சீவக. உஅஉஉ) என்றும், 'மதிவீழ்வது போல வீழ்ந்தான்' (சீவக. உஅஉஉ) என்றும் கூறினர்.

இச் செய்யுளுக்கு நச்சினார்க்கினியர் கூறும் விளக்கங்கள் மிக்க நுணுக்கமுடையன. அவற்றிற் கியல்பன்மை தோன்ற அருளுடை மனத்தவாகி என்றார். அணங்கு - பேய். பொன்னனான் என்றது பொன் போன்று பெறுதற்கரியவன் என்றவாறு. (உஎரு)

ங0ரு. பூங்கழற் குருசி றந்த
புதல்வனைப் புகன்று நோக்கித்
தேங்கம ழோதி திங்கள்
வெண்கதிர் பொழிவ தேபோல்
வீங்கிள முலைகள் விம்மித்
திறந்துபால் பிலிற்ற வாற்றாள்
வாங்குபு திலகஞ் சேர்த்தித்
திலகனைத் திருந்த வைத்தாள்.

(இ - ள்.) தேன்கமழ் ஓதி - தேன் மணக்குங் கூந்தலையுடையாள்; பூங்கழல் குருசில்தந்த புதல்வனைப் புகன்று நோக்கி-அழகிய கழலணிந்த சச்சந்தன் கொடுத்த மகனை விருப்புடன் நோக்கி; வீங்கு இளமுலைகள் விம்மித் திங்கள் வெண்கதிர் பொழிவதேபோல் திறந்து பால்பிலிற்ற ஆற்றாள் - பருத்த இளமுலைகள் தாமே விம்மி நிலவின் வெள்ளிய கதிரைப் பெய்வதுபோல் திறந்து பால்சொரியும்வரை ஆற்றாளாய்; வாங்குபு திலகம் சேர்த்தி - தானே பாலை வலியக்கொண்டு திலகமிட்டு; திலகனைத் திருந்த வைத்தாள் - சிறந்த மகனைச் செவ்வையாகக் கிடத்தினாள்.

(வி - ம்.) புதல்வன் பொருட்டு இவளைப் போக்குதலின், 'குருசில் தந்த புதல்வனை' என்றார். மகப் பயந்தோர்க்குப் பயந்தபொழுதே பால் சுரவாதாகையால், 'ஆற்றாள் வாங்குபு' என்றார். (உஎசு)

வேறு

௩0௬. கறைபன் னீராண் டுடன்விடுமின்
காமர் சாலை தளிநிறுமின்
சிறைசெய் சிங்கம் போன்மடங்கிச்
சேரா மன்னர் சினமழுங்க
வுறையுங் கோட்ட முடன்சீமி
ளொண்பொற் குன்றந் தலைதிறந்திட்
டிறைவன் சிறுவன் பிறந்தானென்
றேற்பார்க் கூர்தோ றுய்த்தீமின்.

(இ - ள்.) பன்னீராண்டு உடன்கறை விடுமின் - பன்னீராண்டுவரை சேர இறைப்பொருளை நீக்குமின்; காமர்சாலை தளி நிறுமின் - அழகிய அறச்சாலைகளையும் கோவில்களையும் இயற்றுமின்; சேராமன்னர் சிறைசெய் சிங்கம்போல் சினம் மழுங்க மடங்கி - பகையரசர் சிறைப்பட்ட சிங்கங்களைப்போற் சினம் மழுங்குமாறு மடங்கி; உறையும் கோட்டம் உடன்சீமின் - இருக்கும் சிறைச்சாலைகளையெல்லாம் இடித்துத் தூய்மை செய்மின்; ஒண்பொன் குன்றம் தலைதிறந்திட்டு - ஒளிமிகும் பொற்குவியலைத் திறந்துவிட்டு; ஊர்தோறு உய்த்து - ஒவ்வோருருக்குங் கொண்டு சென்று; இறைவன் சிறுவன் பிறந்தான் என்று - வேந்தனுக்கு மகன் பிறந்தான் என்று; ஏற்பார்க்கு ஈமின் - (மகிழ்வுடன்) கேட்போருக்குக் கொடுமின்.

(வி - ம்.) [இதுமுதல் விசயை தானே இரங்கிக் கூறுவன.]

பாலக்கிரகாரிட்டம் பன்னீராண்டளவும் உண்டு என்றும் அதற்குச் சாந்தியாகப் பன்னீராண்டு கறைவிடுதல் அரசியல்பு என்றும் கொண்டு, 'பன்னீராண்டு' என்றார். இனி, அரசர்க்குப் பதினோராவதாண்டிலே உபநயனம் பண்ணிப் பன்னீராவதாண்டிலே இல்லறக்கிழமை பூண்டு அரசுரிமை எய்துதல் இயல்பெனக் கொண்டு பன்னீராண்டும் உலகினர்க்குத் தானமாகவிடுதல் இயல்பெனவுமாம். மகவுபெற்றூற் சிறை வீடு செய்தல் தென்புலத்தார் கடனை நீக்குதலென்பர்.

கறை - குடிகள் வேந்தற்கிறுக்குங் கடமைப் பொருள். ஒருசேர நீக்குமின் என்பார் உடன்விடுமின் என்றூர். சீமின் - இடித்தொழிமின். திறந்திட்டு - திறந்துபோகட்டு. காமர்சாலை என்றது அறக்கோட்டத்தை. தளி - திருக்கோயில். நிறுமின் - நிறுவுமின். ஈமின் - வழங்குமின். மக்களைப் பெற்றுழிச் சிறை வீடு செய்தால் தென்புலத்தார் கடன் தீரும் என்பதொரு கொள்கை என்க. (உஎஎ)

௩0எ. மாட மோங்கு மணிநகருள்
வரம்பில் பண்டந் தலைதிறந்திட்
டாடை செம்பொ னணிகலங்கள்
யாவும் யாருங் கவர்ந்தெழுநாள்

வீட் லின்றிக் கோளப்பெறுவார்
விலக்கல் வேண்டா வீழ்ந்தீர்க்குக்
கோடி மூன்றே டரைச்செம்பொன்
கோமா னல்கு மெனவறைமின்.

(இ - ள்.) மாடம் ஓங்கும் வளநகருள் - மாடம் உயர்ந்த வளமிகும் அரண்மனையில்; வரம்புஇல் பண்டம் தலைதிறந்திட்டு - அளவற்ற பொருள்களைக் காப்பு நீக்கிவிட்டு; ஆடை செம்பொன் அணிகலங்கள் யாவும் - ஆடையும் பொன்னும் பணிகளும் என இவற்றையெல்லாம்; எழுநாள் வீடல்இன்றி யாரும் கவர்ந்து கொளப்பெறுவார் - ஏழுநாள்வரை தடையின்றி எல்லோரும் கவர்ந்துசெல்லும் உரிமை பெறுவார்; விலக்கல் வேண்டா - அவர்களைத் தடைசெய்ய வேண்டா; வீழ்ந்தீர்க்குக் கோமான் கோடி மூன்றோடு அரைச் செம்பொன் நல்கும்என அறைமின் - விரும்பினீர்க்கு மன்னன் மூன்றரைக்கோடி செம்பொன் தானமாக அளிப்பான் என்று முரசறைமின்.

(வி - ம்.) எழுபிறப்புத் தீவினை நீங்க எழுநாள் கொளப்பெறுவார். எழுபிறப்பு: மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, மலை, தாவரம் என்பன; இவற்றுள் மலையை நீக்கித் தேவரைக் கூட்டி யுரைப்பாரும் உளர். வீடல்: விடல் என்பதன் விகாரம் ஆம். விடல் - நீக்கல். உடம்பிற்கு மூன்றரைக் கோடி மயிர் உளவாகலின் மூன்றரைக்கோடி நல்குமென்றாள்

வளநகர் - வளப்பமுடைய அரண்மனை. பண்டம் என்றது - உணவுப் பொருள்களை. விடுதல் - வீடல் என நின்றது. வீழ்ந்தீர்க்கு - விரும்பினீர்க்கு. (உஎஅ)

௩0அ. அரும்பொற் பூணு மாரமு
மிமைப்பக் கணிக ளகன்கோயி
லோருங்கு கூடிச் சாதகஞ்செய்
தோகை யரசர்க் குடன்போக்கிக்
கருங்கைக் களிறுங் கம்பலமுங்
காசுங் கவிகள் கொளவீசி
விரும்பப் பிறப்பாய் வினைசெய்தேன்
காண விஃதோஓ பிறக்குமா.

(இ - ள்.) அகன்கோயில் - பெரிய அரண்மனையில்; அரும் பொன் பூணும் ஆரமும் இமைப்பக் கணிகள் ஒருங்குகூடி - அரிய பொன்னும் அணியும் மாலையும் ஒளிவிடக் கணிகள் எல்லோருங் கூடி; சாதகம் செய்து - பிறப்புநாள் கணிக்க; அரசர்க்கு உடன் ஓகை போக்கி - எல்லா அரசர்க்கும் நீ பிறந்த மகிழ்ச்சியை

உடனே அறிவித்து; கவிகள்கொளக் கருங்கைக் களிறும் கம்பலமும் காசும் வீசி - பாவலர் கொள்ளுமாறு பெரிய கையையுடைய களிறும் கம்பலமும் காசும் கொடுத்து; விரும்பப் பிறப்பாய் - (யாவரும்) விரும்புமாறு பிறக்கும் நீ; வினைசெய்தேன் காணப் பிறக்கும்ஆ இஃது - தீவினையேன் காணும்படி பிறக்கும் தன்மை இத்தன்மைத்து.

(வி - ம்.) ஓஒ: இரக்கக் குறிப்பு. 'பிறக்கும் ஆறு' என்பது 'பிறக்கும்ஆ' என விகாரப்பட்டது. செய்து - செய்ய: வினையெச்சத் திரிபு.

பிறப்பாய்: வினையாலணையும் பெயர். கவிகள்: பெருமங்கலம் பாடுவோர்.

கணிகள் - கணிதநூல் வல்லோர். சாதகம் - பிறப்புக் கணிதம். ஓகை - உவகை: இஃது ஆகுபெயராய் உவகைச் செய்தியை உணர்த்தும். (உஎகூ)

௩௦௬. வெவ்வா யோரி முழவாக
விளிந்தா ரீமம் விளக்காக
வோவ்வாச் சுடுகாட் டுயரரங்கி
னிழல்போ னுடங்கிப் பேயாட
வெவ்வாய் மருங்கு மிருந்திரங்கிக்
கூகை குழறிப் பாராட்ட
விவ்வா றாகிப் பிறப்பதோ
இதுவோ மன்னர்க் கியல்வேந்தே.

(இ - ள்.) வெவ்வாய் ஓரி முழவுஆக - கொடிய வாயையுடைய ஓரியின் குரல் முழவு ஆகவும்; விளிந்தார் ஈமம் விளக்கு ஆக - இறந்தவரைச் சுடும் ஈமத்தீ விளக்கு எனவும் (கொண்டு); ஒவ்வாச் சுடுகாட்டு உயர் அரங்கில் - தகுதியற்ற சுடுகாடாகிய உயர்ந்த மேடையிலே; பேய் நிழல்போல் நுடங்கி ஆட - பேய் நிழல்போல அசைந்து ஆட; கூகை எவ்வாய் மருங்கும் இருந்து இரங்கிக் குழறிப் பாராட்ட - (அதனைக் கண்டு) கூகைகள் எப்பக்கத்தினும் அமர்ந்து இரக்கத்துடன் குழறும் ஒலியிற் பாராட்ட; இவ்வாறாகிப் பிறப்பதோ! - இந்த இரங்கத்தக்க நிலையிற் பிறப்பதன் தீவினைதான் என்னே!; வேந்தே! இதுவோ மன்னர்க்கு இயல்? - அரசே! இதுவோ அரசர்க்குரிய தன்மை? (கூறுவாய்).

(வி - ம்.) 'வேந்தே!' என்றாள் அரசிளங்குமரனாதலின்.

[நச்சினார்க்கினியர், 'இவ்வாறென்றது, தந்தை விரும்பும்படி நல்வினையுடைய தன்மையை. இதுவென்றது செயலின்றித் தாய் வருந்தும்படி தீவினையுடைய தன்மையை' 'ஓகாரமிரண்டும் வினா' எனப் பொருள்

கூறுவர். மற்றும் அவர் ௩௦௬ முதல் ௩௦௯ வரை உள்ள நான்கு செய்யுட்களையும் ஒரு தொடராக்கி மாட்டேற்று முடிபு கூறுவார்.

அவர் கூறும் முடிபு :—

"தேவி புதல்வனை நோக்கிக், கோமானுனவன் கணிகள் சாதகஞ் செய்ய ஓலை போக்கி, வீசிக், 'கறைவிடுமின், நிறுமின், சீமின், ஈமின், விலக்கல் வேண்டா' என அறைமின், 'வீழ்ந்தீர்க்கு நல்கும்' என அறைமின் என்று விரும்பப் பிறக்கும் நீ ஓஒ தீவினை செய்தேன் காண்டற்காகப் பிறக்கும்படி இத்தன்மைத்தாயிருந்தது; வேந்தே! இவ்விரண்டிலும் இவ்வாருகிப் பிறப்பது மன்னர்க்கியல்போ? பேயாடக் கூகை பாராட்ட இதுவாகிப் பிறப்பது மன்னர்க்கியல்போ? கூருய் என்ருள் என்க."

இவ்வாறு மொழிகளை எங்கிருந்தும் எடுத்து மாட்டேற்றுவது நூலாசிரியர் கருத்தாகாது.]

ஓரி - நரி. கேள்விக்கின்னுவாக ஊளையிடும் நரி என்பார் வெவ்வாய் ஓரி என்ருர். விளிந்தார் - இறந்தோர். ஈமம் - சுடுகாடு. ஒவ்வாச் சுடுகாடு என்ருள், இறப்போர்க்கே பொருந்துவதன்றிப் பிறப்போர்க்குப் பொருந்தாத இடம் என்பது தோன்ற. உயர் அரங்கின் என்றது இகழ்ச்சி. பேய் வறிய ஆவியே ஆகலின் நிழல்போ னுடங்கி என்ருள். முழவம் முழங்க, மணிவிளக்கம் நின்றெரிர, அரண்மனை அரங்கில் மகளிராட, மாந்தர் மகிழ, புலவர் போற்றெடுப்பப் பிறக்கவேண்டிய நீ இவ்வாருகிப் பிறப்பதோ என்றிரங்கியவாறு. (௨௮௦)

௩௧௦. பற்று மன்னன் நகர்ப்புறமால்
பாயல் பிணஞ்சூழ் சுடுகாடா
லுற்று ரில்லாத் தமியேனு
லோதுங்க லாகாத் தூங்கிருளான்
மற்றிஞ் ஞால முடையாய்நீ
வளரு மாறு மறியேனு
லெற்றே யிதுகண் டேகாதே
யிருத்தி யாலென் னின்னுயிரே.

(இ - ள்.) இஞ்ஞாலம் உடையாய் - இவ்வுலகுடைய மன்னனே; பற்றுமன்னன் நகர்ப்புறம் - நீ கிடக்கும் இடம் பகை வேந்தனின் நகரில் உள்ள இடமாயிற்று; பாயல் பிணஞ்சூழ் சுடுகாடு - நின் படுக்கை பிணங்கள் சூழ்ந்த சுடுகாடாகவிருந்தது; உற்றூர் இல்லாத் தமியேன் - யானே உரையாடற்கும் எவருமில்லாத தனிமையேன் ஆயினேன்; ஒதுங்கல் ஆகாத் தூங்கு இருள் - (இதைவிட்டு வெளியேற எண்ணின்) விலக இயலாத பேரிருள் சூழ்ந்துளது; மற்றுநீ வளரும் ஆறும் அறியேன் - மேலும், நீ வளர்வதற்குரிய நெறியையும் யான் அறிகின்றிலேன்; என் இன்உயிரே - என் இனிய உயிரே!; இது கண்டு ஏகாது

இருத்தி - (நீ) இந்நிலை கண்டும் இவ்வுடலைவிட்டு நீங்காமல் இருக்கின்றாய்!; எற்று! - இஃது எவ்வளவு கொடிது !

(வி - ம்.) *மகனையும் உயிரையும் தனித்தனியே முன்னிலைப்படுத்திக் கூறினள். மற்று : வினைமாற்று.*

*பற்றுமன்னன் - பகைமன்னன். ஆல் : அசைகள். எற்று - எத்தகைய கொடுமைத்து.* (உ௲க)

ரு௧௧. பிறந்த நீயும் பூம்பிண்டிப்
பெருமா னடிகள் பேரறமும்
புறந்தந் தேன்பாற் றுயர்க்கடலை
நீந்தும் புணைமற் றாகாக்காற்
சிறந்தா ருளரேல் உரையாயாற்
சிந்தா மணியே கிடத்தியான்
மறங்கூர் நுங்கோன் சொற்செய்தேன்
மம்மர் நோயின் வருந்துகோ.

(இ - ள்.) *சிந்தாமணியே! - சிந்தாமணியே!; கிடத்தி - (நீ ஒன்றும் உரையாமற்) கிடக்கின்றனை ; பிறந்த நீயும் - (என் வருத்தம் நீக்கப்) பிறந்த நீயும்; பூம்பிண்டிப் பெருமான் அடிகள் பேரறமும் - மலர்ந்த அசோகின் நிழலில் அமர்ந்த அருகனார் அருளிய பெரிய அறமும் ; புறந்தந்து - ஆதரவு செய்து; என் பால் துயர்க்கடலை நீந்தும் புணை ஆகாக்கால் - என்னிடந் தோன்றிய துயரக்கடலை யான் கடக்கும் தெப்பம் ஆகாவிட்டால் ; சிறந்தார் உளரேல் உரையாய் - நின்னினும் அப்பெருமானினும் சிறந்தவர் இருப்பரேல் உரைத்திடாய்; மறம்கூர் நும்கோன் சொல் செய்தேன் மம்மர் நோயின் வருந்துகோ? - வீரம்மிக்க நும் இறைவன் கூறியதைச் செய்த நான் மயக்க நோயினால் வருந்துவேனோ ?*

(வி - ம்.) *சொல் : கருவியாகுபெயர். வருந்துகு : வருந்துவேன், தனித்தன்மை வினைமுற்று. பேரறப் பூம்பிண்டிப் பெருமானடிகள் என மாறுவர் நச்சினார்க்கினியர்.* (உ௲உ)

ரு௧உ. அந்தோ விசயை பட்டனகோண்
டகங்கை புறங்கை யானாற்போற்
கந்தார் களிற்றுத் தங்கோமான்
கழிய மயிலோர் மயிலூர்ந்து
வந்தாற் போலப் புறங்காட்டுள்
வந்தா டமியே யெனமரங்கள்
சிந்தித் திரங்கி யழுவனபோற்
பனிசேர் கண்ணீர் சொரிந்தனவே.

(இ - ள்) அந்தோ! - ஐயோ!; அகங்கை புறங்கை ஆனாற்போல் - உள்ளங்கை புறங்கையாக மாறிய அத்துணை விரைவில்; விசயை பட்டனகொண்டு - விசயை அடைந்த துன்பங்களை உட்கொண்டு; கந்துஆர் களிற்றுத் தம் கோமான் கழிய - தூணிற் கட்டப்பெற்ற களிறுகளையுடைய தம் இறைவன் இறக்க; மயில் ஓர் மயில் ஊர்ந்து வந்தாற்போல - ஒரு மயில் மற்றொரு மயிலைச் செலுத்தி வந்ததைப்போல; புறங்காட்டுள் தமியே வந்தாள்என - சுடுகாட்டிலே தனியே வந்து சேர்ந்தாள் என்று; சிந்தித்து இரங்கி அழுவனபோல் - எண்ணி வருந்தி அழுவனபோல; மரங்கள் பனிசேர் கள்நீர் சொரிந்தன - மரங்கள் குளிர்ந்த மது நீரைச் சொரிந்தன.

(வி - ம்.) [அந்தோ : ஆசிரியருக்குத் தோன்றிய இரக்கத்தைக் குறிப்பது. நச்சினார்க்கினியர், 'வந்தாள் தமியே என' என்பதிலுள்ள என என்னுஞ் சொல்லுடன், 'அந்தோ என'க் கூட்டி மரங்கள் கூறியதாக ஆக்குவர்.] (உஅங)

ருகங. அடர்பொற் பைம்பூ ணரசழிய
வரும்பொற் புதல்வற் பெற்றிருந்த
விடர்கோ ணெஞ்சத் திறைவியு
மிருங்கண் ஞாலத் திருள்பருகிச்
சுடர்போய் மறையத் துளங்கொளிய
குழவி மதிபெற் றகங்குளிர்ந்த
படர்தீ ரந்தி யதுவொத்தாள்
பணைசெய் கோட்டுப் படாமுலையாள்.

(இ - ள்.) அடர்பொன் பைம்பூண் அரசு அழிய - மிகுதியான பொன்னாலான புதிய கலன்களை அணிந்த அரசன் அழிய; அரும்பொன் புதல்வன் பெற்றிருந்த - அரிய பொன்னனைய மகனைப் பெற்றிருந்த; இடர்கொள் நெஞ்சத்து - துயர்கொண்ட உள்ளமுடைய; பணைசெய் கோட்டுப் படாமுலையாள் இறைவியும் - பருத்த முகட்டினைக்கொண்ட சாயாத கொங்கைகளையுடைய விசயையும் (சிறிது துயர்நீங்கி); இருங்கண் ஞாலத்து இருள் பருகிச் சுடர்போய் மறைய - பேரிடமுடைய உலகின் இருளை நீக்கிய ஞாயிறு சென்று மறைய; துளங்கு ஒளிய குழவி மதிபெற்று அகம் குளிர்ந்த - விளங்கும் ஒளியையுடைய பிறை மதியைப்பெற்று மனம் அமைந்த; படர்தீர் அந்தியது ஒத்தாள் - துன்பம் நீங்கிய அந்த அந்திமங்கையைப் போன்றாள்.

(வி - ம்.) அடர் - தகடுமாம். 'பொன்அடர்' என்க. (துன்பத்தை, அடா அரசு - துன்பத்தை நீக்கிய அரசன் என்பர் நச்சினார்க்கினியர். இறைவியும்: உம்: உயர்வு சிறப்பு. 'பணைசெய் - பிழைத்தலைச் செய்த) என்பர் நச்சினார்க்கினியர். (உஅச)

இதன்கண் இறந்துபட்ட சச்சந்தனுக்கு ஞாயிறும், இடர்கொள் நெஞ்சத்து விசயைக்கு அந்திப்பொழுதும், சீவகனுக்குப்பிறையும் உவமைகள். இவ்வுவமைகள் நினைந்து நினைந்து இன்புறற்பாலன.

வேறு

நஉசச. தேனமர் கோதை மாதர்
திருமகன் றிறத்தை யோராள்
யானெவன் செய்வ லென்றே
யவலியா விருந்த போழ்திற்
றானமர்ந் துழையி னீங்காச்
சண்பக மாலை யென்னுங்
கூனிய துருவங் கொண்டோர்
தெய்வதங் குறுகிற் றன்றே.

(இ - ள்) தேன்அமர் கோதை மாதர் திருமகன் திறத்தை ஓராள் - தேன்பொருந்திய மாலையணிந்த விசயை தன் அருமை மகனின் நல்வினையை அறியாமல்; யான் எவன் செய்வல் என்று அவலியா இருந்த போழ்தில் - நான் யாது செய்வேன் என்று வருந்தியிருந்த அளவில்; தான் அமர்ந்து உழையின் நீங்காச் சண்பகமாலையென்னும் கூனியது உருவம்கொண்டு - தான் எப்போதும் அருகிலே யிருக்கும் இயல்பினளான சண்பகமாலை யென்னும் பெயரையுடைய கூனியின் வடிவங்கொண்டு; ஓர் தெய்வதம் குறுகிற்று - ஒரு தெய்வம் விசயையை அடைந்தது.

(வி - ம்.) இவன் அரசன் மகனாதலின், அச் சுடுகாட்டில் உறையும் தெய்வம் வந்தது. தெய்வதம் தைவதமென்னும் வடமொழிச் சிதைவு. (உஅ௫)

நஉக௫. விம்முறு விழும வெந்நோ
யவணுறை தெய்வஞ் சேரக்
கொம்மென வுயிர்த்து நெஞ்சிற்
கொட்புறு கவலை நீங்க
வெம்மனை தமியை யாகி
யிவ்விட ருற்ற தெல்லாஞ்
செம்மலர்த் திருவின் பாவா
யான்செய்த பாவ மென்றாள்.

(இ - ள்.) அவண்உறை விம்முறு விழும வெந்நோய் தெய்வம்சேர - அங்கு வாழ்கின்ற, விசயை கொண்ட விம்மலுக்குரிய துன்பத்திற் கிரங்கித் துயர்கொண்ட தெய்வம் வந்தவுடன்; கொம் என உயிர்த்து நெஞ்சில் கொட்புறு கவலைநீங்க - விரைவில் பெரு

மூச்சுவிட்டு உள்ளத்திற் சுழன்ற கவலை நீங்குதலால்; எம் அனை செம்மலர்த் திருவின் பாவாய்! - எம் அன்னையே! சிவந்த தாமரைத் தவிசுடைய திருவனைய பாவையே!; தமியை ஆகி இவ் இடர் உற்றது எல்லாம் யான் செய்த பாவம் என்றாள் - நீ தனித்து இத்துன்பம் அடைந்ததெல்லாம் நான் செய்த பாவம் என்று கூனி ஆதரவு கூறினாள்.

(வி - ம்.) திருவின் : இன் : அசை [ஐந்தனுருபு என்பதே பொருத்தமுடையது]. தெய்வம் கூனியாய் நிற்றலின் உயர்திணையாற் கூறினர்.

விழுமம் - துன்பம். கொம்மென: விரைவுக் குறிப்பு. கொட்புறு தல் - சுழலுதல். எம்மன்னை எனற்பாலது எம்மனை என நின்றது. அன்பிற்குரியோர் துன்புறக் காண்புழிக் கண்டோர் இது யான் செய்த பாவம் என்று கூறி யிரங்குதல் பண்டைக்காலத்தொரு வழக்கு. இதனைப் பெருங்கதையில் துன்ப நிலையிலிருந்த உதயணனைக் கண்ட சாங்கியத் தாய் "மாபெருந்தேவி திருவயிற்றியன்ற பெருவிறற் பொலிவே இனையை யாவது எம்மனோர் வினை" என்றிரங்குதலானும் உணர்க. இந்நூலாசிரியரே "இனையைநீ யாய வெல்லாம் எம்மனோர் செய்த பாவம்" (ங௲க) எனப் பிறாண்டும் ஓதுதல் காண்க. (உஅசு)

ங௲சு. பூவினுட் பிறந்த தோன்றற்
புண்ணிய னனைய நம்பி
நாவினு ளுலக மெல்லா
நடக்குமோன் றுது நின்ற
கோவினை யடர்க்க வந்து
கொண்டுபோ மொருவ னின்னே
காவியங் கண்ணி னயா
மறைவது கரும மென்றாள்.

(இ - ள்.) காவிஅம் கண்ணினாய்! - நீல மலரனைய அழகிய கண்ணினாய்!; பூவினுள் பிறந்த தோன்றல் புண்ணியன் அனைய நம்பி - தாமரையில் தோன்றிய தலைமையுற்ற முருகனைப்போன்ற இந்த நம்பியின்; நாவினுள் உலகம் எல்லாம் நடக்கும் - சொல்லினாலே உலக முழுதும் நடக்கும்; ஒன்றாது நின்ற கோவினை அடர்க்க - பகைத்துநின்ற அரசனைக் கொல்ல; ஒருவன் இன்னே வந்து கொண்டுபோம் - ஒருவன் இப்போதே வந்து இந்நம்பியைக் கொண்டு போவான்; யாம் மறைவது கருமம் என்றாள் - (ஆகையால்) யாம் மறைந்து நிற்பது செய்யத்தக்கதாகும் என்றாள்.

பூவினுட் பிறந்த தோன்றற் புண்ணியன் என்றது முருகக்கடவுளை. "நிவந்தோங்கு இமயத்து நீலப்பைஞ்சுனைப், பயந்தோர் என்ப பதுமத்துப்

பாயல், பெரும்பெயர் முருக" (ரு-சஅ-ருO) என்றார் பரிபாடலினும். நா - மொழிக்கு ஆகுபெயர். ஒன்றுது நின்ற கோ என்றது கட்டியங்காரனை. விசயை நெஞ்சம் நன்கு தேறியிருத்தற் பொருட்டுக் "கோவினை யடர்க்க வந்து கொண்டுபோம் ஒருவன் இன்னே" என்றது தெய்வம் என்க. இது 'முன்னம் நீ வளருமாறும் அறியேன்' என்று வருந்தியதற்குத் தேற்றுரை என்றுணர்க. (உஅஎ)

ருஉஎ. சின்மணி மழலை நாவிற்
கிண்கிணி சிலம்பொ டேங்கப்
பன்மணி விளக்கி னீழ
னம்பியைப் பள்ளி சேர்த்தி
மின்மணி மிளிரத் தேவி
மெல்லவே யொதுங்கு கின்றா
ணன்மணி யீன்று முந்நீர்ச்
சலஞ்சலம் புகுவ தொத்தாள்.

(இ - ள்.) மழலை சின்மணி நாவின் கிண்கிணி சிலம்பொடு ஏங்க - மழலைபோல ஒலிக்கும் சில மணிகளாகிய நாவினையுடைய கிண்கிணியும் சிலம்பும் ஏங்குதல் செய்ய; பன்மணி விளக்கின் நீழற் பள்ளி நம்பியைச் சேர்த்தி - பல மணிகளாகிய விளக்கின் நிழலிலே அமைத்த பள்ளியில் நம்பியைக் கிடத்தி; மின்மணி மிளிர மெல்ல ஒதுங்குகின்றாள் தேவி - ஒளிவிடும் மணிகள் ஒளி செய மெதுவாக விலகும் விசயை; சலஞ்சலம் நன்மணி யீன்று முந்நீர் புகுவது ஒத்தாள் - சலஞ்சலம் மாணிக்கத்தை யீன்று கடலிற் புகுவது போன்றாள்.

(வி - ம்.) மணியாகிய நா. பன்மணி - உயிர்நீத்தவர் பூண்டமணி. நீழல்: விகாரம். தெய்வம் ஒரு பள்ளியைத் தேவி அறியாதவாறு அமைத்தது. அது பின்பு ஆசிரியன், 'பூந்தவிசின் உச்சி' (சீவக. ருஅசு) என்பதனாலும் பெற்றாம். (உஅஅ)

ருஉஅ. ஏதிலா ரிடர்பன் னூறு
செய்யினுஞ் செய்த் வெல்லாந்
தீதில வாக வென்று
திருமுலைப் பான்ம டுத்துக்
காதலான் பெயர்சு மந்த
கதிர்மணி யாழி சேர்த்திக்
கோதைதாழ் குழலி னாளைக்
கொண்டுபோய் மறைய நின்றாள்.

(இ - ள்.) ஏதிலார் பல்நூறு இடர் செய்யினும் - அயலார் பலநூறு துன்பங்கள் செய்தாலும்; செய்த எல்லாம் தீதுஇல

ஆகஎன்று - செய்த அவைகளெல்லாம் நன்றாகுக என்று கூறி; திருமுலைப்பால் மடுத்து - தானே விசயை முலையைப்பற்றிப் பாலூட்டி; காதலான் பெயர் சுமந்த கதிர்மணி ஆழி சேர்த்தி - சச்சந்தன் பெயரெழுதிய ஒளிவிடும் மணியாழியைக் குழவியின் மீது வைத்து; கோதைதாழ் குழலினாளைக் கொண்டுபோய் மறைய நின்றாள் - பூமாலையணிந்த குழலையுடைய விசயையை அழைத்துக்கொண்டு சென்று மறைய நின்றாள் கூனி.

(வி - ம்.) முற்செய்யுளில் விசயை ஒதுங்குகின்றாள் என்றார். இச் செய்யுளில் அவ்வாறு ஒதுங்கும் விசயையைக் கூனி மறைய அழைத்துச் சென்றாள் என்றார். ஆழிசேர்த்தது அறிந்து வளர்த்தற்கு.

[நச்சினார்க்கினியர், முற்செய்யுளையும் இதனையும் ஒரு தொடராக்கிக் கூனியே நம்பியைப் பள்ளிசேர்த்துத் திருமுலைப்பால் மடுத்து ஆழி சேர்த்தினாள் என்று மாட்டேற்றுவர். அவ்வாறு மாட்டேற்றச் 'சேர்த்தி' என்பதைச் 'சேர்த்த' என்று திரிப்பர்.] (உஅகூ)

௩௨௯. நல்வினை செய்தி லாதே
நம்பிநீ தமியை யாகிக்
கோல்வினை மாக்கள் சூழக்
கிடத்தியோ வென்று விம்மாப்
புல்லிய கோம்பு தானோர்
கருவிளை பூத்த தேபோ
லோல்கியோர் கோம்பு பற்றி
ஒருகணா னோக்கி நின்றாள்.

(இ - ள்.) நல்வினை செய்திலாதேன் நம்பி - பெற நல்வினை செய்திருந்தும் வளர்க்க நல்வினை செய்திலாத நான்பெற்ற நம்பியே!; நீ தமியை ஆகிக் கொல்வினை மாக்கள் சூழக் கிடத்தியோ என்று விம்மா - நீ தனித்தாயாகிக் கொடிய விலங்குகள் சூழக் கிடத்தியோ என்று அழுது; கொம்பு புல்லிய ஓர் கருவிளை தான் பூத்ததேபோல் - கொம்பைத் தழுவிய ஒரு கருவிளை தான் மலரொன்று மலர்ந்ததேபோல்; ஓர் கொம்புபற்றி ஒல்கி ஒரு கணால் நோக்கி நின்றாள் - ஒரு கொம்பைப்பற்றி ஒதுங்கி ஒரு கண்ணாலே பார்த்தவாறு நின்றாள்.

(வி - ம்.) 'ஒருகணால்' என்றதனால் ஒரு கருவிளைமலர் கூறப் பட்டது.

நின்னைப் பெறுதற்குரிய நல்வினை செய்திருந்தும் நின்னை வளர்த் தற்கு நல்வினை செய்திலாதேன் என விரிக்க. மாக்கள் - விலங்குகள்; நரி முதலியன. விம்மா - விம்மி; அழுது. (உகூ௦)

வேறு

௩௨௦. நாளோடு நடப்பது வழுக்கி மின்னோடு
கோளோடு குளிர்மதி வந்து வீழ்ந்தெனக்
காளக வுடையினன் கந்து நாமனும்
வாளோடு கனையிருள் வந்து தோன்றினன்.

(இ - ள்.) குளிர்மதி நாளொடு நடப்பது வழுக்கி - தண்ணிய திங்கள் நாண்மீன்களொடு செல்லும் நிலைதவறி; மின்னொடு ஊர்கோளொடு வந்து வீழ்ந்தென - மின்னொடு செல்லும் முகிலுடன் வந்து நிலத்தே விழுந்தாற்போல; கந்துநாமனும் காளக உடையினன் கனையிருள் வாளொடு வந்து தோன்றினன் - கந்துக்கடன் என்னும் பெயருடைய வணிகனும் கரிய உடையினனாய் மிக்க இருளிலே வாளொடு வந்து சேர்ந்தான்.

(வி - ம்) நடப்பது: தொழிற்பெயர். ஊர் கோள்: வினைத்தொகை. கோள் - பாம்புமாம். இதற்குக், 'கோளொடும்' என உம்மை விரிக்க. நாமனும்: உம்மை: சிறப்பு. உடையினன்: முற்றெச்சம்.

நாள் - அசுவனி முதலிய மீன். ஊர்கோள் - முகில். காளகம் - கருமை. கந்துநாமன் - கந்துக்கடன் என்னும் பெயரையுடையோன். கனை - மிகுதி. (உ௩௧)

௩௨௧. வாள்கடைந் தழுத்திய கண்ணி னார்கடந்
தோள்கடைந் தழுத்திய மார்பன் றூங்கிரு
ணீள்சுடர் நிழன்மணி கிழிப்ப நோக்கினா
னாள்கடிந் தணங்கிய வணங்கு காட்டுளே.

(இ - ள்.) வாள் கடைந்து அழுத்திய கண்ணினார்கள் தம் - வாளைக் கடைந்து பதித்தாற்போன்ற கண்ணையுடைய மங்கையரின்; தோள் கடைந்து அழுத்திய மார்பன் - தோள்கள் கடைந்து அழுந்தத் தழுவிய மார்பையுடைய அவ் வணிகன்; ஆள்கடிந்து அணங்கு அணங்கிய காட்டுள் - ஆட்களைக் கடிந்து அணங்குகள் வருத்திய காட்டில்; தூங்கு இருள் நீள்சுடர் நிழல் மணி கிழிப்ப நோக்கினான் - மிகுந்த இருட்டினைச் சிறந்த ஒளியைத் தரும் மணி ஒன்று பிளத்தலால் அவ்வொளி வந்த சார்பிலே நோக்கினான்.

(வி - ம்.) தோள் கடைதல் - தழுவுதல் வகை. அணங்குகள் ஆளைக் கடிந்து அணங்கிய: காட்டிற்கு அடை. அணங்குகள்=பேய்கள்.

[இங்குக் கூறிய நிழல்மணி நம்பியின்பால் விசயை வைத்த ஆழியிருந்தது.] (உ௩௨)

௩௨௨. அருப்பிள முலையவர்க் கனங்க னாகிய
மருப்பிளம் பிறைநுதல் மதர்வை வெங்கதிர்
பரப்புபு கிடந்தெனக் கிடந்த நம்பியை
விருப்புள மிகுதியின் விரைவி னெய்தினான்.

(இ - ள்.) மருப்புஇளம் பிறைநுதல் அரும்புஇள முலையவர்க்கு அனங்கன் ஆகிய - இரு முனைகளையுடைய இளம்பிறை அனைய நெற்றியையும் அரும்பனைய இளமுலைகளையும் உடைய மங்கையர்க்குக் காமனாதற்காக; மதர்வை வெங்கதிர் பரப்புபு கிடந்தென - மயக்கத்தைத் தரும் இளஞாயிறு தன் கதிர்களைப் பரப்பிக் கிடந்தாற்போல; கிடந்த நம்பியை - கிடந்த குழந்தையை; விருப்புஉளம் மிகுதியின் விரைவின் எய்தினான் - விருப்பம் உள்ளத்திலே மிகுந்ததனாற் கடிதின் எய்தினான்.

(வி - ம்.) அரும்பு: அருப்பு என வலித்தது செய்யுள் விகாரம். 'கிடந்ததென' என்பதும் 'கிடந்தென' ஆனது விகாரம். பரப்புபு பரப்பாநிற்க; வினையெச்சம். (௨௯௫)

௩௨௩. புனைகதிர்த் திருமணிப் பொன்செய் மோதிரம்
வினைமலர்த் தாரினான் மறைத்து வண்கையாற்
றுனைகதிர் முகந்தென முகப்பத் தும்மினான்
சினைமறைந் தொருகுரல் 'சீவ' என்றதே.

(இ - ள்.) வினைமலர்த் தாரினான் - மலரால் வினையப்பெற்ற மாலையினான்; புனைகதிர்த் திருமணிப் பொன்செய் மோதிரம் மறைத்து - அழகிய ஒளிவிடும் மணியையுடைய பொன் னாழியை(ப் பிறரறியாதிருக்க) மறைத்து; வண்கையால் துனை கதிர் முகந்தென முகப்ப - வண்மையுடைய கையால் விரையுங் கதிரை முகப்பதுபோல வாரியெடுக்க; தும்மினான் - (நம்பி) தும்மினான்; ஒருகுரல் சினை மறைந்து சீவ என்றது-(அப்போது) ஒரு குரல் மரக்கிளை மறைவிலிருந்து (தெய்வத்தால்) சீவிப்பா யாக என்று கூறப்பட்டது.

(வி - ம்.) விசையை அச்சத்தால் தன் மனத்திலேயே வாழ்த்திக் கொண்டாள் என்பது தோன்ற ஒரு குரல் என்றார்.

வினைதல் - கட்டுதல். துனைகதிர் - இருளை நீக்க விரையுங் கதிர். எல்லாப் புலன்களுக்கும் விருப்பமுண்டாவதால், 'முகப்ப' என்றார். 'மன்னெயின் முகவை' (புறநா. ௩௭௩) என்றார் பிறரும். தும் முதல் நன்னிமித்தம். சீவ வியங்கோட் பொருளில் வந்த வடசொல்.

சீவகசாமியை எடுத்து வளர்த்தற்குரிய அறமுடைய கைஎன்பார் "வண்கை" என்றார். துனைகதிர்: வினைத்தொகை. (௨௯௬)

௩உச. என்பெழுந் துருகுபு சோர வீண்டிய
வன்பெழுந் தரசனுக் கவலித் தையனை
நுன்பழம் பகைதவ நூறு வாயென
வின்பழக் கிளவியி னிறைஞ்சி யேத்தினாள்.

(இ - ள்.) என்பு எழுந்து உருகுபு சோர ஈண்டிய அன்பு எழுந்து - (கந்துகன் மகனையெடுத்தது கண்ட விசயை) என்புக்குள்ளே தோன்றி மெய்யுருகித் தன்னை மறக்குமாறு கூடிய அன்பு வளர்ந்து; அரசனுக்கு அவலித்து - அரசன் மகனைக் காணாதிறந்தமை நினைந்து வருந்தி; நுன்பழம் பகைதவ நூறு வாய்என - நின் பழம்பகையைக் கிளையற அறுப்பாய் என்று; இன்பழக் கிளவியின் இறைஞ்சி ஐயனை ஏத்தினாள் - இனிய கனி மொழியால் இறைவனை வணங்கி நம்பியை வாழ்த்தினாள்.

(வி - ம்.) நுன் : திசைச்சொல். தவ - மிக. கிளையற நூறுவா யென்பது கருத்து.

அரசன் : சச்சந்தன். அவலித்தல் - வருந்துதல். ஐயன்-(சீவகன்) என்றது குழவியை. நூறுதல் - அழித்தல். இறைஞ்சி என்றதனால் இறைவனை என்பது பெற்றாம். இன்பழக் கிளவி - இனிய கற்பகக்கனி போன்ற மொழி. (உகரு)

௩உரு. ஒழுக்கிய லருந்தவத் துடம்பு நீங்கினா
ரழிப்பரும் பொன்னுடம் படைந்த தொப்பவே
வழுக்கிய புதல்வனங் கொழிய மாமணி
விழுத்தகு மகனொடும் விரைவி னேகினான்.

(இ - ள்.) ஒழுக்குஇயல் அருந்தவத்து உடம்பு நீங்கினார் - ஒழுக்கத்தாலே அமைந்த தவத்தே நின்று ஊனுடம்பை விட்டவர்; அழிப்ப அரும்பொன் உடம்பு அடைந்தது ஒப்ப - அழித்தற்கியலாத உயர்ந்த தெய்வவுடம்பைப் பெற்றதுபோல; வழுக்கிய புதல்வன் அங்கு ஒழிய - தவறிய தன் மகன் சுடுகாட்டிலே கழியவிட்டு; மாமணி விழுத்தகு மகனொடும் விரைவின் ஏகினான்- உயர்ந்த மணியனைய சிறந்த மகனொடும் விரைந்து சென்றான்.

(வி - ம்.) கந்துக்கடனுக்கு மக்கள் பிறந்தவுடனே இறந்து கொண்டே வருதலின் அந்நிலை மாறிக் குழவியாகவே இறவாது நீண்ட நாள்வரை யிருக்கும் மகனை எடுத்துச் செல்வதால், 'அழிப்பரும் பொன் னுடம்பு' உவமையாயிற்று. நச்சினார்க்கினியர் அழிப்பரு விழுத்தவ மெனக் கூட்டுவர். தவவுடம்பை இவன் மகனுக் குவமை கூறினார் அவனாலே சீவகனைப் பெறுதலின். (உகசு)

ஙஉசு. மின்னடு கனையிரு ணீந்தி மேதகு
பொன்னுடை வளநகர் பொலியப் புக்கபின்
றன்னுடை மதிசுடத் தளருந் தையலுக்
கின்னுடை யருண்மொழி யினிய செப்பினான்.

(இ - ள்.) மின் அடு கனையிருள் நீந்தி - ஒளியையும் விழுங்கும் செறிந்த இருளை நீந்திச் சென்று; பொன் உடை வளநகர் பொலியப் புக்கபின் - தன் செல்வமுடைய வளமிகும் மனை பொலிவுற நுழைந்த பிறகு; தன் உடை மதி சுடத் தளரும் தையலுக்கு-தன் அறிவை (மகவின் பிரிவு) சுடுதலாலே தளர்ச்சியுறும் மனைவிக்கு; இன் உடை அருள்மொழி இனிய செப்பினான்- முனிவன் கூறிய அருள்மிகும் இருமொழிகளில் இனிய மொழியைக் கூறினான்.

(வி - ம்) பொலிய - துன்பம் நீங்கி இன்பம் நிகழ. இன்மொழி : 'புண்ணியற் பெறுதிர்' (சீவக. ககஙo) என்று முன்னர் முனிவன் கூறியது. முனிவன் கூறியவற்றைப் பின்னர் (சீவக) ககஉஉ, ககஙo-ஆம் பாடல்கள் அறிவிக்கும். (உகள)

ஙஉள. பொருந்திய வுலகினுட் புகழ்கண் கூடிய
வருந்ததி யகற்றிய வாசில் கற்பினாய்
திருந்திய நின்மகன் றீதி னீங்கினான்
வருந்தனீ எம்மனை வருக வென்னவே.

(இ - ள்.) உலகினுள் பொருந்திய புகழ்கண் கூடிய - உலகில் உள்ள புகழெல்லாம் ஈண்டிய; அருந்ததி அகற்றிய ஆசு இல் கற்பினாய் - அருந்ததியை வென்ற குற்றமற்ற கற்புடையாய்!; எம்மனை - எம் இல்லாளே!; திருந்திய நின்மகன் றீதில் நீங்கினான் - நல்வினையாலே திருத்தமுற்ற நின்மகன் சாதலினின்று தப்பினான்; நீ வருந்தல் வருக என்ன - நீ வருந்தாமல் இங்கு வருக என்று கூற,

(வி - ம்) இப்பாட்டுக் குளகம். வருந்தல்: எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. திருந்திய நின்மகன் என்றது தீதின் நீங்கினான் என்றற்குக் குறிப்பேதுவாய் நின்றது. தீது - சாக்காடு. மனை - மனைவி. (உகஅ)

ஙஉஅ. கள்ளலைத் திழிதருங் களிகொள் கோதைதன்
னுள்ளலைத் தெழுதரு முவகை யூர்தர
வள்ளலை வல்விரைந் தெய்த நம்பியை
வெள்ளிலை வேலினான் விரகி னீட்டினான்.

(இ - ள்.) கள் அலைத்து இழிதரும் களிகொள் கோதை - தேன் மலரிதழை அலைத்து வடிதற்குக் காரணமான களிப்பை

யுடைய மாலையாள்; தன்உள் அலைத்து எழுதரும் உவகை ஊர்தர - தன் மனத்திலே அலை பாய்ந்து உண்டாகும் களிப்பு மிகுதலால்; வள்ளலை வல்விரைந்து எய்த - தன் கணவனை மிகவும் கடிது சென்று நெருங்க; வெள்இலை வேலினன் நம்பியை விரகின் நீட்டினன் - வெள்ளிய இலைமுகமுடைய வேலினன் நம்பியைச் சூழ்ச்சி செய்து கொடுத்தான்.

(வி - ம்.) 'இது மக வழியின் வாழேன்' (சீவக. ககஉச) என்றவள் உயிரையும் மேற் பொருளையுங் கொடுத்தலின் வள்ளல் என்றார். விரகு: விசயை அணிந்த திலகத்தை மாற்றியும் மோதிரத்தை மறைத்தும் தன் மகனென நம்பும்வகையிற் கொடுத்தல். (உகக)

ங௨கூ. சுரிமுக வலம்புரி துவைத்த தூரியம்
விரிமுக விசும்புற வாய்விட் டார்த்தன
வெரிமுக நித்தில மேந்திச் சேந்தபோற்
கரிமுக முலையினர் காய்பொன் சிந்தினர்.

(இ - ள்.) சுரிமுக வலம்புரி துவைத்த - (அப்போது) சுரிந்த முகமுடைய வலம்புரிகள் முழங்கின; தூரியம் விரிமுக விசும்புஉற வாய்விட்டு ஆர்த்தன - நால்வகை இசைக்கருவிகளும் விரிவான வான்நிறைய ஆரவாரித்தன; எரிமுக நித்திலம் ஏந்திச் சேந்தபோல் - ஒளிவிடும் முத்துக்கள் அணிந்ததாற் கறுத்தது போன்ற கரிமுக முலையினர் காய்பொன் சிந்தினர்-கரிய கண்களை யுடைய முலையினர் மாசற்ற பொன்னை வறியவர் கொள்ள வழங்கினர்.

(வி - ம்.) சுரிமுகம் - சுருளுடைய வாய். துவைத்த: பலவறி சொல். கரிமுகம் - கரிந்த முகம். மிகுதியாக வழங்கினர் என்பார், சிந்தினர் என்றார். காய்பொன்: வினைத்தொகை. (ங00)

ஙங0. அழுகுரல் மயங்கிய வல்ல லாவணத்
தெழுகிளை மகிழ்ந்தெம தரசு வேண்டினன்
கழிபெருங் காதலான் கந்து நாமனேன்
றழிதரு பெருநிதி யுவப்ப நல்கினன்.

(இ - ள்.) அழுகுரல் மயங்கிய அல்லல் ஆவணத்து - (அரசன் இறந்ததால்) அழுகுரல் கலந்தொலித்த துன்பக் காட்சியை உடைய கடைத்தெருவிலே; கந்துநாமன் கழிபெருங் காதலான் - கந்துக்கடன் (எம்மிடம் கொண்ட) நனிமிகு காதலி னால்; எழுகிளை மகிழ்ந்து எமது அரசு வேண்டினன் என்று - வளரும் உறவாக எம்மை விரும்பி எம் அரசை விரும்பினன் என்று எண்ணி; உவப்ப உழிதரு பெருநிதி நல்கினன் - அவன்

மனம் நிறைய நிலையற்றுச் சுழலும் பெருஞ் செல்வத்தை வழங்கினான்.

(வி - ம்.) எழுகிளை மகிழ்ந்து - எழுபிறப்பும் எம்மைக் கிளையாக விரும்பி என்றுமாம். (௩0௧)

௩௩௧. திருமகற் பெற்றனெச் செம்போற் குன்றெனப்
பெருநல நிதிதலை திறந்து பீடுடை
யிருநிலத் திரவலர்க் கார்த்தி யின்னணஞ்
செருநிலம் பயப்புறச் செல்வன் செல்லுமே.

(இ - ள்.) திருமகன் பெற்றென - திருமகனை (வளர்க்கும் பேறு) பெற்றதனால்; செம்பொன் குன்று எனப் பெருநல நிதி தலைதிறந்து - பொன்மலையென இருந்த பெருகிய நல்ல நிதியறையைத் திறந்து; பீடுஉடை இருநிலத்து இரவலர்க்கு ஆர்த்தி- பெருமையுடைய நிலவுலகில் இரவலர்க்கு நிறைய நல்கி; இன்னணம் செருநிலம் பயப்புறச் செல்வன் செல்லும் - இவ்வாறு, அம்மகன் போரிலே தன் பகையை வெல்லும் பயன்பெறக் கந்துக்கடன் கொடைக்கடன் பூண்டு ஒழுகினான்.

(வி - ம்.) பெற்றென ஆர்த்தி: எனவென் எச்சம் காரணகாரியப் பொருட்டு; 'மருந்து தின்றெனப் பிணிநீங் கிற்று' என்றாற்போல. செருநிலம் பயப்பு உற - அரசர் பொருத இந் நகரிலேயே சீவகனும் போர்செய்து பிறந்த பயன் உறவேண்டி.

ஆழியாற் குலனுணர்தலின் அதற்குரிய தொழிலே கருதினான் க ந்துகனும். (௩0௨)

வேறு

௩௩௨. நல்லுயிர் நீங்கலு நன்மாண் புடையதோர்
புல்லுயிர் தன்னொடு நின்றுழிப் புல்லுயிர்
கல்லுயிர் காட்டிற் கரப்பக் கலங்கவிழ்த்
தல்லலுற் றாளுற்ற தாற்ற வுரைப்பாம்.

(இ - ள்.) நல்உயிர் நீங்கலும் - நல்லுயிராகிய சச்சந்தன் நீங்கலாலே; நல்மாண்பு உடையதுஓர் புல்உயிர் தன்னொடு நின்றுழி - நல்ல மாட்சிமையுடைய ஒரு சிற்றுயிரோடு நின்ற போது; கல்உயிர் காட்டில் புல்உயிர் கரப்ப - கல்லையுயிர்த்த சுடுகாட்டிலே அப் புல்லுயிரையும் ஊழ்வினை மறைத்தலால்; கலம் கவிழ்த்த அல்லல் - கடலில் மரக்கலத்தைக் கவிழ்த்தவன் உற்ற துன்பம்போல; உற்றாள் உற்றது ஆற்ற உரைப்பாம் - அங்ஙனம் துன்பமடைந்தவள் மேலும் அடைந்ததை முற்றும் கூறுவோம்.

(வி - ம்.) கரப்ப : செய்விப்பதன் தொழில். [1]கவிழ்த்த அல்லல் : இது காரண காரியம் ; கருவிக்கண் அடங்கும் ; 'உண்ட எச்சில்' போல. 'உற்றது' என்று இறந்தகாலத்தாற் கூறினார், கதையை உட்கொண்டு.

நல்லுயிர் என்றது சச்சந்தனை. புல்லுயிர் என்றது மகவினை. கல்லுயிர் காடு - கல்லை உயிர்த்த சுடுகாடு. கவிழ்த்தவல்லல் எனற்பாலது கவிழ்த்தல்லல் என நின்றது கெடுதல் விகாரம். (உ0ங)

ஙஙங. பொறியறு பாவையிற் பொம்மென விம்மி
வெறியுறு கோதை வெறுநில மெய்த
இறுமுறை யெழுச்சியி னெய்துவ தெல்லா
நெறிமையிற் கூற நினைவி னகன்றாள்.

(இ - ள்.) வெறிஉறு கோதை - மணங்கமழ் கோதையாள்: பொறிஅறு பாவையின்-இயந்திரம் அற்ற பதுமைபோல; விம்மிப் பொம்என வெறுநிலம் எய்த - அழுது கடுக வெறுநிலத்திலே வீழ்தலால்; எழுச்சியின் இறுமுறை எய்துவது எல்லாம்-தொடக்கத்திலும் முடிவினும் வரக்கடவதெல்லாம்; நெறிமையின் கூற - (கூனி) ஒழுங்காகக் கூறியதனாலும் ; நினைவின் அகன்றாள் - (கனவின் பயனை) நினைத்தலாலும் கவலை நீங்கினாள்.

(வி - ம்.) பொம்மென : விரைவுக் குறிப்பு. ' எய்துவது எல்லாம் ' என்றார், 'ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி, பன்மைக் காகும் இடனுமாருண்டே' (தொல். எச்ச - கூ0) என்றதனால். நெறிமை : மை : பகுதிப் பொருள் விகுதி.

கனவால் ஆக்கமும் உளதென்று கருதிய தேவியின் மனங்கொள்ளுமாறு கூனி தன் தெய்வத்தன்மையால் மேல்வருவன கூறுதலின் அதனை உட்கோண்டு ' நினைவின் அகன்றாள் ' என்க. (உ0ச)

ஙஙச. பெருமகற் காக்கம் பிறழ்வின்றிக் கேட்டே
திருமகள் தானினிச் செய்வதை யெல்லா
மொருமனத் தன்னா யுரையென லோடுந்
தெருமரு தெய்வதஞ் செப்பிய தன்றே.

(இ - ள்.) பெருமகற்கு ஆக்கம் பிறழ்வு இன்றிக் கேட்டு - மாண்புறு மகனுக்கு வரும் நலனைத் திரிபின்றிக் கேட்டு ; திருமகள் தான் இனிச் செய்வதை எல்லாம்-விசயை தான் இனிமேல் செய்யுங் காரியம் எல்லாம் ; ஒருமனத்து அன்னாய்! உரை என லோடும் - ஒன்றுபட்ட உள்ளமுடைய அன்னையே! கூறுக என்றவுடன் ; தெருமரு தெய்வதம் செப்பியது - (விசயை நிலைக்குக்) கலங்கிய தெய்வம் கூறத் தொடங்கியது.

1. கவிழ்த்தல் : காரணம்; அல்லல் : காரியம். காரணம் கருவியில் அடங்கும்.

(வி - ம்.) செய்வதை : வினைத்திரிச்சொல். கேட்டே : ஏ : ஈற்றசை. இருவர்க்கும் ஒருமனம். ஓடு : உடனிகழ்ச்சி. தெருமரு தெய்வம் : புதல்வன் அன்னப் பார்ப்பை மூற்பிறப்பிற் பிரித்த தீவினையை உறுகின்ற தன்மையைத் தான் ஆராய்ந்து, அதற்கு அவனை வேறோரிடத்துப் பிரித்து விசயையைத் தனியே கொண்டுபோதற்கு வருந்துகின்ற தெய்வம். செப்பியது : கணவனை யிழந்தார்கது நோன்பு கடனுதலின் இயைவதொரு கருமம் விசயைக்குக் கூறியது. அது மேல்வருவது. (௩௦௫)

௩௩௫. மணியறைந் தன்ன வரியற லைம்பாற்
பணிவருங் கற்பின் படைமலர்க் கண்ணாய்
துணியிருட் போர்வையிற் றுன்னுபு போகி
யணிமணற் பேர்யாற் றமரிகை சார்வாம்.

(இ - ள்.) மணிவரி அறல் அறைந்த அன்ன ஐம்பால் - நீலமணியிலே வரிவரியான கருமணலைப் பதித்தாற்போன்ற ஐம்பாலையும் ; பணிவரும் கற்பின் - உலகெலாம் ஏவலில் நிற்க வரும் கற்பினையும்; படைமலர்க் கண்ணாய்-படைபோலும் பூப்போலுங் கண்களையும் உடையாய்! ; இருட்போர்வையில் துன்னுபு போகி - இருளாகிய போர்வையிலே மறைந்து சென்று; அணிமணல் பேர்யாறு அமரிகை சார்வாம் - அழகிய மணலையுடைய பேராகிய அமரிகையை அடைவோம். துணி - இதனை உறுதிகொள்.

(வி - ம்.) பகை நிலத்தை இருளிலேயே கடந்து எல்லைக்கப்பாலுள்ள அமரிகையை அடைவதற்குத் துணிவுகொள் என்றாள், கடத்தற்குரிய விரைவை உட்கொண்டு.

ஐம்பால் : ஐந்து வகையாக முடிக்குங் கூந்தல். படை = ஆயுதம்.

நீலமணியின்கண் பதித்தாற்போன்ற வரியாகிய அறலையுடைய ஐம்பால் என்பதே பொருந்தும். அறல் - அற்றற்றுக் கிடக்கும் வரிகள் என்க. வரியறல் : பண்புத்தொகை. பணிவரும் என்றற்குப் பலரும் தொழுதல் வருதற்குக் காரணமான கற்பெனினுமாம். என்னை ? பத்தினிப் பெண்டிரை யாரும் தொழுதல் உண்மையின் என்க. துணி : ஏவல் வினை. அமரிகைப் பேர்யாற்றணி மணல் என மாறுக. (௩௦௬)

௩௩௬. அமரிகைக் கோசனை யைம்பது சென்றாற்
குமரிக் கொடிமதிற் கோபுர மூதூர்
தமரியல் ஓம்புந் தரணி திலகம்
நமரது மற்றது நண்ணல மாகி,

(இ - ள்.) அமரிகைக்கு ஓசனை ஐம்பது சென்றால் - அந்த அமரிகையிலிருந்து ஐம்பது யோசனை தொலைவு சென்றால் ; கொடிக்குமரி மதில் கோபுரம் மூதூர் தமர்இயல் ஓம்பும் தரணி திலகம் நமரது - கொடியையுடைய அழியா மதிலையுங் கோபுரத்

தையுமுடைய பழம்பதியாகிய, உலகினை யெல்லாம் தமராம் தன்மையாற் காக்கின்ற தரணி திலகமென்பது நம்மவர் ஊர்; அது நண்ணலம் ஆகி - அந்நகரை அடையேமாகி,

(வி - ம்.) இப்பாட்டுக் குளகம்.

ஓசனை: வடசொற் சிதைவு. விசயை நோற்பதற்குத் தாபதப் பள்ளி வேண்டுதலானும், அரசனை அமரில் நீத்துப் புதல்வனைப் புறங்காட்டில் விட்டுத் தமரிடஞ் சேரல் ஆகாமையானும், கூனி, 'நண்ணலமாகி' என்றாள்.

குமரிமதில் கொடிக்கோபுரம் என நிரல் நிரலாக்கினுமாம். குமரி - கன்னிமை; அஃதாவது அழியாமை. தமரியலான் ஓம்பும் என்க. தமரியல் - கேண்மை. நண்ணலம்: தன்மைப் பன்மை. (௩0எ)

௩௩எ. வண்டார் குவளைய வாவியும் பொய்கையுங்
கண்டார் மனங்கவர் காவுங் கஞலிய
தண்டா ரணியத்துத் தாபதப் பள்ளியொன்
றுண்டாங் கதனுள் ளுறைகுவ மென்றாள்.

(இ - ள்.) வண்டுஆர் குவளைய வாவியும் பொய்கையும் கண்டார் மனம்கவர் காவும் கஞலிய - வண்டுகள் நிறைந்த குவளை மலர்களையுடைய ஓடையும் பொய்கையும் கண்டவர் உளத்தைக் கவரும் பொழிலும் நெருங்கிய; தண்டாரணியத்துத் தாபதப் பள்ளி ஒன்று உண்டு - தண்டகாரணியம் என்கிற வனத்திலே ஒரு தாபதப்பள்ளி உளது; ஆங்கு அதனுள் உறைகுவம் என்றாள் - அவ்வனத்தே அப் பள்ளியில் (அத் தாபதருடன்) உறைவோம் என்று கூறினாள்.

(வி - ம்.) வாவி - யாற்றில் உள்ள ஓடை. பொய்கை - மானிடர் ஆக்காத நீர்நிலை. [ஆங்கு: 'உவம வுருபு' என்றும், 'அத்தாபதர் உறைவது போல' என அதற்குப் பொருளும் நச்சினார்க்கினியர் கூறுவர்.

தண்டாரணியம்: தண்டகாரணியம் என்பதன் மரூஉ. தண்டகர் என்னும் ஒரு சாதியினர் உறைதலான் அப்பெயர் பெற்றதென்ப. உறைகுவம்: தன்மைப்பன்மை. (௩0அ)

௩௩அ. பொருளுடை வாய்மொழி போற்றினள் கூற
மருளுடை மாதர் மதித்தன ளாகி
யருளுடை மாதவ ரத்திசை முன்னி
யிருளிடை மின்னி னிலங்கிழை சென்றாள்.

(இ - ள்.) பொருள்உடை வாய்மொழி போற்றினள் கூற - (கூனி) பொருளுற்ற உண்மை மொழியை விருப்பத்துடன் கூற; மருள்உடை மாதர் மதித்தனள் ஆகி - மயக்கம் நீங்கிய விசயை அம்மொழியைத் தன் கருத்துக்குத் தக்கது என ஒப்பியவளாய்;

அருளுடை மாதவர் அத்திசை முன்னி - அருளுடைய மாதவர் வாழும் அத்திசையினைக் குறிப்பிட்டு; இருளிடை மின்னின் இலங்கிழை சென்றாள் - இருளின்ஊடே மின்னுக் கொடிபோல விளங்கும் அணிகலனையுடையாள் சென்றாள்.

(வி - ம்.) கேளிரைக் கண்டால் துன்பம் மிகும் என்றும் நோற்பது கருதியதாலும் யான் கருதியதையே கூறினாள் என்னாது அவளே கூறினாளாகக் கொண்டமை தோன்ற, 'மதித்தனளாகி' என்றார். ['மகப் பெற்ற புனிறு தீராது' (மணி. எ, எகு) இரவிற் சேற லரி தென்று கருதித் தெய்வதம் தன் தெய்வத்தன்மையாற் கொண்டு போகின்ற விரைவு தோன்ற, 'மின்னின் என்றார்' என்பர் நச்சினார்க் கினியர்.]

விசையையியல்புக்கு மிகவும் பொருத்தமான மொழியாகலின் பொருளுடை மொழி என்றும், அவட்குப் பெரிதும் நன்மை விளைப்ப தாகலின் வாய்மொழி என்றும் கூறினர். உடைமாதர் : வினைத்தொகை. மாதவர் உறையும் அத்திசை என்றொருசொல் வருவித்துக்கொள்க. (௩0கூ)

௩௩௬. உருவ மாமதி வாண்முகத் தோடிய
விருவி லும்மெறி மாமக ரக்குழைத்
திருவி லும்மிவை தேமொழி மாதரைப்
பொருவி னீளதர் போக்குவ போன்றவே.

(இ - ள்.) உருவமாமதி வாண்முகத்து ஓடிய இருவிலும் - (முன்னர்) அழகிய நிறைமதி போலும் ஒளிதந்த முகத்தில் இப் பொழுது அது நீங்கியதால் வருத்தம் நிறைந்த கரிய ஒளியும்; மாமகரக் குழைஎறி திருவிலும் - பெரிய மகரக்குழை வீசும் பல்நிற ஒளியும்; இவை தேன்மொழி மாதரைப் பொருஇல் நீள் அதர் போக்குவ போன்ற - (ஆகிய) இவைகள் இன்மொழி விசயையை வெம்மையில் ஒப்பு இல்லாத வழியிலே செலுத்துவ போன்றன.

(வி - ம்.) இரு வில் - கரிய வொளி, 'இருங்கண் யானை' (பதிற்) என்பது போல. அதர் போக்குவ : விளக்கு (இதனை ஆகுபெயரென்பர் நச்சி).

உருவமாமதி - அழகிய முழுத்திங்கள். திருவிலும் ஆகிய இவை என்க. பொருவில் என்பதற்கு நெடுமையால் ஒப்பற்ற என்பது சிறப்பு. என்னை? இரவில் போவார்க்கு வெப்பங் கூறவேண்டாமையின் என்க. போக்குவ: பலவறி சொல்; இது காரிய ஆகுபெயர். விளக்கு என்னும் பொருட்டென்க. (௩௧0)

வேறு

௩௪0 சிலம்பி ரங்கிப் போற்றிசைப்பத்
திருவிற் கைபோய் மெய்காப்ப
விலங்குபோற் கிண்கிணியுங் கலையு
மேங்க வெறிவேற்கண்

மலங்க மணிமலர்ந்த பவளக்
கோம்பு முழு மெய்யுஞ்
சிலம்பி வலந்தது போற்
போர்வை போர்த்துச் செல்லுற்ருள்.

(இ - ள்.) சிலம்பு இரங்கிப் போற்று இசைப்ப - (விசயை அணிந்த) சிலம்புகள் இரங்கி ஒப்படை கூற; திருவில் கைபோய் மெய்காப்ப - (குழை வீசிய) அழகிய ஒளி பக்கத்தே சென்று மெய் காக்க; இலங்குபொன் கிண்கிணியும் கலையும் ஏங்க - விளங்கும் பொன்ஞலான கிண்கிணியும் மேகலையும் ஏங்க; எறி வேல் கண்மலங்க - எறியும் வேலனைய கண்கள் அஞ்சிச் சுழல; மணிமலர்ந்த பவளக்கொம்பு - மணியை மலர்ந்த பவளக்கொடி; முழுமெய்யும் சிலம்பி வலந்ததுபோல் - உடம்பெல்லாம் சிலம்பி நூலாற் சூழ்ந்தபோல்; போர்வை போர்த்துச் செல்லுற்ருள் - போர்வையாற் போர்த்துக்கொண்டு செல்லலுற்ருள்.

(வி - ம்.) வலம்புரி சலஞ்சலம் வளாஇய தொத்தவளாதலின் (சீவக - கஅச) மணியைப் பூத்ததொரு பவளக் கொம்பைச் சிலம்பி சூழ்ந்தது போல மெய்ம் முழுதும் போர்வையாலே மறைத்துச் செல் லுற்ருள். தானுங் கூனியுமே செல்வதால் அஞ்சி மலங்கிஞள். (உகக)

உசுக. பஞ்சி யடரனிச்ச நெருஞ்சி
யீன்ற பழமா வேன்
றஞ்சு மலரடிக ளரங்கண்
டன்ன வருங்காட்டுட்
குஞ்சித் தசைந் தசைந்து
குருதி கான்று வெய்துயிரா
வஞ்சி யிடைநுடங்க மயில்கை
வீசி நடந்ததே.

(இ - ள்.) பஞ்சிஅடர் அனிச்சம் நெருஞ்சியீன்ற பழம் என்று - பஞ்சித்திரளையும் அனிச்ச மலரையும் நெருஞ்சிப்பழம் என்று; அஞ்சும் மலர் அடிகள் - அஞ்சும் மலரனைய அடிகள்; அரம்கண்ட அன்ன அருங்காட்டுள் - வாளரம் அனைய (பரல்கள் நிறைந்த) அரிய காட்டின் வழியில்; குஞ்சித்து அசைந்து அசைந்து குருதி கான்று வெய்து உயிரா - குந்திக் குந்தி இளைத் திளைத்துக் கால்கள் குருதி காலப் பெருமூச்செறிந்து; வஞ்சி இடை நுடங்க - வஞ்சிக் கொடியனைய இடை வாட; மயில் கைவீசி நடந்தது - விசயையாகிய மயில் கையை வீசி நடந்தது.

(வி - ம்.) ஏ : ஈற்றசை; [நச்சிஞர்க்கினியர் தேற்றம் என்பர். மற்றும் அவர், 'குருதிகான்று குஞ்சித்து அசைந்தசைந்து' செல்வதைப்

பஞ்சியடரையும் அனிச்சத்தையுங் கண்டே என்று மாட்டேற்றுவர். மற்றும், 'நடந்ததே' என்பதற்கு 'நடந்த தன்மையே' என்று பொருள் கூறுவர்.] அடர் - நெருக்கம். மயில் என்றதற்கேற்ப நடந்தது என்றார். (ருகஉ)

வேறு

ருசஉ. தடங்கோ டாமரைத் தாதுறை தேவியுங்
குடங்கை போலுண்கட் கூனியுங் கூர்ம்பரற்
கடங்க ளும்மலை யுங்கடந் தார்புன
லிடங்கோள் யாற்றக மெய்தின ரேன்பவே.

(இ - ள்.) தடம்கொள் தாமரைத் தாதுஉறை தேவியும் - அகன்ற தாமரை மலரில் இருக்கும் திருவனைய விசயையும்; குடங்கைபோல் உண்கண் கூனியும் - உள்ளங்கை போன்ற மை தீட்டிய கண்களையுடைய கூனியும்; கூர்பரல்கடங்களும் மலையும் கடந்து - கூரிய பருக்கைக் கற்கள் நிறைந்த காட்டு நெறியையும் மலையையுங் கடந்து; ஆர்புனல் இடம்கொள் யாற்றகம் எய்தினர் - நிறைந்த நீர்அறாத அமரிகை யாற்றின் இடைக்குறையை அடைந்தனர்.

(வி - ம்.) என்ப, ஏ : அசைகள்.

[நச்சினார்க்கினியர், ருருஅ-முதல் ருசஉ-வரை ஐந்து செய்யுட்களையும் ஒரு தொடராக்கி மாட்டேற்றிக் கூறும் முடிபு:—

கூனி மொழிகளை விரும்பினளாய்க் கூற, அதனை மாதர் மதித்தனளாய், மாதவரிருக்கின்ற அத்திசையைக் கருதிப் போர்வை போர்த்து அருங்காட்டிலே இடை நுடங்கக் கையை வீசி, நடைக்கு வருந்ாதவொரு மயில் நடந்த தன்மையே மலரடிகளாலே செல்லலுற்றாள்; அப்பொழுது, இருவிலும் திருவிலும் மாதரை இரவிடை வழிபோக்கும் விளக்குப் போன்றன. அவ் விளக்கிலே கூனியொழிய வேறொருவ ரின்மையின், கண் அலமருதலாற் சிலம்பு இசைப்பத் திருவிற் காப்பக் கிண்கிணியும் கலையும் ஏங்கக் கடங்களும் மலையுங் கடந்து, அந்த இலங்கிழை மின் போலச் சென்றாள்; இங்ஙனஞ் சென்ற தாமரைத் தாதுறை தேவியும் அவளுக்கு ஏற்பச் சென்ற கூனியும் பின்னர் யாற்றிடைக் குறையைச் சேர்ந்தார் என்க.] (ருசரு)

ருசரு. எல்லை எய்திய வாயிரச் செங்கதிர்
மல்லன் மாக்கட ரேன்றலும் வைகிருட்
டோல்லை நல்வினை முற்படத் தோன்றிய
வல்லல் வெவ்வினை போல வகன்றதே.

(இ - ள்.) எல்லை எய்திய ஆயிரச் செங்கதிர் (இரவின்) முடிவில் தோன்றிய ஞாயிற்றின் எண்ணற்ற செங்கதிர்கள்; மல்லல் மாக்கடல் தோன்றலும்-வளமிகும் பெருங்கடலில் காண்

குற்றதும்; வைகுஇருள் - (அதுவரை) குடியிருந்த இருள்; தொல்லை நல்வினை முற்படத் தோன்றிய அல்லல் வெவ்வினை போல - பழமையான நல்வினை வந்த அளவிலே முன்தோன்றி யிருந்த துன்பந்தருந் தீவினை போமாறுபோல; அகன்றது - நீங்கியது.

(வி - ம்.) மல்லல்: மணி முதலியன. ['எய்திய எல்லை' என்று மாற்றி, அவர்கள் ஆங்குச் சென்ற அளவிலே என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.]

எல்லை எய்திய என்றற்கு உலகம் பகற்பொழுதை எய்துதற்பொருட் டெனினுமாம். தொல்லை நல்வினை - பழைய நல்வினை. விசயையின் தீவினை நுகர்ச்சிக்கு இரக்கமுடையராய் இதுகாறும் ஓதிவந்த நூலா சிரியர் இவ்விடியல் அவள் தீவினைக்கும் ஒரு விடியலாதல் கருதி அத் தீவினையையே இருட்கும், இனி அவட்கெய்தும் நல்வினையையே ஞாயிற் றொளிக்கும் உவமையாக எடுத்தமை நினைத்தின்புறற்பாற்று. (௩௧௪)

௩௪௪. நுணங்கு நுண்கோடி மின்னோர் மழைமிசை
மணங்கொள் வார்பொழில் வந்து கிடந்ததொத்
தணங்கு நுண்டுகின் மேலசைந் தாளரோ
நிணங்கொள் வைந்நுதி வேனெடுங் கண்ணினாள்.

(இ - ள்.) நிணம்கொள் வைநுதிவேல் நெடுங் கண்ணினாள் - ஊன்பொதிந்த கூரிய நுனியையுடைய வேலனைய நீண்ட கண் ணாள்; மணம்கொள் வார்பொழில் - (ஆங்கு) மணமுறும் பெரிய பொழில் ஒன்றில்; நுணங்குநுண் கொடிமின்ஓர் மழைமிசை வந்து கிடந்தது ஒத்து - மிகவும் நுண்ணிய ஒழுங்குற்ற மின் ஒரு முகிலின்மேல் வந்து கிடந்தாற்போல; அணங்கும் நுண் துகில்மேல் அசைந்தாள் - இழை தெரியாமல் வருந்தும் மெல்லிய ஆடையின்மேற் கிடந்தாள்.

(வி - ம்.) நுணங்கு நுண்கொடிமின் - மிக மிக நுணங்கிய கொடி மின்னல். இது விசயைக்குவமை. பொழில் அல்லது அப்பொழிலிடத்து மணற்பரப்பு முகிலுக்கு உவமை என்க. அணங்கு நுண்டுகில் - காண்போர் கண்ணை வருத்தும் நுண்ணிழையையுடைய துகில் என்க. வைந்நுதி - கூர்த்த நுனி. (௩௧௫)

௩௪௫. வைகிற் றெம்மனை வாழிய போழ்தெனக்
கையி னானடி தைவரக் கண்மலர்ந்
தைய வோவென் றெழுந்தன ளாய்மதி
மொய்கொள் பூமி முளைப்பது போலவே.

(இ - ள்.) எம்அனை வாழிய போழ்து வைகிற்று என - (அப்போது) எம்அன்னாய்! வாழ்க! இரவு கழிந்தது என்று கூறி; கையினான் அடி தைவர - கையினால் அவள் அடியைக் கூனி

தடவ; ஐயவோ என்று கண் மலர்ந்து - ஐயவோ! எனக் கூறிய வாறு கண் விழித்து; ஆய்மதி மொய்கொள் பூமி முளைப்பது போல-(ஒளி) சுருங்கிய மதி அணுச்செறிவு கொண்ட நிலமிசைத் தோன்றுவதுபோல; எழுந்தனள் - எழுந்தாள்.

(வி - ம்.) தெய்வம் கூனி வடிவாய் நிற்றலின் தன் தொழிலுக்குத் தக்கவாறு அடி தை வந்தது. தனக்குத் துன்பம் நேர்ந்த பிறகு இப்போதுதான் துயின்றாளாதலின், துயிலும்போது கனவில் தன் வாழ்வின் அலங்கோலத்தைக் கண்டிருப்பாளாதலின் 'ஐயவோ' என இரங்கினாள். மற்றும் அரசனைக் கனவிற் கண்டு விழித்துப் பார்க்கை யில் நனவாகாமையின் ஐயவோ என்றாள் எனலுமாம். 'ஐய!' என்பது அரசனை விளிப்பதும், ஓ: இரக்கக் குறிப்பும் ஆகும். ஆய்மதி - ஒளியற்ற மதி. அதுவும் விடியலில் தோன்றும். மொய் - செறிவு.

ஆய்மதி தோன்றல் முகமெடுத்தற்கு உவமை. அன்னை, ஈண்டு முறைப் பெயரன்மையின், 'அன்னை யென்னை' (தொல் - பொருளியல் - ௫௨) என்பதாற் கொள்க. (௩௧௫)

௩௪௬. தூவி யஞ்சிறை யன்னமுந் தோகையு
மேவி மென்புன மானின மாதியா
நாவி நாறெழின் மேனியைக் கண்டுகண்
டாவித் தாற்றுகி லாதழு திட்டவே.

(இ - ள்.) தூவி அம்சிறை அன்னமும் தோகையும் - (அப் போது) தூவி பொருந்திய அழகிய சிறகினையுடைய அன்னமும் மயிலும்; புனம்மென் மானினம் ஆதியா - காட்டில் உள்ள மென்மைப் பண்புடைய மான்குழு முதலாக; மேவி நாவி நாறு எழில் மேனியைக் கண்டு கண்டு - ஆங்கு வந்து புழுகு கமழும் அழகிய (விசயையின்) மெய்யைப் பார்த்துப் பார்த்து; ஆவித்து ஆற்றுகிலாது அழுதிட்டவே-கொட்டாவிவிட்டு (இவள் நிலைக்கு) ஆற்றாமல் அழுதிட்டனவே.

(வி - ம்.) ஏ : தேற்றம். மயில் முதலிய பறவைகளும் மானினமும் தமக்கியல்பாக நிகழ்த்திய கொட்டாவி கொள்ளுதலையும் ஆரவாரித்தலை யும் விசையையின் நிலைக்கு இரங்கியனவாகத் தம் குறிப்பை ஏற்றினார். அன்னம் முதலியவை காலையிற் கொட்டாவி கோடல் இயல்பு எனத் தெரிகிறது.

நச்சினார்க்கினியர், 'தமக்கு இவை இயல்பாகக் காலையிற் செய்தன அல்ல என்க' என்பர். (௩௧௭)

௩௪௭. கோம்மை வெம்முலைப் போதிற் கோடியனா
ளும்மை நின்றதோ ரூழ்வினை யுண்மையா
லெம்மை யிவ்விட ருற்றன ளேய்தினாள்
செம்மை மாதவர் செய்தவப் பள்ளியே.

(இ - ள்.) கொம்மை வெம்முலைப் போதின் கொடி அனாள் - பருத்த பால்சுரக்க வெவ்விதாகிய முலைகளையுடைய மலர்நிறைந்த கொடிபோன்ற விசயை; உம்மை நின்றதொர் ஊழ்வினை உண்மையால் - முற்பிறப்பிற் செய்த தீவினை ஒன்று இருந்ததால்; இம்மை இவ்இடர் உற்றனள் - இப்பிறப்பிலே இத்தகைய துயருற்றனள்; செம்மை மாதவர் செய்தவப் பள்ளி எய்தினாள் - (இனி, அது நீங்குதலால்) செவ்வையான மாதவர் தவம்புரியும் பள்ளியைச் சேர்ந்தாள்.

(வி - ம்.) போதிற்கொடி : திருமகள். உம்மை - முற்பிறப்பு. எய்தினாள் என்றது நல்வினை வந்து தலைப்படுதலானே எய்தினான் என்பது படநின்றது. (நஉஅ)

வேறு

நஉகூ. வாளுறை நெடுங்க ணாளை
மாதவ மகளி ரெல்லாந்
தோளுறப் புல்லு வார்போற்
றோக்கெதிர் கொண்டு புக்குத்
தாளுறு வருத்த மோம்பித்
தவநெறிப் படுக்க லுற்று
நாளுறத் திங்க ளூர
நல்லணி நீக்கு கின்றார்.

(இ - ள்.) மாதவ மகளிரெல்லாம் தொக்கு - மாதவம் புரியும் பெண்டிரெல்லோரும் (விசயை வருவது கண்டு) ஒன்று படக் குழுமி; வாள்உறை நெடுங்கணாளைத் தோளுறப் புல்லுவார் போல் எதிர்கொண்டு புக்கு - (முன்)வாளின் தன்மை தங்கிய கண்ணாளைத் தோளுறத் தழுவுவார்போல் எதிர்கொண்டு சென்று; தாள்உறு வருத்தம் ஓம்பி - (நடையினால்) அடிகள் அடைந்த வருத்தத்தை நீக்கி; தவநெறிப் படுக்கல் உற்று - (அவள் கருத்து உணர்ந்து) தவநெறியிலே செலுத்தத் தொடங்கி; திங்கள்ஊர நாள்உற நல்லணி நீக்குகின்றார் - நாள்தொறும் திங்கள் ஒருகலை மேற்கொள்ளும் வளர்பிறையிலே நல்லநாள் வந்தபோது அழகிய அணிகளை நீக்குவாராயினர்.

(வி - ம்.) முன்னர் ஊடலால் தன் கணவனுக்கு வருத்த மூட்டிய கண்கள் என்பதற்கு, 'வாளுறை நெடுங்கணாள்' என்றார். அங்ஙனமின்றித் தவநெறி விழைந்து வரும் இவள் கண்களைப் பிறர்க்கு வருத்தமூட்டுங் கண்கள் என்றல் பொருந்தாமை உணர்க.

மாதவஞ் செய்வார் பிறரைத் தழுவலாகாமையின் 'புல்லுவார்போல்' என்றார். விசயை கொண்ட தவநெறி கணவனை யிழந்ததற்கும் மகன் ஆக்கத்திற்கும் பொருந்தியதாகும்.

விசையை நீக்குவதை, ஏவினாரைக் கருத்தாவாகக் கொண்டு அவர் மேல் ஏற்றினர்; 'அரசரெடுத்த தேவகுலம்' போல. (௬கக)

வேறு

௬௫௯. திருந்து தகரச் செங்நெருப்பிற்
றேன்றேய்த் தமிர்தங் கோளவுயிர்க்குங்
கருங்கா ழகிலி னறும்புகையிற்
கழுமிக் கோதை கண்படுக்குந்
திருந்து நானக் குழல்புலம்பத்
தேனும் வண்டு மிசைப்புலம்ப
வரும்பொன் மாலை யலங்கலோ
டாரம் புலம்ப வகற்றினாள்.

(இ - ள்.) திருந்து தகரச் செந்நெருப்பில் தேன்தோய்த்து அமிர்தம்கொள உயிர்க்கும் கருங்காழ் அகிலின் நறும்புகையில் கழுமி - நல்ல தகர விறகால் ஆக்கிய செந்தீயில் தேனில் தோய்ப்பதால் இனிய மணம்கமழும் கரிய அகிற்கட்டையால் எழுந்த இனிய புகையில் மயங்கி; கோதை கண்படுக்கும் திருந்து நானக் குழல் புலம்ப - மலர்மாலை துயிலும் நல்ல புழுகுகலந்த கூந்தல் வருந்துமாறும்; தேனும் வண்டும் மிசைப் புலம்ப - தேனினமும் வண்டினமும் மலரின்மையின் இசைக்கு வருந்தவும்; அரும் பொன்மாலை அலங்கலோடு ஆரம்புலம்ப - அரிய பொன் அரிமாலையும் நெற்றி மாலையும் தலைக்கோலமாகிய முத்துமாலையும் வருந்த (இவற்றைக் குழலிலிருந்து) நீக்கினாள்.

(வி - ம்.) புலம்ப - தனிப்ப என்றுமாம். தகரம்: ஒருவகை மண மரம். கண்படுத்தலாவது பொருந்தியிருத்தல். தேனும் வண்டும் இனங்கள். பொன்னரிமாலை - பொன்னை அரிந்து தொடுத்தமாலை. (௬உ0)

௬௬0. திங்க ளுகிரிற் சோலிப்பதுபோற்
றிலகம் விரலிற் றுனிக்கிப்
பைம்பொன் மகர குண்டலமும்
பாவை கழுத்தி னணிகலமும்
வெங்கண் வேந்தற் கமிர்தாகி
வேற்கட் பாவை பகையாய
வங்கண் முலையி னணிமுத்து
மரும்பொற் பூணு மகற்றினாள்.

(இ - ள்.) திங்கள் உகிரின் சொலிப்பதுபோல் திலகம் விரலின் தான்நீக்கி - திங்களை நகத்தால் உரிப்பதுபோல நெற்றித்

திலகத்தை விரலினாலே போக்கி; பைம்பொன் மகரகுண்டலமும்-பசிய பொன்னாலான மகர குண்டலத்தையும்; கழுத்தின் அணிகலமும் - கழுத்தணிகளையும்; வெங்கண் வேந்தற்கு அமிர்தாகி வேற்கண் பாவை பகையாய அங்கண் முலையின் அணிமுத்தும் - விருப்பம் ஊட்டும் கண்களையுடைய வேந்தனுக்கு அமிர்தமாகி, வேற்கண்ணளாகிய பாவை போல்வாளுக்குப் பகையாக அமைந்த அழகிய கருங்கண்களையுடைய முலைகளின்மேல் அணிந்த முத்துக்களையும்; அரும்பொன் பூணும் - அரிய பொற்கலன்களையும்; பாவை அகற்றினாள் - விசயை நீக்கினாள்.

(வி - ம்.) இன்பத்தால் அவனைக் கெடுத்தலின் தனக்குப் பகையாயின முலைகள். 'உகிரிற் சிதைப்பது போல்' என்றும் பாடம்.

திங்கள் : திலகத்திற்கு உவமை. உகிர் - நகம். சொலித்தல் - உரித்தல்; "மாசில் காம்பு சொலித்தன்ன" எனவரும் சிறுபாணாற்றுப்படையினும் அஃது அப் பொருட்டாதல் உணர்க. (உஉக)

உடுகூ. பஞ்சி யனைய வேய்மென்றோட்
பகுவாய் மகரங் கான்றிட்ட
துஞ்சாக் கதிர்கோ டுணைமுத்தந்
தொழுதே னும்மை யெனத்துறந்து
வஞ்சி வருந்தும் நுசுப்பினாள்
வளைகை யுடைத்து மணிக்காந்த
ளஞ்சச் சிவந்த மெல்விரல்சூ
ழரும்பொ னாழி யகற்றினாள்.

(இ - ள்.) அஞ்சி வருந்தும் நுசுப்பினாள் - (மேலுள்ள பொறையைச் சுமக்க) அச்சமுற்று வருந்தும் இடையினாள்; பஞ்சிஅனைய வேய் மென்தோள் - பஞ்சிபோன்ற மென்மை பொருந்திய வேயனைய தோள்களில் உள்ள; பகுவாய் மகரம் கான்றிட்ட துஞ்சாக் கதிர்கொள் துணைமுத்தம்-திறந்த வாயினையுடைய மகரமீன் உமிழ்ந்த மாறாத கதிர்களையுடைய பலவடம் சேர்ந்த முத்துக்களை; உம்மைத் தொழுதேன் எனத் துறந்து - உங்களை வணங்கினேன் என்று கூறி நீக்கி; வளை கை உடைத்து - வளையல்களைக் கையினின்றும் உடைத்து; மணிக்காந்தள் அஞ்சச் சிவந்த மெல்விரல்சூழ் அரும்பொன் ஆழி அகற்றினாள் - அழகிய காந்தளும் அஞ்சுமாறு சிவந்த மெல்லிய விரல்களிற் சூழ்ந்திருந்த அரிய பொன் மோதிரத்தை நீக்கினாள்.

(வி - ம்.) மகரமீன் முத்தை உமிழ்வது போற் செய்திருப்பது தோளணி. அரசன் நீங்காமல் தழுவுதற்குக் காரணமாய்த் தன்னைக்

கெடுத்தலின், 'தொழுதேன்' என்று இகழ்ந்தாள். வளை கழற்றலரி தாகையால் உடைத்தாள். மணி - அழகு.

முத்தம்: அண்மைவிளியுமாம். (௩௨௨)

௩௨௪. பூப்பெய் செம்போற் கோடிகமும்
பொன்னு ரால வட்டமு
மாக்கு மணிசெய் தேர்த்தட்டு
மரவின் பையு மடுமல்குல்
வீக்கி மின்னுங் கலேயெல்லாம்
வேந்தன் போகி யரம்பையரை
நோக்கி நும்மை நோக்கானீர்
நோவா தொழிமி னெனத்துறந்தாள்.

(இ - ள்.) வேந்தன்போகி அரம்பையரை நோக்கி நும்மை நோக்கான்-அரசன் வானுலகு சென்றதால் இனி வான்மகளிரை நோக்குதலன்றி நும்மாலாய பயனைக் கொள்ளான்; நீர் நோவாது ஒழிமின்என - நீர் இனி வருந்தாமல் நீங்குமின் என்று கூறி; பூப்பெய் செம்பொன் கோடிகமும் - பூவை வைக்கும் பொன்னுலான பூந்தட்டையும்; பொன்ஆர் ஆலவட்டமும்-பொன்னுலான ஆலவட்டத்தையும்; ஆக்கும் மணிசெய் தேர்த்தட்டும் - மணியாலாக்கி அமைத்த தேர்த்தட்டையும்; அரவின் பையும்-பாம்பின் படத்தையும்; அடும் அல்குல் வீக்கி மின்னும் கலேயெல்லாம் துறந்தாள் - வென்ற அல்குலிலே அணிந்து மின்னும் மேகலேக ளெல்லாவற்றையும் நீக்கினாள்.

(வி - ம்.) அரம்பையரை மெய்யுறு புணர்ச்சியின்றி நோக்கால் நுகர்தல் இயல்பாதலால், 'நோக்கி' என்றார். எனினும் 'நும்மை நோக்கான்' என்பதற்கு, 'நும்மாலான பயனைக் கொள்ளான்' என்றே பொருள் கொள்க. இது கண்ணால் நோக்காமல் மனத்தால் நோக்கும், 'நோக்கல் நோக்கம்' (தொல் - வேற்றுமை மயங்கு - க0) எனப்படும். (௩௨௩)

௩௨௫. பிடிக்கை போலுந் திரள்குறங்கி
னணியு நீக்கிப் பிணையன்னு
ளடிக்கின் கிணியு மஞ்சிலம்பும்
விரன்மோ திரத்தோ டகற்றியபின்
கோடிப்பூத் துதிர்ந்த தோற்றம்போற்
கோள்ளத் தோன்றி யணங்கலற
வுடுத்தாள் கற்றேய் நணகலிங்க
முரவோன் சிறுவ னுயர்கெனவே.

(இ - ள்.) பிணை அன்னாள் - மான்பிணை போன்ற விசயை; பிடி கை போலும் திரள் குறங்கின் அணியும் நீக்கி - பிடியின் கைபோலத் திரண்ட துடையின்மேல் அணிந்த 'குறங்குசெறி' என்னும் அணியையும் நீக்கி; அடிகிண் கிணியும் அம்சிலம்பும் விரல் மோதிரத்தோடு அகற்றியபின் - அடியில் அணிந்த கிண் கிணியையும் சிலம்பையும் காலாழியையும் நீக்கிய பிறகு; கொடி பூத்து உதிர்ந்த தோற்றம்போல் கொள்ளத் தோன்றி - கொடி யொன்று மலர்ந்து உதிர்ந்த காட்சியைப்போல் தோன்றி; அணங்கு அலற - (தன்னுடன் வந்த) தெய்வம் வாய்விட்டழ; உரவோன் சிறுவன் உயர்கஎன - அறிவுடையோனாகிய மகன் மேம்படுக என்று; கல்தோய் துண்கலிங்கம் உடுத்தாள் - காவி தோய்த்த நுண்ணிய ஆடையை உடுத்தாள்.

(வி - ம்.) கொடிப்பூத்து உதிர்ந்த: ஒற்றுமையாற் சினைவினை முதன்மேல் ஏற்றினார். கல் - காவிக்கல். 'உயர்க' என்றார் நோன்பின் பயன் அதுவாகலின்.

உரவோன் சிறுவன் என்றாள், பகையை வெல்லப் பிறந்ததால்.

(நஉச)

வேறு

நஉரு. பாலுடை யமிர்தம் பைம்பொற்
கலத்திடைப் பாவை யன்ன
நூலடு நுசுப்பி னல்லா
ரேந்தவு நேர்ந்து நோக்காச்
சேலடு கண்ணி காந்தட்
டிருமணித் துடுப்பு முன்கை
வாலட கருளிச் செய்ய
வனத்துறை தெய்வ மானாள்.

(இ - ள்.) பாவைஅன்ன நூல்அடும் நுசுப்பின் நல்லார் - பாவை யனையரான, நூலனைய நுண்ணிடை மகளிர்; பால்உடை அமிர்தம் பைம்பொன் கலத்திடை ஏந்தவும் - பால்கலந்த சோற்றைப் புதிய பொற்கலத்திலே எடுத்து நிற்பினும்; நேர்ந்து நோக்காச் சேல்அடு கண்ணி - விரும்பி நோக்காத சேலினை வென்ற கண்ணாள்; திருமணிக் காந்தள் துடுப்பு முன்கை வால் அடகு அருளிச்செய்ய-முன்பு அழகிய மணிபுனைந்த காந்தளின் துடுப்புப்போன்ற தன் முன்கையே தூய இலைக்கறியை இரங்கி நல்க; வனத்துஉறை தெய்வம் ஆனாள் - (முன்னர் இல்லுறை தெய்வமானவள்) காட்டில் வாழும் தெய்வமாக ஆயினாள்.

(வி - ம்) பைம்பொற் கலத்திடைப் பாலடிசிலைப் பணிமகளிர் ஏந்தவும் நேர்ந்து நோக்கா நிலை செல்வச் சிறப்பைக் காட்டுகிறது.

இப்போது தன் கையே இலக்கறியை அருளிச் செய்ய இருத்தல் வறுமைக் கொடுமையைக் காட்டுகிறது. எனவே, செல்வம் நிலையாமை ஈங்குக் கூறப்படுகிறது. ஆனால், நச்சினார்க்கினியர், 'உணவு ஒழிந்து நுகர்ச்சியே நிகழ்ந்தமையின் நோக்கிலள்' என்பர். நுகர்ச்சியினால் மெய் சோர்ந்தால் உணவு முதலியன கொண்டு சோர்வைப் போக்க வேண்டு தலின் உணவு ஒழிந்து நுகர்ச்சி நிகழ்தல் இயல்பன்று.

அமிர்தம் - அடிசிலுக்கு உவமவாகுபெயர். பாவை - கொல்லிப் பாவை. காந்தளினது திருமணித் துடுப்புப்போன்ற முன்கை என்க. அருளிச்செய்ய என்றது அருள என்னும் ஒருசொன்னீர்மைத்து. இதனை, அருளி என்றும், செய்ய என்றும் பிரித்து நச்சினார்க்கினியர் அருளி என்பதனை அருள என்று திரித்தும், செய்ய என்பதனைத் தெய் வத்திற்கு அடையாக்குவர். இங்ஙனம் செய்தலிற் போதப் பயனின்மை காண்க. (௩௨௪)

௩௨௫. மெல்விரன் மெலியக் கொய்த
குளநெல்லும் விளைந்த ஆம்ப
லல்லியு முணங்கு முன்றி
லணில்விளித் திரிய வாமான்
புல்லிய குழவித் திங்கட்
பொழிகதிர்க் குப்பை போலு
நல்லெழிற் கவரி யூட்ட
நம்பியை நினைக்கு மன்றே.

(இ - ள்.) மெல்விரல் மெலியக் கொய்த குள நெல்லும் - (தவமகளிர்) மென்மையான விரல்கள் வருந்தப் பறித்த குள நெல்லும்; விளைந்த ஆம்பல் அல்லியும் - முற்றிய ஆம்பலல்லி யின் அரிசியும்; உணங்கும் முன்றில் - உலரும் வாயிலில்; அணில் விளித்து இரியப் புல்லிய ஆமான் குழவி - அணில் சத்திக்கொண்டோட வந்து அணைந்த காட்டுப் பசுவின் கன்றை; திங்கள் பொழி கதிர்க் குப்பை போலும் நல் எழில் கவரி ஊட்ட - திங்கள் பெய்யும் கதிர்த்திரள் போலும் அழகிய மயிர்த்திரளை யுடைய கவரிமான் பாலூட்ட; நம்பியை நினைக்கும் - நம்பி பிறர் பாலை உண்டு வளர்வதை விசயை நினைப்பாள்.

(வி - ம்.) கவரி - கவரிமான்: சினை யாகு பெயர். ஆம்பலல்லி: இரு பெயரொட்டு. அல்லி: அரிசியை உணர்த்தியதால் பொருளாகு பெயர். 'குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க் கொடை' (தொல் - மரபு - ௧௬) என்றதனுள், 'கொடை' என்றதனால், ஆமான் குழவியுங் கொண்ட வாறு உணர்க.

[நச்சினார்க்கினியர் 'ஆமான் குழவியைப் புல்லிய கவரி' என்று கொண்டு கூட்டுவார்.]

இச்செய்யுள் திருத்தக்கமுனிவரின் தலைசிறந்த நல்லிசைப் புல மைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும் பெருமையுடைத்தாதலுணர்க. இக் கருத்தின் அழகினைக் கண்ட கம்பநாடர் தங்காவியத்தே,

" ஏர்குலா முகத்தினாளை இறைமுக மெடுத்து நோக்கித்
தார்குலா மலங்கன் மார்பன் தாயரை நினைந்து நைந்தான் "
(கிட்கிந்தை-௫௧)

என்று அழகுற அமைத்துக்கொண்டனர். (௩உ௬)

௩௫௬. பெண்மைநாண் வனப்புச் சாயல்
பெருமட மாது பேசி
னொண்மையி னொருங்கு கூடி
யுருவுகோண் டனைய நங்கை
நண்ணிய நுங்கட் கெல்லா
மடைக்கல மென்று நாடுங்
கண்ணிய குலனுந் தெய்வங்
கரந்துரைத் தெழுந்த தன்றே.

(இ - ள்.) பெண்மை நாண் வனப்பு சாயல் பெருமடம் மாது பேசின் - அமைதித் தன்மையும் நாணும் அழகும் மென்மைத் தன்மையும் பெருமைமிக்க மடனும் காதலும் ஆகியவற்றை ஆராயின்; ஒண்மையின் ஒருங்கு கூடி உருவு கொண்ட அனைய நங்கை - அவை தாம் விளக்கமுற ஒன்று கூடி ஒரு வடிவு கொண்டாற் போலும் நங்கையாகிய இவள்; நண்ணிய நுங்கட்கு எல்லாம் அடைக்கலம் என்று - நற்பண் பெலாம் பொருந்திய நுங்கட்கு எவ்வகையானும் அடைக்கல மாயினள் என்று கூறி; நாடும் கண்ணிய குலனும் கரந்து உரைத்து - விசயையின் நாட்டையும் கருதற்குரிய குலத்தையும் மறைத்துக் கூறி; தெய்வம் எழுந்தது - கூனி வடிவான தெய்வம் போதற்கு ஒருப்பட்டது.

(வி - ம்.) பெண்மை - அமைதித் தன்மை. மடம் - கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை. மாது - காதல்: மாதர் என்னும் உரிச்சொல் ஈறு திரிந்தது. (௩உ௭)

வேறு

௩௫௭. உறுதி சூழ்ந்தவ ளோடலி னுயிடை
மறுவில் வெண்குடை மன்னவன் காதலஞ்
சிறுவன் தன்மையைச் சேர்ந்தறிந் திவ்வழிக்
குறுக வம்மெனக் கூனியைப் போக்கினாள்.

(இ - ள்.) உறுதி சூழ்ந்து அவண் ஓடலின் - விசயைக்கு வேண்டும் நலன்களை ஆராய்ந்தவாறு தன் இருப்பிடத்திற்குப் போகத் தெய்வம் ஒருப்பட்டதால்; மறுஇல் வெண்குடை மன்னவன் காதல் அம் சிறுவன் தன்மையை - குற்றமற்ற

வெண்குடை வேந்தனின் அன்புக்குரிய நம்பியின் நிலைமையை; ஆயிடைச் சேர்ந்து அறிந்து - இராசமாபுரத்தைச் சார்ந்து அறிந்து; இவ் வழி குறுக வம் என - இங்கே குறுகிய காலத்திலே வம்மின் என்று; கூனியைப் போக்கினுள் - கூனி யுருவத் தெய்வத்தை விசயை வேண்டி விடுத்தாள்.

(வி - ம்.) ஆயிடை : சுட்டு நீண்டதால் யகரந் தோன்றியது ; அவ் விடம் என்று பொருள். ஓடல் : எண்ணம் ஓடுதல். சேடியை 'வம்'மென உயர்த்துக் கூறினுள் தான் நிற்கும் தவநிலைக் கேற்ப. [தெய்வம் தன் தெய்வத் தன்மையால் விசயைக்கும் தன் மகனைக் காக்கக் கூனி செல்ல வேண்டு மென்ற எண்ணத்தை உண்டாக்கியது என்பர் நச்சினார்க் கினியர்.] (நூஉஅ)

நூருஅ. நெஞ்சி னொத்தினி யாளையென் னீர்மையால்
வஞ்சித் தேனென வஞ்சியங் கோம்பனுள்
பஞ்சி மெல்லடிப் பல்கல னார்ப்பச்சென்
றிஞ்சி மாநகர்த் தன்னிட மெய்தினுள்.

(இ - ள்.) வஞ்சி அம் கொம்பனுள் - அழகிய வஞ்சிக் கொடி போன்ற அணங்கினுள்; இனியாளை நெஞ்சின் ஒத்து என் நீர்மையால் வஞ்சித்தேன் என - இனிய பண்புடைய விசயையை மனம் ஒத்து என் தெய்வத் தன்மையால் (சிறுவன் நிலையறிந்து வருவேன் என்று) வஞ்சித்தேன் என்று வருந்தியவாறு; பஞ்சி மெல் அடிப் பல்கலன் ஆர்ப்பச் சென்று - பஞ்சனைய மெல்லிய அடிகளாற் பல கலன்களும் ஒலிக்கச் சென்று; இஞ்சி மாநகர் தன் இடம் எய்தினுள் - மதிலையுடைய இராசமாபுரத்தின் புறத்தே உள்ள சுடுகாட்டை அடைந்தாள்.

(வி - ம்.) தெய்வம் தன்னெஞ்சின் அங்ஙனமே வருகுவன் என்று ஒப்புக்கொண்டு அங்ஙனம் ஒப்புக்கொண்டமை நெஞ்சறிந்த வஞ்சகமா தற்கு வருந்திற்றென்க. இஃது அத்தெய்வத்தின் மாசற்ற உளத்தினை நன்கு காட்டுகின்றது. வஞ்சியங் கொம்பனுள் என்றது தெய்வத்தை. தன்னிடம் - சுடுகாடு. (நூஉகூ)

நூருகூ. தானுந் தன்னுணர் விற்றளர்ந் தாற்றவு
மானின் நோக்கி வரும்வழி நோக்கிநின்
றானி யம்பல வாசையிற் செல்லுமே
தேனி யம்புமோர் தேம்பொழிற் பள்ளியே.

(இ - ள்.) மானின் நோக்கி - மானனைய நோக்கினையுடைய விசையை; தானும் தன் உணர்வின் ஆற்றவும் தளர்ந்து - தானும் அக் கூனியைத் தெய்வம் என்று அறியாத தன் பெண்மை யுணர்வினாலே மிகவும் சோர்வுற்று; வரும் வழி நோக்கி நின்று - வரும் நெறியைப் பார்த்தவாறு நின்று; ஆசையின் பல ஆனியம்-

இன்னும் வருவாள் வருவாள் என்ற ஆசையினாலே பல நாட்கள் (இரவும் பகலுமாக); தேன் இயம்பும் ஓர் தேன் பொழில் பள்ளி செல்லும் - வண்டுகள் முரலும் தேன் பொதிந்த மலர்க்காவில் உள்ள ஒரு பள்ளியிலே தவ வாழ்க்கையை நடத்துவாளாயினள்.

(வி - ம்.) மானின் : இன் : சாரியை.

இச்செய்யுள் அவலச் சுவைக்கு ஓர் ஒப்பற்ற எடுத்துக்காட்டாகும். தன்னுணர்வின் என்றது தனக்குரிய பெண்மையுணர்வினால் என்றவாறு. ஆற்றவும் - மிகவும். ஆனியம் - (ஆநியம்) நாள்; பகலுமாம்; "பயங்கெழு வெள்ளிய ஆநிய நிற்ப" எனவரும் பதிற்றுப் பத்தானும் அஃது அப் பொருட்டாதலறிக. (௩௩0)

வேறு

௩௩௧. மட்டவிழ் கோதை வாளன வுண்கண் மயிலன்னாள்
கட்டழ லெவ்வங் கைம்மிக நீக்கிக் களிகூர
விட்டகல் வாற்று வேட்கையி னோடும் பொழுதிப்பாற்
பட்டதை யெல்லாம் பல்லவர் கேட்கப் பகர்குற்றேன்.

(இ - ள்.) மட்டு அவிழ் கோதை வாள் அன உண்கண் மயில் அன்னாள் - தேன் விரியும் மலர்மாலையும் வாளனைய மை தீட்டிய கண்களும் மயிலனைய மென்மையும் உடையாளாகிய சுநந்தையின்; கட்டு அழல் எவ்வம் கைம்மிக நீக்கிக் களிகூர - மகனை யிழந்த பெரு நெருப்பனைய துன்பத்தைச் சிறிதுமின்றிப் போக்கிக் களிப்பு மிகுதலால்; விட்டு அகல்வு ஆற்று வேட்கையின் ஓடும்பொழுது இப் பால் - சுநந்தையே யன்றி மற்றோரும் நம்பியை விட்டு நீங்குதலை விரும்பாத காதலுடன் கழிந்த அவ் விராப் பொழுதுக்குப் பிறகு; பட்டதை எல்லாம் பல்லவர் கேட்கப் பகர்கு உற்றேன் - நம்பிக்கு நேர்ந்ததை யெல்லாம் எல்லோரும் கேட்குமாறு கூறுவேனாகத் தொடங்கினேன்.

(வி - ம்.) அகல்வு - அகற்சி. வேட்கையின் : இன் : சாரியை. பகர்கு : தன்மை யொருமை வினைமுற்று.

['என்றது தம்மால் சரிதம் கூறுதல் அரிதாகலின், இனி வேட்கை யால் கடுகக் கழியும் பொழுது என்றுமாம்' என்று கூறுகிறார் நச்சினார்க் கினியர்.]

ஈண்டு "என்றது......பொழுதென்றுமாம்" என்றுள்ள நச்சினார்க் கினியர் விளக்கம் நன்கு தெளியத் தோன்றவில்லை. அது "என்றது தம்மாற் சரிதம் கூறுதல் அரிதாகவும் வேட்கையினாலே (ஓடும் பொழு திப்பால்) கடுகக் கழியாநின்ற அப்பொழுதிற்கு இப்பால் பட்டதை எல்லாம் பகர்குற்றேன் என்றார்" என்னும் கருத்துடையதாக இருத்தல் வேண்டும் என்று தோன்றுகின்றது. (௩௩௧)

ந௲௧. கூற்றம் மஞ்சுங் கோன்னுனை யெஃகி னிளையானு
மாற்றம் மஞ்சும் மன்னிய கற்பின் மடவாளும்
போற்றித் தந்த புண்ணியர் கூடிப் புகழோனைச்
சீற்றத் துப்பிற் சீவக னென்றே பெயரிட்டார்.

(இ - ள்.) கூற்றம் அஞ்சும் கொல்நுனை எஃகின் இளையானும் - கூற்றுவனும் நடுங்கும் கொல்லும் முனையுடைய வேலேந்திய கந்துக் கடனும்; மாற்றம் அஞ்சும் மன்னிய கற்பின் மடவாளும் - கணவன் மொழிக்கு மறுத்துக் கூற அஞ்சும் பொருந்திய கற்பினையுடைய சுநந்தையும்; போற்றித் தந்த புண்ணியர் கூடி - விரும்பி அழைத்து வந்த சான்றோர் கூடி; சீற்றத்துப்பின் புகழோனை - சினவலிமையுடைய புகழோனை, சீவகன் என்றே பெயரிட்டார் - (தெய்வம் கூறியவாறு) சீவகன் என்றே பெயரிட்டழைத்தனர்.

(வி - ம்.) கொல்நுனை : வினைத்தொகை. ['மாற்றம் அஞ்சும் மன்னிய கற்பு' என்பதற்குச் 'சொல்லப்புகின், சொலும் அஞ்சும் கற்பு' என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.] சீவகன் சீவித்தலையுடையவனென்று தெய்வம் வாழ்த்தினமையின் அப் பெயரே ஆயிற்று.

மாற்றம் அஞ்சும் கற்பு என்பதற்கு, கற்பெனப்படுவது சொற்றிறம்பாமையேயாகலின், கணவன் சொற்றிறம்புதற்கு அஞ்சும் கற்பு என்றலே நேரிதாம். (௩௩௨)

௩௬௨. மேகம்மீன்ற மின்னனை யாடன் மிளிர்பைம்பூ
ணாகம் மீன்ற வம்முலை யின்பா லமிர்தேந்தப்
போகம் மீன்ற புண்ணிய னெய்த கணையேபோன்
மாகம் மீன்ற மாமதி யன்னான் வளர்கின்றான்.

(இ - ள்.) மேகம் ஈன்ற மின் அனையாள் தன் மிளிர் பைம்பூண் ஆகம் ஈன்ற - முகிலிடத்துத் தோன்றிய மின் போன்ற சுநந்தையின் விளங்கும் புத்தணி புனைந்த மார்பிடத்துத் தோன்றிய ; அம் முலை இன்பால் அமிர்து ஏந்த - அழகிய முலைகள் இனிய பாலாகிய அமுதத்தைக் கொடுக்க ; போகம் ஈன்ற புண்ணியன் - தான் சத்தியுஞ் சிவமுமாக இருந்து உலகிற்கு இன்பத்தை நல்கிய அருளாளன் ; எய்த கணையேபோல் - விட்ட அம்பான திருமால் ஆய்ப்பாடியில் நந்தகோன் மகனாக மறைய வளர்ந்ததுபோல ; மாகம் ஈன்ற மாமதி அன்னான் வளர்கின்றான் - விண்ணிலே தோன்றிய அழகுமிக்க பிறை போன்ற சீவகன் கந்துக்கடன் மகனாக வணிகர் இல்லத்திலே வளர்கின்றான்.

(வி - ம்.) 'புண்ணியன்' என்றார் திரிபுரத்தை அழித்தும் நஞ்சுண்டும் பல்லுயிர்களையுங் காத்தலின்.

மா - ஈண்டு அழகு. மதி - பிறை.

போகம் ஈன்ற புண்ணியன் என்றது திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளை. அவன் உலகிற்குப் போகமளித்தலை, "போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்" எனவும், "இடப்பாக மாதராளோ டியைந்துயிர்க் கின்பம் என்றும் அடைப்பானும்" எனவும் வரும் சிவஞானசித்தியாரானும் (சுபக். எ0-எஅ) உணர்க.

கணை - திருமால். விரிசடைக் கடவுள் திரிபுரம் எரித்தகாலைத் திருமால் கணையாக விருந்தான் என்பது புராணம். (௩௩௩)

௩௩௪. அம்பொற் கோம்பி னாயிழை யைவர் நலனோம்பப்
பைம்பொற் பூமிப் பல்கதிர் முத்தார் சகடம்முஞ்
செம்பொற் றேரும் வேழமு மூர்ந்து நிதிசிந்தி
நம்பன் செல்லு நாளினு நாளு நலமிக்கே.

(இ - ள்.) அம் பொன் கொம்பின் ஆயிழை ஐவர் நலன் ஓம்ப - அழகிய பொற்கொடி யனைய அணிகலன் அணிந்த ஐவகைச் செவிலியரும் எல்லா நலத்தையும் போற்றிக் காக்க; பைம் பொன் பூமி - புதிய பொன்னாலமைந்த நிலத்திலே; பல்கதிர் முத்து ஆர் சகடமும் - பல ஒளிவிடும் முத்துக்களால் ஆன வண்டியையும்; செம்பொன் தேரும் - செம்பொன்னாலான தேரினையும்; வேழமும் - பொன்னாற் செய்த யானையையும்; ஊர்ந்து - செலுத்தி; நிதி சிந்தி - பொன்னை நல்கி; நாள் நாளும் - நாடோறும்; நலம்மிக்கு - அழகு மிகுந்து; நம்பன் செல்லும் - சீவகன் வளர்வானானான்.

(வி - ம்.) ஐவர்: பாராட்டுவாள், பாலூட்டுவாள், தாலாட்டுவாள், சொல் கற்பிப்பவள், கையில் ஏந்தி வளர்ப்பவள். குழவிப் பருவத்தும் கொடை யியல்பாகையால், 'நிதி சிந்தி' என்றார். நாளின்: இன்: சாரியை. (௩௩௪)

௩௩௫. பல்பூம் பொய்கைத் தாமரை போன்றும் பனிவானத்
தெல்லார் கண்ணு மின்புற வூரு மதிபோன்றுங்
கோல்லுஞ் சிங்கக் குட்டியும் போன்றிவ் வுலகேத்தச்
செல்லும் மன்னோ சீவகன் றெய்வப் பகைவென்றே.

(இ - ள்.) பல்பூம் பொய்கைத் தாமரை போன்றும் - பல மலர்கள் நிறைந்த பொய்கையிலே தாமரை மலர் போன்றும்; பனிவானத்து எல்லார் கண்ணும் இன்பு உற ஊரும் மதி போன்றும் - குளிர்ந்த வானிலே யாவர் கண்களுங் களிப்புற இயங்கும் திங்கள் போன்றும்; கொல்லும் சிங்கக்குட்டி போன்றும் - கொல்லும் சிங்கக் குருளை போன்றும்; இவ் வுலகு ஏத்த - இவ் வுலகம் புகழ; தெய்வப்பகை வென்று - தெய்வங்களாற் குழந்தைகட்குண்டாகுந் தீங்கில்லாமல்; சீவகன் செல்லும் - சீவகன் வளர்கின்றான்.

(வி - ம்.) சீவகனுடன் வளரும் பல தோழமைச் சிறுவர்களிற் சிறந்தமையின் தாமரை மலர் உவமம். உடன் வளர்வோர் சீதத்தன், புத்திசேனன், பதுமுகன், தேவதத்தன் எனும் நால்வரும், சச்சந்த னுடைய அகப்பரிவார மகளிராகிய ஐந்நூற்றுவர் மக்கள் ஐந்நூற்றுவரும் ஆகியோர். கட்டியங்காரன் வருத்துவதால் அஞ்சிய இவர்களின் பெற்றோர்கள் இவர்களைக் கந்துக்கடனிடம் விடுத்து வளர்க்க வேண்டினர் என்பர். இவர்களிற் சச்சந்தன் அமைச்சரில் ஒருவனான சாகர னுக்கும் குருதத்தைக்கும் மகன் சீதத்தன். சச்சந்தன் படைத்தலைவன் அசலனுக்கும் திலோத்தமைக்கும் பிறந்தவன் புத்திசேனன். சச்சந்தன் நண்பனான தனபாலன் என்னும் வணிகனுக்கும் பவித்திரைக்கும் பிறந்தவன் பதுமுகன். சச்சந்தனின் மற்றொரு நண்பன் விசயதத்தனுக் கும் பிரீதிமதிக்கும் தோன்றியவன் தேவதத்தன்.

['வானிடத்துத் தேவர் முதலாயினாரிடத்தும் இன்பமுறப் பரக்கின்ற மதியாவது அறிவு; அது ஒரு வடிவு கொண்டாற் போன்றும்' என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.]

'குட்டியும் பறழுங் கூற்றவண் வரையார்' (தொல் - மரபு - க0) என்றதனுள், 'கூற்று' என்றதனாற், புலி முதலியவற்றிற்குக் கூறிய இளமைப் பெயர் சிங்கத்திற்குங் கொண்டார். தெய்வப் பகை - 'வால சிகிச்சை' யென்னும் நூலிற் கூறிய தெய்வப் பகை. (ருருரு)

ருசுரு. மணியும் முத்தும் மாசறு பொன்னும் பவளம்மும்
அணியும் பெய்யும் மாரியி னேற்பார்க் கவைநல்கிக்
கணிதம் மில்லாக் கற்பகங் கந்துக் கடனொத்தான்
இணைவே லுண்க ணந்தையு மின்பக்கோடியொத்தாள்.

(இ - ள்.) மணியும் முத்தும் மாசு அறு பொன்னும் பவள மும் அணியும் அவை - மணி முதலியவைகளை; பெய்யும் மாரி யின் - பெய்கின்ற முகில் போல; ஏற்பார்க்கு நல்கி - இரப்ப வர்க்குக் கொடுத்து; கந்துக்கடன் கணிதம் இல்லாக் கற்பகம் ஒத்தான் - கந்துக்கடன் அளவில் அடங்காத கற்பகத்தைப் போன் றான்; இணை வேல் உண்கண் நந்தையும் இன்பக் கொடி ஒத்தாள் - இணையாகிய வேலனைய, மைதீட்டிய கண்களையுடைய சுநந்தையும் அக் கற்பகத்திற் படரும் 'காமவல்லி' போன்றாள்.

(வி - ம்.) கற்பகம் வேண்டின பிறகே நல்கும்; மாரி வேண் டாமலே நல்கும். கந்துக்கடன் இரண்டையும் இவ் விருவகைக் கொடை யாலும் ஒத்தான். [கணிதம் இல்லாக் கந்துக்கடன் எனக் கூட்டுவர் நச்சினார்க்கினியர்.] சுநந்தை: தலைக்குறையாக 'நந்தை' என வந்தது. இது குடுமி வைத்தற்கு முன்புள்ள கருமங்களிலும் நாடொறும் நடத்துங் கருமங்களிலும் கொடைக்கடன் அமர்ந்தமை கூறினார். (ருருசு)

ருசுசு. சாதிப் பைம்பொன் றன்னொளி
வேளவித் தகைகுன்று
நீதிச் செல்வம் மேன்மே
னீந்தி நிறைவெய்திப்

போதிச் செல்வம் பூண்டவ
ரேத்தும் போலிவின்ஞ
லாதிக் காலத் தந்தணன்
காதல் மகனேத்தான்.

(இ - ள்.) சாதிப் பைம்பொன் தன் ஒளி வௌவி-உயர்ந்த புதிய பொன்னின் ஒளியைக் கவர்ந்து; நீதிச் செல்வம் மேன்மேல் நீந்தி - ஒழுங்காகிய செல்வத்தை மேலும் மேலும் அறிந்து; நிறைவு ஏய்தி-கல்விக்குரிய பருவம் நிறைந்து; போதிச் செல்வம் பூண்டவர் ஏத்தும் பொலிவினல் - அறிவாகிய செல்வத்தை அடைந்தவர் போற்றும் மேம்பாட்டினல்; ஆதிக்காலத்து அந்தணன் காதல் மகன் ஒத்தான் - முதற்காலத்து நான்முகனுக்குக் காதல் மகனுன சுவாயம்பு மனுவைப் போன்றுன்.

(வி - ம்.) 'சாதிப் பைம்பொன் தன்னெளி வௌவி' என்றதனுல் மெய்யொளியும் நிறமும் உண்டாயினமையைக் கூறினர். அந்தணன் மகன்: இயல்பான அறிவிற்கு உவமை. இனித், தீர்த்தங்கரரில் ரிஷபஸ்வாமி மகன் பரதராச சக்கரவர்த்தி யென்றும் உரைப்பர்.

நிறைவு எய்தி (கல்விகற்கும் பருவம் நிறைந்து.) என்றதனுற் கற்பதற்குமுன் ஒழுக்கமும் இயற்கை யறிவும் அமைய வேண்டுமென்பது கருத்தாயிற்று.

'நீதிச் செல்வம் நீந்தி மேன்மேல் நிறை வெய்தி' என்று மொழி மாற்றி, 'சௌளச்சடங்கு கடந்து, நாமகளைப் புணரும் பருவம் முறையே நிறைந்து' என்று பொருள் கூறி, 'க்ஷத்திரியனுக்கு வைதிகம் வேண்டுதலின், சௌளத்திற்கு முன்புள்ள கன்மமும் சௌளமுங் கூறினமையான், மேலும் உபநயனம் முதலியனவும் விரியக் கூருராயினும் அவ்விடங்களிலே குறிப்பான் உணர்க.' என்று விளக்கங் கூறுவர் நச்சினர்க்கினியர். நாமகளைப் புணரும் பருவம் - கல்வி கற்கும் பருவம். (௩௩எ)

வேறு

௩௬எ. நனந்தலை யுலகின் மிக்க
நன்னுதன் மகளிர் தங்கண்
மனந்தளை பரிய நின்ற
மதலைமை யாடு கேன்றே
போனங்கோடி யிறைஞ்சி நின்று
பூமகள் புலம்பி வைக
வனங்கனுக் கவலஞ் செய்யும்
அண்ணனற் ருயு ரைத்தாள்.

(இ - ள்.) அனங்கனுக்கு அவலம் செய்யும் - காமனுக்குத் துன்பமூட்டும்; அண்ணல் நற்ருய் பொன் அம் கொடி இறைஞ்சி

நின்று - சீவகனின் நற்றாய் (சுநந்தை) பொற்கொடி போல வணங்கி நின்று; நனம்தலை உலகில் மிக்க நன்னுதல் மகளிர் - பரவிய இடமுடைய உலகிலே மேம்பட்ட விறல் மடந்தையும் புகழ் மடந்தையும்; தங்கள் மனம் தளை பரிய - (இவனை அடையாமையால்) தங்கள் மனத்திற் குவிந்திருக்கும் வருத்தம் நீங்க; நின்ற மதலை மை ஆடுக என்று - இனி முறையே இருக் கின்ற மையோலை பிடிக்க என்று; பூமகள் புலம்பி வைக உரைத் தாள் - திருமகள் தனித்திருக்கக் கூறினாள்.

(வி - ம்.) இது சுநந்தையின் தொழிலாதலின் அவள் சான்றோ ரிடம் கூறினள். செல்வச் செருக்கின்றிக் கலை கற்கவேண்டுமாதலின், 'பூமகள் புலம்பி வைக' என்றார். பல நூல்களைக் கற்கவே வெற்றியும் புகழுமுண்டாம் என்று, 'தளைபரிய மையாடுக' என்றனள்.

இனி, இச்செய்யுளில் பூமகள் என்பதனை நிலமகள் என்று கொண்டு கோற்றும் பெற்றிலேன் என்று புலம்பிக்கிடப்ப எனினுமாம். மையாடல்-மையோலை பிடித்தல்; கற்கத் தொடங்குங்காற் செய்வதொரு சடங்கு. இதனை இக்காலத்தார் சுவடி தூக்கல் என்பர். (௩௩அ)

௩சுஅ. முழவெனத் திரண்ட திண்டோண்
மூரிவெஞ் சிலையி னானும்
அழலெனக் கனலும் வாட்க
ணவ்வளைத் தோளி னாளு
மழலையாழ் மருட்டுந் தீஞ்சொன்
மதலையை மயிலஞ் சாயற்
குழைமுக ஞான மென்னுங்
குமரியைப் புணர்க்க லுற்றார்.

(இ - ள்.) முழவு எனத் திரண்ட திண்தோள் மூரி வெஞ் சிலையினானும் - முழவு போலத் திரண்ட திண்ணிய தோளையும் பெரிய கொடிய வில்லையும் உடைய கந்துகனும்; அழல் எனக் கனலும் வாள்கண் அவ்வளைத் தோளினாளும் - நெருப்பெனக் கனலைச் சொரியும் வாளனைய கண்களையும் அழகிய வளைத்தோள் களையும் உடைய சுநந்தையும்; யாழ் மருட்டும் மழலைத் தீஞ் சொல் மதலையை-யாழையும் மருட்டும் இனிய மழலைச் சொற்களை யுடைய சீவகச் சிறுவனுக்கு; மயில் அம் சாயல் குழைமுக ஞானம் என்னும் - மயிலனைய மென்மைத் தன்மையையும் குழையணிந்த முகத்தையுமுடைய கலை என்னும்; குமரியைப் புணர்க்கல் உற்றார் - கன்னியை மணமுடிக்கத் தொடங்கினர்.

(வி - ம்.) 'குழை முகஞான மென்னுங் குமரி' என்பது 'குழையப் பண்ணுகின்ற முகமுடைய ஞானமென்னுங் குமரி' என்னும் பொருளையுந் தோற்றுவித்தது. குழைவு-அருள். கலை எப்போதும் அழிவற்றதாகலின்,

'குமரி' என்றார். [நச்சினார்க்கினியரோ, "வேறு தன் கருத்தறிவார் இன்றி இவனே தன் கருத்தறியத் தான் அழியா திருத்தலின் 'குமரி' என்றார்" என்பர்.]

'மதலையைக் குமரியைப் புணர்க்கலுற்றார்' என்பது, 'சாத்தனை நூலைக் கற்பிக்கலுற்றார்' என்றாற் போல நின்றது. (௩௩௯)

௩௪௰. அரும்பொனு மணியு முத்துங்
காணமுங் குறுணி யாகப்
பரந்தெலாப் பிரப்பும் வைத்துப்
பைம்பொன்செய் தவிசி னுச்சி
யிருந்துபொன் னோலை செம்பொன்
னூசியா லெழுதி யேற்பத்
திருந்துபோற் கண்ணி யாற்குச்
செல்வியைச் சேர்த்தி னாரே.

(இ - ள்.) அரும்பொனும் மணியும் முத்தும் காணமும் குறுணி ஆகப் பரந்த - அரிய பொன்னும் மணியும் முத்தும் பொற்காசும் குறுணி என்னும் அளவாகப் பரப்பிய; எலாப் பிரப்பும் வைத்து - எல்லாப் பிரப்பரிசிகளையும் வைத்து; பைம் பொன் செய் தவிசின் உச்சி இருந்து - புதிய பொன்னாலான இருக்கையின் மேலே ஆசிரியன் மாணவன் முதலியோர் அமர்ந்து; திருந்து பொன் கண்ணியாற்கு - அழகிய பொன்மாலை அணிந்த சீவகனுக்கு; பொன் ஓலை செம் பொன் ஊசியால் எழுதி - பொன் ஓலையிலே பொன் ஊசியால் எழுதி; செல்வியை ஏற்பச் சேர்த்தினர் - நாமகளை அவன் ஏற்குமாறு புணர்த்தனர்.

(வி - ம்.) பிரப்பு-தெய்வத்திற்குப் படைத்தற்பொருட்டு ஒவ்வொன்றும் குறுணியளவிற்றாகக் கூடையிலிட்டு வைக்கும் பொன் அரிசி முதலியன. "சில்பலிச் செய்து பல்பிரப்பு இரீஇ" (உ௩௪) என்றார், திருமுருகாற்றுப்படையினும். ஆசிரியன் முதலியோர் என எழுவாய் வருவித்தோதுக. மனங்கொள்ளுவகை என்பார் ஏற்ப என்றார். கண்ணியான்: சீவகன். செல்வி - நாமகள். (௩௪0)

௩௭0. நாமக ளலத்தை யெல்லா
நயந்துடன் பருகி நன்னூ
லேமுத லாய வெல்லாப்
படைக்கலத் தொழிலு முற்றிக்
காமனுங் கனிய வைத்த
புலங்கரை கண்டு கண்ணார்
பூமகள் பொலிந்த மார்பன்
புலமிசைத் திலக மொத்தான்.

(இ - ள்.) கண் ஆர் பூமகள் பொலிந்த மார்பன்-கண்ணுக்கு நிறைந்த, திருமகள் தங்கிய மார்பனை சீவகன்; நாமகள் நலத்தை எல்லாம் நயந்து உடன்பருகி - நாமகளின் அழகை யெல்லாம் விரும்பிச் சேரக் கற்று; நல்நூல் ஏ முதலாய எல்லாப் படைக்கலத் தொழிலும் முற்றி - நல்ல படைக்கல நூல்களிற் கூறியவாறு அம்பு முதலாகிய எல்லாப் படைக்கலப் பயிற்சிகளை யும் முற்றக் கற்று; காமனும் கனிய வைத்த புலம் கரை கண்டு - காமனும் உளமுருகுமாறு அமைத்த இசையையும் கரைகண்டு; புவிமிசைத் திலகம் ஒத்தான் - நிலமகள் நெற்றியில் திலகம் போன்றான்.

(வி - ம்.) சொல்லாற் கூறுவன எல்லாம் அடங்குதற்கு, 'எல்லாம்' என்றார். ['பருகி' எனவே தன் குலத்திற்குரிய வேதமும் அதிகரிக்க வேண்டுதலின் ஈண்டே உபநயனமுங் கூறினர். இது, 'சாம கீத மற்று மொன்று சாமி நன்கு பாடினன்' (சீவக - உ0௩அ) என்பதனானும் பிறவற்றானும் உணர்க'-நச்சி.] புலம் - அறிவு. அது நூலுக்கானதால் காரிய ஆகுபெயர்.

இசை கூறவே கூத்தும் அடங்கும். முன் நூல்களைக் கற்றதற் கேற்பத் தொழில்களைக் கற்றானென்றார்.

நாமகணலம் - கலையழகு. நயந்துடன் பருகி என்றதனால் பருகுவார் அன்ன ஆர்வமுடையராய்க் கற்கும் தலைமாணாக்கர் தன்மை யுடையனாய் என்பது போதரும். கலை உணர்ச்சியால் நுகர்வதாகலின் பருகி என்றார். காமனுங் கனியவைத்த புலம் என்றது இசையையும் நாடகத்தையும். பூமகள் பொலிந்த மார்பன் நாமகள் பொலிந்த உளத்தனாய்த் திலகம் ஒத்தான் என்க. (௩௬௧)

௩எக. மின்றெளித் தெழுதி யன்ன
விளங்குநுண் ணுசுப்பி னல்லார்
பொன்றெளித் தெழுதி யன்ன
பூம்புறப் பசலை மூழ்கிக்
குன்றொளித் தொழிய நின்ற
குங்குமத் தோளி னாற்குக்
கன்றொளித் தகல வைத்த
கறவையிற் கனிந்து நின்றார்.

(இ - ள்.) மின் தெளித்து எழுதி அன்ன விளங்கும் நுண் நுசுப்பின் நல்லார் - மின்னை நிலைபெற நிற்கத் தெளிவித்து அதனிடத்தே மகளிர் உறுப்புக்களை எழுதிவைத்தாற் போல விளங்கும் நுண்ணிடை மகளிர்; பொன் தெளித்து எழுதி அன்ன பூம்புறப் பசலை மூழ்கி-பொன்னைத் தெளித்து எழுதினாற் போன்ற தம் பொலிவுடைய மெய்யிலே தோன்றிய பசலையில் மூழ்கி; குன்று ஒளித்து ஒழிய நின்ற குங்குமத் தோளினாற்கு

மலைமறைந்து நீங்க நின்ற, குங்குமம் அணிந்த தோளையுடைய சீவகனை எண்ணி ; கன்று ஒளித்து அகல வைத்த கறவையின் கனிந்து நின்றார் - கன்றை மறைத்துப் பாலுண்ணாமற் வைக்கப் பட்ட பசுவைப் போல அன்பிலே கனிந்து நின்றார்.

(வி - ம்.) 'மின் தெளித்து எழுதி அன்ன நுசுப்பின் நல்லார்' என்பது, 'தெளித்த சொல் தேறியார்க்கு' (குறள் - ககஙச) என்றாற் போல வந்தது. இனி மின்னைக் கரைத்தெழுதி அன்ன நல்லாருமாம். புறம் - தம் மெய்யிடம்.

இதனாற் குலக் கன்னியரைக் கூறினார்.

குன்று ஒளித்தொழிய நின்றதோள் - இவற்றை ஒவ்வேமென்று மலைகள் மறைந்துபோதற்குக் காரணமான திண்மையும் பெருமையு முடைய தோள் என்க. கறவை - கற்றா. (௬சஉ)

௬எஉ. விலைபகர்ந் தல்குல் விற்கும்
வேலினும் வெய்ய கண்ணார்
முலைமுகந் திளையர் மார்பம்
முரிவில ரெழுதி வாழுங்
கலையிகந் தினிய சொல்லார்
கங்குலும் பகலு மெல்லாஞ்
சிலையிகந் துயர்ந்த திண்டோட்
சீவகற் கரற்றி யாற்றார்.

(இ - ள்.) அல்குல் விலை பகர்ந்து விற்கும் வேலினும் வெய்ய கண்ணார் - அல்குலை விலை கூறி விற்றற் குரிய வேலினுங் கொடிய களவுறு கண்ணினரும், இளையர் மார்பம் முகந்து முரிவிலர் எழுதி வாழும் கலை யிகந்த இனிய சொல்லார் - இளைய ருடைய மார்பினை முலையினால் முகந்து நீங்காமல் எழுதி வாழும், கலையினைக் கற்ற இன்மொழியாரும் ; கங்குலும் பகலும் எல்லாம் சிலை யிகந்து உயர்ந்த திண்டோள் சீவகற்கு அரற்றி ஆற்றார் - இரவும் பகலுமாகிய எல்லாக் காலங்களிலும், விற்கலையைக் கற்று உயர்ந்த திண்ணிய தோளான் சீவகனை நினைத்து அழுது ஆற்றா ராயினர்.

(வி - ம்.) அல்குல் விற்குங் கண்ணார் - அல்குலை விற்றற்குக் காரணமான கண்ணார்: இவர்கள் பரத்தையரிற் கன்னியர். இனிய சொல்லார்: போகம் நுகரும் பரத்தையர்.

இவர்கள் இற்பரத்தையரும் சேரிப்பரத்தையரும். இற்பரத்தையர் மட்டும் ஒருவனுக்கே உரியர் ; காமக்கிழத்தியர் என்றுங் கூறப்படுவர். மற்றவர் (சேரிப்பரத்தையர்.) யாரையும் விரும்புவோர் ; வரைவின் மகளிர்.

வேலினும் வெய்யகண் என்றது அல்குல் விற்றற்குக் குறிப்பேது வாய் நின்றது. 'களவு குடிகொள்ளும் கண்' என்ற நச்சினார்க்கினியர் விளக்கத்திற்குரிய சொற்கண்டிலேம். மூரிவிலர் : முற்றெச்சம். கலை யிகந்து என்புழி இகந்து என்பதனை இகந்த எனத் திரித்துக்கொள்க. (௩௪௩)

௩௭௩. வான்சுவை யமிர்த வெள்ளம்
வந்திவண் டொக்க தென்னத்
தான்சுவைக் கொண்ட தெல்லாந்
தணப்பறக் கொடுத்த பின்றைத்
தேன்சுவைத் தரற்றும் பைந்தார்ச்
சீவக குமர னென்ற
ஊன்சுவைத் தொளிரும் வேலாற்
குறுதியோன் றுரைக்க லுற்றான்.

(இ - ள்.) வான் சுவை அமிர்தம் எல்லாம் வந்து இவண் தொக்கது என்ன - வானவருண்ணும் சுவைதரும் அமிர்தம் எல்லாம் இங்கு வந்து குவிந்தாற் போன்று; தான் சுவைக் கொண்டது எல்லாம்-தான் சுவைத்துக் கொண்டதை யெல்லாம்; தேன் சுவைத்து அரற்றும் பைந்தார்ச் சீவக குமரன் என்ற - வண்டுகள் தேனைச் சுவைத்து முரலும் புதிய தாரணிந்த சீவகன் என்னும்; ஊன் சுவைத்து ஒளிரும் வேலாற்கு - ஊனைச் சுவை பார்த்து விளங்கும் வேலேந்தியவனுக்கு; தணப்பு அறக்கொடுத்த பின்றை - தடையின்றிக் கொடுத்தபிறகு; உறுதி ஒன்று உரைக்க லுற்றான் - நலமொன்றைக் கூறத் தொடங்கினான் ஆசிரியன்.

(வி - ம்.) கொண்ட தெல்லாம் : ஒருமைப் பன்மை மயக்கம். ['வான்சுவை அமிர்தவெள்ளம் வந்து இவண் தொக்கதென்ன உறுதி யொன்றுரைக் கலுற்றான்' என்றுங் கூட்டலாம் என்பர் நச்சினார்க் கினியர்.]

இச்செய்யுள் கலையின்பத்திற்கு அழகான உவமை எடுத்துக் கூறு கின்றது. கலையைச் சுவையமிர்தம் எனவே அதனை நுகர்வோர் 'அவி புணவின் ஆன்றாரோடொப்பர்' எனவும், தான் சுவைக்கொண்ட தெல்லாம் எனவே, 'தாமின்புறுவது' எனவும் வரும் வள்ளுவர் அருள் வாக்கு நினைவில் முகிழ்க்கின்றன. (௩௪௪)

௩௭௪. நூனெறி வகையி னோக்கி
நுண்ணிதி னுழைந்து தீமைப்
பானெறி பலவு நீக்கிப்
பருதியங் கடவு ளன்ன

கோனெறி தழுவி நின்ற
குணத்தொடு புணரின் மாதோ
நானெறி வகையி னின்ற
நல்லுயிர்க் கமிர்த மென்றான்.

(இ - ள்.) நூல் நெறி வகையின் நோக்கி நுண்ணிதின் நுழைந்து - ஆகமங் கூறிய வழியினால் நன்மை தீமையை ஆராய்ந்து கூறிய பொருளினிடம் நெஞ்சு சென்று ; தீமைப் பால் நெறி பலவும் நீக்கி - தீய பகுதியான வழியெல்லாம் நீக்கி ; பருதி அம் கடவுள் அன்ன கோன் நெறி - ஞாயிறன்ன அருகப் பெருமானது நெறியை ; தழுவி நின்ற குணத்தொடு புணரின் - பொருந்தி நின்ற பண்புடன் கூடினால் ; நால்நெறி வகையில் நின்ற நல்லுயிர்க்கு அமிர்தம் என்றான் - நால்வகை நெறியிலே அமைந்த நல்ல உயிர்கட்கு ஆக்கம் என்றான்.

(வி - ம்) நிறத்தாலும் இருள் நீக்கத்தாலும் ஞாயிறு உவமை. குணம் : இரத்தினத்திரயம். அவை : நல்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம். நானெறி : நரகர், விலங்கு, மக்கள், தேவர் ஆகிய உயிர்கள் செல்லும் நெறி. நல்லுயிர் - வீடு பேறு விழையும் உயிர். இதனைப் 'பவ்விய சீவன்' என்பர் வடநூலார்.

நூல்நெறி - இறைவன் ஓதிய ஆகமவழி. இச்செய்யுள்,

"சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு." (குறள், ௪௨௨)

என்னுமருமைத் திருக்குறளை நினைப்பிக்கின்றது. (௩௪௬)

௩௪௭. அறிவினாற் பெரிய நீரா
ரருவினை கழிய நின்ற
நெறியினைக் குறுகி யின்ப
நிறைகட லகத்து நின்றார்
பொறியெனும் பெயர வைவாய்ப்
பொங்கழ லரவின் கண்ணே
வெறிபுலங் கன்றி நின்றார்
வேதனைக் கடலு ணின்றார்.

(இ - ள்.) அறிவினால் பெரிய நீரார் அருவினை கழிய நின்ற நெறியினைக் குறுகி - அறிவினால் உயர்ந்த பண்பினர் தீவினை நீங்கி நின்ற நன்னெறியினைக் கூடி ; இன்ப நிறை கடல் அகத்து நின்றார் - இன்பம் நிறைந்த கடலிலே நின்றாராவர். பொறி எனும் பெயர ஐவாய்ப் பொங்கு அழல் அரவின் கண்ணே - ஐம்பொறிகள் என்னும் பெயரையுடைய ஐவாயினும் பொங்கும்

நஞ்சினையுடைய பாம்பினிடத்தே; வெறிபுலம் கன்றி நின்றார் வேதனைக் கடலுள் நின்றார் - களிப்பை ஊட்டும் புலன்களிலே அடிப்பட்டு நின்றவர்கள் துன்பக் கடலிலே நின்றாராவர்.

(வி - ம்) தீவினை கழிய நின்ற நெறியைச் 'சன்மார்க்கம்' என்றும், இன்ப நிறைகடலை, 'அனந்தசுகம்' என்றும் வடநூல்கள் கூறும். 'நிறைக்கடல்' என்று பாடமாயின் இன்பப் பெருக்கினையுடைய கடல் என்க.

பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. புலம் - சுவை ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. அழல்-நஞ்சு; உவமையாகு பெயர்.

நூஎசு. கூற்றுவன் கொடிய னாகிக்
கோலைத்தொழிற் கருவி சூழ்ந்து
மாற்றரும் வலையை வைத்தான்
வைத்ததை யறிந்து நாமு
நோற்றவன் வலையை நீங்கி
நுகர்ச்சியி லுலக நோக்கி
யாற்றுறப் போத றேற்றா
மளியமோஒ பெரிய மேகாண்.

(இ - ள்.) கூற்றுவன் கொடியன் ஆகிக் கொலைத் தொழில் கருவி சூழ்ந்து - கூற்றுவன் கொடுமையுடையவனாகிக் கொலைத் தொழிலுக்குரிய கருவிகளை ஆராய்ந்து; மாற்ற அரும் வலையை வைத்தான்-நீக்க முடியாத வலையை வைத்துள்ளான்; வைத்ததை நாமும் அறிந்து நோற்று - அதனை அறிவுடைய நாமும் அறிந்து தவம்புரிந்து; அவன் வலையை நீங்கி - அவன் வலைக்குத் தப்பி; நுகர்ச்சிஇல் உலகம் நோக்கி - இதற்குமுன் துய்த்தறியாத உலகமான வீட்டை நோக்கி; ஆறு உறப்போதல் தேற்றாம் - வழிக் கொண்டு செல்லுதலைத் தெளியோம்; அளியம் ஓஒ பெரியம் காண் - இரங்கத் தக்க நாம் பெரியோம்காண்.

(வி - ம்.) கருவி: ஐயும் பித்தும் வளியும் ஆகிய (வலைகட்டும்) வார்கள். வலை: வாழ்நாளைத் தரும்வினை. ஓஒ பெரியம்: இகழ்ச்சி. (கூசஎ)

நூஎஎ. பேரஞ ரிடும்பை யெல்லாம்
பிளந்திடும் பிறப்பு நீக்கு
மாரமிர் தரிதிற் பெற்றா
மதன்பயன் கோட றேற்றா
மோருமைம் பொறியு மோம்பி
யுளபகல் கழித்த பின்றைக்
கூரெரி கவரும் போழ்திற்
கூடுமோ குறித்த வெல்லாம்.

(இ - ள்.) பேர் அஞர் இடும்பை எல்லாம் பிளந்திடும் பிறப்பு நீக்கும்ஆர் அமிர்து அரிதின் பெற்றும் - பெருந் துன்பங்களை யெல்லாம் நீக்கற்குக் காரணமான, பிறப்பினைப் போக்குகின்ற நிறைந்த அமிர்தமான மக்கள் யாக்கையை அருமையாக அடைந்தோம்; அதன் பயன் கோடல் தேற்றும் - எனினும் அவ்வுடம்பின் பயனைக் கொள்ள அறிகின்றிலேம்; ஒரும் ஐம்பொறியும் ஓம்பி உளபகல் கழிந்த பின்றை - ஆராய்கின்ற ஐம்பொறிகளையும் ஐம் புலன்களாலே பேணி நமக்குரிய நாளெலாம் கழிந்த பிறகு; கூர் எரி கவரும் போழ்தின் குறித்த எல்லாம் கூடுமோ? - மிக்க நெருப்பு நம் யாக்கையைப் பற்றும் பொழுது நினைத்த அறம் யாவும் செய்யக் கூடுமோ?

(வி - ம்.) அமிர்து: ஆகுபெயர்; பிறவிப்பிணி போக்கலான் மக்கள் யாக்கையை அமிர்து என்றார். பிளந்திடும் அமிர்து, நீக்கும் அமிர்து எனத் தனித்தனி கூட்டுக. ஒரும் என்னும் செய்யும் என்முற்று முன்னிலைக்கண் வாராமையான் ஒரும் எனப் பிரித்து ஓர்ந்து பாரும் என்று பொருள் கோடல் நேரிதன்று. (உசஅ)

உஎஅ. தழங்குரன் முரசிற் சாற்றித்
தத்துவந் தழுவல் வேண்டிச்
செழுங்களி யாளர் முன்ன
ரிருளறச் செப்பி னாலு
முழங்கழ னரகின் மூழ்கு
முயற்சிய ராகி நின்ற
கொழுங்களி யுணர்வி னாரைக்
குணவதங் கொளுத்த லாமோ.

(இ-ள்.) தத்துவம் தழுவல் வேண்டி-எல்லோரும் உண்மையைப் பற்றல் வேண்டி; செழுங்களியாளர் முன்னர் தழங்குகுரல் முரசின் சாற்றி இருள் அறச் செப்பினும் - முழங்கும் ஒலியுறு முரசினைப் போலத் தெளிவாக மயக்கம் நீங்கச் செப்பினும்; முழங்கு அழல் நரகின் மூழ்கும் முயற்சியர் ஆகி நின்ற-முழங்கும் அழலையுடைய நரகிலே மூழ்கும் முயற்சியுள்ளவராகி நிற்கின்ற; கொழுங்களி உணர்வினாரை - மிகுந்த மயக்க வுணர்வினரை; குணவதம் கொளுத்தலாமோ? - பண்பாகிய விரதத்திலே ஈடுபடுத்த முடியுமோ? (முடியாது).

(வி - ம்.) தழங்கு குரல்: தழங்குரல் என விகாரப்பட்டது. செழுங்களி: தரிசன மோகனீயப் பிரகிருதிகள் எழும். அவை: அநந்தானுபந்திக் குரோதம், அநந்தானு பந்திமானம், அநந்தானுபந்தி மாயை, அநந்தானுபந்தி லோபம், மித்தியாத்துவம், ஸம்மியக்மித்தியாத்துவம், ஸம்மியக்துவப் பிரகிருதி என்பன. இவை நரக கதியிற் செலுத்தும். குணவதம்: வதம் - விரதம்; பகுதிப் பொருள் விகுதி.

௩௭௯. பவ்ழவாய்ச் செறுவு தன்னு
ணித்திலம் பயில வித்திக்
குழவிநா றெழுந்து காளைக்
கொழுங்கதி ரீன்று பின்னாக்
கிழவுதான் விளைக்கும் பைங்கூழ்
கேட்டிரேற் பிணிசெய் பன்மா
வுழவிர்காண் மேயுஞ் சீல
வேலியுய்த் திடுமி னென்றான்.

(இ - ள்.) உழவிர்காள் - வாழ்க்கை உழவர்களே!; பவழ வாய்ச் செறுவு தன்னுள் - பவழவாய் என்னும் கழனியிலே; நித்திலம் பயில வித்தி - முத்தினைப் பொருந்த வித்துதலால்; குழவி நாறு எழுந்து - குழவியாகிய நாற்றுத் தோன்றி; காளைக் கொழுங்கதிர் ஈன்று-காளைப் பருவமாகிய வளமிகு கதிரை நல்கி; பின்ஆ கிழவுதான் விளைக்கும் பைங்கூழ் கேட்டிரேல் - பின்னாக முதுமையை விளைவிக்கும் பயிரைப்பற்றிக் கேட்டீராயின்; பிணி செய் பன்மா மேயும் - நோயைச் செய்யுந் தீவினைகளாகிய பல விலங்குகள் அப்பயிரை மேய்ந்திடும்; சீல வேலி உய்த்திடுமின் என்றான் - அவை மேயாதவாறு ஒழுக்கமாகிய வேலியைக் கொண்டு சென்று அமைப்பீர்களாக என்று கூறினான்.

(வி - ம்.) பவழவாய்: கருத்தங்கும் பை; நித்திலம்: முத்துப் போன்ற விந்து.

செறுவு - கழனி. நித்திலம் போன்ற வித்தினை வித்தி என்க. பயனீனும் பருவமாதலால் காளைக் கொழுங்கதிர் என்றார். சீலம் - "தீந் தேனும் தெண்மட்டும் உயிர்க்குழாம் ஈண்டி நிற்றற்கு இடனாகும் ஊனும் இவை துறத்தல்."

"ஊன்சுவைத்து ஒளிறும் வேலாற்கு உரைக்கலுற்றான்" (௩௭௩)

என்று தொடங்கினர் ஆயினும் சீவகனோடிருந்த ஏனை மாணவரையும் உளப்படுத்தி உழவிர்காள் என்று விளித்தமைக்கு ஏற்ப உய்த்திடுமின் எனப் பன்மை கூறினர். "இளையவர் குழாத்தினீங்கி" (௩௮௩) என்பர் பின்னரும். (௩௭௯)

௩௮௦. சூழ்கதிர் மதிய மன்ன
சுடர்மணிப் பூணி னானும்
வீழ்தரு கதியி னீங்கி
விளங்குபொன் னுலகத் துய்க்கு
மூழ்வினை துரத்த லானு
முணர்வுசென் றெறித்த லானு
மாழ்கடற் புணையி னன்ன
வறிவரன் சரண டைந்தான்.

(இ - ள்.) வீழ்தரு கதியின் நீங்கி விளங்கு பொன் உலகத்து உய்க்கும் ஊழ்வினை தூரத்தலானும் - நரகிடை விழுதற்குக் காரணமான தீவழியிலிருந்து விலகி, விளங்குகின்ற பொன்மதிலையுடைய சமவசரணம் என்னும் அருகன் கோயிலிலே செலுத்தும் ஊழ்வினை தூண்டுவதாலும்; உணர்வு சென்று எறித்தலானும் - உணர்ச்சி சென்று திரும்பவும் அதன் மேற் பரவுதலானும்; ஆழ்கடல் புணையின் அன்ன அறிவரன் சரணடைந்தான் - ஆழமாகிய கடலுக்குத் தெப்பம் போன்ற அறிவனைச் சரண் என்று சேர்ந்தான்.

(வி - ம்.) கலைகள் நிறைதலாற் சீவகனுக்கு மதியுவமை. பூணினும்: உம்: உயர்வு சிறப்பு. பொன்னுலகு: பொன்னெயில் வட்டம் [சமவ சரணம் என்னும் சினாலயம்.] ஊழ்வினை : சாது சரண் ஆவதற்கு முன் செய்த நல்வினை. அத் தவத்தே பயின்றமையால், உணர்வு மீண்டும் அதன் மேற் சென்று பரவியது. (௩௯௧)

௩௯௨. காட்சிநன் னிலையின் ஞானக்
கதிர்மணிக் கதவு சேர்த்திப்
பூட்சிசா லொழுக்க மென்னும்
வயிரத்தாழ் கொளுவிப் பொல்லா
மாட்சியில் கதிக ளெல்லா
மடைத்தபின் வரம்பி லின்பத்
தாட்சியி லுலக மேறத்
திறந்தன னலர்ந்த தாரான்.

(இ - ள்.) அலர்ந்த தாரான் - மலர்ந்த மாலையான்; காட்சி நன்னிலையில் - காட்சியாகிய நிலையிலே; கதிர்மணிக் கதவு சேர்த்தி - அறிவாகிய கதவைச் சேர்த்து; பூட்சி சால் ஒழுக்கம் என்னும் வயிரத்தாழ் கொளுவி - மேற்கொண்டிருக்கும் ஒழுக்கமாகிய வயிரத்தாழைப் பொருத்தி; பொல்லா மாட்சிஇல் கதிகள் எல்லாம் அடைத்தபின் - தீய இழிந்த நெறிகளையெல்லாம் அடைத்தபிறகு; ஆட்சி இல் வரம்பு இல் இன்பத்து உலகம் ஏறத் திறந்தனன் - இதற்குமுன் ஆண்டிராத, எல்லையற்ற இன்பத்தையுடைய வீட்டுலகிற்குச் செல்ல வழி திறந்தான்.

(வி - ம்.) நிலையாக இருப்பதால் நிலை. பொருள்களைக் காத்தற்கு உலாவுதலிற் கதவு. காட்சியையும் ஞானத்தையும் விட்டு நீங்காமல் தகைத்தலின் தாழ். 'அலர்ந்த - புகழாற் பரந்த' என்றுமாம்.

காட்சி - நற்காட்சி. ஞானம் - நன்ஞானம். பூட்சி - மேற்கோள். ஒழுக்கம் - நல்லொழுக்கம். எனவே இரத்தினத்திரயம் ஆயிற்று. துன்பமல்லது தொழுதகவின்மையின் பிறப்பினை மாட்சியில்கதி என்றார். (௩௯௨)

௩௮௨. நல்லறத் திறைவ ளுகி
நால்வகைச் சரண மெய்தித்
தோல்லறக் கிழமை பூண்ட
தோடுகழற் காலி ளுற்குப்
புல்லற நெறிக்கண் நின்று
போருள்வயிற் பிழைத்த வாறு
மில்லறத் தியைபு மெல்லா
மிருளறக் கூறி யிட்டான்.

(இ - ள்.) நல் அறத்து இறைவன் ஆகி - நல்ல அறத்திற்கு உரியவனுகி ; நால்வகைச் சரணம் எய்தி - நால்வகைச் சரணங் களையும் அடைந்து ; தொல் அறக்கிழமை பூண்ட தொடுகழற் காலினற்கு - பழமையான தன் குலத்திற்குரிய அறத்திற்கு உரிமை யேற்ற கழலணிந்த காலினுனுக்கு ; புல் அற நெறிக்கண் நின்று பொருள்வயின் பிழைத்தவாறும் - தீநெறி செல்வோர் தாம் நடத்திய இழிந்த இல்லற நெறியாலே வீடுபேற்றை இழிந்த படியும் ; இல்லறத்து இயல்பும் - வீடுபேறு தப்பாமல் இல்லறம் நடத்தும் இயல்பும் ; எல்லாம் இருள் அறக் கூறியிட்டான் - பிறவற்றையும் மயக்கம் நீங்க விளம்பினன்.

(வி - ம்.) நால்வகைச் சரணம்: அருக சரணம், சித்த சரணம், சாது சரணம், தன்ம சரணம்.

இதனல், தேவர் இல்லறத்திலிருந்தே வீடுபேறெய்துதல் கூடும் என்னும் கொள்கையுடையராதல் உணரலாம். இக்கொள்கை,

" சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் உலகிற்
சருவசங்க நிவிர்த்திவந்த தபோதனர்கள் இவர்கள்
பாக்கியத்தைப் பகர்வதுஎன் இம்மையிலே உயிரின்
பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவ ரன்றே
ஆக்குமுடி கவித்தரசாண் டவர்கள்அரி வையரோடு
அநுபவித்தங் கிருந்திடினும் அகப்பற்றற் றிருப்பர்
நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற் றாலும்
நுழைவர்பிறப் பிணின்வினைகள் நுங்கி டாவே."

(சிவ. சித். சுப. உ௮எ)

எனவரும் சைவசமயக் கொள்கையையே ஒத்திருத்தல் உணர்க. (௩௫௩)

௩௮௩. எரிமுயங் கிலங்கு வைவே
லிளையவர் குழாத்தி னீங்கித்
திருமுயங் கலங்கன் மார்பிற்
சீவகற் கோண்டு வேறு

விரிமலர்க் கண்ணி கட்டி
விழைதக வேய்ந்த போலுந்
தெரிமலர்க் காவு சேர்ந்து
பிறப்பினைத் தெருட்ட லுற்றான்.

(இ - ள்.) எரி முயங்கு இலங்கு வைவேல் இளையவர் குழாத்தின் நீங்கி - அனல் தழுவி விளங்கும் கூரிய வேலணிந்த இளைஞர்களின் குழுவிலிருந்து நீங்கி; திரு முயங்கு அலங்கல் மார்பின் சீவகன் வேறு கொண்டு - திருமகள் தழுவும், மாலையணிந்த மார்பினையுடைய சீவகனைத் தனியே அழைத்துச் சென்று; விரி மலர்க்கண்ணி கட்டி விழைதக வேய்ந்த போலும் - மலர்ந்த மலர்களைக் கண்ணியாகக்கட்டி விருப்பமுண்டாமாறு வேய்ந்தாற் போன்றமைந்த; தெரிமலர்க்காவு சேர்ந்து - விளங்கும் மலர்ப்பொழிலை அடைந்து; பிறப்பினைத் தெருட்டல் உற்றான் - (சீவகன்) பிறப்பினை (ஆசிரியன்) தெளிவிக்கத் தொடங்கினான்.

(வி - ம்.) இளையவர்: நபுல விபுலராகிய (சச்சந்தன் காமக் கிழத்தியர் மக்களாகிய) இருவரும், கந்துக்கடனுக்குச் சீவகன் கிடைத்த பின்னர் சுநந்தை வயிற்றிற் பிறந்த நந்தட்டனும் ஆகிய தம்பியரும், முற்கூறிய நால்வரும் ஐந்நூற்றுவரும் ஆகிய தோழரும் ஆவர்.

வேறுக்கொண்டு என மாறுக. ஆசிரியன் என்னும் எழுவாய் வருவித்தோதுக. (கூ௰௪)

கூஅ௫. பூவையுங் கிளியு மன்ன
ரோற்றெனப் புணர்க்குஞ் சாதி
யாவையு மின்மை யாராய்ந்
தந்தளிர்ப் பிண்டி நீழற்
பூவிய றவிசி னுச்சிப்
பொலிவினோ டிருந்த போழ்தி
லேவியல் சிலையி னானை
யிப்பொருள் கேண்மோ வென்றான்.

(இ - ள்.) பூவையும் கிளியும் மன்னர் ஒற்று எனப் புணர்க்கும் சாதி யாவையும் இன்மை ஆராய்ந்து - பூவை கிளி போன்ற அரசர்கள் ஒற்றாக விடும் சாதிகளெல்லாம் அக்காவின்கண் இல்லாத படியை ஆராய்ந்து; அம் தளிர்ப்பிண்டி நீழல் பூ இயல் தவிசின் உச்சி பொலிவினோடு இருந்த போழ்தில் - அழகிய தளிரையுடைய அசோகின் நீழலில் பூவால் அமைத்த இருக்கையின்மேல் ஆசிரியன் சிறப்புற அமர்ந்த பிறகு; ஏ இயல் சிலையினானை இப்பொருள் கேண்மோ என்றான் - அம்பு பயிலும்

வில்லினுனை இக் கதையைக் கேட்பாயாக என்று கூறத் தொடங்கினன்.

(வி - ம்.) பூவை - நாகண வாய்ப்புள். இன்னோரன்ன சாதி என்க. சிலையினுன் : சீவகன். (௩௫௫)

௩௫௬. வையக முடைய மன்னன்
சச்சந்த னவற்குத் தேவி
பைவிரி பசும்பொ னல்குற்
பைந்தொடி விசையை யென்பாள்
செய்கழல் மன்னன் றேர்ந்து
தேவியைப் பொறியிற் போக்கி
மையல்கோ ணெஞ்சிற் கல்லா
மந்திரி விழுங்கப் பட்டான்.

(இ - ள்.) வையகம் உடைய மன்னன் சச்சந்தன் - இவ்வுலகுடை மன்னன் சச்சந்தனென்பான்; அவற்குத் தேவி பைவிரி பசும்பொன் அல்குல் பைந்தொடி விசையை என்பாள் - அவனுக்குத் தேவி பாம்பின் படம் என விரிந்த, பசும்பொன் மேகலை சூழ்ந்த அல்குலையும் பைந்தொடியையும் உடைய விசயை எனப்படுவாள்; செய்கழல் மன்னன் தேர்ந்து - கழலணிந்த சச்சந்தன் தன் அமைச்சன் கட்டியங்காரனின் சூழ்ச்சியை அறிந்து; தேவியைப் பொறியில் போக்கி - தன் காதலியை மயிற் பொறியிலே தப்பிப் போகவிட்டு; மையல் கொள் நெஞ்சின் - மயக்கமுற்ற நெஞ்சினனை; கல்லா மந்திரி விழுங்கப்பட்டான் - அறிவற்ற மந்திரியினுற் கொல்லப்பட்டான்.

(வி - ம்.) பொன் - மேகலை (கருவியாகுபெயர்). தேர்ந்து - கனவிற்குப் பிறகு விசயையைப் போக விட எண்ணி. மையல் - 'தன்னை ஆக்கிய தார்ப் பொலி வேந்தனைக்' கொல்லுதல்.

சீவகன் கடைபோகக் கேட்கும்பொருட்டு இச்செய்தியைப் பழங்கதையொன்றனைக் கூறுமாறுபோலக் கூறினன் என்பது கருத்து. இக்கருத்தால் நின்தந்தை தாய் என்னுமல் சச்சந்தன் என்றும் அவற்குத் தேவி என்றும் ஏதிலார்போலக் கூறினன். கல்லா மந்திரி என்றது கட்டியங்காரனை. விழுங்கப்பட்டான் என்பதற்கேற்ப மந்திரிமாநாகத்தால் என்க. (௩௫௬)

௩௫௭. புலம்போடு தேவி போகிப்
புகற்கருங் காடு நண்ணி
வலம்புரி யுலகம் விற்கு
மாமணி யீன்ற தென்ன

விலங்கிழை சிறுவன் றன்னைப்
பயந்துபூந் தவிசி னுச்சி
நலம்புரி நங்கை வைத்து
நல்லறங் காக்க வென்றாள்.

(இ - ள்.) தேவி புலம்பொடு போகிப் புகற்கு அருங்காடு நண்ணி - விசயை வருத்தத்துடன் சென்று மக்களாற் புகுதற்கரிய சுடுகாட்டை அடைந்து; வலம்புரி உலகம் விற்கும் மாமணி ஈன்றது என்ன - வலம்புரிச் சங்கு உலகை விலைகொள்ளும் பெரிய முத்தினைப் பெற்றாற் போல; இலங்கு இழை சிறுவன் தன்னைப் பயந்து - விளங்கும் அணிகலனுடைய மகனைப் பெற; நலம்புரி நங்கை பூந்தவிசின் உச்சி வைத்து - அறம் விரும்பிய கூனியாகிய தெய்வம் அம் மகனை அழகிய தவிசின் மேல் வைக்க; நல் அறம் காக்க என்றாள் - விசயை நான் மேற் செய்யும் நோன்பு என் மகனைக் காப்பதாக என்று மனங் கொண்டாள்.

(வி - ம்.) வலம்புரி உவமை கூறவே தேவி மறைந்தமையும் உணர்த்தினார். விசயை நோன்பிலே யிருந்தமை ஆசிரியனாற் சீவகன் ஈண்டுணர்ந்தும் மேல் 'அடிகளும் உளரோ?' (சீவக - ௧அ௮௪) என்று இவன் கூறியது இதற்குப் பின்னரும் நீங்கின்றி யிருந்தமை கருதிப் போலும். (௩௦௭)

௩௦௮. வானத்தின் வழுக்கித் திங்கட்
கொழுந்துமீன் குழாங்கள் சூழக்
கானத்திற் கிடந்த தேபோற்
கடலக முடைய நம்பி
தானத்து மணியுந் தானு
மிரட்டுறத் தோன்றி னானே
யூனத்திற் றீர்ந்த சீர்த்தி
யுத்திரட் டாதி யானே.

(இ - ள்.) திங்கள் கொழுந்து வானத்தின் வழுக்கி - திங்களின் கொழுந்தாகிய பிறை வானத்திலிருந்து தவறி; மீன் குழாங்கள் சூழ - மீன் கூட்டங்கள் சூழ; கானத்தில் கிடந்ததே போல் - காட்டிற் கிடந்ததைப் போல; கடல் அகம் உடைய நம்பி - கடல் சூழ்ந்த வுலகத்தையுடைய நம்பி; ஊனத்தில் தீர்ந்த சீர்த்தி உத்திரட்டாதியான் - குற்றமற்ற சிறப்புடைய உத்திரட்டாதியிற் பிறந்தவன்; தானத்து மணியும் தானும் இரட்டுஉற - அந்த இடமாகிய சுடுகாட்டில் உள்ள மணிகளும் தானும் வேறுபட்டு விளங்க; தோன்றினான் - காண்குற்றான்.

(வி - ம்.) கொழுந்தென்றார் நாடோறும் வளர்தலின். ஊனம் - நாட்களுக்குள்ள தீங்கு.

தானம், இடம். அஃதாவது சுடுகாடு. மணிகளின் ஒளிமழுங்கத் தன்மேனி மிக்கு மிளிர என்பார் மணியும் தானும் இரட்டுற என்றார்.

உத்திரட்டாதியான்-உத்திரட்டாதி நாளிற் றோன்றியவன். (௩௦௮)

௩௦௯. அருந்தவன் முந்து கூற
வலங்கல்வே ளுய்கன் சென்று
பொருந்துபு சிறுவற் கொண்டு
பொலிவொடு புகன்று போகத்
திருந்திய நம்பி யாரத்
தும்மினன் றெய்வம் வாழ்த்திற்
றரும்பொனாய் கொண்மோ வென்றா
னலைகடல் விருப்பிற் கொண்டாள்.

(இ - ள்.) அருந்தவன் முந்து கூற - அரிய தவமுனி ஒருவன் முன்னர்க் கூறியதனால்; அலங்கல்வேல் நாய்கன் சென்று பொருந்துபு சிறுவற் கொண்டு - மாலை அணிந்த வேலையுடைய வணிகன் ஒருவன் இறந்த மகனோடு அங்கே சென்று தன் மகனைக் கிடத்திவிட்டு அச் சிறுவனைப் பொருந்தி எடுக்க; திருந்திய நம்பி ஆரத் தும்மினன் - விளக்கமுடைய அச் சிறுவன் நன்றாகத் தும்மினான்; தெய்வம் வாழ்த்திற்று - அச் சிறுவனைக் காத்திருந்த சுடுகாட்டுத் தெய்வம் வாழ்த்தியது; பொலிவொடு புகன்று போக - கேட்ட வணிகன் விளக்கமுற விருப்பமொடு எடுத்துச் சென்று; அரும்பொனாய்! கொண்மோ என்றான் - அரிய திருமகள் போன்றவளே! இதனைக் கொள்க என்றான்; அலைகடல் விருப்பிற் கொண்டாள் - அவளும் கடலைப் போன்ற விருப்பத்துடன் வாங்கிக் கொண்டாள்.

(வி - ம்.) கொண்டு - கொள்ள; போக - போய்: வினையெச்சத் திரிபுகள்.

நாய்கன் என்றது கந்துக்கடனை. (௩௦௯)

௩௧௦. கரியவன் கன்னற் கன்று
பிறப்பினைத் தேற்றி யாங்கப்
பெரியவன் யாவ னென்ன
நீயெனப் பேச லோடுஞ்
சொரிமலர்த் தாரும் பூணு
மாரமுங் குழையச் சோரத்
திருமலர்க் கண்ணி சிந்தத்
தெருமந்து மயங்கி வீழ்ந்தான்.

(இ - ள்.) கரியவன் கன்னற்கு அன்று பிறப்பினைத் தேற்றி யாங்கு - (இவ்வாறு) கண்ணன் கன்னனுக்கு முற்காலத் திற் பிறப்பினைத் தெளிவித்தாற் போல (ஒரு கதை முகத்தால் உணர்த்தியவுடன்); அப் பெரியவன் யாவன் என்ன - சீவகன் 'தங்களாற் கூறப்பட்டவன் யாவன்?' என்று வினவ, (ஆசிரி யனும்); நீ எனப் பேசலோடும் - நீ யென்று கூறினைக ; சொரி மலர்த் தாரும் பூணும் ஆரமும் குழையச் சோர-தேன் சொரியும் மாலையும் அணிகலனும் முத்துமாலையும் குழைந்து சோர ; திரு மலர்க்கண்ணி சிந்த - அழகிய மலர்க்கண்ணி சிதற ; தெருமந்து மயங்கி வீழ்ந்தான் - உள்ளங் கலங்கி மூர்ச்சித்து வீழ்ந்தான்.

(வி - ம்.) கண்ணி: முடிமாலை. பெரியவன்: அறிவினாற் பெரிய வன், சீவகன். பேசலோடும்: ஓடு: உடனிகழ்ச்சி.

'இவ்வாறு' எனவும் 'உணர்த்தியவுடன்' எனவும் வருவிக்க. அன்பு மிகுதியான் மூர்ச்சை முந்திற்று. மூர்ச்சை - கையாறு.

கரியவன் - கண்ணன். அன்று - பண்டைக்காலத்திலே. தேற்றி யாங்கு தேற்ற என ஒருசொல் வருவித்துக்கொள்க. தெருமந்து - சுழன்று. (௩௯0)

௩௯0. கற்பகங் கலங்கி வீழ்ந்த
வண்ணம்போற் காளை வீழச்
சொற்பகர் புலவன் வல்லே
தோன்றலைச் சார்ந்து புல்லி
நற்பல குழீஇய தம்மா
னவையறத் தேற்றத் தேறிக்
கற்புனை திணிதிண் டோளான்
கவலைநீர்க் கடலுட் பட்டான்.

(இ - ள்.) கற்பகம் கலங்கி வீழ்ந்த வண்ணம் போல் காளை வீழ - கற்பகம் நிலைகுலைந்து வீழ்ந்த தன்மை போலச் சீவகன் விழுதலாலே ; சொல் பகர் புலவன் வல்லே தோன்றலைச் சார்ந்து புல்லி - 'சொலல் வல்ல' ஆசிரியன் விரைந்து சீவகனைச் சேர்ந்து தழுவி ; நல்பல குழீஇய தம்மால் நவை அறத் தேற்ற - சந்தனம் முதலிய கூட்டுப் பொருள்களாற் செய்த குழம்பினாற் சோர்வு நீங்கத் தேற்றியவுடன் ; கல்புனை திணிதிண் தோளான் தேறி - கற்றூண் போன்ற அணி செயப்பட்ட திண்ணிய தோளினன் தெளிந்து ; கவலை நீர்க்கடலுள் பட்டான் - கவலைக் கடலிலே வீழ்ந்தான்.

(வி - ம்.) சீவகன் வண்மையிற் சிறந்தவன் ஆதலின் அவன் நிலை குலைந்து வீழ்ந்ததற்குக் கற்பகத்தை உவமையாகக் காட்டினர். (௩௯௧)

௩௬௧. இனையைநீ யாய தெல்லா
மெம்மனோர் செய்த பாவ
நினையனீ நம்பி யென்று
நெடுங்கணீர் துடைத்து நீவிப்
புனையிழை மகளிர் போலப்
புலம்பனின் பகைவ னின்று
னினைவெலா நீங்கு கென்ன
நெடுந்தகை தேறி னானே.

(இ - ள்.) நம்பி நீ இனையை ஆயது எல்லாம் எம்மனோர் செய்த பாவம் - நம்பியே நீ இந்நிலையினை ஆனதெல்லாம் எம் போல்வார் செய்த தீவினை ; நீ நினையல் என்று - நீ (சென்றதை) நினையாதே என்று ; நெடுங்கண் நீர் துடைத்து நீவி - நீண்ட கண்களினின்று வடியும் நீரைத் துடைத்து, மெய்யைத் தடவிக் கொடுத்து ; நின் பகைவன் நின்றான் - நின் பகைவன் இருக்கிறான் (ஆதலின்) ; புனை இழை மகளிர் போலப் புலம்பல் - அணிகலன் அணிந்த பெண்களைப் போல வருந்தாதே ; நினைவு எலாம் நீங்குக என்ன - எல்லாக் கவலைகளையும் விடுக என்று (ஆசிரியன் தேற்ற) ; நெடுந்தகை தேறினான் - சீவகன் தெளிந்தான்.

(வி - ம்.) 'நீர்துடைத்து' என்றது அரற்று (யாது செய்வேனென்றல்). 'நினைவெலாம்' என்றது அவலம் (வருத்தம்). இங்ஙனம் அவலம், கவலை, அரற்று, கையாறு என்னும் நான்கு மெய்ப்பாடும் கூறப் பட்டமை தெளிக. 'எம்மனோர் செய்த பாவம் நீங்குகை காரணமாக நினையல்' என்றும் ஆம். (௩௬௨)

௩௬௨. மலைபக விடிக்குஞ் சிங்க
மடங்கலின் முழங்கி மாநீ
ரலைகடற் றிரையிற் சீறி
யவனுயிர் பருக லுற்றுச்
சிலையொடு பகழி யேந்திக்
கூற்றெனச் சிவந்து தோன்று
மிலையுடைக் கண்ணி யானை
யின்னணம் விலக்கி னானே.

(இ - ள்.) அவன் உயிர் பருகல் உற்று - கட்டியங்காரன் உயிரை உண்ண விரும்பி ; மலைபக இடிக்கும் சிங்க மடங்கலின் முழங்கி - மலை பிளக்கத் தகர்க்கும் சிங்கக்குட்டி போல முழங்கி ; மாநீர் அலைகடல் திரையின் சீறி-பெரிய நீர்ப்பரப்பான கடலலை போல ஆர்த்து ; சிலையொடு பகழி ஏந்தி - வில்லையும்

கணையையும் எடுத்துக்கொண்டு; கூற்று எனச் சிவந்து தோன்றும் இலையுடைக் கண்ணியானை - கூற்றுவன் போல முகஞ் சிவந்து நின்ற இலை மிடைந்த மலர்க் கண்ணியானை ; இன்னணம் விலக்கினான் - இவ்வாறு கூறித் தடுத்தான்.

(வி - ம்.) தந்தையைக் கொன்றவனைக் கொல்லாமை விலக்கல் அருமையின் மேற்கூறுகின்ற கூற்றான் விலக்கினமை தோன்ற, 'இன்னணம்' என்றார்.

[நச்சினார்க்கினியர் 'சிங்கமடங்கலிற் சீறி' எனவும் 'திரையின் முழங்கி' எனவும் மாற்றிக் கூட்டுவர்] (௩௬௩)

௩௬௪. வேண்டுவ னம்பி யானோர்
விழுப்பொரு ளென்று சொல்ல
வாண்டகைக் குரவிர் கொண்மின்
யாதுநீர் கருதிற் றென்ன
யாண்டுநே ரெல்லை யாக
அவன்றிறத் தழற்சி யின்மை
வேண்டுவ லென்று சொன்னான்
வில்வலா னதனை நேர்ந்தான்.

(இ - ள்.) நம்பி யான் ஓர் விழுப்பொருள் வேண்டுவல் என்று சொல்ல - நம்பியே! யான் ஒரு துன்பந்தரும் பொருளை விரும்புகிறேன் என்று கூற; ஆண் தகைக் குரவிர்! நீர் கருதிற்று யாது? கொண்மின் என்ன-'பெருந்தகை ஆசிரியரே! நீவிர் கருதியது யாது? அதனைக் கொள்ளுக' என்று சீவகன் வினவ; அவன் திறத்து யாண்டு நேர் எல்லை ஆக அழற்சியின்மை வேண்டுவல் - கட்டியங்காரன் குலத்தளவில் ஓர் யாண்டின் அளவாகச் சீற்றமின்மையை விரும்புவேன் ; என்று சொன்னான் - என்று விலக்கிக் கூறினான் ; வில்வலான் அதனை நேர்ந்தான் - சீவகன் உடன்படற்கரிய அதனை ஒப்பினான்.

(வி - ம்.) 'என்று கூற' எனவும் பாடம்.

வேண்டுவல் : அல் ஈற்றுத் தன்மைச் சொல்; சந்தியால் னகரம் வந்தது. இர் ஈறு, 'கேளிர் வாழியோ' (குறுந் - உ௮0) என்றாற் போல இயல்பாய் நின்று விளியேற்றது. ஆண்டகைமை கூறிற்று, கொலையை விலக்குவரோ என்று அஞ்சிக் கற்பித்த முகத்தான்; இதனால் அரசனென்று ஆசிரியனைச் சீவகன் உணர்ந்தானாயிற்று. திறம் - குலம். வல்லான் : எதிர்மறை யாகாது உலக வழக்காய் உடன்பாடு உணர்த்திற்று. இது மேலும் கொள்க. கொள் + மின் = கொண்மின் என ளகரம் ணகரமாகத் திரிந்தது. இது மின் விகுதி பெற்ற முன்னிலையேவலொருமை வினைமுற்று. (௩௬௪)

௩௬௪. வெவ்வினை வெகுண்டு சாரா விழுநிதி யமிர்த மின்னீர்
கவ்விய வெஃகி னின்ற கயக்கமி னிலைமை நோக்கி
யவ்விய மகன்று போங்கு மழற்படு வெகுளி நீக்கி
யிவ்விய லொருவற் குற்ற திற்றெனக் கிளக்க லுற்றான்.

(இ - ள்.) அழல் படு வெகுளி நீக்கி - சீவகனுக்கு வந்த வெய்ய சினத்தை இங்ஙனம் மாற்றி; அவ்வியம் அகன்று-மனக் கோட்டம் இன்றி; வெவ்வினை வெருண்டு சாரா விழுநிதி அமிர்தம் - தீவினையை வெகுண்டதனால் அது சாராத சிறந்த நிதியாகிய அமிர்தம்; எஃகு கவ்விய இன்னீரின் நின்ற - இரும்பு உண்ட இனிய நீரைப்போல நின்ற; கயக்கம் இல் நிலைமை நோக்கி - கலக்கம் அற்ற நிலைமையைப் பார்த்து; ஒருவற்கு உற்றது இவ்வியல் இற்று எனக் கிளக்கல் உற்றான் - ஒருவனுக்கு நேர்ந்ததான இத் துன்பம் இத் தன்மையானது என்று இயம்ப லுற்றான்.

(வி - ம்.) அமிர்தம்: இரத்தினத்திரயம். 'இவ்வியல் ஒருவன்' என்று தன்னைப் பிறன்போல் கூறினான், தன்மேல் அன்பால் வருந்து வன் என்று கருதி. மற்றும், சீவகன் மெய்யுணர்தலின் தன்னை விலக்கா னென்று இக்கதை கூறுகிறான். (௩௬௪)

௩௬௫. வானுறை வெள்ளி வெற்பின்
வாரண வாசி மன்ன
னூனுறை பருதி வெள்வே
லுலோகமா பால னென்பான்
றேனுறை திருந்து கண்ணிச்
சிறுவனுக் கரசு நாட்டிப்
பானிறக் குருகி னாய்ந்து
பண்ணவர் படிவங் கொண்டான்.

(இ - ள்.) வான் உறை வெள்ளி வெற்பின் வாரணவாசி மன்னன் - வானுலகில் உள்ள வெள்ளிமலையில் வாரணவாசி யென்னும் ஊரின் மன்னனாகிய; ஊன் உறை பருதி வெள்வேல் உலோக மாபாலன் என்பான் - ஊன் தங்கிய, ஞாயிறு போன்ற வெள்ளிய வேலேந்திய உலோக மாபாலன் என்பவன்; தேன் உறை திருந்து கண்ணிச் சிறுவனுக்கு அரசு நல்கி - தேன் பொருந்திய அழகிய கண்ணியை உடைய மகனுக்கு அரசினைக் கொடுத்துவிட்டு; பால் நிறக் குருகின் ஆய்ந்து - வெண்ணிற அன்னம் போல ஆராய்ந்து (தீமையை விலக்கி நன்மையைக் கொண்டு); பண்ணவர் படிவம் கொண்டான் - தவத்தினர் வடிவம் கொண்டான்.

(வி - ம்.) பருதிபோற் பகையாகிய இருளைக் கெடுக்கும் வேல். உலோகமா பாலன்: மா: வியங்கோளசையன்றி இசை நிறைத்து நின்றது; புறனடையான் வந்தது (தொல். இடை. சஅ); 'ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே' (புறநா - கசுங) என்றாற்போல. (ஙஙசு)

ஙஙசு. வெஞ்சினங் குறைந்து நீங்க
விழுத்தவந் தொடங்கி நோற்கும்
வஞ்சமில் கொள்கை யாற்குப்
பாவம்வந் தடைந்த தாகக்
குஞ்சர முழங்கு தீயின்
கொள்கையின் மெலிந்திம் மூதூர்
மஞ்சுதோய் குன்ற மன்ன
மாடவீட் டகம்பு குந்தான்.

(இ - ள்.) வெம் சினம் குறைந்து நீங்க - கொடுஞ் சினம் குறைந்து நீங்கும்படி; விழுத்தவம் தொடங்கி நோற்கும் வஞ்சம் இல் கொள்கையாற்கு - சிறந்த தவத்தைத் தொடங்கி நோற்கும் தூய கொள்கையையுடைய அவனுக்கு; பாவம் வந்து அடைந்த தாக - தீவினைப் பயன் வந்து சேர்ந்ததாக; முழங்கு குஞ்சரத் தீயின் - தணிவற்ற யானைத்தீ என்னும் நோயால்; கொள்கையின் மெலிந்து - தவம்புரிய இயலாமற் பசியினால் வாடி; இம் மூதூர் - இப் பழம் பதியிலே; மஞ்சுதோய் குன்றம் அன்ன மாட வீட்டகம் புகுந்தான் - முகில் தவழும் மலையனைய மாடங்களின் இடையே நுழைந்தான். (ஙஙஎ)

ஙஙஎ. உரைவிளை யாமை மைந்தன்
கேட்கிய வுவந்து நோக்கி
வரைவிளை யாடு மார்பன்
யாரவன் வாழி யென்ன
விரைவிளை யாடுந் தாரோய்
யானென விரும்பித் தீம்பாற்
றிரைவிளை யமிர்த மன்ன
கட்டுரை செல்க வென்றான்.

(இ - ள்.) உரை விளையாமை மைந்தன் உவந்து கேட்கிய நோக்கி - கதை முடிவதற்கு முன்னரே சீவகன் மகிழ்வுடன் (ஐயம் நீங்க) கேட்பதற்கு நோக்கி; 'வரை விளையாடும் மார்பன் யார் அவன் வாழி' என்ன - மலை தனக்கு நிகராகக் கருதி விளையாடும் மார்பினனாகிய அவன் யார்? அவன் வாழ்க!' என்று வினவ; 'விரை விளையாடும் தாரோய்! யான்' என - 'மணம்

உலவும் தாரினனே! அவன் யானே' என்று ஆசிரியன் கூற; விரும்பி - மேலே கேட்க விழைந்து; திரை விளை அமிர்தம் அன்ன கட்டுரை செல்க என்றான் - 'கடலில் விளைந்த அமிர்தம் போன்ற கதை மேலும் செல்வதாக' என்று சீவகன் வேண்டினான்.

(வி - ம்.) விளையாமை - முற்றுமுன்னர். கேட்கிய: செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். வரைவிளையாடும் மார்பன் என்றது மலையே தனக்கு நிகரென்று கருதி அதனோடு விளையாடுதற்குக் காரணமான மார்பையுடையன் என்றவாறு. விரை-நறுமணம். தீம்பால் திரை - பாற்கடல் (நூசுஅ)

நூசுஅ. பூத்தின்று புகன்று சேதாப்
புணர்முலை பொழிந்த தீம்பா
னீத்தறச் செல்ல வேவித்
தட்டவின் னமிர்த முண்பான்
பாத்தரும் பசும்பொற் றாலம்
பரப்பிய பைம்பொற் பூமி
யேத்தருந் தவிசி னம்பி
தோழரோ டேறி னானே.

(இ - ள்.) சேதா பூத்தின்று புகன்று புணர்முலை பொழிந்த தீம்பால் - சிவப்புப் பசு மலர்களைத் தின்று விருப்பத்துடன் முலைகளில் இருந்து பெய்த இனிய பால்; நீத்து அறச் செல்ல வேவித்து அட்ட இன் அமிர்தம் உண்பான் - முற்றும் வற்றிக் கலக்க வேகவைத்துச் சமைத்த இனிய அடிசிலை உண்பதற்கு; பாத்தரும் பசும்பொன் தாலம் பரப்பிய பைம்பொன்பூமி - தூய பசும் பொன் கலங்கள் பரப்பிய பொன் நிலத்திலே; ஏத்தருந் தவிசின் - புகழ்தற்கரிய இருக்கையிலே; நம்பி தோழரொடு ஏறினான் - சுந்துகன் தோழரோடு அமர்ந்தான்.

(வி - ம்.) சேதா: பண்புத்தொகை. பாத்தல் அரும்பசும் பொன் - (இனியும் குற்றமின்மையால்) பிரிக்கவியலாத பசும் பொன்: ஓட்டற்ற பொன். (நூசுகூ)

நூசுகூ. புடையிரு குழையு மின்னப்
பூந்துகில் செறிந்த வல்கு
னடையறி மகளி ரேந்த
நல்லமிர் துண்ணும் போழ்தி
னிடைகழி நின்ற வென்னை
நோக்கிப்போந் தேறு கென்றான்
கடல்கெழு பருதி யன்ன
பொற்கலத் தேனக்கு மிட்டார்.

(இ - ள்.) பூந்துகில் செறிந்த அல்குல் நடை அறி மகளிர் - அழகிய ஆடையணிந்த அல்குலையுடைய, உணவு படைக்கும் முறை யறிந்த பெண்கள்; புடை இரு குழையும் மின்ன ஏந்த - இருபுறத்திலும் குழைகள் ஒளிவிடக் கைகளில் ஏந்தி நிற்க; நல் அமிர்து உண்ணும் போழ்தின் - நல்ல உணவை உண்ணும்போது; இடைகழி நின்ற என்னை நோக்கி - இடைகழியிலே நின்ற என்னைக் (கந்துகன்) பார்த்து; போந்து ஏறுக என்றான் - வந்து அமர்க என்று கூறினான்; கடல்கெழு பருதி அன்ன பொன் கலத்து எனக்கும் இட்டார் - கடலில் தோன்றும் காலை ஞாயிறு போன்ற பொன் வட்டிலில் எனக்கும் உணவு படைத்தனர்.

(வி - ம்.) நடை என்றது சோறிடு முறைமையினை. இடைகழி - இல்லத்தில் ஒருறுப்பு; ரேழி என இக்காலத்தார் கூறுவதுமிது. (கூஎ0)

சு00. கைகவி நறுநெய் பெய்து
கன்னலங் குடங்கள் கூட்டிட்
பெய்பெயென் றுரைப்ப யானும்
பெருங்கடல் வெள்ளிக் குன்றம்
பெய்துதூர்க் கின்ற வண்ணம்
விலாப்புடை பெரிதும் வீங்க
வையன தருளி னல்யா
னந்தணர் தொழில னானேன்.

(இ - ள்.) கைகவி நறு நெய்பெய்து - (உணவிலே) போது மென்னும் அளவும் நல்ல நெய்யை வார்த்து; கன்னல் அம் குடங்கள் கூட்டிப் பெய் பெய் என்று உரைப்ப - சருக்கரைக் குடங்களைச் சேர்த்துப் பெய் பெய் என்று கந்துகன் (பணி மகளிர்க்குக்) கூற; (அவர்கள் சொரிதலின்) யானும் பெருங் கடல் வெள்ளிக்குன்றம் பெய்து தூர்க்கின்ற வண்ணம் - நானும் பெரிய கடலிலே வெள்ளி மலைகளைப் பெய்து தூர்ப்பதைப்போல; விலாப்புடை பெரிதும் வீங்க - விலாவின் பக்கம் பெரிதும் பருக்கத் (தூர்த்து); ஐயனது அருளினால் யான் அந்தணர் தொழிலன் ஆனேன் - கந்துகன் அருளால் யான் அந்தணர் போல உண்டு அமைந்தேன்.

(வி - ம்.) [ஐயன் - சீவகன் என்பர் நச்சினார்க்கினியர். 'ஐயனாகிய நின் அருளால்' என்பர்]

விரைவினால், 'பெய் பெய்' என்று அடுக்கி வந்தன. இது இக்கால வழக்கு. 'விரைசொல் அடுக்கே மூன்று வரம்பாகும்' (தொல்-எச்ச-உஅ.) அந்தணர் - அறவோர். இவர் தொழில் அமைதி அடைதல்.

கைகவி நறுநெய் - உண்போர் போதும் போதும் என்று கைகவித்து மறுக்குமளவும் பெய்யப்பட்ட நறிய நெய் என்றவாறு. "பூக்கமழ்

தேறல் வாக்குபு தரத்தர வைகல் வைகல் கைகவி பருகி" (கூள-அ) என்றார் பொருநராற்றுப்படையினும்.

'ஐயன்' என்பது சீவகனைக் குறிப்பதாகக் கோடலே காப்பியத்திற்குச் சிறப்பாகும். ஐயன் : முன்னிலைப் புறமொழி. (ருஎக)

சoக. சுரும்புடை யலங்கன் மாலைச்
சுநந்தையுந் துணைவன் றானும்
விரும்பின ரெதிர்கொண் டோம்ப
வேழவெந் தீயி னீங்கி
யிருந்தன னேம முந்நீ
ரெறிசுற வுயர்த்த தோன்றல்
கரும்புடைக் காளை யன்ன
காளைநின் வலைப்பட் டேன்றான்.

(இ - ள்.) சுரும்பு உடை அலங்கல் மாலைச் சுநந்தையும் துணைவன் தானும் - வண்டுகளையுடைய அசைதலையுடைய மாலை அணிந்த சுநந்தையும் கந்துக்கடனும்; விரும்பினர் எதிர்கொண்டு ஓம்ப - விரும்பி வரவேற்றுப்பேண; ஏமம் முந்நீர் எறி சுறவு உயர்த்த தோன்றல் கரும்புடைக் காளை அன்ன - காவலாகிய கடலில் துள்ளும் சுறாமீனை மேம்படுத்திய கொடியையுடைய தோன்றலாகிய, கரும்பை வில்லெனக் கொண்ட காளையைப் போன்ற; காளை நின் வலைப்பட்டு - காளையாகிய உன் தொடர்பிலே அகப்பட்டு; வேழ வெந்தீயின் நீங்கி இருந்தனன் என்றான் - கொடிய யானைத் தீயிலிருந்து நீங்கித் தங்கினேன் என்றான்.

(வி - ம்.) காளையின் வலையிற் பட்டதையும் யானைத் தீயினின்றும் நீங்கியதையும் மேல் வருவனவற்றால் அறியலாம்.

இவற்றை விளக்கிப் போகக் கருதியதனால், 'வலைப்பட்டு' என்றான்.

விரும்பினர் : முற்றெச்சம். வேழவெந்தீ - யானைத்தீ என்னும் நோய். ஏமமுந்நீர் - உலகிற்குப் பாதுகாவலாகிய கடல். எறிசுறவு: வினைத்தொகை. கரும்புடைக் காளை - காமன். காளை : அண்மைவிளி. (ருஎஉ)

சoஉ. நிலம்பொறுக் கலாத செம்பொ
னீணிதி நுந்தை யில்ல
நலம்பொறுக் கலாத பிண்டி
நான்முகன் றமர்கட் கெல்லா
மூலம்பொறுக் கலாத தோளா
யாதலா லூடு புக்கேன்
கலம்பொறுக் கலாத சாய
லவருழை நின்னைக் கண்டேன்.

(இ - ள்.) நிலம் பொறுக்கலாத செம்பொன் நீள் நிதி நுந்தை இல்லம் - நிலத்தினுற் கொள்ள வியலாத மிகுதியான செம் பொன் நிதியை உடைய நின் தந்தையின் இல்லம்; பொறுக்கலாத நலம் பிண்டி நான்முகன் தமர்கட்கு எல்லாம் - அளவற்ற நலந்தரும் அசோகின் நீழலில் அமர்ந்த அருகன் அடியவர்கட்கு எல்லாம் இல்லம்; ஆதலால், ஊடு புக்கேன் - ஆகையால், (தடையின்றி) உள்ளே சென்றேன்; உலம் பொறுக்கலாத தோளாய் - கற்றூணும் தாங்காத திண்ணிய தோளனே !; கலம் பொறுக்கலாத சாயலவருழை நின்னைக் கண்டேன் - அணியைத் தாங்க வியலாத மென்மையுடைய மகளிரிடையே நின்னைப் பார்த்தேன்.

(வி - ம்.) நிதி - திரள். எல்லா மூர்த்தமும் இவனாதலின், 'நான்முகன்' என்றார். மேலும், 'ஆதிவேதம் பயந்தோய் நீ' (சீவக-௯உ௪உ), 'மலரேந்து சேவடிய மாலென்ப' (சீவக. ௧௬௧0) என்பர்.

இல்லம் என்பதனைத் தமர்கட்கெல்லாம் என்பதன் பின்னரும் கூட்டுக. (௩௭௩)

௪0௩. ஐயனைக் கண்ணிற் காண

யானைத்தீ யதகங் கண்ட

பையணு ணாகம் போல

வட்கயான் பெரிது முட்கித்

தெய்வங்கோ லென்று தேர்வேற்

கமிர்துலாய் நிமிர்ந்த தேபோன்

மோய்குரன் முரச நாணுந்

தழங்குரன் முழங்கக் கேட்டேன்.

(இ - ள்.) ஐயனைக் கண்ணின் காண - நின்னைக் கண்ணுற் கண்டேனாக; அதகம் கண்ட பை அணல் நாகம் போல யானைத்தீ வட்க - மருந்தினைக் கண்ட படத்தையும் அணலையுமுடைய பாம்பின் நஞ்சு நீங்குதல் போல யானைத்தீ கெடுதலாலே; யான் பெரிதும் உட்கித் தெய்வங்கொல் என்று தேர்வேற்கு - யான் மிகவும் அஞ்சித் தெய்வமோ என்று ஆராய்வேற்கு; அமிர்து உலாய் நிமிர்ந்ததே போல் - அமிர்து நிமிர்ந்து உலாவியதுபோல்; மொய்குரல் முரசம் நாணும் தழங்குகுரல் முழங்கக் கேட்டேன்- செறிந்த ஒலியுடைய முரசம் நாணுமாறு ஒலிக்கும் மொழி முழங்கக் கேட்டேன்.

(வி - ம்.) 'ஐய நிற்கண்ணின்' என்றும் பாடம் (இப் பாடமே தக்கது.) 'தெய்வமோ' என்று ஐயுற்றபோது, 'மகனே யென்று தெளியக் குரல் முழங்கக் கேட்டேன்' என்றான். அதகம் - மருந்து. இது அகதம் என்றும் வழங்கும் எனத் தெரிகிறது. 'எரிதழல் விடத்தை - மலைமறை

அதகம் மாற்றி யாங்கு' (கல் - நிணமுயிருண்ட - அ). தழங்குரல்: தழங்குகுரல் என்பதன் விகாரம்.

'வேழவெந்தீயின் நீங்கி' என்றும், (௪0௧) 'யானைத்தீ வட்க' என்றும் (௪0௩) இருமுறை வருதலால், 'இவனிருக்கின்ற மனையாதலின் இவனைக் காண்பதற்கு முன்னே குறைந்து, இவனைக் கண்டபின் பொன்றக் கெட்டது' என்பர் நச்சினார்க்கினியர். (௩எ௪)

௪0௪. கோட்டிளந் திங்கள் சூழ்ந்து
குலவிய திருவிற் போல
மோட்டொளி முத்தஞ் சூழ்ந்து
முருகுகோப் புளிக்குந் தாரோய்
கேட்டளப் பரிய சொல்லுங்
கிளரொளி வனப்பு நின்னைச்
சேட்டிளஞ் சிங்க மன்னாய்
சாதகஞ் செய்த வென்றான்.

(இ - ள்.) கோடு இளந் திங்கள் சூழ்ந்து குலவிய திருவில் போல-இரு முனைகளையுடைய பிறைமதியைச் சூழ்ந்து விளங்கும் வானவில்லைப் போல; மோடு ஒளி முத்தம் சூழ்ந்து முருகு கொப்புளிக்கும் தாரோய் - பெருமைமிக்க ஒளிரும் முத்த மாலையைச் சூழ்ந்து தேனை உமிழும் மலர்மாலையாய்!; சேடு இளஞ் சிங்கம் அன்னாய்-பெருமையுடைய இளஞ் சிங்கம்போன்றவனே!; கேட்டு அளப்ப அரிய சொல்லும் கிளர் ஒளி வனப்பும் - கேட்டு அளவிடற்கியலாத சொல்லழகும் விளங்கும் மேனியழகும்; நின்னைச் சாதகம் செய்த என்றான் - நின் பிறப்பை அறிவித்தன என்று கூறினான்.

(வி - ம்.) கோடு - நுனி. திருவில் - வானவில். மோடு - பெருமை. முருகு - தேன். சேடு - பெருமை. சாதகம் - பிறப்பு. (௩எ௫)

௪0௫. கோளியங் குழுவை யன்ன
கோழுஞ்சிலை யுழவன் கேட்டே
தாளிய றவங்க டாயாத்
தந்தைநீ யாகி யென்னை
வாளியங் குருவப் பூணோய்
படைத்தனை வாழி யென்ன
மீளியங் களிற னையான்
மெய்ந்நெறி நிற்ப வென்றான்.

(இ - ள்.) கோள் இயங்கு உழுவை அன்ன கொடுஞ்சிலை உழவன் கேட்டு - கொலைத்தொழிலிலே பயிலும் புலியனைய,

கொடிய வில் ஏந்திய உழவனை சீவகன் அதனைக் கேட்டு; வாள் இயங்கு உருவப் பூணோய் - ஒளிவிடும் அழகு அணிகளையுடையாய்!; தாள் இயல் தவங்கள் தாய்ஆ தந்தைநீ ஆகி-முயற்சியால் பிறந்த தவங்கள் தாயாக, நீ தந்தையாகி; என்னைப் படைத்தனை வாழி என்ன - என்னை ஆக்கினை, வாழ்வாயாக என்று கூற; மீளி அம் களிறு அனாய்! யான் மெய்ந்நெறி நிற்பல் என்றான் - பெருமையுடைய அழகிய களிறு போன்றவனே! யான் உண்மையான தவநெறியிலே நிற்பேன் என்று ஆசிரியன் கூறினான்.

(வி - ம்.) நல்வினையால், இக் கலைகளைக் கற்றுத் தான் வேறொரு பிறப்பானமை கூறினான்.

தாயாக என்பது ஈறுகெட்டது. உழுவை - புலி. தாள் - முயற்சி. மெய்ந்நெறி - தவநெறி. நிற்பல் : தன்மை ஒருமை. (௩எ௬)

௪0௬. மறுவற மனையி னீங்கி
மாதவஞ் செய்வ லென்றாற்
பிறவற மல்ல பேசார்
பேரறி வுடைய நீரார்
துறவறம் புணர்க வென்றே
தோன்றறா டொழுது நின்றா
னறவற மலர்ந்த கண்ணி
நன்மணி வண்ண னன்னான்.

(இ - ள்.) நறவு அற மலர்ந்த கண்ணி நல் மணிவண்ணன் அன்னான் - நன்மணம் தன்னிடத்தே தங்க மலர்ந்த கண்ணியையுடைய நீல வண்ணனை கண்ணனைப் போன்ற சீவகன்; மறு அற மனையின் நீங்கி மாதவம் செய்வல் என்றால் - குற்றம் நீங்க மனையிலிருந்து நீங்கிப் பெருந்தவம் செய்வேன் என்றால்; பேரறிவு உடைய நீரார் பிற அறம் அல்ல பேசார் - பேரறிவு உடைய தன்மையோர் விலக்குஞ் சொற்களாகிய அறமல்லாதவற்றைக் கூறார்; துறவறம் புணர்க என்று தோன்றல் தாள் தொழுது நின்றான் - துறவறத்திலே செல்க என்று ஆசிரியன் தாளை வணங்கி நின்றான்.

(வி - ம்.) ஒருவன் துறப்பேன் என்றால் அறிவுடையோர் விலக்கார் ஆதலின், இவனும் அதற்கு உடன்பட்டானெனக் கவியின் கூற்றாகவும் ஆக்கலாம். ['பேரறிவுடைய நீரார் மாதவஞ் செய்வல் என்றால்' என்று கொண்டு கூட்டுவர் நச்சினார்க்கினியர்] (௩எஎ)

௪0எ. கைவரை யன்றி நில்லாக்
கடுஞ்சின மடங்க லன்னான்
றெவ்வரைச் செகுக்கு நீதி
மனத்தகத் தெழுதிச் செம்போற்

பைவிரி யல்கு லாட்கும்
படுகடல் நிதியின் வைகும்
மைவரை மார்பி னுற்கு
மனமுறத் தேற்றி யிட்டான்.

(இ - ள்.) கைவரை அன்றி நில்லாக் கடுஞ்சின மடங்கல் அன்னான்-ஒழுக்கத்தின் எல்லை கடவாத, கொடிய சீற்றமுடைய சிங்கம் போன்றவன்; தெவ்வரைச் செகுக்கும் நீதி மனத்தகத்து எழுதி - தன் பகைவரை அழிக்கும் முறைமையை அவன் மனத்திலே கொள்ளுமாறு உருவாக்கி; செம்பொன் பைவிரி அல்குலாட்கும் படுகடல் நிதியின் வைகும் மைவரை மார்பினுற்கும்-மேகலை அணிந்த அல்குலையுடைய சுநந்தைக்கும் கடல் போற் கிடக்கும் செல்வத்திலே தங்கிய, முகில் தங்கிய மலையனைய மார்பினன் கந்துகனுக்கும்; மனம் உறத் தேற்றி யிட்டான் - உள்ளத்திற் பொருந்துமாறு (தன் துறவைத்) தெளிவித்திட்டான். (௩௭௮)

௪௦௮. அழலுறு வெண்ணெய் போல
வகங்குழைந் துருகி யாற்றாள்
குழலுறு கிளவி சோர்ந்து
குமரனைத் தமிய னாக
நிழலுறு மதிய மன்னாய்
நீத்தியோ வெனவு நில்லான்
பழவினை பரிய நோற்பான்
விஞ்சையர் வேந்தன் சென்றான்.

(இ - ள்.) குழல் உறு கிளவி அழல் உறு வெண்ணெய் போல அகம் குழைந்து உருகி ஆற்றாள் சோர்ந்து - குழலனைய இனிய மொழியாள் (அவன் மொழி கேட்டு) தீயிற்பட்ட வெண்ணெய் போல உள்ளம் குழைவுற்று உருகிப் பொறாதவளாய்ச் சோர்வுற்று; நிழல் உறும் மதியம் அன்னாய் - ஒளி விடுந் திங்களைப் போன்றவனே!; குமரனைத் தமியன் ஆக நீத்தியோ எனவும் - சிறுவனைத் தனியனாம்படி துறந்தனையோ என்று வேண்டவும்; விஞ்சையர் வேந்தன் நில்லான் பழவினை பரிய நோற்பான் சென்றான் - விஞ்சையர் மன்னன் நில்லாதவனாகிப் பழைய வினை தீருமாறு தவஞ் செய்வதற்குச் சென்றான். (௩௭௯)

நாமகள் இலம்பகம் முற்றிற்று.

ஆகச் செய்யுட்கள் - ௪௦௮

# ௨. கோவிந்தையார் இலம்பகம்

## (கதைச் சுருக்கம்)

சீவகன் இவ்வாறிருக்கக் கட்டியங்காரனுடைய ஆனிரைகளை ஆயர் காட்டின்கண் மேய்த்தனராக; அவற்றை வேடர்கள் கவர்ந்து கொண்டு சென்றனர். ஆயர்கள் அவற்றை மீட்கும் மதுகையிலராய் ஓடிவந்து கட்டியங்காரனிடத்தே முறையிட்டனர். கட்டியங்காரன் சினந்து தன் மக்கள் நூற்றுவரையும், தன் மைத்துனன் மதனனையும் ஆனிரையை மீட்டுவரும்படி ஏவினன். அவரெல்லாம் அவ்வேடர்க்கு எதிர்நிற்றலாற்றாதவராய் வறிதே மீண்டனர். அஃதறிந்த கட்டியங்காரன் வாளாவிருந்தனன்.

ஆயர் தலைவனாகிய நந்தகோன் இச் செய்தியறிந்து பெரிதும் வருந்தி, இந்நிரையை வேடரை வென்று மீட்டு வருகின்றவனுக்கு என் மகளாகிய கோவிந்தையை அளிப்பேன் எனத் தெருத்தோறும் முரசறைவித்தனன். மறவர் பலரும் வேடர்க்கு அஞ்சி வாளா விருந்தனர். அஃதறிந்த சீவகன் சூளுரைத்துப் போர்க்கோலங் கொண்டு சென்று, அவ்வேடரொடு போர் செய்து அவரையெல்லாம் கொல்லாமல் அஞ்சி ஓடும்படி செய்தனன். சீவகன் நிரைமீட்டமை அறிந்த நந்தகோன் கோவிந்தையைச் சீவகனுக்குக் கொடுக்க முன்வந்தான். ஆயினும் சீவகன் அவ்வழகியைத் தான் ஏற்றுக்கொள்ளாமல், தன் தோழனாகிய பதுமுகனுக்கு மணஞ்செய்வித்தனன்.

௪௦௬. ஆர்வ வேரரிந் தச்ச ணந்திபோய்
வீரன் றாணிழல் விளங்க நோற்றபின்
மாரி மொக்குளின் மாய்ந்து விண்டொழச்
சோர்வில் கொள்கையான் றோற்றம் நீங்கினான்.

(இ - ள்.) அச்சணந்தி போய் ஆர்வ வேர் அரிந்து - அச்சணந்தி இராசமா புரத்தினின்றும் போய் ஆசையை வேர்களைந்து; வீரன் தாள் நிழல் விளங்க நோற்றபின் - ஸ்ரீவர்த்தமானரின் திருவடி நிழலில் விளங்குமாறு நோற்ற பிறகு; சோர்வு இல் கொள்கையான் - தளராத அக்கொள்கையால்; விண்தொழ மாரி மொக்குளின் மாய்ந்து - வானவர் தொழுமாறு; மழையினுண்டாம் நீர்க்குமிழி போல மாய்ந்து; தோற்றம் நீங்கினான் - பிறவியை விட்டான்.

(வி - ம்.) ஆர்வவேர்: பிறவிவேர். தாள் நிழலைச் 'சமவ சரணம்' என்பர் சைனர். ஸ்ரீ வர்த்தமானர்: சைன நூல்களிற் கூறப்படும்

தீர்த்தங்கரர்களில் இருபத்து நான்காவது தீர்த்தங்கரர். இவரை வீர ரென்றும் விளம்புவர். மொக்குளின் மாய்தலை வீடுபெறுங்கால் திரு மேனியுடனே மறைதல் என்பர் நச்சினார்க்கினியர்.

ஆர்வம்: ஆகுபெயர். வேர்போறலின் வேர் என்றார். அச்சணந்தி - சீவகன் நல்லாசிரியன். விண் : ஆகுபெயர் ; அமரர். தோற்றம்-பிறப்பு. (க)

சசo. நம்ப னித்தலை நாக நன்னகர்ப்
பைம்பொ னோடைசூழ் பரும யானையுஞ்
செம்பொ னீள்கொடித் தேரும் வாசியும்
வெம்ப வூர்ந்துலாம் வேனி லானினே.

(இ - ள்.) இத்தலை நாகம் நல்நகர் - இவ்வுலகில் வானவர் நகர் போலும் அழகிய இராசமா புரத்தே; நம்பன் - சீவகன்; பைம்பொன் ஓடை சூழ் பரும யானையும் - புதிய பொன்னாலான முகபடாம் அணிந்த யானையையும்; செம்பொன் நீள் கொடித் தேரும் - நீண்ட கொடியையுடைய பொற்றேரையும்; வாசியும் - குதிரையையும்; வேனிலானின் வெம்ப ஊர்ந்து உலாம்-காமனைப் போல மகளிர் வேட்கையால் வெதும்ப ஊர்ந்து உலாவுவான்.

(வி - ம்.) நம்பன் - எல்லோராலும் விரும்பப்படுபவன்; நம்பு என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த பெயர். "நம்பும் மேவும் நசையாகும்மே" என்பது தொல்காப்பியம் (உரி - ௩௧); நாகம் - பவண லோகம். இஃது இராசமாபுரத்திற்கு உவமை. உருபு தொக்கு நின்றது. ஓடை - முகபடாம். மகளிர் ஆசையால் வெதும்ப என்க. வேனிலான்- காமன். (உ)

வேறு

சசக. கலையின தகலமுங் காட்சிக் கின்பமுஞ்
சிலையின தகலமும் வீணைச் செல்வமு
மலையினி னகலிய மார்ப னல்லதிவ்
வுலகினி னிலையென வொருவ னாயினான்.

(இ - ள்) கலையினது அகலமும் - கலையின் பரப்பும்; காட்சிக்கு இன்பமும் - பார்ப்பதற்கு இன்பம் ஊட்டும் அழகும்; சிலையினது அகலமும்-படைக்கலப் பயிற்சியின் பரப்பும்; வீணைச் செல்வமும் - யாழுடன் பாடும் இசைச் செல்வமும்; மலையினின் அகலிய மார்பன் அல்லது - மலைபோல அகன்ற மார்பனை சீவகனல்லது; இவ்வுலகினின் இலையென - இவ்வுலகில் இல்லை யென்று கூற; ஒருவன் ஆயினான் - ஒப்பற்றவன் ஆயினான்.

(வி - ம்.) இவை சீவகற்குப் பதினையாண்டு சென்ற பின் நல்வினை யான் அமைந்த பண்புகள் என்பர் நச்சினார்க்கினியர். கலையினதகலம் - கல்வி காரணமாகப் பிறப்பதொரு ஞானம். காட்சிக்கின்பம் - அப்

பருவத்திலே பிறக்கும் அழகு. சிலையினது அகலம் - படைக்கலப் பயிற்சியால் அப்பருவத்திற் பிறக்கும் வீரம். வீணை - தாளத்துடன் கண்டத்திலும் கருவியினும் பிறக்கும் பாட்டு; இசை நாடகம் காமத்தை விளைத்தலின், அவற்றாற் பிறக்குங் காமத்தை, 'வீணைச் செல்வம்' என்றார். இனி, இவை முறையே நாமகள், அழகுத் தெய்வம், வீரமகள், மாதங்கி என்னும், இவர்கள் இவனல்லது வேறு யாங்களென்று இல்லையாம்படி ஆயினான் எனினும் ஆம். அரசர்க்கு இந் நான்கும் சிறந்தன.

இச் செய்யுளை அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்தே (க - ௩௬) மடவாரென்பதற்குப் "பூமாதும் கலைமாதும் சயமாதும் புகழ்மாதும் என்று கூறி இவர் அழகிற்கும் அறிவிற்கும் ஆண்மைக்கும் புகழுக்கும் பொறைக்கும் இவனென்று உட்கொண்டு ஏத்தும் கிழமையான் எனினும் அமையும்" என்று பொருள் விரித்து மேற்கோளாகக் காட்டுதலும் உணர்க. (௩)



௪௧௨ நாம வென்றிவே னகைகோள் மார்பனைக்
காம னேயெனக் கன்னி மங்கையர்
தாம ரைக்கணாற் பருகத் தாழ்ந்துலாங்
கோம கன்றிறத் தற்ற கூறுவாம்.

(இ - ள்.) நாமம் வென்றி வேல் நகைகொள் மார்பனை - அச்சந்தரும் வெற்றி வேலையும் முத்துவடத்தையுங் கொண்ட மார்பனை சீவகனை; காமனே என - காமனே யென்றெண்ணி; கன்னி மங்கையர்-கன்னித் தன்மையுடைய பெண்கள்; தாமரைக் கணாற் பருகத் தாழ்ந்து உலாம் - தாமரை மலரனைய கண்களாற் பருகுமாறு தங்கி உலாவும்; கோமகன் திறத்து உற்ற கூறுவாம்- அவ்வரச குமாரனிடத்திலே நிகழ்ந்தவற்றைக் கூறுவோம்.

(வி - ம்.) நாமம் - அச்சம். நகை - முத்துவடம் என்பர் நச்சினார்க்கினியர். கோமகன் - சீவகன். இது நூலாசிரியர் கூற்று. (௪)

௪௧௩. சில்லம் போதின்மேற் றிரைந்து தேனுலா
முல்லை காரெனப் பூப்ப மொய்ந்நிரை
புல்லு கன்றுளிப் பொழிந்த பாற்படுங்
கல்லென் சும்மையோர் கடலின் மிக்கதே.



(இ - ள்.) சில்அம் போதின்மேல் திரைந்து தேன் உலாம் முல்லை - சிலவாகிய அழகிய மலர்களின் சாய்ந்து தேன் கூட்டம் உலாவும் முல்லை; கார் எனப் பூப்ப - கார்காலம் என்று மலர; மொய் நிரை புல்லு கன்று உளிபால் பொழிந்து - மிக்க ஆவின் திரள், தம்மை அணையும் கன்றுகளை நினைத்துப் பாலைப் பொழிதலால்; படும் கல் என் சும்மை - உண்டாகும் கல் என்னும் ஒலி; ஓர் கடலின் மிக்கது - ஒரு கடலொலியினும் மிக்கது.

(வி - ம்.) பின் பனிக்கு அழிதலால் முல்லைக் கொடிகள் சிலவே பூத்தன. ஆனிரைகள் கன்றுகளை நினைத்துத் தாமே பாலைப் பொழிதலாற் கார்காலம் போல முல்லைக் கொடிகள் பூத்தன. பால் பொழியும் ஆநிரையின் ஒலி கடலின் மிக்கது.

பால்படும் கல்லென் சும்மை என்றது முல்லை காரெனப் பூத்தற்குக் குறிப்பேதுவாய் நின்றது. உள்ளி - உளி எனக் கெடுதல் விகாரமெய்தி நின்றது. மொய்ந்நிறை : வினைத்தொகை. சும்மை - ஒலி. கல்லென் : ஒலிக்குறிப்பு. (ரு)

சுகசு. மிக்க நாளினுன் வேழ மும்மத
முக்க தேனினோ டூறி வார்சுனை
யொக்க வாய்நிறைந் தொழுகு குன்றின்மேன்
மக்க ளீண்டினர் மடங்கன் மொய்ம்பினர்.

(இ - ள்.) மிக்க நாளினுல் - (இங்ஙனம்) ஒலி மிக்க நாளிலே; வேழம் மும் மதம் உக்க தேனினோடு ஊறி - வேழத்தின் மும்மதமும் ஆங்குச் சிந்திய தேனுடன் கலந்து பெருகியதால்; வார்சுனை ஒக்க வாய் நிறைந்து ஒழுகு குன்றின்மேல் - பெரிய சுனைகள் தம்மில் ஒருமிக்க வாய் நிறைந்து பெருகும் மலையின்மேல்; மடங்கல் மொய்ம்பினர் மக்கள் ஈண்டினர் - சிங்கம் போன்ற வலிமையினராகிய வேடரெல்லோரும் குழுமினர்.

(வி - ம்.) குன்றின்மேல் மக்கள் என அடையாக்கி வேடர் எனலுமாம். மடங்கல் - அரிமா. மொய்ம்பு - வலிமை. (சு)

சுகரு. மன்ன வன்னிரை வந்து நண்ணுறு
மின்ன நாளினுற் கோடு நாமெனச்
சொன்ன வாயுளே யொருவன் புட்குரன்
முன்னங் கூறினன் முழுது ணர்வினன்.

(இ - ள்.) இன்ன நாளினுல் மன்னவன் நிரை வந்து நண்ணுறும் - இந்த இளவேனிலில் வேந்தனுடைய ஆனிரை வந்து சேரும்; நாம் கோடும் எனச் சொன்ன வாயுளே - நாம் அந்நிரையைப் பற்றுவோம் என்றுரைத்த அப்போதே; புட்குரல் முன்னம் - பறவை ஒன்று கூவிய குரலின் குறிப்பை; முழுது உணர்வினன் ஒருவன் கூறினன் - நிமித்தம் எல்லாவற்றினும் அறிவுடையான் ஒருவன் அறிந்துரைத்தான்.

(வி - ம்.) அது மேற்கூறுகின்றார்.

இன்ன நாள் என்றது இவ்விளவேனிற்குரிய நாள் என்பதுபட நின்றது. கோடும்: தன்மைப் பன்மை. சொன்னவாயுள் - சொல்லிய அப்பொழுதே. முன்னம் - குறிப்பு. முழுதுணர்வினன் என்றது நிமித்தங்கள் முழுதும் நன்குணர்ந்த முதியவன் என்பதுபட நின்றது. (எ)

சகசு. அடைது நாநிரை யடைந்த காலையே
குடையும் பிச்சமு மொழியக் கோன்படை
யுடையும் பின்னரே யொருவன் தேரினு
லுடைதுஞ் சுடுவிற்றே னுடைந்த வண்ணமே.

(இ - ள்.) நாம் நிரை அடைதும் - நாம் பசுத்திரளைப் பற்றுவோம்; அடைந்த காலையே கோன்படை குடையும் பிச்சமும் ஒழிய உடையும் - பற்றிய பொழுதே மன்னன் படை (வந்து பொருது) குடையும் பிச்சமும் பொருத இடத்திலேயே கிடக்கத் தான் மட்டும் தோற்றோடும்; பின்னர் ஒருவன் தேரினுல் சுடுவில் தேன் உடைந்த வண்ணம் உடைதும் - பிறகு ஒருவனுடைய தேராற் சுடுதலால் வண்டின் திரள் ஓடுதல்போல நாம் தோற்றோடுவோம்.

(வி - ம்.) பிச்சம் - மயிற்பீலியாற் கட்டுவன. சுடுவின்-சுடுதலால். சுடு: முதனிலைத் தொழிற்பெயர். 'சுடுதலென வினைமேல் நின்ற வினைப் பெயரன்றி வினைமாத்திரை உணர்த்தி நின்று உருபு ஏற்றது' என்பர் நச்சினர்க்கினியர்.]

அடைதும் : தன்மைப்பன்மை; உடைதும் என்பது மது. குன்றவர் தேன் கொள்ளுங்கால் கொள்ளியால் சுட்டு வண்டுகளை ஓட்டுவர் ஆதலின் அந்நிமித்திகன் தாங் கெட்டோடுதற்குத் தன் அநுபவத்தே கண்ட தனையே "சுடுவின் தேன் உடைந்தவண்ணம் உடைதும் என்றான்" என ஆசிரியர் அமைத்தநயம் இன்புறற் பாலது. "தேனினம் போலக் கெடுதும் எனவே தமக்குப் பாடின்மை கூறினான்" என நச்சினர்க்கினியர் கூறுவதும் நுணுக்கமானது. பாடு - சாவு. (அ)

சகஎ. என்று கூறலு மேழை வேட்டுவீ
ரொன்று தேரினு லொருவன் கூற்றமே
யென்று கூறினு மொருவ னென்செயு
மின்று கோடுநா மெழுகென் றேகினர்.

(இ - ள்.) என்று கூறலும் - என்று அவன் கூறின அளவிலே; ஏழை வேட்டுவீர்! - ஏழை வேடர்களே!; ஒருவன் கூற்றமே என்று கூறினும் - ஒருவனைக் கூற்றுவனே யென உலகம் கூறினும்; ஒருவன் என் செயும்? - அவன் தனியே என்ன செய்ய முடியும்?; இன்று நாம் கோடும் எழுக என்று ஏகினர் - (ஆகலின்) நாம் இன்று பற்றி விடுவோம்; எழுக! என்று நிரை நிற்கும் இடத்திற்குச் சென்றனர்.

(வி - ம்.) இஃது ஓர் மறவன் கூற்று. ஏழை வேட்டுவீர் என்றது அறிவிலிகளே என்றிகழ்ந்தவாறு. கோடும் - கொள்ளுவேம். கோடும் எழுகென எல்லோரும் ஏகினர் என்க. (கூ)

சகஅ. வண்டு மூசறு நறவ மார்ந்தவர்
தொண்ட கப்பறை துடியோ டார்த்தெழ
விண்டு தெய்வதம் வணங்கி வெல்கென
மண்டி னார்நிரை மணந்த காலையே.

(இ - ள்) அவர் வண்டு மூசு அறு நறவம் ஆர்ந்து-அவர்கள் வண்டு மொய்த்தல் நீங்காத மதுவினை நிறையப் பருகி; தொண்டகப்பறை துடியொடு ஆர்த்து எழ-ஏறுகோட் பறையும் துடியும் ஆரவாரத்துடன் ஒலிக்க; வெல்க என விண்டு தெய்வதம் வணங்கி-வெற்றி கிடைப்பதாக என்று வேண்டிக் கூறிக் கொற்றவையை வணங்கி; நிரை மணந்த காலை மண்டினார் - பசுத்திரள் வந்து கூடின அளவிலே முற்பட்டுச் சென்றனர்.

(வி - ம்.) 'விண்டு-அரசனுடன் பகைத்து' என்றும், 'தெய்வதம்-முருகன்' என்றும் நச்சினார்க்கினியர் கூறுவர். ஏறுகோட் பறை-ஆநிரை கொள்ளுதலைக் குறித்தடிக்கும் பறை. சிலப்பதிகாரத்திலேயே ஆநிரை கொள்ளும் வேடர் கொற்றவையை வழிபடுதல் வருதலாற் பாலைநில மக்களாகிய வேடர்கட்கு முருக வணக்கம் பொருந்தாது.

மூசு : விகுதிகெட்ட தொழிற்பெயர். நறவம் - கள். தொண்டகப் பறை - ஆகோட்பறை. விண்டு - வாயினால் வாழ்த்தி. தெய்வதம் - தெய்வம். (கO)

சககூ பூத்த கோங்குபோற் பொன்சு மந்துளா
ராய்த்தி யர்நலக் காசெ றூணனான்
கோத்த நித்திலக் கோதை மார்பினான்
வாய்த்த வந்நிரை வள்ளு வன்சொனான்.

(இ - ள்.) பூத்த கோங்குபோல் பொன் சுமந்து உளார் - மலர்ந்த கோங்குமரம் போலப் பொன்னாலான அணிகளைச் சுமந்தவராகிய; ஆய்த்தியர் நலக்கு ஆ செல் தூண் அனான் - ஆய்ச்சியரின் நலம் சேர்தற்கு ஆக்கள் உராயும் கட்டை போன்றவனும்; கோத்த நித்திலம் கோதை மார்பினான் - முத்துமாலையும் பூமாலையும் பொருந்திய மார்பினனும் ஆகிய நந்தகோனின்; வாய்த்த அந் நிரை வள்ளுவன் சொனான் - தப்பாத அந்த நிரையிலே இருந்த நிமித்திகன் கூறினான்.

(வி - ம்.) வாய்த்த வள்ளுவன் என்க. ஆசெல் தூண் : 'ஆதீண்டு குற்றி' எனப்படும். நிமித்திகன் கூறியது மேலே வரும்.

இதன்கண், அணிகலன் நிரம்ப அணிந்துள்ள ஆய்த்தியர்க்குப் பூத்த கோங்கினையும் நந்தகோன் போகவின்பமிக்க பொலிவுடையன் ஆதற்கு ஆசெல் தூணையும் உவமையாக எடுத்துக் கூறிய அழகு நனி பேரின்பம் நல்குவதாம். சொனான் - சொன்னான். நலக்கு - நலத்திற்கு: சாரியை யின்றி உருபு புணர்ந்தது. (கக)

சஉ௦. பிள்ளை யுள்புகுந் தழித்த தாதலா
லெள்ளன் மின்னிரை யின்று நீரேன
வெள்ளி வள்ளியின் விளங்கு தோணலார்
முள்கு மாயரும் மொய்ம்பொ டேகினர்.

(இ - ள்.) பிள்ளை உள்புகுந்து அழித்தது ஆதலால் - காரியென்னும் பறவை ஆனிரையிலே புகுந்து அழிவுக் குறி காட்டியது, ஆகையால்; இன்று நீர் நிரை எள்ளன்மின் என - இன்று நீங்கள் ஆனிரை காவலை நன்கு போற்றுக என்று நிமித்திகன் சொல்ல; வெள்ளி வள்ளியின் விளங்கு தோள் நலார் முள்கும் ஆயரும் - வெள்ளி வளையல் விளங்கும் தோளையுடைய புதுமண மகளிரைத் தழுவும் புதுமணவாளப் பிள்ளைகளும்; மொய்ம்பொடு ஏகினர் - ஆற்றலொடு சென்றனர்.

(வி - ம்.) அழிவுக்குறி காரி உள்ளே புகுந்து எழுதல் என்பர். எள்ளன்மின் - இகழன்மின் ; எனவே நன்கு காக்க என்றான். ஆயரும் : உம் : இழிவு சிறப்பு. புதுமணப் பிள்ளைகள் போருக்குச் செல்லுதல் மரபன்று. எனவே, அவருட்பட எல்லா ஆயரும் ஆனிரை காவலை மேற்கொண்டனர் என்க.

பிள்ளை - காரி என்னும் பறவை. எள்ளன்மின் - இகழாதே கொண்மின். வள்ளி - வளையல். முள்குதல் - தழுவுதல். புதுமணம் புணர்ந்த இளைஞர் என்பார் தோணலார்முள்கும் ஆயரும் என்றார்; உம்மை உயர்வு சிறப்பு. (கஉ)

சஉக. காய மீனெனக் கலந்து கானிரை
மேய வெந்தொழில் வேட ரார்த்துடன்
பாய மாரிபோற் பகழி சிந்தினர்
ஆயர் மத்தெறி தயிரி னாயினர்.

(இ - ள்.) காயம் மீன் எனக் கலந்து கான் நிரை மேய - வானமும் மீன்களும் எனக் காட்டிற் கலந்து ஆனிரை மேயும் போது; வெந்தொழில் வேடர் ஆர்த்து-கொடுந்தொழில் வேடர் ஆரவாரித்து; பாய மாரிபோல் பகழி உடன் சிந்தினர் - பரவிய மழைத்துளி போலக் கணைகளை உடனே சிதறினர்; ஆயர் மத்து எறி தயிரின் ஆயினர் - ஆற்றாத இடையர் மத்தாற் கடையப் பட்ட தயிர்போலச் சிதறினர்.

(வி - ம்.) காயம் : ஆகாயம் என்பதன் முதற்குறை. இது காட்டிற்குவமை. மீன் - விண்மீன்; இஃது ஆன்களுக்கு உவமை. ஆயர் உடைந்து சிதறியதற்கு, மத்தெறி தயிர் உவமை. (கங)

சஉஉ. குழலு நவியமு மொழியக் கோவலர்
கழலக் காடுபோய்க் கன்று தாம்பரிந்
தழலை பாய்ந்துலா முன்றிற் பள்ளியுண்
மழலைத் தீஞ்சொலார் மறுக வாய்விட்டார்.

(இ - ள்.) கோவலர் குழலும் நவியமும் ஒழிய - (அங்ஙனஞ் சிதறிய) ஆயர் தம்மிட மிருந்த குழலும் கோடரியும் கை நீங்க; காடு கழலப் போய் - காடு நீங்க ஓடி; கன்று தாம்பு அரிந்து உழலை பாய்ந்து உலாம் முன்றில் பள்ளியுள் - கன்றுகள் கயிற்றை அறுத்துக்கொண்டு தடைமரத்தின்மேற் பாய்ந்து உலவும் வாயிலையுடைய இடைச் சேரியில்; மழலைத் தீஞ்சொலார் மறுக வாய்விட்டார் - மழலைபோல இனிய மொழியினையுடைய ஆய்ச்சியர் மனம் வருந்திச் சுழல வாய்விட்டுக் கதறினர்.

(வி - ம்.) கதறியது மேல் வரும்.

நவியம் - கோடரி. காடு கழலப்போய் என மாறுக. உழலை - தடை மரம். மழலைத் தீஞ்சொலார் என்றது குறிப்பாக ஆய்த்தியரை உணர்த்தியது. (கஅ)

சஉங. மத்தம் புல்லிய கயிற்றின் மற்றவ
ரத்த லைவிடி னித்த லைவிடா
ருய்த்த னரேன வுடைத யிர்ப்புளி
மொய்த்த தோணலார் முழுதும் ஈண்டினார்.

(இ - ள்.) மத்தம் புல்லிய கயிற்றின் அவர் அத்தலைவிடின் இத்தலை விடார் உய்த்தனர் என - மத்தைப் பிணித்திழுக்கும் கயிற்றைப்போல அவ்வேடர் ஒரு பக்கத்தை நெகிழவிட்டாராயின் மற்றொரு பக்கத்தை நெகிழவிடாராய் ஆனிரையைக்கொண்டு போயினர் என்று இடையர் வாய்விட்டுக் கதற; உடை தயிர்ப் புளி முழுதும் மொய்த்த தோள் நலார் ஈண்டினார் - கடையும் போது தயிர்ப்புள்ளி தோள் முழுதும் பதிந்த இடைச்சியர் யாவருங் கூடினர்.

(வி - ம்.) 'உய்த்தனர்' எனத் தெளிவு பற்றி இறந்த காலத்தாற் கூறினர்.

மத்தம் - தயிர்கடை மத்து. புளி - புள்ளி: கெடுதல் விகாரம். இதன் கண்ணும் ஆயர் தம்மநுபவத்திற் கண்டதனையே உவமையாக எடுத்தோதுதல் உணர்க. தயிர்ப்புள்ளி தோள்முழுதும் மொய்த்த நல்லார் என மாறுக. (கசு)

சஉச. வலைப்படு மானென மஞ்ஞை யெனத்தம்
முலைப்படு முத்தொடு மொய்குழல் வேய்ந்த
தலைப்படு தண்மலர் மாலை பிணங்க
வலைத்த வயிற்றின ராயழு திட்டார்.

(இ - ள்.) வலைப்படும் மான் என மஞ்ஞை என - வேடர் வலைப்பட்ட மான் போலவும் மயில்போலவும்; தம் முலைபடும்

முத்தொடு மொய் குழல் வேய்ந்த தலைப்படு தண்மலர் மாலை பிணங்க - தம் முலைமீது அணிந்த முத்துமாலையுடன் செறிந்த குழலில் அணிந்த தண்ணிய முல்லை மலரால் ஆன தலைமாலை சிக்குறுமாறு மயிர்குலைய; அலைத்த வயிற்றினராய் அழுதிட்டார் - வயிற்றில் மோதிக்கொண்டு அழுதனர் அவ்விடைச்சியர்.

(வி - ம்.) வலைப்படு என்பதனை மஞ்ஞையோடுங் கூட்டுக. மஞ்ஞை - மயில். மார்பில் அணிந்த மாலையோடு தலையிலணிந்த மாலை பிணங்கும்படி. வயிற்றிலடித்துக்கொண்டு அழுதார் என்னுமிது மிகவும் அழகிது. (கசு)

சஉரு. எம்மனை மாரினி யெங்ஙனம் வாழ்குவிர்
நம்மனை மார்களை நோவ வதுக்கி
வெம்முனை வேட்டுவ ருய்த்தன ரோவெனத்
தம்மனைக் கன்றொடு தாம்புலம் புற்றார்.

(இ - ள்.) எம் அனைமார்! இனி எங்ஙனம் வாழ்குவிர்? - எம் அன்னையரே! இனி எவ்வாறு வாழ்வீர்கள்?; வெம் முனை வேட்டுவர் நும் அனைமார்களை நோவ அதுக்கி - கொடிய போர் முனையிலே வேடர் நும் அன்னையரை வருந்த அடித்து; உய்த்தனர் ஓ என - கொண்டு போயினர் ஓஒ என்று கதறி; தம் மனைக் கன்றொடு தாம் புலம்புற்றார் - தம் வீட்டில் இருந்து பசுங் கன்றுகளைத் தழுவி அழத் தொடங்கினர்.

(வி - ம்.) அன்பினால் அஃறிணையை உயர்திணையாகக் கூறினர்.

எம்மனைமார் நும்மனைமார் என்னும் ஈரிடத்தும் னகரப்புள்ளி கெட்டது. இஃது ஆய்ச்சியர் கன்றுகளை நோக்கிக் கூறியது. இதனால் அவர் அவற்றின்பாற் கொண்டுள்ள அன்பு புலப்படுதல் உணர்க. (கஎ)

சஉசு. பாறை படுதயிர் பாலொடு நெய்பொரு
தாறு படப்பள்ளி யாகுல மாக
மாறு படமலைந் தாய்ப்படை நெக்கது
சேறு படமலர் சிந்த விரைந்தே,

(இ - ள்.) பாறை படு தயிர் பாலொடு நெய் பொருது ஆறுபட - கல்லைப்போல் தோய்ந்த தயிரும் பாலும் நெய்யும் கலந்து ஆறுண்டாகும்படி; பள்ளி ஆகுலம் ஆக - இடைச் சேரி துன்பப்படும் பொழுது; ஆய்ப்படை மாறுபட மலைந்து நெக்கது - (முன்னர்ப் போரிலே கெடாமல் இருந்த ஆயர்படை மாறுபாடுண்டாக வேடருடன் பொருது தானும் கெட்டது; (கெட்ட அப் படை); மலர் சேறுபடச் சிந்த விரைந்து - முல்லை மலர்கள் தம்மிடமுள்ள தேனாற் சேறுண்டாகச் சிந்துமாறு வேகமாக,

(வி - ம்.) இப் பாட்டுக் குளகம். ஆய் : சாதிப் பெயர். (கஅ)

சஉஎ. புறவணி பூவிரி புன்புலம் போகி
நறவணி தாமரை நாட்டக நீந்திச்
சுறவணி சூழ்கிடங் காரெயின் மூதூ
ரிறையணிக் கேட்கவுய்த் திட்டனர் பூசல்.

(இ - ள்.) புறவு அணி பூவிரி புன்புலம் போகி - முல்லை நிலமாகிய அழகிய மலர் விரிந்த புன்னிலத்தைக் கடந்து; நறவு அணி தாமரை நாட்டகம் நீந்தி - தேன் பொருந்திய தாமரை மலர் நிறைந்த மருத நிலத்தை அரிதிற் கடந்து; சுறவு அணி கிடங்குசூழ் எயில் மூதூர் - சுறாமீன் பொருந்திய அகழி சூழ்ந்த மதிலையுடைய மூதூரை அடைந்து; இறை அணிக் கேட்கப் பூசல் உய்த்திட்டனர் - அரசனுக்கு அருகிலுள்ளோர் கேட்கு மாறு இக்குழப்பத்தை வெளியிட்டனர்.

(வி - ம்.) அருகிலுள்ளோர் ஈண்டு வாயிற் காவலரெனக் கொள்க. 'இட்டனர்' என்றதனால் இப் பழியை அரசன் தலையிலே போட்டனர் என்பதாயிற்று. உய்த்திட்டனர் - உய்த்தனர் எனினும் ஆம். 'மூதூர்' எனவே இதுவரை இப் பூசலைக் கேட்டறியாத தென்பது பெறப்பட் டது. பூசல் மேல்வரும்.

புறவு - முல்லைநிலம்; சிறுகாடுமாம். தாமரை நாட்டகம் என்றது மருத நிலத்தை. (கசு)

வேறு

சஉஅ. கோடுமர வெயின ரீண்டிக் கோட்டிமி லேறு சூழ்ந்த
படுமணி நிரையை வாரிப் பைந்துகி லருவி நெற்றி
நெடுமலை யத்தஞ் சென்று ரென்றுநெய் பொதிந்த பித்தை
வடிமல ராயர் பூசல் வளநகர் பரப்பி னாரே.

(இ - ள்.) கொடுமர எயினர் ஈண்டிக் கோட்டு இமில் ஏறு சூழ்ந்த படுமணி நிரையை வாரி - வில்லேந்திய வேடர் கூடி வந்து கொம்பினையும் இமிலையும் உடைய ஏறுகள் சூழ்ந்த ஒலிக்கும் மணியை உடைய ஆனிரையை வளைத்து; பைந் துகில் அருவி நெற்றி நெடுமலை அத்தம் சென்றார் என்று - புத்தாடைபோல அருவி வீழும் உச்சியை உடைய பெரிய மலையை நாடி அரிய காட்டுவழியிலே போயினர் என; நெய் பொதிந்த பித்தை வடிமலர் ஆயர் - நெய் பூசிய மயிரிலே தெரிந் தெடுத்த மலரை யணிந்த இடையர்; வளநகர் பூசல் பரப்பினர் - வளநகரெங்கும் இக் குழப்பத்தை அறிவித்தனர்.

(வி - ம்.) 'பல்லாக்கொண்டா ரொல்லார் என்னும்-பூசல் கேட்டுக் கையது மாற்றி' (பன்னிரு படலம்) என்றும், 'நிரைகோள் கேட்டுச் செய்தொழி லொழிய' (பு. வெ. உ௧) என்றும் துறை கூறுதலின், கேட்டோரெல்லாம் சென்று மீட்பரெனக் கருதி நகர்க்குணர்த்தினர். ()

வேறு

சஉகூ. காசின் மாமணிச் சாமரை கன்னியர்
வீச மாமக ரக்குழை வில்லிட
வாச வான்கழு நீர்பிடித் தாங்கரி
யாச னத்திருந் தான்டன் மொய்ம்பினான்.

(இ - ள்.) காசு இல் மாமணிச் சாமரை கன்னியர் வீச - குற்றம் அற்ற பெருமை மிகும் மணிக்கவரி கொண்டு மகளிர் வீசவும்; மா மகரக் குழைவில் இட - பெரிய மகரமீன் வடிவ மான குழை ஒளி வீசவும்; வாசவான் கழுநீர் பிடித்து - மண மிகும் உயர்ந்த கழுநீர் மலரைக் கையிலேந்தி; அடல் மொய்ம்பி னான் ஆங்கு அரியாசனத்து இருந்தான் - வென்றிதரும் ஆற்ற லுடைய கட்டியங்காரன் அரண்மனையிலே அரியணையிலே வீற்றிருந்தான்.

(வி - ம்.) மொய்ம்பினான்: இகழ்ச்சி. கழுநீர் மலர் பிடித்திருத்தல் அரசர்க்கியல்பு, (சீவக. கஅசஎ, உகூருஅ).

சச்சந்தன் இருந்த அம்மண்டபத்தே அவனிருந்த அரியணையின் மேல் இருந்தான் என்பதுபட, 'ஆங்கு அரியாசனத்திருந்தான்' என்றார். (உக)

சரு0. கொண்ட வாளொடுங் கோலொடுங் கூப்புபு
சண்ட மன்னனைத் தாடொழு தாயிடை
யுண்டோர் பூசலென் றுற்குரை யாயெனக்
கொண்ட னர்நிரை போற்றெனக் கூறினான்.

(இ - ள்.) கொண்ட வாளொடும் கோலொடும் கூப்புபு - எடுத்த வாளொடும் பிரம்பொடும் கையைக் குவித்து; சண்ட மன்னனைத் தாள்தொழுது-கொடிய வேந்தன் அடியை வணங்கி; ஓர் பூசல் உண்டு என்றற்கு உரையாய் என - அக் காட்டிலே ஒரு குழப்பம் உண்டாயிற்று என்ற வாயில்காவலனை நோக்கி, அதனை உரை என்று வேந்தன் கூற; நிரை கொண்டனர், போற்று எனக் கூறினான் - பசுத்திரளை வேடர் கொண்டனர், திருவுளங் கொள்க என்றுரைத்தான்.

(வி - ம்.) கூப்புபு-கூப்பி. சண்டம் - கொடுமை. வாயில் காவலன் என்னும் எழுவாய் வருவித்தோதுக. போற்று - திருவுளம்பற்று. (உஉ)

சருக. செங்கட் புன்மயிர்த் தோறிரை செம்முக
வெங்க ணேக்கிற்குப் பாய மிலேச்சனைச்
செங்கட் டீவிழி யாத்தெழித் தான்கையு
ளங்கட் போத பிசைந்தடு கூற்றனான்.

(இ - ள்.) அடு கூற்றனுன் கையுள் அம்கண் போது பிசைந்து - கொல்லுங் காலனைப் போன்ற அரசன் தன் கையில் இருந்த அழகிய கண் போன்ற மலரைப் பிசைந்து ; செங்கண் புன் மயிர்த்தோல் திரை செம்முகம் வெங்கண் நோக்கின் குப்பாய மிலேச்சனை - சிவந்த கண்களையும் புல்லிய மயிர் நிறைந்த தோலை யும் திரைந்த செம்முகத்தையும் கொடிய நோக்கத்தினையும் சட்டையையும் உடைய மிலேச்சனுகிய அவ் வாயில்காவலனை ; செங்கண் தீவிழியாத் தெழித்தான் - தன் சிவந்த கண்களி லிருந்து நெருப்பெழ விழித்து நோக்கிச் சீறினுன்.

(வி - ம்.) இச் செய்யுளில் ஒரு கிழக்காவலன் உருவம் சொல் லோவியமாக்கப்பட்டிருத்தல் காண்க.

"அவன் அரசன் அன்மையின் கோபம் எளியார் மேற்றாயிற்று" என்னும் நச்சினர்க்கினியர் குறிப்பு மிகவும் நுண்ணிது. நூலாசிரியரும் அவ்வெளியானையும் சினத்தற்குத் தகுதியற்ற கிழப்பருவமுடையனுக்கி வைத்தனர். எய்தார் இருக்க அம்பை நோவது போன்ற கட்டியங்காரன் பேதைமையை ஆசிரியர் இச்சிறிய சூழ்ச்சியான் வெளிப்படுத்தும் அழகுணர்க. குப்பாயம் - மெய்ப்பை (சட்டை). (உங)

வேறு

சஙஉ. கூற்றி னிடிக்குங் கோலேவேலவன் கோவ லர்வாய்
மாற்ற முணர்ந்து மறங்கூர்கடற் றானை நோக்கிக்
காற்றின் விரைந்து தொறுமீட்கெனக் காவல் மன்ன
னேற்றை யரிமா னிடிபோல வியம்பி னுனே.

(இ - ள்.) கூற்றின் இடிக்கும் கொலை வேலவன் காவல் மன்னன் - காலனைப்போலச் சீறும் கொலை வேலேந்திய, நாட்டுக் காவலனுகிய வேந்தன் ; கோவலர் வாய் மாற்றம் உணர்ந்து - இடையரின் வாய்மொழிப் பொருளை உணர்ந்து ; மறம்கூர் கடல் தானை நோக்கி - வீரத்திற் சிறந்த கடலனைய தன் படையைப் பார்த்து ; காற்றின் விரைந்து தொறுமீட்க என - காற்றினுங் கடுகி ஆனிரையைத் திருப்பிக் கொணர்க என்று ; அரிமான் ஏற்றை இடிபோல இயம்பினுன் - ஆண் சிங்கத்தையும் இடியை யும் போலக் கூறினுன்.

(வி - ம்.) அரிமான் ஏற்றை - ஆண் சிங்கம். 'ஏறும் ஏற்றையும்' (தொல். மரபு. உ) என்றது காண்க. இடிக்கும் - சினக்கும். தொறு - ஆனிரை. ஏற்றையரிமானும் இடியும் போன்று முழங்கும் குரலானே கூறினன் என்பது கருத்து. (உச)

வேறு

சஙடு. கார்விளை மேக மன்ன
கவுளழி கடாத்த வேழம்
போர்விளை யிவுளித் திண்டேர்
புனைமயிர்ப் புரவி காலாள்
வார்விளை முரசம் விம்ம
வானுலாப் போந்த தேபோ
னீர்விளை சுரிசங் கார்ப்ப
நிலநெளி பரந்த வன்றே.

(இ - ள்.) *கார்விளை மேகம் அன்ன கவுள் அழி கடாத்த வேழம் - கார்காலத்திற் றோன்றுகின்ற முகிலனைய, கவுளி லிருந்து பெருகும் மதமுடைய களிறுகளும்; போர் விளை இவுளித் திண்தேர் - போருக்குத் தகுதியான குதிரை பூட்டிய தேர்களும்; புனை மயிர்ப் புரவி - அணிசெய் மயிருடைய குதிரை களும்; காலாள் - காலாட்களும் ஆகிய நாற்படையும்; வார்விளை, முரசம் விம்ம நீர்விளை சுரிசங்கு ஆர்ப்ப - வாரால் கட்டப்பட்ட முரசுகள் முழங்கவும், நீரிலிருந்து கிடைத்த சுரிந்த சங்குகள் ஆரவாரிக்கவும்; வான் உலாப் போந்ததேபோல் - முகில் முழங்கி உலா வருவதுபோல்; நிலம் நெளி பரந்த - நிலம் நெளியுமாறு பரவியெழுந்தன.*

(வி - ம்) *யானையும் பரியும் முழக்கமும் உண்மையின் மேகம் உவமை.*

*இனி, வானுலாய்ப் போந்ததே போலும் நீராவது கடல்; அதில் விளைந்த சங்கு எனலும் ஒன்று. 'நெளிய' என்பது 'நெளி' என வந்தது விகாரம்.* (உ௫)

சஙச. காலகம் புடைப்ப முந்நீர்க்
கடல்கிளர்ந் தெழுந்த தேபோல்
வேலக மிடைந்த தானை
வெஞ்சின வேயினர் தாக்க
வால்வளை யலற வாய்விட்
டிரலேயுந் துடியு மார்ப்பப்
பால்வளைந் திரவு செற்றுப்
பகலோடு மலைவ தொத்தார்.

(இ - ள்.) *கால் அகம் புடைப்ப முந்நீர்க் கடல் கிளர்ந்து எழுந்ததேபோல் - காற்று உள்ளே மோதியதால் முந்நீர்மை*

மிடைந்த தானை - வேலை யேந்திய நெருக்கிய அரசன்படை; வெம்சின எயினர் தாக்க - கொடுஞ்சினமுடைய வேடர்படை எதிர்த்துத் தாக்குமாறு; வால்வளை அலற இரலையும் துடியும் வாய்விட்டு ஆர்ப்ப - வெள்ளிய சங்கு முழங்கவும் துத்தரிக் கொம்பும் துடியும் வாய்விட்டு ஆரவாரிக்கவும்; பால் வளைந்து - ஒரு பக்கத்தே வளைத்துக் கொண்டு; செற்று இரவு பகலொடு மலைவது ஒத்தார்-சினந்து இரவும் பகலும் போரிடுவது போன்று பொருதனர்.

(வி - ம்.) முந்நீர்மையுடைய கடல் முன்னர் வந்துளது (சீவக. ௫). ஒடு : எண் ஒடு. வேடர் அரசர்க்கு எதிர்நிற்றலின் இரவும் பகலும் உவமையாயின. வளை தானைக்கும் துத்தரிக் கொம்பும் துடியும் வேடர்க்கும் கொள்க. நிரனிறை. (உசு)

சஙரு. விற்பழுத் துமிழ்ந்த வெய்ய
வெந்நுனைப் பகழி மைந்தர்
மற்பழுத் தகன்ற மார்பத்
திடங்கொண்டு வைகச் செந்நாச்
சொற்பழுத் தவர்க்கு மாண்மை
சொல்லலாந் தன்மைத் தன்றிக்
கொற்பழுத் தெரியும் வேலார்
கொடுஞ்சிலை குழைவித் தாரே.

(இ - ள்.) வில் பழுத்து உமிழ்ந்த வெய்ய வெம் நுனைப் பகழி - வேடர்கள் வில் குழைத்துச் சிந்தின விருப்பமுடைய கொடிய முனையையுடைய அம்புகள்; மைந்தர் மல் பழுத்து அகன்ற மார்பத்து இடம் கொண்டு வைக - அரசனைச் சார்ந்த வீரரின் மற்போரிலே பழகிப் பரந்த மார்பிலே இடம் பெற்றுத் தங்குதலாலே; செந்நாச் சொல் பழுத்தவர்க்கும் ஆண்மை சொல்லலாம் தன்மைத்து அன்றி - (அவர்கள்) செவ்விய நாவினாற் சொல்ல வல்லவர்க்கும் கூறவியலாத தன்மையுடன்; கொல் பழுத்து எரியும் வேலார் கொடுஞ்சிலை குழைவித்தார் - கொல்லுத் தொழிலிலே பயின்று ஒளிவிடும் வேலேந்திய வேடர்களின் வளைவான வில்லைக் கெடுத்தார்கள்.

(வி - ம்.) இனி, 'வேலார் தமது வில்லை வளைத்தார். அவ்வளவிலே வேடர் மைந்தரை வீட்டினர்' என அடுத்த செய்யுளிலும் முடிக்கலாம். (உஎ)

சஙசு. வாட்படை யனுங்க வேடர்
வண்சிலை வளைய வாங்கிக்
கோட்புலி யினத்தின் மொய்த்தார்
கோதிநுனைப் பகழி தம்மால்

வீட்டினூர் மைந்தர் தம்மை
விளிந்தமா கவிழ்ந்த திண்டேர்
பாட்டரும் பகடு வீழ்ந்த
பனிவரை குனிவ தொத்தே.

(இ - ள்.) வாள் படை அனுங்க - தம்மைக் கெடுத்த வாட் படை கெடுமாறு; வேடர் வண்சிலை வளைய வாங்கி - வேடர்கள் தம் ஆற்றல்மிகும் சேமவில்லை வளைய வளைத்து; கோள்புலி இனத்தின் மொய்த்தார் - கொலையில் வல்லதான புலியின் இனம் போலச் சூழ்ந்தவர்களாய்; கொதிநுனைப் பகழி தம்மால் மைந்தர் தம்மை வீட்டினூர் - காய்ச்சிய முனையையுடைய அம்புகளால் அரசன் படைஞரை வீழ்த்தினர்; மாவிளிந்த - குதிரைகள் கெட்டன; திண்தேர் கவிழ்ந்த - வலிய தேர்கள் கவிழ்ந்தன; பாடு அரும்பகடு - அரிய வுழைப்பினையுடைய யானைகள்; பனி வரை குனிவது ஒத்து வீழ்ந்த - பனிமலைகள் தாழ்வதுபோல அழிந்தன.

(வி - ம்.) மொய்த்தார் : வினையாலணையும் பெயர். 'பாட்டு' என்பது, 'பட்டு' என்பதன் விகாரம். (உஅ)

சஙஎ. வென்றிநாங் கோடு மின்னே
வெள்ளிடைப் படுத்தென் றெண்ணி
யொன்றியுள் வாங்கு கென்ன
வொலிகட லுடைந்த தேபோற்
பொன்றவழ் களிறு பாய்மா
புனைமயிற் குஞ்சி பிச்சம்
மின்றவழ் கொடியோ டிட்டு
வேற்படை யுடைந்த வன்றே.

(இ - ள்.) நாம் இன்னே வெள்ளிடைப்படுத்து வென்றி கோடும் என்று எண்ணி - நாம் இப்போதே வேடரை வெளிப் படுத்தி வென்றி கொள்வோம் என்று (அரசன் படையில் மிகுதி யானோர்) நினைத்து; ஒன்றி உள் வாங்குக என்று - ஒற்றுமை யாக அப் படையுடன் பொருந்தித் தள்ளிச் சிறிது குறைப்பீராக என்று தம் படையை ஊக்க மூட்டியும்; பொன்தவழ் களிறு பாய்மா புனைமயிற் குஞ்சி பிச்சம் மின்தவழ் கொடியொடு இட்டு- பொன் அணிந்த களிறும் பாயும் புரவியும் அணிந்த மயிலிறகா லான சிற்றணுக்கன் என்னும் விருதும் பீலிக்குடையும் ஒளி தவழும் கொடியும் ஆகியவற்றை விட்டுவிட்டு; ஒலிகடல் உடைந்ததேபோல் வேற்படை உடைந்த - ஒலிக்குங் கடல் அணை

கடந்து ஓடுவதேபோல அரசனுடைய வேலேந்திய படைகள் முதுகிட்டு ஓடின.

(வி - ம்.) சிற்றணுக்கன்: ஒருவகை விருது; மிகவும் அருகிலே பிடித்தற்குரியது போலும். (உகூ)

சஙஅ. பல்லினுற் சுகிர்ந்த நாரிற்
பனிமலர் பயிலப் பெய்த
முல்லையங் கண்ணி சிந்தக்
கால்விசை முறுக்கி யாய
ரோல்லென வொலிப்ப வோடிப்
படையுடைந் திட்ட தென்ன
வல்லலுற் றழுங்கி நெஞ்சிற்
கட்டியங் கார ஞழ்ந்தான்.

(இ - ள்.) *பல்லினுல் சுகிர்ந்த நாரில் பனிமலர் பயிலப் பெய்த முல்லை அம் கண்ணி சிந்த - பல்லாற் கிழித்த நாரிலே தண்ணிய மலர்களை நெருங்க வைத்துக் கட்டப்பட்ட அழகிய முல்லைக் கண்ணிகள் சிதறுமாறு; ஆயர் கால்விசை முறுக்கி ஓடி- இடையர்கள் காலில் விசை உண்டாக விரைந்தோடி; ஒல் என ஒலிப்பப் படை உடைந்திட்டது என்ன - ஒல்லெனும் ஆரவாரத்துடன் நம் படை தோற்றது என்று கூற; கட்டியங்காரன் நெஞ்சின் அல்லல் உற்று அழுங்கி ஆழ்ந்தான் - கட்டியங்காரன் உள்ளத்திலே துன்பமுற்று இரங்கி அந் நினைவிலே ஆழ்ந்தான்.*

(வி - ம்.) *'என்றார்க்கு' என்னும் பாடத்திற்கு என்று வருந்தினார்க்குத் தானும் எதிரே வருந்தினன்' என்க.*

*இதனால் ஆயர் தம் பல்லாலே நார்கிழித்துப் பூத்தொடுக்கும் வழக்கமுடையர் ஆதல் காணலாம். பயிலப்பெய்த-செறியவைத்துக் கட்டின.* (ஙo)

சஙகூ. வம்புகோண் டிருந்த மாதர்
வனமுலை மாலைத் தேன்சோர்
கோம்புகோண் டன்ன நல்லார்
கோழுங்கயற் றடங்கண் போலு
மம்புகோண் டரசர் மீண்டா
ராக்கோண்டு மறவர் போனர்
சேம்புகோண் டன்ன விஞ்சித்
திருநகர்ச் செல்வ வேன்றூர்.

(இ - ள்.) செம்பு கொண்டன்ன இஞ்சித் திருநகர்ச்

யுடைய அழகிய நகரின் திருவாளனே !; வம்பு கொண்டிருந்த மாதர் வனமுலை - கச்சைக் கொண்டு அடிபரந்திருந்த காதலை யூட்டும் அழகிய முலைகளை ; தேன் சோர்கொம்பு கொண்ட அன்ன - தேன் ஒழுகு மலர்க்கொம்பொன்று தனக்கு உறுப்பாகக் கொண்டாற் போன்ற; நல்லார் கொழுங்கயல் தடங்கண் போலும் - மகளிரின் மதர்த்த கயலனைய பெரிய கண்களைப் போன்ற ; அம்பு கொண்டு அரசர் மீண்டார் - அம்பை ஏற்று அரசர்கள் திரும்பினார்கள் ; மறவர் ஆக் கொண்டு போனார் - வேடர்கள் ஆனிரையை ஏற்றுச் சென்றனர்; என்றார்-என்றனர் ஆயர்.

(வி - ம்.) அரசர்: கட்டியங்காரன் மக்களும், மதனனும்.

உலகிற்கு அன்றி நகரத்திற்கு அரசனாகிய திருவாளனே என்றதனால் அவர்களுடைய வெகுளி விளங்குகிறது.

அரசர் அம்புகொண்டு மீண்டார் மறவர் ஆக்கொண்டு போனார் என்பதன்கண் இகழ்ச்சி தோன்றுதலுணர்க. அம்புகொண்டு மீண்டார் என்புழி அம்பை முதுகிலேற்றுக்கொண்டு மீண்டனர் என்க.

செம்புகொண்டு இயற்றினாலனைய மதில் என்க "செம்பியன்றன்ன செஞ்சுவர்" என்றார் மதுரைக் காஞ்சியினும் (௪௮௫). (௩௧)

௪௪௦. மன்னிரை பெயர்த்து மைந்தர்
வந்தனர் கோள்க வாட்கட்
பொன்னிழை சுடரு மேனிப்
பூங்கொடி யனைய பொற்பிற்
கன்னியைத் தருது மென்று
கடிமுர சியம்பக் கொட்டி
நன்னகர் வீதி தோறு
நந்தகோ னறைவித் தானே.

(இ - ள்.) வாள்கண் பொன் இழை சுடரும் மேனிப் பூங்கொடி அனைய பொற்பின் கன்னியைத் தருதும் - வாளனைய கண்களையும் பொன்னணி ஒளிவிடும் மெய்யினையும் உடைய பூங்கொம்பு போன்ற அழகிய கன்னியைத் தருகிறோம் ; மன் நிரை பெயர்த்து வந்தனர் மைந்தர் கொள்க - அரசனுடைய ஆனிரையைத் திருப்பிக் கொண்டு வரும் வீரர் அவளைக் கொள்க; என்று நல்நகர் வீதிதோறும் கடிமுரசு இயம்பக் கொட்டி-என்று அழகிய நகரின் தெருவிலெல்லாம் மிகுமுரசு முழங்கக் கொட்டி; நந்தகோன் அறைவித்தான் - நந்தகோன் சாற்றுவித்தான்.

(வி - ம்.) [மன் நிரை: பெரிய நிரை என்பர் நச்சினார்க்கினியர். முன்னரும் 'மன்னவன் நிரை' (௪௩௫) என வருதலானும், 'அரசனாற்

காக்கப்பட வேண்டிய நிரை' என்னுங் கருத்துப்பட நந்தகோன் கூறுதற் குரிய கருத்துண்மையாலும் 'அரசன் நிரை' யென்றலே பொருந்தும்.]

இரண்டு குலத்தோரும் தாழ்வுயர்வு கருதாதிருத்தற்குக், 'கொள்க' என்றும், 'தருதும்' என்றுங் கூறினான். படை நான்கும் மிகப் படைத்துப் பல்லுயிர்க்கும் அருள்புரிந்தோ ருண்மையானும், கன்னியை விரும்புவா ருண்மையானும் கொட்டி அறைவித்தான். (௩உ)

௪௪௩. வேதிர்ங்குதைச் சாபங் கான்ற
வெந்நுனைப் பகழி மூழ்க
வுதிர்ந்தது சேனை யீட்டங்
கூற்றோடு பொருது கொள்ளுங்
கருந்தடங் கண்ணி யன்றிக்
காயமா றாக வேகு
மரும்பெற லவளு மாகேன்
றாடவர் தொழுது விட்டார்.

(இ - ள்.) ஆடவர் - அதுகேட்ட அந்நகரத்து மறவர்; வெதிர்ங்குதைச் சாபம் கான்ற வெம் நுனைப் பகழி மூழ்க- மூங்கிலாலாய குதையையுடைய வில்லுமிழ்ந்த வெவ்விய நுனியை யுடைய அம்புகள் மூழ்குதலாலே; சேனையீட்டம் உதிர்ந்தது- நம் வேந்தன் படைத்திரளே சிதறிப் போயிற்று; (இங்ஙன மாகவும்) கூற்றொடு பொருது கொள்ளும் - மறலிபோன்ற இவ் வேடர் படையோடு போர்செய்து கைக்கொள்ளுதற்குரியாள்; கருந்தடங்கண்ணி அன்றி - நந்தகோன் கூறிய கரிய பெரிய விழி யுடையாளாகிய அவன் மகளேயன்றி, காயம் ஆறு ஆக ஏகும் அரும்பெறல் அவளும் ஆக-வானமே வழியாக இயங்குவாளொரு தெய்வமகளே ஆக அது செய்து கொள்ளவல்லார் இல்லை என்று; தொழுது விட்டார்-வணங்கி அவ்வெண்ணத்தைக் கைவிட்டனர்.

(வி - ம்.) வெதிர்-மூங்கில். குதை-வில்லிடத்தோருறுப்பு. கூற்று: வேடர் படைக்குவமை. கொள்ளும் என்புழி கொள்ளுதற்குரியாள் என வருவித்தோதுக. காயம் - ஆகாயம். அரும்பெறலவள் என்றது அமரர் மகளை. ஆடவர் - மறவர். (௩௩)

௪௪உ. கார்விரி மின்ன னார்மேற் காமுகர் நெஞ்சி னோடுந்
தேர்பரி கடாவித் தேந்தார்ச் சீவக னருளிற் போகித்
தார்போலி புரவி வட்டந் தான்புகக் காட்டு கின்றாற்
கூர்பரி வுற்ற தெல்லா மோருமகன் உணர்த் தினானே

(இ - ள்.) தேம்தார்ச் சீவகன் கார்விரி மின் அனார்மேல் காமுகர் நெஞ்சின் ஓடும் தேர் பரி கடாவி - தேன் துளிக்கும் மாலை அணிந்த சீவகன் முகிலிடை மலரும் மின்னைப் போன்ற

மகளிர்மேற் காமுகர் உள்ளம் ஓடுவதுபோல ஓடும்தேரை அதன் செலவிலே செலுத்திப் (பிறகு); தார்பொலி புரவிவட்டம் தான் புகக் காட்டுகின்றாற்கு - தாரினால் விளங்கும் குதிரையை அதன் வட்டத்திலே செல்லுமாறு கற்பிக்கும்போது அவனுக்கு; அருளின் போகி ஒருமகன் - அவன் அருளாலே போய்ச் செய்தி புணர்ந்து வந்த ஒருவன்; ஊர்பரி வுற்றது எல்லாம் உணர்த்தினான் - ஊர் துன்பப்படுவது முற்றும் தெளிவாகக் கூறினான்.

(வி - ம்.) வட்டம்: குதிரை வட்டமாகச் செல்லும் நெறி, இனி, 'ஒரு மகன் தேர்பரி கடாவிப் போய் வந்து' என்றும் ஆம். பரி - செலவு.* (௩௪)

வேறு

௪௪௩. தன்பான் மனையா ளயலான்றலைக் கண்டு பின்னு
மின்பா லடிசிற் கிவர்கின்றகைப் பேடி போலா
நன்பால் பசுவே துறந்தார்பெண்டிர் பாலர் பார்ப்பா
ரென்பாரை யோம்பே னெனின்யானவ னாக வென்றான்.

(இ - ள்.) நன்பால் பசுவே துறந்தார் பெண்டிர் பாலர் பார்ப்பார் என்பாரை யான் ஓம்பேன் எனின் - நல்லொழுக்கத்தையும் பசுவையும் துறவிகளையும் மகளிரையும் குழவிகளையும் பார்ப்பாரையும் நான் காப்பாற்றேன் எனின்; தன்பால் மனையாள் அயலான் தலைக் கண்டு பின்னும் இன்பால் அடிசிற்கு இவர்கின்ற கைப் பேடிபோலாம் அவன் ஆக என்றான் - தன்பால் தங்கிய வீரமகள் அயலானிடமாகக் கண்டேயும் மேலும் (உயிர் வாழ) இனிய பாற்சோற்றை விழையும் இழிந்த ஒழுக்கமுடைய பேடி போன்றவனாகும் கட்டியங்காரன் ஆவேன் என்று நினைத்தான் சீவகன்.

(வி - ம்.) மனையாள்: இங்கே வீரமகள். நன்பால்-நல்லொழுக்கம்; 'பலவயினானும்' (தொல். கிளவி ௰௪) என்றதனாற் சிலவயின் திணை விரவி எண்ணி உயர்திணையான் முடிந்தன. மற்றுப் 'பாற்பசு' எனினும்

* இதற்குப் பின்னர் உள்ள இவ்விரு செய்யுட்களும் பயில வழங்கா என்பர் நச்சினார்க்கினியர்:

௧. "என்றவன் உரைப்பக் கேட்டே எரிமணிக் கடகக் கையால்
ஒன்றிய தோழர் கைம்மேல் எறிந்துநக் குணர்வின் மிக்கான்
சென்றவற் கோகை யாகச் சிறப்பொடு செம்பொன் சிந்தி
நன்றிதே போல்வ தில்லை நாங்தொறு மீட்டும் என்றான்."

௨. "சேட்டினம் பருதி போலுந் திருமகிழ் மாலைமார்பன்
கேட்டலுங் கனன்று வல்லே கிளரொளி நந்த திண்டேர்
நீட்டமில் செய்கை தம்மாற் பண்ணென நினைந்து சொன்னான்
தீட்டரும் பரிதி யன்ன சீவக சாமியன்றே."

பொருந்தும். இஃது சீவகனுடைய உட்கோள். இனி, 'போலா' எனச் செய்யாவென்னும் எச்சவினையாக்கிப் 'போன்று அவன் ஆக' என முடிபு செய்வர் நச்சினார்க்கினியர். 'போலாம்' என்னும் பாடமும் அவருக்கு உடன்பாடே. 'போல்' என்பது உவமையுணர்த்தியது; ஒப்பில் போலி அன்று. (ரு௫)

சசச. போர்ப்பண் ணமைத்து நுகம்பூட்டிப்
புரவி பண்ணித்
தேர்ப்பண் ணமைத்துச் சிலைகோலிப்
பகழி யாய்ந்து
கார்க் கொண்மூ மின்னி னிமிர்ந்தான்கலி
மான்கு ளம்பிற்
பார்க்கண் ணெழுந்த துகளாற் பகன்
மாய்ந்த தன்றே.

(இ - ள்.) போர்ப்பண் அமைத்து - தன்னைப் போருக்கு ஈடாக்கிக் கொண்டு; புரவி பண்ணி நுகம்பூட்டித் தேர்ப் பண் அமைத்து - குதிரைகளைப் புனைந்து நுகத்திலே பூட்டித் தேரைப் புனைந்து; சிலை கோலிப் பகழி ஆய்ந்து - வில்லை வளைத்துக் கணைகளை ஆராய்ந்து; கார்க் கொண்மூ மின்னின் நிமிர்ந்தான் - கரிய முகிலிடையே மின்னெனத் தேரைச் செலுத்தினான்; கலிமான் குளம்பின் பார்க்கண் எழுந்த துகளாற் பகல் மாய்ந்தது - முழங்குங் குதிரைகளினுடைய குளம்பினுலெழுந்த புழுதியால் ஞாயிறு மறைந்தது.

(வி - ம்.) கொண்மூ : கொண்மு என ஆனது விகாரம்.

போர் பண்ணமைத்து என்றது, போருக்குத் தகுதியாகத் தன்னை யாக்கிக் கொண்டென்றவாறு. அஃதாவது கழல்கட்டிப் படைக்கலமேந்தி இன்னோரன்ன பிறவும் செய்து கோடல். சிலை - வில். கோலுதல் - அதனை வளைத்துக் காண்டல். கலிமான் - குதிரை. பகல்: ஆகுபெயர்; ஞாயிறு. (ரு௬)

சசரு இழுதொன்று வாட்க ணிளையாரிளை
யார்க ணோக்கிற்
பழுதின்றி மூழ்கும் பகழித்தொழில்
வல்ல காளை
முழுதொன்று திண்டேர் முகஞ்செய்தவன்
றன்னோ டேற்கும்
பொழுதன்று போது மெனப்புண்மொழிந்
தான்மொ ழிந்தான்.

(இ - ள்.) இழுது ஒன்று வாள் கண் இளையார் இளையார் கண் நோக்கின் - நெய் பூசிய வாளனைய கண்ணையுடைய மகளிர் காமுகரிடம் நோக்கும் நோக்கைப்போல; பழுது இன்றி மூழ்கும் பகழித் தொழில் வல்ல காளை - தப்பின்றித் தைக்கும் கணைத் தொழிலில் வல்ல காளையாகிய; முழுது ஒன்று திண்தேர் முகம் செய்தவன் தன்னொடு - எல்லாத் திக்கினும் ஒரு திண்ணிய தேரே எதிர்த்துச் செலுத்தும் வன்மையுடைய இவனொடு; ஏற்கும்பொழுது அன்று, போதும் என - எதிர்க்கும் காலம் இஃதன்று, இப்பொழுது விட்டுப் போவோம் என்று; புள் மொழிந்தான் மொழிந்தான் - முன்னர்ப் புட்குரல் கண்டு மொழிந்த நிமித்திகன் கூறினன்.

(வி - ம்.) "பின்னரே ஒருவன் தேரினால் உடைதும் சுடுவின் தேனுடைந்த வண்ணமே" என்று கூறிய அந்நிமித்திகனே என்பதுபடப் புண்மொழிந்தான் மொழிந்தான் என்றார். இப்பொழுது இவனோடு யாம் போர்ஏற்பின் சுடுவின்தேன் உடைந்த வண்ணம் உடைதல் திண்ணம் ஆதலால் இப்பொழுது வாளா மீள்வேம் என்பது குறிப்பு. (௩எ)

சசசு மோட்டும் முதுநீர் முதலைக்கு
வலிய துண்டேல்
காட்டுண் ணமக்கு வலியாரையுங்
காண்டும் நாமேன்
றேட்டைப் பசியி னிரைகவ்விய
நாக மேபோல்
வேட்டந் நிரையை விட்லின்றி
விரைந்த தன்றே.

(இ - ள்.) முதுநீர் மோட்டு முதலைக்கு வலியது உண்டேல் - ஆழமான நீரில் பெரிய முதலையினும் வலிமையானது இருக்குமானால்; காட்டுள் நமக்கு வலியாரையும் நாம் காண்டும் என்று - நம் காட்டில் நம்மினும் வலியாரையும் காண்போம் என்றுகூறி; ஏட்டைப் பசியின் இரை கவ்விய நாகமே போல் - இளைப்பை யுண்டாக்கிய பசியினால் இரையைப் பற்றிய பாம்பு அதனை விடாதவாறு போல; வேடு அந் நிரையை விடல் இன்றி விரைந்தது - வேட்டுவர்குழு தான் பற்றிய ஆவின் திரளை விடாமற் போர்மேல் விரைந்து சென்றது.

(வி - ம்.) மோட்டும் முதுநீர்: மகரம் விரித்தல் விகாரம். வேடு - குழூப்பெயர்; எதுகை நோக்கி வேட்டு என விரிந்தது.

முதுநீர் என்புழி முதுமை ஆழத்தை உணர்த்தியது; என்னை? ஆழ்ந்த நீரே வற்றாமையான் முதுநீராதல் கூடுமாகலின். "நெடும்புனலுள் முதலை (பிறவற்றை) வெல்லும்" என்பவாகலின். முதலைக்கு வலிய

துண்டேல் என்றார். உண்டேல் என்றது இல்லை என்பதுபட நின்றது. காட்டுள் என்பது நமக்கே உரிய இக்காட்டுள் என்பதுபட நின்றது. எட்டை - இளைப்பு. (ரு அ)

வேறு

சசஎ கடற்படை யனுங்க வென்ற
கானவ ரேன்னுங் கூற்றத்
திடைப்படா தோடிப் போமி
னுய்யவேன் றிரலை வாய்வைத்
தெடுத்தனர் விளியுஞ் சங்கும்
வீளையும் பறையுங் கோடுங்
கடத்திடை முழங்கக் காருங்
கடலுமோத் தெழுந்த தன்றே.

(இ - ள்.) கடல்படை அனுங்க வென்ற கானவர் என்னும் கூற்றத்திடைப் படாது - அரசனுடைய கடலனைய படை கெடும்படி வென்ற வேடர் என்னும் இக் கூற்றுவனிடம் அகப்படாமல்; உய்ய ஓடிப்போமின் என்று - பிழைக்க ஓடிப்போங்கோள் என்று கூறி; இரலை வாய் வைத்து - துத்தரிக் கொம்பை ஊதி; விளியும் வீளையும் எடுத்தனர் - கொக்கரிப்பையும் சீழ்க்கையையும் எழுப்பினர்; கடத்திடை சங்கும் பறையும் கோடும் முழங்க - (அவ்வொலிக்கு எதிரே) காட்டிலே சங்கும் பறையும் கொம்பும் சீவகன் படை முழங்க; காரும் கடலும் ஒத்து எழுந்தது - இரண்டு படையின் ஒலியும் காரையும் கடலையும் ஒத்து எழுந்தன.

(வி - ம்.) படை அனுங்க வென்ற என்றது கூற்றம் என்றற்குக் குறிப்பேதுவாய் நின்றது. உய்ய ஓடிப் போமின் என மாறுக. இரலை - துத்தரி என்னும் ஒருவகைக் கொம்பு. இது மான் கொம்பாலாயது போலும். விளி - கூக்குரல். வீளை - சீழ்க்கை. "வில்லுடைவீளையர் கல்லிடு பெடுத்த" என்றார் பிறரும் (குறுந். உஎஉ) (ருக)

சசஅ. கைவிசை முறுக்கி வீசுங்
கோள்ளியுங் கறங்கு மேய்ப்பச்
செய்கழற் குருசில் திண்டேர்
விசையொடு திசைக ளேல்லா
மையென வளைப்ப வீர
ரார்த்தன ரவரு மர்த்தார்
மோய்யமர் நாட்செய் தையன்
முதல்விளை யாடி னானே.

(இ - ள்.) செய்கழல் குருசில் திண்தேர் - புனைகழலை யுடைய சீவகனின் திண்ணிய தேர்; கைவிசை முடுக்கி வீசும் கொள்ளியும் கறங்கும் ஏய்ப்ப - கையினால் விசை கொண்டு விரைந்து வீசும் கொள்ளிக் கட்டையும் காற்றாடியும் போல; திசைகளெல்லாம் ஐயென விசையொடு வளைப்ப - எல்லாத் திக்கினும் விரைய விசையுடன் வளைப்ப; வீரர் ஆர்த்தனர் - சீவகனைச் சேர்ந்த வீரர் ஆரவாரித்தனர்; அவரும் ஆர்த்தார் - வேடர்களும் ஆரவாரித்தனர்; ஐயன் மொய்அமர் நாள் செய்து முதல் விளையாடினான் - சீவகன் (பின்னர் நடத்தும்) நெருங்கிய போருக்கு (இப் போரினால்) நன்னாள் கொண்டு முதலாவதாக விளையாடினான்.

(வி - ம்.) சீவகனுக்கு வேடர் நிகரன்மையானும் பகையன்மை யானும் தன் அருளும் வீரமும் மேம்படுதற்குச் சென்றான் ஆகலானும் அவரை அஞ்சப் பண்ணி நிரைமீட்டான் என்ற கருத்தால், 'நாட்செய்து, தம்மிற் படைவகுத்து விளையாடினான்' என்றார். மேல் வேடர்களைக் கொல்லாது விடுதலினாலும் இது விளங்கும். கட்டியங்காரனுடன் நிகழ்த்தும் போருக்கு இது 'நாட்கோள்' என்றார், இப்போரினாற் கட்டியங்காரன் பொறாமையுற்றுப் பகைகொண்டானாதலின். (௪0)

௪௪௬. ஆழியா னூர்திப் புள்ளி
னஞ்சிற கோலியி னாகம்
மாழ்கிப்பை யவிந்த வண்ணம்
வள்ளறேர் முழக்கி னானுஞ்
சூழ்துகண் மயக்கத் தானும்
புளிஞருள் சுருங்கிச் சேக்கைக்
கோழிபோற் குறைந்து நெஞ்சி
னறமென மறமும் விட்டார்.

(இ - ள்.) ஆழியான் ஊர்திப் புள்ளின் அம் சிறகு ஒலி யின் - திருமால் ஊர்தியாகிய கருடனுடைய அழகிய சிறகு களின் ஓசையால்; நாகம் மாழ்கிப் பை அவிந்த வண்ணம் - பாம்பு மயங்கிப் படம் ஒடுங்கினாற்போல; வள்ளல் தேர் முழக்கி னானும் சூழ்துகள் மயக்கத்தானும் - சீவகனுடைய தேர் முழக்கத் தாலும் தம்மைச் சூழ்ந்த புழுதியின் மயக்கத்தாலும்; புளிஞர் உள் சுருங்கி - வேடர்களின் உள்ளம் குறைந்து; சேக்கைக் கோழிபோல் குறைந்து - வலைப்பட்ட கோழிபோலே செயல் குறைந்து; நெஞ்சின் அறம் என மறமும் விட்டார் - தம் நெஞ்சிலே அறம் புகாமற் கைவிட்டாற்போல ஈண்டு வீரத்தை யும் கை விட்டனர்.

(வி - ம்.) அவருயிரைக் கொடுத்தலின் 'வள்ளல்' என்றார். பொராமல் தேரொலியாலே அவரை அச்சுறுத்தி நிரை மீட்கின்றான் என்று கொள்க.

ஆழியான் - சக்கரப் படையையுடைய திருமால். புள் - கருடன். புளிஞர் - வேடர். உள் - உள்ளம், ஊக்கம். சிறப்புப் பொருளையே உவமையாக எடுத்து அவ்வுவமையானும் அவ்வேடர் இயல்புணர்த்துவார், அறம் என மறமும் விட்டார் என்றார். சீவகன் வெல்லுதற்கு அவன்பால் அறமுண்மையும் அவர் தோற்றற்கு அறமின்மையும் காரணம் எனக் குறிப்பாக ஏதுக் கூறியவாறு. (சுக)

சுருo. புள்ளொன்றே சொல்லு மென்றிப்
புன்றலை வேடன் பொய்த்தான்
வெள்ளந்தேர் வளைந்த நம்மை
வென்றியீங் கரிது வெய்தா
வுள்ளம்போற் போது நாமோ
ரேடுப்பெடுத் துய்ய வென்னா
வள்ளன்மே லப்பு மாரி
யார்ப்பொடு சிதறி னாரே.

(இ - ள்.) புள் ஒன்றே சொல்லும் என்று இப் புன்தலை வேடன் பொய்த்தான் - ஆந்தை ஒரு தேரே வரும் என்று சொல்கின்றதென்று நமக்கு இச் சிறு தலையுடைய வேடன் பொய் கூறினான்; நம்மை வெள்ளம் தேர் வளைந்த - நம்மை வெள்ளம்போலத் தேர்கள் வளைந்தன; ஈங்கு வென்றி அரிது - (ஆதலால்) இவ்விடத்தே நமக்கு வெற்றியில்லை; நாம் வெய்தா ஓர் எடுப்பு எடுத்து உள்ளம்போல் உய்யப் போதும் என்னா - நாம் கடிதாக ஒருமுறை உற்றுப் பொருது விலகித் தப்பி ஒருவருள்ளம்போல எல்லோரும் செல்வோம் எ[illegible]றுரைத்து; வள்ளல் [illegible] அப்புமாரி ஆர்ப்பொடு சிதறி[illegible] [illegible]வகன்மேல் அம்பு[illegible]ய ஆரவா[illegible]ரித்துச் சொரிந்தனர்.

(வி - ம்.) 'உள்ளம்போல்' என்பதற்கு, 'நிமித்திகன் உள்ளம்போல்' என்றும் உரைத்துக் கொள்க.

இச்செய்யுளின்கண் ஆற்றாது புறமிட்டோட நினைக்கும் வேடர் "புள் ஒன்றே சொல்லும் என்று இப் புன்தலை வேடன் சொன்னான்" என்று அக்கிழ நிமித்திகன்பாற் குற்றங் கூறமுற்படுதல் நினைக்குந்தோறும் நம் நகைச்சுவையை மிகுதிப் படுத்துதலுணர்க. நாம் ஓர் எடுப்பெடுத்துப் பார்ப்பேம் என்பதும் அவர்தம் ஆற்றாமையையே காட்டுதலறிக. (சஉ)

சருக. மால்வரைத் தொடுத்து வீழ்ந்த
மணிநிற மாரி தன்னைக்
காலிரைத் தெழுந்து பாறக்
கல்லெனப் புடைத்த தேபோன்

மேனிரைத் தெழுந்த வேடர்
வெந்நுனை யப்பு மாரி
கோனிரைத் துமிழும் வில்லாற்
கோமகன் விலக்கி னானே.

(இ - ள்.) மால்வரை தொடுத்து வீழ்ந்த மணிநிற மாரி தன்னை - பெரிய மலையில் நிரைத்துச் சூழ்ந்த கருநிற மழையை; கால் இரைத்து எழுந்து பாறக் கல் எனப் புடைத்ததேபோல் - காற்று முழங்கி எழுந்து சிதறுமாறு கல் என்றொலித்துத் தாக்கியது போல; மேல் நிரைத்து எழுந்த வேடர் வெம்நுனை அப்பு மாரி - தன்மேல் வரிசையாக எழுந்த வேடரின் கொடிய முனையையுடைய அம்பு மழையை; கோல் நிரைத்து உமிழும் வில்லால் கோமகன் விலக்கினான் - கணைகளை வரிசையாகச் சொரியும் வில்லினாற் சீவகன் நீக்கினான்.

(வி - ம்.) வரையில் தொடுத்து என்றார் கால மழை யென்றற்கு. காற்றுத் தான் விரும்பிய திசையிலே மழையைப் போக்குமாறு போல இவன் அம்பு தன் விசையால் அவர்களின் அம்பைத் திருப்பியது. 'நாமுறக், கணைக்காற்று எடுத்த கண்அகன் பாசறை' (புறநா. ௩௭௩) என்றார் பிறரும். இச்சிறப்பினாற் கோமகன் என்றார். (சு௩)

சருஉ. கானவ ரிரிய வில்வாய்க்
கடுங்கணை தொடுத்த லோடு
மானிரை பெயர்ந்த வாய
ரார்த்தன ரணிசெய் திண்டோ
டானொன்று முடங்கிற் றொன்று
நிமிர்ந்தது சரம்பெய் மாரி
போனின்ற வென்ப மற்றப்
பொருவரு சிலையி னார்க்கே.

(இ - ள்.) கானவர் இரிய வில்வாய்க் கடுங்கணை தொடுத்தலோடும் - வேடர்கள் ஓடுமாறு தன் வில்லிலே கொடிய அம்புகளைத் தொடுத்தவுடன்; ஆன்நிரை பெயர்ந்த - பசுத்திரள்கள் திரும்பின; ஆயர் ஆர்த்தனர்-இடையர்கள் மகிழ்ந்து ஆரவாரித்தனர்; அணிசெய் திண்தோள் தான் ஒன்று முடங்கிற்று, ஒன்று நிமிர்ந்தது - சீவகனின் அழகிய திண்ணிய தோள்களில் ஒன்று முடங்கிய , ஒன்று நிமிர்ந்தது; அப் பொருவரு சிலையினார்க்கு பெய்மாரிபோற் சரம்நின்ற-(அப்போது) அந்த ஒப்பற்ற வில்லேந்திய வேடர்கட்குப் பெய்யும் மழைபோல அம்புகள் தாரையாய் நின்றன.

(வி - ம்.) சீவகன் அம்பு தொடுக்குஞ் சிறப்பினைக் கண்டு, இனிப் பொருதல் அரிதென்று ஊக்கங் குறைந்து நிரையைக் கைவிடுதலால், 'தொடுத்தலோடும் ஆநிரை பெயர்ந்த' என்றார். ஆநிரை பெயர்ந்த பிறகு, தன்னைச் சூழ்ந்து குவிந்த வேடர்திரள் குலைந்து போமாறு எய்த நிலையை 'மாரிபோல்' நின்றதென்றார்.

கொல்லாதிருத்தலின், 'மாரிபோல்' என்றார் என்றும், 'கானவர் இரிய அணிசெய் திண்டோள் முடங்கிற்று' என்று கொண்டு கூட்டியும் நச்சினார்க்கினியர் கூறுவர். (௪௪)

வேறு

௪௫ ஐந்நூறு நூறு தலையிட்ட வாரு யிரவர்
மெய்ந்நூறு நூறு நதிவெங்கணை தூவி வேடர்
கைந்நூறு வில்லுங் கணையும்மறுத் தான்க ணத்தின்
மைந்நூறு வேற்கண் ட .வார்மனம் போல மாய்ந்தார்.

(இ - ள்.) ஐந்நூறு நூறு தலையிட்ட ஆருயிரவர் - ஐயாயிரத்தைத் தலையிலேயிட்ட ஆருயிரவர்களின்; மெய்நூறு நூறு நுதி வெங்கணை தூவி-உடம்பைத் துகளாக ஆக்கவல்ல முனையையுடைய கொடிய கணைகளைச் சொரிந்து; வேடர் கைநூறு வில்லும் கணையும் அறுத்தான் - வேடரின் கையிலுள்ள நூற்றுக் கணக்கான விற்களையும் அம்புகளையும் வெட்டினான்; மைநூறு வேல்கண் மடவார் மனம்போலக் கணத்தின் மாய்ந்தார் - அஞ்சனம் தீட்டிய வேலனைய கண்களையுடைய பொதுமகளிரின் மனம் போல நிலையின்றி ஒரு நொடியிலே ஓடி மறைந்தனர்.

(வி - ம்.) ஐம்பத்தாருயிரவர் என்றபடி; இவர்கள் வேடர்கள். மெய்யை நூறவல்ல கணையாயினும் அம்பையும் வில்லையுமே நூறுமாறு வெங்கணை தூவினான். இஃது அவனுடைய அருளுள்ளத்தைக் காட்டுகிறது. மையாகிய நூறு - அஞ்சனம். பொதுமகளிரின் மனம் நிலையற்றதாகையால் உவமையாயிற்று. (௪௫)

௪௬. வாள்வாயு மின்றி வடிவெங்கணை
வாயு மின்றிக்
கோள்வாய் மதிய நெடியான்விடுத்
தாங்கு மைந்தன்
றேள்வாய் சிலையின் ஞெலியாற்றேறு
மீட்டு மீள்வா
ளுள்வாய் நிறைந்த நகைவெண்மதி
செல்வ தொத்தான்.

(இ - ள்.) கோள்வாய் மதியம் நெடியான் விடுத்த ஆங்கு - இராகு என்னும் கோளின் வாயிலிருந்து திங்களைத் திருமால் விடுவித்தாற் போல; வாள் வாயும் இன்றி வடிவெங்கணை வாயும்

இன்றி-வாள் வாய் வடுவும் கூரிய கொடிய அம்பின்வாய் வடுவும் உண்டுபண்ணாமலே ; தோள்வாய் சிலையின் ஒலியால் தொறு மீட்டு மீள்வான் மைந்தன் - தோளில் ஏந்திய வில்லின் ஒலியினாலேயே ஆனிரையைத் திருப்பித் திரும்பும் வலிமையுடைய சீவகன் ; நாள்வாய் நிறைந்த நகை வெண்மதி செல்வதொத்தான்-நாள்தொறும் நிறைவெய்திய கலை (ஒளி)யையுடைய முழுமதி செல்வது போன்றான்.

(வி - ம்.) வேடர்கட்குத் தீங்கின்றியே மீட்டான் என்பதனைக் கருதியே, 'சிலையின் ஒலியால்' என்றார். நாள்தோறும் நிறைந்த மதி உலகறியக் கலை நிரம்பினமை தோற்றுவித்தலின் உவமையாயிற்று. ['காந்தருவ தத்தையின் யாழ் வென்றியின்போது அரசர் தெளிவிக்கவும் தெளியாமற் பொருது பட்டனரேனும் அவர்கள் பகைவரன்மையிற் சிறிது பாவமுளதென்று கருதிப் பொன்னால் அருகன் உருச் செய்து விழாச் செய்து போர்க்களத்தே பாவம் போக்கினான். ஈண்டு எம்முறையானுங் கொல்லத்தகாதவ ராதலிற் கொலையின்றென்பது தோன்றக் களத்துப் பாவம் போக்கினானென்று கூறாராயினர் என்க' என்று நச்சினார்க்கினியர் கூறுவர்.]

நெடியான் - திருமால். கோள் - இராகு. இராகு என்னும் பாம்பின் வாய்ப்பட்ட திங்களைத் திருமால் மீட்டனர் என்பது அருக சமயத்தினர் கூறும் கதை. நகை - ஒளி. (சசு)

சருரு. ஆளற்ற மின்றி யலர்தாரவன் றோழ ரோடுங்
கோளுற்ற கோவ னிரைமீட்டன னென்று கூற
வாளுற்ற புண்ணுள் வடிவேலெறிந் திற்ற தேபோ
லுளுற் றுலந்தான் வெகுண்டானக ரார்த்த தன்றே.

(இ - ள்.) ஆள் அற்றம் இன்றிக் கோள் உற்ற கோவன் நிரை அலர்தாரவன் தோழரோடும் மீட்டனன் என்று கூற - இரு படையினும் ஓராளுக்குங் குற்றம் இல்லாமல், வேடராற் கொள்ளப்பட்ட மன்னவனின் ஆனிரையைச் சீவகன் தன் தோழருடனே சென்று மீட்டான் என்று கூற ; நாள் உற்று உலந்தான் - (அதனைக் கேட்ட) தன் ஆயுள் முடியும் நிலையினனான கட்டியங்காரன் ; வாள் உற்ற புண்ணுள் வடிவேல் எறிந்து இற்றதேபோல் - வாளால் நேர்ந்த புண்ணிலே வடிவேல் பட்டு அது முரிந்து நின்றாற்போல (வருந்தி); வெகுண்டான்-சீறினான்; நகர் ஆர்த்தது - நகரமோ மகிழ்ந்து ஆரவாரித்தது.

தோழர்க்குப் போரின்றேனும் உடன் சென்றதால், 'தோழரோடும்' என்றார். கோவன் : நந்தகோன் எனினுமாம். தன் படை தோற்ற தன்மேல் இவன் வெற்றி நிலைநின்றதனாற் புண்ணிலே வேலெறியுண்டு முரிந்து நின்றாற் போன்றது. நிரை மீட்டதற்கு உவப்புற வேண்டியவன் வெகுண்டதனால், 'நாளுற்றுலந்தான்' என்று ஒரு பெயரிட்டார் தேவர். இனி, அரசுரிமையைச் சீவகன் எய்தும் நாள் வந்துறுதலின் அவ்வாறு கூறினாரெனினும் ஆம்.

வாள் உற்றபுண் கட்டியங்காரன் தன்படை தோற்றமையால் எய்திய துன்பத்திற்குவமை. வடிவேல் எறிந்து இற்றது; சீவகன் வென்றான் என்று கூறக் கேட்டமையால் கட்டியங்காரன் நெஞ்சத்தே ஆழப்பதிந்து கிடந்த துன்பத்திற்குவமை.

நூலாசிரியர் கெடுவான் கேடு நினைப்பான் என்றிரங்குவார் நாலுற்றுலந்தான் என்றொரு பெயர் கூறினர் என்க. (சுஎ)

**வேறு**

சுருசு. இரவிதோய் கொடிகொண் மாடத்
திடுபுகை தவழச் சுண்ணம்
விரவிப்பூந் தாம நாற்றி
விரைதெளித் தாரந் தாங்கி
யரவுயர் கொடியி னான்ற
னகன்படை யனுங்க வென்ற
புரவித்தேர்க் காளை யன்ன
காளையைப் போலிக என்றார்.

(இ - ள்.) இரவி தோய் கொடிகொள் மாடத்து - (சீவகன் செல்லுந் தெருவிலே) ஞாயிறு தோயும் கொடிகளைக் கொண்ட மாடத்திலே (உள்ள கற்புடை மகளிர்); இடு புகை சுண்ணம் விரவித் தவழப் பூந்தாமம் நாற்றி - ஊட்டும் நறுமணப் புகையும் சுண்ணப் பொடியுங் கலந்து தவழ, மலர் மாலையைத் தூக்கி; விரை தெளித்து - நறுமணப் பொடிகளை எங்கும் தெளித்து; ஆரம் தாங்கி - முத்துமாலை (மங்கலமாக) அணிந்து; அரவு உயர் கொடியினான் தன் அகன் படை அனுங்க வென்ற - பாம்பெழுதிய கொடியினையுடைய துரியோதனனின் பெரும் படையைக் கெடுமாறு வென்ற; புரவித் தேர்க்காளை அன்ன காளையை-வெள்ளைப் பரி பூட்டிய தேரினை ஊர்ந்து சென்ற அருச்சுனனைப் போன்ற சீவகனை; போலிக என்றார் - வாழ்க என்று வாழ்த்தினர்.

(வி - ம்.) விராடபுரத்தில் துரியோதனன் கவர்ந்த நிரையை அருச்சுனன் மீட்டது இங்கே குறிக்கப்படுகிறது. அப்போது வில்லுந் தேரும் நிரைமீட்டதும் இங்கே உவமையாயின. மாடங்களை அணிசெய்து ஆரந்தாங்கி என்றதனால் மகளிரென்றும் காமக் குறிப்பின்றி வாழ்த்தினமையின் கற்புடை மகளிரென்றும் கொண்டாம். காளை: உவமையாகு பெயர். (சுஅ)

சருஎ. இன்னமு தனைய சேவ்வா
யிளங்கிளி மழலை யஞ்சோற்
பொன்னவிர் சுணங்கு பூத்த
பொங்கிள முலையி னார்தம்

மின்னிவர் நுசுப்பு நோவ
விடலையைக் காண வோடி
யன்னமு மயிலும் போல
வணிநகர் வீதி கொண்டார்.

(இ - ள்.) இன் அமுது அனைய செவ்வாய் - இனிய அமுது போன்ற செவ்வாயினையும்; இளங் கிளி மழலை அஞ்சொல் - இளங்கிளியின் மொழி போன்ற மழலை பொருந்திய அழகிய மொழியினையும் உடைய; பொன் அவிர் சுணங்கு பூத்த பொங்கு இள முலையினார் - பொன்னென விளங்கும் தேமல் பொருந்திய பூரிக்கும் இளமுலை மகளிர்; தம் மின் இவர் நுசுப்பு நோவ - தம் மின்னனைய இடை வருந்த; விடலையைக் காண ஓடி - சீவகனைக் காண ஓடிவந்து; அன்னமும் மயிலும் போல அணிநகர் வீதி கொண்டார் - அன்னமெனவும் மயிலெனவும் அழகிய நகரின் தெருக்களை முற்றுகையிட்டனர்.

(வி - ம்.) விடலை: பதினாறுக்கும் முப்பதுக்கும் இடைப்பட்ட வயதினன். இது கற்புடை மகளிரல்லாதாரைக் கூறிற்று. (சகூ)

சடுஅ. சில்லரிச் சிலம்பின் வள்வார்ச்
சிறுபறை கறங்கச் செம்பொ
னல்குற்றே ரணிந்து கொம்மை
முலையெனும் புரவி பூட்டி
நல்லெழி னெடுங்கண் ணம்பாப்
புருவவில் லுருவக் கோலிச்
செல்வப்போர்க் காமன் சேனை
செம்மன்மே லெழுந்த தன்றே.

(இ - ள்.) செல்வப் போர்க் காமன் சேனை - செல்வத்தே நின்று போர் செய்யும் காமன் படை; சில் அரிச் சிலம்பின் வள் வார்ச் சிறுபறை கறங்க - சிலவாகிய அரிகளையுடைய சிலம்புகளாகிய சிறிய வாரால் இறுக்கிய சிறுபறை முழங்க; செம்பொன் அல்குல் தேர் அணிந்து - மேகலையால் அல்குலாகிய தேரைப் புனைந்து; கொம்மை முலையெனும் புரவி பூட்டி - பருத்த முலைகளாகிய குதிரைகளைப் பூட்டி; நல் எழில் நெடுங்கண் அம்பா - பேரழகினையுடைய நெடுங்கண்களை அம்பாகக் கொண்டு; புருவ வில்உருவக் கோலி-புருவமாகிய வில்லை முற்றும் வளைத்து; செம்மல்மேல் எழுந்தது - சீவகன்மேல் போருக்குப் புறப்பட்டது.

(வி - ம்.) [சிலம்பின் : இன்-அசை. 'முலையெனும் புரவி' என்றார், புரவியின் பின் தேர் செல்லுமாறு போல முலைசென்று கவர்ந்த பின்னர்

அல்குற் பயன் கோடலின். இதனால் கற்புடைய மகளிரல்லாத பிறமகளி ரின் வேட்கை புலப்பட்டது கூறினார்.

காமன் சேனை, என்றது மகளிர் கூட்டத்தினை. (கூ0)

சுடுகூ. நூல்போர வரிய நுண்மை நுசுப்பினை யோசிய வீங்கிக்
கால்பரந் திருந்த வெங்கட் கதிர்முலை கச்சின் வீக்கிக்
கோல்போரச் சிவந்த கோல மணிவிரற் கோதை தாங்கி
மேல்வரல் கருதி நின்றார் விண்ணவர் மகளி ரொத்தார்.

(இ-ள்.) நூல்பொர அரிய நுண்மை நுசுப்பினை ஒசிய வீங்கி-நூலும் உவமைக்கொவ்வாத நுண்ணிய இடை ஒடியப் பருத்து; கால் பரந்திருந்த வெங்கண் கதிர்முலை கச்சின் வீக்கி - அடி பரந்திருந்த விருப்பமூட்டும் கரிய கண்களையுடைய ஒளிவிடும் முலைகளைக் கச்சினால் இறுக்கி; கோல் பொரச் சிவந்த கோல மணி விரல் கோதை தாங்கி - யாழ் நரம்பு தாக்கியதாற் சிவந்த அழகிய விரலாற் கூந்தலைத் தாங்கி; மேல்வரல் கருதி நின்றார் விண்ணவர் மகளிர் ஒத்தார் - சீவகன் வரவை எதிர்நோக்கிய மகளிர் வான மங்கையரைப் போன்றனர்.

(வி - ம்.) நுசுப்பின் : இன்ஐ : அசைச் சொற்கள். (கூக)

சுசுo. ஆகமு மிடையு மஃக
வடிபரந் தெழுந்து வீங்கிப்
போகமும் பொருளு மீன்ற
புணர்முலைத் தடங்க டோன்றப்
பாகமே மறைய நின்ற
படைமலர்த் தடங்க ணல்லார்
நாகம்விட் டெழுந்து போந்த
நாகர்தம் மகளி ரொத்தார்.

(இ - ள்.) ஆகமும் இடையும் அஃக அடிபரந்து எழுந்து வீங்கி - உடலும் இடையும் சுருங்குமாறு அடிபரந்து வளர்ந்து பருத்து; போகமும் பொருளும் ஈன்ற புணர்முலைத் தடங்கள் தோன்ற - இன்பத்தையும் தேமலாகிய பொருளையும் நல்கிய இணைமுலைகள் தெரிய; பாகமே மறைய நின்ற படை மலர்த் தடங்கண் நல்லார்-மெய்யின் அடிப்பாகம் மறைய நின்ற, காமன் படையாகிய மலரனைய பெருங்கண் மங்கையர்; நாகம் விட்டு எழுந்து போந்த நாகர்தம் மகளிர் ஒத்தார் - நாகலோகமாகிய பவணத்தை விட்டு வெளியே வந்த நாகமங்கையரைப் போன்றார்.

(வி - ம்.) புணர் முலை : நெருங்கின முலை என்றுமாம். படை : வேற்படையும் ஆம். ['முலைத்தடம் ஒருபாதியே தோன்ற ஒரு பாதி

மறைய, 'ஒருவர் பின்பு ஒருவராக நின்ற நல்லார்' என்பர் நச்சினார்க்கினியர். பொருந்துமேற் கொள்க.] (௫௨)

சசூக, வாளரந் துடைத்த வைவே
லிரண்டுடன் மலைந்த வேபோ
லாள்வழக் கொழிய நீண்ட
வணிமலர்த் தடங்க ணெல்லா
நீள்சுடர் நெறியை நோக்கு
நிரையிதழ் நெருஞ்சிப் பூப்போற்
காளைதன் றேர்செல் வீதி
கலந்துடன் றுேக்க வன்றே.

(இ - ள்.) வாள் அரம் துடைத்த வைவேல் இரண்டு உடன் மலைந்தவே போல் - வாளரத்தால் அராவின கூரிய வேல்கள் இரண்டு தம்முட் பொருதன போல; ஆள் வழக்கு ஒழிய நீண்ட அணிமலர்த் தடங்கண் எல்லாம் - ஆடவர் வரவினைப் போக்கி நீண்ட அழகிய மலரனைய பெருங்கண் எல்லாம்; நீள் சுடர் நெறியை நோக்கும் நிரையிதழ் நெருஞ்சிப் பூப்போல் - பெரிய ஞாயிறுபோம் நெறியைப் பார்க்கும் நிரையிதழ்களையுடைய நெருஞ்சி மலர்களைப் போல; காளை தன் தேர்செல் வீதி கலந்து உடன்தொக்க - சீவகனுடைய தேர்செல்லுந் தெருக்களிலே (கொடுமை செய்ய வியலாது) தம்மிற் கலந்து சேர நெருங்கின.

(வி - ம்.) வாளரம்: அரங்களில் ஒருவகை.

நெருஞ்சிப் பூ ஞாயிற்று மண்டிலம் இயங்குந்தோறும் அதற்கியையத் திரும்பி அதனை நோக்கும் இயல்புடையதாகலின் சீவகன் தேர் இயங்குதொறும் இயங்கி அவனையே நோக்கும் மகளிர் கண்களுக்கு உவமை எடுத்தார்.

இதனை,

"செங்கதிர் விரும்பும் பைங்கொடி நெருஞ்சிப்
பொன்புனை மலரின் புகற்சி போல." (உ - ச : கச - ௫.)

என வரும் பெருங்கதையானும் உணர்க. (௫௩)

சசூஉ. வடகமுந் துகிலுந் தோடு
மாலையு மணியு முத்துங்
கடகமுங் குழையும் பூணுங்
கதிரொளி கலந்து மூழ
ரிடவகை யெல்லை யெல்லா
மின்னிரைத் திட்ட தேபோற்
படவர வல்கு லாரைப்
பயந்தன மாட மெல்லாம்.

(இ - ள்.) வடகமும் துகிலும் தோடும் மாலையும் மணியும் முத்தும் கடகமும் குழையும் பூணும் கதிர் ஒளி கலந்து-போர்வை முதலானவற்றின் ஒளி நிலவின் ஒளியும் ஞாயிற்றின் ஒளியும் போலத் தம்மிற் கலக்குமாறு; மூதூர் இடவகை எல்லையெல்லாம் மின் நிரைத்திட்டதேபோல் - அப் பழம்பதியின் பல பகுதிகளி ளெல்லாம் மின்னை ஒழுங்குற அமைத்தாற்போல; மாடம் எல்லாம் படஅரவு அல்குலாரைப் பயந்தன - வீடுகளெல்லாம் அரவின்பட மனைய அல்குலையுடைய மகளிரை யீன்றன.

(வி - ம்.) வடகத்திற்கு அத்தவாளம் என்றும் பெயர். கலந்து - கலப்ப : வினையெச்சத் திரிபு. வகை - குறுந்தெரு. இனி, வடக முதலி யன ஒளி தம்மிற் கலக்கும்படி சில மின் நிரைத்தாற்போல என்றுமாம். (உசு)

சசுரு மாதுகு மயிலி னல்லார்
மங்கல மரபு கூறிப்
போதக நம்பி யென்பார்
பூமியும் புணர்க வென்பார்
தோதக மாக வெங்குஞ்
சுண்ணமேற் சோரிந்து தண்ணேன்
றுதுகு பிணையல் வீசிச்
சாந்துகொண் டெறிந்து நிற்பார்.

(இ - ள்.) மாது உகும் மயிலின் நல்லார் - காதல் ஒழுகும் மயிலனைய பரத்தையர்; மங்கலம் மரபு கூறி - முறைப்படி வாழ்த்துக் கூறி; நம்பி! போதக! என்பார் - நம்பியே! வருக! என்பார்; பூமியும் புணர்க என்பார் - நிலமகளும் கூடுக! என்பார்; தோதகம் ஆக எங்கும் சுண்ணம் மேல் சொரிந்து - வருந்துமாறு எங்கும் சுண்ணப் பொடியை அவன்மேற் சிதறி; தண் என் தாது உகுபிணையல் வீசி - குளிர்ந்த மகரந்தம் சிந்து மாலைகளை எறிந்து; சாந்து கொண்டு எறிந்து நிற்பார் - சந்தனத்தைக் கையிலெடுத்து வீசி நிற்பார்.

(வி - ம்.) மாதுகு நல்லார் எனவே பரத்தையராயினர். போதக - போதுக; 'திருவே புகுதக' (சீவக. உகஉக) என்றாற் போல. இவன் அரச னென்றறியாதிருந்தும் உலகங்காத்தற்குரியானெனக் கொண்டு 'பூமியும் புணர்க' என்றனர். இது முதல் 'வட்டுடை' (சசுஅ) அளவும் ஒருதொடர். (உரு)

சசுச. கோடையுளு மொருவன் கோல்லுங்
கூற்றினுங் கொடிய வாட்போர்ப்
படையுளு மொருவ னென்று
பயங்கெழு பனுவ னுண்ணூ

னடையுளார் சொல்லிற் றெல்லா
நம்பிசீ வகன்கட் கண்டாங்
தொடையலங் கோதை யென்று
சொல்லுபு தொழுது நிற்பார்.

(இ - ள்.) தொடையல் அம் கோதை! - கட்டிய அழகிய மாலையினாய்!; கொடையுளும் ஒருவன் - கொடையிலும் ஒருவனே கொடுப்பான்; கொல்லும் கூற்றினும் கொடிய வாட்போர்ப் படையுளும் ஒருவன் - கொல்கின்ற காலனினும் கொடிய வாளா லியற்றும் போர்ப்படையிலும் ஒருவனே கெடுப்பான்; என்று பயம்கெழு பனுவல் நுண்ணூல் நடையுளார் சொல்லிற்று எல்லாம் - என நலம் பொருந்திய ஆராய்ச்சியுடைய நுண்ணிய நூலின் ஒழுக்கமறிந்தோர் கூறியதை எல்லாம்; நம்பி சீவகன்கண் கண்டாம் என்று சொல்லுபு தொழுது நிற்பார் - நம்பியாகிய சீவகனிடம் கண்டோம் என்று கூறித் தொழுது நிற்பார்கள் சிலமங்கையர்.

(வி - ம்.) கொடையுளும், படையுளும் : உம் : உயர்வு சிறப்பும்மை. 'கொடையிலும் ஒருவனே சிறப்புறுவான்; படையிலும் ஒருவனே சிறப் புறுவான்' என்று நூலறிந்தோர் கூறுவர். 'எனினும், இவ்விரண்டும் இன்று சீவகனிடங் கண்டோம்' என்றனர். கொடையிற் சிறந்தோன் கன்னன். படையிற் சிறந்தோன் அருச்சுனன், 'ஒன்றல்லவை பல' என்பது தமிழ் நடை. ஆதலின், 'எல்லாம்' என்றார். சொல்லிற்றெல் லாம் : ஒருமை பன்மை மயக்கம் (௫௬)

௪௬௫. செம்மலைப் பயந்த நற்றாய்
செய்தவ முடைய ளென்பா
ரெம்மலைத் தவஞ்செய் தாள்கொ
லெய்துவம் யாமு மென்பா
ரம்முலை யமுத மன்னா
ரகம்புலர்ந் தமர்ந்து நோக்கித்
தம்முறு விழும வெந்நோய்
தந்துணைக் குரைத்து நிற்பார்.

(இ - ள்.) செம்மலைப் பயந்த நற்றாய் செய்தவம் உடையள் என்பார் - (சிலர்) இத்தகைய சிறப்புடையானைப் பெற்ற தாய் தவமுடையள் என்பர்; எம்மலைத் தவம் செய்தாள் கொல்? எய்துவம் யாமும் என்பார் - (சிலர்) அவள் எந்த மலையிலே தவம்புரிந்தனளோ, அங்கே யாமும் செல்வோம் என்பர்; அம் முலை அமுதம் அன்னார் அகம் புலர்ந்து அமர்ந்து நோக்கி - அழகிய முலைகளையுடைய அமுதம் அனைய சிலர் நெஞ்சு வாடி விரும்பி நோக்கி; தம் உறு விழும வெந்நோய் - தம் மிக்க சீரிய

துன்பந்தரும் காம நோயை; தம் துணைக்கு உரைத்து நிற்பார் - தம் தோழிக்குக் கூறி நிற்பர்.

(வி - ம்.) எம்மலைத் தவம் செய்தாள்கொல் என்பதற்கு " இவனை (கணவனாக)ப் பெற விருப்பவள் எம்மலையிலே நின்று தவஞ்செய்தாளோ " என்று விரிப்பர். 'தவம் செய்தார்கொல்' என்றும் பாடம். யாமும் அம் மலையை எய்தித் தவஞ்செய்து இவனை எய்த முயல்வேம் என்பார் எய்துவம் யாமும் என்றனர். (௬எ)

சகூகூ. சினவுநர்க் கடந்த செல்வன்
செம்மல ரகல நாளைக்
கனவினி லருளி வந்து
காட்டியாங் காண வேன்பார்
மனவிரி யல்கு லார்தம்
மனத்தோடு மயங்கி யோன்றும்
வினவுந ரின்றி நின்று
வேண்டுவ கூறு வாரும்.

(இ - ள்.) சினவுநர் கடந்த செல்வன்! - பகைவரை வென்ற செல்வனே!; செம்மலர் அகலம் நாளைக் கனவினில் அருளி வந்து யாம் காணக் காட்டி என்பார் - நின் செம்மலர் அணிந்த மார்பினை நாளைக் கனவிலே அருளுடன் வந்து யாம் காணக் காட்டுக என்பார் (சிலர்); மனவு விரி அல்குலார் தம் மனத்தொடு மயங்கி ஒன்றும் வினவுநர் இன்றி - மேகலையொளி பரவிய அல்குலாராகிய சில மகளிர் தம் உளத்திலே மயங்கியவராய் ஒன்றையும் வினவுவார் இல்லாமலே; நின்று வேண்டுவ கூறுவார் - நின்ற இடத்திலே தாம் சீவகனிடம் விரும்பியவற்றைக் கூறுவார்கள்.

(வி - ம்.) உம்: எண்ணும்மை. காட்டி: இகர வீற்று வியங்கோள்.

இன்று நேரிற் கண்டதுகொண்டு இப் பகற்பொழுதில் ஒருவாறு ஆற்றியிருப்பேம் இரவுப் பொழுதினில் ஆற்றகில்லேம் என்பார் "கனவினில் அருளிவந்து காட்டுக என்றார்" என்பது கருத்து. வேண்டுவ - தாம் விரும்பியவற்றை. (௬அ)

சகூஎ. விண்ணகத் துளர்கோன் மற்றிவ்
வேன்றிவேற் குருசி லோப்பார்
மண்ணகத் திவர்க ளோவ்வார்
மழகளி றனைய தோன்றல்
பண்ணகத் துறையுஞ் சோல்லார்
நன்னலம் பருக வேண்டி
யண்ணலைத் தவத்திற் றந்தார்
யார்கோலோ வளிய ரேன்பார்.

(இ - ள்.) மண் அகத்து இவர்கள் மழகளிறு அனைய தோன்றல் ஒவ்வார் - நிலவுலகத்துள்ள இவர்கள் இளங்களிறு போன்ற இத் தோன்றலுக்கு ஒப்பாகார்; மற்று இவ் வென்றி வேல் குருசில் ஒப்பார் விண் அகத்து உளர்கொல்? - இனி இவ் வெற்றி வேலேந்திய குருசிலை ஒப்பார் வானுலகத்தே உள்ளனரோ? அறியேம்; பண் அகத்து உறையும் சொல்லார் நல்நலம் பருகவேண்டி - பண்ணில் அமைந்த இனிய மொழி மங்கையர் நல்ல அழகை நுகர விரும்பி; அண்ணலைத் தவத்தின் தந்தார் யார்கொலோ? அளியர் என்பார் - இப் பெருந்தகையைத் தவத்தினாலே பெற்றவர் யாவரோ? அவர் அளிக்கத் தக்கார் என்பார் (சிலர்).

வி - ம்.) உலகிலுள்ள இளைஞர் தம் மனத்திற்கு அணியராதலால் இவர் என்று சுட்டினர். யார்கொலோ என்றது மக்களோ தேவரோ என்றையுற்றவாறு. (ருகூ)

சசுஅ வட்டுடைப் பொலிந்த தானை
வள்ளலைக் கண்ட போழ்தே
பட்டுடை சூழ்ந்த காசு
பஞ்சிமேல் லடியைச் சூழ
அட்டரக் கனைய செவ்வா
யணிநலங் கருகிக் காமக்
கட்டழ லெறிப்ப நின்றார்
கைவளை கழல நின்றார்.

(இ - ள்.) வட்டு உடைப் பொலிந்த தானை வள்ளலைக் கண்ட போழ்தே - வட்டுடையோடு அழகுற்றுக் காணப்படும், உடையணிந்த வள்ளலாகிய சீவகனைக் கண்டபொழுதே; அட்ட அரக்கு அனைய செவ்வாய் அணிநலம் கருகி - காய்ச்சிய செவ்வரக்கனைய சிவந்த வாயின் அழகிய நலம் கருகி; பட்டு உடை சூழ்ந்த காசு பஞ்சி மெல் அடியைச் சூழ - பட்டாடையிலே சூழ அணிந்த மேகலை பஞ்சி அனைய மெல்லிய அடியைச் சூழவும்; கைவளை கழல நின்றார் - கைவளைகள் கழலவும் (மெய் யிளைத்து) நின்றனர்.

(வி - ம்.) வட்டுடை: முழந்தாள் அளவாக வீரர் உடுக்கும் உடை. அட்ட அரக்கு: அகரம் தொக்கது. (சு0)

சசுகூ. வார்செலச் செல்ல விம்மு
வனமுலை மகளிர் நோக்கி
யோர்செலச் செல்ல வேத்தித்
தொழுதுதோ ழேக்க விப்பாற்

பார்சேலச் செல்லச் சிந்திப்
பைந்தொடி சோரிந்த நம்பன்
றேர்சேலச் செல்லும் வீதி
பீர்சேலச் செல்லு மன்றே.

(இ - ள்.) வார்செலச் செல்ல விம்மும் வனமுலை மகளிர் நோக்கி - கச்சு மேலே போகப்போக விம்முகின்ற அழகிய முலைகளையுடைய பெண்கள் சீவகனை நோக்கி; ஏர் செலச் செல்ல ஏத்தித் தொழுது இப்பால் தோள் தூக்க - (தங்கள்) அழகு மெலிய மெலியக் கும்பிட்டு அவன் சென்ற பிறகு தோள்களைத் தொங்கவிட; செலச் செல்லச் சிந்திப் பைந்தொடி பார் சோரிந்த - சிறிது சிறிதாக நழுவிப் பசிய தொடிகள் நிலத்திலே வீழ்ந்தன; நம்பன்தேர் செலச் செல்லும் வீதி பீர்செலச் செல்லும் - (இங்ஙனம்) நம்பனுடைய தேர் சென்றுகொண்டிருக்கும் தெருக்கள் தோறும் மகளிர்க்கு மெய்யிலே பசப்புப் பரவிப் பரவிச் செல்லும்.

(வி - ம்.) செல்லும் என்பது நிகழ்காலம் உணர்த்தியது. தொடி - மகளிர் தோளில் அணிவது; பலவாதலிற் 'சொரிந்த' என்றார்.

'நீப்ப நீங்காது வரின்வரை யமைந்து, தோட்பழி மறைக்கு முதவிப், போக்கில் பொலந்தொடி' (நற். கஙசு) என்பர். முன் வளை கழல நின்றார்க்கு வருத்த மிகுதியால், தொடியும் கழன்றன.

தோள் தூக்க - தோளைத் தூங்கவிட. பீர் - பசப்பு. ஆகுபெயர்.

(சுக)

சஎO. வாண்முகத் தலர்ந்த போலு
மழைமலர்த் தடங்கண் கோட்டித்
தோண்முதற் பசலை தீரத்
தோன்றலைப் பருகு வார்போ
ஞண்முதற் பாசந் தட்ப
நடுங்கினார் நிற்ப நில்லான்
கோண்முகப் புலியோ டொப்பான்
கோழுநிதிப் புரிசை புக்கான்.

(இ - ள்.) வாள்முகத்து அலர்ந்த போலும் மழை மலர்த் தடம்கண் கோட்டி - ஒளியுற்ற முகத்திலே மலர்ந்த மலர் போன்ற குளிர்ந்த பெரிய கண்களை வளைத்து; தோள் முதல் பசலை தீர - தோளிலே அமைந்த பசப்பு நீங்குமாறு; தோன்றலைப் பருகுவார்போல் - சீவகனைப் பருகுகின்றவர்கள் போல (நோக்கி); நாண் முதல் பாசம் தட்ப நடுங்கினார் நிற்ப - நாணாகிய முதல் தளை தடுக்க நடுங்கி நிற்கும்போது; நில்லான் - தான் நில்லாதவனாய்; கோள்முகப் புலியோடு ஒப்பான் - கொல்லும் முகத்தை

யுடைய புலி போன்ற சீவகன்; கொழுநிதிப் புரிசை புக்கான் - வளமிகு செல்வமுடைய தன் மனையக மதிலுக்குள்ளே புகுந்தான்.

(வி - ம்.) கோட்டுதல் - வளைத்தல். தோன்றல்-சீவகன். மகளிர்க்குரிய நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் நான்கனுள் முன்னிற்பதாகலின் நாண்முதற் பாசம். புரிசை - தன் மனைமதில். (சுஉ)

சஎக. பொன்னுகம் புரவி பூட்டு
விட்டுடன் பந்தி புக்க
மன்னுக வென்றி யென்று
மணிவள்ள நிறைய வாக்கி
யின்மதுப் பலியும் பூவுஞ்
சாந்தமும் விளக்கு மேந்தி
மின்னுகு செம்போற் கோட்டில்
விளங்குதேர் புக்க தன்றே.

(இ - ள்.) புரவி பொன் நுகம் பூட்டு விட்டு உடன் பந்தி புக்க - குதிரைகள் பொன் நுகத்திலிருந்து பூட்டு நீங்கி உடனே தம் பந்தியிலே புகுந்தன; மணி வள்ளம் நிறைய இன்மது வாக்கி - மாணிக்கக் கிண்ணம் நிறைய இனிய மதுவை வார்த்து; பலியும் பூவும் சாந்தமும் விளக்கும் - அம் மதுவாகிய பலி முதலியவற்றை; வென்றி மன்னுக என்று ஏந்தி - வென்றி நிலை பெறுக என்று ஏந்த; விளங்குதேர் மின் உகு செம்பொன் கொட்டில் புக்கது - ஒளிவிடும்தேர் விளக்கமான செம்பொன் கொட்டிலிலே புகுந்தது.

(வி - ம்.) விளக்குமேந்தி என்புழி செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாக்குக. (சுஙு)

சஎஉ இட்டவுத் தரிய மெல்லென்
றிடைசுவல் வருத்த வோல்கி
யட்டமங் கலமு மேந்தி
யாயிரத் தெண்ம ரீண்டிப்
பட்டமுங் குழையு மின்னப்
பல்கல னொலிப்பச் சூழ்ந்து
மட்டவிழ் கோதை மாதர்
மைந்தனைக் கொண்டு புக்கார்.

(இ - ள்.) மட்டு அவிழ் கோதை மாதர் ஆயிரத்தெண்மர் ஈண்டி - தேன் விரியும் மாலையணிந்த மங்கையர் ஆயிரத்தெண்மர்

கூடி; அட்ட மங்கலமும் ஏந்தி - எட்டு மங்கலப் பொருளையும் ஏந்தி; இட்ட உத்தரியம் மெல்லென்ற இடைசுவல் வருத்த ஒல்கி - அணிந்த மேலாடை மெல் என்ற இடையையும் பிடரையும் அலைக்கச் சென்று; பட்டமும் குழையும் மின்னப் பல்கலன் ஒலிப்ப - பட்டமும் குழையும் ஒளிரப் பல்வகை அணிகளும் ஒலி செய; மைந்தனைக் கொண்டு சூழ்ந்து புக்கார் - சீவகனை எதிர் கொண்டு சூழ்ந்து உள்ளே அழைத்துச் சென்றனர்.

(வி - ம்.) 'சாமரை தீபம் தமனியப் பொற்குடம்
காமர் கயலின் இணைமுதலாத்—தேமருவு
கண்ணடி தோட்டி கதலிகை வெண்முரசம்
எண்ணிய மங்கலங்கள் எட்டு.'

[தமனியப் பொற்குடம் - பொன்னாலாகிய அழகிய குடம். காமர் - அழகிய. கயலின் இணை - இரட்டைக் கயல்மீன். தோட்டி - அங்குசம் கதலிகை - கொடி.] (கூ௫)

௬எ௬. தாயுயர் மிக்க தந்தை
வந்தெதிர் கொண்டு புக்குக்
காய்கதிர் மணிசெய் வெள்வேற்
காளையைக் காவ லோம்பி
யாய்கதி ருமிழும் பைம்பூ
ணாயிரச் செங்க ணன்றன்
சேயுய ருலக மெய்தி
யன்னதோர் செல்வ முற்றார்.

(இ - ள்.) தாய் உயர் மிக்க தந்தை வந்து எதிர்கொண்டு புக்கு - தாயும் உயர்வு மிகுந்த தந்தையும் வந்து எதிர்கொண்டு அழைத்துச் சென்று; காய் கதிர்மணி செய்வெள்வேல் காளையைக் காவல் ஓம்பி - ஒளிவீசும் மணிகள் அணிந்த வேலேந்திய சீவகனை ஆலத்தி முதலியவற்றால் கண் எச்சில் போக்கி; ஆய் கதிர் உமிழும் பைம்பூண் ஆயிரச் செங்கணான் தன்சேய் உயர் உலகம் - ஆய்ந்த ஒளி வீசும் புத்தணி புனைந்த ஆயிரஞ்சிவந்த கண்ணுடைய இந்திரனது மிகவுயர்ந்த வானுலகை; எய்தி அன்னது ஓர் செல்வம் உற்றார் - அடைந்தாற் போன்ற ஒரு செல்வத்தைத் தாம் அடைந்தவரானார்.

(வி - ம்.) 'உயர்மிக்க தந்தை'; என்பதற்கு 'மகனுயர்ச்சி மிகுதற்குக் காரணமான தந்தை'; 'சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே' (புறநா. ௩௧௨) என்றார் பிறரும் - என்று பொருளும் சான்றும் கூறுவர் நச்சினார்க்கினியர்.

'காளையை எதிர்கொண்டு' எனக் கூட்டுக. (கூ௬)

சஎச. தகைமதி யெழிலை வாட்டுந்
தாமரைப் பூவி னங்கட்
புகைநுதி யழல வாட்கட்
பொன்னனாள் புல்ல நீண்ட
வகைமலி வரைசெய் மார்பின்
வள்ளலைக் கண்டு வண்டார்த்
தொகைமலி தொறுவை யாளுந்
தோன்றன்மற் றின்ன கூறும்.

(இ - ள்.) தகைமதி எழிலை வாட்டும் தாமரைப் பூவின் அங்கண் - பெருமை மிக்க திங்களின் எழுச்சியை வருத்தும் பொற்றாமரைப் பூவில் இருக்கும்; புகை நுதி அழல வாள் கண் பொன்னனாள் புல்ல - புகையும் நுனி அனல் வீசும் வாளனைய கண்களையுடைய திருமகள் தழுவுமாறு; நீண்ட வகைமலிவரை செய்மார்பின் வள்ளலைக் கண்டு-அகன்ற அழகின் வகை நிறைந்த மலையனைய மார்பினையுடைய சீவகனைக் கண்டு; வண் தார்த் தொகை மலி தொறுவை ஆளும் தோன்றல் இன்ன சொன்னான்- வளவிய மாலை அணிந்த, தொகை நிறைந்த ஆனிரையை ஆளும் நந்தகோன் இவற்றைக் கூறினான். (சுசு)

சஎரு கேட்டிது மறக்க நம்பி
கேண்முதற் கேடு சூழ்ந்த
நாட்டிறை விசயை யென்னு
நாறுபூங் கோம்ப னாளை
வேட்டிறைப் பார மெல்லாங்
கட்டியங் காரன் றன்னைப்
பூட்டிமற் றவன்ற னாலே
பொறிமுதல் அடர்க்கப் பட்டான்.

(இ - ள்.) நம்பி இது கேட்டு மறக்க - நம்பியே! இதனைக் கேட்டு மறப்பாயாக; கேள் முதல் கேடு சூழ்ந்த நாட்டு இறை - நட்பு முதலாக நாட்டிற்குக் கெடுதியை எண்ணிய சச்சந்தன்; விசயை என்னும் நாறு பூங்கொம்பனாளை வேட்டு - விசயை என்னும் மணமலர்க் கொம்பு போல்வாளை மணந்து; இறைப் பாரம் எல்லாம் கட்டியங்காரன் தன்னைப் பூட்டி - அரசு உரிமை முழுதையும் கட்டியங்காரனுக்குச் சேர்த்து; அவன் தன்னாலே பொறிமுதல் அடர்க்கப் பட்டான் - அவனாலே தன் உயிர் கொள்ளப்பட்டான்.

(வி - ம்.) பொறிமுதல் - இருவினையும் செய்தற்குக் காரணமான உயிர். 'தொழின் முதனிலையே' (தொல். வேற்றுமை மயங்கி. உகூ) என்றாற் போல. நாட்டையும் அமைச்சர் அறிவுரையையும் நோக்காததனால், 'கேள்முதற் கேடுசூழ்ந்த நாட்டிறை' என்றார். 'கேள் முதல்' என்பதற்கு 'முதலில் இதனைக் கேள்' என்று பொருள் உரைப்பர் நச்சினார்க்கினியர். (சுஎ)

சஎசு. கோலிழுக் குற்ற ஞான்றே
கோடுமுடி வரையொன் றேறிக்
காலிழுக் குற்று வீழ்ந்தே
கருந்தலை கழைய லுற்றேன்
மால்வழி உள தன் றாயின்
வாழ்வினை முடிப்பல் என்றே
ஆலம்வித் தனைய தெண்ணி
அழிவினுள் அகன்று நின்றேன்.

(இ - ள்.) கோல் இழுக்கு உற்ற ஞான்றே கொடுமுடிவரை ஒன்று ஏறி - அரசன் இறந்த அன்றே நீண்ட முடியை யுடைய மலை ஒன்றில் ஏறி; கால் இழுக்குற்று வீழ்ந்தே கருந்தலை கழையல் உற்றேன் - கால்தவறி வீழ்ந்தவன்போல் வீழ்ந்து தலையுடைந்து இறக்க முயன்றேன்; மால் வழி உளதன்றாயின் வாழ்வினை முடிப்பல் என்றே - அரசன் கால்முளை இல்லை யென்றறிந்த பிறகே வாழ்வை முடிப்பேன் என்றே; ஆலம் வித்து அனையது எண்ணி - ஆலம் விதை போன்ற பயனுடைய நினைவு கொண்டு; அழிவினுள் அகன்று நின்றேன் - இறப்பினை நீங்கி நின்றேன்.

(வி - ம்.) [நச்சினார்க்கினியர், 'அரசன் வழி ஆலம்வித்துப் போலத் தெறித்துப்போய் மறைந்தது பின் தோன்றினதில்லையாயின் உயிரைப் போக்குவல் என்றே எண்ணி, வருத்தத்தே மிக்கு நின்றேன்' என்று மொழி மாற்றிப் பொருள் கூறுவர்.]

'கால் இழுக்குற்று வீழ்ந்து' என்றது, கட்டியங்காரன், 'இவன் அரசனோடு இறந்தான்' என்று நட்புரிமையறிந்து தன் சுற்றத்தை யழிப்பான் என்று கருதி.

அரசிக்கு மகவுண்மை யறிதலின் இங்ஙனங் கூறினான். இதனையே, 'கேட்டு மறக்க' என்றான்.

நன்றல்லது அன்றே மறப்பது நன்றாயினும் நினக்கிதனைக் கூறுதல் நன்றென்று கூறுகின்றேன் என்பான் கேட்டிதுமறக்க என்றான். (சுஅ)

சஎஎ. குலத்தொடு முடிந்த கோன்றன்
குடிவழி வாரா நின்றே
னலத்தகு தோழவி னுள்ளே
ளுமங்கோ விந்த னென்பே

னிலக்கண மமைந்த கோதா
வரியென விசையிற் போந்த
நலத்தகு மனைவி பெற்ற
நங்கைகோ விந்தை யென்பாள்.

(இ - ள்.) குலத்தொடு முடிந்த கோன்தன் குடிவழி வாராநின்றேன் - குலத்தோடு மடிந்த அரசனுடைய குடிகளின் வழியிலே வருவேன் யான்; நலம்தகு தொறுவின் உள்ளேன் - நன்மையுற்ற ஆனிரை யுடையேன்; நாமம் கோவிந்தன் என்பேன் - கோவிந்தன் என்று பெயர் கூறப்படுவேன்; இலக்கணம் அமைந்த கோதாவரி என இசையின் போந்த - மகளிரிலக்கணம் பொருந்திய கோதாவரி என்று புகழப் பெற்ற; நலம்தகும் மனைவி பெற்ற நங்கை கோவிந்தை என்பாள் - நன்மையுடையாள் என் மனைவி யீன்ற மங்கை கோவிந்தை எனப்படுவாள்.

(வி - ம்.) குலம் தோன்றுதல் அருமை பற்றிப் பின்னும், 'முடிந்த' என்றான். தன்குலமெல்லாம் இப்போது தானே என்பது தோன்ற, 'வாராநின்றேன்' என்றான்.

இலக்கணம் - குலமகளிர்க்குரிய இலக்கணம். கோதாவரி என்பது நந்தகோன் மனைவியின் பெயர். 'தாயைப்போலே பிள்ளை' என்னும் பழமொழி பற்றிக் கோவிந்தையின் சிறப்புக் கூறுவான் தாய்மேலேற்றிக் கூறினன் என்க. (சுசு)

சஎஅ. வம்புடை முலையி னுளேன்
மடமகள் மதர்வை நோக்க
மம்படி யிருத்தி நெஞ்சத்
தழுத்தியிட் டனைய தோப்பக்
கோம்படு நுசுப்பி னாளைக்
குறையிரந் துழந்து நின்ற
நம்படை தம்மு ளெல்லா
நகைமுக மழிந்து நின்றேன்.

(இ-ள்.) வம்பு உடை முலையினுள் என் மடமகள் மதர்வை நோக்கம் - கச்சிறுக்கிய முலையுடையாளாகிய என் மடமகளின் மயக்கத்தை ஊட்டும் நோக்கம்; அம்பு அடி யிருத்தி நெஞ்சத்து அழுத்தியிட்ட அனையது ஒப்ப - அம்பினைத் தோளடியிலே செல்ல ஊன்றி நெஞ்சத்தில் அழுத்தியிட்டாற் போன்றதாலே; கொம்பு அடு நுசுப்பினாளை - மலர்க் கொம்பை வென்ற இடையினாளை; குறை இரந்து உழன்று நின்ற - பெறவேண்டி வருந்தி நின்ற; நம் படை தம்முள் எல்லாம் நகைமுகம் அழிந்து நின்

றேன் - நம் ஆயர்குழுவி லெல்லாம் முகச் செவ்வி காட்டாது மறுத்து நின்றேன்.

(வி - ம்.) தான் மகட்கொடை விரும்புதலின் நம்படையென்றான். சீவகன் விரும்பிக் கொள்வதற்கு மகளை இங்ஙனம் சிறப்பித்துக் கூறினன்.

நம்படை என்றது ஆயர்களை. நகைமுகம் என்றது உடம்பாடறி விக்கும் முகத்தை. எனவே முகங்கொடாதிருந்தேன் என்பதாயிற்று. (எ0)

சஎகூ பாடகஞ் சுமந்த செம்பொற் சீறடிப் பரவை யல்குற்
சூடக மணிந்த முன்கைச் சுடர்மணிப் பூணி னாளை
யாடகச் செம்பொற் பாவை யேழுடன் தருவ லைய
வாடலில் வதுவை கூடி மணமக னாக என்றான்.

(இ - ள்.) ஐய! - ஐயனே!; பாடகம் சுமந்த செம்பொன் சீறடி - பாடகம் அணிந்த செம்பொன் அனைய சிற்றடியையும்; பரவை அல்குல் - பரவிய அல்குலையும்; சூடகம் அணிந்த முன் கை - வளையல் அணிந்த முன் கையினையும்; சுடர்மணிப் பூணினாளை - ஒளிவிடும் மணியணியுடைய கோவிந்தையை; ஆடகம் செம்பொன் பாவை ஏழுடன் தருவல் - ஆடகப் பொன்னாலாய பதுமைகள் ஏழுடன் தருவேன்; வாடல் இல் வதுவை கூடி மணமகன் ஆக என்றான்-குறைவற்ற திருமணம் புரிந்துகொண்டு மணமகன் ஆவாயாக என்று வேண்டினன்.

(வி - ம்.) இஃது கேட்பினும் மறக்கத் தகாதமொழி. 'கேள் முதல்' என்பதற்கு 'முதலிற் கேள்' என்று 'கேட்டிது மறக்க' (சுஎ௫) என்னுஞ் செய்யுளுரையில் நச்சினார்க்கினியர் முன்னர்க் கூறப்பட்ட தற்குத் தொடர்பு காட்டுகிறார் இங்கே. (எக)

வேறு

சஅ0. வேண்ணெய்போன் றூறினியண் மேம்பால்போ
[றீஞ்சொல்ல
ளுண்ண வுருக்கிய வானெய்போன் மேனியள்
வண்ண வனமுலை மாதர் மடநோக்கி
கண்ணுங் கருவிளம் போதிரண்டே கண்டாய்.

(இ - ள்.) வண்ணம் வனமுலை மாதர் மடநோக்கி-நிறமும் அழகும் உடைய முலையினையுடைய காதலை யூட்டும் மட நோக்கினள்; வெண்ணெய் போன்று ஊறு இனியள் - வெண்ணெயைப் போலக் குழைந்து தொடுதற்கு இனியவள்; மேம்பால் போல் தீஞ்சொல்லள் - விரும்பும் பால் போல இனிய மொழி

யாள்; உண்ண உருக்கிய ஆன் நெய்போல் மேனியள் - வற்ற உருக்கிய பசுவின் நெய்போன்ற மேனியாள்; கண்ணும் கருவிளம்போது இரண்டே கண்டாய் - கண்களும் இரண்டு கருவிள மலர்களே யென அறிவாய்.

(வி - ம்.) மேம்பால்: மேவும் பால்: 'மேவும்' என்பதன் ஈற்றயல் நின்ற உகரம் தான் நின்ற மெய்யொடுங் கேட்டது. உண்ண - வற்ற. கண்ணும்: உம்: உயர்வு சிறப்பும்மை. இடையர்க்குற்ற பொருள்களே ஈண்டுவமையாயின நயங்காண்க. (எஉ)

சஅக. சேதா நறுநெய்யுந் தீம்பால் சுமைத்தயிரும்
பாதால மெல்லாம் நிறைத்திடுவல் பைந்தாரோய்
போதார் புனைகோதை சூட்டுன் னடிச்சியை
யாதாவ தெல்லா மறிந்தருளி யென்றான்.

(இ - ள்.) பைந்தாரோய்! - புதிய மாலையுடையாய்!; சேதா நறு நெய்யும் தீம் பால் சுமைத் தயிரும் - செம்மைநிறப் பசுவின் நன்மண முறு நெய்யும் இனியபாலும் ஆடைத் தயிரும்; பாதாலம் எல்லாம் நிறைத்திடுவல்-பாதாலவுலகினும் நிறையச் செய்வேன்; ஆவது யாது எல்லாம் அறிந்தருளி - ஆகக் கடவது யாதோ அதனை முற்றும் ஆராய்ந்தருளி; உன் அடிச்சியைப் போது ஆர் புனை கோதை சூட்டு என்றான் - உன் அடித்தொண்டுக்குரிய கோவிந்தையை மலராற் புனைந்த மலர்மாலையால் அணிவாயாக என்றான்.

(வி - ம்.) செம்மை+ஆ=சேதா. 'யாது ஆவது?—யாது கெடுதியாம்?' என்றும் கூறலாம்.

சேதா - சிவப்புப் பசு. பசுக்களிற் சிவப்புப் பசு சிறந்ததென்பது பற்றிச் சேதா என்றான். சுமைத் தயிர் - ஆடையையுடைய தயிர். மிகுதியாக நிறைப்பேன் என்பான் பாதாலமெல்லாம் நிறைத்திடுவல் என்றான். (எங)

சஅஉ. குலநினைய னம்பி கொழுங்கயற்கண் வள்ளி
நலநுகர்ந்தா னன்றே நறுந்தார் முருக
னிலமகட்குக் கேள்வனு நீணிரைநப் பின்னை
யிலவலர்வா யின்னமிர்த மெய்தினு னன்றே.

(இ - ள்.) நம்பி! - நம்பியே!; கொழும் கயல்கண் வள்ளி நலம் நறுந்தார் முருகன் நுகர்ந்தான் அன்றே - கொழுவிய கயல் போன்ற கண்களையுடைய வள்ளியின் நலத்தை நறுமணமாலை அணிந்த முருகன் துய்த்தான் அன்றே?; நிலமகட்குக் கேள்வனும் நீள் நிரை நப்பின்னை-நிலமகளின் கணவனை திருமாலும் மிகுதியான ஆனிரையை யுடைய நப்பின்னையின்; இலவு அலர்

வாய் இன் அமிர்தம் எய்தினுன் அன்றே - இலவ மலரனைய வாயி லுள்ள இனிய அமிர்தத்தை நுகர்ந்தான் அல்லனே!; (ஆத லால்); குலம் நினையல் - நம் இருவரின் குலவேற்றுமையை நினையாதே (என்றான்).

(வி - ம்.) பின்னை: பெயர்; இவள் இடைக்குலப் பெண். ந: சிறப்புப் பெயர் உணர்த்தும் இடைச்சொல். நச்செள்ளை, நப்பாலத்தன், நக்கீரன் என்பன காண்க. நம்பின்னை என்பது விகாரப்பட்டது எனினும் ஆம்.

முதலில் மணமகனாக என்றான். சீவகன் முகத்தே செவ்வி கண்டில து. எனவே, செல்வம் நிறைத்திடுவல் என்றான். பின்னுஞ் செவ்வி காணாமையின் குலம் நினைந்தான் போலும் என்று கருதி யிறுதியிலே குலவேற்றுமை கருதற்க என்றான்.

நீ அரசர்குலத் தோன்றல் என்மகள் அக்குலத்திற் றாழ்ந்த ஆயர் குலத்துப் பிறந்தாளென்று கருதற்க என்பான் 'குலம் நினையல் நம்பி' என்றான். அங்ஙனம் கருதவேண்டாமைக்குப் பின்னர் ஏதுக் கூறு கின்றான் நறுந்தார் முருகன் என்றது இறைவன் மகனாகிய முருகனும் என்பதுபட நின்றது. கண்ணனின் சிறப்போதுவான் நிலமகட்குக் கேள்வனும் என்று விதந்தான். எங்குலமகள் என்பான் நிரை நப்பின்னை என்றான்.

நச்சினார்க்கினியர் சஅ0 முதல் சஅஉ வரை உள்ள செய்யுட்களை ஒரு தொடராக்கிக் கூறும் முடிபு:

"பைந்தாரோய், நம்பி, முலையினையும் காதலினையுமுடைய மடநோக்கி வெண்ணெய்போற் குழைந்து இனியள்: சொல்லள்; மேனியள்; அவை யன்றி அவள் கண்களும் பூவிரண்டேகாண்; அவளை வரைந்தால் யாது ஆவது? யாமறிய முருகன் வள்ளிநலம் நுகர்ந்தானன்றே, திருமால் பின்னையைப் புணர்ந்தானன்றே; ஆதலால் குலத்தின் தாழ்வு கருதாது ஒழிக, இனி, யான், கூறியன வெல்லாம் திருவுள்ளம் பற்றி நின் அடிச் சியைக் கோதை சூட்டுவாயாக; சூட்டுமிடத்திற் கலியாணஞ் செய் தற்குச் சிறியேன் அல்லேன்; நெய்யும் பாலும் தயிரும் பாதாளமெல்லாம் நிறைப்பேன்" என்றான் என்க. (எச)

வேறு

சஅரு. கன்னியர் குலத்தின் மிக்கார்
கதிர்முலைக் கன்னி மார்ப
முன்னினர் முயங்கி னல்லான்
முழிமிடை படலை மாலைப்
பொன்னிழை மகளி ரோவ்வா
தவரைமுன் புணர்தல் செல்ல
ரின்னதான் முறைமை மாந்தர்க்
கேனமனத் தேண்ணி ஞனே

(இ - ள்.) குலத்தின் மிக்கார் கன்னியர் கதிர்முலைக் கன்னி மார்பம் - தம் குலத்திற் சிறந்தவராகிய கன்னியரின் கதிர்த்த முலைகளையுடைய அழியாத மார்பினை; முன்னினர் முயங்கின் அல்லான் - ஆராய்ந்து தழுவின் அல்லாமல்; முறிமிடை படலை மாலைப் பொன்னிழை மகளிர் ஒவ்வாதவரை - தளிரும் மலருமாகத் தொடுத்த வகை மாலையினையும் பொன்னணியையும் அணிந்த மகளிரில் தம் குலத்திற்கு ஒவ்வாதவரை; முன் புணர்தல் செல்லார் - முதலிலே கூடுதலைக் கொள்ளார்; மாந்தர்க்கு முறைமை இன்னது என மனத்து எண்ணினன் - மக்களுக்குரிய ஒழுங்கு இத்தகையது என்று உள்ளத்திலே (சீவகன்) எண்ணினன்.

(வி - ம்.) மக்கட்கு என்றதனால் வானவர்க்குக் குலவேற்றுமை யின்றென்று கருதினன் ஆயிற்று. மனத்து எண்ணினன் என்றதனால் தன் தோழன் பதுமுகனுக்குக் கொடுக்க எண்ணினன் என்றுங் கொள்க.

இச் செய்யுளால் தேவர் காலத்தேதான் தமிழ்நாட்டில் சாதி வேற்றுமை பாராட்டும் வழக்கம் வேரூன்றித் தழைத்ததுபோலும் என்று ஊகிக்க இடன் உண்டு. (௭௫)

௪௮௪. கோட்டிளங் களிறு போல்வா
 னந்தகோன் முகத்தை நோக்கி
மோட்டிள முலையி னாளின்
 மடமக ளெனக்கு மாமான்
சூட்டோடு கண்ணி யன்றே
 யென்செய்வா னிவைகள் சொல்லி
நீட்டித்தல் குணமோ வென்று
 நெஞ்சகங் குளிர்ப்பச் சொன்னான்.

(இ - ள்.) கோடு இளங்களிறு போல்வான் நந்தகோன் முகத்தை நோக்கி - கோட்டினையுடைய இளங்களிறு போன்ற சீவகன்? நந்தகோனுடைய முகத்தைப் பார்த்து; மாமான்! - மாமா!; மோடு இளமுலையினாள் நின் மடமகள் - பெரிய இளமைச் செவ்வியுடைய நின் மகள்; எனக்குச் சூட்டொடு கண்ணி அன்றே? - எனக்கு நெற்றிச் சூட்டும் கண்ணியும் ஆவாள்; இவைகள் சொல்லி என் செய்வான்? - (ஆகையால்) இவைகளைச் சொல்லி என்ன செய்வது?, நீட்டித்தல் குணமோ? - இவ்வாறு வீண்காலம் போக்குதல் பண்புடைமையோ?; என்று நெஞ்சகம் குளிர்ப்பச் சொன்னான் - என்று உள்ளங்குளிர இன்மொழிகளையுங் கூட்டிக் கூறினான்.

(வி - ம்.) நெஞ்சகங் குளிர்ப்பக் கூறிய வற்றிற் பதுமுகனுக்குக் கொடுக்குமாறு இசைவித்ததையுங் கொள்க.

'சூட்டொடு கண்ணியன்றே' என்றது இடுந்தன்மை யன்றிச் சூட்டுந் தன்மையோடு கூடிய கண்ணியல்லவோ என்றும், நெற்றிச் சூட்டும் கண்ணியு மல்லவோ என்றும் இரண்டு பொருளுணர்த்தும். எனவே, மார்பிற்கு மாலையிடுக வென்றும், தலைமாலை சூட்டுகவென்றும் பெரும் பான்மையும் வழக்கு நடத்தலின், தலைமேல் வைக்கப்படுங் கண்ணியென் றான் என நந்தகோன் கருதினனும். நெற்றிச் சூட்டு ஆடவர்க்காகாத தன்மையும், கண்ணி ஆடவர்க்கு ஆந்தன்மையும் போலத் தன்குலத்திற்கு ஆகாமையிற் சூட்டின் தன்மையும், பதுமுகன் [வணிகனுதலின்] அவன் குலத்திற்குச் சிறிது பொருந்துதலிற் கண்ணியின் தன்மையும் உடைய னென்று சீவகன் கருதினனும், கோபாலரினும் வாணிகஞ் செய் வாருளராதலின்.

இனி, 'மாமான் எனக்குச் சூட்டொடு கண்ணியன்றே' என்றது: தனக்கு ஆகாமையிற் புலாலும், பதுமுகற்கு ஆதலிற் பூவுமாகக் கருதி னன் என்றுமாம். [சூட்டு - இறைச்சி] இனி, ஆமான் என்று பிரித்து ஆமான் சூட்டு என்றுங் கொள்க. இனி மா வடசொல்லாகக்கொண்டு ஆகாதென்றும் உரைப்பர். (எசு)

௪௮௫. தேன்சோரி முல்லைக் கண்ணிச்
செந்துவ ராடை யாயர்
கோன்பெரி துவந்து போகிக்
குடைதயிர் குழுமப் புக்கு
மான்கறி கற்ற கூழை
மௌவல்சூழ் மயிலைப் பந்தர்க்
கான்சோரி முல்லைத் தாரான்
கடிவினை முடிக வென்றான்.

(இ - ள்.) தேன் சொரி முல்லைக்கண்ணிச் செந்துவர் ஆடை ஆயர்கோன் - தேன் வாரும் முல்லைக் கண்ணியை யுடைய சிவந்த துவரூட்டிய ஆடை அணிந்த இடையர் தலைவன்; கான்சொரி முல்லைத் தாரான் - மணங்கமழும் முல்லை மாலையான் ஆகியநந்தகோன்; பெரிது உவந்து போகிக் குடை தயிர் குழுமப் புக்கு - சாலவும் மகிழ்ந்து சென்று கடையும் தயிர் முழங்கப் புகுந்து; மான் கறி கற்ற கூழை மௌவல் மயிலைச் சூழ்பந்தர் - மான் கறித்துப் பழகியதனுற் கடை குறைந்த செம் முல்லையும் இருவாட்சியும் சூழ்ந்த பந்தரிலே; கடிவினை முடிக என்றான் - மணவினை நடைபெறுக என்று கூறினன்.

(வி - ம்.) தயிர் முழங்கப் புகுதல் நன்னிமித்தம். துவரூட்டிய ஆடை அணிதல் இடையர் இயல்பு: 'துவருண்ணுடைச் சாய்கோல் இடையன்' (யா. வி. மேற்.) 'செந்துவராடை ஆயர்' (கலி. க0உ-நஎ) [இங்குக் கூறிய மணவினை திருமணத்திற்கு முன்பு நடைபெறும் 'சமா வர்த்தனம்' என்னும் சடங்கு என்பர் நச்சினார்க்கினியர்.] (எஎ)

சஅசு. கனிவளர் கிளவி காமர்
சிறுநுதல் புருவங் காமன்
குனிவளர் சிலையைக் கொன்ற
குவளைக்கண் கயலைக் கொன்ற
வினியுள ரல்ல ராய
ரெனச்சிலம் பரற்றத் தந்து
பனிவளர் கோதை மாதர்
பாவையைப் பரவி வைத்தார்.

(இ - ள்.) *பனிவளர் கோதை மாதர்* - குளிர்ச்சி வளரும் மாலையணிந்த மடவார்; *கனி வளர் கிளவி* - கனிபோன்ற இனிய மொழியாளின்; *காமர் சிறு நுதல் புருவம் காமன் குனிவளர் சிலையைக் கொன்ற* - அழகிய சிறிய நெற்றியும் புருவமும் காமனுடைய வளைதலில் வளர்ந்த வில்லைக் கொன்றன; *குவளைக்கண் கயலைக் கொன்ற* - குவளை மலர் போன்ற கண்கள் கயல்மீனைக் கொன்றன; *இனி ஆயர் உளர் அல்லர்* - (ஆகையால்) இனி ஆயர்கள் இவளைக் கண்டால் உயிருடன் இரார்; *எனச் சிலம்பு அரற்ற* - என்று சிலம்புகள் வாய்விட்டுப் புலம்ப; *பாவையைத் தந்து பரவி வைத்தார்* - பாவை போன்ற அவளை அழைத்து வந்து வாழ்த்தி (அப்பந்தரிலே) அமர்த்தினர்.

(வி - ம்.) 'குனிவு' என்பது 'குனி' என விகாரப்பட்டது. (எஅ)

சஅஎ. நாழியு ளிழுது நாகான்
கன்றுதின் றொழித்த புல்தோய்த்
தூழிதோ றாவுந் தோழும்
போன்றுடன் மூக்க வென்று
தாழிருங் குழலி னாளை
நெய்தலைப் பெய்து வாழ்த்தி
மூழைநீர் சோரிந்து மொய்கோ
ளாய்த்திய ராட்டி னாரே.

(இ - ள்.) *மொய்கொள் ஆய்த்தியர்*-குழுமிய இடைச்சியர்; *நாழியுள் இழுது நாகு ஆன் கன்று தின்று ஒழித்த புல்தோய்த்து*-நாழியில் உள்ள நெய்யிழுதை இளமையான பசுவின் கன்று தின்று கழித்த புல்லிலே தோய்த்து; *தாழ் இருங் குழலினாளை* - நீண்ட கரிய கூந்தலையுடைய கோவிந்தையை; *ஊழி தோறு ஆவும் தோழும் போன்று உடன் மூக்க என்று*-ஊழிகளெல்லாம் பசுவையும் தொழுவையும் போன்று ஒன்றுபட்டு நீயும் நின் கணவனும் ஒருங்கே மூப்புற்று வாழ்வீராக என்று; *தலை நெய்*

பெய்து வாழ்த்தி - அவள் தலையிலே அந்த நெய்யை வார்த்து வாழ்த்தி; மூழை நீர் சொரிந்து ஆட்டினார் - அகப்பையாலே நீரைச் சொரிந்து ஆட்டினர்.

(வி - ம்.) இழுது - நெய். புல் - ஈண்டு அருகம்புல். மூக்க: வியங்கோள். மூழை - அகப்பை. தோழ் - தொழுவம். ஆவும் தோழும் என்றதனால் நீயும் நின்கணவனும் எனப் பொருளும் இரண்டு கொள்க. (எகூ)

சஅஅ. நெய்விலைப் பசும்பொற் றோடு
நிழன்மணிக் குழையு நீவி
மைவிரி குழலி னாளை
மங்கலக் கடிப்புச் சேர்த்திப்
பெய்தனர் பிணையன் மாலை
யோரிலைச் சாந்து பூசிச்
செய்தனர் சிறுபுன் கோலம்
தொறுத்தியர் திகைத்து நின்றார்.

(இ - ள்.) மைவிரி குழலினாளை-கருமை விரிந்த கூந்தலாளை; நெய்விலைப் பசும்பொன் தோடும் நிழல் மணிக்குழையும் நீவி - நெய்விலையாற் கிடைத்த புதிய பொன் தோட்டையும், ஒளிவிடும் மணிக் குழையையும் நீக்கிவிட்டு; மங்கலக் கடிப்புச் சேர்த்தி - மங்கலத்துக்குரிய கடிப்பிணையை அணிந்து; பிணையல் மாலை பெய்தனர் - பிணையலாகிய மாலையையும் அணிந்து; ஓர் இலைச் சாந்து பூசி - ஓர் இலையிலே கொணர்ந்த சந்தனத்தையும் பூசி; சிறு புன் கோலம் செய்தனர்-சிற்றணியாகிய மணக்கோலத்தைச் செய்தனர்; தொறுத்தியர் திகைத்து நின்றார் - இடைச்சியர் அக் கோலங்கண்டு திகைப்புற்றனர்.

(வி - ம்.) கடிப்பிணை: ஒருவகைக் காதணி.

மங்கலக் கடிப்பு - மங்கலங்கருதி இடப்படும் ஓரணிகலன். பெய்தனர்: முற்றெச்சம். தொறுத்தியர் - ஆய்ச்சியர். இங்ஙனம் கோலஞ் செய்து முடித்த அவ்வாய்ச்சியரே அவளழகைக் கண்டு திகைத்து நின்றார் எனினுமாம். இங்ஙனமே சீதையை மணக்கோலஞ் செய்த மகளிர் "அவள் அழகை மாந்தித் தகைதடுமாறி நின்றார் மஞ்சர்க்கும் மாதரார்க்கும் மனமென்ப தொன்றே யன்றோ" என்பர் கம்பர். (அ0)

சஅகூ. ஏறங்கோண் முழங்க வாய
ரேடுத்துக்கோண் டேகி மூதூர்ச்
சாறெங்கு மயரப் புக்கு
நந்தகோன் றன்கை யேந்தி

வீறுயர் கலச நன்னீர்
சோரிந்தனன் வீர னேற்றான்
பாறுகோள் பருதி வைவேற்
பதுமுக குமரற் கென்றே.

(இ - ள்.) ஆயர் ஏறங்கோள் முழங்க எடுத்துக்கொண்டு - இடையர் ஏறுகோட்பறை முழங்க அவளை அழைத்துக் கொண்டு; மூதூர் எங்கும் சாறு அயர ஏகிப் புக்கு - பழம் பதி எங்கும் விழாவ்யரச் சென்று கந்துகன் மனையிலே புகுந்தபின்; வீறுஉயர் கலசம் நன்னீர் சொரிந்தனன் - அழகினால் மேம்பட்ட கலசத்தில் இருந்து தன் கையாலே நந்தகோன் நீரைச் சொரிய; வீரன் பாறுகொள் பருதி வைவேல் பதுமுக குமரற்கு என்று ஏற்றான் - (அதனைச்) சீவகன், பருந்துகள் சூழும் ஞாயிறு போன்ற கூரிய வேலேந்திய பதுமுகனுக்கு என்று கூறி ஏற்றான்.

(வி - ம்.) வீறு - வேறொன்றுக்கும் இல்லாத அழகு. இச்செய்யுளில் மணஞ் செய்தமை கூறினார். (அக)

சகூ0. நலத்தகை யவட்கு நாகா
ஞயிரத் திரட்டி நன்போ
னிலக்கணப் பாவை யேழுங்
கோடுத்தனன் போக விப்பா
லலைத்தது காமன் சேனை
யருநனை யம்பு மூழ்க
முலைக்குவட் டிடைப்பட் டாற்றான்
முத்துக முயங்கி னானே.

(இ - ள்.) நலத்தகையவட்கு நாகுஆன் ஆயிரத்திரட்டி - நலமுற்ற அழகினை யுடையாட்கு இளம்பசுக்கள் இரண்டாயிரமும்; நன்பொன் இலக்கணப் பாவை ஏழும் கொடுத்தனன் போக - நல்ல பொன்னால் ஆகிய தூய இலக்கணம் நிரம்பிய பாவைகள் ஏழும் நந்தகோன் கொடுத்துச் சென்றானாக; இப்பால் அருநனை அம்பு மூழ்கக் காமன் சேனை அலைத்தது - இங்குப் பதுமுகனைக் கூரிய முனையை உடைய அம்புகள் தைக்கும்படியாகக் காமன் படை வருத்தியது; ஆற்றான் முலைக் குவட்டிடைப் பட்டு முத்து உக முயங்கினான் - அவன் அப்படைக்கு ஆற்றாமல் முலைக் கோடுகளின் இடையே வீழ்ந்து முத்துக்கள் சிந்துமாறு தழுவினான்.

(வி - ம்.) காமன் சேனை என்பது கோவிந்தையையும், அருநனையம்பு என்பது அவளது கண்ணையும் உணர்த்தின. மன்மதனுக்குச் சேனை மங்கையர் ஆதலால் இங்ஙனம் கூறினர். (அஉ)

வேறு

௪௯௧. கள்வாய் விரிந்த கழுநீர் பிணைந் தன்ன வாகி
வெள்வேன் மிளிர்ந்த நெடுங்கண்விரை நாறு கோதை
முள்வா யெயிற்றூ றமுதம்முனி யாது மாந்திக்
கோள்ளாத வின்பக் கடற்பட்டனன் கோதைவேலான்.

(இ - ள்.) கள்வாய் விரிந்த கழுநீர் பிணைந்த அன்ன ஆகி - (இன்ப மூட்டலின்) தேன் வாயிலே பரந்த கழுநீர் மலர்கள் பிணைந்தாற் போன்றன ஆகி; வெள்வேல் மிளிர்ந்த - (துன்ப மூட்டலின்) வெள்ளிய வேல்போல் விளக்கமுற்றனவாகிய; நெடுங் கண் விரை நாறு கோதை-நீண்ட கண்களையுடைய மணங்கமழுங் கோதையாளின்; முள்வாய் எயிறு ஊறு அமுதம் முனியாது மாந்தி - கூரிய பற்களிற் சுரக்கும் அமுதத்தை வெறாமல் அருந்தி; கொள்ளாத இன்பக் கடல் கோதை வேலான் பட்டனன் - கரைபுரண்ட இன்பக் கடலிலே மாலை யணிந்த வேலான் அழுந்தினன். (௮௩)

௪௯௨. தீம்பாற் கடலைத் திரைபோங்கக் கடைந்து தேவர்
தாம்பாற் படுத்த வமிர்தோ தட மாலை வேய்த்தோ
ளாம்பாற் குடவர் மகளோவென் றரிவை நைய
வோம்பா வொழுக்கத் துணர்வொன்றில னாயி னானே.

(இ - ள்.) தீ பால் கடலைத் திரை பொங்கக் கடைந்து - இனிய பாற்கடலை அலை பொங்குமாறு கடைந்து; தேவர் தம்பால் படுத்த அமிர்தோ? - வானவர் தம்மிடம் கொண்ட அமிர்தமோ?; தட மாலை வேய்த் தோள் ஆம்பால் குடவர் மகளோ? என்று - பெரிய மாலைகளை அணிந்த மூங்கிலனைய தோள்களை உடைய பயன்படும் பாலையுடைய இடையர் மகளோ? என்று மயங்கிய வனாகி; அரிவை நைய - கோவிந்தை மெலியுமாறு; ஓம்பா ஒழுக்கத்து - தடை செய்ய முடியாத இன்ப ஒழுக்கத்திலே; உணர்வு ஒன்றிலன் ஆயினன்-தானும் அறிவு மயங்கியவனானான்.

(வி - ம்.) 'தம்பால்' என்பது 'தாம்பால்' என விகாரப்பட்டது. ஆம் : ஆகும்-பயன்படுகிற. 'அம்பால்' என்பது 'ஆம்பால்' என விகாரப் பட்டது என்றும், 'ஆம்பால்' எனவே கொண்டு 'பெரும்பாலும்' என்று பொருள் கூறலாமென்றும் கருதுவர் நச்சினார்க்கினியர்.

இவ்விலம்பகம் வீரமகளைச் சேர்ந்தமை கூறிற்று. (௮௪)

கோவிந்தையார் இலம்பகம் முற்றிற்று.

ஆகச் செய்யுட்கள் : ௪௯௨

## ௩. காந்தருவ தத்தையார் இலம்பகம்

### (கதைச் சுருக்கம்)

சீவகன் முதலியோர் இராசமாபுரத்தின்கண் இவ்வாறு இனிது உறைந்தனராக; அந்நகரத்து வாழ்பவனாகிய சீதத்தன் என்னும் வணிகன் தன் பழவினைப் பயத்தால் தான் ஈட்டிய பொருளெல்லாம் கெட்டமையால், மனமுடைந்தான். தன்பால் எஞ்சியிருந்த ஒரே மரக்கலத்தைத் திரைகடலிலே ஓட்டி மீண்டும் பொருளீட்டத் துணிந்தனன். அம் மரக்கலங்கொண்ட பண்டங்களை ஏற்றிப் பணிமக்களொடு அதனை அலைகடலில் ஊர்ந்து ஓர் அழகிய தீவகம் அடைந்தனன். அந் நாட்டு மன்னனொடும் மாந்தரொடும் கேண்மை கொண்டு தன் பண்டங்களைப் பொன்னுக்கு மாற்றிப் பெரும் பொருளீட்டினன். திங்கள் சில கழிந்தபின் அம் மன்னன் முதலியோரிடத்து விடை பெற்றுக் கொண்டு பொன்னிரம்பிய தன் மரக்கலத்திற் பணி மக்களொடு ஏறி மீண்டனன். இவ்வாறு சீதத்தன் மீண்டு வருங்கால் அவன் மரக்கலம் ஐந்நூறு காவதம் இனிதாக இயங்கியது.

இனி, வெள்ளிமலையிலுள்ள வித்தியாதர வேந்தனாகிய கலுழவேகன் என்பவன் தன் மகள் காந்தருவ தத்தைக்கு இராசமாபுரத்திலேதான் திருமணம் நிகழும் என்பதனை நிமித்திகரால் அறிந்திருந்தான். அக் கலுழவேகன் முன் கூறப்பட்ட சீதத்தன் வாயிலாய் அத் திருமணத்தை நிகழ்த்தக் கருதி அவனைத் தன்பாற் கொணரும் பொருட்டுத் தரன் என்னும் வித்தைவல்ல விச்சாதரனை ஏவினான். அத் தரன் தனது வித்தை வன்மையால் கடலிடையே ஓடிவந்த சீதத்தன் மரக்கலம் காற்றாலும் மழையாலும் கலக்குற்றுக் கடலிலே மூழ்கிவிட்டதுபோல அவனுக்குத் தோன்றும்படி செய்தான். இந் நிகழ்ச்சியால் மரக்கலம் பணிமாந்தர் பொருள் முதலியவற்றை இழந்த சீதத்தன், அம் மரக்கலத்தினின்றும் முறிந்து வீழ்ந்து மிதப்பதாகத் தனக்குத் தோன்றியதொரு மரத்துண்டத்தைப் பற்றிக்கொண்டு அண்மையிலிருந்ததொரு தீவின் கரையை அடைந்து பெரிதும் வருந்தியிருந்தான்.

அப்பொழுது, தரன் அவனைக் கண்டு "ஐய! யான் மந்திரம் வல்லேன்; நீயிர் இழந்த மரக்கல முதலியவற்றை மீட்டுத்தர வல்லேன். ஆதலால் என்னொடு வருக!" என்று ஆறுதல் கூறி ஒரு யாட்டின் மேலேற்றி வான்வழிப் பறந்து சீதத்தனைக் கலுழவேகன்பாற் கொணர்ந்து சேர்த்தனன். அக் கலுழவேகனும்

சீதத்தனுக்கு முகமன் பல மொழிந்து தன் முன்னோர்க்கும் அவன் முன்னோர்க்குமிருந்த கேண்மையை எடுத்துக்காட்டி நட்புக் கொண்டான். பின்னர்க் காந்தருவ தத்தையின் வரலாறு கூறி, அவளை வீணாபதி என்னும் தோழியோடு சீதத்தன் பால் ஓம்படை செய்தனன். பின்னரும் பொருள் பல அளித்து "நண்பனே! இவள் இன்றுதொட்டு நின் மகளேயாவாள். இவளை நீ நின் ஊர்க்கு அழைத்துச் செல்க! ஆண்டு, இவளை யாழ்ப் போரில் வெல்வானொரு காளைக்குக் கடிமணம் செய்விப்பாயாக!" என்று கூறி விடுத்தனன்.

சீதத்தன் அவளோடும், பரிசனங்களொடும் வானவூர்தியிற் புறப்பட்டு வரும்பொழுது தரன் முன்னர்த் தன் வித்தையால் மறைத்திருந்த மரக்கலம் முதலியவற்றை ஊறின்றிக் காட்டக் கண்டு, உவகை மிக்கு அவற்றோடு இராசமாபுரமெய்திக் காந்தருவ தத்தையைத் தன் மனையோள் பதுமைக்குக் காட்டி நிகழ்ந்தனவும் உணர்த்தினன். காந்தருவ தத்தையைக் கன்னிமாடத்திற் சேர்த்தினன். கட்டியங்காரன் உடன்பாடு பெற்றுக் காந்தருவ தத்தையை யாழில் வென்றோன் அவட்குக் கணவனாதற்குரியன் என்னும் செய்தியையும், யாழ்ப் போர்க்கு உரிய நன்னாளையும் நகரமெங்கும் முரசறைவித்துணர்த்தினன்.

பின்னர்ச் சீதத்தன் காந்தருவ தத்தையுடன் யாழ்ப் போர் செய்தற்கு வேண்டுவன வெல்லாமியற்றினன். பல நாட்டு மன்னரும் அவ்விடத்தே வந்து குழுமினர். நன்னாளிலே காந்தருவ தத்தை யாழரங்கமேறித் தனது தெய்வ யாழின் சிறப்புத் தோன்ற வாசித்தாள். மன்னரும் பிறரும் அவ் விசைகேட்டு மெய்ம்மறந்தனர். பின்னர், மன்னர் முதலியோர் தனித்தனியே தத்தையொடு யாழியக்கித் தோற்றனர். ஆறு நாட்கள் யாழ்ப் போர் நிகழ்ந்தது; காந்தருவ தத்தையை வெல்வார் யாருமிலராயினர்.

இச் செய்தியறிந்த சீவகன், காந்தருவ தத்தையொடு யாழ்ப் போர் செய்தற்கெண்ணினன். அக் கருத்தைத் தந்தை கந்துக்கடனுக் குணர்த்தி விடைவேண்டி நின்றனன். அது கேட்ட கந்துக்கடன் அநங்கமாலை என்னும் பரத்தையின் பொருட்டுக் கட்டியங்காரன் சீவகன்பால் உட்பகை கொண்டுள்ளான் என்பதனை நாகமாலை என்பவளால் அறிந்திருந்தமையால், "நன்று மைந்த நீ அங்குச் செல்லுங்கால் படையமைத்து விழிப்புடன் செல்க!" என்று கூறினன்.

சீவகன் அவ்வாறே சென்று காந்தருவ தத்தையோடு யாழ்ப் போர் செய்து அவளை வென்றனன். காந்தருவ தத்தையும் உள

மகிழ்ந்து சீவகன் திண்டோளில் மாலையிட்டனள். இந் நிகழ்ச்சியால் கட்டியங்காரன் நெஞ்சம் புழுங்கினான். முன்னரே தத்தைக்குத் தோற்றிருந்த மன்னர் மக்கள் பொறாமைத் தீயைத் தன் சொல்லாகிய நெய்யாலே பெரிதும் வளர்த்தான். "சீவகனைப் படைக்கலப் போரில் வென்றோனே தத்தைக்குக் கணவன் ஆகும் உரிமையுடையோன்! எழுக! போரிடுக!" என்று தூண்டினன். அவன் சொற்கேட்ட மன்னரெல்லாம் ஒருங்கே திரண்டு சீவகனுடன் போராற்றினர். ஒருங்கே தோற்றொழிந்தனர். பின்னர்ச் சீவகன் காந்தருவ தத்தையைத் தன் மனைக்கு அழைத்துக் கொணர்ந்து நன்னாளிலே திருமணம் புரிந்து கொண்டு அந் நங்கையொடு கூடிப் பெரிதும் இன்புற்றிருந்தனன்.

சகூரு. இங்கிவர்க ளிவ்வா றிருந்தினிது வாழச்
சங்குதரு நீணிதியஞ் சாலவுடை நாய்கன்
பொங்குதிரை மீதுபொரு மால்களிறு போன்றோர்
வங்கமோடு போகிநிதி வந்துதர லுற்றான்.

(இ - ள்.) இவர்கள் இங்கு இவ்வாறு இருந்து இனிது வாழ - சீவகன் முதலானோர் இராசமாபுரத்தில் இங்ஙனம் இருந்து இனிதாக வாழ்கையில்; (இனி வேறொரு நிகழ்ச்சி கூறுவேன்) சங்குதரு நீள் நிதியம் சால உடை நாய்கன் - சங்கு என்னும் எண்ணிக்கை பொருந்திய மிகுந்த செல்வத்தை அறவே இழந்த சீதத்தன் என்னும் வணிகன்; பொங்குதிரை மீது பொரும் மால் களிறு போன்று - பொங்கும் அலைகடலிலே கடலொடு பொருகின்ற பெரிய களிறுபோல; ஓர் வங்கமொடு போகி வந்து - ஒரு கப்பலுடன் சென்று திரும்பும் தொழிலிலே; நிதி தரல் உற்றான் - செல்வம் ஈட்டத் தொடங்கினான்.

(வி - ம்.) வாழ: நிகழ்கால வினையெச்சம். 'நிதிதரல் உற்றான்' என்பது சீதத்தனுடைய வாழ்க்கை நடைபெறும் முறை கூறியவாறு. இங்ஙன மின்றிப் பதுமுகன் திருமண நிகழ்ச்சிக்குப் பிறகு, சீதத்தன் வணிகத்திற்குச் சென்றான் எனில், சென்ற தீவிலே அவன், அணங்கனாரோ டுறுமதி கழிந்தபின்னர்; காந்தருவ தத்தையை இராசமாபுரத்திற்கு அழைத்து வரற்கும் சீவகன் அவளை மணந்து, பின்னர் எழு திங்கள் கழித்துத் தன், பகைமுடித்தற்கும் காலமின்றாம்.

இது பற்றியே நச்சினார்க்கினியர், 'வாழ' என்பதை, 'மட்டவிழ் கோதையோடே மனையகம் புகுந்தான்' என்பதனொடு 'கட்டழல்' (௩௮௩) என்னுஞ் செய்யுளிற் கொண்டு முடிப்பர்.

அவர் கூறுவது :

இவ்விடத்தே பிள்ளையாரும் சுற்றமும் இருந்து இனிதாக வாழாநிற்க, நாய்கன் பரிவு தீர்ந்து மட்டவிழ் கோதையோடே மனையிலே மகிழ்ந்து புக்கான் எனக் கூட்டி, 'கட்டழல்' (சீவக. ௩௮௩) என்னுங்

கவியளவும் ஒரு தொடராக்குக. இதற்குக் காரணம் என்னையோ வெனின், ஆசிரியன், 'ஆண்டு நேரெல்லை' (சீவக. ௩௯௩) என்று கூறிய பின்பு, சுதஞ்சணனும் 'பன்னிரு மதியின்' (சீவக. ௧௨௨0) என்றும், 'ஆறிரு மதியின்' (சீவக. ௧௨௨௧) என்றும் கூறினமையால், ஆசிரியன் முந்நூற்றறுபத்தைந்து நாள் ஓரியாண்டான சௌரமான பட்சம் பற்றிக் கூறினானென்றும், தேவன் 'மதியின்' என்று மதியைக் கூறினமையின், சாந்திரமான பட்சம் பற்றிக் கூறினானென்று முணர்க. எனவே, ஆசிரியன், 'யாண்டு' என்றது முந்நூற்றறுபத்தைந்து நாளாதலானும், தேவன், 'பன்னிருமதியின்' என்றது, மாசித் திங்களிற் றோன்றிய பங்குனிப் பிறை முதலாக மேல் வருகின்ற மாசியிற் பங்குனிப் பிறையளவும் பன்னிரு மதியாமாதலானும், இருவரும் இரண்டு திங்களிற் கூறினு ரேனும் ஓரியாண் டென்பது பெற்றாம். சௌரமான பட்சத்தாலே ஐந்து நாள் ஏறுகின்றதாதலின், ஆசிரியன் கூறியது அம் மாசியில் உவாவின் முன் கழிந்த தசமியிலெனக் கொள்க. இது, 'நானக் கிடங்கு' என்னும் (சீவக. ருக0) கவியானும் உணர்க. மாசித் திங்களின் ஆறாந் தேதி அமாவாசை முதல், பங்குனித் திங்களில் ஐந்தாந் தேதிவரை சாந்திரமான பட்சத்தாற் பங்குனியாகையாலே, மண்டபம் எடுத்தலும் விவாகங்களும் உரியவாயின. இவ்விடத்திற் சௌரமான பட்சத்தால் மாசித் திங்கள் கொள்ளார், சாந்திரமான பட்சம் சிறந்ததாகலின். இங்ஙனம் இருவரும் ஆண்டுக் கூறுகின்ற நாளிடையில் நடந்த சரிதமாகிய நிரை மீட்டலும், தத்தையையும் குணமாலையையும் வரைதலும், சிறை விடுத்தலும் நிகழ்ந்தன மாசியிலும் பங்குனியிலே சிறிது நாளிலும் என்பது உணர்தற்கு மேலே, 'பங்குனிப் பருவஞ் செய்தான்' (சீவக. அருக) என்றார். மேலே தோழர், பிள்ளையார்க்குத் தத்தையது ஓலை கொடுத்ததிலே, 'ஐந்து மதி யெல்லையினை யாண்டுடைய ணுகி.' (சீவக. கஅஎரு) எனவே, இவ்வோலை எழுதுவதற்கு முன்னே எழுதிங்கள் சென்றனவென்றாராதலின், இராசமாபுரத்தே முப்பத்தைந்து நாளும், 'இங்ஙன மிரண்டு திங்க ளேகலும்' (சீவக. க௩ருக) என்றும், 'கழிந்தன இரண்டு திங்கள்' (சீவக. கசகசு) என்றுங் கூறுதலால், பதுமையாரிடத்தும் கேமசரியாரிடத்தும் பங்குனி முதலாக நான்கு திங்களும், இவ்வோலை எழுதுவதற்கு முன்னே கனகமாலையாரிடத்து இரண்டு திங்களும் ஆக எழு திங்களும் சென்றனவென்று தேவர் திங்களைப் பகுத்துக் கூறுதலின், ஈண்டு சீதத்தனுக்கு, 'அணங்கனாரோ டறுமதி கழிந்த பின்றை' (சீவக. ருOரு) என்றல் பொருந்தா தென்பது பற்றி, முன் நிகழ்ந்ததொரு கதை தேவர் கூறுகின்றாரென்றே பொருளுரைத்தல் வேண்டிற்றென்று கொள்க.

உடை நாய்கன் : வினைத்தொகை. 'கலத்தினுங் காலினுந் தருவன ரீட்டக் - குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்' என்று (சிலப். உ: எ-அ) என்று இளங்கோவடிகளுங் கூறினமையின், பொருளுடையவன் தான் இருந்து பொருள் தேடுதலும் பொருளில்லாதவன் கலத்திற் சென்று பொருள் தேடுதலும் வேண்டுதலின், இவனையும், 'ஓர்வங்கமொடு' என்றும், 'ஊனமெனுமின்றி யினிதோடுக விதென்றான்' (சீவக. ருOO) என்றும் தேவர் கூறினமையின், பொருளின்றித்தான் செல்கின்றானென்றுணர்க.

இதுமுதல் ஆறு செய்யுட்கள் ஒரு தொடர்.

இவர்கள் என்றது சீவகன் பதுமுகன் முதலியோரை. சங்கு - ஒரு பேரெண். சங்கமென்னும் இலக்கத்தை மேன்மேலே தருகின்ற பெரிய

பொருள் மிகவும் கெட்ட நாய்கன் என்பர் நச்சினார்க்கினியர். நீணிதியம்: வினைத்தொகை. (க)

௪௯௪. மின்னொழுகு சாயன்மிகு பூட்பதுமை கேள்வன்
கோன்னொழுகு வேலியவ தத்தன்குளிர் தூங்குந்
தன்வழிய காளைசீ தத்தனவன் றன்போற்
போன்னொழுகு குன்றிலுறை போர்ப்புலியோ டொப்பான்.

(இ - ள்.) கொன் ஒழுகு வேல் யவதத்தன் குளிர் தூங்கும் தன் வழிய காளை சீதத்தன் - அச்சம் பரவிய வேலேந்திய யவதத்தன் என இப்பொழுது மனையிடத்தே தங்கியிருக்கின்ற அவன் மரபில் தோன்றிய காளை போன்ற சீதத்தன் எனும்; மின் ஒழுகு சாயல் மிகு பூண் பதுமை கேள்வன் - ஒளி பரவிய மென்மையுடைய மிகுதியான அணியணிந்த பதுமையின் கணவன்; தன் போல் பொன் ஒழுகு குன்றில் உறை போர்ப்புலியோடு ஒப்பான்- தந்தைக்கு ஒப்பான, பொன் பரவிய குன்றிலே போருக்கெழும் புலி போன்றவன்,

(வி - ம்.) குளிர் - திசைச்சொல். குளிருமென்னும் வினைச்சொல் குளிரெனத் தொழில்மேல் நின்றது.

எனவே அந் நாய்கன் பெயர் சீதத்தன், அவன் மனைவி பதுமை என்பவள், சீதத்தன் யவதத்தன் மகன், சீதத்தன் தன் தந்தையையே ஒப்பானவன், புலி போன்ற போர் வலிமை படைத்தவன் என்பன பெற்றும். (உ)

௪௯௫. இம்மியன நுண்பொருள்க ளீட்டிநிதி யாக்கிக்
கம்மியரு மூர்வர்களி றோடைநுதல் சூட்டி
யம்மிமிதந் தாழ்ந்துசுரை வீழ்ந்ததறஞ் சால்கென்
றும்மைவினை நோந்துபுலந் தூடலுணர் வன்றே.

(இ - ள்.) இம்மி அன நுண் பொருள்கள் ஈட்டி நிதி ஆக்கிக் கம்மியரும் களிறு நுதல் ஓடை சூட்டி ஊர்வர் - இம்மியவ்வளவு நுண்ணிய பொருள்களை ஈட்டிச் செல்வத்தை வளர்த்துப் பிறருக்குத் தொழில் செய்கின்றவரும் யானையின் நெற்றியிலே முகபடாம் அணிந்து ஏறிச் செல்வர்; (ஆகையால்); அம்மி மிதந்து சுரை ஆழ்ந்து அறம் வீழ்ந்தது - நீரிலே அம்மி மிதக்கவும் சுரை ஆழவுமாக அறங் கெட்டது; சால்க என்று - (எனவே) அமைதி பெறுக என்று; உம்மை வினை நொந்து புலந்து ஊடல் உணர்வு அன்று - பழவினையை எண்ணி வருந்தி அறத்துடன் மாறுபட்டுப் பிணங்குதல் உணர்வுடைமை ஆகாது.

(வி - ம்.) இம்மியென ஈட்டிப் பெருநிதியாக்குதல்: நீண்டகால முயற்சியின் பொறுமையையும் பொருளீட்டலின் சிறப்பையும் விளக்கு

கின்றன. கம்மியர் - பிறருக்குத் தொழில் செய்வோர். கம்மியரும்: உம்: இழிவு சிறப்பு. அம்மி மிதத்தலும் சுரை ஆழலும் உயர்ந்தோர் தாழ்வதையும் தாழ்ந்தோர் உயர்வதையுங் குறிக்கும். 'சுரை ஆழ அம்மி மிதப்ப' (பழ. கஉ௬) என்றார் பிறரும்.

"இம்மி - மத்தங்காய்ப் புல்லரிசி; குறைந்ததோர் எண்ணுமாம்" என்பர் நச்சினார்க்கினியர். இச் செய்யுட் கருத்தோடு,

"ஆடுகோ டாகி அதரிடை நின்றதூஉங்
காழ்கொண்ட கண்ணே களிறணைக்குங் கந்தாகும்
வாழ்தலு மன்ன தகைத்தே யொருவன்றான்
தாழ்வின்றித் தன்னைச் செயின்." (நாலடி. - கசுஉ)

என வரும் நாலடியையும் நினைக. (௩)

சசுசு. உள்ளமுடை யான்முயற்சி செய்யவொரு நாளே
வெள்ளநிதி வீழும்வினை யாததலி னில்லை
தொள்ளையுணர் வினவர்கள் சொல்லின்மடி கிற்பி
னெள்ளுநர்கட் கேக்கழுத்தம் போல வினிதன்றே.

(இ - ள்.) உள்ளம் உடையான் முயற்சி செய்ய ஒரு நாளே வெள்ளம் நிதி வீழும் - முயலும் உள்ளம் உடையவன் முயற்சி செய்தால், ஒரு நாளிலே வெள்ளம் என்னும் எண்ணையுடைய செல்வம் திரளும்; அதனின் வினையாது இல்லை - முயற்சியினால் வினையாதது எதுவும் இல்லை; தொள்ளை உணர்வினவர்கள் சொல்லின் மடிகிற்பின் - அறிவு கெட்டவர்கள் சொல்லை எண்ணிச் சோம்பியிருப்பின்; எள்ளுநர்கட்கு ஏக்கழுத்தம் போல இனிது - நம்மை யிகழ்பவர்க்கு ஒருதலை நிமிர்வையுண் டாக்கினாற் போல இனியதாயிருக்கும்.

(வி - ம்.) உள்ளம் - ஊக்கம். செய்ய: எதிர்கால வினையெச்சம். வெள்ளம்: ஒரு பேரெண். தொள்ளை யுணர்வு - ஓட்டையறிவு; அறிவின்மை. அவர்கள் சொல்வது: 'வருவது தானே வரும்' 'கொடுக்கும் தெய்வம் கூரையைப் பிரித்துக் கொட்டும்' என்பன போன்ற சோம்பல் வளர்க்கும் மொழி. 'ஏ பெற்றாகும்' (தொல். உரி. எ) என்றதனால் ஏக்கழுத்தம் - தலையெடுப்பு. இது முயற்சியின் சிறப்பைக் கூறுவதால் நல்வினையால் ஒரு நாளிலே 'வெள்ள நிதி வீழும்' என்பது பொருந்தாது. அன்று, ஏ: அசைகள். (௪)

சசுஎ. செய்க பொருள் யாருஞ்செறு வாரைச்செறு கிற்கு
மெஃகுபிறி தில்லையிருந் தேயுயிரு முண்ணு
மையமிலை யின்பமற னோடெவையு மாக்கும்
பொய்யில்பொரு ளேபொருண்மற் றல்லபிற பொருளே.

(இ - ள்.) யாரும் பொருள் செய்க - எத்தகையோரும் செல்வத்தைத் தேடுக; செறுவாரைச் செறுகிற்கும் எஃகு

பிறிது இல்லை - பகைவரை வெல்லும் வேல் அதனிற் பிறி தொன்று இல்லை; இருந்தே உயிரும் உண்ணும் - பகைவரிடமே இருப்பினும் பகைவருயிரை உண்ணத் துணைபுரியும்; இன்பம் அறனோடு எவையும் ஆக்கும் - பொருளானது முற்கூறியவற்றை ஆக்குவதுடன் இன்பத்தையும் அறத்தையும் வளர்க்கும்; ஐயம் இலை - இங்குக் கூறியதிற் சிறிதும் ஐயம் இராது. பொய்யில் பொருளே பொருள் - முயற்சியாற் கிடைக்கும் அவ்வுண்மைப் பொருளே பொருளாகும்; பிற பொருள் அல்ல - வேறு வழியில் வரும் பொருள்கள் பொருளாகா.

(வி - ம்.) மற்று : அசைநிலை. எஃகு : பொதுவாகப் படைகளைக் குறிப்பினும் வேலே சிறந்த படையாதலால் வேலெனப்பட்டது.

யாரும் பொருள் செய்க என மாறுக. இச் செய்யுட் கருத்தோடு,

"செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில்." (குறள். எ௫௯)

எனவும்,

"ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க் கெண்பொருள்
ஏனை யிரண்டு மொருங்கு." (குறள். எ௬0)

எனவும்,

"பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்." (குறள். எ௫௧)

எனவும், எழுந்த திருக்குறள்களை ஒப்பிடுக.

இனி இருந்தே உயிரும் உண்ணும் என்பதற்குப் பொருள் தன்னை யுடையோன் தன்னிடத்தே இருக்கவே செய்மையிலுள்ள அவன் பகைவருயிரையும் தான் அவர்பாற் சென்றுண்ணும் எனக் கோடலுமாம். (௫)

௪௬அ. தூங்குசிறை வாவலுறை தொன்மரங்க ளென்ன
வோங்குகுல நையவத னுட்பிறந்த வீரர்
தாங்கல்கட னாகுந்தலை சாய்க்கவரு தீச்சொ
னீங்கல்மட வார்கள்கட னென்றெழுந்து போந்தான்.

(இ - ள்.) தூங்கு சிறை வாவல் உறை தொல்மரங்கள் என்ன - தொங்குகின்ற, சிறகினையுடைய வௌவால்கள் வாழும் ஆலமரங்கள் (தாம் நையினும் அவற்றின் விழுதுகள் அவற்றைத் தாங்கினாற்) போல; ஓங்கு குலம் நைய - மேம்பட்ட மரபு வருந்தியபோது; அதனுள் பிறந்த வீரர் தலைசாய்க்கவரு தீச்சொல் தாங்கல் கடன் ஆகும் - அம்மரபிலே பிறந்த வீரர்கள் தாந் தலைகுனிதற்குக் காரணமான பழிச்சொல் தோன்றுதற்கு முன்னே அதனைத் தளராமல் காப்பாற்றுவது கடனாகும்;

நீங்கல் மடவார்கள் கடன் - அங்ஙனம் தாங்காது நீங்கிப் போதல் அறிவிலாதவரின் கடமையாகும்; என்று எழுந்து போந்தான் - என்று கூறி எழுந்து பொருளீட்டப் புறப்பட்டான்.

தலைசாய்க்க வருதீச்சொல் தாங்கல் கடனாகும் என மாறுக. பிறந்தற்கு முன்னர் என வருவித்துரைக்க. இச் செய்யுளோடு,

" சிதலை தினப்பட்ட ஆல மரத்தை
மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்
குதலைமை தந்தைகட் டோன்றிற்றான் பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும்." (நாலடி. ககூஎ)

என வரும் நாலடி வெண்பாவை ஒப்பு நோக்குக.

" இற்பிறந்தார் கண்ணேயு மின்மை இளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்." (குறள். க0சஃ)

என்பதுபற்றி 'தலைசாய்க்க வருதீச்சொல்' (பிறவாமுன்) என்றான் என்க. (கூ)

சகூகூ. மோதுபடு பண்டமுனி யாதுபேரி தேற்றி
மாதுபடு நோக்கினவர் வாட்கண்வடு வுற்ற
தாதுபடு தார்கெழிய தங்குவரை மார்பன்
கோதுபட லில்லகுறிக் கோண்டெழுந்து போந்தான்.

(இ - ள்.) மாதுபடு நோக்கினவர் வாட்கண் வடு உற்ற - பெருமை பொருந்திய நோக்கினையுடைய மங்கையரின் ஒளி தவழுங் கண்கள் தாக்கிய வடுவினைக் கொண்ட; தாதுபடு தார் கெழிய தங்கு வரை மார்பன் - தாது பொருந்திய மாலை பொருந்திய நிலைபெற்ற மலைபோலும் மார்பன்; மோதுபடு பண்டம் பெரிது முனியாது ஏற்றி - நிறைந்த பொருள்களை வெறுப்பின்றி மிகுதியாகக் (கலத்தில்) ஏற்றி; கோது படல் இல்ல குறிக்கொண்டு எழுந்து போந்தான் - குற்றம் அற்ற நல்ல பொழுதை அறிந்து கடற்கரைக்கு வந்தான்.

(வி - ம்) வாட்கண் வடு ஒளி பொருந்திய கண்களாகியமா வடுக்கள் என்றுமாம். நச்சினார்க்கினியர், 'இவன் மார்பைப் பார்த்தலால் ஒளி மிகுங் கண்கள் மழுங்குமாறு' என்றும், 'வடுஉற்ற கண் தங்கும் மார்பு' என்று ஆக்கி 'மாவடு போன்றகண் தங்கும் மார்பு' என்றும் பொருள் கூறுவர்.

மோதுபடு பண்டம் என்றது பண்டகசாலையின் உச்சியில் மோதுதல் உண்டாக மிக்க பண்டத்தை என்க. மாதுபடு நோக்கு என்றற்குக் காதல் தோன்றுதற்கிடமான நோக்கம் எனினுமாம். கெழிய - கெழுவிய; பொருந்திய. கோதுபடலில்லகுறி என்றது, நன்முழுத்தத்தை. (எ)

௫00. வானமுற நீண்டபுகழ் மாரிமழை வள்ள
றானமென வேண்டுநர்கள் வேண்டுவன நல்கி
நானமிக நாறுகமழ் குஞ்சியவ னேறி
யூனமெனு மின்றியினி தோடுகவி தென்றான்.

(இ - ள்.) வானம் உற நீண்ட புகழ் மாரி மழை வள்ளல் - வானுலகினும் பொருந்தப் பரவிய புகழையும் மாரிக்கால மழை யனைய வண்மையையும் உடையவனாகிய; நானம் மிக நாறு கமழ் குஞ்சியவன்-புழுகு சாலவும் மணக்கும் சிகையினையுடைய சீதத்தன்; தானம் என வேண்டுநர்கள் வேண்டுவன நல்கி ஏறி - தானம் என்ற பெயருடன் விரும்பினோர் விரும்பிய பொருள்களை அளித்துக் கலத்தில் ஏறி; ஊனம் எனும் இன்றி இது இனிது ஓடுக என்றான் - குறை சிறிதும் இல்லாமல் இக்கலம் இனிமை யாகச் செல்க என்று வாழ்த்தினான்.

(வி - ம்.) கமழ்குஞ்சி என்பதற்கு இயல்பான மணங்கமழுங் குஞ்சி என்பர் நச்சினார்க்கினியர். 'இக்கலம் ஊனம் எனும் இன்றி ஓடுக' எனவே முன்னர்ப் பல கலங்கள் தீங்குற்றன என்பது பெற்றாம்.

" அடுக்கிய மூவுலகும் கேட்குமே சான்றோர் கொடுத்தார் எனப் படுஞ்சொல் " (நாலடி. ௧00) என்ப வாகலின் வானமுற நீண்டபுகழ் என்றார். யாத்திராதானம் என்னும் ஒரு பெயரையிட்டு வரையாது வேண்டுவன வேண்டுநர்க்கு நல்கினான் என்பார், 'தானம் என' என்றார் தானம் சிறந்தோரைத் தேர்ந்து வழங்குவதாகலின் இங்ஙனம் கூறினார். (அ)

௫0௧. ஆடுகொடி யுச்சியணி கூம்பினுயர் பாய்மூன்
றீடுபடச் செய்திளைய ரேத்தவிமிழ் முந்நீர்க்
கோடுபறை யார்ப்பக்கொழுந் தாட்பவழங் கொல்லா
வோடுகளி றொப்பவினி தோடியதை யன்றே.

(இ - ள்.) ஆடு கொடி உச்சி அணி கூம்பின் - ஆடும் கொடிகளை உச்சியில் அணிந்த கூம்பிலே; உயர் பாய் மூன்று ஈடுபடச் செய்து - உயர்ந்த பாய்கள் மூன்றைக் காற்று முகக்கு மாறு குழையக் கட்டியதனால்; இளையர் ஏத்த - தொழில் புரி வோர்புகழ; இமிழ் முந்நீர்க் கோடு பறை ஆர்ப்ப - ஒலிக்குங் கடலிலே பிறந்த சங்கும் பறையும் முழங்கா நிற்ப; கொழுந்தாள் பவழம் கொல்லா-வளமிகும் பவளங்களின் கொடிகளை அறுத்துக் கொண்டு; ஓடு களிறு ஒப்ப - ஓடுங் களிறுபோல; இனிது ஓடியது - நன்றாக ஓடியது.

(வி - ம்.) ஓடியதை: ஐ: சாரியை. அன்று ஏ: அசைகள்.

ஆடுகொடி: வினைத்தொகை. கூம்பு - பாய்மரம். இளையோர் என்றது தொழிலாளரை. இதனால் மரக்கலங்களில் இசைக்கருவிகள்

முழக்கும் பண்டைக்கால வழக்கம் உணரப்படும். பவளக்கொடி கடலின் கண்ணுளதாகலின் அதனை அறுத்துக்கொண்டோடிற்று என்க. (௯)

ருo௨. திரைகடருஞ் சங்குகலந் தாக்கித் திரண்முத்தம்
வரைகடலுட் காலக்கணை பின்னொழிய முந்நீர்
வரைகிடந்து கீண்டதெனக் கீறிவளர் தீவி
னிரையிடறிப் பாய்ந்திரிய வேகியது மாதோ.

(இ - ள்.) திரைகள் தரும் சங்கு கலம் தாக்கி - அலைகள் தரும் சங்குகள் கலத்தைத் தாக்குதலால்; திரள் முத்தம் கரை கடலுள் கால - திரண்ட முத்துக்களை ஒலிக்குங் கடலிலே அச் சங்குகள் சொரிய; முந்நீர் வரை கிடந்து கீண்டது எனக்கீறி - கடலினை ஒரு மலை நில்லாமற் கிடந்து கிழித்தது என்னுமாறு கிழித்து; வளர் தீவின் நிரை இடறி - மிகுந்த தீவுகளின் ஒழுங்கைக் கெடுத்து; பாய்ந்து கணை பின் ஒழிய இரிய - குதித்துத் தன் மேலிருந்து எய்த அம்பு பிற்பட்டுக்கெட; ஏகியது - சென்றது.

(வி - ம்.) மாது ஓ: அசைகள். 'முந்நீர் வரை கிடந்து கீண்டது' இல்பொருளுவமம். (௧0)

ருo௩. மின்னுமிளிர் பூங்கொடியு மென்மலரு மொப்பார்
அன்னமொடுந் தோகைநடை சாயலமிர் தன்னார்
துன்னியினி தாகவுறை துப்புரவின் மிக்க
நன்மையுடை நன்பொன்விளை தீவமடைந் தஃதே.

(இ - ள்.) மின்னும் - விளக்கத்தால் மின்னையும்; பூங்கொடியும் - அசைவினாற் பூங்கொடியையும்; மென்மலரும் - மென்மையால் மலரையும்; ஒப்பார் - ஒப்பானவர்களும்; நடை சாயல் அன்னம் தோகை அமிர்து அன்னார் - நடை அன்னத் தொடும் மென்மை மயிலொடும் உவமை கொண்டவர்களும் ஆகிய மகளிர்; துன்னி இனிது ஆக உறை - மிகுந்து இனிமையாக வாழும்; துப்புரவின் மிக்க - நுகர் பொருள்களாற் சிறந்த; நன்மையுடை நன்பொன் விளை தீவம் அடைந்தஃது - நன்மையுற்ற நல்ல பொன் விளையும் தீவினை அடைந்தது அக்கலம்.

(வி - ம்.) அடைந்தஃது: ஆய்தம் விரித்தல் விகாரம். எண் ஒடுவை இறுதியிற் சேர்க்க.

மின் விளக்கமுடைமைக்கும் கொடி அசைவிற்கும் மலர் - மென்மைக்கும் அன்னம் நடைக்கும் தோகை சாயற்கும் உவமைகள். அமிர்தன்னார் என்பது வாளா மகளிர் என்னும் மாத்திரை. துப்புரவு-நுகர்பொருள். (௧௧)

௫0௪. தீவினுள் இழிந்துதேந்தார்ச் செம்மலுந் திருமுத்தாரங்
கோவினைக் குறிப்பிற் கண்டு கொடுத்தருள் சுமந்து [செம்போற்
பூவினுள் ளவளை யன்ன பொங்கிள முலையி னார்த
நாவினு ளமிர்தங் கேட்டு நாடக நயந்து சின்னாள்,

(இ - ள்.) தீவினுள் இழிந்து - தீவை அடைந்து; தேன் தார்ச் செம்மலும்-தேன் பொருந்திய மாலையணிந்த சீதத்தனும்; கோவினைக் குறிப்பின் கண்டு - அத்தீவக வேந்தனை அவன் குறிப்பறிந்து கண்டு; திரு முத்துஆரம் கொடுத்து - அழகிய முத்து வடத்தைக் காணிக்கையாக நல்கி; அருள் சுமந்து - அவனருளை யேற்று; செம்பொன் பூவின் உள்ளவளை அன்ன பொங்கு இள முலையினார் தம்-சிவந்த பொற்றாமரை மலரில் வாழும் திருமகளைப் போன்ற பூரிக்கும் இளமுலை மகளிருடைய நாவினுள் அமிர்தம் கேட்டு நாடகம் நயந்து - நாவில் விளையும் அமிர்தமனைய இசையைக் கேட்டும் நாடகத்தை விரும்பிக் கண்டும்; சின்னாள் - சில நாட்கள் கழித்து,

(வி-ம்.) 'திருமுத்து ஆரம்' என்பதற்குத், 'திருமகள் சேரும் ஆரம் என்றும், 'திருவினையும் முத்தாரத்தையும்' எனவும் பொருள் கூறலாம் என்பர் நச்சினார்க்கினியர்.

இப் பாட்டுக் குளகம். இது முதல் 'ஆடகம்' (௫௬0) வரை ஒரு தொடர்.

பூவினுள்ளவள் - திருமகள். நாவினுள் அமிர்தம் என்றது இன்னிசையை. இசையென்பது தோன்ற 'கேட்டும்' என்றார். நாடகத்தை நயந்து கண்டு என்க. (௧௨)

௫0௫. புணர்ந்தவர் பிரித லாற்றாப்
போகமீன் றளிக்குஞ் சாய
லணங்கினுக் கணங்க னாரோ
டறுமதி கழிந்த பின்றைக்
கோணர்ந்தன பண்டம் விற்ற
கொழுநிதிக் குப்பை யெல்லா
முணர்ந்துதன் மதலை யேற்றி
யொருப்படுத் தூர்க்கு மீள்வான்,

(இ - ள்.) புணர்ந்தவர் பிரிதல் ஆற்றா - கூடியவர் பிரியவியலாமல்; போகம் ஈன்று அளிக்கும் சாயல் - இன்பத்தைக் கொடுத்து ஆதரவு செய்யும் மென்மையினையுடைய; அணங்கினுக்கு அணங்கனாரோடு - தெய்வங்கட்குத் தெய்வம் போன்றவரோடு; அறுமதி கழிந்த பின்றை - ஆறு திங்கள் கழித்த

பிறகு; கொணர்ந்தன பண்டம் விற்ற கொழுநிதிக் குப்பை யெல்லாம் - கொண்டுவந்த பொருள்களை விற்ற வளமிகு செல்வக் குவியலை யெல்லாம்; உணர்ந்து தன் மதலை ஏற்றி - அறிந்து தன் கலத்தில் ஏற்றி; ஒருப்படுத்து ஊர்க்கு மீள்வான் - ஒருவழிப் படுத்தித் தன் ஊருக்குத் திரும்புவானாகி,

(வி - ம்.) கொணர்ந்தன: வினைமுற்றுப் பெயரெச்சமாகியது. 'எல்லாம் உணர்ந்து' என்றார், சரக்கின் பெருமையால் உணரவறிதாகலின். ஆற்றா: ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். இப்பாட்டுங் குளகம். (கரு)

ரு0சு. அரசனைக் கண்டு கண்ணுற்
றவர்களை விடுத்து நன்னா
ளிரைவதி வியாழ வோரை
யிருஞ்சிலை முளைப்ப வேறிக்
கரைகட லழுவ நீந்திக்
காற்றினுங் கடுகி யைஞ்ஞூ
றுரையுடைக் காத மோடி
யோசனை யெல்லை சார்ந்தே,

(இ - ள்.) அரசனைக் கண்டு - (மீண்டு) அரசனைப் பார்த்து (விடைபெற்று); கண்ணுற்றவர்களை விடுத்து - மிக நெருங்கிப் பழகியவர்களை (அரிதின்) நீங்கி; நல்நாள் இரைவதி வியாழ ஓரை இருஞ் சிலை முளைப்ப ஏறி - நல்ல நாளாகிய இரேவதி நாளில் வியாழ ஓரையில் தனு தோன்றும்போது மரக்கலம் ஏற; கரைகடல் அழுவம் நீந்திக் காற்றினும் கடுகி - அம்மரக்கலம் ஒலிக்குங் கடலின் பரப்பிலே நீந்திக் காற்றினும் விரைந்து; ஐஞ்ஞூறு உரையுடைக் காதம் ஓடி - ஐஞ்ஞூறெனக் கூறப் படுங் காத எல்லையைக் கடந்து ஓடி; ஓசனை எல்லை சார்ந்து - தான் செல்லுங் கரை ஓர் ஓசனை யளவிலே இருக்குமாறு நெருங்க,

(வி - ம்.) இதுவுங் குளகம். ஏறி - ஏற: வினையெச்சத்திரிபு. சார்ந்து - சார: இதுவும் வினையெச்சத்திரிபு. இனி இரண்டெச்சத்தையுந் திரிக்காமல் மரக்கலத்தின் மீது வருபவரின் தொழிலாக்கினும் பொருந்தும், 'மரக்கலம் ஓடினான்' என்றாற்போல.

அரசன் - அத்தீவினுக்கு மன்னன். கண்ணுற்றவர் - பழகியவர்; நண்பர் என்க. நன்னாளாகிய இரேவதி என்க. இரேவதி எதுகை நோக்கி இரைவதி என்றாயிற்று. சிலை - தநுராசி. வியாழக்கோளையுடையதாய்த் தனுவோரை தோன்ற என்க. அழுவம் - பரப்பு. கரைகடல்: வினைத்தொகை. (கசு)

ருoஎ. களித்தலை மயங்கி யிப்பா
லிருத்தலுங் கலந்தோர் காற்றிற்
றுளித்தலை முகில்க ளீண்டித்
தூங்கிருண் மயங்கி மான்று
விளிப்பது போல மின்னி
வெடிபட முழங்கிக் கூற்று
மொளித்துலைந் தொழிய வெம்பி
யுரறிநின் றிடிப்ப நாய்கன்.

(இ - ள்.) இப்பால் களித்தலை மயங்கி இருத்தலும் - இங்கு இவர்கள் களிப்பிலே தம்மை மறந்து இருக்கும்போது; ஓர் காற்றில் துளித்தலை முகில்கள் கலந்து ஈண்டி - ஒரு காற்றிலே நீர்த் துளியை யுடைய கரிய முகில்கள் பரவிச் செறிந்து; தூங்கு இருள் மயங்கி மான்று - பேரிருள் போன்று எத்திசையினுங் கலந்து மயங்கி; விளிப்பது போல மின்னி - கெடுப்பதுபோல மின்னி; வெடிபட முழங்கி-வெடிப்பது போலச் சிறிது இடித்து; கூற்றும் ஒளித்து உலைந்து ஒழிய வெம்பி உரறி நின்று இடிப்ப - (பிறகு) கூற்றுவனும் மறைந்து வருந்தி ஒழியுமாறு வெதும்பி முழங்கி நிலையாக இடிக்க; நாய்கன்-(இந்நிலை கண்ட) நாய்கன்.

(வி - ம்) முதலிற் சிறிதே இடித்தது; பிறகு பேரிடி யிடித்தது. இதுவுங் குளகம்.

களித்தலை என்புழி தலை ஏழனுருபு. துளித்து அலையும் முகில் எனினுமாம். மயங்கி - கலந்து. மான்று - மயங்கி. விளித்தல் - கெடுத்தல். கூற்றும், உம்மை உயர்வு சிறப்பு. உரறி - முழங்கி; யுரறி இடிப்ப என்றது முழங்கி இடிப்ப என்றவாறு. (கஞ)

ருoஅ. எண்டிசை வளியு மீண்டி
யெதிரெதிர் கலாவிப் பவ்வங்
கொண்டுமே லெழுவ தொப்பக்
குளிறிநின் றதிர்ந்து மேகந்
தண்டுளி பளிக்குக் கோல்போற்
றுரையாய்ச் சொரிந்து தெய்வங்
கொண்டதோர் செற்றம் போலுங்
குலுங்கன்மி னென்று கூறும்.

(இ - ள்.) எண் திசை வளியும் ஈண்டி - எட்டுத்திசையிற் காற்றும் ஒருங்கே கூடி; எதிர் எதிர் கலாவி - எதிரெதிராகக் கலந்து; பவ்வம் கொண்டு மேல் எழுவது ஒப்ப - கடலைக்கொண்டு மேலே யெழும் ஊழி யிறுதியை ஒவ்வி நிற்க; மேகம் குளிறி

நின்று அதிர்ந்து - முகில் குமுறி நின்று முழங்கி ; தண்துளி பளிக்குக்கோல்போல் தாரையாய்ச சொரிந்து - குளிர்ந்த நீர்த் துளியைப் பளிங்கின் கோலைப் போலத் தாரையாய்ச் சொரிய ; தெய்வம் கொண்டதோர் செற்றம் போலும் - தெய்வம் கொண்ட தொருசினம் போலும் ; குலுங்கன்மின் என்று கூறும் - இதற்கு நீங்கள் நடுங்காதீர்கள் என்று மேலும் கூறுவான்.

(வி - ம்.) சொரிந்து - சொரிய : வினையெச்சத்திரிபு. போலும் : உரையசை.

வளி - காற்று. கலாவி - கலந்து. பவ்வம்-கடல். குளிறி - குமுறி. பளிக்குக்கோல் வேற்றுமையில் மென்றொடர் வன்றொடராயிற்று. சொரிந்தென்னும் எச்சத்தைச் செயவெனெச்சமாகக் கொள்க. குலுங்குதல் - அச்சத்தால் உடல் நடுங்குதல். (கசு)

ரு0கூ. இடுக்கண்வந் துற்ற காலை
யெரிகின்ற விளக்குப் போல
நடுக்கமொன் றானு மின்றி
நகுகதா நக்க போழ்தவ்
விடுக்கணை யரியு மெஃகா
மிருந்தழு தியாவ ருய்ந்தார்
வடுப்படுத் தென்னை யாண்மை
வருபவந் துறுங்க ளன்றே.

(இ - ள்.) இடுக்கண் வந்து உற்ற காலை - துன்பம் வந்து கூடியபோது; எரிகின்ற விளக்கு போல நடுக்கம் ஒன்றானும் இன்றித் தாம் நகுக - எரியும் விளக்குக் காற்றால் நடுங்குவது போல நடுங்கும் நடுக்கம் எவ்வாற்றானும் இல்லாமல் துன் புற்றார் மகிழ்க ; நக்க போழ்து அவ் இடுக்கணை அரியும் எஃகாம்- மகிழ்ந்தால் அஃது அத் துன்பத்தைப் பிளக்கும் படையாகும் ; இருந்து அழுது யாவர் உய்ந்தார் - அத் துன்பத்தை யெண்ணி அமர்ந்து துக்கமுற்று எவர் தாம் அத்துக்கத்தினின்றும் நீங்கினர் ?; ஆண்மை வடுப்படுத்து என்னை ? - வீரத்தை வடுப் படுத்தி வரும் பயன் என்னை ? வருப வந்து உறும்-வரத்தக்கவை வந்து சேரும்.

(வி - ம்.) உறுங்கள்: கள் : அசை. அன்று, ஏ : அசைகள். ‘வடுப் படுத்து என்னை ஆண்மை’ என்பதனை அடுத்த செய்யுளின் இறுதியிற் கொண்டு சேர்ப்பர் நச்சினார்க்கினியர்.

‘இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்.’ (குறள். சுஉக)

என்பர் வள்ளுவர்.

அந் நகுதல் எஃகாம் என்க. துன்பத்தைக் கண்டஞ்சி அழுதல் மறத்தன்மை யன்றென்பான் 'ஆண்மை வடுப்படுத்தென்னை?' என்றான். வருப வந்துறும் என்றது, நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங் கால் அல்லற்படுவதெவன் என்னும் ஊழ்வலி காட்டித் தேற்றியபடியாம்.

"வேண்டினும் வேண்டாவிடினும் உறற்பால தீண்டாவிடுதல் அரிது" (நாலடி. கo௯) என்றார் பிறரும். (கஎ)

ருகo. ஆடகச் செம்பொற் கிண்ணத்
தேந்திய வலங்கற் றெண்ணீர்
கூடகங் கொண்ட வாழ்நா
ளுலந்ததேற் கொல்லும் பவ்வத்
தூடகம் புக்கு முந்நீ
ரழுந்தினு முய்வர் நல்லார்
பாடகம் போலச் சூழ்ந்த
பழவினைப் பயத்தி னென்றான்.

(இ - ள்.) கூடு அகம் கொண்ட வாழ்நாள் உலந்ததேல் - மெய்யிலே கொண்ட வாழ்நாள் வற்றியதேல்; ஆடகச் செம் பொற் கிண்ணத்து ஏந்திய அலங்கல் தெண்ணீர் கொல்லும் - நல்ல ஆடகப் பொற் கிண்ணத்திற் கொண்ட அசைவுற்ற தெளிந்த நீரும் கொல்லும்; பாடகம் போலச் சூழ்ந்த பழவினைப் பயத்தின் - பாடகம் என்னுங் காலணிபோல விடாது சூழ்ந்து வரும் பழமையான நல்வினைப் பயனால்; பவ்வத்தூடு அகம் புக்கு முந்நீர் அழுந்தினும் நல்லார் உய்வர்என்றான் - கடலினூடு நடுவே சென்று அக் கடலிலே அழுந்தினாலும் நல்லார் பிழைத்துக் கொள்வர் என்று கூறினான்.

(வி - ம்.) 'நல்லார் பாடகம்' என இயைத்துப் பெண்களின் பாடகம் எனினும், பாடு என்பதைப் பக்கமாக்கிப் பெண்களின் பக்கல் வைத்த நெஞ்சம் எனினும் பொருந்தும். பாடகம் ஒரு கம்பியாய்ப் பல முடக்காலே போக்கும் வரவும் உண்டானாற்போலத் தோன்றிக் காலை விடாதே கிடந்தாற்போலப் பழவினையென ஒன்றேயாயது நல்வினை தீவினையென இரண்டுபோல் தோன்றி இவனைச் சூழ்ந்து கிடக்கும் என வாழ்வுக்குஞ் சாவுக்கும் பொதுவாக்கி ஒப்புமை கூறுவர் நச்சினார்க் கினியர்.

போகூழுற்றுழி "நல்லவை எல்லாம் தீயவாம்" என்பது தோன்றப் பொற்கிண்ணத்துத் தெண்ணீரும் கொல்லும் என்றான். தெண்ணீரும் எனற்பாலதாகிய சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

கூடு-உடலிற்கு உவமவாகுபெயர். முந்நீர் என்றது சுட்டு மாத்திரை யாய் நின்றது. ஊழினது நன்மையை உடையார் மேலேற்றி நல்லார் உய்வர் என்றான். (கஅ)

ருகக. வினையது விளைவின் வந்த வீவருந் துன்ப முன்னீர்க்
கனைகட லழுவ நீந்திக் கண்கனிந் திரங்கல் வேண்டா
நனைமலர்ப் பிண்டி நாத னுண்மலர்ப் பாத மூலம்
நினையுமி னீவி ரெல்லா நீங்குமி னச்ச மென்றான்.

(இ - ள்.) *வினையது விளைவின் வந்த வீவு அருந்துன்பம் முன்னீர்க் கனைகடல் அழுவம் நீந்தி - தீவினையின் பயனாகி வந்த துன்பமாகிய பழைய நீரையுடைய ஒலிக்குங் கடற்பரப்பை நீந்தி; கண் கனிந்து இரங்கல் வேண்டா - கண்ணைக் குழைத்து வருந்தல் வேண்டா; நனை மலர்ப் பிண்டி நாதன் நாள் மலர்ப் பாத மூலம்- குளிர்ந்த மலரையுடைய அசோகின் நீழலில் எழுந்தருளிய அருகப் பெருமானின் புதிய மலரனைய திருவடியாதரவை; நீவிர் எல்லாம் நினையுமின் - நீவிர் எல்லீரும் நினையுங்கள்; அச்சம் நீங்குமின் என்றான்-அச்சத்தை விடுவீர்களாக என்று கூறினான்.*

(வி - ம்.) *பாத மூலம்: திருவடியாகிய, துன்பம் நீங்குதற்குக் காரணமானது. கலம் படுதலும் அவர் வருத்தமுமாக இவனுக்குத் தோன்றினவே அன்றி அவர்க்கு இவையில்லை. இதனைப் பின்னர் 'நாடகம் நாங்களுற்றது' (சீவக. ருஅஉ) என்றதனாலும் பிறவற்றாலும் உணர்க.*

*இடுக்கண் என்பது முதல் இச்செய்யுளீறாகச் சீதத்தன் கூறும் அறிவுரைகள் ஆற்றவும் இனியன ஆதல் உணர்க.*

*"தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது."* (குறள் - எ)

*பழவினை பற்றிப் பேசிய சீதத்தன் நாதன் பாதமூலம் நினைமின் என்று செவியறுவுறுத்தது ஆழ்ந்த கருத்துடையதாம்.* (கக)

ருகஉ. பருமித்த களிற னானும் பையெனக் கவிழ்ந்து நிற்பக்
குருமித்து மதலை பொங்கிக் கூம்பிறப் பாய்ந்து வல்லே
நிருமித்த வகையி னோடி நீர்நிறைந் தாழ்ந்த போதி
லுருமிடித் திட்ட தொப்ப வுள்ளவ ரொருங்கு மாய்ந்தார்.

(இ - ள்.) *பருமித்த களிறு அனானும் - அணி செய்யப் பட்ட களிற்றியானையை ஒத்த சீதத்தன்; பையெனக் கவிழ்ந்து நிற்ப - (தான் ஏனையோர்க் கறிவுறுத்தியபடி நாதன் நலங்கிளர் பாதமூலத்தை நினைவானாய்) மெல்லெனத் தலைவணங்கி நின்றானாக அப்பொழுது; மதலை குருமித்துப் பொங்கி கூம்பு இற - மரக்கலம் முழங்கிப் பொங்கி பாய்மரம் முறியும்படி; நிருமித்த வகையின் வல்லே ஓடி - தான் நினைத்த வழியிலே விரைந்து பாய்ந்து; நீர்நிறைந்து உரும் இடித்திட்டது ஒப்ப ஆழ்ந்த போதில் - நீர் நிறைந்து இடி இடித்த தன்மையைப்போல்*

கடலினுள் அழுந்தியது, அங்ஙனம் அழுந்தியபொழுது; உள்ளார் ஒருங்கு மாய்ந்தார் - அதன்கண் உள்ளவரெல்லாம் ஒருசேர மறைந்தொழிந்தார்.

(வி - ம்.) பருமித்தல் - அணிசெய்தல். பையென: குறிப்புமொழி. கவிழ்ந்து நிற்ப என்றது இறைவனைத் தலைவணங்கி நினைந்து நின்றான் என்றவாறு. குருமித்தல் - முழங்குதல். நிருமித்தல் - நினைத்தல். (௨0)

வேறு

௫௧௩. ஓம்பிப் படைத்த பொருளும்முறு காதலாரும்
வேம்புற்ற முந்நீர் விழுங்கவ்விரை யாது நின்றான்
கூம்பிற்ற துண்டந் தழுவிக்கிடந் தான்கொ ழித்துத்
தேம்பெற்ற பைந்தா ரவனைத்திரை யுய்த்த தன்றே.

(இ - ள்.) ஓம்பிப் படைத்த பொருளும் உறு காதலாரும் - பாவத்தை நீக்கித் திரட்டிய செல்வத்தையும் உற்ற அன்புடையாரையும்; வேம்பு உற்ற முந்நீர் விழுங்க - உவர்ப்பினையுடைய கடல்நீர் விழுங்கவும்; விரையாது நின்றான் - கலங்காமல் நின்றவன்; கூம்பு இற்ற துண்டம் தழுவிக் கிடந்தான் - கூம்பு ஒடிந்த துண்டம் ஒன்றைப் பற்றிக் கிடந்தான்; தேன் பெற்ற பைந்தார் அவனைத் திரை கொழித்து உய்த்தது - தேன் பொருந்திய புதிய மாலையினனாகிய அவனை அலை கொழித்துக் கரையிலே சேர்த்தது.

(வி - ம்.) அன்று, ஏ: அசைகள்.

தீவினை செய்யாமல் அறத்தாற்றின் ஈட்டிய பொருள் என்பார் ஓம்பிப் படைத்த பொருள் என்றார். ஓம்புதலாவது,

“ வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்பநாடிக்
கொள்வதூஉ மிகைகொளாது
கொடுப்பதூஉம் குறைகொடாது”
(பட். ௨0அ - ௨௧௧)

வாணிகஞ் செய்தல் என்க.

சீதத்தன் தான் கூறியதற்கிணங்கவே இடுக்கணழியாது நின்றான் என்பார் விரையாது நின்றான் என்றார். (௨௧)

௫௧௪. நாவா யிழந்து நடுவாருமி
லியாம நீந்திப்
போவாய் தமியே பொருளைப்பொரு
ளென்று கொண்டாய்

வீவா யெனமுன் படையாய்படைத்
தாய்வி னையேன்
பாவா யெனப்போய்ப் படுவெண்மணற்
றிட்டை சேர்ந்தான்.

(இ - ள்.) வினை என் பாவாய்-வினையென்னும் பாவையே!; பொருளைப் பொருள் என்று கொண்டாய் வீவாய் என முன் படையாய் - பொருளீட்டலையே பொருளாகக் கொண்டநீ இறந்து போவாய் என்று முன்னரே படையாமல் விட்டாய்; நாவாய் இழந்து யாரும்இல் நடு யாமம் நீந்தித் தமியே போவாய் எனப் படைத்தாய் - மரக்கலத்தை இழந்து யாரும் இல்லாத நள்ளிரவிலே கடலை நீந்தித் தனியே போவாய் என்று படைத்தனையே; எனப் போய்ப் படு வெண்மணல் திட்டை சேர்ந்தான் - என்று கூறியவாறே சென்று கூடிய வெண்மணல் மேட்டை அடைந்தான்.

(வி - ம்.) என என்பதனை இரண்டிடத்துங் கூட்டுக.

இதனானும் ஆசிரியர் சீதத்தனின் மெய்யுணர்ச்சியையே வெளிப்படுத்துதல் அறிக. என்னை? ஊழான் வருவனவற்றை ஏற்று நுகர்ந்த இஃது ஊழ்வினைப்பயன் என்று கோடலே மெய்யுணர்வோர் செயலாதலான் என்க. ஆசிரியர் இச் சீதத்தன் சொற்செயல்களானே வெளிப்படுத்தும் பொருள் மிக இனியன. (உ௨)

வேறு

௫௧௫. பொரியரை ஞாழலும் புன்னையும் பூத்து
வரிதரு வண்டோடு தேனின மார்க்குந்
திருவிரி பூம்பொழிற் செவ்வனஞ் சேர்ந்தாங்
கருவரை மார்ப னவலித் திருந்தான்.

(இ - ள்.) பொரிஅரை ஞாழலும் புன்னையும் பூத்து - பொரிந்த அடிமரத்தையுடைய புலிநகக் கொன்றையும் புன்னையும் மலர்ந்து; வரிதரு வண்டொடு தேனினம் ஆர்க்கும் - இசையைத் தரும் வண்டின் திரளும் தேனின் திரளும் முரல்கின்ற; திரு விரி பூம்பொழில் - அழகு மலர்ந்த மலர்ப் பொழிலிலே; அருவரை மார்பன் செவ்வனம் சேர்ந்து-அரிய மலையனைய மார்பன் நேரே சென்று; ஆங்கு அவலித் திருந்தான் - அங்கே வருத்தத்துடன் இருந்தான்.

(வி - ம்.) செவ்வனம் : அம் : அசை.

பொரியரை : வினைத்தொகை. ஞாழல் - புலிநகக் கொன்றை. வண்டு, தேன் என்பன வண்டின்வகை. திரு - அழகு. (உ௩)

௫௧௬. ஓடுந் திரைக ளுதைப்ப வுருண்டுருண்
டாடு மலவனை யன்ன மருள்செய
நீடிய நெய்தலங் கான னெடுந்தகை
வாடி யிருந்தான் வருங்கல நோக்கா.

(இ - ள்.) நீடிய நெய்தல் அம் கானல் - பரவிய நெய்தல் நிலத்திற் கடற்கரையிலே; ஓடும் திரைகள் உதைப்ப உருண்டு உருண்டு ஆடும் அலவனை - ஓடுகின்ற அலைகள் தள்ள உருண்டு உருண்டு அலையும் நண்டினை; அன்னம் அருள் செய - அன்னம் ஆதரிக்க; நெடுந்தகை வருங்கலம் நோக்கா வாடி இருந்தனன் - நெடுந்தகையான சீதத்தன் அதனை நன்னிமித்தமாக நினைந்து, தனக்கு ஆதரவாக ஏதாயினும் கலம் வருமென்று நோக்கியவாறு வாடியிருந்தான்.

(வி - ம்.) அன்னம் கொல்லாதிருந்த தன்மை, தான் பற்றுக் கோடாக வாழ்வாரைக் காலான் உதைத்துக் கடல் நம்முன்னே தள்ளவும் போக்கற்றுப் பின்னும் அதனிடத்தே செல்லாநின்ற தென்று நோக்கி அதற்கு அருளினாற் போலேயிருந்தது.

அலைகள் பழவினையாகவும் அலவன் தானுமாய் அதனை அருள் செய்த அன்னத்தை இனித் தனக்குண்டாகும் ஆகூழாகவும் மதித்து அவ்வன்னம் போலத் தன்னைக் காப்பாற்ற ஒரோவழி மரக்கலம் ஏதேனும் வருவதோ என்று எதிர்பார்த்திருந்தான் என்பது கருத்து. (உச)

௫௧௭. ஆளிய மொய்ம்ப னிருந்தவப் பூம்பொழிற்
றாள்வலி யானோர் மகனைத் தலைப்பட்டுக்
கேளி ரெனக்குற்ற கேண்மின் னீரெனத்
தோள்வலி மிக்கான் றொடர்ந்துரைக் கின்றான்.

(இ - ள்.) ஆளி அ மொய்ம்பன் தோள்வலி மிக்கான்-ஆளி போன்ற வலிமையாளனாகிய தோளாற்றல்மிக்க சீதத்தன்; இருந்த அப் பூம்பொழில் - இருந்த அந்தப் பூங்காவிலே; தாள் வலியான் ஓர் மகனைத் தலைப்பட்டு - முயற்சியுடையானாகிய ஒருவனைக் கண்டு; கேளிர்! எனக்கு உற்ற நீர் கேண்மின் என - கேளிரே! எனக்கு நேர்ந்த துன்பங்களை நீர் கேட்பீராக என்று; தொடர்ந்து உரைக்கின்றான் - இடைவிடாமற் கூறுகிறான்.

(வி - ம்.) தாள்வலியான்: தரன் என்னுங் கந்தருவன். அவனே இவனை நாடிவந்தான். ஆளிய: அ: அசைநிலை. சுட்டும் ஆம்.

இடுக்கணழியாமை கருதி ஆளி மொய்ம்பன் என்றும் தோள்வலி மிக்கான் என்றும் கூறினார். தாள் - முயற்சி. ஓர் மகனைத் தலைப்பட்டு என்பது அவன் நினைத்தவாறே தன் ஆகூழ் கொணர ஆண்டுவந்த ஒருவனைத் தலைப்பட்டென்பதுபட நின்றது. கேளிர்: விளி. நண்பீர் என்று விளித்தபடியாம். (உ௫)

௫௧அ. கருங்கடற் போயிற்றுங் காற்றிற் கவிழ்ந்து
திருந்திய தன்பொருள் தீதுற்ற வாறும்
அரும்புணை சார்வா அவண் உய்ந்த வாறும்
இருந்தவற் கெல்லாம் எடுத்து மொழிந்தான்.

(இ - ள்.) *கருங் கடல் போயிற்றும் - கரிய கடலிலே பொருள் தேடப் போனதையும்; காற்றில் கவிழ்ந்து திருந்திய தன் பொருள் தீது உற்ற ஆறும் - கலம் காற்றிலே கவிழ்ந்து நல்வழியில் ஈட்டிய தன் பொருள் கெட்டதையும்; அரும்புணை சார்வா அவண் உய்ந்த ஆறும் - அரிய கூம்புத் துண்டமாகிய தெப்பம் ஆதரவாக அங்கே வந்ததையும்; எல்லாம் - யாவற்றையும்; இருந்தவற்கு - அங்கேயிருந்த தரனுக்கு; எடுத்து மொழிந்தான் - தெளிவாக விளம்பினான்.*

(வி - ம்.) *தீதுறத் தகாத பொருள் என்பார் திருந்திய பொருள் என்றார். கவிழ்ந்து என்னும் செய்தெனெச்சத்தைக் கவிழ எனச் செயவெனெச்சமாக்குக. எதிர்பாராமற கிடைத்த புணை ஆகலின் அரும் புணை எனப்பட்டது. இருந்தவன் - தரன்: வினையாலணையும் பெயர்.* (உசு)

௫௧௯. மானும் மரனும் இரங்க மதவலி
தானுற்ற துன்பந் தரனுக் குரைத்தபின்
றேனு மமிழ்துந் திளைத்தாங் கினியன
வூனமில் கட்டுரைக் குள்ளங் குளிர்ந்தான்.

(இ - ள்.) *மதவலி மானும் மரனும் இரங்க - சீதத்தன், விலங்கும் மரமும் இரக்கமுறுமாறு; தரனுக்குத் தான் உற்ற துன்பம் உரைத்தபின் - தரனுக்குத் தான் அடைந்த துன்பத்தை உரைத்த பிறகு; தேனும் அமிழ்தும் திளைத்த ஆங்கு இனியன - தேனும் அமிழ்தமும் நீங்காமற் பெற்றாற்போல இனியவாகிய; ஊனம் இல் கட்டுரைக்கு உள்ளம் குளிர்ந்தான் - குற்றமற்ற (தரனுடைய) உறுதி மொழிக்கு அகம் குளிர்ந்தான்.*

(வி - ம்.) *அக் கட்டுரை அடுத்த செய்யுளிற் கூறப்படுவது. ஊனமில் கட்டுரை என்பதனை, 'அத் துன்பத்திற்கெல்லாம் கழுவாயாக நின்னைப் பெற்றேனே' என்று சீதத்தனே கூறுவதாக ஆக்குவர் நச்சினார்க்கினியர். 'உரைத்தலின்' என்ற பாடத்திற்குத் தான் கூறியதற்குச் சீதத்தன் மகிழ்ந்தான் என்று கொள்வதால் அவருக்கும் இவ்வாறு கூறுதல் உடன்பாடாமாறு காண்க.*

*மதவலி : அன்மொழித் தொகை ; ஈண்டுச் சீதத்தன் என்க.* (உஎ)

௫௨௦. விஞ்சைகள் வல்லேன் விளிந்தநின் றேழரோ
டெஞ்சிய வான்பொரு ளெல்லா மிமைப்பினுள்
வஞ்சமொன் றின்றி மறித்தே தருகுவன்
னெஞ்சிற் குழைந்து நினையன்மி னென்றான்.

(இ - ள்.) விஞ்சைகள் வல்லேன் - யான் பலவிஞ்சையினும் வன்மையுடையேன்; விளிந்த நின் தோழரொடு எஞ்சிய வான் பொருள் எல்லாம் - மடிந்த நின் நண்பருடன் கெட்டுப்போன சிறந்த பொருள்கள் எல்லாவற்றையும்; வஞ்சம் ஒன்று இன்றி இமைப்பினுள் மறித்தே தருகுவன் - வஞ்சனை சிறிதும் இல்லாமல் ஒரு நொடியிலே திரும்பக் கிடைக்குமாறு தருவேன்; நெஞ்சில் குழைந்து நினையன்மின் என்றான் - உள்ளத்திற் கலங்கி நினையாதீர் என்று தரன் கட்டுரை கூறினான்.

(வி - ம்.) 'நின் தோழரோடு' என ஒருமையாகவும், 'நினையன்மின்' எனப் பன்மையாகவும் கூறியதால் இஃது ஒருமை பன்மை மயக்கம். நினையன்மின் என்றது ஒருவரைக் கூறும் பன்மை. விஞ்சை - வித்தை. எஞ்சிய - கழிந்த. வான்பொருள் - அறத்தாற்றின் ஈட்டிய பொருள். (௨௰)

௫௨௧. உரையகங் கொள்ள வுணர்த்தின னாகி
வரையக மேற வலிமின மென்னா
விரைசெலல் வெம்பரி மேழக மேற்றிக்
குரைகழன் மைந்தனைக் கொண்டு பறந்தான்.

(இ - ள்.) உரை அகம் கொள்ள உணர்த்தினன் ஆகி - (தருகுவன் என்ற) உரையைச் சீதத்தன் மனம் ஒப்புமாறு உணர்த்தியவனாய்; வரையகம் ஏற வலிமின் என்னா-இம் மலைமீது செல்ல மனத் துணிவு கொள்வீராக என்றுகூறி; விரைசெலல் வெம்பரி மேழகம் ஏற்றி - விரைந்த செலவையுடைய விரும்பத் தக்க பரியைப்போன்ற ஆட்டுக் கடாவின்மேல் ஏற்றி; குரைகழல் மைந்தனைக் கொண்டு பறந்தான் - ஒலிக்கும் கழலணிந்த சீதத்தனைக் கைக்கொண்டு வான்வழியே பறந்தான்.

(வி - ம்.) வலிமினம். அம் : அசை. வெம்பரி விரைசெலல் மேழகம் என மாறிக் குதிரைபோன்ற விரைந்த செலவையுடைய மேழகம் எனினுமாம். மேழகம் - ஆட்டுக்கடா. (௨௧)

௫௨௨. விசும்பிவர் மேகம் விரைவினர் போழ்ந்து
பசும்புயற் றண்டுளி பக்க நனைப்ப
நயந்தனர் போகி நறுமலர்ச் சோலை
யசும்பிவர் சார லருவரை சார்ந்தார்.

(இ - ள்.) பசும்புயல் தண்துளி பக்கம் நனைப்ப - கரிய முகிலின் தண்ணிய நீர்த்துளி தம் மருங்கை நனைக்குமாறு; விசும்பு இவர் மேகம் விரைவினர் போழ்ந்து-வானில் ஏறும் முகிலினூடே விரைந்து அதனைப் பிளந்துகொண்டு; நயந்தனர் போகி - விருப்பத்துடன் சென்று; நறுமலர்ச் சோலை அசும்பு இவர் சாரல் அருவரை சார்ந்தார்-நறிய மலர்க்காவினையும் நீர்ப் பொசிவுடைய சாரலையும் உடைய மலையை அடைந்தனர்.

(வி - ம்.) விரைவினர், நயந்தனர்: முற்றெச்சங்கள். அசும்பு - நீர்க்கசிவு. (௩௦)

௫௨௩. கண்டா லினியன காண்டற் கரியன
தண்டா மரையவ டாழுந் தகையன
கொண்டான் கொழுங்கனி கோட்டிடைத் தூங்குவ
வுண்டா னமிழ்தொத் துடம்பு குளிர்ந்தான்,

(இ - ள்.) கண்டால் இனியன - கண்டால் இனிமை தருவனவாயும்; காண்டற்கு அரியன - (ஆறு) காண்பதற்கு அரியனவாயும்; தண்டாமரையவள் தாழும் தகையன-குளிர்ந்த தாமரையில் வாழ்பவளான திருமகளும் விரும்பும் பெருமை யுடையனவாயும்; கோட்டிடைத் தூங்குவ கொழுங்கனி - மரக் கொம்புகளிலே தொங்குவனவாகிய வளமிகுங் கனிகளை; கொண்டான் உண்டான் - சீதத்தன். பறித்துத் தின்றான்; அமிழ்து ஒத்து உடம்பு குளிர்ந்தான் - அமிழ்தம் உண்டவன்போல மெய் குளிர்ந்தான்.

(வி - ம்.) கண்டால் இனியன என்றது காட்சி மாத்திரையானே இன்பந்தரும் எழிலுடையனவாகவும் என்றவாறு. காண்டற்கரியன - அவ்விச்சாதரர் நாட்டிலன்றி இவ்வுலகிற் காண்டற் கியலாதனவாகவும் என்றவாறு. அருமை ஈண்டு இன்மை மேற்று. தாழும் - விரும்பும்; தூங்குவ - பலவறிசொல்; தூங்குவ கொண்டான் என மாறுக. (௩௧)

௫௨௪. மழைதவழ் சோலை மலைமிசை நீண்ட
குழைதவழ் குங்குமங் கோழரை நாகந்
தழைதவழ் சந்தனச் சோலையி னோக்கி
யிழைதவழ் மார்ப னினிதி னுவந்தான்.

(இ - ள்.) இழை தவழ் மார்பன் - அணிகலன் பரவிய மார்பனான சீதத்தன்; மழைதவழ் சோலை மலைமிசை - முகில் பரவும் சோலைகளையுடைய அம் மலையின்மேல்; நீண்ட குழை தவழ் குங்குமம் - நீண்ட தளிர் பரவிய குங்கும மரங்களையும்; கோழ் அரை நாகம் - வளமிகும் அடிமரத்தையுடைய சுரபுன்னை மரங்களையும்; தழைதவழ் சந்தனச் சோலையின் நோக்கி - தழை

கள் பரவிய சந்தனச் சோலையுடன் பார்த்து; இனிதின் உவந்தான் - இனிமையாலே மனம் மகிழ்ந்தான்.

(வி - ம்.) இதனால், சீதத்தன் கலையுணர்ச்சி உடையனாதல் கூறப்பட்டது. (௩௨)

௫௨௩. கோதை யருவிக் குளிர்வரை மேனின்று
காதங் கடந்தபின் கன்னிக் கொடிமதி
னாத னுறைவதோர் நன்னக ருண்டங்குப்
போது மெழுகெனப் போயினர் சார்ந்தார்.

(இ - ள்.) கோதை அருவிக் குளிர்வரைமேல் நின்று - மலர்மாலைபோல ஒழுகும் அருவியையுடைய குளிர்ந்த மலைமேலிருந்து; காதம் கடந்தபின் - காதவழி சென்றால்; கன்னிக் கொடிமதில் நாதன் உறைவது ஓர் நலநகர் உண்டு - அழிவற்ற கொடியையுடைய மதில் சூழ்ந்த இறைவன் வாழும் ஓர் அழகிய கோயில் உண்டு; அங்குப் போதும் எழுக என - அங்கே செல்வோம் எழுக என்று கூற; போயினர் சார்ந்தார் - அங்கே சென்று அடைந்தார்.

(வி - ம்.) முன் 'வரையளவு' என்றான். ஆதலால், இப்போது, 'நன்னகரைக் காணப்போதும்' என மேலுங் கூறினான். நகர் எனவே அருகன் கோயில் என்று சீதத்தன் கருதியதாக நச்சினார்க்கினியர் உரைப்பர்.

கோதை யருவி - கோதை போன்ற அருவி. குளிர்வரை : வினைத்தொகை. அவன் விரும்பி வருதற்பொருட்டு அரசன் என்னாது நாதன் கோயில் என்றான். நாதன்கோயில் என்றது இறைவன் திருக்கோயிலையும் குறிக்குமாகலின் என்க. போதும் : தன்மைப் பன்மை. கன்னிமதில் கொடிமதில் எனத் தனித்தனிக் கூட்டுக. (௩௩)

வேறு

௫௨௪. மேகமே மிடைந்து தாழ
விருள்கொண்ட வெள்ளிக் குன்ற
மாகத்து விளங்கித் தோன்றும்
வனப்புநாம் வகுக்க லுற்றா
லாகந்தான் கரிய தொன்று
கீழ்நின்று நடுங்கக் கவ்விப்
பாகமே விழுங்கப் பட்ட
பான்மதி போன்ற தன்றே.

(இ - ள்.) தாழ மேகமே மிடைந்து இருள்கொண்ட வெள்ளிக் குன்றம் - தாழ்வரை யெல்லாம் மேகமே நெருங்கி

இருண்ட அவ்வெள்ளிமலை; மாகத்து விளங்கித் தோன்றும் வனப்பு நாம் வகுக்கல் உற்றால் - வானத்திலே விளக்கமாகத் தோன்றும் அழகை நாம் விளக்கிக் கூறத் தொடங்கினால்; தான் கரியது ஒன்று நாகம் கீழ்நின்று நடுங்கக் கவ்வி - தான் நிறம் கரியதாகிய ஒரு பாம்பு கீழே நின்று நடுங்குமாறு பற்றி; பாகமே விழுங்கப்பட்ட பால்மதி போன்றதே - பாதியே விழுங்கப்பெற்ற வெண்மதியைப் போன்றது என்று கூறலாம்.

(வி - ம்.) அன்று: அசை. ஏ: தேற்றம்.

அடிப்பகுதி முகிலாற் சூழப்பட்டுள்ள வெள்ளி மலைக்குத் தேவர் கூறும் உவமை மிகவும் இனிதாதலுணர்க. மாகம் - விசும்பு. கரிய தொன்று என்றது இராகுக்கோளினை. அம்மலை மேக மண்டலத்தையும் கடந்து உயர்ந்து நிற்றலால், பாகமே விழுங்கப்பட்ட மதி என்றார். பாகம் - பாதி. கூறலாம் வேறு அரிது என்பது எச்சப்பொருள். (௩௬)

௩௨எ. துளங்குபொன் னகரின் றன்மை
சொல்லலாஞ் சிறிதோர் தேவன்
விளங்குபொன் னுலகத் துள்ள
துப்புர விடங்க ளெல்லா
மளந்துகொண் டின்பம் பூரித்
தணிநக ராக்கி மேலா
லிளங்கதிர்ப் பருதி சூட்டி
யியற்றிய தென்ன லாமே.

(இ - ள்.) துளங்கு பொன் நகரின் தன்மை சிறிது சொல்லலாம் - ஒளிவிடும் பொன் நகரின் இயல்பை நாம் சிறிதே கூற முடியும்; விளங்கு பொன் உலகத்து உள்ள துப்புரவு இடங்கள் எல்லாம் - விளக்கமான பொன் உலகிலே உள்ள நுகர் பொருள் நிறைந்த இடங்களையெல்லாம்; அளந்து கொண்டு இன்பம் பூரித்து அணிநகர் ஆக்கி - அளந்துகொண்டு வந்து இன்பத்தை நிறைவித்து அழகிய நகரம் ஆக்கி; மேலால் இளங் கதிர்ப் பருதிசூட்டி - மதியனைய அம்மலையின் தலையிலே இளமை யான கதிரையுடைய ஞாயிற்றை மதிலாக அமைத்து; ஓர் தேவன் இயற்றியது என்னலாம் - ஒரு வானவன் நிறுவியது என்று கூறலாம்.

(வி - ம்.) பருதி - வட்டம்: மதிலுக்கானமையின் பண்பாகுபெயர். இங்குக் கூறியது பொன்மதில் - 'அத்தேர்ப் பருதி சுமந்து எழுந்த யானை' (களவழி - ௪) என்றார் பிறரும்.

மானிடராகிய நம்மனோர் அந்நகரின் தன்மையை முற்றக் கூறுதல் இயலாது ஆயினும் எம்மறிவிற் கெட்டியவாறு கூறுவேம் என்பார் நகரின் தன்மை சிறிது சொல்லலாம் என்றார். துப்புரவு - நுகர்பொருள்.

பூரித்து - நிரப்பி. ஒரு தேவன் என்றது தான் கருதியதனைக் கருதிய படியே இயற்றவல்ல ஒரு தேவன் என்பதுபட நின்றது. (௩௫)

வேறு

௫௦௮. போங்கி யாயிரந் தாமரை பூத்தபோற்
செங்க ணாயிரஞ் சேர்ந்தவன் பொன்னகர்
கோங்கு தோய்குழ லாரோடுங் குன்றின்மேற்
றங்கு கின்றது போற்றகை சான்றதே.

(இ - ள்.) தாமரை பொங்கி ஆயிரம் பூத்த போல்-தாமரை மிக்கு ஆயிரம் தாமரைப் பூக்களைப் பூத்தன போல; ஆயிரம் செங்கண் சேர்ந்தவன் பொன் நகர் - ஆயிரம் அழகிய கண்கள் பொருந்திய இந்திரனுடைய அமராவதி; கொங்குதோய்குழலா ரொடும் - மணங் கமழுங் கூந்தலையுடைய அரம்பையரோடும்; குன்றின்மேல் தங்குகின்றது போல் - இவ்வெள்ளிக் குன்றின் மேல் தங்கியிருப்பது போன்ற; தகை சான்றது-அழகு பொருந் தியது.

(வி - ம்.) தாமரை பொங்கி ஆயிரம் பூத்தபோல் என மாறுக. கண் ஆயிரஞ்சேர்ந்தவன் - தேவேந்திரன். நகர் என்றது - அமராவதி யினை. குழலார்-ஈண்டுத் தேவமகளிர். (௩௬)

௫௦௯. கிடங்கு சூழ்மதிற் கேழ்கிளர் பூங்கோடி
மடங்க னோக்கியர் வாண்முகம் போலுமேன்
றுடங்கு வெண்மதி யுள்குளி ரத்தங்
குடங்கை யாற்கோம்மை கோட்டுவ போன்றவே.

(இ - ள்.) கிடங்கு சூழ்மதில் கேழ்கிளர் பூங்கொடி-அகழி சூழ்ந்த மதிலில் இருக்கும் நிறம் வீங்கிய அழகிய கொடிகள்; வெண்மதி - வெண் மதியைத் (தடவுதல்); மடங்கல் நோக்கியர் வாள் முகம்போலும் என்று - (அம்மதி) சிங்கப் பார்வையை யுடைய மங்கையரின் ஒளிரும் முகம்போலும் என்று கருதி; உடங்கு உள்குளிர - முற்றும் உள்ளங் குளிர; தம் குடங்கை யால் கொம்மை கொட்டுவ போன்ற - தம்முடைய உள்ளங்கையி னாலே அம்மதியின் புறத்தை (நீ மங்கையர் முகம் ஒப்பை! நல்லை! நல்லை!! என்று கூறி) தட்டுவன போன்றிருந்தன.

(வி - ம்.) பூங்கொடி - அழகியகொடி. மடங்கல்-அரிமா. அரிமா நோக்குமாறு முன்னும் பின்னும் நோக்கும் இயல்புடைய மகளிர் என்ற வாறு. தம - அகரம் ஆறுவதன் பன்மையுருபு. கொம்மை - புறம். மதிலில் உயர்த்திய கொடிகள் வானுற உயர்ந்துநின்று ஆடின என்பது கருத்து. (௩௭)

௫௩0. திருவ மேகலை தெள்ளரிக் கிண்கிணி
பரவை யாழ்குழல் பண்ணமை மென்முழா
வுருவம் யாருடை யாரென் றொளிர் நக
ரரவ வாய்திறந் தார்ப்பது போன்றதே.

(இ - ள்.) ஒளிர் நகர் - விளக்கமிகும் அந் நகரில்; திரு மேகலை தெள் அரிக் கிண்கிணி பரவை யாழ் பண் அமை குழல் மென் முழா அரவம் - பெண்களின் அழகிய மேகலை, தெளிந்த ஓசையுறும் பரல்களையுடைய கிண்கிணி, பேரியாழ், இசை பொருந்திய குழல், முழவு ஆகியவற்றின் ஒலி; உருவம் உடையார் யார் என்று - என்னைப்போன்ற அழகுடையார் யார் என்று; வாய்திறந்து ஆர்ப்பது போன்றது - (அந்நகர்) வாய்திறந்து ஆரவாரிப்பதைப் போன்றது.

(வி - ம்.) திருவ: அ: அசை.

மகளிர்க்கு ஆகுபெயர். அழகிய மேகலை எனினுமாம். தெள் அரி - ஆராய்ந்திட்ட பரலுமாம். பரவை யாழ் - பேரியாழ். என்னைப் போன்ற என்பது இசையெச்சம். (௩௮)

௫௩௧. செம்போன் மாடங்கள் சென்னி யழுத்திய
வம்போற் றிண்ணிலை யாய்மணித் தூவிகள்
வெம்பு நீள்சுடர் வீழ்ந்து சுடுதலிற்
பைம்போற் கோப்புள் பரந்தன போன்றவே.

(இ - ள்.) செம்பொன் மாடங்கள் சென்னி அழுத்திய - செம்பொன் மாடங்களின் முடியிலே அழுத்தப் பெற்ற; அம் பொன் திண் நிலை ஆய் மணித் தூவிகள் - அழகிய பொன்னால் திண்மையான நிலைபெறக் கட்டப்பெற்ற, ஆராய்ந்த மணித் தூவிகள்; வெம்பும் நீள்சுடர் வீழ்ந்து சுடுதலின் - ஞாயிற்றின் வெம்மையுடைய நீண்ட கதிர்கள் தங்கிச் சுடுதலினாலே; பைம் பொன் கொப்புள் பரந்தன போன்ற - புதிய பொன் உருகிக் கொப்புளம் பரவின போன்றன.

(வி - ம்.) தூவி: மாட வீடுகளின் உச்சியிலே அமைப்பது. தூவிகள் கொப்புள் பரந்தன போன்றன. 'ஞாயிறு தாழ்ந்து சுடுதலால்' என்பர் நச்சினார்க்கினியர். தற்குறிப்பேற்ற வுவமை. (௩௯)

௫௩௨. உருளி மாமதி யோட்டொழித் தோங்கிய
வெருளி மாடங்கண் மேற்றுயி லெய்தலின்
மருளி மான்பிணை நோக்கினல் லார்முகத்
தருளி னுலழ லாற்றுவ போன்றவே.

(இ - ள்.) உருளிமா மதி ஒட்டு ஒழித்து ஓங்கிய வெருளி மாடங்கள்மேல் துயில் எய்தலின் - ஞாயிற்றின் தேரிற் பூண்ட குதிரைகள் திங்களின் செலவைத் தடுத்து உயர்ந்த வெருட்சியை யுடைய மாடங்களின்மேல் தூங்குதலினாலே; மருளி மான்பிணை நோக்கின் நல்லார் முகத்து அருளினால் - மருண்ட மான்பிணை யின் பார்வையையுடைய மங்கையரின் முகத்தில் தோன்றிய அருளினால்; அழல் ஆற்றுவ போன்ற - தம் வெம்மையைத் தணித்துக்கொள்வன போன்றன.

(வி - ம்.) உருளி, மருளி, வெருளி: இ: பகுதிப் பொருள் விகுதி கள். உருள் மா: ஒற்றையாழித் தேரை இழுக்கும் குதிரைகள். உருள் - ஆழி: தேரை புணர்த்தலின் சினையாகு பெயர். திங்கள் மண்டலத்தைக் கடந்து ஞாயிற்றின் மண்டலம் வரை மாடங்கள் உயர்ந்தன என்று கூறினார். மிகை உயர்வு நவிற்சியணி. திங்கள் மண்டலம் ஞாயிற்று மண்டலத்திற்குக் கீழேயுள தென்பது சோதிட நூலார் கொள்கையாம். (௪0)

௱௩௩. அசும்பு பொன்வரை யாய்மணிப் பூண்களும்
பசும்பொன் மாலையும் பட்டுழிப் பட்டவை
நயந்து கொள்பவ ரின்மையி னன்னகர்
விசும்பு பூத்தது போன்றன வீதியே.

(இ - ள்.) பொன் அசும்பு வரை ஆய்மணிப் பூண்களும் - பொன் இடையறாது ஒழுகும் மலைகளிலுண்டான ஆராய்ந்த மணியாற் செய்த அணிகலன்களும்; பசும்பொன் மாலையும் - புதிய பொன் மாலையும்; பட்டுழிப் பட்டவை நயந்து கொள்பவர் இன்மையின் - விழுந்த இடத்தே கிடக்கின்றவற்றை விரும்பி எடுப்பாரின்மையின்; நன்நகர் வீதி விசும்பு பூத்தது போன்றன- அந்த நன்னகரின் தெருக்கள் வானம் மீன்களைப் பூத்த தன் மையை ஒத்தன.

(வி - ம்.) நயந்து கொள்பவர் இன்மையின் என்றது அந்நகரத் தில் நல்குரவாளர் இல்லை என்றற்குக் குறிப்பேதுவாய் நின்றது. (௪௧)

௱௩௪. தேக்க ணின்னகிற் றேனொடு கூட்டமைத்
தாக்கப் பட்ட வளவில் கொழும்புகை
வீக்கி மாடந் திறந்திட மேல்லவே
லூக்கி வாய்விட் டுயிர்ப்பன போன்றவே.

(இ - ள்.) தேம் கண் இன் அகில் தேனொடு கூட்டு அமைத்து - நெய்யைத் தன்னிடத்தே உடைய மணமினிய அகிலையும் மற்றைய கூட்டுக்களையும் தேனொடு கலந்திட்டு; ஆக்கப்பட்ட அளவு இல் கொழும் புகை - உண்டாக்கப்பட்ட

அளவற்ற புகையை; வீக்கி மாடம் திறந்திட - மாடங்களிற் சாளரங்களை அடைத்து நிறைத்து அவற்றைத் திறக்க; ஊக்கி வாய்விட்டு மெல்ல உயிர்ப்பன போன்ற - அம்மாடங்கள் புகையைப் பொறுக்க மாட்டாது வலிய வாயைத் திறந்து மெல்லென உமிழ்வன போன்றன.

(வி - ம்.) கூட்டாவன: "நேர்கட்டி செந்தேன் நிரியாசம் கர்ப்பூரம்-ஆரம்...ஐந்து" நிரியாசம்-பிசின். அது குங்குலியம் முதலியன - என்பர் நச்சினார்க்கினியர்.

'நேர்கட்டி செந்தேன் நிரியாசம் பச்சிலை-ஆரம் அகிலுறுப்போராறு' என்பர் அடியார்க்கு நல்லார் (சிலப். 6 - 44).

தேம்கன்: தேக்கன் என வலித்து நின்றது. தேம் - தேன்; நெய். திறந்திட என்றதனால் முன்னர் அப்புகையை அடைத்து வைத்துத் தேக்கினர் என்பதுணரலாம்: வீக்குதல் - தேக்குதல். இதுமாடம் மணமுடையதாதற்பொருட்டு. இதன்கண் கூறப்படும் உவமை இனிது. (௪உ)

௫௩௫. தப்பில் வாய்மொழித் தானவர் வைகிய
வொப்பின் மாநக ரொண்மைமற் றியாதெனிற்
கப்பத் திந்திரன் காமுறு மாமணிச்
செப்பு வாய்திறந் தன்னதோர் செம்மற்றே.

(இ - ள்.) தப்பு இல் வாய்மொழித் தானவர் வைகிய ஒப்பு இல் மாநகர் ஒண்மை மற்று யாது எனில் - குற்றமற்ற வாய்மொழியை உடைய வித்தியாதரர் வாழ்கின்ற உவமையில்லாத அப் பெருநகரின் விளக்கம் மற்றும் எங்ஙன மிருந்ததெனில்; கப்பத்து இந்திரன் காமுறும் மாமணிச் செப்பு - இவ்வூழிக்குரிய இந்திரன் விரும்பிய பூண் தங்கும் மாமணிச் செப்பு; வாய் திறந்து அன்னது ஓர் செம்மற்று - வாய்திறந்தாற் போலுந் தலைமையினை உடையது எனலாம்.

(வி - ம்.) கற்பம்: கப்பம் எனத்திரிந்தது: தற்பவம்.

தானவர் - வித்தியாதரர். ஒண்மை - விளக்கம். செம்மற்று - தலைமையினையுடையது. என்னலாம் என்பது இசையெச்சம். (௪௩)

வேறு

௫௩௬. நன்னகர் நோக்கி நாய்கன்
நாகங்கோல் புகுந்த தென்னப்
பொன்னகர் பொலியப் புக்குப்
பொங்குமா மழைக டங்கு

மின்னவிர் செம்பொன் மாடத்
திருவரு மிழிந்து புக்குப்
பின்னவன் விருந்து பேணிப்
பேசினன் பிறங்கு தாரான்.

(இ - ள்.) நாய்கன் நல்நகர் நோக்கி - சீதத்தன் அந்த அழகிய நகரைப் பார்த்து; நாகம் கொல் புகுந்தது என்ன - நாகர் நகரோ நாம் நெருங்கியது என்று கருதி; பொன் நகர் பொலியப் புக்கு-அப் பொன் னகர் விளங்கப் புகுந்து; பொங்கும் மா மழைகள் தங்கும் மின் அவிர் செம் பொன் மாடத்து - கிளரும் பெருமுகில்கள் தங்கும் ஒளிவிடும் தரனுடைய பொன் மாடத்திலே; இருவரும் இழிந்து புக்கு - தரனும் சீதத்தனும் (வானிலிருந்து) இறங்கிப் புகுந்தபோது; பிறங்குதாரான் அவன் விருந்து பேணிப் பின் பேசினன் - விளங்கும் மாலையணிந்த தரன் சீதத்தனுக்கு விருந்தளித்து ஓம்பிப் பிறகு ஒரு மொழி உரைத்தான்.

(வி - ம்.) வித்தியாதர நகரிலே உள்ள மாடமாகையால் தரன் மனையென்றும், அவன் நகராகையால் விருந்து பேணினன் தரனென்றுங் கொள்ளப்பட்டன.

மழைதங்கும் இருவர் என இயைத்துத், தரன் கதியால் மழையில் தங்கினன் என்றும், சீதத்தன் கொடையால் தங்கினன் என்றும் விளக்கங் கூறுவர் நச்சினார்க்கினியர். மற்றும், 'இனி வெள்ளி மலை மேகபதத்திற்கு மேலென்றாரேனும் மேகம் எங்கும் உளதென்று வைத்து, மழைகள் தங்கும் மாடம் என்றுமாம்' எனவும் பொருள் கூறுவர். அவர், அண்மையிலே உள்ள சொல்லுடன் பொருந்தா வழியன்றே சேய்மைச் சொல்லுடன் இசைத்தல் வேண்டும்; எனவே, 'மழைகள் தங்கும் மாடம்' என இசைப்பதே பொருத்தம். (சச)

ருகஎ. மாடியந் தானை மன்னர் மாமணி நாக மாகக்
கேடில்சீர்க் கலுழனுய கலுழவே கற்குத் தேவி
தோடலர் கோதைத் தொல்சீர்த் தாரணி சுரும்புண் கண்ணி
யாடவ ரறிவு போழு மணிமுலை யணங்கி னன்னாள்.

(இ - ள்.) மாடியம் தானை மன்னர் மா மணி நாகம் ஆக - மாடியம் என்னும் கவசத்தை அணிந்த படை வேந்தர் பெரு மணியை உடைய நாகங்களாகவும்; கேடு இல் சீர் கலுழன் ஆய கலுழ வேகற்குத்தேவி - கெடுதல் அற்ற புகழையுடைய கருடன் தானாக அமைந்த கலுழ வேகனுக்கு மனைவி; தோடு அலர் கோதை தொல்சீர் தாரணி - இதழ் விரிந்த பூமாலை யுடைய பழம் புகழையுடைய தாரணி என்பவள்; சுரும்பு உண் கண்ணி - வண்டுகள் தேனைப்பருகும் கண்ணியையும்; ஆடவர் அறிவு

போழும் அணி முலை - ஆடவரின் அறிவைப் பிளக்கும் அழகிய முலையையும் உடைய : அணங்கு அன்னாள் - தெய்வம் போன்றவளாகிய.

(வி - ம்.) இப்பாட்டுக் குளகம். அணங்கின் : இன் சாரியை

மாடியம் - கவசம். கலுழவேகன் - அந்நகரத்து மன்னன். தாரணி என்பவள் என்க. (௬௫)

௩௩௮. விண்ணகம் வணங்க வெண்கோட்
டிளம்பிறை முளைத்த தேபோற்
பண்ணகத் தினிய சொல்லாள்
பாவையைப் பயந்த ஞான்றே
யெண்ணிட மின்றி மன்ன
ரிம்மலை யிறைகொண் டீண்டி
யண்ணலங் களிற்றி னுச்சி
யருங்கல வெறுக்கை யீந்தார்.

(இ - ள்.) பண் அகத்து இனிய சொல்லாள் பாவையை - பண்ணிலே பொருந்திய இனிய சொல்லாளாகிய பாவை போன்றவளை; விண் அகம் வணங்க வெண்கோட்டு இளம்பிறை முளைத்ததேபோல் - வானுலகு வணங்குமாறு வெண்மையான கோடுகளையுடைய பிறை தோன்றினாற் போல ; பயந்த ஞான்றே-பெற்ற அந்நாளிலேயே ; எண் இடம் இன்றி மன்னர் இம்மலை ஈண்டி இறைகொண்டு - எள்ளிடவும் இடமின்றி மன்னரெல்லோரும் இம்மலையிலே கூடித் தங்குதல் கொண்டு ; அண்ணல்அம் களிற்றின் உச்சி அருங்கல வெறுக்கை ஈந்தார் - பெருமை மிக்க களிற்றின் மீதிருந்து அரிய கலன்களையும் செல்வத்தையும் ஏற்போர்க் களித்தனர்.

(வி - ம்.) மன்னர் வெறுக்கை ஈந்தது அப்பெண் தத்தமக்கே வேண்டும் என்று அதற்குறிகுறியாக என்க. (௬௬)

௩௩௯. மந்திரத் தரசன் வல்லே நிமித்திகன் வருக என்றாற்
கந்தரத் தோடு கோளின் சாதக மவனுஞ் செய்தா
னிந்திர திருவி லேய்ப்பக் குலவிய புருவத் தாட்கு
வந்தடை பான்மை மண்மேல் இராசமா புரத்த தென்றான்.

(இ - ள்.) மந்திரத்து அரசன் நிமித்தன் வல்லே வருக என்றாற்கு - வித்தியாதர உலகத்து மன்னனாகிய கலுழவேகன் கணியை விரைவில் கொணர்க என்றவனுக்கு; அவனும் அந்தரத்து ஒடு கோளின் சாதகம் செய்தான் - வந்த கணியும்;

வானில் ஓடும் கோள்களாலே ஆராய்ந்து சாதகம் எழுதினன்; இந்திர திருவில் ஏய்ப்பக் குலவிய புருவத்தாட்கு - வானவில் போல வளைந்த புருவத்தினளுக்கு; மண்மேல் இராசமா புரத்து வந்து அடை பான்மை என்றான் - மண்ணுலகில் இராசமா புரத்திலேயே வரவேண்டிய நல்வினைப் பயன் உளது என்றான்.

(வி - ம்.) மந்திரம்: ஆகுபெயரால் மந்திரம் வல்ல உலகாகிய வித்தியாதர உலகை உணர்த்தியது.

வல்லே - விரைவாக. அந்தரம் - வானம். இந்திரதிருவில் - வானவில். பான்மை - ஈண்டு நல்வினை. புரத்தது - புரத்தின்கண்ணது. எனவே, அந் நல்வினை இவட்கு இராசமாபுரத்தில் இவள் உளளாய பொழுது வருவதாம் என்றவாறாயிற்று. (சஎ)

ருசo. அவனுரை தெளிந்து வேந்த
ஞசையு ளரசர் நிற்பக்
கவனங்கோள் புரவிக் கோட்பிற்
காதலுங் கரந்து வைத்தா
னவனதே கருதிற் றங்கோ
லன்றுகோ லறிய லாகா
திவணது மறிது மென்று
கோயிலுக் கேகி னனே.

(இ - ள்.) வேந்தன் அவன் உரை தெளிந்து-கலுழவேகன் கணியின் மொழியை உணர்ந்து; அரசர் ஆசையுள் நிற்ப - அரசர்கள் எமக்குக் கன்னியைத் தருவான் என்ற ஆசையிலே நிற்ப; கவனம் கொள் புரவிக் கொட்பின் காதலும் கரந்து வைத்தான் - கவனச் செலவையுடைய குதிரையின் மனச்சுழற்சி போலத் தன் விருப்பத்தை வெளியிடாது வைத்தான்; அவன் அதே கருதிற்று ஆம் சொல்? அன்று சொல்? அறியலாகாது- அவன் கருதியது கணி கூறியதேயா யிருக்கின்றதோ? அன்றி, அரசர் கருதியதோ? அறிய வியலாது; இவண் அதுவும் அறிதும் என்று - இப்போது அதனையும் அறிவோம் என்று கூறி; கோயிலுக்கு ஏகினனே - (சீதத்தனையும் அழைத்துக்கொண்டு) கலுழவேகனுடைய அரண்மனைக்குச் சென்றான்.

(வி - ம்.) அஃது என்பது 'அதும்' என விகாரப்பட்டது. குதிரையின் கவனமாவது இடமும் வலமும் பாய்தலாகும். முன்னிரண்டடிகளையும் ஒக்கவைத்துப் பாய்ச்சல் என்பர் தக்கயாகப் பரணி உரைகாரர் (தக்க. கoஅ. உரை.) இவன் அறிதும் என்றான் இராசமாபுரத்தே யிருந்து சீதத்தன் வந்திருப்பதால். அரசனது கருத்தைத் தெளிந்தின் உணரலாகாமையின், இவனுக்கு உண்மை கூறாது பின்னர் உணர வைத்தான்.

வேந்தர் என்றது, பிறந்த பொழுதே அவளை விரும்பி வெறுக்கை யீந்த அவ் வேந்தர் என்பதுபட நின்றது. அவன் - கணி.

அவனஃதே எனற்பால சுட்டு அவனதே என்று நின்றது. அஃதே- அக் கணி கூறியதனையே. (௪அ)

௩௪௧. பால்பரந் தன்ன பட்டார் பூவணை பசும்பொற் கட்டிற்
கால்பரந் திருந்த வெங்கட் கதிர்முலை கச்சின் வீக்கி
வேல்பரந் தனையகண்ணார் வெண்மதிக் கதிர்பெய்கற்றை
போலிவர் கவரி வீச மன்னவ னிருந்த போழ்தின்.

(இ - ள்.) கால் பரந்து இருந்த வெங்கண் கதிர்முலை கச்சின் வீக்கி - அடி பரவியிருந்த விருப்பமூட்டும் கண்களையுடைய ஒளி யுறும் முலைகளைக் கச்சினாலே இறுகக் கட்டி; வேல் பரந்த அனைய கண்ணார் - வேல் கொலைத்தன்மையிற் பரவினாற் போன்ற கண்ணி னார்; வெண்மதிக் கதிர் பெய்கற்றைபோல் இவர் கவரி வீச-வெண் திங்களின் கதிர்களைச் சொரிந்தாற் போன்று அசையா நின்ற கவரியை வீச; பால் பரந்த அன்னபட்டு ஆர் பூ அணை பசும் பொன் கட்டில் - பாலாவி பரவினாற் போன்ற பட்டுப் போர்த்த மலரணை யுடைய பசும் பொன் கட்டிலிலே; மன்னவன் இருந்த போழ்தில் - கலுழவேகன் அமர்ந்திருந்தபோது,

(வி - ம்.) இப்பாட்டுக் குளகம். (௪௧)

௩௪௨. என்வர விசைக்க வென்ன
வாயிலோ னிசைப்ப வேகி
மன்னர்தம் முடிகள் வேய்ந்த
வயிரம்போழ்ந் துழுது சேந்த
பொன்னவிர் கழல்கோள் பாதம்
பொழிமழைத் தடக்கை கூப்ப
வின்னுரை முகமன் கூறித்
தானத்தி லிருக்க வென்றான்.

(இ - ள்.) என் வரவு இசைக்க என்ன - சீதத்தனுடன் வந்த என் வருகையைக் கூறுக என்று தரன் கூற; வாயிலோன் இசைப்ப - வாயிற் காவலன் அரசனிடம் ஆணை பெற்று வந்து கூற; ஏகி - தரன் சென்று; மன்னர்தம் முடிகள் வேய்ந்த வயிரம் போழ்ந்து உழுது சேந்த - அரசர்கள் தங்கள் முடிகளிலே அணிந்த வயிரங்கள் கீறி உழுதலிலே சிவந்த; பொன் அவிர் கழல் கொள் பாதம்-பொன் விளங்கும் கழலணிந்த அடிகளிலே; பொழி மழைத் தடக்கை கூப்ப - பெய்யும் முகிலனைய பெரிய கைகளைக் குவிக்க; இன் உரை முகமன் கூறி - (மன்னவன்)

இனிய உரையாலே முகமன் மொழிந்து; தானத்தில் இருக்க என்றான்-அரசர்க்குரிய இடத்திலே இருக்க என்று (இருவரையும்) கூறினான். (௬௦)

௩௭௩. முதிர்பெயன் மூரி வான முழங்கிவாய் விட்ட தோப்ப
வதிர்குரன் முரச நாண வமிர்துபெய்ம் மாரி யேய்ப்பக்
கதிர்விரி பூணி னாற்குத் தந்தைதாய் தாரங் காதன்
மதுரமா மக்கள் சுற்றம் வினவிமற் றிதுவுஞ் சொன்னான்.

(இ - ள்.) முதிர் பெயல் மூரி வானம் முழங்கி வாய்விட்டது ஒப்ப - முற்றிய பெயலையுடைய பெருமையான முகில் அதிர்ந்து வாய் திறந்தாற்போலவும்; அதிர்குரல் முரசம் நாண - அதிர்ந்த குரலையுடைய முரசு வெள்கவும்; அமிர்து பெய்ம்மாரி ஏய்ப்ப - அமிர்தத்தைப் பெய்யும் முகிலைப் போலவும், கதிர்விரி பூணினாற்கு - ஒளி வீசும் அணியுடைய சீதத்தனுக்கு; தந்தை தாய் தாரம் காதல் மதுரமா மக்கள் சுற்றம் வினவி - தந்தையையும் தாயையும் மனைவியையும் அன்புடைய இனிய மக்களையும் உறவையும் கேட்டறிந்து; மற்று இதுவும் சொன்னான் - மேலும் இதனையுங் கூறினான்.

(வி - ம்.) 'வான் சத்தத்திற்கும், முரசு முழக்கத்திற்கும், மாரி கேட்டற்கும் இனிமைக்கும் உவமை'—என்பர் நச்சினார்க்கினியர். (௬௧)

௩௭௪. இன்றைய தன்று கேண்மை
யெமர்நம ரேழுவர் காறு
நின்றது கிழமை நீங்கா
வச்சிர யாப்பின் னூழா
லன்றியு மறனு மொன்றே
யரசன்யான் வணிக னீயே
யென்றிரண் டில்லை கண்டாய்
யிதுநின தில்ல மென்றான்.

(இ - ள்.) கேண்மை இன்றையது அன்று - நம் நட்பு இன்றைக்குத் தோன்றியதன்று; வச்சிர யாப்பின் நீங்கா ஊழால் - வச்சிரத்தால் இட்ட எழுத்தைப்போல நீங்காத நல்வினையாலே; எமர் நுமர் எழுவர் காறும் நின்றது கிழமை - எமரெழுவர் நுமரெழுவர் அளவும் (ஏழு கிழமையும் போல) ஏற்றிழிவின்றி நின்றது நங்கேண்மை; அன்றியும் அறனும் ஒன்றே - மேலும் நம் கொள்கையும் ஒன்றே; அரசன் யான் வணிகன் நீ என்று இரண்டு இல்லை - (ஆதலால்) நான் அரசன் நீ வணிகன் என்று இரண்டு சாதியில்லை; இது நினது இல்லம் என்றான் - இது நின் வீடு என்றான்.

(வி - ம்) கிழமை - உரிமையுமாம். நீயே ; ஏ: அசை. கண்டாய். முன்னிலையசை. வச்சிரயாப்பு - வச்சிரத்தால் தலையிலிட்ட எழுத்து: 'வச்சிர நுதியி னிட்ட எழுத்தனன்' (சீவக. கஞுசு).

எழுவர் என்பதனை எமர் என்பதனோடும் கூட்டுக. அறனும் ஒன்றே என்றது நாமிருவரும் ஒரே சமயத்தினிற்போரே என்றவாறு. இது மதவேற்றுமையின்றென்றபடியாம். இனிச் சாதிவேற்றுமையின்றென் பான் யான் அரசன் நீ வணிகன் என்றான். வணிகரும் அரசரோ டொப்பர் என்பதுபற்றி இங்ஙனம் கூறினன். (௫உ)

௫௬௫. மந்திர மன்னன் சொன்னீர் மாரியால் வற்றி நின்ற
சந்தனந் தளிர்த்த தேபோல் சீதத்தன் றளிர்த்து நோக்கி
யெந்தைக்குத் தந்தை சொன்னா னின்னண மென்று கேட்ப
முந்தைத்தான் கேட்ட வாறே முழுதெடுத் தியம்பு
[கின்றான்.

(இ - ள்.) வற்றி நின்ற சந்தனம் மாரியால் தளிர்த்ததே போல் - மழையின்மையின் காய்ந்து நின்ற சந்தனம் மழையினால் தளிர்த்தது போல்; மந்திர மன்னன் சொல் நீர் சீதத்தன் தளிர்த்து நோக்கி - வித்தியாதர மன்னனின் சொல்லாகிய நீரினால் சீதத்தன் குளிர்ந்து மன்னனை நோக்கி; இன்னணம் எந்தைக்குத் தந்தை சொன்னான் என்று - இவ்வாறே என் பாட்டன் இயம்பினான் என்று; முந்தைத் தான் கேட்ட ஆறே முழுது எடுத்துக் கேட்ப இயம்புகின்றான் - முன்னர்த் தான் கேட்டவண்ணமே முழுதும் எடுத்து அரசன் கேட்குமாறு கூறுகிறான்.

(வி - ம்) சொல்நீர் - சொல்லினது நீர்மையாலே என்க. எந்தைக் குத் தந்தைஎன்புழி என் தந்தைக்கு அவன் தந்தையாகிய என் பாட்டன் என்க. இன்னணம் - இவ்வாறு. (௫௩)

௫௬௬. வெள்ளிவே தண்டத் தங்கண்
வீவில்தென் சேடிப் பாலிற்
கள்ளவிழ் கைதை வேலிக்
காசில்காந் தார நாட்டுப்
புள்ளணி கிடங்கின் விச்சா
லோகமா நகரிற் போகா
வெள்ளிவேற் கலுழ வேகன்
வேதண்ட வேந்தர் வேந்தன்.

(இ - ள்.) வெள்ளி வேதண்டத்து அம்கண் வீவு இல் தென் சேடிப் பாலில் - வெள்ளிமலையிலே அழகிய இடத்தை யுடைய கெடுதியில்லாத தென் சேடியின் பக்கத்தில்; கள்

அவிழ் கைதை வேலி காசு இல் காந்தார நாட்டு - தேன் சொரியும் தாழை வேலியையுடைய குற்றமற்ற காந்தாரம் என்னும் நாட்டிலே; புள் அணி கிடங்கின் விச்சா லோக மா நகரின் போகா - பறவைகள் தங்கிய அகழியையுடைய வித்தியா தர உலகப் பெருநகரிலே நீங்காமலிருக்கின்ற; வெள்ளிவேல் கலுழ வேகன் வேதண்ட வேந்தர் வேந்தன் - வெண்மையான வேலேந்திய கலுழவேகன் என்பான் மலையரசர்கட் கெல்லாம் அரசன் ஆவான்.

(வி - ம்.) வேதண்டம் - மலை. வீவில் - அழிவில்லாத. 'தென் சேடி வெள்ளி வேதண்டம்' என்பது தொடங்கி அடுத்த செய்யுளில் 'அறியின்' என்பதீறாகச் சீதத்தன் தன் பாட்டன் கூற்றைக் கொண்டு கூறுகின்றான்.

கைதை - தாழை. விச்சாலோகம் - வித்தியாதர வுலகம். வேதண்ட வேந்தர் - மலையரசர். (௬௪)

௫௭௭. சங்குடைந் தனைய வெண்டா
மரைமலர்த் தடங்கள் போலும்
நங்குடித் தெய்வங் கண்டீர்
நமரங்கா ளறிமி னென்னக்
கொங்குடை முல்லைப் பைம்போ
திருவடங் கிடந்த மார்ப
விங்கடி பிழைப்ப தன்று
லெங்குல மென்று சொன்னான்.

(இ - ள்.) நமரங்காள்!-சுற்றத்தவர்களே!; சங்கு உடைந்த அனைய வெண்தாமரை மலர்த் தடங்கள் போலும் - சங்கு விரிந்தாலனைய வெண்தாமரை மலர்கள் நிறைந்த குளங்கள் போன்ற; நம் குடித் தெய்வம் அறிமின் என்ன - நம் குடிக்கு (அக்கலுழ வேகன்) தெய்வம் என அறியுங்கோள் என்று கூறியதால்; கொங்கு உடை முல்லைப் பைம்போது இரு வடம் கிடந்த மார்ப - மணமுடைய புதிய முல்லைமலரால் ஆகிய இரண்டு மாலைகள் தங்கிய மார்பனே!; எம்குலம் இங்கு அடி பிழைப்பது அன்று என்று சொன்னான் - எம் மரபு இவ்விடத்து நின் திருவடிக்குத் தவறு செய்யாது என்று (சீதத்தன்) கூறினான்.

(வி - ம்.) 'சங்குடைந்தனைய வெண்டாமரை மலர்த் தடங்கள் போலும் நங்குடி' என்பதற்குத், "தடங்களிலே உடைந்த தன்மைய வாகிய மலரும் சங்கும் போலும் நம் குடி. இது தூய்மைக்கு உவமை. இனி, சங்கு சுட்டாலும் நிறங் கெடாததுபோலக் கெட்டாலும் தன் தன்மை கெடாத குடியுமாம். 'நத்தம்போற் கேடும்' (குறள் - ௨௩௫) என்ப" என்று விளக்கங் கூறுவர் நச்சினார்க்கினியர். 'சங்கு உடைந்

தனைய வெண்டாமரை மலர்' என்பதற்கு வலிந்து கூறும் அப்பொருள், இன்றி அமையாததன்று, வெண்டாமரை மலர்த்தடமே குலத்தூய்மைக்குக் கொள்வதால் உவமைக்கு உவமையன்று. அரச முல்லையும் காவல் முல்லையுங் கருதி 'இருவடம்' என்றார். சீதத்தன் கலுழ வேகனை நோக்கி, 'எம் பாட்டன் இங்ஙனம் நின்னைத் தெய்வம் என்று கொள்ளுமாறு கூறியுள்ளான். ஆதலால், எங்குடி நின் அடிக்குப் பிழைப்பதன்று' என்றான்.

கண்டீர் : முன்னிலையசை. நச்சினார்க்கினியர், 'காணுங்கோள்' எனப் பொருள் கூறுவர். 'அறிமின்' என மேலே வருவதால் அது அத்துணைச் சிறப்பன்று. நமரங்காள் : நமர் அம் காள் : அம் : அசை.

சங்குடைந்தனைய வெண்டாமரை மலர்த்தடம் என்புழி, வெண்டாமரை தடத்திற்கு அடைமாத்திரையாய் வந்ததாகலின் சங்குடைந்தனைய என்னும் உவமை உவமைக்குவமையன்று; ஈண்டு ஆசிரியர் உவமையாக எடுத்தபொருள் தடம் மட்டுமே என்க. தடம் சிறப்புப் பற்றி வந்த உவமை. (௫௩)

௫௪. பெருந்தகைக் குருசி றோழன்
பெருவிலைக் கடக முன்கை
திருந்துபு வணங்கப் பற்றிச்
சென்றுதன் னுரிமை காட்டப்
பொருந்துபு பொற்ப வோம்பிப்
பொன்னிழை சுடர நின்ற
கருங்கண்ணி திறத்து வேறுக்
கட்டுரை பயிற்று கின்றான்.

(இ - ள்.) பெருந்தகைக் குருசில் தோழன் பெருவிலைக் கடகம் முன்கை திருந்துபு வணங்கப் பற்றிச் சென்று - பெருமை தங்கிய அம்மன்னன் (சீதத்தன் கூறியவற்றைக் கேட்டு) அந்தச் சீதத்தனின் விலைமிகுங் கடகம் அணிந்த முன்கையைச் செவ்வையாகப் பற்றி அழைத்துச் சென்று; தன் உரிமை காட்ட - தன் மனைவிக்கு இவனைக் காட்டினனாக; பொருந்துபு பொற்ப ஓம்பி - அவளும் இவனுக்குத் தகவாக அழகுற உபசரித்தாளாக; பொன் இழை சுடர நின்ற கருங்கண்ணி திறத்து - அங்குப் பொன்னணி ஒளிர நின்ற கரிய கண்களையுடைய தத்தையின் சார்பாக; வேறுக் கட்டுரை பயிற்றுகின்றான் - வேறுகக்கொண்டு உறுதியுரையைக் கலுழ வேகன் கூறத்தொடங்கினான்.

(வி - ம்.) ஓம்பி - ஓம்ப : வினையெச்சத் திரிபு.

உரிமைகாட்ட என்றது சீதத்தனுக்குத் தன் மனைவியைக் காட்ட என்றவாறு. இங்ஙனம் காட்டுதல் நட்புக்கிழமைக்கு அறிகுறி என்க.

இதனை,

" யாமாயின் எம்மில்லங் காட்டுதும் தாமாயின்
காணவே கற்பழியும் என்பார்போல்—நாணிப்
புறங்கடை வைத்தீவர் சோறும் அதனால்
மறந்திடுக செல்வர் தொடர்பு." (நாலடி. உகூ௩)

என வரும் நாலடியானும் உணர்க. (நச்சினார்க்கினியர் கருத்தும் இதுவே.) இதுகாறும் முகமன் மொழிந்த கலுழவேகன் கண்ணிறத்து இப்போது காரியம் பேசினான் என்பார் வேறாக் கட்டுரை பயிற்றுகின்றான் என்றார். வேறா - வேறாக. (௫௬)

௫௪௬. எரிமணிப் பளிக்கு மாடத்
தெழுந்ததோர் காம வல்லி
'யருமணிக் கொடிகொல் மின்கொ
லமரர்கோ னெழுதி வைத்த
வொருமணி குயின்ற பாவை
யொன்று கொலென்று நாய்கன்
றிருமணிக் கொடியை யோரான்
றெருமர மன்னன் சொன்னான்.

(இ - ள்.) எரிமணிப் பளிக்கு மாடத்து எழுந்தது ஓர் காம வல்லி அருமணிக் கொடிகொல்! - ஒளிவிடும் மணிகள் இழைத்த இப் பளிங்கு மாடத்திலே தோன்றியதான ஒப்பற்ற காம வல்லியாகிய அரிய மாணிக்கக் கொடியோ!; மின்கொல்! - மின் கொடியோ! அமரர்கோன் எழுதி வைத்த ஒருமணி குயின்ற பாவை ஒன்றுகொல்! - வானவர் தலைவன் தன் உள்ளத்தில் எழுதி வைத்த ஒப்பில்லாத மணியினால் இயற்றப் பெற்ற ஒரு பாவையோ!; என்று - என; திருமணிக் கொடியை ஓரான் நாய்கன் தெருமர - அழகிய மணிக்கொடி போன்ற தத்தையை மகளென்று அறியானாகி வணிகன் கலக்கமுற; மன்னன் சொன்னான் - அரசன் கூறினான்.

(வி - ம்.) 'கலுழவேகன் தன் மனைவியிடம் அழைத்துச் சென்று சீதத்தனை அறிமுகஞ் செய்து வைத்தான். அவளும் சீதத்தனுக்கு முகமன் செய்தாள். அப்போது அங்கே நின்ற தன் மகளைப் பற்றிக் கலுழவேகன் சீதத்தனுக்குக் கூறத் தொடங்கியபோது அவளைப் பார்த்த சீதத்தன் தெருமரலுற்றான். அவனைத் தேற்ற அரசன் கூறுகின்றான்' என்று முற்செய்யுளுக்கும் இச் செய்யுளுக்குந் தொடர்பு கொள்க.

நாய்கன் சுழலாநிற்ப அவனுக்கு மன்னன் சொன்னான் என்க. (௫௭)

௩௫௦. தூசுலாய்க் கிடந்த வல்கு
றுப்புறழ் தொண்டைச் செவ்வாய்
வாசவான் குழலின் மின்போல்
வருமுலைச் சாந்து நக்கி
யூசல்பாய்ந் தாடிக் காதிற்
குண்டல மிலங்க நின்றாள்
காசில்யாழ்க் கணங்கொள் தெய்வக்
காந்தர்வ தத்தை யென்பாள்.

(இ - ள்.) தூசு உலாய்க் கிடந்த அல்குல் - ஆடை சூழ்ந்து கிடந்த அல்குலையும்; துப்பு தொண்டை உறழ் செவ்வாய் - பவளத்தையும் கொவ்வைக் கனியையும் மாறுகொண்ட செவ்வாயினையும் (உடையளாய்); வாசம் வான் குழலின் மின்போல் - மணம் பொருந்திய குழலையுடைய மின்கொடிபோல்; வருமுலைச் சாந்து நக்கி ஊசல் பாய்ந்து ஆடிக் காதில் குண்டலம் இலங்க நின்றாள் - வளரும் முலையிற் பூசிய சாந்தைத் தொட்டுப் பாய்ந்து ஊசலாடிக் காதிலே குண்டலம் விளங்க நின்றவள்; காசுஇல் யாழ்க்கணம் கொள் தெய்வக் காந்தர்வதத்தை என்பாள் - குற்றமற்ற யாழ்க்கலைத் தொகுதியைக் கொண்ட தெய்வமாகிய மாதங்கியைப் போன்ற காந்தர்வதத்தை எனப்படுவாள்.

(வி - ம்.) "காதணல் இறைஞ்சி நிற்றலிற் குண்டலம் சாந்தைத் தீண்டிப் போக்குவரவுடைத்தாய் அசைந்து இலங்க நின்றாள்" என்பர் நச்சினார்க்கினியர். மேலும் "யாழ்வித்தைத் தொகுதி கொண்ட தெய்வம் - மாதங்கி" என்றுங் கூறுவர். (௫௮)

௩௫௧. விளங்கினா ளுலக மெல்லாம்
வீணையின் வனப்பி னாலே
யளந்துணர் வரிய நங்கைக்
கருமணி முகிழ்த்த வேபோ
லிளங்கதிர் முலையு மாகத்
திடங்கொண்டு பரந்த மின்னிற்
றுளங்குநுண் ணுசுப்புந் தோன்றா
துருவரு வேனை வுண்டே.

(இ - ள்.) வீணையின் வனப்பினாலே உலகம் எல்லாம் விளங்கினாள் - இவள் வீணையினாலும் அழகினாலும் உலகெங்கும் விளக்கமுற்றாள்; அளந்து உணர்வு அரிய நங்கைக்கு - பண்பினை அளந்து அறியவியலாத இப் பெண்ணுக்கு; அரு மணி முகிழ்த்தவேபோல் இளங்கதிர் முலையும் ஆகத்து இடம் கொண்டு பரந்த-

முன்னர் அரிய மணிகள் தோன்றினபோல விளங்கிய இளமை பொருந்திய கதிர்த்த முலைகள் இப்போது மார்பெலாம் இடமாகக் கொண்டு பரவின; மின்னின் துளங்கும் நுண் நுசுப்பும் தோன்றாது உரு அரு என்ன உண்டு - முன்னர் மின்கொடி போல அசையும் நுண்ணிய இடையும் இப்போது காணப்படாமல் உண்டு இல்லை என ஐயம் நிகழுமாறு உள்ளது. (௫௯)

௫௫உ. நின்மக ளிவளை நீயே நின்பதிக் கொண்டு போகி
யின்னிசை பொருது வெல்வா னியாவனே யானு மாக
வன்னவற் குரிய ளென்ன வடிப்பணி செய்வ லென்றான்
றன்னமர் தேவி கேட்டுத் தத்தைக்கே தக்க தென்றாள்.

(இ - ள்.) நின் மகள் இவளை நீயே நின்பதிக் கொண்டு போகி - இவள் நின் மகளாவாள் இவளை நீ நின் நகர்க்குக் கொண்டு சென்று; இன் இசை பொருது வெல்வான் யாவனே யானும் ஆக - இனிய இசையாற் பொருது வெல்பவன் எவனேயெனினும் ஆக; அன்னவற்கு உரியள் என்ன - அவனுக்கு இவள் உரியவள் என்று கொடுப்பாய் எனக் கலுழவேகன் கூற; அடிப்பணி செய்வல் என்றான் - நின் திருவடித் தொண்டு செய்வேன் என்று சீதத்தன் கூறினான்; தன் அமர்தேவி கேட்டு- கலுழவேகனின் விருப்பத்துக்குரிய மனையாள் அதைக் கேட்டு; தத்தைக்கே தக்கது என்றாள் - இவ்விழிதகவு இவளுக்கே உரியது என்று வருந்திக் கூறினாள்.

(வி - ம்.) போகி - போக என வியங்கோளுமாம். 'யாவன்' என்பது எக்குலத்தினேனுமாக என்பது குறித்து நின்றது. உரியள் எனவே கொடைப் பொருளாயது. அடிமைப் பணி என்பது விகாரப்பட்டது. அடிப்பணி செய்வல் என்றது அங்ஙனமே செய்வேன் என்றவாறு. தத்தைக்கே தக்கது என்புழித் தக்கது என்றது குறிப்பு மொழி; அவட்கிது தகுதியாகாது என்று வருந்தியபடியாம். (௬0)

௫௫௩. முனிவரும் போக பூமிப் போகமுட் டாது பெற்றுந்
தனியவ ராகி வாழ்தல் சாதுய ரதனி னில்லை
கனிபடு கிளவி யார்தங் காதலர் கவானிற் றுஞ்சிற்
பனியிரு விசும்பிற் றேவர் பான்மையிற் றென்று
[சொன்னான்.

(இ - ள்.) (அதுகேட்ட மன்னன்); கனிபடு கிளவியார் - கனியனைய மொழியுடைய மகளிர்; முனிவு அரும் போக பூமிப் போகம் முட்டாது பெற்றும் - வெறுப்பற்ற இன்பவுலகிலே இன்பத்தைத் தடையின்றிப் பெற்றாலும்; தனியவர் ஆகி வாழ்தல் அதனின் சாதுயர் இல்லை - தனித்தவராகி வாழ்வதினும்

இறந்துபடும் வருத்தம் பிறிதின் இல்லை; தம் காதலர் கவானில் துஞ்சின் - அவர்தம் கணவரின் துடையிலே துயிலப் பெறின்; பனி இரு விசும்பின் தேவர் பான்மையிற்று - குளிர்ந்த பெரிய வானுலகிலே வானவரின்பத்தின் பான்மையுடையது; என்று சொன்னான் - என்று கூறினான்.

(வி-ம்.) இச் செய்யுளும் (௫௨௪) அடுத்து வருவதும் "தத்தைக்கே என்று வருந்திய தன்மனைவி தாரணிக்குக் கூறியன. பெற்றும் - பெற்ற விடத்தும். சாதுயர் - இறத்தலால் வரும் துன்பம். அதனில் - அத் தனித்த வாழ்வினுங் காட்டில். (௬௧)

௫௨௪. நூற்படு புலவன் சொன்ன
நுண்பொரு ளுழைந்தி யானும்
வேற்கடற் றானை வேந்தர்
வீழ்ந்திரந் தாலு நேரேன்
சேற்கடை மதர்வை நோக்கிற்
சில்லரித் தடங்க ணங்கை
பாற்படு காலம் வந்தாற்
பான்மையார் விலக்கு கிற்பார்.

(இ-ள்.) நூல்படு புலவன் சொன்ன நுண்பொருள் யானும் நுழைந்து - நூலுணர்ந்த கணி கூறிய நுண்ணிய பொருளை யானும் நுணுகி ஆராய்ந்ததனால்; வேல் கடல் தானை வேந்தர் வீழ்ந்து இரந்தாலும் நேரேன் - வேலேந்திய கடலனைய படையுடைய வேந்தர் விரும்பி இரந்தாலும் ஒவ்வேனாயினேன்; சேல்கடை மதர்வை நோக்கின் சில் அரித் தடங்கண் நங்கை - சேலின் கடை போன்ற கடையினையும் நோக்கினையும் சிலவாகிய செவ்வரியினையும் உடைய பெரிய கண்ணினள் ஆன இவளுக்கு; பால்படு காலம் வந்தால் - ஒருவன்பால் அடையும் காலம் வந்ததாயின்; பான்மை யார் விலக்குகிற்பார் - அவ்வூழை எவர்தாம் விலக்க வல்லவர்? (ஆதலின் நேர்ந்தேன்).

(வி-ம்.) நூற்படுபுலவன் என்றது கணியை. மதர்வை நோக்கு - மயக்கந்தரும் பார்வை. பால் - (ஒருவன்) பக்கலிலே. பான்மை - ஊழ் வினை. ஆதலின் அதற்கு நேர்ந்தேன் என்பது எச்சப் பொருள். (௬௨)

௫௨௫. படைப்பருங் கற்பி னுடன்
பாவையைப் பரிவு நீக்கிக்
கோடைக்குரிப் பால வெல்லாங்
கொடுத்தபின் கூற்று முட்கும்

விடைப்பருந் தானை வேந்தன்
வேண்டுவ வெறுப்ப நல்கித்
தொடுத்தலர் கோதை வீணா
பதிக்கிது சொல்லி னானே.

(இ - ள்.) படைப்பு அருங்கற்பினாள் - (அது கேட்ட) (பிறரால்) படைத்தற்கரிய கற்புடைய தாரணி; தன் பாவை யைப் பரிவு நீக்கி-தன் மகளின் வருத்தத்தை நீக்கி; கொடைக்கு உரிப்பால எல்லாம் கொடுத்தபின் - கொடுத்தற்குரியன வெல் லாம் கொடுத்த பிறகு; கூற்றும் உட்கும் விடைப்பு அருந் தானை வேந்தன் - கூற்றுவனும் அஞ்சும் (பிறரால்) வேறுபடுத் தற்கரிய படையினையுடைய வேந்தன்; வேண்டுவ வெறுப்ப நல்கி-(தத்தைக்கு) வேண்டுமவற்றை மிகுதியும் நல்கி; தொடுத்து அலர்கோதை வீணாபதிக்கு இது சொல்லினான் - தொடுத்து மலர்ந்த மாலையையுடைய வீணாபதியை நோக்கி இதனைக் கூறினான்.

(வி - ம்.) கணவன் கருத்தே தன் கருத்தாதலின், பிறர் படைத் தற்கரிய கற்பாயிற்று.

கற்பினாள் - தாரணி. பாவை : உவமவாகுபெயர்; காந்தருவத்தை. விடைப்பு - வேறுபடுத்தல். வெறுப்ப - மிக: உரிச்சொல். வீணாபதி - ஒருபேடி. (௬௩)

௫௫௬. உடம்பினோ டுயிரிற் பின்னி
யொருவயி னீங்கல் செல்லா
நெடுங்கணுந் தோளும் போலு
நேரிழை அரிவை நீநின்
றடங்கணி தனிமை நீங்கத்
தந்தையுந் தாயு மாகி
யடங்கல ரட்ட வேலா
னாணையி ராமி னென்றான்.

(இ - ள்.) உடம்பினோடு உயிரின் பின்னி - உடம்பும் உயி ரும் போல ஒன்றி; ஒருவயின் நீங்கல் செல்லா நெடுங்கணும் தோளும் போலும் நேரிழை அரிவை - ஓரிடத்தும் நீங்காமல் நீண்ட கண்கள் போலவும் தோள்கள் போலவும் உறுதுணைபுரியும் அழகிய அணியுடைய அரிவையே!; நீ நின் தடங்கணி தனிமை நீங்க - நீ உன்னுடைய பெருங்கண்ணியின் தனிமை விலக; தந்தையும் தாயும் ஆகி - தந்தையும் தாயுமாகுக! அடங்கலர் அட்ட வேலான் ஆணையிர் ஆமின் என்றான் - பின்னர், நீவிர் இரு

வரும் பகைவரை வென்ற வேலானை சீதத்தனின் ஆணைப்படி நடப்பீராக என்றான்.

(வி - ம்.) 'ஆகி' என்பதற்கு 'ஆய்' என எச்சப்பொருள் கொள்வதும் ஒன்று.

இது கலுழவேகன் காந்தருவதத்தையை வீணாபதியிடம் ஓம்படை செய்தது. உரிமை தோன்ற நின் தடங்கண்ணி என்றான். வேலான் - சீதத்தன். ஆணையிர் - ஆணையையுடையீர். (சுச)

௫௫எ. அருமணி வயிரம் வேய்ந்த
வருங்கலப் பேழை யைஞ்ஞூ
றெரிமணி செம்போ னார்ந்த
விராயிரம் யவனப் பேழை
திருமணிப் பூணி னாற்குச்
சினந்தலை மழுங்க லின்றிக்
குருமணி முடியிற் றேய்த்த
தரன்றமர் கோள்க வென்றான்.

(இ - ள்.) அருமணி வயிரம் வேய்ந்த அருங்கலம் பேழை ஐஞ்ஞூறு - அரிய மணிகளும் வயிரமும் இழைத்த அரிய அணிகலப் பெட்டி ஐந்நூறும்; எரி மணி செம்பொன் ஆர்ந்த யவனப் பேழை இராயிரம் - ஒளிவிடும் மணியும் செம்பொன்னும் நிறைந்த யவன நாட்டுப் பெட்டி இரண்டாயிரமும் (கொடுத்து) திருமணிப் பூணினாற்குச் சினம் தலைமழுங்கல் இன்றிக் குருமணி முடியின் தேய்த்த - அழகிய மணிக்கலன்களையுடைய கலுழவேகற்குப் பகைவர்மேற் சினம் கெடுதல் இல்லாமையால், அவர்களுடைய நிறமிகும் மணிமுடியை அவன் அடியிலே தேய்ப்பித்த; தரன் தமர் கொள்க என்றான் - தரன் சுற்றத்தையும் கொள்க என்று கொடுத்தான்.

(வி - ம்.) யவனப் பேழை - யவன நாட்டிற் செய்த பேழை. பூணினான் - கலுழவேகன். முடியிற் குருமணி என மாறி அவன் அடியில் என வருவித்து முடிக்க. (சுரு)

௫௫அ. பல்வினைப் பவளப் பாய்காற்
பசுமணி யிழிகை வம்பார்
நல்லகில் விம்மு கட்டி
றவிசொடு நிலைக்கண் ணாடி
மெல்லிய தூப முட்டி
மேதகு நானச் செப்போ
டல்லவுங் கோள்க வென்று
னணங்குடை நிணங்கோள் வேலான்.

(இ - ள்.) பல்வினைப் பவளப் பாய்கால் பசுமணி யிழிகை வம்பு ஆர் நல் அகில் விம்மு கட்டில் - பல தொழிற்கூறுகளை யுடைய பவளத்தாற் பரந்த கால்களையும் புதிய மணியிழைத்த கைச் சுரிகையையும் உடைய மணங்கமழ் நல்ல அகிற்புகை பொங்கும் கட்டிலும்; தவிசொடு நிலைக்கண்ணடி மெல்லிய தூப மேதகு நானச் செப்போடு - தவிசும் நிலைக்கண்ணடியும் மென்மை யான இந்தளமும் பெருமையுற்ற புழுகுச் செப்பும்; அல்லவும் - பிறவும்; அணங்கு உடை நிணம் கொள் வேலான் கொள்க என்றான் - துன்பந்தரும் ஊன் தங்கிய வேலையுடைய மன்னன் கொள்க என்றுரைத்தான்.

(வி - ம்.) இந்தளம் - நெருப்பிடுங்கலம். ஒடு, ஓடு: எண்ணுப் பொருளன.

தூபமுட்டி - இதனை இந்தளம் என்பர் நச்சினார்க்கினியர். இதனை இக் காலத்தார் "தூபக்கால்" என்று வழங்கினர். இது தூபவகல் என்பதன் மரூஉப் போலும். (௬௯)

௫௫௯. விளக்கழ லுறுத்த போலும்
விசியுறு போர்வைத் தீந்தேன்
றுளக்கற வொழுகி யன்ன
துய்யறத் திரண்ட திண்கோல்
கோளத்தகு திவவுத் திங்கட்
கோணிரைத் தனைய வாணி
யளப்பருஞ் சுவைகோ ணல்யா
ழாயிர மமைக வென்றான்.

(இ - ள்.) விளக்கு அழல் உறுத்த போலும் விசி உறு போர்வை - விளக்கை அழலைச் சேர்த்தினாற் போலும் நிறத்தன வாய்த் தெரியாமற் போர்த்த போர்வையினையும்; தீ தேன் துளக்கு அற ஒழுகி அன்ன துய் அறத் திரண்ட திண்கோல் - இனிய தேன் அசைவின்றி ஒழுகினாற் போன்ற தும்பு இன்றித் திரண்ட நரம்பு; கொளத்தகு திவவு - கொள்ளத் தக்க வார்க் கட்டினையும் உடையவாய்; திங்கள் கோள் நிரைத்தனைய ஆணி - கோள்களை நிரைத்தனைய எண்ணாள் திங்களைப் போலுமாறு ஆணிகளையுடைய; அளப்ப அருஞ் சுவை கொள் நல்யாழ் ஆயிரம் அமைக என்றான் - மதிப்பிடற் கியலாத இனிமை கொண்ட குற்றமற்ற யாழ்கள் ஆயிரம் கொண்டு வருக என்றான்.

(வி - ம்.) கோள் நிரைத்த திங்கள் பத்தரில் தோலைச் சூழ முடுக் கின ஆணிக்கு உவமம். 'விளக்கழலுருவின் விசியுறுபச்சை' (பொருந-௫) 'உருக்கினன்ன பொருத்துறு போர்வை' (பெரும்பாண்-௯) 'தொடித்திரி வன்ன தொண்டுபடு திவவிற் - கடிப்பகை யனைத்துங் கேள்வி போகாக்'

குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பின்' (மலைபடுகடாம். உக - ௩) 'துளைவாய் தூர்ந்த துரப்பமை ஆணி - எண்ணாள் திங்கள் வடிவிற் றாகி' (பொருந - ௧0 - ௧௧) என்றார் பிறரும். (௬௭)

௩௬0. அரக்கேறி குவளை வாட்க
ணவ்வளைத் தோளி னாளைப்
பரப்பமை காதற் றாயர்
பற்பல்காற் புல்லிக் கொண்டு
திருப்புறக் கொடுத்த செம்பொற்
றாமரை போன்று கோயில்
புரிக்குழன் மடந்தை போகப்
புலம்பொடு மடிந்த தன்றே.

(இ - ள்.) அரக்கு எறி குவளை வாள் கண் அவ் வளைத் தோளினாளை - (உறவைப் பிரிதற்கு அழுது சிவத்தலின்) இங்குலிகம் ஊட்டின குவளை மலர் போன்று ஒளிரும் கண்களையும் அழகிய வளையணிந்த தோளையும் உடைய தத்தையை - பரப்பு அமை காதல் தாயர் பற்பல் கால் புல்லிக் கொண்டு - பரவிய அன்பையுடைய அன்னையர் பற்பல முறையாகத் தழுவிக் கொள்ள ; திரு புறக்கொடுத்த செம் பொன் தாமரை போன்று - திருமகளைப் போகவிட்ட சிவந்த பொற்றாமரை மலர் போல ; புரிகுழல் மடந்தை போகக் கோயில் புலம்பொடு மடிந்தது - கட்டப்பட்ட குழலினளாகிய தத்தை செல்வதால் அரண்மனை வருத்தத்துடன் சோர்ந்தது.

(வி - ம்.) புல்லிக்கொண்டு-தழுவிக்கொள்ள : வினையெச்சத்திரிபு. 'தொடரல் இறுதி தம்முன் தாம்வரின், லகரம் றகர வொற்றாகலும் உரித்தே' (தொல்-உயிர் மயங். - ௧௨) என்பதனாற் 'பற்பல்கால்' என்று கொள்க.

'ஒழியாது' (தொல் - தொகை - ௧௫) என்பதனால், இரண்டாவது விரித்துத் தாரணியையும் அல்லாத தாயரையும் புல்லிக்கொண்டு போக என்றும் ஆம். இவ்வாறு விரிப்பின், 'கொண்டு' என்னும் எச்சத்தைக் 'கொள்ள' எனத் திரிக்க வேண்டா.

தத்தை நீங்கிய அரண்மனை பொலிவிழந்தமைக்குத் தேவர் " திருப் புறக்கொடுத்த செம்பொற்றாமரை போன்று" என உவமை எடுத்துக் கூறியது நினைந்து நினைந்தின்புறற் பாலதாம். (௬௮)

௩௬௧. காம்புபொன் செய்த பிச்சங்
கதிர்மணிக் குடையோ டேந்தித்
தாம்பலர் கவரி வீசக்
கிண்கிணி ததும்ப நாகப்

பாம்புபைத் தனைய வல்குற்
பல்கலை மிழற்ற வேகி
யாம்பனா றமுதச் செவ்வா
யரசனைத் தொழுது நின்றாள்.

(இ-ள்.) பொன் செய்த காம்பு பிச்சம் - பொன்னாற் செய்த காம்பையுடைய பிச்சத்தையும்; கதிர்மணிக் குடையொடு ஏந்தி - ஒளிரும் மணியிழைத்த குடையையும் ஏந்தி; பலர் கவரி வீச - பல மகளிர் கவரி வீச; கிண்கிணி ததும்ப - கிண்கிணி ஒலிக்க; நாகப் பாம்பு பைத்த அனைய அல்குல் பல் கலை மிழற்ற - நாகப் பாம்பு படம் விரித்தாற்போன்ற அல்குலின் மேற் பல்மணிகளையுடைய மேகலை ஒலிக்க; ஆம்பல் நாறு அமுதச் செவ்வாய் ஏகி - ஆம்பல்போல மணக்கும் அமுத மனைய செவ்வாயினையுடையாள் சென்று; அரசனைத் தொழுது நின்றாள் - அரசனை வணங்கி நின்றாள்.

(வி-ம்.) 'பல மகளிர் பிச்சத்தையும் குடையையும் ஏந்திக் கவரியையும் வீசிவர' என்க. நாறுதல் - தோற்றுதலுமாம்.

பிச்சம் - பீலிக்குடை. பைத்தல் - படம் விரித்தல். ஆம்பல் நாறு அமுதச் செவ்வாய் என்னும் பன்மொழித்தொடர் காந்தருவதத்தை என்னும் பொருட்டாய் நின்றது. அரசன் - கலுழவேகன். (கூகூ)

ருகூஉ. அடிக்கல மரற்ற வேகி
யரும்பெறற் றாதை பாத
முடிக்கலஞ் சோரியச் சென்னி
யிறைஞ்சலு முரிந்து மின்னுக்
கோடிப்பல நுடங்கி யாங்குத்
தோழியர் குழாத்து ணிற்ப
வடுத்தனன் புல்லி வேந்தன்
றாற்றுகி லாது சொன்னான்.

(இ-ள்.) அடிக்கலம் அரற்ற ஏகி - அடியில் அணிந்த சிலம்பும் கிண்கிணியும் ஒலிப்பச் சென்று; அரும்பெறல் தாதை பாதம் முடிக்கலம் சென்னி சொரிய முரிந்து இறைஞ்சலும் - அருமையாகக் கிடைத்த தந்தையின் அடிகளை முடியில் அணிந்த கலன்கள் சிந்தத் தலையால் குனிந்து வணங்கி; மின்னுக் கொடிப் பல நுடங்கி ஆங்குத் தோழியர் குழாத்துள் நிற்ப - மின்னற் கொடிகள் பல அசைவனபோன்று நின்ற தோழியர் குழுவிலே நிற்ப; வேந்தன் அடுத்தனன் புல்லி ஆற்றுகிலாது சொன்னான் - மன்னன் அவளை நெருங்கித் தழுவிப் பிரிதலாற்றாமல் இதனைக் கூறினான்.

(வி - ம்.) 'மின்னுக் கொடி' எனப் பொருட்பெயர்க்கும் உகரமும் வல்லெழுத்துப் பேறும் (தொல். புள்ளி மயங். ௯0) இலேசாற்கொள்க.

புல்லி - புல்ல எனத் திரித்து; 'இறைஞ்சலும் அடுத்தனன் புல்ல, (அவள் சென்று) தோழியர் குழாத்துள் நிற்ப, ஆற்றுகிலாது சொன்னான்' என மாற்றிக் கூட்டுவர் நச்சினார்க்கினியர். (எ0)

௫௬௩. வலம்புரி யீன்ற முத்தம்
மண்மிசை யவர்கட் கல்லால்
வலம்புரி பயத்தை எய்தா
தனையரே மகளி ரென்ன
நலம்புரிந் தனைய காதற்
றேவிதன் னவையை நீங்கக்
குலம்புரிந் தனைய குன்றிற்
கதிபதி கூறி னானே.

(இ - ள்.) வலம்புரி ஈன்ற முத்தம் மண்மிசையவர்கட்கு அல்லால்-வலம்புரிச் சங்கு தந்த முத்து நிலமிசை வாழ்வார்க்கே யன்றி; வலம்புரி பயத்தை எய்தாது - வலம்புரி அம்முத்தின் பயனை அடையாது; மகளிர் அனையரே என்ன - பெண்களும் தங்கள் தாயருக்கு அத்தன்மையரே என்று; நலம்புரிந்த அனைய காதல் தேவிதன் நவையை நீங்க - நன்மையே ஒரு வடிவு கொண்டாற் போன்ற காதலையுடைய தன் மனைவி தன் வருத்தத்தைவிட; குலம் புரிந்த அனைய குன்றிற்கு அதிபதி கூறினான்- நற்குலமே ஒரு வடிவு கொண்டாற் போன்ற வெள்ளிமலைத் தலைவன் கூறினான்.

(வி - ம்.) இச் செய்யுளின்கண் தேவர்,

"சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதாம் என்செய்யும்
தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே."

என வரும் பாலைக்கலிக் (௯-௧௫-௧எ) கருத்தினைச் சிறிது மாற்றி அமைத்துக் கொண்டிருத்தலறிக. (எ௧)

௫௬௪. இன்சுவை யாழொ டன்ன மிளங்கிளி மழலை மஞ்ஞை
பொன்புனை யூகமந்தி பொறிமயிர்ப் புறவம் பொன்னார்
மென்புன மருளி னேக்கின் மானின மாதி யாகத்
தன்புறஞ் சூழப் போகித் தளிரியல் விமானஞ் சேர்ந்தாள்.

(இ - ள்.) இன்சுவை யாழொடு - இனிய சுவை தரும் யாழுடன்; அன்னம் மழலை இளங்கிளி மஞ்ஞை - அன்னமும் இளமை பொருந்திய மழலையுடைய கிளியும் மயிலும்; பொன்

புனை யூகம் மந்தி - பொன் அணி அணிந்த கருங்குரங்கும் பெண் குரங்கும் ; பொறி மயிர்ப் புறவம்-புள்ளிகளாக மயிர் பொருந்திய புறாவும் ; மென்புனம் மருளின் நோக்கின் பொன் ஆர் மானினம்- மென்மையான புனத்துக்குரிய, மருண்ட இனிய நோக்குக் கொண்ட, பொன்னிறம் பொருந்திய மான்திரள் ; ஆதி ஆக - முதலாக ; தன் புறம் சூழப் போகி - தன் பக்கலிலே சூழச் சென்று ; விமானம் தளிரியல் சேர்ந்தாள் - விமானத்தைத் தளிரனைய மெல்லியளாம் தத்தை அடைந்தாள்.

(வி - ம்.) மந்தி : பெண்பெயர்; 'குரங்கு முசுவும் ஊகமும் மந்தி' (தொல்-மரபு. ௬௭) என்றார். புறவம் - சித்திரப் புறா.

இதிற் கூறப்பட்டவற்றுள் அன்னம் கிளி மஞ்ஞை என்னும் மூன்றும் தத்தையால் வளர்க்கப்பட்ட பறவைகள் யூகம் மந்தி புறவம் மானினம் முதலியன பொன்னாற் செய்யப்பட்டவை எனக் கொள்க. இவ்வேற்றுமை தோன்றவே ஆசிரியர் பொன்புனை யூகம், மந்தி புறவம் என்றும், பொன்னார் மானினம் என்றும் அடைபுணர்த்தோதினர் என்க. சிற்பத்திறன் தெரித்தோதுவார், பொறி மயிர்ப்புறவம், மருள் இன்னோக்கின் மானினம் என்றுங் கூறினர். (௭௨)

வேறு

௫௬௫. வெற்றிவேன் மணிமுடிக், கோற்றவ னொருமக
ளற்றமில் பெரும்படைச், சுற்றமோ டியங்கினாள்.

(இ - ள்.) வெற்றிவேல் மணிமுடிக்கொற்றவன் ஒரு மகள்- வென்றி வேலையும் மணிமுடியையும் உடைய வேந்தனின் தனி மகள் ; அற்றம் இல் பெரும்படை - நீங்குதல் இல்லாத பெரும் படையாகிய ; சுற்றமோடு இயங்கினாள்-சுற்றத்துடன் சென்றாள், (௭௩)

௫௬௬. கண்ணயற் களிப்பன, வண்ணல் யானை யாயிரம்
விண்ணகத் தியங்குதே, ரெண்ணவற் றிரட்டியே.

(இ - ள்.) கண் அயல் களிப்பன - கண்ணருகே மதமுடையனவாகிய ; அண்ணல் யானை ஆயிரம் - பெருமை தங்கிய யானைகள் ஆயிரம் ; விண் அகத்து இயங்கு தேர் எண் - வானிற் செல்லும் தேர்களின் எண்ணிக்கை ; அவற்று இரட்டி - யானைகளினும் இருமடங்கு.

(வி - ம்.) இரட்டி என்றது இரண்டாயிரம் என்றவாறு. (௭௪)

௫௬௭. விற்படை விலக்குவ, பொற்படைப் புரவியு
முற்படக் கிளர்ந்தவற்றி, னற்புடைய நாற்றியே.

(இ - ள்.) விற்படை விலக்குவ-அம்பைத் தம் விரைவினால் விலக்குவனவாகிய; பொன் படைப் புரவியும் - பொன்னாற் செய்த கலணை முதலியவற்றையுடைய, குதிரைகளும்; முன்படக் கிளந்தவற்றின் - முற்கூறிய யானைகளினும்; நாற்றி நல்புடைய- நான்கு மடங்குற்ற நல்ல பக்கத்தன.

(வி - ம்.) விற்படை - வில்லால் எய்யும் அம்பு. பொற்படை - பொன்னாற் செய்த கலணை முதலியன. "பொலம்படை பொலிந்த...... ......புரவி" என்றார், மலைபடுகடாத்தினும் (௫௭௩). நாற்றி - நான்கு மடங்கு. (௭௫)

௫௬௮. பாறுடைப் பருதிவேல், வீறுடை யிளையரு
மாறிரட்டி யாயிரர், கூறுதற் கரியரே.

(இ - ள்.) பாறு உடைப் பருதி வேல் - பருந்துகள் சூழும் ஒளிமிகு வேல் ஏந்திய; வீறு உடை இளையரும் - சிறப்புற்ற வீரர்களும்; ஆறு இரட்டி ஆயிரர் - பன்னீராயிரவர்; கூறுதற்கு அரியர் - அவர் செப்புதற்கு அரிய திறலுடையர்.

(வி - ம்.) 'கூறுதற்கு அரியர்' என்பதற்குப், 'பகைவர் வஞ்சினம் கூறுதற்கு அரியர்' என்பர் நச்சினார்க்கினியர். (௭௬)

௫௬௯. மாகநீள் விசும்பிடை, மேகநின் றிடித்தலி
னாகநின் றதிர்ந்தவர்க், கேகலாவ தில்லையே.

(இ - ள்.) மாகம் நீள் விசும்பிடை - திக்குகளில் நீண்ட வானத்திலே; மேகம் நின்று இடித்தலின் - முகில் மழை பெய்தற்கு இடித்ததால்; நாகம் நின்று அதிர்ந்து - யானைகள் (தம் இனத்தின் பிளிறுதல் என்று எண்ணி) நின்று தாமும் பிளிறுதலால்; அவர்க்கு ஏகல் ஆவது இல்லை - அவர்கட்குச் செல்ல முடிவதில்லை.

(வி - ம்) தம் படைகளில் யானைகள் நிற்பதனால் இவர்கள் செல்ல முடியவில்லை. மாகம் - முகிலுமாம்; வானுக்கும் நிலத்துக்கும் இடையில் உள்ள இடம் என்பர் (பரி-க. ௬௭) பரிமேலழகர்.

நாகம் - யானை. அதிர்ந்து என்னும் எச்சத்தை அதிர எனச் செயவெனெச்சமாக்குக. அவர் - முற்கூறப்பட்ட வீறுடைய இளைஞர். (௭௭)

௫௭௦. வெஞ்சின வெகுளியிற், குஞ்சர முழங்கலின்
மஞ்சுதம் வயிறழிந், தஞ்சிநீ ருகுத்தவே.

(இ - ள்.) குஞ்சரம் வெஞ்சினம் வெகுளியின் முழங்கலின்- யானை கொடிய சினமாகிய வெகுளியோடு முழங்குவதால்; மஞ்சு அஞ்சித் தம் வயிறு அழிந்து நீர் உகுத்த - முகில்கள் அச்சமுற்று வயிறு கலங்கி நீரைச் சொரிந்தன.

(வி - ம்.) முகில் முதலில் இடித்தது. பிறகு மழை பெய்தது என்பதாம். (எஅ)

௫௭௧. வேழமும் மதத்தோடு, தாழ்புயல் கலந்துட
ஞழ்கட லகம்புறம், வீழ்தர விரைந்ததே.

(இ - ள்.) ஆழ்கடல் அகம் புறம் வீழ்தர - ஆழ்கடலின் நடுவு கரைக்குப் புறத்தே விழுமாறு; வேழம் மும்மதத்தொடு தாழ்புயல் கலந்து - யானைகளின் மும்மதத்துடன் தாழ்ந்த முகில் பெய்த நீருங் கலத்தலால்; விரைந்தது - முகிலாலும் களிறுகளாலும் தடையின்றி நாற்படையும் சென்றது. (எகூ)

௫௭௨. மல்லன்மாக் கடலிடைக், கல்லெனக் கலங்கவிழ்த்
தல்லலுற் றழுங்கிய, செல்வனுற்ற செப்புவாம்.

(இ - ள்.) மல்லல் மாகடலிடை-வளமிகுந்த பெரிய கடலினிடையே; கல் என கலம் கவிழ்த்து - கல் எனும் வருத்த ஒலி எழக் கலத்தைக் கவிழ்த்து விட்டு; அல்லல் உற்று அழுங்கிய - துன்பம் உற்று வருந்திய; செல்வன் உற்ற செப்புவாம் - சீதத்தன் அடைந்தவற்றை இனி இயம்புவோம்.

(வி - ம்.) இது நூலாசிரியர் கூற்று : நுதலிப் புகுதல். (அ0)

௫௭௩. பானிறப் பனிவரை, மேனிற மிகுத்தன
நீனிற நிழன்மணி, தானிரைத் தகமேலாம்.

(இ - ள்.) பால் நிறப் பனிவரைமேல் - பால் போன்ற நிறமுடைய பனிமலையின் மேல்; நிறம் மிகுத்தன - நிறஞ் சிறந்த மணிகளையும்; நீல்நிற நிழல் மணி - நீல நிற ஒளி மணிகளையும்; அகமெலாம் நிரைத்து - கப்பலின் உட்புறம் எல்லாம் நிறைவித்து.

(வி - ம்.) சீதத்தன் அறியாமலே அவன் மரக்கலத்தே நிறைத்தான் தரன். இப் பாட்டுக் குளகம். (அக)

௫௭௪. வஞ்சமின் மனத்தின, னெஞ்சகம் புகன்றுக
விஞ்சையம் பெருமகன், வஞ்சமென் றுணர்த்தினன்.

(இ - ள்.) வஞ்சம் இல் மனத்தினன் நெஞ்சகம் - வெள்ளையுள்ளத்தவனாகிய சீதத்தனின் உள்ளம்; புகன்று உக - உவந்து உவகை ஒழுக; விஞ்சைஅம் பெருமகன் வஞ்சம் என்று - வித்தியாதரப் பெருமகனான தரன்; வஞ்சம் என்று உணர்த்தினன் - மாயை என்பதை விளக்கினன்.

(வி - ம்.) விளக்கினது மேல்வருஞ் செய்யுட்களிற் காண்க.

வஞ்சமின் மனத்தினன் என்றது சீதத்தனை. தான் பிறருக்கு நலமே செய்யும் தன்மையன் என்பது தோன்றப் பெருமகன் என்றார். (அ௨)

௫௭௫. நங்கைதன் னலத்தினான், மங்குல்வெள்ளி மால்வரை
யெங்கு மன்ன ரீண்டினார், சங்கு விம்மு தானையார்.

(இ - ள்.) மங்குல் வெள்ளி மால்வரை எங்கும் - முகில் தழுவும் பெரிய வெள்ளிமலை முழுவதும்; நங்கை தன் நலத்தினால்-தத்தையின் அழகை விரும்பி; சங்கு விம்மு தானையார் மன்னர் ஈண்டினார் - சங்குகள் முழங்கும் படையினையுடைய வேந்தர்கள் வந்து குழுமினர். (அ௩)

௫௭௬. ஈரலங்க லேந்துவே, லாரலங்கன் மார்பினான்
கார்கலந்த கைக்கணி, சீர்கலந்து செப்பினான்.

(இ - ள்.) அலங்கல் ஏந்து ஈர் வேல் அலங்கல் ஆர் மார்பினன் - மாலையணிந்த, பகைவர் மார்பைப் பிளக்கும் வேலையும், மாலை பொருந்திய மார்பையும் உடைய அரசனுக்கு; கார் கலந்த கைக்கணி - முகில் அனைய கையுடைய கணியானவன்; சீர் கலந்து செப்பினான் - தத்தையின் சிறப்பை உளத்திற் கலந்து கூறினான். (அ௪)

௫௭௭. மாதர் வாழ்வு மண்ணதே, யாதலா லலங்கலந்
தாதவிழ்ந்த மார்ப! நின், காதலான் கடலுளான்.

(இ - ள்.) அலங்கல் அம் தாது அவிழ்ந்த மார்ப - மாலைகளின் அழகிய தாது அவிழ்தற்குரிய மார்பனே!; மாதர் வாழ்வு மண்ணதே ஆதலால் - தத்தையின் வாழ்வு நிலவுலகிலே ஆகையால்; நின் காதலான் கடலுளான் - நின் நண்பன் கடலிடைச் செல்கிறான். (அ௫)

௫௭அ. என்றுகூற வென்னையே, துன்றுகாதற் றோழனைச்
சென்றுநீ கொணர்கென, வன்றுவந்த வண்ணமே.

(இ - ள்.) என்று கூற - என்று கணி கூறியதால்; என்னை நீ துன்று காதல் தோழனைச் சென்று கொணர்க என - என்னை (அரசன் நோக்கி) 'நீ என் அன்புறு நண்பனைப்போய்க் கொண்டு வருக' என்று சொல்ல; அன்று வந்த வண்ணம் - நான் அன்று வந்த வண்ணமாகும். (அ௬)

௫௭௯. துன்பமுற்ற வர்க்கலா, லின்பமில்லை யாதலி
னன்பமற்றி யானினைத், துன்பத்தாற் றேடக்கினேன்.

(இ - ள்.) துன்பம் உற்றவர்க்கு அலால்-துன்பம் அடைந்தவர்களுக்கே அல்லாமல்; இன்பம் இல்லை, ஆதலின் - (மற்றவர்கட்கு) இன்பம் கிடைப்பதில்லை ஆகையால்; அன்ப! யான் நினைத் துன்பத்தால் தொடக்கினேன்-அன்பனே நான் உன்னைத் துன்பத்திற் பிணித்தேன்.

(வி - ம்.) இக் கருத்தினைக் கம்பநாடர் தங் காவியத்தே பொன் போற் போற்றிப் பொதிந்துள்ளார் "துன்புளதெனின் அன்றோ சுகமுளது" என்பது இராமாவதாரம் (கங்கைப். சுக.) அன்ப: விளி. தொடக்குதல் - பிணித்தல். நின்னுடைய இன்பத்தை மிகுதிப்படுத்தவே யான் இதனைச்செய்தேன் என்பது கருத்து. (அஎ)

௫அ௦. பிழைசெய்து பெற்றனன், வாழியென்று மாக்கட
லாழ்வித் திட்ட வம்பியைத், தோழர்ச் சுட்டிக்
[காட்டினான்.

(இ - ள்.) பிழை செய்து பெற்றனன் - உனக்கு வருத்தமுண்டாக்கி நின்னைத் தோழமை கொண்டேன்; வாழி என்று - (இனி நினக்குத் துன்பமின்றி) வாழ்க என்றுரைத்து; மாக்கடல் ஆழ்வித்திட்ட அம்பியைத் தோழர்ச் சுட்டிக் காட்டினான் - பெருங்கடலில் சீதத்தன் கண்ணுக்கு மட்டும் ஆழ்த்திய கலத்தையும் அவன் தோழரையும் (தீமையின்றியிருப்பதை) உணர்த்திக் காட்டினான்.

(வி - ம்.) சீதத்தனுடைய மரக்கலத்திலே மணிகளை நிறைவித்த தரன் பின்னர்த் தான் அவனை மாயத்தினாற் கொண்டு சென்றதைக் கூறிக் கலமும் தோழரும் தீதின்றியிருப்பதை உணர்த்தினான் என்க.

காரியமும் முற்றியதால் ஈண்டு உண்மையுரைத்தான் தரன்.

௫௬௫ - முதல் ௫அ௦ வரை உள்ள செய்யுட்கள் குறளடி நான்காய் வந்த கொச்சக ஒருபோகு என்பர் நச்சினார்க்கினியர். 'நெய்யொடு தீயொக்க - செய்யானைச் சேர்வார்க்குப் - பொய்யாத வுள்ளமே - மெய்யாதல் வேண்டுமே' (தொல்-செய். ௧௪௯ மேற்.) என்பதனை ஆதாரமாகக் காட்டுவர் அவர். பிற்காலத்திய பாவினத்தில் இது வஞ்சித்துறையாக அமையும். (அஅ)

வேறு

௫அ௧. தேன்றரு மாரி போன்று திவ்விய கிளவி தம்மா
லூன்றரு குருதி வேலா னுள்ளகங் குளிர்ந்து விஞ்சைக்
கோன்றரு துன்பம் மற்றென் குலத்தொடு முடிக வென்றான்
கான்றுவில் வயிரம் வீசும் கனமணிக் குழையி னானே.

(இ - ள்.) ஊன் தரு குருதி வேலான் - ஊன் சொரியும் குருதி தோய்ந்த வேலானாகிய; வயிரம் வில் கான்று வீசும் கன

மணிக் குழையினான் - வயிரம் ஒளியை உமிழ்ந்து வீசும் பருத்த மணியையுடைய குழையணிந்த சீதத்தன்; தேன் தரும் மாரி போன்று திவ்விய கிளவி தம்மால் உள் அகம் குளிர்ந்து - தேனைச் சொரியும் முகில் போன்று பெய்த இனிய மொழிகள் உள்ளத்திற் குளிர்ச்சியடைந்து; விஞ்சைக்கோன் தருதுன்பம் என் குலத்தொடு முடிக என்றான் - வித்தியாதர வேந்தன் தந்த இத்தன்மையான துன்பம் என் குலம் உள்ள அளவும் நடப்பதாக என்றான்.

(வி - ம்.) முன்னர்ச் சீதத்தனை நோக்கி (௫௮0) "பிழை செய்து பெற்றனன்" என்று தரன் கூறிய மொழியும் அதற்கு இத் "துன்பம் மற்றென் குலத்தொடும் முடிக" என்று சீதத்தன் மறுமொழி கூறியதும் கற்றோர் நெஞ்சத்தை நெகிழ்க்கும் பேரின்பமுடையனவாதல் உணர்க. (அகூ)

௫௮௨. தோடலர் தெரிய லான்றன் றோழரைக் கண்டு காத
லூடலர்ந் தெழுந்து பொங்க வுருவத்தார் குழையப் புல்லிப்
பாடிரும் பௌவ முந்நீர்ப் பட்டது பகர்த லோடு
நாடக நாங்க ளுற்ற தென்றுகை யெறிந்து நக்கார்.

(இ - ள்.) தோடு அலர் தெரியலான் தன் தோழரைக் கண்டு - இதழ் விரிந்த மலர்மாலையானாகிய சீதத்தன் (பிறகு) தன் நண்பர்களைக் கண்டு; காதல் ஊடு அலர்ந்து எழுந்து பொங்க - காதலானது நெஞ்சிலே மலர்ந்து எழுந்து பொங்குதலால்; உருவத்தார் குழையப் புல்லி - அழகிய மாலை குழையுமாறு தழுவிக்கொண்டு; பாடு இரும் முந்நீர் பௌவம் பட்டது பகர்தலோடும் - ஒலி பொருந்திய பெரிய முத்தன்மையுறு கடலில் நேர்ந்ததை உரைத்தவுடன்; கையெறிந்து நக்கு நாடகம் நாங்கள் உற்றது என்றார் - கைகொட்டிச் சிரித்து நாங்கள் இங்ஙனம் ஒரு நாடகங் கண்டதுண்டு என்றனர்.

(வி - ம்.) நாடகம்போலக் காட்டியவன் தரன். உற்றதென்று கையெறிந்து நக்கார் என்பதனை ஆர்விகுதி பிரித்துக் கூட்டி 'உற்ற தென்றார்' என முடிக்க.

நாடகம் நாங்கள் உற்றது என்றது யாங்கள் இந் நிகழ்ச்சியினைச் சிறிதும் கண்டிலேம் என்பதுபட நின்றது.

இப் பகுதியில் நூலாசிரியர் காட்டிய இம் முந்நீர்க் கலங்கவிழ் நிகழ்ச்சிக்கொப்பாக இனிமையுடைய பகுதி பிற இலக்கியங்களிலே காண்டற் கரிது. (கூ0)

௫௮௩. கட்டழற் கதிய புண்ணிற் கருவரை யருவி யாரம்
பட்டது போன்று நாய்கன் பரிவுதீர்ந் தினியர் சூழ
மட்டவிழ் கோதை யோடு மண்கனை முழவ மூதூர்க்
கட்டவிழ் தாரி னான்றன் கடிமனை மகிழ்ந்து புக்கான்.

(இ - ள்.) கட்டு அவிழ் தாரினன் நாய்கன்-முறுக்குடைந்த மாலையுடைய வணிகன்; கட்டழல் கதிய புண்ணில் கருவரை அருவி ஆரம்பட்டது போன்று - பெருநெருப்புப் பட்ட புண்ணிற் கரிய மலையிலுள்ள அருவியும் சந்தனச் சாந்தும் பட்டாற் போன்று; பரிவு தீர்ந்து - துன்பம் நீங்கி; மட்டு அவிழ் கோதையோடு - தேன் சொரியும் மாலையாள் தத்தையுடன்; இனியர் சூழ - நண்பர்கள் சூழ்ந்துவர; மண்கனை முழவம் மூதூர் - மண்ணுதல் அமைந்த முழவின் ஒலிமிகும் இராசமாபுரத்தே; தன் கடிமனை மகிழ்ந்து புக்கான் - தன்னுடைய காவல் மனையை அடைந்து மகிழ்ந்து புகுந்தான்.

(வி - ம்.) 'கதுவிய' என்பது, 'கதிய' என விகாரமுற்றது.

ஆரம் - சந்தனம். கருவரை என்றது பொதியமலையினை. மண்கனை முழவம் - மார்ச்சனை அமைந்த திரண்ட மத்தளம். மூதூர் - ஈண்டு இராசமாபுரம். (௬௧)



௫௮௪. பெருமனை குறுக லோடும்
பிறையென விலங்கித் தோன்றுந்
திருநுதன் மனைவி செம்பொற்
கோடியென விறைஞ்சி நிற்ப
வருமுலை பொதிர்ப்ப வாங்கி
வண்டின மிரியப் புல்லிக்
கதிர்நகை முறுவன் மாதர்
கண்ணுறு கவலை தீர்த்தான்.

(இ - ள்.) பெருமனை குறுகலோடும் - தன் பெருமை பெற்ற மனைவியிருக்கும் இடத்தை அடைந்தவுடன்; பிறை என இலங்கித் தோன்றும் திருநுதல் மனைவி-பிறை போல விளங்கித் தோன்றும் அழகிய நெற்றியையுடைய அவள்; செம்பொன் கொடி என இறைஞ்சி நிற்ப - செவ்விய பொற்கொடி போல வணங்கி நிற்க; வண்டு இனம் இரிய புல்லி - வண்டுக் கூட்டம் ஓடுமாறு அணைத்து; வருமுலை பொதிர்ப்ப வாங்கி - வளர்முலை புடைகொளத் தழுவி; கதிர் நகை முறுவல் மாதர் - ஒளிரும் பற்களையுடைய பதுமையின்; கண் உறு கவலை தீர்த்தான் - கண்கள் அடைந்திருந்த கவலையைப் போக்கினன்.

(வி - ம்.) கண்களின் எக்கமே முதலில் நீங்கும். ஆகையாற் 'கண்ணுறு கவலை' என்றார். 'மாதர்கண்' என்பதற்கு 'மாதரிடம்' என்றும் பொருள் கூறலாம். (௬௨)

௫௮௫. சந்திர காந்த மென்னுந்
தண்மணி நிலத்தி னங்கண்
வெந்தெரி பசும்பொன் வெள்ளி
பளிங்கொடு பவளம் பாய்த்திக்
கந்தெரி மணியிற் செய்த
கன்னியா மாட மெய்திப்
பைந்தொடிப் பாவை யொன்றும்
பரிவிலள் வைகி னாளே.

(இ - ள்.) *சந்திர காந்தம் என்னும் தண்மணி நிலத்தின் அங்கண் - சந்திர காந்தம் என்னும் குளிர்ந்த மணியாலே செய்த நிலத்தினிடத்தில்; வெந்து எரி பசும் பொன் வெள்ளி பளிங்கொடு பவளம் பாய்த்தி - ஓட வைத்து விளங்கும் புதிய பொன்னாற் சுவர் அமைத்து வெள்ளியும் பளிங்கும் பவளமுங் கொண்டு பாய்ச்சி; எரி மணியில் கந்து செய்த - விளங்கும் மணியால் தூண் அமைத்த; கன்னியா மாடம் எய்தி - கன்னி மாடத்தை அடைந்து; பைந்தொடிப் பாவை ஒன்றும் பரிவு இலள் வைகினாள் - புதிய வளையல் அணிந்த தத்தை சிறிதும் வருத்தம் இல்லாதவளாக இருந்தாள்.*

(வி - ம்.) பொன்னாற் சுவரும், மணியால் தூணும், பளிங்கினாற் கையலகும், பவளத்தால் பூட்டும், வெள்ளியால் கூரையும் கொள்க.

சந்திரகாந்தம் - நிலவொளி பட்டவுடன் நீர் உமிழ்வதொரு மணி. கந்து - தூண். பாவை - காந்தருவதத்தை. பரிவிலள்: முற்றெச்சம். (கூ௩)

௫௮௬. பாசிழைப் பரவை யல்குற்
பசுங்கதிர்க் கலாபம் வீங்கக்
காசுகண் பரிய வைகிக்
கடன்றலைக் கழிந்த பின்னாத்
தூசணி பரவை யல்குற்
றளங்குநுண் ணுசுப்பிற் பாவை
யாசறு வரவும் தந்தை
வலித்தது மறியச் சொன்னான்.

(இ - ள்.) *பாசிழை பரவை அல்குல் பசுங்கதிர்க் கலாபம் வீங்க - பதுமையின் புத்தணி யணிந்த பரப்புடைய அல்குலிலே புத்தொளி வீசும் கலாபம் விம்முதலால்; காசு கண்பரிய வைகி - அதில் மணிகள் அற்று வீழுமாறு கூடியிருந்து; கடன் தலை கழிந்த பின்னா - அவளிடத்து நிகழ்த்து முறையெல்லாம் அங்கே*

கழிந்த பிறகு: தூசு அணி பரவை அல்குல் துளங்கும் நுண் நுசுப்பின் பாவை - ஆடையணிந்த பரப்புடைய அல்குலேயும் அசையும் நுண்ணிய இடையையும் உடைய தத்தையின்; ஆசு அறு வரவும் தந்தை வலித்ததும் அறியச் சொன்னுன் - குற்றம் அற்ற வரவையும் அவள் தந்தை விரும்பியதையும் விளங்கக் கூறினுன்.

(வி - ம்.) கலாபம் - ஓரணிகலன் தந்தை வலித்தது - அவள் தந்தை இவளே யாழ் வென்ருனுக்குக் கொடுக்க என்று துணிந்தது. அவட்குச் சொன்னுன் என்க. (கூசு)

ருஅஎ. வண்டுண மலர்ந்த கோதை
வாயொருப் பட்டு நேரத்
தெண்கட லமிர்தம் பெய்த
செப்பெனச் செறிந்து வீங்கிப்
பெணடிரு மாண்மை வெஃகிப்
பேதுறு முலேயி ளுளைக்
கண்டவர் மருள நாளைக்
கடிவினை முடித்து மென்ருன்.

(இ - ள்.) வண்டுண மலர்ந்த கோதை வாய் ஒருப்பட்டு நேர - வண்டுகள் தேனைப் பருகுமாறு மலர்ந்த மாலையினுள் ஆகிய பதுமை அவன் விருப்பத்துக்கு உடன்பட்ட அளவில்; தெண் கடல் அமிர்தம் பெய்த செப்பு எனச் செறிந்து வீங்கி - தெளிந்த கடலின் அமிர்தத்தைப் பெய்த செப்புப்போல நெருங்கிப் பருத்து; பெண்டிரும் ஆண்மை வெஃகிப் பேது உறும் முலேயினுளை - பெண்களும் ஆண்மையை விரும்பி மயங்கு தற்குக் காரணமான முலேயுடைய தத்தையை; கண்டவர் மருள - பார்த்தவர் மயங்குமாறு; நாளை கடிவினை முடித்தும் என்ருன் - நாளைக்குத் திருமணம் புரிந்திடுவோம் என்று சீதத்தன் செப்பினுன்.

(வி - ம்.) கட்டியங்காரன் உடன்பட்ட பிறகே கடிவினை முடியுமாதலின், அவனை நாளை உடன்படுவிப்பேன் என்னுந்துணிவினுல் இங்ஙனங் கூறினுன்.

வாய் - ஈண்டு நெஞ்சிற்கு ஆகுபெயர். கசுரு-ஆம் செய்யுட் குறிப்பைக் காண்க. கடிவினை - திருமணம். பதுமையை உளப்படுத்தி முடித்தும் என்ருன் என்க. (கஎ)

ருஅஅ. மால்வரை வயிறு போழ்ந்து
வல்லவர் மதியிற் றந்த
பால்வரை மணியும் பொன்னும்
பற்பல கொண்டு புக்குக்

கால்பொரு கழலி ஞனுங்
காவலற் கண்டு சொன்ஞன்
வேல்பொரு தானை யானும்
வேண்டுவ விதியி னேர்ந்தான்.

(இ - ள்.) மால் வரை வயிறு போழ்ந்து வல்லவர் மதியின் தந்த பால்வரை மணியும் பொன்னும் - பெரிய மலைகளின் வயிற்றைப் பிளந்து நூல்வல்லார் தமது அறிவினாலே தந்த பகுதிப்பட்ட மணியும் பொன்னுமாக; பற்பல கொண்டு புக்கு - பலவற்றையும் கையுறையாகக்கொண்டு சென்று; காவலன் கண்டு - அரசனைக் கண்டு; கால்பொரு கழலினானும் - காலிற் கட்டப்பட்ட கழலையுடையவனும்; சொன்னான் - (தன் விருப்பத்தைக்) கூறினான்; வேல் பொருதானை யானும் வேண்டுவ விதியின் நேர்ந்தான் - வேலினாற் பொரவல்ல படையினானும் அவன் விரும்பியவற்றை முறைப்படி ஒப்புக்கொண்டான்.

(வி - ம்.) விருப்பம்: மண்டபஞ் சமைத்தலும், யாவரும் வர முரசறைவித்தலும் முதலியன. சுயம்வரத்திற்கு அரசன் உடன்படவே வேண்டுதலின் 'விதியின்' என்றார்.

கழலினான் என்றது சீதத்தனை. தானையான் என்றது கட்டியங் காரனை. (௯௯)

வேறு

௫௮௯. மையன்மத யானைநிரை மன்னன்மகிழ்ந் தானுப்
பொய்யில்புகழ் நாய்கன்மத வொளியினோடு போகி
நொய்தின்மனை யெய்தியிது செய்கென நொடித்தான்
மொய்கொண்முலை பாயமுகை விண்டலர்ந்த தாரான்.

(இ - ள்.) மையல் மதயானை நிரை மன்னன் மகிழ்ந்து - செல்வச் செருக்குற்ற, மதயானை நிரைகளையுடைய வேந்தன் மகிழ்ந்ததனால்; ஆனுப் பொய்இல் புகழ் நாய்கன் மத ஒளியினோடு போகி - நிறைந்த உண்மையான புகழையுடைய வணிகன் மிகுதியான ஒளியுடன் சென்று; நொய்தின் மனை எய்தி - விரைவில் வீட்டை அடைந்து; மொய்கொண் முலைபாய முகைவிண்டு அலர்ந்த தாரான் - நெருங்கிய முலைகள் பாய்தலினாலே அரும்புகள் விரிந்து மலர்ந்த மாலையினான் ஆகிய அவன்; இது செய்க என நொடித்தான் - இதனைச் செய்க என்று கூறினான்.

(வி - ம்.) மையல் - செல்வச் செருக்கு. ஆனுப்புகழ்; பொய்யில் புகழ் எனத் தனித்தனிக் கூட்டுக. நொடித்தல் - சொல்லுதல். நாய்கனாகிய தாரான் என்க. மத - மிகுதிப் பொருள் குறித்ததோர் உரிச்சொல்.

"மதவே மடனும் வலியு மாகும்."

"மிருதியும் வனப்பும் ஆகலும் உரித்தே." (உரி. எகூ-அ௦)

என்பது தொல்காப்பியம். (கூஎ)

௫கூ௦. நானக்கிடங் காடைநகர் நாகத்திடை நன்பொன்
வானக்கிடு மாட்சியதோர் மண்டபஞ்செய் கென்ன
மீனத்திடை நாள்கிழமை வெள்ளிசயை பக்கம்
கானத்திடை வேங்கையெழக் கண்ணினர்கள் அன்றே.

(இ - ள்.) நானக் கிடங்கு ஆடை நகர் நாகத்திடை-நானக் கிடங்கை ஆடையாகவுடைய நகராகிய துறக்கத்தின் நடுவே; நன்பொன் வான் நக்கிடும் மாட்சியது - நல்ல பொன்னையுடைய வானை நகைத்திடும் அழகினையுடையதாகிய; ஓர் மண்டபம் செய்க என்ன - ஒரு மண்டபத்தைச் செய்க என்று கூறினன் ஆக; வெள்ளிக்கிழமை சயை பக்கம் மீனத்து இடைநாள் கானத்திடை வேங்கை யெழ - வெள்ளிக்கிழமையும், திருதியை யும் பெற்ற உத்திரட்டாதிநாள் சிங்கம் உதயமாகக் கணிகள் முழுத்தம் குறித்தனர்.

(வி - ம்.) நானம் - புழுகு; குளித்தலாற் புழுகுடைத்தாயிற்று. 'வான் நக்கிடும்' என்பதற்கு 'வானைத் தீண்டும்' என்றும் பொருள் கொள்க. பூரட்டாதியின் நாலாங்காலும் உத்திரட்டாதியும் இரேவதி யும் மீன ராசியாதலால், உத்திரட்டாதி நடுநாளாதலால், 'மீனத் திடைநாள்' என்றார். திருதியை, அட்டமி, திரயோதசி என்ப வற்றில் திருதியை சிறத்தலின், 'சயை பக்கம்' என்றார். மேடத் தின் முற்கூறு மேடராசியின் கூறு; இரண்டாங் கூறு சிங்கராசி யின் கூறு; மூன்றாங் கூறு தனுராசியின் கூறு. ஆதலால், மேடத்தின் நடுக்கூற்றைச் சிங்கத்தின் உதயமாக விதித்தார். இது கூறிற்று, சிங்கத்தே பிரகஸ்பதியாதலின். வெள்ளி முதல் வியாழ மீறாகக் கிழமை ஏழாயவாறும், உத்திரட்டாதி முதல் உரோகிணி யீறாக நாள் ஆறாய வாறும் கூடுமாறு என்னையெனின், இத் திங்களிற் சதயம் முதல் ஆயிலி யத்தளவும் சந்திரன் வர்த்தித்து வருதலின், வியாழக்கிழமைக்கு உரோ கிணி கூடிற்று. இதனானே, மேல், 'ஒண்ணிற வுரோணியூர்ந்த ஒளிமதி ஒண்பொன் ஆட்சி' (சீவக. ௩௨0) என்று வியாழக்கிழமையிலும் சிறிது நாழிகை உரோகிணியாகக் கூறினர்.

சயை, திருதியை, அட்டமி திரயோதசி என்பன. இவற்றுள் ஈண்டுச் சிறப்புப் பற்றித் திருதியை மட்டுமே உணர்த்தி நின்றது. (கூஅ)

௫கூக. நட்புப்பகை யுட்கினொடு நன்பொன்விளை கழனி
பட்டினொடு பஞ்சுதுகில் பைம்பொனொடு கான
மட்டசுவை வல்சியினொ டியாதுமொழி யாம
லொட்டிப்பதி னாயிரவ ருற்றுமுயல் கின்றார்.

(இ - ள்.) நன்பொன் விளைகழனி பட்டிஞெடு பஞ்சு துகில் பைம்பொனெடு காணம் அட்ட சுவை வல்சியினெடு - நல்ல பொன் விளையுங் கழனியும் பட்டும் பஞ்சும் பொன்னும் பழங் காசும் சமைத்த பகற்சோறும் என இவற்றில்; யாதும் ஒழியாமல் ஒட்டி - யாதும் குறைவில்லாமல் அறுதியிட்டு; நட்பு பகை உட்கிஞெடு - தம்மிற் கூடியும் மாறுபட்டும் இவனுக்கு அஞ்சுதலுடனே; உற்றுப் பதிஞயிரவர் முயல்கின்ருர் - இவ்வேலையிலே கருத்தூன்றிப் பதிஞயிரவர் முயல்கின்றனர்.

(வி - ம்.) பொன் இடடாற் பொன் விளையுங் கழனி. பொன் உண்டாதற்குக் காரணமான கழனியுமாம். பஞ்சு - துணி. 'ஒடு' யாவும் எண்ணுப் பொருளன. வல்சி - சமணராதலிற் பகலுணவு. (௬௯)

ருகூஉ. வண்டுபடு தேறனற வாய்விடொடு பருகிக்
கண்டதொழிற் கணிச்சிகளிற் கயம்படநன் கிடித்தாங்
கெண்டிசையு மேற்பப்படுத் தேற்றியதன் மேலாற்
கண்டுருகு பொன்னினிலங் காமுறுவ புனைந்தார்.

(இ - ள்.) வண்டுபடு தேறல் நறவு வாய்விடொடு பருகி - வண்டுகள் தேடிய தேனையும் மலர்த் தேனையும் ஆரவாரத்துடன் பருகி; தொழில் கண்ட கணிச்சிகளின் கயம்பட நன்கு இடித்து - தொழிலுக்கெனக் கண்ட குந்தாலிகளாலே ஆழமுண்டாக நன்ருக வெட்டி; ஆங்கு எண் திசையும் ஏற்பப் படுத்து ஏற்றி - அவ்விடத்தே எட்டுத்திசையினும் பொருந்தும்படி தலம் இசைத்து உயர்த்தி; அதன் மேலால் கண்டு காமுறுவ உருகு பொன்னின் நிலம் புனைந்தார்-அதன்மேலே இஃது உயரத்திற்கு அளவென்று அறிந்து விரும்புவனவாகிய உருகும் பொன்னுலே நிலத்தை அணிசெய்தார்.

(வி - ம்.) வாய்விடுதல் - வஞ்சினமும் ஆம். ஒடு: உடனிகழ்ச்சி.

கணிச்சி - ஈண்டு மண் அகழும் குந்தாலி. காமுறுவ பொன்னின் என மாறுக. (௧00)

ருகூங. பொன்செய் குடங் கோத்தனைய
வெருத்திற் போலி பொற்றூண்
மின்செய் பசும் பொன்னிலத்து
வீறுபெற நாட்டி
மன்பவள மேனவின்று
பளிக்கலகு பரப்பி
நன்செய் வெளி வேய்ந்துசுவர்
தமனியத்தின் அமைத்தார்.

(இ - ள்.) பொன் நிலத்து எருத்தில் பொன்செய் குடம் கோத்த அனைய பொன்தூண் வீறுபெற நாட்டி - அப் பொன் னிலத்திலே தம் கழுத்தில் குடதாடியாலே பொற்குடத்தைக் கோத்தால் ஒத்த பொன் தூணைப் பெருமை பெற நாட்டி ; மேல் மண்பவளம் நவின்று - மேலே பெருமை பொருந்திய பவளமாகிய உத்தரம் முதலியன பயில ; பளிக்கு அலகு பரப்பி - அவற்றின் மேலே பளிக்குக் கையலகாலே கைபரப்பி ; நன்செய் வெளி வேய்ந்து - நன்றாகச் செய்யப்பட்ட வெள்ளியாலே வேய்ந்து ; தமனியத்தின் சுவர் அமைத்தார் - பொன்னாலே சுவரை அமைத் தனர்.

(வி - ம்.) மன் - பெருமை. நவின்று - நவில : எச்சத்திரிபு. வெளி: வெள்ளி என்பதன் விகாரம். குடதாடி தூணுக்கும் உத்தரத்துக்கும் நடுவே அமைக்கப்பட்டது (௧0௧)

ருகூச. பாவையவ ளிருக்குமிடம் பளிக்குச்சுவ ரியற்றிக்
கோவைகுளிர் முத்தினியல் கோதையொடு கொழும்பன்
மாலையொடு மாலைதலை மணந்துவர நாற்றி
ஆலையமி தோவியர்கட் கென்னவணி யமைத்தார்.

(இ - ள்.) பாவை அவள் இருக்கும் இடம் பளிக்குச் சுவர் இயற்றி - பாவையாகிய அவள் இருக்கும் இடத்தைப் பளிங்கி னாலே சுவர் செய்து; குளிர்முத்தின் இயல் கோவை கோதையொடு- குளிர்ந்த முத்தினாலே இயன்ற மாலையும் பூமாலையும்; கொழும் பொன் மாலையொடு மாலை - வளமுறு பொனமாலையும் மாணிக்க மாலை முதலியனவும் ; தலை மணந்து வர நாற்றி - தம்மில் தலை யொத்துவரத் தூக்கி ; இது ஓவியர்கட்கு ஆலயம் என்ன - இவ் விடம் ஓவியர்களுக்குக் கோயில் என்னுமாறு ; அணி அமைத் தார் - ஓவியம் தீட்டினர்.

(வி - ம்.) முத்துமாலை முதலியன - ஓவியங்கட்கு மாலை. 'ஓவியங் கட்கு' எனவும் பாடம். (௧0௨)

ருகூரு. ஆய்பிதழ பொன்னலங்கல் காலசைப்ப வோல்கி
வாயருகு வந்தோசிந்து மறியமழை மின்போற்
சேயவர்க்குந் தோன்றியதோர் திலகமெனுந் தகைத்தாய்ப்
பாயதிரை முத்தமணல் பரந்துபயின் றுளதே.

(இ - ள்.) ஆய் இதழ பொன் அலங்கல் கால் அசைப்ப ஒல்கி - அழகிய இதழையுடைய பொன் தூக்கு மாலைகள் காற்று அசைத்தலாலே ஒதுங்கி ; வாய் அருகு வந்து ஒசிந்து மறிய - விளிம்பின் பக்கலில் வந்து சாய்ந்து மீளுதலாலே ; மழை மின் போல் சேயவர்க்கும் தோன்றியது ஓர் திலகம் எனும் தகைத்தாய்-

மேகத்து மின்போலத் தொலைவில் உள்ளவர்க்குங் காணப்பட்ட இம்மண்டபம் மண்டபங்கட்கெல்லாம் திலகம் என்னுந் தகைமை யுடையதாய்; பாய திரை முத்தம் மணல் பரந்து பயின்றுளது - பரவிய அலைகள் தந்த முத்துக்களாகிய மணல் எங்கும் நெருங்கிப் பரவியுள்ளது.

ஆய் - அழகு. கால் - காற்று. வாய் - விளிம்பு. சேயவர் - தொலைவிலிருப்போர். பாய - பரவிய. பயின்று - நெருங்கி. (கOந)

ருகசு. காமர்களி றும்பிடியும் கன்றுங்கலை மானுந்
தாமரைய வாவிகளும் புள்ளுந்தகை நலத்தி
னேமுறுவ பாவையினோ டியக்கிநிலை யெழுதி
யாமோரையம் காண்பவர்க்கி தகம்புறமி தெனவே.

(இ - ள்.) காமர் களிறும் பிடியும் கன்றும் கலை மானும் தாமரைய வாவிகளும் புள்ளும்-அழகிய களிறும் பெண்யானையும் யானைக் கன்றும் கலையும் பிணையும் தாமரைக் குளங்களும் பறவைகளுமாக; தகை நலத்தின் ஏமுறுவ பாவையினோடு இயக்கி நிலை எழுதி - தக்க அழகினாலே கண்டார் மயங்குதல் உறுவனவாகிய பாவைகளையும் தலைமைத் தெய்வமாகிய இயக்கியின் நிலையையும் பளிக்குச் சுவரிலே எழுதியதால்; காண்பவர்க்கு இது அகம் இது புறம் என ஓர் ஐயம் ஆம் - பார்ப்பவர்க்கு அதன் ஒளியால் இதுதான் உட்புறம் இதுதான் வெளிப்புறம் என உணரமுடியாமல் ஓர் ஐயத்தை உண்டாக்கும்.

(வி - ம்.) எழுதி - எழுத: வினையெச்சத்திரிபு. பளிக்குச் சுவராகையால் அவ்வோவியங்கள் உள்ளும் புறமுந் தோன்றின. (கOச)

ருகஎ. உழந்தவரு நோக்கி மகிழ் தூங்கவொளி வாய்ந்து
விழுங்குமெனப் பறவைகளும் பிறவிலங்கும் அடையா
முழங்குதிரை வேலியினி னில்லையென மொய்கொண்
டெழுந்துகொடி யாடுமிதவ் வெழில்நகரி னியல்பே.

(இ - ள்.) உழந்தவரும் நோக்கி மகிழ் தூங்க - பலநாட் பழகிய ஓவியரும் பார்த்து வியந்து மகிழ்ச்சிமிக; ஒளி வாய்ந்து ஒரு விளக்கம் பொருந்தி; விழுங்கும் எனப் பிற பறவைகளும் விலங்கும் அடையா-(இவ்வோவிய விலங்கும் பறவையும் நம்மை) விழுங்கிவிடும் என (அவற்றைப் பகையாய்க்கொண்ட) பறவைகளும் விலங்குகளும் அடையாவாக; முழங்கு திரை வேலியினின் இல்லை என மொய்கொண்டு எழுந்து கொடி ஆடும் - முழங்கும் கடலை எல்லையாகக் கொண்ட உலகிலே தனக்குவமையில்லையென்பது போலக் கொடிகள் எழுந்து ஆடும்; இது அவ்

எழில் நகரின் இயல்பு - இது அவ்வழகிய மண்டபத்தின் தன்மை யாகும்.

(வி - ம்.) உழந்தவர் - ஓவியத் தொழில் பயின்றவர். பிற பறவை களும் எனவும் கூட்டுக. முழங்குதிரை வேலி - உலகம். (கஃடு)

ருகஅ. ஓடுமுகில் கீறியொளிர் திங்கள்சிகை வைத்தே
மாடமது வார்சடைய வள்ளலையு மொக்கும்
நாடிமுக நான்கதனி னான்முகனை யொக்கும்
நேடிநிமிர் தன்மையினி னேமியையு மொக்கும்.

(இ - ள்.) மாடம் அது - மாடமாகிய அது; ஓடும் முகில் கீறி ஒளிர் திங்கள் சிகை வைத்து - ஓடும் மேகத்தைக் கிழித்து விளங்கும் பிறை மதியைத் தலையிலே வைத்தலின்; வார்சடைய வள்ளலையும் ஒக்கும் - நீண்ட சடையினையுடைய சிவபிரானையும் போலும்; முகம் நான்கு அதனின் நாடி நான்முகனை ஒக்கும் - முகம் நான்காகிய அதனாலே எங்கும் நாடுதலால் நான்முகனையும் பொருவும்; நேடி நிமிர் தன்மையினின் நேமியையும் ஒக்கும் - மேலெல்லையைத் தேடி நிமிர்தலாலே திருமாலையும் ஒக்கும்.

(வி - ம்.) நாடி-நாசியென்பாரும் உளர்; இது வீட்டின் ஒருறுப்பு. தன்மையினின் : இன் : அசை.

வார்சடைவள்ளல் - சிவபெருமான். நான்முகன் - பிரமா. நேமி - திருமால். (கOசு)

ருகக. கண்டவர்கள் காமுறலிற் காமனையு மொக்குங்
கோண்டுலக மேத்தலினக் கோற்றவனை யொக்கும்
வண்டெரிய லாரமுலை மாதர்மகி ழமுதம்
உண்டவர்க ளெவ்வகைய ரவ்வகைய தொன்றே.

(இ - ள்.) கண்டவர்கள் காமுறலின் காமனையும் ஒக்கும் - பார்த்தவர்கள் விரும்புவதாற் காமனையும் ஒக்கும்; உலகம் கொண்டு எத்தலின் அக்கொற்றவனை ஒக்கும் - உலகம் மனங் கொண்டு போற்றுதலால் அந்தச் சச்சந்த மன்னனையும் ஒக்கும்; வண் தெரியல் ஆரம் முலை மாதர் மகிழ் அமுதம் உண்டவர்கள் - செழுவிய மலர்மாலையும் முத்து மாலையும் அணிந்த மங்கைய ராகிய மகிழூட்டும் அமுதத்தை உண்டவர்கள்; எவ்வகையர் அவ்வகையது ஒன்று - எத்தன்மையரோ அத்தன்மையதாகிய ஒன்றாகும்.

(வி - ம்.) நீங்கலாகாமை கூறினர்.

அக்கொற்றவன் என்புழிச் சுட்டுப் பண்டறி சுட்டு. கொற்றவன் - சச்சந்தன். புணர்ந்தவர் பிரிதலாற்றாமையின் "மாதரமிழ்தம் உண்ட

வர்கள் எவ்வகையர் அவ்வகையது என்றார். மாதர் அமிழ்தம் உண்டவர் பிரியமாட்டாதார் ஆவதுபோலத் தன்னைக் கண்டோரும் பிரிதற்கியலாத பண்புடையது என்றவாறு. (௧0௭)

௬00. முகிற்றலை மதிய மன்ன முழுமணி மாடத்திட்ட
வகிற்புகை தவழ்ந்து வானத் தருவிசும் பறுத்து நீண்டு
பகற்கதிர்ப் பரப்பிற் றாகிப் பஞ்சவர் விமான முட்டிப்
புகற்கரு மமரர் கற்பம் புக்கயா வுயிர்த்த தன்றே.

(இ - ள்.) மதியம் அன்ன முழுமணி முகில்தலை மாடத்து-திங்கள் அனைய நிறைமணிகளையுடைய, முகிலைத் தலைக்கொண்ட அம் மாடத்திலே; இட்ட அகில் புகை தவழ்ந்து வானத்து அருவிசும்பு அறுத்து - இட்ட அகிற்புகை தவழ்ந்து சென்று வானத்திலே அரிய முகிலை ஊடுருவி; நீண்டு - நீண்டு; பகல் கதிர் பரப்பிற்று ஆகி-பகலைச் செய்யும் கதிரினிடத்தே பரத்தலை யுடையதாய்; பஞ்சவர் விமான முட்டி - சோதிட்கரது விமானத்தைத் தொட்டு; புகற்கரும் அமரர் கற்பம் புக்கு - புகுதற்கரிய வானவர் இருக்கையினும் புகுந்து; அயாவுயிர்த்தது - இளைப் பாறியது.

(வி - ம்.) கற்பம் - இருத்தற்குக் கற்பித்த இடம். விசும்பு - இட வாகுபெயர்- பஞ்சவர்: ஞாயிறு, திங்கள், மற்றைக் கோள்கள், நாண் மீன்கள், மற்றைத் தாரகைகள் என ஐவகையினர். இவர்கள் சோதிடர் எனவும் சோதிட்கர் என்றுங் கூறப்படுவர். (௧0அ)

௬0௧. அரைசன தருளினொ டகன்மனை யவனெய்தி
யுரைசெலல் வகையினொ டுலகமு மறிவுற
முரைசதி ரிமிழிசை முதுநக ரறைகென
விரைசெல லிளையரை வியவரின் விடவே,

(இ - ள்.) அவன் அரைசன் அருள் அருளினொடு அகல்மனை எய்தி - சீதத்தன் அரசன் அருள்பெற்றுத் தன் பரந்த மனையை அடைந்து; உலகமும் அறிவு உற உரைசெலல் வகையினொடு - உலகமெங்கும் அறியுமாறு இவ் விழா செல்லும வகையாலே; முதுநகர் அதிர் இமிழ் இசை முரசு அறைக என - இப் பழம் பதியிலே கண் நடுங்குதலால் ஒலிக்கும் இசையுடைய முரசினை அறைக என்று; விரைசெலல் இளையரை வியவரின் விட - கடிது செல்லும் தன் ஏவலிளையரை முரசறைவாரிடம் விடுத்தலால்.

(வி - ம்.) வியவர் - ஏவல் செய்வார் 'வியங்கோள்' போல. என்றது முரசறைவிப்பாரை. அரைசன், முரைசு : போலி. அதிர்-கண் அதிர் தலால் (கண் : முரசில் அடிபடும் இடம்.)

இது முதல் மூன்று பாட்டுகள் குளகம். (௧0௯)

௬௦௨. விடுகணை விசையொடு வெருவரு தகையவர்
படுபணை யவருறை பதியது குறுகி
நெடுமதி யகடுற நிழறவழ் கொடியுயர்
கடிநக ரிடிமுர சறைமின மெனவே,

(இ - ள்.) வெருவரு தகையவர் விடுகணை விசையொடு - அச்சுறுந் தோற்றத்தினராகிய அவ்வியவர், செலுத்திய அம்பு போன்ற விரைவுடன்; படுபணையவர் உறை பதியது குறுகி - முரசறைவார் உறையும் பதியை அடைந்து; நெடுமதி அகடு உற நிழல்தவழ் கொடி உயர் கடிநகர் - பெரிய திங்களின் வயிற்றிற் பொருந்த ஒளிவிடும் கொடிகள் உயர்ந்த, காவலையுடைய நகரிலே; இடிமுரசு அறைமின் என - இடிபோன்ற முரசினை அறையுங்கள் என்று கூற,

(வி - ம்.) அறைமினம்: அம்: அசை. பதியது: அது: பகுதிப் பொருள் விகுதி.

பணையவர் - முரசறைவோர். (பணை - முரசு) (௧௧௦)

௬௦௩. மங்கல வணியினர் மலர்க்கதிர் மதியன
புங்கவ னறநெறி பொலிவொடு மலிகென
வங்கதிர் மணிநகை யலமரு முலைவளர்
கொங்கணி குழலவள் கோடணை அறைவாம்.

(இ - ள்.) மங்கல அணியினர் - அம் முரசறைவார் மங்கலமாகிய வெள்ளிய அணியணிந்தவராய்; மலர்கதிர் மதி அன புங்கவன் அறநெறி பொலிவொடு மலிக என - மலர்கின்ற ஞாயிறும் திங்களும் போன்ற அருகப்பெருமானுடைய அறநெறி அழகுற உலகெங்கும் நிறைவதாக என்று முதலிற் கூறி; அம் கதிர்மணி நகை அலமரும் வளர் முலை கொங்கு அணி குழலவள் கோடணை அறைவாம் - அழகிய ஒளி மணியும் முத்தும் ஊசலாடும் வளரும் முலைகளையும் மணம் பொருந்திய கூந்தலையும் உடைய தத்தையின் சுயம்வரத்தை அறைந்த முழக்கத்தைக் கூறுவோம்.

(வி - ம்.) நன்மையை அறிவிக்கும் அணி வெள்ளணி. மங்கல அணி அணிந்தே மண முரசறைதல் வழக்கு. (சீவக. ௨௮௮) முதலில் அருகனருளை வாழ்த்திப் பிறகு முரசறைகின்றனர். மலிகென அகரம் தொகுத்தல் விகாரம்.

கோடணை அறைவாம் என 'இத்தொடரை முரசறைவார் கூற்றாக்கி, இதன் பின்னர், 'புங்கவன் அறநெறி பொலிவொடு மலிக!' என நிறுத்தி மேல் வரும் முரசறை கூற்றுக்களோடு கூட்டுவர் நச்சினார்க்கினியர். இதற்கு 'மலிகென' என்பதிலுள்ள 'என' என்னும் எச்சத்தை, 'அறைவாம் என' இசைத்துக் கூறும் இம்மொழி மாற்று அத்துணைச் சிறப்பாகு மேற்கொள்க. (௧௧௧)

௬0௪. வான்றரு வளத்த தாகி வையகம் பிணியிற் றீர்க
தேன்றரு கிளவி யாருங் கற்பினிற் றிரித லின்றி
யூன்றுக வூழி தோறு முலகினுண் மாந்த ரெல்லா
மீன்றவர் வயத்த ராகி யில்லறம் புணர்க நாளும்.

(இ - ள்) வையகம் ஊழிதோறும் வான்தரு வளத்தது ஆகிப் பிணியின் தீர்க - உலகம் ஊழிதோறும் முகிலளிக்கும் மழை வளம்பெற்று நோயினின்றும் நீங்குக!; தேன்தரு கிளவி யாரும் கற்பினின் திரிதல் இன்றி ஊன்றுக - தேனனைய மொழியினராகிய மகளிரும் கற்பிலிருந்து வழுவாமல் நிலை பெறுக!; உலகினுள் மாந்தர் எல்லாம் - உலகிலுள்ள மக்கள் யாவரும்; ஈன்றவர் வயத்தர் ஆகி இல்லறம் நாளும் புணர்க - பெற்றோர்க் கடங்கினவராகி இல்லறத்தினை நாடொறும் புரிக!

(வி - ம்.) வான் - மழை: ஆகுபெயர். மழைதரும் வளம், உலகின்கண் அறம்பொருள் இன்பங்கள் நடத்தற்கேது வாதல்பற்றி "வான்தரு வளத்ததாகி வையகம் பிணியிற்றீர்க" என்றார். எனவே "வீழ்க தண் புனல்" என்றதாயிற்று. பிணி பசித்துன்ப முதலியன அம்மழைக்கும் ஏதுவாதல்பற்றி "கற்பினிற் றிரிதலின்றி ஊன்றுக" என்றார். "அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை" என்பதுபற்றி இல்லறம் புணர்க நாளும் என்றார். இதனால் தேவர் கருத்து வள்ளுவனார் கருத்தையே பெரிதும் தழுவிநிற்றல் உணரலாம். பிற்காலத்துச் சமணர் இந்நெறி கடந்து துறவினையே வற்புறுத்தி வந்தனர். (௧௧௨)

௬0௫. தவம்புரிந் தடங்கி நோற்குந்
தத்துவர்த் தலைப்பட் டோம்பிப்
பவம்பரி கெமக்கு மென்று
பணிந்தவ ருவப்ப வீமி
னவம்புரிந் துடம்பு நீங்கா
தருந்தவ முயன்மின் யாருஞ்
சிவம்புரி நெறியைச் சேரச்
செப்புமிப் பொருளுங் கேண்மின்.

(இ - ள்.) தவம் புரிந்து அடக்கி நோற்கும் தத்துவர்த் தலைப்பட்டு ஓம்பி - தவத்தைச் செய்து புலன் அடக்கி நோற்கும் உண்மையறிவினரைச் சென்று கண்டு வழிபட்டு; எமக்கும் பவம் பரிக என்று பணிந்து - எமக்கும் பவவினையைப் போக்குக என்று கும்பிட்டு; அவர் உவப்ப ஈமின் - அவர்கள் மகிழ்வன வற்றைக் கொடுமின்!: யாரும் அவம் புரிந்து உடம்பு நீங்காது சிவம்புரி நெறியைச் சேர அருந்தவம் முயல்மின் - யாவரும் வீண் செயல் செய்து உடலை விடாமல் நன்மை புரிந்த வீட்டை அடைய அவ்வுடம்பைக் கொண்டு அரிய தவத்திலே முயற்சி

செய்மின் !; செப்பும் இப் பொருளும் கேண்மின்! - (மற்றும்) கூறும் இப் பொருளையும் கேண்மின் !

(வி-ம்.) இல்லற நெறிநின்று முதிர்ந்த உணர்வுடையோர் எல்லாம் வீடுபெற முயலுதலே முறைமையாதல் பற்றியும் வீடுபேறே பிறவிப்பயன் ஆதல் பற்றியும் அவம்புரிந்து உடம்பு நீங்காது அருந்தவம் முயன்மின் என்றார். இவ்விரண்டு செய்யுளும் திருக்குறளின் அறத்துப்பாற் கருத்தை யெல்லாம் தம்முளடக்கித் திகழ்தல் ஆராய்ந்துணர்க. சிவம் - மெய்ந் நெறி நன்மை. (ககரு)

சூ0சு. அம்மல ரனிச்சத் தம்போ தல்லியோ டணியி னொந்து
விம்முறு நசுப்பு நைய வீற்றிருந் தணங்கு சேர்ந்த
வெம்முலைப் பரவை யல்குன் மிடைமணிக் கலாபம் [வேய்த்தோட்
செம்மலர்த் திருவின் சாயற் றேமொழி தத்தை யென்பாள்.

(இ - ள்.) அனிச்சத்து அம்போது அம்மலர் அல்லியோ டணியின் - அனிச்சத்தின் அழகிய மலரை அழகிய மலர்களின் அகவிதழுடன் அணியினும்; நொந்து விம்முறு நுசுப்பு நைய - நொந்து வருந்தும் இடை மேலும் வருந்துமாறு; வீற்றிருந்து அணங்கு சேர்ந்த வெம்முலை - வீற்றிருந்து அழகுத் தெய்வம் சேர்ந்த விருப்பம் உறுதற்குக் காரணமான முலைகளையும்; பரவை அல்குல் மிடைமணிக் கலாபம் வேய்த்தோள் - பரவிய அல்குலை யும் அதன்மேற் செறிந்த மணிக் கலாபத்தையும் மூங்கிலனைய தோள்களையும்; செம்மலர்த் திருவின் சாயல் - செந்தாமரை மலரில் இருக்கும் இலக்குமியின் மென்மையினையும் உடைய; தேமொழி தத்தை என்பாள் - தேனனைய மொழியினள் தத்தை எனும் பெயரினள்.

(வி - ம்.) அல்லி - அகவிதழ். முலைகளில் அழகுத் தெய்வம் உறைதல் 'ஆம் அணங்கு குடியிருந்து' (சீவக. கஎக) என முன்னரும் வந்தது. (கககூ)

சூ0எ. மற்றவ டந்தை நாய்கன் வண்கைச்சீ தத்தன் என்பான்
கோற்றவன் குலத்தின் வந்தான் கூறிய பொருளி தாகும்
முற்றவம் உடையளாகி மூரிநூற் கலைக ளெல்லாங்
கற்றவள் கணங்கோள் நல்யா ழனங்கனைக் கனிக்கும் நீராள்

(இ - ள்.) அவள் தந்தை நாய்கன் வண்கைச் சீதத்தன் என்பான் - அவள் வளர்ப்புத் தந்தையாகிய வணிகனும் வள்ளலு மாகிய சீதத்தனென்பவன்; கொற்றவன் குலத்தின் வந்தான் - அரசனாகிய கலுழவேகனின் குலத்துடனே வந்தவன்; கூறிய பொருள் இது ஆகும் - அவன் சொன்ன பொருள் இதுவாகும்;

முன் தவம் உடையள் ஆகி - முந்தைய நல்வினை உடையவளாய்; ஏரிநூல் கலைகள் எல்லாம் கற்றவள் - பெருமை மிகும் இசை நூலிற் கூறிய கலைகள் முற்றும் அறிந்தவள்; கணம்கொள் நல் யாழ் அனங்கனைக் கனிக்கும் நீராள் - இசைத் தொகுதியுற்ற யாழினாலே காமனையும் உருக்கும் இயல்பினள்.

(வி - ம்.) அனங்கன் இசையறிவிற் சிறந்தவன். இதனைக், 'காமனுங் கனிய வைத்த புலம்' (சீவக ௬௭0) என முன்னரும், பின்னரும் சீவக. ௭௨௧, ௨௬௩௭-ஆஞ் செய்யுட்களிலும் காண்க. (௧௧௫)

௬0௮. தீந்தொடை மகரவீணைத் தெள்விளி யெடுப்பித் தேற்றிப்
பூந்தொடி யரிவை தன்னிற் புலமிகுத் துடைய நம்பிக்
கீந்திடு மிறைவ ராதி மூவகைக் குலத்து ளார்க்கும்
வேந்தடு குருதி வேற்கண் விளங்கிழை தாதை யென்றான்.

(இ - ள்.) இறைவர் ஆதி மூவகைக் குலத்துளார்க்கும் - அரசர் முதலாக மூவகைக் குலத்தில் உள்ளவர் யாவரிலும்; தீ தொடை மகர வீணை - இனிய இசையை எழுப்பும் நரம்புகளை யுடைய மகர யாழிலே; தெள்விளி எடுப்பி தேற்றி - தெளிந்த இசையை எழுப்பித் தெளிவித்தலில்; பூ தொடி அரிவை தன்னின் புலம் மிகுத்து உடைய நம்பிக்கு - பூ வளையல் அணிந்த தத்தையினும் அறிவிற் சிறந்துள்ள ஒரு நம்பிக்கு; வேந்து அடு குருதி வேற்கண் விளங்கு இழை தாதை - அரசர்களை வருத்தும் இரத்தம் தோய்ந்த வேலனைய கண்ணாளும் விளக்கமான அணி யுடையாளும் ஆகிய தத்தையின் தந்தை; ஈந்திடும் என்றான் - அளிப்பான் என்று முரசறைந்தான்.

(வி - ம்.) பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்னும் நான்கினும் பத்தொன்பது நரம்புகளையுடைய மகரயாழே தத்தை பயில்வது என்பது தோன்ற, 'மகரவீணை' என்றார். 'ஒன்றும் இருபதும் ஒன்பதும் பத்துடனே—நின்ற பதினான்கும் பின்னேழும்—குன்றாத—நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே—மேல்வகைய நூலோர் விதி' என்பதனால் முறையே ௨௧, ௧௯, ௧௪, ௭—என நரம்பு கொள்க. [அரசர், அந்தணர், வணிகர் என்னும் மூவகைக் குலத்துளாரினும் என்பார் நச்சினார்க்கினியர். அரசர் ஆதி என்பதனால் அவள் அரசகுலமாகையால் அரசரை முற்கூறினார் என்றாலும் அங்ஙனங் கொள்வது சாலுமா என்பது சிந்திக்கத் தக்கது]. குலத்துளார்க்கு - குலத்துளாரில். (உருபு மயக்கம்). (௧௧௬)

௬0௯. மண்ணக மடந்தை யாகமார்புற முயங்கி நின்ற
வண்ணலை யாதி யாக வருங்கடி நகரை வாழ்த்தி
விண்ணக முழக்கி னேய்ப்ப வீதிதோ றெருக்கி யெங்குங்
கண்ணனேளிர் கடிப்பி னேச்சிக் கடிமுர சறைந்த காலை,

(இ - ள்.) மண் அகம் மடந்தை ஆகம் மார்புஉற முயங்கி நின்ற - நிலமகள் மார்பைத் தன் மார்புறத் தழுவி நின்ற; அண்ணலை ஆதி ஆக அருங்கடி நகரை வாழ்த்தி-கட்டியங்காரனை முதலாக வைத்து அரிய காவலையுடைய நகரத்தை வாழ்த்தி; விண் அகம் முழக்கின் ஏய்ப்ப வீதிதொறும் எருக்கி - முகிலின் முழக்கைப்போலத் தெருத்தொறும் (மேற் கூறியவாறு கூறி) தாக்கி; எங்கும் கண் ஒளிர் கடிப்பின் ஓச்சிக் கடிமுரசு அறைந்த காலை - எங்கும் (முரசின்) கண்ணுற ஒளிசெயும் குறுந்தடியாலே வீசி மணமுரசை அடித்தபோது.

(வி - ம்.) முரசறைவோன் முதலில் அருகன் அருளை வாழ்த்திப் பிறகு கட்டியங்காரனையும் நகரையும் வாழ்த்தி முற்கூறியவாறு முரசறைந்தான் என்று கொள்க.[1]

அண்ணல் - கட்டியங்காரன். அண்ணல் "மண்ணக மடந்தை தன் மார்பைப் பொருந்தாளாகவும் வஞ்சனையாலே அவள் தன் மார்பைப் பொருந்துமாறு முயங்கி நின்ற அண்ணல்' எனவும் ஒரு பொருள் தோற்றுதல் காண்க. அரசனை வாழ்த்துதல் முரசறைவோர் வழக்கம். இதனைப் பெருங்கதையில் வாசவதத்தையின் திருமணம் அறிவிக்கும் வள்ளுவன்,

"பொலிக வேல்வலம் புணர்க பூமகள்
மலிக மண்மகள் மன்னுக மன்னவன்."

எனத் தொடங்கி முரசறைதலானும் உணர்க. எருக்கி - தாக்கி. கண் - முரசின் கண். கடிப்பு - குறுந்தடி. (௧௧௭)

௩௪௦. வணக்கருந் தானை மன்னர்
மத்தகம் பிளந்து வாய்த்த
நிணக்கோழுங் குருதி வாட்கை
நிலம்புடை பெயாக்கு மாற்ற
லணைப்பருங் களிகோள் வேழத்
தத்தின புரத்து வேந்தன்
கணைக்கவி னழித்த வுண்கட்
கன்னியைக் கருதி வந்தான்.

(இ - ள்.) வணக்க அருந்தானை மன்னர் மத்தகம் பிளந்து-வணங்காத வேந்தரின் யானை மத்தகத்தைப் பிளந்து; வாய்த்த

1. "இசைபட அறைந்த ஓசை எண்டிசை வேந்து மல்லால்
விசையுடை யெவரும் ஈண்டி வெறுநிலம் நெளியத் தோற்றிப்
பசைபடு மாறு வந்தார் பான்மையும் பண்பும் எல்லாம்
நசைபட நல்ல நாட்டி நாஞ்சிறி துரைத்து மன்றே."

இச் செய்யுள் சில ஏட்டுப் பிரதிகளிற் காணப்படுகிறது (௩௦௧)க்குப் பின்.

நிணம் கொழுங்குருதி வாள்கை - தப்பாத நிணம் பொருந்திய குருதியையுடைய வாளேந்திய கையையும்; நிலம்புடை பெயர்க்கும் ஆற்றல்-நிலத்தைப் புடைபெயர்க்கும் ஆற்றலையும்; அணைப்பரும் களிகொள் வேழத்து - தடுத்தற்கரிய மதமுடைய வேழத்தினையும் உடைய; அத்தினபுரத்து வேந்தன் - அத்தினபுரியின் மன்னன்; கணைகவின் அழித்த உண்கண் கன்னியைக் கருதி வந்தான் - அம்பின் அழகை அழித்த மைதீட்டிய கண்களையுடைய தத்தையை மணக்க நினைத்து வந்தான் (௧௧௮)

௬௧௧. சிதைப்பருஞ் சீற்றத் துப்பின்
செய்கழ னரல வீக்கி
மதக்களி றடர்த்த குன்ற
மணிவட்டி னுருட்டு மாற்றற்
கதக்களி யொளிறு வைவேற்
காம்பிலிக் காவல் மன்னன்
பதைப்பரும் பரும யானைப்
பாலமா குமரன் வந்தான்.

(இ - ள்.) சிதைப்ப அருஞ் சீற்றத் துப்பின் - பகைவரால் மாற்றற்கரிய வலிமையாலே; செய்கழல் நரல வீக்கி - புனைகழலை ஒலிக்கக் கட்டி; மதக் களிறு அடர்த்து-மதயானையை அடக்கி; குன்றம் மணிவட்டின் உருட்டும் ஆற்றல் - குன்றை அழகிய வட்டினைப்போல உருட்டும் மெய் வலியையும்; ஒளிறு வைவேல்-விளங்கும் கூரிய வேலினையும்; கதக் களி பதைப்பு அரும் பரும யானை - சினக் களியாற் பகைக்கு அஞ்சிப் பதைத்து ஓடுதல் இல்லாத யானையினையும் உடைய; காமபிலிக் காவல் மன்னன் பாலகுமரன் வந்தான் - காம்பிலி நாட்டைக் காவல்செய்யும் வேந்தனாகிய பாலகுமரன் வந்தான்.

(வி - ம்.) பால மா குமரன்: மா: இசை நிறைத்தது. 'கதக் களி' என்பதனைப் 'பதைப்பரும்பருமயானை' என்பதன் முன் இயைக்க. (௧௧௯)

௬௧௨. இலைபோர வேழுதி யன்ன
வேரிமணிக் கடக முன்கைச்
சிலைபோரத் திரண்ட திண்டோட்
சில்லரிச் சிலம்பி னார்த
முலைபோர வுடைந்த தண்டார்
மோய்ம்மதத் தளிப்ப வந்தான்
மலைபோர வரிய மார்பின்
வாரண வாசி மன்னன்.

(இ - ள்.) எரிமணிக் கடகம் முன்கை - ஒளிசெயும் மணிக்கடகம் அணிந்த முன்கையினையும்; சிலை பொரத் திரண்ட திண்தோள்-வில் தழும்புறத் திரண்ட திண்ணிய தோளினையும்; மலைபொர அரிய மார்பின் - மலை பொருதற்கரிய மார்பினையும்; சில் அரிச் சிலம்பினார் தம் இலை பொர எழுதி அன்ன முலை பொர உடைந்த தண்டார் - சில அரிகளையுடைய சிலம்பு மகளிரின் இட்ட இலைத்தொழில் நெருங்க எழுதினாற் போன்ற முலைகள் தாக்குதலால் மலர்ந்த குளிர்ந்த தாரினில்; மொய்ம் மதுத் துளிப்ப - மிகுந்த தேன் துளிசெய்ய; வாரணவாசி மன்னன் வந்தான் - வாரணவாசி வேந்தன் வந்தான். (கஉ0)

௬௧௩. கதிர்முடி மன்னர் சூழ்ந்து
கைதொழு திறைஞ்சி மாலைத்
திருமுடி வயிர வில்லாற்
சேவடி திளைப்ப வேத்தி
யருமுடி யணிந்த கோற்றத்
தவந்தியன் முரச மார்ப்ப
வொருபிடி நுசுப்பி னாளை
யுள்ளுபு வந்து விட்டான்.

(இ - ள்.) கதிர்முடி மன்னர் சூழ்ந்து கைதொழுது - ஒளி விடும் முடிவேந்தர்கள் சூழ இருந்து கையால் தொழுது; மாலைத் திருமுடி வயிர வில்லால் சேவடி திளைப்ப இறைஞ்சி ஏத்தி - தம் முடைய் மாலையணிந்த திருமுடியில் உள்ள வயிர ஒளியாலே அவன் சேவடி ஒளியிடையறாது இருக்குமாறு வணங்கி வாழ்த்த; அருமுடி அணிந்த கொற்றத்து அவந்தியன் - அரிய முடிபுனைந்த வெற்றிபெற்ற அவந்தி மன்னன்; முரசம் ஆர்ப்ப - முரசு ஒலிக்க; ஒருபிடி நுசுப்பினாளை உள்ளுபு வந்து விட்டான் - ஒரு பிடியின்கண் அடங்கும் இடையினாளை நினைத்து வந்திட்டான்.

(வி - ம்.) ஏத்தி - ஏத்த: வினையெச்சத் திரிபு. (கஉக)

௬௧௪. வெள்ளணி யணிந்த ஞான்றே
வேந்தர்தம் முடியிற் கொண்ட
கள்ளணி மாலை மோந்து
கனைகழ லிலங்கும் நோன்றாட்
புள்ளணி கொடியி னானிற்
போர்பல தொலைத்த வாற்ற
லள்ளிலை யணிந்த வைவே
லயோத்திய ரிறையும் வந்தான்.

(இ - ள்.) வெள் அணி அணிந்த ஞான்றே - பிறந்த நாளின் அணியை அணிந்த போதே; வேந்தர் தம் முடியில் கொண்ட கள் அணி மாலை மோந்து - அரசர்கள் தங்கள் முடியிலே அணிந்த தேனணிந்த மாலையை மோந்து; கனைகழல் இலங்கும் நோன் தாள் - ஒலிக்குங் கழல் விளங்கும் வலிய தாளினையும்; புள் அணி கொடியினானின் - கருடக் கொடியனை திருமாலைப்போல; போர் பல தொலைத்த ஆற்றல் - பல போர்களை வென்ற ஆற்றலையும்; அள்இலை அணிந்த வைவேல் - கூரிய இலை வடிவாக அணிந்த கூரிய வேலையும் உடைய; அயோத்தியர்க்கு இறையும் வந்தான் - அயோத்தி மன்னனும் வந்தான். (கஉஉ)

சுகரு. நீணிதி வணிக ரீறு
நிலமிசை யவர்க ளெல்லாம்
வீணையிற் பொருது வெல்வான்
விரைவினர் துவன்றி மூதூர்க்
கோணமு மறுகு மெல்லாங்
குச்சென நிரைத்தம் மாந்தர்
மாண்மது நசையின் மொய்த்த
மதுகர வீட்ட மொத்தார்.

(இ - ள்.) நீள் நிதி வணிகர் ஈறு நிலமிசையவர்கள் எல்லாம் - பெருநிதி பெற்ற செல்வரிறுதியாக நிலமிசை யுள்ளவர்கள் யாவரும்; வீணையின் பொருது வெல்வான் விரைவினர் துவன்றி - தத்தையை வீணையினாலே பொருது வெல்வதற்கு விரைந்து நெருங்கி; மூதூர்க் கோணமும் மறுகும் எல்லாம் குச்சு என நிரைத்து-அப் பழம்பதியின் குறுந்தெருவினும் நெடுந்தெருவினும் பிற இடங்களினும் பாவாற்றியென நிரைத்தலாலே; அம்மாந்தர் மாண் மதுநசையின் மொய்த்த மதுகர ஈட்டம் ஒத்தார் - அம்மக்கள், சிறந்த தேன் விருப்பினாலே மொய்த்த தேனீக்களின் திரளை ஒத்தார்.

(வி - ம்.) இவ்வுவமை, 'மதுகாம் வருந்தத் தேனை ஒருவன் கொண்டுபோவது போல' இவர் வருந்தச் சீவகன் கொண்டுபோதல் கருதிற்று. (கஉங)

சுகசு. உருக்கமைந் தேரியுஞ் செம்பொ
ஞேரைவில் லகல மாகத்
திருக்குழன் மடந்தை செல்லத்
திருநிலந் திருத்திப் பின்னர்

விரைத்தகு நான நீரால்
வெண்ணிறப் பொடியை மாற்றிப்
பரப்பினர் படுவண் டார்ப்பப்
பன்மலர் பக்கம் எல்லாம்.

(இ - ள்.) திருக்குழல் மடந்தை செல்ல - அழகிய குழலை யுடைய தத்தை செல்வதற்கு; உருக்கு அமைந்து எரியும் செம் பொன் ஓர் ஐவில் அகலம் எங்கும் - உருகுதல் பொருந்தி எரியும் பொன்னால் ஐந்துவிற்கிடை அகலமாக எங்கும்; திருநிலம் திருத்தி - நிலத்தைத் திருத்தஞ்செய்து; பின்னர் விரைத்தகு நானம் நீரால் - பிறகு, மணமிகு புழுகாலும் பனிநீராலும்; வெண்ணிறப் பொடியை மாற்றி - வெண்ணிறமான துகளை மாற்றிவிட்டு; பக்கம் எல்லாம் படுவண்டு ஆர்ப்பப் பன்மலர் பரப்பினர் - பக்கம் முழுவதும் வண்டுகள் முரலுமாறு பல மலர் களையும் பரப்பினர்.

(வி - ம்.) எட்டுச்சாண் கொண்டது ஒருவில் அளவு. 'அகலமாக' என்ற பாடத்தினும் 'அகலமெங்கும்' என்னும் பாடமே பொருத்தமா யுள்ளது. (௧௨௪)

௬௧௫. விலைவரம் பறித லில்லா
வெண்டுகி லடுத்து வீதி
அலர்தலை யனிச்சத் தம்போ
தைம்முழ வகல மாகப்
பலபடப் பரப்பிப் பாவை
மேல்லடிப் பரிவு தீர
நிலவரைத் தன்ன ஞரை
நிதியினல் வறுமை செய்தான்.

(இ - ள்.) வீதி விலை வரம்பு அறிதல் இல்லா வெண்துகில் அடுத்து - (அப்) பொன்னிலத்தே விலையின் அளவை அறிய வியலாத வெண்மையான ஆடையை விரித்து; பாவை மெல் அடிப் பரிவுதீர - பாவையின் மெல்லடியின் துன்பம் நீங்குமாறு; அலர்தலை அனிச்சத்து அம்போது ஐம்முழ அகலம் ஆகப் பல படப் பரப்பி - பரந்த அவ்விடத்தே அனிச்சத்தின் அழகிய மலரை ஐந்துமுழ அகலமாகப் பலபடப் பரப்பியதால்; நிலவரை தன்னனாரை நிதியினல் வறுமை செய்தான் - நிலவுலகிலே தன்னை யொப்பாரைச் செல்வத்தினல் வறியவர் ஆக்கினன்.

(வி - ம்.) சீதத்தன் செய்யுஞ் செலவைக் கண்டு தங்கள் செல்வத் தால் இவ்வாறு செய்யமுடியா தென்று கருதியதால், 'வறுமை செய் தான்' என்றார். (௧௨௫)

சுகஅ. மண்டல நிறைந்த மாசின்
மதிப்புடை வியாழம் போன்றோர்
குண்டல மிலங்க நின்ற
கோடியினைக் குறுகித் தோழி
விண்டலர் கோதை விம்மும்
விரைகுழ றேழுது நீவிப்
பண்டியல் மணங்க ளெல்லாம்
பரிவறப் பணிந்து சொன்னாள்.

(இ-ள்.) மண்டலம் நிறைந்த மாசுஇல் மதி புடை வியாழம் போன்று - வட்டம் நிறைந்த குற்றம் அற்ற திங்களின் அருகே வியாழனைப் போன்று; ஓர் குண்டலம் இலங்க நின்ற கொடியினைக் குறுகித்தொழுது (தன் முகத்தருகே) ஒப்பில்லாத குண்டலம் விளங்க நின்ற தத்தையைக் குறுகிநின்று வணங்கி; விண்டு அலர் கோதை விம்மும் விரை குழல் நீவி-விரிந்து மலர்ந்த மாலையின் பொங்கும் மணமுடைய கூந்தலைக் கோதி; பண்டு இயல் மணங்கள் எல்லாம் பரிவு அறப் பணிந்து தோழி சொன்னாள் - பண்டைக் காலத்தே உலகில் நடைபெற்றுவரும் எண்வகை மணங்களையும் வருத்தமின்றி யுணர வணக்கத்துடன் விரும்பக் கூறினாள்.

(வி - ம்.) விரைக்குழல் விரைகுழலென்றாயது விகாரம்:

பண்டியல் மணங்களாவன:—பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என்பன. இங்ஙனம் கூறுதல் ஒரு மரபு எனக் கொள்க. (கஉசு)

சுகசு. எரிமணி நெற்றி வேய்ந்த
விளம்பிறை யிதுகோ லென்னப்
புரிமணி சுமந்த பொற்பூண்
பொறுக்கலா நுசுப்பிற் பாவை
திருமணி வீணைக் குன்றத்
திழிந்ததீம் பாலை நீத்தத்
திருமுடி யரச ராழ்வ
ரம்மனை யறிவ லென்றாள்.

(இ - ள்.) எரிமணி நெற்றி வேய்ந்த இளம்பிறை இது கொல் என்னப் புரிமணி சுமந்த பொன்பூண் - 'ஒளிவிடும் மணியை இருதலையினும் அழுத்தியதொரு பிறையோ இது?' என்னுமாறு முத்து வடங்கள் இருதலையினு மணியைச் சுமந்த பொற்பூணினை; பொறுக்கலா நுசுப்பின் பாவை - பொறுக்க

வியலாத இடையினையுடைய பாவையே! அம்மனை!-அன்னையே!; திருமணி வீணைக் குன்றத்து இழிந்த நீ பாலை நீத்தத்து-அழகிய மணியழுத்திய மகரயாழாகிய குன்றில் இருந்து பெருகிய இனிய பாலைப் பண்ணாகிய வெள்ளத்திலே; அருமுடி அரசர் ஆழ்வர் - அரிய முடிமன்னர் அமிழ்வர்; அறிவல் என்றாள் - யான் அறிவேன் என்று வீணாபதி விளம்பினாள்.

(வி - ம்.) புரி - முத்துவடம். பாலைபாவன: செம்பாலை, படுமலைப் பாலை, செவ்வழிப் பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, மேற்செம்பாலை, விளரிப்பாலை என எழு. அம்மனை - தாய்; 'அன்னை என்னை என்றலும் உளவே - தொன்னெறி முறைமை சொல்லினும் எழுத்தினும்-தோன்றா மரபின என்மனார் புலவர்' (தொல் - பொருளியல்-௫௨) என்பது விதி. ()

௬௨௦. மண்ணிட மலிர வெங்கு
மாந்தரும் வந்து தொக்கா
ரொண்ணிற வுரோணி யூர்ந்த
வொளிமதி யொண்பொ னாட்சித்
தெண்ணிற விசும்பி னின்ற
தெளிமதி முகத்து நங்கை
கண்ணிய வீணை வாட்போர்க்
கலாமின்று காண்டு மென்றே,

(இ - ள்.) மண் இடம் மலிர எங்கும் மாந்தரும் வந்து தொக்கார் - நிலமெங்கும் நிறைய மக்களெல்லோரும் வந்து குழுமினர்; ஒள் நிற உரோணி ஊர்ந்த ஒளிமதி ஒண் பொன் ஆட்சி - ஒளியும் நிறமும் உடைய உரோகிணி கூடிய திங்களை யுடைய வியாழக் கிழமையிலே; தெள்நிற விசும்பில் நின்ற தெளி மதி முகத்து நங்கை - தெளிந்த நிறமுடைய வானில் உலவும் தெளிந்த மதிபோலும் முகமுடைய தத்தையின்; கண்ணிய வீணை வாள் போர்க்கலாம் இன்று காண்டும் என்று - உலகம் மதித்த யாழாகிய வாட்போரின் மாறுபாட்டை இன்று காண்போம் என்று,

(வி - ம்.) 'ஈண்டி' என்பது (ஈண்டித் தொக்கார் என) பாட மாயின் 'தம்மில் திரண்டு' என்க. இச்செய்யுள் குளகம்.

மலிர - நிறைய. உரோணி-உரோகணி. பொன் - வியாழன். ஆட்சி-கிழமை. கலாம் - கலகம். (௧௨௮)

௬௨௧. பசுங்கதிர்க் கடவுள் யோகம்
பழிப்பற நனித்து வல்லான்
விசும்பிவர் கடவு ளோப்பான்
விரிச்சிக னறிந்து கூற

வசும்புதே னலங்க லைம்பா
லரிவையோ டாய்ந்து நாய்கன்
விசும்புபோன் மாந்த ரார
விழுநிதி சிதறி ஞனே.

(இ - ள்.) பசுங் கதிர்க் கடவுள் யோகம் பழிப்பு அற நுனித்து வல்லான் - சந்திராபரணம் என்னும் நூலிற் குற்றமறக் கூர்ந்தறிந்து வல்லவன் : விசும்பு இவர் கடவுள் ஒப்பான் விரிச்சிகன் அறிந்துகூற - வானத்தில் இயங்கும் வியாழனைப் போன்றவனாகிய கணி அறிந்து சொல்ல ; அசும்பு தேன் அலங்கல் ஐம்பால் அரிவையொடு நாய்கன் ஆய்ந்து-இடையறாது துளிக்குந் தேன்பொருந்திய மாலையணிந்த கூந்தலையுடைய பதுமையுடன் நாய்கன் ஆராய்ந்து ; விசும்பு போல் மாந்தர் ஆர விழுநிதி சிதறினுன்-முகிலைப்போல, மக்கள் மனமார, நன்னிதியை வழங்கினுன்.

(வி - ம்.) விரிச்சிகன் - கணி : காரணப் பெயர்.

பசுங்கதிர்க் கடவுள் யோகம் என்றது "சந்திராபரணம்" என்னும் பெயரையுடையதொரு கணித நூலை. நுனித்தல் - கூரிதாகக் கற்றல். விசும்பிவர் கடவுள் என்றது ஈண்டு வியாழனை. (கஉக)

கூஉஉ. வாசநெய் வண்டு மூச
மாந்தளிர் விரல்கள் சேப்பப்
பூசிவெள் ளிலோத்தி ரத்தின்
பூம்பொருக் கரைத்த சாந்தின்
காசறு குவளைக் காம
ரகவிதழ் பயில மட்டித்
தாசறத் திமிர்ந்து மாத
ரணிநலந் திகழ்வித் தாரே.

(இ - ள்.) வண்டு மூச மாந்தளிர் விரல்கள் சேப்ப வாச நெய்பூசி - மெய்யில் வண்டுகள் மொய்க்க, மாந்தளிரனைய விரல்கள் சிவக்க, மணமுற்ற நெய்யைப் பூசி ; வெள்ளிலோத்திரத்தின் பூம் பொருக்கு அரைத்த சாந்தின் - வெள்ளிலோத்திரத்தினது பூவுலர்தலை அரைத்த குழம்பினலே ; காசு அறு குவளைக் காமர் அகவிதழ் பயில மட்டித்து-குற்றமற்ற குவளையின் அழகிய அகவிதழ்த் தடிப்பைப்போலப் பூசி; ஆசு அறத்திமிர்ந்து-குற்றமறத் திமிர்ந்து ; மாதர் அணிநலம் திகழ்வித்தார் - மாதர்கள் தத்தையின் அழகுநலம் விளக்கினர்.

(வி - ம்.) வெள்ளி லோத்திரம் - ஒருவகை மணமலர். "தேறு வெள்ளி லோத்திரப் பூம் பொருக் கரைத்த கரைத்த சாந்தும்" என்றார்

(விநாயக. திருமண. கஉக.) பிறரும். பூம்பொருக்காவது - உலர்ந்தபூ. மட்டித்தல் - பூசுதல். (௬௨0)

௬உ௩. கங்கையின் களிற்றி னுச்சிக்
கதிர்மணிக் குடத்திற் றந்த
மங்கல வாச நன்னீர்
மணிநிறங் கழீஇய தொப்ப
நங்கையை நயப்ப வெல்லாம்
விரையொடு துவருஞ் சேர்த்தி
யங்கர வல்கு லாளை
யாட்டினா ரரம்பை யன்னார்.

(இ - ள்.) அரம்பை அன்னார் - வான மங்கையரனையார்; மணிநிறம் கழீஇயது ஒப்ப - மணியை நிறம்பெறச் சாணை பிடித்தாற் போல; நங்கையை நயப்ப எல்லாம் - நங்கையை விருப்பூட்டுவனவாகிய ஓமாலிகைகள் எல்லாவற்றையும்; விரையொடு துவரும் சேர்த்தி - விரையையும் துவரையும் கூட்டி; களிற்றின் உச்சிக் கதிர் மணிக்குடத்தில் கங்கையின் தந்த - களிற்றின் உச்சியிலே ஒளிவிடும் மணிக்குடத்தில் கங்கையினின்றுங் கொண்டுவந்த; மங்கல வாச நன்னீர் - மங்கலம் பொருந்திய மணநீரைக் கொண்டு; அங்கு அரவு அல்குலாளை ஆட்டினார் - அங்கே தத்தையைக் குளிப்பாட்டினர்.

(வி - ம்.) ஓமாலிகைகள்: "இலவங்கம் பச்சிலைகச் சோலமிருவேரி - மலையிரு வேரி வகுளம் சுரபுன்னை - ஏலந்தக் கோல் மதாவரிசி சாதிக்காய் - நாகணமஞ் சட்டி நறும்பிசின் குக்குலு - மாஞ்சிகண் டில் வெண்ணெய் தீம்புநன் னாரி - அடவிக்கச் சோலம் அரத்தை சரளம் - புழுகா ரியக்கொட்டங் கொட்டந் தகரம் - அதிமதுர முத்தக்கா சாய்ந்த விலா மிச்சம் - சயிலேக நாகப்பூச் சண்பக மொட் டென்று - முழுதுணர்ந் தோரோதிய முப்பத் திரண்டே - விதிவகை ஓமாலிகை." விரை: "சந்தனம் அகிலொடு கருப்பூரங் கத்தூரி - குங்குமம் என்றிவை ஐந்தும் விரையே." துவர்: 'நாற்பால் மரமா நாவல் திரிபலை - வன்கருங் காலி பத்துந் துவரே." இம்மேற்கோள் முற்றும் வேறுபாட்டுடன் அடியார்க்கு நல்லாரால் எடுத்துக் காட்டப்படுகிறது; (சிலப் - ௬ : எ௬ - ௯ : உரை). ()

௬உ௪. வெண்ணிற மழையின் மின்போல்
வெண்டுகிற் கலாபம் வீக்கிக்
கண்ணிற முலையுந் தோளுஞ்
சந்தனத் தேய்வை கோட்டித்
தெண்ணிறச் சிலம்பு செம்பொற்
கிண்கிணி பாதஞ் சேர்த்திப்
பண்ணிறச் சுரும்பு சூழும்
பனிமுல்லைச் சூட்டு வேய்ந்தார்.

(இ - ள்.) வெண்ணிற மழையின் மின்போல் - வெண் முகிலிடை மின்னுப்போல ; வெண்துகில் கலாபம் வீக்கி - வெண்ணிற ஆடையினுள்ளே கலாபத்தை இறுக்கி ; கண் நிறம் முலையும் தோளும் சந்தனத் தேய்வை கொட்டி - கண்ணையும் நிறத்தையும் உடைய முலையினும் தோளினும் சந்தனக் குழம்பைப் பூசி ; தெள் நிறச் சிலம்பு செம்பொன் கிண்கிணி பாதஞ் சேர்த்தி - தெளிந்த நிறமுடைய சிலம்பையும் பொன்னாலான கிண்கிணியையும் அடியில் அணிந்து ; பண் நிறச் சுரும்பு சூழும் பனிமுல்லைச் சூட்டு வேய்ந்தார் - பண்ணையும் நிறத்தையும் உடைய வண்டுகள் சூழும் முல்லைச் சூட்டினைக் கற்பிற்குச் சான்றாகத் தலையிலே சூட்டினார்.

(வி - ம்.) குலமகளிர் தங் கற்பொழுக்கத்திற் கறிகுறியாக முல்லை மலர் சூடுதல் ஒரு தமிழ் மரபு. இதனை, "முல்லைசான்ற கற்பின்." (சிறு பாண். ௩௦) என்றும், "வாணுதலரிவை முல்லைமலைய." (ஐங். ௬௦௮) என்றும், "முடிசூட்டுமுல்லையோ முதற்கற்பு முல்லையோ." (தக்கயா. ௩௧௧) என்றும், "முல்லையந்தொடை அருந்ததி." (பிரபுலிங்-கைலாய. ௨௭) என்றும், "வண்முல்லை சூடுவ தேநலங் காண்குல மாதருக்கே." குலோத்துங்க சோழன் கோவை. ௧௬௮) என்றும் பிற சான்றோர் கூறு மாற்றானும் உணர்க. இனித் தேவரே, "முல்லைச்சூட்டு மிலைச்சி." (௨௬௩௮) என மேலுங் கூறுவர். (௧௩௨)

௬௨௫. எரிமணிச் சுண்ண மின்னு
 மிருஞ்சிலை முத்தஞ் சேர்த்தித்
திருமணி முலையி னெற்றிச்
 சிறுபுறஞ் செறியத் தீட்டிப்
புரிமணி யாகத் தைதா
 விரனுதி கொண்டு பூசி
விரிமணி வியப்ப மேனி
 யொளிவிட்டு விளங்கிற் றன்றே.

(இ - ள்.) மின்னும் இருஞ்சிலை முத்தம் திருமணி முலையின் நெற்றிச் சேர்த்தி - ஒளிவிடும் பெரிய வானவிற் போலும் முத்துவடத்தை அழகிய மணியணிந்த முலையின் நெற்றியிலே பூட்டி ; எரிமணிச் சுண்ணம் சிறு புறம் செறியத் தீட்டி - ஒளிரும் மணிச் சுண்ணத்தை முதுகிலே பொருந்தத் தீட்டி ; புரிமணி ஆகத்து ஐதா விரல்நுதி கொண்டு பூசி - அதனையே முத்துவடமும் மணிவடமும் அணிந்த மார்பினும் மென்மையாக விரல் நுனியைக் கொண்டு பூசி ; விரிமணி வியப்ப மேனி ஒளிவிட்டு விளங்கிற்று - விரிந்த ஒளியுறு மாணிக்க மணியும் வியக்குமாறு மேனி ஒளி வீசி விளங்கியது.

(வி - ம்.) பூசி - பூச: வினையெச்சத் திரிபு.

*இருஞ்சிலை என்றது வானவில்லை. இது முத்துவடத்திற்குவமை. சிறுபுறம் - முதுகு. ஐதா - மென்மையாக. ஐதாக எனல் வேண்டியது ஈற்றுக் ககரம் கெட்டு நின்றது. விரிமணி வியப்ப என்புழி மணி - மாணிக்கமணி - வியப்ப: உவமவுருபு.

"இதுமெயென் றின்றுந் தேருர் இருநிலத் துறையு மாந்தர்
புதுமையைப் பொருளி தென்னுர் பழமையைப் பொருளிதென்பர்
மதுமய மாலைத்தோழி பழமையைப் பழித்து மாதோ
புதுமையே பொருளிதாதல் பூங்கண்ணி னுணர்த்தினுளே."

என ஒரு செய்யுள் சில கையெழுத்துப் பிரதிகளில் காணப்படுகின்றது. (௧௩௩)

௬௨௬. அருங்கயம் விசும்பிற் பார்க்கு
மணிச்சிறு சிரலை யஞ்சி
இருங்கயந் துறந்து திங்க
ளிடங்கோண்டு கிடந்த நீலம்
நெருங்கிய மணிவிற் காப்ப
நீண்டுலாய்ப் பிறழ்வ சேங்கேழ்க்
கருங்கய லல்ல கண்ணே
யெனக்கரி போக்கி ஞரே.

(இ - ள்.) நீண்டு உலாய் பிறழ்வ - நீண்டு உலவிப் பிறழ்கின்ற இவை; அருங்கயம் விசும்பின் பார்க்கும்-அரிய குளத்தில் விசும்பிலிருந்து (தம்மை) நோக்கும்; அணிச் சிறு சிரலை அஞ்சி-அழகிய சிறிய சிச்சிலிக்கு அஞ்சி; இருங் கயம் துறந்து-அந்தப் பெரிய குளத்தை நீங்கி; திங்கள் இடம் கொண்டு - திங்களை இடமாகக் கொண்டு; நீலம் மணி நெருங்கிய வில்காப்ப - நீல மணியாகிய நெருங்கிய வில்காப்ப; கிடந்த - கிடக்கின்ற; கருங் கயல் அல்ல - கரிய கயல்மீன்கள் அல்ல; கண்ணே எனக் கரி போக்கினர் - கண்ணேயென்று கண்டோர் கருதுமாறு மையை எழுதினர்.

(வி - ம்.) 'கரி' என்ருர் சான்று போலவும் தோன்ற. 'கிடந்து' என்றும் பாடம்.

விசும்பினின்று பார்க்கும் என்க. சிரல் - மீன் கொத்திப் பறவை. இருங்கயம் என்பது சுட்டுமாத்திரையாய் நின்றது. சிரலை அஞ்சி என்றதற் கேற்ப வில் காப்ப என்ருர். (௧௩௪)

௬௨௭. பொருந்துபோற் றூண்கள் நான்கிற்
போலிந்துநூற் புலவர் சேந்நா
வருந்தியும் புகழ்த லாகா
மரகத மணிசேய் கூடத்

திருந்திழை யார்கள் கோல
மிந்திர னிருமித் தாற்போற்
றிருந்தச்செய் ததற்பி னங்கை
திருவிற்கோர் திலக மொத்தாள்.

(இ - ள்.) பொருந்து பொன் தூண்கள் நான்கின் பொலிந்து - பொருந்திய பொன் தூண்கள் நான்கினாற் பொலிவுற்று ; நூற்புலவர் செந்நா வருந்தியும் புகழ்தல் ஆகா - நூலறி புலவர் தம் செவ்விய நாவினால் வருந்தியும் புகழ இயலாத ; மரகத மணிசெய் கூடத்து - மரகத மணியாற் செய்த ஒப்பனைக் குரிய கூடத்தே ; இழையார்கள் இருந்து - ஒப்பனை மகளிர் இருந்து ; இந்திரன் நிருமித்தாற்போற் கோலம் திருந்தச் செய்த தன் பின் - இந்திரன் அமைத்ததுபோல் ஒப்பனையை அழகுறச் செய்த பிறகு ; நங்கை திருவிற்கு ஓர் திலகம் ஒத்தாள் - தத்தை திருமகளுக்கு இட்டதொரு திலகத்தைப் போன்றாள்.

(வி - ம்.) நான்கில் - நான்கினால். இழையார்கள் - ஈண்டு ஒப்பனை மகளிர். நிருமித்தல் - படைத்தல். திரு - திருமகள். நங்கை - காந்தருவ தத்தை. (௩௯௫)

௩௯௮. மண்கனை முழவம் விம்ம
வரிவளை துவைப்ப வள்வார்க்
கண்கனைந் திடியின் வெம்பிக்
கடலென முரச மார்ப்ப
விண்கனிந் துருகு நீர்மை
வெள்வளைத் தோளி போந்தாள்
பண்கனிந் துருகு நல்யாழ்ப்
படைபொரு துடைக்க லுற்றே.

(இ - ள்.) மண் கனை முழவம் விம்ம - மார்ச்சனையிட்ட முரசு ஒலிக்கவும் ; வரிவளை துவைப்ப - சங்குகள் முழங்கவும் ; வள்வார் முரசம் கண் கனைந்து இடியின் வெம்பிக் கடல் என ஆர்ப்ப - சிறிய வார்கொண்ட முரசம் கண் ஒலித்து இடியின் வெம்பிக் கடல்போல ஆரவாரிக்க ; விண் கனிந்து உருகும் நீர்மை வெள் வளைத் தோளி - வானவரும் நெஞ்சுருகுந் தன்மை யுடைய வெள்ளை வளையணிந்த தோளினாள் ; பண் கனிந்து உருகும் நல் யாழ்ப் படை பொருது உடைக்கல் உற்றுப் போந்தாள் - பண்முற்றுப் பெறுதலிற் கேட்டோர் நெஞ்சுருகுதற்குக் காரணமான நல் யாழினையுடைய படையையும் பொருது உடைத்தற்கு வந்தாள்.

(வி - ம்.) மண் - மார்ச்சனை. விண்: ஆகுபெயர், விண்ணும் என்ற பால சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. (௩௩௬)

௬௨௬. பரந்தொளி யுமிழும் பைம்பொற்
கண்ணடி பதாகை தோட்டி
விரிந்திருண் மேயுஞ் செம்பொன்
விளக்குவெண் முரசு கும்பஞ்
சுரந்தவெண் மதியைச் சூன்று
கதிர்கொண்டு தொகுத்த போலும்
பொருந்துபொற் கதிர்பெய் கற்றை
புணர்கயல் போந்த வன்றே.

(இ - ள்.) பரந்து ஒளி உமிழும் பைம்பொன் கண்ணடி - பரவி ஒளியை வீசும் பொற்கண்ணடியும்; பதாகை தோட்டி - கொடியும் அங்குசமும்; விரிந்து இருள் மேயும் செம்பொன் விளக்கு - ஒளி பரந்து இருளைக் கெடுக்கும் பொன் விளக்கும்; வெண் முரசு கும்பம் - முரசும் நிறைகுடமும்; சுரந்த வெண் மதியைச் சூன்று கதிர் கொண்டு தொகுத்த போலும் பொருந்து பொன்கதிர் பெய்கற்றை - அமுதைச் சுரந்த வெள்ளிய திங்களைத் தோண்டிக் கதிர்களை எடுத்துக் கொண்டு சேர்த்த போலும் பொருந்தும் பொற்கதிர்களைப் பெய்கின்ற தொகுதியான கவரியும்; புணர்கயல் - இரட்டைக் கயல்களும்; போந்த - வந்தன.

(வி - ம்.) இவை அட்டமங்கலங்கள்.

அட்டமங்கலங்கள் இன்ன வென்பதை ௫௭௨ - ஆம் செய்யுளின் விளக்கத்திலும் காண்க. கண்ணடி - கண்ணடி என நின்றது. பதாகை - பெருங்கொடி. மேயும் என்றது, கெடுக்கும் என்பதுபட நின்றது. கும்பம் - குடம்; ஈண்டு நிறைகுடம் என்பதுபட நின்றது. (௩௩௭)

௬௩௦. வென்றவ னகலம் பூட்ட
விளங்கொளி மணிசெய் செப்பி
னின்றெரி பசும்பொன் மாலை
போந்தது நெறியிற் பின்ன
ரோன்றிய மணிசெய் நல்யாழ்
போந்தன வுருவ மாலை
தின்றுதே னிசைகள் பாடத்
திருநகர் சுடர வன்றே.

(இ - ள்.) வென்றவன் அகலம் பூட்ட - வென்றவன் மார்பில் அணிய; விளங்கு ஒளி மணிசெய் செப்பின் நின்று எரி பசும்பொன் மாலை நெறியின் போந்தது - விளங்கும் ஒளியை

உடைய மாணிக்கச் செப்பிலே நின்று ஒளிதரும் பைம்பொன் மாலை வழக்கப்படி வந்தது; பின்னர், ஒன்றிய மணிசெய் நல் யாழ் - பிறகு, ஒன்றிய மாணிக்கங்கள் இழைத்த அழகிய யாழ்கள்; உருவம் மாலைதின்று - தம் உருவத்தை மாலைகள் உள்ளடக்கி; தேன் இசைகள் பாட - அம் மாலைகளில் உள்ள வண்டுகள் இசைபாட; திருநகர் சுடர - நகரம் விளக்கம்உற; போந்தன - வந்தன.

(வி - ம்.) 'தின்று' என்பதற்குக் 'தேன் மாலையைத் தின்று இசைகள் பாட' என மிகுதியாற் கூறுவாருமுளர். 'தின்று தேன் றிசைகள் பாட' என்றும் பாடம்.

வென்றவன், யாழ்ப்போரில் தன்னை வென்றவன் என்க. தின்று - தின்னப்பட்டு; மறைக்கப்பட்டு என்றவாறு. (௩௯௰)

வேறு

௬௯௧. ஆரந் துயல்வர வந்துகில் சோர்தர
வீரம் படக்கையை மெய்வழி வீசித்
தேரை நடப்பன போற்குறள் சிந்திெ
டோரு நடந்தன வொண்டொடி முன்னே.

(இ - ள்,) ஆரம் துயல்வர அம்துகில் சோர்தர - ஆரம் அசையத் துகில் நெகிழா நிற்க; வீரம்பட - வீரம் உண்டாக; கையை மெய்வழி வீசி - கையை விலாப்புடைக்குள்ளே வீசி; தேரை நடப்பனபோல்-தேரைகள் நடப்பனபோல; குறள் சிந்தினொடு - குறளும் சிந்தும்; ஒண்தொடி முன்னே நடந்தன - தத்தைக்கு முன்னே நடந்தன.

(வி - ம்.) ஒரும்: அசைச் சொல். இரண்டடி உயரம் உள்ளவர்கள் குறளர்; மூன்றடி உயரமுள்ளவர்கள் சிந்தர்.

"தோளிரண்டும் வீசி யாம் வேண்டேமென்று விலக்கவும் எம் வீழும் காமர் நடக்கும் நடைகாண்" (௬௪ - ௩௧-௩.) என்றார் மருதக்கலியினும். (௩௯௱)

௬௯௨. வட்டச் சூறையர் வார்முலைக் கச்சினர்
பட்டு வீக்கிய வல்குலர் பல்கணை
விட்ட தூணியர் வில்லினர் வாளின
ரோட்டி யாயிரத் தோரேண்மர் முன்னினர்.

(இ - ள்.) வட்டச் சூறையர் - வட்டமான பனிச்சையர்; வார்முலைக் கச்சினர் - வாராற் கட்டிய முலைக் கச்சினர்; பட்டு வீக்கிய அல்குலர் - வெண்பட்டணிந்த அல்குலினர்; பல்கணை விட்ட தூணியர் வில்லினர் வாளினர் - பல அம்புகள் நிறைந்த

தூணியும் வில்லும் வாளும் உடையராய்; ஆயிரத்துஓர் எண்மர் - ஆயிரத்தெட்டு மகளிர்; ஒட்டி முன்னினார் - வஞ்சினங் கூறித் தத்தைக்கு முன் போந்தனர்.

(வி - ம்.) சூறை - சல்லடமும் ஆம்.

இவர்கள் காவன்மகளிர். ஒட்டி - வஞ்சினங் கூறி. ஆயிரத்தோ ரெண்மர் என்புழி - ஓர் அசைச்சொல். முன்னுதல் - முற்படச் செல் லுதல். (௧௭0)

௬௩௩. வம்பு வீக்கி வருமுலை யுட்கரந்
தம்பி னேய்யவ ராணுடைத் தானையர்
பைம்பொற் கேடகம் வாளொடு பற்றுபு
செம்பொற் பாவையைச் சேவித்து முன்னினார்.

(இ - ள்.) அம்பின் நொய்யவர் - (ஓடுங்கால்) அம்பினுங் கடிதோடுவர்; வரும்முலை உள் கரந்து வம்பு வீக்கி - வளரும் முலையை உள்ளடக்கிக் கச்சினால் இறுக்கி; ஆண் உடைத் தானையர் - ஆணுடையாக உடுத்த ஆடையினராய்; பைம்பொன் கேடகம் வாளொடு பற்றுபு - புதிய பொற்கேடகத்தையும் வாளையும் பற்றியவராய்; செம்பொற் பாவையைச் சேவித்து முந்தினார்- தத்தையைச் சேவித்து முற்படச் சென்றனர்.

(வி - ம்.) இங்ஙனஞ் சேவித்தல் மகளிரினியல்பு.

வம்பு - கச்சு. வருமுலை : வினைத்தொகை. நொய்யவா என்புழி - நொய்மைப் பண்பு விரைவு குறித்துநின்றது. செம்பொற்பாவை என்றது, காந்தருவதத்தையை. (௧௭௧)

௬௩௪. ஆணை யாணை யகலுமி னீரென
வேணுக் கோலின் மிடைந்தவ ரோற்றலி
னாணை யின்றெம தேயென் றணிநகர்
காணுங் காதலிற் கண்ணெருக் குற்றவே.

(இ - ள்.) ஆணை ஆணை நீர் அகலுமின் என - அரசன் ஆணை! ஆணை!! நீவிர் விலகிச் செல்லுமின் என்று; மிடைந்தவர் வேணுக் கோலின் ஒற்றலின் - நெருங்கியவரை மூங்கிற் கோலினாற் காவலர் தள்ளும்போது; ஆணை இன்று எமதே என்று- ஆணை இன்றைக்கு எங்களுடையதே என்று; அணிநகர் காணும் காதலின் - அழகிய நகரிலுள்ளார் காணவரும் காதலினால்; கண் நெருக்குற்ற - கண்கள் நெருங்கியுற்றன.

(வி - ம்.) நகர் - நகரத்து மக்கள்: ஆகு பெயர். வேணு - மூங்கில். (௧௭௨)

சுந௨ரு. கண்ணி ேனாடு பிறந்தது காரிகை
வண்ணங் காண்டற்கன் றோவென்று வைதவர்
விண்ணு மண்ணும் விருந்துசெய் தாலொப்ப
வெண்ணி னெண்ணிட மின்றி நெருங்கினார்.

(இ - ள்.) அவர் - அந் நகர மக்கள்; கண்ணினோடு பிறந்தது காரிகை வண்ணம் காண்டற்கு அன்றோ என்று வைது - யாங்கள் கண்ணுடன் பிறந்தது தத்தையின் அழகைக் காண்பதற்கு அன்றோ என்று வைது; விண்ணும் மண்ணும் விருந்து செய்தால் ஒப்ப - வானும் நிலனும் விருந்து செய்தாற்போல; எண்ணின் எண் இடம் இன்றி நெருங்கினர் - ஆராயின் எள் இடவும் இடம் இன்றி நெருங்கினர்.

(வி - ம்.) [நச்சினார்க்கினியர் சுந௨ச - சுந௨ரு ஆகிய இரண்டு செய்யுளையும் ஒரு தொடராக்கி மொழிமாற்றிக் கூறும் பொருள்:

"காவற் குரியவர்கள் மிடைந்தவரை முற்பட வைது, அவர் நீங்காமையின், ஆணை ஆணை அகலுமின் எனக் கூறி ஒற்றுதலால், அவர், விண்ணில் விச்சாதரரும் மண்ணிலுள்ளாரும் எள்ளிட இடம் இன்றி நெருங்கினர், காரிகை வண்ணம் காண்டற் கன்றோ? ஆதலால் விசாரித்துப் பார்க்கின், யாமும் கண்ணினொடு பிறந்தது வண்ணங் காண்டற் காயிருக்குமெனக் கூறிப், பின்னும் எங்கட்கு நீர் விருந்து செய்தாற் போல இன்று எம்முடைய ஆணையே ஆணையாகக் கொண்மின் எனவுங் கூறி நகரிலுள்ளார் காதலாற் காணுங் கண்கள் நெருக்குற்ற வென்க.

காவற்குரியவர்களென்றும் முற்பட வென்றும் நீங்காமையின் என்றும் யாமும் என்றும் வண்ணம் காண்டற்காயிருக்கும் என்றும் பின்னும் என்றும் எங்கட்கென்றும் ஆகக் கொண்மின் என்றும் வருவித்துரைக்க."] (கசங)

வேறு

சுந௨சு. இனஞ்சேரா வாகி விளையோ
ருயிரின்மே லெண்ணங் கோள்வான்
புனஞ்சேர் கோடிமுல்லை பூம்பவளத்
துட்புக்குப் பூத்த போலும்
வனஞ்சேர் துவர்ச்சேவ்வாய் வாளேயிறுங்
கண்மலரும் வனைய லாகாக்
கனஞ்சேர் கதிர்முலையுங் கண்டார்கள்
வீட்டுலகங் காணார் போலும்!

(இ - ள்.) இனம் சேரா - தம் இனத்துடன் சேராமல்; இளையார் உயிரின்மேல் எண்ணம் கொள்வான் - இளைஞரின் உயிரின்மேற் கருத்துக் கொள்ள விரும்பி; புனம்சேர் கொடி

முல்லை - காட்டிலிருக்கும் கொடிமுல்லைகள்; பூம்பவளத்துள் புக்குப் பூத்தபோலும் - அழகிய பவளத்தினுள்ளே புகுந்து பூத்தனபோல; வனம்சேர் துவர்ச் செவ்வாய் வாள் எயிறும் - அழகுடைய பவளச் செவ்வாயில் ஒளிமிகு முறுவலையும்; கண் மலரும் - கண்களாகிய மலர்களையும்; வளையல் ஆகாக் கனம்சேர் கதிர்முலையும் - செய்ய முடியாத பருத்த ஒளிவிடும் முலைகளையும்; கண்டார்கள் வீட்டு உலகம் காணார்போலும் - பார்த்தவர்கள் வீட்டுலகைக் காண விரும்பார் போலும்!

(வி - ம்.) 'காணார் வீட்டுலகங் கண்டார்' என இயைப்பர் நச்சினார்க்கினியர்.

இனம் என்றது தம்மினத்து மகளிரை என்றவாறு. இளையார் என்றது ஆடவரை. வனம் - அழகு. துவர் - பவளம். வீட்டுலகத்தினும் இவை இன்பமிக்குடையன என்று இவற்றையே விரும்புவர் என்பது கருத்து. (௧௪௪)

௬௭௭. மீன்சேர் குழாமனைய மேகலையும்
வெம்முலையுங் கூற்றங் கூற்ற
மூன்சே ருயிருய்யக் கொண்டோடிப்
போமின்க ளுரைத்தே மென்று
கான்சேர் கமழ்கோதை காறொடர்ந்து
கைவிடா தரற்று கின்ற
தேன்சேர் திருவடிமேற் கிண்கிணிபோன்
னாவதற்கே தக்க தென்பார்.

(இ - ள்.) மீன்சேர் குழாம் அனைய மேகலையும் வெம்முலையும் கூற்றம்! கூற்றம்!!—விண்மீன்கள் சேர்ந்த திரள் போன்ற மணிகள் கொண்ட மேகலையும் விருப்பூட்டும் முலையும் கூற்றம்! கூற்றம்!!; ஊன்சேர் உயிர் உய்யக் கொண்டு ஓடிப்போமின்கள் - ஊனைச் சேர்ந்த உயிர் பிழைக்கக் கொண்டு ஓடிப்போமின்கள்; உரைத்தேம் என்று - கூறினோம் என்று, கான்சேர் கமழ்கோதை - மணங்கலந்து கமழ்கின்ற மாலைபோல் வாளின்; கால் தொடர்ந்து கைவிடாது அரற்றுகின்ற - காலைப் பற்றி நீங்காமல் அரற்றுதல் செய்கின்ற; தேன்சேர் திருவடிமேல் கிண்கிணி - தேனினம் மலரென்று கருதிச் சேரும் அழகிய அடிகளின்மேல் அணிந்த கிண்கிணி; பொன் ஆவதற்குத் தக்கதே என்பார் - பொன்னாவதற்குத் தகுதியானதே என்பார்கள்.

(வி - ம்.) எச்சரிக்கை செய்வதனாற் பொன்னெனப் புகழ்ந்தனர்.

நச்சினார்க்கினியர் மேகலையும் கிண்கிணியும் எனக் கூட்டிப் பொன்னாவதற்குத் தக்கன என்று பொருள் கூறுவர். கூற்றம் கூற்றம் என்று

வெம்முலையையே கூறுவர். மற்றும் பொன்னுவதற்சோ தக்க என ஏகாரத்தை எதிர்மறையாக்குவர். மேகலை அல்குலின் மேலணிவதால் மேகலையும் கண்டார் மனத்தைக் கவர்தலின் அதனையுங் கூற்றம் என்றார் எனவே கொள்ளுதல் வேண்டும்.

மேகலை: இடக்கரடக்கல். கூற்றம் கூற்றம் என்னும் அடுக்கு தெளிவு பற்றி வந்தது எதிர்ந்தோர் உயிருண்ணும் கூற்றம் கூற்றம் என்றவாறு. உரைத்தேம் என்றது எமக்கஃதறமாகலின் உரைத்தேம் என்பதுபட நின்றது. "கால் தொடர்ந்து கைவிடாது அரற்றும்" என்புழி முரண்தோன்றியழிந்து செய்யுளின்ப மிகுதல் உணர்க. தேன் சேர் திருவடி என்றது, மலர் என்று கருதி வண்டுகள் வீழ்தற்குக் காரணமான அழகிய அடி என்றவாறு. (௧௬௫)

௬௬அ. கள்வாய்ப் பெயப்பட்ட மாலைக்
கருங்குழல்கள் கண்டார் நைய
வுள்வாய்ப் பெயப்பட்ட வெம்மதுச்சேப்
போரிணைமேல் லாக மீன்ற
புள்வாய் மணிமழலைப் பொற்சிலம்பி
னிக்கோடியை யீன்றாள் போலுங்
கோள்வா னுலகுக்கோர் கூற்றீன்ற
ளம்மவோ கோடிய வாறே.

(இ - ள்.) கள்வாய்ப் பெயப்பட்ட மாலைக் கருங்குழல்கள் - தேன் பெய்யப் பெற்ற மாலையணிந்த கருங்குழல்களையும்; கண்டார் நைய மெல் ஆகம் ஈன்ற உள்வாய் வெம்மது பெயப்பட்ட ஓர் இணைச் செப்பு - பார்த்தோர் மெலியுமாறு மெல்லிய மார்பு ஈன்ற, உள்ளே விருப்பமூட்டும் மது பெய்யப்பெற்ற, இரண்டு செப்புகளையும்; புள்வாய் மணி மழலைப் பொற்சிலம்பின் - அன்னத்தின் வாய்போல வாயின்கண் இடப்பட்ட மணியாகிய நாவால் மழலை மொழியும் பொற்சிலம்பையும் உடைய; இக் கொடியை ஈன்றாள் - இக் கொடியைப் பெற்றவள்; உலகுக்குக் கொள்வான் ஓர் கூற்று ஈன்றாள் போலும் - உலகுக்கு அவ்வுலகின் உயிரைக் கொள்வதற்கு ஒரு கூற்றுவனை ஈன்றவள் போலும்; அம்மவோ! கொடிய ஆறே - அம்மவோ! இவள் மிகக் கொடியளானபடி என்! (என்பார்).

(வி - ம்.) இக் கொடியை யீன்றவளே முன்னர்க் கூற்றுவனை ஈன்றவளாயிருப்பாள் என்றனர். (௧௬௬)

௬௬௬. செய்ய தாமரை மேற்றிரு வேகோலோ
வெய்ய நோக்கின்விச் சாதரி யேகோலோ
மையில் வானவர் தம்மக ளேகோலேன்
றைய முற்றலர் தார்மன்னர் கூறினர்.

(இ - ள்.) செய்ய தாமரைமேல் திருவே கொலோ - செந்தாமரை மலரின்மேல் உள்ள திருமகளோ?; வெய்ய நோக்கின் விச்சாதரியே கொலோ - கொடிய பார்வையினையுடைய வித்தியாதர மகளேயோ?; மைஇல் வானவர்தம் மகளே கொல்-குற்றம் அற்ற வானவரின் மகளேயோ?; என்று ஐயம் உற்று - என்று ஐயம் கொண்டு; அலர்தார் மன்னர் கூறினர் - மலர்மாலை வேந்தர்கள் கூறினர்.

(வி - ம்.) ௬௩௬ முதல் இதுவரை உள்ளவை வேந்தர் தத்தையைக் கண்டு மயங்கிக் கூறியவை. கொல்: ஐயவிடைச்சொல். ஓ: அசை; வினாவுமாம். (௧௭௭)

௬௭௦. வீணை வென்றிவள் வெம்முலைப் பூந்தட
மாணை தோய்வதல் லாற்பிறன் வௌவுமேற்
கோணைப் போரிற் குளிக்குவ மன்றெனின்
மாண நற்றவஞ் செய்குவ மென்மரும்,

(இ - ள்.) வீணை வென்று - யாழினால் வென்று; இவள் வெம்முலைப் பூந்தடம் தோய்வது அல்லால் - இவள் விருப்பமூட்டும் முலைகளாகிய அழகிய தடாகத்திலே படிதல், அல்லது; பிறன் வௌவுமேல் - மற்றவன் கைப்பற்றுவானெனில்; ஆணை - ஆணையாக; கோணைப் போரில் குளிக்குவம் - மாறுபட்ட போரிலே குளிப்போம்; அன்று எனின் - அல்லாவிட்டால்; மாண நல்தவம் செய்குவம் என்மரும்-இவளைப்பெற்று மாட்சிமையுறுதற்குத் தவத்தைச் செய்வோம் என்பாரும்,

(வி - ம்.) ஆணை - வஞ்சினம். இதுமுதல் மூன்று பாட்டுகள் குளகம்.

பிறன் வௌவுமேல் என்பதற்கு, பிறன் ஒருவன் யாழ்வென்றன்று தன் வலிமையினாலே இவளைக் கைப்பற்றுவானாயின் என்பது பின்னர்ப் போரிற்குளிக்குவம் என்றதற்குப் பொருந்துவதாம்.

இதனால் பெரும்பாலும் வித்தைகல்லாத வேந்தர் இவளைத் தாம் யாழ் வென்று கொள்ளவியலாது என்று தம்முட் கருதிக்கொண்டு மேலும் இவளை யாரும் வென்று கொள்ளவும் முடியாது எனவே ஆற்றலாலே கைப்பற்றவே முயல்வர்; அங்ஙனம் வந்தவிடத்து நாமே எல்லோரையும் வென்று இவளைப் பெறுதல் கூடும் எனத் தம்முள் ஒரு முடிவு செய்து கொள்கின்றனர் என்பதனை ஆசிரியர் மிக நுண்ணிதின் விளக்குகின்றார். இஃதோர் மனவியல்பு. (௧௭௮)

௬௭௧. குலிகச் செப்பன கொம்மை வரிமுலை
கலியு மெம்மையென் பார்நல்ல கண்களால்
வலிய வாங்கியெய் தாளெம்மை வாழ்கலே
மெலிய வாவி விடுக்குமற் றேன்மரும்,

(இ - ள்.) குலிகச் செப்பு அன கொம்மை வரிமுலை - இங்குலிகச் செப்பே போலப் பருத்த வரிகளையுடைய முலைகள் ; நலியும் எம்மை என்பார் - எம்மை வருத்தும் என்பாரும்; நல்ல கண்களால் வலிய வாங்கி எம்மை எய்தாள் - அழகிய கண்களாகிய அம்புகளால் நன்றாக இழுத்து எம்மை எய்தாள் ; வாழ்கலேம் - இனி வாழமாட்டேம்; மற்று மெலிய ஆவி விடுக்கும் என்மரும் - இனி மெலிந்து உயிரை விடுவோம் என்பாரும்,

(வி - ம்.) நலியும்: பிறவினையாக (நலிக்கும் என) வந்தது. மெலிய மெலிந்து: எச்சத்திரிபு.

மெலி அ ஆவி விடுக்கும் எனக் கண்ணழித்து இவ்வாற்றால் இளைத்த எம் உயிரும் இனி எம்மைக் கைவிட்டுப்போம் எனக் கூறினுமாம். (கசுக)

௬௬௨. ஊட்டி யன்ன வுருக்கரக் காரடி
நீட்டி மென்மலர் மேல்வந்து நின்னலங்
காட்டி யெம்மைக்கோன் றுயெனக் கைதொழு
தோட்டை நெஞ்சின ராயுழல் வார்களும்.

(இ - ள்.) உருக்கு அரக்கு ஊட்டி அன்ன ஆர் அடி - (இயல்பான சிவப்பால்) உருக்கிய அரக்கை ஊட்டினாற் போன்ற நிறத்தோடு பொருந்திய அடிகளை ; நீட்டி மென்மலர்மேல் வந்து - எடுத்து வைத்து மெல்லிய மலர்களின்மேல் வந்து; நின் நலம் காட்டி - நின் அழகைக் காட்டி; எம்மைக் கொன்றாய் என - எம்மை வருத்தினாய் என்றுகூறி; கைதொழுது - கை கூப்பி ; ஓட்டை நெஞ்சினராய் உழல்வார்களும் - அறைபோன உள்ளத்தினராக உழல்கின்றவர்களும் (ஆயினர்).

(வி - ம்.) நீட்டி என்றது நீட்டப்படாத மெல்லியல்புடைய அடியை நீட்டி என்பதுபட நின்றது. கொன்றாய் என்றது துன்பத்தின் கொடுமையை உணர்த்தியபடி. ஓட்டை நெஞ்சினர் - அறிவு ஒழுகிப்போன நெஞ்சுடையோர். (கசுஉ)

வேறு

௬௬௩. திங்கண் மதிமுகத்த சேலும்
பவளமுஞ் சிலையு முத்துங்
கோங்குண் குழலாண்மேல் லாகத்த
கோங்கரும்புங் கொழிப்பில் பொன்னு
மங்கை குழியா வரக்கீத்த
செந்தளிர்நெய் தோய்த்த போலு
மங்கை மலரடியுந் தாமரையே
யாமறியே மணங்கே யென்பார்.

(இ - ள்.) திங்கள் மதிமுகத்த - பிறைத் திங்களையுடைய மதிபோலும் முகத்திலுள்ளன (கண்களும் வாயும் புருவமும் பற்களும்); சேலும் பவளமும் சிலையும் முத்தும் - சேற்கெண்டை மீனும் பவளமும் வில்லும் முத்தும் ஒக்கும்; கொங்கு உண் குழலாள் மெல் ஆகத்த - மணம்கமழும் கூந்தலை யுடையாளின் மெல்லிய மார்பிலுள்ள முலைகளும் சுணங்கும்; கோங்கு அரும்பும் கொழிப்பு இல் பொன்னும் - கோங்கரும்புகளும் ஓட்டற்ற பொன்னும் ஒக்கும்; அங்கை குழியா அரக்கு ஈத்த செந்தளிர் நெய் தோய்த்த போலும் - அகங்கைகள் குழிவிலவாய்ச் செந்நிறம் ஊட்டப்பெற்ற தளிரில் நெய் தோய்த்தவற்றை ஒக்கும்; மங்கை மலர் அடியும் தாமரையே - மங்கையின் மலரனைய அடியும் தாமரையே போலும்; அணங்கே யாம் அறியேம் என்பார் - இவை வருத்தும் வருத்தம் ஒன்றுமே இத்தன்மைத்தென யாம் அறிகின்றிலேம் என்பார்கள்.

(வி - ம்.) இவற்றில் நம்மை வருத்துவது இஃதென்று யாம் அறியேம் என்றுமாம். அணங்கே: ஏ: தேற்றம். (௧௬௧)

௬௪௪. பொன்மகரம் வாய்போழ்ந்த முத்தநூ
ற்றோள்யாப்பிற் பொலிந்த வாறு
மின்மகரங் கூத்தாடி வில்லிட்
டிருங்குழைக்கீ ழிலங்கு மாறு
மன்மகர வெல்கொடியான் மால்கொள்ளக்
கால்கொண்ட முலையி னாளை
யென்னரம்பை யென்னுவா றென்பா
ரிமைக்குங்கண் ணிவையோ வென்பார்.

(இ - ள்.) மன் மகர வெல்கொடியான் மால்கொள்ளக் கால்கொண்ட முலையினாளை - பெருமை பொருந்திய மகரமாகிய வெற்றிக் கொடியினானும் மயங்குமாறு அடிபரந்த முலையினாளை; அரம்பை என்னுவாறு - தெய்வமகள் என்னுதபடி; பொன்மகரம் வாய் போழ்ந்த முத்தநூல் தோள் யாப்பின் பொலிந்த ஆறும் - பொன்னாலான மகரம் தன் வாய் அங்காத்தலின் தோன்றிய முத்துவடம் தோள்கட்டில் அமைந்த படியும்; மின் மகரம் கூத்தாடி வில்இட்டு இருங்குழைக் கீழ் இலங்கும் ஆறும் - மின்னும் மகரம் அசைதலால் ஒளியை வீசிப் பெருங்குழை காதின்கீழ் விளங்குமாறும்; என் என்பார் - என்னே என்பார்; இமைக்கும் கண் இவையோ என்பார் - (கண் இமைக்கும் என்பார்க்கு) இமைக்குங் கண்கள் இவைகளோ என்பார்.

(வி - ம்.) ஓகாரம் எதிர்மறை. இப்பூண்கள் கந்தருவர் செய்தனவாகலின், இவள் தெய்வம் அன்றென்று தெளிவித்தன என்றும், கண்

இமையா நிற்கவும் மானிடரிற் சிறப்புண்டென்றுங் கூறினர். (இமையாக் கண்கள் வானவர்க்குண்டு.) இது, 'வண்டே யிழையே வள்ளி பூவே' (தொல் - களவு. ௪) என்னும் சூத்திர விதி. மன் - பெருமை. (௧௯௨)

௬௪௫. கோள்வயிர நீளருவிக் குன்றிவர்ந்த
செஞ்சுடர்போற் கொலைவேன் மன்னர்
நீள்வயிர வெண்மருப்பி னீலக்
களிற்றின்மே னிரைத்தார் பொங்கத்
தோள்வயிரந் தோன்றத் தொழுவா
ரழுதுநைவார் தொக்கோர் கோடி
வாள்வயிரம் விற்கு மடநோக்கி
யார்கொலோ பெறுவ ரென்பார்.

(இ - ள்.) கொலை வேல் மன்னர் - கொலை வேலேந்திய வேந்தர்கள்; கோள் வயிரம்நீள் அருவிக் குன்று இவர்ந்த செஞ் சுடர்போல் - கோளகையாகிய வயிரமணியையுடைய அருவியைக் கொண்ட குன்றின்மேல் ஏறிய செஞ்ஞாயிறு போல; நீள்வயிர வெண் மருப்பின் நீலக்களிற்றின்மேல் - நீண்ட வயிரப்பூண் இட்ட வெள்ளிய தந்தத்தையுடைய கரிய யானையின்மேல்; நிரைத் தார் பொங்க-நிரையான மாலை பொங்கவும்; தோள்வயிரம் தோன்ற - தோளில் அணிந்த வயிரம் தோன்றவும்; தொழுவார் அழுது நைவார் - (கந்தருவதத்தையைத்) தொழுவாரும் அழுது வருந்துவாருமாய்; தொக்கோர் கோடி - இங்குக் கூடிய மன்னர்கள் கோடியாயிருந்தார்; வாள் வயிரம் விற்கும் மடநோக்கி - வாளின் செற்றத்தை மாற்றும் மடநோக்கியாகிய இவளை; பெறுவார் யார் கொலோ என்பார் - பெறும் நல்வினையுடையோர் யாவரோ என்பார்.

(வி - ம்.) நச்சினார்க்கினியர் நிரைத்தார் என்பதற்கு வாகைத்தார் எனவும், தோள்வயிரம் என்பதற்குத் தோள் வலிமையாலுண்டான புகழ் எனவும் பொருள் கொண்டு,

"மன்னர் குன்றிலே தொழுவார்க்கு இவர்ந்த சுடர்போலே இருந்து அழுது நைவாராய்த் தொக்கு ஒரு கோடியாயிருந்தவர்களில் இம்மட நோக்கியைத் தார்பொங்கத் தோள்வயிரந் தோன்றப் பெறவிருக்கின்ற நல்வினையுடையார் யார் என்பார்" என்று மொழி மாற்றிப் பொருளுரைப்பர்.

கோள்வயிரம் - கோட்பாட்டையுடைய வயிரம். ஆகுபெயராற் கோளகை. பொங்க - மிகுத்துக்காட்ட. அரசர்க்கு மாலை கூறுதல் இயல்பே. அழுது நைவார் என்றது அவலம்; 'இளிவே யிழவே' (தொல். மெய்ப். ரு) என்னுஞ் சூத்திரத்தில், அசைவாவது பழைய தன்மை கெட்டு வேறொருவாறாய் வருந்துதல் ஆதலின், இவரும் அத்தன்மையெய்தி அவலம் உற்றார் என்க. இது தம் அசைவில் தோன்றிய அவலம். ஒருவனென்று துணியலாகாமையிற் பன்மையாற், 'பெறுவார்' என்றார்.

௬௬௬. பைம்பொன் நிமிர்கொடி பாவை
வனப்பென்னுந் தளிரை ஈன்று
செம்பொன் மலர்ந்திளையார் கண்ணென்னுஞ்
சீர்மணிவண் டுழலச் சில்லென்
றம்பொற் சிலம்பரற்ற அன்னம்போல்
மெல்லவே ஒதுங்கி அம்பூஞ்
செம்பொற் புரிசை அடைந்தாள்செந்
தாமரைமேற் றிருவோ டொப்பாள்.

(இ - ள்.) வனப்பு என்னும் தளிரை ஈன்று - அழகென்னும் தளிரை யீன்று; செம்பொன் மலர்ந்து-பொன்னைப் பூத்து; இளையார்கண் என்னும் சீர்மணி வண்டு உழல - இளைஞரின் கண்களாகிய அழகிய கரிய வண்டுகள் உழலும்படி; பைம்பொன் நிமிர்கொடி - புதிய பொன்னுக வளர்ந்ததொரு கொடியையும்; பாவை - பாவையையும்; செந்தாமரைமேல் திருவோடு ஒப்பாள்-செந்தாமரையின்மேல் திருவையும் போன்றவள்; சில் என்று அம்பொன் சிலம்பு அரற்ற - சில்லென அழகிய பொற்சிலம்பு ஒலிக்க; அன்னம்போல் மெல்லவே ஒதுங்கி - அன்னம்போல மெல்லென்று நடந்து; அம்பூ செம்பொன் புரிசை அடைந்தாள்-அழகிய பொலிவுடைய பொன்மதிலை அடைந்தாள்.

(வி - ம்.) ஒடு: எண்ணொடு. செம்பொன்: சுணங்கு. புரிசை: மண்டபத்தின் மதில்.

கொடியையும் பாவையையும் திருமகளையும் ஒப்பவளாகிய காந்தருவ தத்தை ஈன்று மலர்ந்து உழல அரற்ற ஒதுங்கிப் புரிசை அடைந்தாள் என்க.

வனப்பு - பல உறுப்புந் திரண்டவழிப் பெறுவதோர் அழகு. ஒதுங்குதல் - நடத்தல். (கஙச)

௬௬௭. பட்டியன்ற கண்டத் திரைவளைத்துப்
பன்மலர்நன் மாலை நாற்றி
விட்டகலாச் சாந்தி னிலமெழுகி
மென்மலர்கள் சிதறித் தூம
மிட்டிளைய ரேத்த விமையார்
மடமகள்போ லிருந்து நல்யாழ்
தொட்டெழீஇப் பண்ணெறிந்தாள் கின்னரரு
மெய்ம்மறந்து சோர்ந்தா ரன்றே.

(இ - ள்.) பட்டு இயன்ற கண்டம் திரை வளைத்து - பட்டினாற் செய்யப்பட்ட பல நிறத் திரையை வளைத்து; பன்மலர் நன்

மாலை நாற்றி - பல மலர்களால் ஆன அழகிய மாலையைத் தூக்கி; விட்டு அகலாச் சாந்தின் நிலம் மெழுகி - மணம் விட்டு நீங்காத சாந்தினாலே நிலத்தை மெழுகி; மென்மலர்கள் சிதறி - மெல்லிய பூக்களைத் தூவி; தூமம் இட்டு - அகிற் புகையிட்டு; இளையர் ஏத்த - இளமகளிர் புகழ; இமையார் மடமகள்போல் இருந்து - வானவரின் இள்நங்கைபோல் அமர்ந்து; நல்யாழ் தொட்டுப் பண் எழீஇ - நல்ல யாழை யெடுத்துப் பண்ணை யெழுப்பி; எறிந்தாள் - நரம்பைத் தெறித்தாள்; கின்னரரும் மெய்ம்மறந்து சோர்ந்தார் - (அப்பொழுது) கின்னரரும் தம்மை மறந்து சோர்ந்தனர்.

(வி - ம்.) தூமம்: அகிலுக்கு ஆயினதால் காரிய வாகுபெயர். கண்டத்திரை - கண்டமாகிய திரை யாழ் மண்டபத்தே யிருந்து அவை வணக்கமாகப் பாடுகின்றாள். இஃது அவைப் பரிசாரம் எனவும்படும்.

பட்டியன்ற - பட்டினாலியற்றப்பட்ட. கண்டத்திரை - பல நிறத்தால் கூறுபட்டதிரை (முல்லைப். ௪௪-நச்.) நாற்றுதல் - தூங்கவிடுதல். விட்டகலா என்புழித் தகுதியால் மணம் என வருவித்து ஒட்டுக. கின்னரர் - தேவருள் ஒருவகையினர். (௧௬௫)

வேறு

௬௪௮. புன்காஞ்சித் தாதுதன் புறம்புதையக் கிளியெனக்கண்
டன்புகோண் மடப்பெடை யலமந்தாங் ககல்வதனை
யென்புருகு குரலழைஇ யிருஞ்சிறகர் குலைத்துகுத்துத்
தன்பெடையைக் குயிறழுவத் தலைவந்த திளவேனில்.

(இ - ள்.) புன் காஞ்சித் தாது தன் புறம் புதைய - புல்லிய காஞ்சித் தாதினில் தன் முதுகு மறைதலாலே; கண்டு கிளி என - பார்த்து அதனைக் கிளியென் றெண்ணி; அன்புகொள் மடப் பெடை ஆங்கு அலமந்து அகல்வதனை - காதல் கொண்ட இளம் பெடை அங்கிருந்து மனஞ்சுழலச் செல்வதை; என்பு உருகு குரல் அழைஇ - என்பும் உருகும் தன் குரலாலே அழைத்து; இருஞ் சிறகர் குலைத்து உகுத்து - கரிய சிறகை அசைத்துத் தாதை உதிர்த்து; தன் பெடையைக் குயில் தழுவ - தன் பெட்டையைக் குயில் தழுவுமாறு; இளவேனில் தலைவந்தது - இளவேனில் அவ்விடத்து வந்தது. (௧௬௬)

௬௪௯. தண்காஞ்சித் தாதாடித் தன்னிறங் கரந்ததனைக்
கண்டாறு மடப்பெடை கிளியெனப்போய்க் கையகல
நண்டுவி யிளஞ்சேவ னேக்கோடு விளிபயிற்றித்
தன்சிறகாற் பெடைதழுவத் தலைவந்த திளவேனில்.

(இ - ள்.) தண் காஞ்சித் தாது ஆடி - குளிர்ந்த காஞ்சித் தாதினைப் பூசியதால் ; தன் நிறம் கரந்ததனை - தன் கரிய நிறம் மறைந்ததை ; கண்டு ஆனு மடப்பெடை - பார்த்துத் தெளிவடையாத இளம்பெடை ; கிளியெனப் போய்க் கைஅகல - கிளியெனச் சென்று கைவிட்டுப் போக ; நுண் தூவி இளஞ்சேவல் - நுண்ணிய தூவியையுடைய இளஞ்சேவல் ; நோக்கோடு விளி பயிற்றி - குறிப்பான நோக்குடன் பலகால் அழைத்து ; தன் சிறகால் பெடை தழுவ - தன் சிறகினுற் பெடையைத் தழுவ, இளவேனில் தலைவந்தது - இளவேனில் அங்கே வந்தது.

(வி - ம்.) கரிய நிறமுடைய குயிற்சேவல் காஞ்சித் தாதாடியதனால் அதன் பெடைக்குயில் கிளி என்று நினைத்து அகல அச்சேவல் தன் இனிய குரலாலே அதனை அழைத்துத் தழுவிற்று என்க. விளிபயிற்றி - பலகாலும் அழைத்து. தலை - இடம். (௩௫௭)

௩௫௦. குறுத்தாட் குயிற்சேவல் கொழுங்காஞ்சித் தாதாடி
வெறுத்தாங்கே மடப்பெடை விழைவகன்று நடப்பதனை
மறுத்தாங்கே சிறகுளர்ந்து மகிழ்வாறுக் கொளத்தேற்றி
யுறுப்பினு லடிபணியத் தலைவந்த திளவேனில்.

(இ - ள்.) குறுத்தாள் குயில் சேவல் கொழுங் காஞ்சித் தாது ஆடி - குறுகிய கால்களையுடைய ஆண் குயில் கொழுவிய காஞ்சித் தாதிலே முழுகியதால்; மடப்பெடை ஆங்கே வெறுத்து விழைவு அகன்று நடப்பதனை - இளம்பெடை (கிளியென்று) அப்பொழுதே வெறுத்து வேட்கை நீங்கிச் செல்வதை ; ஆங்கே மறுத்துச் சிறகு உளர்ந்து - அவ்வாறு செல்வதைத் தவிர்த்துச் சிறகினை உளர்ந்து ; மகிழ்வு ஆறுக் கொளத் தேற்றி - மகிழ்ச்சி அமையாமற் கொள்ளுமாறு தெளிவித்து ; உறுப்பினுல் அடி பணிய - தலையினுல் வணங்கும்படி ; இளவேனில் தலைவந்தது- இளவேனில் அங்கே வந்தது.

(வி - ம்.) பங்குனியிலும் சிறிது இளவேனில் தோன்றுதலின் இது கூறினார். வேட்கை விளையும் பருவத்தாளாகலின் இது கூறினார்.

இம் மூன்றும் (௩௪௮-௩௫௦) ஒரு பொருண்மேல் மூன்றடுக்கித் தாழம் பட்ட ஓசை பெற்று வந்த கொச்சகவொருபோகு. ஒருபோகென்பது பண்புத் தொகைப் புறத்தன்மொழி. இது, 'தரவின்றாகி' (தொல். செய். ௧௪௯) என்னுஞ் சூத்திர விதி. இசை நூலோர் முகம், நிலை, முரி என்பனவற்றில் நிலை யென்பர் இதனை. [இனி இசை நூலாரும் இத் தரவு முதலாயினவற்றை முகம், நிலை, கொச்சகம், முரி என வேண்டுப. கூத்த நூலார் கொச்சகம் உள்வழி. அதனை நிலைபெற அடக்கி முகம், நிலை, முரி யென மூன்றாக வேண்டுப. (தொல். செய். ௧௩௨. பேர்)] ; 'இனி, இசைத் தமிழில் வருங்கால் முகநிலை, கொச்சகம், முரி என்ப ஒருசாராசிரியர்' (சிலப். ௬ : ௩௫. அடியார்.)

௬௪௮-முதல் இச் செய்யுள் முடியவுள்ள மூன்று செய்யுளுள்ளும், காந்தருவதத்தையின் கணவன் தனக்குரிய விச்சாதர வடிவத்தில் தோன்றாமல் மானிட வடிவத்தில் இம் மண்ணுலகத்தே தோன்றினாகை அவனை அறியாது இராசமாபுரத்தே நாடியபொழுது மானிட வடிவின் மறைந்த அக் காதலன் தன் மிடற்றுப் பாடலை யாழோடு பாடித் தன்னை உணர்த்தி அவளைத் தழுவினான் என்னும் ஒரு பொருள் தோன்ற அமைத்திருத்தலை நுண்ணுணர்வாற் கண்டு கொள்க. (௧௫௮)

வேறு

௬௫௧. தளையவிழ் கோதை பாடித்
தானமர்ந் திருப்பத் தோழி
விளைமதுக் கண்ணி வீணா
பதியெனும் பேடி வேற்க
ணிளையவள் பாட வீர
ரேழால்வகை தொடங்க லன்றேல்
வளையவ ளேழாலின் மைந்தர்
பாடுக வல்லை யென்றாள்.

(இ - ள்.) தளை அவிழ் கோதை பாடி - முறுக்கலர்ந்த பூங் கோதையாள் அவை வணக்கம் பாடி; தான் அமர்ந்து இருப்ப - யாழ் வாசிக்கத் தான் சமைந்திருக்கும்போது; தோழி விளை மதுக்கண்ணி வீணாபதி எனும் பேடி - அவள் தோழியாகிய விளையுந் தேனையுடைய கண்ணியாள் வீணாபதி என்னும் பேடி; வேல்கண் இளையவள் பாட வீரர் எழால் வகை தொடங்கல் - வேற்கண்ணாள் தத்தை பாடும்போது, அதற்கேற்ப வீரர்கள் யாழின் கூறுபாட்டை வாசிக்கத் தொடங்குக; அன்றேல் வளையவள் எழாலின் மைந்தர் வல்லை பாடுக என்றாள் - அதுவே யன்றி, வளையணிந்த தத்தையின் யாழ் வாசிப்பைபோல மைந்தர் விரைந்து பாடுக என்றுரைத்தாள்.

(வி - ம்.) தொடங்கல்: அல்லீற்று உடன்பாட்டு வியங்கோள். 'இற்றெனக் கிளத்தல்' (தொல். கிளவி. ௧௧) போல. இதற்கு விடை கூற இயலாத வேந்தர் வீணாபதியின் தோற்றத்தைக் கண்டு அவளுடனே நகையாடுதலை அடுத்த செய்யுள் காட்டும்.

கோதை - தத்தை. இளையவள் - தத்தை. வளையவள் - தத்தை. எழால் வகை - யாழின் கூறுபாடு.

"இதற்கு உத்தரங் கூறலாற்றாது அவளுடனே நகையாடுகின்றார்"

எனவரும் நச்சினார்க்கினியர் நுண்ணுரை இன்பம் பெரிதும் உடைத்து. (௧௫௯)

வேறு

௬௫௨. வேயே திரண்மென்றோள் வில்லே கொடும்புருவம்
வாயே வளர்பவளம் மாந்தளிரே மாமேனி
நோயே முலைசுமப்ப தென்றார்க் கருகிருந்தா
ரேயே யிவளொருத்தி பேடியோ வென்று
ரெரிமணிப்பூண் மேகலையாள் பேடியோ வென்றார்

(இ - ள்.) திரள் மென்தோள் வேயே! திரண்ட மெல்லிய தோள் மூங்கிலே!; கொடும் புருவம் வில்லே! - வளைந்த புருவம் வில்லே!; வாய்வளர் பவளமே! - வாய் வளரும் பவளமே!; மாமேனி மாந்தளிரே! - மாமை நிறமுடைய மேனி மாந்தளிரே!; (எனினும், இவட்கு முலை கண்டிலேம்) முலை சுமப்பது நோயே?- (இவளுக்கு) முலை சுமத்தல் நோயோ?; என்றார்க்கு - என்று ஐய முற்று வினவியவர்க்கு; அருகிருந்தார் - அருகிலிருந்தோர் (சிந்தனை செய்து) ஏ! ஏ!! இவள் ஒருத்தி பேடியோ? என்றார் - என்னே! என்னே!! இவள் ஒருத்தி பேடியோ என்று ஐயமுற்றார்; எரிமணிப் பூண் மேகலையாள் பேடியோ?' என்றார் - (அது கேட்டுச் சிலர்) ஒளிரும் மணிப்பூண் அணிந்த, மேகலையினுள் ஆகிய தத்தையுடன் வந்த பேடியோ? என்றனர்.

(வி - ம்.) ஏஏ: இசை நிறையுமாம். (௧௬௦)

௬௫௩. பலிகொண்டு பேராத பாச மிவள்கண்
ணொலிகொண்ட டுயிருண்ணுங் கூற்றமென் றெல்லே
கலிகொண்டு தேவர் முலைகரந்து வைத்தா
ரிலைகொண்ட பூணினீ ரென்றெழினி சேர்ந்தா
ளிலங்குபோற் கிண்கிணியா ணக்கெழினி சேர்ந்தாள்.

(இ - ள்.) இலைகொண்ட பூணினீர் - இலைவடிவங்கொண்ட அணிகலனுடையீர்!; இவள்கண் பலிகொண்டு பேராத பாசம் - இவள் கண்கள் உயிர்ப்பலி கொள்வதால் தன் கொலைத் தொழிலி னின்றும் மீளாத காலபாசம்; எல்லே ஒலிகொண்டு உயிர் உண்ணும் கூற்றம் - (இவளோ) வெளியே தழைத்துச் சென்று உயிரைப் பருகும் கூற்றம்; என்று கலிகொண்டு தேவர் முலை கரந்து வைத்தார் - என்ற ஆரவாரத்தை உட்கொண்டு பிரமனார் எனக்கு முலையை மறைத்து வைத்தார்; என்று எழினி சேர்ந் தாள் - என்று வீணாபதி அவர்கட்கு விடைகூறித் திரையிலே மறைந்தாள்; இலங்கு பொன் கிண்கிணியாள் நக்கு எழினி சேர்ந்தாள் - (அதுகேட்ட) விளங்கும் பொற்கிண்கிணியுடைய தத்தை நகைத்துத் தான் இருந்த இடத்தைவிட்டுத் திரை மறைவிலே அடைந்தாள்.

(வி - ம்.) நச்சினார்க்கினியர் 'கலிகொண்டு' என்பதனை, 'இலங்கு பொற் கிண்கிணியாள்' என்பதன் முன்கூட்டிப் பொருளுரைப்பர்.

கொண்டு - கொள்ள: எச்சத்திரிபு. ஒலி - தழைத்தல். 'ஒலிதெங்கு' (பதிற். கஅ) போல. எல்லே - வெளியே. கலி - ஆரவாரம்.

"கடாமுங் குருதியுங் கால்வீழ்ந்த பச்சைப்-படாமும் புலித்தோலும் சாத்தும் பரமன் - இடாமுண்ட ஏற்றியான் எஞ்ஞான்றுங் கங்கை - விடாமுண்ட நீர்ச்சடையான் வெண்ணீறணிந்தோன்-மெய்யுறுநோயில்லை வேறோர் பிறப்பில்லை-ஐயுறு நெஞ்சில்லை ஆகாத தொன்றில்லை." - என நான்கடிச் செய்யுள் முடியவும் ஈற்றடி இரண்டு மிக்கு வேறுபட வந்த கொச்சகம் என்று கூறி, ஒழிந்தனவும் பிற வேறுபாட்டான் வந்தனவுங் காண்க" [தொல் - செய் - கசூக நச் - பேர். மேற்] என்றமையின் இச் செய்யுள் (௬௫௨ - ௩) இரண்டும் ஓரோவோரடி மிக்கு வேறுபட வந்த கொச்சக வொருபோகாம். (௧௬௧)

வேறு

௬௫௪. நுண்டுகி லகலல்கு னொசித்த வெம்முலை
உண்டிவ ணுசுப்பென வுரைப்பி னல்லது
கண்டறி கிலாவிடைக் காம வல்லியாழ்
கொண்டவர் குழாத்திடைக் கொடியி னொல்கினாள்.

(இ - ள்.) நுண் துகில் அகல் அல்குல் - நுண்ணிய துகிலணிந்த அகன்ற அல்குலும்; நொசித்த வெம் முலை - (பிறரை) வருத்திய வெம்முலைகளும்; இவள் நுசுப்பு என உரைப்பின் அல்லது - இவட்கு இடையுண்டெனக் கூறுமதுவல்லது; கண்டு அறிகிலா இடைக் காமவல்லி - கண்ணாற் கண்டறிய முடியாத இடையையுடைய தத்தை; யாழ் கொண்டு அவர் குழாத்திடைக் கொடியின் ஒல்கினாள் - யாழை எடுத்துக்கொண்டு தோழியர் குழுவினிடையே கொடியைப் போல ஒதுங்கிச் சென்றாள்.

(வி - ம்.) இதனால், திரையருகில் நின்றும் யாழ்வாசிக்கும் இடத்திற்குச் செல்கின்றாளென்றார்.

இவள் இடை கருதலளவையால் உண்டென உணரப்படுவதல்லது காட்சியளவையாற் காணப்படுவதன்றென்பது கருத்து. (௧௬௨)

௬௫௫. பளிக்கொளி மணிச்சுவ ரெழினி பையவே
கிளிச்சொலி னிளையவர் நீக்கக் கிண்கிணி
யொளிக்குமின் றடவ ருயிர்க ளென்னநோந்
தளித்தவை யிரங்கச்சென் றணையி லேறினாள்.

(இ - ள்.) பளிக்கு ஒளி மணிச்சுவர் எழினி - பளிங்காகிய ஒளிமணியாற் செய்த சுவரை மறைய வீழ்த்த திரையை; கிளிச் சொலின் இளையவர் பையவே நீக்க - கிளி மொழியினராகிய

மங்கையர் மெல்லெனவே நீக்காநிற்க; இன்று ஆடவர் உயிர்கள் ஒளிக்கும் என்ன நொந்து - இன்று ஆடவர்களின் உயிர்கள் மறையும் என்ன வருந்தி; கிண்கிணி அவை அளித்து இரங்கச் சென்று - கிண்கிணிகளாகிய அவை அருள் செய்து இரங்கப் போய்; அணையில் ஏறினாள் - அணியிலே அமர்ந்தாள்.

(வி - ம்.) பளிங்குமணி ஒளிமணி எனத் தனித்தனிக் கூட்டுக. பளிங்கு மணி என்னும் அல்வழிப் புணர்ச்சியின் மென்றொடர் வன்றொடராயது இலேசானே கொள்க; குரக்குமனம் எற்புடம்பு என்பனபோல. எழினி - திரை. (௧௬௩)

௬௱௬௬. உறைகழித் திலகுவா ளுடற்றுங் கண்ணினாண்
மறையொளி மணிச்சுவ ரிடையிட் டித்தலை
யிறைவளை யாழ்தழீஇ யிருப்ப வத்தலைக்
கறைகெழு வேலினார் கண்ணி தீந்தவே.

(இ - ள்.) உறைகழித்து இலங்கு வாள் உடற்றும் கண்ணினாள் - உறையிலிருந்து நீக்கி விளங்கும் வாளை வருத்தும் கண்ணினள்; மறை ஒளி மணிச் சுவர் இடையிட்டு - தன்னை மறைக்கச் சமைத்த ஒளியுறும் பளிக்குச் சுவரை நடுவேயிட்டு; இத்தலை இறைவளை யாழ் தழீஇ இருப்ப - உட்பக்கத்தே வளைந்த யாழைக் கையினால் தழுவியிருக்கும்போது; அத்தலைக் கறை கெழு வேலினார் கண்ணி தீந்த - புறத்தே யிருந்த குருதிக்கறை பொருந்திய வேல் மன்னரின் கண்ணிகள் காமத்தாலே கருகின.

(வி - ம்.) பளிங்கிற்கு இரண்டு புறத்தோரும் தோன்றுவர். இறை-இரேகை, ஆகுபெயர். 'பதுமம் வீரம் சிங்கம் பிரமரம் - பாத விலக்கண மஞ்சானு மண்டிதம் - விதியுறு பங்கோற் பவஞ்சுக மண்டிலம்-மேலோர் விரும்பும் மெய்யாசனமே'. இவ்வொன்பதினும் இவள் பதுமா சனத்தே யிருந்தாள்; 'நேரிருந்து காலடிகள் மாற்றிக் குதிமேலாப் - பாரிருத்தல் பத்மாசனம்' 'ஒன்பான் விருத்தியுள் தலைக்கண் விருத்தி - நண்பால் அமைந்த இருக்கையள்' (சிலப். அ: ௨௫-௬) என்றார் பிறரும்.

இருப்பவே இந்நிலையர் ஆயினர்; இனி அவள் பாடுங்கால் என்னாவர் என்றிரங்கியபடியாம். (௧௬௪)

௬௱௬௭. சிலைத்தொழிற் சிறுநுதற் றெய்வப் பாவைபோற்
கலைத்தொழிற் படவெழீஇப் பாடி னாள்கனிந்
திலைப்பொழிற் குரங்கின வின்ற தூண்டளிர்
நிலத்திடைப் பறவைமெய்ம் மறந்து வீழ்ந்தவே.

(இ - ள்.) சிலைத்தொழில் சிறுநுதல் - ஏறிட்ட வில் போலும் சிறுநுதலாள்; தெய்வப் பாவைபோல் - தெய்வப் பாவைபோல் இருந்து; கலைத் தொழில்பட எழீஇப் பாடினாள் - இசைக் கலைத் தொழில் பொருந்த யாழை வாசித்துக்

கொண்டு அதற்குத்தகப் பாடினள்; இலைப்பொழில் கனிந்து குரங்கின - இலையுறு பொழில்கள் உருகி வளைந்தன; தூண் தளிர் ஈன்ற - தூண்கள் தளிரை யீன்றன; பறவை மெய்ம்மறந்து நிலத்திடை வீழ்ந்த - கின்னர மிதுனம் என்னும் பறவைகள் தம்மை மறந்து நிலத்திடை வீழ்ந்தன.

(வி - ம்.) கின்னர மிதுனங்கள் - ஒன்றையொன்று பிரியாத, இசையறிவிற் சிறந்த ஆணும் பெண்ணுமான இரட்டைப் பறவைகள்.

தெய்வப் பாவை: தெய்வத்தாற் செய்த கொல்லிப்பாவை. 'பூதம் புணர்த்த புதிதியல் பாவை' (நற். ௧௯௨) என்றார் பிறரும். கலைத் தொழிலாவன: பண்ணல் பரிவட்டணை ஆராய்தல் தைவரல் - கண்ணிய செலவு விளையாட்டுக் கையூழ் - நண்ணிய குறும்போக்கு' (சிலப். ௭: ௧) என்ற எட்டும். பண்ணல்: பாட நினைத்த பண்ணுக்கு இணை கிளை பகை நட்பான நரம்புகள் பெயருந்தன்மை மாத்திரை யறிந்து வீக்குதல். பரிவட்டணை: அவ் வீக்கின நரம்பை அகவிரலாலும் புறவிரலாலும் கரணஞ்செய்து தடவிப் பார்த்தல். ஆராய்தல்: ஆரோகண அவரோகண வகையால் இசையைத் தெரிவது. தைவரல்: அநுசுருதி யேற்றுதல். செலவு: ஆளத்தியிலே நிரம்பப்பாடுதல். விளையாட்டு: பாட நினைந்த வண்ணத்திற் சந்தத்தை விடுதல். கையூழ்: வண்ணத்திற் செய்த பாடல் எல்லாம் இன்பமாகப் பாடுதல். குறும்போக்கு: குடகச் செலவும் துள்ளற் செலவும் பாடுதல். (௧௫௫)

வேறு

௬௫௮. கருங்கொடிப் புருவ மேறா
கயனெடுங் கண்ணு மாடா
வருங்கடி மிடறும் விம்மா
தணிமணி யெயிறுந் தோன்றா
விருங்கடற் பவளச் செவ்வாய்
திறந்திவள் பாடி னாளோ
நரம்பொடு வீணை நாவி
னடந்ததோ வென்று நைந்தார்.

(இ - ள்.) கருங்கொடிப் புருவம் ஏறா - கரிய ஒழுங்கான புருவங்கள் நெற்றியில் ஏறா; கயல்நெடுங் கண்ணும் ஆடா - கயலனைய நெடிய கண்களும் ஆடா; அருங்கடி மிடறும் விம்மாது - அரிய விளக்கம் பொருந்திய மிடறும் வீங்காது; அணிமணி எயிறும் தோன்றா - அழகிய முத்தனைய பற்களும் தெரியா; இவள் இருங்கடல் பவளச் செவ்வாய் திறந்து பாடினளோ? - இவள் பெரிய கடலில் உள்ள பவளம் அனைய தன் செவ்வாயைத் திறந்து பாடினளோ?; நரம்பொடு வீணை நாவின் நவின்றதோ? - அன்றி, யாழ்தான் தனக்குரிய நரம்புடன் சாரீர வீணைக்குரிய

நாவாலும் பாடிற்றோ?; என்று நைந்தார் - என்று கூறி அரசர் முதலானோர் வருந்தினர்.

(வி - ம்.) இது பதினொரு வகையிலும் உள்ளாளப் பாட்டுப் பாடுங்கால் இடைபிங்கலையை இயக்கம் அறுத்து, மூலாதாரம் முதல் பிரமரந்திரம் அளவும் இயக்கம் ஆக்கி, நடுவு தொழில்வரப் பாடுதல் என்றறிக;

"உள்ளாளம் விந்துவுடன் நாதம் ஒலியுருட்டுத்
தள்ளாத தூக்கெடுத்தல் தான்படுத்தல்—மெள்ளக்
கருதி நலிதல்கம் பித்தல் குடிலம்
ஒருபதின் மேலென் றுரை."

"கண்ணிமையா கண்டம் துடியா கொடிறசையா
பண்ணளவும் வாய்தோன்றா பல்தெரியா—எண்ணிலிவை
கள்ளார் நறுந்தெரியற் கைதவனே! கந்தருவர்
உள்ளாளப் பாடல் உணர்."

இசை மரபு. (௧௬௬)

வேறு

௬௫௯. இசைத்திறத் தனங்கனே யனைய நீரினார்
வசைத்திற மிலாதவர் வான்போன் யாழெழீஇ
விசைத்தவர் பாடலின் வெருவிப் புள்ளேலா
மசிப்பபோன் றிருவிசும் படைந்த வென்பவே.

(இ - ள்.) இசைத் திறத்து அனங்கனே அனைய நீரினார் - இசையின் நெறியிலே காமனே யனைய தன்மையராகிய; வசைத் திறம் இலாதவர் - வசை வகையறியாதவர்; வான் பொன் யாழ் எழீஇ - உயர்ந்த பொன் யாழை வாசித்து; அவர் விசைத்துப் பாடலின் - அவரும் உச்சத்தே பாடுதலின்; புள் எலாம் வெருவி - (முன் மெய்ம்மறந்து வீழ்ந்த) பறவைகள் எல்லாம் வெருவி; அசிப்ப போன்று இருவிசும்பு அடைந்த - அவரை நகைப்பன போலப் பெரிய வானை அடைந்தன.

(வி - ம்.) என்ப, ஏ: அசைகள். அசிப்ப: ஹஸிப்ப என்னும் வடசொல் திரிபு.

அனங்கனேயனைய நீரினார் என்றது அரசர் மக்களை. குலமொத்தலின் அரசரை முற்கூறினர். இன்பம் கெழுமப் பாடுதலறியாது தாம் அவளை வெல்லுதற் பொருட்டு விசைத்துப் பாடினர் என அவர்தம் மாட்டாமையையும் நோக்கத்தினையும் ஒருங்கே உணர்த்துவார் விசைத்தவர் பாட என்றார். அசித்தல் - பரிகசித்தல். (௧௬௭)

௬௬௦. மாதர்யாழ் தடவர வந்த மைந்தர்கைக்
கீதத்தான் மீண்டன கேள்விக் கின்னரம்
போதரப் பாடினாள் புகுந்த போயின
தாதலர் தாரினார் தாங்கள் பாடவே.

(இ - ள்.) மாதர் யாழ் தடவர வந்த கேள்விக் கின்னரம் - தத்தை யாழை வாசித்தல் கேட்டு வந்தனவாகிய அறிவுடைய கின்னர மிதுனங்கள்; மைந்தர் கைக்கீதத்தான் மீண்டன - ஆடவரின் யாழிசையாலே திரும்பிப் போயின; போதரப் பாடினாள் புகுந்த - அவை உள்ளே வருமாறு பாடினாள், அவைகளும் புகுந்தன; தாது அலர் தாரினார் தாங்கள் பாட போயின- தாது மலருந் தாரினார் தம் குரலாற் பாடலால் மீண்டும் போயின.

(வி - ம்.) தேவர் தத்தை வென்றமைக்கும் அரசர் தோற்றமைக்கும் இசையுணர்வு சான்ற கின்னரங்களையே சான்றாகக் கொண்டுணர்த்துதல் மிகவும் இனிமை பயக்கின்றது. மாதர் - தத்தை. தடவர - தடவ; வருட என்றவாறு. யாழ்வாசினை என்பது தோன்ற கைக்கீதம் என்றார். கின்னரம் இசையுணர்வு மிக்கன என்பதுணர்த்துவார் கேள்விக் கின்னரம் என்றார். கேள்வி - இசையுணர்ச்சிக்கு ஆகுபெயர். (௬௬அ)

௬௬௧. சுரும்பெழுந் திருந்துணுந் தோங்கல் வார்குழ
லரும்பெற லவட்கிசை யரசர் தோற்றபின்
னரம்புறு தேள்விளி நவின்ற நான்மறை
வரம்பெறு நெறியவர் மலைதன் மேயினார்.

(இ - ள்.) சுரும்பு எழுந்திருந்து உணும் தொங்கல் வார் குழல்-வண்டுகள் எழுந்திருந்து தேனைப் பருகும் மாலையையுடைய நீண்ட கூந்தலையுடைய; அரும்பெறலவட்கு - பெறுதற்கரிய தத்தைக்கு; அரசர் இசை தோற்றபின் - அரசர்கள் இசையைத் தோற்ற பின்னர்; நரம்பொடு தெள்விளி நவின்ற - நரம்பொடு சேர்ந்த தெளிந்த இசையிலே பழகிய; நான்மறை வரம்பெறு நெறியவர் மலைதல் மேயினார் - நான்மறை யோதுதலாகிய மேன்மையைப் பெற்ற அந்தணர் பொருதலைத் தொடங்கினார்.

(வி - ம்.) வண்டுகள் தேனை எழுந்திருந்துண்ணுதல், 'நறுந்தாதுதும் தும்பி - கையாடு வட்டிற் றோன்றும்' (அகநா. ௧0அ) என்னுமிடத்துங் காண்க. 'சுரும்பெறிந் திருந்து' என்றும் பாடம். (௬௬௧)

வேறு

௬௬௨. திருமலர்க் கமலத் தங்கட்
டேனின முரல்வ தோப்ப
விரிமலர்க் கோதை பாட
வேழால்வகை வீரர் தோற்றார்

எரிமலர்ப் பவளச் செவ்வா
யின்னரம் புளர மைந்தர்
புரிநரம் பிசைகோள் பாட
லுடைந்தனர் பொன்ன ளுட்கே.

(இ - ள்.) திருமலர்க் கமலத்து அங்கண் தேனினம் முரல்வது ஒப்ப - அழகிய தாமரை மலரிலே தேனினம் பாடுந் தன்மைபோல ; விரிமலர்க் கோதை பாட - மலர்ந்த பூங்கோதை யாள் பாட ; எழால் வகை வீரர் தோற்ருர் - யாழ் வாசித்தலில் அந்தணர் தோற்றனர் ; எரிமலர்ப் பவளச் செவ்வாய் இன்நரம்பு உளர - முருக்கிதழையும் பவளத்தையும் போன்ற செவ்வாயினுள் இனிய யாழ் நரம்பைத் தடவ ; புரிநரம்பு இசைகொள் பாடல் மைந்தர் பொன்னளுட்கு உடைந்தனர்-அந் நரம்பின் இசையைக் கொண்ட கண்டப் பாடலில் அந்தணர் திருவனுளுக்குத் தோற் றனர்.

(வி - ம்.) 'அந்தணுளர்க் கரசு வரைவின்றே' (தொல். மரபு. அஉ) என்றதனுல், 'வீரர்' என்ருர்.

வீரர் என்றது இகழ்ச்சி. பாடல் - மிடற்றுப் பாடல். பொன்ன ளுள் - தத்தை. அரசர் குலத்தினும் உயர்ந்தோராதல் பற்றி ஒத்த குலத்தரசருள் ஒருவரேனும் வெல்லாமை கண்டபின் அந்தணரைப் பாட விடுத்தனர் என்று கருதுக. (கஎ0)

சுசுரு. வாலரக் கெறிந்த காந்தண்
மணியரும் பனைய வாகிக்
கோல்பொரச் சிவந்த கோலக்
குவிவிரன் மடந்தை வீணை
நூல்பொரப் புகுந்த நுண்ணூல்
வணிகருந் தோலைந்து மாதோ
கால்பொரக் கரிந்த காமர்
பங்கயப் பழன மொத்தார்.

(இ - ள்.) வால் அரக்கு எறிந்த காந்தள் மணி அரும்பு அனைய ஆகி - தூய அரக்கை ஊட்டின, காந்தளின் அழகிய அரும்பைப் போன்றனவாகி ; கோல் பொரச் சிவந்த - (மேலும்) நரம்பைத் தடவுதலாலே சிவந்த ; கோலக் குவிவிரல் மடந்தை வீணை - அழகிய குவிந்த விரலையுடைய தத்தையின் வீணைப் போருக்கு ; நூல் பொரப் புகுந்த நுண் நூல் வணிகரும் தொலைந்து - இசை நூலோடே வாசிக்கத் தொடங்கிய நுண்ணிய பூணு நூலையுடைய வணிகரும் தோற்று ; கால் பொரக் கரிந்த

காமர் பங்கயப் பழனம் ஒத்தார் - வாடைக் காற்றுப் பொருத லாலே கருகிய அழகிய தாமரைப் பழனத்தைப் போன்றார்.

(வி - ம்.) வாலரக்கு என்றது சாதிலிங்கத்தை. நூல் - இசை நூல். நுண்ணூல் என்றது பூணூலை. பூணூல் பூண்பதில் இவர் வல்லுநரே ஆயினும் இசை நூலில் இவர் தத்தையை வெல்வதெங்ஙனம் என்பார் நுண்ணூல் வணிகரும் தொலைந்துபோனார் என்றார் (௩௭௩)

௬௬௪. தேனுயர் மகரவீணைத் தீஞ்சுவை யிவளைவெல்வான்
வானுயர் மதுகை வாட்டும் வார்சிலைக் காமனாகு
மூனுயர் நுதிகோள்வேலீ ரொழிகவீங் கில்லையென்றான்
கானுய ரலங்கன்மாலைக் கட்டியங் கார னன்றே.

(இ - ள்.) கான் உயர் அலங்கல் மாலைக் கட்டியங்காரன் - மணம் மிகுந்த அலங்கலாகிய மாலையை உடைய கட்டியங் காரன் என்பவன்; தேன்உயர் மகர வீணைத் தீஞ்சுவை இவளை வெல்வான் - இனிமையிலே மேம்பட்ட மகர வீணையின் இன்சுவையாலே இவளை வெல்கிறவன்; வான் உயர் மதுகை வாட்டும் வார்சிலைக் காமன் ஆகும் - வானவரின் உயர்ந்த அறிவைக் கெடுக்கின்ற நீண்ட வில்லையுடைய காமன் ஆவான்; ஈங்கு இல்லை - இங்கே யில்லை; (ஆகையால்) ஊன் உயர் நுதிகொள் வேலீர் - ஊனைக் கொண்டுயர்ந்த நுனியையுடைய வேலினீர்!; ஒழிக என்றான் - (இவளோடு பொருவதை) விடுக என்றுரைத் தான்.

(வி - ம்.) தேனுயர் வார்சிலை எனக் கூட்டுவர் நச்சினார்க்கினியர்.

இதன்கண் கட்டியங்காரன் தத்தையை அரசருள் எவரேனும் வென்று கைக்கொள்ளுவரோ என்று அஞ்சிக் கிடந்து ஒருவரும் வெல்லாமையுணர்ந்த பின் தன்னுள்ளே மகிழ்ந்து கூறும் அவன் மனநிலை தெற்றெனப் புலப்படும்படி தேவர் புலப்படுத்தியிருத்தல் நுண்ணிதின் உணர்க. "எல்லோருஞ் செத்தால் வாழ்ந்தது போலே" என்பதொரு பழமொழி. (௩௭௨)

௬௬௫. மறுமுயற் கிவர்ந்த வேக
மாசுண மடையப் பட்ட
நிறைமதி போன்று மன்னர்
ஒளிகுறைந் திருகி நைய
வறுபகல் கழிந்த பின்றை
யங்நகர்க் காதி நாய்கன்
சிறுவனோர் சிங்க வேற்றை
சீவக சாமி யென்பான்,

(இ - ள்.) முயற்கு மறு இவர்ந்த - முயலுக்காகத் தன்னிடத்தே மறுப்பரந்த; வேகம் மாசுணம் அடையப்பட்ட நிறை மதி போன்று - நஞ்சின் வேகத்தை இராகுவினால் அடைந்து ஒளி குன்றிய முழுமதிபோல; மன்னர் ஒளி குறைந்து உருகி நைய - அரசர்கள் ஒளிகுன்றி உளமுருகி வருந்த; அறுபகல் கழிந்த பின்றை - ஆறு நாட்கள் சென்ற பிறகு; அந் நகர்க்கு ஆதி நாய்கன் சிறுவன் - அந் நகரிலே முதன்மை பெற்ற வணிகன் மகன்; ஓர் சிங்க ஏற்றை சீவகசாமி யென்பான் - ஒப்பற்ற ஆண் சிங்கம் போன்ற சீவகசாமி என்பவன்.

(வி - ம்.) ஆறுநாள்: ஒரு மரபு. இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.

இதன்கண் இக் காப்பியத்தலைவனாகிய சீவகசாமியை ஏதிலான் போல வைத்துத் தேவர் "அந்நகர்க்கு ஆதிநாய்கன் சிறுவன் ஓர் சிங்க வேற்றை சீவகசாமி என்பான்" எனக் கூறியது இதுகாறும் காந்தருவ தத்தையின்பாற் சென்றிருந்த நம் நெஞ்சத்தை அச் சீவகன்பாலிழுத்து வந்து அவனுடைய வரலாற்றினையும் பெருமையையும் நம்மை மீண்டும் ஒருமுறை நினைக்கும்படியும் அவனுக்கு இரங்கும்படியும் செய்துவிடுகின்றது. இத்தகைய செய்கைத் திறம் இவரனைய தெய்வப்புலவர்பால் மட்டுமே காணப்படும். (௬௭௩)

௬௬௬. தம்பியுந் தோழன் மாருந் தானுமற் றெண்ணிச் சூழ்ந்து
வெம்பிய வீணைப் போருட் செல்குவம் யாமு முன்னே
தும்பறப் புத்தி சேன சொல்லிது குரவற் கென்ன
கந்துகற் கவனுஞ் சொன்ன னவனிது விளம்பி னானே.

(இ - ள்.) தம்பியும் தோழன்மாரும் தானும் எண்ணி - தன் தம்பியும் தோழர்களும் தானுமாக இருந்து ஆராய்ந்து; சூழ்ந்து வெம்பிய வீணைப் போருள் யாமும் முன்னே செல்குவம் - அரசர்கள் ஆராய்ந்து மாறுபட்ட யாழ்ப் போரிலே அத்திரள் குலைவதற்கு முன்னே நாமும் செல்வோம் என்று; புத்திசேன! தும்பு அற இது குரவற்கு என்ன - புத்திசேனனே! சிக்கற, 'சீவகன் வேட்கையாற் செல்கின்றான் அல்லன்; கல்வி தோற்றுவித்தற்குச் செல்கின்றான்' என்று கொள்ளுமாறு தந்தைக்குக் கூறுக என்ன; கந்துகற்கு அவனும் சொன்னான் - கந்துகனுக்குப் புத்திசேனனும் கூறினான்; அவன் இது சொல்லினான் - அவனும் இதனைக் கூறினான்.

(வி - ம்.) கூறுவது மேற்கூறுகின்றார்.

தும்பு - சிக்கு. தும்பறச் சொல்லியது என்றது சீவகன் காமவேட்கையாலே இங்ஙனம் செல்லத் துணிந்தான் என்று அவன் மாறுபட உணரும் அன்றே அம் மாறுபாடுண்டாகாத முறையில் சொல்லுக என்றவாறு. இதனால் சீவகசாமியின் பெருந்தன்மை தெற்றெனப் புலப்படுதல் உணர்க. (௬௭௪)

௬௬௭. ஐயனுக் கமைந்த நீரா
ரறுபத்து நால்வ ரம்பொன்
வையகத் தமிர்த மன்னார்
வாக்கமை பாவை யொப்பா
ரெய்திய விளமை மிக்கா
ரியைந்தன ரென்று பின்னுங்
கையமை சிலையி னாற்குக்
கந்துக னிதுவுங் கூறும்.

(இ - ள்.) அம்பொன் வையகத்து அமிர்தம் அன்னார் - (இன்பத்தால்) பொன்னுலகத்து அமிர்தம் போன்றவராய்; எய்திய இளமை மிக்கார் - பொருந்திய இளமை நீங்காதவராய்; வாக்கு அமை பாவை ஒப்பார் - திருத்தமாக அமைந்த கொல்லிப் பாவை போன்றாராய்; அமைந்த நீரார் அறுபத்து நால்வர்-தக்க இயல்பினார் அறுபத்து நால்வர்; ஐயனுக்கு இயைந்தனர் என்று-நம் ஐயனுக்கு முன்னரே இயைந்தனர் (ஆதலால் யாம் வாசிக்கச் செல்லக் குறைவில்லை) என்றுரைத்து; பின்னும் கந்துகன் கையமை சிலையினாற்கு - மற்றும் கந்துகன், கையிற் பொருந்திய வில்லினானுக்கு: இதுவும் கூறும் - (மிகுதிப் பாடாக உலகங் கூறும் இதனாற் சிறிது குறையுண்டு என்று) இதனையும் புத்தி சேனனிடம் கூறுவான்.

(வி - ம்.) சிலையினான்: சீவகன்.

"அறுபத்து நால்வர் என்றது கலைகளை" என்றும், "இதுவும் கூறும் - இவன் மிகுதிப்பாடு கூறும்; உம்மை, சிறப்பு. மிகுதியாவது உலகம் ஏந்துதலானும், கல்லேந்தி நீக்குதலானும் (௬௬0) நிரைமீட்ட லானும் உளதாய மிகுதி. இதற்குக் கட்டியங்காரன் பொறாததே குறை யென்றான். இது மேலே 'விலங்கல்' (௬௮௬) என்னும் கவி முதலிய வற்றாற் காண்க." என்றும் நச்சினார்க்கினியர் வரைந்துள்ளார். (௭௬)

௬௬௮. மறைவல்லாற் குரைக்கும் போழ்திற்
கோயிலு ணின்று மாலைப்
பிறைவெல்லும் நுதலி னாளோர்
பெண்கொடி வந்து கூந்த
லுறைசெல நீக்கிப் பைந்தா
ளோண்மணிக் குவளை நீட்ட
நறைவெல்லும் நாக மாலை
நோக்கொடு பூக்கோண் டானே.

(இ - ள்.) மறைவல்லாற்கு உரைக்கும்போழ்தில்-(மிருதிப் பாடாகிய அதனை) புத்திசேனனுக்குக் கூறத்தொடங்கும் பொழுது; மாலைப் பிறைவெல்லும் நுதலினுள் ஓர் பெண்கொடி கோயிலுள் நின்று வந்து - மாலைப் பிறையை வெல்லும் நெற்றியினளாகிய கொடி போன்ற ஒரு பெண் அரண்மனையினின்றும் வந்து; கூந்தல் உறைசெல நீக்கி - கூந்தலாகிய உறையினை அகல நீக்கி; பைந்தாள் ஒண்மணிக் குவளை நீட்ட - பசுமையான தாளையுடைய ஒளி பொருந்திய மணிபோலும் குவளையை நீட்ட; நறை வெல்லும் நாகமாலை நோக்கொடு பூக்கொண்டான் - மணத்தின் வெல்லு மியல்புடைய நாகமாலையின் குறிப்பாலே (ஒரு காரியம் உண்டென உணர்ந்து) அக் குவளையைக் கையிலே கொண்டான்.

(வி - ம்.) மாலை யென்பதற்கேற்ப நறை கூறினர். இஃது இயற்கையடை. (௩௭௬)

௬௬௬. நல்லவ ணோக்க நாய்கன்
றேர்ந்துபூங் குவளைப் போதி
னல்லியுட் கிடந்த வோலை
தாளது சலாகை யாதல்
சொல்லுமென் றாய்ந்து கொண்டு
துகிலிகைக் கணக்கு நோக்கி
வல்லிதிற் சலாகை சுற்றி
யோலையை வாசிக் கின்றான்.

(இ - ள்.) நாய்கன் நல்லவள் நோக்கம் தேர்ந்து - (பூவை வாங்கின) வணிகன் நாகமாலையின் குறிப்பை ஆராய்ந்து தெளிந்து கொண்டு; பூங்குவளைப் போதின் தாளது அல்லியுள் கிடந்த ஓலை சலாகையாதல் சொல்லும் என்று - அழகிய குவளைமலரின் தாளே தன் அகவிதழிற் கிடந்த ஓலையைச் சுற்றிப் படிக்கச் சலாகையாதலைக் கூறுகின்றதென்று; ஆய்ந்து கொண்டு - ஆராய்ந்து கொண்டு; துகிலிகைக் கணக்கு நோக்கி - துகிலிகைக் கணக்கால் எழுதின எழுத்தைப் பார்த்து; சலாகை வல்லிதின் சுற்றி - (தாளாகிய) சலாகையிலே வரி ஏற்றிழிவு படாதவாறு சுற்றி; ஓலையை வாசிக்கின்றான் - ஓலையை வாசிக்கத் தொடங்கினான்.

(வி - ம்.) சலாகை - இரும்புக் கம்பி.

நல்லவள் - ஈண்டு நாகமாலை. அல்லி - அகவிதழ். துகிலிகை - எழுதுகோல். (௩௭௭)

ஙஎ0. நம்பனை நகரி னீக்கிச்
சேமத்தால் வைக்க தீயுட்
செம்பொன்போற் பெரிதுஞ் சேந்து
செகுத்திட லுற்று நின்றான்
வெம்பினான் காரி யுண்டிக்
கடவுளிற் கனன்று வேந்தன்
இம்பரின் றெனக்குச் சொன்னா
னிதுபட்ட தடிகள் என்றாள்.

(இ - ள்.) வேந்தன் செம்பொன்போல் பெரிதும் சேந்து செகுத்திடல் உற்று நின்றான் - அரசன் சிவந்த பொன்னைப் போல மிகுதியும் வெம்பி நம்பனை அழித்திடலை மேற்கொண்டு நின்றான்; காரி உண்டிக் கடவுளின் கனன்று வெம்பினான் - நஞ்சுண்ட சிவன்போலச் சீற்றங் கொண்டு புழுங்கினான்; இம்பர் இன்று எனக்குச் சொன்னான் - இங்கே இப்போது எனக்கு அதனைக் கூறவுஞ் செய்தான். அடிகள் இதுபட்டது-அடிகளே! இது நிகழ்ந்ததாகும்; நம்பனை நகரின் நீக்கிச் சேமத்தால் வைக்க என்றாள் - (ஆகையால்) சீவகனை நகரினின்றும் நீக்கி ஒரு காவலான இடத்தே வைக்க என்றெழுதியிருந்தாள்.

(வி - ம்.) காரி - நஞ்சு. நம்பன்: சீவகன். சேமத்தால்: உருபு மயக்கம்.

நம்பனை - சீவகனை. சேமம் - காவலையுடைய இடம். காரியுண்டிக் கடவுள் - சிவபெருமான். காரி - நஞ்சு. இம்பர் - இப்பொழுது. அடிகள் என்றது நாய்கனை முன்னிலைப்படுத்தி வரைந்தபடியாம். (கஎஅ)

ஙஎக. ஓலையை யவட்கு நீட்டி
யோண்மணிக் குழையு முத்தும்
மாலையும் படுசோ லொற்றி
வம்மென மறைய நல்கி
வேலைநேய் பெய்த திங்கள்
விரவிய பெயரினாற்கு
மேலைநாட் பட்ட தோன்று
விளம்புவல் கேளி தென்றான்.

(இ - ள்.) அவட்கு ஓலையை நீட்டி - அவளிடம் ஓலையைக் கொடுத்துப் பிறகு; மாலையும் படுசொல் ஒற்றி வம்என - மாலைப் பொழுதினும் கிடைக்குஞ் செய்தியை ஒற்றியறிந்து வருக என்று; ஒண்மணிக் குழையும் முத்தும் மறைய நல்கி - சிறந்த மணி யழுத்தின குழையையும் முத்தையும் மறைவாக அளித்து;

வேலைநெய் பெய்த - கடலென நெய்யைத் தீயிலே பெய்து வேள்வி ஆற்றிய; திங்கள் விரவிய பெயரினாற்கு - புத்திசேன னுக்கு; மேலைநாள் பட்டது ஒன்று - முந்தை நாளிற் பட்ட தாகிய ஒன்று; விளம்புவல் இது கேள் என்றான் - கூறுவேன்; இதனைக் கேள் என்றான்.

(வி - ம்.) திங்கள் - மதி; மதி - புத்தி. எனவே, திங்கள் விரவிய பெயரினான்: புத்திசேனன்; 'தீத்தீண்டு கையார்' (திணைமாலை: ௫) என்பது வேங்கையை உணர்த்தினாற்போல. நச்சினார்க்கினியர் ௬௬௬ - முதல் மூன்று செய்யுட்களையும் ஒரு தொடராக்கிக் கொண்டு கூட்டும் முறை:

["வாசிக்கின்றான், பெயர். இக் கவியில் (௬௭0) 'இது பட்டது அடிகள் என்றாள்' என்னுமிடத்து, 'அடிகள் என்றாள்' என்பதனை, 'மேலைநாட் பட்டதொன்று விளம்புவல் அடிகள் என்றாள்' என அதனோடு கூட்டி, ஓலை கொண்டு வந்தவள் வார்த்தை ஆக்குக. 'கேளிதென்றான்' என்பதனை, அதுகேட்ட கந்துகன், திங்கள் விரவிய பெயரினாற்கு, இவள் கூறுகின்ற இதனை நீ கேளென்றான் என்க. 'இன்னன்' (சீவக. ௬௩௩) என்னுங் கவியில், 'சூழ்ச்சி தன்னுள்ளான்' என்பதன் பின்னே, 'இது பட்டது என்றாள்' என ஓலை கொண்டு வந்தவள் கந்துகன் சிறைப்புற மாகப் புத்திசேனனுக்குச் செய்தி கூறினாளாக்கி முடித்து, 'ஓலையை' என்னுங் கவியில், 'மறைய நல்கி' என்பதளவாக அதன் பின்னே கூட்டிப், 'படையமைத் தெழுமின்' என்பதனை அதன் பின்னே கூட்டுக. 'என்றாள்' இரண்டிடத்துங் கூட்டுக. இங்ஙனங் கூறாது, 'இதுபட்ட தடிகள்' என்று கந்துகனுக்கு அவள் கூற, அவன் புத்திசேனனுக்குக் கூறினானென்று கூறின், புதல்வன் செய்தியைத் தந்தை கூறும் முறை யாற் கூறாது இடக்கர் முதலிய கூற்றாற் கூறினானாகத் தேவர் கூறாரென் றுணர்க."]

கந்துகனுக்குப் புத்திசேனன் மகனுமல்லன்; மகன் முறையனே. அவனிடம் தன் வளர்ப்பு மகனாகிய சீவகன் செய்தியை இடக்கர் முதலிய வற்றாற் கூறானென்பதற்காகவே மேற்கூறியவாறு பல செய்யுட்களி னின்றும் வேண்டியபடி எங்கும் எடுத்துக் கூட்டுமாறு மாட்டேற்று முறையால் தேவர் செய்தார் என்பது பொருத்தமாகத் தெரியவில்லை. மற்றும், இதனை இடக்கர் என்று கூறத் தகாதெனக் கருதினாரேல்,

"தூசுலாய்க் கிடந்த வல்குற் றுப்புறழ் தொண்டைச் செவ்வாய்
வாசவான் குழலின் மின்போல் வருமுலைச் சாந்து நக்கி
பூசல்பாய்ந் தாடிக்காதிற் குண்டல மிலங்க நின்றாள்
காசில்யாழ்க் கணங்கொ டெய்வக் காந்தர்வ தத்தையென்பாள்."

(சீவக. ௫௫0)

எனவும்,

"அளந்துணர் வரிய நங்கைக் கருமணி முகிழ்த்த வேபோ
விளங்கதிர் முலையும் ஆகத்திடங் கொண்டு பரந்த........."

(சீவக. ௫௫௧)

எனவும், தத்தையாகிய தன் மகளின் வனப்பைத் தந்தை கலுழவேகன் கூறுவது போலவும்,

"கற்சிறை யழித்து வெள்ளம் கடற்கவா யாங்குக் கற்ருேர்
சொற்சிறை யழித்து வேந்தன் றுணைமூலை துறத்தல் செல்லான்
விற்சிறை கொண்டபோலும் புருவத்து விளங்கு வேற்க
ணற்சிறைப் பட்டு நாடும் நகரமுங் காவல் விட்டான்."

எனத், தன்னிடம் தன் கணவன் நடந்து கொண்ட, 'காமமே கன்றி நின்ற' நிலையை விசயையாகிய தாய் சீவகனுகிய தன் மகனிடங் கூறுவது போலவும் தேவர் எழுதுவது முறையாகுமா? நிகழ்ந்த நிகழ்ச்சியைப் புத்தி சேனனிடம் கந்துகன் கூறுமாறுபோல நமக்குத் தேவர் கதை கூறுகிருர் என்று கொண்டு, செய்யுட்கள் கிடந்தவாங்கே பொருள் கூறுதலே சிறப் புடைத்தென்க. (௧௭௬)

௬௭௨. கடியரங் கணிந்து மூதூர்க்
கடல்கிளர்ந் தனைய தொப்ப
நடையறி புலவ ரீண்டி
நாடக நயந்து காண்பான்
குடையுடை யவனெ டெண்ணிச்
சீவகற் கோணர்மி னென்னத்
தொடையல்சூழ் வேலி னனுந்
தோழருங் காணச் சென்ருர்.

(இ - ள்.) மூதூர்க் கடல் கிளர்ந்தனையது ஒப்ப நடை அறிபுலவர் ஈண்டி-இப் பெருநகரில் கடல் ஆரவாரித் தெழுந்தாற் போல நாடக நெறியறிந்த புலவர்கள் குழுமி; நாடகம் நயந்து காண்பான்-நாடக மொன்றை விரும்பிக் காணற்கு; கடி அரங்கு அணிந்து-விளக்கமுற்ற அரங்கினை அமைத்து; குடை உடையவ னொடு எண்ணி - அரசனுடன் ஆராய்ந்து; சீவகன் கோணர்மின் என்ன - சீவகனைக் கொண்டு வருக என்றுரைக்க; தொடையல் சூழ் வேலி னனும் தோழரும் காணச் சென்ருர் - மாலை சூழ்ந்த வேலினனும் தோழர்களும் காண்பதற்குச் சென்றனர்.

(வி - ம்.) இதுமுதல் ஓலை கொண்டு வந்தவள் கூற்றென்பர் நச்சி னர்க்கினியர். 'செலவினும்' (தொல் - கிளவி - ௨அ) என்னும் பொது விதியாற், 'சென்ருர்' என்ருர்.

கடி - விளக்கம்; விளக்கமாவது எழுகோல் அகலத்தினையும் எண் கோல் நீளத்தினையும் ஒரு கோல் குறட்டுயரத்தினையும் வாய்தல் இரண் டினையும் உடைத்தாதல. அணிந்து - பார்ப்பனப் பூத முதலிய நால் வகைப் பூதங்களையும் ஒழிந்தவற்றையும் இயற்றி; [1]கூறிய வுறுப்பிற் குறி யொடு புணர்ந்தாங் - காடுநகர்க் கியற்றும் அரங்கின் நெற்றிமிசை - வழுவில் பூதம் நான்கும் முறைப்பட - எழுதினரியற்றல் இயல்புணர்ந் தோரே' நடையறி புலவராவார்: இயலாசிரியனும், யாழாசிரியனும் இசையாசிரியனும், குழலோனும், தண்ணுமை முதல்வனும் முதலாயி

1. சிலப். ௩: ௧0௬ - ௭: அடியார் - மேற்கோள்.

ஞோர். ஈண்டு இவர்தன்மை உரைப்பிற் பெருகும்.[1] ‘கூத்தின் வகையுங் குழைவற நோக்கின் - எத்தும் வகையான் இருவகைப்படுமே’ [2]‘அவை தாம், சாந்திக் கூத்தே விநோதக் கூத்தென் றுய்ந்துற வகுத்தனன் அகத்தியன் தானே’ சாந்திக் கூத்தே தலைவன் இன்பம் - ஏந்திநின் றாடிய ஈரிரு நடமிவை - சொக்கம் மெய்யே அவிநயம் நாடகம் - என்றிப் பாற்படூஉம் என்மனுர் புலவர்” [3]சொக்கமாவது சுத்த நிருத்தம்; அது நூற்றெட்டுக் கரணமுடைத்து. மெய்க் கூத்தாவது: தேசி, வடுகு, சிங்களம்; இவை மெய்த் தொழிற் கூத்தாதலிற் காரணப் பெயர்; சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் அகச் சுவைபற்றி ஆடுதலின் அகமார்க்கம் எனப்படும் ‘அகத்தெழு சுவையான் அகமெனப் படுமே’ (சயந்தம்). அவிநயமாவது கதை தழுவாதே பாட்டுக்களின் பொருள் தோன்றக் கைகாட்டி அவிநயிப்பது. நாடகமாவது - கதை தழுவி வருங் கூத்து. இங்குக் காண்பது நாடகம். (௧௮௦)

௬௭௩. நிலமறிந் தணிக வையன் சீவகன் னெறியி னென்ன
நலநுதற் பட்டங் கட்டி நகைமுடிக் கோதை சூட்டி
யலர்முலைக் குருதிச் சாந்து மாரமும் பூணுஞ் சேர்த்திக்
குலவிய குருதிப் பட்டிற் கலைநலங் கோளுத்தி யிட்டான்.

(இ - ள்.) ஐயன் சீவகன் நிலம் அறிந்து நெறியின் அணிக என்ன - ஐயனாகிய சீவகன் அரங்கை யறிந்து நூல் நெறியால் அணிக என்று நடையறி புலவர் கூற, (அவனும்); நலம் நுதற் பட்டம் கட்டி - அழகிய நெற்றியிலே பட்டத்தைக் கட்டி; நகை முடிக் கோதை சூட்டி - ஒளிவிடும் முடிமீது கோதையைச் சூட்டி; அலர்முலைக் குருதிச் சாந்தும் ஆரமும் பூணும் சேர்த்தி- வளரும் முலைகளின் மீது செஞ்சாந்தையும் முத்துமாலையையும் பிற அணிகலன்களையும் அணிவித்து; குலவிய குருதிப் பட்டின் கலைநலம் கொளுத்தியிட்டான் - விளங்கிய செம்பட்டினாலே கலையின் நலத்தைப் பொருத்திவிட்டான்.

(வி - ம்.) வளர்கின்ற முலையெனவே பன்னிரண்டாமாண்டாயிற்று. ‘வட்டணையுந் தூசியும் மண்டலமும் பண்ணமைய - எட்டுடனீரிரண்டாண் டெய்தியபின்—கட்டளைய—கீதக் குறிப்பும் அலங்கார முங்கிளரச்—சோதித் தரங்கேறச் சூழ்’ (பரத சேனபதீயம்) குருதிச் சாந்து - குங்குமச் சாந்து. (௧௮௧)

௬௭௪. திருவிலே சொரிந்து மின்னுங்
குண்டலஞ் செம்பொ னோலை
யுருவுகோண் மதிய மன்ன
வொளிமுகஞ் சுடர வாக்கிப்

1. சிலப். ௩ : ௧ - ௧௪ அடிகளிற் காண்க.
2. சிலப் - ௩ - ௧௨. அடியார். மேற்.
3. சிலப். ௩ - ௧௨. அடியார் - உரை.

பரியகஞ் சிலம்பு செம்பொற்
கிண்கிணி பாதஞ் சேர்த்தி
யரிவையை யரம்பை நாண
வணிந்தன னனங்கன ன்ஞன்.

(இ - ள்.) திருவில்லே சொரிந்து மின்னும் - வானவில் லென ஒளியுமிழ்ந்து விளங்குகிற ; குண்டலம் செம்பொன் ஓலை- குண்டலத்தையும் பொன்னோலையையும் ; உருவுகொள் மதியம் அன்ன - நிறைந்த திங்களைப் போன்ற; ஒளிமுகம் சுடர ஆக்கி- ஒளியுறு முகம் விளங்க அமைத்து; பரியகம் சிலம்பு செம்பொன் கிண்கிணி பாதம் சேர்த்தி - காற்சரி சிலம்பு கிண்கிணி ஆகிய வற்றை அடியிலே பூட்டி ; அரம்பை நாண அரிவையை அனங் கன் அன்ஞன் அணிந்தனன்-அரம்பையும் வெள்க அந்த அரிவை யைச் சீவகன் புனைந்தான்.

(வி - ம்.) "இவளைத் தீண்டவும் வேட்கை நிகழாமையின் 'அனங்க னன்ஞன்' என்ருர்; 'சிலைவில்லான் போலும் செறிவினுன்' (கலி. கசங) என்ருர் பிறரும். அவன் தீண்டுதலின் தனக்கு வேட்கை நிகழவும், அவற்கு நிகழாமை கண்டு, இனிக் கூத்தினல் இவனைப் பிணிப்பே னென்று அவள் ஆடுகின்ருளாம். இவட்கு ஈண்டு வேட்கையின்றேல் மேல், 'ஆடவர் மனங்கள்' (சீவக கூஅங) என்னுங் கவியில் தோழியை விட்டாளென்றல் பொருந்தாதாம். இதஞனே, இவள் நடிக்கின்ற நாடகம் ஒருவன் மேலே ஒருத்தி வேட்கையுற்றதொரு கதையேயாம்" என்பர் நச்சிஞர்க்கினியர். (கஅ௨)

கூஎ௫. தோற்பொலி முழவும் யாழும்
துளைபயில் குழலு மேங்கக்
காற்கோசி கோம்பு போலப்
போந்துகைத் தலங்கள் காட்டி
மேற்பட வெருவி நோக்கித்
தானையை விட்டிட் டோல்கித்
தோற்றிஞள் முகஞ்செய் கோலங்
துளக்கிஞண் மனத்தை யெல்லாம்.

(இ - ள்.) தோல்பொலி முழவும் யாழும் துளைபயில் குழ லும் ஏங்க - தோலாற் பொலிவுற்ற முழவும் யாழும் துளைபயின்ற குழலும் ஒலிக்க ; காற்கு ஒசி கொம்பு போலப் போந்து - காற் றுக்கு நுடங்கும் பூங்கொடி போலப் போந்து; தானையை விட் டிட்டு - திரைச்சீலையை விட்டிட்டு ; கைத்தலங்கள் காட்டி - கை களைக் காட்டி ; மேற்பட வெருவி நோக்கி ஒல்கி - மேலே வெருவிப் பார்த்து ஒல்கி ; முகம் செய்கோலம் தோற்றிஞள் -

கூத்திற்கு முகமாகிய தோற்றத்தே தோன்றினாள்; மனத்தை எல்லாம் துளக்கினாள் - உள்ளத்தை யெல்லாம் வருத்தினாள்.

(வி - ம்.) மார்ச்சனை முதலியவு முளதாய், 'இடக்கண் இளியாய் வலக்கண் குரலாய், நடப்பது தோலியற் கருவியாகும்.' என்ற ஓசையும் உடைத்தாய், வெண்கலத்தாற் செய்ததென்பது தோன்றப் 'பொலிசல்' கூறினார். "கருங்காலி செங்காலி வேம்பு பலாக சஞ்சம்—நெருங்கிய சீர்க்குரா மண்ணும்—பொருந்தவே—ஊனமிலவாய் உயர்நிலத்தில் தோன்றிலாம்—மானின் விழிமடவாய் வைப்பு." துளைபயில் குழல்—துளையிடத்தே வாச்சியமும் யாழ்ப் பாடலும் கண்டப் பாடலும் பயிலப் பட்ட முதல் வங்கியமும் வழிவங்கியமும். "ஓங்கிய மூங்கில் உயர்சந்து வெண்கலமே—பாங்குறுசெங் காலி கருங்காலி—பூங்குழலாய்—கண்ணன் உவந்த குழைக்கிவைக ளாமென்றார்—பண்ணமைந்த நூல்வல்லோர் பார்த்து" ஏங்க - இவை மூன்றும் கூடி யிசைப்ப. இவை ஆமந்திரிகை யாம்: 'குழல்வழி யாழெழீஇத் தண்ணுமைப் பின்னர் - முழவியம்ப லாமந்திரிகை.' போந்து - வலக்கால் முன்மிதித்தேறி வலத்தூணைச் சேர்ந்து. கைந்தலங்காட்டுதல் கமல வர்த்தனை. (இது கமல வட்டணை யெனவும் வழங்கும்.) மேற்பட வெருவி நோக்கி - தெய்வத்தை நோக்கு தலின் மேலேயெழ வெருவிப் பார்த்து தானை - கரந்து வரல் எழினி. 'வழுவில் கேள்வி நன்னூ லுணர்ந்தோர்—எழினி தானே மூன்றென மொழிப'. 'அவைதாம், ஒருமுக எழினியும் பொருமுக எழினியும்—கரந்து வரல் எழினியும் எனமூ வகையே'; இராசதானியிலும் அரங்கிலும் கோலம் மறைத்துவரும் இடத்திலும் இட்ட திரைகள். (௧அ௩)

௬எ௬. தெண்மட்டுத் துவலை மாலை தேனொடு துளிப்பத் திங்க
ளுண்ணட்ட குவளை போலு முருவக்கண் வெருவியாட
விண்விட்டுக் கடவுள் வீழ நுடங்கின புருவ நெஞ்சம்
பண்விட்ட திருந்து காணும் பன்மணிக் கழலி னார்க்கே.

(இ - ள்.) தெள்மட்டுத் துவலை மாலை தேனொடு துளிப்ப - (ஆடும் விரைவால்) தெளிந்த தேன் துளியை வண்டுடன் மாலைகள் துளிப்ப; திங்களுள் நட்ட குவளை போலும் உருவக் கண் வெருவி ஆட - திங்களுடன் நட்புக்கொண்ட குவளையைப் போல அழகிய கண்கள் பிறழ்ந்து ஆட; விண் விட்டுக் கடவுள் வீழ - வானிலிருந்து தெய்வங்கள் விழ; புருவம் நுடங்கின - புருவங்கள் அசைந்தன; இருந்து காணும் பன்மணிக் கழலினார்க்கு நெஞ்சம் பண்விட்டது—(அப்போது) அங்கிருந்து பார்க்கின்ற பல மணிக்கழலையுடையார்க்கும் நெஞ்சம் நிலை குலைந்தது. (௧அ௪)

௬எஎ. செங்கதிர்ச் சிலம்பு செம்பொற்
கிண்கிணி சிலம்பக் கோதை
பொங்கப்பொன் னேலை வட்டம்
பொழிந்துமின் னுதுப்பப் போர்த்த

குங்குமச் சாந்து வேய்ந்து
குண்டலந் திருவில் வீச
வங்கதி ரார மின்ன
வரிவைகூத் தாடு கின்றாள்.

(இ - ள்.) செங்கதிர்ச் சிலம்பு செம்பொன் கிண்கிணி சிலம்ப - செவ்வொளிச் சிலம்பும் சிவந்த பொன்னாற் செய்த கிண்கிணியும் ஒலிப்ப; கோதை பொங்க - மாலை ததும்ப; பொன் ஓலை வட்டம் பொழிந்து மின் உகுப்ப - பொன் ஓலை ஒளியை வட்டமாகச் சொரிந்து சிந்த; போர்த்த குங்குமச் சாந்து வேய்ந்து குண்டலம் திருவில் வீச - குண்டலம் மேனியை மறைத்த சந்தனத்தைத் தீண்டி அழகிய ஒளியை வீச; அம் கதிர் ஆரம் மின்ன - அழகிய ஒளியுடைய முத்துவடம் மின்ன; அரிவை கூத்தாடுகின்றாள் - அவள் கூத்தாடுகிறாள். (௧௮௫)

௬௭௮. மருங்குலு மொன்று தாய்க்கு மொருமக ளாத லோர்ந்து
மிரும்பினா லியன்ற நெஞ்சத் திவர்களோ விருந்து காண்க
வரங்கின்மே லிவளைத் தந்த தாய்கொலோ கயத்தி யன்றேற்
சுரும்புசூழ் கண்ணி சூட்டி யவர்கொலோ கயவர் சொல்லீர்.

(இ - ள்.) மருங்குலும் ஒன்று - இடையும் ஒன்றே (இது முரிந்தால் வேறு சேம இடையும் இல்லை); தாய்க்கும் ஒருமகள் ஆதல் ஓர்ந்தும் - இவளும் தாய்க்கு ஒருமகளே ஆதலை அறிந்தும்; இரும்பினால் இயன்ற நெஞ்சத்து இவர்களோ இருந்து காண்க - (அருளின்றாக) இரும்பினால் ஆகிய உள்ளத்தையுடைய இக் கொடியோர் இருந்து காண்க!; அரங்கின் மேல் இவளைத் தந்த தாய் கொலோ கயத்தி? - (இவர்கள் அருளிலராய்க் கூத்து முடியும் வரை காண்பார்களென் றறிந்தும்) இக் கூத்தரங்கிலே இவளை விட்ட தாய் கொடியளோ?; அன்றேல் - அன்றாயின்; சுரும்புசூழ் கண்ணி சூட்டியவர்களோ கயவர்?-வண்டுகள் சூழும் கண்ணியைக் குழலிற் சூட்டிவிட்டவர் கொடியரோ? சொல்லீர்- எவர் கொடியரெனக் கண்டு சொல்வீராக!

(வி - ம்.) இவர்களோ : ஓ : இரக்கக் குறிப்பு.

இச் செய்யுள்,

"ஒசிவது போலுநின் ஒசிநுசுப் புணரா
தினக்கிடை யிப்புனல் குடைகுவை யாயின்
நினக்கிடை மற்றொன் றுடையை யோவெனக்
காதற் செவிலி கழறுபு விலக்கவும்."

என வரும் பெருங்கதைப் பகுதியை நினைப்பிக்கின்றது. (௧௮௬)

வேறு

௬௭௬. அகிலார் புகையலாற் சாந்தணியாள்
பூச்சாரச் செல்லாள் செல்லிற்
பகலே பகைவளர்த்த பாவை
சிறுநுசுப்போன் றுண்டே பாவம்
இகலேந் திளமுலைமேற் சாந்தெழுதி
முத்தணிந்து பூவுஞ் சூட்ட
முகிலேந்து மின்மருங்குல் மொய்குழற்று
யிதுகண்டு முளளே பாவம்.

(இ - ள்.) அகிலார் புகை அலால் சாந்தணியாள் - (இவள்) அகிற்புகை அன்றிச் சந்தனமும் பூசாள்; பூச்சாரச் செல்லாள் - பூவின் அருகேயும் செல்லாள்; செல்லின் பகலே பகைவளர்த்த பாவை சிறு நுசுப்பு ஒன்று உண்டே - செல்வாளெனின் (அம் மாலையும் சாந்தும் தாங்குதற்குத் தக்கதாக) வெளியாகவே முலைகளாகிய பகையை வளர்த்த சிறிய இடையதொன்று பாவைக்கு இருக்கின்றதோ? (இல்லையே); பாவம்! - ஈதொரு பாவம் இருந்தபடி!; இகல் ஏந்து இளமுலைமேல் சாந்து எழுதி - (இத் தன்மையறிந்தும்) மாறுபடுதலை மேற்கொண்ட இளமுலைகளின்மேற் சாந்தால் எழுதி; முத்து அணிந்து - முத்தையும் அணிந்து; பூவும் சூட்ட - மலரையும் அணிய; மின் மருங்குல் முகில் ஏந்தும் மொய்குழல் - மின்னிடையின் மேல் முகிலையேந்திய மொய்குழலையுடையாளின்; தாய் இது கண்டும் உளளே - அன்னை இக்கொடுமையைக் கண்டும் உயிருடன் இருக்கின்றனளே!; பாவம்! - ஈதொருபாவம் இருந்தபடி என்னே!

(வி - ம்.) 'இப் பாவைக்கு நுசுப்பில்லை; இத்தன்மை யறிந்து வைத்தும் இவள் முலைமேலே எழுதவும் சூட்டவும் கண்டு இவள் தாய் எங்ஙனம் பொறுத்தாள்; இஃதொருபாவம்,' என்று இரங்கினர் என்றவாறு. (௧அ௭)

வேறு

௬௭௦. தேந்தாமஞ் செம்பவளத் தாமஞ் செம்பொன்
னேரிதாம மின்னுத் திரடா மங்க
டாங்டாங் தாமெனத் தாழ்ந்தபொன் மேகலைத்
தாம வரங்கின்மேற் றூதார் முல்லைப்
பூந்தாமக் கோம்பாடக் கண்டா ரெல்லாம்
புனமயிலே யன்னமே பொன்னங் கொம்பே
யாந்தா மரைமகளே யல்ல ளாயி
னமரர்மக ளென்பாரு மாயி னாரே.

(இ - ள்.) தேன் தாமம் செம்பவளத் தாமம் செம்பொன் எரிதாமம் மின்னுத் திரள்தாமங்கள் தாம் தாம் தாம் என-தேனை யுடைய பூமாலைதாம், செம்பவள மாலைதாம், விளக்கமுற்ற செம் பொன் மாலைதாம், ஒளிவிடும் மணிமாலை தாம் என்று கண்டோர் கூறும்படி; தாழ்ந்த பொன் மேகலைத்தாம அரங்கின்மேல்-அங்கே பொருந்திய பொன்மேகலையையுடைய தாமம் போன்ற தோரிய மடந்தையர்களையுடைய அரங்கின்மேலே; தாதுஆர் முல்லைப் பூந்தாமக் கொம்பு ஆடக் கண்டார் எல்லாம் - தாது பொருந்திய முல்லை மலர்மாலை அணிந்த கொம்பு போன்றவள் ஆடுவதைப் பார்த்தவர்கள் எல்லோரும்; புனமயிலே அன்னமே பொன்னங் கொம்பே ஆம் தாமரை மகளே - (இவள்) புனத்திலுள்ள மயிலே யாம், அன்னமேயாம், பொற்கொம்பேயாம், திருமகளேயாம்; அல்லள் ஆயின் அமரர் மகள் என்பாரும் ஆயினார் - அல்லளென் றால் வானவர் மகளேயாம் என்று தனித்தனியே கூறுவா ராயினார்.

(வி - ம்.) தோரிய மடந்தையா: ஆடி முதிர்ந்தவராய்ப் பற்றிப் பாடுவோர். முல்லை கற்பிற்குச் சூட்டப்பட்டது. 'தானுடை முல்லை யெல்லாம்' (சீவக. ௩௮௩) என்பர் மேலும். இனி இவையே மாலை யென்று கண்டார் வியக்கும்படி பூமாலை முதலியன தாழ்ந்த தாம அரங் கின் மேலே மேகலையையும் முல்லைத் தாமத்தையுமுடைய கொம்புபோல் வாள் ஆட என்றுமாம்.

'ஆயினார்' என்பதனை 'நெய் பருகி' (சீவக. ௩௮௨) என்னுஞ் செய்யு ளின பின்னே கூட்டுவர் நச்சினார்க்கினியர்.

தேந்தாமம் - பூமாலை. செம்பொன் எரிதாமம் - பொன்மாலை. மின்னுத் திரள்தாமம் - மணிமாலை. பூந்தாமக் கொம்பு - அனங்கமாலை. (௧௮௮)

௩௮௧. கோடியார் குளிர்முத்தஞ் சூட்டி வைத்தார்
கோல்வானே குங்குமச்சே றூட்டி னார்க
ளடிசார்ந்து வாழ்வாரை யம்முலைக டாமே
யழித்திடு மேற்றுமே யழித்தி டுகவேன்
றேடியாத மாத்திரை யாலுண் டேஙசுப்
பிருந்து காண்பாரு முளரே செங்க
ணெடியான் மகன்சிலையு மம்பும் வைத்த
நிழன்மதியோ வாண்முகமோ நோக்கிக் காணீர்.

(இ - ள்.) கொடியார் கொல்வானே குளிர்முத்தம் சூட்டி வைத்தார் - கொடியார்கள் கொல்வதற்கே குளிர்ந்த முத்துக் களைச் சூட்டிவிட்டனர்; குங்குமச் சேறு ஆட்டினார்கள் - குங்கு மக் குழம்பாலே ஆட்டிவிட்டனர்; அடிசார்ந்து வாழ்வாரை அம்

மூலேகள் தாமே அழித்திடுமேல் தாமும் அழித்திடுக-தம் அடிக் கீழ்ப் பொருந்தி வாழ்வாரை (உலகம் அழிப்பதுண்டாயின்) அம் மூலேகளும் நம்மை அழிக்க அமையும்; என்று ஒடியாத மாத் திரையால் நுசுப்பு உண்டே - என்று கருதித் தான் முறியாத அளவிலே இடையும் இருந்தது; காண்பாரும் உளரே - இப் பாவத்தைக் கண்ணுற் காண்பாரும் இருந்தனரே!; செங்கண் நெடியான் மகன் சிலேயும் அம்பும் வைத்த - சிவந்த கண்களே யுடைய திருமாலின் மகனுகிய காமன் தன் வில்லேயும் அம்பை யும் வைத்த; நிழல் மதியோ வாள்முகமோ நோக்கிக் காணீர் - ஒளிவிடும் திங்களோ? முகமோ? கூர்ந்து நோக்குவீர்!

(வி - ம்.) பிறர்க்கின்னு செய்வார் என்பது தோன்றக் கொடியார் என்ருர். அழித்திடுமேல் என்பதற்கு உலகம் என்னும் எழுவாய் வரு வித்துக் கொள்க

இருந்து காண்பாரும் என்பது இக் கொடுமையை நேரிலிருந்து கண்ணூரக் காண்பவரும் என்பதுபட நின்றது.

நெடியான் மகன்சிலே - கரும்புவில். இது புருவத்திற்குவமை. அம்பு- மலரம்பு. இது கண் வாய் இரண்டிற்கும் உவமை என்க. (கஅகூ)

சூஅஉ. நெய்பருகி நீண்டஇருட் கற்றை போலுங்
குழற்கற்றை கண்டு நிறைக லங்குவார்
மைபருகி நீண்டு மதர்த்த வுண்கண்
வாளேறு பெற்றுநைவார் மாநா கத்தின்
பைபருகு மல்கு லிலயம் பற்றிப்
பதனமைத்த பாவை நிருத்த நோக்கி
மெய்யுருகிக் கண்ணுருகி நெஞ்சுருகிக் காம
வெயில்வெண்ணெய்ப் பாவைபோன் மெலிகின் றரே.

(இ - ள்.) நெய்பருகி நீண்ட இருள் கற்றை போலும் குழல் கற்றை கண்டு நிறைகலங்குவார் - நெய் பூசப்பெற்று, நீண்ட இருளின் கொத்தே போலும் குழற் கொத்தைப் பார்த்து நிறைகெடுவார்; மை பருகி நீண்டு மதர்த்த - மைதீட்டப்பெற்று நீண்டு களிப்புற்ற; உண்கண் வாளேறு பெற்று நைவார் - கண்க ளாகிய வாளால் தாக்குதல் பெற்று வருந்துவார்; மா நாகத்தின் பை பருகும் அல்குல் பாவை - பெரிய பாம்பின் படத்தின் தன்மையைக் கொள்ளும் அல்குலேயுடைய பாவையின்; இலயம் பற்றிப் பதன் அமைத்த நிருத்தம் நோக்கி - தாள அறுதியைப் பற்றிக் கால் அமைத்த கூத்தினேப் பார்த்து; மெய்உருகிக் கண் உருகி நெஞ்சு உருகி - மெய்யும் கண்ணும் உளமும் உருகி; காம வெயில் வெண்ணெய்ப் பாவைபோல் மெலிகின்ருர் - காமமாகிய வெயிலிலே யுற்ற வெண்ணெய்ப் பாவைபோல மெலிகின்றனர்.

(வி - ம்.) நெய்பருகி நீண்ட குழல், இருட்கற்றை போலும் குழல் எனத் தனித்தனிக் கூட்டுக. உண்கண்-மையுண்ட கண். இலயம் - தாளவறுதி. பதன் - பதம்; அடி. பாவை - அநங்கமாலை. நிருத்தம் - கூத்து. கண்ணுருகுதல் - நீர்வார்தல். (௧௧0)

௬அ௩. ஆடவர் மனங்க ளென்னு மரங்கின்மே லனங்க மாலை
யாடினுண் முறுவ லென்னுந் தோழியை யையன் காண
வோடரி நெடுங்க ணென்னு மோலையை யெழுதி விட்டாள்
வாடிய வாறு நோயு முரைத்துவார் கோடிய ளுளே.

(இ - ள்.) ஆடவர் மனங்கள் என்னும் அரங்கின்மேல் அனங்கமாலை ஆடினள் - ஆடவரின் உள்ளங்கள் என்னும் அரங்கில் அனங்கமாலை ஆடினள்; வார்கொடி அனாள் - நீண்ட கொடி போன்ற அவள்; வாடிய ஆறும் நோயும் உரைத்து - தான் வாட்டமுற்றதையும் அதற்குக் காரணமான நோயையும் உரைத்து; ஓடு அரி நெடுங்கண் என்னும் ஓலையை எழுதி-நீண்ட செவ்வரி பரவிய நெடுங்கண்களாகிய ஓலையை எழுதி; முறுவல் என்னும் தோழியை - (அதனை) முறுவல் என்னும் தோழியிடம் கொடுத்து அவனை; ஐயன் காண விட்டாள் - சீவகன் காணுமாறு விடுத்தனள்.

(வி - ம்.) தன் கூத்தினுல் அவற்கு வேட்கை நிகழ்ந்ததோ என்று நோக்குகின்றவள் தான் குறித்தன கொள்வானுக நோக்கினமையை உருவகமாகக் கூறினர், அதனை அவன் கொள்ளாமை கண்டு நாடக மகளாதலின், தன் நெஞ்சு வருந்தாதபடி அதனைத் தேற்றுகின்றளாக மேற் செய்யுளிற் கூறுகின்றர்; மாதவி, 'மாலை வாராராயினும் மாணிழை-காலை காண்குவம்' (சிலப்-அ: ௧௧௫-௬) என்றாற் போல.

ஆடவர் மனங்கள் என்னும் அரங்கின்மேல் என்பது அக் கூத்தாடரங்கின்கண் ஆடுதலே அன்றியும் என்பதுபட நின்றது.

முறுவலாலே அவனைத் தன்னை நோக்குமாறு செய்தலின் அதனைத் தோழி என்றார். தன் கண்ணுற் றன் கருத்தை அவனுக்குணர்த்தலின் அதனை ஓலை என்றார். (௧௧௧)

௬அ௪. வளமல ரணியப் பெற்றேன் வால்வளை திருத்தப் பெற்றேன்
களனெனக் கரையு மல்குல் கையினுற் றீண்டப் பெற்றே
னிளமுலை சுமந்து பெற்ற வருத்தமு மின்று தீர்ந்தே
னுளமெலி மகளிரெய்து மின்பமு மின்று பெற்றேன்.

(இ - ள்.) வளமலர் அணியப் பெற்றேன் - செழுவிய மலர்களை அணியப் பெற்றேன்; வால்வளை திருத்தப் பெற்றேன் - வெள்ளிய வளையல்களைத் திருத்தவும் பெற்றேன்; களன் எனக் கரையும் அல்குல் கையினுல் தீண்டப் பெற்றேன் - களன் என்று மேகலை ஒலிக்கும் அல்குலை (மேகலை ஆடை முதலானவற்றை

அணியும்போது) கையால் தொடவும் பெற்றேன்; இளமுலை சுமந்து பெற்ற வருத்தமும் இன்று தீர்ந்தேன் - (சந்தனம் மாலை முதலியன அணிந்து கச்சிறுக்கி விட்டதனால்) இளமுலைகளைச் சுமந்து கொண்ட துன்பமும் இன்று நீங்கினேன்; உளம்மெலி மகளிர் எய்தும் இன்பமும் இன்று பெற்றேன் - (ஊடலால்) உள்ளம் மெலிகின்ற மகளிர் (ஊடல் தீர்ந்தபின்) அடையும் இன்பமும் இன்றே அடைந்தேன்.

(வி - ம்.) முன்னர் முறுவலாகிய தோழியின் வாயிலாகக் கண்களாகிய ஓலையை விடுத்தாள். அவள் நோக்கிற்கும் முறுவலுக்கும் எதிர் நோக்கும் முறுவலும் பெறாமையின் தன்னை அவன் விரும்பாமை உணர்ந்த அவள் தன் உளத்தைத் தேற்றுவதற்கு இங்ஙனங் கூறிக் கொண்டாள்.

களனென - ஒலிக்குறிப்புச் சொல்; 'கலீரென' என்று பிற்காலத்தே இதனை வழங்குவர். கரையும் - ஒலிக்கும். குருதிச் சாந்து முதலியன அவன் அணிந்தபொழுது இவை அவனாற் றீண்டப் பெற்றுப் பயனுடையன ஆயின என்பாள் இளமுலை சுமந்து பெற்ற வருத்தமும் இன்று தீர்ந்தேன் என்றாள். (௧௧௨)

௬அ௫. என்றவ ளரசன் றன்னை
நோக்கல ளிவன்க ணார்வஞ்
சென்றமை குறிப்பிற் றேறிக்
கூத்தெலா மிறந்த பின்றை
நின்றது மனத்திற் செற்ற
நீங்கித்தன் கோயில் புக்கான்
மன்றல மடந்தை தன்னை
வலிதிற்கோண் டொலிகோ டாரான்.

(இ - ள்.) என்றவள் அரசன் தன்னை நோக்கலள் - என்று நினைத்தவள் அரசனை நோக்காளாயினள்; ஒலிகொள் தாரான் - வண்டுகளின் ஒலி பெற்ற மாலையானாகிய கட்டியங்காரன்; இவன்கண் ஆர்வம் சென்றமை குறிப்பில் தேறி - சீவகனிடம் அவளுடைய விருப்பம் சென்றதைக் குறிப்பினால் உணர்ந்து; கூத்தெலாம் இறந்தபின்றை - கூத்தெலாம் முடிந்த பின்பு; மனத்தில் செற்றம் நின்றது-உள்ளத்திலே சீவகனிடம் செற்றம் நிலைபெற்றதாக; மன்றல் மடந்தை தன்னை வலிதிற் கொண்டு - மணத்திற்குரிய அனங்கமாலையை அவள் விருப்பமின்றியே கைப் படுத்திக் கொண்டு; நீங்கித் தன் கோயில் புக்கான் - அரங்கை விடுத்துத் தன் அரண்மனை சென்றான்.

(வி - ம்.) செற்றம் - நீங்காச் சினம். அது சீவகனைக் கொல்ல வேண்டுமென்பது. மன்றல்: அ: அசை. (௧௧௩)

சூஅசா. தேனுடைந் தொழுகுஞ் செவ்வித்
தாமரைப் போது புல்லி
யூனுடை யுருவக் காக்கை
யிதழுகக் குடைந்திட் டாங்குக்
கானுடை மாலை தன்னைக்
கட்டியங் காரன் சூழ்ந்து
தானுடை முல்லை யெல்லாந்
தாதுகப் பறித்திட் டானே.

(இ - ள்.) உடைந்து தேன் ஒழுகும் செவ்வித் தாமரைப் போது புல்லி - அரும்பலர்ந்து தேன் பெருகும் செவ்வியிலுள்ள தாமரை மலரைத் தழுவி - ஊன் உடை உருவக் காக்கை இதழ் உகக் குடைந்திட்டாங்கு - ஊன் வற்றிய உருவமுள்ள காக்கை அதன் இதழ்கள் விழுமாறு குடைந்திட்டாற் போல; கான் உடைமாலை தன்னைக் கட்டியங்காரன் சூழ்ந்து - மணமிகும் அனங்கமாலையைக் கட்டியங்காரன் முற்றுகை செய்து; தான் உடை முல்லை யெல்லாம் தாது உகப் பறித்திட்டானே - அவளுடைய முல்லையை யெல்லாம் தாதுகள் சிதறப் பறித்து விட்டான்.

(வி - ம்.) ஊன் வற்றிய உருவக் காக்கை - வயது முற்றிய வலியற்ற காக்கை; கட்டியங்காரனின் முதுமையைக் குறிக்கிறது. அல்லது ஊனை உடைக்கும் உருவக் காக்கை என்றும் கூறலாம். முல்லை - கற்பு. இதனாற் புணரும் நெறியறியாமை கூறினர். (சசூச)

சூஅஎ. கலையினிற் கன்னி நீக்கித்
தாமரைக் கண்க டம்மான்
முலையினி லெழுதிச் செவ்வாய்
பயந்ததேன் பருகி முள்கும்
சிலைவலாய் புல்லு நம்பி
சீவக சாமியோ என்
றலைகடற் புலம்பி னேவா
தரற்றுமா லணங்கி னன்னாள்.

(இ - ள்.) கலையினில் கன்னி நீக்கி - மேகலையிடத்து அழிவின்மையை நீக்கி; தாமரைக் கண்கள் தம்மால் - தாமரை மலரனைய கண்களால்; முலையினில் எழுதி - முலைகளில் எழுதி; செவ்வாய் பயந்த தேன் பருகி - செவ்வாய் ஈந்த தேனைப் பருகி; முள்கும் சிலைவலாய்!-முயங்கும் சிலைவல்லானே; சீவகசாமியோ!-சீவகசாமியோ!; நம்பி!-நம்பியே!; புல்லு என்று-தழுவிக்கொள்

என்றுரைத்து ; அணங்கின் அன்னாள் - தெய்வப் பெண் போன்றவள் ; அலைகடல் புலம்பின் ஓவாது அரற்றும் - அலைகடலொலி போல இடைவிடாமல் அரற்றுவாளாயினள்.

(வி - ம்.) 'சிலைவலாய்!' எனவே இத் துன்பம் நீக்குதற்குரியாய் என்றாள். உருவு வெளிப்படுதலிற் புல்லென்றாள். சீவகசாமியோ! சேய்மை விளி. ஓ : இரக்கக் குறிப்பும் ஆம்.[1]

கண்களால் முலையினில் எழுதுதலாவது - அவையிற்றின் எழிலைக் கண்ணாலே நெடிது கூர்ந்து நோக்கி இன்புறுதல். முள்கும் - தழுவும். (௧௬௫)

௬௮௮. பிறனல மரற்றக் கேட்டும்
பீடினாற் கனிந்த காம
நறுமல ரணிந்த மாலை
நாற்றக்கோர் நான்கு காதம்
உறநடந் தறித லில்லா
ஞெண்டொடிக் குருகிப் பின்னுந்
திறனல தமர்க்குச் செப்புந்
தீயுமிழ்ந் திலங்கும் வேலான்.

(இ - ள்.) தீ உமிழ்ந்து இலங்கும் வேலான் - அனல் சொரிந்து விளங்கும் வேலானும் ; பீடினால் கனிந்த காம நறு மலர் அணிந்த மாலை நாற்றக்கு - பெருமையாற் பழுத்த காமமாகிய நறுமலராலே புனையப் பெற்ற மாலையினது மணத்திற்கு ; ஓர் நான்கு காதம்உற நடந்து அறிதல் இல்லான் - ஒரு நான்கு காத வழியளவும் பொருந்த நடந்தறியாதவனும் ஆகிய கட்டியங்காரன் ; பிறன் நலம் அரற்றக் கேட்டும் - வேறொருவன் அழகை எடுத்துக்கூறிப் புலம்புவது கேட்டும் ; பின்னும் ஒண்தொடிக்கு உருகி - மேலும் அவ்வொள்ளிய தொடியாளை நினைந்து உருகி ; தமர்க்குத் திறன் அலசெப்பும் - தன் அமைச்சரிடம் தகவற்ற மொழிகளைக் கூறுகிறான்.

(வி - ம்.) காம நெறியறியாதவன் என்பது கருத்து. மாலை : காம மென் மாலை. அன்றி, அனங்கமாலையும் ஆம். (௧௬௬)

---

1. இதற்குப் பின்னர்ச் சில ஏட்டுப் பிரதிகளில் உள்ள செய்யுள் :—
"இந்நகர் தனக்கு மன்னன் யாரெனக் கியம்பு மாதே
மன்னிய வணிகன் மைந்தன் சீவகன் தானே என்னே
உன்னிய நெஞ்சுங் கண்ணும் ஒருங்குடன் அவனுக் கானாய்
என்னைநீ மனத்துள் வையாக் காரணம் யாதோ என்றான்."

வேறு

௬௮௯. விலங்க லன்ன வேக வேழ
நான்கும் வெல்லு மாற்றலன்
கலங்க லந்தி லங்கு மார்பிற்
கந்து கன்ம கன்னென
நலங்கலந்து ரைக்கு மாலிந்
நன்ன கர்க்கு மன்னனோ
வுலங்க லந்த தோளினீரு
ரைமி னீவி ரென்னவே,

(இ - ள்.) உலம் கலந்த தோளினீர்-கற்றூணின் திண்மை கலந்த தோளையுடையீர் !; கலம் கலந்து இலங்கும் மார்பின் கந்துகன் மகன் - பூண் கலந்து விளங்கும் மார்பையுடைய கந்துகன் சிறுவன் ; விலங்கல் அன்ன வேக வேழம் நான்கும் வெல்லும் ஆற்றலன் என - மலையனைய விரையும் திசைக்களிறுகள் நான்கையும் வெல்லும் வலிமையுடையான் என்று ; நலம் கலந்து உரைக்கும் - உலகம் அவனுடைய தகவைக் கூறும் ; இந் நல் நகர்க்கு மன்னனோ - இந்த அழகிய நகருக்கு அவன் அரசனோ? நீவிர் உரைமின் என்ன - நீங்கள் உரைப்பீராக என்று வினவ,

(வி - ம்.) இப் பாட்டுக் குளகம்.

உரைக்கும் என்னும் பயனிலைக்கு உலகம் என்னும் எழுவாய் வருவித்தோதுக; மார்பின் மகன் கந்துகன் மகன் எனத் தனித் தனிக் கூட்டுக. (௧௯௭)

௬௯0. மட்ட விழ்ந்த தாரி னானிம் மாந கர்க்கு ளாயிரர்
தொட்டெ டுக்க லாவு லம்மோர் தோளி னேந்தி யாடினா
னொட்டி நாக மோரி ரண்டெ டுக்க லாத கல்லினை
விட்ட லர்ந்த போது போல வேந்த லேந்தி நீக்கினான்.

(இ - ள்.) மட்டு அவிழ்ந்த தாரினான் - தேன் விரிந்த மாலையினான் ; இம் மா நகர்க்குள் ஆயிரர்தொட்டு எடுக்கலா உலம் - இப் பெரு நகரிலே ஆயிரவர் தீண்டியெடுக்க இயலாத கல்லுருண்டையை ; ஓர் தோளின் ஏந்தி ஆடினான் - ஒரு தோளிலே ஏந்தி ஆடினான் ; ஓர் இரண்டு நாகம் எடுக்கலாத கல்லினை - இரண்டு களிறுகள் எடுக்க முடியாத கல்லை ; ஒட்டி விட்டு அலர்ந்த போதுபோல - சூளுரைத்து முறுக்கலர்ந்த மலர் போல (எளிதாக) ஏந்தல் ஏந்தி நீக்கினான்-அச் சிறப்புடையான் எடுத்து எறிந்தான்.

(வி - ம்.) 'நாகம் ஓரிரண்டு எடுக்காத கல்' என்பதற்கு 'நாகம் எடுக்கலாத ஓரிரண்டு கல்' என மொழிமாற்றியுரைப்பர் நச்சினார்க்கினியர்.

இதுமுதல் மூன்று பாடல் அமைச்சர் கூற்றைக் கொண்டு கூறியவாறு. (௧௧அ)

௪௧௧. வெஞ்சி லையின் வேடர் வெள்ள மப்பு மாரி தூவலி
னெஞ்ச லின்றி நம்ப டையி ரும்மு றையு டைந்தபின்
மஞ்சு சூழ்க ணைம்ம ழைபொ ழிந்து மாநி ரைபெயர்த்
தஞ்சி லோதி யார்பு னைந்த செஞ்சொன் மாலை சூடினான்.

(இ - ள்.) வெம்சிலையின் வெள்ளம் அம்பு மாரி வேடர் எஞ்சலின்றித் தூவலின் - கொடிய வில்லிலிருந்து வெள்ளம் போன்ற அம்பு மழையை வேடர் இடைவிடாமல் தூவியதனால்; நம் படை இருமுறை உடைந்த பின் - நம்முடைய படை இரண்டு முறை தோற்ற பிறகு; மஞ்சுசூழ் மழைக் கணை பொழிந்து மாநிரை பெயர்த்து - முகில் சூழ்ந்து பெய்யும் மழைபோல அம்புகளைப் பொழிந்து பெருநிரைகளைத் திருப்பிக் கொணர்ந்து; அம்சில் ஓதியார் புனைந்த செம்சொல் மாலை சூடினான் - அழகிய சிலவாகிய கூந்தலார் அணிந்த நல்ல சொல் மாலைகளைப் புனைந்தான்.

(வி - ம்.) ஒற்றுமை நயங்கருதி ஆயர்படை உடைந்தமையையுங் கூட்டி நம்படை இருமுறை உடைந்தது என்றார் என்க. (௧௧௯)

௪௧௨. தீம்ப யறி யன்ற சோறு செப்பி னாயி ரம்மிடா
நீங்க லாந றுங்நெய் வெள்ளங் கன்ன லாயி ரங்குட
மேந்து வித்து நாமி சைய வந்து தந்து நீக்கினா
னாங்கு நாம்ப சித்த சைந்த காலை யன்ற வண்ணலே.

(இ - ள்.) செப்பின் அன்று ஆங்கு நாம் பசித்து அசைந்த காலை - கூறுமிடத்து அன்று அவ்விடத்தே நாம் பசித்துச் சோர்ந்த பொழுது; தீம் பயறு இயன்ற சோறு ஆயிரம் மிடா - இனிய பருப்புச் சோறு ஆயிரம் மிடாவும்; நீங்கலா நறுநெய் வெள்ளம் கன்னல் ஆயிரம் குடம் - நீங்காத மணமுடைய நெய் வெள்ளமும் கருப்பஞ்சாறும் ஆயிரமாயிரங் குடமும்; ஏந்துவித்து வந்து நாம் மிசையத் தந்து நீக்கினான் - சுமந்துவரச் செய்து வந்து நாம் உண்ணக் கொடுத்துப் பசியைப் போக்கினான்.

(வி - ம்.) இதனால்,

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு." (குறள். ௧௧0)

என்னும் அறத்தினை அமைச்சர் கட்டியங்காரனுக்குக் குறிப்பாற் கூற முயறலை உணரலாம். மேலும் அமைச்சர் முதலியோர் அவனை உள்ளத்தே வெறுத்துப் புறமே நட்டொழுகுதலையும் உணரலாம். (உ00)

௩௯௩. இன்ன னென்ன வின்பு றுனி ழந்த னன்ன ரசென
வென்னை வெளவு வாயில்தா னென்னுஞ் சூழ்ச்சி தன்னுளா
னன்ன தாலரிறப வறிந்து கூத்தி கூறினு
ளின்ன தாற்ப டையமைத் தெழுமி னென்றி யம்பினன்.

(இ - ள்.) இன்னன் என்ன இன்பு உறுன் - இத் தன்மையன் என்று அமைச்சர் கூறவும் மகிழாதவனுய்; அரசு இழந்தனன் என - இனி நான் அரசிழந்தேன் என்று உட்கொண்டு; வெளவும் வாயில்தான் என்னை என்னும் - சீவகனை அகப்படுக்கும் வழிதான் என்னையோ என்கிற; சூழ்ச்சி தன்னுளான் - சூழ்ச்சியிலே இருக்கிறுன்; அன்னது ஆதல் - அவன் கருத்து அவ்வாறு இருத்தலை; அரில்தப அறிந்து கூத்தி கூறினுள் - குற்றமின்றி அறிந்து நாகமாலை கூறினுள்; இன்னதால் - இப்படியிருப்பதால்; படை அமைத்து நீவிர் எழுமின் என்று இயம்பினன். - நீங்கள் படை திரட்டி எழுவீர்களாக என்று கந்துகன் கூறினுன்.

(வி - ம்) [நச்சினுர்க்கினியர், 'சூழ்ச்சி தன்னுளான்' என்பதன் பின் 'இதுபட்டது என்றுள்' என்று, ௩௭0 - ௭௧-ஆம் செய்யுளில் உள்ள சொற்களைக் கொணர்ந்து கூட்டி இச் செய்தியை ஓலை கொண்டு வந்தவள் கூற்றுக்குவர். அதற்காக ௩௩௭ - முதல் ௩௩௩ வரை ஒரு தொடராக்கிக் கொண்டு கூட்டுவர். அது பொருத்தமன் றென்பதை முன்னர் ௩௭௧-ஆம் செய்யுளில் உரைத்தாம்.] (உ0௧)

வேறு

௩௯௪. தாதைதா னுரைத்த வெல்லாந்
தன்னுயிர்த் தோழன் கூறக்
கோதைமுத் தணிந்த மார்பன்
கூரெயி றிலங்க நக்காங்
கேதமொன் றில்லை சேற
மென்றலு மிலங்கு வாட்கைப்
போதுலாங் கண்ணி மைந்தர்
போர்ப்புலிக் குழாத்திற் சூழ்ந்தார்.

(இ - ள்.) தாதைதான் உரைத்த எல்லாம் - கந்துகன் கூறிய எல்லாவற்றையும்; தன் உயிர்த் தோழன் கூற - அவன் உயிர் நண்பன் உரைக்க; கோதை முத்து அணிந்த மார்பன் - பூமாலையும் முத்துமாலையும் அணிந்த மார்பனுன சீவகன்; கூர்

எயிறு இலங்க நக்கு - கூரிய பற்கள் தோன்ற நகைத்து; ஆங்கு ஏதம் ஒன்று இல்லை, சேறும் என்றலும் - ஆங்குத் தீமையேதும் இராது; செல்வோம் என்ற அளவிலே; இலங்கு வாள் கைப் போது உலாம் கண்ணி மைந்தர்-விளங்கும் வாளேந்திய கையின ரான, மலர் பொருந்திய கண்ணிகளையுடைய வீரர்கள்; போர்ப் புலிக் குழாத்தின் சூழ்ந்தார் - போர்க்குரிய புலித்திரள் போலச் சூழ்ந்தனர்.

(வி - ம்) கட்டியங்காரனால் ஏதம் வருமென்றற்கு நகைத்தா னெனினும் தந்தை மொழியைக் கடவாமற் 'சேறும்' என்றான். ['சேடி கூற்றிற்கு நக்கான்; கந்துகன் கூற்றிற்கு ஏதமின்றென்றான்' என்று நச்சினார்க்கினியர் கூறினர்.] (௨0௨)

௬௬௫. கண்ணுதற் கடவுள் சீறக் கனலெரி குளித்த காமன்
மண்மிசைத் தோன்றி யன்ன வகைநல முடையகாளை
தெண்மணியார மார்பன் றிருநுதன்மகளிர் நெஞ்சத்
துண்ணிறை பருகும் வண்டா ருருவமை திருவின்மிக்கான்.

(இ - ள்.) கண்ணுதல் கடவுள் சீற - நெற்றிக் கண்ணை யுடைய கடவுள் சீறுதலின்; கனல் எரி குளித்த காமன் - கன லும் தீயிலே முழுகிய காமன்; மண்மிசைத் தோன்றி அன்ன - மீண்டும் நிலத்தின்மேல் தோன்றினாற் போன்ற; வகை நலம் உடைய காளை - உறுப்பழகுடைய சீவகன்; தெள்மணி ஆரம் மார்பன் - தெளிந்த மணியும் ஆரமும் உடைய மார்பன்; திரு நுதல் மகளிர் நெஞ்சத்து - அழகிய நெற்றியை உடைய மகளி ரின் உள்ளத்தின்; உள்நிறை பருகும் - உள்ளே பொருந்திய நிறையைப் பருகும்; வண்தார் உரு அமை திருவின் மிக்கான் - வளவிய தாரணிந்த அழகு பொருந்திய செல்வம் உடையவன் ஆனான்.

(வி - ம்.) திருவின் மிக்கான்: பெயருமாம். இதுமுதல் நான்கு செய்யுட்கள் சீவகன் அணிசெய்து கொண்டதைக் கூறும்.

கண்ணுதற் கடவுள் - சிவபெருமான். கனலெரி: வினைத்தொகை. அதனால் சீவகன் இயற்கை அழகு தெரித்துக் கூறி மேலே செயற்கை அழகோதுகின்றார். (௨0௩)

௬௬௬. கருநெறி பயின்ற குஞ்சிக் காழகில் கமழ வூட்டி
வரிநிற வண்ண மாலை வலம்பல மிலைச்சி வாளார்
திருநிற முகத்திற் கேற்பச் செம்பொனோ ரோலை சேர்த்தி
யெரிநிறக் குழையோர் காதிற் கிருளறச் சுடர வைத்தான்.

(இ - ள்.) கருநெறி பயின்ற குஞ்சி காழ் அகில் கமழ ஊட்டி - கரிய நெறி பழகிய குஞ்சியிலே கரிய அகிற் புகை

மணம் பெற ஊட்டி; வரிநிற வண்ணமாலை வலம்பட மிலைச்சி - வண்டின் பாட்டு நிறமுடைய அழகிய மாலையை அக்குஞ்சியிலே பொருந்த அணிந்து; வாள் ஆர் திருநிற முகத்திற்கு ஏற்ப-ஒளி பொருந்திய அழகிய நிறமுற்ற முகத்திற்குச் தக; ஓர் செம்பொன் ஓலை சேர்த்தி - (ஒரு காதில்) ஒரு நல்ல பொன்னோலையை அணிந்து; ஓர் காதிற்கு எரிநிறக் குழை இருள் அறச் சுடர வைத்தான் - ஒரு காதிலே தீநிறக் குழையை இருள் நீங்க ஒளிருமாறு அணிந்தான்.

(வி - ம்.) வரிநிற வண்ணமாலை என்பதற்கு, வண்டின் நிறம் போன்ற நிறமுடைய மணிமாலை எனினுமாம். "வண்டினது பாட்டின் நிறத்தையுடைய மாலை" என்பர் நச்சினார்க்கினியர். (௨0௪)

௬௬௭. தென்வரைப் பொதியிற் றந்த
சந்தனத் தேய்வை தேங்கோண்
மன்வரை யகலத் தப்பி
வலம்புரி யாரந் தாங்கி
மின்விரித் தனைய தோத்து
விலைவரம் பறிய லாகா
வின்னுரைக் கலிங்க மேற்ப
மருங்குலுக் கெழுதி வைத்தான்.

(இ - ள்.) தென் வரைப் பொதியில் தந்த சந்தனத் தேய்வை - தெற்கில் எல்லையாகிய பொதியமலை தந்த சந்தனக் குழம்பை; தேன்கொள் மன் வரை அகலத்து அப்பி - (கண்ணுக்கு) இனிமை கொண்ட பெருமையுற்ற மலைபோலும் மார்பிலே பூசிக்கொண்டு; வலம்புரி ஆரம் தாங்கி - வலம்புரி யீன்ற முத்துமாலை அணிந்து; மின்விரித்த அனையது ஒத்து - மின்னை அகலமாக விரித்தாற் போன்று; விலை வரம்பு அறியல் ஆகா - விலையளவு அறிய இயலாத; இன் நுரைக் கலிங்கம் மருங்குலுக்கு ஏற்ப - இனிய நுரையைப் போன்ற ஆடையை இடைக்குத் தக; எழுதி வைத்தான் - எழுதினாற் போல உடுத்தான்.

(வி - ம்.) எழுதிவைத்தான் - எழுதினாற்போல உடுத்தான் என்க. தென்வரைப் பொதியில் - தென்றிசைக்கண் உள்ள மலையாகிய பொதியில். (௨0௫)

௬௬௮. இரும்பறக் கழுவி யெஃகி னிருளற வடிக்கப் பட்ட
வரும்பெறற் சுரிகை யம்பூங் கச்சிடைக் கோத்து வாங்கிக்
பெருந்தகைக் குருசில் கொண்டு பெருவலஞ் சுடர வீக்கித்
திருந்திழை மகளிர் வெஃகுந் தேவிளங் குமர னேத்தான்.

(இ - ள்.) இரும்பு அறக் கழுவி எஃகின் இருள் அற வடிக்கப்பட்ட - இரும்பை முற்றும் உருக்கிய எஃகினால் ஒளியுற வடித்துச் செய்யப்பட்ட; அரும்பெறல் சுரிகை - அருமையாகக் கிடைக்கும் சுரிகையை; பெருந்தகைக் குருசில் - பெருந்தகையாகிய குருசில்; கொண்டு கச்சு இடைக் கோத்து வாங்கி - கையிற் கொண்டு கச்சை இடையிலே கோத்து வாங்கி; பெரு வலம் சுடர வீக்கி - பெரிய வெற்றி தோன்ற இறுக்கிக் கட்டி; திருந்து இழை மகளிர் வெஃகும் தேஇளங்குமரன் ஒத்தான் - விளங்கும் இழையணிந்த பெண்கள் விரும்பும் தெய்வமாகிய முருகனைப் போன்று காணப்பட்டான்.

(வி - ம்.) 'சுரிகை நுழைந்த சுற்று வீங்கு செறிவுடை' (பெரும் பாண். ௭௩) என்றார் பிறரும்.

உருக்குதலானே இரும்பின் மாசு தீர்தலால் உருக்குதலைக் கழுவி என்றார். சுரிகை - உடைவாள். பெருந்தகைக் குருசில் - பெரிய தகுதிப் பாட்டினையும் தலைமைத் தன்மையையும் உடைய சீவகன். தேவிளங் குமரன் என்றது முருகக் கடவுளை. (௨0௬)

௬௬௬. வரைவிழித் திமைப்ப தொக்கும்
வாளொளி யார மார்பின்
விரைவழித் திளைய ரெல்லாம்
விழுமணிக் கலங்க டாங்கி
நுரைகிழித் தனைய நொய்ம்மை
நுண்டுகின் மருங்குல் சேர்த்தி
யுரைகிழித் துணரு மோப்பி
னோவியப் பாவை யொத்தார்.

(இ - ள்.) இளையர் எல்லாம் - மற்ற இளைஞர் யாவரும்; வரைவிழித்து இமைப்பது ஒக்கும் - மலை விழித்து ஒளிர்வதைப் போன்ற; வாள் ஒளிஆரம் மார்பின் - ஒளிவிடும் முத்தணிந்த மார்பிலே; விரைவழித்து - மணந்தருங் கலவையைப் பூசி; விழுமணிக் கலங்கள் தாங்கி - சிறந்த மணிப்பூண்களை அணிந்து; நுரைகிழித்த அனைய நொய்மை நுண் துகில் மருங்குல் சேர்த்தி - நுரையைக் கிழித்தாற் போன்ற மெல்லிய நுண்ணிய ஆடையை இடையிலே அணிந்து; உரை கிழித்து உணரும் ஒப்பின் ஓவியப் பாவை ஒத்தார் - சொல்லால் உரைத்தற்கரிய, உள்ளத்தால் உணரும் ஓவியப் பாவையைப் போன்றார்.

(வி - ம்.) பாவை இருபாற்கும் பொது. 'கைபுனை பாவை யெல்லாம் கதிர்முலை ஆக்கினான்' (௬0௭) என்றதனானுங் கொள்க. [இமைத்து விழிப்ப தென்றார் அசைவின்கட் பாடஞ் செய்தலின்.]

இமைத்து விழிப்பதென்றார் ஆரமசையுந்தோறும் விட்டுவிட்டொளிர்தலான். விரை - நறுமணப் பொருள். நுரையை ஆடையாக்கிக் கிழித்தாற்போன்ற நொய்மையுடைய நுண் துகில் என்க. உரை கிழித்து என்றது சொல்லை அகற்றி என்றவாறு. சொல்லாற் சொலப்படாமல் மனத்தான் மட்டும் உணர்வதாகிய ஒப்பு என்க. (உOஎ)

எOO. அரக்குநீ ரெறியப் பட்ட வஞ்சனக் குன்ற மன்ன
திருக்கிள ரோடை சூழ்ந்த செம்புகர் நெற்றித் தாகி
யுருக்கியூ னுண்ணும் வேகத் துறுபுலி யனைய நாக
மருக்கனோர் குன்றஞ் சேர்ந்தாங் கண்ணரு னேறி னானே.

(இ - ள்.) திருகிளர் ஓடை சூழ்ந்த செம்புகர் நெற்றித்து ஆகி-அழகு பொருந்திய முகபடாம் அணிந்த சிவந்த புள்ளிகளையுடைய நெற்றியதாதலின்; அரக்கு நீர் எறியப்பட்ட அஞ்சனக் குன்றம் அன்ன நாகம் - செவ்வரக்கு நீரைச் சிதறிய கருமலை போன்ற யானைமேல்; ஊன் உருக்கி உண்ணும் வேகத்து உறு புலி அனைய அண்ணல் - ஊனை உருக்கித் தின்னும் விரைவினையுடைய வலிமிகு புலியைப் போன்ற சீவகன்; அருக்கன் ஓர் குன்றம் சேர்ந்தாங்கு ஏறினான் - ஞாயிறு ஒரு மலையை அடைந்தாற்போல ஏறினான்.

(வி - ம்.) அரக்குநீர் - சாதிலிங்கக் குழம்பு. அஞ்சனக்குன்று - கரியமலை. செம்புகர் - செம்புள்ளிகள். உறுபுலியனைய அண்ணல் அருக்கன்குன்றம்சேர்ந்தாங்கு நாகம் ஏறினான் என இயைத்துக்கொள்க. (உOஅ)

எOக. விடுகணை விசையின் வெய்ய விளங்கொளி யிவுளித் திண்டேர்
கடுநடைக் கவரி நெற்றிக் காலியற் புரவி காய்ந்து
வடிநுனை யொளிறு மாலை வாட்படை மறவர் சூழ
வடுதிரைச் சங்க மார்ப்ப வணிநகர் முன்னி னானே.

(இ - ள்.) விடுகணை விசையின் வெய்ய விளங்கு ஒளி இவுளித் திண் தேர் - விடும் அம்பின் வேகம் போன்ற விரைவினையுடைய விரும்பத்தக்க விளக்கமான ஒளியையுடைய புரவிகள் பூட்டிய தேரும்; கடுநடைக் கவரி நெற்றிக் கால் இயல் புரவி - விரைந்த செலவையும் கவரியுடைய நெற்றியையும் உடைய காற்றைப் போன்ற இயல்புடைய புரவியும்; காய்ந்து வடி நுனை ஒளிரும் மாலை வாள்படை மறவர் - காய்ந்து வடித்த முனை விளங்கும், மாலையணிந்த வாட்படை யேந்திய வீரரும்; சூழ - சூழ்ந்துவர; அடுதிரைச் சங்கம் ஆர்ப்ப - கரையைத் தாக்கும் அலைகளையுடைய கடல்தந்த சங்குகள் முழங்க; அணிநகர் முன்னினார் - சென்று அழகிய யாழ் மண்டபத்தை அடைந்தனர்.

(வி - ம்.) மங்கலத்திற்குச் சங்கு கூறினர்.

விடுகணை : வினைத்தொகை. இவுளி - குதிரை. காலியல்புரவி - காற்றை ஒத்த குதிரை. அடுதிரை - கரையை மோதும் அலையையுடைய கடல் : அன்மொழி. நகர் - மண்டபம். (உ0௯)

௭0உ. தோற்றனண் மடந்தை நல்யாழ்
தோன்றலுக் கென்று நிற்பார்
நோற்றன ணங்கை மைந்த
னிளநல னுகர்தற் கென்பார்
கோற்றேடி மகளிர் செம்பொற்
கோதையுங் குழையு மின்ன
வேற்றன சொல்லி நிற்பா
ரெங்கணு மாயி ஞரே.

(இ - ள்.) கோல் தொடி மகளிர் செம்பொன் கோதையும் குழையும் மின்ன - திரண்ட வளையல்களையுடைய மங்கையர் பொன் மாலையும் குழையும் துன்னுமாறு (வந்து); தோன்றலுக்கு மடந்தை நல்யாழ் தோற்றனள் என்று நிற்பார் - சீவகனுக்குத் தத்தை நல்ல யாழிலே தோற்றாள் என்று நிற்பாரும்; மைந்தன் இளநலம் நுகர்தற்கு நங்கை நோற்றனள் என்பார் - சீவகனுடைய இளமையின்பத்தை நுகரத் தத்தை நோற்றாள் என்பாரும்; ஏற்றன சொல்லி நிற்பார் - (இவைபோல மேலும்) பொருந்துவன புகன்று நிற்பாருமாக; எங்கணும் ஆயினர் - எவ்விடத்தும் நிறைந்தனர்.

(வி - ம்.) இவன் கல்வி உணர்தலின் தெளிவு பற்றித், 'தோற்றனள்' என்று இறந்த காலத்தாற் கூறினர். (உ௧0)

வேறு

௭0௩. சுரும்நி றக்கோ டுங்குழை சுழன்றெ ருத்த லைத்தர
வரும லர்த்தெ ரியலா னழன்று நோக்கி யையெனப்
பொரும னப்பொ லிவெனு மணிக்கை மத்தி கையினு
லருவி வந்து தோன்றினு னனங்க னன்ன வண்ணலே.

(இ - ள்.) சுரும்நிறக் கொடுங்குழை சுழன்று எருத்து அலைத்தர - மகர வடிவமான, நிறமுடைய, வளைந்த குழை சுழன்று பிடரிலே அலைக்க; அரு மலர்த் தெரியலான் - மணம் நீங்காத மலர்மாலையனை கட்டியங்காரன்; அழன்று நோக்கி ஐ என - எரிவுடன் பார்த்து வியப்புற; பொருமனம் பொலிவு எனும் மணிக்கை மத்திகையினால் - பொருத வுள்ளத்தைத் தன் பொலிவு என்னும் மணிக்கைப் பிடியுடைய குதிரைச் சவுக்காலே; அருவி - அடித்து; அனங்கன் அன்ன அண்ணல் வந்து தோன்றினன் - காமனையனைய காளை வந்து தோன்றினன்.

(வி - ம்.) மனம் பொலிவு: மனப் பொலிவு: விகாரம். சீவகன் பொலிவு கட்டியங்காரன் மனத்தைக் கெடுத்ததென்க. மத்திகை யென்றலின் கைப்பிடி கூறினர்; கையில் இருக்கும் என அடைகூறினர் எனலுமாம்.

தெரியலான் - ஈண்டுக் கட்டியங்காரன். அழுக்காறுடையோர்க்கு மாற்றார் செல்வம் காண்டலே பெருந்துன்பமாதலின், அவன் மனத்தைத் தன் பொலிவாலே அறுவினன் என்றார். அறுவுதல் - ஈண்டு அடித்தல் என்னும் பொருட்டாய் நின்றது. (உகக)

எoச. குனிகோள் பாக வெண்மதிக் கூரி ரும்பு தானுறீஇப்
பனிகோண் மால்வ ரையெனப் படும தக்க ளிறிரீஇ
இனிதி ழிந்தி ளைய ரேத்த வின்னகிற் கொழும்புகை
முனிய வுண்ட குஞ்சியான் முரண்கோண் மாட முன்னினன்.

(இ - ள்.) இன் அகில் கொழும்புகை முனிய உண்ட குஞ்சியான் - இனிய மணமுறும் அகிலின் நல்ல புகை வெறுக்கப் பயின்ற சிகையினன்; குனி கொள் பாகம் வெண்மதிக் கூர் இரும்பு உறீஇ - வளைவு கொண்ட, வெண்மதியின் பாகமே போன்ற கூரிய தோட்டியை அழுத்தி; பனிகொள் மால்வரை யென மதம்படு களிறு இரீஇ - நீர் துளிக்கும் பெருமலை போன்ற மதஞ் சொரியும் யானையை இருத்தி; இளையர் ஏத்த இனிது இழிந்து - இளைஞர்கள் வாழ்த்த இனிதாக இறங்கி; முரண்கொள் மாடம் முன்னினன் - யாழினல் மாறுபட்ட மண்டபத்தை அடைந்தான்.

(வி - ம்.) 'குனிவு' என்பது விகாரமுற்றுக் 'குனி' என வந்தது.

குனிகொள் பாக வெண்மதிக் கூரிரும்பு என்றது யானைத்தோட்டியை. தோட்டியைச் செருகி என்றவாறு. தோட்டியை யானையின் செவியிலே செருகி வைத்தல் வழக்கம். இரீஇ - இருத்தி; நிறுத்தி. யாழ்ப்போர் நிகழ்தல்பற்றி முரண்கொள் மாடம் என்றார். (உகஉ)

எoரு. புதிதி னிட்ட பூந்தவிசி னுச்சி மேல்ந டந்தவண்
புதிதி னிட்ட மெல்லணைப் பொலிந்த வண்ணம் போகுயர்
மதிய தேறி வெஞ்சுடர் வெம்மை நீங்க மன்னிய
வுதய மென்னு மால்வரை யுவந்தி ருந்த தொத்ததே.

(இ - ள்.) புதிதின் இட்ட பூந்தவிசின் உச்சிமேல் நடந்து - புதிதாக இட்ட பூந்தவிசின் மேலே நடந்து சென்று; அவண் புதிதின் இட்ட மெல்அணை பொலிந்த வண்ணம் - ஆங்குப் புதிதாக இட்ட மெல்லிய அணையின் மேல் பொலிவுடன் இருந்த தன்மை; போகுஉயர் மதியது ஏறி - மிகவுயர்ந்த மதியத்தின் மேல் ஏறி; வெஞ்சுடர் வெம்மை நீங்க மன்னிய - ஞாயிறு தன் வெம்மை நீங்குதற்குப் பொருந்திய; உதயம் என்னும் மால்வரை

உவந்து இருந்தது ஒத்தது - உதயம் என்னும் பெரிய மலைமீது மகிழ்ந்து இருந்தது போன்றது.

(வி - ம்.) புதிதின்: இன்: அசை. போகு உயர்மதி - உயர்ந்த மதி. மலையும் மதியமும் சுடரும், மண்டபத்திற்கும் அணைக்கும் சீவகனுக்கும் உவமை. (௨௧௩)

௭0௬. முருகு விம்மு கோதையார் மொய்ய லங்கல் வண்டுபோற்
பருகு வானி வண்ணலம் பாரித் திட்ட விந்நக
ருருகு மைங்க ணையொழித் துருவி னைய காமனார்
கருதி வந்த தென்றுதங் கண்கள் கொண்டு நோக்கினார்.

(இ - ள்.) மொய் அலங்கல் வண்டுபோல் - நெருங்கிய அலங்கலில் வண்டு தேன் பருகுதல் போல; இவள் நலம் பருகுவான் கருதி - இவள் அழகைப் பருக நினைத்து; பாரித்திட்ட இந் நகர் - இவள் அழகு பரவிய இந் நகரிலே; உருவின் ஐய காமனார் உருகும் ஐங்கணை ஒழித்து - உருவினால் வியப்பூட்டுங் காமனார், உளமுருகும் ஐங்கணைகளை நீக்கி; வந்தது என்று - வந்ததாகிய தன்மையென்று எண்ணி; முருகு விம்மு கோதையார் - மணம் விரியும் மாலை மங்கையர்; தம் கண்கள் கொண்டு நோக்கினார் - தம் கண்களைக் கொண்டு அவனைப் பார்த்தனர்.

(வி - ம்.) ஐங்கணை இரண்டு வகை.

> 'அந்தண் அரவிந்தம் மாம்பூ அசோகப்பூ
> பைந்தளிர் முல்லை பனிநீலம்—ஐந்துமே
> வீரவேல் மைந்தரையும் வேனெடுங்கண் மாதரையும்
> மாரவேள் எய்யும் மலர்.'

இவை திரவிய பாணம்; இங்கிதம், மதனம், வசீகரணம், மோகனம், சந்தாபம்—இவை பாவபாணம். (௨௧௪)

௭0௭. முனைத்தி றத்து மிக்கசீர் முனைவர் தம்மு னைவனார்
வனப்பு மிக்க வர்களின் வனப்பு மிக்கி னியனா
நினைத்தி ருந்தி யற்றிய நிருமி தம்ம கனிவன்
கனைத்து வண்டு ளார்ந்ததார்க் காளை சீவ கன்னரோ.

(இ - ள்.) முனைத் திறத்து மிக்கசீர் முனைவர்தம் முனைவனார் - தவம்செய் திறத்தால் மேம்பட்ட சிறப்புடைய தவத்தினரின் மேம்பட்ட அயனார்; வனப்பு மிக்கவர்களின் வனப்பு மிக்க இனியன் ஆ - அழகு மிகுந்தவர்களினும் அழகின் மேம்பட்ட இனியவனாக; நினைத்திருந்து - (படைக்க) எண்ணியிருந்து; இயற்றிய நிருமித மகன் இவன் - படைத்த படைப்பு மகனாகிய இவன்; கனைத்து வண்டு உளார்ந்ததார்க் காளை சீவகன்-முரன்று வண்டுகள் கிண்டிய மாலை யணிந்த காளையாகிய சீவகனாவான்.

(வி - ம்.) நிருமிதம் - படைப்பு. 'இவன்' என்பதை அடுத்த செய்யுளில் உள்ள 'மார்பம்' என்பதன்முன் சேர்ப்பர் நச்சினார்க்கினியர். நிருமிதம் மகன் : மகரம் விரித்தல் விகாரம். (உகடு)

எ0அ. பொன்னை விட்ட சாயலாள் புணர்மு லைத்த டத்தினுன்
மின்னை விட்டி லங்குபூண் விரைசெய் மார்ப மோலையா
வென்னை பட்ட வாறரோ வெழுதி நங்கை யாட்கொள்வான்
மன்னும் வந்து பட்டனன் மணிசெய் வீணை வாரியே.

(இ - ள்.) மின்னை விட்டு இலங்கு பூண் விரைசெய் மார்பம் ஓலை ஆ - ஒளிவிட்டு விளங்கும் பூண்களையுடைய இவனுடைய மணமிகும் மார்பை ஓலையாகக் கொண்டு; பொன்னை விட்ட சாயலாள் நங்கை புணர்முலைத் தடத்தினால் - திருவையும் வென்ற மென்மையாளாகிய தத்தை தன் இரு முலைகளினாலே; எழுதி ஆட்கொள்வான் - எழுதி அடிமை கொள்ளுமாறு; மணி செய் வீணை வாரி மன்னும் வந்து பட்டனன் - மணிகள் அழுத்திச் செய்யப்பட்ட யாழினால் ஆக்கிய வாரியிலே தப்பாமல் வந்து அகப்பட்டான்; பட்டஆறு என்னை ? - நல்வினை உண்டான வகைதான் என்னே ?

(வி - ம்.) 'நல்வினை' என வருவிக்க. வாரி - யானையைப் பிடிக்கும் இடம். மன்னும் - தப்பாமல் என்றுமாம். (உகசு)

எ0கூ. இனைய கூறி மற்றவ டோழி மாரு மின்புற
வனைய லாம்ப டித்தலா வடிவிற் கெல்லை யாகிய
கனைவண் டோதி கைதொழுங் கடவுள் கண்ணிற் கண்டவ
ரெனைய தெனைய தெய்தினர் அனைய தனைய தாயினர்.

(இ - ள்.) இனைய கூறி அவள் தோழிமாரும் இன்பு உற - இத்தன்மைய ஆகிய மொழிகளைக் கூறி அவள் தோழியரும் இன்பம் உற்றிருக்க; வனையலாம் படித்து அலா வடிவிற்கு எல்லை ஆகிய - எழுதலாம் தன்மையுடையது அல்லாத அழகிற்குச் சான்றாகிய; கனை வண்டு ஓதி - ஒலிக்கும் வண்டுகள் நிறைந்த கூந்தலாளாகிய தத்தை; கை தொழூஉம் கடவுள் - கைகூப்பி வணங்கும் காமனை; கண்ணின் கண்டவர் எனையது எனையது எய்தினர் - கண்ணாற் பார்த்தவர் எவ்வளவு எவ்வளவு இன்பம் அடைந்தனரோ; அனையது அனையது ஆயினர் - அவ்வளவு அவ்வளவாகிய இன்ப நிலையை மற்றோரும் அடைந்தனர்.

(வி - ம்.) 'மற்றோரும்' என வருவிக்க.

வனையலாம் படித்தலாவடிவு - இயற்றுதற்கியலாத தன்மையை யுடைய அழகு என்றவாறு. கனைவண்டு - இசைபாடும் வண்டு. எனையது- எவ்வளவு; அனையது - அவ்வளவு. (உகஎ)

வேறு

எகo. குட்டநீர்க் குவளை யெல்லாங்
கூடிமுன் னிற்க லாற்றுக்
கட்டழ கமைந்த கண்ணா
ணிறையெனுஞ் சிறையைக் கைபோ
யிட்டநாண் வேலி யுந்திக்
கடலென வெழுந்த வேட்கை
விட்டெரி கொளுவ நின்று
ளெரியுறு மெழுகி னின்றாள்.

(இ - ள்.) குட்டம்நீர்க் குவளை எல்லாம் கூடி முன் நிற்கல் ஆற்றுக் கட்டழகு அமைந்த கண்ணாள் - ஆழமான நீரிலுள்ள குவளை மலர்கள் எல்லாம் கூடினாலும் முன் நிற்க இயலாத பேரழகுடைய கண்ணினாளாகிய தத்தை; நிறை எனும் சிறையைக் கைபோய் - நிறை என்னும் காவலைக் கடந்து; இட்ட நாண்வேலி உந்தி-இடப்பட்டிருந்த நாணாகிய வேலியை நீக்கி; கடல் என எழுந்த வேட்கை-கடல்போல எழுந்த வேட்கையாகிய; எரிவிட்டு கொளுவ நின்றாள் - எரி கொழுந்துவிட்டுப் பற்றிக் கொள்ள நின்றவள்; எரியுறும்மெழுகின் நின்றாள்-தீயில் உற்ற மெழுகைப் போல நின்றாள்.

(வி·ம்.) அவள் உள்ளம் சோர்ந்ததற்கு எரியுறும் மெழுகு உவமம். இது [1]கைம்மிகல் என்னும் மெய்ப்பாடு. கண்ணாள் வேட்கைஎரி கொளுவ அவ்வெரியுறு மெழுகின் நின்றாள் என்க. (உகஅ)

எகக. நலத்தைமத் தாக நாட்டி நல்வலி யிளமை வாராக்
குலப்பிறப் பென்னுங் கையாற் கோலப்பா சங்கொ ளுத்திக்
கலக்கியின் காமம் பொங்கக் கடைந்திடு கின்ற காளை
யிலைப்போலி யலங்கன் மார்ப மியைவதென் றதுங் கோல்லோ.

(இ - ள்.) நலத்தை மத்தாக நாட்டி - இயற்கை அழகை மத்தாக நிறுத்தி; நல்வலி இளமை வாராஆ - நல்ல வலிமையும் இளமையும் அம் மத்தின் இருபக்கமும் பூட்டும் கயிறுகளாகக் கொண்டு; குலப்பிறப்பு என்னும் கையால் - தாய்மரபு தந்தை மரபு ஆகிய இரு கைகளினால்; கோலப் பாசம் கொளுத்தி - செயற்கை அழகாகிய கடைகயிற்றை அம் மத்திலே பூட்டி; இன் காமம் பொங்கக் கலக்கி - இனிய காமம் என்னும் கடல்பொங்கு

1. கைம்மிகல்-ஒழுக்கக் கேடு. அது சாதித் தருமத்தை நீங்கினமை தன் உள்ள நிகழ்ச்சியானே பிறர் அறியுமாற்றால் ஒழுகுதல் (தொல். மெய்ப். உஉ. பேர்.) இங்கு வரும் மெய்ப்பாடெல்லாம் தொல். மெய்ப். உஉ-உரு-இல் கூறப்பட்டவை.

மாறு கலக்கி ; கடைந்திடுகின்ற காலை - கடைகின்ற இக் காலையி னது ; இலைப் பொலி அலங்கல் மார்பம் - இலைகளாற் பொலிவுற்ற மாலையணிந்த மார்பினை ; இயைவது என்று ஆகும் கொல்லோ - அடைவதாகிய நல்வினை எந்நாளிலே உண்டாவதோ ?

(வி - ம்.) 'என்றாகும்' என்பது [1]'விரைவு' என்னும் மெய்ப்பாடு. நலம் மத்து, வலிமையும்இளமையும் இருபக்கத்தும் பூட்டும் கயிறு, தாய் மரபு தந்தை மரபு என்னும் இருகுலப்பிறப்பும் கைகள், செயற்கை அழகு கடைகயிறு, காமம் கடல் என்க. (உகக)

எகஉ. தீங்கரும் பெருத்திற் றூங்கி யீயின்றி யிருந்த தீந்தே
றுங்கணுற் பருகி யிட்டு நலனுணப் பட்ட நம்பி
பூங்குழன் மகளிர் முன்னர்ப் புலம்பனீ நெஞ்சே யென்றாள்
வீங்கிய காமம் வென்றார் விளைத்தவின் பத்தோ டொப்பாள்.

(இ - ள்.) தீ கரும்பு எருத்தில் தூங்கி ஈ இன்றி இருந்த தீ தேன் - இனிய கரும்பின் பிடரிலே தூங்கி (இதுவரை) ஈ தொடாமல் இருந்த இனிய தேனுவான் ; நாம் கண்ணால் பருகி யிட்டு நலன் உணப்பட்ட நம்பி - நாம் கண்ணினால் நலத்தை உள்ளடக்கி நுகரப்பட்ட இந் நம்பி ; பூங்குழல் மகளிர் முன்னர் - பூவணிந்த குழலையுடைய மகளிரின் முன்னால் ; நெஞ்சே ! நீ புலம்பல் என்றாள் - உள்ளமே ! நீ வருந்தாதே என்றாள் ; வீங்கிய காமம் வென்றார் விளைத்த இன்பத்தோடு ஒப்பாள் - மிகுந்த காமத்தை வென்ற பெரியோர்கள் கண்ட துறக்க இன்பத்துக்கு ஒப்பாவாளான தத்தை.

(வி - ம்.) ஒப்பாள், 'நெஞ்சே! நம்பி ஈ யின்றி யிருந்த தீந்தேன் நீ புலம்பல்' என்றாள்—என வினை முடிவு செய்க.

'கரும்பெருத்தில் தூங்கி' என எளிமை கூறினாள். 'ஈயின்றி யிருந்த தீந்தேன்' என்றாள், இதுவரை இவனைப் பிற மங்கையர் நுகராதிருந்த பிரமசரியம் கருதி. 'புலம்பல்' என்பது [2]'சிதைவு பிறர்க்கின்மை' என் னும் மெய்ப்பாடு. (உஉ0)

எகங. கண்ணேனும் வலையி னுள்ளான்
கையகப் பட்டி ருந்தான்
பெண்ணேனு முழலை பாயும்
பெருவனப் புடைய நம்பி

1. விரைவு : இயற்கை வகையான் அன்றி ஒரு பொருட்கண் விரைவுத் தொழில்பட உள்ளம் நிகழும் கருத்து.

2. சிதைவு பிறர்க்கின்மை : நகுநயம் மறைத்த வழியும் உள்ளம் சிதைந்து நிறையழியும் ஆகலின், அச்சிதைவு பிறர்க்குப் புலனாகாமை நெஞ்சினை நிறுத்தல்.

எண்ணின்மற் றியாவ னாங்கொ
லென்னிதிற் படுத்த வேந்த
லொண்ணிற வுருவச் செந்தீ
யுருவுகொண் டனைய வேலான்.

(இ - ள்.) கண் எனும் வலையின் உள்ளான் - (என் மனமாகிய) கண் என்னும் வலையினுள் இருக்கின்றான்; கை அகப்பட்டிருந்தான் - (அதனால் அவன்) என் கையில் அகப்பட்டுள்ளான் (ஆகிய); பெண் எனும் உழலை பாயும் பெருவனப்புடைய நம்பி - பெண்மை என்னும் தடையை மீறும் பேரழகுடைய இந்த நம்பி; என் இதில் படுத்த ஏந்தல் - என்னை இந் நிலையிற் பிணித்த ஏந்தல்; ஒள் நிற வுருவச் செந்தீ உருவு கொண்டனைய வேலான் - ஒளியும் நிறமும் உருவும் உடைய செந்தீயே ஒரு வடிவங்கொண்டாற் போன்ற வேலினன்; எண்ணின் யாவன் ஆம் கொல்? - ஆராயின் வானவனோ? மகனோ? யாவனோ?

(வி - ம்.) இவள் விஞ்சையர் மகளாதலின் தன் மனக்கண்ணால் இவனை அறிந்தாள். எனவே, 'கண் வலையினும் கையினும் அகப்பட்டான்' என்றாள். தன்மேல் அவனுக்கு வேட்கை நிகழாததால், 'பெண்ணெனும் உழலை பாயும்' என்றாள். 'யாவனாங்கொல்'—இது [1]ஐயம் என்னும் மெய்ப்பாடு. 'சிறந்துழி ஐயம் சிறந்த தென்ப - இழிந்துழி யிழிபே சுட்டலான' (தொல். களவு-௩) என்பதனால், தலைவிக்கு ஐயம் நிகழாதேனும், ஈண்டுக் களவன்மையானும் தன் மனக்கண்ணால் ஐயந் தீர்தல் வன்மையானும் ஐயம் நிகழ்ந்தது. மக்களால் தன்னை வருத்தலாகாமை முன்னே காண்டலின், 'என்னை இவ் வருத்தத்திலே அகப்படுத்தின ஏந்தல்' என்றாள். (௨௨௧)

௭௪௪. யாவனே யானு மாக வருநிறைக் கதவ நீக்கிக்
காவலென் னெஞ்ச மென்னுங் கன்னிமா டம்பு குந்து
நோவவென் னுள்ளம் யாத்தாய் நின்னையு மாலை யாலே
தேவரிற் செறிய யாப்பன் சிறிதிடைப் படுக வென்றாள்.

(இ - ள்.) யாவனே யானும் ஆக - நீ தேவனெனினும் மகனெனினும் ஆகுக; அருநிறைக் கதவம் நீக்கி - என் அரிய நிறையாகிய கதவைத் திறந்து; காவல் என் நெஞ்சம் என்னும் கன்னி மாடம் புகுந்து-காவலையுடைய என் உள்ளம் ஆகிய கன்னிமாடத்திலே நுழைந்து; என் உள்ளம் நோவ யாத்தாய் - என் உள்ளம் வருந்தப் பிணித்தாய்; மாலையாலே நின்னையும் தேவரின் செறிய யாப்பன் - என் இயல்பினாலே நின்னையும் வானவரைப்போல இமையா நாட்டமுறும்படி இறுகப் பிணிப்பேன்; சிறிது இடைப் படுக என்றாள் - சிறிது பொழுது கழிக என்றாள்.

---

1 ஐயம்: ஒரு பொருட்கண் இருபொருட் டன்மை கருதி வரும் மனத்தடுமாற்றம்.

(வி - ம்.) 'யாவனேயானுமாக'-இஃது [1]ஆராய்ச்சி என்னும் மெய்ப்பாடு. 'யாத்தாய்'—இஃது [2]எதிர்பெய்து பரிதல் என்னும் மெய்ப்பாடு. மேல் மாலையாலே பிணிப்பதுந் தோன்ற 'மாலையாலே யாப்பன்' என்றாள். (உஉஉ)

௭௧௫. கழித்தவே லேறு பெற்ற
கடத்திடைப் பிணையின் மாழ்கி
விழித்துவெய் துயிர்த்து மெல்ல
நடுங்கித் தன் றோழிகூந்த
லிழுக்கிவண் டிரியச் சேர்ந்தோர்
கோடிப்புல்லுங் கோடியிற் புல்லி
யெழிற்றகை மார்பற் கின்யா
ழிதுவுய்த்துக் கொடுமோ வென்றாள்.

(இ - ள்.) *கழித்த வேலேறு பெற்ற* - உறை கழித்த வேலால் தன் மார்பிலே எறியப்பட்ட; *கடத்திடைப் பிணையின் மாழ்கி* - காட்டில் உள்ள பெண்மானே போல வருந்தி; *விழித்து வெய்து உயிர்த்து* - திகைத்துப் பெருமூச்செறிந்து; *மெல்ல நடுங்கி* - மெல்லென நடுங்கி; *தன் தோழி கூந்தல் வண்டு இழுக்கி இரியச் சேர்ந்து* - தன் தோழி வீணாபதியின் கூந்தலில் உள்ள வண்டு தப்பி ஓடுமாறு நெருங்கி; *ஓர் கொடிப் புல்லும் கொடியின் புல்லி* - ஒரு கொடியைத் தழுவும் மற்றொரு கொடியைப் போலத் தழுவி; *எழில்தகை மார்பற்கு இன்யாழ் இது உய்த்துக் கொடு என்றாள்* - அழகிய தகுதிவாய்ந்த மார்பனாகிய இவனுக்கு இனிய யாழாகிய இதனை உய்த்தறியுமாறு கொடு என்றாள்.

(வி - ம்.) கொடுமோ: மோ: முன்னிலையசைச்சொல். உய்த்துக் கொடுத்தலாவது பல யாழ்களையும் கொடுத்து யாழறியும் அவனறிவை உய்த்தறிந்து பிறகு இனிய யாழைத் தருதல். 'மாழ்கி விழித்து உயிர்த்து' என்பவை [3]இடுக்கண் என்னும் மெய்ப்பாடு. 'நடுங்கி'—இது [4]நடுக்கம் என்னும் மெய்ப்பாடு. 'கொடிப் புல்லுங் கொடியிற் புல்லி'—

---

1. **ஆராய்ச்சி:** ஒரு பொருளை நன்று தீது என்று ஆராய்தல்.

2. **எதிர்பெய்து பரிதல்:** உருவ வெளிப்பாடு; தலைமகனையும் அவன் தேர் முதலாயினவற்றையும் தன் எதிர் பெய்து கொண்டு பரிந்து கையறுதல்.

3. **இடுக்கண்:** மலர்ந்த நோக்கம் இன்றி மையல் நோக்கம்பட வரும்.

4. **நடுக்கம்:** அன்பும் அச்சமும் முதலாயின உடம்பிற் புலப்படு மாற்றான் உள்ளம் நடுங்குதல். புதல்வர்க்குப் பிணியில் வழியும் எவனுங் கொல் என்று நடுங்குதல் அன்பால் நடுங்குதல். அச்சம் என்னும் சுவை பிறந்த பின்னர் அதன் வழித் தோன்றிய நடுக்கம் அச்சத்தால் தோன்றிய நடுக்கம்.

இது [1]கையாறு என்னும் மெய்ப்பாடு. 'மெல்ல வழுக்கி' என்பது பாட மாயின், 'அவ்விடத்து நீங்கி' என்க.

நச்சினார்க்கினியர் எகo - முதல், எகங - வரை உள்ள ஆறு செய்யுட் களையும் ஒரு தொடராக்கிச் சொற்களைக் கொண்டு கூட்டிக் கூறும் முடிபு :—

மிக்க அழகுடைய கண்ணாள், இன்பத்தோடு ஒப்பாள், அவள், 'வேலான், வனப்புடைய நம்பி, என்னிதிற் படுத்த எந்தல், இவன் ஆராய்ந்தால் யாவனுங் கொல்' என ஐயுற்று, 'யாவனே யானும் ஆக ; நமது ஞானக்கண்ணிடத்தான் ; அதனால், யான் நோக்கினவிடத்துக் கையகப்பட்டேயிருந்தான்; அங்ஙனமிருந்து கடைந்திடுகின்ற காளையது மார்பு இயைவது என்றுவது கொல்லோ.' என்று ஐயுற்று நோக்கி, அக்காலம் சிறிது நீட்டித்தலின், அதற்கு ஆற்றாது, சிறையைக் கைபோய், நாண் வேலியைப் பாய்ந்து, காமத் தீ எரிய நின்றாள் ; அப்போது எரியுறு மெழுகின் நின்றாள், அங்ஙனம் நின்று மாழ்கி விழித்து உயிர்த்து நடுங்கி மெலலத் தோழி மேலே விழுந்து அவளைப் புல்லி, அங்ஙனம் கையாறுற்ற விடத்துத் தன் மனத்து நின்ற தலைவனை நோக்கி, 'நீக்கி, மாடம் புகுந்தா, யான் நோம்படி என்னுள்ளத்தைப் பிணித்தாய் ; நின்னையும் பிணிப்பேன் ; சிறிது பொழுது கழிக' என்றாள் ; பின்பு தன் நெஞ்சினை நோக்கி, 'நெஞ்சே! நலன் உண்ணப்பட்ட நம்பி ஈயின்றி யிருந்த தீந்தே னாதலால், மகளிர் முன்னே புலம்பா தொழிக' என்று ஆற்றுவித்துத் தேற்றிப் பின்பு தோழியை நோக்கி, 'இனிய யாழிது உய்த்துக் கொடுமோ' என்றாள். (உஉங)

வேறு

எகசு. தடங்க ணாள்ப ணியினாற்
றானவ் வீணை யொன்றினை
நெடுங்க ணாளே ழினியை
நீக்கி யுய்த்து நீட்டினாள்
மடங்க லன்ன மொய்ம்பினான்
வருக வென்று கொண்டுதன்
கிடந்த ஞானத் தெல்லையைக்
கிளக்க லுற்று நோக்கினான்.

(இ - ள்.) தடங்கணாள் பணியினால் அவ்வீணை ஒன்றினை உய்த்து - தத்தையின் ஆணைப்படி அவ்வீணைகளில் ஒன்றை ஆராய்ந்து ; எழினியை நீக்கி - உறையை விலக்கி ; நெடுங்கணாள் தான் நீட்டினாள் - வீணாபதி கொடுத்தாள் ; மடங்கல் அன்ன மொய்ம்பினான்-சிங்கமனைய ஆற்றலான் ; வருகஎன்று கொண்டு- கொணர்க என்று வாங்கி ; தன் கிடந்த ஞானத்து எல்லையை - தன் பரவிய அறிவின் எல்லையினால் ; கிளக்கல் உற்று நோக்கி னான் - அறிவிக்க வேண்டி ஆராய்ந்தான். (உஉச)

1. கையாறு : உயிர்ப்பும் இன்றி வினையொழிந்தயர்தல்.

எகஎ. சுரந்து வானஞ் சூன்முதிர்ந்து
மெய்ந்நோந் தீன்ற துளியேபோற்
பரந்த கேள்வித் துறைபோய
பைந்தார் மார்பன் பசும்பொன்யாழ்
நரம்பு தேனார்த் தெனத்தீண்டி
நல்லாள் வீணை பொல்லாமை
யிருந்த முலையா ணின்றானை
நோக்கி யிசையி னிதுசொன்னான்.

(இ - ள்.) வானம் சூல்முற்றி மெய்ந்நொந்து சுரந்து ஈன்ற துளியேபோல் - முகில் சூல் முதிர்ந்து உடல் வருந்திச் சுரந்து பெய்த மழை எங்குஞ் சென்று பயன்பட்டாற் போல; பரந்த கேள்வித்துறை போய பைந்தார் மார்பன் - பரவிய எல்லாக் கேள்வித்துறை யினுஞ் சென்று முற்றக் கற்றுப் பன்படும் புதிய மாலை மார்பன்; பசும்பொன் யாழ் நரம்பு - பைம் பொன்னாலான யாழின் நரம்பை; தேன் ஆர்த்தது எனத் தீண்டி - வண்டுமுரல்வது போலத் தெறித்து; நல்லாள் வீணை பொல்லாமை - தத்தையின் யாழிலே குற்றமுடைமையை; இருந்த முலையாள் நின்றானை நோக்கி - உள்ளடங்கிய முலையுடன் நின்ற வீணாபதியைப் பார்த்து; இசையின் இது சொன்னான் - இசைபோல இது என்று கூறினான்.

(வி - ம்.) பொல்லாங்கு பலவற்றையும் சாதி யொருமையால் 'இது' என்றான். நரம்பின் இசையாற் பிறந்த பொல்லாமையாவன: [1]"செம்பகை ஆர்ப்புக் கூடம் அதிர்வு" "செம்பகை என்பது பண்ணோ டொரா- இன்பமில் லிசை எனமனார் புலவர்" "ஆர்ப்பெனப் படுவது அளவிறந் திசைக்கும்" "கூடம் என்பது குறியுற விளம்பின் - வாய்வதின் வாராது மழுங்கி இசைப்பதுவே" "அதிர்வு எனப்படுவது இழுமெனல் இன்றிச் சிதறியுரைக - நா உச்சரிப் பிசையே" என்பன. இவை மரக்குற்றத்தாற் பிறக்கும்; "நீரிலே நிற்றல் அழுகுதல் வேதல் நிலமயக்குப் - பாரிலே நிற்றல் இடிவீழ்தல் நோய்மரப் பாற்படல்கோள் - நேரிலே செம்பகை ஆர்ப்பொடு கூடம் அதிர்வு நிறை - சேரினோர் பண்கள் நிறமயக் கப்படும் திற்றைமையே" இதனால் மரக்குற்றங்கள் இவை எனவும் அவையே பண்கள் மயங்குவதற்குக் காரணங்கள் எனவும் அறிக. (உஉரு)

எகஅ. நீர்நின் றிளகிற் றிதுவேண்டா
நீரின் வந்த திதுபோக
வார்நின் றிளகு முலையினாய்
வாட்புண் ணுற்ற திதுநடக்க

1. அடியார்க்கு நல்லாருரையிற் காண்க. (சிலப். அ: உக - கூ)

வோரு முருமே றிதுவுண்ட
தோழிக வோண்போன் னுகுகோடியே
சீர்சால் கணிகை சிறுவன்போற்
சிறப்பின் றம்ம விதுவேன்றான்.

(இ - ள்.) வார்நின்று இளகும் முலையினாய்!-வார்இளகுறு முலையினாய்!; ஒண்பொன் உகு கொடியே! - சிறந்த ஒளியைச் சிந்தும் பொற்கொடியே!; இது நீர் நின்று இளகிற்று, வேண்டா - இது நீரில் நின்று மெலிந்ததாகையால் வேண்டா; நீரின் வந்தது இது போக - நீரிலே அழுகியதாகிய இது செல்க; வாள் புண் உற்றது இது நடக்க - வாளால் வெட்டுற்றதாகும் இதுபோக; உருமேறு உண்டது இது ஒழிக - இடியினால் தாக்கப்பட்ட இது நீங்குக; இது சீர்சால் கணிகை சிறுவன்போல் சிறப்பின்று - இது புகழ் பொருந்திய கணிகை மகன் போலச் சிறப்பில்லாதது; என்றான் - என்று சீவகன் கூறினான்.

(வி - ம்.) கட்ட ஆதார மின்மையின் வார் இளகியது. வேண்டா, நடக்க, போக, ஒழிக என்றன இகழ்ச்சி. (௨௨௯)

எ௧௯. கல்சேர் பூண்கோள் கதிர்முலையாய்
காமத் தீயால் வேந்தவர்போற்
கோல்லை யுழவர் சுடப்பட்டுக்
குரங்கி வேந்த திதுகளிறு
புல்ல முரிந்த தேனப்போக்கித்
தூம மார்ந்த துகிலுறையும்
நல்யாழ் நீட்ட வதுகோண்டு
நங்கை நலத்த திதுவேன்றான்.

(இ - ள்.) கல்சேர் பூண்கொள் கதிர்முலையாய் - கல்போல் இறுகிய அணிகலன் கொண்ட கதிர்த்த முலையினாய்!; காமத் தீயால் வெந்தவர்போல் - காமத் தீயினால் வெந்தவர்களைப் போல; கொல்லை உழவர் சுடப்பட்டுக் குரங்கி வெந்தது இது - முல்லை நிலத்திலே உழவரால் சுடப்பட்டுத் தாழ்ந்து வெந்தது இது; களிறு புல்ல முரிந்தது இது - களிறு தழுவ முரிவுற்றது இது; எனப் போக்கி - என்று போக்கிவிட்டு; தூமம் ஆர்ந்த துகில் உறையும் நல்யாழ் நீட்ட-அகிற்புகை யூட்டப் பெற்ற, துகிலினால் மூடப் பெற்றிருந்த அழகிய யாழை நீட்ட; அது கொண்டு நங்கை நலத்தது இது என்றான் - அதனை ஏற்றுத் தத்தை போலவே குல முதலியன சிறப்புற்றது இது என்றுரைத்தான்.

(வி - ம்.) நலமாவன : "சொல்லிய கொன்றை கருங்காலி மென் முருக்கு - நல்ல குமிழும் தணக்குடனே - மெல்லியலாய் - உத்தம மான மரங்க ளிவையென்றார் - வித்தக யாழோர் விதி" "தளமாய்ச் சம நிலத்துத் தண்காற்று நான்கும் - உளதாய் ஒருங்கூனம் இன்றி - அளவு - முதிரா திளகாது மூன்றுங்கூ றுய - அதுவாகில் வீணைத்தண் டாம்." "கோடே பத்தர் ஆணி நரம்பே - மாடக மெனவரும் வகையினவாகும்" "பதுமம் கழல்குடர் தாடியொ டுள்ளிபண் பூண்டுநின்ற - விதியமர் தண்டு குடையே குடுமிமெய்க் கோட் டுறுப்பு - மதியமர் போதிகை புட்டில் முகஞ்சுவர் மன்னெருத்தம் - விதியமர் பத்தர்க் குறுப்பென் றுரைத் தனர் மின்னிடையே" என இவையும் பிறவும். (உ௨எ)

வேறு

௭௨0. இருநில மடந்தை யீன்ற
திருவிசும் பென்னுங் கைத்தாய்
திருநல மின்னுப் பொன்ஞாண்
முகில்முலை மாரித் தீம்பா
லொருநலங் கவினி யூட்ட
வுண்டுநோய் நான்கு நீங்கி
யருநலங் கவினி வாள்வா
யரிந்திது வந்த தென்றான்.

(இ - ள்.) இருநில மடந்தை ஈன்றது - மண்மகள் பெற்றது இம்மரம்; இரு விசும்பு என்னும் கைத்தாய் - பெருவான் என்னும் செவிலித்தாய்; திருநலம் மின்னுப் பொன் ஞாண் முகில் முலை மாரித் தீம்பால் - அழகிய நலமாகிய மின்னாகிய பொன் நாணினையுடைய முகிலாகிய முலையின் மழையாகிய இனிய பாலை; ஒரு நலம் கவினி ஊட்ட - முழுவலன்போடே அழகுற ஊட்ட; உண்டு நோய் நான்கும் நீங்கி - பருகி நான்கு நோயையும் நீங்கி; அருநலம் கவினி - அழகிய நலன் கவினுற்று வளர்ந்து; வாள்வாய் அரிந்து வந்தது இது என்றான் - வாளாலே அரிந்து கொண்டுவர பெற்றது இவ்யாழ் என்று சீவகன் செப்பினான்.

(வி - ம்.) ஈன்றது : சினைவினை முதலொடு முடிந்தது. நற்றாய் அன்பு செவிலிக்குப் பிறந்த வளர்த்தமை தோன்ற 'ஒரு நலம்' என்றார். நான்காவன : வெயில், காற்று, நீர், அழல் மிகுதல். (உ௨அ)

௭௨௧. தீந்தொடை நரம்பின் றீமை
சிறிதலாப் பொழுது மோதிப்
பூந்தொடை யரிவை காணப்
புரிஞெகிழ்த் துரோமங் காட்ட

தேங்கம ழோதி தோற்ருள்
செல்வனுக் கென்ன மைந்தன்
வாங்குபு நபுலன் கையுள்
வார்புரி நரம்பு கோண்டான்.

(இ - ள்.) *தீதொடை நரம்பின் தீமை சிறிது அலாப் பொழுதும் ஓதி* - இனிய நரம்பின் தீமையைச் சிறிதன்றிப் பெரும்போது ஆராய்ந்து கூறி; *பூந்தொடை அரிவை காணப் புரி நெகிழ்த்து உரோமம் காட்ட* - (அதற்குத்தக) பூமாலை அணிந்த தத்தை காணுமாறு நரம்பின் முறுக்கைத் தளர்த்தி அதிற்கிடந்த மயிரைக் காட்ட; *தேன் கமழ் ஓதி செல்வனுக்குத் தோற்ருள் என்ன* - அவையிலுள்ளோர் தேன் மணக்குங் கூந்தலாள் சீவகனுக்குத் தோற்ருள் என்றுரைக்க; *மைந்தன் வார்புரி நரம்பு நபுலன் கையுள் வாங்குபு கொண்டான்* - சீவகன் நீண்ட முறுக்குற்ற நரம்பொன்றை நபுலன் கையிலிருந்து பெற்று யாழில் அமைத்துக் கொண்டான்.

(வி - ம்.) யாழ் நன்ருதலின் தனக்குச் சேமமாக வந்தவற்றில் நரம்பை மட்டும் கொண்டான். கந்துகன் படை அமைத்தெழுமின் என்றதனுற் பதுமுகனும் நந்தட்டனும் மற்ருேரும் போர்க்கோலத்தொடு புறத்தே நின்றனர் என்பது தோன்ற, 'நபுலன் கையில் நரம்பிருந்தது' என்ருர். மேல், 'பண்ணியல் யானைமேலான் பதுமுகன்' என வருவதனுல் உணர்க. 'கொடும்புரி மயிர்தும்பு முறுக்கிவை நான்கும்-நடுங்கா மரபிற் பகையென மொழிப' என்ருர். (உஉக)

எஉஉ. பணிவரும் பைம்போற் பத்தர்
பல்வினைப் பவள வாணி
மணிகடை மருப்பின் வாளார்
மாடக வயிரத் தீந்தே
னணிபெற வொழுகி யன்ன
வமிழ்துறழ் நரம்பி னல்யாழ்
கணிபுகழ் காளை கோண்டு
கடலகம் வளைக்க லுற்றான்.

(இ - ள்.) *பணி வரும் பைம் பொன் பத்தர்* - வாசிப்புத் தொழிலிலே வரும் புதிய பொன்னுலான பத்தரையும்; *பல் வினைப் பவள ஆணி* - பல தொழிற்பாடுற்ற பவளத்தாலாகிய ஆணியையும்; *மணி மருப்பின் கடை வாளார் வயிர மாடகம்* - முத்தையுடைய யானைத் தந்தத்தாலே கடையப்பெற்ற ஒளிமிகும் வயிர மாடகத்தையும்; *தீ தேன் அணி பெற ஒழுகி அன்ன அமிழ்து உறழ் நரம்பின்* - இனிய தேன் அழகுற ஒழுகினாற்

போன்ற அமுதத்தை வென்ற நரம்பையும் உடைய; நல்யாழ் - அழகிய யாழை; கணி புகழ் காளை கொண்டு - நூல்வலான் புகழுங் காளையாகிய சீவகன் ஏந்தி; கடலகம் வளைக்கல் உற்றான் - கடல் சூழ்ந்த உலகினைத் தன் இசையாலே வசப்படுத்தத் தொடங்கினான்.

(வி - ம்.) பத்தர் - யாழின் ஒருறுப்பு. வயிர் மாடகம்: நால்விரலள வான பாலிகை வடிவாய் நரம்பை வலித்தல் மெலித்தல் செய்யும் கருவி, "இடக்கை நல்விரல் மாடகம் தழீஇ" (சிலப். அ - உஅ) என்றார் பிறரும். பொன் முதலியன அழகிற்கு இட்டன. (௨௩0)

௭௨௩. குரல்குர லாகப் பண்ணிக்
கோதைதாழ் குஞ்சி யான்றன்
விரல்கவர்ந் தெடுத்த கீத
மிடறெனத் தெரித றேற்றார்
சுரரோடு மக்கள் வீழ்ந்தார்
சோர்ந்தன [1]புள்ளு மாவு
முருகின மரமுங் கல்லு
மோர்த்தெழீஇப் பாடு கின்றான்.

(இ - ள்.) கோதைதாழ் குஞ்சியான் - பூமாலை தங்கிய சிகையினான்; குரல் குரலாகப் பண்ணி - செம்பாலையைப் பண்ணி; தன் விரல் கவர்ந்து எடுத்த கீதம் - தன் விரலாலே தடவி யெழுப்பிய இசையை; மிடறு என - மிடற்றுப் பாடல் என்று கருதி; தெரிதல் தேற்றார் - கருவிப் பாடலெனத் தெளியாத வராய்; சுரரொடு மக்கள் வீழ்ந்தார் - வானவரும் மக்களும் தம் முள் வேறுபாடின்றி நிலைத்தே மயங்கி வீழ்ந்தனர்; புள்ளும் மாவும் சோர்ந்தன - கின்னரப் பறவைகளும் அசுண விலங்கு களும் சோர்வுற்றன; மரமும் கல்லும் உருகின - மரங்களும் கற்களும் உருகின; ஓர்த்து எழீஇப் பாடுகின்றான் - அங்ஙனம் யாழிசைத்த நிலையைக் கருத்திற் கொண்டு, அதற்கேற்ப ஆலா பனஞ் செய்து பாடுகின்றான்.

(வி - ம்.) "ஆழியும் ஆரும் போற்கீறி அதனருகே - ஊழி ஒரோ வொன் றுடன் கீறி—வாழி—எருதாதி கீழ்த்திசைகொண் டீராறும் எண்ணிக்—கருதாய் நிலக்கயிற்றைக் கண்டு" (சினேந்திர. காண்ட. ஆருடச் சக்கரம்-க) இப்பாலைத்திரிவிலே பத்தொன்பது நரம்பையுடைய மகர யாழ் குரல் குரலாமாறு காண்க. (௨௩௧)

---

1. பறவைகளிற் கின்னரமும் விலங்குகளில் அசுணமுமே இசை யறிவிற் சிறந்தன. சிலர் அசுணத்தைப் பறவை யென்பர்.

வேறு

௭௨௪. கன்னி நாகங் கலங்க மலங்கி
மின்னு மிரங்கு மழையென் கோயான்
மின்னு மழையின் மெலியு மரிவை
பொன்னுண் பொருத முலையென் கோயான்.

(இ - ள்.) கன்னி நாகம் மலங்கிக் கலங்க மழை மின்னும் இரங்கும் என்கோ யான் - கன்னியாகிய நாகம் நிலைகெட்டுக் கலங்க முகில் மின்னும் இடிக்கும் என்று நான் கூறுவேனோ?; மின்னும் மழையின் பொன்நாண் பொருத முலை அரிவை மெலி யும் என்கோ யான் - மின்னுகின்ற அம் மழையினால் பொன்னாண் தாக்கும் முலையினையுடைய இவள் மெலிவாள் என்பேனோ நான்?

(வி - ம்.) இது முதல் மூன்று செய்யுட்களும் கூதிர்ப் பருவங் குறித்துப் பிரியக் கருதிய தலைவற்குத் தோழி, அதற்கு முன் நிகழ் கின்ற காரின் தன்மையும் அது தலைவியை வருத்துந் தன்மையும் 'யான் கூற வேண்டுமோ? நீயே அறிதியன்றோ?' எனக் கூறிச் செலவழுங் குவித்தன வாக்குக. இளவேனில் நிகழ்ச்சிக் கண்ணே கார் கூற வேண்டியதாயிற்று, யாழ்வென்ற பின் அல்லது தன் மனத்தில் வேட்கை தோன்றாதாதலின். அதனைக் கூறவே, வேட்கை தோன்றிற்றாகப் புலப்படுமென்பது கருதி. (௨௩௨)

௭௨௫. கருவி வானங் கான்ற புயலி
னருவி யரற்று மலையென் கோயா
னருவி யரற்று மலைகண் டழுங்கு
மருவார் சாயன் மனமென் கோயான்.

(இ - ள்.) கருவி வானம் கான்ற புயலின் - மின் முதலிய தொகுதியுடைய முகில் பெய்த மழைநீரினால்; மலை அருவி அரற்றும் என்கோ யான் - மலை அருவிகளால் ஒலிக்கும் என் பேனோ நான்?; அருவி அரற்றும மலைகண்டு மருஆர் சாயல் மனம் அழுங்கும் என்கோ யான் - அருவியால் அரற்றும் மலையைக் கண்டு மருவுதல் பொருந்தி மென்மையாளின் உள்ளம் வருந்தும் என்று சொல்வேனோ நான்? (௨௩௩)

௭௨௬. வான மீனி னரும்பி மலர்ந்து
கானம் பூத்த காரென் கோயான்
கானம் பூத்த கார்கண் டழுங்குந்
தேனார் கோதை பரிந்தென் கோயான்.

(இ - ள்.) வானம் மீனின் அரும்பி மலர்ந்து - வானத்து மீன்களைப்போல அரும்பி விரிந்து; கார் கானம் பூத்த என்

கோயான்-காரால் காடுகள் மலர்ந்தன என்று கூறுவேனோ நான்? கானம் பூத்த கார் கண்டு - காடு மலர்ந்த கார்காலங் கண்டு; தேனார் கோதை பரிந்து அழுங்கும் என்கோ யான் - தேன் பொருந்திய மாலையாள் வருந்தி அழுவாள் என்பேனோ நான்?

(வி - ம்.) இத் தாழிசைக் கொச்சக ஒருபோகுகள் கந்தருவ மார்க்கத்தால் இடை மடங்கின. மேல் வருவனவற்றிற்கும் இஃதொக்கும். (உ௩௪)

வேறு

எஉஎ. அண்ணல்யாழ் நரம்பை யாய்ந்து
மணிவிர றவழ்ந்த வாறும்
பண்ணிய விலயம் பற்றிப்
பாடிய வனப்பு நோக்கி
விண்ணவர் வீணை வீழ்த்தார்
விஞ்சையர் கனிந்து சோர்ந்தார்
மண்ணவர் மருளின் மாய்ந்தார்
சித்தரு மனத்துள் வைத்தார்

(இ - ள்.) அண்ணல் மணிவிரல் யாழ் நரம்பை ஆய்ந்து தவழ்ந்த ஆறும் - தலைவனின் அழகிய விரல் யாழ் நரம்பை ஆராய்ந்து வாசித்த வகையும்; பண்ணிய இலயம் பற்றிப் பாடிய வனப்பும் நோக்கி - அதில் தான் இசைத்த செலவைக் குறிக்கொண்டு மிடற்றாற் பாடிய வனப்பையும் உணர்ந்து; விண்ணவர் வீணை வீழ்த்தார் - கின்னரர் வீணையைக் கைவிட்டார்; விஞ்சையர் கனிந்து சோர்ந்தார் - வித்தியாதரர் நெஞ்சுருகி மெய்ம் மறந்தனர்; மண்ணவர் மருளின் மாய்ந்தார் - மக்கள் தாம் அறியாத இசையைக் கேட்டதாலே மயங்கி அறிவிழந்தனர்; சித்தரும் மனத்துள் வைத்தார் - இருடிகளும் இதுவும் பேரின்பமே யென வுளத்தமைத்தனர்.

(வி - ம்.) இதனாற் சீவகனுடைய யாழ் வாசிப்பும் மிடற்றுப் பாடலும் சிறந்தன ஆமாறு காட்டப்பட்டது. (உ௩௫)

எஉஅ. வீழ்மணி வண்டு பாய்ந்து
மிதித்திடக் கிழிந்த மாலை
சூழ்மணிக் கோட்டு வீணைச்
சுகிர்புரி நரம்பு நம்பி
யூழ்மணி மிடறு மொன்றாய்ப்
பணிசெய்த வாறு நோக்கித்
தாழ்மணித் தாம மார்பிற்
கின்னரர் சாம்பி னாரே.

(இ - ள்.) வீழ் மணி வண்டு பாய்ந்து மிதித்திடக் கிழிந்த மாலை - மதுவை விரும்பிய கரிய வண்டு குதித்து மிதித்தலால் அலர்ந்த மாலையினையும்; சூழ்மணிக் கோட்டு - சூழ மணிகள் பதித்த கோட்டினையும் உடைய; வீணை - யாழிலே; சுகிர் புரி நரம்பும் நம்பி ஊழ்மணி மிடறும் - சீவி முறுக்கின நரம்பும் நம்பியின் ஒழுங்காகிய அழகிய மிடறும்; ஒன்றாய்ப் பணிசெய்த ஆறு நோக்கி - ஒன்றாக ஏவல் புரிந்த வகையினைப் பார்த்து; தாழ் மணித்தாமம் மார்பின் கின்னரர் சாம்பினர் - நீண்ட மாணிக்க மாலையணிந்த மார்பினையுடைய கின்னரர் மெய்சோர்ந்தனர்.

(வி - ம்.) இச் செய்யுளால் யாழும் மிடறும் ஒன்றாய் இசைத்தமை கூறப்பட்டது. (உ௩௬)

எஉ௬. விண்ணவர் வியப்ப விஞ்சை
வீரர்கள் விரும்பி யேத்த
மண்ணவர் மகிழ வான்கட்
பறவைமெய்ம் மறந்து சோர
வண்ணறா னனங்க ஞணப்
பாடிஞு னரச ரெல்லாம்
பண்ணமைத் தெழுதப் பட்ட
பாவைபோ லாயி ஞரே.

(இ - ள்.) விண்ணவர் வியப்ப-வானவர் வியப்புற; விஞ்சை வீரர்கள் விரும்பி ஏத்த - வித்தியாதர வீரர் விருப்பத்துடன் வாழ்த்த; மண்ணவர் மகிழ - மக்கள் களிக்க; வான்கண் பறவை மெய்ம்மறந்து சோர-வானிலியங்கும் பறவைகள் தம்மை மறந்து சோர; அனங்கன் நாண - காமன் வெள்க; அண்ணல்தான் பாடினன் - சீவகன் பாடினன்; அரசர் எல்லாம் - வேந்தர்கள் யாவரும்; பண் அமைத்து எழுதப்பட்ட பாவைபோல் ஆயினர்- பண்ணுதற்கு அமைத்து எழுதப்பெற்ற பாவைபோல் ஆனார்கள்.

(வி - ம்.) இச் செய்யுளால் மிடற்றுப் பாடலின் சிறப்புத் தெரிவிக்கப்பட்டது. (உ௩௭)

வேறு

எ௩௦. பருந்து நிழலும்போற் பாட்டு மெழாலுந்
திருந்துதார்ச் சீவகற்கே சேர்ந்தனவென் றெண்ணி
விருந்தாக யாழ்பண்ணி வீணைதான் தோற்பா

(இ - ள்.) பருந்தும் நிழலும் போல் பாட்டும் எழாலும் - பருந்தும் அதன் நிழலும்போற் பாட்டும் அதற்கமைந்த யாழ் வாசிணையும்; திருந்துதார்ச் சீவகற்கே - அழகிய தாரணிந்த சீவகனுக்கே; வீணைதான் தோற்பான் - வீணையிலே தான் தோற்பதற்கே; சேர்ந்தன என்று எண்ணி - அமைந்தன என்று நினைத்து; ஏந்துஇலை வேல் கண்ணாள்-ஏந்திய இலைமுக வேலனைய கண்ணாளாகிய தத்தை : இளமயில்போல் - இளமையான மயிலைப் போல; விருந்தாக யாழ் பண்ணி இருந்தாள் - (தான் இதுவரை செய்யாத) புதுமையாக யாழைப் பண்ணிப் பாட அமர்ந்தாள்.

(வி - ம்.) இளமயில்போல் இருந்தாளாகிய வேற்கண்ணாள் எனக் கூட்டி 'யாழ் பண்ணி' எனக் குளகமாக்கி வரும் பாட்டுடன் முடிப்பர் நச்சினார்க்கினியர். மற்றும், விருந்தாக என்பதனை, 'விருந்தாகச் சீவகற்கே சேர்ந்தன' என்று கொண்டு கூட்டுவர். சீவகன்மேற் கொண்ட காதலால் தன் பண்ணும் பாடலும் வேறுபட்டு நின்றுளென்பதைக் குறித்தே 'விருந்தாக யாழ் பண்ணி' என்றார்.

பருந்து பறக்குமிடத்து முறையே உயர்ந்து அந் நிலத்தின்கண் நின்று ஆய்ந்து பின்னும் அம் முறையே மேன்மேல் உயர்கின்றாற்போலப் பாட வேண்டுதலின் அஃது உவமையாயிற்று ; 'சிச்சிலி பூனை குடமுழக் கம் செம்மைத்தாம்—உச்சியிலே நீர்விழுககா டொண்பருந்து—பச்சை நிற—வேயினிலை வீழ்ச்சியுடன் வெங்கான் நிழற்பாவை—எயுங்கால் ஓசை இயல்பு " என்றார். 'வீணை' என்றது யாழையும் பாட்டையும். மயில் காரினைக் கருதி யிருந்தாற் போல இவளும் அவனைக் கூடும் நாளைக் கருதி யிருத்தலின் மயில்போல் என்றார். இளமயில் ; இளமை - குணம். (உ௬அ)

எ௬க. கோதை புறந்தாழக் குண்டலமும் பொற்றோடுங்
காதி னொளிர்ந்திலங்கக் காமர் நுதல்வியர்ப்ப
மாத ரெருத்த மிடங்கோட்டி மாமதுர
கீதம் கிடையிலாள் பாடத் தொடங்கினாள்.

(இ-ள்.) கிடையிலாள் - உவமையிலாளாகிய தத்தை; கோதை புறம் தாழ - கூந்தல் முதுகிலே சரிய ; குண்டலமும் பொன் தோடும் காதின் ஒளிர்ந்து இலங்க - குண்டலமும் பொன் தோடும் காதிலே ஒளிவிசி விளங்க; காமர் நுதல் வியர்ப்ப- அழகிய நெற்றி வியர்க்க ; மாதர் எருத்தம் இடம் கோட்டி - அழகிய கழுத்தை இடப்புறம் சாய்த்துக் கொண்டு; மாமதுரகீதம் பாடத் தொடங்கினாள் - மிகவும் இனிய இசையைப் பாடத் தொடங்கினாள்.

(வி - ம்.) உட்கும் நாணும் ஒருங்கு வருதலின், 'நுதல் வியர்ப்ப' என்றார். அது தன்னை அவன் நோக்கிய வழிப் பிறந்த மெய்ப்பாடு. அது, 'புகுமுகம் புரிதல் பொறி நுதல் வியர்த்தல்' (தொல். மெய்ப். கு)

'மாதர் எருத்தம்' என்பதற்குக் காதலையுடைய எருத்தம் என்றும், 'கிடையிலாள்' என்பதற்குத் தான் சீவகனை ஒத்திலளாய் என்றும் கூறுவர் நச்சினார்க்கினியர். (உஙக)

வேறு

எஙஉ. இலையா ரெரிமணிப்பூ ணேந்து முலையுஞ்
சிலையார் திருநுதலுஞ் செம்பசலை மூழ்க
மலையா ரிலங்கருவி வாள்போல மின்னுங்
கலையார்தீஞ் சொல்லினாய் காணார்கொல் கேள்வர்.

(இ - ள்.) கலைஆர் தீ சொல்லினாய்! - இசைக்கலை நிறைந்த இனிய மொழியாய்!; இலை ஆர் எரி மணிப்பூண் ஏந்தும் முலையும்- இலை வடிவமாக அமைந்த விளக்கமான மணிக்கலன்களைத் தாங்கிய முலைகளும்; சிலை ஆர் திரு நுதலும் செம்பசலை மூழ்க - வில்லைப் போன்ற அழகிய புருவமும் சிவந்த பசலையிலே அழுந்த; மலைஆர் இலங்கு அருவி வாள்போல மின்னும்-மலையிற் பொருந்தி விளங்கும் அருவி வாள்போல ஒளிரும்; கேள்வர் காணார் கொல்! - இதனை நம் காதலர் காணாரோ?

(வி - ம்.) இது முதல் மூன்று செய்யுட்களும் தாழிசைக் கொச்சகங்கள்; ஒரு பொருண்மேல் மூன்றடுக்கி வந்தன. இளவேனில் வருகின்றமை கண்டு ஆற்றாளாகிய தலைவி தோழிக்குரைத்தனவாகக் கூறினாள், வேட்கையும் தத்தைக்குச் சிறிது புலப்பட்டு நிற்றலின். (உச0)

எஙங. பிறையார் திருநுதலும் பேரமருண் கண்ணும்
பொறையார் வனமுலையும் பூம்பசலை மூழ்க
நிறைவா ளிலங்கருவி நீள்வரைமேன் மின்னுங்
கறைவேலுண் கண்ணினாய் காணார்கொல் கேள்வர்.

(இ - ள்.) கறைவேல் உண் கண்ணினாய் - குருதிக்கறையுடைய வேலினைய மையுண்ட கண்ணாய்!; பிறை ஆர் திருநுதலும் - பிறை அனைய அழகிய நெற்றியும்; பேர் அமர் உண் கண்ணும் - பெரிய மதர்த்த கண்களும்; பொறை ஆர் வனமுலையும்- சுமையாகப் பொருந்திய அழகிய முலைகளும்; பசலை மூழ்க - அழகிய பசலையிலே முழுகுமாறு; நிறைவாள் இலங்கு அருவி நீள் வரைமேல் மின்னும் - ஒளி நிறைந்த வாள்போல விளங்கும் அருவி பெரிய மலைமேல் ஒளிரும்; கேள்வர் காணார் கொல் - காதலர் இதனை அறியாரோ? (உசக)

எஙச. அரும்பேர் வனமுலையு மாடமைமேன் றோளுந்
திருந்தேர் பிறைநுதலுஞ் செம்பசலை மூழ்க
நெருங்கார் மணியருவி நீள்வரைமேன் மின்னுங்
கரும்பார்தீஞ் சொல்லினாய் காணார்கொல் கேள்வர்.

(இ - ள்.) கரும்பு ஆர் தீ சொல்லினாய்-கரும்பனைய இனிய மொழியாய்!; அரும்பு ஏர் வனம் முலையும்-அரும்பனைய அழகிய முலைகளும்; ஆடு அமைமென் தோளும் - அசையும் மூங்கிலைப் போன்ற மெல்லிய தோளும்; திருந்து ஏர் பிறை நுதலும் - திருத்தமுற்ற பிறையனைய அழகிய நெற்றியும்; செம்பசலை மூழ்க - சிவந்த பசலையிலே அழுந்துமாறு; நெருங்கு ஆர்மணி அருவி - நெருங்கிப் பெருகும் மணி போன்ற நீரையுடைய அருவி; நீள்வரை மேல் மின்னும் - நீண்ட மலையின் மேலே ஒளிரும்; கேள்வர் காணார் கொல்-இதனை அன்பர் அறியாரோ?

(வி - ம்.) மணி அருவி தெளிந்ததெனவே காலம் வேனிலாயிற்று. (உசஉ)

வேறு

எசுரு. பண்ணொன்று பாட லதுவொன்று பல்வளைக்கை
மண்ணொன்று மெல்விரலும் வாள்நரம்பின் மேல்நடவா
விண்ணின் றியங்கி மிடறு நடுநடுங்கி
எண்ணின்றி மாதர் இசைதோற் றிருந்தனளே.

(இ - ள்.) பண் ஒன்று பாடலது ஒன்று - பாடின பாட்டும் அதற்கு ஏற்ற யாழும் ஒருதிறமாய் இருந்தன; பல் வளைக்கை மண் ஒன்று மெல் விரலும் வாள் நரம்பின்மேல் நடவா - பல வளையல்கள் அணிந்த கையாளின் கழுவப் பெற்ற மெல்லிய விரலும் ஒள்ளிய நரம்பின்மேல் நடவா; வீணை நின்று இயங்கிய மிடறும் நடுநடுங்கி - கருவியொழிந்த பாட்டும் வானிலே நின்று இயங்கி அக்காலத்தே நடுங்குவதனாலே; மாதர் எண் இன்றி இசைதோற்று இருந்தனளே! - தத்தை நினைவிழந்து இசைக்குத் தோற்று இருந்துவிட்டாள்.

(வி - ம்.) பண் ஒன்று பாடல் அது ஒன்று: இவள் பாடின பாட்டும் யாழிசையும் ஒரு திறமாயிருந்தன; அவன் பாடின பாட்டும் யாழிசையும் மற்றொரு திறமாயிருந்தன என்றமாம். அவன் பாடும்போது இவள் யாழ் நரம்பு ஒழுங்காக இசைக்கவில்லை; அவன் யாழிசைக்கும் போதும் இவள் ஒழுங்காகப் பாடவில்லை.

மண்ணுதல் - பண்ணுதல் (தூய்தாக்குதல்): 'ஆவுதி மண்ணி' (மதுரைக். சகச) என்றார் பிறரும். விண்ணென்றது முற்கூறிய உள்ளாளப் பாட்டிற்குரிய மூலாதாரந் தொடங்கிப் பிரமரந்திரத்தளவு நின்ற வெளி. 'நடுநடுங்கி' என்பது கம்பிதப் பாட்டு.

"எடுத்தல்பாட் டுச்சமாம்; எண்படுத்தல் மந்தம்;
தடுத்து நலிதல் சமமாம்;—தொடுத்தியன்ற
தள்ளாத கம்பிதம் தான்நடுக்கல்; நற்குடிலம்
உள்ளாளப் பாடல் உணர்."

எனவே உள்ளாளத்திலே கம்பிதங் கலத்தலிற் குறையாயிற்று.

['சிலைத் தொழில்' 'கருங்கொடி' என்னும் (சீவக. கூருஎ-அ) பாடல்களால் தெய்வத் தன்மை பொருந்திய பாட்டுடையள் என்று கூறி வைத்து, ஈண்டுக் கற்றடிப் படுத்தாதாரைக் கூறுமாறு போல, 'விருந்தாக யாழ் பண்ணி' (எகூ0) என்றற்கு, 'யாழ் பண்ணும் முறைமையன்றி' யென்றும், 'பண்ணொன்று பாடலது ஒன்று' என்றதற்கு யாழும் மிடறும் வேறுபட்டதென்றும், 'விண்ணின்றியங்கி' என்பதற்கு அந்தர ஓசையென்றும் கூறுதல் தேவர் கருத்தன்மை யுணர்க. காமத்தாற் கலங்கி இவள் தோற்றாள் என்னிற் சீவகற்கு இசை வென்றி யின்மையும் உணர்க.—என்பர் நச்சினார்க்கினியர். இவர் கூற்றுத் தேவர் கருத்தாக இருக்குமேல் அக் கருத்துப் புலப்படவே செய்யுள் கூறுவர். அவ்வாறு கூறாமையாலும், தன்னினுஞ் சிறந்தான் சீவகனென்றறிந்தவுடன் தன் திறமையிலே நடுக்கங் காணுதல் தத்தைக்கு இயல்பாகையால், அதனானே சீவகன் வென்றிக்குக் குறைபாடின்மையாகவே கொள்ள வேண்டும். ஆகையாலும் தேவரின் செய்யுட்கட்குச் சொற்கிடந்தாங்குப் பொருள் கோடலே பொருத்தம்.] மற்றும் உள்ளாளத்திலே கம்பிதங் கலத்தற்கும் அவளுடைய காம நினைவே காரணமாகும்.[1] (உசங)

எகூசு. மையார் நெடுங்கண்ணுண் மாமணியாழ் தானுடைந்து
நையா நடுநடுங்கா நனிநாண மீதூராப்
பொய்யாதோர் குன்றெடுப்பாள் போன்மெலிந்து [பொன்மாலை
பெய்பூங் கழலாற்குப் பெண்ணரசி யேந்தினளே.

(இ - ள்.) மை ஆர் நெடுங்கண்ணுள் பெண் அரசி - மையுண்ட பெருங்கண்ணுளாகிய பெண்ணரசி; மாமணியாழ் தான் உடைந்து - சிறந்த யாழிசையிலே தான் தோற்றலால்; நையா நடுநடுங்கா நனிநாணம் மீதூரா - நைந்து நடுநடுங்கி (அவையிற் செல்ல வேண்டுதலின்) சாலவும் நாணம் மிகுந்து (அதனால்); பொய்யாது ஓர் குன்று எடுப்பாள்போல் மெலிந்து - உண்மையாகவே ஒரு மலையை யெடுப்பாள் போன்ற மெலிவுடன்; பொன்மாலை பெய்பூங்கழலாற்கு ஏந்தினள் - பொன்மாலையைப் பூங்கழலணிந்த சீவகனுக்கு ஏந்தினாள்.

(வி - ம்.) நைந்து நடுங்குதல் [2]"இழவு' என்னும் மெய்ப்பாடு, வெற்றியை இழத்தலின். நாணுள்ளம் பிறர்க்கு வெளிப்பட நிகழ்தலின் [3]"நாண்' என்னும் மெய்ப்பாடு. தோல்வி தோன்ற மாலையிடுதலின் மேல் [4]"இளிவரவு' என்னும் மெய்ப்பாடு. (உசச)

1. சீவகனும் தத்தையும் யாழிசையிலே சிறந்தவர்களாக வைத்துத் தத்தை தன் காதலுள்ளத்தாலே கலக்கமுற்றுத் தோற்றாளென்று கூறுதலே தேவர் கருத்தாக இருக்கவேண்டும் என்பது செய்யுட் கிடக்கை நன்கு புலப்படுத்துகின்றது.

2 இழவு: தந்தைதாய் முதலிய சுற்றத்தாரையும் இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலியவற்றையும் இழத்தல்.

3. நாண் நாணுள்ளம் பிறர்க்கு வெளிப்பட நிகழும் நிகழ்ச்சி.

4. இளிவரல்: இழிவு; தானிழந்து பிறிதோர் பொருளை விரும்புவது. (தொல். மெய்ப். இ, சஉ, ந. பேர்.)

எஙுஎ. மெல்லென் சிலம்பரற்ற மேகலைகண் மின்னுமிழ
நல்ல பேடையன்ன நாண வடியோதுங்கி
யொல்லெ னுயர்தவமே செய்ம்மி னுலகத்தீ
ரெல்லிரு மென்பாள்போ லேந்தன்மேல் வீழ்த்தனளே.

(இ - ள்.) மெல் என் சிலம்பு அரற்ற மேகலைகள் மின் உமிழ - சிலம்புகள் மெல்லென ஒலிக்கவும், மேகலைகள் ஒளி வீசவும்; நல்ல பெடை அன்னம் நாண - அழகிய பெண்ணன்னம் வெள்க; அடி ஒதுங்கி-அடியால் நடந்து சென்று; உலகத்தீர்! எல்லீரும் ஒல் என் உயர்தவமே செய்மின்! - உலகத்தவர்களே! நீவிர் யாவரும் ஒல்லென்னும் ஆரவாரப் புகழ்ச்சியுடைய உயர்ந்த தவத்தையே செய்யுங்கள்; என்பாள்போல் - என்று கூறுவாளைப் போல; ஏந்தல்மேல் வீழ்த்தனள் - சீவகன்மேல் அம் மாலையை விழுத்தினள்.

(வி - ம்.) முற்செய்யுளிற் 'குன்று' என்றதற்கேற்ப 'வீழ்த்தனள்' என்றார். இங்ஙனம் எய்துதற்குத் தவஞ் செய்யுங் கருத்து எல்லோருக்கும் இவள் பிறப்பித்தலின், 'என்பாள் போல' என்றார். ஒல்லென - வெளியாக என்றுமாம். (உசரு)

வேறு

எஙுஅ. நாகத்துப் படங்கோ ளல்கு
னலங்கிளர் செம்பொன் மாலை
மேகத்துப் பிறந்தோர் மின்னு
மணிவரை வீழ்ந்த தேபோ
லாகத்துப் பூட்டி மைந்த
னடிதொழு திறைஞ்சி நின்றாள்
போகத்து நெறியைக் காட்டும்
பூமகள் புணர்ந்த தொப்பாள்.

(இ - ள்.) போகத்து நெறியைக் காட்டும் பூமகள் புணர்ந்தது ஒப்பாள்-இன்ப நெறியைக் காட்டுந் திருமகள் வந்து கூடியது போன்றாள்; நாகத்துப் படம்கொள் அல்குல் - நாகத்தின் படம் போன்ற அல்குலாள்; மேகத்துப் பிறந்த ஓர் மின்னு மணிவரை வீழ்ந்ததே போல் - மேகத்திடையே பிறந்த ஒரு மின்னுக்கொடி மணிவரையிலே வீழ்ந்ததுபோல; செம்பொன் மாலை மைந்தன் ஆகத்துப் பூட்டி - செம்பொன் மாலையைச் சீவகன் மார்பிலே அணிந்து, அடி தொழுது இறைஞ்சி நின்றாள் - அவன் அடியிலே தாழ்ந்து வணங்கி நின்றாள்.

மாலை அவனது முடிகூடாத கருநெறி பயின்ற குஞ்சி கழுத்தின் மேல் அலைந்து கிடக்க, அதன்மேல் முதலில் வீழ்ந்து, பின்பு, கழுத்

திலே விழுந்தமை தோன்ற மேகம் உவமை கூறினர். வீழ்வது பாட மாயின் காலமயக்கம். (௨௪௬)

௭௩௬. செம்மல ரடியு நோக்கித்
திருமணி யல்கு னோக்கி
வெம்முலைத் தடமு நோக்கி
விரிமதி முக்மு நோக்கி
விம்மிதப் பட்டு மாதோ
விழுங்குவான் போல வாகி
மைம்மலர்த் தடங்க ணங்கை
மரைமலர்த் தேவி என்றான்.

(இ - ள்.) செம்மலர் அடியும் நோக்கி - சிவந்த மலரனைய அடிகளையும் பார்த்து; அல்குல் திருமணி நோக்கி - அல்குலின் மேல் அழகிய மேகலை மணியையும் பார்த்து; வெம்முலைத் தடமும் நோக்கி - விருப்பமூட்டும் முலைகளையும் பார்த்து; விரி மதி முகமும் நோக்கி - முழுமதியனைய முகத்தையும் பார்த்து; விம்மிதப்பட்டு, விழுங்குவான் போல ஆகி - வியப்புற்று அவளை விழுங்குவான்போலப் பார்த்தவனாகி; மைம்மலர்த்தடங்கண் நங்கை - மையுண்ட மலரனைய பெருங்கண்களையுடைய இவள்; மரை மலர்த் தேவி என்றான் - தாமரை மலரில் திருவே என்று கருதினான்.

(வி - ம்.) அடி நிலந் தீண்டியும், ஆடை மாசேறியும், மாலை வாடியும், கண் இமைத்தும் இருக்கக் கண்டு ஐயம் நீங்கினான். விம்மிதம்-வியப்பு; அஃதாவது பிறர்கண் தோன்றிய புதுமையாற் பிறந்த மருட்கை யென்னும் மெய்ப்பாடு. இது தனக்கே பான்மையாயினமையின் தன் கண் மறைந்து நின்ற வேட்கை புலப்பட்டு மனத்தினையும் கண்ணினையும் அடிதொட்டு முடிகாறுஞ் செலுத்தினமை கூறிற்று. இவன் இவ்வாறு கருதி வீணை யொழிந்து அயர்தலாகிய கையாறற்றிருந்தமை, மேலே, 'தார்ப்பொலி மார்பன் றூர்த்து' (சீவக. ௭௩௮) என்பதனா னுணர்க. (௨௪௭)

௭௩௦. கோதையுந் தோடு மின்னக் குண்டலந் திருவில்வீச
மாதரம் பாவை நாணி மழைமினி னொசிந்து நிற்பக்
காதலந் தோழி மார்கள் கருங்கயற் கண்ணி னாளை
யேதமொன் றின்றிப் பூம்பட் டேந்திர வெழினி வீழ்த்தார.

(இ - ள்.) கோதையும் தோடும் மின்ன - மலர் மாலையும் தோடும் ஒளிரவும்; குண்டலம் திருவில் வீச - குண்டலம் வான வில் லொளியைப் பொழியவும்; மாதர் அம் பாவை நாணி - காதலூட்டும் அழகிய பாவை போல்வாள் நாணமுற்று; மழை மினின் ஒசிந்து நிற்ப - முகிலிடை மின்போல நுடங்கி நிற்பக்

(கண்டு); ஏதம் ஒன்று இன்றி - நாணத்தால் வருங் குற்ற மெதுவும் இல்லாமல்; காதல் அம் தோழிமார்கள் - அன்புறு தோழியர்; பூம்பட்டு எந்திர எழினி வீழ்த்தார் - பூம்பட்டா லாகிய பொறித்திரையை விடுத்தனர்.

(வி - ம்.) தோட்டின் ஒளி கோதையிலே எறிப்ப நிற்றலின், 'கோதையும் தோடும் மின்ன' என்றார். கண்ணிஞளை: உருபு மயக்கம். ()

எசக. வெள்ளிலை வேற்க ணுளைச்
சீவகன் வீணை வென்ற
ஞெள்ளிய னென்று மாந்த
ருவாக்கடல் மெலிய வார்ப்பக்
கள்ளராற் புலியை யேறு
காணிய காவன் மன்ன
னுள்ளகம் புழுங்கி மாதோ
வுரைத்தனன் மன்னர்க் கெல்லாம்.

(இ - ள்.) வெள் இலை வேல்கண்ணுளைச் சீவகன் வீணை வென்றான் - வெற்றிலை போலும் முக வேலனைய கண்ணுளைச் சீவகன் வீணையாலே வென்றான்; ஒள்ளியன் என்று - சிறப் புடையன் என்றுரைத்து; உவாக்கடல் மெலிய மாந்தர் ஆர்ப்ப - நிறை உவா நாளிற் கடலும் தோல்வியுற மக்களெல்லாரும் ஆர வாரிக்க; காவல் மன்னன் உள்ளகம் புழுங்கி - உலகங் காக்குங் கட்டியங்காரன் மனம் புழுங்கி; கள்ளரால் புலியை ஏறு காணிய- கள்ளர்களாற் புலியை எறிதல் காண வேண்டி; மன்னர்க்கெல் லாம் உரைத்தனன் - வேந்தர்க ளெல்லோரையும் பார்த்து விளம் பினன்.

(வி - ம்.) ஒள்ளியன்: திசைச்சொல். காவல் மன்னன்: இகழ்ச்சி. 'கள்ளா வா புலியைக் குத்து' என்பது பழமொழி. தன்னால் வெல்ல வியலாத சீவகனைத் தன் பழம்பகையான மன்னர்களைக் கொண்டு வெல்லக் கருதினன் என்பது கருத்து. 'வேறு காணிய' என்றும் பாடம். (உசக)

எசஉ. வடதிசைக் குன்ற மன்ன
வான்குல மாசு செய்தீர்
விடுகதிர்ப் பருதி முன்னர்
மின்மினி விளக்க மொத்தீர்
வடுவுரை யென்று மாயும்
வாளமர் அஞ்சி னீரேன்
முடிதுறந் தளியிர் போகி
முனிவனம் புகுமி னென்றான்.

(இ - ள்.) வடதிசைக் குன்றம் அன்ன வான் குலம் மாசு செய்தீர் - இமயமலை அனைய சிறப்புற்ற அரச மரபுக்குக் குற்ற முண்டாக்கினீர்; விடுகதிர்ப் பருதி முன்னர் மின்மினி விளக்கம் ஒத்தீர் - ஞாயிற்றின் ஒளிக்கு முன்னர் மின்மினி ஒளி போன்றீர்; வாள்அமர் அஞ்சினீரேல் - வாட்போருக்கு அஞ்சினீரெனின்; வடுஉரை என்று மாயும் - பழிச்சொல் எப்போது மறையும்; அளியிர் முடிதுறந்து போகி முனிவனம் புகுமின் என்றான் - இரங்கத் தகுந்த நீவிர் அரசை விடுத்துச் சென்று முனிவர் தவ வனத்தை யடைந்து தவம் புரிவீராக என்றான்.

(வி - ம்.) 'வணிகன் மகளை அரசன் மணம்புரிவது தகும்; அரசன் மகளை வணிகன் புரிதல் மாசுடைத்து' என்னும் வழக்குப்பற்றி 'மாசு செய்தீர்' என்றான்.

எவற்றினும் உயர்ந்து திகழுவது நம்மரசகுலம் என்பான் வட, திசைக்குன்றம் அன்ன வான்குலம்' என்றான்.

இனி இச்சீவகன் ஒளியே உலகெலாம் பரவ நும்மொளி மழுங்கும் என்பான், 'விடுகதிர்ப் பருதி முன்னர் மின்மினி விளக்கம் ஒத்தீர்' என்றான்.

இனி இப்பழிபட்ட நுமக்கிவ்வுலகினில் இன்பமும் இல்லை என்பான் 'முனிவனம் புகுமின்' என்றான். (உ௲0)

எசஙரு. முல்லைப்பூம் பந்து தன்னை
மும்மதக் களிற்று வேலிக்
கோல்லைப்பூங் குன்றஞ் செய்தீர்
குங்குமக் குழங்கன் மாலை
மல்லுப்பூத் தகன்ற மார்பீர்
புகழெனும் போர்வை போர்த்துச்
செல்வப்பூ மகளு நாளை
அவனுழைச் செல்லு மென்றான்.

(இ - ள்.) மல்லுப் பூத்து அகன்ற குங்குமக் குழங்கல் மாலை மார்பீர்! - மற்போரில் மலர்ந்தகன்ற, குங்குமமுடைய மணமுறுமாலை யணிந்த மார்பீர்!; முல்லைப் பூம்பந்து தன்னை மும்மதக் களிற்று வேலிக் கொல்லைப் பூங்குன்றம் செய்தீர்! - முல்லை மலர்ப் பந்தை (கையாற் கசக்கி யெறியாமல்) மும்மதக் களிற்றை வேலியாகவுடைய காட்டிலே அழகிய மலையாக ஆக்கி விட்டீர்; செல்வப் பூமகளும் புகழெனும் போர்வை போர்த்து - செல்வத் திருமகளும் புகழாகிய போர்வையைப் போர்த்து; நாளை அவனுழைச் செல்லும் என்றான் - நாளைக்கு அவனிடம் செல்வாள் என்றான்.

(வி - ம்.) நீர் போருக் கஞ்சிக் கலுழவேகன் மகளைக் கொடுத்தலின், யான் நினைத்த அளவாய் என்கீழ் வாழ்வானை எனக்கு நிலைகுலைத்தல் அரிதாக்கினீர் என்றான்.

முல்லைப் பூப்பந்தென்றான் இப்பொழுதே அவனை வெல்லுதல் எளிது என்பது தோன்ற. 'மல்லுப்பூத்தகன்ற மார்பீர் என்றான்' நம்வலிமையையும் நீயிர் இப்போது நினைந்து கொண்மின் என்பது தோன்ற. இதனால் அரசருடைய சினத்தைத் தூண்டுகின்றான். (௨௫௧)

௭௪௪. திருமக ளிவளைச் சேர்ந்தான் றெண்டிரை யாடை வேலி
யிருநில மகட்குஞ் செம்பொ னேமிக்கு மிறைவ னாகுஞ்
செருநிலத் திவனை வென்றீர் திருவினுக் குரியீ ரென்றான்
கருமன நச்சு வெஞ்சொற் கட்டியங் கார னன்றே.

(இ - ள்.) கருமனம் நஞ்சு வெஞ்சொல் கட்டியங்காரன் - கொடிய மனத்தினையும் நஞ்சு கலந்த கொடிய சொல்லையும் உடைய கட்டியங்காரன்; திருமகள் இவளைச் சேர்ந்தான் - திருமகளாகிய இவளை அடைந்தவன்; தெண், திரை ஆடை வேலி இருநில மகட்கும் செம்பொன் நேமிக்கும்-தெள்ளிய அலைகடலை ஆடையாகவும் வேலியாகவும் உடைய பெருநில மகளுக்கும் செம்பொன் கொண்ட சக்கரவாளகிரிக்கும்; இறைவன் ஆகும் - அரசன் ஆவான்; செருநிலத்து இவனை வென்றீர் - (ஆகையால்) போர்க்களத்தே இவனை வென்றீரெனின்; திருவினுக்கு உரியீர் என்றான் - (முற்கூறிய) செல்வத்துக்கு உரியீராவீர் என்றான்.

(வி - ம்.) நல்லிலக்கணமுழுதும் அமைந்த இவளை எய்தினோர் எல்லாச் செல்வமும் எய்துதல் ஒருதலை என்பான், "திருமகள் இவளைச் சேர்ந்தான் நிலமகட்கும் நேமிக்கும் இறைவன் ஆகும்" என்றான். நேமி - சக்கரவாளகிரி; என்றது தேவருலகிற்கும் என்றவாறு. இதனால் அரசருடைய ஆசையைத் தூண்டுகின்றான். (௨௫௨)

௭௪௫. அனிச்சப்பூங் கோதை சூட்டி
னம்மனை யோவென் றஞ்சிப்
பனிக்குநுண் ணுசுப்பிற் பாவை
யொருத்திநாம் பலரேன் றெண்ணித்
துனித்துநீர் துளங்கல் வேண்டா
தூமணிச் சிவிறி நீர்தூய்த்
தனிக்கயத் துழக்கி வென்றீர்
தையலைச் சார்மின் என்றான்.

(இ - ள்.) அனிச்சப் பூங்கோதை சூட்டின் - அனிச்ச மலர்மாலையைச் சூட்டினும்; அம்மனையோ! என்று அஞ்சிப் பனிக்கும் - அம்மாவோ! என்று அச்சமுற்று நடுங்கும்; நுண்

நாசுப்பின் பாவை ஒருத்தி - நுண்ணிடைப் பாவையாள் ஒருத்தியே; நாம் பலர் என்று எண்ணி - நாமோ பலருளோம் (எனவே நம்மிற் போர் செய்ய வேண்டுமோ) என்று நினைத்து; நீர் துனித்துத் துளங்கல் வேண்டா - நீர் வெறுத்து மனங்கலங்க வேண்டா; தூமணிச் சிவிறி நீர் தூய் - தூய மணித்துருத்தியினாலே நீரைத் தூவி; தனிக் கயத்து உழக்கி வென்றீர் - தனியே குளத்திலே பொருது வென்றீர்கள்; தையலைச் சார்மின் என்றான் - தத்தையை அடைவீர் என்றான்.

(வி - ம்.) துணியலாகாமையிற் பன்மையாற் கூறினான்.

இதன்கண் தத்தையின் எழிலை விதந்தோதி அரசர்தம் காமக் குணத்தைத் தூண்டுதல் உணர்க. (உருரு)

எசசு. வெந்திற லாளன் கூற
வேகமோ டுரறி மன்னர்
பந்தணி விரலி ளுடைன்
படாமுலைப் போகம் வேண்டிக்
கந்தெனத் திரண்ட திண்டோட்
கந்துகன் சிறுவன் காயு
மைந்தலை யரவின் சீற்றத்
தாரழல் குளிக்க லுற்றார்.

(இ - ள்.) வெந்திற லாளன் கூற - கொடியவன் இவ்வாறு கூற; பந்து அணி விரலினாள் தன் படாமுலைப் போகம் வேண்டி - பந்து பயிலும் விரலினாளின் சாயாத முலைகளின் இன்பத்தை விரும்பி; மன்னர் வேகமொடு உரறி - அரசர்கள் சினங்கொண்டு முழங்கி; கந்து எனத் திரண்ட திண்தோள் - தூணெனத் திரண்ட திண்ணிய தோள்களையுடைய; கந்துகன் சிறுவன் - சீவகன் ஆகிய; காயும் - சினந்த; ஐந்தலை அரவின் சீற்றத்து ஆரழல் குளித்தல் உற்றார் - ஐந்தலைப் பாம்பின் சீற்றமாகிய பெரு நஞ்சிலே முழுகத் தொடங்கினர்.

(வி - ம்.) தானும் நந்தட்டனும் ஒரு தலையும், பதுமுகன் ஒழிந்த தோழர்கள் மூவரும் மூன்றுதலையும், நபுலனும் விபுலனும் ஒருதலையுமாகப் படைவகுத்தெழுதலின், 'ஐந்தலையரவு' என்றார். அது, 'சதுமுகமாகச் சேனை நமர்தலைப் பெய்க' (சீவக. எசுசு) என்பதனா னுணர்க. ()

எசஎ. பண்ணியல் யானை மேலான்
பதுமுகன் பரவைத் தானை
கண்ணிய துணர்ந்து கல்லாக்
கட்டியுங் கார னெஞ்சி

லெண்ணிய தெண்ணி மன்ன
 ரிகன்மலைந் தெழுந்த போழ்திற்
றண்ணிய சிறிய வெய்ய
 தழற்சொலாற் சாற்று கின்றான்.

(இ - ள்.) பண்இயல் யானை மேலான் பதுமுகன் - புனைதல் பொருந்திய யானைமேல் அமர்ந்த பதுமுகன்; பரவைத் தானை கண்ணியது உணர்ந்து - பரவிய அரசர்படை போரில் இறங்க நினைத்ததையும் அறிந்து; கல்லாக் கட்டியங்காரன் நெஞ்சில் எண்ணியது எண்ணி - மேலும் கல்வியிலாத கட்டியங்காரன், 'கள்ளராற் புலியை ஏறு காணிய' உள்ளத்திற் கருதியதையும் ஆராய்ந்து; மன்னர் இகல் மலைந்து எழுந்த போழ்தில் - அரசர்கள் போரிலே மாறுபட்டு எழுந்த அளவிலே; தண்ணிய சிறிய வெய்ய தழற் சொலால் சாற்றுகின்றான் - சாம பேத தான தண்டங் குறித்த சொற்களால் உரைக்கின்றான்.

(வி - ம்.) சாமம்: இனிதாகக் கூறுவதால் 'தண்ணிய' சொல், தண்ணிய - குளிர்ந்த. பேதம்: மென்மையாலும் வன்மையாலும் உள்ளத்தைப் பேதித்தல். அது பொய்யும் மெய்யும் கூறிப் பேதித்தலிற், 'சிறிய' என்றார். தானம்: பகைவர் மனம் மகிழக் கொடுத்தல். அஃது அவர் விரும்பப்படுதலின், 'வெய்ய' என்றார். வெய்ய - விரும்பிய. 'நின் வெய்யனாயின்' (கலி. ௧0௭) என்றாற்போல. தண்டம்: பின்பு அவர் ஆகாமல் அழித்தே விடுதலின், 'தழல்' என்றார். (உ௫௫)

எசஅ. இசையினி லிவட்குத் தோற்றும்
 யானையால் வேறு மென்னி
னிசைவதோன் றன்று கண்டீர்
 ரிதனையா னிரந்து சொன்னேன்
வசையுடைத் தரசர்க் கெல்லாம்
 வழிமுறை வந்த வாறே
திசைமுகம் படர்க வல்லே
 [1]தீத்தொட்டாற் சுடுவ தன்றே.

(இ - ள்.) இவட்கு இசையினில் தோற்றும் - இவளுக்கு இசையினால் தோற்றனம்; யானையால் வேறும் என்னின் இசைவது ஒன்று அன்று - யானையால் வெல்வோம் என்று கருதின் அது பொருந்தக் கூடிய தொன்றன்று; வசை உடைத்துக் கண்டீர் - மற்றும் அது பழியுடைய தென்றறிவீர்களாக; தீத் தொட்டால் மட்டும் சுடுவதன்றே? (ஆனால், பிறர் மனை நயக்கும் தீ நினைப்பினும் சுடுவதாகும்); இதனை யான் இரந்து சொன்

1. தீண்டினார்தமைத் தீச்சுடும் (சீவக - உ௫0).

னேன் - இச் செயலை (நீரே பாவமும் பழியு மென்றறிவீராயினும் நுமக்கு மாறாய யான் நும் நலங்கருதி) வேண்டிக் கூறினேன்; வழிமுறை வந்த ஆறே திசைமுகம் வல்லே படர்க - (இனி) அடைவே வந்த வழியே திக்கிடங்களிலே விரையச் செல்வீராக.

(வி - ம்.) (யானையாகிய) விலங்கறிவும் நுமக்கின் றென்றான். யானை நாதத்தில் தோன்றுதலின் அதற்கு வணங்குதல் இயல்பு.[1]

யானையால் வேறும் என்றது போர் செய்து அதனால் வெல்வேம் என்றவாறு. இதற்கு நச்சினார்க்கினியர் இசைக்கு வணங்கும் யானை என வேண்டாது விரிக்கின்றார்.

"தீண்டினாற் சுடுவதன்றோ தீ யென்பது இப் பிறர்மனை நயக்கின்ற தீவினையாகிய தீ நினைப்பினும் சுடுவது ஒன்று கண்டீர்." எனவரும் நச்சினார்க்கினியர் உரை மிகவும் நுண்ணிதாம். (உருசு)

எசசு. தோளினான் மிடைந்து புல்லுந்
தொண்டைவா யமிர்தம் வேட்டோர்
வாளினான் மலைந்து கொள்ளின்
வாழ்கநுங் கலையு மாதோ
கோளுலாஞ் சிங்க மன்னான்
கொடியினை யெய்தப் பெற்றீர்
தாளினால் நோய்யீ ராகித்
தரணிதா விடுமி னென்றான்.

(இ - ள்.) வேட்டோர் தோளினால் மிடைந்து புல்லும் தொண்டை வாய் அமிர்தம் - இன்பத்தை விரும்பினோர் தோளினால் நெருங்கித் தழுவிப் பெறுகின்ற அமிர்தத்தை; வாளினால் மலைந்து கொள்ளின் வாழ்க நும் கலையும் - வாளாற் பொருது வலிதிற் பெறின் நுங்கள் கலையும் நூறுபெற்று வாழ்வதாக!; கோள் உலாம் சிங்கம் அன்னான் கொடியினை எய்த - கொலையில் வல்ல சிங்கம் போன்ற சீவகன் தத்தையினை அடைய; தரணி பெற்றீர் - நீர் உலகினைப் பெற்று நின்றீர்; தாளினால் நொய்யீர் ஆகி-இனி முடியா முயற்சியில் மெலிவீராகி; தா விடுமின் என்றான் - (அதனால் உண்டாகும்) வருத்தத்தைக் கைவிடுவீராக என்றான்.

(வி - ம்.) தா - வருத்தம். இவை இரண்டு செய்யுளும் சாமம். வலிந்து கொள்கின்ற இராக்கதம், 'முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே' (தொல் - களவு. கச) என்பதனால், ஒருதலைக் காமமாகிய

1. உதயணன் யாழ் அவன் உஞ்சையிலிருந்து வந்தபோது பிடி மிசையிருந்து வழுக்கி வீழ்ந்தது காற்றில் ஒலிக்கும்போது யானைகள் குழுமி நின்று கேட்பதைப், 'பிறப்புணர்பவைபோல் இறப்பவும் சிறப்ப' எனக் குறிப்பது காண்க (பெருங் - ௪ - ௩: அ௦ - க௦).

கைக்கிளையாய் அது புணர்ச்சிக்குச் சிறப்பின்மை யுணர்ந்திலீராதலின், நீர் கற்ற இயலும் கெடுக என்றான். வாழ்க! என்பது இகழ்ச்சி. (உகுஎ)

எருo. நாறுமும் மதத்தி னாலே
நாகத்தை யிரிக்கும் நாக
மாறிய சினத்த தன்றி
யதிங்கத்தின் கவளங் கொண்டால்
வேறுநீர் நினைந்து காணீர்
யாவர்க்கும் விடுக்க லாகா
நாறித்தே னொழுகுங் கோதை
நம்பிக்கும் அன்ன ளென்றான்.

(இ - ள்.) நாறும் மும்மதத்தி னாலே நாகத்தை இரிக்கும் நாகம் - மணங் கமழும் தன் மும் மதத்தாலே மற்றை யானைகளை ஓட்டும் ஒரு களிறு; ஆறிய சினத்தது அன்றி அதிங்கத்தின் கவளம் கொண்டால் - மிக்க சினத்துடன் அதிமதுரத் தழை யைக் கவளமாகக் கையிலே கொண்டால்; யாவர்க்கும் விடுக்கல் ஆகா - அக்குளகை எவராலும் கொள்ளுதல் அரிது; நாறித் தேன் ஒழுகும் கோதை நம்பிக்கும் அன்னள் - மணங் கமழ்ந்து தேன் பெருகும் கோதையாள் நம்பிக்கும் அத் தகையள்; வேறு நீர் நினைந்து காணீர் என்றான் - நீவிர் தனியே ஆராய்ந்து காண் மின் என்றான்.

(வி - ம்.) குளகுபோல் மதத்தை விளைவிப்பவள் இவளும் ஆதலின், விடுத்தல் அரிது என்றான்.

நாகம் - யானை. அதிங்கம் - அதிமதுரத்தழை. வேறு நீர் நினைந்து காணீர் என்றது நீயிர் எண்ணாது துணிகின்றீர் என்று இகழ்ந்தபடியாம். (உகுஅ)

எருக. இளவள நாகு புல்லி யினத்திடை யேறு நின்றா
லுளவளங் கருதி யூக்க லுழப்பெரு துடைய தாமே
தளவள முகைகொள் பல்லாட் சீவகற் றழுவி நின்றாற்
கொளவுளைந் தெழுவ தல்லாற் கூடுத னுங்கட் காமோ.

(இ - ள்.) வள இள நாகு புல்லி ஏறு இனத்திடை நின்றால் - அழகிய இளநாகைத் தழுவி ஒரு காளை தன் திரளிலே நின்றால்; உள வளம் கருதி ஊக்கல் உழப்பு எருதினுக்கும் ஆமோ? - அதற்குரிய அழகை நுகரக் கருதி முயறல் உழுது களைத்த எருதுக்கும் இயலுமோ?; வளத் தள முகை கொள் பல்லாள் சீவகன் தழுவி நின்றால் - அழகிய முல்லையரும்பினைக் கொண்ட முறுவலாளைச் சீவகன் தழுவி நின்றால்; கொள உளைந்து எழுவது

அல்லால் கூடுதல் நுங்கட்கு ஆமோ? - கொள்வதற்கு வருந்திப் போவதை யன்றித் தழுவுதல் உங்களுக்கு இயலுமோ?

(வி - ம்.) ஏறுபோல் எருது நுகராமையின், அதனோடு அரசரை உவமித்தான்.

இனம் என்றது பதுமுகன் முதலியோரை. உழப்பெருது - உழு திளைத்த காளை. (உ௯கூ)

எ௬௨. எழுந்துவிண் படருஞ் சிங்கம்
பெட்டைமே லிவர்ந்து நின்றான்
மழுங்கமேற் சென்று பாய்தன்
மறப்புலி தனக்கு மாமோ
கொழுங்கயற் கண்ணி னாளைச்
சீவக குமரன் சூழ்ந்தா
லழுங்கச்சேன் றணைதல் பேய்காள்
அனங்கற்கு மாவ துண்டே.

(இ - ள்.) எழுந்து விண்படரும் சிங்கம் பெட்டைமேல் இவர்ந்து நின்றால் - எழுந்து விண்ணிற் படரும் சிங்கம் பெட்டையை விரும்பி நின்றால்; மேற்சென்று மழுங்கப் பாய்தல் மறப்புலி தனக்கு ஆமோ? - மேலே சென்று அது கெடுமாறு பாய்தல் வீரப்புலிக்கும் இயலுமோ?; கொழுங்கயல் கண்ணினாளைச் சீவக குமரன் சூழ்ந்தால் - வளமுறுங் கயற் கண்ணாளைச் சீவகன் தழுவி நின்றால்; பேய்காள்! அழுங்கச் சென்று அணைதல் அனங்கற்கும் ஆவது உண்டே? - பேய்களே! சீவகன் வருந்தச் சென்று தழுவுதல் காமனுக்கும் ஆவதொரு காரியம் இல்லை.

(வி - ம்.) உழப் பெருது என வெறுக்கக் கூறியவன் புலி என உயர்த்துக் கூறி அவ்விதமேனும் விடுவித்தல் அரிது என்றான். 'ஒட்டகம் குதிரை கழுதை மரை யிவை - பெட்டை யென்னும் பெயர்க்கொடைக் குரிய' (தொல் - மரபு - ௫௨) என்பதனுள், 'கொடை' என்றதனாற் சிங்கத்திற்கும் பெட்டை கொள்க. தண்டித்து விடுக்க வேண்டுதலின், 'பேய்காள்' என்றான். (உகூ0)

எ௬௩. மத்திரிப் புடைய நாகம்
வாய்வழி கடாத்த தாகி
யுத்தமப் பிடிக்க ணின்று
லுடற்றுதல் களபக் காமே
பத்தினிப் பாவை நம்பி
சீவகன் பால ளானு
லத்திறங் கருதி யூக்க
லரசிர்கா ணுங்கட் காமோ.

(இ - ள்.) மத்திரிப்பு உடைய நாகம் வாய்வழி கடாத்தது ஆகி உத்தமப் பிடிக்கண் நின்றால் - செற்றமுடைய களிறு மிகுந்து பொழியும் மதமுடையதாகி நல்லிலக்கணப் பிடியினிடம் நின்றால்; களபக்கு உடற்றுதல் ஆமே? - யானைக் கன்றிற்கு அதனைக் கெடுத்தல் இயலுமோ?; பத்தினிப் பாவை நம்பி சீவகன் பாலள் ஆனால் - கற்புறு நங்கை தத்தை நம்பியாகிய சீவகனுக்குரியள் எனின்; அரசிர்காள்! அத்திறம் கருதி ஊக்கல் நுங்கட்கு ஆமோ? - அரசர்களே! அவளைப் பெறுந் திறத்தை நீர் கருதி முயறல் நுமக்குக் கூடுமோ?

(வி - ம்.) அரசராயினும் கலைகளாலும் ஆண்மை முதலியவற் றாலுங் குறைபாடு உடைமையிற் பெறுதல் அரிது என்றான்.

மத்திரிப்பு - சினம். நாகம் - யானை. களபக்கு - யானைக்கன்றிற்கு; களபத்திற்கு எனற்பாலது சாரியை பெறாது உருபு புணர்ந்து இங்ஙனம் நின்றது. (உசுக)

எருச. தூமத்தாற் கெழீஇய கோதை
தோட்டுணை பிரித்தல் விண்மேற்
றாமத்தாற் கெழீஇய மார்ப
னிந்திரன் றனக்கும் ஆகா
தேமுற்றீ ரின்னும் கேண்மி
னிரதியைப் புணர்து மென்று
காமத்தாற் கெழுமி னார்க்குக்
காமனிற் பிரிக்க லாமே.

(இ - ள்.) தூமத்தால் கெழீஇய கோதை தோள் துணை பிரித்தல் - அகிற்புகை கமழிய கோதையாளின் தோளின் துணை யாகிய சீவகனைப் பிரித்தல்; விண்மேல் தாமத்தால் கெழீஇய மார்பன் இந்திரன் தனக்கும் ஆகாது - வானுலகிற் கற்பக மலர் பொருந்திய மார்பன் இந்திரனுக்கும் இயலாது; ஏம் உற்றீர்! இன்னும் கேண்மின்! - மயக்க முற்றவர்களே! இன்னும் கேளுங் கள்!; இரதியைப் புணர்தும் என்று காமத்தால் கெழுமினார்க்கு - இரதியைக் கூடுவோம் என்று காமத்தினாற் பொருந்தினவர் கட்கு; காமனின் பிரிக்கல் ஆமே - காமனிடமிருந்து அவளைப் பிரித்தல் கூடுமோ?

(வி - ம்.) வானவனாலும் சீவகனைப் பிரித்தல் அரிதென்று கூறிப் பின் இவளைப் பிரித்தலும் அரிது என்றான். இவை ஐந்து செய்யுளும் பேதம்.

ஏமுற்றீர் - மயக்கங்கொண்டீர். (உசுஉ)

௭௫௫. எம்மைநீர் வெல்லப் பெற்றீர்
வென்றபி னிருந்த வேந்த
னும்மையும் வேறு செய்து
நும்முளே பொருது வீந்தால்
வெம்மைசெய் துலக மெல்லா
மாண்டிட விளைக்கும் நீதி
யம்மமற் றதனை யோரீ
ரவன்கருத் தன்ன தென்றான்.

(இ - ள்.) எம்மை நீர் வெல்லப் பெற்றீர் - எம்மை நீர் ஒருவாற்றான் வென்றீரெனின்; வென்றபின் இருந்த வேந்தன் நும்மையும் வேறு செய்து-வென்ற பிறகு இங்கிருந்த கட்டியங்காரன் உங்களையும் வேறு படுத்தி; நும் முளே பொருது வீந்தால் - உங்களிடையே பொருது வீழ்ந்திராயின்; உலகம் எல்லாம் வெம்மை செய்து ஆண்டிட நீதி விளைக்கும் - உலகத்தை எல்லாம் கொடுமை செய்து ஆள ஒரு முறைமையை உண்டாக்குவான்; அதனை ஓரீர்- அந்த எண்ணத்தை நீவிர் அறியீர்! அவன் கருத்து அன்னது என்றான்-கட்டியங்காரன் கருத்து எப்போதும் அத்தகையதே என்றான்.

(வி -ம்.) அம்ம, மற்று: அசைநிலைகள். அரசர் உலகினைக் கட்டியங்காரன் கொள்ளாமல் அவரே பெறுமாறு கூறினதால் இச்செய்யுள் தானம். (உ௬௩)

௭௫௬. சொற்றிற லன்றி மன்னீர்
தொக்குநீர் காண்மி னெங்கள்
விற்றிற லென்று வில்வாய்
வெங்கணை தொடுத்து வாங்கிக்
கற்றிரள் கழிந்து மண்ணுட்
கரந்தது குளிப்ப வெய்திட்
டிற்றெமர் கல்வி யென்று
னிடியுரு மேற்றே டொப்பான்.

(இ - ள்.) மன்னீர்! - அரசர்களே!; எங்கள் சொல் திறல் அன்றி - எங்கள் சொல் வன்மையன்றி; வில்திறல் நீர் தொக்குக் காண்மின் என்று - வில்வன்மையையும் நீவிர் திரண்டிருந்து காண்பீராக என்றுரைத்து; இடி உரும் ஏற்றொடு ஒப்பான் - இடிக்கும் இடியேறு போன்ற பதுமுகன்; வில்வாய் வெங்கணை தொடுத்து வாங்கி - வில்லிலே கொடுங்கணை ஒன்றைப் பூட்டி இழுத்து; அது கல் திரள் கழிந்து மண்ணுள் கரந்து குளிப்ப

எய்திட்டு - அது கல் திரளைக் கழிந்து மண்ணிலே மறைய எய்து காட்டி ; எமர் கல்வி இற்று என்றான் - எங்கள் கல்வியெல்லாம் இத்தகையது என்றான்.

(வி - ம்.) அச்சமே கீழ்களது ஆசாரம் என்பதுபற்றி எம்மாற்றல் இற்று என்று கண் கூடாக் காட்டினன் என்பது கருத்து. (உசுச)

எருள. ஆழியங் கழனி தன்னு
ளம்போடு கணையம் வித்திச்
சூழ்குடர்ப் பிணங்கண் மல்க
விளைத்தபின் றூழுதிப் பல்பேய்க்
கூழ்படு குருதி நெய்யி
னிறைச்சிச்சோ றூட்டி வென்றி
வீழ்தர வேட்டு நின்று
ரெய்துப வெகுளல் வேண்டா.

(இ - ள்.) ஆழி அம் கழனி தன்னுள் - சக்கர வியூகமாக வகுத்த படையாகிய விளைநிலத்தே ; அம்பொடு கணையம் வித்தி - அம்பையுந் தண்டாயுதத்தையும் விதைத்து ; சூழ்குடர்ப் பிணங்கள் மல்க விளைத்தபின் - குடர்கள் சூழ்ந்த பிணங்களாகிய நெல்லை நிறைய விளைவித்தபிறகு ; ஊழ்படு குருதி நெய்யின் இறைச்சிச் சோறு பல் பேய்க்கு ஊட்டி - முறைமைப்படியுள்ள, குருதி நெய்யுடன் ஊன் சோற்றைப் பல பேய்களுக்கும் உண்பித்து ; வென்றி வீழ்தர வேட்டு நின்றார் எய்துப - வென்றிமகள் விரும்பக் களம் கொண்டு நின்றவர்கள் இவளை அடைவர் ; வெகுளல் வேண்டா - நீவிர் வீணே சினவுதல் வேண்டா.

(வி - ம்.) இவை இரண்டும் தண்டம். (உசுரு)

எருஅ. போர்ப்பறை முழங்கி யெங்கும்
பொருவளி புடைக்கப் பட்ட
கார்க்கடல் போன்று சேனை
கலக்கமோ டிரறி யார்ப்பத்
தார்ப்பொலி மார்ப னோர்த்துத்
தன்கையில் வீணை நீக்கி
வார்ப்பொலி முலையி னாட்கு
வாய்திறந் திதனைச் சொன்னான்.

(இ - ள்.) பொருவளி புடைக்கப்பட்ட கார்க்கடல் போன்று - மோதுகின்ற காற்றினால் தாக்கப் பெற்ற கரிய கடலைப் போல ; எங்கும் போர்ப் பறை முழங்கி - எங்கும் போர் முரசு

அதிர்ந்து ; சேனை கலக்கமோடு உரறி ஆர்ப்ப-படையிலுள்ளோர் கலக்கத்துடன் முழங்கி ஆரவாரிக்க; தார்ப்பொலி மார்பன் ஓர்த்து - (அதனை) மாலையாற் பொலிவுற்ற மார்பனான சீவகன் உணர்ந்து; தன் கையில் வீணை நீக்கி - தன்கையில் இருந்த யாழை வைத்துவிட்டு; வார்ப்பொலி முலையினாட்கு வாய்திறந்து இதனைச் சொன்னான் - வாராற் பொலிவு கொண்ட முலையை யுடைய தத்தைக்கு வாய்திறந்து கூறினான்.

(வி - ம்.) கலக்கம் - முன் நின்ற நிலைகுலைதல். தத்தையின் கவினைக் கண்டு கையாறுற்றிருந்தவன் (சீவக - எ௬௯) ஆரவாரம் உண்டானதைச் செவிகொடுத்து உணர்ந்தான். 'ஓர்ந்து' என்பது 'ஓர்த்து' என விகாரப்பட்டது. வீரத்தாற் காமங் கெட்டதென இரண்டன் சிறப்புங் கூறினார். (உசசு)

வேறு

எ௬௯. தேய்ந்து நுண்ணிடை நைந்துகச் செப்பினைக்
காய்ந்த வெம்முலை யாய்நின கண்கள்போ
லாய்ந்த வம்பினுக் காரிரை யாகிய
வேந்தர் வேண்டிநின் றார்விம்ம னீயென்றான்.

(இ - ள்.) நுண் இடை தேய்ந்து நைந்து உக - நுட்பமான இடை தேய்ந்து வருந்திக் கெட; செப்பினைக் காய்ந்த வெம் முலையாய்! - செப்பைக் காய்ந்த விருப்பமூட்டும் முலைகளையுடையாய்!; நின கண்கள்போல் ஆய்ந்த அம்பினுக்கு - உன்னுடைய கண்கள் போலத் தப்பாதவாறு ஆராய்ந்தெடுத்த அம்புகட்கு; ஆர் இரை ஆகிய-நல்லிரை யாவதற்கு; வேந்தர் வேண்டி நின்றார்-அரசர்கள் விரும்பி நின்றனர்; நீ விம்மல் என்றான் - நீ. வருந்தாதே என்றுரைத்தான்.

(வி - ம்.) சீவகன் கூற்றாலேயே இந்நிகழ்ச்சி கண்டு கலங்கித் தத்தை அழத்தொடங்கினள் என்பதனை இனிதின் தேவர் உணர்த்துதல் உணர்க. (எசுஎ)

எசு0. அண்ணல் கூறலு மம்மனை யோவெனாத்
துண்ணெ னெஞ்சின ளாய்த்துடித் தாயிழை
கண்ணி னீர்முலை பாயக் கலங்கினாள்
வண்ண மாக்கவின் சொல்லோடு மாய்ந்ததே.

(இ - ள்.) அண்ணல் கூறலும் - சீவகன் அதனைக் கூறினவுடன்; ஆயிழை அம்மனையோ எனாத் துண்என் நெஞ்சினளாய்த் துடித்து - தத்தை அம்மாவோ என்று திடுக்குற்ற உள்ளத்தளாகித் துடித்து; கண்ணின் நீர் முலைபாயக் கலங்கினாள் - கண்ணீர் பெருகி முலைகளிற் பாய அழுது கலங்கினாள்; சொல்லொடு

வண்ண மாக்கவின் மாய்ந்தது-அப்போது சொல்லுடன் அவளது அழகு அறுதியாகக் கெட்டது. (உசுஅ)

எசுக மேவி நம்பிக்கு வெம்பகை யாக்கிய
பாவி யேனுயிர் பாழுடல் பற்றுவிட்
டாவி யோநட வாயென் றழுதுதன்
காவி வாட்கண் கலங்க வதுக்கினாள்.

(இ - ள்.) நம்பிக்கு மேவி வெம்பகை ஆக்கிய பாவியேன் - நம்பிக்கு உறவாக வந்து கடிய பகையை விளைவித்த பாவியேனுடைய; உயிர் பாழுடல் பற்றுவிட்டு நடவாய் - உயிரே! நீ பாழுடலைக் கைவிட்டுப் போகாய்; ஆவியோ என்று அழுது - நீயும் ஓர் ஆவியோ என்று அழுது; தன் காவி வாள் கண் கலங்க அதுக்கினாள் - தன்னுடைய காவியனைய ஒளிமிகும் கண்கள் கலங்குமாறு அடித்துக்கொண்டாள்.

(வி - ம்.) 'பாவியேனது பாழுடல்' என்றும் பாடம். இப்பாடமே சிறப்புடைத்து. (உசுக)

எசுஉ. பாழி நம்படை மேலதிப் பாரெலா
நூழி லாட்டி நடக்கிக் குடித்திடும்
வாழி நங்கைகண் டாயென்று வாட்கணீர்
தோழி தூத்துகிற் றோகையி னீக்கினாள்.

(இ - ள்.) நங்கை! வாழி! - நங்கையே! வாழ்க!; பாழி நம் படை மேலது-வலிமிகும் நம்முடைய படை மேம்பட்டு நின்றது; இப் பாரெலாம் நூழில் ஆட்டி நடக்கிக் குடித்திடும் - இது இவர்களையே அன்றி இவ்வுலகில் உள்ளோரையெல்லாம் கொன்று குவித்து ஒன்றாக்கிக் கரைத்துக் குடித்திடும்; கண்டாய் என்று - இதனை நீ அறிவாயாக என்றுரைத்து; தோகையின் வாள்கண் நீர் தூத்துகில் தோழி நீக்கினாள் - தத்தையின் வாட்கண் நீரைத் தூய ஆடையினால் தோழி துடைத்தாள்.

(வி - ம்.) தோகை - முன்னிலையுமாம். (உஎ0)

எசுங. எங்கள் பெண்மையு மீர்மலர்த் தார்மன்னர்
தங்க ளாண்மையுஞ் சால்வது காண்டுமென்
றிங்கு வார்முர லுங்கலை யேந்தல்கு
னங்கை வாட்படை நங்கையைச் சூழ்ந்ததே.

(இ - ள்.) எங்கள் பெண்மையும் ஈர் மலர்த்தார் மன்னர் தங்கள் ஆண்மையும் - எங்கள் பெண் தன்மையினும் குளிர்ந்த மலர்த்தார் வேந்தர்களின் ஆண் தன்மையினும்; சால்வது

காண்டும் என்று - சிறப்புடையது அறிவோம் என்று; இங்கு வார் முரலும் கலை - இவ்விடத்தில், நீண்ட, ஒலிக்கும் மேகலையை; ஏந்து அல்குல் - ஏந்திய அல்குலையுடைய; நங்கை வாள்படை - தத்தையின் வாளேந்திய பெண்படை; நங்கையைச் சூழ்ந்தது - தத்தையைச் சூழ்ந்து நின்றது.

(வி - ம்.) இங்கு என்பது தத்தை யிருக்கும் இடம். (உஎக)

வேறு

எசுச. கூன்களுங் குறளு மஞ்சிக்
குடர்வெந்து கொழும்பொற் பேழை
தான்கொளப் பாய வோடிச்
சாந்துக்கோய் புகிய செல்வ
தேன்கொள்பூ மாலை சூடித்
தாமமாய்த் திரண்டு நிற்ப
வான்பளிங் குருவத் தூணே
மறைபவு மாய வன்றே.

(இ - ள்.) கூன்களும் குறளும் அஞ்சிக் குடர் வெந்து - (படையெழுச்சி கண்ட) கூனும் குறளும் நடுங்கிக் குடல் தீய்ந்து; கொழும் பொன் பேழை தான் கொளப் பாய ஓடி - வளமிகும் பொன் பெட்டி தங்களை உள்ளடக்கிக் கொள்ளுமென்று கருதி அதனுள்ளே பாய்கைக்கு ஓடியும்; சாந்துக் கோய் புகிய செல்வ - சாந்திருந்த பரண்களிலே புகுதற்குச் செல்வனவும்; தேன் கொள் பூமாலை சூடித் தாமமாய்த் திரண்டு நிற்ப - தேனுற்ற மலர் மாலைகளை அணிந்து மாலை வடிவமாகத் திரண்டு நிற்பனவும்; வான் பளிங்கு உருவத்தூணே மறைபவும் ஆய - சிறந்த பளிங்கினலாகிய அழகிய தூணிலே மறைவனவும் ஆயின.

(வி - ம்.) இச்செய்யுள் இனிய நகைச்சுவைக்கு இடனாதலுணர்க. இந்நிகழ்ச்சியைக் கண்ட சீவகன் முறுவலித்தலை அடுத்த செய்யுளிற் காண்க. (உஎஉ)

எசுரு. இங்கித நிலைமை நோக்கி
முறுவலித் தெரிபொன் மார்ப
னங்கையைக் காக்கும் வண்ண
நகாநின்று மொழிந்து பேழ்வாய்ச்
சிங்கந்தான் கடிய தாங்கோர்
செழுஞ்சிங்க முழக்கிற் சீறிப்
பொங்கிமேற் செல்வ தேபோற்
பொலங்கழ னரலச் சென்றான்.

(இ - ள்.) எரி பொன் மார்பன்-விளங்கும் பொன் மார்பன்; இங்கித நிலைமை நோக்கி - (படையெழுச்சியும் கூனுங் குறளும் அஞ்சியதும்) ஆகிய குறிப்பின் தன்மையைக் கண்டு; முறுவலித்து - நகைத்து; நங்கையைக் காக்கும் வண்ணம் நகாநின்று மொழிந்து - தத்தையைக் காக்கும் இயல்பை நகைமுகத்துடன் அவளுக்குக் கூறி; கடியது பேழ்வாய்ச் சிங்கந்தான்-கடியதாகிய, பெருவாய்ச் சிங்கம் ஒன்று; ஆங்கு ஓர் செழுஞ் சிங்க முழக்கின் சீறி - ஆங்குத் தன்னால் அறியப்பட்ட கொழுத்த சிங்கங்களின் முழக்கைக் கேட்டு முழங்கி; பொங்கி மேல் செல்வதே போல் - கிளர்ந்து அவற்றின்மேற் போவது போல; பொலங் கழல் நரலச் சென்றான் - பொற்கழல் ஒலிக்கப் போனான்.

(வி - ம்.) இங்கிதம் - குறிப்பு. கடியது ஆங்கோர் சிங்கந்தான் என மாறுக. இனி ஓர் - அசைச்சொல் எனினுமாம். நரல - ஒலிப்ப. (உஎங)

எசுசு. பதுமுக குமரன் மற்றிப் பாவையைக் காவ லோம்பி
மதுமுக மாலை நெற்றி மதகளி றுந்தி நிற்ப
நுதிமுக வாளும் வில்லு நுண்ணிலை வேலு மேந்திச்
சதுமுக மாகச் சேனை நமர்தலைப் பெய்க வென்றான்.

(இ - ள்.) பதுமுக குமரன் மற்று இப் பாவையைக் காவல் ஓம்பி - பதுமுகன் வேறேயிருந்து இந் நங்கையைக் காத்தலைப் பேணி; மதுமுகம் மாலை நெற்றி மதகளிறு உந்தி நிற்ப - தேன் பொருந்திய மாலை அணிந்த நெற்றியை யுடைய மதயானையை (மண்டபத்தின் வாயில்வரை) செலுத்தி அதிலே நிற்க; நமர் நுதிமுக வாளும் வில்லும் நுண் இலை வேலும் ஏந்தி-நம்முடைய சுற்றத்தார், கூரிய வாளையும் வில்லையும் நுண்ணிய இலைமுக வேலையும் கைக்கொண்டு; சேனை சதுமுக மாகத் தலைப்பெய்க என்றான் - நம் சேனையை நான்கு வகையாக அவர் வகுத்த இடத்தே நிறுத்துக என்றான்.

(வி - ம்.) பதுமுகனை ஒழிந்த தோழர் மூவர் மூன்று கை, நபுல விபுலர் ஒரு கை நான்கு (சீவக. எசசு. 'ஐந்தலை அரவு' நோக்குக). (உஎச)

எசுஎ. வட்டுடை மருங்குல் சேர்த்தி
வாளிரு புடையும் வீக்கித்
தட்டுடைப் பொலிந்த திண்டேர்த்
தனஞ்சேயன் போல வேறிக்
கட்டளைப் புரவி சூழ்ந்து
கால்புடை காப்ப வேவி
யட்டுயிர் பருகுங் கூற்றங்
கோளேழுந் தனைய தோத்தான்.

(இ - ள்.) வட்டு உடை மருங்குல் சேர்த்தி-வட்டுடையை இடையிற் கொண்டு; வாள் இருபுடையும் வீக்கி - உடைவாள் களை இருமருங்கினும் கட்டி; தட்டு உடை பொலிந்த திண்தேர் தனஞ்செயன் போல ஏறி - தட்டினையுடைய பொலிவுற்ற திண்ணிய தேரிலே அருச்சுனன்போல அமர்ந்து; கட்டளைப் புரவி சூழ்ந்து கால் புடை காப்ப ஏவி - பண்ணுறு புரவிகளின் மேல் அமர்ந்து, சூழவந்து, தேரின் ஆழியைக் காக்குமாறு பணித்து; உயிர் அட்டுப் பருகும் கூற்றம் - உயிரைக் கொன்று தின்னும் கூற்றுவன்; கோள் எழுந்தனையது ஒத்தான் - கொல் லுதலைக் கருதி எழுந்தாற் போன்றது போன்றான்.

(வி - ம்.) வட்டுடை - போர்மறவர்க்குரிய ஒருவகை ஆடை; முழந்தாளளவாகச் செறிய உடுத்தும் உடை என்க. (௨௭௫)

௭௬அ. புள்ளிரைப் பன்ன பொற்றார்ப்
புரவித்தே ரிரவி போலா
வுள்ளுருத் தெழுந்து பொங்கி
யுடல்சினங் கடவ நோக்கி
முள்ளெயி றிலங்க நக்கு
முடிக்குழா மன்னர் கேட்பக்
கள்ளவி ழலங்கன் மார்பன்
கார்மழை முழக்கிற் சொன்னான்.

(இ - ள்.) புள் இரைப்பு அன்ன பொன் தார்ப் புரவித் தேர் - பறவைகளின் குரல்போன்றொலிக்கும் பொற்கிண்கிணி யணிந்த குதிரைகள் பூட்டிய தேரின்மேல்; இரவி போலா - ஞாயிறு போலமர்ந்து; உடல் சினம் உள் உருத்து எழுந்து பொங்கிக் கடவ நோக்கி - பொருகின்ற சீற்றம் உள்ளத்தில் வெம்மையுடன் எழுந்து பொங்கிச் செலுத்தப் பார்த்து; முள் எயிறு இலங்க நக்கு - கூரிய பற்கள் விளங்க நகைத்து; மன்னர் குழாம் கேட்ப - முடியணிந்த வேந்தர் திரள் கேட்கும்படி; கார் மழை முழக்கின் - கரிய முகிலின் முழக்கைப்போல; கள் அவிழ் அலங்கல் மார்பன் - தேன் விரியும் மாலை மார்பனான சீவகன்; சொன்னான் - கூறினான்.

(வி - ம்.) 'சினம் உடல் கடவ' என்று மாற்றிச், 'சினம்தன் மெய்யைச் செலுத்த' என்று பொருளுரைப்பர் நச்சினார்க்கினியர். (௨௭௬)

௭௬௯. முருகுலா முல்லை மாலை
மூப்பிலா முலையி னார்நும்
மருகுலாம் புலவி நோக்கத்
தமிர்தமின் றுகுப்ப கொல்லோ

கருதலாம் படிய தன்றிக்
கலதியம் பிவையுங் காய்ந்த
பொருதுலாம் புகழை வேட்டிவ்
வெஃகமும் புகைந்த வென்றான்.

(இ - ள்.) பொருது உலாம் புகழை வேட்டு - போர் செய்த லால் உண்டாகும் புகழை விரும்பி; கருதலாம் படியது அன்றி - நினைக்கலாம் படியது அன்றாக; கலதி அம்பு இவையும் காய்ந்த - கேட்டினைச் செய்யும் அம்புகளாகிய இவையும் காய்ந்தன; இவ் எஃகமும் புகைந்த - இந்த வேல்களும் புகைந்தன; (ஆதலால்); முருகு உலாம் முல்லை மாலை மூப்பு இலா முலையினார் - மணங் கமழும் முல்லை மாலை அணிந்த இளமுலையினையுடைய நும் மனைவியர்; நும் அருகு உலாம் புலவி நோக்கத்து - (நீர் யாழ் வாசிக்க வந்ததனால்) நும்மிடத்தே பிறந்த புலவி நோக்கத்தால்; அமிர்தம் இன்று உகுப்ப கொல்லோ - (பின்பு) தாம் பெறும் புணர்ச்சியின்பம் ஆகிய அமிர்தத்தைப் பாழே சிந்துவர் போலும்!

(வி - ம்.) 'அமிர்த மென் றுகுப்ப' என்றும் பாடம். (உ௭௭)

௭௭௦. வாணிக மொன்றுந் தேற்றாய்
முதலொடுங் கேடு வந்தா
லூணிகந் தீட்டப் பட்ட
வூதிய வொழுக்கி னெஞ்சத்
தேணிகந் திலேசு நோக்கி
யிருமுதல் கெடாமை கொள்வார்
சேணிகந் துய்யப் போநின்
செறிதொடி யொழிய வென்றார்.

(இ - ள்.) ஊண் இகந்து ஈட்டப்பட்ட - உணவையும் கை விட்டுத் திரட்டப்பட்ட; முதலொடும் கேடு வந்தால் - முதலுடன் ஊதியத்திற்கும் ஒரு கேடு வந்தால்; ஊதிய ஒழுக்கின் நெஞ்சகத்து ஏண் இகந்து - ஊதிய மாகிய நடப்பின் மேலே நெஞ்சத்தில் நடக்கின்ற திண்மையைக் கைவிட்டு; இலேசு நோக்கி - (இரண்டையும் இழப்பதில் முதல் பெறுகையும்) ஊதியம் என்று பார்த்து; இருமுதல் கெடாமை கொள்வார் - பெரிய முதல் கெடாதபடி அதனைக் கொள்வார் (நின் குலத்துள் ளோர்); வாணிகம் ஒன்றும் தேற்றாய் - நீயும் அது செய்யாமற் போர்குறித் தெழுதலின் வாணிக முறையொன்றும் அறிகிலாய்; நின் செறிதொடி ஒழிய - (இனி) ஊதியமாகிய நின் செறிந்த தொடியினை இங்கே விட்டு; சேண் இகந்து உய்யப் போ

என்றார் - உன் உடம்பாகிய முதலைக் கொண்டு பிழைக்கப் போ என்றனர்.

(வி - ம்.) தேற்றாய் : எதிர்மறை; 'தேற்றாய் பெரும! பொய்யே' (புறநா - ஙகூ) என்றது போல் நின்றது. இலேசு : சிறுமையாகிய ஊதியம்.

இது, சீவகனை வணிகன் என்று கருதிய அரசர் அவனை அசதியாடியது. பொதுவாகப் பொருளீட்டுவாரியல்பினை வாணிகர்க் கேற்றி ஊணிகந்து ஈட்டப்பட்ட ஊதியம், என்றார். "உடாஅதும் உண்ணாதும் தம்முடம்பு செற்றும்........ஈட்டினார்" (நாலடி. க0) என்றார் பிறரும். (உஎஅ)

எஎக. தம்முடைப் பண்டந் தன்னைக்
கோடுத்தவ ருடைமை கோட
லெம்முடை யவர்கள் வாழ்க்கை
யெமக்குமஃ தொக்கு மன்றே
யம்முடி யரசிர்க் கெல்லா
மென்கையி லம்பு தந்து
நும்முடைத் திருவுந் தேசு
நோக்குமின் கோள்வ லென்றான்.

(இ - ள்.) தம்முடைப் பண்டந்தன்னைக் கொடுத்து அவர் உடைமைகோடல்-தம்முடைய பொருளைப் பிறர்க்குக் கொடுத்து, அவர்களின் செல்வத்தை வாங்கிக்கொள்ளுதல்; எம்முடையவர்கள் வாழ்க்கை - எம் குலத்தவரின் வாழ்க்கை; எமக்கும் அஃது ஒக்கும் அன்றே? - எமக்கும் அவ்வணிகம் பொருந்தும் அல்லவோ?; அம் முடி அரசிர்க்கு எல்லாம் என் கையில் அம்பு தந்து - (இனி) யான் அழகிய முடியுடைய அரசர்களாகிய நுங்களுக்கெல்லாம் என் கையில் உள்ள அம்பைக் கொடுத்து; நும்முடைத் திருவும் தேசும் கொள்வல் - உங்களுடைய வெற்றித் திருவையும் புகழையும் கொள்வேன்; நோக்குமின் என்றான் - வல்லராயின் அவற்றைக் காக்கப் பாருங்கள் என்று சீவகன் செப்பினான்.

(வி - ம்.) எம்முடையவர்கள் என்றது வணிகரை. கொடுத்து வாங்குதல் எங்குலத் தொழில், அங்ஙனமே யானும் அம்பு முதலியவற்றைக்கொடுத்துத் திருமுதலியவற்றை வாங்குவல் என்றான். (உஎகூ)

எஎஉ. மட்டுலாந் தாரி னாய்நின்
வனப்பினோ டிளமை கல்வி
கேட்டுலாய்ச் சிலம்பு செம்பொற்
கிண்கிணி மகளிர் கோங்க

மோட்டுலா முலைகள் பார்ய்ந்த
வகலத்துச் சரங்கண் மூழ்கப்
பட்டுலாய்க் கிடக்க லுற்ரு
யென்சோலாய் பாவி யென்ரூர்.

(இ - ள்.) மட்டு உலாம் தாரிஞய்! - தேன் உலவும் மாலையினய்!; சிலம்பு செம்பொன் கிண்கிணி மகளிர் - சிலம்பும் பொற்கிண்கிணியும் உடைய மகளிரின்; கோங்கம் மொட்டு உலாம் முலைகள் பாய்ந்த அகலத்துள்-கோங்கரும்பனைய முலைகள் தாக்கிய மார்பிலே; சரங்கள் உலாய் மூழ்கப் பட்டு - அம்புகள் உலாவி மூழ்குவதனலே இறந்து; நின் வனப்பினேடு இளமை கல்வி கெட்டு - நின் வனப்பும் இளமையும் கல்வியும் அழிந்து; கிடக்கலுற்ருய் பாவி!-கிடக்க நேர்ந்த பாவியே!; என் சொலாய் என்ருர்-நீ ஏது சொல்லாய் என்று மன்னர்கள் கூறினர்.

(வி - ம்.) இவை, மன்னர் இவன் அழகில் தத்தை ஈடுபட்டாள் என்பதுபற்றி யுண்டான பொருமை மொழிகள் ஆதல் உணர்க. (உஅ0)

எஎங. எரிசுடர்ப் பருதி முன்ன
ரிருளென வுடைந்து நீங்கப்
போருபடை மன்னர் நுங்கள்
புறக்கோடை கண்டு மற்றிம்
முருகுடைக் குழலி ஞடன்
முகிழ்முலை கலப்ப லன்றே
லிருசுடர் வழங்கும் வையத்
தேன்பெயர் கேடுக வென்ருன்.

(இ - ள்,) எரி சுடர்ப் பருதி முன்னர் இருள் என-விளங்கும் ஒளியை யுடைய ஞாயிற்றின் முன்னர் இருள் உடைந்து நீங்குமாறு போல; பொரு படை மன்னர் உடைந்து நீங்க - பொருகின்ற படை ஏந்திய மன்னராகிய நீங்கள் என் தோற்றங் கண்டு உடைந்து நீங்குதலினலே; நுங்கள் புறக்கொடை கண்டு- உங்கள் புறங் கண்டு; மற்று இம் முருகுடைக் குழலினள் தன் முகிழ்முலை கலப்பல் - பிறகு, இந்த மணங்கமழ் கூந்தலாளின் இளமுலையைத் தழுவுவேன்; அன்றேல் - அல்லவாயின்; இரு சுடர் வழங்கும் வையத்து என் பெயர் கெடுக என்ருன்-ஞாயிறு திங்கள் உலவும் உலகிலே என் பெயர் நடவாது அழிக என்ருன் சீவகன்.

(வி - ம்.) இது வஞ்சினம். முன், இளமை முதலியவற்றை அவ்வரசர்கள் கொன்று கூறலின், அக் கொலை பொருளாகப் பிறந்த வேதுளி யென்னும் மெய்ப்பாடு. இது, 'நகுதக்கனரே' என்னும் (எஉ) புறப்பாட்டினும் கண்டு கொள்க.
(உஅக)

**வேறு**

எஎச. ஆண்மர வாணிலத் தப்பு வேல்செய்முட்
காண்வரு காட்டினக் களிற்று நீள்வரை
நீணில வேந்தெனும் வேழப் பேரினம்
பூண்முலைப் பிடிக்கவாய்ப் போர்செய் குற்றவே.

(இ - ள்.) ஆள்மர வாள் நிலத்து - ஆளாகிய மரத்தையுடைய வாளாகிய நிலத்திலே; அம்பு வேல் செய் முள் - அம்பு வேலாற் செய்த இடு முள்ளையுடைய; காண் வரு காட்டு - எல்லாரும் காண்டலுடைய காட்டில்; இன களிற்று நீள்வரை - இனக் களிருகிய நீண்ட மலையின்மேல்; நீள் நில வேந்து எனும் வேழப் பேரினம் - பெருநில மன்னர்களாகிய வேழப் பெருந் திரள்; பூண்முலைப் பிடிக்கு அவாய்-பூண்முலை யுடைய தத்தை யென்னும் பிடிக்கு ஆசைகொண்டு; போர் செய்குற்ற - போர் செய்தலுற்றன.

(வி - ம்.) ஆள் - போர்மறவர். வாணிலம்: பண்புத்தொகை. செய்முள்-இடுமுள். அவாய் - அவாவி. (உ௮உ)

எஎரு. தாழிருந் தடக்கையு மருப்புந் தம்பியர்
தோழர்தன் ருள்களாச் சோரியு மும்மத
மாழ்கடற் சுற்றமா வழன்று சீவக
வேழுயர் போதக மினத்தோ டேற்றதே.

(இ - ள்.) தாழ் இருந் தடக்கையும் மருப்பும் தம்பியர் - நீண்ட பெரிய கை நந்தட்டனாகவும் மருப்புக்கள் நபுல விபுலராகவும்; தன் தாள்கள் தோழர் ஆ - கால்கள் தோழர் நால்வரும் ஆகவும்; ஆழ்கடல் சுற்றம் சொரியும் மும்மதம் ஆ - ஆழ்ந்த கடல் போன்ற தேரும் குதிரையும் காலாளும் ஆகிய படை, தான் பெய்யும் மும்மதமாகவும்; சீவக ஏழுயர் போதகம் - இசையேழினும் உயர்ந்த சீவகனாகிய ஏழு முழம் உயர்ந்த களிறு; இனத்தொடு ஏற்றது - அரசராகிய வேழத்திரளுடனே போர் செயத் தொடங்கியது.

(வி - ம்.) தன்னை யானையாக உருவகங் கூறலிற் கடற் சுற்றம் அதனை ஒழிந்த மூன்று படையும் ஆம். யானைக்கு உத்தம விலக்கணம் ஏழு முழ உயரம். துதிக்கையும் வாலும் கோசமும் நான்கு கால்களும் நீண்டிருத்தல் என்பாரும் உளர். (உ௮௩)

எஎசு. குடையுடை வேந்தெனுங் குழாங்கோ ளுகமுங்
கோடியெனும் பிடியுடைக் குமர வேழமும்
வெடிபடு போர்த்தொழில் காண விஞ்சைய
ரிடியுடை யினமழை நெற்றி யேறினர்.

(இ - ள்.) குடை உடை வேந்து எனும் குழாம்கொள் நாகமும் - குடைகளையுடைய மன்னர்கள் எனும் கூட்டமாகிய யானைகளும்; கொடி யெனும் பிடி உடைக் குமர வேழமும் - தத்தையாகிய பிடியையுடைய சீவககுமரனாகிய களிறும்; வெடி படு போர்த்தொழில் காண - தம்மின் பகைத்தலுண்டாகிய போர்த் தொழிலைக் காண்டற்கு; விஞ்சையர் இடியுடை இன மழை நெற்றி ஏறினர் - வித்தியாதரர்கள் இடியுடைய முகில் திரளின் மேல் ஏறினர்.

(வி - ம்.) வெடி - முழக்குமாம்.

நாகமும் - யானைகளும். கொடி - தத்தை. குமரவேழம் - சீவகனாகிய யானை. வெடிபடுதல் - பகைத்தல்; பிளவுபடுதல். விஞ்சையர் - வித்தியாதரர். (உஅச)

எளஎ. கரைபொரு கடலொடு கார்க ணுற்றென
முரைசொடு வரிவளை முழங்கி யார்த்தன
வரைசரு மமர்மலைந் தரணம் வீசினர்
குரைகடற் றானைபோர்க் கோலஞ் செய்தவே.

(இ - ள்.) கரைபொரு கடலொடு கார்கண் உற்றென - கரையுடன் பொரும் கடலொலியுடன் வான் முழக்கம் சேர்ந்தாற் போல; முரைசொடு வரிவளை முழங்கி ஆர்த்தன - முரசும் சங்கும் முழங்கி ஆரவாரித்தன; அரைசரும் அமர் மலைந்து அரணம் வீசினர் - மன்னரும் போரை மேற்காண்டு கவசத்தை அணிந்தனர்; குரைகடல் தானை போர்க் கோலம் செய்த - ஒலி கடலனைய அவர்படைகளும் போர்க் கோலம் மேற்கொண்டன.

(வி - ம்.) கார் - முகில். முரைசு, அரைசு, என்பன எதுகை நோக்கி அகரம் ஐகாரமாய்த் திரிந்து நின்றன. வரிவளை-வரியையுடைய சங்கு. அரணம் - கவசம். வீசுதல் - ஈண்டு வீக்கினர் என்னும் பொருள் படநின்றது. வீக்குதல் - கட்டுதல். (உஅரு)

எளஅ. தெய்வதம் வணங்குபு செம்பொன் வாயுளிட்
டெய்கணைப் படுமழை சிதறி யெங்கணு
மொய்யமர் மலைந்தனர் முருகு விம்முதார்ச்
செய்கழற் சீவகன் வாழ்க வென்னவே.

(இ - ள்.) முருகு விம்மு தார்ச் செய்கழல் சீவகன் வாழ்க என்ன - மணம் மிகு மாலையும் கழலும் அணிந்த சீவகன் வாழ்க என்று; தெய்வதம் வணங்குபு - தெய்வத்தை வணங்கி; செம் பொன் வாயுள் இட்டு - பாடுகுறித்துப் பொற் றகட்டை வாயி

விட்டுக்கொண்டு; எங்கணும் எய்கணைப் படுமழை சிதறி - எங்கும் பெய்கின்ற மழைபோலக் கணையைச் சிதற; மொய் அமர் மலைந்தனர் - செறிந்த போரை மேற்கொண்டனர்.

(வி - ம்.) சிதறி - சிதற: எச்சத்திரிபு.

வென்றன்றி மீள்தலில்லை என்பதற்கறிகுறியாகப் போர்மறவர் பொற்றகட்டை வாயிலிட்டுப் போர் தொடங்குதல் ஒரு மரபு போலும். இவ்வாசிரியர் மேலும் "காஞ்சனத் தளிவம் வாய்க்கிட்டு அச்சுற முழங்கி" (உஙOரு) என்றார். முருகு - மணம். (உஅசு)

எஎகூ. கலந்தது பெரும்படை கணைபெய்ம் மாரிதூ
யிலங்கின வாட்குழா மிவுளி யேற்றன
விலங்கின தேர்த்தொகை வேழங் காய்ந்தன
சிலம்பின வியமரந் தெழித்த சங்கமே.

(இ - ள்.) பெரும்படை கணை பெய் மாரி தூய் கலந்தது - அரசர் பெரும்படை அம்புகளைப் பெய்யும் முகில்போலத் தூவிச் சீவகன் படையொடு கலந்தது; வாள் குழாம் இலங்கின - (இரு படையினும்) வாட்படைகள் இலங்கின; இவுளி ஏற்றன-குதிரைகளும் ஒன்றையொன்று எதிர்ந்தன; தேர்த்தொகை விலங்கின - தேர்த்திரளும் ஒன்றையொன்று தடுத்தன; வேழம் காய்ந்தன - யானைகளும் அவ்வாறே காய்ந்தன; இயமரம் சிலம்பின - ஊது கொம்புகள் ஒலித்தன; சங்கம் தெழித்த - சங்குகளும் ஒலித்தன.

(வி - ம்.) இரண்டு படையும் கலந்து போர் தொடுத்தபடி கூறினர்.

மாரி போலத் தூவி என்க. இவுளி - குதிரை. விலங்கின - தடுத்தன. சிலம்பின - ஒலித்தன. இயமரம் - ஊதுகொம்பு. தெழித்த - ஒலித்தன. (உஅஎ)

எஅO. சுற்றணி கோடுஞ்சிலை மேகந் தூவிய
முற்றணி பிறையெயிற் றம்பு-மூழ்கலி
னற்றுவீழ் குழைமுக மலர்ந்த தாமரை
மற்றவை சோரிவதோர் மாரி யோத்தவே.

(இ - ள்.) சுற்று அணி கொடுஞ்சிலை மேகம் தூவிய - சுற்றினும் அணியப்பட்ட வளைந்த சிலையாகிய முகில் தூவிய; முற்ற அணி பிறை எயிற்று அம்பு மூழ்கலின் - முற்றினும் அணியாகப் பிறைபோலும் முனையுடைய அலகு அம்புகள் மூழ்கியதால்; அற்று வீழ் குழைமுகம் அவை அலர்ந்த தாமரை சொரிவது - அற்று வீழ்கின்ற குழையுடைய முகமாகிய அவை மலர்ந்த

தாமரைப் பூவைச் சொரிவதாகிய; ஓர் மாரி ஒத்த - ஒரு முகிலை ஒத்தன.

(வி - ம்.) மற்று: அசை.

பிறை எயிற்றம்பு - அலகம்பு. குழைமுகம் - குண்டலத்தையுடைய முகம். (௨௭௫)

௭௭௬. மறப்படை பசித்தன வயிறின் றார்கனக்
குறைத்தனர் குஞ்சரம் கூந்தன் மாத்துணித்
திறக்கின ரோடுதேர் மைந்த ரின்னுயிர்
துறக்கம்போய்ப் புகுகெனத் துணிய நூறினர்.

(இ - ள்.) மறப்படை பசித்தன இன்று வயிறு ஆர்க என - போர்ப்படைகள் முன்பு பசித்திருந்தன யாவும் இப்பொழுது வயிறு நிறைக என்று கூறி; குஞ்சரம் குறைத்தனர் - யானைகளை வீழ்த்தினர்; கூந்தல் மாத் துணித்து ஓடுந் தேர் இறக்கினர் - பிடரி மயிரையுடைய குதிரைகளை வெட்டி, ஓடுந்தேரைத் தாழ்த்தினர்; மைந்தர் இன்னுயிர் துறக்கம் போய்ப் புகுக எனத் துணிய நூறினர் - வீரரின் இனிய உயிர்கள் துறக்கத்திற் சென்று புகுதுக என்று அவர்களைத் துண்டமாக வெட்டினர்.

(வி - ம்.) 'மறப்படை பசித்தன வயிறு இன்று ஆர்க' என்றது மறவர் கூற்று. குஞ்சரம் - யானை. கூந்தன் மா - குதிரை. ஓடுதேர் இறக்கினர் எனமாறுக. (௨௭௬)

வேறு

௭௭௭. ஆற்றுவீர் வம்மி னெம்மோ
டாண்மைமேம் படீஇய வென்பா
ரேற்றவர் மார்பத் தல்லா
லிரும்புமேல் விடாது நிற்பார்
கூற்றம்போற் கொடிய யானைக்
கோடுழு தகன்ற மார்பங்
கீற்றுப்பட் டழகி தாகக்
கிடக்கெனக் கொடுத்து நிற்பார்.

(இ - ள்.) எம்மோடு ஆண்மை மேம்படீஇய ஆற்றுவீர் வம்மின் என்பார் - எம்முடன் நம் வீரம் மேம்படுத்தற் பொருட்டுப் பொருதல் வல்லீர் வருவீர் என்பார்; ஏற்றவர் மார்பத்து அல்லால் இரும்பு மேல் விடாது நிற்பார் - எதிர்ந்தவர் மார்பிலன்றி எதிராதார் மார்பிற் படை யெறியாமல் நிற்பார்; கூற்றம் போல் கொடிய யானைக் கோடு உழுது - கூற்றுவனைப்

போலக் கொடிய களிற்றின் கொம்புகள் உழுது; அகன்ற மார்பம் கீற்றுப்பட்டு அழகிதாகக் கிடக்க எனக் கொடுத்து நிற்பார் - பரந்த மார்பு கீற்றுப்பட்டு அழகாகக் கிடக்க என்று (மார்பை யானையினிடம்) கொடுத்து நிற்பார்.

(வி - ம்.) இதுமுதல் நான்கு செய்யுட்கள் சீவகன் தோழர் செயல் கூறுகின்றன. (உகு0)

எஅரு. கழித்துவா ளமலை யாடிக்
காட்டுவார் கண்கள் செந்தீ
விழித்துமேற் சென்ற வேழம்
வேலினல் விலக்கி நிற்பார்
தெழித்துத் தேர்க் கயிறு வாளா
லரிந்திட்டுப் புரவி போக்கிப்
பழிப்பில கோணர்ந்து பூட்டு
பாகநீ யென்று நிற்பார்.

(இ - ள்.) கழித்து வாள் அமலை ஆடிக் காட்டுவார் - (உறையினின்றும்) கழித்து வாட்கூத்தாடிக் காட்டுவார்; செந்தீ விழித்து மேல் சென்ற வேழம் - நெருப்பெழ விழித்து எதிர் நோக்கி வந்த வேழத்தை; வேலினல் விலக்கி நிற்பார் - வேலால் தடுத்து நிற்பார்; தெழித்துத் தேர்க் கயிறு வாளால் அரிந்திட்டுப் புரவி போக்கி - (பாகனைச்) சீறித் தேர்க் கயிற்றை வாளால் அறுத்துக் குதிரையை ஓட்டிவிட்டு; பாக! பழிப்பில கொணர்ந்து பூட்டு என்று நிற்பார் - பாகனே! குற்றம் அற்ற புரவிகளைக் கொண்டுவந்து பூட்டுக என்று நிற்பார்.

(வி - ம்.) வாளமலை - போர்க்களத்து மறவர் வாளை விதிர்த்தாடும் ஒருவகைக் கூத்து. இதனை, "களிற்றொடு பட்ட வேந்தனை அட்ட வாளோர் ஆடு ஒள்வா ளமலை" என வரும் தொல்காப்பியத்தானும், வேந்தன் "வலிகெழுதோள் வாள்வயர் ஒலிகழலான் உடனுடின்று" என வரும் புறப்பொருள் வெண்பாமாலையானும் (கசஎ) உணர்க. (உகக)

எஅச. ஐங்கதிக் கலினப் பாய்மாச்
சிறிதுபோர் களையீ தென்பார்
வெங்கதிர் வேலிற் சுட்டி
வேந்தெதிர் கொண்டு நிற்பார்
நங்கைகல் யாணம் நன்றே
நமக்கென நக்கு நிற்பார்
சிங்கமும் புலியும் போன்றார்
சீவகன் றோழன் மாரே.

(இ - ள்.) ஐங்கதிக் கலினப் பாய்மாப் போர் சிறிது - ஐங் கதியையும் கடிவாளத்தையு முடைய புரவிப் போர் சிறிது; ஈது களை என்பார் - இதனை நீக்கு என்பார்; வெங்கதிர் வேலின் வேந்து சுட்டி எதிர்கொண்டு நிற்பார் - ஞாயிறு போன்ற வேலி னாலே வேந்தனொருவனைச் சுட்டிக் காட்டி இவன் எனக்கு எதிர் என்று எதிர்த்து நிற்பார்; நங்கை கல்யாணம் நமக்கு நன்றே என்று நக்கு நிற்பார் - தத்தையின் திருமணம் (போரைத் தந்த தால்) நமக்கு நன்மையே செய்தது என்று நகைத்து நிற்பார்; சிங்கமும் புலியும் போன்றார் சீவகன் தோழன்மார் - (இங்ஙனம்) சிங்கமும் புலியும் போல இயங்கினர் சீவகனுடைய தோழர்கள்.

(வி - ம்.) வெங்கதிர் வேலின் வேந்து சுட்டி (அவனை) எதிர் கொண்டு நிற்பார் என மாறுக. நங்கை - தத்தை. நன்றே என்பது நமக்கிப் போரினைத் தந்தமையால் நன்று என்பதுபட நின்றது.

ஐங்கதி: "விக்கிதம் வற்கிதம் வெல்லும் உபகண்டம் - மத்திமஞ் சாரியோ டைந்து." (உகூஉ)

எஅகூ. ஒருங்கவன் பிறந்த ஞான்றே
பிறந்தவ ருதயத் துச்சி
யிரும்பினாற் பின்னி யன்ன
யெறுழ்வலி முழவுத் தோளார்
விரும்புவார் வேழ வேற்போர்
நூற்றுவர் நூறு கோடிக்
கிருந்தனம் வருக வென்பா
ரின்னண மாயி னாரே.

(இ - ள்.) அவன் பிறந்த ஞான்றே ஒருங்கு பிறந்தவர் - சீவகன் பிறந்த அன்றே கூடப் பிறந்தவர்; உதயத்து உச்சி இரும்பினால் பின்னி அன்ன எறுழ்வலி முழவுத் தோளார் - உதய மலையின் முடியை இரும்பாற் கட்டினாற் போன்ற பெருவலி படைத்த முழவனைய தோளினர்; வேழ வேல் போர் விரும்புவார் - யானையை வேலால் எறியும் போரை விரும்புகின்றவர்; நூற்றுவர் நூறு கோடிக்கு இருந்தனம், வருக என்பார் - நூற்றுவர் நூறு கோடி படைக்கு எதிராக இருந்தோம், வருக என்று எதிர்ப் படைஞரைப் போருக்கு ஏற்பார்; இன்னணம் ஆயினர் - இங்ஙனம் போரிலே யீடுபட்டனர்.

(வி - ம்.) கூடப் பிறந்தவர் எனினும் ஒரு தாய் வயிற்றிற் பிறந்தவ ரல்லர்; தோழராய்ப் பிறந்தவர். நச்சினார்க்கினியர் எஅஉ - முதல் எஅகூ-வரை ஒரு தொடராக்கிக் கூறும் முடிபு:

சீவகன் தோழன்மார், அவன் பிறந்த அன்றே கூடப்பிறந்தவர், தோளார், விரும்புவார், வருக என்பார், அவர்கள்தாம் இப் போரில்

இன்னணமாயினர். அஃது எங்ஙனே யெனின், என்பார், விடாது நிற்பார், கொடுத்து நிற்பார், காட்டுவார், விலக்கி நிற்பார், பூட்டென்று நிற்பார், களையென்பார், எதிர்கொண்டு நிற்பார், நக்கு நிற்பாராய்ச் சிங்கத்தையும் புலியையும் ஒத்தார் என்க.

இவை நான்கு கையிலும் நின்ற படைத் தலைவரல்லாத் தோழர் பொருதபடி கூறின. (உசுரு)

எஅசு. கூட்டுறெ முறுக்கி விட்ட
குயமகன் றிகிரி போல
வாட்டிறற் றேவ தத்தன்
கலினமா மாலை வெள்வே
லீட்டம்போழ்ந் தியானை நெற்றி
யிருங்குளம் பழுத்தி மன்னர்
சூட்டொடு கண்ணி சூளா
மணிசிந்தித் திரியு மன்றே.

(இ - ள்.) கூட்டு உற முறுக்கி விட்ட குயமகன் திகிரி போல - மண்ணுருண்டையுடன் திரித்துவிட்ட குயவனுடைய சக்கரம்போல; வாள் திறல் தேவதத்தன் கலின மா - வாள் வலி படைத்த தேவதத்தனுடைய புரவி; மாலை வெள்வேல் ஈட்டம் போழ்ந்து - மாலை யணிந்த வெள்ளிய வேற்படையின் திரளைப் பிளந்து; யானை நெற்றி இருங் குளம்பு அழுத்தி - யானையின் நெற்றியிலே குளம்புகளை அழுத்தி; மன்னர் சூட்டொடு கண்ணி சூளாமணி சிந்தி - மன்னர் அணிந்த போர்ப்பூ முடிமாலை முடி மணி ஆகியவற்றைச் சிதறி; திரியும் - திரியும்.

(வி - ம்.) இதுமுதல் நான்கு செய்யுட்கள் தோழர் மூவரும் நபுல விபுலரும் பொருதபடி கூறுகின்றன.

கூட்டு - மண்கூட்டு. 'பசுமட்குரூஉத்திரள்' என்றார் புறத்தினும் (நஉ). கலினமா - குதிரை. சூட்டு - போர்ப்பூ. சூளாமணி - முடியின் மணி. (உசுசு)

எஅஎ. பாய்ந்தது கலின மாவோ
பறவையோ வென்ன வுட்கி
வேந்தர்தம் வயிறு வேவ
நபுலமா விபுல ரென்பார்
காய்ந்துதம் புரவிக் காமர்
குளம்பினல் களிற்றி னோடை
தேய்ந்துகச் சேர்த்தி மாலைத்
திருமுடித் திலகங் கொண்டார்.

(இ - ள்.) கலினமாவோ பறவையோ பாய்ந்தது என்ன உட்கி - புரவியோ பறவையோ பாய்ந்தது என்று அஞ்சி; வேந்தர் தம் வயிறு வேவ - மன்னருடைய வயிறு எரிய; நபுல விபுலர் என்பார் காய்ந்து - நபுல விபுலர்கள் சினந்து; தம் புரவி காமர் குளம்பினால் - தம் குதிரைகளின் அழகிய குளம்பினால்; களிற்றின் ஓடை தேய்ந்து உகச் சேர்த்தி - களிற்றின் முகபட்டம் தேய்ந்து விழச் செலுத்தி; மாலைத் திருமுடித் திலகம் கொண்டார் - மாலையையுடைய திருமுடியிலிருந்து சூளாமணியைக் கவர்ந்தனர்.

(வி - ம்.) உட்குதல்-அஞ்சுதல். நபுலவிபுலர் - சீவகன் தம்பிமார். காமர் குளம்பு - அழகிய குளம்பு. ஓடை - முகபடாம். திருமுடித் திலகம்என்றது சூளாமணியினை. (உகஅ)

எஅஅ. காயத்தின் குழம்பு தீற்றிக்
காரிரும் பெறிய மேகந்
தோயுமுள் ளிலவின் கூன்காய்
சினைதோறு முதிர்வ வேபோன்
மாயங்கோன் மறவர் மாலைப்
பைந்தலை யுதிர்ந்த செங்கட்
சேயனன் றிருவின் பேரான்
செழுஞ்சிலைப் பகழி யாலே.

(இ - ள்.) காயத்தின் குழம்பு தீற்றிக் கார் இரும்பு எறிய - பெருங் காயத்தின் குழம்பைப் பூசிக் கரிய வாளினால் வெட்ட; மேகம் தோயும் முள் இலவின் கூன்காய் சினைதொறும் உதிர்வ வேபோல் - வான் அளாவிய முள் இலவமரத்தின் வளைந்த காய் கிளைதோறும் சிந்துவனபோல; செங்கண் சேய் அனன் திருவின் பேரான் செழுஞ்சிலைப் பகழியால் - அழகிய கண்களையுடைய முருகனைப் போன்றவனை சீதத்தனுடைய சிறந்த வில்லிலிருந்து செல்லும் கணைகளால்; மாலை மறவர் பைந்தலை உதிர்ந்த- மாலையணிந்த மறவரின் பசிய தலைகள் விழுந்தன; மாயம்கொல் - இது மாயமோ?

(வி - ம்.) காயம் - பெருங்காயம். இரும்பு - ஈண்டுக் கோடரி; ஈர்வாளுமாம். செங்கட்சேய் என்றது முருகனை. திருவின் பேரான் - சீதத்தன். (உகசு)

எஅகூ. நீணிறப் பௌவ மேய்ந்து
சூன்முற்றி நீல மேகம்
வானிற விசும்பி னின்ற
மாரியின் மறைவ லாளன்

போனிறப் புத்தி சேனன்
பொன்னணி பகழி சிந்தி
வேனிற மன்னர் சேனை
கூற்றிற்கு விருந்து செய்தான்.

(இ - ள்.) நீல்நிறப் பெளவம் மேய்ந்த சூல் முற்றி - நீல நிறக் கடலிற் படிந்து நீரைப் பருகிச் சூல் முதிர்தலாலே; நீல மேகம் வால்நிற விசும்பில் நின்ற மாரியின் - கருமுகில் தூயநிற வானிலே மாறாது நின்ற காலமழை போல; மறைவலாளன் பொன் நிறப் புத்திசேனன் - மறைவல்லவனாகிய பொன் வண்ண முற்ற புத்திசேனன்; பொன் அணி பகழி சிந்தி - பொன்னு லான அம்புகளை விடுத்து; வேல்நிற மன்னர் சேனை - வேலேந் திய நிறமுடைய வேந்தரின் படையை; கூற்றிற்கு விருந்து செய் தான் - கூற்றுவனுக்கு விருந்தாக்கினான்.

(வி - ம்.) பொன்னிறம், போனிறம் என விகாரம். 'போர்நிறம்' பாடமாயிற் போரொளியாம்.

நீலநிறம் - நீனிறம் என்று நின்றது. பெளவம் - கடல். வானிறம்- தூய நிறம். புத்திசேனன் அந்தணன் என்பது தோன்ற மறைவலாளன் என்றார். (உகஎ)

வேறு

எகூ0. வீரவே லுடம்பெலாஞ் சூழ வெம்புலால்
சோருஞ்செங் குருதியுண் மைந்தர் தோன்றுவார்
ஒருமே லொண்மணிச் சூட்டு வைக்கிய
வாரமே யமைந்ததேர்க் குழிசி யாயினார்.

(இ - ள்.) வெம்புலால் சோரும் செங்குருதியுள் மைந்தர் - கொடிய புலாலுடையதாய்ச் சொரியும் சிவந்த குருதியிடையே நிற்கின்ற வீரர்கள்; வீரவேல் உடம்பு எலாம் சூழத் தோன்று வார் - வீரமிகும் வேல்கள் மெய்ம்முழுதும் சூழ்ந்திருக்கக் காணப் படுவார்; ஒண்மணிச் சூட்டுமேல் வைக்கிய - ஒள்ளிய மணிச் சூட்டை மேலே வைத்தற்கு; ஆரமே அமைந்த தேர்க் குழிசி ஆயினார் - பல ஆரும் தைத்து நிறைந்த தேர்க் குறடு ஆயினார்.

(வி - ம்.) குறடு - குடம். ஒரும்: அசை.

வேற்படைகளா லேறுண்ட மறவர்க்கு ஆரக்கால் தைத்த தேர்க் குடத்தை உவமை கூறுதலை, 'நோன் குறட்டன்ன ஊன்சாய் மார்பின்'' என வரும் மதுரைக் காஞ்சியினும் (எசஉ) காண்க. வைக்கிய: செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (உகஅ)

௭௬௯. பொன்னனாள் புணர்முலைப் போகம் வேண்டிய
மன்னரோ டிளையவர் மறலி வாளம
ரின்னண மித்தலை மயங்க வத்தலைக்
கொன்னவில் வேலினா னிலைமை கூறுவாம்.

(இ - ள்.) பொன் அனாள் புணர்முலைப் போகம் வேண்டிய மன்னரோடு - திருவனைய தத்தையின் முலைகளின் இன்பம் விரும்பிய அரசரோடு ; இளையவர் மறலி - தோழர்கள் மாறுபடுதலாலே ; வாள் அமர் இத்தலை இன்னணம் மயங்க - வாட்போர் இங்கே இவ்வாறு மயங்குற ; அத்தலைக் கொல்நவில் வேலினான் நிலைமை கூறுவாம் - ஆண்டு நின்ற, கொலையிற் பழகிய வேலினானாகிய சீவகன் நிலையை விளம்புவோம்.

(வி - ம்.) பொன்-திருமகள். இளையவர் என்றது சீவகன் தோழரை. மறலி-மறல. கொல்நவில் வேலினான் - கொலைத்தொழிலிற் பயின்ற வேலை ஏந்திய சீவகன். (௨௯௯)

௭௭௦. தம்பியைச் சீவக னோக்கிச் சாமரை
வெம்பரி மான்செவி வீர மந்திர
மிம்பர்நம் மிடர்கெட விரண்டும் வல்லையாய்
நம்பிநீ மொழிகென நயந்து கூறினான்.

(இ - ள்.) சீவகன் தம்பியை நோக்கி - சீவகன் நந்தட்டனைப் பார்த்து ; இம்பர் நம் இடர்கெட இரண்டும் வல்லையாய் - இவ்விடத்தில் நமது துன்பம் கெட வீரமந்திரம் இரண்டையும் நீ கற்று ; சாமரை வெம்பரி மான் செவி - சாமரையையும் விரைவினையுமுடைய புரவியின் செவிகளிலே; நீ மொழிக என நயந்து கூறினான் - நீ உரைப்பாயாக என்று விரும்பிக் கூறினான்.

(வி - ம்.) இரண்டும் - பறப்பிக்கு மதுவும் வேண்டுமிடத்தே நிறுத்துவிப்பதுவும். மந்திரம் : குதிரைகளை விரைவிற் செலுத்தும் காண்ட மந்திரம்.

மந்திரம் இரண்டையும் அவனுக்கு ஓதி இவற்றைக் கற்று வல்லையாய் நீ மொழிக என்றான் என்க. தம்பி - நந்தட்டன். (௩௦௦)

வேறு

௭௭௧. மந்திரங் கேட்டு நான்கும்
வானெட்டிப் புகுவ வேபோ
லந்தரத் திவர்ந்த வாழிக்
கானிலம் விட்ட மாலைச்

சுந்தரக் கண்ணி மேனி
மகளிர்தங் கண்ணுள் ளிட்ட
மைந்தரு மிரும்பு மோவ்வா
வான்புலங் காவல் கோண்டார்.

(இ - ள்.) மந்திரம் கேட்டு - அம் மந்திரத்தை நந்தட்டன் கூறக் கேட்டு; வான் எட்டிப் புகுவவேபோல் அந்தரத்து இவர்ந்த - வானிலே தாவிச் செல்வனபோல அந்தரத்தே பாய்ந்தன; ஆழிக் கால்நிலம் விட்ட - வட்டமான உருள் நிலத்தை விட்டன; மாலைச் சுந்தரச் சுண்ண மேனி மகளிர்தம் கண்ணுள் இட்ட மைந்தரும் - மாலை அணிந்த, அழகிய மணப்பொடியுடைய மெய்யினரான மகளிர் தங் கண்களில் (அழகினால்) வைத்துக்கொண்டிருக்கும் சீவகனும் நந்தட்டனும்; வான்புலம் இரும்பும் ஒவ்வாக் காவல் கொண்டார் - உண்மை அறிவை இரும்பும் ஒவ்வாத கவசமாகக் கொண்டனர்.

(வி - ம்.) வான்புலம் - உண்மை அறிவு. அதுவே எல்லா வெற்றியும் தருவதென நினைத்து அதனைக் காவலாகக் கொண்டனர்.

நான்கும்: ஆகுபெயர். ஆழிக்கால் - வட்டமான உருள். உண்மையறிவே எல்லா வெற்றியுந் தருவதாதல் பற்றி வான்புலம் காவல் கொண்டார். இது,

"வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின்." (குறள். டுசசு)

என்னும் அருமைத் திருக்குறளை நினைப்பிக்கின்றது. மேலும்,

"அறிவற்றங் காக்கும் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா அரண்." (குறள். சஉக)

என்னும் திருக்குறளையும் நினைக. (௩௦க)

எகூச. வடிகயி றாய்ந்து முட்கோல்
வலக்கையாற் றாங்கி வேன்றி
முடிகேனப் புரவி முள்ளா
லுறுத்தினான் மோழித றேற்றேன்
கடுகிய வண்ண மாவின்
றுரோலி காமர் போற்றேர்
படையது சேவியுங் கண்ணும்
பற்றிநின் றிட்ட வன்றே.

(இ - ள்.) வடி கயிறு ஆய்ந்து - (குதிரையைத் தொழிலிற் பயிற்றும்) வாய்க் கயிற்றைத் தெரிந்து; முள்கோல் வலக்கையால்

தாங்கி - தாற்றுக்கோலை வலக்கையில் எடுத்து; வென்றி முடிக என - நமக்கு வெற்றி வருக என்று; புரவி முள்ளால் உறுத்தினன் - புரவியை அம் முள்ளாலே உறுத்திச் செலுத்தினன்; கடுகிய வண்ணம் மொழிதல் தேற்றேன் - அவை அப்போது விரைந்த இயல்பை உரைத்தல் அறியேன்; மாவின் தார் ஒலி - புரவிகளின் கிண்கிணி மாலை ஒலி; படையது செவியும் - படையின் காதிலும்; காமர் பொன்றேர் கண்ணும் - அழகிய தேர் (படையின்) கண்களினும்; பற்றி நின்றிட்ட - அமைந்து, விடாமல் நின்றன.

(வி - ம்.) அன்று ஏ: அசைகள். முட்கோல் - தாற்றுக்கோல். கடுகிய வண்ணம் மொழிதல் தேற்றேன் என்றது தேவர்வியந்தது. (௩0௨)

௭௬௫. அண்ணறேர் பறவை என்பா
ரருவமே யுருவம் என்பார்
மண்ணதே வான தென்பார்
மனத்ததே முகத்த தென்பார்
கண்ணதே செவிய தென்பார்
கலங்கநூல் கழிய நோக்கிப்
பண்ணிய வீதி பற்றி
மண்டலம் பயிற்றி னானே.

(இ - ள்.) அண்ணல் தேர் - சீவகன் தேரை; பறவை என்பார்-பறவை யென்றுரைப்பார்; உருவம் அருவமே என்பார்-இது உருவம் உடையது என்பார்; (எங்கும் கலத்தலின்) அருவமோ என்றும் உரைப்பர்; மண்ணதே வானது என்பார்-தேர் மண்ணினுள்ளது என்பர்; வானில் உள்ளது என்பர்; மனத்ததே முகத்தது என்பார் - மனத்திலுள்ளது என்பர்; முகத்திலுள்ளது என்பர்; கண்ணதே செவியது என்பார் - கண்களில் உள்ளது என்பர்; செவிகளில் உள்ளது என்பர்; கலங்க - இவ்வாறு பலரும் பலவகையாகக் கூறிக் கலங்கா நிற்க; நூல் கழிய நோக்கி - புரவியியல் கூறும் நூலை முற்றும் ஆய்ந்து; பண்ணிய வீதி பற்றி - அதிற் பண்ணின வீதியைத் தொடங்கி; மண்டலம் பயிற்றினன் - மண்டலம் என்னும் கதியைப் பயிற்றினன்.

(வி - ம்.) வியத்தற்குரிய இதனைக் கம்பர் தமது காப்பியத்துள்,

"முன்னேயுளன் பின்னேயுளன் முகத்தேயுளன் அகத்தின்
தன்னேயுளன் மருங்கேயுளன் தலைமேலுளன் மலைமேல்
கொன்னேயுளன் நிலத்தேயுளன் விசும்பேயுளன் கொடியோர்
என்னேயொரு கடுப்பென்றிட இருஞ்சாரிகை திரிந்தான்."

என அமைத்துக் கொண்டார். (௩0௩)

௭௬௬. அகில்கொண்ட கொள்ளி வட்ட
மாருயிர் மேயு நேமி
முகில்கொண்ட மின்னுத் தோற்ப
முறுகிய விசையிற் றாகி
மிகல்கொண்ட விகலைத் தானே
விழுங்கிய சிறகர்த் தோற்றிப்
பகல்கொண்டு பறக்குந் தேராற்
காளைதன் பைம்பொற் றேரே.

(இ - ள்.) அகில் கொண்ட கொள்ளி வட்டம் - அகில் தன்னிடத்தே கொண்ட கொள்ளி வட்டமும்; ஆர் உயிர் மேயும் நேமி - நிறைந்த உயிர்களை அரியும் கால நேமியும்; முகில் கொண்ட மின் - முகிலிடம் உள்ள மின்னும்; தோற்ப-தோற்கு மாறு; முறுகிய விசையிற்று ஆகி - கடுகிய விசையுடையதாகி; மிகல் கொண்ட இகலைத் தானே விழுங்கிய - மாறுபாடு கொண்ட போரைத் தானே விழுங்குதற்கு; சிறகர்த் தோற்றி - ஒரு சிறகை உண்டாக்கிக் கொண்டு; பகல் கொண்டு - ஞாயிற்றைக் கொண்டு; பறக்கும் தேர் காளைதன் பைம்பொன் தேர்-பறக்குந் தேராகும் சீவகனுடைய புதிய பொற்றேர்.

(வி - ம்.) நெய்யால் ஒளிமிகுதலின் 'அகில் கொண்ட கொள்ளி' கூறினர். மின் வீதிக்கும் ஒழிந்த இரண்டும் வட்டத்திற்கும் உவமை. ()

௭௬௭. காலற்ற வயிர மாலை வெண்குடை கவிழ்ந்த பிச்ச
மேலற்ற கவசம் வீழ்ந்த சாமரை யற்ற வினாண்
மாலுற்ற மன்னர் தங்கண் மனங்கையற் றொழிந்த வள்ளல்
கோலொற்றக் குனிந்த வாறே சிலைகுனிந் தொழிந்த தன்றே.

(இ - ள்.) வள்ளல் கோல் ஒற்றக் குனிந்த ஆறே சிலை குனிந்து ஒழிந்தது - சீவகன் அம்பு தொடுத்தற்கு ஒருமுறை வளைந்தபடியே முழுக்க வளைந்தே நின்றது; (அப்பொழுது) வயிரமாலை வெண்குடை கால் அற்ற - வயிரமாலை அணிந்த வெண்குடைகள் காம்பற்றன; பிச்சம் கவிழ்ந்த - பிச்சங்கள் கவிழ்ந்தன; மேல் கவசம் அற்ற - மேலணிந்த கவசங்கள் அற்றன; சாமரை வீழ்ந்த - சாமரைகள் வீழ்ந்தன; வில் நாண் அற்ற - வில்லின் நாண்கள் அறுந்தன; மால் உற்ற மன்னர் தங்கள் மனம் கையற்று ஒழிந்த - மயங்கிய மன்னரின் மனம் செயலற்றுக் குறைந்தன.

(வி - ம்.) வள்ளல் என்றார் கடுகக் கொல்லாமல் அவரை அச்சுறுத் தலின்.

குனிந்தவாறே சிலை குனிந்தொழிந்தது என்றது அதன் கடுப்பால் அதன் நிமிர்ச்சியும் வளைதலும் காணப்படவில்லை என்றவாறு. (கூ0ரு)

எசூஅ. நுங்களை வீணை வென்ற
நூபுர வடியி னுடன்
வெங்களித் தடங்கண் கண்டீர்
விருந்தெதிர் கொண்மி னென்னு
வங்களி யரசர்க் கெல்லா
மோரொன்று மிரண்டு மாகச்
செங்களிப் பகழி யோப்பித்
துள்ளவா றூட்டி னுனே.

(இ - ள்.) நுங்களை வீணை வென்ற நூபுர அடியினுள் தன் வெம் களித் தடம் கண் கண்டீர் - (இவை கணைகள் அல்ல) உங்களை வீணையிலே வென்ற சிலம்பு ஒலிக்கும் அடியினுளின் வெவ்விய பெரிய கண்களென் றறியுங்கள்; விருந்து எதிர் கொண்மின் என்னு - (இவற்றை) விருந்தாக வந்து ஏற்றுக் கொள்வீர்களாக என்றுரைத்து; அம் களி அரசர்க்கு எல்லாம் - செருக்கினையுடைய வேந்தர்கட்கு எல்லாம்; ஓர் ஒன்றும் இரண்டும் ஆக - ஒன்றும் இரண்டுமாக; செம்களிப் பகழி ஒப்பித்து - செவ்விய களிப்புறுங் கணைகளை விடுத்து; உள்ள ஆறு ஊட்டினனே - அவர்களுடைய தகுதிக்கேற்றவாறு ஊட்டினுன்.

(வி - ம்.) 'விருந்து' என்பதற் கேற்ப 'ஊட்டினுன்' என்றூர். இதனுல், மனங் குறைந்தும் போகாத நின்றவர்க்கு அவள் கண்ணைப் பெறுமாறு இங்ஙனமல்லதில்லை யென்று கூறி, அவரை நோவித்தபடி கூறினுர். (கூ0சு)

எசூகூ. நன்மன வேந்தர் தங்க
ணகையணி மார்ப நக்கிப்
புன்மன வேந்தர் தங்கள்
பொன்னணி கவசங் கீறி
யின்னுயிர் கவர்ந்து தீமை
யினிக்கொள்ளு முடம்பி னுலுந்
தன்னன்மி னென்ப வேபோற்
சுடுசரம் பரந்த வன்றே.

(இ - ள்.) நல்மன வேந்தர் தங்கள் நகைமணி மார்பம் நக்கி - நல்ல மனமுடைய மன்னரின் ஒளிவிடும் மணிமார்பைத் தீண்டி வருத்தியும்; இனிக்கொள்ளும் உடம்பினுனும் தீமை

துன்னன்மின் என்பபோல் - இனி நீங்கள் எடுக்கும் உடம்பினும் பிறர்மனை நயக்கும் தீமையை நெருங்காதீர் என்பன போல; புன்மன வேந்தர் தங்கள் பொன் அணி கவசம் கீறி - இழிமனமுடைய மன்னரின் பொற்கவசத்தைப் பிளந்து; இன் உயிர் கவர்ந்து சுடுசரம் பரந்த - இனிய உயிரைக் கைக் கொண்டு சுடுகணைகள் பரவின.

(வி - ம்.) நன்மன வேந்தர் ஒற்றுமைக்காகப் போருக்கு வந்திருப்பர். அவர்கள் சிறிது நொந்ததும் உணர்ந்து விலகினர். மற்றையரோ உயிரையிழந்தனர். நச்சினார்க்கினியரும், 'நன்மன வேந்தர் தம் நகையாகிய பிறர்மனை நயத்தலை இனிக் கொள்ளுமுடம்பினும் துன்னன்மின் என்பன போலச் சுடுசரங்கள் இப் புன்மன வேந்தர்களுடைய கவசத்தைக் கீறி மணிமார்பைத் தீண்டி இன்னுயிரைக் கவர்ந்து பரந்தன' என்று கொண்டு கூட்டிப் பொருள் கூறினாரெனினும், 'இதனால், நொந்தும் போகாதவர்களிலே சில ருயிரைப் போக்கினமை கூறினார்' என்பது நோக்கத்தக்கது. முற்செய்யுளில், 'உள்ளவா றாட்டின' தன்மை இங்கு விளக்கப்பட்டது. (௩0௭)

௮00. மீனெறி தூண்டில் போன்று வெஞ்சிலை நாண்க ளற்ற
தேனெறி குன்ற மொத்த திண்கச்சை துணிந்த வேழ
மானெறி காட்டுந் திண்டேர் கயிறற்று மறிய வேந்த
ரூனெறி யாழி யேந்தி யொய்யென வுலம்பி யார்த்தார்.

(இ - ள்.) மீன் எறி தூண்டில் போன்று வெஞ்சிலை நாண்கள் அற்ற - மீன் பிடிக்குந் தூண்டில்கள் போல அரசர்களின் கொடிய விற்களின் நாண்கள் அறுந்தன; திண் கச்சை துணிந்த வேழம் தேன் எறி குன்றம் ஒத்த - அவர்கள் ஏறிய, திண்ணிய கச்சை அறுபட்ட களிறுகள் வண்டுகள் மூசும் குன்றங்கள் போன்றன; திண்தேர் மான் நெறி காட்டும் கயிறு அற்று மறிய - திண்ணிய தேர்களிற் குதிரைகட்கு வழிகாட்டும் கயிறுகள் அற்று மறிபடலால்; வேந்தர் ஊன் எறி ஆழி ஏந்தி ஒய்யென உலம்பி ஆர்த்தார் - மன்னர்கள் மெய்யைப் பிளக்குஞ் சக்கரம் எடுத்துக்கொண்டு விரைய முழங்கி ஆர்த்தனர்.

(வி-ம்.) ஊன்: ஆகுபெயர். இதனால்படாது நின்றவரை அஞ்சுவித்தமையும், அவர் அஞ்சாமற் போர்குறித் தெழுந்தமையும் கூறினார். (௩0௮)

௮0௧. ஆர்ப்பெதிர் மாரி பெய்யு
மணிநெடுங் குன்றம் போலப்
போர்க்கெதிர்ந் தவரு மார்த்தா
ரார்த்தலும் பூண்ட வல்வில்

கார்க்கெதிர் மேகம் போலக்
கணைமழை கான்ற திப்பா
லீர்த்தது குருதி வெள்ள
மிறைச்சிக்குன் றாக்கி னானே.

(இ - ள்.) மாரி பெய்யும் அணி நெடுங் குன்றம் எதிர் ஆர்ப்புப் போல - மழை பெய்யும் அழகிய பெருங்குன்று எதிரொலி செய்தல் போல; அவரும் போர்க்கு எதிர்ந்து ஆர்த்தார் - அரசர் ஆரவாரத்திற்கு எதிரே சீவகன் வீரரும் எதிராரவாரம் புரிந்தனர்; ஆர்த்தலும் - அங்ஙனம் இருபக்கமும் ஆரவாரித்தவுடன்; பூண்ட வல்வில் கார்க்கு எதிர் மேகம் போலக் கணைமழை கான்றது - சீவகனது கொலைத்தொழிலை ஏற்ற வலியவில் கார் காலத்திலே எதிர்ந்த முகில்போல அம்பு மாரி பெய்தது; குருதி வெள்ளம் இப்பால் ஈர்த்தது-(அதனாற் பிறந்த) குருதி வெள்ளம் முன்பு அற்று வீழ்ந்தவற்றைக் களத்திற்குப் புறம்பே இழுத்தது; இறைச்சிக் குன்று ஆக்கினான் - முடிவில் அவரை ஊன்மலையாக்கினான். (௩௦௯)

௩௧௦. மன்னர்கள் வெகுண்டு விட்ட
மறப்படை யழுவ மாரி
கோன்னுனை யெஃகி னீக்கிக்
குனிந்துவிற் பகழி கான்ற
மின்னவி ரிலங்கு மொள்வாள்
விழித்துயிர் விழுங்க வின்ன
தன்மையாற் றானை நீந்தித்
தான்விளை யாடு கின்றான்.

(இ - ள்.) மன்னர்கள் வெகுண்டு விட்ட மறப்படை அழுவமாரி - வேந்தர்கள் சினந்து விடுத்த போர்ப்படையாகிய பெருமழையை; கோல் நுனை எஃகின் நீக்கி - கொல்லும் முனையுடைய வேலால் நீக்கியும்; வில்குனிந்து கான்ற பகழி - வில் வளைந்து உமிழ்ந்த அம்புகளும்; மின் அவிர் இலங்கும் ஒள்வாள் - மின்னென ஒளிவிட்டு விளங்கும் சிறந்த வாளும்; விழித்து உயிர் வாங்க - வேந்தரை நோக்கி உயிரைக் கொண்டும்; இன்ன தன்மையால் தானை நீந்தி - இதுபோன்ற தன்மைகளினாற் படைக் கடலை நீந்தி; தான் விளையாடுகின்றான் - சீவகன் விளையாடத் தொடங்கினான்.

(வி - ம்) ஏனையார் அஞ்சும் இப் பெரும்போர் சீவக மன்னர்க்கு விளையாட்டுப் போன்று எளிதாகவிருந்தது. (௩௧௦)

௮௦௩. வேழவெண் கோட்டு மெல்கோ
றின்றுகூன் குருதி வாளா
லாழநா வழித்து நெய்த்தோர்
கோப்புளித் தழிந்த மாவின்
சூழ்குடர்க் கண்ணி சூடி
நிணத்துகி லுடுத்து வெள்ளேன்
பூழ்பெற வணிந்து சூற்பே
யாடக்கண் டுவந்து நக்கான்.

(இ - ள்.) வேழ வெண் கோட்டு மெல்கோல் தின்று - களிறுகளின் வெண் கொம்பாகிய மெல்கோலைத் தின்று; கூன் குருதி வாளால் நா ஆழ வழித்து - வளைந்த குருதி வாளினால் நாவை அழுத்தி வழித்து; நெய்த்தோர் கொப்புளித்து - குருதியினால் வாய் கொப்புளித்து; அழிந்த மாவின் சூழ்குடர்க் கண்ணி சூடி - இறந்த குதிரைகளின் சூழ்ந்த குடர்களாகிய கண்ணியை அணிந்து; நிணத்துகில் உடுத்து - ஊன் ஆடை உடுத்து; ஊழ்பெற வெள் என்பு அணிந்து - முறையாக வெண்மையான என்புகளை மாலையாகத் தரித்து; சூல் பேய் ஆடக் கண்டு - சூல்கொண்ட பேய் ஆடுவதைப் பார்த்து; உவந்து நக்கான் - மகிழ்ந்து நகைத்தான் சீவகன்.

(வி - ம்) மெல் கோல்: வினைத்தொகை.

இச் செய்யுளும் அடுத்து வருஞ் செய்யுளும் மறக்கள வேள்வி என்னும் வாகைத்திணைத் துறையின்பாற்படும். அஃதாவது,

"அடுதிறல் அணங்கார விடுதிறலான் களம் வேட்டன்று."

எனவும்,

"பிடித்தாடி அன்ன பிறழ்பற்பேய் ஆரக்
கொடித்தானை மன்னன் கொடுத்தான் முடித்தலைத்
தோளோடு வீழ்ந்த தொடிக்கை துடுப்பாக
மூளையஞ் சோற்றை முகந்து." (புறப். வெண். க௬௦)

எனவும் வரும் புறப்பொருள் வெண்பாமாலையானும் உணர்க. (௩கக)

௮௦௪. வெளிற்றுடற் குருதி வெள்ள நிலையிது வென்ப வேபோற்
களிற்றுகிர்ப் பிறழ்பற் பேய்கள் கைகளை யுச்சிக் கூப்பி
யளித்தவை பாடி யாடக் குறுநரி நக்கு வேழம்
விளித்தன கழுகும் பாறும் விலாவிற்றுக் கிடந்த வன்றே

(இ - ள்.) வெளிற்று உடல் குருதி வெள்ளம் நிலை இது என்ப போல் - குருதி நீங்கிய பிணத்தையுடைய குருதிப்

பெருக்கின் நிலை இவ்வளவு என்று காட்டுவனபோல ; களிற்று உகிர் பிறழ்பல் பேய்கள் கைகளை உச்சிக் கூப்பி - களிற்றின் நகங்கள்போல முறை குலைந்து பிறழ்ந்த பற்களையுடைய பேய்கள் உச்சியிலே கைகளைக் கூப்பி ; அளித்தவை பாடி ஆட - சீவகன் அளித்த சிறப்புக்களைப் பாடி ஆட ; வேழம் குறு நரி நக்கு விளித்தன - வேழத்தின் அருகே யிருந்த குள்ளநரிகள் அப் பேயாட்டலைக் கண்டு நகைத்தன போலக் கூவின ; கழுகும் பாறும் விலா இற்றுக் கிடந்த - அவ் வேழத்தைத் தின்று செருக்கிக் கிடந்த கழுகும் பருந்தும் பேயாடற்கு நகைத்து விலா முறிந்து கிடந்தன போன்றன.

(வி - ம்.) வேழத்தின் அருகே வேழத்தைத் தின்று நின்றன நரிகள். (௬௪௨)

௮௦௫. கடல்விளை யமுதங் கண்ட
 பொழுதினெய் கனிந்த தீஞ்சோற்
றடிசிலஞ் சுவைமிக் காங்கு
 மண்ணலங் குமர னொன்னா
ருடலின்மேற் றிரியுந் திண்டேர்
 காண்டலு மைந்தர் நெஞ்சத்
திடல்பிளந் திட்ட வெஃகஞ்
 சுமந்தமர்த் திறத்தின் மிக்கார்.

(இ - ள்.) கடல்விளை அமுதம் கண்ட பொழுதின் - கடலில் விளையும் உப்பினைக் கண்ட காலத்தே ; நெய்கனிந்த தீ சோறு அடிசில் அம் சுவை மிக்காங்கு - நெய்யொடு கலந்த இனிய சோறாகிய அடிசில் ஒழிந்த சுவைகள் மிகுந்தாற்போல ; அண்ணல் அம் குமரன் ஒன்னார் உடலின்மேல் திரியும் திண்தேர் காண்டலும் - பெருமை மிக்க சீவகனுடைய, பகைவருடலின்மேற் செல்லும் திண்ணிய தேரைக் கண்டவுடன் ; மைந்தர் - சீவகன் தோழர்கள் ; நெஞ்சத் திடல் பிளந்திட்ட எஃகம் சுமந்து - பகைவரின் நெஞ்சமாகிய திடரைப் பிளந்த வேலை யேந்தி ; அமர்த்திறத்தின் மிக்கார் - போர்த் திறத்திலே மிகுந்தனர்.

(வி - ம்.) மிக்காங்கும் : உம் : இசை நிறை. சீவகனைக் கண்ட தோழர் களித்ததை இச்செய்யுளிற் கூறினர்.

இதன்கண் சீவகன் தேரைக் கண்டு ஊக்கமிக்கவராகிய தோழர்க்கு உப்போடளாவியவுடன் தத்தஞ் சுவை மிகுத்து விளங்கும் அடிசிலை உவமையாகக் கூறியது மிகமிக நுணுக்கமாகிப் பெரிதும் இன்பஞ் செய்தல் உணர்க. (௬௪௩)

அ0௬. கடாந்திறந் திட்டு வானிற்
களகள முழங்கும் வேழம்
படாந்திறந் தூழித் தீயிற்
பதுமுகன் காட்டி யிட்டான்
தடாம்பிறை மருப்புத் திண்கை
யபரகாத் திரங்க டம்மாற்
கோடாம்பிற குமரிப் போருட்
பிறர்க்கெனக் கொன்ற தன்றே.

(இ - ள்.) வானின் கடாம் திறந்திட்டுக் களகள முழங்கும் வேழம் - முகில்போல மதத்தைப் பெருக்கிக் களகள என்று முழங்குகின்ற வேழத்தை; படாம் திறந்து ஊழித் தீயின் பதுமுகன் காட்டியிட்டான் - முகப்பட்டத்தை நீக்கி ஊழித் தீப் போலக் கொணர்ந்து பதுமுகன் போர்க்களத்தைக் காட்டினான்; தடாம் பிறை மருப்பு திண்கை அபர காத்திரங்கள் தம்மால் - வளைந்த பிறை போன்ற மருப்பும் திண்ணிய கையும் கால்களும் ஆகியவற்றால்; குமரிப் போருள் பிறர்க்குக் கொடாம் எனக் கொன்றது - தத்தை காரணத்தாற் பிறந்த போரில் பிறர்க்குக் கொலைத் தொழிலைக் கொடோம் என்று கொன்றது.

(வி - ம்.) வரகாத்திரம் என்பதனைத் தலை யென்றும் அவரகாத்திரம் என்பதனைக் காலென்றும் வடநூலார் கூறுவராதலின், தேவர் அதனைச் சிதைத்து, அபரகாத்திரம் என்றார்; ஐராவதம் ஐராபதம் என்றாற்போல; எனவே, அவரகாத்திர மென்றது கால்களை; இனி, பின்கால் முன்கால் என்பாருமுளர். பிற :அசைச்சொல். குமரிப்போர் - கன்னிப் போருமாம்.

இக்கவி முதலாகத் தத்தையைக் காத்து நின்ற பதுமுகன் பகைவர் தலைசாய்ந்தமை கண்டு பொருதல் கூறுகிறார். (௩௪௪)

அ0எ. மருப்பினால் வேழம் வீழா
மன்னரை வாலிற் சீறா
முருக்கித்தேர் தடக்கை தன்னான்
முழங்கிப்பாய் மாக்கள் காலி
னெரித்திடாக் கண்ணுட் டீயாற்
சுட்டுநீ றாக்கி நெய்த்தோ
ரொருக்கிப்பேய் பாடியாட
வுருசிலை யுடன்று கொண்டான்.

(இ - ள்.) மருப்பினால் வேழம் வீழா-(பதுமுகன் வேழம்) கொம்பினாலே யானைகளை வீழ்த்தி; வாலின் மன்னரைச் சீறா-

வாலால் வேந்தரைச் சீறி; தடக்கை தன்னால் தேர் முருக்கி - துதிக்கையினால் தேரை முறித்து; முழங்கிக் காலின் பாய் மாக்கள் நெரித்திடா - பிளிறிச் சென்று கால்களாற் புரவிகளை நெரித்து; கண்ணுள் தீயால் சுட்டுநெய்த்தோர் நீருக்கி-கண்ணில் எழும் நெருப்பினாற் சுட்டுக் குருதியைத் தூளாக்கிக்கொல்ல; ஒருக்கி - (பதுமுகனும்) கொல்லக் கருதி; பேய் பாடி ஆட - பேய் பாடி ஆடும்படி; உறுசிலை உடன்று கொண்டான் - தக்கதொரு வில்லைச் சினந்து ஏந்தினான்.

(வி - ம்.) ஒருக்கி - ஒரு சேர ஆக்கி; எனவே, தானும் கொலை கருதி. (௩௧௫)

வேறு

௫0௮. கொண்டான் பகழி தொடுத்தான்சிலை கால்கு னிந்த
தொண்டேர் மிசையு முருவக்களிற் றுச்சி மேலும்
வண்டார்ப் புரவி நிறத்தும்மற மன்னர் மேலுங்
கண்டான் சொரிந்தான் கணைமாரி கலந்த தன்றே.

(இ - ள்.) கொண்டான் பகழி தொடுத்தான் - வில்லைக் கையிலேந்தியவன் கணைகளைத் தொடுத்தான்; சிலை கால் குனிந்தது - வில்லின் கால் வளைந்தே யிருந்தது; ஒண்டேர் மிசையும் உருவக் களிற்று உச்சி மேலும் - தேரின் மேலும் அழகிய களிற்றின் நெற்றியிலும்; வண்தார்ப் புரவி நிறத்தும் - வளமிகு கிண்கிணி மாலை அணிந்த குதிரைகளின் மார்பிலும்; மற மன்னர் மேலும் - வீரமுறு வேந்தர் மீதும்; கண்டான் தொடுத்தான் - அழுந்துமாறு நோக்கிச் சொரிந்தான்; கணை மாரி கலந்தது - சீவகன் வேறொருபுறம் நின்று பெய்த அம்பு மழையுடன் பதுமுகன் சொரிந்த கணை மாரியும் கலந்தது.

(வி - ம்.) 'கண்டான்' என்பதைச் சீவகன் கணையுடன் தன் கணை கலப்பதைப் பதுமுகன் கண்டான் என மாற்றுவர் நச்சினார்க்கினியர். கணைமாரி, 'மன்னர்கள் வெகுண்டு' என்னுஞ் செய்யுளிற் கூறிய கணை மாரி. (௩௧௬)

௫0௯. பைம்பொற் புளகப் பருமக்களி யானை யீட்டஞ்
செம்பொ னெடுந்தேர்த் தொகைமாக் கடற்சேனை வெள்ள
நம்பன் சிலைவாய் நடக்குங்கணை மிச்சி லல்லா
லம்போன் மணிப்பூ ணரசும் மிலையென்று நக்கான்.

(இ - ள்.) பைம் பொன் புளகப் பருமக் களியானை ஈட்டம் - பசும் பொன்னால் ஆகிய, கண்ணாடியைக் கொண்ட பருமத்தை யுடைய மதயானைத் திரளிலும்; செம்பொன் நெடுந்தேர்த் தொகை - செம்பொன்னாலான நீண்ட தேர்க் கூட்டத்திலும்;

மாக்கடல் - புரவிக் கடலினும்; சேனை வெள்ளம் - படைவீரர் குழுவினும்; அம் பொன் மணிப் பூண் அரசும் - அழகிய பொன்னும் மணியுமான பூணணிந்த மன்னர் திரளினும்; நம்பன் சிலைவாய் நடக்கும் கணை மிச்சில் அல்லால் இலை - சீவகன் வில்லில் இருந்து வெளிவரும் அம்பின் எச்சிலே அல்லாமல் வேறு இல்லை; என்று நக்கான் - என்றறிந்த பதுமுகன் இனி எங்ஙனம் பொருவதென வியந்து நகைத்தான்.

(வி - ம்.) இனி நான்கு படையினும் தான் சொரிந்தான்; சொரிந்தபின், அவன் கணைமாரி முன்பே கலந்ததனைக் கண்டான் என்றுமாம். இதற்கு முன்பே அம்பாற் குறைந்த படைமேல் தைத்த அம்பினைக் கையுணர்ந்த தென்க - நச்சினார்க்கினியர் முற்செய்யுளுடன் இதனையும் ஒரு தொடராக்கிக் கூறும் கருத்து இது. (௩௧௭)

வேறு

௮௧௦. ஒருவனே சிலையு மொன்றே
யுடையதோர் களிற்றின் மேலா
னருவரை மார்பிற் சென்ற
தறிந்தில னெஃக மின்னும்
பொருவரோ மன்ன ரென்றான்
பொருசிலை மடக்கி யிட்டார்
வருகளி யானை மீட்டார்
வாட்படை வாங்கிக் கொண்டார்.

(இ - ள்.) ஒருவனே - (இவ்வாறு நகைத்த) பதுமுகன் துணையில்லாதவனே; சிலையும் ஒன்றே உடையது - (சேம வில்லும் இல்லை) ஒரு வில்லே உளது; ஓர் களிற்றின் மேலான் - ஒரே யானை யூர்ந்து வந்துளான்; எஃகம் அருவரை மார்பில் சென்றது இன்னும் அறிந்திலன் - வேலொன்று அரியவரை யனைய தன்மார்பிலே தைத்துள்ளதை இன்னும் அறியான்; பொருவரோ மன்னர் என்றான் - (மேலும்) போர்செய்வாரோ இவ் வேந்தர்கள் என்றுரைத்தான்; (அது கேட்ட மன்னர் அஞ்சி) பொருசிலை மடக்கியிட்டார் - பொருவதற்குரிய வில்லை மடக்கிக்கொண்டனர்; வருகளியானை மீட்டார் - மதயானையைத் திருப்பிக் கொண்டனர்; வாள்படை வாங்கிக்கொண்டார் - வாட்படையை (போர் நினைவில் இருந்து திருப்பி) உறையிற் கொண்டனர்.

(வி - ம்.) நச்சினார்க்கினியர், 'பதுமுகன் நொந்தானென்று வாளை உறையிலிருந்து அவனொடுபொர வாங்கிய மன்னர்களெல்லோரும் அஞ்சி யானைகளைத் திருப்பினர் என்றும், சீவகன் தோழர்கள் வில்லை மடக்கிக் கொண்டனர்' என்றும் கூறுவர். 'இன்னும் மன்னர் பொருவரோ?' என்று கூட்டி 'நம்பன் கணைக்கு மிச்சிலாயபின்னும்' என்றும் விளக்கங் கூறுவர் அவர். (௩௧௮)

அகக. செங்கண்மா றெழிக்கப் பட்ட
வலம்புரித் துருவங் கொண்ட
சங்குவாய் வைத்து நம்பன்
றெழித்தலுந் தறுக ணொளி
பொங்கிய முழக்கின் வேழப்
பேரினம் புலம்பி ஞற்போற்
றங்குதார் மன்ன ரெல்லாந்
தளர்ந்துகண் சாம்பி ஞரே.

(இ - ள்.) செங்கண்மால் தெழிக்கப்பட்ட வலம்புரித் துருவம் கொண்ட-கண்ணனுற் பாரதப் போரில் முழக்கப்பெற்ற வலம்புரியை ஒப்பாகக் கொண்ட; சங்கு வாய் வைத்து நம்பன் தெழித்தலும் - சங்கை வாயில் வைத்துச் சீவகன் முழக்கின வுடன்; தறுகண் ஆளி பொங்கிய முழக்கில்-அஞ்சாத ஆளியின் பெரு முழக்கினலே; வேழப் பேரினம் புலம்பினற்போல் - களிற்றுப் பெருந்திரள் கலங்கினற் போல; தங்குதார் மன்னர் எல்லாம் தளர்ந்து கண் சாம்பினர் - மார்பில் தங்கிய தாரணிந்த வேந்தர்கள் எல்லோரும் தளர்ச்சியடைந்து கண்ணொளி மழுங் கினர்.

(வி - ம்.) அவர் அஞ்சினமை கண்டு வெற்றிச் சங்கு முழக்கினன். துருவம் - ஒப்பு. (நுகக)

அகஉ. அருவரை நாகஞ் சுற்றி
யாழியான் கடைய வன்று
கருவரை குடையப் பட்ட
கடலெனக் கலங்கி வேந்தர்
திருவரை மார்பன் றிண்டேர்
மஞ்ஞையே முருகன் தானென்
றெருவரோ டொருவர் கூடா
வண்ணமே யுடைய லுற்ருர்.

(இ - ள்.) ஆழியான் அருவரை நாகம் சுற்றி அன்று கடைய - திருமால் அரிய மந்தர மலையை நாகத்தாற் பிணித்து முற்காலத்திற் கடைந்தபோது; கருவரை குடையப்பட்ட கடல் என வேந்தர் கலங்கி - கரிய அம் மலையினலே கலக்கப்பெற்ற கடலென்னுமாறு மன்னர் கலக்குற்று; திருவரை மார்பன் திண்தேர் மஞ்ஞையே-அழகிய மலையனைய மார்பனின் திண்ணிய தேர் மயிலே; தான் முருகன் என்று - சீவகன் முருகனே

என்று; ஒருவரோடு ஒருவர் கூடா வண்ணமே உடையல் உற்றார்- ஒருவருடன் ஒருவர் சேராதவாறே புறங்கொடுத் தோடலுற்றார்.

(வி - ம்.) கருவரை - பெருமலையுமாம். அவன் பல கைகளாற் படை வழங்கினாற்போல இவனும் படை வழங்குதலாலும் வடிவாலும் முருகனே என்பர் நச்சினார்க்கினியர். (கூஉ0)

அகரு. முளிமரக் காடு மேய்ந்த
முழங்கழல் போன்று மைந்தன்
றெளிநலக் குமரர் கூற்றிற்
றெழித்தனர் பகழி சிந்தி
யொளிநல வுப்புக் குன்ற
மூர்புனற் குடைந்த தேபோற்
களிநல மன்னர் தங்கள்
கடற்படை யுடைந்த தன்றே.

(இ - ள்.) முளி மரக் காடு மேய்ந்த முழங்கு அழல் போன்று - காய்ந்த மரமுடைய காட்டைப் பற்றிய ஆரவாரமிகும் அழலைப் போல; மைந்தன் தெளிநலம் குமரர் கூற்றின் தெழித் தனர் - சீவகனும் தெளிநலமுடைய அவன் தோழரும் தம்பி யரும் கூற்றுவனைப் போல முழங்கினர்; ஒளிநலம் உப்புக் குன்றம் ஊர் புனற்கு உடைந்ததே போல் - (அம் முழக்கினைக் கேட்டு) ஒளியும் அழகும் உடைய உப்புமலை ஊரும் வெள்ளத்திலே கரைந்தாற்போல; களிநல மன்னர் தங்கள் கடல் படை பகழி சிந்தி உடைந்தது - களிப்பும் அழகுமுடைய அரசரின் கடல் போன்ற படை கையிலுள்ள அம்புகளையும் எறிந்துவிட்டு ஓடியது. (கூஉக)

அகச. உறுபடை மன்னர் தம்மை
யுடற்றியோன் றானு மின்றிச்
சிறுபடை யவர்கள் வென்று
செகுப்பவோ வென்ன வேண்டா
செறியெயிற் றுளி வேழப்
பேரினஞ் செகுத்த தன்றே
வுறுபுலி யோன்று தானே
கலையின முடற்றிற் றன்றே.

(இ - ள்.) சிறு படையவர்கள் உறுபடை மன்னர் தம்மை- சிறிய படையினர் பெரும்படையுடைய வேந்தர்களை; உடற்றி ஒன்றானும் இன்றி - வருத்தித் தமக்கோர் கெடுதியும் இல்லாமல்

வென்று செருப்பவோ என்ன வேண்டா - வென்று போக்கு வரோ? என்று ஐயுற வேண்டா; செறி எயிற்று ஆளி வேழப் பேரினம் செகுத்தது அன்றே? - நெருங்கிய பற்களையுடைய ஆளி ஒன்றே களிற்றுப் பெருங் கூட்டத்தைக் கெடுத்ததன்றோ?; உறுபுலி ஒன்றுதானே கலையினம் உடற்றிற்று அன்றே? - வலிமை மிகும் புலி ஒன்றே மான் கூட்டத்தைக் கெடுத்தது அன்றே? இவற்றைக் கண்டு தெளிக.

(வி - ம்.) பின்னிரண்டடியும் எடுத்துக் காட்டுவமை. (௩௨௨)

அகரு. நல்லவை புரியு மாந்தர்
நாந்தகம் பிழைத்து வீழா
வல்லவை புரியு மாந்தர்க்
கத்திர மொன்றும் வாயா
வெல்வதோ குணத்தின் மிக்கார்
வெற்றிலை விடினும் வேலா
மில்லையே வென்றி தீமை
யிடங்கொண்ட மனத்தி னூர்க்கே.

(இ - ள்.) நல்லவை புரியும் மாந்தர் நாந்தகம் பிழைத்து வீழா - நன்மை செய்யும் மனமுடையார்க்கு வாட்கள் தவறிக் கெடமாட்டா; வெல்வதோ - வெற்றியைப் பற்றிக் கூறுவதாயின்; குணத்தின் மிக்கார் வெற்றிலை விடினும் வேலாம் - பண்பிற் சிறந்தார் வெற்றிலையை எதிரிகள்மேல் விடினும் வேல்போல வென்றிதரும்; அல்லவை புரியும் மாந்தர்க்கு அத்திரம் ஒன்றும் வாயா - தீமை செய்யும் மனமுடையார்க்குப் படைகளில் ஏதும் வாய்க்காது; தீமை இடங்கொண்ட மனத்தினூர்க்கு வென்றி இல்லை - தீமை குடிகொண்ட வுள்ளத்தார்க்கு எப் போதும் வெற்றியில்லை.

(வி - ம்.) 'அல்லவை புரியும் மாந்தர்க்கு நல்லவை புரியும் மாந்தர்' எனக் கூட்டித் 'தத்தையை வலிதிற் கோடற்கு ஒருப்பட்டவர்க்குப் பதுமுகன் கூறிய கட்டியங்காரன் சூழ்ச்சியைத் தீமை செய்வார்க்கு நன்மை புரிந்ததாக்கிக் கூறுவர். சிறப்பினதேற் கொள்க.

குணத்தின் மிக்கார், தீமையிடங் கொண்ட மனத்தினூர் என்பவை சுட்டு. தீமை - பிறர்மனை நயத்தலாகிய தத்தையை விரும்பியது. 'இனி வேறும் பொருள் தருமேனும் அதற்கு இயைபின்று' என்னும் நச்சினூர்க்கினியர் கூற்றினை நோக்கின் வேறு பொருளும் பிறர் கூறினர் என்று தெரிகிறது.

இதனுல் தேவர் 'அறம் வெல்லும் பாவந் தோற்கும்' என்னும் பழமொழியை வற்புறுத்தோதினர் என்க.

நாந்தகம் - வாள். அத்திரம்-அம்பு. குணத்தின் மிக்கார் வெற்றிலை விடினும் என்றதற்கேற்பத் தீமையிடங்கொண்ட மனத்தினர் வேல் விடினும் வெற்றிலையாம்; அவர்க்கு வென்றி இல்லை எனவும் கொள்க. (௩௨௩)

அ௧௬. குழையுடை முகத்தி னாள்கண்
கோணைப்போர் செய்த மன்னர்
மழையிடை மின்னி னொய்தா
மறைந்தனர் விஞ்சை வேந்தர்
முழையிடைச் சிங்க மன்னன்
மொய்யம ரேத்தி யார்த்தார்
விழவுடை வீதி மூதூர்
விருப்பொடு மலிந்த தன்றே.

(இ - ள்.) குழை உடை முகத்தினாள்கண் கோணைப் போர் செய்த மன்னர் - குழையுடைய முகத்தாள் தத்தை காரணமாக மாறுபட்ட போரைச் செய்தவேந்தர்கள்; மழையிடை மின்னின் நொய்தா மறைந்தனர் - முகிலிடை மின்போலப் போன இடந் தெரியாமல் விரைந்து கரந்தனர்: விஞ்சை வேந்தர் முழையிடைச் சிங்கம் அன்னான் மொய் அமர் ஏத்தி ஆர்த்தார் - (முகிலிலே நின்று போரைக் கண்டிருந்த) வித்தியாதர வேந்தர்கள் முழையிலே நின்ற சிங்கம் போன்ற சீவகனின் செறிந்த போரைப் புகழ்ந்து முழங்கினர்; விழவு உடை வீதி மூதூர் விருப்பொடு மலிந்தது - விழா நடைபெறும் தெருக்களையுடைய பழம்பதி (சீவகனைக் காண) விருப்பத்தினால் மிக்கது.

(வி - ம்.) முழை, இல்லறம் பூண்டதற்குக் கூறிற்று.

கோணைப்போர் - அறங்கோடிச் செய்யும் போர். விஞ்சை வேந்தர் - இவர் முன்னரே தம்மரசிளங்குமரியாகிய தத்தையின் பொருட்டு நிகழும் இப் போரினை முகின்மிசையிருந்து கண்டிருந்த வித்தியாதரர். சிங்க மன்னன் - சீவகன். விருப்பொடு என்பது சீவகனைக் காணும் விருப்பத்தோடே என்பதுபட நின்றது. (௩௨௪)

அ௧எ. பார்மிசை யுலக மேத்தும்
படுகளங் கண்டு பற்றார்
போர்முகக் களிற்று வெண்கோ
டுழுதசெஞ் சால்கோண் மார்பின்
சீர்முகத் தோழர் சூழச்
சீவகன் திருவின் சாயல்
வார்முக முலையி னாளை
மனைவயிற் கொண்டு புக்கான்.

(இ - ள்.) சீவகன் பற்றார் போர் முகக் களிற்று வெண் கோடு உழுத செஞ்சால் கொள் மார்பின் சீர்முகத் தோழர் சூழ-சீவகன், பகைவருடைய போர்க்களத்திலே யானையின் வெண் கோடு கீறிய சிவந்த சாலைக் கொண்ட மார்பினரான சிறப்பு மிக்க தோழர்கள் சூழ; பார் மிசை உலகம் ஏத்தும் படுகளம் கண்டு - உலகிலே உயர்ந்தவர் புகழும் போர்க்களத்தைக் கண்டு களவேள்வி முடித்து; திருவின் சாயல் வார்முக முலையினாளை - திருமகளின் மென்மையைக் கொண்ட வாரிறுக்கிய முலையாளாகிய தத்தையை; மனைவயின் கொண்டுபுக்கான்-தன் மனைக்கு அழைத்துச் சென்றான். (௬௨௫)

அகஅ. நெய்க்கிழி வைக்கப் பட்டார்
நெய்ப்பத்தல் கிடத்தப் பட்டார்
புக்குழி யெஃக நாடி
யிரும்பினாற் போழப் பட்டார்
மைக்கிழிந் தொழுகுங் கண்ணீர்
மாநிலத் துகுக்கப் பட்டார்
கைக்கிழி கொடுக்கப் பட்டார்
கலம்பல நல்கப் பட்டார்.

(இ - ள்.) நெய்க்கிழி வைக்கப்பட்டார் - (படை கிழித்த புண்களில்) நெய் தோய்த்த துணி வைக்கப்பட்டார்; நெய்ப் பத்தல் கிடத்தப்பட்டார் - நெய் நிறைந்த சாலிலே கிடத்தப் பட்டனர்; எஃகம் புக்குழி நாடி இரும்பினாற் போழப்பட்டார் - படைகள் புகுந்த இடத்தை ஆராய்ந்து வாளினாற் பிளந்து வாங்கப்பட்டனர்; கலம்பல நல்கப்பட்டார் - (இவ்வாறு போரில் விழுப்புண் பட்டோர் எல்லோரும்) அணிகலன் பலவும் கொடுக் கப்பட்டனர்; மைக்கு இழிந்து ஒழுகும் கண்ணீர் மாநிலத்து உகுக்கப்பட்டார் - மையில் தோய்ந்து வடியும் கண்ணீர் கொண்டு சுற்றம் அழுமாறு போரில் இறந்தவர் எல்லோரும்; கைக் கிழி கொடுக்கப்பட்டார் - கை நிறைந்த பொன் முடிப்பைக் கொடுக்கப் பட்டனர்.

(வி - ம்.) பட்டவர் சுற்றத்தார்க்குக் கிழி கொடுக்கப்பட்டது.

நெய்க்கிழி - நெய்யில் தோய்த்த துணி. நெய்ப்பத்தல் - நெய்யிட்டு வைத்த சால். கைக்கிழி - கையோலை. அஃதாவது: இன்னார் இன்னவை பெறுக என்று ஓலையில் எழுதிக் கொடுத்து மானியம் விடுதல். (௬௨௬)

அகசு. முதுமரப் பொந்து போல
முழுமெயும் புண்க ளுற்றார்க்
கிதுமருந் தென்ன நல்லா
ரிழுதுசேர் கவளம் வைத்துப்

பதுமுகன் பாவை மார்பி
னெய்க்கிழி பயிலச் சேர்த்தி
நுதிமயிர்த் துகிற்குப் பாயம்
புகுகென நூக்கி னானே.

(இ - ள்.) முதுமரப் பொந்து போல முழுமெயும் புண்கள் உற்றார்க்கு - முதிய மரங்களிடையே பொந்து போல மெய் யெலாம் புண்களைக் கொண்டவர்க்கு; இது மருந்து என்ன நல்லார் இழுது சேர் கவளம் வைத்து - இது தக்க மருந்து என்று மருத்துவ மகளிர் நெய்கலந்த கவளத்தை வைப்ப; பதுமுகன் பரவை மார்பின் - பதுமுகனுடைய அகன்ற மார்பிலே; நெய்க் கிழி பயிலச் சேர்த்தி - நெய்த்துணியைப் பொருந்த அடைத்து; நுதிமயிர்த் துகில் குப்பாயம் புகுக என நூக்கினான்-எலிமயிரால் செய்த உள்ளே துணி பொருத்திய சட்டையிலே புகுக என்று சீவகன் காத்தனன்.

(வி - ம்.) குப்பாயம் - சட்டை. நூக்கினன் - காத்தான். வைத்து- வைப்ப. இவை யிரண்டு செய்யுளானும் போரிற் புண்ணுற்றார்க்குச் செய்யும் மருத்துவம் கூறப்பட்டது.

புண்ணினது பெருமைக்கு முதுமரப் பொந்து உவமை; "முழைபடு முதுமரம்போல் எவ்வாயும்படைநுழைந் தறுத்த இடனுடை விழுப்புண்" என்றார் பிறரும் (தகடூர்). மெய் முழுதும் என்க. இழுது - நெய். மயிர்க்குப்பாயம் - கம்பளிச் சட்டை. இதனை "எலிமயிரால் செய்த சட்டை" என்பர் நச்சினார்க்கினியர். (நஉஎ)

அஉ௦. பார்கெழு பைம்பொன் றன்னாற்
பண்ணவ னுருவ மாக்கி
யூர்கெழு விழவு செய்தாங்
குறுபொரு ளுவப்ப நல்கித்
தார்கெழு மின்னு வீசித்
தனிவடந் திளைக்கு மார்பன்
போர்கெழு களத்துப் பாவம்
புலம்போடு போக்கி னானே.

(இ - ள்.) தார் கெழு மின்னு வீசித் தனி வடம் திளைக்கும் மார்பன் - தாரும் ஒளி வீசிய ஒப்பற்ற முத்து வடமும் பயிலும் மார்பனை சீவகன்; பார்கெழு பைம்பொன் தன்னால் பண்ணவன் உருவம் ஆக்கி - பாறையிற் பொருந்திய பசிய பொன் கொண்டு அருகன் உருவம் சமைத்து; ஊர் கெழு விழவு செய்து - நகரிற் பொருந்திய திருவிழா நடத்தி; ஆங்கு உறு பொருள் உவப்ப நல்கி - அங்கேயே மிகுபொருளை வறியவர் மகிழ அளித்து;

போர் கெழு களத்துப் பாவம் புலம்பொடு போக்கினன் - போர்க் களத்திலே நேர்ந்த பாவத்தையும் வெறுப்பையும் நீக்கினன்.

(வி - ம்.) செற்றவரைச் செகுத்தல் அறமே ஆயினும் இவர் ஆதியான பகைவர் அல்லாமையின், 'பாவம்' என்றார். புலம்பு - என்ன செய்துவிட்டோம் என்ற வெறுப்பு.

பண்ணவன் உருவம் - அருகக் கடவுள் திருவுருவம். உறுபொருள் - மிக்க பொருள். (ருஉஅ)

அஉக. செய்தவப் பாவ மெல்லாந்
தீர்த்திடுந் தீர்த்தன் பாத
மெய்திய சேடங் கூவித்
திறைஞ்சுபு தொழுது வாழ்த்தி
மையறு மணியிற் செய்த
வலம்புரி யதனீர் கொண்டான்
வையக மளிக்க நீண்ட
வலம்புரித் தடக்கை யானே.

(இ - ள்.) வையகம் அளிக்க நீண்ட வலம்புரித் தடக்கையான் - உலகைக் காப்பதற்கு நீண்ட, வலம்புரி யிரேகையுடைய பெரிய கையினன்; செய்த அப்பாவம் எல்லாம் தீர்த்திடும் தீர்த்தன் பாதம் எய்திய சேடம் - பல பிறப்பினும் புரிந்த அப் பாவம் முழுதும் நீக்கும் அருகனின் திருவடிகளிலே பொருந்திய நிர்மாலியத்தையும்; மை அறும் மணியின் செய்த வலம்புரியதன் நீர் - குற்றமற்ற இழைத்துச் செய்யப்பட்ட வலம்புரியில் உள்ள நீரையும்; கூவித்து இறைஞ்சுபு தொழுது வாழ்த்திக் கொண்டான் - கூவுவித்து வணங்கித் தொழுது வாழ்த்தி ஏற்றுக் கொண்டான்.

(வி - ம்.) கூவித்து - விகாரம். கூவுவித்து - கூப்பிட்டு. வலம்புரி வடிவாக மணிகள் இழைத்து உலோகத்தாற் செய்யப்படுவது. வலம்புரி கையிற் கிடத்தல் சிறந்த இலக்கணம்.

சேடம் - பலியிடப்பட்ட பொருள். தீர்த்தன் - அருகன். வலம்புரி-சங்கு வடிவமாகச் செய்யப்பட்டதொரு பூசைப் பாத்திரம். வலம்புரித் தடக்கை - சங்கரேகை கிடந்த பெரிய கை. (ருஉக)

வேறு

அஉஉ. கருமணி யழுத்திய காமர் செங்கதிர்த்
திருமணிச் செப்பெனச் செறிந்த வெம்முலை
யருமணி யலம்வரு மம்பொற் கொம்பனாள்
பெருமணக் கிழமை யாம் பேசு கின்றதே.

(இ - ள்.) கருமணி அழுத்திய காமர் செங்கதிர்த் திரு மணிச் செப்புஎன - கரிய மணியை அழுத்திய அழகிய சிவந்த கதிரையுடைய மணிச் செப்பென்னுமாறு ; செறிந்த வெம்முலை - நெருங்கிய விருப்பூட்டும் முலைகளிலே ; அருமணி அலம்வரும் அம் பொன் கொம்பு அனாள் - அரிய மணிகள் அசையும் அழகிய பொற்கொடி போன்ற தத்தையின் ; பெருமணக் கிழமை யாம் பேசுகின்றது-பெரிய மணத்தின் இயல்பு இனி எம்மால் விளக்கப் படுவது.

(வி - ம்.) பெருமணமாம் கிழமையென மாற்றுவர் நச்சினார்க் கினியர்.

கருமணி - நீலமணி ; இது முலைக்கண்ணுக்குவமை. செங்கதிர்த் திருமணி என்றது, செவ்வொளியுடைய மாணிக்க மணியை. மணிச் செப்பு முலைக்குவமை. மணக்கிழமை என்றது திருமணத்திற் செய்யும் கரணங்களை. இதனைச் 'சமாவர்த்தனம்' என்ப. (௩௩0)

௮௨௩. நான்குநூ றாயிரங் குடத்து நல்லன
வான்றயிர் பானெயோ டழகி தாநிறைத்
தூன்றிகழ் வேலினன் வேள்விக் கூர்மருள்
கோன்றொறுக் காவலன் கொண்டு முன்னினான்.

(இ - ள்.) ஊன் திகழ் வேலினன் வேள்விக்கு - ஊன் பொருந்திய வேலேந்திய சீவகன் திருமண வேள்விக்கு ; ஊர் மருள் கோன் தொறுக் காவலன்-ஊரார் வியக்கும் அரசனுடைய ஆநிரை காவலன் (நந்தகோன்) ; நான்கு நூறாயிரம் குடத்து - நான்கு நூறாயிரம் குடங்களிலே ; நல்லன ஆன் தயிர் பால் நெயோடு அழகிது ஆநிறைத்து - நல்லனவாகிய பசுந் தயிரையும் பாலையும் நெய்யையும் அழகுற நிறைத்து ; கொண்டு முன்னினான்- (எடுத்துக்) கொண்டு முதலில் வந்தான்.

(வி - ம்.) இழந்தேம் என்று ஊரார் மருளும் சச்சந்த மன்ன னுடைய தொறுக் காவலனும் ஆம். அரசனுக்குரிய ஆநிரையின் தலைவன் என்பதே எவ்வாறாயினும் பொருந்தும் பொருள். 'மன்னிரை பெயர்த்து' (சீவக. ௪௪0) 'மன்னவன் னிரை' (௪௧௫) என முன்னரும் வந்தன காண்க.

இதுமுதல் சமாவர்த்தனம் நடவா நிற்கப் பச்சை புகுந்தபடி கூறு கின்றார். (சமாவர்த்தனம் - பிரமசரியம் முடித்தற்குச் செய்யுங் கிரியை. பச்சை புகுதல் - வரிசை வருதல்). (௩௩௧)

௮௨௪. வளைநிற வார்செநெ லரிசிப் பண்டியோ
டளவறு சருக்கரைப் பண்டி யார்ந்தன
பிளவியல் பயறுபெய் பண்டி யுப்புநீர்
விளைவமை பண்டியின் வேறுத்த தாங்கோர்பால்.

(இ - ள்.) வளை நிற வார் செநெல் அரிசிப் பண்டியோடு - சங்கு நிறமுடைய நீண்ட செந்நெல் லரிசிப் பண்டியும்; அளவு அறு சருக்கரைப் பண்டி ஆர்ந்தன - அளவற்ற சருக்கரைப் பண்டியும் நிறைந்தன; பிளவு இயல் பயறு பெய் பண்டி - உடைக்கப் பட்ட பயறு பெய்த பண்டியுடன்; நீர் விளைவு அமை உப்புப் பண்டியின் - நீரில் விளையும் உப்புப் பண்டியும்; ஆங்கு ஓர் பால் வெறுத்தது - அந்த மனையிலே ஒரு பக்கத்தில் செறிந்தது.

(வி - ம்.) வளைநிற அரிசி, வார்செநெல் அரிசி எனத் தனித்தனிக் கூட்டுக. பண்டி - வண்டி. பிளவு இயல் பயறு - பருப்பாக உடைத்த பயறு. நீர்விளைவு அமைஉப்பு என மாறுக. (௩௩௨)

அ௨௫. சினைத்துணர் முழவன பலவின் றீங்கனி
கனைத்துவண் டுழல்வன வாழை மாங்கனி
யெனைத்துள கிழங்குகாய் குருகோ டேந்திய
சனத்தினாற் றகைத்திடம் பெறாது தானோர்பால்.

(இ - ள்.) பலவின் சினைத் துணர் முழவு அன தீங்கனி - பலவின் கிளைகளில் உள்ள கொத்தினை யுடைய முழவு போன்ற இனிய கனியும்; வண்டு கனைத்து உழல்வன வாழை மாங்கனி - வண்டுகள் முரன்று உழலும் வாழைக் கனியும் மாங் கனியும்; கிழங்கு காய் குருகு எனைத்து உள - கிழங்குங் காயும் குருத்தும் எவ்வளவு உள்ளனவோ; ஏந்திய சனத்தினால் - அவ்வளவெல்லாம் ஏந்திய மக்களால்; தகைத்து தான் ஓர்பால் இடம்பெறாது - நெருங்கி ஒரு பக்கந்தான் இடம் பெறாது.

(வி - ம்.) துணர்த் தீங்கனி, முழவன தீங்கனி எனத் தனித்தனி கூட்டுக. "கானப்பலவின் முழவு மருள் தீங்கனி" என்றார் மலைபடுகடாத்தினும் (௰௧௧). கனைத்து - செறிந்து எனினுமாம். குருகு - குருத்து. சனம் - மாந்தர். (௩௩௩)

அ௨௬. மரகத மணிப் பசுங் காய்கோள் வான்குலை
கவர்பழுக் காய்க்குலை கனியக் காவுறீஇ
யிவர்தரும் மெல்லிலைக் காவு மேந்திய
வுவரியாய்ச் சொரிந்திடம் பெறாது தானோர்பால்.

(இ - ள்.) மரகத மணிப் பசுங்காய் கொள் வான் குலை - மரகத மணிபோலும் பசுங் காய்களைக் கொண்ட குலையும்; கவர் பழுக்காய்க் குலை - விரும்பத்தக்க பழுக்காய் குலையும்; கனியக் கா உறீஇ இவர்தரும் மெல்லிலைக் காவும் - முற்றிலும் காவடியிலே கொண்டு வந்து, பரப்பி வைத்திருக்கும் வெற்றிலைப் படலிகையும்; சொரிந்து ஏந்திய உவரியாய் - (சுமந்து வந்து) சொரிந்திடுதலால் உயர்ந்த வெள்ளமாகி; ஓர்பால்தான் இடம் பெறாது - ஒரு பக்கந்தான் இடம் பெறாது.

(வி - ம்.) பசுங்காயும் பழுக்காயும் பாக்குவகை. ஏந்திய - உயர்ந்த. 'வேண்டிய' என்பதூஉம் பாடம். படலிகை - பெட்டி.

கவர்பழுக்காய் : வினைத்தொகை ; கண்டோர் நெஞ்சைக் கவரும் பழுக்காய் என்க. பழுக்காய் என்றது பாக்கினை. கா - காவுதடி. இதனை இக் காலத்தார் காவடி என்பர். மெல்லிலை, வெற்றிலை : வினைத்தொகை. உவரி - வெள்ளம். (௩௩௪)

அஉஎ. சண்பகந் தமநகந் தமால மல்லிகை
தண்கழு நீரோடு குவளை தாமரை
வண்டின மிசைகோள வாசப் பூச்சுமை
கொண்டவர் குழாம்பொலி வுற்ற தாங்கோர்பால்.

(இ - ள்.) சண்பகம் தமநகம் தமாலம் மல்லிகை தண் கழுநீரொடு குவளை தாமரை - சண்பகமும் தமநகக் கொழுந்தும் பச்சிலையும் மல்லிகையும் தண்ணிய கழுநீரும் குவளையும் தாமரையும் ஆகிய ; வாசப் பூச்சுமை வண்டினம் மிசைகொள - மணமுறும் மலர்ச் சுமையை வண்டுகள் மொய்க்க ; கொண்டவர் குழாம் ஆங்கு ஓர்பால் பொலிவு உற்றது - கொண்டுவந்தவர் திரள் மற்றொரு பக்கத்திலே அழகுற்றது.

(வி - ம்.) தமநகம் - மருக்கொழுந்து. தமாலம் - பச்சிலை என்னு மொரு நறுமணமுடைய கொழுந்து. (௩௩௫)

அஉஅ. ஆர்கெழு குறடுசூட் டாழி போன்றவன்
சீர்கெழு வளமனை திளைத்து மாசனங்
கார்கெழு கடலெனக் கலந்த வல்லதூஉம்
பார்கெழு பழுமரப் பறவை யொத்தவே.

(இ - ள்.) ஆர் கெழு குறடு சூட்டு ஆழி போன்ற அவன் சீர்கெழு வளமனை - ஆர் பொருந்திய குறடும் சூட்டுமுடைய சக்கரம் போன்ற கந்துகனுடைய சிறப்புப் பொருந்திய வளமனை யிலே ; மாசனம் திளைத்துக் கார் கெழு கடல் எனக் கலந்த - மக்களின் திரள் நெருங்கி (ஒலியினுற்) கருமை பொருந்திய கடல்போலக் கலந்தன ; அல்லதூஉம் பார்கெழு பழுமரப் பறவை ஒத்தவே - அஃதன்றி அம் மக்கள் தொகுதி (பயன்கொள்ளும் முறையால்) நிலமிசை பொருந்திய பழுத்த மரத்திற் பறவை களையும் போன்றன.

(வி - ம்.) அச்சுக் கோக்குங் குறடு மாளிகைக்கும், நடுவு போக்கும் ஆர் தெருவுகளுக்கும், விளிம்பிற் சூட்டு மதிலுக்கும் உவமை. மற்றும், மனையைச் சூழ வரிசைப் பொருள்கள் நிறைத்தலின் கடல் போன் றென்றுமாம்.

ஆர் - ஆரக்கால். குறடு - தேர்க்குடம். மாசனம் - மிக்க மாந்தர்; மக்கட்கூட்டம். ஆழி - தேருருள். இது சீதத்தனுக்கு (அல்லது சீவகனுக்கு) குடும்ப பாரம் சுமத்தற்கு உவமையாக வந்தது எனக் கொள்ளினுமாம். (௩௩௬)

அஉ௬. கையுறை யெழுதினர் கைந்நொந் தேடறுத்
தையென விருப்பமற் றன்ன தாதலான்
வையக மருங்கினின் வாழ்நர் மற்றிவன்
செய்தவ நமக்கிசை கென்னச் சென்றதே.

(இ - ள்.) கை உறை எழுதினர் கை நொந்து ஏடு அறுத்து ஐ என இருப்ப - வந்த வரிசைகளின் கணக்கை எழுதியவர்கள் கை வருந்திப் பட்டோலைகளைக் கிழித்து வியந்திளைப்பாறி இருப்பார்கள்; அன்னது ஆதலான் - வரிசை அங்ஙனம் மிகுதலால்; வையகம் மருங்கினின் வாழ்நர் - உலகிடை வாழ்கின்றவர்கள்; இவன் செய்தவம் நமக்கு இசைக என்னச் சென்றது - இவன் செய்யும் தவம் நமக்குப் பொருந்துவதாக என்று நினைக்குமாறு சமாவர்த்தனம் நடைபெற்றது.

(வி - ம்.) தவம்: சமாவர்த்தனம். மற்று: அசை.

கையுறை - வரிசைப் பொருள். ஐயென: குறிப்புச் சொல். சென்றது - நிகழ்ந்தது. (௩௩௭)

அ௩௦. வாலரி கழுவிய வண்ணச் செம்புனல்
காலிய லிவுளியும் களிறு மாழ்ந்தவண்
கோலநீர்க் குவளையும் மரையும் பூத்துவண்
டாலிவண் குருகுபாய் தடங்க ளானவே.

(இ - ள்.) வால் அரி கழுவிய வண்ணம் செம்புனல் - வெள்ளிய அரிசியைக் கழுவிய அழகிய சிவந்த கழுநீர்; கால் இயல் இவுளியும் களிறும் ஆழ்ந்து - காற்றெனச் செல்லும் குதிரையும் களிறும் அமிழ; அவண் கோல நீர்க் குவளையும் மரையும் பூத்து - அங்கே அழகிய நீர்ப் பூக்களாகிய குவளையும் தாமரையும் மலர்ந்து; வண்டு ஆலி - வண்டுகள் முரன்று; வண் குருகு பாய் தடங்கள் ஆன - மிகுதியாகப் பறவைகள் பாயும் நீர்நிலைகளாயின.

(வி - ம்.) வாலரி - வெள்ளிய அரிசி. காலியல் இவுளி - காற்றென விரையும் குதிரை. ஆலுதல் - ஒலித்தல். குருகு - நாரை. (௩௩௮)

அ௩௧. உடுப்பன துகில்களு முரைக்கு நானமுந்
தொடுத்தன மாலையுங் குழையுஞ் சாந்தமுங்
கொடுப்பவர் கொள்பவர் வீழ்த்த பல்கல
மடுத்துவிண் பூத்ததோ ரழகின் மிக்கதே.

(இ - ள்.) உடுப்பன துகில்களும் - உடுப்பனவாகிய ஆடைகளும்; உரைக்கும் நானமும் - பூசிக்கொள்ளும் புழுகும்; தொடுத்தன மாலையும் - கட்டப்பட்ட மாலைகளும்; குழையும் சாந்தமும் - குழைகளும் சந்தனமும்; கொடுப்பவர் கொள்பவர் வீழ்த்த பல்கலம் - எடுத்துக் கொடுப்பவராலும் வாங்குவோராலும் வீழ்த்தப்பட்ட பலகலங்கள்; அடுத்த விண் பூத்ததோர் அழகின் மிக்கது - நெருங்கி வானிலே மலர்ந்த மீன்களைப் போன்றதாகிய அழகிலே மேம்பட்டது.

(வி - ம்.) கலன்கள் வீழ்த்தப்பட்ட அவ்விடம் விண்பூத்த அழகை ஒத்தது என்பதாம். உடுப்பன, தொடுத்தன: முற்றெச்சங்கள். (௩௩௯)

௪௮௨. கலங்கழு மரவமுங் கருனை யாக்குவார்
சிலம்பொலி யரவமு மிச்சில் சீப்பவ
ரிலங்குபொற் கிண்கிணி யிரங்கு மோசையு
முலம்புமா லுவர்க்கட லோலியின் மிக்கவே.

(இ - ள்.) கருனை ஆக்குவார் சிலம்பு ஒலி அரவமும் - பொரிக் கறிகள் சமைப்பவரின் சிலம்பொலிக்கும் ஒலியும்; கலம் கழும் அரவமும் - உண்கலம் கழுவும் ஒலியும்; மிச்சில் சீப்பவர் இலங்கு பொற் கிண்கிணி இரங்கும் ஓசையும் - எச்சில் மாற்றுவோரின் விளங்கும் கிண்கிணிகள் ஒலிக்கும் ஒலியும்; உலம்பும் மால் உவர்க் கடல் ஒலியின் மிக்க - முழங்கும் பெரிய உப்புக் கடல் ஒலியினும் மிகுந்தன.

(வி - ம்.) நச்சினார்க்கினியர் ௪௭௯ - முதல் ௪௮௨ - வரை ஒரு தொடர் ஆக்கி, அவற்றை ௪௭௯, ௪௮௨, ௪௮௦, ௪௮௧ ஆக முறைப்படுத்தி, 'வையகம் மருங்கினின் வாழ்நர் மற்றிவன் - செய்தவம் நமக்கிசை கென்னச் சென்றதே' என்னும் ௪௭௮-ஆஞ் செய்யுளின் பின்னிரண்டடிகளைக் கொணர்ந்து ௪௮௨ ஆம் செய்யுட்குப் பின் சேர்த்துப் பொருளுரைப்பர்.

உலம்பும் - முழங்கும். கழும்: கழுவும் என்பதன் இடைக்குறை. இந் நான்கு செய்யுட்களும் உயர்வு நவிற்சி.

கழுவும் என்னும் செய்யுமெனெச்சத்து ஈற்றுயிரும் மெய்யும் கெட்டுக் கழும் என நின்றது. கருனை - பொரிக்கறி. மிச்சில் - துரால். சீத்தல் - கூட்டுதல். இரங்கும் - ஒலிக்கும். உலம்பும் - முழங்காநின்ற. (௩௪௦)

வேறு

௪௮௩. மூழிவாய் முல்லை மாலை
முருகுலாங் குழலி னாளு
மூழிவாய்த் தீயோ டொக்கு
மோளிறுவாட் டடக்கை யானு

மாழிவாய் விரலிற் காம
னம்போடு சிலைகை யேந்தத்
தாழிவாய்க் குவளை வாட்கட்
டையலார் பரவச் சார்ந்தார்.

(இ - ள்.) மூழிவாய் முல்லை மாலை முருகு உலாம் குழலி னாளும் - மலர்ப் பெட்டியில் இருந்த முல்லை மாலை யணிந்து மணங்கமழுங் கூந்தலையுடைய தத்தையும்; ஊழிவாய்த் தீயொடு ஒக்கும் ஒளிறுவாள் தடக்கையானும் - ஊழிக்காலத் தீயைப் போன்று விளங்கும் வாளேந்திய தடக்கைச் சீவகனும்; காமன் அம்பொடு சிலை ஆழிவாய் விரலின் கையேந்த - காமன் அம்பை யும் வில்லையும் விரற்சரடணிந்த விரலையுடைய கையில் ஏந்த; தாழிவாய்க் குவளை வாள்கண் தையலார் பரவச் சார்ந்தார் - தாழியில் மலர்ந்த குவளையனைய வாட்கண் மங்கையர் பரவி நிற்க ஓரிருக்கையிலே சேர இருந்தனர்.

(வி - ம்.) முருகு - மணம். குழலினாள் - தத்தை. ஊழிவாய்த்தீ- ஊழி முடிவில் உலகை அழிக்கும் நெருப்பு; இது சீவகன் பேராற்ற லுக்கு உவமை. தடக்கையான் - சீவகன். ஆழி - மோதிரம்; விரற் சரடுமாம். மூழிவாய் - பூப்பெட்டி. (௩௪௪)

அ௩௫. இன்னிய முழங்கி யார்ப்ப
வீண்டெரி திகழ வேதந்
துன்னினர் பலாசிற் செய்த
துடுப்பினெய் சொரிந்து வேட்ப
மின்னியல் கலச நன்னீர்
சொரிந்தனன் வீர னேற்றான்
முன்னுபு விளங்கு வெள்ளி
முளைத்தெழ முருக னன்னான்.

(இ - ள்.) இன்னியம் முழங்கி ஆர்ப்ப - இனிய இசைக் கருவிகள் முழங்கிக்கொண்டிருக்க; ஈண்டு எரி திகழ - மிகுதி யான தீ விளங்குமாறு; வேதம் துன்னினர் - மறையுணர்ந்த சீவகனுக்கு நெருங்கிய அந்தணர்; பலாசின் செய்த துடுப்பின் - புரசமரத்தாற் செய்த துடுப்பினால்; நெய் சொரிந்து வேட்ப - நெய்யை வார்த்து வளர்க்க; வெள்ளி முளைத்து எழ - வெள்ளி முளைத்த அளவிலே; வீரன் மின் இயல் கலசம் நன்னீர் சொரிந் தனன் - சீதத்தன் ஒளி பொருந்திய கலசத்திலே நன்னீரை வார்த்தனன்; முருகன் அன்னான் முன்னுபு ஏற்றான்-முருகனைப் போன்ற சீவகனும் கருதி ஏற்றான்.

(வி - ம்.) : அரசர்க்கும் வணிகருக்கும் மந்திரத்திலும் தந்திரத்திலும் சிறிது வேறுபாடு உளதேனும், தான் இரண்டு குலத்திற்கும் உரிய சடங்கு நிகழ்த்துதற்குரியனாதலின், பிறர்க்குத் தெரியாமல், தன் குலத்திற்கேற்ற சடங்குதானே நிகழ்த்தினானென்பதும், பிறர்க்குத் தெரியுமவற்றிற்குக் கழுவாய் கருதினானென்பதும் தோன்ற, 'முன்னுபு' என்றார். முன்னுதல் - கருதுதல். (௩சஉ)

அ௩௫. இட்டவுத் தரிய மின்னு
மெரிமணிப் பருமுத் தார
மட்டவிழ் கோதை வெய்ய
வருமுலை தாங்க லாற்றா
நெட்டிருங் கூந்த லாட
னோர்வளை முன்கை பற்றிக்
கட்டழல் வலங்கொண் டாய்பொற்
கட்டிரு னேறி னானே.

(இ - ள்.) இட்ட உத்தரியம் மின்னும் எரி மணிப் பரு முத்தாரம் மட்டு அவிழ் கோதை வெய்ய வருமுலை - அணிந்த மேலாடையும் ஒளிவிடும் மணிமாலையும், முத்துமாலையும், மணம் விரியும் மலர்மாலையும் வெய்யனவாகி வளரும் முலைகளும் ஆகிய வற்றை; தாங்கல் ஆற்றா நெட்டிருங் கூந்தலாள் தன் - தாங்க இயலாத நீண்ட கரிய கூந்தலையுடைய தத்தையின்; நேர்வளை முன்கை பற்றி - ஒத்த வளையணிந்த முன்கையைப் பற்றி; கட்டழல் வலம் கொண்டு - கட்டழலை வலமாக வந்து; ஆய் பொன் கட்டில் ஏறினன் - ஆராய்ந்து செய்த பொற்கட்டிலை அடைந்தான்.

(வி - ம்.) கட்டிலேறுதல் என்பதும் ஒரு திருமணச் சடங்கு. இது பற்றிப் பெருங்கதை இலாவாண காண்டத்தில் கட்டிலேற்றியதென்னும் காதையில் விளக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றது. (௩சக)

அ௩சு. மந்திரத் தரசன் காதன் மாதரம் பாவை தன்னைக்
கந்துகன் சிறுவன் வேட்ட கடிவினை நொடியின் மற்றோ
ரந்தர விசும்பிற் றேவர்க் கதிபதி யாய கோமா
னிந்திரன் றனக்கு மாகா தென்பது நடந்த தன்றே.

(இ - ள்.) மந்திரத்தரசன் காதல் மாதர் அம் பாவை தன்னை - விஞ்சை மன்னன் அன்புக்குரிய மகளாகிய பாவை தத்தையை; கந்துகன் சிறுவன் வேட்ட கடிவினை நொடியின் - கந்துகன் மகனான சீவகன் மணந்த மணவினையைக் கூறின்; மற்று ஓர் அந்தர விசும்பின் தேவர்க்கு அதிபதி ஆய கோமான் இந்திரன் தனக்கும் - வேறொரு நடுவாகிய வானத்திலே வான

வர்க்குத் தலைமை பெற்ற கோமானுகிய இந்திரனுக்கும்; ஆகாது என்பது நடந்தது - இயலாது என்னுமாறு அது நிகழ்ந்தது.

(வி - ம்.) அந்தர விசும்பு - விசும்பாகிய அந்தரம் என்பர் நச்சினார்க்கினியர்.

மந்திரத்தரசன் என்றது கலுழவேகனை. பாவை-தத்தை. கடிவினை-திருமணவினை. நொடிதல் - கூறுதல். 'மற்று' 'ஓர்': இரண்டும் அசைச் சொற்கள். அந்தர விசும்பு: இருபெயரொட்டுமாம். இனி, மாக விசும்பு என்றாற் போன்று அந்தரம் என்றது பூமிக்கும் வானுலகிற்கும் இடையிலுள்ள வெளியை எனலுமாம். கோமான் - வாளா இந்திரன் என்னும் பெயர் மாத்திரையாய் நின்றது. (௩சச)

அ௩எ. அடிமனை பவள மாக வரும்பொனு லலகு சேர்த்தி
முடிமணி யழுத்திச் செய்த மூரிக்காழ் நெற்றி மூழ்கக்
கடிமலர் மாலை நாற்றிக் கம்பல விதானங் கோலி
யிடுபுகை மஞ்சிற் சூழ மணவறை யியற்றி னாரே.

(இ - ள்.) அடிமனை பவளம் ஆக - சுற்றுச் சுவர் பவளப் பலகையால் நிறைத்து; அரும்பொனுல் அலகு சேர்த்தி - அரிய பொன்னுல் கையலகு சேர்த்து; முடிமணி அழுத்திச் செய்த மூரிக்காழ் நெற்றி மூழ்க - முடியிலே மணியை அழுத்தி நாட்டிய பெரிய தூண்களின் நெற்றி மறையுமாறு; கம்பல விதானம் கோலி - கம்பலமாகிய மேற்கட்டியைக் கட்டி; கடிமலர் மாலை நாற்றி - மணமிகும் மலர்மாலைகளைத் தூக்கி; இடுபுகை மஞ்சின் சூழ - இடுகின்ற அகிற் புகை முகிலெனச் சூழுமாறு; மண அறை இயற்றினர் - திருமண அறையை அமைத்திருந்தனர்.

(வி - ம்.) அலகு - சலாகை. முடிமணி - சூளாமணி. மூரிக்காழ் - பரியதூண். கம்பலவிதானம் - துகிலாலாய மேற்கட்டி. மஞ்சி - முகில். (௩சரு)

அ௩அ. ஐந்துமூன் றடுத்த செல்வத்
தமளிமூன் றியற்றிப் பூம்பட்
டெந்திர வெழினி வாங்கி
யின்முக வாசச் செப்புஞ்
சந்தனச் சாந்தச் செப்புந்
தண்மலர் மாலை பெய்த
விந்திர நீலச் செப்பு
மிளையவ ரேந்தி னாரே.

(இ - ள்.) ஐந்து மூன்று அடுத்த செல்வத்து அமளி மூன்று இயற்றி - ஐந்தாகிய ஒன்று மும்மூன்றாகப் படுத்த செல்வம் உறும் படுக்கை மூன்று அமைத்து; பூம்பட்டு எந்திர

எழினி வாங்கி - அழகிய பட்டினால் ஆகிய பொறித் திரையை வளைத்து ; இன்முக வாசச் செப்பும் - இனிய முகவாசப் பொருள்கள் அடங்கிய செப்பினையும் ; சந்தனச் சாந்தச் செப்பும் - சந்தன மரத்தால் அமைத்த சாந்து பெய்த செப்பினையும் ; தண்மலர் மாலை வேய்ந்த இந்திர நீலச் செப்பும் - குளிர்ந்த மலர்மாலை அமைத்த இந்திர நீலச் செப்பினையும் ; இளையவர் ஏந்தினார் - இளமங்கையர் ஏந்தி நின்றனர்.

(வி - ம்.) ஐந்தாவன : 'சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேணம்- உறுதூவி சேக்கை ஓரைந்து'. இருவரும் துயில இரண்டும் இன்பந் துய்க்க ஒன்றும் வேண்டுதலின் அமளி மூன்றாயின. இனிய முகவாச மாவன : "தக்கோலம் தீம்பூத் தகைசால் இலவங்கம்-கப்பூரம் சாதியோ டைந்து." இவற்றோடு சருக்கரையும் தேனும் கூட்டுப. இது முதலிற் கவுளிற் கொண்டு, பின்பு பாகு கவுள் கொள்ள வேண்டுதலின் வாசச் செப்பென்ற பெயர் சிறப்பினாற் பெற்ற பெயர். (௩௬௬)

அ௩௬. கடைந்துபெய் மணிக்கைச் செம்போற்
　　காசறு தட்டிற் சூழ்ந்து
மிடைந்துபெய் மணிக்கட் பீலி
　　மின்னுசாந் தாற்றி பொன்னா
ரடைந்துவீ சால வட்ட
　　மரிவைய ரேந்தி யாற்றத்
தடங்கண்கள் குவளை பூப்பத்
　　தையலோ டாடு மன்றே.

(இ - ள்.) கடைந்து பெய் மணிக்கை செம்பொன் காசு அறு தட்டின் - கடைந்து செய்த மணிக்கையினையும் செம் பொன்னாலாகிய குற்றம் அற்ற தட்டினையும்; சூழ்ந்து மிடைந்து பெய் மணிக்கண் பீலி - தன்னைச் சூழ்ந்து நெருங்கப் பெய்த, நீலநிறக் கண்களையுடைய பீலியையும் உடைய ; மின்னு சாந் தாற்றி - மின்னுகின்ற சிற்றாலவட்டத்தையும் ; அடைந்து வீசு பொன் ஆர் ஆலவட்டம் - அடைந்து விசிறும் பொன்னாலவட்டத் தையும் ; அரிவையர் ஏந்தி ஆற்ற - மகளிர் ஏந்தி வந்து வீசிக் களைப்பைப் போக்க ; தடம் கண்கள் குவளை பூப்ப - பெரிய கண்கள் செங்குவளை போலச் சிவக்க; தையலோடு ஆடும் - தத்தையோடு இன்பம் நுகர்வான்.

(வி - ம்) மணிக்கை - மணியிழைத்த கைப்பிடி. ஆசு - குற்றம். மணிக்கண் - நீலமணி போன்ற நிறமுடைய புள்ளி. சாந்தாற்றி - சிற்றாலவட்டம் என்னும் ஒருவகை விசிறி. ஆடும் : இடக்கரடக்கல். (௩௬எ)

அசο. பஞ்சுசூழ் பரவை யல்குற்
பசுங்கதிர்க் கலாபம் வீங்கச்
செந்தளிர்க் கோதை சோரக்
கிண்கிணி சிலம்பொ டேங்க
மைந்தருட் காம னன்னான்
மகளிருட் டிருவ னாளை
யந்தரத் தமரர் பெற்ற
வமிர்தெனப் பருகி னானே.

(இ - ள்.) பஞ்சுசூழ் பரவை அல்குல் பசுங்கதிர்க் கலாபம் வீங்க - ஆடை யணிந்த பரந்த அல்குலிலே புத்தொளிக் கலாபம் இறுக; செந்தளிர்க் கோதை சோர - சிவந்த தளிர் மிடைந்த மலர்மாலை அவிழ; கிண்கிணி சிலம்பொடு ஏங்க - கிண்கிணியுஞ் சிலம்பும் ஒலிக்க; மைந்தருள் காமன் அன்னான் - ஆடவர்களிற் காமனைப் போன்ற சீவகன்; மகளிருள் திருவனாளை-பெண்களில் கண்டார் விரும்பும் தன்மையைப் போன்றவளை; அந்தரத்தமரர் பெற்ற - வானுலகிலே அமரர்கள் பெற்ற; அமிர்து எனப் பருகினான் - அமிர்தம் போல நுகர்ந்தான்.

(வி - ம்.) திரு - கண்டார் விரும்புந் தன்மை; 'திருவளர் தாமரை' (திருச்சிற். க) போல. பஞ்சு: கருவியாகுபெயர்.

பஞ்சு, ஆடைக்கு ஆகுபெயர். கலாபம் - ஒருவகை மேகலையணி. காமனன்னான் - சீவகன்; திருவனாள் - தத்தை. 'பருகுதல் ஈண்டு அதரபானமும் அல்குற் பானமும்' என்பர் நச்சினார்க்கினியர். (கூசஅ)

அசக. இளமுலை மணிக்கண் சேப்ப
வெழுதுவிற் புருவ மேறக்
கிளைநரம் பனைய தீஞ்சொற்
பவளவாய் திகழத் தேன்சோர்
வளமலர்க் கோதை தன்னை
வாய்விடான் குழையப் புல்லி
யளமர லிலாத வின்பக்
கடலகத் தழுந்தி னானே.

(இ - ள்.) தேன் சோர் வளமலர்க் கோதை தன்னை-தேன் பிலிற்றும் வளமிகும் மலர்க்கோதை போல்வாளை; இளமுலை மணிக்கண் சேப்ப-இளமுலைகளின் கரிய மணி போன்ற கண்கள் சிவப்பவும்; எழுது வில் புருவம் ஏற - எழுதிவைத்த வில்போன்ற புருவங்கள் நெற்றியில் ஏறவும்; குழையப் புல்லி - குழையுமாறு தழுவி; கிளை நரம்பு அனைய தீ சொல் பவளவாய் திகழ -

கிளை என்னும் நரம்பின் இசையனைய இனிய மொழி கூறும் பவளவாய் விளங்க ; வாய்விடான் - வாய் விடாமல் ; அளமரல் இலாத இன்பக் கடலகத்து அழுந்தினான் - மனச் சுழல் இல்லாத இன்பக் கடலிலே அழுந்தினான்.

(வி - ம்.) புணர்ச்சி யிறுதிக்கண் மெய்ம்மறந்து மூலக்கண் துயிலும் துயிலை 'இன்பக் கடல்' என்றார்.

நச்சினார்க்கினியர் அகூ - முதல் அசக - வரை மூன்று செய்யுட்களையும் ஒரு தொடராக்கி ஒரு செய்யுட் சொல்லை மற்றொரு செய்யுளிலே கொண்டு கூட்டிப் பொருள் கூறினார். கூறியபின் இறுதியில், 'இனிக் கரண விசேடமாக்கிச் செவ்வனே பொருளுரைப்பாரும் உளர். அது பொருந்தமேனும் உணர்க' என்றனர்.

அவர் கூறும் பொருள் :

அங்ஙனம் இளையவரேந்திய துப்புரவுகளை நுகர்ந்து, காமன் அன்னான், திருவன்னாளை இளமுலை மணிக்கண் சிவப்பக் குழையப் புல்லி, அக் கோதை தன்னைப் பவளவாய் திகழ அல்குலிற் கலாபம் வீங்க அவ்விரண்டனையும் வாய்விடானாய் அமிர்தெனப் பருகினான். அங்ஙனம் பருகி, அத் தையலோடே கோதை சோர ஏங்கப் புருவம் ஏறக் கண்கள் குவளைபூப்ப ஆடும். அங்ஙனம் ஆடுதலிற் பிறந்த வியர்வை நீங்கும்படி சாந்தாற்றியையும் பொன்னாலவட்டத்தையும் அரிவையர் ஏந்தித் தம்மை யடைந்து ஆற்றும்படி இன்பக் கடலகத்தே அழுந்தினான் என்க.

சேப்ப - சிவக்கும்படியும் கிளை - ஒருபண். தேன் சோர் கோதை என்றது காமச் செவ்வி கூறியபடியாம். அளமரல் - அலமரல் ; சுழற்சி. (நசக)

அசஉ. இன்னண மொழுகு நாளு
ளிளமரக் காவு காண்பான்
பொன்னணி மார்பன் சென்று
புகுதலு மொருவன் றோன்றித்
துன்னியோ ரோலை நீட்டித்
தொழுதனன் பெயர்ந்து நிற்ப
மன்னிய குருசில் கொண்டு
மரபினால் நோக்கு கின்றான்

(இ - ள்.) இன்னணம் ஒழுகும் நாளுள் - இவ்வாறு இன்பந் துய்க்கும் நாட்களில் ; இளமரக் காவு காண்பான் - இளமரச் சோலை பார்ப்பதற்கு ; பொன் அணி மார்பன் சென்று புகுதலும் - பொன்னணி புனைந்த மார்பன் சென்று நுழைதலும் ; ஒருவன் தோன்றித் துன்னி ஓர் ஓலை நீட்டி - ஒருவன் வந்து அருகில் வந்து ஓலையொன்றைக் கொடுத்து ; தொழுதனன் பெயர்ந்து நிற்ப - வணங்கி மீண்டு சென்று நிற்க ; மன்னிய

குருசில் கொண்டு - பொருந்திய சீவகன் அதைக் கைக்கொண்டு; மரபினல் நோக்குகின்ருன் - முறையாக வாசிக்கின்ருன்.

(வி - ம்.) 'மரபினல்' என்பதற்கு 'வழிபாட்டுடன்' என்று பொருள் கூறுவர் நச்சினர்க்கினியர்.

இன்னணம் - இவ்வாறு. காவு காண்டலாவது, பூம்பொழிலிற் சென்று ஆடுதல். மார்பன் - சீவகன். ஒருவன் என்றது தரன் என்னும் விஞ்சையனை. தொழுதனன் : முற்றெச்சம். மரபு - வாசிக்குமுறைமை. நோக்குதல் - ஈண்டு ஓதுதல் என்பதுபட நின்றது. (௩௫0)

வேறு

௪௪௩. உருமுக்கதிர் வேற்கலுழ னேலையுல கென்னும்
பருமைக்குருப் பளிங்கிற்புகழ்ப் பஞ்சிமுழு தடுத்த
திருமிக்குடைச் செல்வன்றிறற் சாமிநனி காண்க
அருமையற னின்பம்பொரு ளாகென விடுத்தேன்.

(இ - ள்.) உருமுக் கதிர்வேல் கலுழன் ஓலை-இடி போன்ற, கதிர் வேலையுடைய கலுழன் விடுத்த ஓலை; உலகு என்னும் பருமைக்குருப் பளிங்கின் - உலகம் என்னும் பெரிய நிறமிகுந்த பளிங்கில்; புகழ்ப் பஞ்சி முழுது அடுத்த - புகழாகிய பஞ்சி சிறிதிடமும் ஒழியாமல் பரவிய; திருமிக்குடைச் செல்வன் திறல் சாமி நனி காண்க - இச் செல்வத்தினை முற்பிறப்பின் தவ மிகுதியாலே கொண்ட செல்வனை வலிமையுற்ற சீவகசாமி நன்ருக அறிக; அருமை அறன் இன்பம் பொருள் ஆக என விடுத்தேன் - தனக்கு இன்னும் மேம்பட்ட அறமும் இன்பமும் பொருளும் வளர்க என வாழ்த்தி இது வரவிடுத்தேன்.

(வி - ம்.) தேவனுதலின் கூறினன். விடுத்தேன் : விகாரம் ('விட்டேன்' என இருத்தல் வேண்டும்.)

கலுழன் - கலுழவேகன். அறம் பொருள் இன்பம் எனற்பாலன செய்யுளாகலின் முறை பிறழ்ந்து வந்தன. சாமி என்றது சீவகசாமி என்றவாறு ; விளி. (௩௫௧)

௪௪௪. தத்தையொடு வீணைமனர் தாம்பொருது தோற்ப
மொய்த்தகலை நம்பிமுகிழ் முலையையிசை வெல்ல
வைத்தகதிர் வேலின்வலி யார்க்குரிய ளென்னச்
சித்தங்கரிந் தாங்குக்கோடி யான்செரு விளைத்தான்.

(இ - ள்.) மனர்தாம் தத்தையொடு வீணை பொருது தோற்ப - மன்னர்கள் தாம் தத்தையுடன் வீணையால் பொருது தோற்றபின்; மொய்த்த கலை நம்பி முகிழ்முலையை இசை வெல்ல- செறிந்த கலைச் செல்வனுகிய சீவகன் தத்தையை இசையாலே

வெல்ல; ஆங்குக் கொடியான் சித்தம் கரிந்து - அப்போது கொடியவனை கட்டியங்காரன் உள்ளம் வெந்து; வைத்த கதிர் வேலின் வலியார்க்கு உரியள் என்ன - கூரிய ஒளிமிகு வேற் போரிலே வல்லவர்க்கு இவள் உரியவள் என்றுரைத்து; செரு விளைத்தான் - போரை உண்டாக்கினான்.

(வி - ம்) 'வை' எனக் குறிப்புணர நின்ற உரிச்சொல் 'வைத்த' என வினைமேல் தன் மெய் தடுமாறிற்று (தொல். உரி. க. நச்.); முள்முனை போலக் கூர்த்தவேல் என்க.

மனர்: மன்னர் என்பதன் விகாரம். நம்பி: முன்னிலைப் புறமொழி. சித்தம் - அறிவு. கொடியான் - கட்டியங்காரன். (ருஉ)

அசரு. தேன்முழங்கு தார்க்குருசில் செம்பொனெடுந் தேர்மேல்
வான்முழங்கு வெஞ்சிலையின் வாளிமழை தூவி
யூன்முழங்கு வெங்குருதி வேழமுடன் மூழ்க
வேன்முழங்கு தானைவிளை யாடியதுங் கேட்டேன்.

(இ - ள்.) தேன் முழங்கு தார்க் குருசில் செம்பொன் நெடுந்தேர் மேல் - வண்டுகள் முரலுந் தாரணிந்த சீவகன் நெடிய செம்பொற் றேர்மீது அமர்ந்து; வான் முழங்கு வெம்சிலையின் வாளி மழை தூவி-முகிலிடிபோல முழங்கும் கொடிய வில்லாலே கணை மாரி பெய்தலால்; ஊன் முழங்கு வெம்குருதி - மெய்யில் உண்டாகிப் பெருகிய குருதியிலே; வேழம் உடன் மூழ்க-களிறு முற்றும் மூழ்குமாறு; வேல் முழங்கு தானை - வேலேந்தி ஆர்ப்பரித்த படைஞருடன்; விளையாடியதும் கேட்டேன் - விளையாடியதையும் தரன் கூறக் கேட்டேன்.

(வி - ம்.) தூவி - தூவுதலால்: எச்சத்திரிபு. 'சிலையென் வாளி' என்பதூஉம் பாடம்.

தேன் - வண்டு. குருசில்: முன்னிலைப் புறமொழி. வான்: ஆகு பெயர்; இடி என்க. (ருங)

அசசு. வந்துதரன் கூறியவிவ் வாய்மொழியு மன்றி
முந்துவரன் மொழிந்தபொருண் முற்றும்வகை நாடிப்
[1]பந்துபுடை பாணியெனப் பாயுங்கலி மான்றே
ரெந்தைதிற முன்னமுணர்ந் தின்னணம் விடுத்தேன்.

(இ - ள்.) பந்து புடை பாணியெனப் பாயும் கலிமான் தேர் எந்தை திறம்-பந்தடியும் தாளவொற்றும் போலப் பாய்ந்து செல்லும், ஒலிக்கும் குதிரை பூட்டிய தேரையுடைய எந்தை

1. 'பந்துபுடைப் பன்ன பாணிப் பல்லடிச்—சில்பரிக் குதிரைப் பல்வேல் எழினி' (அகநா. கOரு: கூ-கO).

யாகிய சீவகன் திறத்தில்; வந்து தரன் கூறிய இவ் வாய்மொழியும் - தரன் கூறிய இம் மொழியும்; அன்றி முந்து வரன் மொழிந்த பொருள் முற்றும் வகை முன்னம் உணர்ந்து நாடி - முன்னர் அச்சணந்தி அடிகள் மொழிந்த காரியமும் முடியுங் கூறுபாட்டையும் முன்பே குறிப்பாலே நாடி உணர்ந்து; இன்னணம் விடுத்தேன் - இனி யாம் சேறல் கருமம் அன்று என்று கருதித் தத்தையைச் சீதத்தனுடனே வரவிட்டேன்.

(வி - ம்.) கலுழவேகன் வரின் சீவகன் வரலாறு மாறுறும். வாய்மொழி என்றார், நிமித்திகன் கூறக் கேட்டிருந்தது இப்பொழுது முற்றின செய்தியைத் தான் கூறுதலின்.

வரன் - மேலானவன்; ஈண்டு அச்சணந்தி முனிவன். எந்தை என்றது உயர்வு குறித்துக் கூறியது; முறைப் பெயரன்று. பாணி - தாளம். (௩௫௪)

௮௪௭. எள்ளுநர்கள் சாயவென தோளிரண்டு நோக்கி
வெள்ளிமலை முழுதுங்கொடி யெடுத்ததிக லேத்திக்
கள்செய்மலர் மார்பனுறு காப்பிகழ்த லின்றி
யுள்ளுபொரு ளெம்முணர்த்தி யன்றியுள வேண்டா.

(இ - ள்.) என தோள் இரண்டும் நோக்கி - என்தோளிரண்டையும் பார்த்து; எள்ளுநர்கள் சாய - இகழ்ந்திருக்கும் பகைவர்கள் சாயுமாறு; இகல் ஏத்தி - சீவகன் எந்தை செய்த போரை ஏத்தி; வெள்ளிமலை முழுதும் கொடி எடுத்தது - வெள்ளிமலையெங்கும் வெற்றிக்கொடி பிடிக்கப்பட்டது; (இனி மேல் எந்தை வெற்றியும் தோல்வியும் என்னுடையனவே ஆகையால்) கள்செய் மலர்மார்பன் - தேன் பொருந்திய மலர் மார்பன்; உறு காப்பு இகழ்தல் இன்றி - மிக்க காவலை இகழாமல் உள்ளு பொருள் எம் உணர்த்தி அன்றி - தாம் நினைத்திருக்கும் பொருள்களும் எமக்கு அறிவித்தல்லது; உள வேண்டா - மேல் நினைத்தலும் வேண்டா.

(வி - ம்.) 'உளவும்' என்னும் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது.

எள்ளுநர் - இகழ்பவர்; பகைவர். மார்பன்: முன்னிலைப் புறமொழி. (௩௫௫)

௮௪௮. ஆம்பொருள்க ளாகுமது யார்க்குமழிக் கொண்ணாப்
போம்பொருள்கள் போகுமவை பொறியின்வகை [வண்ணந்
தேம்புனலை நீர்க்கடலுஞ் சென்றுதர லின்றே
வீங்குபுனல் யாறுமழை வேண்டியறி யாதே.

(இ - ள்.) ஆம் பொருள்கள் ஆகும் அது யார்க்கும் அழிக்க ஒண்ணு - நலமுற வேண்டியவை நலம்பெறும் அந் நலத்தை எவராலும் அழிக்கவியலாது; போம் பொருள் போகும்- அழியும் பொருள் அழியும்; (அழிவைத் தடுக்கவும் யாராலும் முடியாது); அவை பொறியின் வகை வண்ணம் - அவை இரு வினைப் பயனாகிய ஊழின் கூறுபாட்டுத் திறம்; தேம் புனலை நீர்க்கடலும் சென்று தரல் இன்று - இனிய நீரை உப்புநீர்க் கடலும் உலகிடைச் சென்று தருதல் எப்போதும் இன்று; மழை யாறு வீங்கு புனல் வேண்டி அறியாது - முகில் யாற்றுக்கு மிக்க நீரைக் கொடுக்க விரும்பி அறியாது.

(வி - ம்.) அது என்று ஒருமையாற் சுட்டினர், அழிக்க ஒண்ணுத் தன்மையைக் கூறலின். கட்டியங்காரன் ஆக்கத்திற்கும் சச்சந்தன் அழிவிற்கும் வருந்தாதொழிக என்று சீவகனுக்குத் தேறுதல் கூறினன். 'தேம் புனலை உவர் நீர்க்கடல் தராது' என்பது 'தீய பண்புடையோர் பிறர்க்கு நன்மை செய்ய அறியார்; கட்டியங்காரனும் எப்போதும் நமக்குத் தீங்கிழைப்பான். அதனால், தீமையும் அடைவான்' என் றுணர்த்தியது. 'யார்கண்ணும் இகந்துசெய் திசைகெட்டான் இறுதி போல் - வேரொடு மரம் வெம்ப விரிகதிர் தெறுதலின்' (கலி. கO) என்றார் பிறரும். முகில் யாற்றுக்கு நீரை அது விரும்பாதேயுங் கொடுத் தல் போல நல்லோரும் பிறர்க்கு எப்போதும் நலமே செய்வாராதலின், சீவகனும் நலம்புரிக என்றான்.

இதுவரை ஓலைப்பாசுரச்செய்தி. இனி, 'எள்ளுநர்கள்' (சீவக. அசஎ) என்னுஞ் செய்யுளளவும் ஓலைப் பாசுரமாக்கி அது கேட்ட சீவகன் கூறு கின்றானென ஆக்குவாரும் உளர். அதற்கு, இகல் எத்திக் கொடியெடுத்த தென்று, அவன் வியந்ததற்குத் தான் வென்றானாகக் கூறாது, ஆக்கமுங் கேடும் பொறியின் வகை என்றான் ஆக்குக; ஆக்கத்திற்கும் அழிவிற்கும் ஆற்றிலே உவமை கொள்க. கடல் வேண்டாதிருக்கப் புனல்தானே போனது போம் பொருட்கும், யாறு மேகத்தை வேண்டாதிருக்கப் புனல் தானே நிறைகை ஆம் பொருட்கும் உவமை. சென்றுதரல் - போய்க் கொண்டு வருதல்.

இச்செய்யுள்;

"பரியினும் ஆகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம." (குறள் - ருஎசு)

என வரும் திருக்குறளையும்,

"உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா
பெறற்பா லனையவு மன்னவாம்—மாரி
வறப்பிற் றருவாரு மில்லை அதனைச்
சிறப்பிற் றணிப்பாரும் இல்." (நாலடி. கOச)

எனவரும் நாலடியையும் நினைப்பிக்கின்றது. (ருஙசு)

அசசகூ. மன்பெரிய மாமனடி மகிழ்ந்துதிசை வணங்கி
அன்பினக லாதவனை விடுத்தலர்ந்த கோதைக்
கின்பநிலத் தியன்றபொரு ளிவையிவைநுங் கோமான்
றந்தவெனச் சொல்லிநனி சாமிகொடுத் தானே.

(இ - ள்.) மன் பெரிய மாமன் அடி மகிழ்ந்து திசை வணங்கி - மிகப் பெரிய மாமன் அடியைத் திசை நோக்கி மகிழ்ந்து வணங்கி; அன்பின் அகலாதவனை விடுத்து - அன்பினால் நீங்காது நின்ற தரனை விடுத்து; அலர் கோதைக்கு - தத்தைக்கு; இன்ப நிலத்து நனி இயன்ற பொருள் நும் கோமான் தந்த இவையிவை எனச் சொல்லி - இன்ப நிலத்திற்கு நன்றாகப் பொருந்திய பொருள்களாக நின் தந்தை கொடுத்தவை இவையிவை என்று கூறி; சாமிகொடுத்தான் - சீவகன் கொடுத்தான்.

(வி - ம்.) மன்பெரிய மாமன் - மிகப் பெரிய மாமனாகிய கலுழவேகன். அன்பினகலாதவன் - தரன். இன்பநிலம் - நுகரும் துறைகள். கோமான், ஈண்டுத் தந்தை என்னும் முறைப்பெயர்ப் பொருட்டாய் நின்றது. சாமி-சீவகசாமி. (கூகூஎ)

அருo. குங்குமமுஞ் சந்தனமுங் கூட்டியிடு கொடியா
வெங்கணிள முலையின்மிசை யெழுதிவிளை யாடிக்
கொங்குண்மலர்க் கோதையொடு குருசில்செலும் வழிநா
ளங்கணகர்ப் பட்டபொரு ளாகியது மொழிவாம்.

(இ - ள்.) குங்குமமும் சந்தனமும் கூட்டி யிடுகொடியா - குங்குமத்தையும் சந்தனத்தையுங் கலந்து தொய்யில் கொடியாக; வெம்கண் இளமுலையின் மிசை எழுதி - விருப்பூட்டும் இளமுலையின் மேல் எழுதி; கொங்கு உண்மலர்க் கோதையொடு குருசில் விளையாடி - தேன் பொருந்திய கோதையாளுடன் சீவகன் விளையாடி; செலும்வழி நாள் - செல்லும் காலத்தே; நகர் அங்கண் பட்ட பொருள் ஆகியது மொழிவாம் - நகரிலே நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் சீவகன் அடைந்ததையும் கூறுவோம்.

(வி - ம்.) 'பொருளாகியது' ஒரு சொல்லுமாம்.

கூட்டி - கலந்து. இடு கொடி - எழுதுந் தொய்யிற் கொடி. கொடியா என்புழி ஆக்கச்சொல் ஈறு தொக்கது. குருசில் : சீவகன். வழிநாள் - பின்னாள்கள். பட்டது - நிகழ்ந்தது. என்றது, இக்காரணத்தால் சீவகன்பால் நிகழ்ந்த செய்திகளை. பொருளாகியது : ஒரு சொன்னீர்மைத்து. (கூகூஅ)

காந்தருவ தத்தையார் இலம்பகம் முற்றிற்று

ஆகச் செய்யுட்கள் : அருo.

---

## ௬. குணமாலையார் இலம்பகம்

### (கதைச் சுருக்கம்)

சீவகன் காந்தருவதத்தையோடு கருத்தொருமித்து ஆதரவு பட்டின்புற்றிருக்கு நாளில், இனிய இளவேனிற் பருவம் வந்தெய்தியது. அப்பொழுது மாந்தர் எல்லாம் பொழில் விளையாட்டிற் புக்கனர். அவ்விராசமாபுரத்திலுள்ள சுரமஞ்சரி என்பாளும், குணமாலை என்பாளும் தந் தோழிமாரோடு விளையாட அப்பொழிலிற் புக்கனர். அப் பொழிலின்கண் அப் பெருமாட்டியார் இருவரும் நறுஞ்சுண்ணங் காரணமாகத் தம்முட் கலாய்த்துக் கொண்டனர். தஞ்சுண்ணங்களுள் வைத்துச் சிறந்தது யாதென அறிதற்குத் தந்தோழியரை அறிஞரிடத்தே சுண்ணத்தோடு போக்கினர். அதுகண்ட அறிஞர் பலரும், அவரைச் சீவகன்பாற் காட்டி வினவும்படி அறிவுறுத்தனர். அம்மகளிர் அவ்வாறே அவற்றைச் சீவகனுக்குக் காட்டி "இவற்றுள் சிறந்தது செப்புக!" என்று வேண்டினர். சீவகன் அவற்றை நுண்ணிதின் ஆராய்ந்து, "குணமாலை சுண்ணமே சிறப்புடையது," என்றான். அம்மகளிர் தந்தலைவியர்பாற் சென்று இதனை உணர்த்தினர்.

சீவகன் தன் சுண்ணத்தை மதியாமை அறிந்த சுரமஞ்சரி பெரிதும் வருந்தினள். "அச் சீவகன் என்பால் வலிந்துவந்து என்னருட்கு இரந்து நிற்கும்படி யான் நோன்பியற்றுவல்" என்று குறிப்பாலுணர்த்தித் தன் கன்னிமாடம் புகுந்து, சீவகன் தன்பால் வலிந்துவந்து அருள்வேண்டற் பொருட்டு நோன்பாற்றி யிருந்தனள்.

இனி, அப் பொழிலிலே பார்ப்பனர் சோற்றுத் திரளை ஒரு நாய் தீண்டிற்றாக? அப் பார்ப்பனர் அதனைத் தடியாற் புடைத்தனர். அந் நாயைக்கண்ட சீவகன் இரக்கமுற்று, அதன் செவியில் ஐந்தெழுத்து மறைமொழியை ஓதினன். அதனால் அந்நாய் அவ்வுடல் ஒழித்துத் தேவனாயிற்று. சுதஞ்சணன் என்னும் பெயருடைய அத்தேவன் மீண்டுவந்து சீவகனை வணங்கினான். 'நின்னருளால் யான் இப்பொழுது இயக்கர் தலைவனாகிச் சந்திரோதயமென்னும் நகரில் இனிதே வாழும் பேறுபெற்றேன். என் பெயர் சுதஞ்சணன் என்பதாம். நினக்குக் குற்றேவல் செய்யும் கருத்துடையேன்' என்றனன். அது கேட்ட சீவகன் வியந்து "நண்ப! நீ எனக்குப் பகைவரால் துன்பம் நேர்ந்தபோது துணைபுரிவாயாக! இப்பொழுது நின்னூர் சென்று இன்புற்று வதிக!" எனக் கூறி விடுத்தனன்.

மாந்தரெல்லாம் பொழிலில் ஆடி மீண்டு வந்தனர். அப்பொழுது கட்டியங்காரன் பட்டத்து யானையாகிய அசனிவேகம் செருக்குற்றுப் பாகர்க்கடங்காமல் சிதைந்து ஓடிற்று. அதனெதிரே வந்த குணமாலையைச் சீறி அவளைக் கொல்லத் தொடங்கியது. அவ்வழியே வந்த சீவகன் விரைந்தோடி அதனை அச்சுறுத்தி ஓட்டிக் குணமாலையை உய்யக்கொண்டனன். இருவருளங்களும் ஒன்றுறக் கலந்தன. குணமாலை சீவகன்பாற் காதல் கொண்டுள்ள செய்தியை அவள் நற்றாயாகிய வினயமாலை குறிப்பானுணர்ந்து தந்தையாகிய குபேரமித்திரனுக் குணர்த்தினள். அவனும் பெரிதும் மகிழ்ந்து கந்துக்கடனிடத்தே தூதுவிட்டுத் தன் கருத்தை உணர்த்தினன். அவனும் மகிழ்ந்துடன்பட்டனன். அவ்வழி சீவகனுக்குங் குணமாலைக்கும் திருமணஞ் சிறப்பாக நிகழ்ந்தது. இருவரும் ஈருடற்கு ஓருயிராய் இணைந்து இன்புற்றனர்.

இனிச் சீவகனுக்குத் தோற்றமையால் நாணிக் கவளமறுத்து நின்ற அசனிவேகத்தைக் கண்ட கட்டியங்காரன், நிகழ்ச்சியெல்லாம் வினவி அறிந்தனன். சீவகன்பாற் சீற்றங்கொண்டான். "அவனைக் கட்டி என் முன்னர்க் கொணர்க" என மதனனை மறவருடன் ஏவினன். அவர்கள் சீவகன் இல்லத்தை வளைத்துக் கொண்டனர். சீவகன் சினந்து போராற்றப் புலிபோலப் புறப்பட்டனன்; தான் தன் ஆசிரியனுக்கு அளித்த உறுதிமொழியை நினைந்து அடங்கினன். இருமுதுகுரவரும் அரசன் ஆணைக்கு அடங்கி அவன்பாற் செல்லுதலே அறிவுடைமையாம் என்று செவியறிவுறுத்தினர். சீவகன் அக் கருத்திற் கிணங்கி அம் மறவர்க்கு அடங்கியவனாய் அவர் புடைசூழச் சென்றனன். நந்தட்டன் முதலியோர் மாற்றாரை வெல்லுதற்குரிய சூழ்ச்சியை ஆராய்ந்தனர்.

இஃதறிந்த காந்தருவதத்தை தன் மந்திர வன்மையால் சீவகனைச் சிறைவீடு செய்ய முயன்றனள். அவள் கருத்தறிந்த சீவகன் நாணினன். சுதஞ்சணனை நினைத்தான். சீவகனுக்குற்ற துன்பத்தைச் சுதஞ்சணன் தனது தெய்வ ஞானத்தால் உணர்ந்து, ஒரேலெனக் காற்றையும் மழையையும் தோற்றுவித்து மதனன் முதலியோரை நிலைகுலைத்துப் பிறர் உணராதபடி சீவகனைத் தன் மார்போடு அணைத்தெடுத்துக்கொண்டு தன் பதியை எய்தினன். அவ்விடத்தே தமர்க்கெல்லாம் இவன் சிறப்பினை உணர்த்தினன்; இவ்வாற்றால் சீவகன் சுதஞ்சணனோடு அவன் ஊரில் இனிதே உறைவானாயினன்.

இனி, மதனன் சீவகன் எவ்வழி மறைந்தான்? என்றுணராதவனாய்த் திகைத்தனன். கட்டியங்காரன் தன்னைக் கடிவான்

என்றஞ்சி ஏதிலான் ஒருவனை வாளாற் கொன்று உருத்தெரியாமல் புரட்டிவிட்டுக் கட்டியங்காரன்பாற் சென்று "அரசே! மழையும் காற்றும் மிக்கமையால் சீவகனை உயிருடன் கொணர்தல் அருமையாயிற்று. ஆதலால் அவனைக் கொன்று வீழ்த்திவிட்டேன்; என்றனன். அதுகேட்ட கட்டியங்காரன் மதனனைப் பாராட்டிச் சிறப்புகள் பலவும் நல்கினான்.

அருக. காசறு துறவின் மிக்க கடவுளர் சிந்தை போல
மாசறு விசும்பின் வெய்யோன் வடதிசை யயண முன்னி
ஆசற நடக்கு நாளு ளைங்கணைக் கிழவன் வைகிப்
பாசறைப் பரிவு தீர்க்கும் பங்குனிப் பருவஞ் செய்தான்.

(இ - ள்.) காசு அறு துறவின் மிக்க கடவுளர் சிந்தை போல - குற்றம் அற்ற, துறவு நெறியிற் சிறப்புற்ற முனிவரின் உள்ளம்போல; வெய்யோன் மாசு அறு விசும்பின் வடதிசை அயணம் முன்னி - கதிரவன் தூய் வானிலே வடதிசைச் செலவைக் கருதி; ஆசு அற நடக்கும் நாளுள் - நலம்பெறச் செல்லும் நாட்களிலே; ஐங்கணைக் கிழவன் வைகி - காமன் தான் தங்குவதற்கு; பாசறைப் பரிவு தீர்க்கும் - பாசறையிலே தங்கியிருப்போரின் வருத்தத்தை நீக்கும்; பங்குனிப் பருவம் செய்தான் - இளவேனிற் காலத்தைப் பிறப்பித்தான்.

(வி - ம்.) 'அயனம்' என்னுமல் 'அயணம்' என்று பாகதத்தாற் கூறினர் செய்யுட் சொல்லாதலின். வைகி - வைக: எச்சத் திரிபு. கூதிர்க் காலத்தே (போர்மேற் சென்றோர்) பாடி வீட்டிலிருந்து, இளவேனிற்கண் இன்பம் நுகர மனை திரும்புவாராதலின், 'பாசறைப் பரிவு தீர்க்கும்' என்றார்.

'தலைவந்த திளவேனில்' (சீவக. கூசஅ) என எதிர்நோக்கிக் கூறிய காலத்தே, ஈண்டு நீர்விளையாட்டு நிகழ்கின்றதென்பார், அக் காலத்தைச் சிறப்பித்துரைக்கின்றார்.

உலகின்கண் கார்முதலிய பருவங்கள் உண்டாதற்கு ஞாயிற்று மண்டிலத்தின் வடதிசைச் செலவும் தென்றிசைச் செலவும் காரணமாதல்பற்றி வெய்யோன் பருவம் செய்தான் என அவன் செயலாக்கிக் கூறினர்.

விசும்பிற்குக் கடவுளர் சிந்தை உவமை. ஐங்கணைக் கிழவன் - காமன். (க)

அருஉ. தோடணி மகளிர் போன்ற
துணர்மலர்க் கோம்பர் கோம்பி
னூடவர் போல வண்டு
மடைந்தன வளியிற் கோல்கி

யூடிய மகளிர் போல
வோசிந்தன வூட றீர்க்குஞ்
சேடரிற் சென்று புல்லிச்
சிறுபுறந் தழீஇய தும்பி.

(இ - ள்.) துணர்மலர்க் கொம்பர் தோடுஅணி மகளிர் போன்ற - கொத்தாகிய மலர்க்கொம்புகள் மலரணிந்த மகளிரைப் போன்றன; ஆடவர்போல வண்டும் கொம்பின் அடைந்தன - மகளிரிடம் ஆடவர் அடையுமாறுபோல வண்டுகளும் மலர்க் கொம்புகளிடத்தே சேர்ந்தன; ஊடிய மகளிர்போல அளியிற்கு ஒல்கி ஒசிந்தன - ஆடவரிடத்து ஒசிந்து ஊடிய பெண்களைப் போல அவ் வண்டுகளின் கனத்திற்கு அக் கொம்புகள் ஒரு பக்கத்தேத் தாழ்ந்தன; ஊடல் தீர்க்கும் சேடரின் தும்பி சென்று புல்லிச் சிறுபுறம் தழீஇய - அவர் ஊடலைத் தீர்த்து எதிர்முகம் ஆக்கும் பெரியோரைப் போலத் தும்பிகள் சென்று அங்ஙனம் உயர்ந்த சிறுபுறத்தைத் தழுவி ஒக்க நிறுத்தின.

(வி - ம்.) சிறுபுறம்: பூங்கொம்பு வளைந்தபோது உயர்ந்திருந்த பக்கம் 'சொல்லிய கிளவி அறிவர்க்கும் உரிய' (தொல். கற்பு. கந) என்றலின் அறிவிற் பெரியோரைச் சேடர் என்றார். அளியிற்கு: பிறர்க்கும் இவ்வாறு அருளுளதாம் என்று புலவி நுணுக்கங் கொள்ளுதலை மகளிர்க்குச் கொள்க. அளி - அருள், வண்டு.

வளியிற்கு-காற்றிற்கு. எனினுமாம் மலர்க்கொம்பர் மகளிர்போன்ற என்க. சேடர், சேடு என்னும் பண்படியாகப் பிறந்த பெயர்; பெரியோர் என்னும் பொருட்டு. தும்பி - வண்டினத்தில் ஒருவகை. (உ)

வேறு

அருந. நான மண்ணிய நன்மண மங்கையர்
மேனி போன்றினி தாய்விரை நாறிய
கானங் காழகி லேகமழ் கண்ணிய
வேனி லாற்கு விருந்தெதிர் கொண்டதே.

(இ - ள்.) நானம் மண்ணிய நல்மண மங்கையர் மேனி போன்று - கத்தூரி பூசப்பெற்ற, நல்ல மணஞ்செய்த மகளிரின் மேனிபோன்று; இனிதாய் விரை நாறிய கானம் - இனிமையாய் மணம் கமழ்ந்த சோலை; காழ் அகிலே கமழ் கண்ணிய வேனிலாற்கு - கரிய அகில் மணமே கமழுங் கண்ணியையுடைய காமனுக்கு; விருந்து எதிர்கொண்டது - விருந்திடுதலை மேற்கொண்டது.

(வி - ம்.) கண்ணி - முடிமாலை. கண்ணிய - மாலையை உடைய.

நானம்: ஆகுபெயர்; மண்ணியதனால் உண்டான நறுமணத்தை யுடைய மகளிர் எனவும் பொருள் கூறலாம். வேனிலான் - காமன். (ரு)

அருச. கோம்ப ரின்குயில் கூய்க்குடை வாவியுட்
டும்பி வண்டொடு தூவழி யாழ்செய
வெம்பு வேட்கை விரும்பிய வேனில்வந்
தும்பர் நீடுறக் கத்தியல் பொத்ததே.

(இ - ள்.) கொம்பர் இன் குயில் கூய் - கொம்பிலே இனிய குயில் கூவ; குடை வாவியுள் - எல்லோரும் நீராடும் குளத்திலே; தும்பி வண்டொடு தூவழி யாழ்செய-தும்பியும் வண்டும் தூவழி யென்னும் பண்ணையுடைய யாழ்போல இசைக்க; வெம்பு வேட்கை விரும்பிய வேனில் வந்து - எரியுங் காமத்தை விரும்புதற்குக் காரணமான வேனில் வருதலாலே; உம்பர் நீள் துறக்கத்து இயல்பு ஒத்தது - மேலாகிய பெரிய துறக்கத்தின் தன்மையைப் போன்றது.

(வி - ம்.) கூய் - கூவ, வந்து - வர: எச்சத்திரிபுகள். (ச)

அருரு. நாக நாண்மலர் நாறு கடிநக
ரேக வின்பத் திராச புரத்தவர்
மாக நந்து மணங்கமழ் யாற்றயற்
போக மேவினர் பூமரக் காவினே.

(இ - ள்.) நாகம் நாண்மலர் நாறு கடிநகர் - நாகமரத்தின் புதுமலர் மணம் கமழும் சிறந்த நகரமாகிய; ஏக இன்பத்து இராசபுரத்தவர் - ஒப்பற்ற இன்பத்தையுடைய இராசமாபுரத்தில் உள்ளோர்; மாகம் நந்தும் மணம் கமழ் யாறு அயல் - வானிற் பொருந்த மணம் வீசுகிற, யாற்றின் ஓரத்தில் உள்ள; பூ மரக் காவின் போகம் மேவினர் - மலர் நிறைந்த மரங்களையுடைய காவிலே இன்பம் நுகர விரும்பினர்.

(வி - ம்.) முதலிற் பொழிலில் இன்புறுதலையும் பின்னர் நீர்விளையாட்டையும் கருதினர். பொழில் யாற்றின் அயலில் உள்ளது.

நாகம் - ஒருவகை மரம். நாள் மலர் - அன்றலர்ந்த பூ. கடி - ஈண்டு மணம் என்னும் பொருட்டு. இராசமாபுரம், இராசபுரம் என நின்றது. மாகம் - விசும்பு. நந்துதல்-ஈண்டு விரிதல் என்னும் பொருட்டு, போகம்-நுகர்ச்சி. (ரு)

அருசு. முழவங் கண்டுயி லாத முதுநகர்
விழவு நீர்விளை யாட்டு விருப்பின்றற்
றெழுவிற் றேன்றிய தோமறு கேவலக்
கிழவன் மூதெயில் போற்கிளர் வுற்றதே.

(இ - ள்.) தொழுவில் தோன்றிய தோம்அறு கேவலக் கிழவன் மூதெயில்போல் - இல்வாழ்வின் உண்டான குற்றம் அற்ற பேரின்ப மடந்தையையுடைய அருகதேவனது பொன் எயில் வட்டம்போல்; முழவம் கண் துயிலாத முதுநகர் - முழவின் ஒலி மாறாத இராசமாபுரம்; நீர் விழவு விளையாட்டு விருப்பினல் - நீர் விழவாகிய விளையாட்டின் காதலால்; கிளர்வுற்றது - கிளர்ச்சி கொண்டது.

(வி - ம்.) இனி, மூதெயிலுக்குத் திருநாளுக்குப் போவாரைப் போல என்றுமாம்.

முழவம் - ஈண்டு அதன் முழக்கத்திற்கு ஆகுபெயர். கண்துயிலாத என்றது ஈண்டு, இடையறாத என்றவாறு. முதுநகர் - பழைதாகிய நகரம். தொழு: ஆகுபெயர்; ஈண்டுக் கட்டுண்ட இல்வாழ்க்கையைக் குறித்துநின்றது. தொழு - தளை. தோம்அறு கேவலக்கிழவன் என்றது அருகக் கடவுளை. எயில் - பொன் எயில் வட்டம். நகர் மூதெயில்போல் கிளர்வுற்றதென்க. (சு)

அருஎ. வள்ள நீரர மங்கைய ரங்கையா
லுள்ளங் கூரத் திமிர்ந்துகுத் திட்டசாந்
தள்ள லாயடி யானை யிழுக்கின
வெள்ள நீர்வளை வெள்ள முரன்றவே.

(இ - ள்.) அர மங்கையர் அங்கையால் - வான் மகளிரைப் போன்ற மங்கையரின் அழகிய கையினல்; உள்ளம் கூர - மனக் களிப்பு மிகையால்; உகுத திட்ட வள்ளநீர்-சிந்திய கிண்ணத்தில் உள்ள பனிநீரும்; திமிர்ந்திட்ட சாந்து - திமிர்ந்திட்ட சந்தனமும்; அள்ளலாய் யானை அடி இழுக்கின - சேறாக அச் சேற்றின் கண் யானை அடி வழுக்கின; வெள்ளநீர் வளை வெள்ளம் முரன்ற - கடல் நீரிற் பிறந்த சங்குகளும் வெள்ளம் என்னும் எண்ணுக முழங்கின.

(வி - ம்.) வள்ளநீர் - வள்ளத்துள்ள பனிநீர். அரமங்கையர்: உவம ஆகுபெயர். உள்ளம் - மனவெழுச்சி. கூர்தல் - மிகுதல். அள்ளல் - சேறு; சேறாக அதன்கண் யானைகளும் இழுக்கின என்க. வெள்ளம் இரண்டனுள் முன்னது கடல், ஏனையது ஒருபேரெண். (எ)

அருஅ நீந்து நித்தில வூர்தி நிழன்மருப்
பேந்து கஞ்சிகை வைய மிளவெயிற்
போந்து காய்பொற் சிவிகைநற் போதகங்
கூந்தன் மாலைக் குமரிப் பிடிக்குழாம்.

(இ - ள்.) நீந்தும் நித்தில ஊர்தி - (தெருவிலே மக்களின் நெருக்கத்தைக்) கடந்து செல்லும் முத்துப் பந்தலும்; நிழல்

மருப்பு ஏந்து கஞ்சிகை வையம் - ஒளிவிடும் யானைக் கொம்பினால் ஏந்திய, உருவு திரையையுடைய வண்டியும்; இளவெயில் போந்து காய் பொன் சிவிகை - இளவெயில் விட்டு ஒளிரும் பொன் சிவிகையும்; நல்போதகம் கூந்தல் மாலை குமரிப் பிடிக்குழாம் - அழகிய யானைகளும் கூந்தலையும் மாலையையும் உடைய இளம் பிடித்திரளும் (ஆகியவற்றை).

(வி - ம்.) இப் பாட்டுக் குளகம். கடத்தற்கருமையின் 'நீந்தும்' என்றார்.

நித்தில லூர்தி - முத்தாலாய நடைப்பந்தர். நிழல் - ஒளி. கஞ்சிகை வையம் - உருவுதிரை வீழ்த்தப்பட்ட வண்டி; இதனைக் கொல்லாவண்டி என்ப. இளவெயில் போன்று புறப்பட்டு ஒளிரும் பொன் சிவிகை எனினுமாம். போதகம் - யானை. குமரிப்பிடி - இளமையுடைய பெண் யானை. (அ)

௮௫௯. ஏறு வாரொலி யேற்றுமி னேவெனக்
கூறு வாரொலி தோடு குலைந்துவீழ்ந்
தாறி னார்ப்பொலி யஞ்சிலம் பின்னொலி
மாறு கொண்டதோர் மாக்கட லொத்தவே.

(இ - ள்.) ஏறுவார் ஒலி - ஏறுகின்றவரின் ஆரவாரமும்; தோடு குலைந்து வீழ்ந்து ஏற்றுமினோ எனக் கூறுவார் ஒலி - தம் கூட்டம் சிதறியதால் அதனையடைய விரும்பி ஏற்றிவிடுங்கள் என்று கூறுகின்றவரின் ஆரவாரமும்; ஆறின் ஆர்ப்பு ஒலி - வழியே செல்லுவாரின் ஒலியும்; அம் சிலம்பின் ஒலி - அழகிய சிலம்புகளின் ஆர்ப்பும் (கூடுவதால்); மாறு கொண்டது ஓர் மாக்கடல் ஒத்தது - கடலுடன் மாறுபட்ட மற்றொரு பெருங் கடல் போன்றது.

(வி - ம்.) தோடு - கூட்டம். "சிறுதலை வெள்ளைத்தோடு" என்னும் குறுந்தொகைக் கண்ணும் (௧௬௩) அஃதப் பொருட்டாதலறிக. ஆறு: ஆகுபெயர்; வழிப்போக்கர் என்க. (௯)

௮௬0. பொன்செய் வேய்த்தலைப் பூமரு மண்டல
மின்செய் வெண்குடை பிச்ச மிடைந்தொளி
யென்செய் கோவென் றிரிந்த திழைநிலா
மன்செய் மாநகர் வட்டம்விட் டிட்டதே.

(இ - ள்.) பொன்செய் வேய்த்தலைப் பூமரு மண்டலம் - பொன்னாற் செய்யப்பட்ட காம்பினைக் கொண்ட, பூ எழுதிய வட்டக்குடையும்; மின்செய் வெண்குடை - ஒளிரும் வெண் குடையும்; பிச்சம் - பீலிக்குடையும்; மிடைந்து - நெருங்குதலால்; ஒளி என் செய்கோ என்று இரிந்தது - (ஞாயிற்றின்) ஒளி

இனி யான் என் செய்வேன் என்று கெட்டது; இழைநிலா மன் செய் மாண்நகர் வட்டம் விட்டிட்டது - (அப்போது) அணி கலன்களின் ஒளி பெருமை பொருந்திய பெருநகரம் எங்கும் வட்டமாக விளங்கி வீசியது.

(வி - ம்.) மண்டலம்: ஆகுபெயர்; வட்டக்குடை என்க. பிச்சம் - ஒருவகைக் குடை. ஒளி - ஈண்டு ஞாயிற்றொளி என்க. மாணகர் - மாட்சிமையுடையஇராசமாபுரம். (கo)

அசுக. திருந்து சாமரை வீசுவ தெண்கடன்
முரிந்த மொய்திரை போன்ற வகிற்புகை
புரிந்த தாமங்க ளாகவப் பூந்துகள்
விரிந்து வானின் விதானித்த தொத்ததே.

(இ-ள்.) திருந்து சாமரை வீசுவ - திருத்தமான சாமரைகள் வீசுவன; தெண்கடல் முரிந்த மொய்திரை போன்ற - தெளிந்த கடலின் முரிந்த நெருங்கின திரைகளைப் போன்றன; அகிற் புகை புரிந்த தாமங்களாக - அகிற்புகைச் சுருள் கட்டப்பட்ட மாலைகளாக; அப் பூந்துகள் விரிந்து வானின் விதானித்தது ஒத்ததே - அப்போது தூவின பூந்துகள் பரவி வானிலே மேற் கட்டி ஒன்றைக் கட்டியது போன்றது.

(வி - ம்) வீசுவ: பலவறிசொல்; வீசப்படுவனவாகிய சாமரை திரை போன்றன என்க. புகை தாமங்கள் ஆக என்க. தாமம் - மாலை. விதானித்தல் - மேற்கட்டியிடுதல். (கக)

அசுஉ. சோலை சூழ்வரைத் தூங்கரு வித்திரண்
மாலை ஊர்திகள் வைய மிவற்றிடைச்
சீலக் கஞ்சிநற் போதகஞ் செல்வன
நீல மேக நிரைத்தன போன்றவே.

(இ - ள்.) சோலைசூழ் வரை தூங்கு அருவித்திரள் - சோலை சூழ்ந்து மறைத்த மலையினின்றும் அசையும் அருவித்திரள் போலும்; மாலை ஊர்திகள் வையம் இவற்றிடை - முத்த மாலையையுடைய பிலி வேய்ந்த ஊர்திகளும் வண்டியும் ஆகிய இவற்றின் நடுவே; சீலக்கு அஞ்சி நல் போதகம் செல்வன - பாகன் கற்பித்த ஒழுக்கத்திற்கு அஞ்சி அழகிய யானைகள் செல்வன; நீலமேகம் நிரைத்தன போன்ற - கரிய முகில்கள் அணிவகுத்தன போன்றன.

(வி - ம்) சீலக்கு - சீலத்திற்கு; ஒழுக்கத்திற்கு. சாரியை இன்றி உருபு புணர்ந்தது. யானை வரிசைக்கு முகில் வரிசை உவமை. (கஉ)

அசுங. வழங்கு வங்கக் கலிங்கக் கடகமு
மழுங்கு மாந்தர்க் கணிகலப் பேழையுந்
தழங்கு வெம்மதுத் தண்டுந் தலைத்தலைக்
குழங்கன் மாலையுங் கொண்டு விரைந்தவே.

(இ - ள்.) வங்கம் வழங்கு கலிங்கம் கடகமும் - மரக்கலத்தில் வந்த ஆடையும் கடகமும்; அழுங்கும் மாந்தர்க்கு அணிகலப் பேழையும் - (அணிகலம் இழந்து) வருந்துவார்க்குக் கொடுக்க அணிகலப் பெட்டிகளும்; தழங்கு வெம்மதுத் தண்டும்-கொடிய மதுவைப் பெய்து முழங்கும் மூங்கிற் குழாய்களும்; தலைத்தலைக் குழங்கல் மாலையும்-ஆங்காங்கே மணந்தரும் மாலையும்; கொண்டு விரைந்த - கைக்கொண்டு (மக்கள் திரள்கள்) விரைந்து சென்றன.

(வி - ம்) வங்கம் - மரக்கலம். வங்கம் வழங்கு - மரக்கலங்கள் கொண்டுவந்து வழங்கிய என்க. கலிங்கம்: ஆகுபெயர். ஆடைப்பேழை. கடகம்: ஆகுபெயர்; அணிகலப்பேழை. அழுங்குமாந்தர் - நீராட்டின்கண் ஆடை அணி முதலியன பறிகொடுத்து வருந்தும் மகளிர் என்க. தழங்கும் வெம்மது - இரைகின்ற வெப்பமுடைய கள்; முதிர்ந்த கள் ஒய்யென் றிரையுமியல்புடையது. தண்டு - ஈண்டு மூங்கிற் குழாய். குழங்கல் - மணங்கமழ்தல். விரைந்த என்னும் பயனிலைக்கு (அசுச) மாசனம் எழுவாய். (கரு)

அசுச. வாச வெண்ணெயும் வண்டிமிர் சாந்தமும்
பூசு சுண்ணமு முண்ணு மடிசிலுங்
காசில் போகக் கலப்பையுங் கொண்டவண்
மாசின் மாசனம் வாயின் மடுத்தவே.

(இ - ள்) வாச எண்ணெயும் - மணந்தரும் எண்ணெயும்; வண்டு இமிர் சாந்தமும் - வண்டுகள் முரலும் சந்தனமும்; பூசு சுண்ணமும் - பூசிக்கொள்ளும் நறுமணப் பொடியும்; உண்ணும் அடிசிலும் - உண்ணும் உணவும்; காசுஇல் போகக் கலப்பையும்-குற்றமற்ற இன்பந் தரக்கூடிய யாழ் முதலியவை வைத்த பெட்டியும்; கொண்டு - கைக்கொண்டு; மாசுஇல் மாசனம் அவண் வாயில் மடுத்த - குற்றம் அற்ற மக்கள் திரள்கள் அந்நகரின் வாயிலில் நிறைந்தன.

(வி - ம்) சுண்ணம் - நறுமணப்பொடி. காசு - குற்றம். கலப்பை - யாழ்ப் பேழை. மாசனம் - மக்கள் கூட்டங்கள். (கசா)

அசுரு. பாட லோசையும் பண்ணொலி யோசையு
மாட லோசையு மார்ப்பொலி யோசையு
மோடை யானை யுரற்றொலி யோசைய
மூடு போயுயர் வானுல குற்றவே.

(இ - ள்.) பாடல் ஓசையும் - பாட்டொலியும்; பண் ஒலி ஓசையும் - யாழ் வாசிக்கும் ஒலியும்; ஆடல் ஓசையும் - ஆட்டத்தினால் வந்த இயங்களின் ஒலியும்; ஆர்ப்பு ஒலி ஓசையும் - ஆரவாரத்தின் ஒலியும்; ஓடை யானை உரற்று ஒலி ஓசையும் - முகபட்டம் அணிந்த களிறுகள் பிளிறும் ஒலியாற் பிறந்த ஓசையும்; ஊடுபோய் உயர் வான் உலகு உற்ற - தம்முள் விரவிச் சென்று வானுலகை அடைந்தன.

(வி - ம்.) பாடல் மிடற்றுப் பாடல். பண் - ஈண்டு ஆகுபெயர். யாழ் நரம்பென்க. ஒலியோசை: வினைத்தொகை; உரற்றொலியுமது, ஊடுபோதல்-ஒன்றனோடொன்று விரவிப்போதல். (கரு)

அசுசு. பூக்க ணீர்விளை யாடிய பொன்னுல
கோக்க நீள்விசும் பூடறுத் தொய்யென
வீக்க மாநகர் வீழ்ந்தது போன்றவண்
மாக்கண் மாக்கடல் வெள்ள மடுத்ததே.

(இ - ள்.) பொன் உலகு பூக்கள் நீர் விளையாடிய - பொன்னுலகு பூக்களையுடைய நீரிலே விளையாடுவதற்கு; ஒக்கம் நீள் விசும்பு ஊடு அறுத்து - உயர்ந்த நீண்ட வானத்தை ஊடறுத்து வந்து; வீக்கம் மாநகர் ஒய்யென வீழ்ந்தது போன்று - வளமிருந்த பெரிய நகரில் விரைய வீழ்ந்ததுபோல; அவண் மாக்கள் மாக்கடல் வெள்ளம் மடுத்தது - அங்கே மக்கள் திரளாகிய பெருங்கடல் வெள்ளத்தை நோக்கிச் சென்றது.

(வி - ம்.) பூக்கண்ணீர்-பூவாகிய கண்களையுடைய நீரெனினுமாம். விளையாடிய: செய்யியவென்னும் எச்சம்; விளையாட என்க. ஒக்கம் - உயர்ச்சி. உயர்ச்சியையுடைய நீண்ட விசும்பென்க. ஒய்யென - விரைவுக் குறிப்பு. மாக்கண், மாக்கடல்: பண்புத்தொகை. (கசு)

அசுஎ. மின்னு வாட்டடங் கண்ணியர் வெம்முலைத்
துன்னு வாட்டந் தணித்தலிற் றூநிறத்
தன்ன வாட்டத் தணிமலர்ப் பூம்பொழி
லென்ன வாட்டமு மின்றிச்சென் றெய்தினார்.

(இ - ள்.) மின்னு வாள்தடம் கண்ணியர் வெம்முலைத் துன்னு வாட்டம் - ஒலிசெயும் வாளனைய பெருங்கண்ணியரின் வெம்முலைகள் நெருங்குதலால் உண்டான மெய்வருத்தத்தை; தூநிறத்து அன்ன ஆட்டத்து அணிமலர்ப் பூம்பொழில் - தூய நிறமுடைய அன்னங்களின் விளையாட்டினையுடைய அழகிய மலர்ப்பொழில்; தணித்தலின்-போக்குவதனால்; என்ன வாட்டமும் இன்றிச் சென்று எய்தினர் - எத்தகைய சோர்வும் இன்றிச் சென்று அடைந்தனர்.

(வி - ம்.) மின்போலும் இடையை 'மின்' என்றார் எனக்கொண்டு, 'வெம்முலை நெருங்கலின் உண்டான சோர்வை இடைநீக்குதலின் அன்னங்களின் ஆட்டமுடைய பொழில் என்னுமாறு சென்று அப் பொழிலை அடைந்தார்' என்பர் நச்சினார்க்கினியர். (கஎ)

அசுஅ. அள்ளு டைக்குவ ளைக்கய நீடிய
கள்ளு டைக்கழு நீர்ப்புனற் பட்டமும்
புள்ளு டைக்கனி யிற்பொலி சோலையு
முள்ளு டைப்பொலி விற்றொரு பாலெலாம்.

(இ - ள்.) அள்உடைக் குவளைக் கயம்-அள்ளிக் கொளலாந் தன்மையை உடைய நீலமலர் நிறைந்த குளத்தையும்; கள் உடைக் கழுநீர் நீடிய புனல் பட்டமும் - தேன் பொருந்திய கழுநீர் மலர்களையுடைய நீரறாத ஓடையையும்; புள் உடைக் கனியின் பொலி சோலையும் - பறவைகளையுடைய, கனிகளாற் பொலிவுற்ற பொழிலையும்; உள் உடைப் பொலிவிற்று ஒருபால் எலாம் - உள்ளே உடைய பொலிவினையுடையது அப்பொழிலின் ஒருபக்கம் எல்லாம்.

(வி - ம்.) அள்ளுடை என்புழி அள்ளல் என்பதன் கடைக்குறை யாகவும் கொள்ளலாம். 'அள்ளல் - சேறு. குவளைக்கயம் - குவளைமலர்ந்த குளம் புனற்பட்டம் - வற்றாத நீரோடை. பொலிவிற்று - பொலிவினை யுடையது. (கஅ)

அசுகூ. செம்பு றக்கனி வாழையுந் தேன்சொரி
கொம்பு றப்பழுத் திட்டன கோழரை
வம்பு றக்கனி மாத்தொடு வார்சுளைப்
பைம்பு றப்பல விற்றொரு பாலெலாம்.

(இ - ள்.) செம்புறம் கனி வாழையும்-சிவந்த புறமுடைய கனிகளையுடைய வாழை மரங்களையும்; தேன்சொரி கொம்பு உறப் பழுத்திட்டன கோழ்அரை வம்பு உறக்கனி மா - தேனைச் சொரிந்து கொம்புகளிலுற்றே பழுத்தனவாகிய, கொழுவிய அடிமரத்தையுடைய, புதுமை பொருந்திய கனிகளையுடைய மாமரங்களையும்; தொடு வார் சுளைப் பைம்புறப் பலவிற்று ஒருபாலெலாம் - தொடுத்த நீண்ட சுளைகளையுடைய, பசுமை யான மேற்பக்கமுடைய பலாமரங்களையும் உடையது ஒருபக்கம் எல்லாம்.

(வி - ம்.) 'கொம்புறப் பழுத்திட்டன தேன்சொரி' என்னுந் தொடரைப் பலவிற்குக் கூட்டுவர் நச்சினார்க்கினியர்.

கோழரை - வழுவழுப்பான அடிமரம். வம்பு-புதுமை மாத்தொடு- மாமரத்தினோடு. வார்சுளை - நீண்ட சுளை. பைம்புறம் - பசிய மேற்புறம். பலவிற்று - பலாமரத்தினையுடையது. (ககூ)

௭௭௦. கள்ள வானர மூங்கன்னி யூகமுந்
துள்ளு மானொடு வேழத் தொகுதியும்
வெள்ளை யன்னமுந் தோகையும் வேய்ந்தவ
னுள்ளு மாந்தரை யுள்ளம் புகற்றுமே.

(இ - ள்) கள்ள வானரமும் - திருட்டுப் பண்புடைய குரங்கையும்; கன்னி யூகமும் - கன்னித் தன்மையுடைய கருங்குரங்கையும்; துள்ளும் மானொடு வேழத் தொகுதியும் - துள்ளும் மான்களையும், யானைத் திரள்களையும்; வெள்ளை அன்னமும் தோகையும் வேய்ந்து - வெள்ளைநிற அன்னத்தையும் மயிலையும் அணிந்து; அவண் உள்ளும் மாந்தரை - அவ்விடம் தம் துணையை நினைக்கும் மக்களை; உள்ளம் புகற்றும் - நெஞ்சில் விருப்பமூட்டும்.

(வி - ம்.) பிறர் பொருளைக் கவர்ந்துகோடலின் கள்ள வானரம் என்றார். கன்னியூகம் - கன்னிமையுடைய பெண்குரங்கு. தோகை: ஆகுபெயர்; மயில். உள்ளும் மாந்தர் என்றது தங் காதற்றுணைவரை நினைக்கும் மாந்தர் என்பதுபடநின்றது. (௨௦)

௭௭௧. கோக்க ணங்கொதித் தேந்திய வேலென
நோக்க ணங்கனை யார்நுகர் வேய்தலிற்
றூக்க ணங்குறை யுந்தடந் தாமரைப்
பூக்க ணம்பொழிற் பட்டது போன்றதே.

(இ - ள்.) கோக்கணம் கொதித்து ஏந்திய வேல் என - மன்னர் குழாம் சினந்து ஏந்திய வேல்போல; நோக்கு அணங்கு அனையார் நுகர்வு ஏய்தலின் - நோக்குகின்ற நோக்கினையுடைய தெய்வ மகளிர் போன்றவர் தம் கணவரிடம் நுகர்ச்சியால் அவர்களின் உறுப்புக்கள் செவ்விபெறுதலின்; தாக்கு அணங்கு உறையும் தடம் தாமரைப் பூக்கணம் - திருமகள் தங்கும் பெரிய தாமரைப் பூக்களின் தொகுதி; பொழில் பட்டது போன்றது - (நீர் நிலையினின்றும் நீங்கி) ஒரு பொழிலிலே தோன்றினதைப் போன்றது.

(வி - ம்.) நோக்குதலால் அணங்கனையாருமாம். முகம் முதலிய தாமரைக்குவமை.

கோக்கணம் - அரசர் குழாம். வேலென நோக்கும் நோக்கினையுடைய அணங்கு அனையார் என்க. வேல் - கண்ணிற்குவமை. ஏய்தல் - இயைதல். தாக்கணங்கு என்றது - திருமகளை. (௨௧)

௭௭௨. கூறப் பட்டவக் கோய்ம்மலர்க் காவக
மூறித் தேன்றுளித் தோண்மது வார்மண
நாறி நாண்மலர் வெண்மணற் றூய்நிழ
றேறித் தெண்கயம் புக்கது போன்றதே.

(இ - ள்.) கூறப்பட்ட அக் கொய்ம்மலர்க் காவகம் - (இது வரை) கூறப்பட்ட அம் மலர்ப் பொழிலினுள்ளாகிய இடம்; தேன் ஊறித் துளித்து ஒண்மது ஆர் மணம் நாறி - தேன் ஊறித் துளித்து, அவ்வொள்ளிய தேனில் நிறைந்த மணம் எங்கும் கமழ்ந்து; நாள் மலர் வெண்மணல் தாய் - புதிய மலர் களும் வெண்மையான மணலும் பரவி; நிழல் தேறி - நிழல் தெளிந்து; தெண் கயம் புக்கது போன்றது - (இக் குளிர்ச்சி யால்) தெளிந்த குளத்திலே சென்றாற் போன்றது.

(வி - ம்.) கொய்ம்மலர்: வினைத்தொகை. காவகம் ஊறித் துளித்து நாறிமணல்தாய்த் தன்கண் புக்கவர்க்குக் குளிர்ச்சியால் கயம் போன்றது என்க. தேறி - தெளிந்து. தெண்கயம் - தெளிந்த நீரை யுடைய குளம். (உஉ)

அஎரு காவிற் கண்டத் திரைவிளைத் தாயிடை
மேவி விண்ணவர் மங்கையர் போன்றுதம்
பூவை யுங்கிளி யும்மிழற் றப்புகுந்
தாவி யந்துகி லாரமர்ந் தார்களே.

(இ - ள்) ஆவி அம் துகிலார் - பாலாவி போலும் துகிலை யுடைய சுரமஞ்சரி குணமாலையும்; காவில் கண்டத் திரை வளைத்து - அப் பொழிலில், பலநிறக் கூறுபட்ட திரையை வளைத்து; ஆயிடை தம் பூவையும் கிளியும் மிழற்றப் புகுந்து - அங்கே தம்முடைய பூவையும் கிளியும் மழலை மொழியப் புகுந்து; விண்ணவர் மங்கையர் போன்று - வானவர் மகளிர் போல; மேவி அமர்ந்தார்கள் - விருப்பத்துடன் இருந்தனர்.

(வி - ம்.) ஆவியந்துகிலார்: எழுவாய். அவர் குணமாலையும் சுரமஞ்சரியும் என்பது அடுத்த செய்யுளான் விளங்கும். கண்டத்திரை - பலவண்ணங்களாற் கூறுபட்டதிரை (வண்ணத் திரை). பூவை - நாகணை வாய்ப்புள். (உங)

அஎச. பௌவ நீர்ப்பவ ளக்கோடி போல்பவள்
மௌவ லங்குழ லாள்சுர மஞ்சரி
கோவ்வை யங்கனி வாய்க்குண மாலையோ
டெவ்வந் தீர்ந்திருந் தாளிது கூறினாள்.

(இ - ள்.) பௌவ நீர்ப் பவளக்கொடிபோல்பவள் - கடல் நீரிலே தோன்றிய பவளக்கொடி போன்றவளாகிய; மௌவல் அம் குழலாள் சுரமஞ்சரி - முல்லை மலரணிந்த கூந்தலையுடைய சுரமஞ்சரி; கொவ்வை அம் கனிவாய்க் குணமாலையோடு - கொவ்வைக் கனி அனைய வாயுடையாள் குணமாலையோடு; எவ்வம் தீர்ந்து இருந்தாள் இது கூறினாள் - வழிவந்த வருத்தம் தீர்ந்து இப்போது இதனைக் கூறினாள்.

(வி - ம்.) பௌவநீர்ப்பவளக்கொடி - சுரமஞ்சரிக்குவமை. இஃது அவள் குலநலமும் அழகு நலனும் குறித்துவந்த உவமை என்க. மௌவல்-முல்லை. மௌவலங்குழலாள் என்றது அவள் கற்புநலம் கூறிற்று. (உச)

அஎரு. தூமஞ் சூடிய தூத்துகி லேந்தல்குற்
றாமஞ் சூடிய வேற்றடங் கண்ணினா
ணாமஞ் சூடிய நன்னுத னீட்டினாள்
காமஞ் சூடிய கண்ணொளிர் சுண்ணமே.

(இ - ள்.) தூமம் சூடிய தூத்துகில் ஏந்து அல்குல்-அகிற்புகை தாங்கிய தூய ஆடையைத் தாங்கிய அல்குலையும்; தாமம் சூடிய வேல் தடம் கண்ணினாள் - மாலை யணிந்த வேலனைய பெருங் கண்களையும் உடையவள் ஆகிய குணமாலையின்; நாமம் சூடிய நன்னுதல் - பெயரைக் கொண்ட அழகிய நெற்றியை உடைய தோழி; காமம் சூடிய கண் ஒளிர் சுண்ணம் நீட்டினாள் - விருப்பத்தைக் கொண்ட, கண்ணுக்கு ஒளியான சுண்ணப் பொடியைக் காட்டினாள்.

(வி - ம்.) நச்சினார்க்கினியர் இச் செய்யுளினையும் முன் செய்யுளையும் (அஎச-அஎரு) ஒரு தொடராக்கிக் கொண்டுகூட்டிக் கூறும் உரை:

அங்ஙனம் இருந்த காலத்தே குணமாலை பெயரைச் சுமந்த மாலையென்னுஞ் சேடி, எல்லோரும் விரும்புந் தன்மையை மேற்கொண்ட சுண்ணத்தை நீட்டினாள்; அது கண்டு கொடிபோல் வாள் குழலாள் சுரமஞ்சரி, அவள் குணமாலையுடனே இவ் வார்த்தையைக் கூறினாள். ()

அஎசு. சுண்ண மென்பதோர் பேர்கொடு சோர்குழல்
வண்ண மாலை நுசுப்பு வருத்துவா
னெண்ணி வந்தன கூறிவை யோவென
நண்ணி மாலையை நக்கன ளென்பவே.

(இ - ள்.) சோர்குழல் வண்ண மாலை-சோர் குழலையுடைய குணமாலையே!; சுண்ணம் என்பது ஓர் பேர் கொடு - சுண்ணம் என்பதாகிய ஒரு பேரைக் கொண்டு; நுசுப்பு வருத்துவான் எண்ணி வந்தன - (சுமப்போர்) இடையை வருத்த நினைத்து (நின் சுண்ணம்) வந்தனபோலும்!; இவையோ! - (என் சுண்ணமாகிய) இவை யாகுமோ நின் சுண்ணம்?; கூறு என - சொல்லென்று; மாலையை நண்ணி நக்கனள் - குணமாலையை நெருங்கி நகையாடினாள்.

(வி - ம்.) என்ப, ஏ: அசைகள். நச்சினார்க்கினியர், "குழலையும் நுசுப்பையும் உடைய மாலாய்! இவை சுண்ண மென்னும் பெயரை ஏறட்டுக்கொண்டு நின்னை வருத்துவான் கருதி வந்தனவோ என்றணுகி, அவளைத் தான் நக்காள். நக்கு, 'சொல்லின், என்னுடைய சுண்ணங்களைச் சொல்லாய்'' எனச் சொன்னாள்' என்று கொண்டு கூட்டி உரைப்பர். (உகூ)

அஎஎ பைம்பொ னீளுல கன்றியிப் பார்மிசை
யிம்ப ரேன்சுண்ண மேய்ப்ப வுளவெனிற்
செம்பொற் பாவையன் ஞய்செப்பு நீயெனக்
கொம்ப ஞளுங் கொதித்தித கூறினள்.

(இ - ள்.) பைம்பொன் நீள் உலகு அன்றி - பெரிய பசும் பொன்னுலகில் அன்றி; இப் பார்மிசை இம்பர் என் சுண்ணம் ஏய்ப்ப உள எனில் - இவ்வுலகிலே இவ்விடத்தே என் சுண்ணத்தை ஒப்பன உள்ளன என்றால்; செம்பொன் பாவை அன்னாய்! - செம்பொன் பாவை போன்ற சுரமஞ்சரியே!; நீ செப்பு என - நீ கூறுக என்று குணமாலை சொல்ல; கொம்பு அன்னாளும் கொதித்து இது கூறினாள் - மலர்க் கொம்பு போன்ற சுரமஞ்சரியும் சினந்து இதனைக் கூறினாள்.

(வி - ம்.) இம்பர்-இவ்விடத்தே. கொம்பனாள்-பூங்கொம்பு போன்றவளாகிய சுரமஞ்சரி. (உஎ)

அஎஅ. சுண்ணந் தோற்றனந் தீம்புன லாடல
மெண்ணில் கோடிபோன் னீதும்வென் றூற்கென
வண்ண வார்குழ லேழையர் தம்முளே
கண்ணற் றூர்கமழ் சுண்ணத்தி னேன்பவே.

(இ - ள்.) சுண்ணம் தோற்றனம் தீம்புனல் ஆடலம் - சுண்ணப் பொடியாலே தோற்றோம் எனில் நீராடுவேமல்லேம்; வென்றாற்கு எண் இல் கோடி பொன் ஈதும் என - அருகனுக்கு மாற்றற்ற கோடி பொன்னைக் கொடுக்கக் கடவேம் என்று சொல்ல; வண்ணம் வார்குழல் ஏழையர் கமழ் சுண்ணத்தின் - அழகிய நீண்ட கூந்தலையுடைய பேதையர் மணந்தரும் சுண்ணத்தினால்; தம்முளே கண் அற்றார் - தங்களுக்குள்ளே அன்பை விட்டனர்.

(வி - ம்.) சுண்ணம் தோற்றலாவது - ஒருவர் சுண்ணம் ஒருவர் சுண்ணத்திற்குத் தாழ்ந்ததாய் அதனையுடையார் தோல்வியுறுதல். ஆடலம்: தன்மைப் பன்மை எதிர்மறை வினைமுற்று. வென்றான்-ஈண்டு அருகக்கடவுள். கண்ணறுதல் - பகைமை கோடல். (உஅ)

வேறு

அஎசு. மல்லிகை மாலை மணங்கமழ் வார்குழற்
கொல்லியல் வேனெடுங் கண்ணியர் கூடிச்
சொல்லிசை மேம்படு சுண்ண வுறழ்ச்சியுள்
வெல்வது சூதென வேண்டி விடுத்தார்.

(இ - ள்.) மல்லிகை மாலை மணம் கமழ் வார்குழல் கொல் இயல் வேல்நெடுங் கண்ணியர் கூடி - மல்லிகை மாலையும் மணம் வீசும் நீண்ட குழலும் உடைய, கொல்லும் தன்மையுடைய வேலனைய நீண்ட கண்ணியர் இருவரும் கூடி; சொல் இசை மேம்படு சுண்ண உறழ்ச்சியுள் - சொல்லும் புகழிலே உயர்ந்த சுண்ண மாறுபாட்டிலே; சூது வெல்வது என வேண்டி விடுத்தார் - ஐயத்தை ஒழிப்பது என்று விரும்பித் தம் பணிப் பெண்களை அவற்றைக் காட்டி வருமாறு போகவிட்டனர்.

(வி - ம்.) 'சுண்ணத்தினது மாறுபாட்டிலே வெல்லுமது நமக்குச் சொல்லும் புகழ் மேம்படும் வெற்றியென்று அவ் வெற்றியை விரும்பிப் போகவிட்டார்' என்று கொண்டு கூட்டியுரைப்பர் நச்சினார்க்கினியர்.

சூது - ஐயம். கொல் - கொற்றொழிலுமாம். (உகூ)

அஅo. இட்டிடை யாரிரு மங்கைய ரேந்துபொற்
றட்டிடை யந்துகில் மூடிய தன்பினர்
நெட்டிடை நீந்துபு சென்றனர் தாமரை
மொட்டன மென்முலை மொய்குழ லாரே.

(இ - ள்.) தாமரை மொட்டு அன மென்முலை மொய்குழலார் - தாமரை அரும்பனைய மென்முலையுடைய செறிந்த கூந்தலார் ஆகிய கனகபதாகை, மாலை என்போர்; இடு இடையார் இரு மங்கையர் ஏந்து பொன் தட்டிடை - நுண்ணிடையாராகிய இரு பணிப்பெண்கள் ஏந்திய (சுண்ணம் வைத்த) பொன் தட்டின்மேல்; அம்துகில் மூடி - அழகிய துணிகொண்டு மூடி; அதன் பினர் - சுண்ணத்தின் பின்னர்; நெடுஇடை நீந்துபு சென்றனர் - நெடுந்தொலைவாக (மக்கள் திரளை) நீந்திச் சென்றனர்.

(வி - ம்.) கனகபதாகை - சுரமஞ்சரியின் தோழி. மாலை - குணமாலையின் தோழி. இட்டிடையார் - சுரமஞ்சரியும் குணமாலையும் எனவும், இரு மங்கையர் கனகபதாகை, மாலை எனவும், மொய்குழலார் சேடியர் எனவும் நச்சினார்க்கினியர் கூறுவர். (கூo)

வேறு

அஅக. சீர்தங்கு செம்பொற் கொடிமல்லிகை
மாலை சேர்ந்து
வார்தங்கு பைம்பொற் கழன்மைந்தர்கைக்
காட்ட மைந்த
ரேர்தங்கு சுண்ண மிவற்றின்நலம்
வேண்டின் வெம்போர்க்
கார்தங்கு வண்கைக கழறசீவகற்
காணமி னென்றார்.

(இ - ள்.) சீர்தங்கு செம்பொன் கொடி மல்லிகை மாலை சேர்ந்து - சீருடைய கனகபதாகையும் மாலையும் கூடி; வார் தங்கு பைம்பொன் கழல் மைந்தர் கைக்காட்ட - கட்டப்பட்ட பொற்கழலணிந்த மைந்தர்களின் கையிலே அவற்றைக் காட்ட; மைந்தர் - அம் மைந்தர்கள்; ஏர்தங்கு சுண்ணம் - இவை யிரண்டுமே அழகிய சுண்ணங்கள்; இவற்றின் நலம் வேண்டின் - இவற்றின் நன்மையைச் சிறப்புற அறிய விரும்பின்; வெம்போர்க் கார்தஙகு வண்கைக் கழல் - போரில் வல்ல, முகிலனைய கொடை யுறு கையை உடைய, கழலணிந்த; சீவகன் காண்மின் என்றார் - சீவகனைக் கண்டு காட்டுவீராக என்றனர்.

(வி - ம்.) மாலை என்பதற்கேற்ப 'மல்லிகை' அடை கூறினர்.

மைந்தர் - ஈண்டு ஏதிலராகிய சில மைந்தர் என்றவாறு. ஏர்தங்கு சுண்ணம் என்றது இவை இரண்டுமே அழகிய சுண்ணங்களாகவே எமக்குத் தோன்றுகின்றன என்பதுபடநின்றது. இவற்று ஆன்நலம் எனக் கண்ணழித்து இவற்றின் அழகினையன்றி இனிமையின் நன்மையை நீங்கள் அறியவிரும்பின் எனப் பொருள் விரித்திடுக. வெம்போர்க்கை, வண்கை எனத் தனித்தனி கூட்டுக. சீவகற் காண்மின் என்றது சீவகனைக் கண்டு அவனுக்குக் காட்டி வினவுவீராக என்பது படநின்றது. (கக)

அஅஉ. வாண்மின்னு வண்கை வடிநூற்கடற்
கேள்வி மைந்தர்
தாண்மின்னு வீங்கு கழலான்றனைச்
சூழ மற்றப்
பூண்மின்னு மார்பன் பொலிந்தாங்கிருந்
தான்வி சும்பிற்
கோண்மின்னு மீன்சூழ் குளிர்மாமதித்
தோற்ற மொத்தே.

(இ - ள்.) வாள்மின்னு வண்கை வடிநூல் கடல் கேள்வி மைந்தர் - வாள் மின்னுதற்குக் காரணமான வளவிய கையினையும், தெளிந்த கடலனைய நூற்கேள்வியையும் உடைய தோழரும் தம்பியரும்; தாள் மின்னு வீங்கு கழலான் தனைச்சூழ - காலில் மின்னுமாறு கட்டிய கழலானாகிய தன்னைச் சூழ்ந்திருக்க; அப் பூண் மின்னும் மார்பன் - சீவகனாகிய அந்த அணிகலன் ஒளிரும் மார்பன்; விசும்பில் கோள்மின்னும் மீன்சூழ் - வானில், கோண் மீனும் விண்மீனும் சூழ்ந்த; குளிர் மாமதித் தோற்றம் ஒத்து ஆங்கு இருந்தான் - தண்ணிய பெரிய திங்களின் தோற்றம் போல அவ்விடத்திருந்தான்.

(வி - ம்.) 'வீக்கு கழல்' என்பது 'வீங்கு கழல்' என விகாரப் பட்டது. 'கழலான்' நந்தட்டன் எனவும், 'மார்பன்' சீவகன் எனவும்

நச்சினார்க்கினியர் வேறு பிரித்துக் கூறுவர். அவரே, 'கழலானாகிய மார்பன் என்பாரும் உளர்' என்று கூறுவதனால் ஒன்றாகக் கூறுதலே சிறப்புடைத்து.

ஞாயிறு போல்வான் எனினும் கலையைத் தோற்றுவிப்ப இருத்தலின் ஈண்டு மதியை உவமை கூறினர். 'பன்மீன் நடுவண் பால்மதி போல - இன்னகை ஆயமோ டிருந்தோற் குறுகி' (சிறுபாண். உகக-உ0.) என்றார் பிறரும். இராகு கேதுக்களை ஒழிந்த எழு கோள்களும் சூழப்பட்டதொரு மதி இல்பொருளுவமை. தோழர் நால்வரும் தம்பிமார் மூவரும் கோள்மீனுக்குவமை; மின்னும் மீனுக்கு ஒழிந்த தோழருவமை. இனி, ஞாயிறுந் திங்களும் தனக்குவமையாதலின், ஒழிந்த எழு கோளுமாம். (ருஉ)

வேறு

அஅரு. காளை சீவகன் கட்டியங் காரனைத்
தோளை யீர்ந்திட வேதுணி வுற்றநல்
வாளை வவ்விய கண்ணியர் வார்கழற்
றாளை யேத்துபு தங்குறை செப்பினார்.

(இ - ள்.) காளை சீவகன் - காளையாகிய சீவகன்; கட்டியங் காரனைத் தோளை ஈர்ந்திடவே - கட்டியங்காரன் தோளைப் பிளக்கவே; துணிவுற்ற நல்வாளை வவ்விய கண்ணியர் - துணிவு கொண்ட நல்ல வாளின் தன்மையைக்கொண்ட கண்களையுடைய அம் மங்கையர்; வார்கழல் தாளை யேத்துபு தம்குறை செப்பினார் - நீண்ட கழலணிந்த காலை வணங்கித் தம் குறையைக் கூறினர்.

(வி - ம்.) "செய்ந்நன்றியறிந்து கைம்மாறு செய்யக்கருதுதலும் பகைவர் செய்த தீங்கு குறித்து அவர்க்குத் தீங்குசெய்யக் கருதுதலும் அரசநீதி என்பது தோன்ற 'தோளையீர்ந்திடவே துணிவுற்ற வாள்' என்றார். 'ஆதியாய அரும்பகை நாட்டுதல்' (ககஉ0) என்றார் மேலும்" என்பர் நச்சினார்க்கினியர். (ருரு)

அஅச. சுண்ண நல்லன சூழ்ந்தறிந் தெங்களுக்
கண்ணல் கூறடி யேங்குறை யென்றலுங்
கண்ணிற் கண்டிவை நல்ல கருங்குழல்
வண்ண மாலையி னீரெனக் கூறினான்.

(இ - ள்.) அண்ணல்! நல்லன சுண்ணம் சூழ்ந்து அறிந்து - அண்ணலே! நல்லனவாகிய சுண்ணத்தை ஆராய்ந்து பார்த்து; எங்களுக்குக் கூறு - எங்கட்குச் சொல்க; அடியேம் குறை என்றலும் - இதுவே அடியேம் வேண்டுகோள் என்று அம் மங்கையர் கூறினவுடன்; கண்ணின் கண்டு-கண்ணாலே பார்த்து; கருங்குழல் வண்ண மாலையினீர்! - கரிய குழலில் அழகிய மாலையுடையீர்!; இவை நல்ல எனக் கூறினான் - இவை நல்லவை என்று கூறினான்.

(வி - ம்.) 'இவை நல்ல' எனக் குணமாலேயின் சுண்ணத்தைக் கூறினன். அவர்கள், இரண்டையும் நல்ல எனக் கூறுகிருன் என்றெண்ணினர். பலவுங் கூட்டி இடித்தலின் 'இவை' எனச் சுண்ணத்தைக் கூறுகிருர். (ருச)

அஅரு. மற்றிம் மாநகர் மாந்தர்கள் யாவரு
முற்று நாறியுங் கண்டு முணர்ந்திவை
போற்ற சுண்ண மெனப்புகழ்ந் தார்நம்பி
கற்ற தும்மவர் தங்களோ டேகோலோ.

(இ - ள்.) இம் மாநகர் மாந்தர்கள் யாவரும் - இப்பெரு நகரில் உள்ள மக்கள் எல்லோரும்; உற்றும் நாறியும் கண்டும் உணர்ந்து - தொட்டும் மோந்தும் பார்த்தும் ஆராய்ந்து; இவை பொற்ற சுண்ணம் எனப் புகழ்ந்தார் - (வேறுபாடு கூருமல்) இவை நல்ல சுண்ணப் பொடி என்று புகழ்ந்தனர்; நம்பி! கற்றதும் அவர் தங்களொடே கொல்? - நம்பியே! நீ கற்றதும் அவர்களுடனேயோ?

(வி - ம்.) உற்றும், என்றது கையாற்றெட்டுப் பார்த்தும் என்றவாறு. நாறியும் என்றது, மூக்கான் முகந்துபார்த்தும் என்றவாறு. பொற்றசுண்ணம் - பொலிவுடைய பொடி. நம்பி கற்றதும் அவர் தங்களொடே கொலோ என்றது, சீவகனே அம்மகளிர் அசதியாடியபடியாம். நீ நன்கு இதனை ஆராய்ந்துபாராமல் கூறுகின்றனை என்பது கருத்து

அஅசு. ஐய னேயறி யும்மென வந்தனம்
போய்ய தன்றிப் புலமை நுணுக்கிநீ
நொய்திற் றேர்ந்துரை நூற்கட லென்றுதங்
கையி னுற்றொழு தார்கமழ் கோதையார்.

(இ - ள்.) ஐயனே அறியும் என வந்தனம் - சீவகனே அறிவான் என்று பிறர்கூறக் கேட்டு நின்னிடம் வந்தோம்; நூற்கடல்! அது பொய் அன்றிப் புலமை நுணுக்கி - நூற்கடலே! அது பொய் ஆகாமற் புலமையானே நுண்ணிதாக ஆராய்ந்து; நொய்தின் தேர்ந்து நீ உரை என்று - விரைந்து தெரிந்து நீ கூறுக என்று; கமழ் கோதையார் தம் கையினுல் தொழுதார் - மணக்கும் மலர்மாலேயார் தம் கையினுலே தொழுதனர்.

(வி - ம்.) புலமை - நுண்மாணுழைபுலம். நுணுக்குதலாவது, அதனைப் பின்னும் கூரிதாக்கி ஆராய்தல். நொய்தின் - விரைவின். நூற்கடல்: அன்மொழித்தொகை ஈண்டு விளியாகநின்றது. (ருசு)

அஅஎ. நல்ல சுண்ண மிவையிவற் றிற்சிறி
தல்ல சுண்ண மதற்கென்னே யென்றிரேற்
புல்லு கோடைய போற்புடைப் பூஞ்சுண்ண
மல்ல சீதஞ்சேய் காலத்தி னுயவே.

(இ - ள்.) இவை நல்ல சுண்ணம் - இவை தூய சுண்ணம்; இவை இவற்றின் சிறிது அல்ல சுண்ணம் - இவை இவற்றினும் சிறிது நல்லவையல்லாத சுண்ணம்; அதற்கு என்னை என்றிரேல்- அதற்குக் காரணம் என்னென்று வினவினிரேல்; பொற்பு உடைப் பூஞ்சுண்ணம் புல்லு கோடைய-நன்மையுடைய அழகிய இச் சுண்ணம் பொருந்திய கோடையில் இடித்தவை; அல்ல சீதம்செய் காலத்தின் ஆய - மற்றவை குளிர்ச்சியுடைய மாரி காலத்தில் இடித்தவை (என்றான்).

(வி - ம்.) இவை நல்ல சுண்ணம் என்றும், இவை இவற்றிற் சிறிது அல்ல சுண்ணம் எனவும் சுட்டினை ஈரிடத்துங் கொள்க. நல்ல என்பதனை இவற்றிற் சிறிது நல்ல அல்ல என்றும் ஒட்டுக. இவை தீயசுண்ணம் என்னாது நல்ல அல்ல சுண்ணம் என்றது சீவகனுடைய மொழித் திறத்திற்கோர் சான்றும். (௩எ)

அஅஅ. வாரம் பட்டுழித் தீயவு நல்லவாந்
தீரக் காய்ந்துழி நல்லவுந் தீயவா
மோரும் வையத் தியற்கையன் றேவேனு
வீர வேனெடுங் கண்ணி விளம்பினுள்.

(இ - ள்.) வாரம் பட்டுழித் தீயவும் நல்ல ஆம் - ஒருவர் மேல் அன்புற்ற காலத்து அவர்செய்யும் தீங்குகளும் நல்ல ஆகும்; தீரக் காய்ந்துழி நல்லவும் தீய ஆம் - முற்றும் வெறுப் புற்ற காலத்து அவர் செய்யும் நன்மைகளும் தீய ஆகும்; வையத்து இயற்கை அன்றோ? ஓரும் என - உலக இயற்கை யிஃது அன்றோ? ஆராய்ந்து பாரும் என்று; வீரவேல் நெடுங் கண்ணி விளம்பினுள் - வீர வேலனைய நீண்ட கண்ணினளாகிய கனகபதாகை கூறினுள்.

(வி - ம்.) 'ஓரும்' என்னும் முற்றுச் சொல், 'பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை' (தொல். வினை. ௩0) என்ற சூத்திரத்தில் விளக்கின நிகழ்கால உம்மீறன்றி எதிர்காலம் உணர்த்தும் முன்னிலைப் பன்மை யாகலின். இஃது ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி.

இச் செய்யுட் கருத்தோடு "காய்வதன்கண் உற்ற குணந்தோன்றா தாகும், உவப்பதன்கண் குற்றமுந் தோன்றா கெடும்" எனவரும் அறநெறிச்சாரவெண்பா (உ௩) நினைவுகூரற்பாலது. (௩அ)

அஅகூ. உள்ளங் கோள்ள வுணர்த்திய பின்னலால்
வள்ள னீங்கப் பெறுய்வனேத் தேனெனக்
கள்செய் கோதையி னுய்கா போக்கினுற்
றெள்ளி நெஞ்சிற் றெளிகெனச் செப்பினுன்.

(இ - ள்.) வள்ளல்! - வள்ளலே!; உள்ளம் கொள்ள உணர்த்திய பின் அலால் - நீ கூறிய குறைகளை என் நெஞ்சு

கொள்ளத் தெளிவித்தால் அன்றி; நீங்கப் பெருய், வலைத்தேன் என - போகப் பெருய்; நின்னைத் தடுத்தேன் என்று கனக பதாகை மேலும் வற்புறுத்த; கள்செய் கோதையினுய்! - தேன் துளிக்கும் மாலையினுய்!; கரி போக்கினல் - சான்று விடுத்தால்; நெஞ்சில் தெள்ளித் தெளிக எனச் செப்பினுன் - உள்ளத்தே ஆராய்ந்து தெளிக என்று சீவகனும் கூறினுன்.

(வி - ம்.) போக்குதல், 'நூலாற் போக்குதல்' என்ருற்போல உணர்த்தன்மேற்று.

வள்ளல்: விளி. கரி - சான்று. (நகூ)

அகூ0. கண்ணின் மாந்தருங் கண்ணிமை யார்களு
மெண்ணி னின்சொ லிகந்தறி வாரிலை
நண்ணு தீஞ்சொ னவின்றபு ளாதியா
மண்ண னீக்கினஃ தோட்டுவல் யானென்ருள்.

(இ - ள்.) அண்ணல் - பெருந்தகையே!; எண்ணின் - எண்ணிஞல்; கண்ணின் மாந்தரும் கண் இமையார்களும் - கண்ணை உடைய மக்களினும் கண் இமையாதவர்களினும்; நின் சொல் இகந்து அறிவார் இலை - உன் சொல்லைக் கடந்தறிவார் இல்லை; நண்ணு தீசொல் நவின்றபுள் ஆதியா - (ஆதலின் அவர்களை ஒழிய) தம்மினத்தில் ஒன்றை ஒன்று அழைக்குஞ் சொல்லையறிந்து பயின்ற பறவைகள் முதலாக; நீக்கின் அஃது - தெளிந்து இச் சுண்ணத்தை நீக்கின் அதனை; ஒட்டுவல் யான் என்ருள் - பொருந்துவேன் நான் என்ருள்.

கண்ணின் மாந்தர் என்றது இமைக்கும் கண்ணையுடைய மாந்தர் என்பது படநின்றது. இகத்தல் - கடத்தல். (௬0)

அகூக. காவில் வாழ்பவர் நால்வ ருளார்கரி
போவர் பொன்னனை யாயெனக் கைதொழு
தேவ லெம்பெரு மான்சொன்ன வாறென்ருள்
கோவை நித்தில மென்முலைக் கொம்பனுள்.

(இ - ள்.) பொன் அனையாய்! - திருவைப் போன்றவளே!; காவில் வாழ்பவர் நால்வர் உளார் - பொழிலில் வாழ்பவர் நால்வர் (பறவை யினத்தவர்) உளார்; கரி போவர் என - அவர்கள் சான்று வருவர் என்று சொல்ல; கோவை நித்திலம் மென் முலைக் கொம்பு அனுள் - முத்துமாலை அணிந்த மென்மையான முலையை உடைய பூங்கொம்பு போன்றவள்; கைதொழுது எம்பெருமான் சொன்னவாறு ஏவல் என்ருள் - கைகூப்பி எம்மிறையே நீ கூறியவாறே யாம் இத்தன்மை ஆம் என்ருள்.

(வி - ம்.) நால்வர் என்று உயர்திணையாற் கூறுதல், 'ஒருவனைக் கூறும்' (தொல். கிளவி. உ௪) என்னுஞ் சூத்திரத்து ஒன்றெனமுடித்தலாற் கொள்க.

நால்வர் உளர் என்றது, நான்குவகைப் பறவைகள் (வண்டுகள்) உள என்றவாறு. அவை சான்றுஞ் சிறப்புநோக்கி உயர்திணையாக ஓதினன். என்று சீவகன் கூற என வினைமுதல் வருவித்தோதுக. கொம்பனாள்: கனகபதாகை. (௬௧)

அகூஉ. மங்கை நல்லவர் கண்ணு மனமும்போன்
றெங்கு மோடி யிடறுஞ் சுரும்புகாள்
வண்டு காண்மகிழ் தேனினங் காண்மது
வுண்டு தேக்கிடு மொண்மிஞிற் றீட்டங்காள்.

(இ - ள்.) மங்கை நல்லவர் கண்ணும் மனமும் போன்று - மங்கையராகிய நல்லவரின் கண்ணையும் உள்ளத்தையும் போல; எங்கும் ஓடி இடறும் சுரும்புகாள்! - எங்கும் கடிதாக ஓடித் தட்டித் திரியும் சுரும்புகளே!; ஒண் மிஞிற்று ஈட்டங்காள் - ஒள்ளிய மிஞிற்றின் திரள்களே!; மது உண்டு மகிழ் வண்டுகாள்!-தேனுண்டு மகிழும் வண்டுகளே!; மது உண்டு தேக்கிடும் தேனினங்காள் - தேன் உண்டு தேக்கெறியும் தேன் திரள்களே.

(வி - ம்.) இஃது அடுத்த செய்யுளுடன் தொடரும்.

இவ்வாறு கொண்டு கூட்டுவது நச்சினார்க்கினியர் கருத்தே. அவர் கூறும் அதற்குரிய காரணமும் பறவைகட்குச் செவியறிவு உண்டா என்னும் ஆராய்ச்சியும் சீவகன் விலங்கு பறவை முதலியவற்றின் ஒலிக் குறிப்பை அறிவானென்பதும் பின்வருமாறு :

கண்ணும் மனமும் போன்று எங்கும் கடிதாக ஓடித் தட்டித்திரியும் சுரும்புகாள் மிஞிறுகாள் என்க. மிஞிற்றிற் சுரும்பு சிறத்தலின் அதனை முற்கூறினர். கண் சென்றுழிச் செல்கின்ற மனத்தொடே உவமித்தலின் இது நிரனிறை; இவை எல்லா மணத்திலும் செல்லும். மதுவுண்டு மகிழ்கின்ற வண்டுகாள்! மதுவுண்டு தேக்கிடுகின்ற தேன்காள்! என்க. இவை நல்ல மணத்தே செல்லும். (சீவக. ௩0௩௩, ௩0௩௪) சுரும்பு முதலியன கூறும் பாஷையைச் சீவகன் உணர்ந்திருத்தலின், அதனால் அவற்றை அழைத்தான் என்று கொள்க; விக்கிரமாதித்தன் எறும்பின் பாஷையை அறிந்தான் என்று கதை கூறுகின்றமையின். 'தாதுண் தும்பி போது முரன் றாங்கு' (மதுரைக். ௬௫௫) என்றும், 'இரங்கிசை மிஞிறொடு தும்பி தா தூத' (கலி. ௩௩) என்றும் கூறுதலின், தும்பி யது கிளையாம் இந் நான்கும் என்க. 'நண்டுந் தும்பியும் நான்கறிவினவே—பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே' (தொல். மரபு. ௩௧) என்று தும்பிக்குச் செவியின் றெனவே, இவற்றிற்குஞ் செவியின்றாம் ஆதலின், வருத்த மிகுதியான் இவற்றை நோக்கி வாளா கூறியதன்றி வேறன்று. இவை ஈண்டு வந்து கரிபோதலில; கேள்வியில்லன வருதல் என்னை? என்பது கடா. அதற்கு விடை: ஆசிரியர் 'நண்டுந் தும்பியும்' என்று தும்பியைப் பின் வைத்தது, மேல்வருஞ் சூத்திரத்

தின், 'மாவும் மாக்களும் ஐயறி வென்ப' (தொல். மரபு. ௩௨) என்ற ஐயறிவு இதற்கும் ஏறுதற் கென்றுணர்க. இதனை, 'வாராததனால் வந்தது முடித்தல்' என்னுந் தந்திர வுத்தியாற் கொள்க வென்று ஆண்டு உரை கூறிப் போந்தாம். (இதனால் நச்சினார்க்கினியர் இந் நூலுக்கு உரை செய்வதற்கு முன்னரே தொல்காப்பிய வுரை செய்தாரென்பது தெளிவு) அதுவே ஆசிரியர் கருத்தென்பது சான்றோர் உணர்ந்தன்றே, 'பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த - தாதுண்பறவை பேதுறல் அஞ்சி, மணிநா யாத்த மாண்வினைத் தேரன்' (அக நா. ௪) என்று அப் பொருள் தோன்றக் கூறியதென்றுணர்க. இக் கருத்தான் இவரும் செவியுணர்வுண்டென்று கூறினார்.

இங்ஙனம் கூறாது தான்கற்ற விஞ்சையின் ஆணையாற் கேள்வி யுணர்வு பிறப்பித்தான் எனின், அவை கரிபோதலாகாவாம். 'எண்ணின் நின்சொல் இகந்தறிவாரில்லை' (சீவக. அ௯0) என்றலின்.

[இவ்வாறு நச்சினார்க்கினியர் வண்டுகட்குச் செவியுணர் பேற்ற முயல வேண்டுவதென்னை? காவியக் கற்பனை யெனல் சாலாதோ?] (௪௨)

அ௯௩. சோலை மஞ்ஞை சுரமைதன் சுண்ணமு
மாலை யென்னு மடமயில் சுண்ணமுஞ்
சால நல்லன தம்முளு மிக்கன
கோல மாகக்கோண் டுண்மி னெனச்சோன்னான்.

(இ - ள்.) சோலை மஞ்ஞை சுரமைதன் சுண்ணமும் - பொழில் மயில் போல்வாள் சுரமஞ்சரியின் சுண்ணமும்; மாலை என்னும் மடமயில் சுண்ணமும் - குணமாலை யென்னும் இள மயில் போல்வாளின் சுண்ணமும்; சால நல்லன - மிகவும் நல்லனவே; தம்முளும் மிக்கன - அவற்றினுள்ளும் சிறந்த வற்றை; கோலம் ஆகக் கொண்டு உண்மின் எனச் சொன்னான் - நல்லன என்றறிந்து கொண்டு உண்மின் எனச் சொன்னான்.

(வி - ம்.) வெறாதிருத்தற்கு இருவரையும் மயில் என்றான்.

மஞ்ஞைபோல்பவளாகிய சுரமை என்க. சுரமை: சுரமஞ்சரி. மாலை: குணமாலை. கோலம் - அழகு ஈண்டு நன்மைப் பண்பின் மேனின்றது. (௪௩)

அ௯௪. வண்ண வார்சிலை வள்ளல்கோண் டாயிடை
விண்ணிற் றூவியிட் டான்வந்து வீழ்ந்தன
சுண்ண மங்கை சுரமைய மாலைய
வண்ண வண்டோடு தேன்கவர்ந் துண்டவே.

(இ - ள்.) வண்ணம் வார்சிலை வள்ளல் கொண்டு - (இங்ஙனம் கூறிய) அழகிய நீண்ட வில்லேந்திய சீவக வள்ளல் இரண்டையும் இரண்டு கையிலும் கொண்டு; ஆயிடை விண்ணில் தூவியிட்டான் - ஆங்கே வானிலே தூவிவிட்டான்; மங்கை சுரமைய

சுண்ணம் வீழ்ந்தன - மங்கை சுரமஞ்சரியின் சுண்ணம் நிலத்தே வீழ்ந்தன; மாலைய வண்ணம் வண்டொடு தேன் கவர்ந்து உண்ட - குணமாலையின் சுண்ணங்களை அழகிய வண்டும் தேனும் கவர்ந்துண்டன.

(வி - ம்.) இச் செய்யுளாலும் வண்டும் தேனும் சிறந்தன என்பது தெரிகிறது. தூவியிட்டான்: ஒருசொல். சுரும்பும் மிஞிறும் ஒரு பண்பினவாதலின் சேர்ந்து ஒருகையை (சுரமை சுண்ணம்) நோக்கின. (எனினும், உண்ணவில்லை) மற்றைய ஒரு பண்புடையவாகலின், சேர்ந்து மற்றைக் கையை நோக்கின. உண்ணுமல் வந்தவற்றிற்கு வைத்திடாமல் இவை கடிதுண்டன என்பது தோன்றக், 'கவர்ந்து' என்றார். (சுசு)

அசுரு. தத்து நீர்ப்பவ ளத்துறை நித்திலம்
வைத்த போன்முறு வற்றுவர் வாயினீ
ரொத்த தோவென நோக்கிநுங் நங்கைமார்க்
குய்த்து ரைம்மினிவ் வண்ண மெனச்சொன்ஞன்.

(இ - ள்) தத்தும் நீர்ப்பவளத்து உறை நித்திலம் வைத்த போல் - தத்தும் அலைநீரில் தோன்றிய பவளத்தே இருப்பன சில முத்துக்களைக் கொண்டு வந்து வைத்தாற்போலும்; முறுவல் துவர் வாயினீர் - முறுவலுடைய செவ்வாயினீர்!; ஒத்ததோ என நோக்கி-(நான் கூறிய நடுநிலை நுங்கட்குப்) பொருந்தியதோ என்று (இருவர் முகமும்) நோக்கி; நும் நங்கைமார்க்கு இவ் வண்ணம் உய்த்து உரைமின் எனச் சொன்ஞன் - நும் தலைவியர்க்கு யான் தேற்றின முறையை மனம் கொள்ளுமாறு கூறுவீர் என்றனன்.

(வி - ம்.) வேட்கை நிகழாத போதும் மகளிரைச் சிறப்பித்துக் கூறல் இயல்பு என்பது தோன்ற இருவரையும் சிறப்பித்துக் கூறினன். (சுரு)

அசுசு. நீல நன்கு தேளித்து நிறங்கோளீஇக்
கோல மாக வெழுதிய போற்குலாய்
ஞாலம் விற்கும் புருவத்து நங்கைகண்
போலும் வேலவ னேபுகழ்ந் தேனேன்ருள்.

(இ - ள்.) நீலம் நன்கு தெளித்து நிறம் கொளீஇ - நீலமணியை நன்ருகக் கரைத்து நிறமும் கலந்து; கோலம் ஆக எழுதிய போல் குலாய் - அழகுற எழுதியவைபோல் வளைந்து; ஞாலம் விற்கும் புருவத்து-உலகை விற்கும் புருவத்தினையுடைய; நங்கை கண்போலும் வேலவனே! - சுரமஞ்சரியின் கண்களைப் போலத் தப்பாத வேலவனே!; புகழ்ந்தேன் என்ருள் - நீ தேற்றின முறையை யான் உடம்பட்டுப் புகழ்ந்தேன் என்று கனகபதாகை கூறினள்.

(வி - ம்.) இவன் தெளிவித்த முறை இவற்கு வேட்கை நிகழ்வது கருத்தாகக் கூறினுள்; அது, மேல், 'என் மனத்தின் உள்ளன' (சீவக. உ00சு) என்பதனுன் உணர்க. (சுசு)

வேறு

அசுஎ. சோலையஞ் சுரும்பிற் சுண்ணந்
தேற்றிய தோன்ற றன்னை
வேலையம் படுத்த கண்ணுர்
தொழுதனர் விரைந்து போகி
மாலைக்கு வென்றி கூற
'மழையிடிப் புண்டோர் நாக
மாலயத் தழுங்கி யாங்கு
மஞ்சரி யவல முற்ருள்.

(இ - ள்.) சோலை அம் சுரும்பின் சுண்ணம் தேற்றிய தோன்றல் தன்னை - பொழிலின்கண் வாழும் அழகிய வண்டுகளாற் சுண்ணத்தைத் தெளிவித்த சீவகனை; வேல் ஐயம் படுத்த கண்ணுர் தொழுதனர் விரைந்து போகி - வேலோ என்று ஐயப் படுத்தின கண்ணினர் தொழுது விரைந்து சென்று; மாலைக்கு வென்றி கூற - குணமாலைக்கு வெற்றி என்று சொல்ல; மழை இடிப்புண்டு ஓர் நாகம் ஆலயத்து அழுங்கி ஆங்கு - முகிலிடி புண்டு ஒரு பாம்பு தானுறையும் இடத்தே வருந்தினுற்போல; மஞ்சரி அவலம் உற்ருள் - சுரமஞ்சரி வருத்தமடைந்தாள்.

(வி - ம்.) தோன்றல்-சீவகன். தொழுதனர் - முற்றெச்சம். மாலை: குணமாலை. ஆலயம் - உறையுள். மஞ்சரி: சுரமஞ்சரி. (சுஎ)

வேறு

அசுஅ. திங்க ளங்கதிர் செற்றுழக் கப்பட்ட
பங்க யப்படு வொத்துளை பாவாய்
நங்கை யென்னெடு ரையாய்நனி யோல்லே
யிங்க ணேன்றடி வீழ்ந்திரந் திட்டாள்.

(இ - ள்.) திங்கள் அம் கதிர் செற்று உழக்கப்பட்ட - திங்களின் அழகிய கதிர் தாக்கிக் கலக்கமுற்ற; பங்கயப்படு ஒத்துஉளை பாவாய்! நங்கை! - தாமரை மடுவைப் போல வருந்தும் பாவையே! நங்கையே!; இங்கண் என்னெடு நனி ஒல்லை உரையாய் - இங்கு என்னெடு இனிமையாக முன்புபோல விரைந்து உரையாடுவாய்! என்று அடி வீழ்ந்து இரந்திட்டாள்-என்று அவளடியிலே விழுந்து வேண்டினுள் குணமாலை.

(வி - ம்.) ஒத்துளை - ஒத்தாய் என்றுமாம்.

இயற்கையிலேயே தண்மையுடைய திங்களின் கதிர் தீங்கிலதாகவும் அக்கதிர் கண்டாற்ருது வருந்துதல் தாமரைக்கியல்பு. நின் வருத்தத் திற்குக் காரணம் என் வெற்றியன்று, நீ காரணமின்றியே கலங்குகின்றனை என்பாள், இங்ஙனம் உவமை தேர்ந்து கூறினுள் என்க. பங்கயப்படு ஒத்துளை பாவாய் என்ருரேனும் படுவிற்பங்கயம் ஒத்து என்றல் கருத் தாகக் கொள்க; என்னை? திங்கட் கதிர்க்கு உளைவது தாமரையே யல்லது படுவன்மையான் என்க. படு - மடு. (சஅ)

அசுகூ. மாற்ற மோன்றுரை யாண்மழை வள்ளலென்
னேற்ற சுண்ணத்தை யேற்பில வென்றசொற்
ருேற்று வந்தேன் சிலம்படி கைதொழ
நோற்ப னோற்றனை நீயென வேகினுள்.

(இ - ள்.) மாற்றம் ஒன்று உரையாள் - சுரமஞ்சரி விடை ஏதும் கூறிலளாய்; மழை வள்ளல் - முகிலனைய கொடையாளி யான சீவகன்; ஏற்ற என் சுண்ணத்தை - தகுதியான என் னுடைய சுண்ணத்தை; ஏற்புஇல என்ற சொல் - (நின்மேல் விருப்பினுல்) தகுதியில்லாதன என்ற சொல் உட்பட; தோற்று வந்து என் சிலம்பு அடி கைதொழ - தோற்றுச் சொல்லி வந்து என் சிலம்பு புனைந்த அடிகளைக் கையாலே தொழுதற்கு; நோற்பல் - நோற்பேன்; நீ நோற்றனை என - நீ (முன்னரே) நோற்றனை என்ற குறிப்புடன் குணமாலையை நோக்கியவளாய்; ஏகினுள் - வறிதே சென்ருள்.

(வி-ம்.) இஃது உட்கோள். 'பெருமையும் உரனும் ஆடூஉ மேன' (தொல். களவு. எ) என்பதனுல், தன் வேட்கை மறைத்தான். "தீண்டி லேன் ஆயின் உய்யேன் - சீறடி பரவ வந்தேன் அருள்எனத் தொழுது சேர்ந்து" (சீவக. உ0எஉ) என மேற்கூறுதலின், ஈண்டுச் சொற்ருேற்று அடிதொழ என்று கருதினுள். இக் கருத்து அங்ஙனம் முடிக்கின்ற ஊழால் இவட்கு நிகழ்ந்தது. (சகூ)

கூ00. கன்னி மாநகர்க் கன்னியர் சூழ்தரக்
கன்னி மாட மடையக் கடிமலர்க்
கன்னி நீலக்கட் கன்னிநற் ருய்க்கவள்
கன்னிக் குற்றது கன்னியர் கூறினுர்.

(இ - ள்.) கன்னி நீலக் கடிமலர்க் கண்கன்னி - புதிய நீலமாகிய, மணமுற்ற மலர்போலுங் கண்களையுடைய சுர மஞ்சரி; கன்னியர் சூழ்தரக் கன்னிமாநகர்க் கன்னிமாடம் அடைய - கன்னிப் பெண்கள் சூழ்ந்துவர அழிவற்ற பெரிய நகரிற் கன்னிமாடத்தைச் சேர்ந்தாளாக; நற்ருய்க்கு அவள் கன்னிக்கு உற்றது - அவள் நற்ருயான சுமதி காரணங் கேட்ட

பின் அவள் மகளான கன்னிப் பருவமுடைய சுரமஞ்சரிக்கு நேர்ந்ததை ; கன்னியர் கூறினர் - பெண்கள் கூறினர்கள்.

(வி - ம்.) கன்னி மாநகர் - அழிவில்லாத பெரிய நகரம். கன்னி நீலக்கடிமலர்க்கண் கன்னி கன்னியர் சூழ்தரக் கன்னி மாநகர்க் கன்னி மாடம் அடைய என மாறுக. கன்னி நீலம் - புதிய நீலம். கன்னியர் நற்றாய்க்குக் கன்னிக்கு உற்றது கூறினர் என மாறுக. கன்னியர் - அவள் தோழியர். கன்னிக்கு என்றது சுரமஞ்சரிக்கு என்னும் பொருட்டாய்நின்றது. (ருo)

கூoக. கண்கள் கோண்ட கலப்பின வாயினும்
பேண்கள் கோண்ட விடாபிற சேற்றமேன்
றேண்க ணளவ டாயவ டந்தைக்குப்
பண்கோ டேமோழி யாற்பயக் கூறினள்.

(இ - ள்.) கண்கள் கொண்ட கலப்பின ஆயினும்-கண்கள் ஒன்றன் குறிப்பினை ஒன்று தப்பாமல் கொண்ட கலப்பின ஆனாலும்; பெண்கள் கொண்ட பிற செற்றம் விடா என்று-பெண்கள் தம் மனத்திற் கொண்ட தனிப்பட்ட செற்றங்களை விடமாட்டார் என்று (மனத்திற் கொண்டு) ; ஒண்கணாள் அவள் தாய் அவள் தந்தைக்கு - ஒளியுடைய கண்ணாளாகிய சுரமஞ்சரியின் நற்றாய், தந்தையாகிய குபேரதத்தனுக்கு ; பண்கொள் தேன்மொழியால் பயக்கூறினாள் - பண்ணனைய இனிய மொழியால் மெல்ல உரைத்தாள்.

(வி - ம்.) கூறியவை அடுத்த இரண்டு செய்யுளிலும் வரும்.

பெண்கள் என்றது பெண்ணினங்கள் என்னும் பொருட்டு ஆதலின் அஃறிணை முடிபேற்றது. "பெண்கள் சாதிப்பன்மை" என்பர் நச்சினார்க் கினியர். ஒண்கணாளவள் ஒண்கணாளாகிய அச்சுரமஞ்சரியின். தாய்பெயர்- சுமதி, தந்தை பெயர் - குபேரதத்தன் என்பவற்றை. மேல்வரும் (உoஎரு- எசு-ஆம்) செய்யுள்களான் உணர்க. (ருக)

கூoஉ. விண்ணிற் றிங்கள் விலக்குதன் மேயின
ரேண்ண நம்மக ளேண்ணமற் றியாதேனிற்
கண்ணி னாடவர்க் காணினுங் கேட்பினு
முண்ண லேனினி யேன்றுரை யாடினாள்.

(இ - ள்.) நம்மகள் எண்ணம் - நம் மகளின் நினைவு; விண்ணில் திங்கள் விலக்குதல் மேயினர் எண்ணம் - வானில் திரியும் திங்களை நீக்க விரும்பினோர் எண்ணமாயிருந்தது; யாது எனின் - அந்த எண்ணம் யாது என்றால்; கண்ணின் ஆடவர்க் காணினும் கேட்பினும் - கண்ணாலே ஆடவரைக் கண்டாலும் ஆடவர் என்ற சொல்லைக் காதினாலே கேட்டாலும்; இனி

உண்ணலேன் என்று உரையாடினாள் - இனி உண்ணமாட்டேன் என்று கூறினாள்.

(வி - ம்.) மற்று : அசை.

நம்மகள் எண்ணம் விண்ணின் திங்கள் விலக்குதல் மேயினார் எண்ணம் போன்று முற்றுப் பெறாததோர் எண்ணம் என்றவாறு.

கண்ணின் ஆடவர் என்றதற்கேற்பக் காதின் ஆடவர் சொல்லைக் கேட்பினும் என்றும் வருவித்துக் கூறுக. (௯௨)

௬0௩. இன்று நீர்விளை யாட்டினு ளேந்திழை
தோன்று சுண்ணத்திற் றோன்றிய வேறுபா
டின்றெ னாவிக்கோர் கூற்ற மெனநையா
நின்று நீலக்கண் ணித்திலஞ் சிந்தினாள்.

(இ - ள்.) இன்று நீர் விளையாட்டினுள் - இன்று நடந்த நீர்விளையாட்டிலே; ஏந்திழை - சுரமஞ்சரிக்கு; சுண்ணத்தில் தோன்றிய தோன்று வேறுபாடு - சுண்ணங் காரணமாக உண்டாகிய ஊழாலுண்டான வேற்றுமை; இன்று என் ஆவிக்கு ஓர் கூற்றம் - இப்போது என் உயிருக்கோர் காலனாயிற்று; என நையா நின்று - என்று கூறி வருந்தி நின்று; நீலக்கண் நித்திலம் சிந்தினாள் - நீலமலரனைய கண்களாலே முத்தனைய நீரைச் சிதறினாள்.

(வி - ம்.) ஏந்திழை: சுரமஞ்சரி. தோன்று - ஊழ்வினை. தோன்று வேறுபாடு எனக்கூட்டி ஊழினால் வந்த வேறுபாடு என்க. ஆவி - உயிர். நையா : செய்யாவென்னெச்சம். நீலம் - நீலமலர் : ஆகுபெயர். நித்திலம்-கண்ணீர் : உவம ஆகுபெயர். (௯௩)

வேறு

௬0௪. பட்டதேன் னங்கைக் கேன்னப்
பாசிழைப் பசும்பொ னல்குன்
மட்டவிழ் கோதை சுண்ண
மாலையோ டிகலித் தோற்றாள்
கட்டவிழ் கண்ணி நம்பி
சீவகன் றிறத்திற் காய்ந்தா
ளட்டுந்தே னலங்கன் மார்ப
வதுபட்ட தறிமோ வென்றாள்.

(இ - ள்.) என் நங்கைக்குப் பட்டது என் என்ன - (அது கேட்ட குபேரதத்தன்) என் மகளுக்கு நேர்ந்தது யாது என்று வினவ; (நற்றாய்); தேன் அட்டும் அலங்கல் மார்ப! - தேன்

சிந்தும் மாலை மார்பனே ; பாசிழைப் பரவை அல்குல் மட்டு அவிழ் கோதை - புத்தணி யணிந்த பரந்த அல்குலையும் தேன் விரியும் மாலையையும் உடைய சுரமஞ்சரி; மாலையோடு இகலிச் சுண்ணம் தோற்றாள் - குணமாலையுடன் மாறுபட்டுச் சுண்ணத் தாலே தோற்றாள்; கட்டு அவிழ் கண்ணி நம்பி சீவகன் திறத்திற் காய்ந்தாள் - முறுக்குடைந்த மலர்க் கண்ணி புனைந்த நம்பி யாகிய சீவகனாலே ஆடவரை வெறுத்தாள் ; அது பட்டது அறி என்றாள் - அதுதான் நிகழ்ந்தது; அறிவாயாக என்று சுமதி கூறினாள்.

(வி - ம்.) அறிமோ: மோ: முன்னிலை அசை.

மாலை : குணமாலை. இகலிச் சுண்ணந்தோற்றாள் என்க. காய்தல் - வெறுத்தல். (ருச)

சு௦௫. பள்ளிகோள் களிறு போலப்
பரிவுவிட் டுயிர்த்தென் பாவை
யுள்ளிய பொருண்மற் றஃதே
லோபெரி துவப்பக் கேட்டேன்
வள்ளிதழ்க் கோதை மற்று
நகரொடுங் கடியு மேனும்
வெள்ளநீ ணிதியி னின்னே
வேண்டிய விளைப்ப லென்றான்.

(இ - ள்.) பள்ளிகொள் களிறுபோல - துயில் கொள்ளும் யானைபோல ; பரிவுவிட்டு உயிர்த்து - (குபேரதத்தன்) வருத்தந் தோன்ற நெடுமூச் செறிந்து ; என் பாவை உள்ளிய பொருள் மற்று அஃதேல் - என் மகள் நினைத்த பொருள் வேறொன்று அன்றி அத்தன்மை ஆயின்; ஓ பெரிது உவப்பக் கேட்டேன் - ஓ! மிகவும் மகிழ்வாகக் கேட்டேன் ; வள்இதழ்க் கோதை - வளவிய மலர்க்கோதையாள்; மற்று நகரொடும் கடியுமேனும் - (இத் தெருவிலன்றி) நகர்முழுதும் உட்பட ஆடவரை நீக்க விரும்பினா ளெனினும்; வெள்ளநீர் நிதியின் - வெள்ளமென்னும் எண் கொண்ட செல்வத்தினால்; வேண்டிய இன்னே விளைப்பல் என்றான் - விரும்பியவற்றை இப்போதே முடிப்பேன் என்றான்.

(வி - ம்) மற்று: இரண்டும் வினைமாற்று. ஓ: மகிழ்ச்சிக் குறிப்பு.

பள்ளிகொள்யானை பெருமூச்செறிதல் இயல்பு. இதனை - "பள்ளி யானையின் வெய்ய உயிரினை" எனவும் (நற்றிணை. உ௫-௨.), "பள்ளி யானையின் உயிர்த்து" எனவும் (குறுந் - க௬உ.) பிறசான்றோர் கூறுமாற் றானும் உணர்க. ஓ பெரிதென்புழி ஓகாரம் வியப்பின்கண் வந்தது. நகரொடும் என்புழி உம்மை சிறப்பு. 'எல்லாம் பொருளில் பிறந்துவிடும்' என்பதுபற்றி 'நிதியின் இன்னே விளைப்பல்' என்றான். (ருரு)

௬௦௬. இன்னதோர் காலத் தின்னா
ளொருமக ளின்ன தோன்றிற்
கின்னதோ ரிடத்தி னெல்லை
யாட்கடிந் தொழுகி னாள்போ
லின்னதோர் நகரி லென்றாங்
கென்பெயர் நிற்க வேண்டு
மின்னதோ ராரந் தம்மோ
வென்றுகொண் டேகி னானே.

(இ - ள்.) இன்னது ஓர் காலத்து - இத்தன்மைத்தான ஒரு காலத்தே; இன்னாள் ஒரு மகள் - இன்ன வணிகனுடைய ஒப்பற்ற மகள்; இன்னது ஒன்றிற்கு - இன்னதொரு செயலுக்கு; இன்னது ஓர் இடத்தின் எல்லை - இத் தெருவிடத்தின் எல்லையிலே; ஆள்கடிந்து ஒழுகினாள் - ஆடவரை வெறுத்து வாழ்ந்தாள்; இன்னது ஓர் நகரின் என்று - இத் தன்மைத் தான நகரிலே என்று; என் பெயர் நிற்க வேண்டும் - என் புகழ் நிலைபெற வேண்டும். இன்னது ஓர் ஆரம் தம்மோ - விலையில்லாத இந்த ஆரத்தைத் தருவாயாக; என்று கொண்டு ஏகினான் - என்றுரைத்து, அதனைக் கையிற்கொண்டு சென்றான்.

(வி - ம்.) போல், ஆங்கு: உரையசைகள். ஆங்கு - அரசனிடத்தே என்று பொருளுரைப்பர் நச்சினார்க்கினியர். தம்மோ - தருவாயாக. 'கல்லெயில் உழந்த செல்வர்த் தம்மின்' (மதுரைக். எ௩௧) என்றார் பிறரும்.

செயற்கரிய செயலாகலின் இதனால் புகழ் உண்டாதல் ஒருதலை என்பான் "என் பெயர் நிற்கவேண்டும்" என்றான். (௫௬)

௬௦௭. வையக மூன்றும் விற்கு மாமணி யார மேந்திச்
செய்கழன் மன்னற் குய்த்துத் தன்குறை செப்ப லோடு
மையென மன்ன னேவ வாள்வழக் கற்ற தென்ப
கைபுனை பாவை யெல்லாங் கதிர்முலை யாக்கி னானே.

(இ - ள்.) வையகம் மூன்றும் விற்கும் மாமணி ஆரம் ஏந்தி - மூவுலகையும் விலைகொள்ளும் பெரிய மணிமாலை ஒன்றை ஏந்திச் சென்று; செய்கழல் மன்னற்கு உய்த்து - கழல் அணிந்த வேந்தனுக்குக் கையுறையாக நல்கி; தன்குறை செப்பலோடும் - தன் வேண்டுகோளை விளம்பினவுடன்; ஐ என மன்னன் ஏவ - அழகியதே என்று வேந்தன் அவ்வாறு செய்யப் பணிக்க; ஆள் வழக்கு அற்றது - தெருவிலே ஆடவர் வழங்குதல் நீங்கியது; கைபுனை பாவை எல்லாம் - அப்போது அம் மாடத்திலே

(கையாற்) செய்த ஆண் பாவைகளை எல்லாம்; கதிர்முலை ஆக்கினான் - ஒளிரும் பெண்பாவை ஆக்கினான்.

(வி - ம்.) வையகம் என்றது ஈண்டு உலகம் என்னும் பொருட்டு; (வையகம் என்பது சிறப்பாக மண்ணுலகம் ஒன்றனையே குறிப்பதாகும்.) மாமணி - மாணிக்கமணி. ஐயென்றது உடன்பாட்டினைக் குறிப்பான் உணர்த்தியது. கதிர்முலை: அன்மொழித்தொகை. கதிர்முலை ஆக்கினான் என்ற குறிப்பான் ஆண்பாவையை என வருவித்தோதுக. (௫எ)

வேறு

௬0அ. சென்று காலங் குறுகினுஞ் சீவகன்
பொன்றுஞ் சாகம் பொருந்திற் பொருந்துக
வன்றி யென்னிறை யாரழிப் பாரெனா
வொன்று சிந்தையளாகி யொடுங்கினாள்.

(இ - ள்.) காலம் சென்று குறுகினும் - வாழ்நாள் தன் எல்லையை அடைந்து குறுகியதானாலும்; சீவகன் பொன்துஞ்சு ஆகம் பொருந்தின் பொருந்துக - சீவகனுடைய திருமகள் துயிலும் மார்பைத் தழுவுறின் கூடுவதாக; அன்றி என்நிறை யார் அழிப்பார்? - அல்லது என் நிறையை அழிப்பார் ஒருவரும் இல்லை; எனா ஒன்று சிந்தையள் ஆகி ஒடுங்கினாள் - என்று ஒன்றிய நினைவினளாகி ஒடுங்கினாள்.

(வி - ம்.) காலம் ஈண்டு வாழ்நாள் மேனின்றது. யாரழிப்பார் என்னும் வினா அதன் எதிர்மறைப் பொருளை வற்புறுத்திநின்றது. (௫அ)

௬0௬. இன்பக் காரண மாம்விளை யாட்டினுட்
டுன்பக் காரண மாய்த்துறப் பித்திடு
மென்ப தேநினைந் தீர்மலர் மாலைதன்
னன்பி னாலவ லித்தழு திட்டாள்.

(இ - ள்.) இன்பக் காரணம் ஆம் விளையாட்டினுள்-இன்பத்திற்குக் காரணமாகிய விளையாட்டின்கண்; துன்பக் காரணமாய்- அவ் விளையாட்டே துன்பத்திற்குக் காரணமாய்; துறப்பித்திடும் என்பதே நினைந்து - இன்பத்தை நீக்கிடும் என்பதை எண்ணி; ஈர் மலர்மாலை - குளிர்ந்த மலர்போன்ற குணமாலை; தன் அன்பினால் அவலித்து அழுதிட்டாள் - தன் அன்பால் எண்ணித் துன்புற்று அழுதனள்.

(வி - ம்.) 'உள்' என்பதற்கு இருவர் மனமும் ஒன்றாய் நடக்கும் 'கடுநட்பு' என்று பொருளுரைப்பர் நச்சினார்க்கினியர்.

அவர், 'கடுநட்புப் பகை காட்டும்' என்னும் பழமொழியை இதற்குச் சான்றாக்கிவிட்டு, மேலும், "இனி, விளையாட்டினுள் அவ் விளையாட்டுத்

தானே துன்பக் காரணமாய் இன்பத்தைத் துறப்பிக்கும் என்ற பழமொழியுமாம். அது, 'விளையாட்டே சலமாம்' என்னும் பழமொழி" என்றுங் கூறுவர்.

இன்பக் காரணமே துன்பத்திற்கும் காரணமாதலை இக் காவியத்தினும் சிலப்பதிகாரத்தினும் இராமாயணத்தினும் காணலாம். என்? காவியங்களனைத்தினும் காணலாம் போலும். அவளது குணநலந் தோன்ற 'சீர்மலர்மாலை' என்றார். இச்செய்யுளான் குணமாலை என்னும் அவள் பெயர்க்கேற்ப அவள் குணநலந் தோன்றுதலுணர்க. (௯௬)

௬௯௦. தண்ணந் தீம்புன லாடிய தண்மலர்
வண்ண வார்தளிர்ப் பிண்டியி னனடிக்
கெண்ணி யாயிர மேந்துபொற் றமரை
வண்ண மாமல ரேற்றி வணங்கினள்.

(இ - ள்.) தண் அம் தீபுனல் ஆடிய - குளிர்ந்த இனிய நீர் விளையாட்டை வேண்டி; தண்மலர் வண்ணம் வார் தளிர்ப்பிண்டியினன் அடிக்கு - குளிர்ந்த மலருடன் அழகிய நீண்ட தளிரை யுடைய அசோகின் நீழலில் அமர்ந்த அருகனடிக்கென; எண்ணி - நினைந்து; ஆயிரம் ஏந்து பொன்தாமரை வண்ண மாமலர் - ஆயிரம் பொற்றாமரை மலர்களையும் பிற அழகிய மலர்களையும்; ஏற்றி வணங்கினள் - இட்டுத் தொழுதாள்.

(வி - ம்.) எண்ணி - இந் நட்பினைப் பிரித்த தீவினை நீங்கும் வழி இதுவென நினைந்து. புனலாடப் போகிறவள் இப் பிரிவுக்குக் கழுவாய் கண்டாள். (௬௦)

௬௯௧. ஆசை மாக்களோ டந்தணர் கொள்கென
மாசை மாக்கடன் மன்னவ னாடலின்
மீசை நீள்விசும் பிற்றலைச் சென்றதோ
ரோசை யாற்சன மொண்ணிதி யுண்டதே.

(இ - ள்.) ஆசை மாக்களொடு அந்தணர் கொள்க என - விரும்பிய மக்களுடன் அந்தணரும் கொள்க என்று; மாசை மாக்கடல் மன்னவன் ஆடலின் - பெரிய பொற்கடலை அரசன் கையாண்டதால்; மீசை நீள் விசும்பின் தலைச்சென்றது ஓர் ஓசையால் - மேலே உள்ள பெரிய வானிலே சென்றதான ஓர் ஒலியுடன்; சனம் ஒள்நிதி உண்டது - மக்கள் திரள் சிறந்த நிதியை வாரிச் சென்றது.

(வி - ம்.) 'ஆடுதல்' என்பதற்குப் 'பிறத்தல்' என்று பொருள் கொண்டும் 'கடல்' என்னாது, 'கடன்' என்றும் கொண்டு 'பெரியதொரு கடனைப் பொன்னிலே பிறத்தலின்' என்றும் பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். பொன்னிலே பிறத்தலாவது பொன்னாலே பசு ஒன்றைச் செய்து அதன் வாயாற் புகுந்து பின்புறத்தே வெளிவருதல். பிறகு

அப் பொற்பசுவைத் தானஞ்செய்திடுவர். இஃது அரசர்க்குரிய தானங்களில் ஒன்றென்பர்.

'உண்டற்குரிய அல்லாப் பொருளை—உண்டன போலக் கூறலும் மரபே' (தொல். பொருளியல்-கக) என்றதனல் 'உண்டது' என்றார்; 'குணனுணப் பட்டோர்' (கலி. உ௩) என்றாற்போல. மீசை - மிசை: முதனீண்டது. மீமிசை என்பதன்கண் மி: கெட்டது எனினுமாம். (௬க)

௬௪உ. மகர வெல்கொடி மைந்தனை வாட்டிய
சிகரச் செவ்வரைத் தீநிறப் பொன்னெயி
னிகரி னேமிதன் னீணகர்க் காகென
நகரம் நாலிரு கோடி நயந்ததே.

(இ - ள்.) மகர வெல்கொடி மைந்தனை வாட்டிய - மீனக் கொடியை உடைய காமனை வென்ற; சிகரச் செவ்வரைத் தீநிறப் பொன் எயில் - உச்சியையுடைய செம்மலை போலும் வடிவத்தையும் நெருப்பின் வண்ணத்தையும் உடைய பொன்மதிலையுடைய; நிகரில் நேமிதன் நீள்நகர்க்கு - ஒப்பற்ற, நேமிநாதரின் பெரிய கோயிலுக்கு; ஆகஎன - ஆகுக என்று; நால் இருகோடி நகரம் நயந்தது - எட்டுக்கோடி பொன்னை நகரம் நீராடுதானமாக நல்கியது.

(வி - ம்.) காமனை வாட்டிய நேமிநாதர்; காமனை வாட்டிய பொன் எயிலுமாம். 'அளித்தது' என்றும் பாடம்.

மகரவெல் கொடிமைந்தன் என்றது காமனை. நேமி - நேமிசுவாமி என்னும் உஉ-ஆம் தீர்த்தங்கரர். நகரம், கோடி என்பன ஆகுபெயர்கள். (௬உ)

வேறு

௬௪௩. உவாமுத லிரவலர்க் குடைமை யுய்த்தவர்
கவான்முதற் கூப்பிய கனக மாழையாற்
றவாவினை யடைகரை தயங்கு சிந்தைநீ
ரவாவெனு முடைகட லடைக்கப் பட்டதே.

(இ - ள்.) இரவலர்க்கு உவாமுதல் உடைமை உய்த்தவர் - இரவலர்க்குப் பொன்னையே யன்றி யானை முதலான உடைமைகளை (முற்படக்) கொடுத்து அவர்கள்; கவான் முதல் கூப்பிய கனக மாழையால் - (பின்னும்) அவ்விரவலரின் காலடியிலே குவித்த பொற்கட்டியால்; தவாவினை தயங்கு சிந்தைநீர் - இரவலரின் கெடாத தீவினையாலுண்டாகிய உள்ள வருத்தம் என்னும் நீரினல்; அடைகரை உடை அவாஎனும் கடல் - அடைகரை உடைந்த ஆசையென்னும் கடல்; அடைக்கப்பட்டது - அடைபட்டது.

(வி - ம்) உவா - யானை. கவான் - துடை; ஈண்டு கால் என்னும் பொருட்டு. கவான் முதல் என்பதற்கு மடியின்மேல் எனினுமாம். கனக மாழை -பொற்கட்டி சிந்தை - ஈண்டுத் துன்பம். உடைகடல்: வினைத் தொகை. (சு௩)

வேறு

சுகச. சீரர வச்சிலம் பேந்துமென் சீறடி
யாரர வக்கழ லாடவ ரோடும்
போரர வக்களம் போன்றுபோன் னூர்புன
னீரர வம்விளைத் தார்நிக ரில்லார்.

(இ - ள்.) பொன்னூர் புனல் - பொன் நிறைந்த யாறு; போர் அரவக்களம் போன்று - போர் செய்யும் ஆரவாரமுடைய களம்போலத் தோன்ற; நிகர் இல்லார் - ஒப்பில்லாராகிய; சீர் அரவச் சிலம்பு ஏந்தும் மென்சிறு அடியார் - ஒலிதரும் சிலம் பணிந்த மென்மையான சிற்றடி மங்கையர்; அரவக் கழல் ஆடவரோடும் - ஒலிபெறுங் கழலணிந்த ஆடவரோடும்; நீர் அரவம் விளைத்தார் - நீராரவாரத்தை உண்டாக்கினர்.

(வி - ம்.) போன்று - போல: எச்சத்திரிபு. உவமவுருபு வினை யெச்சமும் பெயரெச்சமுமாய் நிற்கும். புனல் - யாறு: ஆகுபெயர். (சுச)

சுகரு. கார்விளை யாடிய மின்னனை யார்கதிர்
வார்விளை யாடிய மென்முலை மைந்தர்
தார்விளை யாட்டொடு தங்குபு போங்கிய
நீர்விளை யாட்டணி நின்றதை யன்றே.

(இ - ள்.) கார் விளையாடிய மின் அனையார் - காரிலே நடங்கிய மின்கொடி போன்ற மகளிரின்; கதிர் வார் விளையாடிய மென்முலை - கதிர்த்த வார் பயின்ற மென்முலைகள்; மைந்தர் தார்விளையாட்டொடு தங்குபு - மைந்தரின் தாரிலே விளையாடுதலிலே நிலைபெற்று; பொங்கிய நீர் விளையாட்டு அணி நின்றது-மிக்க நீர் விளையாட்டின் அழகு இடைவிடாது நிகழ்ந்தது.

(வி - ம்.) நின்றதை: ஐ: சாரியை. அன்று, ஏ: அசைகள். (சுரு)

வேறு

சுகசு. விடாக்களி வண்டுண விரிந்த கோதையர்
படாக்களி யிளமுலை பாய விண்டதார்க்
கடாக்களிற் றெறுழ்வலிக் காளை சீவக
னடாக்களி யவர்தொழில் காண வேகினன்.

(இ - ள்.) விடாக் களிவண்டு உண - விடாமல், களிப்பை யுடைய வண்டுகள் உண்ணுமாறு; விரிந்த கோதையர் படாக் களி இளமுலை பாய - மலர்ந்த மலர்மாலையரின் சாயாத களிப்பை யூட்டும் இளமுலைகள் பாய்தலால்; விண்ட தார்க்கடாக் களிற்று எறுழ்வலிக் காளை - அலர்ந்த தாரணிந்த, மதயானை போன்ற மிக்க வலிபடைத்த காளையாகிய; சீவகன் - சீவகன்; அடாக் களியவர் தொழில் காண ஏகினான் - ஒழுக்கக் கேடுபண்ணுத களிப்பையுடையார் விளையாட்டைக் காணச் சென்றான்.

(வி - ம்.) நச்சினார்க்கினியர் 'காளை' என்பது நந்தட்டனை உணர்த்துவதாகக் கூறிச் சீவகன் அடாக்களியவர் தொழில் காணுமாறு, நந்தட்டன் அங்கிருந்து போயினான் என்று பொருள் கூறுவர். அவர் மேலும் கூறுவதாவது:

சுண்ணந் தேற்றுகின்ற காலத்திருந்த நந்தட்டன், சீவகன் நீர் விளையாட்டின் விநோதங் காணப்போதற்குத் தானும் தனக்குக் கூடு மவர்களுமாக வேறு போயினான் என்றவாறு. இவன் போகவே, விநோதத்திற்குக் கூடும் புத்திசேனனும் ஒழிந்தோரும் சீவகனைக் கூடினாராம்.

இவ்வாறு நச்சினார்க்கினியர் கூறுவதற்குக் காரணம் நீர்விளையாட்டணியைச் சென்று காணுதல் சீவகனுக்குத் தகவன்று என்று கருதிய தாதல் வேண்டும்.

இனி 'இவை யின்னனவும் பிறவும்' என்ற (சீவக. கூகூ) செய்யுள் வரை நீர்விளையாட்டணி காணுதல் கூறப்படும். (கூகூ)

கூகஎ. ஒன்றே யுயிரை யுடையீ
   ரொருவிப் போமி னிவள்க
ணன்றே கூற்ற மாகி
   யருளா தாவி போழ்வ
தென்றே கலையுஞ் சிலம்பு
   மிரங்க வினவண் டார்ப்பப்
பொன்றோய் கோடியி னடந்து
   புனல்சேர் பவளைக் காண்மின்.

(இ - ள்.) இவள்கண் அன்றே கூற்றம் ஆகி அருளாது ஆவி போழ்வது? - இவள் கண்ணல்லவோ காலனாகி இரக்கம் இன்றி உயிரைப் போக்குகின்றது?; ஒன்றே உயிரை உடையீர்! ஒருவிப் போமின் - (ஆதலால்), சேமவுயிரின்றி ஒருயிரே உடையீர் நீங்கிப் போவீராக, என்றே கலையும் சிலம்பும் இரங்க-என்று கூறுவன போலவே மேகலையும் சிலம்பும் ஒலிக்க; இன வண்டு ஆர்ப்ப - கூட்டமாகிய வண்டுகள் ஆரவாரிக்க; பொன்தோய் கொடியின் நடந்து - பொன்னுலகிற் பொருந்திய காமவல்லி போல நடந்து சென்று; புனல் சேர்பவளைக் காண்மின்! - நீரில் இறங்குகின்றவளைக் காண்மின்!

(வி - ம்.) இது முதல் நந்தட்டனும் அவன் தோழரும் தம்மிற் கூறுவன என்றே நச்சினார்க்கினியர் கூறுகின்றனர்.

உயிர் ஒன்றேயுடையீர் என மாறுக. என்றது இதுபோய்விடின் மேற்கோட்குத் துணையுயிர்இலீர் என்பது படநின்றது. சேம உயிர் - துணையுயிர். இச் செய்யுள் தற்குறிப்பேற்றம். பொன்தோய் கொடி என்றது கற்பகத்திற் படரும் காமவல்லியை. (கூஎ)

கூகஅ. அழல்செய் தடத்துண் மலர்ந்த
வலங்கன் மாலை யதனை
நிழல்செய் நீர்கொண் டீர்ப்ப
நெடுங்கண் ணிணையி னோக்கிக்
குழையும் பூணு நாணுங்
கொழுந னுவப்ப வணிகென்
றிழைகொள் புனலுக் கீயு
மிளையோ ணிலைமை காண்மின்.

(இ - ள்.) அழல்செய் தடத்துள் மலர்ந்த - நெருப்பையுடைய தடத்திலே மலர்ந்த; அலங்கல் மாலை அதனை - அசைகின்ற பொன்னரிமாலையை; நிழல்செய் நீர் கொண்டு ஈர்ப்ப - தெளிந்த நீர் தானே கொண்டு போக; நெடுங்கண் இணையின் நோக்கி-அதனை நீண்ட இரு கண்களினாலும் பார்த்து; கொழுநன் உவப்ப அணிக என்று - (இவற்றையும்) நின் கணவன் மகிழ அணிந்து கொள்க என்றுரைத்து; குழையும் பூணும் நாணும் இழைகொள் புனலுக்கு ஈயும்-குழையையும் பூணையும் நாணையும் முன்னர் தன் அணியைக் கொண்ட நீருக்குக் கொடுக்கும்; இளையோள் நிலைமை காண்மின் - இளைய நங்கையின் தன்மையைக் காண்மின்.

(வி - ம்.) அழல் செய்தடம் என்றது பொற்கொல்லருலையினை. நாண் - பொன்நாண். இழைதலையுடைய புனலுமாம். கொழுநன் - வருணன் நிலைமை - ஈண்டு பேதைமையின் மேற்று. (கூஅ)

கூகசு. கோல நெடுங்கண் மகளிர்
கூந்தல் பரப்பி யிருப்பப்
பீலி மஞ்ஞை நோக்கிப்
பேடை மயிலென் றெண்ணி
யாலிச் சென்று புல்லி
யன்மை கண்டு நாணிச்
சோலை நோக்கி நடக்குந்
தோகை வண்ணங் காண்மின்.

(இ - ள்.) பீலி மஞ்ஞை நோக்கி - தோகை மயிலின் ஆட்டலைக்கண்டு; கோலம் நெடுங்கண் மகளிர் கூந்தல் பரப்பி இருப்ப - அழகிய நீண்ட கண்களையுடைய பெண்கள் தங்கள் கூந்தலை விரித்துக் கொண்டு ஈரம் புலர்த்தியிருக்க; பேடை மயில் என்று எண்ணி - பெண்மயில் அவர்களை ஆண்மயில் என்று நினைத்து; ஆலிச் சென்று புல்லி - அகவிச் சென்று தழுவி; அன்மை கண்டு நாணி - தோகைமயில் அல்லாமையைக் கண்டு வெள்க; சோலை நோக்கி நடக்கும் தோகை வண்ணம் காண்மின் - (அதனைக் கண்டு தன் பேடை அறியுமாறு) பொழிலை நோக்கிச் செல்லும் தோகையின் அழகைப் பார்மின்.

(வி - ம்.) இனி, நாணி யெனவே கொண்டு நாணிய பெட்டை, சோலையை நோக்கி நடக்கும். அவ்வாறிருக்கும் தோகை போல்வாரைக் காண்மின் என்றுமாம். (கூகூ)

கூஉ0. மின்னொப் புடைய பைம்பூ
ணீருள் வீழக் காணு
ளன்னப் பேடையே தொழுதே
னன்னை கோடியள் கண்டா
யென்னை யடிமை வேண்டி
னுடித் தாவென் றிறைஞ்சிப்
பொன்னங் கோம்பி னின்ருள்
பொலிவின் வண்ணங் காண்மின்.

(இ - ள்.) மின் ஒப்புஉடைய பைம்பூண் நீருள் வீழக் காணுள் - மின்போல ஒளி வீசும் பசிய அணிகலன் நீரிலே விழத் தேடி (நீரசைவினால்) காணளாய்; அன்னப் பெடையே! தொழுதேன், அன்னை கொடியள் கண்டாய் - பெண்ணன்னமே! நின்னைத் தொழுதேன், என் அன்னை கொடியள் என்பதை அறிவாய்; என்னை அடிமை வேண்டின் நாடித்தா - என் அடித் தொண்டு நினக்கு விருப்பமாயின் தேடி எடுத்துக் கொடு; என்று இறைஞ்சி-என்று கூறி வணங்கி; பொன் அம் கொம்பின் நின்ருள் - பொன்னலாகிய அழகிய கொம்புபோல நிற்பவளின்; பொலிவின் வண்ணம் காண்மின் - அழகின் தன்மையை நோக்குமின்.

(வி - ம்.) இது தோழியின் மொழி என்றும், அன்னப் பெடை என்றது தலைவியை என்றும், அன்னை என்றது தோழியின் தாயை என்றும் நச்சினார்க்கினியர் கூறுவர். மற்றும், 'என்று' என்பதை, 'என்ன' எனத் திரித்துத் தோழி கேட்ப, அதற்கு நாணி இறைஞ்சிப் பொற்கொம்பென நின்றவள் தலைவி யென்றும் கூறுவர்.

அன்னப்பெடை என்பதற்குப் பறவை என்று கொள்ளுதலே சிறப்பு; என்னே? அவளின் பேதைமை நன்கு புலப்பட்டு இன்பந்தருதலான் என்க. (எ0)

கூஉக. தூமங் கமழுங் கோதை தொடுத்த துயரி முலையாத்
தேமென் கீதம் பாலாச் சுரந்து திறத்தி னூட்டிக்
காமக் குழவி வளர்ப்பக் கணவன் புனலு ணீங்கிப்
பூமென் பொழிலுக் கிவர்வான் புகற்சி காண்மி னினிதே.

(இ - ள்.) தூமம் கமழும் கோதை - அகிற்புகை மணம் பயின்ற கோதை போல்வாள்; தொடுத்த துயரி முலை ஆ - வாசித்த யாழ்நரம்பு முலையாக; தேன்மென் கீதம் பால் ஆ - (அதில் தோன்றிய) இனிய மெல்லிசை பாலாக; சுரந்து திறத்தின் ஊட்டி - சுரந்து செவ்வியின் ஊட்டி; காமக்குழவி வளர்ப்ப - காமமாகிய குழவியை வளர்ப்ப; புனலுள் கணவன் நீங்கி - நீரில் ஆடிக்கொண்டிருந்த அவள் கணவன் அதுகேட்டு நீங்கிக் கூட்ட விருப்பத்தினுல்; பூமென் பொழிலுக்கு இவர்வான் - மலர்களை யுடைய மெல்லிய சோலைக்குப் போகின்றவனுடைய; புகற்சி இனிது காண்மின் - விருப்பத்தை இனிதே நோக்குமின்.

(வி - ம்.) இதனுல், அவள் முன்னே குளித்தேறிக் கூட்டம் விரும்பி யாழ் வாசித்தமை கூறினுராயிற்று. காமக் குழவி - காமத்தை யுடைய இளமைச் செவ்வி; அது காமமாகிய பிள்ளையை வளர்ப்பப் பிள்ளை வாயிலாகச் சென்றுனென்றுற்போல நின்றது.

துயரி - யாழ்நரம்பு. இன்னிசை காமப் பண்பினை மிகுவித்தலான் அதனைப் பால் என்றும் காமத்தைக் குழவி என்றும் கூறினுர். (எக)

கூஉஉ. கடலம் பவளம் மணையிற் கனபொற் கயிற்றிற் காய்பொன்
மடலங் கமுகி னூசன் மடந்தை யாட நுடங்கி
நடலைந் நடுவின் மகளிர் நூக்கப் பரிந்த காசு
விடலில் விசும்பின் மின்போல் மின்னி வீழ்வ காண்மின்.

(இ - ள்.) கடல் அம் பவளம் கன மணையின் - கடலிற் கிடைத்த அழகிய பவளத்தாலாகிய கனத்த மணையிற் கோத்த; பொன் கயிற்றின் - பொன்னுலாகிய கயிற்றினுல்; காய்பொன் மடல் அம் கமுகின் ஊசல் - காய்ச்சிய பொன் மடலையுடைய கமுக மரத்திற் கட்டிய ஊசலை; மடந்தை நுடங்கி ஆட - மங்கையாள் ஒசிந்து ஆடும்படி; நடலை நடுவின் மகளிர் நூக்க - பொய்யான இடையினையுடைய பெண்கள் ஆட்ட; பரிந்த காசு - (அவர்களின் கைதீண்டி) அற்ற மணிகள்; விசும்பின் மின்போல் மின்னி விடலில் வீழ்வ காண்மின் - வானிலேயிருந்து வீழும் மின்னைப்போல மின்னித் தொடர்ச்சியாக வீழ்வதை நோக்குமின்.

(வி-ம்.) பவளம் கன மணியின் எனமாறுக. காய்பொன்: வினைத் தொகை. நடலை-துன்பமுமாம். விசும்பின் விடல் இல்மின் என மாறுக. விடல்இல்மின் என்றது இடையறாத மின்னல் என்றவாறு. (எஉ)

கூஉகூ. நான நீரிற் கலந்து நலங்கோள் பூம்பட் டோளிப்ப
மேனி தோன்ற விளங்கி வெளிப்பட் டதற்கு நாணி
மான மகளிர் போல மணிமே கலைகள் பேசாத்
தானந் தழுவிக் கிடப்பச் செல்வோ டன்மை காண்மின்.

(இ-ள்.) நலம்கொள் பூம்பட்டு நான நீரில் கலந்து ஒளிப்ப - அழகிய பூம்பட்டு நானத்தையுடைய குளிக்கின்ற நீராலே நனைந்து உடம்பிலே ஒடுங்குதலின்; தோன்ற விளங்கி மேனி வெளிப்பட்டதற்கு நாணி - நன்றாக விளக்கமுற்றுத் தம் மெய்யழகு வெளிப்பட்டதற்கு வெள்கி; மான மகளிர்போல மணிமேகலைகள் பேசா - மானமுற்ற பெண்டிர்போல மணி மேகலைகள் பேசாமல்; தானம் தழுவிக்கிடப்பச் செல்வோள் தன்மை காண்மின் - அல்குலைத் தழுவிக் கிடக்குமாறு செல் கின்றவளின் நிலையை நோக்குமின்.

நானம் - புழுகு; குளித்தலுமாம். நீரான் நனைந்து பட்டோடு பொருந்துதலானே ஒலியவிந்த மேகலைகளை மேனி வெளிப்பட்டதற்கு நாணி அற்றங்காத்து வாய் வாளாகிடந்த என்னுமித் தற்குறிப்பேற்றம் ஆற்றவும் இனிதாதல் உணர்க. (எகூ)

கூஉச. தீம்பாற் பசியி னிருந்த
சேவ்வாய்ச் சிறுபைங் கிளிதன்
ஓம்பு தாய்நீர் குடைய
வொழிக்கும் வண்ண நாடிப்
பாம்பால் என்ன வெருவிப்
பைம்பொற் றேடு கழலக்
காம்பேர் தோளி நடுங்கிக்
கரைசேர் பவளைக் காண்மின்.

(இ-ள்.) தீ பால் பசியின் இருந்த செவ்வாய் சிறு பைங்கிளி - இனிய பால்பருகப் பசியுடன் இருந்த சிவந்தவாயை யுடைய சிறிய பச்சைக்கிளி; தன் ஓம்பு தாய் நீர்குடைய - தன்னைக் காக்கும் அன்னை தன் பசியை அறியாமல் நீர் குடைத லாலே; ஒழிக்கும் வண்ணம் நாடி - அவளை நீர்குடையாமல் தடுக்கும் வகையிதுவென எண்ணி; பாம்பு என்ன - பாம்பு பாம் பென்று கூவ; காம்பு ஏர் தோளி வெருவி நடுங்கி-வேய்த் தோளினள் அஞ்சி நடுங்கி; பைம்பொன் தோடு கழல - பசிய

பொற்றோடு கழலுமாறு; கரை சேர்பவளைக் காண்மின் - (வந்து) கரையை அடைகின்றவளை நோக்குமின்.

(வி - ம்.) பாற்பசி - பாலுண்ணுமையால் உண்டான பசியுமாம். ஓம்புதாய் - தன்னை ஊட்டி வளர்க்கும் தாய். வண்ணம் - ஈண்டு உபாயம். பாம்பால் என்புழி ஆல் அசைச்சொல்; பாம்பு பாம்பு என அடுக்கி வர வேண்டியது தனித்து வந்தது செய்யுளாகலின். காவிய உலகில் கிளிகள் உலகக் கிளிகளில் சிறந்தன என்க. (௭௪)

௬௨௫. துணையி றோகை மஞ்ஞை யீயற் கிவரும் வகைபோன்
மணியார் வளைசேர் முன்கை வலனு மிடனும் போக்கி
யிணையி றோழி மார்க ளிறுமா லிடையென் றிரங்க
வணியார் கோதை பூம்பந் தாடு மவளைக் காண்மின்.

(இ - ள்.) துணை இல் தோகை மஞ்ஞை - பெடையில்லாது தனித்த தோகைமயில்; ஈயற்கு இவரும் வகைபோல் - சுற்றிப் பறக்கும் ஈயலைப் பற்ற அவற்றின்மேற் செல்லும் கூறுபாடு போல; இணை இல் தோழிமார்கள் இடை இறுமால் என்று இரங்க - ஒப்பற்ற தோழியர் 'நின்இடை ஒடியுமே' என்று இரக்க முறுமாறு; மணிஆர் வளைசேர் முன்கை வலனும் இடனும் போக்கி - மணிபதித்த வளையல் அணிந்த முன்கையை வலமாகவும் இடமாகவும் செலுத்தி; பூம்பந்து ஆடும் அணி ஆர் கோதையவளைக் காண்மின் - அழகிய பந்தை ஆடும் அணி பொருந்திய கோதையாளைப் பார்மின்.

(வி - ம்.) இச்செய்யுளின்கண் பந்தாடும் ஒருத்தியைத் தன்மை நவிற்சியாகக் கூறி அவளுக்கு வானிலே பறக்கும் ஈயலைக் கவ்வ அணந்து திரியும் மயிலை உவமையாக எடுத்துக் கூறிய தேவர் புலமைத் திறம் நினைந்து நினைந்து இன்புறற்பாலது. (௭௫)

௬௨௬. திருவின் சாய லொருத்தி
சேர்ந்த கோலங் காண்பான்
குருதித் துகிலி னுறையைக்
கொழும்பொன் விரலி னீக்கி
அரவ முற்றும் விழுங்கி
யுமிழும் பொழுதின் மதிபோன்
றுருவத் தெண்கண் ணாடி
காண்மின் றோன்றும் வகையே.

(இ - ள்.) திருவின் சாயல் ஒருத்தி - திருமகளின் மென்மையுடையாள் ஒரு மங்கை; சேர்ந்த கோலம் காண்பான் - தான் கொண்ட கோலத்தைக் காண்பதற்கு; குருதித் துகிலின்

உறையைக் கொழும்பொன் விரலின் நீக்கி - (கண்ணாடிக்கிட்ட) செம்பட்டுறையை வளவிய பொன்னாழியணிந்த விரலாலே நீக்க; அரவம் முற்றும் விழுங்கி உமிழும் பொழுதின் மதிபோன்று - செம்பாம்பு தன்னை முழுதும் பற்றித் திரும்ப விடும்போது தோன்றும் திங்களைப் போல; உருவம் தெண்கண்ணாடி தோன்றும் வகை காண்மின் - நிறமுறும் தெளிந்த கண்ணாடி காண்குறும் இயல்பை நோக்குமின்.

(வி - ம்.) நீக்கி - நீக்க : எச்சத்திரிபு. காண்பான் : எதிர்கால வினையெச்சம்.

திரு - திருமகள். குருதித்துகிலின் உறை - செம்பட்டுறை; இது செம்பாம்புக்குவமை. அரவம்-ஈண்டுக்கேது. தோன்றும்வகை காண்மின் என மாறுக. (எசு)

கூஉஎ. பலகை செம்பொன் னாகப்
பளிங்கு நாயாப் பரப்பி
யலவ னாடும் வகைபோ
லரும்பொன் கவறங் குருளக்
குலவும் பவழ வுழக்கிற்
கோதை புரளப் பாடி
யிலவம் போதேர் செவ்வா
யிளையோர் பொருவார்க் காண்மின்.

(இ - ள்.) செம்பொன் பலகை ஆக - செம்பொன்னாற் பலகையாக; பளிங்கு நாய் ஆ பரப்பி - பளிங்கினாலே நாயாகச் செய்தவற்றைப் பரப்பி; அலவன் ஆடும் வகைபோல் அரும்பொன் கவறு அங்கு உருள - நண்டு ஆடுந் தன்மைபோல அரிய பொன்னால் ஆன கவறு தன்னிடத்தே உருளுமாறு; குலவும் பவழ உழக்கில் - பண்ணின பவழ உழக்காலே; கோதை புரளப் பாடி - கோதை அசையுமாறு பாடிக்கொண்டு; இலவம்போது ஏர் செவ்வாய் - இலவ மலரனைய அழகிய செவ்வாயையுடைய; இளையோர் பொருவார்க் காண்மின் - இளமங்கையர் கவறாடுவாரை நோக்குமின்.

(வி - ம்.) செம்பொன்னாலியற்றிய பலகையிலே பளிங்காற் செய்த நாய்களைப் பரப்பிப் பொன் உழக்கில் பொன் கவறுகளையிட்டு உருட்டிப் பாடிக்கொண்டு சூதுப்போர் பொருதும் மகளிரைக் காண்மின் என்றவாறு. (எஎ)

கூஉஅ. தீம்பா லடிசி லமிர்தஞ்
செம்பொன் வண்ணப் புழுக்க
லாம்பா லக்கா ரடலை
யண்பன் னீரு றமிர்தம்

தாம்பா லவரை நாடித்
தந்தூட் டயர்வார் சோரிய
வோம்பா நறுநெய் வெள்ள
மொழுகும் வண்ணங் காண்மின்.

(இ - ள்.) ஊட்டு அயர்வார் தாம் - உணவு இடுவோர்கள் தாம்; பாலவரை நாடித் தந்து - உண்ணும் இயல்பினரைத் தேடிக் கொணர்ந்து; தீ பால் அடிசில் - இனிய பாற்சோற்றையும்; செம்பொன் வண்ணப் புழுக்கல்-செம்பொன் நிறமுடைய பருப்புச் சோற்றையும்; அக்கார அடலே - சருக்கரைப் பொங்கலேயும்; அண்பல் நீர் ஊறு அமிர்தம் - அடிப் பல்லில் நீரூறும் புளிங்கறியும்; அமிர்தம் - பிற சோற்றையும்; ஆம் பால் - இவற்றிற்கெல்லாம் பயன்படும் பாலேயும்; சொரிய-சொரிதலின்; ஓம்பா நறுநெய் வெள்ளம் - இவற்றையுண்ண வார்த்த கட்டுப் படாத நறுநெய் வெள்ளம்போல; ஒழுகும் வண்ணம் காண்மின்! - ஒழுகும் இயல்பைக் காணுமின்!

(வி - ம்.) அக்காரடலே - அக்காரத்தினே அடப்பட்டது; அக்காரையாக அடப்பட்டதுமாம். அக்காரம் - சருக்கரை. (எஅ)

கூஉகூ. அள்ளற் சேற்று ளலவ
னடைந்தாங் கனைய மெய்யின்
கள்சேய் கடலு ளிளமைக்
கூம்பின் கடிசெய் மாலைத்
துள்ளு தூமக் கயிற்றிற்
பாய்செய் துயரி நிதிய
முள்ளு காற்று யுழலும்
காமக் கலனும் காண்மின்.

(இ - ள்.) அள்ளல் சேற்றுள் அலவன் அடைந்தாங்கு அனைய மெய்யின் - அள்ளலாகிய சேற்றில் அடைந்த அலவனேப் போன்ற மெய்யுடன்; கள்செய் கடலுள் - கள்ளாகிய கடலிலே; இளமைக் கூம்பின் கடிசெய் மாலைக் கயிற்றின் - இளமையாகிய பாய்மரத்திலே கட்டின மணமாலேயாகிய கயிற்றுடன்; துள்ளு தூமப்பாய் செய்து - துள்ளும் புகையாகிய பாயை விரித்து; உயரி - அதனே உயர்த்து; நிதியம் உள்ளு காற்றா உழலும் - பொருளே நினேக்கப்படுங் காற்றாகத் திரிகின்ற; காமக் கலனும் காண்மின்! - காமக் கலமாகிய பரத்தையையும் பார்மின்!

(வி - ம்.) கள்செய் கடல் - கள்ளுண்டார் தன்மையைச் செய்யும் நீர் விளேயாட்டுத் திரள். கடல்: உவமையாகுபெயர். 'அடாக்களியவர்' (சீவக. கூகசு) என்றார் முன்னும். (எகூ)

ருரு0 தாய்தன் கையின் மெல்லத்
தண்ணேன் குறங்கி னெறிய
வாய்பொன் னமளித் துஞ்சும்
மணியார் குழவி போலத்
தோயுந் திரைக ளலைப்பத்
தோடார் கமலப் பள்ளி
மேய வகையிற் றுஞ்சும்
வெள்ளை அன்னங் காண்மின்.

(இ - ள்.) தாய் தன் கையின் குறங்கின் மெல்லத் தண் என் எறிய - தாய் தன் கையினாலே தொடையிலே மெல்லத் தண் எனத் தட்ட; ஆய் பொன் அமளித் துஞ்சும் அணிஆர் குழவி போல - சிறந்த பொன் அணையிலே துயிலும் அழகிய குழந்தை போல; தோயும் திரைகள் அலைப்ப - செறியும் அலைகள் வந்து மோத; தோடு ஆர் கமலப் பள்ளி மேய வகையில் துஞ்சும் - இதழ் நிறைந்த தாமரை மலர்ப்பாயலிலே தனக்குப் பொருந்தும் வகையில் துயிலும்; வெள்ளை அன்னம் காண்மின் - வெள்ளை அன்னத்தைப் பார்மின்!

(வி - ம்.) கார் அன்னமும் உண்மையின் வெள்ளை அன்னம் இனஞ்சுட்டிய பண்பு.

தண் என என்பது மென்மைப் பண்பின் மேனின்றது. குறங்கின் தண்ணென் எறிய என மாறுக. அமளி - படுக்கை. தோடார்கமலம் - இதழ் நிறைந்த தாமரை மலர். மேயவகை - தன் மனம் பொருந்தியபடி. (அ0)

ருருக. நீலத் துகிலிற் கிடந்த நிழலார் தழலம் மணிகள்
கோலச் சுடர்விட் டுமிழக் குமரி யன்னங் குறுகிச்
சால நெருங்கிப் பூத்த தடந்தா மரைப்பூ வென்ன
வாலிச் சுடர்கள் கௌவி யழுங்கும் வண்ணங் காண்மின்.

(இ - ள்.) நீலத் துகிலில் கிடந்த நிழல்ஆர் தழல் அம் மணிகள் - நீல ஆடையிலே கிடந்த ஒளிவிடும் தீயனைய செம் மணிகள்; கோலச் சுடர்விட்டு உமிழ - அழகிய சுடர்களை மிகுதியாகச் சொரிதலால்; சால நெருங்கிப் பூத்த தடம் தாமரைப் பூ என்ன - (உண்மையறியாமல்) மிகவும் நெருங்கி மலர்ந்த பொய்கையிலுள்ள தாமரை மலரென்றெண்ணி; குமரி அன்னம் குறுகி - இளமையான அன்னப் பறவை அருகிற் சென்று; ஆலி - அகவிக் கொண்டு; சுடர்கள் கௌவி அழுங்கும் வண்ணம் காண்மின் - சுடர்களைப் பற்ற (அகப்படாமையால்) வருந்தும் தன்மையை நோக்குமின்.

(வி - ம்.) நீலத்துகில் - நீர்க்குவமை எனினுமாம். நிழல் - ஒளி. குமரியன்னம் - இளமையுடைய அன்னம். ஆலி - ஆரவாரித்து. அழுங்குதல் - வருந்துதல். துகிலினுக்கு இலை உவமை. (அக)

கூகூஉ. வடிக்கண் மகளிர் வைத்த
மரக தந்நன் மணிக
ளொடிக்கச் சுடர்விட் டுமிழ
வுழையம் பிணையோன் றணுகிக்
கோடிப்புல் லென்று கறிப்பா
ணுவிற் குலவி வளைப்பத்
தோடிக்கட் பூவை நோக்கி
நகுமா றெளிதோ காண்மின்.

(இ - ள்) வடிக்கண் மகளிர் வைத்த மரகத நன்மணிகள் - மாவடு வனைய கண்களையுடைய பெண்கள் வைத்த மரகத மணிகள்; ஒடிக்கச் சுடர்விட்டு உமிழ - ஒடிக்கலாம் படி ஒளியினை மிகுதியாகச் சொரிய; உழை அம்பிணை ஒன்று - அழகிய பெண்மான் ஒன்று; கொடிப் புல் என்று - அறுகம் புல் என்று எண்ணி; அணுகிக் கறிப்பான் நாவின் குலவி வளைப்ப - நெருங்கிக் கறிப்பதற்கு நாவினாலே (கழுத்தை வளைத்து) வளைப்ப; தொடிக்கண் பூவை நோக்கி நகும் ஆறு ஒ எளிது காண்மின்! - வளையல் போல் வட்டமான கண்களையுடைய பூவை அக் காட்சியைப் பார்த்து நகைப்பது ஓ எளிதான காட்சி! அதனைப் பார்மின்!

(வி - ம்.) ஓ : வியப்பினைத்தரும் குறிப்பிடைச்சொல்.

வடி - மாவடுவின் வகிர். உழை - மான். அம் உழைப்பிணை என மாறுக. அழகிய மான்பிணை என்க. கொடிப்புல் - அறுகம்புல். கறிப்பான்: வினையெச்சம். பூவை - நாகணவாய்ப்புள். இதன் கண்ணுக்கு வளையல் உவமை. (அஉ)

கூகூகூ. இவையின் னனவும் பிறவு மெரிபோன் னார மார்பன்
கவிஞர் மதியி னகன்று காட்சிக் கினிய விழவின்
சுவையின் மிகுதி யுடைய சோர்வில் பொருளோன் றதுதா
னவையி னகல நோக்கி நயந்த வண்ண மொழிவாம்.

(இ - ள்.) இன்னன இவையும் பிறவும் - இத்தன்மையான காட்சிகளும் பிற காட்சிகளும்; கவிஞர் மதியின் அகன்று காட்சிக்கு இனிய விழவின் - கவிகளின் புகழ்ச்சியினும் மேம்பட்டுக் காண்பதற்கு இனிய நீர்விழாவிலே; எரிபொன் ஆரம் மார்பன் - ஒளிவிடும் பொன்மாலை அணிந்த மார்பன்; சுவையின்

மிகுதியுடைய சோர்வுஇல் பொருள் ஒன்று - இனிமையின் மேம்பட்ட அழிவற்ற பொருளால் ஒருயிரை; நவையின் அகல நோக்கி - குற்றத்தினின்றும் நீங்குமாறு பார்க்க; அதுதான் நயந்தவண்ணம் மொழிவாம் - அவ்வுயிர் அப் பொருளால் விரும்பின தன்மையை உரைப்போம்.

(வி - ம்.) மதியின் : இன் : நீங்கற்பொருள். ஒன்று - ஒருயிர்; நவையின் அகலுதல் - நாயுடம்பினின்றும் நீங்க; நோக்கி - நோக்க. சோர்வில் பொருள் - பஞ்ச நமஸ்காரமந்திரம். (அங)

வேறு

௯௩௪. அந்தணர்க் காக்கிய சோற்றுக் குவாலினை
வந்தோரு நாயகது விற்றது கண்டவ
ருய்ந்தினிப் போதி யெனக்கனன் றேடினார்
சிந்தையி னின்றெளிர் தீயன நீரார்.

(இ - ள்.) அந்தணர்க்கு ஆக்கிய சோற்றுக் குவாலினை - அந்தணர்கட்குச் சமைத்த சோற்றின் திரளை; வந்து ஒரு நாய் கதுவிற்று - ஒருநாய் வந்து கௌவியது; சிந்தையில் நின்று ஒளிர் தீயன நீரார் அவர் அதுகண்டு - உள்ளத்திலே விடாமல் நின்று ஒளிரும் தீப்போன்ற பண்பினராகிய அவர்கள் அந் நாயைக் கண்டு; இனி உய்ந்து போதி எனக் கனன்று ஓடினார் - இனி நீ பிழைத்துப் போவாய் என்று கூறிச் சினந்து ஓடி வந்தனர்.

(வி - ம்.) அக்கினி சித்தரென அவர்களின் கொடுமை கூறினர். சோற்றுக் குவால் - சோற்றுக்குவியல். ஒரு நாய்வந்து என மாறுக. அவர் அதுகண்டு என மாறுக. உய்ந்தினிப்போதி என்றது குறிப்புச் சொல்; இனி நீ உய்ந்துபோகவியலாது; நின்னைக் கொன்றொழிப்பேம் என்பது கருத்து. (அச)

௯௩௫. கல்லொடு வன்றடி கையினர் காற்றினும்
வல்விரைந் தோடி வளைந்தன ராகிக்
கோல்வது மேயினர் கொன்றிடு கூற்றினும்
வல்வினை யார்வலைப் பட்டதை யன்றே.

(இ - ள்.) கல்லொடு வன்தடி கையினர் - (அவர்கள்) கல்லையும் வலிய தடியையும் கொண்ட கையினராய்; காற்றினும் வல் விரைந்து ஓடி வளைத்தனர் ஆகி - காற்றினும் கடிது விரைந்து ஓடி வளைத்துக்கொண்டவராய்; கொன்றிடு கூற்றினும் கொல்வது மேயினர் - கொல்லுமியல்புடைய கூற்றுவனினும் மேம்பட்டுக் கொல்லத் தொடங்கினர்; வல்வினையார் வலைப்பட்டது - (அதுவும்) கொடிய வினையாளர் கையில் அகப்பட்டது.

(வி - ம்.) பட்டதை : ஐ : சாரியை; பகுதிப்பொருள் விகுதி என்பர் நச்சினார்க்கினியர். அன்று, ஏ : அசைநிலைகள். (அரு)

கூகூசு. வேள்வியி லுண்டி விலக்கிய நீவிர்க
ளாளெனக் கென்ற தறைவது மோரார்
தாளிற மூர்க்க ரதுக்கலிற் றண்டுறை
நீள்கயம் பாய்ந்தது நீந்துத லோடும்,

(இ - ள்.) வேள்வியில் உண்டி விலக்கிய நீவிர்கள் எனக்கு ஆள் என்று அறைவதும் ஓரார் - (நாய் கதறுவது) வேள்வியில் எனக்கு உணவின்றித் தடுத்த நீங்கள் எனக்கு மறுபிறவியில் ஆள் என்பதுபோல அறைவதையும் உணராராய்; மூர்க்கர் தாள் இற அதுக்கலின் - கொடிய அந்தணர் அதன் காலொடிய அடிக்க லுற்றதும்; அது நீள் கயம் பாய்ந்து நீந்துதலோடும் - (அடி தாங்க இயலாத) அந் நாய் பெரிய கயத்திலே பாய்ந்து நீந்தின வுடன்,

(வி - ம்.) நீந்துதலோடும் 'ஒருவன் தோன்றினன்' என அடுத்த செய்யுளில் முடியும்.

நச்சினார்க்கினியர் (கூகூச—கூகூசு) மூன்று செய்யுட்களையும் ஒரு தொடராக்கிக் கொண்டுகூட்டிக்கூறும் முடிபு:—

தீயன நீரராகிய அந்தணர்க்கு ஆக்கிய சோற்றுத்திரளை ஒரு நாய் வந்து கௌவிற்று; அவர் அதுகண்டு, இனிப் பிழைத்துப்போவை என்று கூறி ஓடி எடுத்த கல்லையும் தடியையும் கையிலே உடையராய்க் கனன்று காற்றினும் கடுக விரைந்தோடி, அது நீள்கயத்தே பாய்ந்து நீந்தின அளவிலே வளைத்தனராகி, அம்மூர்க்கர் அறைவதும் ஓராராய்த் தாளிற அடித்தலின், அது வல்வினையார் வலையிலே அகப்பட்டே விட்டது; அதனைப் பின்னரும் கொன்றிடு கூற்றிற் காட்டிற் கொல்லுந் தன்மையை மேயினர். (அசு)

வேறு

கூகூஎ. மட்குட மல்லன மதியின் வெள்ளிய
கட்குடக் கன்னிய ரிருவ ரோடுடன்
றட்கென யாவரும் நடுங்கத் தூய்மையி
லுட்குடைக் களிமக னொருவன் றோன்றினன்.

(இ - ள்.) மண்குடம் அல்லன மதியின் வெள்ளிய கள் குடக் கன்னியர் இருவரோடு - மண்ணாலாக்கப்படாமல் திங்களினும் வெள்ளிய வெள்ளியாற் செயப்பட்டனவாகிய கள் குடங்களைச் சுமந்த கன்னியரிருவரோடு; தூய்மையில் உட்கு உடைக் களிமகன் ஒருவன் - தூய்மையற்ற அச்சந் தரும் தோற்றமுடைய கட்குடியன் ஒருவன்; யாவரும் உடன் துட்

கென நடுங்கத் தோன்றினன் - எவரும் கண்டவுடன் திடுக்கிட்டு நடுங்குமாறு தோன்றினன்.

(வி - ம்.) கள்ளின் கடுமை தாங்க வெள்ளியாற் சமைத்தனர்.

கட்குடக்கன்னியர் - கட்குடஞ்சுமந்த கன்னியர். உடன் - கண்டவுடன். தூய்மை, புறந்தூய்மையும் அகந்தூய்மையுமாம். உட்கு - அச்சம். களிமகன் - கட்குடியன். (அஎ)

கருஅ. தோன்றிய புண்செய்வே லவற்குத் தூமது
வான்றிகழ் கொடியனார் வெள்ளி வட்டகை
யூன்றிவாய் மடுப்பவோர் முழையுட் டீங்கதிர்
கான்றிடு கதிர்மதி யிரண்டு போன்றவே.

(இ - ள்.) தோன்றிய புண்செய் வேலவற்கு - அங்ஙனந் தோன்றிய புண்செய்யும் வேலேந்திய அவனுக்கு; வான் திகழ் கொடியனார் - முகிலிடைத் தோன்றும் மின்னுக் கொடியனையார் இருவரும்; வெள்ளி வட்டகை வாய் ஊன்றி - வெள்ளிக் கிண்ணத்தை வாயிலே அழுத்தி; தூமது மடுப்ப - தூய மதுவைக் கொடுப்ப; ஓர் முழையுள் தீங்கதிர் கான்றிடு கதிர்மதி இரண்டு போன்ற - ஓர் குகையிலே இனிய கதிரைச் சொரியும் ஒளிமதி இரண்டினைப் போன்றன.

(வி - ம்.) வேலவன் : முற்கூறிய களிமகன். வான்திகழ்கொடி - மின்னற்கொடி ; இஃது அக்கன்னியர்க்குவமை. வட்டகை - கிண்ணம். அம்மகளிர் மதுவை வார்த்து மாறிமாறிக்கொடுக்கும் வெள்ளிக் கிண்ணங்கட்கு ஒருமுழையில் மாறிமாறிக் கதிர்பொழியும் இரண்டு திங்கள் உவமை என்க. இஃது இல்பொருளுவமை. முழை-அக்களிமகன் வாய்க்குவமை. தீங்கதிர் கள்ளுக்குவமை. (அஅ)

வேறு

கருகூ. அழலம் பூநற வார்ந்தழ லூர்தரச்
சுழலுங் கண்ணினன் சோர்தரு மாலையன்
கழலன் காழகம் வீக்கிய கச்சையன்
மழலைச் சோற்களின் வைதிவை கூறினன்.

(இ - ள்.) அழல் அம்பூ நறவு ஆர்ந்து - அழல் போன்ற அழகிய மலரால் ஆக்கின நறவை அருந்தியதனால்; அழல் ஊர் தரச் சுழலும் கண்ணினன் - வெம்மை பரக்கச் சுழலும் கண்ணினனாய்; சோர்தரும் மாலையன் - கழலும் மாலையனாய்; கழலன் - கழலுடையவனாய்; காழகம் வீக்கிய கச்சையன் - கருமை பொருந்திய இறுக்கிய கச்சையனாய்; மழலைச் சொற்களின் வைது இவை கூறினன் - குழறுஞ் சொற்களாலே வைதபின் இவற்றைக் கூறினன்.

(வி - ம்.) அழல் நறவு, அம்பூ நறவு எனத் தனித்தனி கூட்டி அழல்வதும் அழகிய பூவாற்சமைத்ததுமாகிய கள் எனினுமாம். அழல்-வெப்பம். காழகம் - கருமைநிறம். மழலைச் சொல், ஈண்டுக் குழறிப் பேசும் சொல். வைதுபின்னர் இவை கூறினான் என்க. (அக)

கூசO. புடைத்தேன் ஞமலியைப் பொன்றுவித் தீருயிர்
கடுக்கப் பேர்த்தனிர் தம்மின் கலாய்க்குறிற்
றடக்கை மீளிமை தாங்குமி னன்றெனி
னுடைப்பேன் கட்குட மென்றுரை யாடினான்.

(இ - ள்.) என் நாயினைப் புடைத்துப் பொன்றுவித்தீர் - என் நாயை அடித்துக் கொன்றுவிட்டீர்; அவ்வுயிர் கடுக்கப் பேர்த்தனிர் தம்மின்! - அவ்வுயிரை விரைய மீட்டுத் தருவீராக!; கலாய்க்குறின் தடக்கை மீளிமை தாங்குமின்! - கலகம்புரியின் என் பெரிய கையின் வலிமையைப் பொறுப்பீராக!; அன்றெனின் கட்குடம் உடைப்பென் என்று உரையாடினான் - அவ்விரண்டும் அல்லவாயின் கட்குடம் உடைப்பேன் என்று கூறினான்.

(வி - ம்.) கட்குடம் உடைத்தல் குறிப்பு மொழி. கடுக்க: கடுக: விரித்தல் விகாரம். கலாய்க்க உறின்: கலாய்க் குறின்: அகரம் தொகுத்தல் விகாரம். (கூO)

வேறு

கூசக. நல்வினை யொன்று மிலாதவ னான்மறை
வல்லவர் தம்மை வருத்தலின் வல்லே
செல்சுடர் வேல்வல சீவக சாமிசென்
றல்ல லகற்றி யருந்துயர் தீர்த்தான்.

(இ - ள்.) நல்வினை ஒன்றும் இலாதவன் - நல்வினை ஒன்றும் செய்தறியாதவன்; நான்மறை வல்லவர் தம்மை வருத்தலின் - நான்மறை வல்லாளரைத் துன்புறுத்தலின்; செல்சுடர் வேல்வல சீவகசாமி வல்லே சென்று - ஒளி வீசும் வேலை யேந்த வல்ல சீவகன் விரைந்து சென்று; அல்லல் அகற்றி அருந்துயர் தீர்த்தான் - அக் களிமகன் நாயிழந்த துன்பத்தை முதற்போக்கி அந்தணர் துயரத்தையுங் களைந்தான்.

(வி - ம்.) நல்வினை இலாதவன் என்றது களிமகனை. நான்மறை வல்லவர் என்றது மறைவல்லவரேயல்லது அவர்க்கிருக்கவேண்டிய செந்தண்மையில்லாதவர் என்பது படநின்றது. வல்லே - விரைந்து. (கூக)

கூசஉ. மீண்டவ ரேகுத லும்விடை யன்னவ
னீண்டிய தோழரோ டேய்தின னாகி
மாண்ட வெயிற்றெகி னம்மற மில்லது
காண்டலுங் கட்கினி யான்கலுழ்ந் திட்டான்,

(இ - ள்.) அவர் மீண்டு ஏகுதலும்-அவ்விரு திறத்தாரும் திரும்பிச் சென்றவுடன்; விடை அன்னவன் ஈண்டிய தோழ ரொடு எய்தினன் ஆகி - இடபம் போன்ற சீவகன் தன்னுடன் குழுமிய தோழருடன் சென்று; மாண்ட எயிற்று எகினம் மறம் இல்லது காண்டலும் - இழந்த பற்களையுடைய அந்த நாய் வலிமை யிழந்ததாகக் காணப்பட்டவுடன்; கட்கு இனியான் கலுழ்ந்திட்டான் - கண்ணுக்கினியவன் அழுதிட்டான்.

(வி ம்.) நீந்திய நாய் கரையேறிச் சோர்ந்து உயிர் போகுந்தறுவா யிற் கிடந்ததைச் சீவகன் தோழருடனே சென்று கண்டான். அன்றி, நச்சினார்க்கினியர் முன்னர் (கூநடகூ) முடித்தவாறு கொள்ளினுங் கொள்க.

நச்சினார்க்கினியர் முன்னர்த் தம்பியை விட்டுத் தனியே நின்றா னென்பதற்கேற்ப, 'இவன் வினைதம் ஒழிந்து நிற்றலின், தோழர் வந்து திரண்டமை தோன்ற, 'ஈண்டிய' என்றார். எனவே, தம்பியர் வந்தமை யும் பெறுதும்' என்றுரைத்தனர். அருளினால், இவனை விடை என்றார்.

இச் செய்யுள் சீவகனுடைய அருட்பண்பை விளக்கிற்று. (கூஉ)

கூசங. நாயுடம் பிட்டிவ ணந்திய பேரொளிக்
காய்கதிர் மண்டலம் போன்றொளி கால்வதோர்
சேயுடம் பெய்துவை செல்கதி மந்திர
நீயுடம் பட்டு நினைமதி யென்றான்.

(இ - ள்.) நாய் உடம்பு இவண் இட்டு - நாய் உடலை இங்கே விட்டு; நந்திய பேரொளிக் காய்கதிர் மண்டலம் போன்று - வளர்ந்த பேரொளியை உடைய திங்கள் மண்டிலம் போல; ஒளி கால்வது ஓர் சேய் உடம்பு செல்கதி எய்துவை - ஒளி வீசுவ தாகிய ஒரு பெரிய உடம்பை நீ செல்லுங்கதியிலே அடைவாய்; மந்திரம் நீ உடம்பட்டு நினை என்றான் - (அதற்காக) யான் கூறு கின்ற மந்திரத்தை நீ ஒருமனப்பட்டு நினைவாயாக என்றான்.

(வி - ம்.) நினைமதி : மதி : முன்னிலை அசை.

நந்துதல் - பெருகுதல். நந்திய பேரொளிக் காய்கதிர் மண்டிலம் போன்று ஒளி கால்வதோர் சேயுடம்பு என்றது தெய்வ உடம்பினை. காய்கதிர் மண்டிலம் என்றது திங்கள் மண்டிலத்தை. (கூநு)

கூசச. என்றலுந் தன்செவி யோர்த்திரு கண்களுஞ்
சென்றுகு நீரொடு செம்மலை நோக்கி
யொன்றுபு வால்குழைத் துள்ளுவப் பெய்தலுங்
குன்றனை யான்பதங் கூற வலித்தான்.

(இ - ள்.) என்றலும் - என்று கூறின அளவிலே; தன் செவி ஓர்த்து - (அது) தன் காதினாலே கேட்டுச் சிந்தித்து;

இரு கண்களும் சென்று உகு நீரொடு - இரு கண்களாலும் வடிந்து வீழ்கின்ற நீருடனே; செம்மலை நோக்கி - சீவகனைப் பார்த்து; ஒன்றுபு வால்குழைத்து உள் உவப்பு எய்தலும் - ஒருமனப்பட்டு வாலைக் குழைத்து மகிழ்ந்த அளவிலே; குன்று அனையான் பதம் கூற வலித்தான் - சலிப்பற்ற சீவகன் (இது தான் காலம் என) மறையைக் கூறத் துணிந்தான்.

(வி - ம்.) செம்மல்: சீவகன். ஒன்றுபு - மனம் ஒருமைப்பட்டு. குன்றனையான்: சீவகன். வலித்தான் - துணிந்தான். (கூச)

வேறு

கூசரு. நற்செய்கை யொன்று மில்லார் நாளுலக் கின்ற போழ்தின்
முற்செய்த வினையி னீங்கி நல்வினை விளைக்கும் வித்து
மற்செய்து வீங்கு தோளான் மந்திர மைந்து மாதோ
தற்செய்கை தளிர்ப்பத் தாழ்ந்தாங் கதன்செவிச்
[செப்பு கின்றான்.

(இ - ள்.) நல்செய்கை ஒன்றும் இல்லார் - இம்மையில் நல்வினை ஒன்றுமில்லாதவர்; நாள் உலக்கின்ற போழ்தின் - வாழ்நாள் கழிகின்ற காலத்தே; முன் செய்த வினையின் நீங்கி - (இம்மையில்) அவர் இறக்குமுன் செய்த தீவினையிலிருந்து நீங்க; நல்வினை விளைக்கும் வித்து - (பழவினையாகிய) நல்வினையைத் தரும் வித்தாகிய; மந்திரம் ஐந்தும் - மறை ஐந்தையும்; மல் செய்து வீங்கு தோளான் - மற்போர் புரிந்து பருத்த தோளை யுடைய சீவகன்; தன் செய்கை தளிர்ப்ப ஆங்கு தாழ்ந்து அதன் செவிச் செப்புகின்றான் - மறையின் செய்கை தழைக்கும் படியாக ஆங்கே தாழ்ந்து நாயின் செவியிலே செப்புவான் ஆயினான்.

(வி - ம்.) நீங்கி - நீங்க: எச்சத்திரிபு. 'தற்செய்கை தளிர்ப்ப' என்பதனை அடுத்த செய்யுளில் 'அகற்றினான்' என்பதோடு முடிப்பர் நச்சினார்க்கினியர்.

நற்செய்கை - தானம் தவம் சீலம் அறிவர்ச் சிறப்பு என்பன. நாள் - வாழ்நாள். தற்செய்கை என்புழித் தன் என்றது மந்திரத்தை. (கூரு)

கூசசு. உறுதிமுன் செய்த தின்றி யொழுகினே னென்று நெஞ்சில்
மறுகனீ பற்றேற டார்வம் விட்டிடு மரண வச்சத்
திறுகனீ யிறைவன் சொன்ன வைம்பத வமிர்த முண்டாற்
பெறுதிநற் கதியை யென்று பெறுநவை யகற்றி னானே.

(இ - ள்.) உறுதி முன் செய்தது இன்றி ஒழுகினேன் என்று - நன்மையாக முன்னே செய்தது ஒன்றுமில்லாமல் இருந்

தேன் என்று ; நீ நெஞ்சில் மறுகல் - நீ உள்ளத்திலே நினைந்து மறுகாதே ; பற்ருெடு ஆர்வம் விட்டிடு - பற்றையும் ஆர்வத்தை யும் விடு ; மரண அச்சத்து இறுகல் - இறப்பெனும் அச்சத்திலே நிலைபெருதே ; (அவ்விதம் இருந்து) ; இறைவன் சொன்ன ஐம்பத அமிர்தம் நீ உண்டால் - இறைவன் கூறிய ஐம்பதமாகிய அமிர்தத்தை நீ பருகினல் ; நற்கதியைப் பெறுதி என்று - நல்ல கதியை அடைவாய் என்று கூறி ; பெரு நவை அகற்றினன் - பெருந்துன்பத்தை நீக்கினன்.

(வி - ம்.) மறுகல் - சுழலாதேகொள் : வியங்கோள். பற்று-உள்ள தன் மேலுளது. ஆர்வம் - பெறவேண்டியதன் மேலுளது. விட்டிடு : ஒரு சொல். இறுகல் - நிலைபெருதே கொள்: வியங்கோள்.

'பெறுதி நற்கதியை' என்பதன் முன் அடுத்த செய்யுளில் உள்ள, 'நின்கண் நின்ற நீனிற வினையின் நீங்கி' என்பதைச் சேர்ப்பர் நச்சினார்க் கினியர். மற்றும் 'இறுகல்' என்பதன்பின் 'பெருநவை அகற்றினன்' என்பதைச் சேர்ப்பர். (கூசு)

கூசஎ. மனத்திடைச் செறும்பு நீக்கி மறவலை யாகி யைந்து
நினைத்திடு நின்க ணின்ற நீனிற வினையி னீங்கி
யெனைப்பக றேறும் விள்ளா வின்பமே பயக்த மென்றற்
கனைப்பத வமிர்த நெஞ்சி னயின்றுவிட் டகன்ற தன்றே.

(இ - ள்.) மனத்திடைச் செறும்பு நீக்கி - உள்ளத்தி லுள்ள செற்றத்தை நீக்கி ; மறவலை ஆகி ஐந்தும் நினைத்திடு - மறவாமல் ஐம்பதத்தையும் நினைப்பாயாக ; நின்கண் நின்ற நீல் நிற வினையின் நீங்கி - நின்னிடமுள்ள தீவினையிலிருந்து விடு பட்டு ; எனைப் பகல்தோறும் விள்ளா இன்பமே பயக்கும் என் றற்கு - எப்போதும் நீங்காத பேரின்பத்தைத் தரும் என்று உபதேசித்தானுக்கு ; அனைப்பத அமிர்தம் நெஞ்சின் அயின்று - அத்தகைய பதமான அமிர்தத்தை நெஞ்சாலே பருகி ; விட்டு அகன்றது - நாயுடம்பை விட்டு நீங்கியது.

(வி - ம்.) 'செறும்பு நீக்கி' என்பதை முற்செய்யுளில், 'உறுதி முன் செய்ததின்றி ஒழுகினேன் என்று நெஞ்சில் மறுகல்' என்பதன் முன் சேர்ப்பர்.

செறும்பு - காம வெகுளி மயக்கம். மறவலையாகி - மறத்தலிலையாகி. ஐந்தும் : ஆகுபெயர் ; என்றது ஐந்தெழுத்து மந்திரத்தை. நீல்நிறவினை என்றது தீவினையை. விள்ளா இன்பம் - நீங்காத பேரின்பம். (கூஎ)

வேறு

கூசஅ. பாடு பாணி முகமெனும் பான்மையி
னேடி யாங்கோ ருயர்வரை யுச்சிமேற்
கூடிக் கோலங் குயிற்றிப் படங்களைந்
தாடு கூத்தரி னையெனத் தோன்றினன்.

(இ-ள்.) பாடு பாணிமுகம் எனும் பான்மையின் - அருகனாகமத்திற் கூறப்பட்ட, உயிர் செல்லும் முகங்களிற் பாணிமுகம் என்னும் கதியாலே; ஓடி - சென்று; ஆங்கு ஓர் உயர்வரை உச்சிமேல் கூடி - ஆங்கு உயர்ந்த ஒப்பற்ற வெள்ளி மலைமேலே பொருந்தி; கோலம் குயிற்றி - அணியெல்லாம் புனைந்து; படம் களைந்து ஆடு கூத்தரின் - திரை நீக்கிவிட்டு ஆடும் கூத்தரைப் போல; ஐ எனத் தோன்றினான் - வியப்புறத் தோன்றினான்.

(வி-ம்.) பாணி - கை. பாணிமுகம் - கைம்முகம்; சுட்டு விரலும் பெருவிரலும் நீங்கின இடம். அதன்வடிவம் (ட). அதுபோல நேரே ஓடிப் பின் விலங்கி ஓடுதலாம். நாயுடம்பு நீங்கிய உயிர் வெள்ளிமலையை அடைந்த கதியே பாணிமுகம். இக்கதி தேவருக்கும் மக்களுக்கும் உரியதென்பர். தத்துவார்த்த சூத்திரம் என்னும் நூலிற் கூறப்பட்டுள்ளதென்பர் இப்பொருள். (கூஅ)

கூசகூ. ஞாயில் சூடிய நன்னெடும் பொன்னகர்க்
கோயில் வட்டமெல் லாங்கொங்கு சூழ்குழல்
வேயி னன்னமென் றோளியர் தோன்றியங்
காயி னார்பரி யாள மடைந்ததே.

(இ-ள்.) ஞாயில் சூடிய நல் நெடும் பொன் நகர் - மதிலை உடுத்த அழகிய பெரிய பொன்னகரிலே; கோயில் வட்டம் அங்கு எல்லாம் - கோயில் உள்ள இடம் எல்லாம்; கொங்கு சூழ் குழல் வேயின் அன்ன மென் தோளியர் தோன்றி ஆயினார் - மணஞ் சூழுங் குழலையும் வேயனைய மெல்லிய தோளையும் உடைய மகளிர் தோன்றித் தேவியர் ஆயினார்; பரியாளம் அடைந்தது - ஒழிந்த சுற்றமும் வந்தது.

(வி-ம்.) ஞாயில் - மதிலுக்கு ஆகுபெயர். கொங்கு - மணம். வேயின்அன்ன என்புழி இன்சாரியை தவிர்வழி வந்தது, வேய்அன்ன என்க. பரியாளம் - பரிவாரம். (கூகூ)

கூடு0. மிடைந்த மாமணி மேகலை யேந்தல்குற்
றடங்கொள் வெம்முலைத் தாமரை வாண்முகத்
தடைந்த சாய லரம்பையர் தம்முழை
மடங்க லேறனை யான்மகிழ் வெய்தினான்.

(இ-ள்.) மடங்கல் ஏறு அனையான் - சிங்கவேற்றைப் போன்றவன்; மிடைந்த மாமணி மேகலை ஏந்து அல்குல் - நெருங்கிய பெரிய மணிகளாலான மேகலை தாங்கிய அல்குலையும்; தடம்கொள் வெம்முலை-பெரிய விருப்பூட்டும் முலையினையும்; தாமரை வாள் முகத்து-தாமரை யனைய ஒளி பொருந்திய முகத்தினையும்; அடைந்த சாயல் - பொருந்திய மென்மையையும் உடைய;

அரம்பையர் தம் உழை-அரம்பையரிடத்தே; மகிழ்வு எய்தினன்-களிப்புற்றான்.

(வி - ம்.) மடங்கல் ஏறு - ஆண் சிங்கம். அல்குலையும் முலையினையும் முகத்தினையும் சாயலையும் உடைய அரம்பையர் என்று விதந்தார், அவர்தரும் போகவின்பத்தின் சிறப்புணர்த்தற்கு. (கoo)

வேறு

கூ௬க. கற்றவைம் பதங்கணீராக்
கருவினை கழுவப் பட்டு
மற்றவன் றேவ னாகி
வானிடு சிலையிற் றோன்றி
யிற்றத னுடம்பு மின்னா
விடரொழித் தினிய னாகி
யுற்றத னிலையும் எல்லாம்
ஓதியின் உணர்ந்து கொண்டான்.

(இ - ள்.) கற்ற ஐம்பதங்கள் நீர் ஆ - கற்ற பஞ்சநமக்கார மந்திரம் நீராகக் கொண்டு; கருவினை கழுவப்பட்டு - தீவினை கழுவப்பெற்று; அவன் வான் இடு சிலையின் தேவன் ஆகித் தோன்றி - அவன் இந்திர வில்போல வானவனாகித் தோன்றி; இற்ற தன் உடம்பும் - விடப்பட்ட தன் உடம்பையும்; இன்னா இடர் ஒழித்து இனியன் ஆகி உற்றவன் நிலையும் - துன்பந்தரும் இடரைக் கெடுத்துத் தனக்கு இனியவனாகித் தன்னைச் சேர்ந்த சீவகன் நிலையும்; எல்லாம் ஓதியின் உணர்ந்து கொண்டான் - யாவற்றையும் தன் அகஅறிவினாற் கண்டுணர்ந்தான் என்க.

(வி - ம்.) 'இற்றஅவ் வுடம்பு' எனவும், 'உற்றவன் நிலை' எனவும் பாடம்.

ஐம்பதங்கள் - ஐந்தெழுத்து மந்திரம். கருவினை - ஈண்டுத் தீவினை. முன்னர் நீனிறவினை என்றதும் நினைக. "வானிடு சிலையிற்றோன்றி" என்பதற்கு, நூல்கள் இந்திரவில் இன்னவாறு தோன்றுமென்று அது தோன்று முறைமை கூறுவாகலின் அங்ஙனம் தோன்றுகின்ற தேவர்க்கு அஃது உவமையாயிற்று. இக் கருத்தானன்றே 'வானிடு வில்லின் வரவறியா' என்றார் பிறரும்" என்று விளக்கங் கூறியுள்ளார். ஓதி - முற்பிறப்பை யுணரும் அறிவு. (கoக)

வேறு

கூ௬உ. இரும்பி னீர்மை கெடுத்தெரி தன்னிறத்
தரும்பொ னாக்கிய வாருயிர்த் தோழனை
விரும்பி விண்ணிறுத் தோய்யெனத் தோன்றினன்
சுரும்புண் கண்ணிச் சுதஞ்சண னென்பவே.

(இ - ள்.) இரும்பின் நீர்மை கெடுத்து - இரும்பைப் போன்ற இழிநிலையைக் கெடுத்து; எரிதன் நிறத்து அரும் பொன் ஆக்கிய - தீ நிறமுடைய அரிய பொன்போல உயர் நிலையை நல்கிய; ஆருயிர்த் தோழனை விரும்பி-சிறந்த உயிரனைய தோழனைக் காண வேண்டி; சுரும்பு உண்கண்ணிச் சுதஞ்சணன்- வண்டு தேனைப் பருகும் கண்ணியணிந்த சுதஞ்சணன் என்பவன்; விண் இறுத்து ஒய் எனத் தோன்றினான் - வானைக் கடந்து விரைந்து வந்து நிலமிசைத் தோன்றினான்.

(வி - ம்.) 'விண் அறுத்து' 'சுதஞ்சனன்' எனவும் பாடம். 'இரும்பு' நரகருயிர்; 'பொன்' வானவர் உயிர்; உவமை.

இரும்பினீர்மை கெடுத்து எரிதன்னிறத்து அரும்பொன் ஆக்கிய ஆருயிர்த் தோழன் என்னுமிதனை இந்நூல் ௯௧0எ-அ ஆம் செய்யுள் களால் நன்குணரலாம். விண்ணிறுத்து - வானுலகைவிட்டு ஒய்யென என்றது விரைவுக் குறிப்பு. இஃது அச்சுதஞ்சணன் செய்ந்நன்றியறிதலை விளக்கிநின்றது. சுதஞ்சணன் என்பது நாயாயிருந்து தேவனாகிய உயிர்க்குப் பெயரும் இஃதென்றுணர்த்தியபடியாம். (௧0௨)

வேறு

௬௫௩. ஓசனை நறும்புகை கமழ வொண்ணிலா
வீசிய கதிர்பரந் திமைக்கு மேனியன்
மாசறு மணிமுடி மிடைந்த மாலையன்
பூசுறு பருதியின் பொலிந்து தோன்றினான்.

(இ - ள்.) ஓசனை நறும் புகை கமழ - ஓசனையளவு நறிய புகை மணங்கமழ; ஒண் நிலா வீசிய கதிர் பரந்து இமைக்கும் மேனியன் - ஒள்ளிய நிலவைப் போல எறியும் கதிர் பரவி ஒளிரும் மெய்யினனாகவும்; மாசு அறு மணி முடி மிடைந்த மாலையன் - குற்றம் அற்ற மணிமுடியிலே நெருங்கிய மாலையனா கவும்; பூசுஉறு பருதியின் பொலிந்து தோன்றினான் - கையினாற் புனைந்த ஞாயிறு போல விளங்கித் தோன்றினான்.

(வி - ம்.) நச்சினார்க்கினியர், சுதஞ்சணன் சீவகனைக் கண்ட பொழுதே வணங்கினான் எனக்கொண்டு, 'மேனியனது முடிமிடைந்த சீவகன் அப்பொழுது பருதிபோலத் தோன்றினான்' என்று பொருள் கூறுவர்.

அவர் கூறும் விளக்கம்:—

"நறும்புகை ஓரோசனை கமழா நிற்க இமைக்கும் மேனி, நிலாவை வீசி மதிபோல விளங்கும் மேனியன்—சுதஞ்சனன். அவனுடைய முடி வந்து சேர்ந்த இயல்பினையுடையான்—சீவகன்; என்றது, இவன் ஆசிரி யன் ஆதலிற் கண்டபொழுதே முடிவணங்கினான்; மேல், 'எந்தை' (சீவக- ௯௫௩); 'அண்ணல் ஏந்தி' (ஷை-௧௧௫அ); 'காய் கதிர் சுமந்து' (ஷை ௧௧௬அ);

'உரிமை தன்னால் ஆட்டி' செ-கககூகூ); 'எரிபொன் நீள் முடிகவித்தனன் பவித்திரற் றெழுதே' (செ-உநகூகூ); 'தாளார ஏத்தி' (செ - நகூநஎ); 'களிப்புற்றான்' (நகூஅரு) என்று கூறுமவைகளான் இதுவே கருத்தாம். விளக்கத்தானும் மதியைத் தோற்றுவித்தலானும் பருதி யுவமை. இனி, மேனியனாய், மாலையனாய்ப் பருதியிடத்தே தோன்றினான் என்பாரும் உளர்." (கoந)

வேறு

கூருச. குன்றெனத் திரண்ட தோளான்
குறுகலுங் குமர னோக்கி
நின்றவ னெடுங்க ணொன்று
மிமைப்பில நிழலில் யாக்கை
யன்றியுங் கண்ணி வாடா
தமரனே யென்று தேறி
நன்றவன் வரவு கேட்பா
னம்பி நீயாரை யென்றான்.

(இ - ள்.) குன்று எனத் திரண்ட தோளான் குறுகலும் - மலைபோலத் திரண்ட தோளையுடைய சுதஞ்சணன் நெருங்குதலும்; குமரன் நோக்கி - சீவகன் பார்த்து; நின்றவன் நெடுங்கண் ஒன்றும் இமைப்பில - இங்கு நின்றவனுடைய நீண்ட கண்கள் சிறிதும் இமைப்பிலவாயின!; நிழல் இல் யாக்கை - உடம்போ நிழலில்லாதது!; அன்றியும் கண்ணி வாடாது - மேலும் கண்ணியும் வாடவிலது; அமரனே என்று தேறி - (ஆதலால்) வானவனே என்று தெளிந்து; அவன் வரவு நன்று கேட்பான் - அவன் வரவை நன்றாக அறியவேண்டி; நம்பி! நீ யார்? என்றான் - நம்பியே! நீ யார்? என்று வினவினான்.

(வி - ம்.) யாரை : ஐ; அசை. 'அமரனே ஆதல் தேறி' என்றும் பாடம்.

தோளான் : சுதஞ்சணன். குமரன் : சீவகன். ஒன்றும் என்றது சிறிதும் என்னும் பொருள் குறித்துநின்றது. கண்ணிமையாமையும் உடற்கு நிழல்படாமையும் கண்ணிவாடாமையும் தேவர்கட்குரிய அடையாளங்கள். இவ்வுடலை "வைக்கிரிக சரீரம்" என்று வழங்குப. நம்பி : அண்மை விளி. (கoச)

கூருரு. குங்குமக் குவட்டின் வீங்கிக்
கோலம்வீற் றிருந்த தோளா
யிங்குநின் னருளிற் போகி
யியக்கரு ளிறைவ னாகிச்

சங்கவெண் மலையின் மற்றுச்
சந்திரோ தயத்தி னுச்சி
யங்கியா னுறைவ லெந்தை
யறிகமற் றென்று சொன்னான்.

(இ - ள்.) குங்குமக் குவட்டின் வீங்கிக் கோலம் வீற்று இருந்த தோளாய்! - குங்கும மலைபோலப் பருத்து அழகு குடி கொண்ட தோளனே!; எந்தாய்! - எந்தையே!; இங்கு நின் அருளின் போகி - இங்கிருந்து நின் அருளினாற் சென்று; இயக்கருள் இறைவன் ஆகி - இயக்கருக்குத் தலைவன் ஆகி; சங்க வெண்மலையின் உச்சி-சங்க வெண்மலையின்மேல்; சந்திரோதயத்தின் - சந்திரோதயம் என்னும் நகரிலே; அங்கு யான் உறைவல்- அங்கே நான் வாழ்கின்றேன்; அறிக என்று சொன்னான்-அறிந்து கொள்க என்று சுதஞ்சணன் கூறினான்.

(வி - ம்.) குவட்டின்: இன்: உவமப் பொரு. மற்று: இரண்டும் அசை.

தோளாய்! யான் நின் அருளிற்போகி, "இயக்கர் தலைவனாகிச் சங்க மலை உச்சியிலுள்ள சந்திரோதயம் என்னும் நகரத்திலே உறைவல்" என்றான் என்க. சங்கமலை - ஒருமலையின் பெயர்; சந்திரோதயம் - அம் மலைக்கண் உள்ளதொரு நகரத்தின் பெயர் என்க. தன் அன்புடைமை தோன்றத் தான் பெற்றுள்ள தேவவுடம்பிற்குக் காரணனாதல் பற்றி எந்தை என்றான் என்க. (௧௦௫)

௯௩௯. என்றவ னுரைப்பக் கேட்டே
இமயமு நிகர்க்க லாற்றாப்
பொன்றரு மாரி வண்கைப்
புரவலன் புகன்று நோக்கி
வென்றவர் உலகம் பெற்ற
வேந்துடை யின்ப மெல்லா
மின்றெனக் கெதிர்ந்த தென்றா
னெரியுமிழ்ந் திலங்கும் வேலான்.

(இ - ள்.) என்று அவன் உரைப்பக் கேட்டு - இவ்வாறு அவன் கூறக் கேட்டு; இமயமும் நிகர்க்கல் ஆற்றா - இமயமலையும் உவமைக் கொவ்வாத; பொன்தரு மாரி வண்கைப் புரவலன்- கற்பகத் தருவையும் முகிலையும் போன்ற கொடைக்கையனான; எரி உமிழ்ந்து இலங்கும் வேலான் - அனல் சொரிந்து விளங்கும் வேலினான்; புகன்று நோக்கி - விரும்பிப் பார்த்து; வென்றவர் உலகம் பெற்ற - சித்த க்ஷேத்திரத்தைப் பெற்ற; வேந்து உடை இன்பம் எல்லாம் - சித்தபரமேட்டிகளின் இன்பம் முற்றும்;

இன்று எனக்கு எதிர்ந்தது என்றான் - இப்போது எனக்குக் கிடைத்தது என்றுரைத்தான்.

(வி - ம்.) இமயமும் நிகர்க்கலாற்றாப் புரவலன், பொன்தரு மாரி வண்கைப் புரவலன் எனத் தனித்தனி கூட்டுக. இமயமலை உலகந் தாங்குதற்குச் சீவகனுக்குக் கூறப்பட்ட மாறுபடவந்த உவமத் தோற் றம். நச்சினார்க்கினியர் இமயமலையைப் பொன்னுக்கு அடையாக்குவர். பொன்றரு - கற்பகத்தரு. மாரி - முகில். புகன்று - விரும்பி. ஈத்துவக் கும் இன்பமே இன்பங்களுட் சிறந்தமைபற்றிச் சித்தபரமேட்டியின் இன்பத்தை உவமையாக எடுத்தான். (கoசு)

கூருஎ. சூடுறு கழலி னாற்குச் சுதஞ்சண னிதனைச் சொன்னான்
பாடல்வண் டரற்றும் பிண்டிப் பகவன திறைமை போல
மூடியிவ் வுலக மெல்லா நின்னடித் தருவ லின்னே
யாடியுட் பாவை போனீ யணங்கிய தணங்க வென்றான்.

(இ - ள்.) சூடுறு கழலினாற்குச் சுதஞ்சணன் இதனைச் சொன்னான் - அணிந்த கழலானுக்குச் சுதஞ்சணன் இதனைக் கூறினான்; பாடல் வண்டு அரற்றும் பிண்டிப் பகவனது இறைமைபோல - பாட்டையுடைய வண்டுகள் முரலும் அசோகின் நீழலில் அமர்ந்த முதல்வனுடைய தலைமை இவ்வுலகை யெல்லாம் அகப்படுத்தினாற்போல; இவ்வுலகம் எல்லாம் மூடி - நின் இறைமையாலே இவ்வுலகெலாம் அகப்படுத்தி; ஆடியுள் பாவைபோல் - கண்ணாடியிடத்துப் பாவைபோல; நீ அணங்கி யது அணங்க - பல்லுயிரும் நீ வருந்திய தொழிலுக்கு வருந்து மாறு; இன்னே நின் அடித்தருவல் என்றான் - இப்போதே நின் அடியிடத்தே தருவேன் என்றான்.

(வி - ம்.) உள் - இடம்.

சூடுறுகழல் - சூடுதலுற்ற வீரக்கழல் என்க. கழலினான் : சீவகன். இதனை என்றது கீழ்வருவதனை என்றவாறு. பகவன் - அருகக் கடவுள். மூடி - அகப்படுத்தி. ஆடியுட்பாவை - கண்ணாடியிற்றோன்றும் எதிர் உருவம். அணங்கியது : பெயர்; வருந்தியதற்கு என்க "கையும் காலுந் தூக்கத் தூக்கும் ஆடிப்பாவை போல" என்றார் குறுந்தொகை யினும் (அ). நீ அணங்கிய தணங்க என்றதற்கு "மன்னுயிரெல்லாம் நின்னஞ்சுமே" என்று நச்சினார்க்கினியர் காட்டிய எடுத்துக் காட்டு அவர் உரையோடு பொருந்திற்றில்லை. மன்னுயிர் எல்லாம் உடலாகவும் மன்னன் உயிராகவும் கூறப்படுதலின், உயிர் வருந்துதற்கு உடலும் வருந்துதல் போன்று நீ வருந்தியதற்கு வருந்தும் அன்புடைய உயிர் களை உடைத்தாக இவ்வுலகத்தை ஆக்கி நின்னடித் தருவல் என்பதே நூலாசிரியர் கருத்தாதல்வேண்டும் என்க. (கoஎ)

கூருஅ. வாளொடு வயவ ரீண்டி வாரணத் தொழுவின் முற்றி
மீளிமை செய்யின் வெய்ய நண்பநின் னினைப்ப தல்லால்

நாளொடு பக்கம் நைந்து வீழினும் வீழ்த லில்லாக்
கோளுடைக் கிழமை யோப்பாய் குறைவிலன் பிறவி
[னேன்றான்.

(இ - ள்.) நாளொடு பக்கம் நைந்து வீழினும் - நாட்களும் பக்கங்களும் கெட்டு வீழ்ந்தாலும்; வீழ்தல் இல்லாக் கோள் உடைக்கிழமை ஒப்பாய் - வீழுந்தன்மை இல்லாத கோள்களின் உரிமை போன்ற உரிமையுடையாய்!; வாளொடு வயவர் ஈண்டி - வீரர்கள் வாளுடன் குழுமி; வாரணத் தொழுவின் மூற்றி - யானைத் தொழுவுடன் என்னை வளைத்து; மீளிமை செய்யின் - வன்மை செய்தாராயின்; வெய்ய நண்ப! - விருப்பம் ஊட்டும் நண்பனே!; நின் நினைப்பது அல்லால் - உன்னைச் சிந்திப்பதன்றி; பிறவின் குறைவு இலன் என்றான் - பிறவாற்றான் யாதும் குறை விலேன் என்றுரைத்தான்.

(வி - ம்.) அருமை நோக்கிச், 'செய்யின்' என்றான். அங்ஙனம் மேல்வருகின்ற ஊழ் இக் கருத்தினைப் பிறப்பித்து நின்றது.

இங்கு நச்சினார்க்கினியர், "'மூற்றி' எனவே சிறைகோடலன்றிக் கட்டுதல் இன்மை உணர்க" எனத் தாம் பின்னர்க் கூறும் உரைக்கேற்ப முன்மொழிந்து கொள்கின்றனர். (கΌஅ)

கூருகூ. இன்னிழ லிவரும் பூணா
னிருவிசும் பிவர்த லுற்றுப்
பொன்னெழு வனைய தோளாற்
புல்லிக்கொண் டினைய கூறி
நின்னிழல் போல நீங்கே
னிடர்வரி னினைக்க வென்று
மின்னெழூஉப் பறப்ப தோத்து
விசும்பிவர்ந் தமரன் சென்றான்.

(இ - ள்.) இன் நிழல் இவரும் பூணான் - இனிய ஒளி பரவும் கலன் அணிந்த சுதஞ்சணன்; இரு விசும்பு இவர்தல் உற்று - பெருவானிலே செல்லக்கருதி; பொன் எழு அனைய தோளான் புல்லிக் கொண்டு - பொற்றாண் போன்ற தோளானைத் தழுவிக்கொண்டு; நின் நிழல்போல நீங்கேன் - உன் நிழலைப் போல நீங்காமல் இருப்பேன்; இடர் வரின் நினைக்க என்று - நினக்குத் துன்பம்வரின் நினைந்திடுக என்று; இனைய கூறி - இவை போன்ற இனிய மொழிகளை இயம்பி; மின் எழூஉப் பறப்பது ஒத்து - மின்னல் எழுந்து பறப்பது போல; விசும்பு இவர்ந்து அமரன் சென்றான் - விண்ணிலே எழுந்து அச் சுதஞ் சணன் சென்றான்.

(வி - ம்.) அமரனாகிய பூணான் என்க. பூணான்: சுதஞ்சணன்: தோளான் சீவகன். எழூஉ - எழுந்து. (௧௦௯)

௬௬௦. சொல்லிய நன்மை யில்லாச் சுணங்கனிவ் வுடம்பு நீங்கி
யெல்லொளித் தேவ னாகிப் பிறக்குமோ வென்ன வேண்டா
கொல்லுலை யகத்திட் டூதிக் கூரிரும் பிரதங் குத்த
வெல்லையில் செம்பொ னாகி யெரிநிறம் பெற்ற தன்றே.

(இ - ள்.) சொல்லிய நன்மை இல்லாச் சுணங்கன் - நன்மையென்று கூறப்பட்டவை ஒன்றும் இம்மையிற் செய்தறியாத நாய்; இவ் உடம்பு நீங்கி எல் ஒளித்தேவன் ஆகி - இம் மெய்யை விட்டு (இதற்கு முன்னர்ச் செய்த நல்வினை வந்து துணையாகி ஒருவன் கூறிய மறையினால்) பேரொளியுறும் வானவன் ஆகி; பிறக்குமோ என்ன வேண்டா - பிறக்குமோ என்று (உலகினர்) கருத வேண்டா. கொல் உலை அகத்து இட்டு ஊதி - கொல்லன் உலையிலே வைத்து ஊதி; இரதம் குத்த - (உருகின போது) இரதத்தை வார்க்க; கூர் இரும்பு எல்லை இல் செம்பொன் ஆகி - மிக்க இரும்பு மாற்றற்ற செம்பொன் ஆகி; எரி நிறம் பெற்றது அன்றே - தீயின் நிறத்தை அடைந்தது அல்லவா? (ஆகையால்).

(வி - ம்.) முன், 'பெருநவை அகற்றினான்' (சீவக. ௬௫௬) என்றது உருகு முகத்திற்குவமை. (௧௧௦)

வேறு

௬௬௧. எரிமாலை வேனுதியி னிறக்கிக் காம னடுகணையாற்
றிருமாலை வெம்முலைமேற் றிளைக்குந் தேவர் திருவுறுக
வருமாலை யெண்வினையு மகற்றி யின்பக் கடலாக்கித்
தருமாலை யல்லதியான் றலையிற் றாழ்ந்து பணிவேனே.

(இ - ள்.) எரிமாலை வேல் நுதியின் இறக்கி-எரியொழுங்கு போலும் வேலின் முனைகளான் இரணியன் முதலானோரைக் கொன்று; காமன் அடுகணையால் - (பின் காமனுக்குத் தோற்று) அவன் எய்த கணைகளினாலே; திருமாலை வெம்முலை மேல் திளைக்கும் தேவர் திருஉறுக - திருமகளின் மாலையணிந்த விருப்பமூட்டும் முலைகளின்மேல் இன்பந் துய்க்கும் திருமால் முதலான வானவர்கள் எல்லோரும் செல்வம் எய்துக; அருமாலை எண் வினையும் நீக்கி-நீக்குதற்கரிய எண் வினைகளையும் நீக்கி; இன்பக் கடல் ஆக்கி-வீட்டின்பத்தை உண்டாக்கி; தரும் மாலை அல்லது - தரும் அருகனை அல்லாமல்; யான் தலையின் தாழ்ந்து பணிவேனோ? - நான் தலையினால் தாழ்ந்து வணங்குவேனோ?

(வி - ம்.) எண் வினைகளை, 'எண்மர் கவிழ்ந்தனர்' (சீவக. ௩0எகு) எனத் துறவில் விரியக் கூறுவர்.

எரிமாலை - தீயின் ஒழுங்கு. நுதி - நுனி. இறக்கி - இறக்கச் செய்து. இரணியன் முதலிய பகைவரைப் படைக்கலனாற் கொன்றமை திருமால் முதலிய தேவர்கட்குச் சினமுண்மையைக் காட்டுதலானும் காமன்கணையால் நொந்து அத்தேவர் மகளிர் போகமுடைய ராதலைக் காட்டுதலானும் இவ்வாற்றால் காமவெகுளி மயக்கமுடைய அத்தேவர் இறைவர் ஆகார் என்பது கருத்து. திருவுறுக என்றது இகழ்ச்சிக் குறிப்பு. எண்வினை - ஞானாவரணீயம் முதலியன. மாலை அல்லது என்புழி மால் அருகக் கடவுள். (ககக)

கூகூஉ. ஒன்றாய வூக்கவேர் பூட்டி
யாக்கைச் செறுவுழுது
நன்றாய நல்விரதச் செந்நெல்
வித்தி யொழுக்கநீர்
குன்றாமற் றாங்கொடுத்தைம் பொறியின்
வேலி காத்தோம்பின்
வென்றார்தம் வீட்டின்பம் விளைக்கும்
விண்ணோ ருலகீன்றே.

(இ - ள்.) ஒன்றாய ஊக்க ஏர் பூட்டி - பிளவுறாத ஊக்க மாகிய ஏரைப்பூட்டி; யாக்கைச் செறுஉழுது - உடம்பாகிய செய்யைத் தவத்தாலே வருந்துவித்து; நன்று ஆய நல்விரதச் செந்நெல் வித்தி - நல்ல நோன்பாகிய செந்நெல்லை விதைத்து; ஒழுக்கம் நீர் குன்றாமல் தாம் கொடுத்து - நல்லொழுக்கமாகிய நீரை வற்றாமற் பாய்த்தி; ஐம்பொறியின் வேலி காத்து ஓம்பின் - ஐம்பொறியாகிய வேலியைப் புலனாகிய பசுக்கள் பிரியாத வண்ணம் காத்துத் தீங்கைத் தடுத்தால்; (அந்நிலை) விண்ணோர் உலகு ஈன்று - முதலில் துறக்கத்தினை நல்கி; வென்றார் தம் வீட்டு இன்பம் விளைக்கும் - புலனை வென்ற சித்த பரமேட்டி களின் பேரின்ப வீட்டினைத் தரும்.

(வி - ம்.) ஊக்கத்திற்கு ஏரும், யாக்கைக்கு வயலும், விரதத்திற் குச் செந்நெல்லும், ஒழுக்கத்திற்கு நீரும் பொறியடக்கத்திற்கு வேலியும் வீட்டின்பத்திற்கு அச்செந்நெல் விளைவும் உவமைகள். வென்றார் - சித்தபரமேட்டிகள். (கூகூ0) 'சொல்லிய' முதலிய மூன்று கவியும் சீவகன் தோழரை நோக்கிக் கூறியவை. (ககஉ)

வேறு

கூகூ௩. இத்தலை யிவர்க ளேக
விமயநாட் டரவு சுற்றி
யத்தலை யலற முந்நீர்
கடைந்தவ ரரவ மோப்ப

மைத்தலை நெடுங்க ணாரு
    மைந்தரு மறலி யாட
மொய்த்திள வன்ன மார்க்கு
    மோட்டிரும் பொய்கை புக்கார்.

(இ - ள்.) இவர்கள் இத்தலை ஏக-சீவகனும் தோழர்களும் இங்கிருந்து செல்ல; மைத்தலை நெடுங்கணாரும் மைந்தரும் - மை தீட்டிய நெடுங்கண் மகளிரும் மைந்தரும்; அத்தலை இமயம் நட்டு அரவு சுற்றி - அக் காலத்தே இமயத்தை நட்டுப் பாம்பைச் சுற்றி; முந்நீர் அலறக் கடைந்தவர் அரவம் ஒப்ப - கடல் அலறுமாறு கடைந்தவர்களின் ஆரவாரம் போல; மறலி ஆட - மாறுபட்டு ஆடுதற்கு; இள அன்னம் மொய்த்து ஆர்க்கும் - இளமையான அன்னங்கள் மொய்த்து ஆரவாரிக்கும்; மோட்டு இரும் பொய்கை புக்கார்-மேன்மையான பெரிய பொய்கையை அடைந்தனர்.

(வி - ம்.) மந்தரத்தின் தொழிலை இமயத்துக் கேற்றினர், அது மலையரையன் ஆதலின்; 'இமயவில் வாங்கிய' (கலி. ௩அ) என்றார் பிறரும்; (மேருவின் தொழிலை இமயத்திற் கேற்றுதல்) அத்தலை - அக்காலத்து. (௧௧௩)

௬௬௪. கலங்தெழு திரைநுண் ணுடைக்
    கடிக்கய மடந்தை காம
ரிலங்குபோற் கலாபத் தல்கு
    லிருகரைப் பரப்பு மாக
வலர்ந்ததண் கமலத் தம்போ
    தணிதக்க முகத்திற் கேற்ப
நலங்கெழு குவளை வாட்க
    ணன்னுத னலத்தை யுண்டார்.

16209
3372722

(இ - ள்.) இருகரைப் பரப்பும் - இருகரை யிடமும்; காமர் இலங்கு பொன் கலாபத்து அல்குல் ஆக - அழகிய விளக்கமுற்ற பொன் மேகலை அணிந்த அல்குலாகவும்; கலந்து எழுதிரை நுண் ஆடை - அதிலே கலந்து எழுகின்ற அலையாகிய நுண்ணிய ஆடையினையும்; அலர்ந்த தண்கமலத்து அம்போது அணிதக்க முகத்திற்கு ஏற்ப - மலர்ந்த தண்ணிய தாமரைப் போதாகிய அழகிய முகத்திற்குத்தக; நலம் கெழுகுவளை வாள்கண் - அழகு பொருந்திய குவளையாகிய வாட்கண்ணினையும் உடைய; கடிக் கய மடந்தை காமர் நன்னுதல் நலத்தை உண்டார் - மணமுறுங் கயமாகிய மடந்தையாகிய அழகிய நன்னுதலாளின் நலத்தைப் பருகினர்.

(வி - ம்.) 'அணிதக்க குவளை வாட்கண்' என்று கூட்டி, 'ஏற்ப' என்னும் எச்சம் தக்க என்னும் வினைகொண்டது என்பர் நச்சினார்க்கினியர்.

இந் நூலாசிரியர் கலைபயிலுதல் அரசு கட்டிலேறுதல் முதலியவற்றையும் திருமணமாகக் கூறும் தம் வழக்கத்திற்கேற்பவே ஈண்டும் புனலாட்டின்பத்தையும் மகளிர் போகமாகவே கூறுகின்றார். கடிக்கயமடந்தை - மணமுடைய குளமாகிய நங்கை. கலாபம் - ஓர் அணிகலன். அணிதக்க முகம் - அழகு வீற்றிருத்தற்கு ஏற்ற முகம். நன்னுதல்: அன்மொழி. (ககச)

ருசரு. தண்ணுமை முழவ மொந்தை
தகுணிச்சம் பிறவு மோசை
யெண்ணிய விரலோ டங்கை
புறங்கையி னிசைய வாக்கித்
திண்ணிதிற் றெறித்து மோவார்
கோட்டியுங் குடைந்து மாடி
யொண்ணுதன் மகளிர் தம்மோ
டுயர்மிசை யவர்க ளொத்தார்.

(இ - ள்.) தண்ணுமை முழவம் மொந்தை தகுணிச்சம் - தண்ணுமை முதலியவற்றின் ஓசைகளையும்; பிறவும் எண்ணிய ஓசை - மற்றும் எண்ணிய கருவிகளின் ஓசைகளையும்; விரலோடு அங்கை புறங் கையின் இசைய - விரலாலும் உள்ளங்கையாலும் புறங்கையாலும் பொருந்துமாறு; திண்ணிதின் தெறித்தும் கொட்டியும் குடைந்தும் ஆக்கி - உறுதியாகத் தெறித்தும் தட்டியும் கலக்கியும் நீரிலே பிறப்பித்து; ஓவார் - ஒழிவிலராய்; ஒண் நுதல் மகளிர் தம்மோடு ஆடி - ஒள்ளிய நெற்றியையுடைய மகளிருடன் ஆடி; உயர்மிசை யவர்கள் ஒத்தார் - வானுலகத்தவரைப் போன்றனர் ஆடவர்கள்.

(வி - ம்.) தண்ணுமை முழவம் மொந்தை தகுணிச்சம் என்பன இசைக்கருவிகள். உயர்மிசையவர்கள் - வானவர். இன்ப நுகர்ச்சிக்கு வானவர் உவமை. (ககரு)

ருசசு. சிவிறியின் மாறு தூயுங்
குங்கும மெறிந்துந் தேங்கோ
ளுவறுநீ ருழக்கி யோட்டி
யுடைபுறங் கண்டு நக்குத்
தவறெனத் தாமம் பூட்டித்
தருதிறை கொண்டு மின்பத்
திவறினார் காம வெள்ளத்
தேத்தருந் தன்மை யாரே.

(இ - ள்.) தேன் கொள் உவறு நீர் - இனிமை கொண்ட ஊற்று நீரில்; சிவிறியின் மாறு தூயும் - நெடுந்துருத்தியினால் மாறுகொண்டு தூவியும்; -குங்குமம் எறிந்தும் - குங்குமத்தை மேலே வீசியும்; உழக்கி ஒட்டி உடைபுறம் கண்டு நக்கு-(நீரைக்) கலக்கி வெளியேற்றித் தோல்வி கண்டு நகைத்து; தவறு எனத் தாமம் பூட்டித் தரு திறை கொண்டும் - அஞ்சினாய் ஆகையால் தவறு செய்தாய் என்று கூறி மலர்மாலையாற் பிணித்துத் திறை பெற்றும்; ஏத்தருந் தன்மையார் - புகழ்தற்கரிய பண்பினார்; காம வெள்ளத்து இன்பத்து இவறினார் - (மேலும்) காம வெள்ள இன்பத்திலேமிகுந்தனர்.

(வி - ம்.) தரு திறை: புணர்ச்சியின்பம்.

சிவிறி - நீர் வீசுமொரு கருவி. தூயும் - தூவியும். மாறுதூவுதல் - ஒருவர்மேல் ஒருவர் எதிர்நின்று தூவுதல். உடைபுறம் - உடைதலானே காட்டப்படும் முதுகு. உவறு நீர் - ஊறும் நீர்; 'உவறு நீர் உயர் எக்கர்' என்றார் கலியினும் (கஙசு.) இவறுதல் - மிகுதல். (ககசு)

சுசுஎ. சாந்தக நிறைந்த தோணி
தண்மலர் மாலைத் தோணி
பூந்துகி லார்ந்த தோணி
புனைகலம் பெய்த தோணி
கூந்தன்மா மகளிர் மைந்தர்
கொண்டுகொண் டேறிய வோடித்
தாந்திரைக் கலங்கள் போலத்
தாக்குபு திரியு மன்றே.

(இ - ள்.) கூந்தல் மா மகளிர் மைந்தர் கொண்டு கொண்டு ஒடி எறிய - கூந்தலையுடைய மகளிரும் ஆடவரும் சாந்து முதலியவற்றைக் கொண்டு ஓடி எறிதலால்; சாந்தகம் நிறைந்த தோணி - சாந்தைத் தன்னிடத்தே கொண்ட தோணியும்; தண் மலர் மாலைத் தோணி-குளிர்ந்த மலர்மாலை கொண்ட தோணியும்; பூந்துகில் ஆர்ந்த தோணி - பூவேலை செய்த ஆடை நிறைந்த தோணியும்; புனைகலம் பெய்த தோணி - அணிகலம் கொண்ட தோணியும்; தாம் - ஆகிய இவைகள்; திரைக் கலங்கள் போல - கடலிற் கலங்கள் போல; தாக்குபு திரியும் - தம்மில் தாக்கித் திரியும்.

(வி - ம்.) அன்று, ஏ: அசைகள்.

நீராட்டுவிழவிற்குவேண்டிய சாந்து முதலியவற்றை யுடையவாய் நீரிலே நின்ற பல்வேறு தோணிகளும் அவர்கள் நீராட்டின் எழுந்த அலைகளான் அலைப்புண்டு ஒன்றனோடொன்று தாக்கித் திரியும் என்றவாறு. தாக்குபு - தாக்கி. (ககஎ)

சுசுஅ. கலிவளர் களிறு கைந்நீர்
சோரிவ போன் முத்த மாலை
பொலிவோடு திவண்டு பொங்கிப்
பூஞ்சிகை யலமந் தாடக்
குலிகநீர் நிறைந்த பந்திற்
கொம்பனு ரோச்ச மைந்தர்
மெலிவுகண் டுவந்து மாதோ
விருப்பொடு மறலி னுரே.

(இ - ள்.) முத்த மாலை பொலிவொடு திவண்டு பொங்கி - முத்துமாலை அழகுற அசைந்து பொங்க; பூஞ்சிகை அலமந்து ஆட - பின்னின மயிர் சுழன்று அசைய; கொம்பனுர்-பெண்கள்; கலிவளர் களிறு கை நீர் சொரிவ போல் - தழைத்துநீண்ட, களிற்றின் துதிக்கை நீரைச் சொரிவனபோல; குலிக நீர் நிறைந்த பந்தின் - செங்குலிக நீர் நிறைந்த மட்டத் துருத்தியினுல்; ஓச்ச-நீரை வீசி; மைந்தர் மெலிவு கண்டு உவந்து - ஆடவரின் சோர்வு கண்டு மகிழ்ந்து; விருப்பொடு மறலினுர் - (மேலும்) விருப்பத்துடன் மாறுபட்டார்.

(வி - ம்.) பொங்கி-பொங்க: எச்சத் திரிபு. மாது, ஓ: அசைகள்.

கலிவளர் களிறு என்றதற்குச் செருக்கு மிகாநின்ற களிறு எனலுமாம். குலிகம் - சாதிலிங்கம். பந்து, இதுவுமோர் வகைத் துருத்தி; இதனை மட்டத்துருத்தி என்பர். (ககஅ)

சுசாசு. வண்ணவொண் சுண்ணம் பட்டு
மாலையுஞ் சாந்து மேந்தி
யெண்ணருந் திறத்து மைந்த
ரேதிரேதி ரேறிய வோடி
விண்ணிடை நுடங்கு மின்னு
மீன்களும் பொருவ போல
மண்ணிடை அமரர் கொண்ட
மன்றலோத் திறந்த தன்றே.

(இ - ள்.) விண்ணிடை நுடங்கும் மின்னும் மீன்களும் பொருவ போல - வானிலே அசையும் மின்கொடியும் மீன்களும் தம்மிற் பொருவன போல; வண்ண ஒண் சுண்ணம் பட்டும் மாலையும் சாந்தும் ஏந்தி - அழகிய ஒள்ளிய சுண்ணப் பொடியையும் பட்டையும் மாலையையும் சாந்தையும் ஏந்தி; எண் அருந் திறத்து மைந்தர் - எண்ணற்கரிய ஆடவர்கள்; எதிர் எதிர் எறிய - (மகளிரின்) எதிரே எதிரே எறிய; மண் இடை அமரர்

கொண்ட மன்றல் ஒத்து - நிலமிசை வானவர்கொண்ட மணம் போல; ஓடிஇறந்தது - (அவ்விரு திறத்தாரும்) சோர்ந்த பிறகு நீர்விளையாட்டுக்) கழிந்தது.

(வி - ம்.) வண்ண ஒண் சுண்ணம் - நன்னிறமும் ஒளியும் உடைய நறுமணப் பொடி. மீன்கள்மைந்தர்க்கும் நுடங்குமின் மகளிர்க்கும் உவமையாகக் கொள்க. மன்றல் - திருமணம். இந்நீராட்டு விழா தேவர் திருமண விழாப் போன்றிருந்தது என்பது கருத்து. (கககூ)

வேறு

கூஎ0. உரைத்த வெண்ணெயு மோண்ணறுஞ் சுண்ணமு
மரைத்த சாந்தமு நானமு மாலையு
நுரைத்து நோன்சிறை வண்டோடு தேனின
மிரைத்து நீர்கோழித் தின்ப மிறந்ததே.

(இ - ள்.) உரைத்த எண்ணெயும் - தேய்த்துக்கொண்ட எண்ணெயும்; ஒள் நறுஞ் சுண்ணமும் - சிறந்த சுண்ணப் பொடியும்; அரைத்த சாந்தமும்-அரைத்த சந்தனமும்; நானமும் மாலையும் - கத்தூரியும் மாலைகளுமாக; நுரைத்து-நுரை செய்து; நோன்சிறை வண்டொடு தேன் இனம் இரைத்து - வலிய சிறகு களையுடைய வண்டும் தேன் இனமும் முரன்று; கொழித்து - தெளிவுடையதாய்; நீர் இன்பம் இறந்தது-நீர் இனிமை மிகுந்தது.

(வி - ம்.) உரைத்த முதலிய பெயரெச்சங்கள் செயப்படு பொருளன.

உரைத்த-உரைக்கப்பட்ட; அரைத்த-அரைக்கப்பட்ட, நுரைத்து-நுரைக்கப்பட்டு, இரைத்து - இரைக்கப்பட்டென இவ்வெச்சங்களை செயப்பாட்டு எச்சங்களாகக் கொள்க. இன்பம் இறந்ததே என்பதற்கு தனது நலமிழந்தது எனலுமாம். என்னை? நீராடியபின் அந்நீர் உண்ணவும் ஆடவும் தகுதியற்றதாகும் என்பதே பரிபாடலினும் காணப்பட்டது ஆகலான் என்க.

"கழுநீர மஞ்சனக் குங்குமக் கலங்கல்
வழிநீர் விழுநீர அன்று வையை."

என்பது பரிபாடல். (க௨0)

வேறு

கூஎக. கத்திகைக் கண்ணி நெற்றிக் கைதொழு கடவு ளன்ன
வித்தக விளைய ரெல்லாம் விழுமணிக் கலங்க டாங்கி
முத்தணிந் தாவி யூட்டி முகிழ்முலை கச்சின் வீக்கிப்
பித்திகைப் பிணையல் சூழ்ந்து பெண்கொடி போலிந்த வன்றே

(இ - ள்.) கத்திகைக் கண்ணி நெற்றிக் கைதொழு கடவுள் அன்ன - குருக்கத்திக் கண்ணியணிந்த நெற்றியை உடைய, யாவரும் கைகுவித்துத் தொழும் முருகனைப் போன்ற; வித்தக இளையர் எல்லாம் விழுமணிக் கலங்கள் தாங்கி - திறமுடைய இளைஞர்கள் யாவரும் சிறந்த மணியணிகளைப் புனையவும்; பெண் கொடி - பெண் கொடிகள் எல்லாம்; ஆவி ஊட்டி - கூந்தலுக்கு அகிற்புகையூட்டி; முத்து அணிந்து முகிழ்முலை கச்சின் வீக்கி - முத்துமாலை அணிந்து, அரும்பனைய முலைகளைக் கச்சினால் இறுக்கி; பித்திகைப் பிணையல் சூழ்ந்து - பிச்சிமாலை புனைந்து; பொலிந்த - பொலிவுற்றன.

(வி - ம்.) கத்திகை - குருக்கத்தி மலர். கண்ணி - தலையிற் சூடும் மாலை. உலகெலாங் கைதொழுதற்குரிய கடவுள் என்க. கடவுள்-ஈண்டு முருகன். வித்தகம் - சதுரப்பாடு விழுமணி - சிறந்தமணி. தாங்கி என்னும் எச்சத்தைத் தாங்க எனத் திரித்துக் கொள்க. ஆவி - நறுமணப் புகை. பித்திகைப் பிணையல் - பிச்சிமலர் மாலை. பெண் கொடிகள் பல பொலிந்த எனப் பலவின்பால் முற்றுவினையைக் கூட்டுக. (கஉக)

கூஎஉ. திருந்துபொற் றேருஞ் செம்பொற்
சிவிகையு மிடைந்து தெற்றிக்
கருங்கயக் களிறு மாவுங்
காலியற் பிடியு மீண்டி
நெருங்குபு மள்ளர் தொக்கு
நெடுவரைத் தொடுத்த வெள்ளங்
கருங்கடற் கிவர்ந்த வண்ணங்
கடிநகர்க் கெழுந்த வன்றே.

(இ - ள்.) திருந்து பொன் தேரும் - அழகிய பொற்றேரும்; செம்பொன் சிவிகையும்-செம்பொன்னாலான பல்லக்கும்; மிடைந்து தெற்றி - நெருங்கிப் பிணங்கி; கருங்கயக் களிறும் - கரிய பெரிய களிறுகளும்; கால்இயல் பிடியும் - காற்றெனச் செல்லும் பிடியும்; மாவும் நெருங்குபு-புரவிகளுமாக நெருங்கி; மள்ளர் தொக்கு-வீரர் குழுமி; நெடுவரைத் தொடுத்த வெள்ளம்-பெரிய மலையினின்றும் இடையறாது பெருகும் வெள்ளம்; கருங்கடற்கு இவர்ந்த வண்ணம்-கரிய கடலை நோக்கிச் சென்றாற் போல; கடிநகர்க்கு எழுந்த - காவலையுடைய நகருக்குப் போயின.

(வி - ம்.) தெற்றுதல் - செறிதல். கருங்கயக்களிறு என்புழி கய உரிச்சொல்; பெருமைப் பண்பு குறித்து நின்றது. மா - குதிரை. கால்-காற்று. நெருங்குபு - நெருங்கி. வெள்ளம் - நீராடிமீளும் குழுவிற் குவமை. கருங்கடல் - நகரத்திற்குவமை. (கஉஉ)

வேறு

கூளரு. கடலெனக் காற்றெனக் கடுங்கட் கூற்றென
வுடல்சின வுருமென வூழித் தீயெனத்
தொடர்பிணி வெளின்முதன் முருக்கித் தோன்றிய
தடலருங் கடாக்களிற் றசனி வேகமே.

(இ - ள்.) கடல் என - முழக்காற் கடல்போலவும்; காற்று என - விரைவாற் காற்றெனவும்; கடுங்கண் கூற்று என - கொடுமையால் கூற்றுவன் நிகர்ப்பவும்; உடல் சின உருமு என - வருத்தும் சினத்தால் இடி யேய்ப்பவும்; ஊழித் தீ என - ஒன்றாக அழித்தலின் ஊழித்தீ யொப்பவும்; அடல் அருங் கடாக் களிற்று அசனி வேகம் - கொல்லற்கரிய மதகளிறாகிய அசனிவேகம்; தொடர்பிணி வெளில் முதல் முருக்கி - காலிற் சங்கிலி பிணித்த மரத்தையும் கம்பத்தையும் அடியிலே முறித்து; தோன்றியது வெளிப்பட்டது.

(வி - ம்.) கடல் முதலிய உவமைகட்கு முழக்கம் முதலிய பொதுத் தன்மைகள் விரித்துக் கொள்க. உடல் சினம்: வினைத்தொகை. உடலுதல் - மாறுபடுதல். உருமு - இடி. ஊழித்தீ - ஊழிக்காலத்தே தோன்றி உலகினை அழிக்கும் நெருப்பு. தொடர் - சங்கிலி. வெளில் தறி. அசனிவேகம் - கட்டியங்காரன் பட்டத்தியானை. களிற்றசனி வேகம் என்புழி உயிர்த்தொடர் றகரவொற்று அல்வழிக்கண் இரட்டிற்று. (கஉரு)

வேறு

கூளசு. பொருதிழி யருவி போன்று
பொழிதரு கடாத்த தாகிக்
குருதிகொண் மருப்பிற் றாகிக்
குஞ்சரஞ் சிதைந்த தென்னக்
கருதிய திசைக ளெல்லாங்
கண்மிசைக் கரந்த மாந்தர்
பருதியின் முன்னர்த் தோன்று
மறைந்தபன் மீன்க ளொத்தார்.

(இ - ள்.) குஞ்சரம் பொருது இழி அருவி போன்று - அக்களிறு, மலையிடைப் பொருது விழும் அருவி போல; பொழி தரு கடாத்தது ஆகி - சொரியும் மதமுடையதாய்; குருதி கொள் மருப்பிற்று ஆகி - செந்நீர் பயின்ற கொம்புடையதாய்; சிதைந்தது என்ன - தன் பண்பு கெட்டது என்று அதனைக் கண்டவர் கூக்குரலிட்டாராக; கருதிய திசைகள் எல்லாம் கண் மிசைக் கரந்த மாந்தர் - அக்களிற்றின் கண்கள் நோக்குந் திக் கெல்லாம் அதன் கண்ணிடத்தே தோன்றாமல் மறைந்த மக்கள்;

பருதியின் முன்னர்த் தோன்று - கதிரவன் முன்னே தோன்று தனவாய்; மறைந்த பன்மீன்கள் ஒத்தார் - மறைந்த பல விண் மீன்களைப் போன்றனர்.

(வி - ம்.) மிசை - இடம். இது போகாமல் நின்ற நிலையிலே மறைந்ததற்குவமை.

மக்களைக் குத்திக்கொன்றதென்பது தோன்றக் குருதிகொள் மருப்பிற்றாகி என்றார். குஞ்சரம் - யானை. தோன்று: பலவறிசொல்; தோன்றுதனவாய் என்க (௧௨௪)

௬௭௫. கருந்தடங் கண்ணி தன்மேற்
காமுக ருள்ளம் போல
விருங்களி றெய்த வோடச்
சிவிகைவிட் டிளைய ரேக
வரும்பெற லவட்குத் தோழி
யாடவ ரில்லை யோஎன்
றொருங்குகை யுச்சிக் கூப்பிக்
களிற்றெதி ரிறைஞ்சி நின்றாள்.

(இ - ள்.) கருந் தடங்கண்ணி தன்மேல் - கரிய பெரிய கண்ணுளாகிய குணமாலையின் மேல்; காமுகர் உள்ளம் போல - காமுகர் உள்ளம் செல்வது போல; இருங்களிறு எய்த ஓட- பெரிய களிறு நோக்கமுற்றோட; சிவிகை விட்டு இளையர் ஏக - பல்லக்கை விட்டுப் பணியாளரும் ஓடிவிட்டதால்; அரும் பெறல் அவட்குத் தோழி - பெறுதற்கரிய அவளுக்குத் தோழியா னவள்; ஆடவர் இலையோ என்று - ஆடவர் யாரும் இங்கிலையோ என்று கூவி; உச்சி கை ஒருங்கு கூப்பி - உச்சியிலே கைகளை ஒன்றாகக் குவித்து; களிற்று எதிர் இறைஞ்சி நின்றாள் - யானை யின் எதிரே வணங்கி நின்றாள்.

(வி - ம்.) 'கார் விரி மின்னனார் மேற் காமுகர் நெஞ்சின் ஓடும் தேர் பரி கடாவி' (சீவக - ௪௪௨) என முன்னரும் இவ்வுவமை வருதல் காண்க.

கண்ணி - ஈண்டுக் குணமாலை. இளையர் - சிவிகை காவுவோர். அரும்பெறலவள் - குணமாலை. (௧௨௫)

௬௭௬. என்னைக்கோன் றிவள்க ணேடு
மெல்லையி லொருவன் றோன்றி
யின்னுயி ரிவளைக் காக்கு
மன்றெனி லென்கண் மாய்ந்தாற்

பின்னைத்தான் ஆவ தாக
வென்றெண்ணிப் பிணைக ணோக்கி
மின்னுப்போ னுடங்கி நின்றாள்
வீதகை பொற்கோம் போப்பாள்.

(இ - ள்.) என்னைக் கொன்று இவள்கண் ஒடும் எல்லையில்- என்னை இக்களிறு கொன்று இவளிடம் ஓடும்போது; ஒருவன் தோன்றி - ஒருவன் வந்து; இவள் இன்னுயிரைக் காக்கும் - இவளுடைய இனிய உயிரைக் காப்பான்; அன்று எனில் - இல்லை யென்றால்; என்கண் மாய்ந்தாற் பின்னைத்தான் ஆவது ஆக - என்கண் இறந்தாற் பிறகு ஆவது ஆகுக; என்று எண்ணி - என நினைந்து (நிற்க); பிணைகொள் நோக்கி - மானோக்கினாள் ஆகிய வீதகை; பொன் கொம்பு ஒப்பாள் - மலர்கள் செறிந்த பொற் கொடி போன்ற குணமாலை; மின்னுப்போல் நுடங்கி நின்றாள் - மின்னைப்போல் ஒசிந்து நின்றாள்.

(வி - ம்.) எண்ணி - எண்ண. 'ஒருவன்' என்பது உட்கோளா தலின், 'ஆடவர்' எனப் பன்மையாற் கூறினன்.

நச்சினார்க்கினியர் முற்செய்யுளுடன் (கூஎகு) இதனைப் பிணைத்துக், 'குணமாலை தன்மேற் களிறு ஓடிவருதலைக் கண்டு இறைஞ்சி மின்னுப் போல் நுடங்கி நின்றாள்' என்றும், தோழி மேற்கூறியவாறு எண்ணிக் களிற்றின்முன் கைகுவித்து நின்றாள் என்றும் முன்பின்னாக மாற்றி யுரைப்பர்.

மேல், 'நெடுங்கணாற் கவர்ந்தகள்வி - அஞ்சனத் துவலையாடி நடுங் கினாள்' 'நாட்டமும் நடுக்கமும்' (சீவக - க0உச, க00கூ) என வருவதால், 'மின்னுப் போல் நுடங்கி நின்றாள்' குணமாலையாகக் கொள்ளவேண்டி யுள்ளது. அதன் பொருட்டே 'எண்ணி' என்பதை, 'எண்ண' எனத் திரிக்க வேண்டியுள்ளது. இது நச்சினார்க்கினியர்க்குடன்பாடேயாகும். (கஉசு)

கூஎஎ. மணியிரு தலையுஞ் சேர்த்தி வான்பொனி னியன்ற நாணா
லணியிருங் குஞ்சி யேறக் கட்டியிட் டலங்கல் சூழ்ந்து
தணிவருந் தோழர் சூழத் தாழ்குழை திருவில் வீசப்
பணிவருங் குருசில் செல்வான் பாவைய திடரைக் கண்டான்.

(இ - ள்.) பணிவருங் குருசில் - பிறரைப் பணிதலில்லாத சீவகன்; மணி இருதலையும் சேர்த்தி வான் பொனின் இயன்ற நாணால் - இரு முனைகளினும் மணியைச் சேர்த்துச் சிறந்த பொன்னாற் செய்யப்பட்ட கயிற்றினால்; அணி இருங் குஞ்சி ஏறக் கட்டியிட்டு - அழகிய கரிய குஞ்சியைச் சேர்த்துக்கட்டி; அலங்கல் சூழ்ந்து - மாலையை அதன்மேற் சுற்றி; தணிவு அருந் தோழர்சூழ - அன்பு குறைதல் அறியாத தோழர்கள் சூழ்ந்துவர

தாழ்குழை திருவில் வீச - தாழ்ந்த குழை வானவில்லென ஒளி சொரிய ; செல்வான் பாவையது இடரைக் கண்டான்-செல்பவன் குணமாலையின் துன்பத்தைக் கண்டான்.

(வி - ம்.) கட்டியிட்டு: ஒருசொல். குழலே, யேறக்கட்டி' என்றும் பாடம்.

வான்பொன் - சிறந்த பொன். இருங்குஞ்சி - கரிய மயிர். தணிவரும் என்புழி அன்பு தணிதலில்லாத என வருவித்தோதுக. குழை-குண்டலம். தாழ்குழை : வினைத்தொகை. குருசில் - தலைமைத் தன்மையுடைய சீவகன். பாவை : குணமாலை. (கஉஎ)

௬௭அ. பெண்ணுயி ரவல நோக்கிப் பெருந்தகை வாழ்விற் சாத
லெண்ணின னெண்ணி நொய்தா வினமலர் மாலை சுற்றா
வண்ணப்பொற் கடக மேற்றா வார்கச்சிற் றானை வீக்கா
வண்ணலங் களிற்றை வையா ஆர்த்துமே லோடி னானே.

(இ - ள்.) பெருந்தகை பெண்ணுயிர் அவலம் நோக்கி - பெருந்தகையான சீவகன் ஒரு பெண்ணின் உயிர் இறந்துபடுதல் கண்டு ; வாழ்வின் சாதல் எண்ணினன் - வாழ்வதினும் சாதல் மேலென எண்ணினான் ; எண்ணி நொய்தா இனம் மலர்மாலை சுற்றா-எண்ணிக் கடிதாக இனமலர் மாலைகளைச் சுற்றி ; வண்ணப் பொன் கடகம் ஏற்றா - அழகிய பொற்கடகத்தை மேலே ஏற்றி ; வார் கச்சில் தானை வீக்கா-நீண்ட கச்சினால் ஆடையை இறுக்கி ; அண்ணல் அம் களிற்றை வையா - பெருமை தங்கிய களிற்றை வைது ; ஆர்த்து மேல் ஓடினான் - ஆர்ப்பரித்துக் களிற்றின்பால் ஓடினான்.

(வி - ம்.) 'வேழம் நான்கும் வெல்லும் ஆற்றலன்' (சீவக - ௬௪௯) ஆதலால், இக்களிறு அடர்க்க எளிதாயினும், அடர்த்தாற் கட்டியங் காரற்கும் நமக்கும் வேறுபாடு பிறக்கு மென்றெண்ணி, முதலில் அதனை அடக்காது சென்றானெனினும், பெண்ணுயிர் அவலப்படுதல் கண்டு, அவ் வேறுபாடு, இவள் இறந்து படுதல் கண்டு போதலினும் நன்றென்று கருதினான் ; அக்களிற்றை அடர்ப்பதால் இறப்பு நேரினும் ஏற்கவும் எண்ணினான். (கஉஅ)

௬௭௯. குண்டலங் குமரன் கொண்டு
குன்றின்மேல் வீழ மின்போ
லொண்டிறற் களிற்றி னெற்றி
யெறிந்துதோ டொலித்து வீழ
மண்டில முத்துந் தாரு
மாலையுங் குழலும் போங்க
விண்டலர் கண்ணி சிந்த
மின்னிற்சென் றெய்தி னானே.

(இ - ள்.) குமரன் குண்டலம் கொண்டு - (ஓடிய) குமரன் (தான் செல்வதற்கு முன்னே களிறு தாழாதவாறு) காதின் குண்டலத்தைக் கையில் எடுத்துக்கொண்டு; குன்றின்மேல் வீழும் மின்போல் - மலையின்மேல் விழும் மின்னல்போல; ஒண் திறல் களிற்றின் நெற்றி எறிந்து - பெருந்திறல் படைத்த யானையின் நெற்றியிலே வீசி; தோடு ஒலித்து வீழ - தோடு ஒலியுடன் வீழ; மண்டிலம் முத்தும் தாரும் மாலையும் குழலும் பொங்க - வட்டமான முத்து வடமும் தாரும் மாலையும் சிகையும் பொங்கி நிற்க; விண்டு அலர் கண்ணி சிந்த - முறுக் கவிழ்ந்து மலர்ந்த கண்ணி விழ; மின்னின் சென்று எய்தினன் - மின்னுப் போலப் போய்ச் சேர்ந்தான்.

(வி - ம்.) தோடு தானே, 'குண்டலம் எறிந்த விசையில்' வீழ்ந்தது. தார், கண்ணி, மாலை என்பவற்றின் வேறுபாடுணர்க. (கஉசு)

சுஅ௦. படம்விரி நாகஞ் செற்றுப்
பாய்தரு கலுழன் போல
மடவர லவளைச் செற்று
மதக்களி றிறைஞ்சும் போழ்திற்
குடவரை நெற்றி பாய்ந்த
கோளரி போன்று வேழத்
துடல்சினங் கடவக் குப்புற்
றுருமென வுரறி யார்த்தான்.

(இ - ள்.) படம் விரி நாகம் செற்றுப் பாய்தரு கலுழன் போல - படம் விரிந்த நாகத்தைச் சினந்து பாயுங் கருடனைப் போல; மடவரல் அவளைச் செற்று - முன்பு நின்ற மாலையென்னும் மடவரலாகிய அவளைச் சீறி; மதக்களிறு இறைஞ்சும் போழ்தில் - மதயானை தாழும் அளவில்; குடவரை நெற்றி பாய்ந்த கோள் அரி போன்று - மேலைமலை உச்சியிலே தாவிய கொலைவல்ல சிங்கம் போல; வேழத்து உடல் சினம் கடவக் குப்புற்று - களிற்றின் கொல்லுஞ் சீற்றம் பொங்குமாறு அதன் நெற்றியிலே குதித்து; உரும் என உரறி ஆர்த்தான் - இடி போல முழங்கி ஆர்த்தான்.

(வி - ம்.) குடவரை யானை நெற்றியிலுள்ள புள்ளிக்குவமை.

செற்று இரண்டும் சினந்து என்னும் பொருளன. கலுழன்-கருடன். மடவரலவளை என்றது, தோழியை. இறைஞ்சுதல் கோட்டாற் குத்திக் கொல்லுதற்குக் குனிதல். குடவரை - யானையின் மத்தகத்திற்குவமை. கோள் அரி-கொலைத் தொழிலையுடைய சிங்கம்; இது சீவகனுக்குவமை. உடல் சினம்: வினைத்தொகை. குப்புறுதல் - குதித்தல். உரறுதல் - முழங்குதல். (கஉ௦)

சுஅக. கூற்றென முழங்கிக் கையாற்
கோட்டிடைப் புடைப்பக் காய்ந்து
காற்றென வுரறி நாகங்
கடாம்பெய்து கனலிற் சீறி
யாற்றலங் குமரன் றன்மே
லடுகளி றோட லஞ்சான்
கோற்றொடிப் பாவை தன்னைக்
கொண்டுயப் போமின் என்றான்.

(இ - ள்.) கூற்று என முழங்கி - (சீவகன்) காலனைப் போல ஆர்த்து; கையால் கோட்டிடைப் புடைப்ப - கையினாலே கொம்புகளின் இடையிலே தாக்கலின்; நாகம் காய்ந்து காற்று என உரறி - யானை சினந்து காற்றைப் போல முழங்கி; கடாம் பெய்து - மதம் பொழிந்து; கனலின் சீறி - நெருப்பெனப் பொங்கி; ஆற்றல் அம் குமரன் தன்மேல் - ஆற்றலையும் அழகையு முடைய சீவகன் மேலே; அடுகளிறு ஓட அஞ்சான் - அக்கொல் யானை ஓட அதற்கு அஞ்சாதவனாய்; கோல் தொடிப் பாவைதன்னைக் கொண்டு உயப்போமின் என்றான் - திரண்ட வளையல் அணிந்த குணமாலையை உயிர் பிழைக்கக் கொண்டுபோமின் என்று (அருகிருந்தோரிடம்) கூறினான்.

(வி - ம்.) சேடி மேலும் குணமாலை மேலும் செல்வது கண்டு அஞ்சினவன் தன்மேல் வருவது கண்டு அச்சம் நீங்கினான். தலைமை பற்றிக் குணமாலையைக் கொள்க. (கரு௪)

சுஅஉ. மதியினுக் கிவர்ந்த வேக மாமணி நாகம் வல்லே
பதியமை பருதி தன்மேற் படம்விரித் தோடி யாங்குப்
போதியவிழ் கோதை தன்மேற் பொருகளி றகன்று போற்றார்க்
கதியமை தோளி னானைக் கையகப் படுத்த தன்றே.

(இ - ள்.) மதியினுக்கு இவர்ந்த வேக மாமணி நாகம் - திங்களைப் பற்றச் சென்ற விரைவுடைய, மாணிக்கங்கொண்ட கரும்பாம்பு; வல்லே பதி அமை பருதிதன்மேல் படம் விரித்து ஓடி யாங்கு - விரைந்து, தன் இடம் விட்டுச் செல்லும் ஞாயிற்றின் மீது படத்தை விரித்துக்கொண்டு ஓடினாற்போல; பொதி அவிழ் கோதை தன்மேல் பொரு களிறு - கட்டவிழ்ந்த மலர் மாலையாள் குணமாலையின்மேற் சென்ற போர்க்களிறு; அகன்று - (அவளைக்) கைவிட்டு; பொன் தார்க் கதி அமை தோளினானை - தன்மேல் வந்த பொன்மாலை அணிந்த, தோளையுடைய சீவகனை; கை அகப்படுத்தது - கைப் பற்றியது.

(வி - ம்.) அன்று, ஏ : அசைகள், பதியமை பருதி : அமைதல்-தவிர்தல், 'அமைந்த தினிகின் தொழில்' (கலி - அஉ) என்றது போல ; 'கதி அமை தேரினுனே' என்றும் பாடம். (கஙஉ)

கூஅங. கையகப் படுத்த லோடுங்
கார்மழை மின்னி ணெய்தா
மோய்கோளப் பிறழ்ந்து முத்தார்
மருப்பிடைக் குளித்துக் காற்கீ
ழையென வடங்கி வல்லா
ஞடிய மணிவட் டேய்ப்பச்
செய்கழற் குருசி லாங்கே
கரந்துசே ணகற்றி ஞனே.

(இ - ள்.) கை அகப்படுத்த லோடும் - கைப்பற்றியவுடன் ; செய்கழல் குருசில் - கழலணிந்த சீவகன் ; கார் மழை மின்னின் நொய்தா - கரிய முகிலிடை மின்னினும் விரைந்து ; மொய் கொளப் பிறழ்ந்து - வலிமையுண்டாகும்படி உடம்பைப் புரட்டி ; முத்துஆர் மருப்பிடைக் குளித்து - முத்தினையுடைய கொம்பிடையிலே புகுந்து ; வல்லான் ஆடிய மணிவட்டு ஏய்ப்ப - வல்லவன் உருட்டிய மணிவட்டைப்போல ; கால்கீழ் ஐ என அடங்கி - காலின்கீழ் வியப்புற அடங்கி ; கரந்து - மறைந்து ; சேண் அகற்றினன் - சேய்மையிலே நீக்கினன்.

(வி - ம்.) கார் மழை - கரியமுகில். நொய்தா, நொய்து ஆக : ஈறுகெட்டது. மொய் - வலிமை. கண்டோர் ஐ என்று வியக்கும்படி என்க. யானையின் காற்கீழ்க் கரந்திருந்தே அதனைத் துன்புறுத்தி அதனை அவ்விடத்தினின்றும் ஓட்டினன் என்பது கருத்து. (கஙங)

கூஅச. மல்ல னீர்மணி வண்ணனைப் பண்டோர்நாட்
கொல்ல வோடிய குஞ்சரம் போன்றதச்
செல்வன் போன்றனன் சீவகன் றெய்வம்போற்
பில்கும் மும்ம தவேழம் பெயர்ந்ததே.

(இ - ள்.) பில்கும் மும்மத வேழம் - துளிக்கும் மும்மதமுடைய அசனிவேகம் ; மல்லல் நீர் மணி வண்ணனை - கடல் நீரும் நீலமணியும் போன்ற நிறமுடைய கண்ணபிரானை ; பண்டு ஓர் நாள் கொல்ல ஓடிய குஞ்சரம் போன்றது - முன்னொரு நாள் கொல்ல ஓடிய குவலயாபீடம் என்னும் யானையைப் போன்றது ; சீவகன் அச் செல்வன் போன்றனன்-சீவகனும் அக் கண்ணனைப் போன்றான் ; தெய்வம்போற் பெயர்ந்தது-அக் களிறு (குவலயா பீடமாக வந்த) தெய்வத்தைப் போலவே தன்னிலையிலே திரும்பியது.

(வி - ம்) பகையன்மையின் இவன் விலங்கிற்கும் உயிர் அளித்தான். கண்ணன் தனக்குப் பகையாதலிற் கொன்முன். 'தெய்வம் போற் பெயர்ந்தது' என்றதனுற், கண்ணன் குவலயா பீடத்தைக் கொல்லாது விட்டிருப்பின் அதுபோலுமென இல்பொருளுவமையாகக் கொள்க. குவலயாபீடத்தைக் கொல்லாது விட்டதாகவும், அதனுற் கண்ணனுக்குக் 'கரிவரதன்' என்று பெயர் வந்ததென்றும் ஸ்ரீ புராணத்தில், உஉ-ஆம் தீர்த்தங்கரர் புராணத்திற் கூறப்பட்டிருப்பதாகக் கூறுவாரும் உளர். கஞ்சனுக்காகத் தெய்வமே யானையாய் வருதலின், 'தெய்வம்' என்ருர். (கஙூச)

வேறு

கூஅரு. ஒருகை யிருமருப்பின் மும்மதத்த
தோங்கெழிற்குன் றனைய வேழந்
திருகு கனைகழற்காற் சீவகன்வென்
றிளையாட்கு டைந்து தேனார்
முருகு கமழலங்கன் முத்திலங்கு
மார்பினனைஞ் ஞூற்று நால்வ
ரருகு கழல்பரவத் தனியேபோ
யுய்யான மடைந்தா னன்றே.

(இ-ள்.) ஒருகை இருமருப்பின் மும்மதத்தது-ஒரு துதிக்கையும் இரு கொம்புகளும் மும்மதமும் உடைய; ஓங்கு எழில் குன்று அனைய வேழம்-உயர்ந்த அழகிய குன்றைப்போன்ற களிற்றினை; திருகு கனைகழல்கால் சீவகன் வென்று-முறுக்கிய ஒலியையுடைய கழலணிந்த காலையுடைய சீவகன் வெற்றி கொண்டு; இளையாட்கு உடைந்து - குணமாலைக்குத் தன் அறிவு முதலியன தோற்று; தேன் ஆர் முருகு கமழ் அலங்கல் முத்து இலங்கும் மார்பினன் - வண்டுகள் நிறைந்த, மணங்கமழும் அலங்கலும் முத்து வடமும் விளங்கும் மார்பினனாய்; ஐஞ்ஞூற்று நால்வர் அருகு கழல்பரவ - ஐஞ்ஞூற்று நான்கு தோழர்களும் அருகிருந்து அடியை வாழ்த்தச் சென்று (பிறகு பிரிந்து); தனியே போய் உய்யானம் அடைந்தான் - தனியே சென்று தன் அரண்மனைப் பொழிலை அடைந்தான்.

(வி - ம்.) தத்தை தன் வேறுபாட்டை அறியலாகாதென்று பொழிலிற் புகுந்தான்.[1]

---

1. இதன் பின்னர், மூலமட்டுமுள்ள சில பிரதிகளிலுள்ள செய்யுள் :

" ஆடவர்க் கூட அனங்க னும்மதி
வாடிய வாட்க ணிரைத்தலும் வார்குழைச்
சேடியர் கைதொழத் தேற்றிய ஒண்சுடர்
ஊடிய மாடம் ஒளியிழை புக்காள்."

ஒருகை இருமருப்பின் மும்மதத்தது என்புழி முரண்தோன்றிச் செய்யுளின்பம் மிகுதலுணர்க. திருகு கழல், கனைகழல் எனத் தனித் தனி கூட்டுக. இளையாள் : குணமாலை. முருகு - நறுமணம். உய்யானம்- பூம்பொழில். (சஙரு)

வேறு

கூஅசு. மணிசெய் கந்துபோன் மருள வீங்கிய
திணிபொற் றோளினன் செல்ல னீக்கிய
வணிபொற் கொம்பினை யழுங்க லென்றுதன்
றணிவில் காதலார் தாங்கொ டேகினர்.

(இ - ள்.) மணி செய் கந்துபோல் மருள வீங்கிய திணி பொன் தோளினன் - மாணிக்கத் தூண்போலும் என ஐயமுறப் பருத்த திண்ணிய தோளையுடைய சீவகனால்; செல்லல் நீக்கிய அணி பொன் கொம்பினை - துன்பம் நீக்கப் பெற்ற அணிகல னுடைய பொற்கொடி போன்ற குணமாலையை; தன் தணிவு இல் காதலார் - அவளுடைய நீங்காத அன்புறு தோழியர்; அழுங்கல் என்று தாம் கொடு ஏகினர் - வருந்,ற்க என்று தாங்கள் அழைத்துச் சென்றனர்.

(வி - ம்.) இவள் வேட்கை வருத்தத்தை யானைக்கு வருந்தினளாக உட்கொண்டனர்.

மணிசெய் கந்து - மணியாற் செய்ததூண். கந்துபோலும் என மருள என விரிக்க. செல்லல் - துன்பம். பொன்கொம்பு: குணமாலை. காதலார் - ஈண்டுத் தோழியர். (கஙசு)

கூஅஎ. முழங்கு தெண்டிரை மூரி நீணிதி
வழங்க நீண்டகை வணிகர்க் கேறனன்
விழுங்கு காதலாள் வேற்கட் பாவைதாய்
குழைந்த கோதையைக் கண்டு கூறினள்.

(இ - ள்.) முழங்கு தெண்திரை மூரி நீள்நிதி வழங்க - ஆரவாரிக்கும் தெள்ளிய அலைகளையுடைய கடல்போலப் பெருமை பெற்ற மிகுந்த செல்வத்தை வழங்கியதால்; நீண்டகை வணி கர்க்கு ஏறு அனன் - நீண்ட கைகளையுடைய வணிகர் தலைவன் குபேரமித்திரன்; விழுங்கு காதலாள் - விழுங்குமாறு போன்ற காதலையுடையாளாகிய; வேற்கண் பாவை தாய் - வேலனையகண் ணாள் குணமாலையின் அன்னை; குழைந்த கோதையைக் கண்டு கூறினள் - வாடிய மலர்க் கோதைபோலிருந்த குணமாலையைக் கண்டு ஒருமொழியுரைத்தாள்.

(வி - ம்.) குணமாலையின் அன்னை விநயமாமாலை. அப் பெயர் தோன்ற, 'வேற்கட்பாவை' என்றார். வருத்தந் தோன்ற 'குழைந்த கோதை' என்றார்.

மூரி - பெருமை. தெண்டிரை - கடல்: அன்மொழி; கடல்போன்ற பெரிய நிதி என்க. பாவை: குணமாலை. கோதை: குணமாலை. (கஙஎ)

கூஅஅ. நெய்பெய் நீளெரி நெற்றி மூழ்கிய
கைசெய் மாலைபோற் கரிந்து பொன்னிற
நைய வந்ததென் னங்கைக் கின்றென
வுய்தல் வேட்கையா லுரைத்த லோம்பினார்.

(இ - ள்.) நெய்பெய் நீள் எரி நெற்றி மூழ்கிய கைசெய் மாலைபோல் - நெய்வார்த்த மிகுநெருப்பின் முடியிலே அழுத்திய, புனைந்த மலர்மாலை போல; கரிந்து பொன்னிறம் நைய - கரிந்து பொன்னிறம் வாடுமாறு; நங்கைக்கு இன்று வந்தது என் என - குணமாலைக்கு இன்று நேர்ந்தது யாது என்று (தாய்) வினவ; உய்தல் வேட்கையால் உரைத்தல் மேயினார் - (தோழியரும் அத் தாய் இறவாமல்) வாழவேண்டும் என்னும் ஆசையால் (யானை கொல்லப் புகுந்ததென்பதை) உரையாமற் காத்தனர்.

(வி - ம்.) குணமாலை பெருந்துயர்க்கிலக்காகி உய்ந்தமை தோன்ற நெய்பெய் நீளெரி என உவமையை விதந்தார்; இது துயரத்திற்குவமை. கைசெய்மாலை - கையாற் புனைந்த மாலை. உய்தல் வேட்கையால் என்பதற்கு இப் பேரிடரைக்கேட்ட அளவில் அத் தாய் இறந்துபடுவள் எனவும் அங்ஙனம் இறந்துபடாமலிருத்தற்பொருட்டு என்று கோடலே பொருந்தும். இதுவே நச்சினார்க்கினியர் கருத்துமாகும். 'குணமாலை பிழைத்தலினுள்ள விருப்பத்தால்' என்பாரும் உளர். (கஙஅ)

கூஅகூ. முருகு விண்டுலா முல்லைக் கத்திகை
பருகி வண்டுலாம் பல்கு ழலினாள்
வருக வென்றுதாய் வாட்க ணீர்துடைத்
துருகு நுண்ணிடை யோசியப் புல்லினாள்.

(இ - ள்.) முருகு விண்டு உலாம் முல்லைக் கத்திகை - மணம் விரிந்து பரவும் முல்லைத் தொடையிலே; வண்டு பருகி உலாம் பல்குழலினாள் - வண்டுகள் தேனைப் பருகி உலவும் பல் குழலாளாகிய குணமாலையை; தாய் வருக என்று வாட்கண் நீர் துடைத்து - அவர் கூறுமையான் அதனை அறியாத அவள் அன்னை வருக என அழைத்து, வாளனைய கண்களிலிருந்து பெருகும் நீரைத் துடைத்து; உருகும் நுண் இடை ஒசியப் புல்லினாள் - தேயும் நுண்ணிடை வருந்தத் தழுவினாள்.

(வி - ம்.) முருகு - மணம். கத்திகை - மாலை. கூந்தல் ஐம்பால் எனப்படுதலின் பல்குழலினாள் என்றார். குழலினாள்: குணமாலை. உருகும் - மெலிகின்ற. ஒசிய - வருந்த. (கஙகூ)

கககo. கடம்பு சூடிய கன்னி மாலைபோற்
றொடர்ந்து கைவிடாத் தோழி மாரோடுங்
குடங்கை யுண்கணாள் கொண்ட பண்ணையு
ளடைந்த துன்பமென் றறிவி னாடினாள்.

(இ - ள்.) கடம்பு சூடிய கன்னி மாலைபோல் - கடம்பிலே பூத்த புதிய மாலைபோல; தொடர்ந்து கைவிடாத் தோழிமாரொடும்-தொடர்ப்பட்டுக் கைவிடாத தோழியரோடும்; குடங்கை உண்கணாள் - உள்ளங்கை யளவாகிய மையுண்ட கண்ணாள்; கொண்ட பண்ணையுள்-ஆடிய விளையாட்டில்; அடைந்த துன்பம் என்று - மிகுதியால் வந்த வருத்தம் என்று; அறிவின் நாடினாள்-அறிவினால் ஆராய்ந்தாள்.

(வி - ம்.) சுரமஞ்சரியும் குணமாலையும் கன்னியராதலிற் 'கன்னி மாலை' என்றார். 'கண்ணி மாலை' பாடம் எனின், கண்ணிகட்டினாற் போலும் மாலையாம். (கசo)

ககக. கம்மப் பல்கலங் களைந்து கண்டேறாஉம்
விம்மப் பல்கலம் நொய்ய மெய்யணிந்
தம்மென் மாலையு மடைச்சிக் குங்குமங்
கொம்மை மட்டித்தார் கொடிய னாளையே.

(இ - ள்.) கொடி அனாளை - கொடியனைய குணமாலையை(க் கோலஞ் செய்யும் மகளிர்) கம்மம் பல்கலம் களைந்து - வேலைப்பாடமைந்த பல கலங்களையும் நீக்கி; கண் தெறாஉம் நொய்ய பல்கலம் விம்ம மெய் அணிந்து - கண்ணைப் பறிக்கும் நொய்யனவாகிய பல அணிகளை மிகுதியாக அவள் உடம்பிற் பூட்டி; அம் மென் மாலையும் அடைச்சி - அழகிய மெல்லிய மலர்மாலைகளையும் அணிந்து; கொம்மை குங்குமம் மட்டித்தார் - முலைமிசை குங்குமத்தையும் பூசினர்.

(வி - ம்.) உடல் நுணுகுதலுணர்ந்து நொய்யவற்றை விம்ம அணிந்தார். புறத்தே கோலஞ்செய்ய அகத்தே சிதைவு பிறத்தலின், 'இது 'புறஞ்செயச் சிதைதல்' என்னும் (தொல். மெய். கஅ. பேர்) மெய்ப்பாடு. மென்மாலை: கழுநீர்மாலை. கொம்மை: ஆகுபெயர்.

கம்மம் - தொழில். நொய்யகலம் அணிந்தென்றமையால், வன்மையுடைய பலவாகிய கலன்களையும் களைந்து என்க. அடைச்சி - சூட்டி. கொம்மை - முலைக்குப் பண்பாகுபெயர். மட்டித்தல் - பூசுதல். (கசக)

கககஉ. அம்பொன் வள்ளத்து ளமிர்த மேந்துமெங்
கொம்பி னவ்வையைக் கொணர்மின் சென்றெனப்
பைம்பொ னல்குலைப் பயிரும் பைங்கிளி
செம்பொற் கொம்பினெம் பாவை செல்கின்றாள்.

(இ - ள்.) அம்பொன் வள்ளத்துள் அமிர்தம் ஏந்தும் - அழகிய பொற் கிண்ணத்திலே பாலை யெமக் கூட்டுகின்ற; எம் கொம்பின் அவ்வையைச் சென்று கொணர்க என - எம், கொம் பனைய அன்னையைப் போய் அழைத்து வருக என்று; பைம் பொன் அல்குலைப் பைங்கிளி பயிரும் - பசிய மேகலை யணிந்த அல்குலையுடைய நின்னை நின் பச்சைக்கிள்ளை கூப்பிடும்; செம் பொன் கொம்பின் எம்பாவை செல்க என்றாள் - செம்பொற் கொடி போன்ற எம்பாவையே! இனி நீ அங்குச் செல்க என்று விநயமாமாலை கூறினாள்.

(வி - ம்.) பைம்பொன் அல்குலை என்பதும் பாவை என்பதும் முன்னிலைப் புறமொழி. பயிர்தல் - அழைத்தல். (கசஉ)

வேறு

கூசுஙு. நிறத்தே றிந்துப றித்தநி ணங்கொள்வேற்
றிறத்தை வெளவிய சேயரிக் கண்ணினாள்
பிறப்பு ணர்ந்தவர் போற்றமர் பேச்செலாம்
வெறுத்தி யாவையும் மேவல ளாயினாள்.

(இ - ள்) நிறத்து எறிந்து பறித்த நிணம்கொள் வேல் திறத்தை - மார்பில் எறிந்து (சிறிது நின்று) வாங்கிய நிணம் பொருந்திய வேலின் தன்மையை; வெளவிய சேய் அரிக் கண்ணினாள் - கவர்ந்த சிவந்த வரிபரந்த கண்ணுளாகிய குணமாலை; பிறப்பு உணர்ந்தவர்போல் - பிறப்புத் தீதெனக் கண்டு பற்றற் றாரைப் போல; தமர் பேச்சு எலாம் வெறுத்து - உறவினர் மொழியை எல்லாம் கைவிட்டு; யாவையும் மேவலள் ஆயினாள் - உணவு முதலியவற்றை யெல்லாம் விரும்பாதவளானாள்.

(வி - ம்.) 'தமர் பேச்சு எலாம் வெறுத்து' என்னும்வரை, 'புலம்பித் தோன்றல்' என்னும் மெய்ப்பாடு; செய்த கோலந் துணையொடு கழியப் பெறாதே அழிந்து, சுற்றத்திடையும் தனியே தோற்றுதலின். 'மேவலள்' எனவே, 'இன்பத்தை வெறுத்த'லும், 'பசியட நிற்ற'லும் மெய்ப்பாடு; (தொல். மெய். உஉ-பேர்.)

பிறப்புணர்ந்தவர் என்றது, "பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்" என்னும் உண்மையை உணர்ந்து பற்றறுத்தோர் என்பது படநின்றது. (கசங)

கூசுச. குமரி மாநகர்க் கோதையங் கோம்பனு
டமரி னீங்கிய செவ்வியுட் டாமரை
யமரர் மேவரத் தோன்றிய வண்ணல்போற்
குமர னாகிய காதலிற் கூறினாள்.

(இ - ள்.) கோதை அம் கொம்பு அனுள் - மலர்க் கோதையையுடைய அழகிய கொம்பு போன்றவள்; குமரி மாநகர் - கன்னிமாடத்திலே; தமரின் நீங்கிய செவ்வியுள் - உறவினரை நீங்கித் தனித்த காலத்திலே; அமரர் மேவரத் தாமரை தோன்றிய அண்ணல் போல் - வானவர் வேண்டத் தாமரையிலே தோன்றிய முருகனைப் போன்ற; குமரன் ஆக்கிய காதலின் கூறினுள் - சீவகன் உண்டாக்கிய காதலாலே சில கூறினுள்.

(வி - ம்.) குமரிமாநகர் என்றது கன்னி மாடத்தை. கொம்பனுள்: குணமாலை. அண்ணல்: முருகன்-முருகக் கடவுள் தாமரையிற்றோன்றி யதனை,

"நிவந்தோங்(கு) இமயத்து நீலப் பைஞ்சுனைப்
பயந்தோர் என்ப பதுமத்துப் பாயல்
பெரும்பெயர் முருகநிற் பயந்த ஞான்றே." (கு: ௪அ-கு0)

எனவரும் பரிபாடலானும் உணர்க. முருகன் சீவகனுக்கு உவமை. (௧௪௪).

௬௬௫. கலத்தற் காலங்கல் லூரிநற் கோட்டிலா
முலைத்த டத்திடை மொய்யெருக் குப்பையா
விலக்க மென்னுயி ராவெய்து கற்குமா
லலைக்கும் வெஞ்சர ஸைந்துடை யானரோ.

(இ - ள்.) வெஞ்சரம் ஐந்து உடையான் - கொடிய அம்புகள் ஐந்தினையும் உடையானுகிய காமன்; முலைத்தடத்திடை மொய் எருக் குப்பைஆ - என் முலைத்தடங்களின் நடுவிடம் நெருங்கிய எருக் குவியலாகவும்; என் உயிர் இலக்கம்ஆ - என் உயிர் குறியாகவும்; எய்து அலைக்கும் - அடித்து வருத்தும் (ஆதலால்); கல்லூரி நல் கொட்டில் - கல்லூரியையுடைய விற்பயிற்சி செய்யும் இடத்திலே; கலத்தற் காலம்ஆ கற்கும் - விற்பயிற்சி தொடங்கும் காலமாக எண்ணிக் கற்குந் தொழிலை நடத்துகின்றான்.

(வி - ம்.) கற்பார் எருவிலும் இலக்கிலும் எய்து கற்பர். இது 'மடந்தபு உரைத்தல்' என்னும் மெய்ப்பாடு; அறிவு மடம் நீங்கிக் காமப் பொருட்கண்ணே அறிவு தோன்ற நிற்றலின் (தொல். மெய்ப். ௧௬-பேர்) (௧௪௫)

௬௬௬. பூமி யும்பொறை யாற்றருந் தன்மையால்
வேமே னெஞ்சமும் வேள்வி முளரிபோல்
தாம மார்பனைச் சீவக சாமியைக்
காம னைக்கடி தேதம்மின் றேவிர்காள்.

(இ - ள்.) பூமியும் பொறை ஆற்ற அருந்தன்மையால்-புவியும் பொறுமையைச் செலுத்தற்கியலாத தன்மையாலே; வேள்வி முளரிபோல் என் நெஞ்சமும் வேம் - வேள்வித் தீயில் இட்ட தாமரை மலர்போல என் உள்ளமும் வேகும்; தாம மார்பனைச் சீவகசாமியைக் காமனை - மாலை மார்பனும், சீவகனும் ஆகிய காமனை; தேவிர்காள்! கடிதே தம்மின்! - வானவர்களே! விரைய நல்குமின்!

(வி - ம்.) 'வேம்' என்னும் துணையும் காதல் கைம்மிகல்; (தொல். மெய்ப். உங-பேர்) காமம் கையிகந்த வழி நிகழும் ஆதலின்; 'உள்ளின் உள்ளம் வேமே' (குறுந். ௧0௨) என்பது உதாரணம். 'தம்மின்' என்பது தூதுமுனிவின்மைப் பாற்படும் (தொல். மெய்ப். உங-பேர்); 'கானலும் கழறாது' (அகநா. ௧௭0) என்பது உதாரணம். அறன் அளித்துரைத்தல் (தொல். மெய்ப். உஉ-பேர்) எனினும் ஆம். (௧௪௬)

௬௬எ. கையி னாற்சொலக் கண்களிற் கேட்டிடு
மொய்கொள் சிந்தையின் மூங்கையு மாயினேன்
செய்த வம்புரி யாச்சிறி யார்கள்போ
லுய்ய லாவதோர் வாயிலுண் டாங்கொலோ.

(இ - ள்.) மொய்கொள் சிந்தையின் - (பிறர்க்குக் கூறலாகாத குறைகள்) செறிதல் கொண்ட உள்ளத்தினால்; செய் தவம் புரியாச் சிறியார்கள்போல் - செய்யக்கடவ தவம் புரியாத அறிவிலார்கள்போல; கையினால் சொலக் கண்களின் கேட்டிடும்- கையாற் கூறிக் கண்ணாற் கேட்கும்; மூங்கையும் ஆயினேன் - ஊமையும் ஆனேன்; உய்யல் ஆவதோர் வாயில் உண்டாம் கொலோ? - பிழைக்கலாவதாகிய ஒரு வாயிலும் உண்டாகுமோ?

(வி - ம்.) 'மூங்கையும் ஆயினேன்' என்பது சிதைவு பிறர்க்கின்மை (தொல். மெய்ப். ௧ங-பேர்); புறத்தார்க்குப் புலன் ஆகாமை நெஞ்சில் நிறுத்தலின். வாயில் - கூட்டுவார். (௧௪எ)

௬௬அ. கண்ணும் வாளற்ற கைவளை சோருமாற்
புண்ணும் போன்று புலம்புமென் நெஞ்சரோ
வெண்ணில் காம மெரிப்பினு மேற்செலாப்
பெண்ணின் மிக்கது பெண்ணல தில்லையே.

(இ - ள்.) கண்ணும் வாள் அற்ற - கண்களும் ஒளியிழந்தன; கைவளை சோரும்-கைவளையல்கள் கழலும்; என் நெஞ்சம் புண்போன்று புலம்பும் - என் மனமும் புண்ணென வருந்தும்; எண் இல் காமம் எரிப்பினும் - எல்லையற்ற காமம் சுடினும் மேற்செலாப் பெண்ணின் - (மடலூர்தல் முதலியவற்றிற்கு நடவாத பெண்ணினத்தினும்; மிக்கது பெண் அலது இல்லை கொடுமை மிக்கது பெண்ணல்லதில்லையாயிருந்தது.

(வி - ம்.) அவன் உருவெளியையேநோக்கி வேறொரு பொருளினை நோக்காமையின், காணுதல் தொழிலின்றிக், 'கண்ணும் வாள்அற்ற' என்றாள். இஃது எதிர்பெய்து பரிதல் (தொல். மெய்ப். உஉ-பேர்). 'வளை சோருதல்' உடம்பு நனிசுருங்கல் (தொல். மெய்ப். உஉ-பேர்) நெஞ்சும் புண் போன்று புலம்பும். இது முதலாகக் கலக்கம் (தொல். மெய்ப். கஅ-பேர்); கூறத் தகாதன கூறுதலின், அது தலைவிக்காயின், 'பிறங்கிரு முந்நீர் வெறுமணலாகப்—புறங்காலிற் போக விறைப்பேன்' (கலி. கசச) என்றாற் போல்வனவும், தலைவற்காயின், மடலேறுதல் முதலிய கூறலுமாம். (கசஅ)

கசகச. சோலை வேய்மருள் சூழ்வளைத் தோளிதன்
வேலை மாக்கடல் வேட்கைமிக் கூர்தர
வோலை தாழ்பெண்ணை மாமட லூர்தலைக்
கால வேற்றடங் கண்ணி கருதினாள்.

(இ - ள்.) சோலைவேய் மருள் சூழ்வளைத் தோளி - சோலையில் மூங்கிலென்ன மருளும் வளையணிந்த தோளியாகிய; கால வேல்தடம் கண்ணி - காலன் வேலனைய பெருங்கண்ணினாள்; தன் வேட்கை - தன் காமம்; வேலை மாக்கடல் மிக்கு ஊர்தர - கரையையுடைய பெரிய கடல்போல மிகுந்து மேற்கொளலால்; ஓலைதாழ் பெண்ணை மாமடல் ஊர்தலை - (ஆடவர் செயலாகிய) ஓலை தங்கிய பனை மாமடல் ஊர்வதை; கருதினாள் - நினைத்தாள்.

(வி - ம்.) 'மடலூர்தல்' ஆடவர்க்கே யன்றிப் பெண்டிருக்கில்லையாதலின் 'கருதினாள்' என்றார்.

சோலைவேய், பசுமைக் குவமை.

ஈண்டுக் கூறியது, புலனெறி வழக்கம் அல்லாத காந்தருவமாய் ஆசுரத்தின் பாற்படுமகைக்கிளையாதலின், மெய்ப்பாட்டுப் பொருள்களை முறையிற் கூறாது மயங்கக் கூறினாரென்று கொள்க.

நச்சினார்க்கினியர் கசுஎ-முதல் கசகக-வரை மூன்று செய்யுட்களையும் ஒரு தொடராக்கிக் கொண்டு கூட்டும் பொருள் முடிபு:—

" வளைத்தோளி, கண்ணி, தன் வேட்கை கடனீர்போல மிக்குப் பரத்தலின், தவஞ்செய்யாதாரைப்போல மூங்கையும் ஆயினேன்; கண்ணும் வாளற்ற; வளையும் சோரும்; நெஞ்சும் புலம்பும்; இங்ஙனம் எல்லையில்லாத காமம் முழுக்க நின்று சுட்டாலும் பெண்ணை மாமடலூர்தலை மேற்செல்லாத பேதைச் சாதியிற் காட்டின் கொடுமை மிக்கது பெண்ணல்ல தில்லையாய் இருந்தது என்றுகூறி, இக்காலத்தே பிழைக்கலாவதொரு வாயிலுண்டாமோ என்று கருதினாள்." (கசகக)

க000. உய்யு மாறுரை யுன்னை யலாலிலேன்
செய்ய வாய்க்கிளி யேசிறந் தாயென
நைய னங்கையிந் நாட்டகத் துண்டேனிற்
றைய லாய்சம ழாதுரை யென்றதே.

(இ - ள்.) செய்ய வாய்க் கிளியே! - சிவந்த வாயையுடைய கிளியே!; சிறந்தாய்! - சிறப்புடையாய்!; உன்னை அலால் இலேன் - உன்னையொழிய வேறொரு வாயிலும் இலேன்; உய்யும் ஆறு உரையாய் என - யான் பிழைக்கும் வழியை உரைப்பாய் என்றாளாக; நங்கை - நங்கையே!; தையலாய் - தையலே!; நையல்-வருந்தற்க; இந் நாட்டகத்து உண்டு எனின் - நீ விரும்பியது இந்த நாட்டிலே யிருப்பின்; சமழாது உரை என்றது - வருந்தாமற் கூறுக என்று கிளி கூறியது.

(வி - ம்.) தாய் தந்தையினுஞ் சிறந்தாய் என்றாள், அவர்க்குக் கூறலாகாதவற்றை இதனிடம் கூறுதலின். (கரு௦)

க00க. தேளிக யம்மலர் மேலுறை தேவியி
ளுளியுஞ் சாயலு மோப்புமை யில்லவள்
களிகோள் காமத்திற் கையற வெய்தித்தன்
கிளியைத் தூதுவிட் டாள்கிளந் தேன்பவே.

(இ - ள்.) தெளி கயம் மலர்மேல் உறை தேவியின் - தெளிந்த பதுமை யென்னும் கயத்தில் தாமரை மலரில் வாழும் திருமகளினும்; ஒளியும் சாயலும் ஒப்புமை இல்லவள் - ஒளியும் மென்மையும் வேறொப்புமை இல்லாத குணமாலை; களிகொள் காமத்தின் கையறவு எய்தி - மயக்கங்கொண்ட காமத்தாலே செயலறுதல் பொருந்தி; தன் கிளியைக் கிளந்து - தன் கிளியினிடம் தன் வருத்தத்தை வெளிப்படையாக எடுத்துக் கூறி; தூதுவிட்டாள் - அதனைத் தூதாக விடுத்தாள்.

(வி - ம்.) கயம் - பதுமை என்னும் குளம். மலர் மேலுறை தேவி - திருமகள். தேவியின் என்புழி இன் உறழ்பொரு. சாயல் - மென்மை. ஒளிக்கும் சாயலுக்கும் தேவியல்லது பிறர் ஒப்பாகாதவள் என்க. களி - மகிழ்ச்சி. கையறவு - செயலறவு. கிளந்து - கூறி. (கருக)

க00உ. பூணே டேந்திய வெம்முலைப் பொன்னனு
ளுணுந் தன்குல னுங்நலங் கீழ்ப்பட
வீணை வித்தகற் காணிய விண்படர்ந்
தாணுப் பைங்கிளி யாண்டுப் பறந்ததே.

(இ - ள்.) பூணொடு ஏந்திய வெம்முலைப் பொன்னனாள் - பூணைச் சுமந்து நிமிர்ந்த விருப்பம் ஊட்டும் முலைகளையுடைய திருவனையாளின்; தன்நாணும் குலம் நலனும் கீழ்ப்பட-நாணமும் குலனும் நன்மை குறைய அவளுடைய வேட்கையை அறிவிக்க; வீணை வித்தகன் காணிய - சீவகனைக் காண்பதற்கு; ஆணுப் பைங்கிளி - நட்புடையதான பசுங்கிளி; விண்படர்ந்து ஆண்டுப் பறந்தது - விண்ணிலே சென்று அவனிருக்கும் இடம் அடையப் பறந்தது.

(வி - ம்.) யாழ்வென்று கொண்ட தத்தையை விரும்பினவன் என்னுங் கருத்துப்பட 'வீணை வித்தகன்' என்றார்.

பொன்னனாள் : குணமாலை. குலம் : ஆகுபெயர் ; ஒழுக்கம் என்க. நலம் - பெண்மை நலம். காணிய : செய்யிய வென்வாய் பாட்டு வினையெச்சம். ஆணு - நட்பு. ஆண்டு - அச் சீவகனிடத்து. (௧௫௨)

வேறு

௧௦௦௩. கூட்டினான் மணிபல தெளித்துக் கொண்டவன்
நீட்டினான் கிழிமிசைத் திலக வாணுதல்
வேட்டமால் களிற்றிடை வெருவி நின்றதோர்
நாட்டமு நடுக்கமு நங்கை வண்ணமே.

(இ - ள்.) மணிபல தெளித்துக் கூட்டினான் - பல மணிகளையும் கரைத்துக் கூட்டினான் ; கொண்டவன் கிழிமிசைத் திலகவாணுதல் - கூட்டியவன் படத்தின் மேல், திலகம் அணிந்த ஒள்ளிய நெற்றியாளை ; வேட்ட மால் களிற்றிடை வெருவி நின்றது - தான் விரும்பிய, பெரிய களிற்றின் முன்னர் அஞ்சி நின்றதாகிய ; ஓர் நாட்டமும் நடுக்கமும் - ஒரு நோக்கமும் நடுக்கமும் ; நங்கை வண்ணமே - குணமாலையின் இயலாகவே எழுதினான்.

(வி - ம்.) 'நீல நெடுங்கணாற் கவர்ந்த கள்ளி—அஞ்சனத் துவலை ஆடி நடுங்கினாள்' (சீவக. ௧௦௨௪) என்பன் பின்னும்.

இது முதல் மூன்று செய்யுட்கும் ௧௦௦௬-ஆம் செய்யுளின்கண் உள்ள இறைமகன் என்பதை எழுவாயாகக் கொள்க. இறைமகன் : சீவகன். தெளித்தல் ஈண்டுக் கரைத்தல் என்னும் பொருட்டு. கிழி - படாம்.

குணமாலை களிற்றின்முன் அஞ்சிநடுங்கி அலமந்து நோக்கிய பொழுது தோன்றிய தோற்றத்தை ஓவியமாகத் தீட்டினன் என்பது கருத்து. (௧௫௩)

௧௦௦௪. நெகிழ்ந்துசோர் பூந்துகி னோக்கி நோக்கியே
மகிழ்ந்துவீழ் மணிக்குழன் மாலை காலொடு
முகிழ்ந்துவீங் கிளமுலை முத்தந் தைவரும்
புகழ்ந்துதன் றோள்களிற் புல்லு மென்பவே.

(இ - ள்.) நெகிழ்ந்து வீழ் பூந்துகில் நோக்கி நோக்கியே - நெகிழ்ந்து விழும் அழகிய துகிலினை மனத்தாற் குறித்துப் பார்த்துக் கண்ணாலும் பார்த்து ; மகிழ்ந்து-களித்து ; வீழ் மணிக் குழல் மாலைகால் தொடும் - வீழும் கருங் குழலையும் மாலையையும் காலையும் திருத்தத் தொடுவான் ; முகிழ்ந்து வீங்கு இளமுலை முத்தம் தைவரும் - அரும்பிப் பருத்த இளமுலைமேல் முத்துக்

களைத் திருத்தமாக இடுவதற்குத் தொடுவான்; புகழ்ந்து தன் தோள்களிற் புல்லும்-அவளழகைப் புகழ்ந்து தன் தோள்களால் தழுவுவான்.

(வி - ம்.) நோக்கி: நோக்கில்லாத நோக்கம் (மன நோக்கம்) நோக்கியே: இது பொறியால் நோக்கும் நோக்கம். வெருவி நின்ற நடுக்கம் எழுதலின், குலைந்தனவற்றை மயக்கத்தால் திருத்தத் தேடினன்: மாலை: அவள் பெயரெனினும் ஆம். 'மணிக்குரல் மாலையும்' பாடம். (குரல்: ஐம்பாலில் ஒன்று) (கடுச)

க00ரு. படைமலர் நெடுங்கணாள் பரவை யேந்தல்குன்
மிடைமணி மேகலை நோற்ற வெந்தொழிற்
புடைதிரள் வனமுலைப் பூணு நோற்றன
வடிமலர்த் தாமரைச் சிலம்பு நோற்றவே.

(இ - ள்.) படைமலர் நெடுங்கணாள் பரவை ஏந்து அல்குல்-வேற்படையும் மலரும் போன்ற நீண்ட கண்ணவளின் பரவிய ஏந்திய அல்குலில்; மிடை மணிமேகலை நோற்ற - செறிந்த மணிமேகலைகள் நோற்றன; வெந்தொழில் புடைதிரள் வனமுலைப் பூணும் நோற்றன - கொடுந்தொழிலையுடைய, பக்கங்களிலே திரண்ட அழகிய முலைகளிற் பூண்களும் நோற்றன; அடிமலர்த் தாமரைச் சிலம்பு நோற்ற - அடிகளாகிய தாமரை மலரில் அணிந்த சிலம்புகளும் நோற்றன.

(வி - ம்.) யானே நோற்றிலேன் என்பது குறிப்பெச்சம்.

படை - ஈண்டு வேல். மலர் - தாமரை மலர். பரப்புடையதாய் ஏந்திய அல்குல் என்க. வெந்தொழில் முலை புடைதிரள்முலை எனத் தனித்தனி கூட்டுக. அடித் தாமரை மலர் என மாறுக. 'அடிமலர் ஒருசொல்' என்பர் நச்சினார்க்கினியர். (கடுரு)

க00சு. மின்னணங் குறுமிடை மேவர் சாயலுக்
கின்னண மிறைமகன் புலம்ப யாவதுந்
தன்னணங் குறுமொழித் தத்தை தத்தையை
மன்னணங் குறலொடு மகிழ்ந்து கண்டதே.

(இ - ள்.) மின் அணங்குறும் இடை மேவரு சாயலுக்கு - மின்னை வருத்தும் இடையும் விருப்பம் வரும் மென்மையுமுடைய குணமாலைக்கு; இறைமகன் இன்னணம் புலம்ப - சீவகன் இவ்வாறு வருந்தக் கண்டு; தன் அணங்குறும் மொழித் தத்தை யாவதும் மகிழ்ந்து - தன் குணமாலையின் வருந்தும்மொழியைக் கொண்டு வந்த கிளி எல்லா வகையானும் மகிழ்ந்து; தத்தையை மன் அணங்கு உறலொடு கண்டது - காந்தருவதத்தை வருவதை மிகுதியான வருத்தத்துடன் கண்டது.

(வி - ம்.) மேவர்: மேவரு என்பதன் விகாரம். எல்லா வழியா னும் பெறுதற்குரியவன் வருந்துதலின் 'இறைமகன் புலம்ப' என்றார். ()

கூ00எ. ஆடுபாம் பெனப்புடை யகன்ற வல்குன்மேற்
சூடிய கலைப்புறஞ் சூழ்ந்த பூந்துகி
லோடிய வெரிவளைத் துருவ வெண்புகை
கூடிமற் றதன்புறங் குலாய கொள்கைத்தே.

(இ - ள்.) ஆடு பாம்பு எனப் புடை அகன்ற அல்குல்மேல்-(படம் விரித்து) ஆடும் அரவம்போல அகன்ற அல்குலின் மேல்; சூடிய கலைப்புறம் சூழ்ந்த பூந்துகில் - அணிந்த மேகலையின்மேல் சுற்றிய அழகிய ஆடை; வளைத்து ஓடிய எரி - வளைய ஓடின எரியை; உருவ வெண்புகை - நிறமுடைய வெள்ளிய புகை; கூடி அதன்புறம் குலாய கொள்கைத்தே - சேர்ந்து வளைத்து அதன் புறத்திலே நிலைபெற்ற தன்மையது.

(வி - ம்.) பாம்பு அல்குற்கே உவமையாதலின் அடுத்துவரல் உவமை அன்று; 'அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே' (தொல். நகூ) என்றார். மற்று: அசை. 'மாண்குலாம் குணத்தினால்' (சீவக. உஉநங) என்பர் பின்னும். (கருஎ)

கூ00அ. கோன்வளர் குவிமுலைக் கோட்டிற் றாழ்ந்தன
மின்வளர் திரள்வடம் விளங்கு பைங்கதி
ரின்வள ரிளம்பிறை யெழுதப் பட்டன
போன்வளர் செப்பின்மேற் பொலிந்த போன்றவே.

(இ - ள்.) கொன்வளர் குவிமுலைக் கோட்டில் - பெருமை வளரும் குவிந்த முலைக் கோட்டிலே; தாழ்ந்தன மின்வளர் திரள்வடம் - கிடந்தனவாகிய ஒளிவளரும் முத்துவடங்கள்; பைங்கதிர் இன்வளர் இளம்பிறை - புதிய கதிர்களையுடைய இனிமை வளரும் இளம்பிறை; எழுதப்பட்டன பொன்வளர் செப்பின்மேல் பொலிந்த போன்ற - எழுதப்பட்டன போன்ற பொன்னால் வளர்ந்த செப்பின்மேல் பொலிந்தன போன்றன.

(வி - ம்.) கொன் - பெருமை. முலைக்கோட்டிற் கிடந்த முத்து வடம் செப்பின்மேற் பிறை பொலிந்தன போன்றன என்க. வடம் பல வாகலிற் பன்மை பிறைக்கும் கூறினர். (கருஅ)

கூ00கூ. குண்டல மொருபுடை குலாவி வில்லிட
விண்டலர்ந் தொருபுடை தோடு மின்செய்
மண்டல நிறைந்ததோர் மதிய மன்னதே
யொண்டொடி திருமுகத் துருவ மாட்சியே.

(இ - ள்.) குண்டலம் ஒருபுடை குலாவி வில்இட-குண்டலம் ஒரு புறத்தே வளைந்து ஒளிசெய; தோடு ஒருபுடை விண்டு

அலர்ந்து மின்செய - தோடு மற்றொரு புறத்தே வேறுபட விரிந்து ஒளிவீச; மண்டலம் நிறைந்தது ஓர் மதியம் - வட்ட மாக நிறைவுற்ற ஒருதிங்கள் (இருப்பின்); ஒண்தொடி திரு முகத்து உருவமாட்சி அன்னது - ஒள்ளிய வளையணிந்த இம் மங்கையின் திருமுகத்தின் உருவ அழகு அத்தகையது.

(வி - ம்.) இஃது இல்பொருளுவமை. குண்டலம் ஒரு காதினும் தோடு ஒரு காதினும் அணிந்திருத்தலால் இங்ஙனம் உவமை கூறினர். மண்டிலம் - வட்ட வடிவம். மதியம் - திங்கள். (கருகூ)

க0க0. பூணிற முலையவள் பொருவில் பூநுதன்
மாணிறக் கருங்குழன் மருங்கிற் போக்கிய
நாணிற மிகுகதிர்ப் பட்ட நல்லொளி
வாணிற மின்னிருள் வளைந்த தொத்ததே.

(இ - ள்.) பூண் நிறம் முலையவள் - பூணையும் நிறத்தையும் உடைய முலையாளின்; மாண் நிறக் கருங்குழல் மருங்கில் - சிறந்த நிறமுடைய கரிய கூந்தலின் பக்கத்தில்; பொருஇல் பூநுதல் போக்கிய - ஒப்பற்ற அழகிய நெற்றியிலே சேர்த்துள்ள; நாள் நிறம் மிகுகதிர்ப் பட்டம் நல்லொளி - நாடோறும் ஒளி மிகும் பிறைமதி போன்ற பட்டத்தின் நல்லொளி; வாள்நிறம் மின் இருள் வளைந்தது ஒத்தது - ஒளி பொருந்திய நிறமுடைய மின் இருளை வளைந்தது போன்றது.

(வி - ம்.) 'நாணிற மிகுகதிர்ப் பூநுதல்' என இயைத்து 'நாடோறும் நிறம் மிகும் பிறைபோன்ற அழகிய நுதல்' என்பர் நச்சினார்க் கினியர்.

நெற்றிக்குப் பிறையும் கூந்தலுக்கு இருளும் பட்டத்திற்கு மின்னலும் உவமைகள். (கசூ0)

க0கக. கடிகமழ் பூஞ்சிகை காமர் மல்லிகை
வடிவுடை மாலைகால் தொடர்ந்து வாய்ந்தது
நடுவொசிந் தொல்கிய நாறு மாமலர்க்
கொடியின்மேற் குயில்குனிந் திருந்த தொத்ததே.

(இ - ள்.) காமர் மல்லிகை வடிவுடை மாலை - அழகிய மல்லிகையாலான வடிவுறு மாலை; கால் தொடர்ந்து வாய்ந்தது கடிகமழ்பூ சிகை - தன்னிடத்தே கட்டப்பட்டுப் பொருந்திய மணமிகுமலர் முடி; நடு ஒசிந்து ஒல்கிய நாறும் மாமலர்க் கொடியின்மேல் - நடுவு வளைந்து நுடங்கிய மணமுறும் மலர்க்கொடி யின்மேல்; குயில் குனிந்து இருந்தது ஒத்தது - குயில் வளைந்து தங்கிய தன்மையை ஒத்தது.

(வி - ம்.) மாலையைக்கொண்ட பூஞ்சிகைக்குப் பூங்கொடியின் மேல் குனிந்திருந்த குயில் உவமை. (கசுக)

கoகஉ. சிலம்பொடு மேகலை மிழற்றத் தேனினம்
அலங்கலுண் டியாழ்செயும் அம்பொன் பூங்கொடி
நலம்பட நன்னடை கற்ற தொக்குமிவ்
விலங்கரித் தடங்கணாள் யாவள் ஆங்கொலோ.

(இ - ள்.) தேன் இனம் அலங்கல் உண்டு யாழ்செயும் அம்பொன் பூங்கொடி - வண்டுகளின் இனம் மாலையில் தேனைப் பருகி யாழென முரலும் அழகிய பொன்னாலான பூங்கொடி ஒன்று; சிலம்பொடு மேகலை மிழற்ற - சிலம்பும் மேகலையும் ஒலிக்க; நலம்பட நல்நடை கற்றது ஒக்கும் - நலம்பெற நல்ல நடையைக் கற்றது போன்ற; இவ் இலங்கு அரித்தடங்கணாள் யாவள்? - இந்த விளங்கும் செவ்வரி பரந்த் பெருங்கண்ணாள் யாவளோ?

(வி - ம்.) இல்பொருளுவமை.

மிழற்ற - ஒலிப்ப. தேனினம் - வண்டினம். அலங்கல்: ஆகுபெயர்; தேன் என்க. யாழ் - இசைக்கு ஆகுபெயர். (கசுஉ)

கoகந. யாவளே ஆயினும் ஆக மற்றிவள்
மேவிய பொருளொடு மீண்ட பின்னலால்
ஏவலாற் சேர்கலேன் என்று பைங்கிளி
பூவலர் சண்பகம் பொருந்திற் றென்பவே.

(இ - ள்.) யாவளே ஆயினும் ஆக - (இவள்) எவளாக இருப்பினும் இருக்க; இவள் மேவிய பொருளொடு மீண்டபின் அலால் - இவள் தான் விரும்பியது முடிந்து திரும்பின பின்னர் அன்றி; ஏவலால் சேர்கலேன் என்று - குணமாலையின் ஏவலாற் செல்லக் கடவேன் அல்லேன் என்றுன்னி; பைங்கிளி பூ அலர் சண்பகம் பொருந்திற்று - அப் பச்சைக்கிளி மலர்ந்த சண்பகத்தைச் சார்ந்து தங்கியது.

(வி - ம்.) ஏவலான் - ஏவில் வல்லவன் (சீவகன்) எனினும் ஆம்.

இவள் என்றது காந்தருவதத்தையை. மேவிய பொருள் - தான் விரும்பிவந்த செயல். சேர்கலேன்: தன்மை ஒருமை எதிர்மறை வினைமுற்று. (கசுந)

கoகச. மதுக்களி நெடுங்கணாள் வான்பொற் கிண்கிணி
யொதுக்கிடை மிழற்றச்சென் றெய்தி யூன்கவர்
கதக்களி வேலினாற் கண்டு காமநீர்ப்
புதுத்தளி ரனையவள் புலந்து நோக்கினாள்.

(இ - ள்.) மதுக்களி நெடுங்கணுள் - கள்ளின் களிப்பைத் தன்னிடத்தே கொண்ட நீண்ட கண்ணினுள் ; வான்பொன் கிண்கிணி ஒதுக்கிடை மிழற்றச் சென்று எய்தி - உயர்ந்த பொற் கிண்கிணி நடையிலே ஒலிப்பப் போய் நெருங்கி ; ஊன்கவர் கதக்களி வேலினன் கண்டு - ஊனைக் கவரும் சீற்றத்துக்கும், வெற்றிக் களிப்புக்கும் உரிய வேலினனைக் கண்டு ; காமநீர்ப் புதுத்தளிர் அனையவள் புலந்து நோக்கினுள் - காம நீரிலே தோன்றும் புதிய தளிரைப் போன்று (நடுங்கி) ஊடியவளாய் அப் படத்தைக் குறித்துப் பார்த்தாள்.

(வி - ம்.) 'கொல் புனல் தளிரின் நடுங்குவனள் நின்று' (பதிற்றுப் பத்து-ருஉ) என்பது காண்க. 'காமத்தாற் புலந்து' என்றும் கூட்டலா மென்பர் நச்சினார்க்கினியர். (கசு௪)

க0கரு. இதுவென வுருவென வியக்கி யென்றலும்
புதிது பூந்துகில் குழல்கள் சோர்தலான்
மதுவிரி கோதையம் மாலை நின்மன
மதுமுறை யியக்கலி னியக்கி யாகுமே.

(இ - ள்.) இது என உரு என-(பார்த்தவள்) இது என்ன உருவம் என்று வினவ ; இயக்கி என்றலும் - (சீவகன்) இயக்கியின் உருவம் என்றவுடன் ; பூந்துகில் குழல்கள் சோர்தலால் புதிது இது - பூந்துகிலும் குழலும் சோர எழுதுவதால் புதியதே இப் படம் (நீ கூறியது பொய்யன்று) ; மதுவிரி கோதை அம் மாலை நின்மனம் அது - தேன்மிகுங் கோதையாளாகிய அக் குணமாலை நின் உள்ளமாகிய அதனை ; முறை இயக்கலின் இயக்கி ஆகும் - முறையே ஆற்றுமை மிக இயக்குவதால் இயக்கி ஆவாள்.

(வி - ம்.) இயக்கி தெய்வமாதலின் 'இது' என்றாள்.

அம்மாலை - அக்குணமாலை. (கசுரு)

க0கசு. முளைத்தெழு மதியமுத் தரும்பி யாங்கென
விளைத்தது திருமுகம் வியர்ப்பு வெஞ்சிலை
வளைத்தன புருவமு முரிந்த வல்லியே
கிளைக்கழு நீர்க்கணுஞ் சிவப்பிற் கேழ்த்தவே.

(இ - ள்.) முளைத்து எழு மதியம் ஆங்கு முத்து அரும்பியது என - கிழக்கே முளைத்தெழுந்த திங்கள் ஆங்கே முத்துக்களை அரும்பிய தென்னுமாறு ; திருமுகம் வியர்ப்பு விளைத்தது-(அவள்) அழகிய முகம் வியர்வை பொடித்தது ; வெஞ்சிலை வளைத்தஅன புருவமும் முரிந்த - கொடிய விற்களை வளைத்தால்

அன்ன புருவங்களும் நெற்றியிலேறி வல்லையே வளைந்தன; கிளைக் கழுநீர்க்கணும் சிவப்பின் கேழ்த்த - விரைவாகவே அலர்ந்த பூவிற்குக் கிளையாகிய கழுநீரின் (நீர்க்கீழ் அரும்பினும்) கண்கள் சிவப்புற்றன.

(வி - ம்.) 'வல்லையே' என்பதனைத் திருமுகத்தின் வியர்ப்புக்கே கூட்டுவர் நச்சினார்க்கினியர்.

கிளைக்கழுநீர் - நீர்க்கிழரும்பு. கணும் - கண்ணும். கண்ணும் கிளைக் கழுநீர்ச் சிவப்பிற் கேழ்த்த என மாறுக. "கிளைக்கவின்று எழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு" (உக) என்றார் திருமுருகாற்றுப் படையினும். அலர்ந்த பூவினும் இவ்வரும்பு இதழ் மிக்குச் சிவப்புடையதாதல்பற்றி இங்ஙனம் கூறினர். (கசுசு)

௧0௧௭. பாவைநீ புலவியி னீடல் பாவியேற்
காவியோன் றிரண்டுடம் பல்ல தூற்றுநீர்க்
கூவல்வாய் வெண்மணல் குறுகல் செல்லுமே
மேவிப்பூங் கங்கையுள் விழைந்த வன்னமே.

(இ - ள்.) பாவை! நீ புலவியில் நீடல் - பாவையே! நீ புலவியிலே காலம் நீட்டிக்காதே; இரண்டு உடம்பு அல்லது பாவியேற்கு ஆவி ஒன்று - நம்மிருவர்க்கும் இரண்டு உடம்பே அல்லாமல், பாவியேனுக்கு உயிர் ஒன்றாக (நின்னுயிரே என் னுயிராக) இருக்கும். (இது நம் இயல்பு); பூங்கங்கையுள் மேவி விழைந்த அன்னம் - பூமலிந்த கங்கையை விரும்பி அடைந்த அன்னம்; வெண்மணல் ஊற்றுநீர்க் கூவல் வாய் குறுகல் செல்லுமே? - வெள்ளிய மணலின்கண் ஊறும் ஊற்று நீரையுடைய கிணற்றிலே நெருங்கிச் செல்லுமோ?

(வி - ம்.) கூவலிற் செல்லாதெனவே, கங்கையை நிகர்க்கும் யாற்றிலே செல்லும் என்பதாயிற்று; எனவே, குணமாலை மரபுங்கூறி அவளை வரைதலும் முறைமையென்று கூறினனும். (கசுஎ)

௧0௧அ. பேரினும் பெண்டிரைப் பொருது சீறுவாள்
நேர்மலர்ப் பாவையை நோக்கி நெய்சோரி
கூரழல் போல்வதோர் புலவி கூர்ந்ததே
யார்வுறு கணவன்மாட் டமிர்தின் சாயற்கே.

(இ - ள்.) பேரினும் பெண்டிரைப் பொருது சீறுவாள் - வேறொரு பெண்டிரின் பேருரைப்பினும் பொறுமமற் சீறும் தத்தை; மலர்ப் பாவையை நேர் நோக்கி - திருமகளைப் போன் றாளை எதிர்முகமாக நோக்கியபோது (அவள் வடிவு மிகுதி கண்டு); ஆர்வுறு கணவன்மாட்டு அமிர்தின் சாயற்கு - விருப்பம் மிகுந்த கணவனிடத்திலே அமிர்தமனைய மெல்லியலாட்கு; நெய்

சொரிகூர் அழல்போல்வது ஓர் புலவி கூர்ந்தது - நெய் பெய்த லாலே மிகுந்தெரியும் அழலைப் போல்வதாகிய ஊடல் மிக்கது.

(வி - ம்.) நேரமர்ப் பாவையை நோக்கி' என்பது பாடமாயின், 'தனக்கு மாறாகிய பாவையை நேரே நோக்கி' என்க.

பேரினும் என்றது, வேறொரு பெண்ணின் பெயர் சொல்லு மளவிற்கே என்பது படநின்றது. மலர்ப்பாவை - திருமகளை ஒத்த குணமாலை என்க. என்றது அவள் உருவப் படத்தை. கூரழல்: வினைத்தொகை. ஆர்வு - ஆர்வம். அமிர்தின் சாயல்: காந்தருவதத்தை. (௧௯௮)

௧௦௧௯. புலந்தவள் கோடியென நடுங்கிப் பொன்னரிச்
சிலம்பொடு மேகலை மிழற்றச் சென்னிமே
லலங்கல்வா யடிமல ரணிந்து குண்டல
மிலங்கப்பேர்ந் தினமலர் சிதறி யேகினாள்.

(இ - ள்.) புலந்தவள் கொடிஎன நடுங்கி - இவ்வாறு பிணங்கினவள் மலர்க்கொடிபோல நடுங்கி; சென்னிமேல் அலங்கல் வாய் - அவன் முடிமேல் மாலையிடத்தே; பொன் அரிச் சிலம்பொடு மேகலை மிழற்ற - பொற்சிலம்பும் மேகலையும் மெல்லென ஒலிக்கும்படி; அடிமலர் அணிந்து - தன் அடியா கிய மலரைச் சூட்டி; குண்டலம் இலங்கப் பேர்ந்து - குண்டலம் ஒளிவிட அவ்விடத்தினின்றும் பெயர்ந்து; இனமலர் சிதறி ஏகினாள் - பின்னர் இனமலர்களைச் சிந்திவிட்டுத் தன் மனைக்குச் சென்றாள்.

(வி - ம்.) இச் செய்யுளில் சென்னிமேல் அடிமலர் அணிந்து என்றது, அவள் புலவி தணித்தற்கு அவள் அடிகளில் வணங்கிய சீவக னுடைய சென்னிமேல் என்பதுபட நின்றது. இனமலர் - தொகுதி யான மலர். (௧௯௯)

௧௦௨௦. துனிப்புறு கிளவியாற் றணேவி யேகலு
மினிப்பிறர்க் கிடமிலை யெழுவ லீங்கெனாக்
கனிப்புறு சொல்லளைஇப் பறந்து காளைதன்
பனிக்கதிர்ப் பகைமலர்ப் பாதஞ் சேர்ந்ததே.

(இ - ள்.) துனிப்பு உறுகிளவியால்-அவன் கூறிய வெறுப் பூட்டும் வார்த்தையுடனே; துணைவி ஏகலும் - தத்தை போன வுடன்; இனி பிறர்க்கு இடம் இலை - (அவள் ஊடல் நீங்காது போதலின்) இனி வேறொருவர்க்கு இங்கே இடம் இல்லை; ஈங்கு எழுவல் என - இங்கு நின்றும் எழுவேன் என்று; கனிப்பு உறு சொல் அளைஇ-இனிமையான மொழிகளைத் தன்னிலே இயம்பிக் கொண்டு; பறந்து - பறந்து சென்று; காளைதன் பனிக்கதிர்ப்

பகை மலர்ப் பாதம் சேர்ந்தது-சீவகனுடைய தண்ணிய நிலவின் பகையான தாமரை மலரனைய அடிகளை வணங்கியது.

(வி - ம்.) அளைஇ : சொல்லிசை அளபெடை.

துனிப்பு - வெறுப்பு. துணைவி : காந்தருவதத்தை. ஈங்குப் பிறர்க்கிடமில்லை என மாறுக. கனிப்பு - இனிமை. பனிக்கதிர்ப்பகை - தாமரை மலர். (௬௭0)

க0உக. வாழ்கநின் கழலடி மைந்த வென்னவே
தோழியர் சுவாகதம் போது கீங்கெனச்
சூழ்மணி மோதிரஞ் சுடர்ந்து வில்லிட
யாழறி வித்தக னங்கை நீட்டினன்.

(இ - ள்.) மைந்த! நின் கழலடி வாழ்க என்ன - மைந்தனே! நின் கழலணிந்த அடி வாழ்வதாக! என்று வணங்கிய கிளி வாழ்த்த; யாழ் அறி வித்தகன் - யாழ் உணர்ந்த திறலோன்; தோழியர் சுவாகதம் போதுக ஈங்கு என - எம் தோழியரின் நல்வரவே! இங்கு வருக என்று கூறி; சூழ்மணி மோதிரம் சுடர்ந்து வில்இட அங்கை நீட்டினன் - விரலைச் சூழ்ந்த மணியாழி சுடர்விட்டு ஒளிவீச அங்கையை நீட்டினன்

(வி - ம்.) அடி வாழ்க என்றல் முறைமை. குணமாலையையும் சுரமஞ்சரியையும் குறித்துத் தோழியர் என்றான். 'தோழியர் சுவாகதம்' எனப் பாடம் ஓதி, 'வியந்து' தோழி சுகமே வந்ததே என்றுமாம்.

மைந்த நின் கழலடி வாழ்க என மாறுக. சுவாகதம் என்ற சொல்லிற்கு நல்வரவு என்றும் கிளி என்றும் பொருளுண்டு. (௬௭௧)

க0உஉ. பொன்னியல் குரும்பையிற் பொலிந்த வெம்முலைக்
கன்னியர் தூதொடு காமர் பைங்கிளி
முன்னமே வந்தேன முறுவல் நோக்கமோ
டென்னைகொல் வரவென வினிய செப்பினன்.

(இ - ள்.) பொன் இயல் குரும்பையின் பொலிந்த வெம்முலைக் கன்னியர் தூதொடு - பொன்னாலியன்ற குரும்பைபோல விளங்கும் வெம்முலைக் கன்னியரின் தூதாக; காமர் பைங்கிளி முன்னமே வந்தேன - அழகிய பச்சைக்கிளி என் முன்னரே வந்தது என்றெண்ணி; முறுவல் நோக்கமொடு - நகைமுகப் பார்வையுடன்; வரவு என்னைகொல் என - வரவு எதனைக் கருதியோ என்று; இனிய செப்பினன் - இனிய மொழிகளை இயம்பினன்.

(வி - ம்.) என் முன்னமே என்றான், பின்பும், 'ஆற்றேதேன் ஆற்ற, விடுந்த சிறுகிளி' (சீவக. க0சக) என்கின்றமையின். 'வந்ததென' என்பது 'வந்தேன' என விகாரப்பட்டது. (௬௭௨)

க௦உங. மையலங் களிற்ரெடு போருத வண்புக
ழையனைச் சேவ்விகண் டறிந்து வம்மேனப்
பையர வல்குலெம் பாவை தூதோடு
கையிலங் கேஃகினய் காண வந்ததே.

(இ - ள்.) கை இலங்கு எஃகினய் - கையில் விளங்கும் வேலோனே !; மையல்அம் களிற்ரெடு பொருத வண்புகழ் ஐயனை - மயக்கங்கொண்ட யானையுடன் போர்செய்த வளமிகு புகழுடைய ஐயனை : கண்டு செவ்வி அறிந்து வம்என - பார்த்து நிலை அறிந்து வருக என்று சொல்லிய; பை அரவு அல்குல் எம் பாவை தூதொடு - படமுடைய பாம்பனைய அல்குலையுடைய எம் பாவையின் தூது மொழியுடனே : காண வந்தது - நின் செவ்விகாணவே என் வரவு நேர்ந்தது.

(வி - ம்.) செவ்வி அறிதல் - வேட்கையுண்டில்லை யென்றறிதல்.

மையல் அங்களிற-மயங்கிய அழகிய அசனிவேகம். வம்: ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி. பாவை - குணமாலை. எம்பாவை என்றது எம்மூர் என்ருற்போன்று எனைக் கிளிகளையும் உளப்படுத்திக் கூறியபடியாம். என்னை கொல் வரவு என்றதற்கு விடையாகக் காணவந்தது என்று கிளி கூறிற்று. வந்தது காண்டற்கு என்றவாறு. (௧எங)

வேறு

க௦உச. வெஞ்சின வேழ முண்ட வெள்ளிலின் வெறிய மாக
நெஞ்சமு நிறையு நீல நெடுங்கணுற் கவர்ந்த கள்வி
அஞ்சனத் துவலை யாடி நடுங்கின ணிலைமை யென்னை
பைஞ்சிறைத் தத்தை யென்னப் பசுங்கிளி மொழியும் [அன்றே.

(இ - ள்.) பைஞ்சிறைத் தத்தை - பசுஞ் சிறகுடைய தத்தையே !; வெஞ்சின வேழம் உண்ட வெள்ளிலின் வெறியம் ஆக - கொடிய சினமுற்ற வேழம் என்னும் நோயால் உண்ணப் பட்ட விளாம்பழம்போல வெறுவியேம் ஆமாறு ; நெஞ்சமும் நிறையும் நீல நெடுங்கணால் கவர்ந்த கள்வி - உள்ளத்தையும் நிறையையும் (பிறர் அறியாமல்) நீண்ட கருங்கண்களாற் கவர்ந்த கள்வி ; அஞ்சனத் துவலை ஆடி நடுங்கினள் - கண்ணுக்குத் தீட்டிய மைத்துளியிலே முழுகி (முன்னர் யானையைக் கண்ட போது) நடுங்கினள் ; நிலைமை என்னை ? என்ன - அவள் நிலை எங்ஙனமுள்ளது ? என்று சீவகன் வினவ ; பசுங்கிளி மொழியும் - பைங்கிள்ளை மொழியும்.

(வி - ம்.) வேழம், தேரை போயிற்றென்ருற் போல்வதொரு நோயென்க. இனி, யானை யுண்டது வெறுவிதாம் என்றும் உரைப்ப. ஈண்டு 'நாட்டமும் நடுக்கமும்' (௧௦௦௩) வருத்தினமை கூறினன்.

வேழம் - விளம்பழத்திற் குண்டாகுமொருநோய். அஃது அவ் வேழத்திற்குரிய வெஞ்சினமென்னும் அடையேற்றது, நெட்டிலை வஞ்சிக்கோ என்றாற்போன்று. வெள்ளில் - விளாம்பழம். துவலை - துளி தத்தை - கிளி: விளியேற்று நின்றது. (௧௦௪)

வேறு

௧௦௨௫. பூவணை யழலின்மேற் சேக்கும் பொன்செய்தூண்
பாவைதான் பொருந்துபு நிற்கும் பற்பல்கா
லாவியா வழலென வுயிர்க்கு மையென
மேவிப்பூ நிலமிசை யிருக்கு மெல்லவே.

(இ - ள்.) பாவைதான் பூ அணை அழலின் மேல் சேக்கும்-என் தலைவி மலரணை ஆகிய நெருப்பின் மேல் தங்குவாள்; பொன் செய்தூண் பொருந்துபு நிற்கும் - பொன்னாலாகிய தூணைச் சார்ந்து நிற்பாள்; பற்பல்கால் ஆவியா அழல் என உயிர்க்கும் - பலமுறை கொட்டாவி விட்டு நெருப்புப்போல மூச்செறிவாள்!; ஐ எனப் பூ நிலமிசை மேவி மெல்ல இருக்கும்-ஐயென வருந்தித் தரையிலே சென்று மெல்ல அமர்வாள்.

(வி - ம்.) ஐ: வருத்தக் குறிப்பு.

பூவணை அழலிற் சேக்கும் என்றது அவட்குப் பூவணைமேலிருத்தல் தீமேல் இருப்பது போல்வதாயிற்று என்னும் கருத்துடையது. ஆவியா-ஆவித்து: செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். ஆவித்தல்-கொட்டாவி விடுதல். பூநிலம்: இருபெயரொட்டு. (௧௦௫)

௧௦௨௬. பணித்தகு கோலமும் பந்தும் பார்ப்புறாண்
மணிக்கழங் காடலண் மாமைதான் விளர்த்
தணித்தகை யாழினோ டமுதம் விட்டோரீஇத்
துணைப்பெரு மலர்க்கணிற் றுயிலு நீங்கினாள்.

(இ - ள்.) பணித்தகு கோலமும் பந்தும் பார்ப்புறாள் - பிறரைத் தாழ்விக்கத்தக்க கோலத்தைப் புனைந்துகொள்ளாள், பந்தும் விளையாடாள்; மணிக் கழங்கு ஆடலள் - மணிகளாற் செய்த கழங்கையும் ஆடாள்; மாமைதான் விளர்த்து - அவளுடைய பொன்மேனி வெளுத்து; அணித்தகை யாழினோடு அமுதம்விட்டு ஒரீஇ - அணியத்தக்க யாழையும் உணவையும் விட்டு நீங்கி; துணைப்பெரு மலர்க்கணில் துயிலும் நீங்கினாள் - பெரிய இரண்டு மலரனைய கண்களில் துயில்வதையும் விட்டாள்.

(வி - ம்.) பந்தும் என்பதற் கேற்ப விளையாடாள் என வருவித்தோதுக. மணிக்கழங்கு - மணியாற்செய்த கழற்சிக்காய். மாமை - நிறம். அமுதம் - உணவிற்கு ஆகுபெயர். (௧௦௬)

௧௦௨௭. திருந்துவேற் சீவக சாமி யோவெனுங்
கருங்கடல் வெள்வளை கழல்ப வோவெனும்
வருந்தினேன் மார்புறப் புல்லு வந்தெனும்
பொருந்துபூங் கொம்பன பொருவின் சாயலே.

(இ - ள்.) பொருந்து பூங்கொம்பு அன பொருஇன் சாயல்- பொருந்திய பூங்கொம்பு போன்ற உவமை கூறற்கு இனிய மென்மையுடைய என்தலைவி; திருந்துவேல் சீவகசாமியோ! எனும் - திருந்திய வேலேந்திய சீவகசாமியே! என விளிப்பாள்; கருங்கடல் வெள்வளை கழல்பஒ எனும் - கரிய கடலிற் பிறந்த வெள்ளிய வளைகள் கழல்வவாயின! ஒ! என வருந்துவாள்; வருந்தினேன் மார்புற வந்து புல்லு எனும்-(நின்னுருவெளியைத் தழுவி அகப்படாமையின்) யான் தழுவி வருந்தினேன்; இனி நீ வந்து மார்புறத் தழுவிக்கொள் என்பாள்.

(வி - ம்:) யானை சொல்லாமல் உயிரைக் காத்த வருத்தம் இன்று உடம்பைக் காத்தற்கரியதோ என்று கருதி, 'வளை கழல்பவோ' என்றாள்.

நச்சினார்க்கினியர் ௧௦௨௫-௧௦௨௭ ஆகிய மூன்று பாட்டுகளையும் ஒரு தொடர்ப்படுத்திக் கொண்டு கூட்டும் முடிபு:—

"பாவைதான் கோலத்தையும் பந்தையும் பாராளாய் ஆடலளாய் விளர்த்து யாழையும உணவையும் விட்டு நீங்கி, உறக்கத்தையும் விட்டாள்; இத்தன்மையே யன்றி உயிரும் நீங்குமோ என்று கருதிப் பூம்படுக்கையாகிய நெருப்பிலே கிடந்து பார்க்கும்; அதினும் உயிர் நீங்காமையின், தூணைப் பற்றிக்கோடாகப் பொருந்தி நின்றும் பார்க்கும்; வருத்தக் குறிப்புத் தோன்றி ஐயெனக் கூறிப்போய்ப் பல்கால் ஆவித்து நெட்டுயிர்ப்புக் கொள்ளா நிற்கும்; பின்பு அதுவுமின்றி நிலமிசை மெல்ல இருக்கும்: அங்ஙனமிருந்து, சாயலை உடையாள், 'சீவகசாமி! வளைகழல அமையுமோ' எனும்; 'நின் உருவம் வெளிப்பட்டதனைப் பல் காலும் சென்று புல்லி, அது தன் எதிர் புல்லாமையின், யான் புல்லி வருந்தினேன்; இனி, நீதான் வந்து மார்புறம்படி புல்'லென்னும்; அது காணாமையின் ஒ என்று வருந்தும்." (௧௭௭)

௧௦௨அ. கன்னிய ருற்றநோய் கண்ண ளார்க்குமஃ
தின்னதென் றுரையலர் நாணி னாதலான்
மன்னும்யா னுணரலேன் மாத ருற்றநோய்
துன்னிநீ அறிதியோ தோன்ற லென்றதே.

(இ - ள்) கன்னியர் உற்றநோய் இன்னதென்று கண்ணனார்க்கும் நாணின் உரையலர் ஆதலான் - கன்னிப் பெண்கள் தாம் அடைந்த காமநோய் இத்தகையதென்று கண்ணைப் போன்றவர்கட்கும் நாணத்தினால் மொழியார், ஆகையால் (எனக்கும் உரையாள்); மன்னும் யான் உணரலேன் - யான் பறவை

யானதால் நெருங்கி மிகவும் அறிகிலேன்; தோன்றல்! மாதர் உற்றநோய் நீ துன்னி அறிதியோ என்றது - தோன்றலே! மாலை உற்ற நோயை நீ பொருந்தி அறிவையோ? கூறு என்றது.

(வி - ம்.) 'கன்னியர் உற்றநோய் கண்ணனார்க்கும் இன்னதென்றுரையலர் என்னுமிதனை, "தாமுறு காமத்தன்மை தாங்களே உரைப்பதென்ப(து) ஆமெனல் ஆவதன்றால் அருங்குல மகளிர்க் கம்மா" (சூர்ப்ப - சுடு) எனவரும் இராமாவதாரத்தோடும் ஒப்புநோக்குக. மன்னும்-மிகவும். மாதர்: குணமாலை. (கஎஅ)

வேறு

கஎகூ. புள்ளின் வாயுரை கேட்டலும் பொன்செய்வே
லெள்ளி நீண்டகண் ணுடிறத் தின்னுரை
யுள்ளி னுருழைக் கண்டதோத் தானரோ
வள்ளன் மாத்தடிந் தானன்ன மாண்பினான்.

(இ - ள்.) வள்ளல் மாத்தடிந்தான் அன்ன மாண்பினான் - வள்ளலாகிய மாமரங் கொன்ற முருகனனைய சிறப்பினான்; புள்ளின் வாய்உரை கேட்டலும் - கிளியின் வாய்மொழியைக் கேட்டவுடன்; பொன் செய்வேல் எள்ளி நீண்ட கண்ணாள் திறத்து இன்உரை - பொன்னாற் செய்யப்பட்ட வேலை இகழ்ந்து நீண்ட கண்களையுடையாளிடமிருந்து வந்த இனிய மொழியை, உள்ளினாருழைக் கண்டது ஒத்தான் - தன்னால் நினைக்கத்தக்காரிடம் கண்டாற்போல மகிழ்ந்தான்.

(வி - ம்.) இன்னுரை: ஆகுபெயராய் இன்னுரை அடங்கிய ஓலையைக் குறிக்கும். இனி, 'கண்ணாள் திறத்தின்னுரையைப் புள்ளின் வாயுரையாகக் கேட்டலும், தான் பெறற்கரியரா நினைத்தவர் தன் எதிரே வரக்கண்டார் போல மகிழ்ந்தான்' என நச்சினார்க்கினியர் கூறுமாறு கொள்ளினும் கொள்க. அன்றி, 'இன்னுரையால்' என உருபு விரித்து, 'உள்ளினார் உழைவரக் கண்டாற் போன்ற மகிழ்வடைந்தா'னெனக் கொள்ளினும் பொருந்தும். (கஎகூ)

கஅ௦. சென்ம ருந்துதந் தாய்சொல்லு நின்மனத்
தென்ன மர்ந்த துரைத்துக்கோ ணீயென
வின்னி மிர்ந்தநின் வீங்கெழிற் றோளவட்
கின்ம ருந்திவை வேண்டுவ லென்றதே.

(இ - ள்.) சொல் மருந்து தந்தாய்! - குணமாலையின் மொழியாகிய மருந்தினை யான் ஆற்றுமாறு தந்த நீயே; சொல்லும் நின் மனத்து என் அமர்ந்தது - கூறுகின்ற நின் உள்ளத்திற்கு என்ன பொருந்தியதோ; உரைத்துக்கொள் என-அதனைக்

கூறிக்கொள் என்றுணக ; வில் நிமிர்ந்த நின் வீங்கு எழில்தோள் அவட்கு இன்மருந்து - வில் பொருந்திய, நின்னுடைய பருத்த அழகிய தோள்கள் அவளுக்கு இனிய மருந்தாகும். (அன்றி நின்னைப்போற் சொல் மருந்தால் ஆற்றாள்) ; இவை வேண்டுவல் என்றது - (ஆகவே) இத் தோள்களையே வேண்டுவேன் என்றது.

(வி - ம்.) சொல் மருந்து, குணமாலை சொல்லும் சொல் ; அவை, "திருந்து வேற் சீவகசாமியோ......வருந்தினேன் மார்புறப் புல்லு வந்து" என்று குணமாலை கூற்றைக் கிளிகொண்டு கூறப்பட்டவை என்க. அச்சொற்களே இனி அவளை யாம் எய்துதல் ஒருதலை என்று தெளிவித்துத் துயரகற்றலின் மருந்து என்றான். இன் மருந்து இவை என்றது நின்போன்று அவள் சொன் மருந்தான் ஆற்றுகிலாள் என்பது படநின்றது. (கஅ0)

க0ருக. பொற்குன் றுயினும் பூம்பழ னங்கள்சூழ்
நெற்குன் றும்பதி நேரினுந் தன்னையான்
கற்குன் றேந்திய தோளிணை கண்ணுறீஇச்
சொற்குன் றுபுணர் கேன்சொல்லு போவென்றான்.

(இ - ள்.) பொற்குன்று ஆயினும் பூம்பழனங்கள் சூழ் நெற்குன்று ஆம்பதி நேரினும்-(அவள் சுற்றத்தார் வேண்டுவன) பொன்மலை யெனினும், அழகிய பழனங்கள் சூழ்ந்த, நெற்குன்று களையுடைய நகரமே எனினும் ; தன்னை யான் கற்குன்று ஏந்திய தோளிணை கண் உறீஇப் புணர்கேன் - (அவற்றைக் கொடுத்து) அவளை நான் கற்குன்றுபோல் நிமிர்ந்த என் இரு தோளினும் அணைத்துத் தழுவிக்கொள்வேன் ; சொல் குன்று-இச் சொற்கள் குன்றமாட்டா ; போ, சொல்லு என்றான் - போய்க் கூறு என்றான்.

(வி - ம்.) 'கற்குன் றேந்திய தோள்' 'கொடுஞ்சிலையான்' (சீவக. க0சக) என்று தன்னை வியத்தல் குற்றமெனின், 'கிழவி முன்னர்த் தற்புகழ் கிளவி - கிழவோன் வினைவயின் உரிய என்ப' (தொல். கற்பு. ச0) என்பதன் கருத்தாற் குற்றம அன்று. வினை - செயப்படுபொருள். பொருளும் ஊரும் கொடுத்துப் புல்லுவேன் என்னுங் கடைப்பிடியாகிய செயப்படு பொருளும், முயற்சிக்குச் சிறப்புடைமையின், யானே புணர் வேன் என்னும ஆள்வினைக் கருத்தால் தன்னைப் புகழ்ந்துரைக்கவே அது பற்றுக்கோடாக ஆற்றுவாள் என்பது பயனும். இது, கைக்கிளை யாதலின், முன்னிலை யனறியும் புகழ்ந்தான் ; புறத்திணை ஆயின், 'தலைத் தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தலும்' (தொல். புறத்திணை. ரு) தலைவற்குரித்து. (கஅக)

க0ருஉ. சேலை வென்றகண் ணாட்கிவை செப்பரி
தோலை யோன்றெழு திப்பணி நீயென
மாலை மார்பன் கோடுப்பத் தினைக்குரா
லோலை யோடுகோண் டோங்கிப் பறந்ததே.

(இ - ள்.) சேலை வென்ற கண்ணாட்கு - சேல்மீனை வென்ற கண்ணையுடைய குணமாலைக்கு ; இவை செப்ப அரிது - (அவள் வருத்தம் எல்லாம் நீங்குமாறு) இவற்றையெல்லாம் கூறுதல் அரிது ; நீ ஓலை ஒன்று எழுதிப் பணி என - நீ ஒரு திருமுகம் எழுதிக்கொடு என்று (கிளி) சொல்ல ; மாலை மார்பன் தினைக் குரல் ஓலையோடு கொடுப்ப - மாலை அணிந்த மார்பன் அவ்வாறே எழுதிப் பிறர் ஐயுறாமல் தினைக்கதிரில் வைத்த திருமுகத்தையும் தன் ஆழியையும் கொடுத்தவுடன் ; கொண்டு ஓங்கிப் பறந்ததே - எடுத்துக் கொண்டு வானிடை உயர்ந்து பறந்தது.

(வி - ம்.) மேல், 'நாம மோதிரந் தொட்டு' (சீவக. க0சு0) என வருவதால் 'ஓலை ஒன்று' என்னுமிடத்து ஒன்றென்பதற்கு 'ஆழி' எனப் பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.

சீவகன் கூற்றைத் தான் கேட்டுச் சென்று கூறும் சொற்களினும் சீவகன் கையால் எழுதிய ஓலையே அவள் துயரத்தை நன்கு தீர்ப்பதாகும் என்று கருதிக் கிளி ஓலைவேண்டிற்று என்க. (கஅ௨)

க0ரு௩. திருந்து கோதைச் சிகழிகைச் சீறடி
மருந்தின் சாயன் மணங்கமழ் மேனியாள்
பொருந்து பூம்பொய்கைப் போர்வையைப் போர்த்துடன்
கருங்கட் பாவை கவின்பெற வைகினாள்.

(இ - ள்.) திருந்து கோதை சிகழிகை சீறடி - திருந்து கோதையையும் மயிர் முடியையும் சிற்றடியையும் ; மருந்தின் சாயல் மணம் கமழ் மேனியள் - அமுதமனைய மென்மையையும் மணம் வீசும் மேனியையும் உடைய தத்தை ; பொருந்து பூம் பொய்கைப் போர்வையை உடன் போர்த்து - பொருந்திய மலர்ப் பொய்கை வடிவமாக எழுதிய போர்வையை மெய்ம்முழுதும் போர்த்து ; கருங்கண் பாவை கவின்பெற வைகினாள் - கருங் கண்ணாளாகிய அவள் (சினந்து) விழித்துக் கிடந்தாள்.

(வி - ம்.) மருந்து - அமுதம்; 'அமிர்தன்ன சாயல்' (சீவக. அ) என்றதன் குறிப்பை நோக்குக. 'பொய்கைபோலும் கண்ணீர்ப்போர்வை' எனலும் ஆம். (கஅ௩)

க0ரு௪. மறங்கோள் வேங்கதிர் வேலவன் வார்கழல்
கறங்க வேகித்தன் காதலி யூடலை
யுறைந்த வோண்மலர்ச் சென்னியி னீக்கிழ
னிறைந்த தின்ப நெடுங்கணிக் கேன்பவே.

(இ - ள்.) மறம்கொள் வெம்கதிர் வேலவன்-போருக்குரிய வெய்ய கதிர்களையுடைய வேலவனை சீவகன் ; வார்கழல் கறங்க ஏகி - (கிளி சென்ற பின்னர்) நீண்ட கழல் ஒலிக்கச் சென்று ;

தன் காதலி ஊடலை - தத்தையின் பிணக்கை ; ஒண்மலர் உறைந்த சென்னியின் நீக்கினான் - சிறந்த மலர்கள் அணிந்த தன் முடியாலே வணங்கி நீக்கினான் ; நெடுங்கணிக்கு இன்பம் நிறைந்தது .- நீண்ட கண்களையுடைய தத்தைக்கு இன்பம் நிறைவுற்றது. (கஅச)

(வி - ம்.) வேலவன் : சீவகன். காதலி - ஈண்டுக் காந்தருவதத்தை. சென்னியின் நீக்கினான் என்றது, அவளடிகளிலே வீழ்ந்து வணங்கி அவ்வூடலை நீக்கினன் என்றவாறு. நெடுங்கணி என்புழி ணகரவொற்றுக் கெட்டது; செய்யுள் விகாரம். (கஅச)

வேறு

கഠஅடு. தன்றுணைவி கோட்டியினி னீங்கித் தனியிடம்பார்த்
தின்றுணைவற் சேர்வா னிருந்ததுகோல் போந்ததுகோல்
சென்றதுகோல் சேர்ந்ததுகோல் செவ்வி அறிந்துருகு
மென்றுணைவி மாற்றமிஃ தென்றதுகோல் பாவம்.

(இ - ள்.) சென்றது கொல் - (கிளி) சென்றதோ ?; தன் துணைவி கோட்டியினின் நீங்கி - தன் காதலியுடன் இருக்கும் இருப்பினின்றும் நீங்கி ; தனி இடம் பார்த்து இன் துணைவன் சேர்வான் இருந்தது கொல் - தனியேயிருக்கும் இடத்தைப் பார்த்து என் இனிய காதலனை அடையக் (காலங்கருதி) இருந்ததோ ?; போந்தது கொல்? - (கோட்டி பெறாதே) திரும்பி விட்டதோ?; சேர்ந்தது கொல் ? - இடம் அறிந்து சேர்ந்ததோ?; செவ்வி அறிந்து - இடம் பெற்றபின் காலமும் அறிந்து; உருகும் இன் துணைவி மாற்றம் இஃது என்றது கொல்? - உருகும் நின் இனிய துணைவியின் மொழியீது என்றுரைத்ததோ ?; பாவம் ! - இஃதொரு பாவம் இருந்தவாறு என்னே ?

(வி - ம்.) கிளிப்பிள்ளையும் தானும் பட்டது 'என்' என்றாள்.

தன் துணைவி என்றது ஈண்டுக் காந்தருவதத்தையை. கோட்டி - கூட்டம். சேர்வான் - சேரும் பொருட்டு. கொல் அனைத்தும் ஐயப் பொருளன. செவ்வி-தகுந்த காலம். காமத்தால் வருந்தும் நெஞ்சத்தின் விதுவிதுப்பை இச் செய்யுள் நன்கு உணர்த்துதல் உணர்க. இங்ஙனமே இதனுடன் "இவ்வளவிற் செல்லுங்கொல் இவ்வளவிற் காணுங்கொல் இவ்வளவிற் காதல் இயம்புங்கொல் இவ்வளவின் மீளுங்கொல்" எனவரும் நளவெண்பாவினையும் (சுயம் - சഠ) நினைக. (கஅடு)

வேறு

கഠஅசா. சேந்தார்ப் பசுங்கிளியார் சென்றார்க்கோ ரின்னுரைதான்
றந்தாரேற் றந்தாரேன் னின்னுயிர்தாந் தாராரே
லந்தோ குணமாலைக் காதகா தென்றுலக
நோந்தாங் கழமுயன்று நோற்றானு மெய்துவனே.

(இ - ள்.) செந்தார்ப் பசுங்கிளியார் சென்றார்க்கு - சிவந்த மாலையை உடைய பைங்கிளியாராகிய போனவர்க்கு; ஓர் இன்னுரைதான் தந்தாரேல் - ஓர் இனிய மொழியை அவர் கூறினரெனின்; என் இன்உயிர் தந்தார் - எனக்கு இனிய உயிரையே அளித்தவராவார்; அந்தோ! தாம் தாராரேல் - ஐயோ! அவர் தாம் கூறாரெனின்; குணமாலைக்கு ஆ தகாது என்று - குணமாலைக்கு இத் துன்பம் வரலாகாது என்று; உலகம் நொந்து அழ - உலகம் வருந்தியிரங்க; முயன்று-முயற்சி செய்து; நோற்றானும் அங்கு எய்துவனே - தவம் செய்தாயினும் அவரை அடைவேனோ? (அம் முயற்சியில் இறந்துபடுவேன்.)

(வி - ம்.) செந்தார் - கழுத்தில் உள்ள கோடு. 'கிளியார்' என உயர்திணையாற் கூறல் ஒன்றென முடித்தலாற் கொள்க. எய்துவனே: ஏ: எதிர்மறை. அந்தோ! ஆ: இரக்கக் குறிப்பிடைச் சொற்கள்.

நச்சினார்க்கினியர், "அங்ஙனங் கூறாராயின் அவ்விடத்து யான் சுரமஞ்சரியைப் போலே முயன்று தவஞ்செய்தாயினும் பின்பு எய்து வேனோ? 'ஆ! குணமாலைக்கு இவ்விறந்துபாடு தகாதென்று உலகம் நொந்து அழும்படி இறந்துபாட்டை எய்துவேன் அன்றோ?' என்று கருதினள்" என்று பொருள் கூறுவர்.

முன் நிகழ்ச்சியிற் சுரமஞ்சரி தவஞ்செய்வேன் என்று மனத்திற் கொண்டு குணமாலையுடன் மாறுபட்டுச் சென்றனளேனும், அவள் மனக் கோள் குணமாலைக்குத் தெரிந்திருக்க இடமில்லை. (கஅசு)

க0ருஎ. சென்றார் வரைய கருமஞ் செருவேலான்
பொன்றாங் கணியகலம் புல்லப் பொருந்துமேற்
குன்றாது கூடுகெனக் கூறிமுத்த வார்மணன்மே
லன்றாங் கணியிழையா ளாழி யிழைத்தாளே.

(இ - ள்.) கருமம் சென்றார் வரைய - வினையின் முடிவு வினைமேற்சென்றவரின் அறிவின் திறனளவாய் இருக்கும். ('என் கிளி பேதையாதலால் எங்ஙனமோ?' என்றெண்ணி) செருவே லான் பொன் தாங்கு அணி அகலம் புல்லப் பொருந்துமேல்-போர் வேலானுடைய அணியேந்திய அழகிய மார்பம் என்னைத் தழுவக் கூடுமாயின்; குன்றாது கூடுக எனக் கூறி - தவறாமற் கூடுவதாக என்றுரைத்து; ஆங்கு முத்த ஆர்மணல் மேல் - அவ்விடத்தே முத்துக்கள் நிறைந்த மணல்மேல்; அன்று - அதனைப் போகவிட்ட அப்போது; அணி இழையாள் ஆழி இழைத்தாள்- குணமாலை கூடற்சுழி தீட்டத் தொடங்கினள்.

(வி - ம்.) கருமம் சென்றார் வரைய என மாறுக. கருமம் சென்றார் வரைய என்றது என்பொருட்டுச் சென்ற கிளி பேதையே ஆதலின் அஃது அக்கருமத்தை முடித்துக்கொண்டு வருதல் ஒரு தலையன்றென்பது படநின்றது. கூடலிழைத்தலாவது - வருவரோ

வாராரோ என்றையுற்றவர் விரலால் வட்டமாகக் கோடு கிழித்து அக் கோட்டின் இருமுனைகளும் ஒன்று கூடியவிடத்து வருவர் என்றும் கூடாமல் விலகியவழி வாரார் என்றும் துணிதல் என்க. (௧௮௭)

௧௦௩௮. பாகவரை வாங்கிப் பழுதாகிற் பாவியேற்
கேகுமா லாவி யெனநினைப்பப் பைங்கிளியார்
மாகமே நோக்கி மடவாளே யவ்விருந்தா
ளாகும்யான் சேர்வ லெனச்சென் றடைந்ததே.

(இ - ள்.) பாகவரை வாங்கி - (அங்ஙனமிழைப்பவள்) பாதிவரையில் வளைத்து; பழுதாகின் பாவியேற்கு ஆவிஏகும் - இது கூடாதாயின் பாவியேனுக்கு உயிர் நீங்கும்; என நினைப்ப - என்றெண்ணிக் (கூடற்சுழியை முடியாமலே வானிற் கிளி வரவை நோக்கி வாளா இருப்ப); மாகமே நோக்கி - வானையே நோக்கி; அவ்விருந்தாள் யார்? மடவாளே ஆகும் - அங்கிருந் தாள் யார்? (வேறுபட்ட தோற்றத்தோடிருப்பினும் வேறொருத்தி இங்கிராள் ஆகையால்) குணமாலையே ஆவாள்; யான் சேர்வல் என - யான் இனி அவளிடஞ் செல்வேன் என எண்ணி; பைங்கிளி சென்று அடைந்தது - பசுங்கிள்ளை போய்ச் சேர்ந்தது.

(வி - ம்.) 'குணமாலை மாகமே நோக்கியும் கன்னிமாடத்திலும் இருந்ததால், மெய்வாடி, வேறுபட்ட தோற்றதோடிருப்பினும் கிளி அறிந்தது' எனக் குணமாலையின் காதல் நிலை கூறியவாறு. தான் போனபின்புள்ள வேறுபாட்டால் ஐயுற்றாலும் வருத்த மிகுதி கண்டு கிளி தெளிந்தது. (௧௮௮)

௧௦௩௯. கண்டா ணெடிதுயிர்த்தாள்
கைதொழுதாள் கையகத்தே
கொண்டா டினைக்குரருன்
சூடினாள் தாழ்குழன்மே
னுண்டார்ப் பசுங்கிளியை
நோவ அகட்டொடுக்கி
வண்டாரான் சேவ்விவாய்க்
கேட்டாடன் மெய்ம்மகிழ்ந்தாள்.

(இ - ள்) கண்டாள் - (தன்னை அணுகின கிளியைக்) கண்டாள்; நெடிது உயிர்த்தாள் - (இது என்னுரைக்குமோ என்று) பெருமூச் செறிந்தாள்; கைதொழுதாள் - (கிளியின் வாயில் தினைக்கதிரைக் கண்டு அதிலே ஓலையிருக்கும் என்று துணிந்து) கைகுவித்து (நல்லூழை) வணங்கினாள்; கையகத்தே தினைக்குரல் கொண்டாள் - கையிலே தினைக்கதிரை வாங்கிக் கொண்டாள்; தாழ்குழல் மேல் சூடினாள் - நீண்ட கூந்தலிலே

வைத்துக் கொண்டாள்; நுண்தார்ப் பசுங்கிளியை நோவ அகட்டு ஒடுக்கி - நுண்ணிய செவ்வரி கழுத்திற் பொருந்திய கிளியை அது வருந்துமளவு வயிற்றில் அணைத்துக்கொண்டு; வண்தாரான் செவ்வி வாய்க் கேட்டாள் - செழுவிய மாலையான் நிலையை அதன் வாய்மொழியாலே கேட்டாள்; தன் மெய்ம் மகிழ்ந்தாள் - தன் உடல் குளிர்ந்தாள்.

(வி - ம்.) அன்பினால் வயிற்றில் அணைத்தாள். திணைக்கதிரிலே மோதிரமும் ஓலையும் இருந்தனவாகையால் தனியே ஓய்வாக அமர்ந்து படிக்க எண்ணித் தன் குழலிலே வைத்துக்கொண்டாள். 'கையகத்தே கொண்டாள்' என்பதற்குக், 'கையிலே ஆழியை மறையக் கொண்டாள்' என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். ஆழி தனியே கொண்டு வரப்பட்டதென்று அவர் கருதியிருத்தல் வேண்டும்.

இஃதென் கூறுமோஎன் றையுற்று உயிர்த்தாள் என்க. ஓலை யிருக்கும் என்னுந் துணிவால் கைதொழுதாள் என்க. நுண்தார் - நுண்ணிய (கழுத்து) வரை. தாரான்: சீவகன். செவ்வி-ஈண்டு நிலைமை. (கஅகூ)

கOசO. தீம்பா லமிர்தூட்டிச் செம்போன் மணிக்கூட்டிற்
காம்பேர் பணைத்தோளி மென்பறவை கண்படுப்பித்
தாம்பான் மணிநாம மோதிரந்தோட் டையென்னத்
தேம்பா வெழுத்தோலை செவ்வனே நோக்கினாள்.

(இ - ள்.) காம்பு ஏர் பணைத்தோளி - மூங்கிலனைய அழகிய பருத்த தோளினாள்; மென்பறவை தீ பால் அமிர்து ஊட்டி - மென்மையான கிளியை, இனிய பாலாகிய உணவை ஊட்டி; செம்பொன் மணிக்கூட்டில் கண் படுப்பித்து-மணிகள் இழைத்த பொற்கூட்டிலே துயிலச் செய்து; ஆம் பால் மணி நாமம் மோதிரம் தொட்டு - ஆம் பகுதியையுடைய சீவகனென்னும் பெயர் பொறித்த ஆழியை எடுத்து அணிந்து கொண்டு; ஐ என்ன - விரைவாக; தேம்பா எழுத்து ஓலை செவ்வனே நோக்கினாள் - வருந்தாத எழுத்துள்ள ஓலையைச் செவ்வனே பார்த்துப் படிக்கின்றாள்.

(வி - ம்.) 'தேம்பாமைக்குக் காரணமான ஓலை' எனினும் ஆம்.

காம்பு - மூங்கில். ஏர்: உவம உருபு. பணை - பருத்த. மென்பறவை; ஈண்டுக் கிளி. ஆம்பால்-ஆகும் பகுதி. நாமமோதிரம்-பெயர் பொறிக்கப் பட்ட மோதிரம். ஐஎன்ன: விரைவுக் குறிப்பு. (கககூO)

கOசக. கொடுஞ்சிலையா னோலை குணமாலை காண்க
வடுந்துயர முள்சுடவேந் தாற்றுதே னுற்ற
விடுந்த சிறுகிளியால் விம்மனோய் தீர்ந்தே
னெடுங்கணு டானு நினைவகல்வா ளாக.

(இ - ள்.) கொடுஞ்சிலையான் ஓலை - வளைந்த வில் ஏந்திய சீவகன் விடுக்கும் ஓலை; குணமாலை காண்க-குணமாலை காண்பாளாக; அடும் துயரம் உள்சுட வெந்து ஆற்றுதேன் ஆற்ற - காம நோய் உள்ளத்தைச் சுடுதலாலே வெந்து ஆற்றாத நான் ஆற்றுமாறு; விடுந்த சிறுகிளியால் விம்மல் நோய் தீர்ந்தேன் - தான் வரவிட்ட சிறுகிளியினால் யான் மிக்க வருத்தத்திலிருந்து நீங்கினேன்; நெடுங்கணாள் தானும் நினைவு அகல்வாள் ஆக - நீண்ட கண்களையுடைய அவளும் வருத்தமிகா தொழிவாளாக.

(வி - ம்.) 'கொடுஞ்சிலையான்' எனத் தற்புகழ்தல் தகுமென்பதை முன்னரே (சீவக. க0ருக) கூறினும். 'இன்னார் ஓலை இன்னார் காண்க' என்றல் முறைமை. விடுந்த: விட்ட என்பதன் விகாரம்.

கொடுஞ்சிலையான் என்றது சீவகன் என்னும் பெயர்ப் பொருட்டாய் நின்றது. (ககக)

க0சஉ. ஈட்டஞ்சா னீணிதியு மீர்ங்குவளைப் பைந்தடஞ்சூழ்
மோட்டு வளஞ்சுரக்கு மூரு முழுதீந்து [மேன்றோட்
வேட்டார்க்கு வேட்டனவே போன்றினிய வேய்
பூட்டார் சிலைநுதலாட் புல்லா தொழியேனே.

(இ - ள்.) ஈட்டம்சால் நீள்நிதியும் - அறத்திற் சேர்க்கப்பட்ட பெருஞ் செல்வத்தையும்; ஈர்ங்குவளைப் பைந்தடம் சூழ் மோட்டுவளம் சுரக்கும் ஊரும் - தண்ணிய குவளை நிறைந்த பசுந்தடங்கள் சூழ்ந்து உயரிய செல்வத்தைப் பெருக்கும் ஊரையும்; முழுது ஈந்து - (குரவர் விரும்பியவாறு) முற்றவும் நல்கி; பூட்டு ஆர் சிலை நுதலாள் - பூட்டப்பட்ட வில்லனைய புருவத்தாளின், வேட்டார்க்கு வேட்டனவே போன்று இனிய - விரும்பினார்க்கு விரும்பினவை போல, இனிமையான; வேய்மென் தோள் - மூங்கில் அனைய மெல்லிய தோள்களை; புல்லாது ஒழிவேனோ - தழுவாமல் விலகுவேனோ?

(வி - ம்.) "சிலைநுதலாளைத் தோளைப் புல்லாதொழியேன்" எனக் கூட்டி நச்சினார்க்கினியர் பொருள் கொண்டார். இங்ஙனம் இரண்டனுருபு முதலுக்கும் சினைக்கும் வருதல் "முதன்முன் ஐவரின்" என்ற சூத்திரத்தில், 'தெள்ளிது' (தொல். வேற்றுமை மயங். ரு) என்பதனாற் கொள்க.

ஈட்டஞ்சால் என்றது, அறத்தால் ஈட்டமமைந்த என்பது படநின்றது. நீள்நிதி - பெருஞ்செல்வம். மோட்டுவளம் - பெருவளம்.

"வேட்டபொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்." (குறள்: கக0ரு)

என்றார் திருவள்ளுவனாரும். (ககஉ)

கo௪௩. குங்குமஞ்சேர் வெம்முலைமேற்
கோய்தார் வடுப்போறிப்பச்
சேங்கயற்கண் வெம்பனியாற்
சிந்தை யேரியவித்து
மங்கை மகிழ
வுறையேனேல் வாளமருட்
பங்கப்பட் டார்மேற்
படைநினைந்தே னாகேன்றான்.

(இ - ள்.) கொய்தார் குங்குமம்சேர் வெம்முலைமேல் வடுப் பொறிப்ப - (என்) மாலை தன்னுடைய குங்குமம் அணிந்த விருப் பூட்டும் முலையின்மேல் வடுவாய் அழுந்துமாறு; செங்கயல்கண் வெம்பனியால் சிந்தை எரி அவித்து-(யான் முயங்குதலிற் பிறந்த) சிவந்த கயற்கண்ணிலிருந்து பிறந்த உவகைக் கண்ணீராற் சிறிது தணிந்த காமத் தீயை அவித்து; மங்கை மகிழ உறையேனேல் - அவள் என் அன்புடைமைக்கு மகிழுமாறு அவளுடன் உறைந் திலேன் எனின்; வாள் அமருள் பங்கப்பட்டார்மேல் படை நினைந்தேன் ஆக என்றான் - வாட் போரிலே அஞ்சினார் மேலே படைவிட எண்ணினேன் ஆகக்கடவேன் என்றெழுதியிருந்தான்.

(வி - ம்.) 'வெம்பனி' என்றான், புணர்ந்தாலன்றி முயக்கத்தால் மட்டும் உண்ணிறை வெப்பம் முழுதும் தீராதென்று. பங்கப்படுதல் - இமைத்தல், திடுக்கிடல் முதலியன.

'ஆகென்றான்' என்பதனைத் தொழிற்பெயர் (வினையாலணையும் பெயர்) எனக் கொண்டு அடுத்த செய்யுளில் 'நுண்வரிகள்' என்பதற்கு எழுவாயாக்குவர் நச்சினார்க்கினியர். (ககூ௩)

கo௪௪. நூல்புடைத்தாற் போற்கிடந்த வித்தகஞ்சேர் நுண்வரிகள்
பான்மடுத்துத் தீந்தேன் பருகுவாள் போனோக்கிச்
சேல்படுத்த கண்ணீர் சுமந்தளைஇ மெய்ம்மகிழ்ந்து
மால்படுத்தான் மார்பின் மணந்தாளே போன்மகிழ்ந்தாள்.

(இ - ள்.) நூல்புடைத்தால் போன்று - நூல் எற்றினாற் போல; இனிய வித்தகம் சேர் நுண்வரிகள் - இனிய திறமை பொருந்திய நுண்ணிய எழுத்தின் வரிகளை; பால் மடுத்துத் தீ தேன் பருகுவாள்போல் நோக்கி-பாலிலே கலந்து இனிய தேனைப் பருகுவாள் போல இனிமையுற்றுப் படித்து; அளைஇ சேல்படுத்த கண்ணீர் சுமந்து மெய்ம்மகிழ்ந்து-உவகை கலந்து சேலை வென்ற கண்களில் நீர் நிறைய உடம்பு குளிர்ந்து; மால்படுத்தான் மார்பில் மணந்தாளேபோல் மகிழ்ந்தாள் - மயக்கத்தை உண்டாக் கினவன் மார்பிலே கலந்தவளைப்போல இனிமையுற்றாள்.

(வி - ம்.) வித்தகம் - உறப்புமாம். மடுத்து - கலந்து. மால்படுத்தான் - தன்னைக் காம மயக்கத்துட்படுத்தவனாகிய சீவகன். (கககூ)

க0சரு. பாலவியும் பூவும் புகையும் படுசாந்துங்
காலவியாப் பொன்விளக்குந் தந்தும்மைக் கைதொழுவேன்
கோலவியா வெஞ்சிலையான் சொற்குன்ற ளுகெனவே
நூலவையார் போனீங்க ணோக்குமினே யென்றாள்.

(இ - ள்.) பால் அவியும் - பாற்சோறும்; பூவும் - மலரும்; புகையும்-மணப்புகையும்; படுசாந்தும்-அரைத்த சாந்தும்; கால் அவியாப் பொன் விளக்கும் - காற்றில் அவியாத மாணிக்க விளக்கும்; தந்து உம்மைக் கைதொழுவேன் - படைத்து உங்களைக் கைகூப்பி வணங்குவேன்; கோல் அவியா வெஞ்சிலையான் சொல் குன்றான் ஆக என - அம்பு மாறாமல் எய்தற்குரிய கொடிய வில்லான் (நும்மை நீங்காது ஒற்றுமைப்படக் கூறிய) சொற்குன்றான் ஆகுமாறு; நூல் அவையார்போல் நீங்கள் நோக்குமின் என்றாள் - அறநூல் உணர்ந்த அவையோர்களை (நீங்கள் சொற்குன்றாமல் நோக்குதல்) போல அச்சொற்களுக்கு இடையூறின்றி ஆகவென்றே கருதி நோக்குங்கள் என்று வேண்டினாள்.

(வி - ம்.) நீங்கள் என்றது எழுத்துக்களை; அவற்றின் தன்மையும் வடிவும் ஆசிரியர்க்கல்லது உணராலாகாமையின், நாலில் விளங்கக் கூறிற்றிலரேனும் சமய நூல்களிற் கூறுதலின், அவ்வெழுத்துக்களைத் தெய்வம் என்றே கொள்க. (ககரு)

வேறு

க0சசு. மவ்வலங் குழலி னாளை மதியுடம் படுக்க லுற்றுச்
செவ்வியுட் செவிலி சொல்லுஞ் சிலையிவர் நுதலி னாய்நின்
னவ்வைக்கு மூத்த மாம னொருமகற் கின்றுன் றாதை
நவ்வியம் பிணைகொ ணோக்கி நகைமுக விருந்து செய்தான்.

(இ - ள்.) மவ்வல் அம் குழலினாளை மதி உடம்படுக்கல் உற்று - முல்லை மலர் அணிந்த கூந்தலாளாகிய குணமாலையை, அவள் அறிவை அறிய எண்ணி; செவ்வியுள் செவிலி சொல்லும் - அதற்கேற்பச் செவிலி செப்புவாள்; சிலை இவர் நுதலினாய்! - வில்லென விளங்கும் புருவத்தாய்; நவ்வி அம்பிணை கொள் நோக்கி - பெண்மானின் நோக்கைக் கொண்டவளே!; நின் அவ்வைக்கு மூத்த மாமன் ஒரு மகற்கு - நின் அன்னைக்கு முன் பிறந்தவனும் நினக்கு மாமனும் ஆவானுடைய ஒப்பில்லாத மகனுக்கு; இன்று உன் தாதை நகைமுக விருந்து செய்தான் - இன்று உன் தந்தை நகைமுகமாகிய விருந்தையிட்டான்.

(வி - ம்.) குழலிஞளை - குணமாலையை. அவ்வை - தாய். அவ்வைக்கு மூத்தவஞன நின்மாமன் என்க. நகைமுகவிருந்து என்றது உடன்பாடு என்னும் பொருளின்மேனின்றது. நின்னைக் கொடுப்பதாக உடன்பட்டான் என்பது கருத்து. (கககூ)

க0சஎ. பண்டியாற் பண்டி செம்பொன்
பல்வளை பரிய மாகக்
கொண்டுவந் தடிமை செய்வான்
குறையுறு கின்ற தன்றிக்
கண்டவர் கடக்க லாற்ருக்
கிழிமிசை யுருவு தீட்டி
வண்டிமிர் கோதை நின்னை
வழிபடு நாளு மென்ருள்.

(இ - ள்.) பல்வளை! வண்டு இமிர் கோதை! - பல்வளைகளை உடையாய்! வண்டுகள் முரலும் கோதையாய்!; பண்டியால் பண்டி செம்பொன் பரியமாகக் கொண்டு வந்து - நின் மைத்துனன் வண்டியாலே ஒரு வண்டி செம்பொன் பரிசமாகக் கொணர்ந்து; அடிமை செய்வான் குறையுறுகின்றது அன்றி - நினக்குப் பணிபுரியக் குறையுற்று நிற்பதே அன்றி; கண்டவர் கடக்கல் ஆற்ரு உருவு கிழிமிசை தீட்டி-பார்த்தவர் பார்வையை விட்டுக் கடந்துபோக இயலாத நின் வடிவத்தைக் கிழியிலே வரைந்து; நின்னை நாளும் வழிபடும் என்ருள் - உன்னை எப்போதும் வழிபடுவான் என்று கூறிஞள்.

(வி - ம்.) பல்வளை : அன்மொழித்தொகை, விளியேற்று நின்றது. கோதை : விளி. பண்டி - வண்டி. கண்டவர் கடக்கலாற்ரு உருவு - என்பதனை "ஆடவர் கண்டால் அகறலும் உண்டோ" என்னும் மணிமேகலையோடு ஒப்புக்காண்க. (ககஎ)

க0சஅ. மைத்துனன் வனப்பின் மிக்கான்
வளர்நிதிக் கிழவன் காளை
யுத்தம ஞனது நாம
மல்லதோன் றுரைத்த றேற்ரு
னித்திறத் திவன்க ணின்னை
யெண்ணிஞ ரென்ன லோடுந்
தத்தையங் கிளவி கையாற்
செவிமுத லடைச்சிச் சொன்ஞள்.

(இ - ள்.) மைத்துனன் வனப்பின் மிக்கான்-மேலும் நின் மைத்துனன் அழகிற் சிறந்தவன் ; வளர்நிதிக் கிழவன் - பெருஞ் செல்வத்துக்குரியவன் ; காளை - இளைஞன் ; உத்தமன் - நல்ல

வன்; உனது நாமம் அல்லது ஒன்று உரைத்தல் தேற்றான் - உன் பெயரை யன்றி உரைத்தல் அறியாதவன்; இத் திறத்து இவன்கண் - இக் கூறுபாடுகளையுடைய இவனிடத்தே; நின்னை எண்ணினார் என்னலோடும் - நின்னைக் கொடுக்க நினைத்தனர் என்ற அளவிலே; தத்தை அம் கிளவி - கிளிமொழியாள்; கையால் செவிமுதல் அடைச்சிச் சொன்னாள் - கைகளினாலே செவிகளைப் புதைத்து ஒருமொழி உரைத்தாள்.

(வி - ம்.) மைத்துனன் என்றது மேலும் நின்னை மணத்தற்கும் உரிமையுடையன் என்பது படநின்றது. இதன்கண் மணமகன்பால் பெண்ணின் தந்தை விரும்பும் வித்தையுடைமை உத்தமன் என்றதனானும், தாய் விரும்பும் தனம் வளர்நிதிக் கிழவன் காளை என்றதனானும், சுற்றம் விரும்பும் குலம் மைத்துனன் என்றதனானும், பெண் விரும்பும் அழகு வனப்பின்மிக்கான் என்றதனானும் போந்தமை உணர்க. (௧௯௮)

௧0௪௬. மணிமதக் களிறு வென்றான்
வருத்தச்சோற் கூலி யாக
வணிமதக் களிற னானுக்
கடிப்பணி செய்வ தல்லாற்
றுணிவதேன் சுடுசோல் வாளாற்
சேவிமுத லீர லென்றாள்
பணிவரும் பவளப் பாவை
பரிவுகோண் டனைய தோப்பாள்.

(இ - ள்.) பணிவரும் பவளப்பாவை பரிவுகொண்டனையது ஒப்பாள் - பணிவித்தற்கு அரிய பவளப்பாவை வருத்தங் கொண்ட தன்மை போன்றாள்; மணிமதக் களிறு வென்றான் வருத்தச் சொல் கூலி ஆக - கட்டுமணியையுடைய மதயானையை வென்றவன் 'கொண்டுய்யப் போமின்' (சீவக. ௬௮௧) என்ற பரிவுமொழிக்குக் கூலியாக; அணி மதக்களிறு அனானுக்கு அடிப்பணி செய்வது அல்லால் - அழகிய மதயானை போன்ற அவனுக்கு அடித்தொண்டு செய்தல் அன்றி; துணிவது என்? - வேறு கொடுக்கத் துணிவது எதற்கு?; சுடுசொல் வாளால் செவிமுதல் ஈரல் என்றாள் - (இவ்வாறு) சுடுசொல்லாகிய வாளாலே செவியிடத்தைப் பிளவற்க என்றுரைத்தாள்.

(வி - ம்.) 'அடிச் செருப்பாவதல்லால்' என்றும் பாடம்.

வருத்தச் சொல் - பரிவினைக் காட்டுஞ்சொல்; அஃதாவது "கோற்றொடிப்பாவை தன்னைக் கொண்டுயப் போமின்" என்று (௬௮௧) தன் பொருட்டு முன்னர்ச்சீவகன் கூறிய சொல். சுடுசொல் - உள்ளத்தைச் சுடுவதுபோன்று வருத்துங் கொடுஞ்சொல்; அது 'நின்னை எண்ணினார்' என்ற செவிலி சொல். (௧௯௯)

கOறும. கந்துகப் புடையிற் பொங்குங்
கலினமா வல்லன் காளைக்
கெந்தையும் யாயு நேரா
ராய்விடி னிறத்த லொன்றே
சிந்தனை பிறிதொன் றாகிச்
செய்தவ முயற லொன்றே
வந்ததா னாளை யென்றாள்
வடுவெனக் கிடந்த கண்ணாள்.

(இ - ள்.) வடு எனக் கிடந்த கண்ணாள்-(மேலும்) மாவடுவைப் போன்ற கண்ணினாள்; கந்துகப் புடையில் பொங்கும் கலினமா வல்லன் காளைக்கு - பந்தின் புடைத்தல் போல விரைகின்ற புரவியைச் செலுத்த வல்லனாகிய காளைக்கு; எந்தையும் யாயும் நேரார் ஆய்விடின் - என் தந்தையும் தாயும் கொடுக்க ஒவ்வாராயின்; இறத்தல் ஒன்றே - இறந்துபடுதலோ; சிந்தனை பிறிது இன்றாகிச் செய்தவம் முயறல் ஒன்றே - வேறு நினையாமல் செய்யும் தவத்தினைக் கைக்கொள்ளுதலோ; நாளை வந்தது என்றாள் - நாளைக்கு (இவ்விரண்டில் ஒன்று) நமக்கு வந்துற்றது என்று அழுதாள்.

(வி - ம்.) 'ஆகி - ஆக: குரவர் நினைவு வேறாய்ப்போக' என்பர் நச்சினார்க்கினியர்.

கலினமா - குதிரை. வல்லனாகிய காளை என்க. காளை - சீவகன். வந்தது என்று இறந்த காலத்தாற் கூறினாள், "வாராக் காலத்து வினைச்சொற் கிளவி இறப்பினும் நிகழ்வினும் சிறப்பத் தோன்றும் இயற்கையும் தெளிவும் கிளக்குங் காலை" என்பதோத்தாகலான். (உOO)

கOறுக. தேனெய்போன் றினிய சொல்லாள்
சிறுமுதுக் குறைமை கேட்டே
யூனைநைந் துருகிக் கைத்தா
யுண்ணிறை யுவகை பொங்க
வானெய்பாற் கிவர்ந்த தோத்த
தழேற்கவென் பாவை யென்று
தானையாற் றடங்க ணீரைத்
துடைத்துமெய் தழுவிக் கொண்டாள்.

(இ - ள்.) கைத்தாய் - (அதனைக் கேட்ட) செவிலித்தாய்; தேன்நெய் போன்று இனிய சொல்லாள்-தேனும் நெய்யும்போல இனிய சொல்லினளின்; சிறு முதுக்குறைமை கேட்டு - சிறு பருவத்தினும் பேரறிவுடைமை கேட்டு; ஊன் நைந்து உருகி -

மெய்இளகி உருகி ; உள்நிறை உவகை பொங்க - உள்ளத்திலே நிறைந்த உவகை பொங்குவதால் ; என்பாவை - என் மகளே !; ஆன்நெய் பாற்கு இவர்ந்தது ஒத்தது - உன் நினைவு பசுநெய் பாலை விரும்பியது போன்றது; அழேற்க என்று - அழாதே என்றுரைத்து ; தானையால் தடம்கண் நீரைத் துடைத்து - தன் முன்றானையால் குணமாலையின் கண்ணீரைத் துடைத்து; மெய் தழுவிக்கொண்டாள் - உடல் பொருந்தத் தழுவிக்கொண்டாள்.

(வி - ம்.) ஊனை: ஐ: அசை. 'பாற் கவர்ந்தது' என்றும் பாடம்.

தேனுகிய நெய்யெனினுமாம். சிறுமுதுக்குறைமை - இளம்பருவத்திலேயே பேரறிவுடைமை. "சிறுமுதுகுறைவிக்குச் சிறுமையுஞ் செய்தேன்" (சிலப். கசு - சுஅ.) என்பது கோவலன் கூற்று. அழேற்க - அழாதே. தானை - முன்றானை. (உ0க)

க0டுஉ. துகண்மனத் தின்றி நோற்ற
தொல்வினைப் பயத்தி னன்றே
தகணிலாக் கேள்வி யான்கட்
டங்கிய தென்று பின்னு
மகண்மனங் குளிர்ப்பக் கூறி
மறுவலும் புல்லிக் கொண்டாங்
ககன்மனைத் தாய்க்குச் சொன்ன
ளவளுந்தன் கேட்குச் சொன்னள்.

(இ - ள்.) மனத்துத் துகள் இன்றி நோற்ற - மனத்திலே அழுக்கில்லாமல் நோற்ற ; தொல் வினைப்பயத்தின் அன்றே - நல்லூழின் பயனால் அன்றே ; தகண் இலாக் கேள்வியான்கண் தங்கியது என்று - தட்டற்ற நூற் கேள்வியானிடத்தே நின் உள்ளம் நின்றது என்று ; பின்னும் மகள் மனம் குளிர்ப்பச் சொல்லி-மற்றும் மகளுடைய உள்ளம் குளிரக் கூறி ; மறுவலும் புல்லிக்கொண்டு - மறுமுறையும் தழுவிக்கொண்டு ; ஆங்கு அகல்மனைத் தாய்க்குச் சொன்னள் - அங்கே நற்றாய்க்குத் தெளியக் கூறினள் ; அவளும் தன் கேட்குச் சொன்னள் - அவளும் தன் கணவனுக்கு உரைத்தாள்.

(வி - ம்.) செவிலி நற்றாய்க்குக் கூறியதும், நற்றாய் தந்தைக்குக் கூறியதும் அறத்தொடு நிற்றல் எனப்படும். குணமாலை, "உற்றார்க்குரியர் பொற்றொடி மகளிர்" என்ற பழமொழிப்படி என் உயிரை மீட்ட சீவகனையேயன்றி மற்றொருவரை மணம்புரியேன் என்றலே அறத்தொடு நிற்றல் ஆம்.

துகள், ஈண்டு மனமாசு. தகண் - முட்டுப்பாடு. கேள்வி- நூற்கேள்வி. கேள்வியான் - ஈண்டுச் சீவகன். மறுவலும் - மீண்டும். மனைத்தாய் என்றது நற்றாயை. கேள் என்றது கணவனை. (உ0உ)

௧0௫௩. வினையமா மாலை கேள்வன்
குபேரமித் திரற்குச் சொல்ல
வனையதே பட்ட தென்று
லையனே நங்கைக் கொத்தான்
வனையவே பட்ட போலு
மணிமருண் முலையி னாளைப்
புனையவே பட்ட பொற்றாப்
புண்ணியற் கீது மென்றான்.

(இ - ள்.) வினயமாமாலை கேள்வன் குபேர மித்திரற்குச் சொல்ல - வினயமாமாலை தன் கணவனாகிய குபேரமித்திரனுக்குக் கூறியவுடன்; அனையதே பட்டது என்றால் - (அவனும்) அதுவே அவள் உள்ளத்திற் கொண்டது. என்றால்; ஐயனே நங்கைக்கு ஒத்தான் - அவனே நம் பெண்ணிற்கேற்றவன்; வனையவே பட்டபோலும் மணிமருள் முலையினாளை - எழுதப் பட்டனவே போன்ற மணிமருண்ட முலையாளை; புனையவே பட்ட பொன்தார்ப் புண்ணியற்கு ஈதும் என்றான் - அணிசெயப் பெற்ற பொன்மாலை அணிந்த நல்லோனுக்குக் கொடுப்போம் என்றான்.

(வி - ம்.) அனையதே: ஏ: வினா என்பர் நச்சினார்க்கினியர். அனையதே - அப்படியே. வினயமாலை: என்பது, எதுகை நோக்கி வினயமா மாலை எனப் போலி ஆயிற்று; நற்றாயின் பெயர்.

கேள்வன் - கணவன். குபேரமித்திரன், குணமாலையின் றந்தை. அனையது என்றது, உவமை கருதாமல் சுட்டுப்பொருட்டாய் நின்றது. ஐயன்: சீவகன். நங்கை: குணமாலை; மகளிருட் சிறந்தோள் என்னும் பொருட்டு. புண்ணியன்: சீவகன். ஈதும்: தன்மைப் பன்மை. (௨0௯)

வேறு

௧0௫௪. கற்றார் மற்றுங் கட்டுரை
வல்லார் கவியென்னு
நற்றேர் மேலார் நால்வரை
விட்டாற் கவர்சென்றார்
சுற்றார் வல்விற் சூடுறு
செம்பொற் கழலாய்கன்
பொற்றார் மார்பீர் போதுமி
னென்றாங் கெதிர்கொண்டான்.

(இ - ள்.) கற்றார் மற்றும் கட்டுரை வல்லார் கவி என்னும் நால்வரை - படித்தவர் மேலும் புனைந்துரைப்பதிற் சிறந்தவர், கவிஞர் என்னும் முத்திறமுடையார் நால்வரை; நல்தேர் மேலார்

விட்டாற்கு அவர் சென்றார் - நல்ல தேரின்மிசையராய்ச் செல்ல விட்டாற்கு இசைந்து அவர்களும் சென்றனர்; சுற்று ஆர் வல்வில் சூடுறு செம்பொன் கழல் நாய்கன் - (அப்போது) கட்டப்பட்ட வலிய வில்லையும் அணிந்த பொற்கழலையும் உடைய நாய்கன்; பொன்தார் மார்பீர்! போதுமின் என்று - பொன்மாலை மார்பினீர்! வம்மின் என்றுரைத்து; ஆங்கு எதிர்கொண்டான் - வாயிலிற் சென்று எதிர்கொண்டான்.

(வி - ம்.) இம் மூன்று கலையும் வல்லார் நால்வர் என்க.

கற்றாரும் வல்லாரும் கவியும் ஆகியவர் என்னும் என வேண்டிய உம்மையும் ஆக்கச் சொல்லும் தொக்கன. கவி - கவிஞர். நால்வரைத் தேரின்மேல் ஏற்றி உய்த்தான் என்பது கருத்து. நாய்கன், ஈண்டுக் கந்துகன். விட்டாற்கு என்புழி நான்கனுருபு அதற்குடம்படுதற் பொருட்டு. போதுமின் - வம்மின். (௨௦௪)

௧௦௫௫. சீந்தா நின்ற தீமுக வேலான் மணிச்செப்பி
னீந்தான் கொண்டா ரின்முக வாச மெரிசெம்பொன்
காந்தா நின்ற கற்பக மன்னீர் வரப்பெற்றேன்
சேர்ந்தே னின்றே வீடென நாய்கற் கவர்சொன்னார்.

(இ - ள்.) சீந்தா நின்ற தீமுக வேலான்-சீறுகின்ற அனல் கொண்ட வேலானாகிய நாய்கன்; மணிச்செப்பின் இன்முக வாசம் ஈந்தான் - மணியிழைத்த செப்பிலே இனிய முகவாசம் கொடுத்தான்; கொண்டார் - அவர்களும் எடுத்துக்கொண்டனர்; எரி செம்பொன் காந்தாநின்ற கற்பகம் அன்னீர் - எரியும் பொன்னின் ஒளியை விடுகின்ற கற்பகம் போன்றீர்; வரப்பெற்றேன் - நீவிர் வரும் பேறு பெற்றேன்; இன்றே வீடு சேர்ந்தேன் என - (அதனால்) இன்றே பேரின்பம் பெற்றவனானேன் என்று முகமனுரைக்க; நாய்கற்கு அவர் சொன்னார் - கந்துகனுக்கு வந்த நால்வரும் கூறினர்.

(வி - ம்.) சீந்துதல் - சினத்தல். இனி, சிந்தாநின்ற என்றதன் விகாரமாகக் கொண்டு தீசிந்தாநின்றமுகவேலான் எனினுமாம். மணிச் செப்பின் இன்முகவாசம் ஈந்தான் என மாறுக. முகவாசம் - வெற்றிலை. காந்துதல் - ஒளிவிடுதல். கற்பகம் - தாதர்க்கு உவமை. இன்றே வீடு சேர்ந்தேன் என மாறுக. வீடு: ஆகுபெயர். வீட்டின்பம் என்றது, வீட்டின்பம் பெற்றேன்போல மகிழ்ந்தேன் என்றவாறு. (௨௦௫)

௧௦௫௬. யாமக ளீது நீர்மகட் கொண்மி னெனயாருந்
தாமக ணேரா ராயினுந் தண்ணென் வரைமார்பிற்
பூமகள் வைகும் புண்ணியப் பொற்குன் றனையானுக்
கியாமக ணேர்ந்தே மின்றென நாய்கற் கவர்சொன்னார்.

(இ - ள்.) யாம் மகள் ஈதும் - யாம் எம் மகளைத் தருகிறோம்; நீர் மகள் கொண்மின் - நீர் அவளைக் கொண்மின்; என யாரும் தாம் மகள் நேரார் ஆயினும் - என எவரும் தம் மகளைக் கொடுக்க இசையார் என்றாலும் (புது முறையாக); தண் என் வரை மார்பில் - குளிர்ந்த மலையனைய மார்பிலே; பூமகள் வைகும் புண்ணியப் பொற்குன்று அனையானுக்கு - திருமகள் தங்கும் நலம் நிறைந்த பொன்மலை போன்ற சீவகனுக்கு; இன்று யாம் மகள் நேர்ந்தேம் என - இன்று யாம் மகட்கொடை விரும்பினேம் என்று; நாய்கற்கு அவர் சொன்னார் - குபேரமித்திரனுக்காக வந்த நால்வரும் கந்துகனிடம் உரைத்தனர்.

(வி - ம்.) தாம்மகள்: தம்மகள் என்பதன் விகாரமும் ஆம்.

குபேரமித்திரனுக்கும் தமக்கும் வேற்றுமையின்றென்பது தோன்ற யாம் மகள் நேர்ந்தேம் என்றார். நாய்கற்காக அத்தூதுவர் சொன்னார் என்க. குபேரமித்திரன் உரையை அவர்கொண்டு கூறினதாகக் கூறுதல் வேண்டாவுரையாகும். இதனோடு,

"யாமகள் தருதும் கொள்கெனக் கூறுதல்
ஏமவையத் தியல்பன்று." (பெருங் - ச : எக-உ.)

எனவரும் பெருங்கதையினை ஒப்புநோக்குக. (௨0௬)

௬0௫எ. சுற்றார் வல்விற் சூடுறு செம்பொற் கழலாற்குக்
குற்றேல் செய்துங் காளையும் யானுங் கோடியாளை
மற்சேர் தோளான் றன்மரு மானுக் கருள்செய்யப்
பெற்றே னென்னப் பேசினன் வாசங் கமழ்தாரான்.

(இ - ள்.) சுற்று ஆர் வல்வில் சூடுறு செம்பொன் கழலாற்கு - கட்டப்பட்ட வலிய வில்லும், சூடிய பொற்கழலுமுடைய குபேரமித்திரனுக்கு; காளையும் யானும் குற்றேல் செய்தும் - சீவகனும் யானும் சிறுபணி புரிவோம்; மல்சேர் தோளான் கொடியாளைத் தன் மருமானுக்கு அருள் செய்யப் பெற்றேன் என்ன - மல்லுக்கியன்ற தோளினன் தன் பூங்கொடியனைய மகளைத் தன் மருமகனுக்குக் கொடுக்கும் பேறு பெற்றேன் என்று; வாசம் கமழ்தாரான் பேசினன் - மணங்கமழ் மாலையான் பணிவுடன் கூறினன்.

(வி - ம்.) குற்றேல்: குற்றேவல் என்பதன் விகாரம். அவன் தானே மகட்கொடை நேர்தலானும் கொள்வார் தாழவே வேண்டுதலானும் இங்ஙனங் கூறினான். வாசங்கமழ்தாரான் என்றது கந்துக்கடனைக் குறிப்பால் உணர்த்தியதும். யானும் காலையும் குற்றேவல் செய்தும் என்பது பணிமொழி. (௨0எ)

௧0௫அ. விடைசூ ழேற்றின் வெல்புக ழான்றன் மிகுதாதை
கடல்சூழ் வையங் கைப்படுத் தான்போன் றிதுகூறக்
குடர்சூழ் கோட்ட குஞ்சரம் வென்ற வகையும்மப்
படர்சூழ் நெஞ்சிற் பாவைதன் பண்பு மவர்சொன்னார்.

(இ - ள்.) விடைசூழ் ஏற்றின் வெல்புகழான் தன்மிகு தாதை-விடைகள் சூழ்ந்த விடைபோலும் வெல்லும் புகழுடைய சீவகனின் தந்தை; கடல்சூழ் வையம் கைப்படுத்தான் போன்று-கடல்சூழும் உலகைக் கையகப் படுத்தான் போல; இதுகூற - இப் பணிமொழியை இயம்ப; குடர்சூழ் கோட்ட குஞ்சரம் வென்ற வகையும் - குடர் சூழ்ந்த கோட்டையுடைய அசனி வேகத்தைச் சீவகன் வென்றவாறும்; அப் படர்சூழ் நெஞ்சின் பாவைதன் பண்பும் - அந்தத் துன்பம் சூழ்ந்த உள்ளமுடைய குணமாலை கொண்ட இயல்பையும்; அவர் சொன்னார் - வந்தவர்கள் உரைத்தார்கள்.

(வி - ம்.) பண்பு: நேரராயின் இறந்துபடுதல், தவஞ்செய்தல் என்பவை.

விடை, ஏறு என்பன காளை என்னும் பொருளன. சீவகன் தோழர்கள் சூழத் திகழ்தலாற் விடைசூழ் ஏறு என்று உவமை கூறினர். கைப்படுத்தான் போன்று மகிழ்ந்து எனப் பொதுத் தன்மை விரித்தோதுக. குஞ்சரம் - யானை; ஈண்டு அசனிவேகம். படர் - துன்பம். (௨0அ)

௧0௫௬. மறையார் வேள்வி மந்திரச்
செந்தீக் கொடியேபோற்
குறையாக் கற்பிற் சீவகன்
றாயுங் கொலைவேற்கட்
பொறையொன் றாற்றாப் போதணி
பொற்கொம் பனையாளை
நறையார் கோதை நன்றென
வின்புற் றெதிர்கொண்டாள்.

(இ - ள்.) மறையார் வேள்வி மந்திரச் செந்தீக் கொடியே போல் - மறை வழிப்படும் வேள்வியிலே, மந்திரங் கூறும், செந் தீயின் கொடியைப் போன்ற; குறையாக் கற்பின் சீவகன் தாயும்- குறையாத கற்பினையுடைய சுநந்தையும்; கொலை வேல்கண் பொறை ஒன்று ஆற்றாப் போது அணி பொன் கொம்பு அனையாளை - கொலை வேலனைய கண்களையும், இல்லறப் பொறை ஒன்றுமே நடத்திப் போதணிந்த பொற்கொம்பு போன்ற குண மாலையை; நறையார் கோதை நன்று என - தேன் பொருந்திய

கோதை போன்றவளை மணப்பது நன்று என்று; இன்பு உற்று எதிர்கொண்டாள் - இன்பமுற்று விரும்பிக் கொண்டாள்.

(வி - ம்.) பொற்கொம்பனையாள் வினயமாமாலை என்றும் நறை யார்கோதை குணமாலை என்றும் நச்சினார்க்கினியர் கொள்வர். போதணி பொற்கொம்பு: இல்பொருளுவமை. கொடி - ஒழுங்கு. ஆற்று - ஆற்றி: செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். (உOசு)

கOசுO. பொற்கச் சார்த்த பூணணி பொம்மன் முலையாளை
யற்கச் செய்த யாப்பின ராகி யவண்வந்தார்
பொற்பக் கூறிப் போகுது மென்றார்க் கெழுகென்றார்
வற்கம் மிட்ட வண்பரி மாவி னவர்சென்றார்.

(இ - ள்.) அவண் வந்தார் - அங்கு வந்த நால்வரும்; பொன் கச்சு ஆர்ந்த பூண் அணி பொம்மல் முலையாளை - பொற் கச்சினாற் கட்டப்பெற்ற, அணிகலன் அணிந்த பெரிய முலையினாளை; அல்கச் செய்த யாப்பினராகி - அடையச் செய்த உறுதி யுடையவராய்; பொற்பக் கூறி - (மணஞ் செய்யும் பொழுதை யும்) அழகுறக் கூறி; போகுதும் என்றார்க்கு - போவோம் என்று கூறினவர்க்கு; எழுக என்றார் - அங்ஙனமே செல்க என்றார்; அவர் வற்கம் இட்ட வண்பரி மாவின் சென்றார் - வந்த வர்களும் பண்முற்றப் பெற்ற சிறந்த புரவி மீதிலே சென்றனர்.

(வி - ம்.) திருமணம் தப்பாமல் முடித்தற்குக் கடிதிற் சென்றார்.

அல்க - அற்க என எதுகைநோக்கி வலித்தது. அல்குதல்-தங்குதல். யாப்பினர் - யாப்பு - தொடர்புமாம். பொற்ப - பொலிவுற. வற்கம் - குதிரையணிகலனில் ஒன்று. வண்பரிமா - வளவிய செலவினையுடைய குதிரை. (உகO)

வேறு

கOசுக. மடந்தை திறத்தி னியையம்மகட் கூறி வந்தார்
விடந்தைத்தவேலாற் குரைத்தார்க்கவன் மெய்ம்மகிழ்ந்தா
னுடங்குங் கொடிப்போல் பவணூபுர மார்ப்ப வந்து
தடங்கண் ணவடா யதுகேட்டலுந் தக்க தென்றாள்.

(இ - ள்.) மடந்தை திறத்தின் இயைய மகள் பேசி வந்தார் - குணமாலையின் திறத்தாலே அவர்கள் இசைய மகளைக் கொடுப்பதாகப் பேசி வந்தவர்கள்; விடம்தைத்த வேலாற்கு உரைத்தார்க்கு - நஞ்சுபதிந்த வேலையுடைய குபேரமித்திர னுக்குக் கூறினார்க்கு; அவன் மெய்மகிழ்ந்தான் - அவனும் உண்மையான மகிழ்ச்சியடைந்தான்; நுடங்கும் கொடிபோல் பவள் நூபுரம் ஆர்ப்ப வந்து அது - அசையும் கொடிபோன்ற சுநந்தை நூபுரம் ஒலிக்க வந்து (கூறிய) அம் மொழியை; தடம்

கண்ணவள் தாய் கேட்டலும் தக்கது என்றாள்-பெருங்கண்ணின ளின் அன்னையான வினயமாமாலை கேட்டவுடன் அவளுக்கு அது தக்கது என்றாள்.

(வி - ம்.) மடந்தை: குணமாலை. வேலான்: குபேரமித்திரன். கொடி போல்பவள்: சுநந்தை. நூபுரம் - ஓர் அடியணிகலன். தாய்: வினயமாமாலை. அது தக்கதென்றாள் என இயைக்க. (உகக)

கO௬உ. திருவிற் கமைந்தான் றிசைபத்து மறிந்த தொல்சீ
ருருவிற் கமைந்தாற் கமைந்தாளென யாரு மொட்டப்
பெருகுங் கணியிற் கணிபேசிய பேதி னாளாற்
பருகற் கமைந்த வமிர்தின்படர் தீர்க்க லுற்றார்.

(இ - ள்.) திருவிற்கு அமைந்தான் - திருவனையாளாகிய குணமாலைக்குச் சீவகன் அமைந்தான்; திசைபத்தும் மலிந்த தொல்சீர் உருவிற்கு அமைந்தாற்கு அமைந்தாள் - பத்துத் திசையினும் நிறைந்த பழம் புகழையுடைய, அழகுக்கெனவே அமைந்த சீவகனுக்குக் குணமாலையும் அமைந்தாள்; என யாரும் ஒட்ட - என்று எல்லோரும் இசையுமாறு; பெருகும் கணியின் கணிபேசிய பேதுஇல் நாளால் - வளரும் கணித நூலை அறிந்த கணி கூறிய மயக்கம் அற்ற நாளிலே; பருகற்கு அமைந்த அமிர் தின் படர் தீர்க்கல் உற்றார் - உண்பதற்குத் தக்க அமிர்தமாகிய குணமாலையின் வருத்தத்தை நீக்கலுற்றனர்.

(வி - ம்.) திரு: உவமவாகுபெயர். . திருவிற்குச் சீவகன் அமைந் தான் என வருவித்துக் கூறுக. ஒட்ட - உடன்பட. கணியிற்கணி என்புழி முன்னின்ற கணி ஆகுபெயர்; நூல். ஏனையது - கணிவன். பேது இல்நாள் - மயக்கமில்லாத நல்லநாள்; குற்றமில்லாத நாளுமாம். படர்தீர்க்க லுற்றார் என்பது திருமண விழா நடத்துதற்கு முற்பட்டார் என்றவாறு. (உகஉ)

கO௬௩. கரைகோன் றிரங்குங் கடலிற்கலி கொண்டு கல்லென்
முரசங் கறங்க முழவிம்மவெண் சங்க மார்ப்பப்
பிரசங் கலங்கிற் றெனமாந்தர் பிணங்க வேட்டான்
விரைசேன் றடைந்த குழலாளையவ் வேனி லானே.

(இ - ள்.) கரை கொன்று இரங்கும் கடலின் கலிகொண்டு- கரையோடு மோதி ஆரவாரிக்கும் கடலைப்போல முழக்கங் கொண்டு; கல் என் முரசம் கறங்க - கல்லென்று முரசு முழங்க; முழவு விம்ம - முழவு ஒலிக்க; வெண் சங்கம் ஆர்ப்ப-வெண்மை யான சங்குகள் ஒலிக்க; பிரசம் கலங்கிற்று என. மாந்தர் பிணங்க - வண்டுகளின் திரள் மயங்கியது என மக்கள் நெருங்க; அவ் வேனிலான் - சிவனுடைய நெற்றிக் கண்ணுக்கு அழி

யாத காமனனை சீவகன்; விரைசென்று அடைந்த குழலாளை - மணம் வந்து பொருந்திய கூந்தலாளை; வேட்டான் - மணந்தான்.

(வி - ம்.) கலி - முழக்கம். கல்லென் : ஒலிக்குறிப்பு. கறங்க - முழங்க முழா - முழ என ஈற்று ஆகாரம் குறுகி நின்றது. பிரசம் - வண்டு. பிணங்க - நெருங்கும்படி. குழலாள் : குணமாலை. வேனிலான்: சீவகன்; ஆகுபெயர். (உகங)

கல0கூச. மழைமொக்கு ளன்ன வருமென்முலை மாதர் நல்லா
ரிழைமுற் றணிந்தா ரேழுநூற்றுவர் கோடி செம்பொன்
கழைமுற்று தீந்தேன் கரும்பார்வய லைந்து மூதூர்
குழைமுற்று காதின் மணிக்கொம்பொடு நாய்க னீந்தான்.

(இ - ள்.) மழை மொக்குள் அன்ன வரும் மென்முலை மாதர் நல்லார் - மழைநீரின் குமிழிபோல வளரும் மென்முலைகளையுடைய இளம் பெண்கள்; இழைமுற்றும் அணிந்தார் எழுநூற்றுவர் - எல்லோரும் அணிகலன் அணிந்தவராக எழுநூறு மகளிரும்; கோடி செம்பொன் - கோடி பொன்னும்; தீதேன் முற்று கரும்பின் கழை ஆர்வயல் - இனிய தேனையுடைய முற்றிய கருப்பங் கழிகளையுடைய கழனி சூழ்ந்த; ஐந்து மூதூர் - ஐந்து பழம்பதிகளும் ஆகிய இவற்றை; குழைமுற்று காதின் மணிக்கொம்பொடு - குழை பொருந்திய காதினையுடைய மணிக் கொம்பான குணமாலையை நீர்வார்த்துக் கொடுக்கும்போது; நாய்கன் ஈந்தான் - குபேரமித்திரன் கொடுத்தான்.

(வி - ம்.) நல்லார் எழுநூற்று வரும் இழையணிந்தார் எழுநூற்று வரும் எனப் பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.

மழைமொக்குள் முலைக்குவமை. மாதர் நல்லார்-அழகும் நன்மையும் உடைய மகளிர். வயலையுடைய ஐந்து பழைய ஊரும் என்க. மணிக்கொம்பு : குணமாலை. நாய்கன் - குபேரமித்திரன். (உகச)

வேறு

கல0கூரு. பண்ணார் கிளவிப் பவழம் புரைசெவ்வாய்க்
கண்ணார் கதிர்மென் முலைக்காம் படுமென்றோள்
விண்ணோ ருலகின் னெடுமிந் நிலத்தில்லாப்
பெண்ணா ரமிர்தே யவன்பெற் றவமிர்தே.

(இ - ள்.) அவன் பெற்ற அமிர்து - சீவகன் அடைந்த அமிர்து; விண்ணோர் உலகின்னொடும் இந்நிலத்து இல்லா - வானவர் உலகினும் இந்த நிலவுலகினும் இல்லாத; பண் ஆர் கிளவி - பண் நிறைந்த மொழியையும்; பவழம் புரை செவ்வாய் - பவளம் அனைய செவ்வாயையும்; கண் ஆர் கதிர்மென்முலை -

கண்ணுக்கு நிறைந்த ஒளி பொருந்திய மென்முலையையும்; காம்பு அடும் மென்தோள் - மூங்கிலை வெல்லும் மெல்லிய தோளையும் உடைய; பெண்ஆர் அமிர்து - பெண்மை நிறைந்த அமிர்த மாகும்.

(வி - ம்.) கிளவி - மொழி. புரை: உவமவுருபு. கண்ணார் - கண்ணுக்கு நிறைந்த என்க. காம்பு-மூங்கில். அவன்: சீவகன். (௨௧௫)

௧0௬௬. தேதா வெனவண் டொடுதேன் வரிசெய்யப்
போதார் குழலாள் புணர்மென் முலைபாயத்
தாதார் கமழ்தார் மதுவிண் டுதளிப்ப
வீதா மவரெய் தியவின் பமதே.

(இ - ள்) தேதா என வண்டொடு தேன்வரி செய்ய - தேதா என்று வண்டும் தேனும் பாட்டிசைப்ப; போது ஆர் குழலாள் புணர் மென்முலை பாய - மலர்க் கூந்தலாளின் இரு மென்முலைகளும் பாய்தலினால்; தாது ஆர் கமழ்தார் மதுவிண்டு துளிப்ப - தாது நிறைந்த மணங்கமழ் (சீவகனுடைய) மாலையில் தேன் விண்டு துளிக்க; ஈது அவர் எய்திய இன்பமது ஆம் - இவர்கள் அடைந்த இன்பம் வானவர் பெற்ற இன்பம் ஆகும்.

(வி - ம்.) தேதா - ஆளத்தி யென்னும் இசை. அவர் - தேவர்.

தேதா: ஒலிக்குறிப்பு. தேன் - வண்டு. வரி - பாட்டு. அவர் என்பதற்கு, குணமாலையும் சீவகனும் ஆகிய அவ்விருவரும் எனினுமாம். (௨௧௬)

௧0௬௭. முந்நீர்ப் பவளத் துறைநித் திலமுத்த
மந்நீ ரமிர்தீன் றுகொடுப் பவமர்ந்தான்
மைந்நீர் நெடுங்கண் புருவங் கண்மலங்கப்
பொன்னா ரரிக்கிண் கிணிபூ சலிடவே.

(இ - ள்.) முந்நீர் பவளத்து உறை நித்தில முத்தம் - கடலிற் பிறந்த பவளத்தில் இருக்கின்ற முத்துப் போன்ற பற்கள்; அந்நீர் அமிர்து ஈன்று கொடுப்ப - அக் கடலிற் பிறந்த அமிர்தத்தைத் தான் பெற்றுத்தர; மைநீர் நெடுங்கண் புருவங்கள் மலங்க - மையின் தன்மை கொண்ட நீண்ட கண்களும் புருவங் களும் பிறழ; பொன் ஆர் அரி கிண்கிணி பூசல் இட-பொன்னால் ஆன பரலுடைய கிண்கிணிகள் ஒலிக்க; அமர்ந்தான் - புணர்ச்சி யைப் பொருந்தினான்.

(வி - ம்.) 'அயின்றான்' என்னும் பாடத்திற்குப் பானமும் புணர்ச்சியும் உடனிகழ்ச்சியாம்.

முந்நீர் - கடல். நித்திலமுத்தம் என்புழி முத்தம் என்பது உவமை குறியாது வாளா எயிறு என்னும் பெயர் மாத்திரையாய் நின்றது.

நித்திலம்போன்ற எயிறு என்க. அந்நீர் என்னும் சுட்டு முந்நீரைச் சுட்டியது. அமிர்து - அமிர்தம்போன்ற ஊறலே. அமர்ந்தான் என்றது இடக்கரடக்கு. அரி - பரல். (உகஎ)

௧0௬அ. கம்பார் களியா னைகலக் கமலங்கி
யம்பே ரரிவா ணெடுங்கண் புதைத்தஞ்சிக்
கோம்பே குழைவா யெனக்கே குழைந்திட்டாய்
வம்பே யிதுவை யகத்தார் வழக்கன்றே.

(இ - ள்) கொம்பே! - கொம்பு போன்றவளே!; கம்பார் களியானை கலக்க மலங்கி - தூணிற் பொருந்தும் மதயானை கலக்கியதனாற் கலங்கி; அம்புஏர் அரிவாள் நெடுங்கண் புதைத்து அஞ்சி-அம்பனைய அழகிய செவ்வரி படர்ந்த ஒளிமிகுங் கண்களை மூடிக்கொண்டு நடுங்கி ; குழைவாய் எனக்கே குழைந்திட்டாய் - வருந்துகின்ற நீ (பொது நோக்கினால் இவன் இறந்துபடுவான் என்று அருள் நோக்கினை அளித்தாய் ஆதலால்) எனக்கே வருந்தினை ; இது வையகத்தார் வழக்கு அன்று, வம்பு - இங்ஙனஞ் செய்தல் உலகத்தார் வழக்கன்று ; புதியதொரு வழக்காகும்.

(வி - ம்.) இவ்வாறு கூறுதல் நயப்பு. தாம் வளைவார் பிறர்க்கு ஊற்றங்கோல் ஆகார் என்பது உலக வழக்கு. 'நீல நெடுங்கணால் கவர்ந்த கள்வி' (சீவக. ௧0௨௪) என்பது பொதுநோக்கு. (உகஅ)

௧0௬௯. பூவார் புனலாட் டினுட்பூ நறுஞ்சுண்ணம்
பாவாய் பணைத்தோட் சுரமஞ் சரிதோற்றாள்
காவா தவள்கண் ணறச்சோல் லியவெஞ்சோ
லேவோ வமிர்தோ வெனக்கின் றிதுசோல்லாய்.

(இ - ள்.) பாவாய் - பாவையே!; பூஆர் புனல் ஆட்டினுள்-மலரையுடைய நீர் விளையாட்டில் ; பணைத்தோள் சுரமஞ்சரி - பெருந்தோளையுடைய சுரமஞ்சரி; பூநறுஞ் சுண்ணம் தோற்றாள்-அழகிய நல்ல சுண்ணத்திலே தோல்வியடைந்து; காவாது அவள் கண் அறச் சொல்லிய வெஞ்சொல் - வாய் காவாமல் அவள் கண்ணோட்டமின்றிக் கூறிய கொடுஞ்சொல் ; இன்று எனக்கு ஏவோ அமிர்தோ சொல்லாய் - இன்று எனக்குத் துன்பமாயிற்றோ ? இன்பமாயிற்றோ ? கூறுவாய்.

(வி - ம்.) காவாத சொல், 'கூறு இவையோ?' (சீவக. அஎ௯) என்று சுரமஞ்சரி கூறியது. அதனால், அவள், 'சுண்ணம் தோற்றனம் தீம்புனல் ஆடலம்' (சீவக. அஎஅ) என்று கூறவே, வென்றவர் புனலாட வேண்டுதலின், இவள் புனலாட்டயர்ந்து வருகின்ற நேரத்துத் தான் களிற்றிடையுதவி எதிர்ப்பட்டதனால் இவ்வின்பம் பெறுதலின். தான், 'கண்ணின் கண்டிவை நல்ல' (௧அஅ௪) என்றும், 'சால நல்லன' (சீவக. அ௧௩) என்றும், 'உய்த்துரைமின்' (சீவக. அ௧௫) என்றுங் கூறுதலின்,

வாய்காவாது கூறிற்றென்பது பொருந்தாது. 'ஓவா அமிர்து' என்றும் பாடம். (௨௧௯)

௧௦௭௦. நற்றோ ளவள்சுண் ணநலஞ் சொலுவா
னுற்றீர் மறந்தீர் மனத்துள் ளுறைகின்றாள்
செற்றா லரிதாற் சென்மின்போ மின்றீண்டா
தெற்றே யறியாத வோரேழை யேனோயான்.

(இ - ள்.) நல் தோளவள் சுண்ண நலம் சொலுவான் உற்றீர் - (நும்முடைய) அழகிய தோளினளின் சுண்ணத்திற்கே நன்மை கூறக் கருதினீர்; மறந்தீர் - என் நல்வினையாலே அதனை மறந்தீர்; மனத்துள் உறைகின்றாள் - அவள் உம்முடைய உள்ளத்திலே வாழ்கின்றாளாதலின்; செற்றால் அரிது - அவள் சினந்தாற் சினந்தீர்த்தல் அரிது; சென்மின்! தீண்டாது போமின்! - இவ்விடத்தினின்றும் இனிச் செல்லுமின்! என்னை யருளித் தீண்டாதே போமின்; எற்றே! - என்னே!; யான் அறியாத ஓர் ஏழையேனோ? - யான் நுமக்கு வரும் துன்பத்திற்கு வருந்தாத அறிவிலியோ?

(வி - ம்.) 'சென்மின்' எனத் தீண்டுதலின், 'தீண்டாதே போமின்' என்றாள். 'பணைத்தோள் சுரமஞ்சரி' என்றதனாலும், 'தோற்றாள்' என்பதனாலும் ஊடல் நேர்ந்தது.

சீவகன் சுரமஞ்சரி தோற்றாள் என்றதுபற்றி அவள் நும் மனத்துள்ளுறைகின்றாள் சென்மின் போமின் என்னும் இவ்வூடல் மிகவும் நுண்ணிதாதல் உணர்க. (௨௨௦)

௧௦௭௧. தூமங் கமழ்பூந் துகில்சேரா வசையாத்
தாமம் பரிந்தாடு தண்சாந்தந் திமிர்ந்திட்
டேமன் சிலைவா ணுத லேற நெருக்காக்
காமன் கணையேர் கண்சிவந்து புலந்தாள்.

(இ - ள்.) தூமம் கமழ் பூந்துகில் சேரா அசையா - அகிற் புகை கமழும் அழகிய ஆடையை இறுக உடுத்து; தாமம் பரிந்து - மாலையை அறுத்து; ஆடு தண் சாந்தம் திமிர்ந்திட்டு - பூசிய குளிர்ந்த சந்தனத்தை உதிர்த்து; ஏமன் சிலை வாள் நுதல் ஏற நெருக்கா - அம்பிசைந்த வில்லனைய ஒளி பொருந்திய புருவத்தை நெற்றியில் ஏற நெருக்கி; காமன் கணை ஏர் கண் சிவந்து புலந்தாள் - காமன் கணையனைய அழகிய கண்கள் சிவக்க ஊடினாள்.

(வி - ம்.) தூமம் - நறுமணப்புகை. தாமம் - மாலை. பரிதல் - அறுத்தல். ஏ-அம்பு. சிலை - வில். காமன்கணை என்றது புருவத்தை. (௨௨௧)

௧0௭௨. மின்னே ரிடையா ளடிவீழ்ந் துமிரந்துஞ்
சொன்னீ ரவளற் பழலுட் சோரிந்தாற்ற
லிந்நீ ரனகண் புடைவிட் டகன்றின்ப
மன்னார்ந் துமதர்ப் பொடுநோக் கினன்மாதோ.

(இ - ள்.) *மின்நேர் இடையாள் அடிவீழ்ந்தும் இரந்தும்* - (அவள் புலத்தல் கண்ட சீவகன்) மின் ஒக்கும் சிற்றிடையாளின் அடியிலே வீழ்ந்தும் வேண்டியும்; *சொல்நீர் அவள் அன்பு அழலுள் சொரிந்து ஆற்ற* - சொல்லாகிய நீரை அவளுடைய அன்பாகிய தீயிலே பெய்து அவித்தாளுக; *இந்நீரன கண்புடை விட்டு அகன்று* - இத் தன்மையவற்றைக் கண்களிலிருந்து நீக்கிவிட்டு; *இன்பம் மன் ஆர்ந்து மதர்ப்பொடு கண்புடை நோக்கினள்* - இன்பம் மனத்தே மிக நிறைதலின் களிப்பொடு கடைக்கணித்துப் பார்த்தாள்.

(வி - ம்.) மாது, ஓ: அசைகள். கண்புடை என்பதைப் பின்னருங் கூட்டுக; கண்களே நோய் நோக்கும் மருந்துமாய் நிற்றலின். 'இந்நீரன விட்டு...மதர்ப்பொடு கண்புடை நோக்கினள்' என்று கூட்டுவர் நச்சினார்க்கினியர்.

அன்பு காரணமாகப் பிறத்தலானும் கணவனுக்குத் துன்பமாயிருத்தலானும் ஊடலை அன்பழல் என்றார். அதனை அவித்தலாற் 'பணிமொழியை நீர்' என்றார். (உஉஉ)

௧0௭௩. இன்னீ ரெரிமா மணிப்பூண் கிடந்தீன்ற
மின்னா ரிளமேன் முலைவேய் மருண்மென்றோட்
பொன்னார் கொடியே புகழிற் புகழ்ஞால
நின்வா ணெடுங்கண் விலையா குநிகர்த்தே.

(இ - ள்.) *இன்நீர் எரிமா மணிப்பூண் கிடந்து ஈன்ற* - இனிய பண்புடைய, ஒளிவிடும் மணிக்கலன் கிடந்து உண்டாக்கின; *மின் ஆர் இளமென்முலை* - ஒளியார்ந்த இளமையான மென்முலையையும்; *வேய்மருள் மென்தோள்* - மூங்கிலை மயக்கும் மென்மையான தோளினையும் உடைய; *பொன் ஆர் கொடியே!* - பொற்கொடியே!; *புகழின்* - யான் புகழ நினைத்தால்; *புகழ் ஞாலம் நின்வாள் நெடுங்கண் நிகர்த்தே விலை ஆகும்?* - புகழ் பெற்ற உலகம் உன்னுடைய வாட்கண்களுக்கு ஒப்பாகுமோ? ஆகாது. ஆதலாற் புகழ்தலும் அரிது.

(வி - ம்.) நிகர்த்தே: ஏ: எதிர்மறை.

இன் நீர் எரி மாமணி - காட்சிக்கினிய நீர்மையையுடைய ஒளி சிறந்த மணி என்க. மின் - ஒளி. வேய் - மூங்கில். நிகர்த்தே என்பதிலுள்ள ஏகாரத்தை ஆகுமே எனக் கூட்டி ஆகாது என எதிர்மறைப் பொருள் கொள்க. (உஉ௩)

௧௦௭௪. தோளாற் றழுவித் துவர்த்தொண் டையஞ்செவ்வாய்
மீளா மணிமே கலைமின் னின்மிளிர
வாளார் மணிப்பூ ணவன்மாதரம் பாவைதன்னை
நாளாற் பெற்றநல் லமிர்தென்ன நயந்தான்.

(இ - ள்.) வாள்ஆர் மணிப்பூணவன் மாதர்அம் பாவை தன்னை-ஒளி பொருந்திய மணிக்கலனணிந்தவன் விருப்பூட்டும் அழகிய பாவையாளை ; தோளால் தழுவி - தோள்களால் தழுவி; மீளா மணிமேகலை மின்னின் மிளிர - நீங்காத மணிமேகலை மின்னென ஒளிவிட ; துவர்த் தொண்டை அம் செவ்வாய் - சிவந்த கொவ்வைக் கனியனைய இதழை ; நாளாற் பெற்ற நல் அமிர்து என்ன நயந்தான் - நாட் காலத்திலே பெற்ற இனிய அமிர்தம் என்ன நுகர்ந்தான்.

(வி - ம்) 'மீளா' என்பதனை 'அமிர்து'க்கு அடையாக்கி, 'மீளா அமிர்து - கருடன் வாங்கிவராத அமிர்து' என்பர் நச்சினார்க்கினியர். நயத்தல் - பருகுதல் மேற்று. (உஉ௪)

வேறு

௧௦௭௫. சித்திர மணிக்குழை திளைக்கும் வாண்முகத்
தொத்தொளிர் பவளவா யோவக் கைவினைத்
தத்தரி நெடுங்கணு டன்னொ டாடுநாள்
வித்தகற் குற்றது விளம்பு கின்றதே.

(இ - ள்.) சித்திர மணிக்குழை திளைக்கும் வாள் முகத்து-அழகிய மணிக்குழை பயிலும் ஒளியுறு முகத்தினையும் ; பவளம் ஒத்து ஒளிர்வாய் - பவளத்தை யொத்து விளங்கும் வாயினையும்; ஓவக் கைவினை - ஓவியம் அனைய ஒப்பனையையும் உடைய; தத்து அரி நெடுங்கணுள் தன்னொடு - காதொடு மோதும் செவ்வரி பரவிய நீண்ட கண்ணுளான குணமாலையுடன் ; ஆடும்நாள் - இங்ஙனம் கூடியாடும் நாளிலே; வித்தகற்கு உற்றது விளம்பு கின்றது - திறமுடைய சீவகனுக்கு நேர்ந்த தீவினை இனி உரைக்கப்புகுவது.

(வி - ம்.) 'ஓவக் கைவினை' என்பதற்கு 'ஓகை வீணை' என்பதும் பாடம். மணிக்குழை - ஒன்பது வகை மணிகளைப் பதித்துப் பொன்னாற் செய்யப்பட்ட காதணி. இரு செவிகளினும் புனைந்த காதணிகளின் ஒளி திளைத்தலால் விளங்கும் முகம் என்பார். "குழைதிளைக்கும் வாள் முகம்" என்றார்.

ஓவக் கைவினை - ஓவியம்போன்ற தொழிற்சிறப்பு. வித்தகன்: சீவகன். இனி யாம் விளம்புகின்றது வித்தகற்குற்றது என்க. (உஉ௫)

**வேறு**

௧௦௭௬. அரும்பெறற் குருசிற் கஞ்ஞான்
றோடிய நாக நாணிக்
கரும்பெறி கடிகை யோடு
நெய்ம்மலி கவளங் கொள்ளா
திரும்புசெய் குழவித் திங்கண்
மருப்பிடைத் தடக்கை நாற்றிச்
சுரும்போடு வண்டு பாடச்
சுளிவோடு நின்ற தன்றே.

(இ - ள்.) *அஞ்ஞான்று அரும்பெறல் குருசிற்கு ஓடிய நாகம் - நீர் விளையாட்டின்போது, பெறுதற்கரிய சீவகனுக்குத் தோற்ற யானை ; நாணி - வெட்கமுற்று ; கரும்பு எறி கடிகையோடு நெய்ம்மலி கவளம் கொள்ளாது - கருப்பந் துண்டங்களையும் நெய் நிறைந்த கவளத்தினையும் கொள்ளாமல் ; இரும்புசெய் குழவித் திங்கள் - கிம்புரியிட்ட பிறைத் திங்கள் போன்ற; மருப்பிடைத் தடக்கை நாற்றி - கொம்பிலே துதிக்கையை வளைத்துத் தொங்கவிட்டு ; சுரும்பொடு வண்டு பாட - மதம் மிகுதலின் உண்ண முடியாமல் சுரும்பும் வண்டும்பாட; சுளிவொடு நின்றது - சினத்தொடு நின்றது.*

(வி - ம்.) *குருசில் - ஈண்டுச் சீவகன். அஞ்ஞான்று என்பது பண்டறிசுட்டு. நாகம் - யானை ; அசனிவேகம். கடிகை - துண்டம். குழவித்திங்கள் பிறை ; இது மருப்பிற்குவமை. சுளிவு - சினம்.* (௨௨௬)

௧௦௭௭. பகைபுறங் கொடுத்த வேந்திற்
பரிவொடு பகடு நிற்பத்
தகைநிறக் குழைக டாழ்ந்து
சாந்தின்வாய் நக்கி மின்னப்
புகைநிறத் துகிலிற் பொன்னாண்
டுயல்வரப் போந்து வேந்தன்
மிகைநிறக் களிற்றை நோக்கி
வேழமென் னுற்ற தென்றான்.

(இ - ள்.) *பகைபுறம் கொடுத்த வேந்தின் - பகைவனுக்கு முதுகு கொடுத்த வேந்தனைப்போல ; பகடு பரிவொடு நிற்ப - யானை வருத்தத்துடன் நிற்றலின் ; தகைநிறக் குழைகள் தாழ்ந்து சாந்தின்வாய் நக்கி மின்ன - நன்னிறக் குழைகள் தாழ்ந்து தோளில் அணிந்த சந்தனத்தைத் தடவி ஒளிவிட ;*

புகையனைய நிறமுடைய ஆடையிற் பொன் அரைநாண் அசைய அரசன் வந்து; மிகைநிறக் களிற்றை நோக்கி - உயர் நிறமுடைய யானையைப் பார்த்து; வேழம் என் உற்றது என்றான் - யானை அடைந்த வருத்தம் என்னென்று பாகனை வினவினான்.

(வி - ம்.) நச்சினார்க்கினியர் 'தாழ்ந்து' என்பதனைக், 'களிற்றைத் தாழ்ந்து நோக்கி' எனப் பின்னே கூட்டுவர். அவ்வாறு கூட்டுதலிற் போதப் பயனுண் டெனிற் கொள்க. வேந்தன் களிறுற்ற வருத்த நிலையைக் கேட்டு வந்து நோக்கினான் என்று கொள்க. (உஉஎ)

கஎஅ. கோற்றவன் குறிப்பு நோக்கிக்
குஞ்சரப் பாகன் கூறு
மிற்றென வுரைத்த றேற்றே
னிறைவநின் னருளி னாங்கொல்
செற்றமிக் குடைமை யாற்கொல்
சீவக னின்ன நாளான்
மற்றிதற் குடற்சி செய்ய
மதமிது செறித்த தென்றான்.

(இ - ள்.) கொற்றவன் குறிப்பு நோக்கி - அரசன் மனக் கருத்தை உணர்ந்து; குஞ்சரப் பாகன் கூறும் - யானைப் பாகன் சொல்வான்; இறைவ! - அரசே!; நின் அருளின் ஆம்கொல் - நின் உடன்பாட்டினாலோ; செற்றம் மிக்கு உடைமையால் கொல்- இதனிடத்துச் சீவகன் கொண்ட சீற்றமிகுதியாலோ; சீவகன் இன்ன நாளால் - சீவகன் நீர்விளையாட்டன்று; இதற்கு உடற்சி செய்ய - இதற்குச் சினம் மிக உண்டாக்க; இது மதம் செறித்தது - இது மதத்தை அடக்கியது; இற்று என உணர்தல் தேற்றேன் - இதனைத் தவிர யான் வேறு இத்தன்மையது என விளங்கத் தெளிகிலேன்; என்றான் - என்றுரைத்தான்.

(வி - ம்.) குறிப்பு நோக்கியென்றார், சீவகனைக் குறை கூறலாகா தெனக் கருதினும், அரசன் சினமுணர்ந்து அரசன் நினைவு மகிழக் கூறுதலின். மற்று: வினைமாற்று. (உஉஅ)

கஎகூ. ஈண்டழற் குட்டம் போல
வெரியெழத் திருகி நோக்கிக்
கோண்டரு குறும்பர் வெம்போர்
கோக்குழாம் வென்ற தள்ளி
மாண்டதில் செய்கை சூழ்ந்த
வாணிகன் மகனை வல்லே
யாண்டிறங் களைவே னோடிப்
பற்றுபு தம்மி னென்றான்.

(இ - ள்.) ஈண்டு அழல் குட்டம்போல - (அதுகேட்ட அரசன்) செறிந்த நெருப்புக் குண்டம்போல; எரி எழத் திருகி நோக்கி - அனல் எழச் சினந்து நோக்கி; கோண்தரு குறும்பர் வெம்போர் - மாறுபடும் வேடருடன் செய்த கொடுஞ் சமரை யும்; கோக்குழாம் வென்றது - அரசர் கூட்டத்தை வென்றதை யும்; உள்ளி - நினைத்து; மாண்டது இல் செய்கை செய்த - தகுதியற்றதாகிய செயலை (என்னுடன் மாறுபடுதலை) செய்த; வாணிகன் மகனை - செட்டி மகனை; வல்லே ஆண்திறம் களை வென் - இப்பொழுதே ஆண்மைச் செருக்கை ஒழிப்பேன்; ஓடிப் பற்றுபு தம்மின் என்றான் - ஓடிக் கைக்கொண்டு தாரும் என்றான்.

(வி - ம்.) பின்னர்த் தாம் கருதிய பொருளை நிறுவ நினைத்த நச்சினார்க்கினியர் ஈண்டு, "அரசன் ஏவல் செய்ய வேண்டுதலின், 'பற்றுபு தம்மின்' என்று கூறவே, அவர் கட்டியனாரேன்றல் பொருந் தாமை உணர்க" என்கின்றனர். (உஉக)

கஐஅ0. கன்றிய வெகுளி வேந்தன்
காலவலி யிளையர் காய்ந்து
கொன்றுயிர் கொணர வோடுங்
கொழுங்குடர்க் கண்ணி மாலை
யொன்றிய வுதிரச் செச்சை
யொண்ணிண மீக்கோ டானைத்
தென்றிசைக் கிறைவன் றூதிற்
செம்மலைச் சென்று சேர்ந்தார்.

(இ - ள்.) கன்றிய வெகுளி வேந்தன் - தழும்பேறிய சீற்றங் கொண்ட மன்னனுடைய; காலவலி இளையர் காய்ந்து - நடை வல்ல ஏவலர் சினந்து; கொன்று உயிர்கொணர ஓடும் - கொன்று உயிரைக் கொண்டுவர ஓடுகின்ற; கொழுங்குடர்க் கண்ணிமாலை - கொழுவிய குடரைக் கண்ணியாகவும் மாலையாகவும் கொண்டு; ஒன்றிய உதிரச் செச்சை - பொருந்திய குருதியைச் சட்டையாக அணிந்து; ஒள் நிணம் மீக்கொள் தானை - ஒள்ளிய நிணத்தை மேலே ஆடையாகக் கொண்ட; தென் திசைக்கு இறைவன் தூதின் - கூற்றுவனுடைய தூதரைப்போல; சென்று செம் மலைச் சேர்ந்தார் - போய்ச் சீவகனிருப்பிடத்தை அடைந்து சூழ்ந்தனர்.

(வி - ம்.) கன்றுதல் - முதிர்தல்; காழ்ப்பேறுதல். கால் - காற்று மாம். தென்றிசைக் கிறைவன்: கூற்றுவன். செம்மல் சீவகன். கட்டியங்காரனைக் கூற்றுவனாகவும் ஏவலர்களை உயிர்கொண்டு ஓடும் கூற்றுவன் தூதராகவும் சீவகனை உயிராகவும் கொள்க. (உஉ0)

௧௦௮௧. சண்பக மாலை வேய்ந்து
சந்தனம் பளிதந் தீற்றி
விண்புக நாறு சாந்தின்
விழுமுலைக் காம வல்லி
கோண்டேழுந் துருவு காட்டி
முகத்திடைக் குளித்துத் தோண்மேல்
வண்டளி ரீன்று சுட்டி
வாணுதல் பூப்ப வைத்தான்.

(இ - ள்.) *சண்பக மாலை வேய்ந்து* - சண்பக மாலையைச் சூட்டி; *சந்தனம் பளிதம் தீற்றி விண்புக நாறு சாந்தின்* - சந்தனத்தையும் பச்சைக் கருப்பூரத்தையும் கலந்து வானளாவ மணக்கும் சந்தனக் குழம்பினாலே; *காமவல்லி விழுமுலை கொண்டு எழுந்து*-காமவல்லியானது சிறந்த முலையை அடியாகத் தொடங்கி எழுந்து; *உருவு காட்டி* - தனது உருவத்தைக் காட்டி; *தோண்மேல் வண்தளிர் ஈன்று*-தோளின்மேல் வளவிய தளிரை நல்கி; *முகத்திடைக் குளித்து* - முகத்திலே மறைந்து போய்; *வாள் நுதல் சுட்டி பூப்ப வைத்தான்* - ஒள்ளிய நெற்றியிலே சுட்டியாக மலருமாறு எழுதினன்.

(வி - ம்.) பளிதம் - பச்சைக் கருப்பூரம். தீற்றுதல் - பூசுதல். விழுமுலை - சிறந்த முலை. காமவல்லி - கற்பக மரத்திற் படருமொரு பொன்னிறப் பூங்கொடி. அக்கொடியின் உருவத்தைச் சீவகன் குணமாலை முலைமேல் எழுதினன் என்க. (உ௩௧)

௧௦௮௨. பண்ணடி வீழுந் தீஞ்சொற்
பாவைநின் வனப்பிற் கெல்லாங்
கண்ணடி கருங்க ணென்னு
மம்பறாத் தூணி தன்னாற்
புண்ணுடை மார்பத் தோவா
தெய்தியா லெங்குப் பெற்றாய்
பெண்ணுடைப் பேதை யென்றோர்
நாண்முற்றும் பிதற்றி னானே.

(இ - ள்.) *பண் அடி வீழும் தீசொல் பாவை*-பண் தோற்று அடியிலே வணங்கும் இனிய மொழிகளையுடைய பாவையே!; *வனப்பிற்கு எல்லாம் கண்ணடி* - அழகிற்கெல்லாம் கண்ணாடி போன்றவளே!; *நின் கருங்கண் என்னும் அம்பறாத்தூணி தன்னால்* - நின் கரிய கண்களாகிய அம்பறாத்தூணியில் நோக்கமாகிய அம்பினால்; புண்உடை மார்பத்து ஓவாது எய்தி-(பழைய)

புண்ணுடைய மார்பிலே ஓயாமல் எய்கின்றனே; எங்குப் பெற்றாய் - இத்தகைய அம்பறாத்தூணியை எங்குப் பெற்றனை; பெண் உடைப் பேதை! - பெண்மையுடைய பேதையே!; என்று ஓர் நாள் முற்றும் பிதற்றினன் - என்று ஒருநாளெல்லாம் பிதற்றிக்கொண்டிருந்தான்.

(வி - ம்.) 'கண்ணாடி' என்பது 'கண்ணடி' என விகாரப்பட்டது. எல்லார்க்கும் அழகு இத்தன்மைத்தென்று உணர்த்துதலின் கண்ணாடி உவமை ஆயிற்று. மார்பத்துழை என அத்திற்குப் பின் ஓர் ஏழனுருபு விரிக்கவே அஃது இடப்பொருளுணர்த்தி, அவற்குச் சேர்ந்த நெஞ்சினை உணர்த்தும்; 'அரசனுழை யிருந்தான்' போல. பிதற்றினனென்றது மயக்கத்தால். (௨௩௨)

௧௦அ௩. திங்கள்சேர் முடியி னானுஞ்
செல்வியும் போன்று செம்பொ
னிங்குவார் கழலி னானுங்
கோதையு மிருந்த போழ்திற்
சிங்கவே றெள்ளிச் சூழ்ந்த
சிறுநரிக் குழாத்திற் சூழ்ந்தா
ரங்கது கண்ட தாதி
யையனுக் கின்ன தென்றாள்.

(இ-ள்.) திங்கள்சேர் முடியினானும் செல்வியும் போன்று - பிறை முடியணிந்த பெருமானும் உமையம்மையும் போல; செம்பொன் இங்கு வார்கழலினானும் கோதையும் - செம்பொன் தங்கிய வாரில் தங்கிய கழலினானும் குணமாலையும்; இருந்த போழ்தில் - அமர்ந்திருந்த காலத்தில்; சிங்க ஏறு எள்ளிச் சூழ்ந்த - சிங்க ஏற்றினை இகழ்ந்து அதன் குகையிலே சூழ்ந்த; சிறுநரிக் குழாத்தின் சூழ்ந்தார் - குள்ளநரிக் கூட்டம்போல மனையை வந்த வீரர்கள் சூழ்ந்தனர்; அங்கு அது கண்ட தாதி - அங்கே அதனைக் கண்ட சேடி; ஐயனுக்கு இன்னது என்றாள் - சீவகனுக்கு இங்ஙனம் சூழ்ந்தார் என்றனள்.

(வி - ம்.) திங்கள் சேர்முடியினான்: சிவபெருமான். செல்வி: இறைவி. அன்பினால் இரண்டறக் கலந்திருந்ததற்குச் சிவபெருமானும் இறைவியும் உவமை என்க. சிங்கவேறு - ஆண் சிங்கம்; இது சீவகற்குவமை. சிறு நரிக்குழாம் - கட்டியங்காரன் ஏவிய படைஞர் குழாத்திற்குவமை. தாதி- பணிமகள். (௨௩௩)

௧௦அ௪. என்றவ ளுரைப்பக் கேட்டே
யிடிபட முழங்கிச் செந்தீ
நின்றெரி வதனை யொத்து
நீண்முழைச் சிங்க வேறு

தன்றுணைப் பெட்டை யோடு
தான்புறப் பட்ட தொத்தான்
குன்றிரண் டிருந்த போலுங்
குங்குமக் குவவுத் தோளான்.

(இ - ள்.) என்று அவள் உரைப்பக் கேட்டு - இவ்வாறு சேடி செப்பக் கேட்டு; குன்று இரண்டு இருந்த போலும் குங்குமக் குவவுத் தோளான் - மலைகள் இரண்டு இருந்தன போன்று, குங்குமம் அணிந்த திரண்ட தோளையுடைய சீவகன்; இடிபட முழங்கி - வெடித்தல் உண்டாக முழங்கி; செந்தீ நின்று எரிவதனை ஒத்து - சிவந்த தீ நிலையாக எரிவதைப்போல; நீள் முழை சிங்க ஏறு - பெருங்குகையிலிருந்த ஆண் சிங்கம்; தன் துணைப் பெட்டையோடு-தன் துணையான பெண் சிங்கத்துடன்; தான் புறப்பட்டது ஒத்தான் - அது வெளிப்பட்டதைப் போல மண அறையினின்றும் குணமாலையுடன் வெளிப்பட்டான்.

(வி - ம்.) பெட்டை யென்பதற்கு 'எழுந்து விண்படரும்' (சீவக. எ௬௨) என்னும் செய்யுளிலே கூறப்பட்டது. இங்கும் நச்சினார்க்கினியர் பின்னர்த் தம்கோள் நிறுவ, 'இவ்விரண்டு கவியிலும் சீவகற்குச் சிங்க வேறு உவமையும், பகைவர்க்கு நரியுவமையுமாகக் கூறலின், அவராற் கட்டலாகாமையுணர்க.' என்றனர். (௨௩௪)

௧0௮௫. பொன்னரி மாலை தாழப்
போதணி கூந்த லேந்திப்
பன்னரு மாலை யாற்குப்
பட்டதை யெவன்கொ லென்னாப்
பின்னரு மாலை யோராள்
பெருநடுக் குற்று நின்றாண்
மன்னரு மாலை நாக
மழையிடிப் புண்ட தொத்தாள்.

(இ - ள்.) மாலை, பொன் அரிமாலை தாழப்போது அணி கூந்தல் ஏந்தி - குணமாலை, பொன்னரி மாலை தாழுமாறு, மலர்க் கூந்தலைக் கையில் ஏந்தி; பின்னரும் ஓராள்-(முன்னர் யானையை அடக்கியபோது இவன் வலிமை அறிந்திருந்தும்) மறுமுறையும் அறியாதவளாய்; பன்னஅரு மாலையாற்குப் பட்டது எவன் கொல் என்னா - புகழ்தற்கரிய இயல்பினையுடையானுக்குப் பிறந்த துன்பந்தான் யாதோ என்று எண்ணி; பெருநடுக்கு உற்று நின்றாள் - மிகுதியும் நடுங்கி நின்றவள்; மன்அரு மாலை நாகம் மழை இடிப்புண்டது ஒத்தாள் - (மக்கள் திரளில்) நிலைபெறற் கரிய இயல்புறும் பாம்பு இடியால் தாக்குண்டது போல ஆனாள்.

(வி - ம்.) பொன்னரிமாலை-ஒரு கூந்தலணி. மாலையான் : சீவகன்; இயல்பினையுடையானாகிய சீவகன் என்னும் பொருட்டு. மாலை : குண மாலை. மாலை - இயல்பு. நாகம் - பாம்பு. (உங்டு)

கoஅசூ. கடுகிய விளையர் நோக்குங்
கண்ணிய பொருளு. மெண்ணி
யடுசிலை யழல வேந்தி
யாருயிர் பருகற் கோத்த
விடுகணை தெரிந்து தானை
வீக்கற விசித்து வெய்தாத்
தொடுகழ னரல வீக்கிச்
சொல்லுமின் வந்த தென்றான்.

(இ - ள்.) கடுகிய இளையர் நோக்கும் - அரசன் ஆணையிற் கடுகி வந்த ஏவலர் நோக்கையும்; கண்ணிய பொருளும் எண்ணி- அரசன் யானையைக் கண்டு ஆண்திறம் களையக் கருதியதையும் ஒருவாறு சிந்தித்துணர்ந்து; தானை வீக்கற விசித்து - ஆடையை இனி இறுகாதென்னுமாறு இறுக்கி; வெய்துஆ தொடுகழல் நரல வீக்கி - விரைவாகக் கழலை ஒலிக்கக் கட்டி ; அழல அடுசிலை ஏந்தி - வெம்மையாக அடுதற்குரிய வில்லை ஏந்தி; ஆருயிர் பருகற்கு ஒத்த விடுகணை தெரிந்து - உயிரைப் பருகற்குத் தக்க அம்புகளைத் தெரிந்தெடுத்துக் கொண்டு ; வந்தது சொல்லுமின் என்றான் - வந்ததைக் கூறுங்கள் என்றான்.

(வி - ம்.) தானை - ஆடை. விசித்து-கட்டி. வெய்தாக என்பது ஈறுகெட்டது. நரலுதல் - ஒலித்தல். வந்தது - நீயிர் வருதற்குற்ற காரணம். (உங்சு)

கoஅஎ. அடிநிழற் றருக வென்றெம்
மாணைவேந் தருளிச் செய்தான்
வடிமலர்த் தாரி னாய்நீ
வருகென வானி னுச்சி
யிடியுரு மேற்றிற் சீறி
யிருநிலஞ் சுடுதற் கோத்த
கடிமதின் மூன்று மெய்த
கடவுளிற் கனன்று சொன்னான்.

(இ - ள்.) வடிமலர்த் தாரினாய்! - தெரிந்தெடுத்த மலர் மாலையாய்!; எம்ஆணை வேந்து அடிநிழல் தருக என்று அருளிச் செய்தான் - எமக்குப் பணியிடும் வேந்தன் தன் அடிநிழலிலே கொண்டு வருக என்று அருள் செய்தான்; நீ வருக என - நீ

வந்தருள்க என்று ஏவலர் கூற; வானின் உச்சி இடி உரும் ஏற்றின் சீறி - வான்மீதிருந்து இடிக்கும் இடியேற்றைப்போல முழங்கி; இருநிலம் சுடுதற்கு ஒத்த கடிமதில் மூன்றும் எய்த கடவுளின்-பெருநிலத்தைப் பறந்து திரிந்து சுடுதற்குப் பொருந்தின காவலுறு மும்மதில்களையும் வீழ்த்திய சிவபெருமானைப் போல; கனன்று சொன்னான் - வெகுண்டுரைத்தான்.

(வி - ம்.) 'வடிமலர்த்தாரினாய்' எனவும் 'வருக' எனவும் கூறியவற்றை நச்சினார்க்கினியர்தம் பிற்கூற்றுக்கு அரணாக்கக், 'கட்டவிழ்தவரன்மை உணர்க.' என்றார். (௨௩௭)

௧0௮௮. வாளிழுக் குற்ற கண்ணாள்
வருமுலை நயந்து வேந்தன்
கோளிழுக் குற்ற பின்றைக்
கோத்தொழி னடாத்து கின்றா
னாளிழுக் குற்று வீழ்வ
தின்றுகோ னந்த திண்டேர்
தோளிழுக் குற்ற மொய்ம்ப
பண்ணெனச் சொல்லி னானே.

(இ - ள்.) வாள் இழுக்கு உற்ற கண்ணாள் வருமுலை நயந்து-வாளை வென்ற கண்ணாள் விசயையின் இன்பத்தை விரும்பி; வேந்தன் கோள்இழுக்கு உற்ற பின்றை - சச்சந்த மன்னன் தன் கொள்கையிற் பிழைத்த பிறகு; கோத்தொழில் நடாத்துகின்றான் - அரசுரிமை எய்தி ஆள்கின்ற கட்டியங்காரனின்; நாள் இழுக்குற்று வீழ்வது இன்றுகொல் - வாழ்நாள் வழுவி வீழ்வது இன்றுபோலும்; நந்த! தோள் இழுக்குற்ற மொய்ம்ப!- நந்தட்டனே! பிறர் தோள்கள் பின்னுறும் வலிமையனே!; திண்தேர் பண் எனச் சொல்லினான் - திண்ணிய தேரைப் புனைக என்றுரைத்தான்.

(வி - ம்.) 'தோள் இழுக்குற்ற' என்பதற்குக், 'கட்டியங்காரனின் தோள்கள் இழுக்குற்றன' என்றும் கூறுவர் நச்சினார்க்கினியர். மற்றும் அவர், 'வாளிழுக்குற்ற கண்ணாள்' அனங்கமாலை எனக் கொண்டு அனங்கமாலையையும் விரும்பி என்னையொழியத்தானே அரசன் தொழிலை நடத்தி வருகின்றான்' என்று கட்டியங்காரன் சீவகனைக் கூறியதாகவும் உரைப்பர். எனினும், மேற்கூறிய பொருளையும் ஒப்புவர். (௨௩௮)

௧0௮௯. வேந்தோடு மாறு கோடல்
விளிகுற்றார் தொழில தாகுங்
காய்ந்திடு வெகுளி நீக்கிக்
கைகட்டி யிவனை யுய்த்தா

லாய்ந்தடு மழற்சி நீங்கு
மதுபொரு ளென்று நல்ல
சாந்துடை மார்பன் றாதை
தன்மனத் திழைக்கின் றானே.

(இ - ள்.) வேந்தொடு மாறுகோடல் விளிகுற்றார் தொழிலது ஆகும் - அரசனொடு மாறுபடுதல் கெடுதலடைந்தார் தொழிலாகும், (ஆகையால்); காய்ந்திடு வெகுளி இவனை நீக்கிக் கைகட்டி உய்த்தால் - காயும் வெகுளியை இவனிடமிருந்து நீக்கிக் கையைப் போர்த்தொழில் செய்யாதவாறு கட்டி இவர்களுடன் போகவிட்டால்; ஆய்ந்து அடும் அழற்சி நீங்கும் - இவன் செய்தவற்றை ஆராய்ந்து, இவனை வருத்தும் வெகுளியை அரசன் நீங்குவான்; அது பொருள் என்று - அதுவே செய்யத் தக்கது என்று; நல்ல சாந்து உடை மார்பன் தாதை - நல்ல சந்தனம் அணிந்த மார்பனுக்குத் தந்தை; தன் மனத்து இழைக்கின்றான் - (சீவகன் போர்க்கோலத்தையும் நந்தட்டன் தேர் கொண்டுவரச் சென்றதையும் கண்டு) தன் உள்ளத்தே நினைக்கின்றான்.

(வி - ம்.) 'கைகட்டி' என்பதற்கு 'கையைத் தொடராற் பிணித்து' என்று பொருள் கொள்ளலாகாது என்றும், 'தடைசெய்து' என்றே பொருள் கொள்ளவேண்டும் என்றும் நச்சினார்க்கினியர் கருதுகிறார். அதற்கேற்பவே முன்னர்ப் பலவிடங்களிலும் (சீவக. ௧0௭௯, ௧0௮௪, ௧0௮௭) தம் கருத்துக்கு அரண் செய்து வந்துளார்.

**ஈண்டு அவர் கூறும் விளக்கம்:**

"கைகட்டுதலைப், 'பாம்பை வாயைக் கட்டிற்று' என்றாற்போலக் கொள்க. துறவின் கண்ணே சீவகன் அறங்கேட்ட பின்னர், 'தொல்லையெம் பிறவியும் தொகுத்த பாவமும் - வல்லையே பணிமினம் அடிகள்' என்று (சீவக. ௨௮௪௧) சாரணரைக் கேட்க, அவரும் பாவங் கூறுகின்றவர், 'தாமரைத் தடமுறை வீர்க்கிவை தடங்கள் அல்லவே வடமூலை யெனநடாய் வருடிப் பாலமு - தடனூறீஇ ஓம்பினார்' (சீவக. ௨௮௯௩) என்று, மூலைமேலே வளர்த்தார்கள் என்று கூறிப், பவணமாதேவன் தன் மகன் அசோதரனை நோக்கிக் கூறுகின்றானாகத் தாம் கூறுகின்ற காலத்தும், 'கிளைப்பிரி வருஞ்சிறை யிரண்டுங் கேட்டியேல்' (சீவக. ௨௮௬௭) என்றும், 'பூவை கிளி தோகைபுணர் அன்னமொடு பன்மா - யாவைஅவை தம் கிளையின் நீங்கியழ வாங்கிக் - காவல் செய்து வைத்தவர்கள் தம் கிளையின் நீங்கிப் - போவர்' (சீவக. ௨௮௭௬) என்றும் காவல் செய்து வைத்தார் என்றும் கூறினமையானும், 'மன்னா! பிரித்தாய் பிரிந்தாய் சிறை வைத்ததனாற் - பொன்னார மார்ப! சிறைப்பட்டனை போலும்' (சீவக. ௨௮௯0) என்று தாம் கூறினமையானும், சாரணர் பாவங் கூறுகின்ற இடத்து, அன்னப் பார்ப்பைக் கட்டினார் என்று கூறாமையின், ஈண்டுக் கட்டென்ன வேண்டும் பாவம் ஆண்டின்மை உணர்க. இச் சமயத்தார் பிறரும், 'சிறுகா பெருகா முறை பிறழ்ந்து வாரா' (காலடி. ௧௧0) என்றதனாலும் உணர்க. அன்றியும் தசகுமார

**சரிதத்துள்** அன்னப் பார்ப்பை நூலிட்டுக் காலைக் கட்டின பாவத்தாற் பின்பு, வெள்ளி விலங்கு காலிற் கிடந்தது என்று **ஆசாரியதண்டி** கூறிய வாற்றானும் உணர்க. அன்றியும், அரசன் கைக்கொண்டு வரச் சொன்ன வனை, அவரும் அவன் கூறியவாறே கைக்கொண்டு போயினாரென்னவே வேண்டும் ஆதலானும், அவர்கள் அவனை, 'வடிமலர்த் தாரினாய் நீ வருக' (சீவக. ௧0அஎ) எனப் புகழ்ந்து இரந்து கொண்டமையானும், 'சிங்க வேறெள்ளிச் சூழ்ந்த சிறுநரிக் குழாத்திற் சூழ்ந்தார்' (சீவக. ௧0அ௩) என்றும், 'அடுபுலி கண்ட மான்போல் ஆறல் ஆயினாரே' (சீவக. ௧௧௩எ). என்றும், 'மின்னிலங் கெயிற்று வேழம் வேழத்தாற் புடைத்து' (௧௧டுச) என்னுங் கவியில், 'என்னையிக் கிருமி கொன்று' என்றும் கூறியிருப்ப தாலும், 'நூபுரம் திருத்திச் சேந்த நுதிவிரல் நொந்த' (௧௧௧௧) என்ற தற்குத் தோளையன்றி, விரலைக் கட்டினாரென்றும் கூறவேண்டுதலானும், ஆசிரியன் கூற்றும் குரவர் கூற்றும் மனத்தைப் போர் செய்யாமற் பிணித்தலின், இளையர் காவல் செய்து கொண்டுபோனார் என்றலே தேவர்க்குக் கருத்தென்றுணர்க. 'ஊன்பிறங் கொளிரும் வேலான் ஓர்த்துத் தன் உவாத்தி சொல்லால் - தான் **புறங்கட்டப்பட்டு**' (சீவக-௧0௯0) என்றும், 'ஈன்ற தாய்தந்தை வேண்ட இவ்விடர் உற்றதென்றால். தோன்றலுக் காண்மை குன்று தென்றசொல் இமிழிற் பூட்டி' (சீவக. ௧0௯௧) என்றும், தேவர் மனத்தை இறுகப் பிணித்தமை தோன்றக், 'கட்டி' என்றும், 'பூட்டி' என்றும் செய்யுள் செய்தமை பற்றிக் **கந்தியாரும் இடையிடையே பாடியிட்ட செய்யுட்களிலும்,** அப்பொருள் தரக் கட்டி யென்று செய்யுள் செய்தார் என்று உணர்க. அன்றியும் சிறை செய்தல் என்னும் சொற்குக் காவலிடுதலே பொருளாமென்று, தேவர் தாமே, 'காவல் செய்து வைத்தவர்கள்' என்று கூறியவாற்றானும் **கட்டலென்னும் சொற்கு மனத்தை இறுகப் பிணித்தல்** என்று பொருள் கொள்க.''

நச்சினார்க்கினியர் இத்துணையானுங் கூறிய கருத்துத் தேவர்க் கிருக்குமேற், **'புறங்கட்டப்பட்டு'** (சீவக. ௧0௯0) **'தோளிணை கழலுடை யிளையவர் கச்சின் வீக்கலின்'** (௧0௯௨) என்பன போன்று திறம்படக் கட்டுதல் என்ற பொருள்படச் செய்யுள் செய்யார் என்றே கொள்ளல் **வேண்டும்.**

மேலும் இந்நூலாசிரியர் சீவகன் முன்னர்த் தன் ஆசிரியனாகிய அச்சணந்திக்கு வாய் நேர்ந்தமைக்கு இணங்க ஈண்டும் சிறு நரிக் குழாத்தாற் சிங்கவேறு கட்டுண்டாற்போன்று அழற்சியின்றி அடங் கினான் என அவன் சால்புடைமையைக் காட்டவே இந்நிகழ்ச்சியினைப் படைக்கின்றாராதலானும் ஓராண்டளவும் இவ்வாறு அழலாதடங்குதலே சீவகர்க்குப் பெருமையாதலானும் தேவர் வெளிப்படையாகக் கூறியபடி கட்டிச் சென்றார் என்பதே சிறப்பாதலும் அறிக. இக் கருத்தினை அடுத்த செய்யுளானும் உணர்க. தருமன் பாஞ்சாலியைத் துகிலுரிந்த பொழுது அறத்திற் கடங்கி வாளாவிருந்தாற்போன்றதொரு பெருஞ் சிறப்பை இதனால் ஆசிரியர் சீவகனுக்குக் கூட்டுகின்றார். (௨௩௧)

௧0௯0. ஊன்பிறங் கொளிரும் வேலா
ஞோர்த்துத்த னுவாத்தி சொல்லாற்
றூன்புறங் கட்டப் பட்டுத்
தன்சினந் தணிந்து நிற்பத்

தேன்பிறங் கலங்கன் மாலைச்
சுநந்தையுந் துணைவன் றானுங்
கோன்புறங் காப்பச் சேறல்
குணமெனக் கூறி னாரே.

(இ - ள்) ஊன் பிறங்கு ஒளிரும் வேலான் - ஊன் விளங்கி ஒளிசெய் வேலானாகிய சீவகன்; ஓர்த்துத் தன் உவாத்தி சொல்லால் தான் புறம் கட்டப்பட்டு - தான் ஆசிரியனுக்கு நேர்ந்த நிலையை உணர்ந்து தன்மெய் கட்டப்பட்டு; தன் சினம் தணிந்து நிற்ப - தன் சீற்றம் ஆறி நின்றபோது; தேன் பிறங்கு அலங்கல் மாலைச் சுநந்தையும் துணைவன் தானும் - தேன் விளங்கி அசையும் மாலையணிந்த சுநந்தையும் அவள் கணவனும்; கோன்புறம் காப்பச் சேறல் குணம் எனக் கூறினர் - அரசன் காப்பச் செல்லுதல் குடிகட்குக் குணம் என்று சொல்லினர்.

(வி - ம்.) முன்னர் அகப்பொருளை நிகழ்த்தினவன் பகைவரைக் கண்டு புறப்பொருள் நிகழ்த்தக் கருதியதனை ஆசிரியன் கூற்று விலக்கிற் றென்பது தோன்ற 'புறம் கட்டப்பட்டு' என்றார். அச் சொல் அரிய தொன்றனை விளக்கிற்று.

இங்கு நச்சினார்க்கினியர், 'புறம் கட்டப்பட்டு' என்பதற்கு 'வீரம் பிணிப்புண்ணப்பட்டு' என்று பொருள் கூறுகின்றார். (உசு0)

க0சுக. ஈன்றதாய் தந்தை வேண்ட
விவ்விட ருற்ற தென்றாற்
றோன்றலுக் காண்மை குன்று
மென்றசொல் லிமிழிற் பூட்டி
மூன்றனைத் துலக மெல்லா
முட்டினு முருக்கு மாற்றல்
வான்றரு மாரி வண்கை
மதவலி பிணிக்கப் பட்டான்.

(இ - ள்.) ஈன்ற தாய் தந்தை ஏவ இவ்இடர் உற்றது என்றால்-பெற்ற அன்னையும் தந்தையும் ஏவியதால் இத் துன்பம் நேர்ந்தது என்று உலகம் கூறின்; தோன்றலுக்கு ஆண்மை குன்றும் - நினக்கு வீரம் மாசுறும்; என்ற சொல் இமிழின் பூட்டி - என்று பெற்றோர் கூறிய சொல்லாலே கயிறுபோலக் கட்டப்பட்டு; மூன்று உலகனைத்தும் எல்லாம் முட்டினும் - மூன்றாகிய உலகம் அனைத்தும் அங்குள்ள எல்லாமும் தாக்கினும்; முருக்கும் ஆற்றல் - அவற்றையெல்லாம் கெடுக்கும் ஆற்றலையுடைய; வான் தரு மாரி வண்கை மதவலி - கற்பகத் தருவையும் மாரியையும் நிகர்க்கும் வண்மையினையும் உடைய

பெருவலி படைத்த சீவகன்; பிணிக்கப்பட்டான் - கட்டப்பட்டான்.

(வி - ம்.) இன் : உவமப் பொரு. இங்கு, 'அச் சொல் கயிற்றூற் பிணித்தாற் போல மனத்தைப் பிணித்தது. ஈண்டு, இவர் கட்டிற்றில ரெனவே இளையரான் (ஏவலரால்) மேற்கட்டலாகாமையும் உணர்க' என்று உணர்க என்பர் நச்சினர்க்கினியர். (௨௬௧)

வேறு

௧௦௬௨. குழலுடைச் சிகழிகைக் குமரன் றோளிணை
கழலுடை யிளையவர் கச்சின் வீக்கலி
னழலுடைக் கடவுளை யரவு சேர்ந்தென
விழவுடை முதுநகர் விலாவிக் கின்றதே.

(இ - ள்.) குழலுடைச் சிகழிகைக் குமரன் தோளிணை - குழற்சியாகிய முடியினையுடைய சீவகன் தோளிணைகளை; அழல் உடை கடவுளை அரவு சேர்ந்தென - ஞாயிற்றைப் பாம்பு சேர்ந்தாற்போல; கழல் உடை இளையவர் கச்சின் வீக்கலின் - கழலணிந்த ஏவலர் கச்சினாற் கட்டியதால்; விழவுடை முதுநகர் விலாவிக்கின்றது - திருவிழா மலிந்த பழம்பதி அழாநின்றது.

(வி - ம்.) இங்கும் நச்சினர்க்கினியர், 'வீக்கலின்' என்பதிலுள்ள 'இன் : உவமப்பொரு' என்றும், பாம்பு ஞாயிற்றை ஒளி குறைய மறைத்தாற்போல இவரும் இவன் ஒளி குறையுமாறு சிறையாகக் கொண்டா ரென்க. மனத்தை இறுகப் பிணிக்கவே தோளைப் போர்த்தொழிலை விலக்கிற்றும்' என்றும் விளக்கங் கூறுவர்.

மற்றும் அவர், 'குமரன் தோளிணைகளைக் குரவர் அங்ஙனங் கச்சிட்டுக் கட்டினாற்போலப் போர்த்தொழில் செய்யாதபடி விலக்கினார்களாக, வந்த இளையவர் ஞாயிற்றை அரவம் சேர்ந்தென்னச் சேர்தலின்' என்று பொருள் கூறுவர். (௨௬௨.)

வேறு

௧௦௬௩. தோளார் முத்துந் தொன்முலைக் கோட்டுத் துயன்முத்தும்
வாளா ருண்கண் வந்திழி முத்தும் மிவைசிந்தக்
காளாய் நம்பி சீவக சாமி யெனநற்றூய்
மீளாத் துன்ப நீள்கடன் மின்னின் மிசைவீழ்ந்தாள்.

(இ - ள்.) தோள் ஆர் முத்தும் - தோளில் அணிந்த முத்துக்களும்; தொல்முலைக் கோட்டுத் துயல் முத்தும் - முதிய முலைச் சிகரத்திலே அசையும் வடத்திலுள்ள முத்துக்களும்; வாள் ஆர் உண்கண் வந்து இழிமுத்தும் - வாளனைய மையுண்ட கண்களிலிருந்து வந்து சிந்தும் கண்ணீராகிய முத்துக்களும்;

இவை சிந்த - (ஆகிய) இவை சிந்தும்படி; காளாய்! நம்பி! சீவகசாமி! என - காளையே! நம்பியே! சீவகசாமியே! என்று கதறி; மீளா துன்ப நீள்கடல் மிசை - மீளமுடியாத துன்ப மாகிய பெருங்கடலிலே; மின்னின் - மின்போல; வீழ்ந்தாள் - விழுந்தனள்.

(வி - ம்.) மகப்பெற்று முதிர்ந்தாளாதலின் 'தொன்மூலை' என்றார். தொன்மையை முத்துக்களுக்குக் கூட்டுக என்பர் நச்சினார்க்கினியர். மற்றும், 'மீளா' என்பதற்கு 'மீண்டு' என்று பொருள் கொண்டு 'காரியத் தின் மேற்சென்ற கருத்து மீண்டு' என்றும், 'துன்பமாகிய கடல் - அழு கின்ற மக்கட் டொகுதி' என்றும் உரைப்பர். (௨௪௩)

௧௦௬௪. பாலா ராவிப் பைந்துகி லேந்திப் படநாகம்
போலா மல்குற் பொற்றொடி பூங்கட் குணமாலை
யேலா தேலா தெம்பெரு மானுக் கிஃதென்னா
நூலார் கோதை நுங்கெரி வாய்ப்பட் டதுவொத்தாள்.

(இ - ள்.) பால்ஆர் ஆவி பைந்துகில் ஏந்தி - பாலாவி போன்ற புத்தாடையை ஏந்தி; படநாகம் போல் ஆம் அல்குல் - நாகத்தின் படம் போன்றமைந்த அல்குலையும்; பொன்தொடி - பொன் வளையலையும்; பூகண் குணமாலை - அழகிய கண்களையும் உடைய குணமாலை; எம்பெருமானுக்கு இஃது ஏலாது ஏலாது என்னா - எம் உயிரைக் காத்த நமக்கு அதனால் இத் தீங்கு வருதல் தகாது தகாது என்று புலம்பி; நூல் ஆர் கோதை நுங்கு எரிவாய்ப்பட்டது ஒத்தாள் - நூலிற் பொருந்திய மலர் மாலை விழுங்கும் தீயிலே வீழ்ந்தது போன்றாள்.

(வி - ம்.) பாலாவி - பாலில் எழுந்த புகை: 'பானீர் நெடுங்கடற் பனிகாளெழுந்த - மேனீ ராவியின் மெல்லி தாகிய - கழுமடிக் கலிங்கம்' (பெருங்கதை. ௨. ௭: ௧௫௪ - ௬) என்றார் பிறரும். (௨௪௪)

வேறு

௧௦௬௫. எரிதவழ் குன்றத் துச்சி யிரும்பொறிக் கலாப மஞ்ஞை
யிரிவன போன்று மாடத் தில்லுறை தெய்வ மன்னார்
பரிவுறு மனத்தி னோடிப் பட்டதை யுணர்ந்து பொற்றா
ரரியுறழ் மொய்ம்ப வோவென் றுகுலப் பூசல் செய்தார்.

(இ - ள்.) எரிதவழ் குன்றத்து உச்சி இருஞ்சிறைக் கலாப மஞ்ஞை இரிவன போன்று - நெருப்புப் பரவிய மலையின் உச்சி யிலே பெரும் புள்ளிகளையுடைய கலவங்கொண்ட மயில்கள் கெட்டோடுவன போல; இல்உறை தெய்வம் அன்னார் - வீட்டுத் தெய்வம் போன்ற மகளிர்; பரிவுறு மனத்தின் மாடத்து ஓடி -

வருத்தம் உற்ற மனத்துடன் மாடத்திற்கு ஓடி; பட்டதை உணர்ந்து - நிகழ்ந்ததை அறிந்து; பொன்தார் அரி உறழ் மொய்ம்ப! ஓ! என்று - பொன்மாலை அணிந்த சிங்கம் போன்ற வலிமிகு தோளானே! ஓ! என்று; ஆகுலப் பூசல் செய்தார் - வருத்தத்தையுடைய ஆரவாரத்தை யுண்டாக்கினர்.

(வி - ம்.) இரும்பொறி - பெரிய புள்ளிகள். கலாபம் - தோகை. மஞ்ஞை - மயில். இரிவன - கெட்டோடுவன. இல்லுறை தெய்வம் - இல்லங்களிலே உறைகின்ற தெய்வம். அரி - சிங்கம். உறழ்: உவம வுருபு. ஆகுலப்பூசல் - துன்ப ஆரவாரம். (உசரு)

கOசுசு. கங்கையின் சுழியிற் பட்ட
காமரு பிணையின் மாழ்கி
யங்கவர்க் குற்ற துள்ளி
யவலநீ ரழுந்து கின்ற
குங்குமக் கோடியோ டேந்திக்
கோலம்வீற் றிருந்த கொம்மைப்
பொங்கிள முலையி னார்க்குப்
புரவல னிதனைச் சொன்னான்.

(இ - ள்.) கங்கையின் சுழியில் பட்ட காமரு பிணையின் மாழ்கி - கங்கை நீர்ச் சுழியிலே அகப்பட்ட அழகிய பெண்மான் களைப்போல வருந்தி; அங்கு அவர்க்கு உற்றது உள்ளி - அம் மாடத்திலே சுநந்தை முதலாயினோர்க்கு நேர்ந்த துயரத்தை எண்ணி; அவலநீர் அழுந்துகின்ற - கவலை நீரிலே அழுந்திய; குங்குமக் கொடியோடு ஏந்தி - குங்குமத்தையும் தொய்யிற் கொடியையும் ஏந்தி; கோலம் வீற்றிருந்த - அழகுத் தெய்வம் வீற்றிருந்த; கொம்மை பொங்கு இளமுலையினார்க்கு - பருத்த இளமுலையாராகிய புறமகளிர்க்கு; புரவலன் இதனைச் சொன்னான் - சீவகன் இதனைக் கூறினான்.

(வி - ம்.) வந்த இளையரைக் கொல்லாது விடுதலிற் புரவலன் என்றார்.

கங்கை நீர்ச்சுழி - துன்பத்திற்குவமை. காமருபிணை-விரும்புதற்குக் காரணமான பெண்மான். அவலநீர் என்புழி 'நீர்' கடல் என்னும் பொருட்டு. கோலம் - அழகுத் தெய்வம். கொம்மை - பெருமை. புரவலன் - இகழ்ச்சியுமாம். (உசசு)

கOசுஎ. கட்டுயி லனந்தா போலக் கதிகளுட் டோன்று மாறும்
விட்டுயிர் போகு மாறும் வீடுபெற் றுயரு மாறு
முட்பட வுணர்ந்த யானே யுள்குழைந் துருகல் செல்லே
னேட்பக வனைத்து மார்வ மேதமே யிரங்கல் வேண்டா

(இ - ள்.) கண் துயில் அனந்தர் போலக் கதிகளுள் தோன்றும் ஆறும் - கண்ணுறக்கமும் விழிப்பும் போலப் பல பிறவிகளினும் பிறக்கும்படியும்; விட்டு உயிர்போகும் ஆறும் - உடலைவிட்டு உயிர் போகும்படியும்; வீடுபெற்று உயரும் ஆறும் - வீடடைந்து மேம்படும்படியும்; உள்பட உணர்ந்த யானே - மனம் பொருந்த அறிந்த யானே; உள் குழைந்து உருகல் செல்லேன் - மனங்குழைந்து உருகலிற் போகேன்; ஆர்வம் எள்பகவு அனைத்தும் ஏதமே - ஆசை எள்ளின் பிளவவ்வளவே எனினும் துன்பமே; இரங்கல் வேண்டா - (எனவே) வருந்தல் வேண்டா.

(வி - ம்.) கண் துயில் அனந்தர்போல விட்டு உயிர் போகுமாறும் என மாறிக் கண் துயிலுதற்குக் காரணமான உறக்கம்போன்று உயிர் இவ்வுடலை விட்டுப் போம்படியும் அவ்வுயிர் மீண்டு விழித்தல்போன்று பிறக்கும்படியும் என அனந்தர்போல என்றமையால் விழிப்புப்போல என வருவித்துப் பொருள் கூறலே நன்று. இதே நச்சினார்க்கினியர் கருத்து. அனந்தர் - உறக்கம்.

இதனால் இன்ப துன்பமிரண்டினையும் சமமாக ஏற்றுக்கொள்ளும் சீவகன் மனநிலையினை ஆசிரியர் நன்கு உணர்த்துகின்றார்.

"மெய்த்திருப்பதமேவென்ற போதினும், இத்திருத்துறந்தேகென்ற போதினும், சித்திரத்தி னலர்ந்தசெந் தாமரை, ஒத்திருந்த முகத்தினை உன்னுவாள்," எனக் கம்பநாடரும் இராமன்பால் இப்பெருமையைக் காட்டுதல் உணர்க.

> "உறங்கு வதுபோலும் சாக்காடு உறங்கி
> விழிப்பது போலும் பிறப்பு." (குறள் - ௩௩௯)

என்னும் திருக்குறளை இதனோடு நினைக.  (௨௭௭)

௧0௯௮. நன்மணி யிழந்த நாகர்
நல்லிளம் படியர் போல
வின்மணி யிழந்து சாம்பி
யிருநில மிவர்க ளெய்த
மின்னணி மதியங் கோள்வாய்
விசும்பிடை நடப்ப தேபோற்
கன்மணி யுமிழும் பூணன்
கடைபல கடந்து சென்றான்.

(இ - ள்.) கல்மணி உமிழும் பூணன் - (இங்ஙனம் அறிவுரை கூறியபின்) கல்லிற் பிறந்த மணிகளின் ஒளியுமிழும் அணிகலனுடையான்; நல்மணி இழந்த நாகர் நல்இளம்படியர் போல - அழகிய மாணிக்கத்தை இழந்த அழகிய நாகரிள மகளிரைப் போல; இவர்கள் இல்மணி யிழந்து சாம்பி இருநிலம் எய்த -

உறவு மகளிர் சீவகனையிழந்து வருந்தி நிலத்திடை மயங்கி வீழ; மின் அணி மதியம் கோள்வாய் விசும்பிடை நடப்பதே போல் - ஒளி யணிந்த திங்கள் பாம்பாகிய கோளாற் பற்றப்பட்டு வானிடை செல்வதே போல்; கடைபல கடந்து சென்றான் - தன் மனையின் பல வாயில்களையும் கடந்து சென்றான்.

(வி - ம்.) கோள் - பிறகோள்களுமாம்; பரிவேடிப்புமாம். வீரர்களாற் கட்டுண்டு செல்வதாற் பாம்பு பற்றிய திங்களும், வீரர்கள் சூழ நடுவே செல்வதாற் கோள்கள் சூழ்ந்த திங்களும் பரிவேடிப்புடைய திங்களும் உவமை. 'இளம் பிடியர்' என்பதூஉம் பாடம். நச்சினார்க்கினியர் உறவு மகளிர் இருநிலம் எய்தக் கண்டு அறிவுரை கூறியதாக இரு செய்யுள்களையும் தொடராக்கி மாட்டேறு செய்வர். (உசஅ)

வேறு

கஒகூகூ. வேந்தனம் மனம்மென வெள்ளைநோக்கின் மூள்ளெயிற்
றந்துவர்ப் பவளவா யம்மழலை யின்சொலார்
பந்துபாவை பைங்கழங்கு பைம்பொன்முற்றில் சிற்றிலுண்
ஞேந்துவைத்து நூபுரம்மோ லிப்பவோடி நோக்கினர்.

(இ - ள்.) வெள்ளை நோக்கின் முள் எயிற்று அம் துவர் பவளவாய் அம் மழலை இன்சொலார் - வஞ்சம் இல்லாத நோக்கினையும் கூரிய பற்களையும் சிவந்த பவள வாயையும் மழலையான இனிய மொழியையும் உடைய பேதைப் பருவ மகளிர்; மனம் வெந்தன என - இம் மகளிரின் உள்ளங்கள் வருந்தின என்று கண்டார் கூறுமாறு; பந்து பாவை பைங்கழங்கு பைம்பொன் முற்றில் - பந்தும் பாவையும் கழங்கும் சிறு சுளகுமாகியவற்றை; நொந்து சிற்றிலுள் வைத்து - வருந்தித் தாம் கட்டிய சிற்றிலில் வைத்துவிட்டு; நூபுரம் ஒலிப்ப ஓடி நோக்கினர் - நூபுரம் புலம்ப ஓடிவந்து பார்த்தனர்.

(வி - ம்.) வெந்தனம் மனம்மென. மகரங்கள் சந்தம் நோக்கி விரிந்தன. வெள்ளை நோக்கு: உள்ளொன்றும் கொள்ளாத நோக்கு. (உசகூ)

கக00. மல்லிகைம் மலிந்தமாலை சோரவார்ந்த குண்டலம்
வில்விலங்க மின்னுக்கோட்ட வீணைவிட்டு வெய்துரா
யோல்லெனச் சிலம்பரற்ற வீதிமல்க வோடினார்
சில்சுணங் கிளமுலைச் செழும்மலர்த் தடங்கணார்.

(இ - ள்.) சில் சுணங்கு இளமுலைச் செழுமலர்த் தடங்கணார் - சில தேமல்கள் பரந்த இளமுலையையும் செழுமலரனைய பெருங்கண்களையும் உடைய பெதும்பைப் பருவ மகளிர்; மல்லிகை மலிந்த மாலை சோர - மல்லிகை மலர் நிறைந்த மாலைகள் நழுவ;

ஆர்ந்த குண்டலம் வில்விலங்க - பொருந்திய குண்டலம் ஒளி வீச; மின்னுக் கோட்ட வீணை விட்டு - ஒளி பொருந்திய கோடு என்னும் உறுப்பினையுடைய வீணையை விட்டு; வெய்து உராய் - விரைந்து பரவி; ஒல் எனச் சிலம்பு அரற்ற - ஒல்லென்னும் ஒலியுடன் சிலம்புகள் ஒலிக்க; வீதி மல்க ஓடினார் - தெரு நிறைய ஓடிவந்தனர்.

(வி - ம்.) கோட்ட-கோட்டையுடைய; கோடு-தண்டு. வில்-ஒளி. சில்சுணங்கு - சிலவாகிய தேமல். (உ௫0)

கக0க. நெய்த்தலைக் கருங்குழ னிழன்றெருத் தலைத்தர
முத்தலைத் திளம்முலை முகஞ்சிவந் தலமரக்
கைத்தலங் கடுத்தடித்த பந்துநீக்கி வந்தவண்
மைத்தலை நெடுந்தடங்கண் மங்கையர் மயங்கினார்.

(இ - ள்.) மைத்தலை நெடுந்தடம் கண் மங்கையர் - மை தீட்டிய நீண்ட பெரிய கண்களையுடைய மங்கைப் பருவத்தார்; நெய்த்தலைக் கருங்குழல் நிழன்று எருத்து அலைத்தர - புழுகு பூசிய கரிய குழல் பிடரிலே ஒளிவீசி அலைய; இளமுலை முகம் சிவந்து முத்து அலைத்து அலம்வர - இளமுலை முகம் சிவக்க முத்துவடம் அலைத்து அசைய; கைத்தலம் கடுத்து அடித்த பந்து நீக்கி வந்து - கைகள் கடுக்க விரைந்தடித்த பந்தைவிட்டு வந்து; அவண் மயங்கினார் - சீவகன் வரும் நெறியிலே மயங்கி நின்றனர்.

(வி - ம்.) சிவந்து - சிவக்க, கடுத்து - கடுக்க; எச்சத்திரிபுகள்.

நெய் - புழுகு குழல் - கூந்தல். எருத்து - பிடர். முத்தலைத்தலான் என்க. கடுத்து - கடுப்ப. அவண் - அவ்விடத்து. (உ௫க)

கக0உ. கோதைகொண்ட பூஞ்சிகைக்கொம்மைகொண்ட வெம்முலை
மாதுகொண்ட சாயலம் மடந்தையர் மனங்கசிந்
தோதமுத் துகுப்பபோ லுண்கண்வெம் பனியுகுத்
தியாதுசெய்க மையவென் றன்புமிக் கரற்றினார்.

(இ - ள்.) கோதை கொண்ட பூஞ்சிகை - மாலையணிந்த கூந்தலினையும்; கொம்மை கொண்ட வெம்முலை - பருத்த விருப்பூட்டும் முலைகளையும்; மாது கொண்ட சாயலின் - காதல் தோன்றும் மென்மையினையும் உடைய; மடந்தையர் - மடந்தைப் பருவ மகளிர்; மனம் கசிந்து - உள்ளம் உருகி; ஓதம் முத்து உகுப்பபோல் உண்கண் வெம்பனி உகுத்து - கடல் முத்துக்களைச் சிந்துதல் போல மையுண்ட கண்களினின்றும் வெதும்பிய பனித் துளிகளைச் சிந்தி; யாது செய்கம் ஐய! என்று அன்பு

மிக்கு அரற்றினர் - யாங்கள் யாது செய்வோம்? ஐயனே! என்று அன்பின் மிகுதியால் அழுதனர்.

(வி - ம்.) பூஞ்சிகை - மயிர்முடி. கொம்மை - பெருமை. மாது - காதல். ஓதம் - கடல்; இது கண்ணுக்குவமை. முத்து - கண்ணீர்த் துளிக்குவமை. உண்கண் - மையுண்டகண். செய்கம்: தன்மைப் பன்மை. (உ௯உ)

கக0௩. செம்பொனோலை வீழவுஞ் செய்கலங்கள் சிந்தவு
மம்பொன்மாலை யோடசைந் தவிழ்ந்துகூந்தல் சோரவு
நம்பனுற்ற தென்னெனா நாடகம் மடந்தையர்
வெம்பிவீதி யோடினார் மின்னினன்ன நுண்மையார்.

(இ - ள்.) மின்னின் அன்ன நுண்மையார் நாடக மடந்தையர் - மின் போன்ற நுண்ணியரான நாடக மடந்தையர்; செம்பொன் ஓலை வீழவும் - பொன் ஓலை (காதிலிருந்து) வீழவும்; செய்கலன்கள் சிந்தவும் - அணிகலன்கள் சிதறவும்; அம் பொன் மாலையோடு அசைந்து அவிழ்ந்து கூந்தல் சோரவும - அழகிய பொன்னரி மாலையுடன் அவிழ்ந்து அசைந்து கூந்தலில் சோர்ந்து போகவும்; நம்பன் உற்றது என் எனா வெம்பி - சீவகன் உற்ற துன்பம் என்னோ என்று வருந்தி; வீதி ஓடினார் - தெருவிலே ஓடிவந்தனர்.

(வி - ம்.) நம்பன்: சீவகன். நம்பு-நசை. பிறரால் விரும்பப்படு பவன். என்பது பொருள். "நம்பும் மேவும் நசையாகும்மே" என்பது தொல்காப்பியம் (உரி - ௩௩). நாடக மடந்தையர் - விறலியர். மின்னினன்ன - மின்னலை ஒத்த. நாடகம் மடந்தையர் என்புழி மகரவொற்று வண்ணம் கருதிக் கெடாது நின்றது. (உ௯௩)

கக0௪. பூவலர்ந்த தாரினான் பொற்புவாடு மாயிடிற்
போவுடம்பு வாழுயிர் பொன்றுநீயு மின்றெனா
வீகலந்த மஞ்ஞைபோல் வேனெடுங்க ணீர்மல்க
வாகுலத் தரிவைய ரவ்வயி றதுக்கினார்.

(இ - ள்.) வீகலந்த மஞ்ஞை போல - கெடுதியுற்ற மயில் போல; ஆகுலத்து அரிவையர் - வருத்தமுற்ற அரிவைப் பருவ மகளிர்; பூ அலர்ந்த தாரினான் - மலர் மலர்ந்த மாலையான்; பொற்பு வாடும் ஆயிடின் - அழகு கெடும் எனின்; உடம்புவாழ் உயிர்! போ - உடம்பில் வாழும் உயிரே! நீ போ; நீயும் இன்று பொன்று - (உடம்பே!) நீயும் இப்பொழுது அழிவாயாக; எனா - என்றுரைத்து; வேல் நெடுங்கண் நீர் மல்க - வேலனைய நெடுங் கண்கள் நீரைச் சொரிய; அவ் வயிறு அதுக்கினார் - அழகிய வயிற்றிலே அடித்துக்கொண்டனர்.

(வி - ம்.) பொற்பு - அழகு. உடம்பு உயிர் என்னுமிரண்டும் விளி. உடம்பே நீ போ ; உயிரே நீயும் பொன்று என மாறுக. பொன்றுதல் - இறத்தல். வீ - துன்பம். ஆகுலம் - துன்பம். அரிவை - ஈண்டுப் பருவப்பெயர் அ வயிறு என்புழி. அ-அழகு என்னும்பொருட்டு. (௨௫௪)

௧௧0௫. தேன்மலிந்த கோதைமாலை செய்கலம் முகுத்துராய்க்
காண்மலிந்த காமவல்லி யென்னதன்ன ராயரோ
பான்மலிந்த வெம்முலைப் பைந்துகி லரிவையர்
நூன்மலிந்த நுண்ணுசுப்பு நோவவந்து நோக்கினார்.

(இ - ள்.) பால் மலிந்த வெம்முலைப் பைந்துகில் அரிவையர்- பால் நிறைந்த வெவ்விய முலைகளையும் பைந்துகிலையும் உடைய அரிவைப் பருவ மகளிர்; தேன் மலிந்த கோதை மாலை செய்கலம் உகுத்து உராய் - தேன் நிறைந்த மலர்மாலை, மற்றைய மாலைகள், அணிகலன்கள் ஆகியவற்றைச் சிந்திப் பரவி ; கால் மலிந்த காம வல்லி என்னது அன்னராய் - காற்று மிக்க காம வல்லி போல அசைந்து ; நூல் மலிந்த நுண் நுசுப்பு நோவ வந்து நோக்கினார் - நூலைப் போன்ற மெல்லிடை வருந்த வந்து பார்த்தனர்.

(வி - ம்) கான்மலிந்த பொழுது காமவல்லி எங்ஙனம் அலமரும் அங்ஙனம் அலமந்து என்பது கருத்து. அரோ : அசை. அரிவைப் பருவமகளிர் ஆகலின் மகப்பேறுடையர் என்பது தோன்ற பான்மலிந்த வெம்முலை அரிவையர் என்றார். நுசுப்பு - இடை. (௨௫௫)

௧௧0௬. மாதரார்கள் கற்பினுக்கு டைந்தமா மணிக்கலைத்
தீதிலார நூற்பெய்வார் சிதர்ந்துபோகச் சிந்துவார்
போதுலா மலங்கலான்முன் போந்துபூந் தெரிவைய
ராதகா தெனக்கலங்கி யவ்வயி றதுக்கினார்.

(இ - ள்) பூந்தெரிவையர் மாதரார்கள் கற்பினுக்கு உடைந்த மாமணிக்கலை - அழகிய தெரிவையராகிய பெண்டிர்கள் தம் கற்பினுக்குத் தோற்ற மாமணிக் கற்களை ; தீது இல்ஆரம் நூல் பெய்வார் - குற்றம் இல்லாத மாலையாக நூலிலே கோத்துக் கொண்டிருந்தவர்கள் ; சிதர்ந்துபோகச் சிந்துவார் - சிதறிப் போகச் சிந்துவாராய்; போது உலாம் அலங்கலான் முன் போந்து- மலர் கலந்த மாலையான்முன் வந்து ; ஆ தகாது எனக் கலங்கி - ஆ! இது பொருத்தமின்று என்று கலங்கி; அவ் வயிறு அதுக்கினார் - அழகிய வயிற்றிலே அடித்துக்கொண்டனர்.

(வி - ம்.) 'மாமணிக்கலைக் கற்பினுக்கு உடைந்த மாதரார்கள் தீதுஇல் ஆரம் நூற்பெய்வார் தெரிவையர்' என மொழிகளை மாற்றி, 'முத்துக் கோக்கக் கற்ற கல்விக்குத் தோற்ற மாதரார்களின் கையில் உள்ள ஆரங்களை வாங்கிக் கோப்பாளாகிய தெரிவையர்' எனப் பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.

மணியாகிய கலை என்க. கல்லை என்பது கலை என நின்றது விகாரம். கற்பின் ஒளிக்கு மணியொளி நிகராகாமையின் கற்பினுக்கு உடைந்த மணிக்கல் என்றார். இனி மாமணிக்கல் என்பதற்கு வயிரமணி என்று கொண்டு திண்மையாலே தங்கற்பினுக்குத் தோற்ற மணி என்றும் கொள்ளலாம். தெரிவை - ஈண்டுப் பருவப் பெயர். (உ௯௬)

௧௧௦௭. வட்டிகை மணிப்பலகை வண்ணநுண் டுகிலிகை
யிட்டிடை நுடங்கநொந் திரியலுற்ற மஞ்ஞையிற்
கட்டழ லுயிர்ப்பின்வெந்து கண்ணிதீந்து பொன்னுக
மட்டவிழ்ந்த கோதையார்கள் வந்துவாயில் பற்றினார்.

(இ - ள்.) மட்டு அவிழ்ந்த கோதையர்கள் - தேன் சொரியும் மாலை அணிந்த மாதர்கள்; வட்டிகை மணிப்பலகை வண்ணம் நுண் துகிலிகை இட்டு - மணிகள் இழைத்த வட்டிகைப் பலகையிலே வண்ணத்தையும் நுண்ணிய எழுதுகோலையும் போகட்டுவிட்டு; நொந்து இரியல் உற்ற மஞ்ஞையின் - வருந்திக் கெடுதலுற்ற மயில்களைப் போல; கட்டழல் உயிர்ப்பின் வெந்து கண்ணி தீந்து பொன் உக - பெருநெருப்புப் போன்ற மூச்சிலே காய்ந்து கண்ணிகள் தீயவும் பூண்கள் சிதறவும்; இடை நுடங்க வந்து வாயில் பற்றினார் - இடை நொசிய வந்து வாயிலைப் பற்றி நின்றனர்.

(வி - ம்.) வட்டிகை - ஓவியம். தீந்து - தீய: எச்சத்திரிபு. இது கற்புடைமகளிர் நிலை. (உ௯௭)

வேறு

௧௧௦௮. வினையது விளைவு காண்மி
னென்றுகை விதிர்த்து நிற்பா
ரினையனைத் தெளியச் சென்று
லிடிக்குங்கோ லிவனை யென்பார்
புனைநல மழகு கல்வி
பொன்றுமா லின்றே டென்பார்
வனைகலத் திகிரி போல
மறுகுமெம் மனங்க ளென்பார்.

(இ-ள்.) வினையது விளைவு காண்மின் என்று கைவிதிர்த்து நிற்பார் - தீவினையின் பயனைக் காணுமின் என்றுரைத்துக் கை நடுங்கி நிற்பார்; இனையனைத் தெளியச் சென்றால் இவனை இடிக்கும்கொல் என்பார் - இவ்வாறு வீரர் கையில் அகப்பட்டுத் தெளிவுடன் (கலக்கமின்றி) சென்றால் இவனைக் காவலன் கொல்வானோ என்பார்; இன்றொடு புனைநலம் அழகு கல்வி பொன்றும்

என்பார் - இன்றோடு புனையும் நலனும் அழகும் கல்வியும் அழியும் என்பார்; எம் மனங்கள் வனை கலத் திகிரிபோல மறுகும் என்பார் - எம் உள்ளங்கள் எல்லாம் குயவன் பானை வனையும் சக்கரம்போலச் சுழலும் என்பார்.

(வி - ம்.) வினை - ஈண்டுத் தீவினை. வினையது விளைவு என்றது, "இம்மைச் செய்தது யாமறி நல்வினை இஃது உம்மைப் பயன்கொல்" என்பது படநின்றது. (உ௫அ)

கக0௯. நோற்றிலர் மகளி ரேன்பார்
நோங்கண்டீர் தோள்க ளேன்பார்
கூற்றத்தைக் கோம்மை கோட்டிக்
குலத்தோடு முடியு மேன்பா
ரேற்றதோன் றன்று தந்தை
செய்தவிக் கோடுமை யேன்பா
ராற்றலள் சுநந்தை யேன்பா
ராதகா தறனே யேன்பார்.

(இ - ள்.) மகளிர் நோற்றிலர் என்பார்-இவன் கிடைத்தும் நெடுங்காலம் நுகர்தற்கு மனைவியரிருவரும் நோற்றிலர் என்பார்; தோள்கள் நோம்கண்டீர் என்பார் - தோள்கள் வருந்தும் என்பார்; கூற்றத்தைக் கொம்மை கொட்டிக் குலத்தொடும் முடியும் என்பார் - கூற்றுவனைக் கைதட்டியழைத்துக் குலத்தோடும் (அரசன்) முடிவான் என்பார்; தந்தை செய்த இக் கொடுமை ஏற்றது ஒன்று அன்று என்பார் - தந்தை காட்டிக் கொடுத்த இக் கொடிய செயல் தக்கது ஆகாது என்பார்; சுநந்தை ஆற்றலள் என்பார் - (இனி) சுநந்தை இத் துயரத்தைப் பொறுக்கமாட்டாள் என்பார்; ஆ! தகாது அறனே! என்பார்- ஆ! இது தக்கதன்று! அறக்கடவுளே! என்பார்.

(வி - ம்.) 'யாம் உளேமாகவும் எம்மாற் பயன் கொளாது இவன் இங்ஙனம் சிறைவாய்ப் போவதே என்று தோள்களும் தம்மில் நோம்' என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.

"கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்(கு)
ஆற்றாதார் இன்னா செயல்."

என்னுந் திருக்குறளை நினைக. மூன்றனைத் துலகமெல்லாம் முட்டினும் முருக்குமாற்றல் உடையன் என்பது பற்றி இங்ஙனம் கூறினர். (உ௫௯)

கக௧0. தூக்குமின் காளை சீறிற் றற்றிவ னுளனோ வேன்பார்
காக்குமால் வைய மேல்லாங் காவல னாகி யேன்பார்
பாக்கியம் பேரிது மேகா ணிதுவுமோர் பான்மை யேன்பார்
நோக்கன்மி னுணுங் கண்டீர் நதிகோ னுகரிக னேன்பார்.

(இ - ள்.) தூக்குமின் ! - ஆராய்ந்து பாருங்கோள் ; காளை துற்றுச் சிறின் இவன் உளனே? என்பார் - சீவகன் நெருங்கிச் சிறின் இம் மதனன் இருப்பானோ என்பார் ; காவலன் ஆகி வையம் எல்லாம் காக்கும் என்பார் - இவன் மேலும் அரசனாகி உலகம் எல்லாம் காப்பான் என்பார் ; பாக்கியமே பெரிது காண் இதுவும் ஓர் பான்மை என்பார் - இவனுக்கு நல்வினையே மிக்குள்ளது, எனினும், இஃது ஒரு தீவினைப் பயன் என்பார் நுதிகொள் நாகரிகன் நாணும் - கூரிய பலகலை வல்லோன் ஆகையால் நாணுறுவான் ; நோக்கன்மின் என்பார் - (ஆகையால்) அவனை நோக்காதீர்கள் என்பார்.

(வி - ம்.) பெரிதும்: உம்: இசை நிறை. பெரிதுமே என்பதிலுள்ள 'ஏ'யைப், 'பாக்கியமே' எனப் பிரித்துக் கூட்டுக. கண்மின்: முன்னிலையசை. (உ௬0)

௧௧௧௧. பூவரம் பாய கோதைப் பொன்னனார் புலவி நீக்கி
நூபுரந் திருத்திச் சேந்த நுதிவிர லொந்த வென்பார்
யாவரும் புகழு மைய னழகுகெட் டொழியு மாயிற்
கோபுர மாட மூதூர் கூற்றுண விளிக வென்பார்.

(இ - ள்.) பூவரம்பு ஆய கோதைப் பொன்னனார் புலவி நீக்கி - மலர்களுக்கு எல்லையான மாலையை அணிந்த திருவனையாரின் பிணக்கை நீக்கி; நூபுரம் திருத்திச் சேந்த - சிலம்பைத் திருத்திச் சிவந்த ; விரல்நுதி நொந்தது என்பார் - விரல்நுனி (கட்டப்பட்டதனால்) வருந்திற்று என்பார் ; யாவரும் புகழும் ஐயன் அழகு கெட்டு ஒழியும் ஆயின் - எல்லோராலும் புகழப் படும் சீவகனுடைய அழகு கெட்டேவிடுமெனின் ; கோபுரம் மாடம் மூதூர் கூற்று உண விளிக என்பார் - கோபுரமும் மாடமும் இம் மூதூர் முற்றும் காலன் கொள்ள அழிக என்பார்.

(வி - ம்.) 'விரல்கள், வீரத்திற்கும் காமத்திற்கும் கொடை முதலியவற்றிற்கும் தோற்றிய யாம், ஈண்டு இவன் வீரஞ் செய்யாமையின் வீரத்திற்கு உதவியாயிற்றிலேம் என்று நொந்தன' என்று விளக்கங் கூறுவர் நச்சினார்க்கினியர். (உ௬௧)

௧௧௧௨. கருஞ்சிலை மறவர் கொண்ட கணநிரை விடுக்க வல்ல
விருஞ்சிலை பயின்ற திண்டோட் கிதுதகா தென்று குன்றிற்
கருங்கட லளுப்பிட் டாங்குக் கல்லெனக் கலங்கிக் காம
ரருங்கடி யரண மூதூ ராகுல மயங்கிற் றன்றே.

(இ - ள்.) கருஞ்சிலை மறவர் கொண்ட கணநிரை விடுக்க வல்ல - கொடிய வில்லேந்திய வேடர் கொண்ட திரளான ஆனிரையை மீட்கும் வலிமையுள்ள; இருஞ்சிலை பயின்ற திண்

தோட்கு இது தகாது என்று - பெரிய வில் பழகிய திண்ணிய தோள்களுக்குக் (கட்டுப்படும்) இஃது ஏற்காது என்றுரைப்ப தால்; கருங்கடல் குன்றில் தளுப்பிட்டாங்கு - கரிய கடல் மலை யாலே கலக்குற்றாற்போல; கல் எனக் கலங்கி - கல்லென்னும் ஒலியுடன் கலங்கி; காமர் அருங்கடி அரணம் மூதூர் - அழகிய, அரிய காவலான அரண்களையுடைய இராசமாபுரம்; ஆகுலம் மயங்கிற்று - துன்பக் குரலால் மயங்கியது.

(வி - ம்.) 'நீரை மீட்ட தோள்' என்றார் ஆண்டுக் கொல்லாமலே வென்றாற்போல ஈண்டும் கொல்லாமலே வெல்ல வல்லன் என்பது கருதி. (உசுஉ)

கககங. இங்கன மிவர்க ளேக
வெரியகம் விளைக்கப் பட்ட
வெங்கணை விடலை தாதை
வியனக ரவல மெய்தி
யங்கவ ருகுத்த கண்ணீ
ரடித்துக ளவிப்ப நோக்கிப்
பொங்கம ருழக்கும் வேலான்
புலம்புகொண் டழேற்க வென்றான்.

(இ - ள்.) இங்கனம் இவர்கள் ஏக - இவ்வாறு இவர்கள் துயருற்றுச் செல்ல; எரியகம் விளைக்கப்பட்ட வெங்கணை விடலை தாதை - தீயில் விளைவிக்கப்பட்ட கொடிய கணை ஏந்திய சீவகன் தந்தையினுடைய; வியன் நகர் அவலம் எய்தி - பெரிய மனையிலுள்ளார் துன்பம் அடைந்து; அங்கு அவர் உகுத்த கண்ணீர் - அவர்கள் சிந்திய கண்ணீர்; அடித்துகள் அவிப்ப நோக்கி - செல்கின்றவரின் அடித் துகளை அவித்தலாலே, அவர் களை நோக்கி; பொங்கு அமர் உழக்கும் வேலான் - கிளர்ந்த போரைக் கலக்கும் வேலேந்திய சீவகன்; புலம்பு கொண்டு அழேற்க என்றான் - புலம்புதல் கொண்டு அழாதீர் என்றான்.

(வி - ம்.) 'எரியை உள்ளே விளைத்த வெங்கணை' எனினும் ஆம். இவன் குணமாலை மனையினின்றும் போந்தான்; தந்தை மனையில் உள்ளார் புலம்புவதைப் பார்த்தான். "தாதையினதுவியனகர்" என ஆறும் வேற்றுமையை விரித்துக் கொள்க. (உசுங)

கககச. மின்னினான் மலையை யீர்ந்து
வேறிரு கூறு செய்வான்
றன்னினுன் றளங்கி னல்லாற்
றளங்கலம் மலையிற் குண்டே

யன்னதே துணிந்த நீதி
யருநவை நமனு மாற்ற
னென்னைநேர் நின்று வாழ்த
லிருநிலத் தாவ துண்டே.

(இ - ள்.) மின்னினால் மலையை ஈர்ந்து வேறு இரு கூறு செய்வான் துன்னினன் - மின்னைக் கொண்டு மலையைப் பிளந்து வேறாக இரு பிளவு செய்தலை மேற்கொண்டவன்; துளங்கின் அல்லால் - தான் நிலைகுலைதல் அன்றி; துளங்கல் அம் மலையிற்கு உண்டே? - நிலைகுலைதல் அம் மலைக்கு உளதோ?; துணிந்த நீதி அன்னதே - கட்டியங்காரன் துணிந்த நீதியும் அத்தகையதே; நமனும் அருநவை ஆற்றான் - எனக்குக் காலனும் துன்பியற்ற வல்லவன் அல்லன்; இருநிலத்து என்னை நேர்நின்று வாழ்தல் ஆவது உண்டே? - இப் பேருலகில் எனக்கு எதிராகப் பகைத்து நின்று வாழ்வது எவருக்கும் ஆகுமோ?

(வி - ம்.) என்னை: ஐ: அசைநிலை யிடைச்சொல். 'அருநவை நமனும் ஆற்றான்' என்பதற்கு 'அருநவை செய்யும் நமனும் என் எதிர் நின்று வாழ்தலை ஆற்றான்' எனினும் ஆம். (உகூச)

கககரு. வளைகடல் வலையிற் சூழ்ந்து
மால்வரை வேலி கோலி
யுளையரி படுக்க லுற்றான்
படுப்பினும் படுக்க மற்றென்
கிளையழ வென்னை வாள்வாய்க்
கீண்டிட லுற்று நின்றான்
றளையவிழ் கண்ணி சிந்தத்
தன்றலை நிலத்த தன்றே.

(இ - ள்) வளைகடல் வலையின் சூழ்ந்து மால்வரை வேலி கோலி - வளைந்த கடலை வலையாகச் சூழவிட்டும் பெரிய மலையை வேலியாகக் கோலியும்; உளை அரி படுக்கல் உற்றான் - பிடரி மயிரையுடைய சிங்கத்தைச் சிறைப்படுத்த முயன்றவன்; படுப்பினும் படுக்க - சிறைப்படுத்தினும் படுத்துக; (அவற்றானும் என்னை அகப்படுத்தல் அரிது; அதுவும் இவனால் இயலாது) கிளை அழ என்னை வாள்வாய் கீண்டிடல் உற்று நின்றான் தன்தலை- என் உறவினர் அழ என்னை வாளின் வாயாற் பிளத்தலை மேற் கொண்டு நின்றவனுடைய தலை; தளை அவிழ் கண்ணி சிந்த நிலத்தது - (சிலநாள் செல்லின்) முறுக்கலர்ந்த கண்ணி சிதற நிலத்ததாகும்.

(வி - ம்.) சிலநாள் என்பது ஓராண்டுக் காலம்.

நச்சினார்க்கினியர் ௧௧௧௫-முதல் மூன்று செய்யுட்களையும் ஒரு தொடராக்கித் தன்னை வாள்வாய்க் கிண்டிடலுற்று நின்ற கட்டியங்காரன் தலை நிலத்ததாம் என்பதனை உட்கொண்டு, அழும் உறவினரை நோக்கித் தன்னை ஒருவரும் ஒன்றுஞ் செய்ய முடியாதென்பதை விளக்கிப் புலம்பு கொண் டழேற்க என்றான் என முடிப்பர். (௨௧௫)

௧௧௧௬. நீரகம் பொதிந்த மேக
நீனிற நெடுநல் யானைப்
போரகத் தழலும் வாட்கைப்
பொன்னெடுங் குன்ற மன்ன
ஞர்கலி யாண்ர் மூதூ
ரழுதுபின் செல்லச் செல்வான்
சீருறு சிலம்பி நூலாற்
சிமிழ்ப்புண்ட சிங்க மொத்தான்.

(இ - ள்.) நீரகம் பொதிந்த மேகம் நீல்நிற நெடுநல் யானை-நீரைத் தன்னிடத்தே கொண்ட முகில் போன்ற கருநிறமுடைய பெரிய களிற்றையும்; போரகத்து அழலும் வாள்கை - போரிலே கனலும் வாளேந்திய கையையுமுடைய; பொன் நெடுங்குன்றம் அன்னான் - பொன்னாலான பெரிய மலையைப் போன்ற சீவகன்; ஆர்கலி யாணர் மூதூர் அழுதுபின் செல்லச் செல்வான் - ஆரவாரத்தையும் புதுவருவாயையுமுடைய பழம்பதியிலுள்ளார் அழுதவாறே பின்வரச் செல்கின்றவன்; சீருறு சிலம்பி நூலால் சிமிழ்ப்புண்ட சிங்கம் ஒத்தான் - சிறப்புற்ற சிலம்பியின் நூலினாற் சிக்குண்ட சிங்கம் போன்றான்.

(வி - ம்.) 'நூல், வீரர்க்குவமை' என்பர் நச்சினார்க்கினியர். மேலும் 'புதல் மறைந்து வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று' (குறள். ௨௭௪) என்றாற்போலக் கொள்க' என்று உவமையுங் கூறுவர். (௨௧௬)

௧௧௧௭. மன்னர்தம் வெகுளி வெந்தீ
மணிமுகில் காண மின்னிப்
பொன்மழை பொழியி னந்து
மன்றேனிற் புகைந்து பொங்கித்
துன்னினார் தம்மை யெல்லாஞ்
சுட்டிடு மென்று செம்பொன்
பன்னிரு கோடி யுய்த்துக்
கந்துகன் பணிந்து சொன்னான்.

(இ - ள்.) மன்னர்தம் வெகுளி வெந்தீ - அரசருடைய வெகுளியாகிய கொடிய நெருப்பு; மணிமுகில் காணம் மின்னி -

மணியாகிய முகில் பழங்காசு என்கிற மின்னை மின்னி; பொன் மழை பொழியின் நந்தும் - பொன்னாகிய மழையைப் பொழியின் அவியும்; அன்று எனின் புகைந்து பொங்கி - பெய்யாதெனின் அத் தீ புகைந்து பொங்கி; துன்னினர் தம்மை யெல்லாம் சுட்டிடும் - நெருங்கினரை யெல்லாம் சுட்டுவிடும்; என்று - என்றெண்ணி; கந்துகன் பன்னிரு கோடி செம்பொன் உய்த்துப் பணிந்து சொன்னான் - கந்துகன் பன்னிருகோடி செம்பொன்னைக் குவித்துத் தாழ்ந்து சிலமொழி கூறினான்.

(வி - ம்.) வெகுளி வெந்தீ - சினமாகிய வெவ்விய நெருப்பு. நந்தும் - அழியும். துன்னினார் - தன்னைச் சேர்ந்தோர். தம்மை வேந்தன் ஒறுத்திடா திருத்தற்பொருட்டுப் பன்னிருகோடி உய்த்துப் பணிந்தான் என்க. (உ௬எ)

ககக௮. மன்னவ வருளிக் கேண்மோ
மடந்தையோர் கொடியை மூதூர்
நின்மதக் களிறு கொல்ல
நினக்கது வடுவென் றெண்ணி
யென்மக னதனை நீக்கி
யின்னுயி ரவளைக் காத்தா
னின்னதே குற்ற மாயிற்
குணமினி யாது வேந்தே.

(இ - ள்.) மன்னவ! அருளிக் கேண்மோ! - அரசே! அருள் செய்து கேட்பாயாக!; மடந்தை ஓர் கொடியை - மடந்தையாகிய ஒரு கொடியை; மூதூர் - (பெண்கொலை பிறந்தறியா) இப் பழம்பதியிலே; நின் மதக் களிறு கொல்ல - நின் மதயானை கொன்றால்; நினக்கு அது வடு என்று எண்ணி - நினக்கு அது பழியாமென்று நினைத்து; அதனை என் மகன் நீக்கி - அக் கொலையை என் மகன் தடுத்து; அவளை இன் உயிர் காத்தான் - அவள் இனிய உயிரைக் காப்பாற்றினான்; வேந்தே! இன்னதே குற்றம் ஆயின் - அரசே! இப்பழி நீக்கியதே குற்றமாக முடியின்; இனி குணம் யாது? - இனி நன்மை யென்பதுதான் யாது? கூறுவாயாக.

(வி - ம்.) கேண்மோ என்புழி மோ முன்னிலையசை. கொடி: உவமவாகுபெயர். கொடி என்றது குணமாலையை. நின்மதக்களிறு என்றான் நினக்கு அது வடு என்றற்கு ஏதுக்காட்டற்கு. என்மகன் நினக்குச் சிறிதும் குற்றமிழைத்திலன் நின்மூதூரில் ஒரு மடந்தையை நின்மதக் களிறு கொன்றது என்றால் அது நினக்கு வசைச்சொல் என்று நினைத்தான். ஆதலாற் காத்தருள்க என்பது கருத்து. (உ௬௮)

ககககூ. நாண்மெய்க்கோண் டீட்டப் பட்டார்
நடுக்குறு நவையை நீக்க
லாண்மக்கள் கடனென் றெண்ணி
யறி்வின்மை துணிந்த குற்றம்
பூண்மெய்க்கோண் டகன்ற மார்ப
பொறுமதி யென்று பின்னு
நீண்மைக்க ணின்று வந்த
நிதியெலாந் தருவ லென்றான்.

(இ - ள்.) நாண் மெய்க்கொண்டு ஈட்டப்பட்டார் - நாணத்தையே மெய்ப்பொருளாகக் கொண்டு சேர்க்கப்பட்ட பெண்கள்; நடுக்குறும் நவையை நீக்கல் - அஞ்சத்தகும் குற்றத்தை நீக்குதல்; ஆண் மக்கள் கடன் என்று எண்ணி - ஆண்மக்களின் கடமை யென்று நினைத்து; அறிவின்மை துணிந்த குற்றம் - அறிவின்மையால் துணிந்து செய்த பிழையை; பூண் மெய்க்கொண்டு அகன்ற மார்ப! பொறுமதி - அணிகலன் மெய்யிற் கொண்டு விரிந்த மார்பனே! பொறுத்தருள்க; என்று - என்றுரைத்து; பின்னும் - மேலும்; நீண்மைக்கண் நின்று வந்த நிதியெலாம் தருவல் என்றான் - நெடுங்காலமாக இருந்து வரும் செல்வம் யாவும் கொடுப்பேன் என்றும் கூறினான்.

(வி - ம்.) ஆண்மக்கள் என்பார் ஈண்டு அரசராவார்; உயிரைக் காத்தலும் அழித்தலும் அவர் தொழிலாதலின். (உகக)

ககஉ0. வாழிய ரிறைவ தேற்றான்
மாநிரை பெயர்த்த காளை
பிழைதான் பொறுக்க வென்னப்
பிறங்கிண ரலங்கன் மாலை
சூழ்கதி ராரம் வீழ்நூல்
பரிந்தற நிமிர்ந்து திண்டோ
ளூழ்பிணைந் துருமிற் சீறி
யுடல்சினங் கடவச் சொன்னான்.

(இ - ள்.) இறைவ! வாழியர் - அரசே! வாழ்வாயாக!- தேற்றான் மாநிரை பெயர்த்த காளை பிழை பொறுக்க என்ன; அறியாமையால் பெருநிரையை மீட்ட சீவகனின் குற்றத்தைப் பொறுத்தருள்க என்று கந்துகன் வேண்ட; பிறங்கு இணர் அலங்கல் மாலை - விளங்கும் பூங்கொத்துக்களையுடைய அசையும் மாலை; வீழ்நூல் பரிந்து - அமைந்த நூலை அறுந்து; சூழ்கதிர் ஆரம் அற - சூழ்ந்த ஒளியையுடைய முத்துமாலை அற்றுப்போக;

நிமிர்ந்து - நிமிர்ந்து அமர்ந்து; திண்தோள் ஊழ்பிணைந்து - திண்ணிய தோளில் கையோடு கைமாறி ஏறத் தட்டி; உருமின் ஒறி - இடியென முழங்கி; உடல்சினம் கடவச் சொன்னான் - மாறுபடும் சீற்றம் உந்த அரசன் கூறினான்.

(வி - ம்.) பீழை - பிழையின் விகாரம். 'மாநிரை பெயர்த்த காளை' என்றான் மாநிரை பெயர்த்தது அரசனுக்குற்ற வடுவை நீக்கலும் அறமும் ஆகி நின்றதுபோல இதுவும் ஆகும் எனக் கருதிச் செய்தான் என்பது தோன்ற.

நச்சினார்க்கினியர் முற்செய்யுளுடன் இதனையும் ஒரு தொடராக்கி, 'இன்னதே குற்றமாயின் குணமினி யாது?' என்றதற்கு முகம் ஆகாமை கண்டு, மகளிர் நடுக்கத்தை நீக்கல் ஆண்மக்கள் கடனென்று தேற்றானாய்த் தான் பெயர்த்த மாநிரையென்றெண்ணி, அறிவின்மையாலே துணிந்த குற்றத்தைப் பொறுப்பாய் என்றான்; பின்னும் செவ்வி பெருமையின் தொன்றுதொட்டு வந்த பொருள் எலாம் தருவேன்; எனக்காகப் பொறுப்பாயாக' என்றான்,—எனக் கொண்டு கூட்டுவர். (௨௭௦)

௧௧௭௧. ஆய்களிற் றசனி வேக
மதன்மருப் பூசி யாகச்
சீவக னகன்ற மார்ப
மோலையாத் திசைகள் கேட்பக்
காய்பவன் கள்வ ரென்ன
வெழுதுவித் திடுவ லின்னே
நீபரி வொழிந்து போய்நின்
னகம்புகு நினைய லென்றான்.

(இ - ள்.) ஆய்களிற்று அசனி வேகம் அதன் மருப்பு ஊசி ஆக - அவனுற் சோர்வுற்ற களிறாகிய அசனி வேகத்தின் கொம்பு ஊசியாகவும்; சீவகன் அகன்ற மார்பம் ஓலை ஆ - சீவகனுடைய விரிந்த மார்பு ஓலையாகவும் கொண்டு; திசைகள் கேட்ப- திசைகள் அறியுமாறு; கள்வர் காய்பவன் என்ன - கள்வரைக் கொல்லுவேன்போல; இன்னே எழுதுவித்திடுவல் - இப்போதே எழுதுவிப்பேன்; நீ பரிவு ஒழிந்துபோய் - நீ வருத்தம் நீங்கிச் சென்று; நின் அகம்புகு - நின் மனையை அடைக; நினையல் என்றான் - இதனை நினையாதே என்றான்.

(வி - ம்.) 'திசைகள் கேட்ப' என்றான் வெள்ளிமலைக்கும் இவனால் வெல்லப்பட்ட அரசருக்கும் அறிவிப்பேன் என்னுங் கருத்துடன். கொல்லுதலை எழுதுவிப்பேன் என்றான், அசனி வேகம் என்னும் களிற்றின் கொம்பை ஊசியாகக்கொண்டு சீவகன் மார்பினை ஓலையாக வைத்து எழுதுவேன் என்றது கொல்வேன் என்பதைக் குறித்து. (௨௭௧)

கக௨௨. நஞ்சனு னுரைப்பக் கேட்டே
நாய்கனு நடுங்கி யுள்ளம்
வெஞ்சின வேழ முண்ட
விளங்கனி போன்று நீங்கி
யெஞ்சினன் போல நின்று
னேத்தருந் தவத்தின் மிக்க
வஞ்சமில் கோள்கை யான்சோ
லமிர்தினல் வற்புற் றுனே.

(இ - ள்.) *நஞ்சு அனன் உரைப்பக் கேட்டு-நஞ்சு போன்ற கட்டியங்காரன் இவ்வாறு சொல்லக் கேட்டு; நாய்கனும் நடுங்கி - கந்துகனும் அச்சுற்று; வெஞ்சின வேழம் உண்ட விளங்கனி போன்று உள்ளம் நீங்கி - கொடிய சினமுடைய களிறு என்னும் நோயால் உண்ணப்பட்ட விளம்பழம்போல வெறுமையாக அறிவு முதலியன நீங்கி; எஞ்சினன் போல நின்றான் - இறந்தான் போல நின்றவன்.; ஏத்த அருந் தவத்தின் மிக்க - புகழ்தற்கரிய தவத்திற் சிறந்த; வஞ்சம்இல் கொள்கையான் - தூய முனிவனுடைய; சொல் அமிர்தினல் வற்பு உற்றான் - சொல்லாகிய அமிர்தத்தினல் உளவலிமை பெற்றான்.*

(வி - ம்.) *நஞ்சனன் என்றது அவன் சச்சந்தனைக் கொன்ற கொடுமை குறித்துநின்றது. வேழம் - விளங்கனியிற்படுவதோர் நோய் அப்பெயருடைய யானைக்கியன்ற அடையோடு வந்தது. எஞ்சினன் - இறந்தோன்.* (உஎ௨)

கக௨௩. மின்னிலங் கெஃகி னனைப்
பெருகலான் றந்தை மீண்டு
தன்னிலங் குறுக லோடுந்
தாயழு தரற்று கின்று
ளென்னிலை யையற் கென்ன
யாவதுங் கவல வேண்டா
பொன்னலங் கோடிய னயோர்
பொருளுரை கேளி தென்றுன்.

(இ - ள்.) *மின் இலங்கு எஃகினனைப் பெறுகலான் - ஒளி விடும் வேலேந்திய சீவகனை மீட்காமல்; தந்தை மீண்டு தன் இலம் குறுகலோடும்-தந்தை திரும்பித் தன் மனையை அடைந்தவுடன்; தாய் அழுது அரற்றுகின்றுள் - தாய் அழுது அரற்றுகின்றவளாய்; ஐயற்கு என் நிலை? என்ன - நம் ஐயனுக்கு நிலை ஏது? என்ன; பொன்நலம் கொடியனய்! - பொன்னலான*

நலமுறுங் கொடி போன்றவளே!; யாதும் கவல வேண்டா - ஏதும் கவலையடைய வேண்டா; இது ஓர் பொருளுரை கேள் என்றான் - இந்த ஒரு பொருளுடைய மொழியைக் கேள் என்றான்.

(வி - ம்.) பழைய நிலையோ சிறையோ என்றாள்.

தந்தை - சந்துகன். இல்லம், இலம் என விகாரமுற்றுநின்றது. தாய்: சுநந்தை. ஐயற்கு - சீவகனுக்கு. யாவதும் - ஒருசிறிதும். பொன்னலங்கொடி என்றது காமவல்லியை; இது சுநந்தைக்குவமை. பொருளுரை - உறுதிமொழி. (உ௬௩)

௧௧௨௪. மதுமடை திறந்து தீந்தேன்
வார்தரு கோதை நீமுன்
சேதுமகப் பலவும் பெற்றுச்
சிந்தைகூர் மனத்தை யாகி
யிதுமக வழியின் வாழே
னிறப்பல்யா னென்னு மாங்கட்
கதுமெனக் கடவு டோன்றிக்
கடைமுகங் குறுக வந்தான்.

(இ - ள்.) தீ தேன் மதுமடை திறந்து வார்தரு கோதை - இனிய வண்டினத்திற்கு மதுவின் படைதிறந்து ஒழுகுங் கோதை போல்வாய்!; நீ முன் செதுமகப் பலவும் பெற்றுச் சிந்தைகூர் மனத்தையாகி-நீ முன்னர் சாப்பிள்ளை பலவற்றையும் பெற்றுச் சிந்தனையுடைய மனத்தையாய்; இது மகவு அழியின் வாழேன் - இம் மகவு இறப்பின் வாழமாட்டேன்; யான் இறப்பல் என்னும் ஆங்கண் - நான் இறந்துபடுவேன் என்ற அளவிலே; கதுமெனக் கடவுள் தோன்றிக் கடைமுகம் குறுக வந்தான் - விரைந்து ஒரு முனிவன் தோன்றித் தலைவாயிலை நெருங்கி வந்தான்.

(வி - ம்.) கோதை - விளி. செதுமகவு - சாப்பிள்ளை. சிந்தை - துன்பம். மனத்தை: முன்னிலை ஒருமை. இதுமகவு - இம்மகவு. கதுமென: விரைவுக் குறிப்பு. கடவுள் - துறவி. கடைமுகம் - தலைவாயில். (உ௬௪)

௧௧௨௫. கறவைகாண் கன்றின் வெஃகிக்
கண்டடி பணிந்து காமர்
நறவயா வுயிர்க்கு மாலை
நாற்றிய விடத்து ளேற்றி
யறவியாற் காறு மூன்று
மமைந்தநா லமிர்த மேந்தி
பறவைதா துண்ட வண்ணம்
பட்டினிப் பரிவு தீர்த்தான்.

(இ - ள்.) கறவை காண் கன்றின் - தாய்ப்பசுவைக் காணும் கன்றுபோல; வெஃகிக் கண்டு அடி பணிந்து - விரும்பிக் கண்டு அடிகளில் வணங்கி; காமர் நறவு அயா உயிர்க்கும் மாலை நாற்றிய இடத்துள் ஏற்றி - அழகிய, தேனைச் சிந்துகின்ற பூமாலை தூக்கிய இடத்தில் அமர்த்தி; அறவியாற்கு ஆறும் மூன்றும் அமைந்த நால் அமிர்தம் ஏந்த - அறத்துறையாளற்கு ஒன்பது முறையும் அமைந்த நான்குவகை உணவுகளைப் படைக்க; பறவை தாது உண்ட வண்ணம் பட்டினிப் பரிவு தீர்த்தான் - வண்டு மகரந்தப் பொடியை உண்பதுபோலப் பசியின் வருத்தத்தைப் போக்கினன்.

(வி - ம்.) ஒன்பது முறை: 'எதிர்கொளல் இடம் நனிகாட்டல் கால் கழீஇ - அதிர்பட அருச்சனை அடியின் வீழ்தரல் - மதுரநன் மொழியொடு மனம்மெய் தூயராய் - உதிர்கநம் வினையென உண்டி ஏந்தினர்' (சீவக. உ௮உ௮. நச்சி. மேற்) இது நவபுண்ணியக் கிரமம் எனவும்படும். நால் அமிர்து: உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன.

கறவை - கறக்கும் ஆன். கறவைகாண் கன்று ஈண்டுமுகத்தான் அமர்ந்து நோக்கியதற்கு உவமை. மாலை நாற்றியவிடம் என்றது ஒப்பனைசெய்யப்பட்ட மனையில் என்றவாறு. அறவியான் - துறவற மேற்கொண்டோன். பறவை - ஈண்டு அறுகாற் சிறுபறவை. (உஎரு)

கக௨சு. ஆய்மணிப் பவளத் திண்ணை
யரும்பெறற் கரகத் தங்கட்
டூய்மணி வாச நன்னீர்
துளங்குபொற் கலத்து ளேற்று
வேய்மணித் தோளி நிற்ப
விழுத்தவ னியம முற்றி
வாய்மணி முறுவ றோன்ற
வந்தனை விதியிற் செய்தேன்.

(இ - ள்.) ஆய்மணிப் பவளத் திண்ணை - ஆராய்ந்த மணி அழுத்தின பவளத் திண்ணையிலிருந்து; அரும்பெறல் கரகத்து அங்கண் - அரியதாகக் கிடைத்த கரகத்தில் உள்ள; தூய்மணி வாசம் நன்னீர் - தூய நீல மணிபோல் விளங்கும் மணமிகும் நறுநீரை; துளங்கு பொன் கலத்துள் ஏற்று - ஒளிவிடும் பொற் கலத்திலே (தரையில் வீழாமல்) ஏற்று; வேய்மணி தோளி நிற்ப - மூங்கிலனைய மணி அணிந்த தோளியாகிய நீ நிற்ப; விழுத்தவன் நியமம் முற்றி - சிறந்த தவமுடையோன் தன் நியமங்களை முடித்துக்கொண்ட பின்னர்; வாய்மணி முறுவல் தோன்ற வந்தனை விதியின் செய்தேன் - வாயில் முத்தனைய முறுவல் தோன்றுமாறு குறையிரக்கும் நிலையுடன் வணக்கத்தை முறையாக இயற்றினேன்.

(வி - ம்.) முற்றி - முற்ற: எச்சத்திரிபு. (உஎசு)

௧௧௨௭. ஆறெலாங் கடலுள் வைகு
மருந்தவத் திறைவ னூலுள்
வேறெலாப் பொருளும் வைகும்
விழுத்தவ வறிதி நீயே
யூறிலா வுணர்வி னோக்கி
யுரைமதி யெவன்கொன் மக்கட்
பேறிலா ளல்லள் பெற்ற
வுயிர்சென்று பிறக்கு மென்றேன்.

(இ - ள்.) விழுத்தவ! - சிறந்த தவமுடையானே!; ஆறு எலாம் கடலுள் வைகும் - ஆறுகள் யாவும் கடலிலே தங்கும் (அதுபோல); அருந்தவத்து இறைவன் நூலுள் வேறு எலாப் பொருளும் வைகும் - அரிய தவத்தினையுடைய அருகன் ஆகமத்திலே வேறு வேறுபட்ட எல்லா நூல்களின் பொருளும் தங்கும்; நீயே அறிதி - நீயே அப் பொருள்களை அறிவாய்; ஊறு இலா உணர்வின் நோக்கி உரைமதி - கெடுதியில்லா அறிவுடன் ஆராய்ந்து கூறுக; மக்கள்பேறு இலாள் அல்லள் பெற்ற உயிர் எவன்கொல் சென்று பிறக்கும்? என்றேன் - குழந்தைப் பேறில்லாதவள் அல்லள் ஆகிய இவள் பெற்ற உயிர் எங்கே சென்று பிறக்கும் என்றேன்.

(வி - ம்.) 'இவள் மக்கட் பேறில்லாதவளல்லள்; பெற்ற மக்களுயிர் மற்றோரிடத்தே சென்று பிறக்கும்; இனிப் பிள்ளை எத்தன்மைத்து?' என்று பொருளுரைப்பர் நச்சினார்க்கினியர். அருகனாகமத்துள் எல்லாம் அடங்குதலின் அதனையறிந்த நீ கணித நிலையும் அறிவாய் என்ற கருத்துடன் இங்ஙனம் வினவினான்.

கரகம் - கமண்டலம். தூய்நீர் மணிநீர் வாசநீர் நன்னீர் எனத் தனித்தனி கூட்டுக. தோளி: முன்னிலைப்புறமொழி; நீ என்பது பொருள். விழுத்தவன் - சிறந்த தவத்தையுடையவன். நியமம் ஒழுக்கமுறைமை. (௨௭௭)

௧௧௨௮. வம்பவிழ் கோதை தந்த
வான்றவர்க் காயை வீழ்த்தோர்
செம்பழுக் காயை வாங்கித்
திருநிலத் தெடுத்துக் கொண்டாங்
கம்பழ நீண்ட வாட்க
ணலமரு மணிசெ யம்பூங்
கொம்படு நுசுப்பி னுய்க்குத்
தந்தனென் பேணிக் கொண்டாய்.

(இ - ள்.) வம்பு அவிழ்கோதை! - மணம் விரியும் மாலையாய்!; தந்த வான்துவர்க் காயை வீழ்த்து - நான் தந்த சிறந்த துவர்க்காய் ஒன்றை நீ வீழ்ப்ப; ஓர் செம்பழுக்காயை வாங்கித் திருநிலத்து எடுத்துக்கொண்டு - ஒரு செம்மையான பழுக்காயை வளைந்து நீ வழிபாடு செய்த நிலத்திலிருந்து எடுத்து; ஆங்கு, அம்பு அழ நீண்ட வாள்கண் அலமரும் அணிசெய் அம்பூங் கொம்பு அடு நுசுப்பினுக்கு - அதனை, அம்பு வருந்த நீண்ட ஒளிமிகுங் கண்களையும், அசையும் அழகிய பூங்கொம்பை வருத்தும் இடையினையுமுடைய நினக்கு; தந்தனென், பேணிக் கொண்டாய் - கொடுத்தேன் நீ, அதனைக் காப்பாற்றிக் கொண்டாய்.

(வி - ம்.) வம்பு - மணம். கோதை - முன்னிலைப் புறமொழி. யான் தந்த என்க. வீழ்த்த - வீழ்ப்ப. வாங்கி - குனிந்து. அலமரும் நுசுப்பு, அணிசெய் நுசுப்பு அம்பூங்கொம்பு அடுநுசுப்பு எனத் தனித்தனி கூட்டுக. (உஎஅ)

ககஉகூ பெற்றவங் நிமித்தத் தானும்
 பிறந்தசொல் வகையி னானு
மற்றமின் மணியை யங்கைக்
 கொண்டவர் கண்டு காட்டக்
கற்பகங் காம வல்லி
 யனையநீர் கேண்மி னென்று
முற்றுபு கனிந்த சொல்லான்
 முனிவரன் மொழியு மன்றே.

(இ - ள்.) பெற்ற அங் நிமித்தத்தானும் - (முனிவனுக்கு நம்மாற்) கிடைத்த அந்த நிமித்தத்தாலும்; பிறந்த சொல் வகையினானும்-என் வாயிற் பிறந்த சொல் வகையாலும்; அற்றம் இல் மணியை அங்கைக் கொண்டவர் - அழிவற்ற இறைவனுகிய மணியை அங்கையிலே கொண்டவர்; கண்டு காட்ட - அறிந்து நமக்குக் கூறவேண்டி; கற்பகம் காமவல்லி அனைய நீர் கேண்மின் என்று - கற்பகத்தையும் காமவல்லியையும் போன்ற நீங்கள் கேளுங்கோள் என்று; முற்றுபு கனிந்த சொல்லான் - முதிர்ந்து கனிந்த சொல்லாலே; முனிவரன் மொழியும் - முனிவரன் கூறுவான்.

(வி - ம்.) நிமித்தம்: துவர்க்காயை வீழ்த்துப் பழுக்காயை எடுத்தது. சொல்வகை: இறக்கும் என்னாது சென்று பிறக்கும் என்றதனாற் போமதுவும் பிறக்குமதுவும் சொல்லியது. கொண்டவர், முனிவரன்: பன்மை யொருமை மயக்கம்.

இனி, 'அற்றம் இன் மணியை அங்கையிற் கொண்டோர் அம் மணியை நன்றாக அறியுமாறு போல' என உவமையாகக் கூறின் பன்மை யொருமை மயக்கம் இராது. (உஎக)

சகஅ௦. ஒன்றுநீர் கவலல் வேண்டா
வுலகெலா மாளுஞ் சீர்த்திப்
பொன்றிக ழுருவி னானோர்
புண்ணியற் பெறுதி ரென்ன
நின்றநீ யுவந்து நீங்க
நிகழ்பொரு ளெனக்குச் செப்பிப்
பின்றையு நிகழ்வ துண்டு
பேசுவல் கேளி தென்றான்.

(இ - ள்.) *ஒன்றும் நீர் கவலல் வேண்டா* - எதற்கும் நீர் வருந்த வேண்டா ; *உலகு எலாம் ஆளும் சீர்த்தி* - உலகமெல்லாம் ஆளும் சிறப்பினையுடைய ; *பொன் திகழ் ஒளியினான் ஓர் புண்ணியன் பெறுதிர் என்ன* - பொன்போல் விளங்கும் ஒளியை யுடைய நன்மகனைப் பெறுவீர் என்று கூற ; *நின்ற நீ உவந்து நீங்க* - (அதனைக் கேட்டு) ஆங்கு நின்ற நீ மகிழ்ந்து செல்ல, அதன்பின் ; *நிகழ்பொருள் எனக்குச் செப்பி*-(அம் மகனுக்குப் பிறப்பு முதல் இறவளவும்) நிகழ்பொருளை எனக்குக் கூறி ; *பின்றையும் நிகழ்வதுண்டு* - பின்னர் நிகழுமொரு துன்பமும் உண்டு ; *பேசுவல் இது கேள் என்றான்* - கூறுவேன் ; இதனைக் கேள் என்று மேற்கூறினான்.

(வி - ம்.) *பெறுதிர் என்றது சுநந்தைக்குப் பிள்ளை பெறுவை என்றாற் போலிருந்தது. அவன் கூறியது வளர்க்கப் பெறுவீர் என்று.* (உஅ௦)

சகஅக. நிலவுறழ் பூணி னானை
நெடுநக ரிரங்கக் கையாத்
தலபல செய்து கொல்வா
னருளிலான் கொண்ட போழ்திற்
குலவிய புகழி னானைக்
கொண்டுபோ மியக்க னஞ்சல்
சிலபகல் கழிந்து காண்டி
சிந்தியி தென்று சொன்னான்.

(இ - ள்.) *நிலவு உறழ் பூணினானை* - நிலவை மாறுபடும் ஒளியுறு பூணினையுடையவனை ; *நெடுநகர் இரங்கக் கையாத்து* - பெருநகர் புலம்பக் கையைப் பிணித்து ; *அலபல செய்து கொல்வான்* - தகவற்றன பல செய்து கொல்வதற்கு ; *அருள்*

இலான் கொண்ட போழ்தில்.- இரக்கமற்ற கட்டியங்காரன் கொண்ட காலத்தில்; குலவிய புகழினானை இயக்கன் கொண்டு போம் - பொருந்திய புகழுடையானை ஓர் இயக்கன் அழைத்துச் சென்றுவிடுவான்; அஞ்சல் - அஞ்சற்க; சில பகல் கழிந்து காண்டி - சில நாட்கள் கழித்துக் காண்பாய்; ஈது சிந்தி என்று சொன்னான் - இதனை நீ சிந்திக்க என்றுரைத்தான்.

(வி - ம்.) 'நீங்கள் அம்பல செய்து பூணினானைக் கையைத் தொழில் செய்யாதவாறு பண்ணுதலாலே' என்பர் நச்சினார்க்கினியர். அதனானே நீயும் வருந்தாதே என்று ஆறுதல் கூறினான் கந்துகன். (உஅக)

ககஙஉ வசையற நிறைந்த கற்பின்
மாலையு மாமி தானுந்
தசையற வுருகி வெந்து
தம்முயிர் நீங்கு மாங்க
ணசைதவன் சொற்க ளென்னு
நோன்புணை தழுவி நெஞ்சிற்
கசிவெனுங் கடலை நீந்திக்
[illegible] காலை கண்டார்

(இ - ள்.) [illegible] கற்பின் மாலையும் மாமிதானும் - பழிப்பு நீங்க உயர்ந்த கற்பினையுடைய குணமாலையும் சுநந்தையும்; தசை அற உருகி வெந்து தம் உயிர் நீங்கும் அங்கண் - தசையின்றி மெலிந்து வெதும்பித் தம் உயிரை விடும் நிலை வந்தபோது; நசை தவன் சொற்கள் என்னும் நோன்புணை தழுவி - நண்ணிய தவத்தினனுடைய சொற்களாகிய வலிய தெப்பத்தைக் கைப்பற்றி; நெஞ்சில் கசிவு எனும் கடலை நீந்தி - உள்ளத்தே வருத்தம் என்கிற கடலைக் கடந்து; காலையெனும் கரை கண்டார் - (எட்டுத் திங்கள் என்னும்) காலையாகிய கரையைக் கண்டனர்.

(வி - ம்.) எட்டுத் திங்கள் கழிந்து சீவகனைக் கண்டார். ஆதலின் எட்டுத் திங்கள் என்கிற காலை என்றார் நச்சினார்க்கினியர். (உஅஉ)

ககஙங. திருக்குழன் மகளிர் நையச்
சீவக சாமி திண்டோள்
வரிக்கச்சிற் பிணிக்கப் பட்டான்
மன்னனு லென்னக் கேட்டே
தருக்குடை வேழம் வாளார்
ஞாட்பினுட் டகைமை சான்ற
மருப்புட னிழந்த தோத்தார்
மன்னுயிர்த் தோழன் மாரே

(இ - ள்.) திருக்குழல் மகளிர் நைய - அழகிய குழலை யுடைய மகளிர் வருந்துமாறு; மன்னனால் சீவகசாமி திண்தோள் வரிக்கச்சின் பிணிக்கப்பட்டான் - அரசனால் சீவகன் தன் திண்ணிய தோள்கள் வரிதலையுடைய கச்சினாற் கட்டப்பட்டான்; என்னக் கேட்டு - என்று கேள்வியுற்று; மன் உயிர்த் தோழன் மார் - நிலைபெற்ற உயிரனைய தோழர்கள்; வாள்ஆர் ஞாட்பி னுள் - வாளேந்திச் செய்யும் போரிலே; தருக்கு உடைவேழம் - செருக்குற்ற களிறு; தகைமை சான்ற மருப்பு உடன் இழந்தது ஒத்தார் - சிறப்புற்ற மருப்புகளைச் சேர இழந்ததனைப் போன் றனர்.

(வி - ம்.) இங்கும் நச்சினார்க்கினியர், 'தன் தோளை இருமுதுகுரவ ராலே கச்சினாற் கட்டினாற் போலத் தொழில் செய்யாதபடி பண்ணப் பட்டான்' என்பர். (உஅந)

ககநச. நட்டவற் குற்ற கேட்டே
பதுமுக னக்கு மற்றோர்
குட்டியைத் தின்ன லாமே
கோட்புலி புறத்த தாகக்
கட்டியங் கார னென்னுங்
கழுதைநம் புலியைப் பாய
வோட்டியிஃ துணர லாமே
யுரைவல்லை யறிக வென்றான்.

(இ - ள்.) நட்டவற்கு உற்ற கேட்டு - தன் நண்பனுக்கு நேர்ந்தவற்றைக் கேட்டு; பதுமுகன் நக்கு-பதுமுகன் நகைத்து; கோள் புலி புறத்தது ஆகக் குட்டியைத் தின்னல் ஆமே? - கொல்லவல்ல புலி காத்துக்கொண்டிருக்க (மற்றொன்றாற்) குட்டி யைத் தின்ன இயலுமோ? இயலாது; கட்டியங்காரன் என்னும் கழுதை நம் புலியைப் பாய - கட்டியங்காரன் எனப்படுங் கழுதை நம் புலியைப் பாய்வதற்கு; ஒட்டி இஃது உணரலாமே? - நாமும் மெய்யென்று நம்பிப் பொருந்தி உணர்தல் ஆகாது; உரைவல்லை அறிக என்றான் - உரைவல்லவனே! இதனை அறிந்து வருக என்று ஒற்றனிடம் கூறினான்.

(வி - ம்.) தான் காத்தற்றொழிலையுடைமையின் குட்டியென்றான். 'மடங்கலாற்றற் பதுமுகன் காக்க' (சீவக. கஅகசு) காண்க. (உஅச)

ககநரு. சிலையொடு செல்வ னின்றாற்
றேவரும் வணக்க லாற்றார்
முலையுடைத் தாயோ டெண்ணித்
தந்தையிக் கோடுமை செய்தான்

கலைவல்லீ ரின்னுங் கேண்மி
னின்னதென் றுரைக்கு மாங்கண்
விரைவொடு சென்ற வொற்றாள்
விளைந்தவா பேசு கின்றான்.

(இ - ள்.) சிலையொடு செல்வன் நின்றால் - வில்லொடு சீவகன் நின்றால்; தேவரும் வணக்கல் ஆற்றார் - வானவரும் அவனைத் தாழ்வித்தல் ஆற்றார்; முலையுடைத்தாயோடு எண்ணி-நற்றாயொடு சூழ்ந்து; தந்தை இக்கொடுமை செய்தான் - தந்தை இக்கொடிய செயலைச் செய்திருத்தல் வேண்டும்; கலைவல்லீர், இன்னும் இன்னது கேண்மின் - கலைவல்ல தோழர்களே! மற்றும் இதனையுங் கேட்பீராக; என்று உரைக்கும் ஆங்கண் - என்று கூறும் அப்போது; விரைவொடு சென்ற ஒற்றுஆள் - அங்கே விரைந்து வந்த ஒற்றன்; விளைந்தஆ பேசுகின்றான் - நேர்ந்த ஆறு இதுவெனச் செப்புகின்றான்.

(வி - ம்.) 'ஆறு' என்பது 'ஆ' எனக் கடைகுறைந்தது நின்றது. (உஅரு)

கககூசு. இட்டிவேல் குந்தங் கூர்வா
ளிருஞ்சிலை யிருப்புச் சுற்றார்
நெட்டிலைச் சூலம் வெய்ய
முளைத்தண்டு நெருங்க வேந்தி
யெட்டெலாத் திசையு மீண்டி
யெழாயிரத் திரட்டி மள்ளர்
கட்டழற் கதிரை யூர்கோள்
வளைத்தவா வளைத்துக் கொண்டார்.

(இ - ள்.) இட்டிவேல் குந்தம் கூர்வாள் இருஞ்சிலை இருப்புச் சுற்றுஆர் நெடுஇலைச் சூலம் வெய்ய முளைத்தண்டு - ஈட்டியும் வேலும் குந்தமும் வாளும் வில்லும் இருப்புப்பூண் அமைந்த நீண்ட இலையையுடைய சூலமும் கொடிய முளையையுடைய தண்டும்; நெருங்க ஏந்தி - செறிய எடுத்துக்கொண்டு; எட்டு எலாத் திசையும் ஈண்டி - எட்டாகிய எல்லாத் திசையினும் வந்து நிறைந்து; எழாயிரத்து இரட்டி மள்ளர் - பதினாலாயிரம் வீரர்; கட்டு அழல் கதிரை ஊர்கோள் வளைத்தஆ - மிகுந்த வெப்பமுடைய ஞாயிற்றைப் பரிவேடிப்பு வளைந்தவாறு போல; வளைத்துக் கொண்டார் - வளைத்துக் கொண்டனர்

(வி - ம்.) ஈட்டி : இட்டியென விகாரப்பட்டது. இருப்புச் சுற்று - பூண். (உஅசு)

ககருள. பிடியோடு நின்ற வேழம்
பெருவளைப் புண்ட வண்ணம்
வடிமலர்க் கோதை யோடும்
வளைத்தலின் மைந்தன் சீறி
விடுகணை சிலையோ டேந்தி
வெருவரத் தோன்ற லோடு
மடுபுலி கண்ட மான்போ
லாறல வாயி ஞரே.

(இ - ள்.) பிடியொடு நின்ற வேழம் பெருவளைப்பு உண்ட வண்ணம் - பிடியுடன் நின்ற களிறு பெரிதும் வளைப்பற்றாற் போல: வடிமலர்க் கோதையோடும் வளைத்தலின் - தெளிந்த மலர்க்கோதையாள் குணமாலையுடனே மனையிடத்தே வளைப்புறு தலின்; மைந்தன் சீறி விடுகணை சிலையொடு ஏந்தி - சீவகன் முழங்கி ஆராய்ந்த அம்பையும் வில்லையும் ஏந்தி; வெருவரத் தோன்றலோடும் - அஞ்சுறுமாறு வெளிப்பட்டபோது; அடுபுலி கண்ட மான்போல் - கொல்லும் புலியைக் கண்ட மானைப்போல; ஆறு அல ஆயினர் - வழி தெரியாமல் ஓடினர்.

(வி - ம்.) பிடி குணமாலைக்கும் வேழம் சீவகனுக்கும் உவமைகள். வேழம் - ஈண்டு களிறு என்பதுபடநின்றது. புலி சீவகனுக்கும் மான் - படைஞர்க்கும் உவமை. ஆறு - வழி. அல: பலவறிசொல். அல்லாத வழிகள் என்னும் பொருட்டு. (உஅள)

ககருஅ. சூழ்கழன் மள்ளர் பாறச்
சூழ்ச்சியிற் றந்தை புல்லி
வீழ்தரு கண்ண டம்மோய்
விளங்குதோள் பிணிப்ப மற்றென்
ரேழரை வடுச்செய் திட்டே
னென்றுதான் றுளங்கி நின்று
னாழ்திரைப் பாம்பு சேர்ந்த
வொளிமிகு பருதி யொத்தான்.

(இ - ள்.) சூல்கழல் மள்ளர் பாற - கழலணிந்த மள்ளர்கள் இங்ஙனம் கெடுதலாலே; தந்தை சூழ்ச்சியின் புல்லி - இது பொருளன்றென்றெண்ணித் தந்தை வந்து தழுவ; வீழ்தரு கண்ணள் தம்மோய் விளங்குதோள் பிணிப்ப - நீர் வீழுங் கண்ணினளாய் நற்றாய் சீவகனது விளங்குந் தோளைக் கட்ட; மற்று என் தோழரை வடுச் செய்திட்டேன் - இனி என் தோழர் களைப் பழியுறச் செய்தேன்; என்று தான் துளங்கி நின்றான் -

என்று அவன் கலங்கி நின்றான்; ஊழ்திரைப் பாம்பு சேர்ந்த ஒளிமிகு பருதி ஒத்தான் - (அப்போது) ஊழியின் கடலின் முகட்டிலே பாம்பினாற் பற்றப்பட்ட ஒளியுறும் ஞாயிறு போன்றான்.

(வி - ம்.) தம் ஆய்: தம் மோய் எனத் திரிந்தது. 'தம்மொய் விளங்கு தோள்' எனவும் பாடம். அதற்குத் தம் என்பது பன்மைக் காதலாற் பன்மை யொருமை மயக்கம் எனக் கொள்க. 'திரைப் பரப்புச் சேர்ந்த' எனவும் பாடம். இங்கும் நச்சினார்க்கினியர் 'புல்லி' என்பதற்கு 'நெருங்கிய' என்றும், 'பிணிப்ப' என்பதற்குத் 'தொழில் செய்யாதபடி செய்ய' என்றும் பொருள் கூறுவர். மற்றும் அவர் ஊழ் என்பது ஊழி யின் விகாரம் என்றுரைத்து, ஊழித் திரைப்பருதி' என இயைத்துக் கடலிற் றோன்றிய ஞாயிறு என்று பொருள் கூறுவர். (உஅஅ)

கசுஅகூ. ஒற்றன்வந் துரைப்பக் கேட்டே
யோத்ததோ வென்சொ லென்னாச்
சுற்றினார் முகத்தை நோக்கிச்
சூழிமால் யானை யன்னா
னுற்றவிவ் விடரைத் தீர்க்கு
முபாயநீ ருரைமி னென்றான்
பொற்றிரட் குன்றம் போலப்
பொலிவுகொண் டிருந்த தோளான்.

(இ - ள்.) ஒற்றன் வந்து உரைப்பக் கேட்டு - ஒற்றன் வந்து இங்ஙனம் கூறக் கேட்டு; சூழிமால் யானை அன்னான் - முகபடாம் அணிந்த பெரிய யானை போன்றவனும்; திரள் பொன் குன்றம் போலப் பொலிவு கொண்டிருந்த தோளான் - திரண்ட பொன்மலைபோல அழகுகொண்ட தோளானுமாகிய பதுமுகன்; சுற்றினார் முகத்தை நோக்கி - சூழ இருந்தவரின் முகத்தைப் பார்த்து; என் சொல் ஒத்ததோ? என்னா - என் மொழி பொருந்திற்றோ என்று வினவி; உற்ற இவ் இடரைத் தீர்க்கும் உபாயம் நீர் உரைமின் என்றான் - நேர்ந்த இவ் விடுக் கணைப் போக்கும் சூழ்ச்சியை நீவிர் மொழிமின் என்றான்.

(வி - ம்.) சூழி - முகபடாம். மால் - பெரிய. யானையன்னானாகிய தோளான் என்க. திரள் பொன் குன்றம் என்பது திரண்ட பொன் னாகிய மலை என முன்னது வினைத்தொகையும் பின்னது பண்புத் தொகையுமாம். (உஅகூ)

கசுகூ0. நிறைத்திங்க ளொளியோ டொப்பான்
புத்திசே னினைந்து சொல்லு
மறைத்திங்க ணகரை வல்லே
சுடுதுநாஞ் சுடுத லோடு

மிறைக்குற்றேல் செய்த லின்றி
யெரியின்வாய்ச் சனங்க ணீங்கச்
சிறைக்குற்ற நீங்கச் செற்றாற்
செகுத்துக்கோண் டெழுது மென்றான்.

(இ - ள்.) *நிறைத் திங்கள் ஒளியொடு ஒப்பான் - கலை நிறைந்த திங்களின் ஒளியுடன் ஒப்பானாகிய; புத்திசேன் நினைந்து சொல்லும் - புத்திசேனன் சூழ்ந்து சொல்வான்; நாம் இங்கண் நகரை மறைத்து வல்லே சுடுதும் - நாம் இப்போதே நகரை மறைந்திருந்து எரிப்போம்; சுடுதலோடும் - எரித்த வுடன்; இறைக் குற்றேல் செய்தல் இன்றி - அரசனுக்குக் குற்றேவல் செய்தலை விடுத்து; எரியின்வாய்ச் சனங்கள் நீங்க - தீயை அணைக்க மக்கள் நீங்கிய பின்; செற்றான் செகுத்து - மதனனைக் கொன்று; சிறைக்குற்றம் நீக்கிக்கொண்டு எழுதும் என்றான் - சிறையாகிய குற்றத்தை நீக்கிக் கொண்டு போவோம் என்றான்.*

(வி - ம்.) '*மறைந்து*' என்பது விகாரப்பட்டு, '*மறைத்து*' என வந்தது. புத்திசேன், குற்றேல்: விகாரங்கள் (புத்திசேனன், குற்றேவல்). இவன் அந்தணன் ஆதலின் முற்கூறினான் என்பர். இவனைத் '*திங்கள் விரவிய பெயரினான்*' (சீவக. ௧௭௪) என்றார் முன்னும். (௨௯0)

௧௧௪௪. காலத்தீ நகரை மேயக்
கடியரண் கடிந்த வம்பிற்
சாலத்தீச் சவரர் கோலஞ்
செய்துநம் மறவ ரீண்டிக்
கோலத்தீ வேலி னானைக்
கோயிலுள் வளைப்ப விப்பா
லாலைத்தீ யிடங்க டோறு
மாகுலஞ் செய்து மென்றான்.

(இ - ள்.) *கடி அரண் கடிந்த அம்பின் - காவலுடைய மூன்று மதிலையும் அழித்த கணையைப்போல; காலத்தீ நகரை மேய - ஊழித்தீயைப் போன்று நாம் இடும்தீ நகரை அழிக்க; சாலத்தீச் சவரர் கோலம் செய்து - பொருந்துமாறு கொடிய வேடர் கோலங்கொண்டு; நம் மறவர் ஈண்டி - நம் வீரர் கூடி; கோயிலுள் கோலத் தீ வேலினானை வளைப்ப - அரண்மனையிலே அழகிய தீயனைய வேலுடையவனைச் சூழ்ந்து கொள்ள; இப்பால் - இப் பக்கத்தே; ஆலைத் தீ இடங்கள்தோறும் ஆகுலம் செய்தும் என்றான் - ஆலையிற் பாகு காய்ச்சும் தீயையுடைய நாடெங்கும் துன்பத்தை உண்டாக்குவோம் என்று (பதுமுகன்) கூறினான்.*

(வி - ம்.) 'உய்ய வல்லார் ஒரு மூவரைக் காவல்கொண் - டெய்ய வல்லானுக்கே உந்தீ பற' (திருவா. திருவுந்தி. ௬) என்றாற்போல.

காலத்தீ - ஊழிமுடிவில் உலகினை அழிக்கும் நெருப்பு. ஊழித்தீப் போலும் தீ என்க. மேய்தல் - ஈண்டு அழித்தல். கடியரண் என்றது முப்புரத்தை. அம்பு - ஈண்டுச் சிவபெருமான் எய்த அம்பு. சவரர் - வேடருள் ஒருவகையினர். வேலினன் - கட்டியங்காரன். ஆலைத்தீயிடம் என்றது மருதநில ஊர்களை. (உ௧௧)

௧௧௬௨. சிறைப்புறங் காத்துச் செல்லு
மதனனைத் தெருவில் வீழப்
பிறைத்தலை யம்பிற் சென்னி
பெருநிலத் திடுவ லிட்டான்
மறுக்குற்று மள்ளர் நீங்க
மைந்தனைக் கொண்டு போகி
யறைத்தொழி லார்க்குஞ் செல்லா
வருமிளை புகுமி னென்றான்.

(இ - ள்.) சிறைப்புறம் காத்துச் செல்லும் மதனனை - (அப்போது) சிறையைப் பாதுகாத்துக் கொண்டு போகும் மதனனை; சென்னி தெருவில் பெருநிலத்து வீழப் பிறைத்தலை அம்பின் இடுவல் - அவன் தலை தெருவிலே தரையில் வீழுமாறு பிறை போன்ற தலையை உடைய அம்பினாலே வீழ்த்துவேன்; இட்டால் - வீழ்த்தினால்; மறுக்குற்று மள்ளர் நீங்க - மனங் கலங்கி வீரர்கள் நீங்கினவுடன்; மைந்தனைக் கொண்டு போகி - சீவகனைக்கொண்டு சென்று; அறைத் தொழிலார்க்கும் செல்லா- கீழறுக்குந் தொழிலுடைய அமைச்சர்க்கும் நினைக்கவொண்ணாத; அருமிளை புகுமின் என்றான் - காவற் காட்டிலே செல்லுமின் என்றான்.

(வி - ம்.) மதனன் - கட்டியங்காரன் மைத்துனன். பிறை போலும் முகத்தையுடைய அம்பு. மள்ளர் - படைமறவர். மைந்தன்: சீவகன். பதுமுகன் தன் தோழர்களை நோக்கி மதனனை ஓர் அம்பினாற் கொன்று விடுவேன். நீங்கள் சீவகனைக்கொண்டு காவற்காட்டிற் புகுமின் என்றான் என்பது கருத்து. அறைத்தொழிலார் - அமைச்சர்; கீழறுக்குந் தொழிலையுடையோர் என்பது பொருள்.

" அறைபோகமைச்சர் " (௫ - ௧௩0)

என்பர் இளங்கோவடிகளார்.

" அறைபோக்கமைச்சின் முறைபோக்கெண்ணினும் "
(௩ - ௧௭ : ௫௩)

என்றார் கதையினும். (உ௧உ)

கககசங. மாற்றவர் மலைப்பி னாங்கே
வாட்கடாக் கொண்டு நொய்தா
வேற்றுல கேற்றி நும்பின்
விரைதர்வே னுலகிற் கெல்லா
மாற்றிய நட்பு வல்லே
வலிப்புறீஇ யிடுமி னென்றான்
கூற்றங்கள் பலவுந் தொக்க
கூற்றத்திற் கூற்ற மொப்பான்.

(இ - ள்.) கூற்றங்கள் பலவும் தொக்க கூற்றத்தில் கூற்றம் ஒப்பான் - கூற்றுக்கள் பலவுந் திரண்ட கூறுபாட்டிலே சிறந்த கூற்றத்தைப் போன்றவனான பதுமுகன்; மாற்றவர் மலைப்பின் ஆங்கே வாள் கடாக் கொண்டு - (அவ்வாறு மீளாயிற் புகுந்தால்) பகைவர்கள் மலைவதுண்டாயின், வாளாலே கடாவிட்டு; நொய்து ஆ வேறு உலகு ஏற்றி நும்பின் விரைதர்வேன் - விரைவாக விண்ணுலகினேற்றி உம்முடன் விரைந்து வருவேன்; ஆற்றிய நட்பு உலகிற்கு எல்லாம் வலிப்பு உறீஇ இடுமின் என்றான் - நீங்கள் நடத்திய நட்பை உலகெல்லாம் நிலைபெறுத்தி யிடுமின் என்றான்.

(வி - ம்.) 'கூற்றத்தில் உவமை கூறுமிடத்துப் பல கூற்றங்களாலே பண்ணினதொரு கூற்றம் ஒப்பான்' என்றுமாம்.

கடாக்கொள்ளுதலாவது எருதுகளால் வைக்கோலைத் துவைத்தல் போன்று பகைவரைப் போர்க்களத்தே துவைத்தழித்தல் என்க.

"கடாவிடு களிறுபோல உசசியும்
மருங்கும்பற்றிப் பிளந்துயிர் பருகி."

என்பர் பின்னும் (கககூடு). விரைதருவேன் என்பது விரைதர்வேன் என உகரம் கெட்டுநின்றது. (உகங)

கககசச. காலனைச் சூழ்ந்த நோய்போ னபுலமா விபுலர் சூழ
வேலினை யேந்தி நந்தன் வெருவரத் தோன்ற லோடு
மாலைதன் றாதை தானு மக்களும் வந்து கூடிப்
பாலவர் பிறரு மீண்டிப் பாய்புலி யினத்திற் சூழ்ந்தார்.

(இ - ள்.) காலனைச் சூழ்ந்த நோய்போல் நபுலமா விபுலர் சூழ - காலன் ஏவினவாறு செய்ய அவனைச் சூழ்ந்த நோய்போல நபுலனும் விபுலனும் மாவின் மேற்சூழ; நந்தன் வேலினை ஏந்தி- நந்தட்டன் வேலேந்தியவனாய்; வெருவரத் தோன்றலோடும் - அச்சமுண்டாகத் தோன்றின அளவிலே; மாலை தன் தாதை தானும் மக்களும் வந்து கூடி - குணமாலையின் தந்தையும்

அவன் மக்களும் வந்து சேர்ந்து; பல்லவர் பிறரும் ஈண்டி - தம் பகுதியிலுள்ள மற்றோரும் வந்து தோழருடன் தொக்கு; பாய்புலி இனத்தின் சூழ்ந்தார் - பாயும் புலியினம் போலச் சூழ்ந்தனர்.

(வி - ம்) நபுல விபுலர் 'கபில பரணர்' போலக் கொள்க.

காலன் ஆவி கவருங்கால் அவனுக்குதவியாக அவ்வுயிர் கொண்ட உடலைச் சிதைக்குமாறு சீவகன் எளிதில் வெல்லும்படி பகைவர் வலியை அழிக்கும் துணைவர் என்பது கருத்து. காலன் ஏவியவிடத்தே சேறற்கு அவனைச் சூழ்ந்த நோய்கள் என்க. அன்றியும் உயிர்களைக் கவர்தற்குக் காலன் கொண்டல், இடி, மின்னல் நீர், காற்று, தீ, மரம், கல், மண் முதலிய பல பொருள்களையும் ஏவுவன் ஆதலால் அவைகள் என்னினும் பொருந்தும். மாலை: குணமாலை. (உகச)

ககசரு. மட்டுவா யவிழ்ந்த தண்டார்த்
தாமரை நாமன் சொன்ன
கட்டமை நீதி தன்மேற்
காப்பமைந் திவர்க ணிற்பப்
பட்டுலாய்க் கிடந்த செம்பொற்
கலையணி பரவை யல்கு
லிட்டிடைப் பவளச் செவ்வாய்த்
தத்தையு மிதனைக் கேட்டாள்.

(இ - ள்.) மட்டுவாய் அவிழ்ந்த தண்தார்த் தாமரை நாமன் சொன்ன - தேனைத் தன்னிடத்தே கொண்டு அலர்ந்த தண்ணிய தாமரையின் பெயரையுடையான் (பதுமுகன்) கூறிய; கட்டு அமை நீதி தன்மேல் காப்பு அமைந்து இவர்கள் நிற்ப - வகுப்பமைந்த முறையிலே காவலாகக் கூடி இவர்கள் நிற்க; பட்டு உலாய்க் கிடந்த செம்பொன் கலை அணி - பட்டுக் கலந்து கிடந்த, பொன்னாலான மேகலை அணிந்த; பரவை அல்குல் - பரப்பமைந்த அல்குலையும்; இட்டு இடை - சிற்றிடையையும்; பவளச் செவ்வாய் - பவளம் போன்ற சிவந்த வாயையும் உடைய; தத்தையும் இதனைக் கேட்டாள் - தத்தையும் சீவகனுக்குற்றதைக் கேள்வியுற்றாள்.

(வி - ம்.) தாமரை நாமன் என்றது பதுமுகனை. கட்டு அமை நீதி - கட்டுப்பாடமைந்த நீதி என்க. இவர்கள் - இந்நபுலவிபுலர் முதலியோர். இட்டிடை - சிறிய இடை. தத்தை: காந்தருவதத்தை. (உகரு)

ககசசு. மணியியல் யவனச் செப்பின்
மங்கலத் துகிலை வாங்கிக்
கணைபுரை கண்ணி யேற்ப
வுடுத்தபின் செம்பொற் செப்பிற்

பிணையலு நறிய சேர்த்திப்
　　பெருவிலை யாரந் தாங்கித்
துணைவனுக் குற்ற துன்பஞ்
　　சொல்லிய தொடங்கி னாளே.

(இ - ள்.) கணைபுரை கண்ணி - அம்பனைய கண்ணாள்; மணி இயல் பவளச் செப்பின் மங்கலத் துகிலை வாங்கி - மணிகளாற் செய்யப்பட்ட யவனச் செப்பிலிருந்து தூய ஆடையை எடுத்து; ஏற்ப உடுத்தபின் - (வழிபாட்டுக்குத்) தக்கவாறு உடுத்த பிறகு; செம்பொன் செப்பில் நறிய பிணையலும் சேர்த்தி - செம்பொன் செப்பிலிருந்து நல்ல மலர் மாலையையும் அணிந்து; பெருவிலை ஆரம் தாங்கி - மிகுவிலை பெற்ற முத்து மாலை சூடி; துணைவனுக்கு உற்ற துன்பம் சொல்லிய - கணவனுக்கு நேர்ந்த துன்பத்தை நீக்குதற்கு; தொடங்கினாள் - வழிபடத் தொடங்கினாள்.

(வி - ம்.) சொல்லிய தொடங்கினாள் என்புழி சொல்லிய என்பது நீக்க என்னும் பொருட்டு.

"பண்டச் சாகாட் டாழ்ச்சி சொல்லிய" (புறநா - ௯௦ - எ)

என்புழியும் அஃதப்பொருட்டாதல் அறிக. (உகக)

ககசஎ. பொன்னணி மணிசெ யோடை
　　நீரின்வெண் சாந்து பூசித்
தன்னுடை விஞ்சை யெலாந்
　　தளிரிய லோத லோடு
மின்னடு வாளும் வேலுங்
　　கல்லொடு தீயுங் காற்று
மன்னுட னேந்தித் தெய்வ
　　மாதரைச் சூழ்ந்த வன்றே.

(இ - ள்.) பொன் அணி மணிசெய் ஓடை வெண்சாந்து - பொன்னாற் செய்து மணியிழைக்கப்பட்ட மடலிலிருந்த வெண் சாந்தை; நீரின் பூசி - பனிநீருடனே கலந்து பூசிக்கொண்டு; தன் உடைவிஞ்சை எல்லாம் - தான் கற்ற மறை யெல்லாவற்றையும்; தளிர் இயல் ஓதலோடும் - தளிரனையாள் ஓதின அளவிலே; மின் அடு வாளும் வேலும் கல்லொடு தீயும் காற்றும் - மின்னை வென்ற ஒளியுறு வாள், வேல், கல், தீ, காற்று ஆகியவற்றை; மன் உடன் ஏந்தி - மிகுதியாகத் தம்முடன் ஏந்தி; மாதரைத் தெய்வம் சூழ்ந்த - தத்தையைத் தெய்வங்கள் சூழ்ந்தன.

(வி - ம்.) இதனானும், பின், 'விண்ணோர்களை வாழ்த்தி' (சீவக. ககசுO) என்றதனானும் ஈண்டு விஞ்சையர் வாராமை யுணர்க. 'சாந்து பூத்த' என்றும், 'தன்னிடை விஞ்சை' என்றும் பாடம். (உகஎ)

வேறு

ககசஅ. ஆரமின் னும்பணை வெம்முலை யாடமைத் தோளினாள்
வீரனுற் றதுயர் மின்னென நீக்கிய மெல்லவே
நேரமன் னும்வரு கென்றுநின் றாணினைந் தாளரோ
பாருண்மன் னும்பழி பண்பனுக் கின்று விளைந்ததே.

(இ - ள்.) ஆரம் மின்னும் பணை வெம்முலை ஆடு அமைத் தோளினாள் - முத்துவடம் ஒளிரும் பருத்த வெம்முலைகளையும் அசையும் மூங்கிலனைய தோள்களையும் உடைய தத்தை; வீரன் உற்ற துயர் மின் என நீக்கிய - தன் கணவன் அடைந்த துயரை மின்போலக் கடிது நீக்க; மன்னும் நேர வருக என்று நின்றாள் - மிகவும் அணுக வருக என்று தெய்வங்களை வேண்டி நின்றவள்; பாருள் மன்னும் பழி பண்பனுக்கு இன்று விளைந்தது - உலகில் நிலைபெறும் வடுச்சொல் தன் கணவனுக்கு இன்று நேர்ந்ததை; மெல்ல நினைந்தாள் - மெல்லெனஎண்ணினாள்.

(வி - ம்.) நினைந்தது மேற்கூறுகின்றார்.

ஆரம்-முத்துவடம். பணைவெம்முலை: வினைத்தொகை. தோளினாள்-காந்தருவதத்தை. வீரன்: சீவகன். மின் - ஈண்டு விரைவின் மறைதற்குவமை. மன்னும்-மிகவும். அரோ: அசை. மன்னும்பழி-நிலையுறும்பழி. பண்பன்: சீவகன்; நற்குணம் நிறைந்தவன் என்பது கருத்து. (உகஅ)

ககசகூ. மன்னன்செய் தசிறை மாகட லுட்குளித் தாழ்வுழித்
தன்னையெய் திச்சிறை மீட்டன டன்மனை யாளெனி
னென்னையா வதிவ னாற்றலுங் கல்வியு மென்றுடன்
கோன்னும்வை யங்கொழிக் கும்பழிக் கென்செய்கோ
[தெய்வமே.

(இ - ள்.) மன்னன் செய்த சிறை மாகடலுள் குளித்து ஆழ்வுழி - அரசன் செய்த சிறைப் பெருங்கடலிலே முழுகி அழுந்தும்போது; தன் மனையாள் தன்னை எய்திச் சிறை மீட்டனள் எனின்-தன் மனைவி தன்னைச் சேர்ந்து சிறையை நீக்கினாள் என்றால்; இவன் ஆற்றலும் கல்வியும் என் ஆவது என்று - இவன் வலிமையும் படிப்பும் என்னாகத் தகுவன என்று; உடன் கொன்னும் வையம் கொழிக்கும் பழிக்கு - சிறை நீக்கினவுடன் பெரிதும் உலகம் எடுத்துச் சொல்லும் பழிக்கு; தெய்வமே! என் செய்கோ? - தெய்வமே! நான் என்ன செய்வேன்?

(வி - ம்.) என்னை : ஐ: அசை. ஆவது: ஒருமைப் பன்மை மயக்கம்.

இச் செய்யுள்,

" அல்லன் மாக்கள் இலங்கைய தாகுமோ
எல்லை நீத்த உலகங்கள் யாவுமென்
சொல்லி னாற்சுடு வேனது தூயவன்
வில்லி னாற்றற்கு மாசென்று வீசினேன்." (கம்ப-சுளாம-௧௮)

என்னும் சீதையின் கூற்றை நினைப்பிக்கின்றது. (௨௯௯)

௧௧௫0. செல்வனுற் றசிறை செய்யவ ணீக்குமேன் றூற்பழி
யில்லையா யின்னவள் யானெனும் வேற்றுமை யில்லையே
சொல்லின்வெள் ளிம்மலை தோடவிழ் தாமரைப் பொன்மல
ரெல்லையா கும்பொதுப் பெண்ணவள் யான்குல மங்கையே.

(இ - ள்.) செல்வன் உற்ற சிறை செய்யவள் நீக்கும் என்றால் - செல்வன் அடைந்த சிறையைத் திருமகள் நீக்குவாளாயின் ; பழி இல்லை ஆயின் - பழியில்லை யென்றால் ; அவள் யான் எனும் வேற்றுமை இல்லையே - அவளென்றும் யானென்றும் வேறுபாடு இல்லையே, சொல்லின் - வேற்றுமை கூறின் ; வெள்ளிமலை தோடு அவிழ் பொன் தாமரை மலர் எல்லை ஆகும் - எனக்கு வெள்ளிமலையும் அவளுக்கு இதழ்விரிந்த பொற்றாமரை மலரும் எல்லை ஆகும் ; அவள் பொதுப்பெண் - (மற்றும்) அவளோ பொதுமகள்; யான் குலமங்கை - யானோ குலப்பெண். (ஆகையாற் பழியில்லையாம்).

(வி - ம்.) திருமகள் பார்க்கின் தீங்கு நீங்கும் என்று உலகங் கூறுதலின் இங்ஙனங் கூறினாள்.

செல்வன், ஈண்டுச் சீவகன். செய்யவள் - திருமகள். திருமகள் பலரிடத்தும் கைம்மாறிப் போதலின் பொதுமகள் எனப்பட்டாள். எனவே குலமகளாகிய யான் அவன் சிறை நீக்குதல் பழியாகாது எனத் துணிந்தவாறாயிற்று. (௩00)

௧௧௫௧. ஆவதா கபுக ழும்பழி யும்மெழு நாளவை
தேவர்மாட் டும்முள மக்களு ளில்வழித் தேர்கலே
னேமெனெஞ் சம்மென நோக்கினின் றுள்சிறைப் பட்டதன்
காவற்கன் றிற்புனிற் றுவன கார்மயிற் சாயலே.

(இ - ள்.) புகழும் பழியும் ஆவதாக - (மேலும்) ஈண்டுப் புகழும் பழியும் ஆவதாகுக ; அவை எழும் நாள் தேவர்மாட்டும் உள - அவை தோன்றும்போது விண்ணவரிடத்தும் தோன்றுகின்றன ; மக்களுள் இல்வழித் தேர்கலேன் - மக்களிடம் அவை இல்லாத இடத்தைக் கண்டறியேன்; என் நெஞ்சம் நோம் -

இவற்றை யெல்லாம் எண்ணின் உள்ளம் வருந்தும், (நினைக்குங் காலமும் அன்று); என - என்றுரைத்து; சிறைப்பட்ட தன் காவல் கன்றின் - ஒரு சிறையிலகப்பட்ட தன் காப்பில் உள்ள கன்றினிடம்; புனிற்று ஆ அன - இளங்கன்றின் தாயான பசு நோக்கல் போல; கார் மயில் சாயல் - கார்நோக்கும் மயிலின் மென்மையாள்; நோக்கி நின்றாள் - பார்த்து நின்றாள்.

(வி - ம்.) ஆ விடுவிக்க நோக்கி நின்றாற்போல நின்றாள். (௲௦௧)

வேறு

௧௧௫௨. மாநகர் சுடுத லொன்றோ
மதனனை யழித்த லொன்றோ
வானிக ரில்லா மைந்தர்
கருதிய ததுவு நிற்க
வேய்நிக ரில்ல தோளி
விஞ்சையால் விடுத்துக் கொள்ளப்
போயுயிர் வாழ்தல் வேண்டே
னெனப்பொருள் சிந்திக் கின்றான்.

(இ - ள்.) வான்நிகர் இல்லா மைந்தர் - வானும் நிகர் இல்லாத நம் தோழர்கள்; மாநகர் சுடுதல் ஒன்றோ, மதனனை அழித்தல் ஒன்றோ கருதியது-பெரிய நகரைச் சுடுதலாவது, மதனனைக் கொல்வதாவது நினைத்ததாகும்; அதுவும் நிற்க - அதுவும் குறைவில்லை; வேய்நிகர் இல்ல தோளி-மூங்கில் ஒவ்வாத தோளி; விஞ்சையால் விடுத்துக்கொள்ள - தன் விஞ்சைத் திறத்தால் விடுவித்துக் கொள்ள; போய் உயிர் வாழ்தல் வேண்டேன் - பிழைத்துச் சென்று உயிர் வாழ்தலை விரும்பேன்; எனப் பொருள் சிந்திக்கின்றான்-என்று கருதி மேலே செய்யவேண்டிய பொருளை நினைக்கின்றான்.

(வி - ம்.) 'ஆய்நிகர்' என்றும் பாடம்.

மாநகர் - அரண்மனையுமாம். வான் - முகில்; இது கைம்மாறு வேண்டாது நன்மை செய்தற்குவமை. இனி வான் - தேவருலகமுமாம். இது தன்பாலுற்றார் துன்பம் துவரத்துடைத்து இன்பமெலாந் தடையின்றித் தருதற்குவமை என்க. மைந்தர் என்றது தோழரை. தோளி - ஈண்டுக் காந்தருவதத்தை. பொருள் - இனிச் செய்யக்கடவதாகிய செயல். (௲௦௨)

௧௧௫௩. கச்சற நிமிர்ந்து மாந்தர்க் கடாவிடு களிறு போல
வுச்சியு மருங்கும் பற்றிப் பிளந்துயிர் பருகிக் கோண்மா
வச்சுற வழன்று சீறி யாட்டினம் புக்க தொப்பக்
குச்சென நிரைத்த யானைக் குழாமிரித் திடுவ லென்றான்.

(இ - ள்.) கச்சு அற நிமிர்ந்து - என்னைக் கட்டிய கச்சு அறுமாறு நிமிர்ந்து; கடாவிடு களிறுபோல - பற்றி எறிகின்ற களிற்றைப்போல; மாந்தர் உச்சியும் மருங்கும் பற்றிப் பிளந்து - வீரர்களின் தலையையும் இடையையும் பிடித்துப் பிளந்து; உயிர் பருகி - உயிரைக் கொன்று; கோள்மா அச்சு உற அழன்று சீறி ஆட்டினம் புக்கது ஒப்ப - கொல்லுதல் வல்லபுலி அச்சம் உண்டாகக் கனன்று முழங்கி, ஆட்டு மந்தையிற் புகுந்தாற் போல; குச்சென நிரைத்த யானைக்குழாம் - பாவாற்றிபோல நெருங்க வளைந்த யானைத் திரளையும்; இரித்திடுவல் என்றான் - கெடுத்திடுவேன் என்று கருதினான்.

(வி - ம்.) ஆசிரியற்கு நேர்ந்ததற்குத் தாழ்வாகாதென்று இத் திரளைக் கொல்லக் கருதினான்.

கச்சு - கச்சை. இது தன்னைக் கட்டிய கச்சை. கோள்மா - கொல்லுதல் வல்லபுலி. அச்சு - அச்சம். குச்சு-பாவாற்றி என்னுமொரு நெய்தற்றொழிற் கருவி. (௲௦௩)

ககருச. மின்னிலங் கெயிற்று வேழம்
வேழத்தாற் புடைத்துத் திண்டேர்
பொன்னிலங் கிவுளித் தேராற்
புடைத்துவெங் குருதி பொங்க
வின்னுயி ரவனை யுண்ணு
மெல்லைநாள் வந்த தில்லை
யென்னையிக் கிருமி கொன்றேன்
றோழனை நினைப்ப லென்றான்.

(இ - ள்.) மின் இலங்கு எயிற்று வேழம் - மின்னென விளங்கும் பற்களையுடைய வேழங்களை; வேழத்தால் புடைத்து - யானைகளால் அடித்து; திண்தேர் பொன் இலங்கு இவுளித் தேரால் புடைத்து - திண்ணிய தேரைப் பொன் விளங்கும், புரவி பூட்டிய தேராலே தாக்கி; வெம் குருதி பொங்க இவன் இன் உயிரை உண்ணும் - வெப்பமான குருதி கொப்புளிக்கப் பகைவனுடைய இனிய உயிரைப் பருகுகின்ற; இறுதிநாள் வந்தது இல்லை - எல்லைக் காலம் இன்னும் வரவில்லை; இக் கிருமி கொன்று என்னை - (பகை களைதலை விட்டு) இப் புழுக்களைக் கொல்வதால் யாது பயன்?; என் தோழனை நினைப்பல் என்றான் - என் தோழனை சுதஞ்சணனை நினைப்பேன் என்றெண்ணினான்.

(வி - ம்.) எயிறு - பல். இவுளி - குதிரை. அவனை என்றது கட்டியங்காரனை. எல்லைநாள் வந்ததில்லை என்றும் பாடம். கிருமி என்றது போர் மறவரை. கிருமி - புழு. இஃது அழித்தலின் எளிமையும் பயனின்மையும் கருதிக் கூறியபடியாம். தோழன் : சுதஞ்சணன். (௲௦௪)

௧௧௫௫. தோழனுந் தேவி மார்தங் குழாத்துளான் றளும்பு முந்நீ
ரேழ்தரு பருதி தன்மே லிளம்பிறை கிடந்த தேபோற்
றாழ்தகை யார மார்பிற் சீவகன் குணங்க டம்மை
யாழெழீஇப் பாடக் கேட்டோ ரரம்பையைச் சேர்ந்தி
[ருந்தான்.

(இ - ள்.) தோழனும் தேவிமார்தம் குழாத்துளான் - சுதஞ்சணனும் தன் மனைவியரின் குழாத்திலே யிருப்பவன்; துளும்பும் முந்நீர் ஏழ்தரு பருதி தன்மேல் இளம்பிறை கிடந்ததே போல் - அலைகலையுடைய கடலில் எழுதரும் இளங்கதிரின் மேல் இளம்பிறை கிடந்தாற் போல; தாழ்தகை ஆரம் மார்பின்- தங்கின முத்தார மார்பினையுடைய; சீவகன் குணங்கள் தம்மை- சீவகனின் பண்புகளை; ஓர் அரம்பையைச் சார்ந்து - அரம்பை யொருத்தியைக் கொண்டு; யாழ் எழீஇப் பாடக் கேட்டிருந் தான் - யாழிசைத்துப் பாடக் கேட்டிருந்தான்.

(வி - ம்.) ஏழ்தரு : எழுதரு என்பதன் விகாரம்.

ஏழ்தரும் - எழுதரும்; தோன்றுகின்ற. பருதி - ஞாயிறு; இது மார்பினுக்குவமை. பிறை-முத்தாரத்திற்குவமை. தோழனும் அவ்வமயம் பாடக்கேட்டு இருந்தான் என்க. (௩0௫)

வேறு

௧௧௫௬. வயிரம் வேய்ந்த மணிநீண்முடி வாலொளி வானவன்
செயிரிற் றீர்ந்த செழுந்தாமரைக் கண்ணிட னாடலு
முயிரனை னைநினைந் தானுற்ற தோதியி னோக்கினான்
மயிலனார்க் குப்படி வைத்தவன் மால்விசும் பேறினான்.

(இ - ள்.) வயிரம் வேய்ந்த நீள் மணிமுடி-வயிரம் பதித்த நீண்ட மணிமுடியினையும்; வால் ஒளி - வெள்ளிய நிறத்தினையும் உடைய; வானவன் - சுதஞ்சணனது; செயிரின் தீர்ந்த செழுந் தாமரைக் கண் - குற்றத்தினின்றும் நீங்கிய வளமிகு தாமரைக் கண்களில்; இடன் ஆடலும் - இடக்கண் ஆடின அளவிலே; உயிர் அனானை நினைந்தான் - (தனக்குத் தீங்குறுமோ என்று நினையாமல்) உயிரனைய சீவகனை எண்ணினான்; உற்றது ஓதியின் நோக்கினான் - நேர்ந்ததை மனவுணர்வாலே அறிந்தான்; மயில னார்க்குப் படிவைத்து-மயிலனைய மனைவியர்க்குத் தன் உருவைப் புனைந்து வைத்து; அவன் மால் விசும்பு ஏறினான் - தன் ஊர்தி யாகிய பெரிய முகிலின்மிசை அமர்ந்தான்.

(வி - ம்.) தான் இருந்த அவை குலைவுறாமற் படிவம் வைத்தான். படி: படிவம் என்பதன் விகாரம். (௩0௬)

ககருஎ. இடியு மின்னும் முழக்கும்மிவற் றானுல கந்நிறைந்
தோடியு மூழி யிவணின்றுறு கால்வரை கீழ்ந்தென
நடலை நோக்கிக் கதிர்நாணுவ தொப்ப மறைந்தபின்
கடலை யேந்தி நிலத்திட்டென மாரி கலந்ததே.

(இ - ள்.) உறுகால் வரை கீழ்ந்தென - பெருங்காற்று மலையைப் பிளந்ததாக; மின்னும் இடியும் முழக்கும் இவற்றால் உலகம் நிறைந்து - மின்னாலும் இடியாலும் இடிமுழக்காலும் உலகெங்கும் அம் முகில் நிறைய; நடலை நோக்கிக் கதிர் நாணுவது ஒப்ப மறைந்த பின் - இப் பொய்த் தோற்றத்தைப் பார்த்து, நம்மையின்றியே ஊழி நிகழ்ந்ததென்று ஞாயிறு நாணுவது போல மறைந்த பிறகு; ஓடியும் ஊழி இவண் இன்று என - உலகம் அழியும் ஊழி இங்கே இப்போது நிகழ்ந்தது என்னும் படி; கடலை ஏந்தி நிலத்து இட்டு என - கடலையெடுத்து நில மிசை யிட்டாற்போல; மாரி கலந்தது - மழை கலந்தது.

(வி - ம்.) நிறைந்து - நிறைய; கீழ்ந்து - கீழ: எச்சத் திரிபு.

இடியும் மின்னும் முழக்குமாகிய இவற்றான் என்க. உறுகால் - பெருங்காற்று. நடலை - பொய். கதிர் - ஞாயிறு. (௩0எ)

ககருஅ. விண்ணு மண்ணும் மறியாதுவி
லங்கோடு மாந்தர் தங்
கண்ணும் வாயும் மிழந்தாங்கடல்
கொண்டது காண்கெனப்
பெண்ணு மாணும் மிரங்கப்
பெருமான்மகன் சாமியை
யண்ண லேந்தி யகலம்புலிக்
கொண்டெழுந் தேகினன்.

(இ - ள்.) விலங்கொடு மாந்தர் - விலங்குகளும் மக்களும்; விண்ணும் மண்ணும் அறியாது - விண்ணெனவும் மண்ணெனவும் அறியாமல்; தம் கண்ணும் வாயும் இழந்து - கண்ணையும் வாயையும் இழக்குமாறு; ஆம் கடல் கொண்டது காண்க என - மேல் ஊழியிலே வரும் கடல் இப்போது கொண்டதைப் பார்ப்பீராக என்று கூறி; பெண்ணும் ஆணும் இரங்க - பெண்டிரும் ஆடவரும் வருந்த; பெருமான் மகன் சாமியை - சச்சந்தன் மகனை சீவகசாமியை; அண்ணல் ஏந்தி-சுதஞ்சணன் எடுத்து; அகலம் புலிக் கொண்டு - மார்பிலே தழுவிக் கொண்டு; வானில் எழுந்து ஏகினன் - வானில் உயர்ந்து சென்றான்.

(வி - ம்.) விலங்குகள் மேயாமையின் வாயிழந்தன; 'மாமேயல் மறப்ப' (நெடுநல். உ) என்றார் பிறரும். (௩0அ)

ககருசு. குன்றுண் டோங்கு திரடோளவற்
கொண்டெழுந் தேகலு
நன்றுண் டாக வெனநன்னுதல்
வாழ்த்தினள் வாழ்த்தலு
மொன்றுண் டாயிற் றவளுள்ளழி
நோயுறு காளையை
யென்றுண் டாங்கொல் லினிக்கட்படு
நாளெனுஞ் சிந்தையே.

(இ - ள்.) *குன்று உண்டு ஓங்கு திரள் தோளவன் - மலையை அடக்கி வளர்ந்த திரண்ட தோளையுடைய சீவகனை; கொண்டு எழுந்து ஏகலும் - சுதஞ்சணன் கொண்டு போகின்ற அளவில்; நன்னுதல் நன்றுண்டாக என வாழ்த்தினள் - தத்தை நலம் வருக என்று வாழ்த்தினள்; வாழ்த்தலும் - வாழ்த்தின அளவிலே; இனி உயர் காமனைக் கண்படும் நாள் என்று உண்டாம்கொல் - இனி உயர்ந்த சீவகனைக் கண்ணுற் காணும் காலம் எப்போது உண்டாகுமோ?; எனும் சிந்தை - என்னும் நினைவாகிய; அவள் உள் அழி நோய் ஒன்று உண்டாயிற்று - அவள் மனம் வருந்தும் நோய் ஒன்று நேர்ந்தது.*

(வி - ம்.) *குன்று உண்டு: உண்டு: உவம வாசகம். நாளென்றது காலத்தை உணர்த்தும்.* (௩0௧)

ககசுO. சந்தமா லைத்தோகை தாழ்ந்துசாந் தங்கமழ் பூமியுள்
வந்தவிண் ணோர்களை வாழ்த்தியேத் திம்மலர் மாலைதூ
யெந்தை மார்க ளேழுகென்ன வேகவிடுத் தாள்குரல்
சிந்தை செய்யுஞ் சிறகர்க்கிளி தோற்குமந் தீஞ்சொலாள்.

(இ - ள்.) *சந்த மாலைத்தொகை தாழ்ந்து சாந்தம்கமழ் பூமியுள் - நிறமிகும் மாலைத்திரள் தூக்கப்பெற்றுச் சந்தனங் கமழ்கின்ற தான் வழிபட்ட நிலத்திலே; வந்த விண்ணோர்களை மலர்மாலைதூய் வாழ்த்தி ஏத்தி - வந்த வானவர்களை மலர்மாலை தூவி வாழ்த்திக் கொண்டாடி; எந்தைமார்கள் எழுக என்ன - எந்தையர்காள்! போவீராக என்று; குரல் சிந்தை செய்யும் - யாழிற் குரல் என்னும் நரம்பு தான் இத்தன்மை பெறவேண்டும் என்று கருதுகின்ற; சிறகர்க்கிளி தோற்கும் - சிறகினையுடைய கிளி தோல்வியுறுகின்ற; அம் தீ சொலாள்-அழகிய இன்மொழித் தத்தை; ஏக விடுத்தாள் - போக விடுத்தாள்.*

(வி - ம்.) *குரல் சிந்தை செய்யும் தீஞ்சொல், சிறகர்க்கிளி தோற்கும் தீஞ்சொல் எனக் கூட்டுக தான் வழிபட்ட வானவர் செய்து முடிக்கும் வேலை, வேறு வகையால் முடிதலின், அவரைப் போக வென்றாள்.* (௩௧0)

வேறு

௧௧௬௧. மலைத்தோகை யானை மன்னன்
மைத்துனன் மதன னென்பான்
கோலத்தோகை வேலி ஞனைக்
கொல்லிய கொண்டு போந்தா
னலத்தகை யவனைக் காணு
னஞ்சுயிர்த் தஞ்சி நோக்கிச்
சிலைத்தொழிற் றடக்கை மள்ளர்க்
கிற்றெனச் செப்பு கின்றான்.

(இ - ள்.) மலைத்தொகை யானை மன்னன் மைத்துனன் மதனன் என்பான்-மலைக் கூட்டம் போன்ற யானைக்கூட்டத்தை யுடைய வேந்தனின் மைத்துனனாகிய மதனன் என்பவனாகிய; கொலைத் தொகை வேலினானைக் கொல்லிய கொண்டு போந்தான்- கொலைகளைக் கணக்கிடும் வேலேந்திய சீவகனை அரசன் கொல்வ தற்குக் கொண்டு வந்தான்; நலத்தகையவனைக் காணான் - நல மிகும் பண்புடைய சீவகனைக் காணாமல்; நஞ்சு உயிர்த்து அஞ்சி நோக்கி - நஞ்செனப் மூச்சுவிட்டு அச்சத்துடன் பார்த்து; சிலைத் தொழில் தடக்கை மள்ளர்க்கு - விற்றொழில் புரியும் பெருங்கை வீரர்கட்கு; இற்றெனச் செப்புகின்றான்-இவ்வாறு கூறுகின்றான்.

(வி - ம்.) 'மன்னற்கு' என்னும் பாடம் பொருட் பொருத்தமில்லை.

மலைத்தொகை போன்ற யானைத்தொகையையுடைய மன்னன் என்க. தொகை - கூட்டம் மன்னன் - ஈண்டுக் கட்டியங்காரன். மைத்துனனாகிய மதனன் என்பான் என்க. கொலைத்தொகை வேலினான்- கொலைத்தொழின் மிக்க கூட்டமாகிய வேற்படையையுடையவன் என்க. வேலினான் - ஈண்டுச் சீவகன். (௩௧௧)

௧௧௬௨. மன்னனாற் சீறப் பட்ட
மைந்தனைக் கொல்லப் போந்தா
மென்னினிச் சொல்லிச் சேறு
மென்செய்தும் யாங்க ளெல்லா
மின்னது பட்ட தென்றா
லெரிவிளக் குறுக்கு நம்மைத்
துன்னுபு சூழ்ந்து தோன்றச்
சொல்லுமின் செய்வ தென்றான்.

(இ - ள்.) மன்னனால் சீறப்பட்ட மைந்தனைக் கொல்லப் போந்தாம் - அரசனாற் சினக்கப்பெற்ற சீவகனைக் கொல்லக் கைக்கொண்டு வந்த நாம்; இன்னது பட்டது என்றால் நம்மை எரிவிளக்குறுக்கும் - யாம்பட்ட துன்பம் இத்தன்மைத்தென்று

கூறின் நம்மை நடைவிளக்கு எரிப்பான்; யாங்கள் இனி என் சொல்லிச் சேறும் - நாம் இனி யாது கூறிச் செல்வோம்?; என் செய்தும்? - யாது புரிவோம்?; துன்னுபு சூழ்ந்து செய்வது தோன்றச் சொல்லுமின் என்றான் - எல்லோரும் ஒன்றுகூடி ஆராய்ந்து செய்யக்கடவதை விளங்கச் சொல்லுங்கோள் என்றான்.

(வி - ம்.) மன்னன்: கட்டியங்காரன். மைந்தன்: சீவகன். சேறும் - செல்வேம். செய்தும்-செய்வேம். தன் கையறவு தோன்ற என் சொல்லிச் சேறும் என்செய்தும் என்றான். எரி விளக்குறுத்தல் குற்றஞ் செய்தார் தலையில் விளக்கேற்றிவைத்து ஊர்வலஞ் செய்விக்குமொரு தண்டனை. துன்னுபு - கூடி (௩௧௨)

௧௧சுங. வாழ்வதோ ருபாய நாடி மதியுடம் பட்டு வல்லே
சூழ்வினை யாள ராங்க ணொருவனைத் தொடர்ந்து பற்றிப்
போழ்படப் பிளந்து வாளிற் புரட்டியிட் டரியக் கண்டே
யாழ்கல மாந்தர் போல வணிநக ரழுங்கிற் றன்றே.

(இ - ள்.) சூழ்வினையாளர் - ஆராய்ச்சி செய்தோர்; வாழ்வதோர் உபாயம் நாடி - தாம் உயிர் வாழும் ஒரு சூழ்ச்சியை எண்ணி; மதி உடம்பட்டு - அறிவு ஒன்றுபட்டு; ஆங்கண் ஒருவனை வல்லே தொடர்ந்து பற்றி - ஆங்குச் சென்ற ஒருவனை விரைந்து பின் சென்று பற்றி; வாளின் போழ்படப் பிளந்து - வாளால் வகிர்படப் பிளந்து; புரட்டியிட்டு அரிய - (வடிவு தெரியாமற்) புரட்டி யிட்டுவைத்து அரிதலைப் பார்த்து; ஆழ்கலம் மாந்தர் போல - கடலில் அமிழும் கலத்தில் உள்ள மக்களைப் போல; அணிநகர் அழுங்கிற்று - அழகிய நகரம் வருந்தியது.

(வி - ம்.) சூழ்வினையாளர் நாடி உடம்பட்டு ஒருவனைப் பற்றிப் பிளந்து புரட்டி அரியக் கண்டு நகர் அழுங்கிற்று என்க. வாழ்வதோர் உபாயம் - தாங்கள் கட்டியங்காரன் சினத்திற் றப்பி உயிர்வாழ்தற்குரியதொரு சூழ்ச்சி. ஒருவனை என்றது ஏதிலான் ஒருவனை என்பது பட நின்றது. அணிநகர்: ஆகுபெயர். (௩௧௩)

௧௧சுச. காய்சின வெகுளி வேந்தே
களிற்றேடும் பொருத காளை
மாசனம் பெரிது மொய்த்து
மழையினே டிருளுங் காற்றும்
பேசிற்றன் பெரிதுந் தோன்றப்
பிழைத்துய்யப் போத லஞ்சி
வாசங்கோ டாரி ஞனை
மார்புபோழ்ந் துருட்டி யிட்டேம்

(இ - ள்.) காய்சின வெகுளி வேந்தே! - சுடுகின்ற சீற்ற முடைய அரசே!; களிற்றெடும் பொருத காளை - நம் பட்டக் களிற்றுடன் போர் செய்த சீவகனுடைய; மாசனம் பெரிதும் மொய்த்து - பெருஞ் சுற்றத்தார் நெருங்கி மொய்ப்ப; மழையி னேடு இருளும் காற்றும் - மழையும் இருளும் காற்றுமாக; பேசின் பெரிதும் தோன்ற - கூறுமிடத்து மிக்குத் தோன்றின அளவிலே; பிழைத்து உய்யப் போதல் அஞ்சி - எங்களிட மிருந்து தப்பி அவன் உய்ந்து போதற்கு அஞ்சி; வாசம்கொள் தாரினனை-மணங்கமழ் மாலையுடைய அவனை; மார்பு போழ்ந்து உருட்டியிட்டேம் - மார்பைப் பிளந்து தள்ளி விட்டோம்.

(வி - ம்.) அரசனிடம் சென்று இங்ஙனம் மதனன் முதலியோர் கூறினர் என்று கொள்க.

காய்சினம்: வினைத்தொகை. காளை: சீவகன். மாசனம் - பெரிய மாந்தர் கூட்டம், என்றது சீவகன் சுற்றத்தாரை. மொய்த்து - மொய்ப்ப. பேசிற்றன் என்புழி, தான் அசை. தாரினனை: சீவகனை.

௧௧௯௫. அருள்வலி யாண்மை கல்வி யழகறி விளமை யூக்கந்
திருமலி யீகை போகந் திண்புகழ் நண்பு சுற்ற
மொருவரிவ் வுலகில் யாரே சீவக னுக்கு நீரார்
பேரிதரி திவனைக் கொன்றாய் பெறுகெனச் சிறப்புச்
[செய்தான்.

(இ - ள்.) அருள் வலி ஆண்மை கல்வி அழகு அறிவு இளமை ஊக்கம் திருமலி ஈகை போகம் திண்புகழ் நண்பு சுற்றம்- அருளும் மெய்வலியும் ஆளுந்தன்மையும் கல்வியும் அழகும் இயற்கை அறிவும் இளமையும் முயற்சியும் செல்வம் மிகும் கொடையும் எல்லாவற்றையும் நுகரும் பேறும் திண்ணிய புகழும் நட்பும் உறவும் ஆகியவற்றில்; இவ்வுலகிற் சீவகன் ஒக்கும் நீரார் ஒருவர் யாரே? - இவ்வுலகிலே சீவகனைப் போன்றவர் ஒருவரு மிலர்; பெரிது அரிது இவனைக் கொன்றாய் - பெரிதும் அரிய தாக இவனைக் கொன்றனை; பெறுக எனச் சிறப்புச் செய்தான் - நீ இவற்றைப் பெற்றுக் கொள்க என்று மதனனுக்குச் சிறப்புப் பல செய்தனன்.

(வி - ம்.) யாரே: ஏ: எதிர்மறை இடைச்சொல்.

திருமலிதற்குக் காரணமான ஈகை என்க. போகம் - ஈண்டுக் காம நுகர்ச்சி. உலகுள்ள காலமெல்லாம் நிலையுதலின் திண்புகழ் என்றான். நீரார் - தன்மையுடையோர். இதனால் கட்டியங்காரன் சீவகன்பால் அழுக்காறுடையனாதற்குரிய காரணங்கள் தொகுத்துக் கூறப்பட்டன. (௩௧௯)

தணமாலையார் இலம்பகம் முற்றிற்று.

ஆகக் கவி - ௧௧௯௬.

## ரு. பதுமையார் இலம்பகம்

### (கதைச் சுருக்கம்)

இவ்வாறு சுதஞ்சணனோடிருந்த சீவகன் நாடுகள் பலவற்றினுஞ்சென்று ஆங்காங்குள்ள காட்சிகளைக் காணவிரும்பினன். இவ்விருப்பத்தைச் சுதஞ்சணனுக்குக் கூறினன். அதுகேட்ட சுதஞ்சணன் சீவகனுக்கு நெறியின் இயல்பு கூறி மேலும் காமனுங் காமுறப்படும் இன்குரல் தருவதும், பாம்பு முதலியவற்றால் உண்டாகுந் தீங்குகளையும் நோய்களையும் தீர்ப்பதும், கருதிய உடம்பினைத் தருவதுமாகிய மூன்று மறைமொழிகளைச் செவியறிவுறுத்தனன். பின்னர்ச் சீவகனை இனிதினேந்திக்கொண்டு இழிந்து, நிலவுலகில் விடுத்துச் சென்றான்.

சீவகன் சுதஞ்சணன் கூறிய நெறிபற்றிச் சென்றனன். வழியில் கொலைத்தொழிலை மேற்கொண்டுழன்ற வேடனொருவனைக் கண்டு அவனுக்கு உறுதிமொழிகூறி நன்னெறிப்படுத்தனன். அப்பால் செல்லுங்கால் காட்டுத் தீயால் வளைப்புண்ட யானைத்திரளைக் காப்பாற்றினன். பின்னர் அரனபாதம் என்னும் மலையை எய்தி ஆண்டு அருகக்கடவுளை வணங்கினன். சாரணர்களைக் கண்டு வணங்கினன். பின்னர் பல்லவ நாட்டிலுள்ள சந்திராபம் என்னும் நகரை அடைந்தனன். அந்நகரத்தரசனாகிய தனபதியோடும், அவன் மகனான உலோகபாலனோடும் கேண்மை கொண்டனன். அவ்வரசன் மகளாகிய பதுமை என்பாளைப் பாம்பு தீண்டியதாக; அவளுற்ற விடநோய் தீர்த்து அவளை மணந்தனன். அவளோடு இரண்டு திங்கள் இன்புற்று அந்நகரத்தே வதிந்தனன். பின்னரும் நாடுகாணும் வேட்கை மிகுதலாலே நள்ளிரவிற் பதுமையைப் பிரிந்து வேற்றுருக்கொண்டு அந்நகரத்தினின்றும் புறப்பட்டுச் சென்றனன்.

சீவகன் பிரிவால் பதுமை பெரிதும் வருந்தினள். தன் தோழிமாருள் ஒருத்தி தேற்ற ஒருவாறு தேறியிருந்தாள். தனபதி மன்னன் தன் மகள் துயரம் பொறானாய்ச் சீவகனைத் தேடிக்கொணர்தற்குச் சிலரை ஏவினன். அவர்கள் சீவகனையாண்டுந் தேடி ஓரிடத்தே கண்டு "நின்போன்ற இளமையும் வடிவுமுடையான் ஓர் ஏந்தலை நீ யாண்டேனும் கண்டதுண்டோ?" என்று வினவினர். அதுகேட்ட சீவகன், "நண்பீர்! நீயிர் தேடா நின்ற அக்காதலனை ஒன்பதாந் திங்களிலே காண்பீர்! இவ்வுண்மையை நும் மன்னனுக்குக் கூறுமின்!" என்று கூறிவிடுத்தனன். அவரும் சென்று அரசனுக்கு அந்நிகழ்ச்சியினை அறிவுறுத்தனர். சீவகன் பின்னர் அவ்விடத்தினின்றும் புறப்பட்டு ஒரு திசையே செல்லா நின்றனன்.

ககசுசு. வீட்டருஞ் சிறையிற் றேவன்
விடுத்துயக் கொள்ளப் பட்ட
கோட்டமில் குணத்தி னன்போ
யென்செய்கின் றன்கோ லென்னிற்
கூட்டரக் கெறிந்த பஞ்சிற்
கூடிய பளிங்கிற் றோன்றுந்
தீட்டரும் படிவ மன்னன்
றிறங்கிளந் துரைத்த மன்றே.

(இ - ள்.) வீடு அருஞ் சிறையில் தேவன் விடுத்து உயக் கொள்ளப்பட்ட - எல்லா வழியானும் விடுவித்தற்கரிய சிறையிலிருந்து சுதஞ்சணனால் விடுவித்து வாழ்விக்கப் பெற்ற; கோட்டம் இல் குணத்தினன் போய் என் செய்கின்றான் என்னின் - குற்றம் அற்ற பண்புடைய சீவகன் (அவனுடன்) சென்று என்ன செய்கிறான் என்றால்; கூட்டு அரக்கு எறிந்த பஞ்சின் - செவ்வரக்கு ஊட்டிய பஞ்சினாலே; கூடிய பளிங்கில் தோன்றும் - அப் பளிங்கினிடத்தே தோன்றுகிற; தீட்ட அரும் படிவம் அன்னான் திறம் - எழுதற்கரிய படிவத்தைப் போன்ற சீவகனின்; நிலையை கிளந்து உரைத்தும் - முற்படச் சுதஞ்சணன் செயலை யுரைத்துப் பின்னர் உரைப்போம்.

(வி-ம்.) இந்நிலையினும் ஆசிரியனுக்குரைத்த மொழி தப்பாமையிற் சீவகனைக் 'கோட்டம் இல் குணத்தினன்' என்றார்.

பிறவழிகளால் போக்குதற்கரிய சிறை என்பார் வீட்டருஞ்சிறை என்றார். விடுத்து - விடுவித்து. கோட்டம் - குற்றம். கூட்டு அரக்கெறிந்த பஞ்சு - செவ்வரக்குக் கூட்டிய ஊட்டின பஞ்சு என மாற்றுக. பளிங்கைக் கூடிய பஞ்சாலே அப்பளிங்கிடத்தே தோன்றும் படிவத்தை ஒப்பான்—சீவகன்.

வண்தளிர் என்னும் (கஉஉ௫) செய்யுள்காறும் சுதஞ்சணன் செய்தி கூறப்படும். (க)

ககசுஎ. விலங்கிவில் லுமிழும் பூணன்
விழுச்சிறைப் பட்ட போழ்து
மலங்கலந் தாரி னன்வந்
தருஞ்சிறை விடுத்த போழ்தும்
புலம்பலு மகிழ்வு நெஞ்சிற்
பொலிதலு மின்றிப் பொன்னார்ந்
துலங்கலந் துயர்ந்த தோளா
னூழ்வினை யென்று விட்டான்.

(இ - ள்.) விலங்கி வில் உமிழும் பூணன் - விட்டுவிட்டொளியைச் சிந்தும் அணிகலன்களையுடைய கட்டியங்காரனின்; விழுச் சிறைப்பட்ட போழ்தும் - சீரிய சிறையிலே அகப்பட்ட காலத்தும்; அலங்கல் அம் தாரினான் வந்து - அசையும் அழகிய மாலையை யுடைய சுதஞ்சணன் போந்து; அருஞ்சிறை விடுத்த போழ்தும் - அரிய சிறையிலிருந்து விடுவித்த காலத்தும்; பொன் ஆர்ந்து உலம் கலந்து உயர்ந்த தோளான் - பொன் அணி நிறைந்து, உருண்ட கல்லென இறுகி உயர்ந்த தோள்களையுடைய சீவகன்; புலம்பலும் மகிழ்வும் நெஞ்சிற் பொலிதலும் இன்றி - வருந்தலும் மகிழ்தலும் உள்ளத்திற் பொருந்துதலு முண்டாகாமல்; ஊழ்வினை என்று விட்டான் - (இரண்டையும்) பழவினைப் பயன் என்றே கருதி நீக்கிவிட்டான்.

(வி - ம்) அன்னத்தைச் சிறை செய்த பயனாற் கிடைத்ததாகலின் 'சீரிய சிறை' என்றார். பொலிதலும்: உம் இழிவு சிறப்பு. சாரணரும் பின்னர், சிறைப்பட்டனை போலும்' (சீவக உஅகூ0) என்றனர்.

இதனானும் சீவகனுடைய இன்பத்திற்களிக்காமலும் துன்பத்திற் றுளங்காமலும் இருத்தற்குக் காரணமான மெய்யுணர்ச்சி விதந்தோதப் பட்டமையுணர்க. விழுச்சிறை – இடும்பையுடைய சிறை எனினுமாம்.

" விழுமம் சீர்மையுஞ் சிறப்பும் இடும்பையும் '' என்பது தொல்காப்பியம் (உரி. ௬௭.) (உ)

கககூஅ. வானர முகள நாக மலர்துதைந் தொழுக வஞ்சித்
தேனிரைத் தெழுந்து திங்க ளிறலெனச் சென்று மொய்க்குங்
கானம ரருவிக் குன்றிற் காய்கதிர் சுமந்தோர் திங்கண்
மேனிமிர்ந் தேறி யாங்குத் தேவன்வெற் பேறி னானே.

(இ - ள்.) நாக மலர் துதைந்து ஒழுக - நாக மலர் தம்முள் நெருங்கித் தேன் வாரும்படி; வானரம் உகள - குரங்குகள் பாய்தலின்; தேன் அஞ்சி இரைத்து எழுந்து - வண்டுகள் அஞ்சி ஆரவாரித்து எழுந்து; திங்கள் இறால் எனச் சென்று மொய்க்கும் - திங்களைத் தேனடையென்று மயங்கிப் போய் மொய்க்கும் வளமுடைய; கான் அமர் அருவிக் குன்றில் - காடமைந்த, அருவி வீழும் வெள்ளி மலையிலே; காய்கதிர் சுமந்து ஓர் திங்கள் மேல் நிமிர்ந்து ஏறி யாங்கு - வெம்மையுறும் ஞாயிற்றைச் சுமந்து ஒரு திங்கள் மேலே நிமிர்ந்து ஏறினாற் போல; தேவன் வெற்பு ஏறினான் - சுதஞ்சணன் சீவகனைச் சுமந்து சந்திரோதய மலைமீது ஏறிச் சென்றான்.

(வி - ம்.) 'ஒழுக' என்பதற்குத் தேன் எனும் எழுவாயை வருவிக்க.

நாகமலர் - சுரபுன்னைப்பூ. துதைந்து - நெருங்கி. இறால்-தேனடை. கான் - காடு. குன்று - ஈண்டு வெள்ளிமலை. சுதஞ்சணனுக்குத் திங்களும் சீவகனுக்கு ஞாயிறும் உவமைகள். (௩)

௧௧௬௯. திங்களைத் தெளித்திட் டன்ன
பாற்கடற் றிரைசெய் தெண்ணீர்
வெங்கள்விட் டலர்ந்த கண்ணி
விண்ணவ னுரிமை தன்னான்
மங்கல வகையி னாட்டி
மணியணி கலங்கள் சேர்த்திப்
பங்கய நெடுங்க ணானைப்
பவித்திர குமர னென்றான்.

(இ - ள்.) வெம் கள் விட்டு அலர்ந்த கண்ணி விண்ணவன்-விருப்பம் தரும் தேனைச் சொரிந்து மலர்ந்த மாலையணிந்த சுதஞ்சணன்; பங்கய நெடுங்கணானை - தாமரை மலரனைய கண்களையுடைய சீவகனை; திங்களைத் தெளித்திட் டன்ன பால் திரை செய் கடல் தெள்நீர் - திங்களைக் கரைத்தாற் போன்ற அலையுடைய பாற்கடலிலிருந்து தெளிந்த நீரைக் கொண்டு வந்து; உரிமை தன்னால் மங்கல வகையின் ஆட்டி - உரிமை மகளிரைக்கொண்டு மங்கல விதிப்படி முழுக்காட்டி; மணி அணிகலங்கள் சேர்த்தி - மணிகளிழைத்த அணிகலங்களையும் பூட்டி; பவித்திரகுமரன் என்றான் - தூய மகன் என்று பாராட்டினான்.

(வி - ம்.) சிறைப் பாவம் நீங்கினதாற் 'பவித்திர குமரன்' என்றான்.

விண்ணவன் - சுதஞ்சணன். உரிமை - மனைவிமார். நெடுங்கணானை - சீவகனை. பவித்திரம் - தூய்மை. (௪)

௧௧௭௦. பொன்னணி காம்புசெய்த பொழிகதிர்த் திங்கள் போலும்
பின்னிய முத்த மாலைப் பிணையறாழ் குடையி னீழற்
கன்னியர் கவரி வீசக் கனமணிக் குழைவில் வீச
வின்னிசைக் கூத்து நோக்கி யிருந்தனன் றிலக மன்னான்.

(இ - ள்.) பொன் அணி காம்பு செய்த பொழி கதிர்த் திங்கள்போலும்-பொன்னால் ஆக்கிய காம் பொன்றினைச் சேர்த்த, நிலவினைச் சொரியும் திங்களைப் போன்ற; முத்தமாலை பின்னிய பிணையல் தாழ் குடையின் நீழல் - சல்லியும் தூக்குமாக முத்து மாலை பின்னப்பட்ட, மலர்மாலை யணிந்த குடையின் நீழலிலே; கன்னியர் கவரி வீச - கன்னிப் பெண்கள் கவரிகொண்டு வீச; கன மணிக்குழை வில் வீச - பெரிய மணிக்குழை ஒளிவிட; இன் இசைக் கூத்து நோக்கி - இனிய இசையுடன் கூடிய ஒரு நாடகத்தைப் பார்த்து; திலகம் அன்னான் இருந்தனன் - சீவகன் வீற்றிருந்தான்.

(வி - ம்.) பொன் அணி காம்புசெய்த பொழி கதிர்த் திங்கள்: இல்பொருளுவமை.

சல்லி பின்னிய முத்துமாலை எனக் கொள்க. பிணையல் - ஈண்டுத் தூங்கவிடப் பட்ட முத்தமாலை. இன்னிசைக்கூத்து - இனிய இசையோடு கூடிய கூத்து. திலகமன்னன் - சீவகன். (௯)

௧௧௭௧. இருமலர்க் குவளை யுண்கணிமைப்பிலாப் பயத்தைப் பெற்ற
வரிமலர்த் தாரி னான்ற னழகுகண் டளிய வென்னாத்
திருமலர்க் கோதை யைம்பாற் றேவியர் தொடர்பு கேட்ப
வெரிமணிப் பூணி னானு மின்னண மியம்பினானே.

(இ - ள்.) திரு மலர்க் கோதை ஐம் பால் தேவியர் - அழகிய மலர்மாலை அணிந்த கூந்தலையுடைய மனைவியர்; இரு மலர்க் குவளை உண்கண் - கரிய குவளை மலரனைய எம் மைதீட்டிய கண்கள்; அரி மலர்த்தாரினான் தன் அழகு கண்டு - வண்டுகள் மொய்க்கும் மலர்மாலையினானுடைய அழகினைக் கண்டு; இமைப்பு இலாப் பயத்தைப் பெற்ற - (இதுவரை) இமையாமல் இருந்த பயனைப் பெற்றன; அளிய என்னா - அளிக்கத் தக்கன என்று முகமன் உரைத்து; தொடர்பு கேட்ப - எங்ஙனம் நட்புண்டாயதென்று வினவ; எரி மணிப் பூணினானும் இன்னணம் இயம்பினான் - ஒளி விடும் மணிக்கலன்கள் அணிந்த சுதஞ்சணனும் இவ்வாறு கூறினான்.

(வி - ம்.) இருமை - கருமை. நாய்ப் பிறப்பை மறையாமற் கூறலின் 'இன்னணம்' என்றார்.

இருங்குவளைமலர் போன்ற உண்கண் என்க. வித்தியாதரர் ஆகலின் கண்ணிமையாதிருந்தன. இதுகாறும் அவை வாளா இமையாதிருந்தன. இமையாமல் நோக்கி மகிழ்தற்குரிய இவன் அழகினை அவை இப்பொழுது இடையறாது நுகர்தலின் இமையாமையின் பயனையும் இப்பொழுது எய்தின என்றவாறு. தொடர்பு - நட்பு. பூணினான் : சுதஞ்சணன். (௰)

வேறு

௧௧௭௨. பிணிக்குலத் தகவயிற் பிறந்த நோய்கெடுத்
தணித்தகை யுடம்பெனக் கருளி நோக்கினான்
கணிப்பருங் குணத்தொகைக் காளை யென்றனன்
மணிக்கலத் தகத்தமிர் தனைய மாண்பினான்.

(இ - ள்.) மணிக் கலத்து அகத்து அமிர்து அனைய மாண்பினான் - மாணிக்கக் கலத்தில் ஏந்திய அமிர்தம் போன்ற தகவினனான சுதஞ்சணன்; கணிப்பு அருங்குணத் தொகைக் காளை - அளவிடற்கரிய பண்பினையுடைய சீவகன்; பிணிக் குலத்து அகவை

யின் பிறந்த நோய் கெடுத்து - (நான்) நோய்த் திரளையுடைய விலங்குத் தொகுதியின் அகத்திலே பிறந்த நோயை நீக்கி; அணித் தகை உடம்பு எனக்கு அருளி நோக்கினன் என்றனன் - அழகினைத் தன்னிடத்தே அடக்கிய தெய்வ வுடம்பை எனக்கு நல்கி இந் நிலையிலேயே பார்த்தான் என்றனன்.

(வி - ம்) பிணிக்குலம் - நோய்த்திரள்; எனவே, விலங்காயிற்று. அந் நோய்க் கெல்லாம் அகம் என்றது நாயை; 'எரிநீரவே நரகம் அந் நரகத் துன்பத் - தொருநீர வே விலங்கு தாமுடைய துன்பம்' (சீவக. உஎஎஎ) என்பர் மேலும் மணிக்கலத்து அமிர்தென்றார், வடிவிற்குத் தக்க கலங்காத குணம் உண்டாதலின். (எ)

கஉஎ௩. கடற்சுற வுயரிய காளை யன்னவ
னடற்கரும் பகைகெடுத் தகன்ற நீணில
மடத்தகை யவளோடும் வதுவை நாட்டிநாங்
கொடுக்குவமெனத் தெய்வ மகளிர் கூறினார்.

(இ - ள்.) கடல் சுறவு உயரிய காளை அன்னவன் - கடலில் வாழும் சுறுமீனைக் கொடியிற்கொண்ட காமனைப் போன்றவனுக் குற்ற; அடற்கு அரும்பகை கெடுத்து - வெல்லுதற்கரிய பகையைக் கெடுத்து; அகன்ற நீள் நிலம் மடத் தகையவளொடும் வதுவை நாட்டி - பரப்புடைய பெருநிலமாகிய மங்கையை மணம் புரிவித்து; நாம் கொடுக்குவம் என - நாம் கொடுப்போம் என்று; தெய்வ மகளிர் கூறினார் - அவன் மனைவியராகிய தெய்வ மடந்தையர் செப்பினர்.

(வி - ம்.) மடத்தகையவளொடும்: ஒடு: இரண்டன் பொருளில் மூன்றன் உருபு வந்ததால் உருபுமயக்கம். உம்: அசை; நிலமகளொடு திருமகளும் என எச்சவும்மையுமாம். (அ)

கஉஎச. செருநிலத் தவனுயிர் செகுத்து மற்றெனக்
கிருநில மியைவதற் கெண்ணல் வேண்டுமோ
திருநிலக் கிழமையுந் தேவர் தேயமுந்
தருநிலத் தெமக்கெனிற் றருகுந் தன்மையீர்.

(இ - ள்.) திருநிலக் கிழமையும் தேவர் தேயமும் நிலத்து எமக்குத் தாரும் எனின் - இன்ப நிலத்துரிமையையும் வானவர் உலகையும் இந்நிலத்தே எமக்குத் தாரும் என்றால்; தருகும் தன்மையீர்! - கொடுக்கும் இயல்புடையீர்!; செருநிலத்து அவன் உயிர் செகுத்து - போர்க் களத்திலே என் எதிரியின் உயிரைப் போக்கி; எனக்கு இரு நிலம் இயைவதற்கு எண்ணல் வேண்டுமோ? - எனக்குப் பெருநிலம் பொருந்துமாறு செய்யச் சிந்தனை செய்யவும் வேண்டுமோ?

(வி - ம்.) அவனுயிர் செகுத்தல் எளிதென்றான். செகுத்து: செகுப்பேன் என்று தன்மை யொருமை வினைமுற்றாகக் கொள்வதும் பொருந்தும். மற்று: அசை. 'தாரும்' என்பது 'தரும்' எனவும், 'தரும்' என்பது 'தருகும்' எனவும் விகாரமுற்றன. (க)

ககளரு. மண்மிசைக் கிடந்தன மலையுங் கானமு
நண்ணுதற் கரியன நாடும் பொய்கையுங்
கண்மனங் குளிர்ப்பன வாறுங் காண்பதற்
கெண்ணமொன் றுளதெனக் கிலங்கு பூணினாய்.

(இ - ள்.) இலங்கு பூணினாய்! - விளங்கும் அணிகலனுடையாய்!; மண்மிசைக் கிடந்தன - நிலவுலகிலே பரவிக் கிடந்தனவாகிய; நண்ணுதற்கு அரியன - நெருங்குதற்கு இயலாதனவாகிய; மலையும் கானமும் - மலைகளையும் காடுகளையும்; நாடும் பொய்கையும் - நாடுகளையும் பொய்கைகளையும்; கண் மனம் குளிர்ப்பன ஆறும் - கண்ணும் மனமும் குளிர்வனவாகிய ஆறுகளையும்; காண்பதற்கு எண்ணம் ஒன்று எனக்கு உளது - பார்ப்பதற்கு நினைவு ஒன்று எனக்கு உண்டு.

(வி - ம்.) மண் - நிலவுலகம். மண்மிசைக்கிடந்தனவாகிய மலையும் கானமும் காடும் பொய்கையும் ஆறும் என மாறுக. (க0)

ககளசு. ஊற்றுநீர்க் கூவலு ளுறையு மீனனார்
வேற்றுநாட தன்சுவை விடுத்தன் மேயினார்
போற்றுநீ போவல்யா னென்று கூறினாற்
காற்றின தமைதியங் கறியக் கூறினான்.

(இ - ள்.) ஊற்று நீர்க் கூவலுள் உறையும் மீன் அனார் - ஊறும் நீரையுடைய கிணற்றிலே வாழும் மீன் போன்றவர்கள்; வேற்று நாடு அதன் சுவை விடுத்தல் மேயினார் - பிற நாடுகளைக் காணும் இனிமையை விடுத்தவராவார்; நீ போற்று-இவ்விடத்தே நீ பேணி யிரு; யான் போவல் - நான் நாடுகாணச் செல்வேன்; என்று கூறினாற்கு - என்றுரைத்த சீவகனை நோக்கி; ஆற்றினது அமைதி அங்கு அறியக் கூறினான் - நெறியினது நிலைமையை அங்குத் தெரியும்படி கூறினான்.

(வி - ம்.) சுதஞ்சணன் உடன்வாரா வண்ணம், 'போற்று' என்றான்.

கிணற்றில் வாழும் மீன் அந்நீரினுஞ் சிறந்த வேறு நீர் இல்லையென்று அதனையே பெரிது மதித்திருப்பது போலத் தம் ஊரையே மதித்திருப்பார் என்பது. வேற்றுநாடதன்சுவை என்றது பிறநாட்டைக் காணுங்கால் உண்டாகும் இன்பத்தினை. ஆற்றினதமைதி - வழியினது இயல்பு. (கக)

### வேறு

ககளஎ. இம்மலைக் கிரண்டு காத மிறந்தபி னிருண்டு தோன்று
மம்மலை யரண பாத மென்பதன் றாள்வாய்த் தோன்றுந்
தம்வினை கழுவு கின்றார் சாரணர் தரணி காவல்
வெம்மையி னகன்று போந்து விழைவறத் துறந்து விட்டார்.

(இ - ள்.) இம் மலைக்கு இரண்டு காதம் இறந்த பின் - இம் மலையிலிருந்து இரண்டு காதம் கடந்த பிறகு; இருண்டு தோன்றும் அம் மலை அரணபாதம் என்ப - இருண்டு காணப்படும் அம் மலையை அரணபாதம் என்பர்; அதன் தாள் வாய் - அதன் அடி மலையிலே; தோன்றும் தம் வினை கழுவுகின்றார் சாரணர் - பிறப்புக்குக் காரணமான தம் இருவினையையும் போக்குகின்றவராகிய சாரணர்; வெம்மையின் தரணிகாவல் அகன்று போந்து - தாம் வீட்டை விரும்புதலின் உலகக் காவலைத் துறந்து வந்து; விழைவு அறத் துறந்துவிட்டார்-பின்னர்ப் பற்றறத் துறந்துவிட்டவர்கள்.

(வி - ம்.) அரண பாதம் - அருகன் கோயிலுள்ள மலை.

இம்மலை என்றது அவர்களிருக்கும் சந்திரோதயம் என்னும் மலையை. காதம் - ஓர் அளவு. என்ப என்பதன் ஈற்றகரம் கெட்டு அதன் என்னுஞ் சுட்டோடு கூடி 'என்பதன்' எனப் புணர்ந்து நின்றது. பிறத்தற்கு ஏதுவான தம்முடைய வினை என்க. 'தோன்றுகின்ற இருவினையையும்' என்பர் நச்சினார்க்கினியர். தரணிகாவல் வெம்மையின் அகன்று போந்து என்பதற்கு - காவற்றொழில் வெம்மையுடைமையால் அகன்று போந்து எனினுமாம். விழைவு - அவாவுமாம். (கஉ)

ககளஅ. சிந்தையிற் பருதி யன்னார் சேவடி யிறைஞ்ச லோடும்
வெந்திற லியக்கி தோன்றி விருந்தெதிர் கொண்டு பேணித்
தந்தவ ளமிர்த மூட்ட வுண்டவட் பிரிந்த காலைச்
சந்துடைச் சாரல் சேறி தரணிமேற் றிலக மன்னாய்.

(இ - ள்.) தரணிமேல் திலகம் அன்னாய் - நிலவுலகில் திலகம்போலச் சிறப்புற்றோனே!; சிந்தையின் பருதி அன்னார் சேவடி இறைஞ்சலோடும் - மலங்களைப் போக்கும் மனத்தாலே ஞாயிறுபோல்வாருடைய சிவந்த அடிகளை வணங்கின அளவிலே; வெம்திறல் இயக்கி தோன்றி - போராற்றலுடைய இயக்கி எதிர்ப்பட்டு; அவள் எதிர்கொண்டு அமிர்தம் தந்து பேணி ஊட்ட உண்டு - அவள் நின்னை வரவேற்று அமிர்தத்தைத் தந்து ஓம்பி விருந்தூட்ட உண்டு; அவள் பிரிந்த காலை - அவளைப் பிரிந்த அளவிலே; சந்துடைச் சாரல் சேறி - சந்தன மரங்கள் நிறைந்த அம் மலையின் சாரலிலே செல்வாயாக.

(வி - ம்.) அமிர்தந் தந்து பேணி ஊட்ட என மாறுக. அமிர்தம் - ஈண்டு உணவிற்கு ஆகுபெயர். சந்து - சந்தனமரம். (கங)

வேறு

ககஎகூ. அங்குநின் றகன்றபி னையைங் காவதம்
வெங்களி விடுமத வேழப் பேரினந்
தங்கிய காடது தனிச்செல் வாரிலை
கங்கையின் கரையது கடலிற் றேன்றுமே.

(இ - ள்.) அங்கு நின்று அகன்ற பின் - அங்கிருந்து சென்ற பின்பு; ஐ ஐங்காவதம் வெம்களி விடும் மதவேழப் பேரினம் தங்கிய காடு - இருபத்தைங்காதவழி வெவ்விய களிப் பினாலே சொரியும் மதமுடைய களிற்றுப் பெருந்திரள் தங்கிய காடு உளது; கங்கையின் கரையது கடலின் தோன்றும் - கங்கையின் கரையிலுள்ளதாகிய அது கடல்போலத் தோன்றும்; அது தனிச் செல்வார் இலை - அக் காட்டிலே தனியே செல்பவர் இலர்.



(வி - ம்.) அக் காட்டிலே சிறப்பாக யானைத் திரளை மட்டுமே கூறினான் சீவகன் அறஞ் செய்தலை நோக்கி; 'பஞ்சவர் போல நின்ற பகட்டினப் பரிவு தீர்த்தான்' (சீவக. கஉகூஎ) என்பர் பின்னர். 'கடல்போல் தோன்றல காடு இறந்தோரே' (அகநா. க-ககூ) என்றார் பிறரும். (கசு)

ககஅ௦. புனலெரி தவழ்ந்தெனப் பூத்த தாமரை
வனமது வாளென வாளை பாய்வன
மனமகிழ் பெருந்தடம் வலத்திட் டேகுதி
யினமலர்த் தாரினா யிரண்டு காதமே.

(இ - ள்.) இனம் மலர்த்தாரினாய் - இன மலர்களால் ஆன மாலையினை உடையாய்!; புனல் எரி தவழ்ந்தெனப் பூத்த தாமரை - நீரிலே எரிதவழ்ந்தாற்போல மலர்ந்த தாமரையை உடையவும்; வாள்என வாளை பாய்வன - வாள்போல வாளைகள் பாய்வனவும் ஆன; மனம் மகிழ் பெருந்தடம் - உள்ளக் களிப்பையூட்டும் பெரிய பொய்கைகளை; வலத்து இட்டு - வலப் பக்கத்தே விடுத்து; வனமது இரண்டு காவதம் ஏகுதி - அக் காட்டிலே இரு காவதம் செல்வாயாக.

(வி - ம்.) எனவே அக்காட்டின்கண் வாளைபாயும் தாமரைப்பெருந் தடம் உண்மையும் கூறினனாயிற்று. வேற்று நாட்டதன் சுவையே விரும்பிப்போதலின், தாமரைத் தடத்தெழிலை விதந்தோதினான். (கரு)

ககஅக. காந்திய மணியோடு வயிரம் பொன்கலந்
தேந்தனின் றேளென விரண்டு குன்றுபோய்ப்
பூந்துகின் மகளிரிற் பொலிந்து போர்த்ததோர்
பேந்தரு பேய்வனம் பெரிய காண்டியே.

(இ - ள்.) காந்திய மணியொடு வயிரம் பொன் கலந்து - ஒளி செய்யும் மணிகளுடன் வயிரமும் பொன்னும் கொண்டு; ஏந்தல் நின்தோள் என இரண்டு குன்று போய் - ஏந்திய நின் தோள்களைப் போன்ற இரண்டு குன்றுகள் வளரப் பெற்று; பூந்துகில் மகளிரின் பொலிந்து போர்த்தது - பூந்துகில் அணிந்த மகளிரைப் போலப் பேய்கள் பொலிந்து மனத்தை மறைக்கு மியல்புடையதாகிய; ஓர் பெரிய பேந்தரு பேய்வனம் காண்டி - ஒரு பேரச்சந்தரும் பேய்வனத்தைக் காண்பாயாக.

(வி - ம்.) குன்றுபோய் என்புழிப் போகல் என்னும் உரிச்சொல் லடியாகப் பிறந்த போய் என்னும் எச்சம் வளர்ந்து என்னும் பொருள் தந்து பின்னும்செயப்பாட்டுவினை எச்சப்பொருள் பயந்து நின்றது. பேம்- அச்சம்.

" பேநாம் உரும் என வரூஉங் கிளவி
ஆமுறை மூன்றும் அச்சப் பொருள " (தொல். உரி. சுகூ)

(கசு)

ககஅஉ. இளவெயின் மணிவரை யெறித்திட் டன்னதோ
ரளவரு குங்குமத் தகன்ற மார்பினுய்
களவினி னணிநலங் கவர்ந்த கள்வவென்
றுளர்மணிக் கோம்பனா ருருகி நைபவே.

(இ - ள்.) இளவெயில் மணிவரை எறித்திட் டன்னது - காலை வெயில் மணிவரையிலே வீசியது போன்றதாகிய; ஓர் அளவறு குங்குமத்து அகன்ற மார்பினுய்! - ஒப்பற்ற மிகுதி யான குங்குமம் கலந்த பரந்த மார்பினையுடையாய்!; களவினின் அணிநலம் கவர்ந்த கள்வ என்று-களவினிலே அழகையும் நலன் களையும் கவர்ந்த கள்வனே என்று கூறி; உளர் மணிக்கொம்பனார் உருகி நைப - அசையும் மணிக்கொடி போன்ற அப் பேய் மகளிர் நின்னைக் கண்டு உருகி வருந்துவார்கள்.

(வி - ம்.) மார்பினுய் ' என்னுந்துணையும் சுதஞ்சணன் சீவகனை விளித்ததாகக்கொள்ளினும் அமையும். அப்பேய்கள் அழகிய மகளிர் உருக்கொண்டு நின்னை இங்ஙனம் மயக்கும் என்பது தோன்ற மணிக் கொம்பனார் என்றான். நைப: பலர் அறிசொல். (கஎ)

ககஅங. பழங்குழைந் தனையதோர் மேலிவிற் பையென
முழங்கழல் வேட்கையின் முறுகி யூர்தரத்
தழும்பத மிதுவெனச் சார்ந்து புல்லலும்
பிழிந்துயி ருண்டிடும் பேய்க ளாபவே.

(இ - ள்.) முழங்கு அழல் வேட்கையின் - பொங்கும் தீயனைய வேட்கையினாலே; பழம் குழைந்தனையதோர் மெலி

வின் - பழங்குழைந்தாற் போன்ற மேனி மெலிவுடன்; பையென முறுகி ஊர்தர - மெல்ல மிகவும் அருகில் நெருங்கினவுடனே; தழும்பதம் இது எனச் சார்ந்து புல்லலும் - தழுவும் காலம் இது என எண்ணித் தழுவியவுடனே; பிழிந்து உயிர் உண்டிடும் பேய்கள் ஆப - உயிரைப் பிழிந்து பருகும் பேய்களாய் விடுவர். (ஆகையால், அப் பேய் மகளிரைத் தழுவற்க.)

(வி - ம்.) முறுகி என்றற்கு மிக்கு எனப் பொருள் கூறினார் நச்சினார்க்கினியர்; வேட்கையின் முறுகி என இயைத்து முதிர்ந்து எனலுமாம். தழுவும்: தழும்என ஈற்றுயிர் மெய்கெட்டு நின்றது, செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சமாகலின். (கஅ)

வேறு

ககஅச. கண்டபேய் நகரி னீங்கிக் காவதங் கடந்து தோன்றும்
வெண்டலைப் புணரி வீசிக் கிடந்தபோற் றீவிற் றாகிக்
கொண்டுலப் பரிய செந்நெல் கோடிக்கரும் புடுத்த வேலி
நுண்டுகி னுழைந்த வல்குற் பவளமோத் தினிய தொன்றே.

(இ - ள்.) கண்ட பேய் நகரின் நீங்கிக் காவதம் கடந்து - காணப்பட்ட அப் பேய் நகரினின்றும் நீங்கிக் காவதம் கடந்த அளவிலே; கொண்டு உலப்ப அரிய செந்நெல் கொடிக் கரும்பு உடுத்த வேலி - அறுத்துத் தொலைத்தற்கரிய செந்நெல்லை, ஒழுங்கினையுடைய கரும்பு சூழ்ந்த வேலி; அல்குல் நுண் துகில் நுழைந்த பவ்ளம் ஒத்து - அல்குலிலே நுண்ணிய துகிலினுள் நுழைந்து கிடந்த பவள மேகலையையும் ஒப்ப; வெண்தலைப் புணரி வீசிக் கிடந்த பொன் தீவிற்று ஆகி - வெண்மையான அலைகளையுடைய கடல் சூழ்ந்து கிடந்த பொற்றீவின் தன்மை யுடையதாய்; இனியது ஒன்று தோன்றும் - இனியதொரு நாடு தோன்றும்.

(வி - ம்.) கடந்து - கடப்ப: எச்சத்திரிபு. கொடி - ஒழுங்கு.

தீவிற்றாகி - தீவின் தன்மைத்தாய் என்க. கொண்டுலப்பரிய என்புழிக் கொண்டு என்பதனைக் கொள்ள எனத் திரித்துக்கொள்க. தீவிற்றாகி மேலும் அதன்கண் வேலி அல்குற் பவளம் ஒத்தலான் காண்டற்கினிய தொன்று என்பது கருத்து. (ககூ)

ககஅரு. படுமழை பருவம் பொய்யாப் பல்லவ தேய மென்னுந்
தடமலர்க் குவளைப் பட்டந் தழுவிய யாணர் நன்னாட்
டிடைநெறி யசைவு தீர விருந்தவ ணேக லுற்றாற்
கடநெறி நடத்தற் கின்னாக் கல்லத ரத்த முண்டே.

(இ - ள்.) படுமழை பருவம் பொய்யா - பெய்யும் மழை காலம் தவறாத; பல்லவ தேயம் என்னும் - பல்லவ நாடு என்

னும் பெயரையுடைய; தடம் மலர்க்குவளைப் பட்டம் தழுவிய யாணர் நன்னாட்டு - பெரிய குவளைமலர்களையுடைய குளங்கள் பொருந்திய, புது வருவாயுமுடைய அழகிய நாட்டிலே; இடை நெறி அசைவு தீர இருந்து - வழி வருத்தம் நீங்க ஒரு திங்கள் தங்கி; அவண் ஏகல் உற்றால் - அங்கிருந்து மேற்செல்லத் தொடங்கினால்; கடம் நெறி கடத்தற்கு இன்னாக் கல்அதர் அத்தம் உண்டு - காட்டு வழி கடந்து போதற்குப் பொல்லாத தொரு கல்வழி உண்டு.

(வி - ம்.) 'பல்லவ தேயத்தில் அசைவு தீர இருந்து' என்றதனாற் பதுமையைக் கொள்ளுதலுங் கூறினாயிற்று. (உ0)

வேறு

ககஅசு. நுதிகொண்டன வெம்பர னுண்ணிலைவேல்
பதிகொண்டு பரந்தன போன்றுளவால்
விதிகண்டவ ரல்லது மீதுசெலார்
வதிகொண்டதோர் வெவ்வழல் வாய்சோலின்வேம்.

(இ - ள்.) வதி கொண்டது ஓர் வெவ்வழல் சொலின் வாய் வேம் - அவ்வழி கொண்டதாகிய ஒப்பற்ற கொடிய அனலைக் கூறின் வாயும் வேகும்; நுதி கொண்டன வெம்பரல் - கூர்மையைக் கொண்டனவாகிய கொடிய பரல்கள்; நுண் இலை வேல் பதி கொண்டு பரந்தன போன்று உள - நுண்ணிய இலை முகமுடைய வேல்கள் பதித்தல் கொண்டு பரவின போன்றுள்ளன. விதி கண்டவர் அல்லது மீது செலார் - ஊழ்வினை முற்றி இறத்தற்குரியவர் அல்லது மற்றவர் அவ்வழி செலார்.

(வி - ம்.) விதியைப் புறங்கண்ட தபோதனர் மேலேயெழப் பறந்து போவதல்லது வேறு போகார் என்றும் உரைக்கலாம் என்பர் நச்சினார்க்கினியர். (உக)

ககஅஎ. குழவிப்பிடி குஞ்சர மாழ்குமெனத்
தழுவிச்சுடு வெவ்வழ றாங்குவன
கெழுவிப்பெடை யைக்கிளர் சேவறழீஇத்
தொழுதிச்சிற கிற்றுய ராற்றுவன.

(இ - ள்.) குழவிப்பிடி மாழ்கும் என - குழவியையுடைய பிடிகள் மயங்கும் என்று கருதி; குஞ்சரம் தழுவி - களிறுகள் அவற்றைத் தழுவி வெப்பத்தைத் தாங்குவன; கிளர் சேவல் பெடையைத் தழீஇ - ஊக்குமுறுஞ் சேவல்கள் தம் பெடையைத் தழுவி; தொழுதிச் சிறகால் துயர் ஆற்றுவன - தம் திரட்சியுறு சிறகினாலே காத்துத் துயரைத் தணிப்பன.

(வி - ம்.) தழீஇ: சொல்லிசை அளபெடை.

குழவி - கன்று, இளமையுமாம். பிடி - பெண்யானை. குஞ்சரம் - ஈண்டுக் களிறு என்னும் பொருட்டு; "மடப்பெடை அசைஇய வருத்தத்தை மென்சிறகரால் ஆற்றும் புறவு எனவும் உரைத்தனரே" என்றார் கலியினும் (கக-கஉ-கங.) (உஉ)

ககஅஅ. கலையின்பிணை கன்றிடு மென்றுகசிந்
திலையின்னிழ லவ்வயி னின்மையினு
னிலையின்னிழ றனது நின்றுகொடுத்
துலையும்வெயி னின்றுரு கும்முரவோய்.

(இ - ள்.) உரவோய்! - அறிஞனே!; இலையின் நிழல் அவ்வயின் இன்மையினுன் - இலையுடைய நிழல் அங்கேயில்லாததால்; இன்பிணை கன்றிடும் என்று கசிந்து - தன் இனிய பிணைமான் வருந்தும் என்று மனம் வருந்தி; அது நிலையின் நிழல் நின்று கொடுத்து - அக்கலை தான் நின்று தன்னிலையிற் பிறந்த நிழலை அதற்குக் கொடுத்து; உலையும் வெயில்நின்று உருகும்-வாட்டும் வெயிலில் நின்று உருகும்.

(வி - ம்.) 'வெயில் நின்று உருகும்' என்பதை முற்பாட்டிற் குஞ்சரத்திற்கும் சேவலுக்கும் இயைக்க.

கலை - ஆண்மான். இன்பிணை - இனிய பெண்மான். கன்றுதல் - வருந்துதல். அவ்வயின் - அப்பாலையின்கண். "அக்காட்டில் இன்னிழல் இன்மையான் வருந்திய மடப்பிணைக்குத் தன்னிழலைக் கொடுத்தளிக்கும் கலையெனவும் உரைத்தனரே" என்றார் கலியினும் (கக-கசு-எ.) (உங)

ககஅகூ. கடநாக மதங்கலங் துக்கநிலத்
துடைநாணென மின்னென வொண்மணியம்
படநாக மழன்று பதைத்துவரு
மடனும்மய லார்மனம் வைப்பதுவே.

(இ - ள்.) கடநாகம் மதம் கலந்து உக்க நிலத்து - மதயானைகளின் மதம் வெம்மை மிகுதியாலே சிறு நீருடனே கலந்து சொரிந்த நிலத்திலே; ஒண்மணி அம் படநாகம் - ஒளிவிடும் மணியையுடைய அழகிய படமுறும் நாகம்; உடை நாண் என மின் என - (ஈரமாக நினைத்து வந்து வீழ்ந்து) முறுக்குவிட்ட கயிறெனவும் மின்கொடி எனவும்; அழன்று பதைத்து வரும் - வெந்து பதைத்துப் போகும்; அயலார் மனம் வைப்பது மடன் ஆம் - (ஆகையால்) விதிகண்டவரல்லது மற்றவர் அந் நெறி செல்லக் கருதுதல் அறியாமையாம்.

(வி - ம்.) 'மதங்கள் கலந்த நிலத்து' என்றும் பாடம். ஆகையால், நீயும் அவ்வழி செல்லாதே என்றாயிற்று. நச்சினார்க்கினியர் ககஅகூ

முதல் நான்கு பாட்டையும் ஒரு தொடராக்கி, 'விதி கண்டவரல்லது மீது செலார்' என்பதை இறுதியிற் கூட்டுவர்.

சடநாகம் - மதயானை; காட்டியானையுமாம். உடைநாண் : வினைத் தொகை; முறுக்குடைந்த கயிறு என்க. அயலார்:விதிகாணுதார். (உச)

ககசுரு. நெறியிற்றளர் வார்தம நெஞ்சுருகிப்
பொறியிற்றளர் வார்புரி வார்சடையா
ரறிமற்றவர் தாபத ரவ்வழியார்
கறைமுற்றிய காமரு வேலவனே.

(இ - ள்.) கறை முற்றிய காமரு வேலவனே! - குருதிக் கறை முற்றிய விருப்பூட்டும் வேலவனே!; நெறியின் தளர்வார் - நன்னெறியிலிருந்து விலகியவரும்; தம நெஞ்சு உருகிப் பொறியின் தளர்வார் - தம் உள்ளம் நெகிழ்ந்து ஐம்பொறிகளினுலே தளர்வாரும், புரிவார் சடையார்-முறுக்கின நீண்டசடையுடைய வரும் (ஆகிய); அவர் தாபதர் அவ்வழியார் - அவர் முனிவராகி அந்நெறியிலே உளர்; அவர் அறி - அவர்களைக் கண்டு அவர் தன் மையை அறிந்து செல்.

(வி - ம்.) நெறி - நல்லொழுக்கம். பொறி - மெய் வாய் கண் மூக்குச் செவி. அறி: ஏவல் வினை: கறை - நஞ்சுமாம். வேலவன்: சீவகன். நெறியிற்றளர்வாரும், பொறியிற்றளர்வாரும், புரிவார் சடையாராகி அவரே தாபதரா யவ்வழியிருப்பார் அறி என வினை முடிவு செய்க. (உரு)

ககசுசு. குலைவாழை பழுத்த கொழும்பழனு
நிலைமாத்தன தேமுறு தீங்கனியும்
பலவீன்றன முள்ளுடை யள்ளமிர்து
மலையாற்றயல் யாவு மடுத்துளவே.

(இ - ள்.) குலைவாழை பழுத்த கொழும் பழனும்-குலையையுடைய வாழைகளிற் பழுத்த வளமிகு பழங்களும்; நிலை மாத்தன தேம் உறு தீ கனியும் - நிலையான மாவினிடமுள்ள தேன் பொருந்திய இனிய கனிகளும்; முள் உடை பலவு ஈன்றன அள் அமிர்தும் - முள்ளுடைய பலவின் கனியிலுள்ள செறிந்த அமிர்தும்; யாவும் - பிறவும்; மலை யாற்றயல் மடுத்து உள - மலைக்கும் யாற்றிற்கும் நடுவே நெருங்கியுள்ளன.

(வி - ம்.) எனவே ஆண்டுள்ள தாபதர் அவற்றை உணவாகக் கொள்வர் என்க.

பழன் - பழம்: மகரத்திற்கு னகரம் போலி. மாத்தன - மாமரத்திலுள்ளன. தேம் - இனிமை. தீங்கனி என்புழி தீம் வாளா பெயர் மாத்திரையாய் நின்றது. அள் - செறிவு அமிர்து - ஈண்டுக் கனிக்கு உவமவாகுபெயர். (உசு)

ககசுஉ. வளர்பைம்பொனும் வாளொளி நீண்மணியு
மொளிர்கின்றன வோசனை நீணிலமுந்
தளர்வொன்றிலர் தாபதர் தாம்விழையுங்
குளிர்கொண்டதோர் சித்திர கூடமதே.

(இ - ள்.) வளர் பைம்பொனும் வாள்ஒளி நீள் மணியும் - மிருகின்ற புதிய பொன்னும் பேரொளியுறு பெருமணிகளும்; ஒளிர்கின்றன ஓசனை நீள் நிலமும் - இவற்றின் ஒளி பரவிய ஓர் யோசனை அளவான பெரும் பரப்புறு நிலமும்; தாபதர் தளர்வு ஒன்றிலர் தாம் விழையும்-தாபதர்கள் தளர்ச்சியிலராய் விழைவு கொள்கின்ற; ஓர் குளிர் கொண்டது - ஒரே வகையான குளிர்ச்சியுடையது; அது சித்திரகூடம் - அம்மலை சித்திரகூட மெனப்படும்.

(வி - ம்.) வாள் ஒளி: ஒருபொருட் பன்மொழி. நிலமும்: உம்: முற்றும்மை. 'தாம் வளையும்' என்பதூஉம் பாடம். சித்திர கூடத்திற்கும் யாற்றிற்கும் இடையே பலவகை யினிய கனிகள் கிடைப்பதாலும், அந்நிலம் ஓரோசனை அளவும் தண்மை நிலவுவதாலும் தாபதர் தளர்விலராய் இருப்பர். (உஎ)

ககசுங. முழவின்னிசை மூரி முழங்கருவி
கழையின்றுணி சந்தொடு கல்லெனவீர்த்
திழியும்வயி ரத்தொடி னம்மணிகொண்
டழியும்புன லஞ்சன மாநதியே.

(இ - ள்.) முழவு இன்இசை முழங்கு மூரி அருவி - முழவென இனிய இசையுடன் முழங்கும் பேரருவியானது; கழையின் துணி சந்தொடு ஈர்த்து வயிரத்தொடு இனம் மணி கொண்டு - மூங்கிலின் துண்டுகளையும் சந்தனக் கட்டைகளையும் இழுத்துக் கொண்டு, வயிரத்தையும் பல இன மணிகளையும் கொண்டு; கல்லென இழியும் புனல் - கல்லெனும் ஒலியுடன் வீழும் நீரினால்; அஞ்சன மாநதி அழியும் - அஞ்சனமாநதி யெனும் ஆறு மிகப் பெருகும்.

(வி - ம்.) மூரி - பெருமை. கழையின் துணி - மூங்கிற்றுண்டு. சந்து - சந்தனமரம். கல்லென : ஒலிக்குறிப்பு. அழியும் - பெருகும். (உஅ)

ககசுச. இதுபள்ளி யிடம்பனி மால்வரைதா
னதுதெள்ளறல் யாறுவை தேமரமாக்
கதிதள்ளி யிராது கடைப்பிடிநீ
மதிதள்ளி யிடும்வழை சூழ்பொழிலே.

(இ - ள்.) இது பள்ளி - இது அத்தாபதர் வாழும் பள்ளி; இடம் பனி மால்வரை - இப் பள்ளியின் இடப்பக்கம் அந்தக்

குளிர்ந்த பெரிய சித்திர கூடமலே; அது தெள் அறல் யாறு - வலப்பக்கம் உள்ள அது தெளிந்த நீரையுடைய யாறு (அஞ்சன மாநதி); உவை தேமர மா - முன்னும் பின்னும் உள்ளவை இனிய மாமரமும்; வழை சூழ் பொழில் - சுரபுன்னை சூழும் பொழிலுமாகும்; மதி தள்ளியிடும் - இவை அறிவை (இன்பத்தி னலே) நீக்கிவிடும்; நீ கதி தள்ளி இராது கடைப்பிடி-நீ செலவைத் தவிர்ந்திராமல் செயலைக் கடைப்பிடித்துச் செல்.

(வி - ம்.) இது பள்ளியென ஓரிடத்தைக் காட்டிக்கூறி, அது முதலாக மற்றவற்றைச் சுட்டிக் காட்டினான். உவை யென்றான் ஒழிந்த இரு பக்கத்தையும். பள்ளி: தாபதர் உறையுமிடம். (உ௯)

வேறு

௧௧௬௫. வருந்து நீர்மையம் மாதவர் பள்ளியுட்
குருந்த மேறிய கூரரும் பார்முல்லை
பொருந்து கேள்வரைப் புல்லிய பொன்னனார்
மருங்கு போன்றணி மாக்கவின் கொண்டதே.

(இ - ள்.) வருந்தும் நீர்மை அம் மாதவர் பள்ளியுள் - தவத்தால் வருந்தும் இயல்புடைய அத்தாபதர் வாழும் பள்ளி யிலே; குருந்தம் ஏறிய கூர் அரும்பு ஆர் முல்லை-குருந்த மரத்தில் ஏறிய கூரிய அரும்புகள் நிறைந்த முல்லைக்கொடி; பொருந்து கேள்வரைப் புல்லிய பொன்னனார் - தம் மனம் விரும்பிய கணவரைத் தழுவிய திருவனையாரின்; மருங்கு போன்று- அணி - வடிவம் போல ஒப்பித்த; மாக் கவின் கொண்டது- பேரழகினைக் கொண்டது.

(வி - ம்.) அம் முல்லைவனம் மகளிர் வடிவை நினைப்பூட்டித் தாபதர் பள்ளியினின்றும் போகவிடும் என்பது குறிப்பு. (௩0)

௧௧௬௬. குரவ நீடிய கொன்றையங் கானின்வாய்
வரகு வாளிற் றொலைச்சுநர் பாடலி
னரவ வண்டொடு தேனினம் யாழ்செயும்
பரவை மாநிலம் பன்னிரு காதமே.

(இ - ள்.) குரவம் நீடிய கொன்றை அம் கானின் வாய்- குரவ மரங்கள் நிறைந்த அழகிய கொன்றைக் காட்டினிடத்தே; வரகு வாளில் தொலைச்சுநர் பாடலின் - வரகை அரிவாளால் அறுப்பவர் பாடுதலின்; (அம் மிடற்றுப் பாடலுக் கேற்ப) அரவ வண்டொடு தேனினம் யாழ் செயும் - ஒலிக்கும் வண்டும் தேனும் யாழிசைக்கின்ற; பரவை மாநிலம் பன்னிரு காதம் - பரப்பு மிகுந்த வரகு விளைநிலம் பன்னிரு காத வழியுடையது.

(வி - ம்.) வரகு - ஒரு கூலம். வாள் - அரிவாள். தேன் - ஒருவகை வண்டு. யாழ்செயும் - யாழிசைபோல முரலும். (௬௧)

௧௧௬௭. ஆங்க வெல்லை யிகந்தடு தேறலும்
பூங்கட் பொற்குட முந்நிறைத் தீண்டிய
வேங்கு கம்பலத் தின்னிசை சூழ்வயற்
றேங்கு சீர்த்தக்க நாட்டணி காண்டியே.

(இ - ள்.) ஆங்கு அவ் எல்லை இகந்து - அந்தக் காட்டின் எல்லையைக் கடந்துபோய்; அடு தேறலும் பூகள் பொற்குடமும் நிறைத்து - காய்ச்சிய நறவினையும் மலரிலிருந்தெடுத்த கள்ளையும் பொற் குடங்களெல்லாவற்றினும் நிறைத்து; ஈண்டிய ஏங்கு கம்பலத்து இன் இசை - செறிந்த தேங்கிய ஆரவாரத்துடன் எழுப்பும் இனிய இசை ; சூழ் வயல் - சூழ்ந்த வயலினையும்; தாங்கு சீர் - ஏந்திய புகழையும் உடைய; தக்க நாட்டு அணி காண்டி - தக்க நாட்டின் அழகைக் காண்பாயாக.

(வி - ம்.) 'இன்னிசை யீண்டிய எங்கு கம்பலத்தைச் சூழ்வயல்' என மொழிமாற்றிப் பொருளுரைப்பர் நச்சினார்க்கினியர். கம்பலம்: கம்பலை என்னும் உரிசசொல் ஈறு திரிந்தது. எங்குதல் - ஒலித்தல். 'ஏங்கிய மிடறு' (சிலப். ௩. ௫௧) என்றார் பிறரும். (௬௨)

வேறு

௧௧௬௮ பாளைவாய்க் கமுகி னெற்றிப் படுபழ முதிர விண்டு
நீள்கழைக் கரும்பி னெற்றி நெய்ம்முதிர் தொடையல் கீறி
வாளைவா யுறைப்ப நக்கி வராலொடு மறலு மென்ப
காளைநீ கடந்து செல்லுங் காமரு கவின்கொ ணாடே.

(இ - ள்.) காளை! நீ கடந்து செல்லும் காமரு கவின் கொள் நாடு - காளையே! நீ காட்டைக் கடந்து செல்லும் விருப்பூட்டும் அழகுறு நாடு ; கமுகின் நெற்றிப் பாளைவாய்ப் படுபழம் விண்டு உதிர - கமுகின் உச்சியிலே பாளையின்கண் உண்டாகிய பழம் விண்டு உதிர்தலால்; நீள் கழைக் கரும்பின் நெற்றி நெய்ம் முதிர் தொடையல் கீறி - நீண்ட கழையாகிய கரும்பின் உச்சியிலே முதிர்ந்த தேனடையைக் கீண்டு; வாளை வாய் உறைப்ப நக்கி - (குளத்திலுள்ள) வாளையின் வாயிலே தேன் துளி துளிக்க அதனை நக்கி; வராலொடு மறலும் - வராலுடன் மாறுபடும்.

(வி - ம்) நெய் - தேன். என்ப: அசை. வராலொடு வாளை தேன் துளியை நக்கி மாறுபடும் என்றுரைப்பர் நச்சினார்க்கினியர்.

கமுகின் நெற்றிப் பாளைவாய்ப் படுபழம் என மாறுக. கழைக் கரும்பு - கோலாகிய கரும்பு ; ஒருவகைக் கரும்பெனவுமாம். தொடையல் - தேனிறால். உறைப்ப - துளியாக விழ. கவின் - அழகு. (௬௩)

வேறு

௧௧௬௯ அங்கதன் றனதிடங் கடந்து போம்வழிப்
பொங்குபூஞ் சண்பகப் போது போர்த்துரா
யங்கநாட் டரிவையர் கூந்த னாறித்தே
னெங்குமொய்த் திழிவதோர் யாறு தோன்றுமே.

(இ - ள்.) *அங்கு அதன் தனது இடம் கடந்து போம் வழி* - அவ்விடத்தில் அந்த நாட்டின் இடத்தைக் கடந்து செல்லும்போது; *பொங்கு பூஞ் சண்பகப் போது போர்த்து உராய்* - மிகுதியான அழகிய சண்பக மலரைப்போர்த்துப் பரவி; *அங்கு அந்நாட்டு அரிவையர் கூந்தல் நாறி* - அங்குள்ள அந் நாட்டின் மகளிருடைய கூந்தல் போல மணங் கமழ்ந்து; *தேன் எங்கும் மொய்த்து இழிவது ஓர் யாறு தோன்றும்* - வண்டுகள் எங்கும் மொய்க்கப்பட்டுச செல்லும் ஒரு யாறு காணப்படும்.

(வி - ம்.) 'அதனிடங் கடந்து' எனவே கேமசரியை மணப்பதூஉங் குறிப்பித்தானாயிற்று. பொங்குதல்-மிகுதல். போது போர்த்துப் பரந்து அந்நாட்டரிவையர் கூந்தல் போன்று நாறித் தேன் மொய்க்கப்பட்டு இழிவதோர் யாறென்க. (௩௪)

௧௨௦௦. மின்னுடை மணிபல வரன்றி மேதகு
தன்னுடை நலம்பகிர்ந் துலக மூட்டலிற்
பொன்னுடைக் கலையல்குற் கணிகைப் பூம்புனன்
மன்னுடை வேலினாய் வல்லை நீந்தினால்.

(இ - ள்.) *மன் உடை வேலினாய்* - அரசர் கெடுதற்குக் காரணமாகிய வேலையுடையவனே!; *மின்னுடை மணி பல வரன்றி* - ஒளியினையுடைய மணிகள் பலவற்றையும் அரித்து; *மேதகு தன்னுடை நலம் பகிர்ந்து* - மேம்பட்ட தன்னுடைய நலத்தைப் பங்கிட்டு; *உலகம் ஊட்டலின்* - உலகினை உண்பித்தலின்; *பொன்னுடைக் கலை அல்குல் கணிகைப் பூம்புனல்* - பொன்னாலான மேகலை யணிந்த அல்குலையுடைய கணிகை போன்ற பூம்புனலை; *வல்லை நீந்தினால்* - விரைய நீந்திச் சென்றால்,

(வி - ம்.) இப் பாட்டுக் குளகம்.

நலம் - இன்பம். கணிகைப்பூம்புனல் - கணிகைத் தன்மையை யுடைய அழகிய நீர். மன் - மன்னர். வல்லை - விரைவில். (௩௫)

௧௨௦௧. யானைவெண் மருப்பினா லியற்றி யாவது
மானமாக் கவரிவெண் மயிரின் வேய்ந்தன
தேனெயூன் கிழங்குகாய் பழங்கள் செற்றிய
கானவர் குரம்பைசூழ் காடு தோன்றுமே.

(இ - ள்.) யானை வெண் மருப்பினால் யாவதும் இயற்றி - யானையின் வெள்ளிய மருப்பினால் கால்வளை முதலிய எல்லாவற்றையும் அமைத்து; மான மாக்கவரி வெண் மயிரின் வேய்ந்தன - மானமுறும் விலங்காகிய கவரியின் வெண்மையான மயிரினால் வேய்ந்தனவாகிய; தேன் நெய் ஊன் கிழங்கு காய் பழங்கள் செற்றிய - தேன் முதலிய இவ்வுணவுப் பொருள்களைச் செறித்த; கானவர் குரம்பை சூழ்காடு தோன்றும் - வேடர் குடில்கள் சூழ்ந்த காடு தோன்றும்.

(வி - ம்.) வேய்ந்த குரம்பை, செற்றிய குரம்பை எனக் கூட்டுக.

மானமா - கவரிமான். மயிர் நீப்பினும் வாழா வியல்புடையது பற்றிக் கவரிமானை மானமா என்ப. குரம்பை - சிறுகுடில். (௩௬)

௧௨0௨. கடுந்துடிக் குரலோடு கடையுங் கட்குர
னெடுங்கைமான் குரன்மணி யருவி நீள்குர
லடும்புலிக் குரலோடு மயங்கி யஞ்சிய
விடும்பைமான் குரல்விளி யெங்கு மிக்கவே.

(இ - ள்.) கடுந் துடிக் குரலொடு கடையும் கள் குரல் - விரையும் துடி யொலியுடன், கள் அரிக்குங் குரலும்; நெடுங் கை மான் குரல் - நீண்ட கையையுடைய யானையின் குரலும்; மணி அருவி நீள் குரல் - மணி யரித்து வரும் அருவி வீழ்குரலும்; அடும் புலிக் குரலொடு அஞ்சி மயங்கிய - கொல்லும் புலி முழக்கிற்கு அஞ்சி மயங்கிய; இடும்பை மான் குரல் - துன்புற்ற மான் குரலும்; விளி - சீழ்க்கையும்; எங்கும் மிக்க - அக் காடெங்கும் மிக்கன.

(வி - ம்.) கடு: கடியென்னும் உரிச்சொல்லின் திரிபு. புலிக் குரலொடு: உருபு மயக்கம். விளி : நாவின் நுனியை மடித்தெழுப்பும் ஒலி. ()

௧௨0௩. பொன்னணி திகிரியஞ் செல்வன் பொற்புடைக்
கன்னிய மகளிரிற் காண்டற் கரியன
நன்மணி புரித்தன வாவி நான்குள
கன்னவி றோளினாய் காட்டு வாயவே.

(இ - ள்.) கல் நவில் தோளினாய் - கல்லெனக் கூறுந் தோளுடையாய்!; காட்டு வாய - அக் காட்டிடத்துள்ளன வாகிய; பொன் அணி திகிரி அம் செல்வன் பொற்பு உடைக் கன்னி மகளிரின் - பொன்னால் அணிந்த ஆழியை யுடைய மன்னர் பெருமானின் அழகுறு கன்னிப் பெண்களைப் போல; காண்டற்கு அரியன - பிறரால் காண வியலாத; நல்மணி புரித்தன - நல்ல மணிகள் நிறைத்தனவாகிய; வாவி நான்கு உள - குளங்கள் நான்கு உள்ளன.

(வி - ம்.) 'காட்டு வாய வாவி' என்க. கன்னிய: அ: அசை. 'பூரித்தன' என்பது, 'புரித்தன' என விகாரமுற்றது. (௯அ)

கஉ௦௪. அருங்கலச் சேயித ழார்ந்த வாவியோன்
றிரும்பெரி பொன்செயு மிரத நீரதோன்
றொருங்குநோய் தீர்ப்பதோன் றமிர்த மல்லதோன்
றரும்பவிழ் குவளைநீர் வாவி யாகுமே.

(இ - ள்.) அருங்கலச் சேயிதழ் ஆர்ந்த வாவி ஒன்று - அரிய சிவந்த இதழையுடைய பொற்றாமரை நிறைந்த குளம் ஒன்று; இரும்பு எரி பொன் செயும் இரத நீரது ஒன்று-இரும்பை ஒளிவிடும் பொன்னாக மாற்றும் இரத நீருடைய குளம் ஒன்று; நோய் ஒருங்கு தீர்ப்பது ஒன்று - எல்லா நோயையும் நீக்குங் குளம் ஒன்று; ஒன்று அல்லது அமிர்தம்-மற்றொரு குளம் அமிர்தம் போன்றது; அரும்பு அவிழ் குவளை நீர் வாவி ஆகும்-(அது) அரும்பு மலர்ந்த குவளையையுடைய நீர் நிறைந்த குளமாகும்.

(வி - ம்.) 'அமிர்தம் அல்லது ஒன்று' என்பதை 'நச்சுப் பொய்கை' என்றும் உண்பதற்குரியது குவளைநீர் வாவியாகும் என்றும் ஏகாரம் எதிர்மறைப் பொருளதென்றும் நச்சினார்க்கினியர் கூறுவர். 'வாவி நான்குள' என்பதனால் ஐந்தாவது குளம் ஒன்று காணுமாறில்லை. எனவே, இங்ஙனங் கொள்ளாமல், 'நீர் வாவி அமிர்தம் அலலது ஒன்று' எனக்கொண்டு நீர் வாவியே நச்சுப் பொய்கை எனக் கொள்வதும் பொருத்தமுடைத்து. ஏ: ஈற்றசை. (௯௯)

கஉ௦௫. கையடு சிலையினர் காட்டுள் வாழ்பவர்
பையுடை யாக்கையர் பாவ மூர்த்திய
ரையெனத் தோன்றுவர் தோன்றி யாளழித்
துய்வகை யரிதென வுடலங் கோள்பவே.

(இ - ள்.) காட்டுள் வாழ்பவர் - (அவற்றைக் காத்துக்) காட்டில் வாழ்கின்றவர்கள்; கை அடு சிலையினர் - கையிலே கொல்லும் வில்லினர்; பையுடை யாக்கையர்-பை அணிந்த மெய்யினர்; பாவமூர்த்தியர் - பாவமான உருவத்தினர்; ஐயெனத் தோன்றுவர் - விரையத் தோன்றுவர்; தோன்றி உய்வகை அரிது என - அங்ஙனந் தோன்றிப் பிழைத்தல் அரிது என்று கூறி; ஆள் அழித்து உடலம் கொள்ப - (அவ்வாவிகளை விரும்பி அணுகிய) ஆட்களை அழித்து உடலைக் கொண்டு செல்வர்.

(வி - ம்.) வாவிகளை அணுகியவரைப் பாவமூர்த்தியர் எனக் கூறுவர் நச்சினார்க்கினியர். 'பையுள் உடை யாக்கையர்' என்பது விகாரப்பட்டது எனினும் ஆம். பையுள் - துன்பம். ஐ எனத் தோன்றுவர் என்பதற்கு இவர் வடிவு அழகு என்று நினைக்கும்படி தோன்றுவர் எனவும் பொருள் கூறலாம். (௪௦)

கஉ0சு. அண்ணன்மே லரிவையர் கண்ணின் மோய்த்தவண்
மண்ணின்மேன் மாந்தர்கண் மோய்க்கும் வாவியை
யெண்ணமோன் றின்றியே யிடத்திட் டேகினுற்
றண்ணெனச் சிலையவர் தொழுது காண்பவே.

(இ-ள்.) அண்ணல்மேல் அரிவையர் கண்ணின் மொய்த்து-அண்ணலாகிய நின்மேல் அரிவையர் கண்கள் மொய்க்குமாறு போல நெருங்கி; மண்ணின் மேல் மாந்தர்கள் அவண் மொய்க்கும் வாவியை - நிலவுலகிலுள்ள மக்கள் அவ்விடத்தை மொய்க்கும் அக் குளங்களை; இடத்து இட்டு எண்ணம் ஒன்று இன்றியே ஏகினல் - இடப்பக்கத்தே விட்டு அவற்றைக் கொள்ள வேண்டுமென்னும் நினைவு சிறிதும் இல்லாமலே போனல்; சிலையவர் தண் எனத் தொழுது காண்ப - அச் சிலையவர் தணுக்கென மொய்த்துத் தொழுது காண்பார்கள்.

(வி - ம்.) 'நல்வினையுடையோரெனத் தொழுது காண்பர்' என்பர் நச்சினர்க்கினியர். ஆகவே, அவ்வாவிகட்கு இடமே செல்க என்றான்.

கஉ0எ. பாடல்வண் டியாழ்செயும் பசும்போற் கிண்கிணித்
தோடலர் கோதைமின் றுளும்பு மேகலை
யாடிய கூத்தித.னசைந்த சாயல்போன்
றூடுபோக் கினியதங் கோரைங் காதமே.

(இ - ள்.) பாடல் வண்டு யாழ் செயும் அங்கு ஓர் ஐங்காதம்-பாடலையுடைய வண்டுகள் யாழென ஒலிக்கும் அவ்விடத்தே ஐங்காத வழியளவும்; பசும்பொன் கிண்கிணி - பசும்பொன்னு லான கிண்கிணியும்; தோடு அலர் கோதை - இதழ்விரிந்த மலர்க் கோதையும்; மின் துளும்பும் மேகலை - ஒளி ததும்பும் மேகலையும் உடைய; ஆடிய கூத்தி தன் அசைந்த சாயல்போல் - ஆடிய கூத்தியினுடைய இளைத்த தோற்றம் போல; ஊடுபோக்கு இனியது - இடையே செல்வதற்கு இனிமையைத் தருவதாக இருக்கும்.

(வி - ம்.) அகப்பட்டார் நீங்குதல் அரிதாய் இருக்கும் என்பர் நச்சினர்க்கினியர். (சஉ)

கஉ0அ. கோதைவீழ்ந் ததுவேன முல்லை கத்திகைப்
போதுவேய்ந் தினமலர் போழிந்து கற்புடை
மாதரார் மனமேனக் கிடந்த சேந்நேறி
தாதின்மே னடந்ததோர் தன்மைத் தேன்பவே.

(இ - ள்.) கோதை வீழ்ந்தது என முல்லை கத்திகைப் போது வேய்ந்து -(மற்றும்) மாலை வீழ்ந்தது என்னும்படி முல்லை

மலரும் குருக்கத்தி மலரும் அணிந்து; இனமலர் பொழிந்து - மற்றைய இனமலர்கள் தேனைப் பொழிந்து; கற்புடை மாதரார் மனம் எனக் கிடந்த செந்நெறி - கற்புடைய மகளிர் மனம் போலக் கிடந்த செவ்விய நெறி; தாதின்மேல் நடந்தது ஓர் தன்மைத்து என்ப - (நிலத்தின் அன்றி) மகரந்தப் பொடியின் மேல் நடந்ததாகிய ஒரு தன்மையுடையது என்பர்.

(வி - ம்.) கோதை-மலர்மாலை. கத்திகைப்போது-குருக்கத்திமலர். கற்புடை மாதரார்மனம் நெறிக்குத் தூய்மைக்குவமை என்க. செந்நெறி - செவ்விய வழி. தாது - பூந்துகள். (௩௩)

௧௨0௯. மணியியற் பாலிகை யனைய மாச்சுனை
யணிமணி நீண்மல ரணிந்த தாயிடை
யிணைமலர்ப் படலிகை போலு மீர்ம்பொழில்
கணையுமிழ் சிலையினாய் கண்டு சேறியே.

(இ - ள்.) மணி இயல் பாலிகை அனைய மாச்சுனை - மணிகளிழைத்த பாலிகை போன்ற பெரிய சுனையின்; அணிமணி நீள் மலர் அணிந்தது ஆயிடை - அழகிய மணிபோலும் நீண்ட மலர்களாலே அணியப்பட்டதாகிய அவ் வழியையும்; இணைமலர்ப் படலிகை போலும் ஈர்ம்பொழில் - ஒத்த மலர்களையுடைய பூந்தட்டுப் போலும் குளிர்ந்த பொழிலையும்; கணை உமிழ் சிலையினாய்! - அம்பை உமிழும் வில்லுடையாய்!; கண்டு சேறி - பார்த்துச் செல்வாயாக!

(வி - ம்.) இடை - வழி. 'கண்டு சேறி' என்றான் ஒன்றையும் நுகராலாகாது என்பதற்கு.

பாலிகை - வட்டவடிவிற்றாகியதொரு தட்டு. மா - பெருமை. அணி மணி - அழகிய மணி. படலிகை - மலரிட்டு வைக்கும் பெட்டி. ஈர்ம் பொழில் - குளிர்ந்த சோலை. (௩௪)

௧௨௧0. இலைப்போலி பூண்முலை யெரிபொன் மேகலைக்
குலத்தலை மகளிர்தங் கற்பிற் றிண்ணிய
வலைத்துவீ ழருவிக ளார்க்குஞ் சோலைசூழ்
வலத்தது வனகிரி மதியிற் றோன்றுமே.

(இ - ள்.) இலைப்பொலி பூண்முலை எரி பொன் மேகலை - இலை வடிவமான அணிகளால் விளக்கமுறும் முலையினையும், ஒளிரும் பொன் மேகலையையும் உடைய; குலத்தலை மகளிர் தம் கற்பின் திண்ணிய - நற்குலப் பெண்டிரின் கற்பைப்போலத் திண்மையுடைய; அலைத்துவீழ் அருவிகள் ஆர்க்கும் சோலை சூழ் வனகிரி - பொன் மணி முதலியவற்றை அலைத்து வீழும் அருவிகள் ஒலிக்கும், சோலைகள் சூழ்ந்த வனகிரி; வலத்தது -

வலப்பக்கத்தே உள்ளது; மதியின் தோன்றும் - (அருவியாலும் குளிர்ச்சியாலும்) திங்களைப்போலத் தோன்றும்.

(வி - ம்.) திண்ணிய வனகிரி, அருவிகள் ஆர்க்கும் வனகிரி, சோலைசூழ் வனகிரி எனத் தனித்தனியே கூட்டுக. (சு௫)

கஉகக. கரியவன் றிருமுடி கவிழ்த்த சேவடிப்
பெரியவன் றிருமொழி பிறழ்த லின்றியே
மரியவ ருறைதலின் மதன கீதமே
திரிதரப் பிறந்ததோர் சிலம்பிற் றென்பவே.

(இ - ள்.) கரியவன் திருமுடி கவிழ்த்த சேவடிப் பெரியவன் - இந்திரன் தன் திருமுடியைச் சாய்த்து வணங்கிய சிவந்த அடிகளையுடைய அருகப் பெருமான்; திருமொழி பிறழ்தல் இன்றியே - கூறிய அருகாகமத்திற் கூறியவை தவறுதல் இல்லாமலே; மரியவர் உறைதலின் - அதிலே பொருந்திய முனிவர்கள் வாழ்தலாலே; மதனகீதமே திரிதர-காமனது பாட்டொன்றுமே அவ்விடத்தில் இல்லாமல்; பிறந்தது ஓர் சிலம்பிற்று என்ப - பிற ஓசைகள் யாவும் உண்டாகிய ஒப்பற்ற பக்கமலையினை உடையது அவ்வனகிரி என்பர்.

(வி - ம்.) சிலம்பு - பக்கமலை.

வானோர் இறைவனும் வணங்கும் சேவடியையுடைய பெரியவன்; அவன், அருகன் என்க. திருமொழி - ஆகமம். மரியவர் என்பது மருவியர் என்பதன் விகாரம். மதனகீதம் - காமத்தைக் கிளர்ச்சியுறச் செய்யும் இசைகள். திரிதருதல் - பிறழ்தல். ஈண்டு நீங்க என்னும் பொருட்டாய் நின்றது. சிலம்பிற்று - ஓசையையுடையது. (சுசு)

கஉகஉ. ஏற்றரு மணிவரை யிறந்து போனபின்
மாற்றரு மணநெறி மகளிர் நெஞ்சமே
போற்பல கவர்களும் பட்ட தாயிடை
யாற்றல்சால் செந்நெறி யறியக் கூறுவாம்.

(இ - ள்.) ஏற்று அரு மணிவரை இறந்து போனபின் - ஏறுமிடம் அரிய அம்மலையைக் கடந்து சென்ற பிறகு; மால் தரும் மணநெறி மகளிர் நெஞ்சமேபோல் - மயக்கந்தரும் கலவி நெறியுடைய பரத்தையரின் உள்ளமேபோல; பல கவர்களும் பட்டது - வழியானது பல கிளைகளையும் உடையது (ஆதலின்); ஆயிடை ஆற்றல்சால் செந்நெறி அறியக் கூறுவாம் - அவ்வழியிடத்துச் செல்லுதல் அமைந்த செவ்விய வழியை அறியுமாறு கூறுவோம்.

(வி - ம்.) 'மாற்ற அரு நெஞ்சம்' எனக் கொண்டு, 'வசப்படுத்த முடியாத உள்ளம்' என்பர் நச்சினார்க்கினியர். 'கவர்ப்பு' என்பது 'கவர்' என ஆனது விகாரம். (சஎ)

கஉகங. சுரும்புசூழ் குவளையோர் சுனையுண் டச்சுனை
மருங்கிலோர் மணிச்சிலா வட்ட முண்டவண்
விரும்பிவண் டிமிர்வதோர் வேங்கை வேங்கையின்
மருங்கிலோர் செந்நெறி வகுக்கப் பட்டதே.

(இ - ள்.) சுரும்புசூழ் குவளை ஓர் சுனை உண்டு-வண்டுகள் சூழும் குவளைகளையுடைய ஒரு சுனை உளது; அச் சுனை மருங்கில் ஓர் மணிச் சிலாவட்டம் உண்டு - அச்சுனையின் அருகிலே ஒரு வட்டப் பாறை உளது; அவண் வண்டு விரும்பி இமிர்வது ஓர் வேங்கை - அங்கே வண்டுகள் விரும்பி முரல்வதாகிய ஒரு வேங்கைமரம் உளது; அவ் வேங்கையின் மருங்கில் ஓர் செந்நெறி வகுக்கப்பட்டது - அவ் வேங்கையின் அருகில் உள்ள செவ்விய நெறியே நான் முன்னர் உரைக்கப்பட்டது.

(வி - ம்.) ஓர் சுரும்புசூழ் குவளைச் சுனையுண்டு என மாறுக. குவளைச்சுனை-குவளை மலரையுடைய சுனை சிலாவட்டம்-வட்டப்பாறை. இமிர்வது-முரல்வதற்கு இடமானது. அவ்வேங்கையின் மருங்கில் என்க.

வேறு

கஉகச. கைம்மலர்த் தனைய காந்தட் கடிமலர் நாறு கான
மொய்ம்மலர்க் குவளைக் கண்ணி மொய்ம்பநீ முழுது நீந்தி
வைம்மலர்த் திலங்கு வேள்வேன் மத்திம தேய மாளுங்
கோய்ம்மலர்த் தாரிறனைக் கண்ணுறு குணம தென்றான்.

(இ - ள்.) மொய்ம்மலர்க் குவளைக் கண்ணி மொய்ம்ப! - நெருங்கிய குவளை மலர்க் கண்ணியை உடைய தோளனே!; கைம்மலர்த்த அனைய காந்தள் கடிமலர் நாறு கானம் - கையை விரித்தாற் போன்ற காந்தளின் மணமுறு மலர் கமழும் கானம்; முழுதும் நீ நீந்தி - முழுவதையும் நீ கடந்து சென்று; வை மலர்த்து இலங்கு வெள்வேல் மத்திம தேயம் ஆளும் - கூர்மை மிக்கு விளங்கும் வேலையுடைய, மத்திம நாட்டைக் காக்கும்; கொய்ம்மலர்த் தாரினனை-கொய்த மலர் மாலையுடைய மன்னனை; **கண்உறு** ! - காண்பாயாக!; அது குணம் என்றான்-அது நினக்கு ஊழால் அமையக் கூடியது என்று சுதஞ்சணன் இயம்பினான்.

(வி - ம்.) கடிமலர் - மணமுடைய மலர். மொய்ம்மலர் - செறிந்த மலர். மொய்ம்ப : விளி. மொய்ம்பு - தோள்; வலிமையுமாம். கண்ணுறு என்பது ஏவல் வினை. அது குணம் என மாறுக. குணம்-பண்பு. (சுக)

கஉகரு. மண்ணகங் காவன் மன்னன் மாதரம் பாவை மாசி
லோண்ணுதன் மகளைத் தந்தீங் குறைகென வோழுது நாளுள்
வெண்மதி யிழந்த மீன்போற் புல்லென வெய்தி நின்ற
வண்ணனின் றேழ ரேல்லா மவ்வழி யடைவ ரென்றான்.

(இ - ள்.) மண் அகம் காவல் மன்னன் மாதர் அம் பாவை மாசு இல் ஒண் நுதல் மகளை - (அந் நாட்டிலே) நிலவுலகின் காவலனாகிய வேந்தன், காதலை யூட்டும், அழகிய பாவை போன்ற, குற்றம் அற்ற, ஒள்ளிய நெற்றியளாகிய தன் மகளை ; தந்து ஈங்கு உறைக என - நினக்குக் கொடுத்து, ஈங்கே யிருப்பாயாக என்று கூறுதலால் ; ஒழுகும் நாளுள் - நீயும் அங்கே உறையும் போது ; வெண்மதி இழந்த மீன்போல் - வெண் திங்களை யிழந்த விண்மீன்களைப்போல ; புல் எனவு எய்தி நின்ற - பொலிவிழந்து வருத்தம் அடைந்து நின்ற ; அண்ணல் நின் தோழர் எல்லாம் - அண்ணலாகிய நின் தோழர்கள் யாவரும்; அவ்வழி அடைவர் என்றான் - அவ்விடத்தே வந்து நின்னைச் சேர்வர் என்றான்.

(வி - ம்.) மன்னன் என்றது தடமித்தனை. மாதர் - காதல். பாவை : ஆகுபெயர்; உவமையாலே. வருத்தம் எய்தி நின்ற என வருவித் தோதுக. தோழர் அண்ணல், விளி. அண்ணலும் நின்தோழரும் எனக் கொண்டு நந்தட்டனும் நின்தோழரும் என்பர் நச்சினார்க்கினியர். (௩௦)

வேறு

௧௨௧௬. நெட்டிடை நெறிகளு நிகரில் கானமு
முட்டுடை முடுக்கரு மொய்கொள் குன்றமு
நட்புடை யிடங்களு நாடும் பொய்கையு
முட்பட வுரைத்தன னுறுதி நோக்கினான்.

(இ - ள்.) நெட்டிடை நெறிகளும் - நீண்ட இடத்தை யுடைய வழிகளும் ; நிகர் இல் கானமும் - ஒப்பற்ற காடுகளும்; முட்டு உடை முடுக்கரும் - போக்கற்ற அருவழிகளும் ; மொய் கொள் குன்றமும் - நெருங்கிய குன்றுகளும்; நட்பு உடை இடங் களும் - உறவு கொள்ளும் இடங்களும் ; நாடும் - நாடுகளும் ; பொய்கையும் - பொய்கைகளும் ; உட்பட உரைத்தனன் - பிற வும் அடங்க (முதலிற்) கூறியவனாகி ; உறுதி நோக்கினான் - பின்னர் அவனுக்கு நன்மை தரும் மந்திரங்களைக் கூற நினைந்தான்.

(வி - ம்.) முட்டுடை முடுக்கர் - நல்லதோர் வழிபோற்றோன்றி நடந்திடின் நன்றிதேறாப் புல்லர்தம் நட்புப்போலப் போய் அறத்தேய்வ தாகிய வழியையுடைய சந்து. உறுதி - மந்திரம்; ஆகுபெயர். (௩௧)

௧௨௧௭. செல்கதி மந்திரஞ் செவியிற் செப்பிய
மல்லலங் குமரனை வாழ நாட்டவே
வல்லவன் மந்திர மூன்றுங் கோள்கெனச்
சொல்லின னவற்றது தொழிலுந் தோன்றவே.

(இ - ள்.) செல்கதி மந்திரம் செவியில் செப்பிய மல்லல் அம் குமரனை - நற்கதியிற் சேரும் மந்திரத்தைத் தன் காதில் ஓதிய, ஆற்றல் உறும் அழகிய சீவகனை; வாழ நாட்டவே வல்ல வன் - வாழ நிறுத்த வன்மையுடைய சுதஞ்சணன்; மந்திரம் மூன்றும் கொள்க என - இம் மந்திரம் மூன்றையும் குறிக் கொள்க என்று; அவற்றது தொழிலும் தோன்றச் சொல்லினன் - அவற்றின் தந்திரமும் விளங்கக் கூறினன்.

(வி - ம்.) செல்கதி மந்திரம் செவியிற் செப்பிய மல்லலங்குமரனை என்றது சீவகன் சுதஞ்சணனுக்குச் செய்த உதவியைத் தேவர் நமக்கு நினைவூட்டியபடியாம். வாழநாட்டுதலாவது-இன்புற்றமர்ந்து வாழும்படி நிலைநிறுத்துதல். (கஉ)

கஉகஅ. கடுந்தொடைக் கவர்கணைக் காமன் காமுறப்
படுங்குர றருமிது பாம்பு மல்லவுங்
கடுந்திற னோய்களுங் கெடுக்கும் வேண்டிய
வுடம்பிது தருமென வுணரக் கூறினான்.

(இ - ள்.) கடுந்தொடை கவர்கணை காமன் காம் உறப்படும் குரல் தரும் இது - விரைந்து தொடுக்கப்படுவதும் ஆண் பெண்களில் ஒருவருக்கொருவர் கவர்ச்சியை உண்டாக்குவதும் ஆகிய அம்பினையுடைய காமனும் விரும்பும் குரலைத் தருவது இம் மந்திரம்; பாம்பும் அல்லவும் கடுந்திறல் நோய்களும் கெடுக்கும் (இது) - பாம்பின் நஞ்சையும், ஒழிந்த மண்டலி முதலியவற்றின் நஞ்சினையும், காற்று நீர் நெருப்பு முதலியவற்றையும், நோய்களையும் கெடுக்கும் இம் மந்திரம்; வேண்டிய உடம்பு தரும் இது - வேண்டிய உடம்பைத் தருவது இம் மந்திரம்; என உணரக் கூறினான் - என்று விளங்க அறியுமாறு உரைத்தான்.

(வி - ம்.) கவர்கணை - ஒருவர் நெஞ்சினை ஒருவர் கவர்தற்குக் காரணமான மலரம்பு காமனும் எனல் வேண்டிய சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. இது-இம்மந்திரம். இது என்னும் சுட்டினைப் பாம்புடனேயும் ஒட்டுக. அல்லவும்-பாம்பல்லாத ஏனைய நஞ்சுடையனவும். கடுந்திறல் நோய் என்றது மனித முயற்சியாற் றடுக்கவொண்ணாத காற்று இடி முதலியவற்றால் உண்டாகும் துன்பங்களை. (கந)

வேறு

கஉகக. கந்தடு களிறு கொல்லுங்
கருவரை யுழுவை யன்னான்
மந்திர மூன்று மோதி
வானவிற் புரையும் பைந்தா

ரிந்திரன் றன்னை நோக்கி
யியக்கியர் குழாத்தை நோக்கிச்
சிந்தையிற் செல்வ லென்றான்
றேவனுஞ் செலவு நேர்ந்தான்.

(இ - ள்) கந்து அடு களிறு! கொல்லும் - கட்டுத் தறியை முறிக்கும் களிற்றைக் கொல்லுகின்ற; கருவரை உழுவை அன்னான் - கரிய வரிகளையுடைய புலியைப் போன்ற சீவகன்; மந்திரம் மூன்றும் ஓதி - மந்திரம் மூன்றையும் கற்றுக்கொண்டு; வானவில் புரையும் பைந்தார் இந்திரன் தன்னை நோக்கி - வான வில்லைப் போன்ற புதிய மாலையணிந்த இந்திரன் போன்ற சுதஞ் சணனைப் பார்த்து; இயக்கியர் குழாத்தை நோக்கி - (அவன் மனைவியரான) இயக்கியரின் கூட்டத்தைப் பார்த்து; சிந்தையின் செல்வன் என்றான் - என் விருப்பப்படி ஏகுவேன் என்றான்; தேவனும் செலவு நேர்ந்தான் - சுதஞ்சணனும் அவன் போவதற்கு ஒருப்பட்டான்.

(வி - ம்.) தூர கமனமும் கலைகளில் ஒன்றாதலின், 'சிந்தையிற் செல்வன்' என்பதனால் அக் கலைவல்லவனென்பது பெற்றாம். செல்வ மிகுதியால் இந்திரன் உவமையானான். (கூச)

கஉஉ0. மனைப்பெருங் கிழத்தி மாசின்
மலைமக டன்னை யான்சென்
றெனைத்தொரு மதியி னுங்கோ
லெய்துவ தென்று நெஞ்சி
னினைத்தலுந் தோழ னக்கு
நிழலுமிழ்ந் திலங்கு செம்பொற்
பனைத்திரண் டனைய தோளாய்
பன்னிரு மதியி னென்றான்.

(இ - ள்.) மனைப் பெருங் கிழத்தி மாசு இல் மலைமகள் தன்னை - பெருமை தங்கிய இல்லக் கிழத்தியாகிய குற்றம் அற்ற தத்தையை; எனைத்து ஒரு மதியின் யான் சென்று எய்துவது ஆம் என்று - எவ்வளவினதாகிய ஒரு திங்களிலே நான் சென்று கூடும் இயல்பு உண்டாகுமோ என்று; நெஞ்சில் நினைத்தலும் - உள்ளத்தில் எண்ணியவுடனே; தோழன் நக்கு - சுதஞ்சணன் நகைத்து; நிழல் உமிழ்ந்து இலங்கு செம்பொன் பனை திரண்டனைய தோளாய் - ஒளி வீசி விளங்கும், பொன்னணி புனைந்த, பனை திரண்டாற் போன்ற தோளனே!; பன்னிரு மதியின் என்றான் - நீ அவளைக் கூடுவது பன்னிரண்டாந் திங்களில் என்றான்.

(வி - ம்.) கொல்: அசை. பன்னிரு மதியின்: இன்: சாரியை; ஏழனுருபு என்றும் புறனடையாற் கொள்கவென்றும் நச்சினார்க்கினியர் கூறுவர். மற்றும் அவர், 'வெள்ளிமலையிற் றேன்றி வந்த மனைப்பெருங் கிழத்தி தன்னை, மாசில்லாத மகள்தன்னை' எனப் பிரித்துக் கூட்டித் தத்தையையும் குணமாலையையுங் கொள்க என்பர். 'சீவகன் பன்னிரு மதிக்குள்ளே இராசமா புரத்தே சென்று குணமாலையை எய்தினனேனும் மனக்கவற்சி யின்றி நிலைபெற இருந்து எய்தாமையின் அதனைத் தேவன் கூறுகின்றிலன்' என்றும், 'இனித் தத்தையையே நினைந்தானென்னிற் குணமாலையை வரைந்ததற்கு நிகழ்ந்த ஊடல் தீர்த்துப் புணராமையின், அவளையே நினைந்தான் என்க' என்றும் நச்சினார்க்கினியரே கூறுவதாலும், 'முன்னையாள் போன்று தத்தை முகத்துளே தோன்றுகின்றாள்' (௧௯௨௯) எனப் பின்னரும் தத்தையையே நினைந்தான் என வருவதாலும் அங்ஙனம் பிரித்துக்கூட்டி இருவராக்கிக் கூறுதலிற் பயனின்றென்க. 'மனைப் பெருங்கிழத்தி'யைக் குணமாலையெனக் கூறுவதும் பொருத்தமின்று, 'பெருங்கிழத்தி' தத்தையே ஆதலான். (௫௫)

௧௨௨௧. ஆறிரு மதியி னெய்தி யரட்டனை யடர்த்து மற்றுன்
வீறுயர் முடியுஞ் சூடி விழுநிலக் கிழமை பூண்டு
சாறயர்ந் திறைவற் பேணிச் சார்பறுத் துய்தி யென்று
கூறினன் கதிர்கள் பொங்குங் குளிர்மணி முடியினனே.

(இ - ள்.) ஆறிரு மதியின் எய்தி - பன்னிரண்டாந் திங்களிலே இராசமாபுரமடைந்து; அரட்டனை அடர்த்து - கட்டியங்காரனைக் கொன்று; மற்று உன் வீறுயர் முடியும் சூடி - பிறகு, உனக்குத் தொன்றுதொட்டு வந்த சிறப்புற்றுயர்ந்த முடியையும் புனைந்து; விழுநிலக் கிழமை பூண்டு - விழுமிய நிலவுரிமையைக் கொண்டு; சாறு அயர்ந்து - விழாக் கொண்டாடி; இறைவன் பேணி - அருகப் பெருமானை வழிபட்டு; சார்பு அறுத்து உய்தி என்று - பிறப்பைக் கெடுத்து வீடு பெறுவை என்று; கதிர்கள் பொங்கும் குளிர்மணி முடியினன் கூறினன் - ஒளி வீசும் தண்ணிய மணிமுடியுடைய சுதஞ்சணன் உரைத்தான்.

(வி - ம்.) உரிமை மகளிர் முன் கூறினைதலின் வெளிப்படையானவற்றை விளம்பினன். (௫௬)

௧௨௨௨. சொற்றிறற் சூழ்ச்சி மிக்க சுதஞ்சணன் சுருங்க நாடி
விற்றிறற் றநசிற் கெல்லாம் வேறுவே றுரைப்பக் கேட்டே
சுற்றிய தோழி மாரை விடுத்தனன் றெழுது நின்றான்
கற்பக மரமுஞ் செம்பொன் மாரியுங் கடிந்த கையான்.

(இ - ள்.) சொல் திறல் சூழ்ச்சி மிக்க சுதஞ்சணன் - சொல்வன்மையும் சூழ்ச்சியும் மிகுந்த சுதஞ்சணன்; வில்திறல் குருசிற்கு - வில் வன்மையுடைய சீவகனுக்கு; எல்லாம் சுருங்க நாடி - வேண்டுவன யாவற்றையும் சுருக்கமாக ஆராய்ந்து; வேறு

வேறு உரைப்பக் கேட்டு - தனித் தனியே தெளிவாக உரை விளம்பக் கேட்டு; கற்பக மரமும் செம்பொன் மாரியும் கடிந்த கையான் - கற்பக மரத்தையும் செம்பொன் பெய்யும் முகிலையும் மாற்றிய வண்மையுறுங் கையினனாகிய சீவகன்; சுற்றிய தோழி மாரை விடுத்தனன் தொழுது நின்றான் - சுற்றிலும் உள்ள தோழியரைப் போகவிட்டுச் சுதஞ்சணனைத் தொழுது நின்றான்.

(வி - ம்) மறைமொழி கற்பித்ததனால் ஆசானாகக்கொண்டு தொழுதான். வழிபடு தெய்வத்தைத் தொழுதான் என்றுங் கூறலாம் என்பர். நச்சினார்க்கினியர், 'மறைபொருளல்லாதவற்றை வேறாக நாடி அங்ஙனஞ் சுருங்கக் கூறிப் பின்பு மறைபொருளாகியவற்றை வேறாகக் கொண்டிருந்து கூற' என்று மொழிமாற்றிக் கூறுவர். மற்றும், 'சுதஞ் சணனைத் தொழுது, சுற்றிலுமுள்ள தோழியரை விடுத்துநின்றான்' என்றும் மாற்றிக் கூறுவர். அவ்வாறு பிரிப்பதாற் போதப் பயனின் றென்க. (நிஎ)

வேறு

கஉஉரு. சேட்டிளஞ் செங்கயல் காப்பச் செய்துவிற்
பூட்டிமேல் வைத்தன புருவப் பூமக
ளீட்டிருந் திருநுதற் றிலக மேயென
மோட்டிருங் கதிர்திரை முளைத்த தென்பவே.

(இ - ள்.) சேடு இளஞ் செங்கயல் காப்பச் செய்து - பெருமையும் இளமையுமுடைய செங்கயல்களைக் காக்கச் செய்து; வில்பூட்டி மேல் வைத்த அன புருவப் பூமகள் - வில்லைப் பூட்டி மேலே வைத்தாற் போலும் புருவத்தினையுடைய நிலமகளின்; ஈட்டு இருந்திருநுதல் திலகமே என - ஈட்டப்பெற்ற அழகிய நெற்றியிலிட்ட திலகம்போல; மோடு இருங்கதிர் திரை முளைத்தது - பெருமையுடைய பெரிய ஞாயிறு கடலில் தோன்றியது.

(வி - ம்.) சேடு - பெருமை. கயல் என்றது கண்களை. பூமகள்-நில மகள். மோட்டிருங்கதிர்-பெருமையுடைய பெரிய ஞாயிற்றுமண்டிலம். திரை - கடல்: ஆகுபெயர். (நிஅ)

வேறு

கஉஉச. அழல்போதிந்த நீளேஃகி னலர்தார்
மார்பற் கிம்மலைமேற்
கழல்போதிந்த சேவடியாற் கடக்க
லாகா தெனவெண்ணிக்
குழல்போதிந்த தீஞ்சொல்லார் குழாத்தி
னீங்கிக் கோண்டேந்தி
நிழல்போதிந்த நீண்முடியா னிளைப்பிற்
போகி நிலத்திழிந்தான்.

(இ - ள்.) நிழல் பொதிந்த நீள்முடியான் - ஒளி பதிந்த நீண்ட முடியுடைய சுதஞ்சணன்; அழல் பொதிந்த நீள் எஃகின் அலர்தார் மார்பற்கு - அழலிலே தங்கிய நீண்ட வேலேந்திய, மலர்மாலை யணிந்த மார்பனுக்கு; கழல் பொதிந்த சேவடியால் - கழல் அணிந்த சேவடியினாலே; இம் மலைமேல் கடக்கலாகாது என எண்ணி - இம் மலைமீது செல்ல வியலாது என நினைத்து; குழல் பொதிந்த தீ சொல்லார் குழாத்தின் நீங்கி - குழலின் இசை தங்கிய இனிய மொழியாரின் திரளினின்றும் நீங்கி; ஏந்திக் கொண்டு நினைப்பின் போகி நிலத்து இழிந்தான் - சீவகனை ஏந்தியவாறு நினைவின்படி சென்று நிலமிசை இறங்கினான்.

(வி - ம்.) அழல்-நஞ்சுமாம். எஃகு-வேல். மார்பற்கு-சீவகனுக்கு. கழல் பொதிந்த - வீரக்கழல் கட்டிய. குழல் : ஆகுபெயர்; இசை. நிழல் - ஒளி. முடியான் - சுதஞ்சணன். தீஞ்சொல்லார் - மங்கையார். (ருகூ)

கஉஉரு. வண்டளிர்ச் சந்தனமும் வழையு
மாவும் வான்றீண்டி
விண்டொழுகு தீங்கனிகள் பலவு
மார்ந்த வியன்சோலை
மண்கருதும் வேலானை மறித்துங்
காண்க வெனப்புல்லிக்
கொண்டெழுந்தான் வானவனுங் குருசி
றானே செலவயர்ந்தான்.

(இ - ள்.) வண் தளிர்ச் சந்தனமும் வழையும் மாவும் வான் தீண்டி-வளவிய தளிரையுடைய சந்தனமும் சுரபுன்னையும் மாவும் வானைத் தொட்டு; விண்டு ஒழுகு தீ கனிகள் பலவும் ஆர்ந்த வியன் சோலை - விரிந்து தேன் ஒழுகும் இனிய பழங்கள் பலவும் நிறைந்த பெரிய பொழிலிலே; மண் கருதும் வேலானை மறித்தும் காண்க என-உலகை நினைக்கும் வேலேந்திய சீவகனைத் திரும்பவும் காண்பேனாக என்று கூறி; வானவனும் புல்லிக் கொண்டு எழுந்தான் - சுதஞ்சணன் தழுவிக்கொண்டு சென்றான்; குருசில் தானே செலவு அயர்ந்தான் - சீவகனும் தானே செல்லுதற்குப் புறப்பட்டான்.

(வி - ம்.) பின்னர் முடிசூட்டவும், வீடுபெற்றபடி காண்டற்கும் வருதல் குறித்து, 'மறித்தும் காண்க' என்றான். ஈண்டு, 'மண் கருதும் வேலான்' என்றவாறு, பின்னும், 'மண்கொண்ட வேலான்' (சீவக. உஉருங) என்பர். இதற்குமுன் சீவகன் தனியே போகாமையின், 'தானே செலவயர்ந்தான்' என ஆசிரியர் நொந்துரைத்தார். (சுo)

கஉஉசு. வாளுழலை பாய்ந்திளைய வளநா கிட்டி னமென்னுந்
தாளொழியப் போரேறு தனியேபோந்த தெனவெண்ணி
நீளருவிக் கண்ணீர்வீழ்த் தலறி வண்ணங் கரிந்துருகிக்
கோளுழுவை யன்றற்குக் குன்ற முந்நின் றழுதனவே.

(இ - ள்.) இனம் என்னும் தாள் ஒழிய - தோழராகிய கால் அங்கே நிற்கவும்; வாள் உழலை பாய்ந்து - வாட்படையாகிய தடைமரத்தை நீங்கி; இளைய வளநாகு இட்டு - இளமையும் வளப்பமும் உடைய தத்தை குணமாலையென்னும் நாகுகளைப் பிரிந்து; போர் ஏறு தனியே போந்தது என எண்ணி - சீவகனாகிய போருக்குரிய ஏறு தனியே வந்தது என்று நினைந்து; நீள் அருவிக் கண்ணீர் வீழ்த்து அலறி - நீண்ட அருவியாகிய கண்ணீரை விட்டுக் கதறி; வண்ணம் கரிந்து உருகி - மேனி கருகி அசும்பு வீழ்தலின்; கோள் உழுவை அன்றற்குக் குன்றமும் நின்று அழுதன - கொல்லும் புலியன்னானுக்கு மலைகளும் நின்றழுதன.

(வி - ம்.) ஆசிரியர் தம் குறிப்பை மலைமீதேற்றினார். தோழர் நால்வரும் இவனுக்குக் கால்போறலின் 'தாள்' என்றார். புலிக்குத் தன் காடும் பிறகாடும் ஒக்கும் என்று, 'உழுவை யன்னான்' என்றார். (சுக)

கஉஉஎ. மிக்கார்தங் கேட்டின்கண் மேன்மை
யில்லாச் சிறியார்போ
னக்காங்கே யெயிறுடைந்த நறவ
முல்லை நாள்வேங்கை
தக்கார்போற் கைம்மறித்த காந்த
ளந்தோ தகாதெனவே
தொக்கார்போற் பன்மாவு மயிலுந்
தோன்றித் துளங்கினவே

(இ - ள்.) மிக்கார்தம் கேட்டின்கண் மேன்மையில்லாச் சிறியார்போல் - பெரியோருக்குக் கெடுதி நேர்ந்தபோது உயர்வு கருதாத கீழ்மக்கள் நகுதல் போல; நறவம் முல்லை நாள் வேங்கை நக்கு ஆங்கே எயிறு உடைந்த - தேனுடைய முல்லைகள் அக்காலத்துக்குரிய வேங்கை மரத்தின்கண்ணே நின்று நகைத்து அப்பொழுதே எயிற்றின் தன்மை கெட்டன; தக்கார்போல் காந்தள் 'அந்தோ! தகாது' எனவே கைம் மறித்த - அது கண்டு நன் மக்களைப் போலக் காந்தள், 'அந்தோ! இது தகாது' என்று கைகவித்து விலக்கின; தொக்கார்போல் பல் மாவும் மயிலும் தோன்றித் துளங்கின - (அவ்வளவிலே) சுற்றத்தாரைப் போலே பலவகை விலங்குகளும் மயில்களும் கண்டு நடுங்கின.

(வி - ம்.) மிக்கார் - அறிவு மிக்க சான்றோர். சிறியார் போன்று நகைத்து அப்பொழுதே அத்தீவினையின் பயனாகப் பல்லுடைபட்டன என்றும் ஒரு பொருள் தோன்றுதல் உணர்க. தக்கார் - தகவுடையோர். தொக்கார் - சுற்றத்தினர். (சூஉ)

கஉஉஅ. கோல்லை யகடணைந்து குறும்பு சேர்ந்து தமியாரை
முல்லை முறுவலித்து நகுதிர் போலு மினிநும்மைப்
பல்லை யுகுத்திடுவ மென்று பைம்போ தலர்சிந்தித்
தோல்லை நிறங்கருகித் தும்பி பாய்ந்து துகைத்தனவே.

(இ - ள்.) முல்லை! கொல்லை அகடு அணைந்து-முல்லைகளே! நீங்கள் கொல்லையின் நடுவைச் சேர்ந்து; குறும்பு சேர்ந்து - வேங்கையாகிய அரணை அடைந்து; தமியாரை முறுவலித்து நகுதிர்போலும் - தனித்தவர்களை முறுவல் செய்து இகழுதிர் போலும்!; இனி நும்மைப் பல்லை உகுத்திடுவம் என்று - இங்ஙனம் இகழும் நும்மை இனிமேற் பல்லை உடைத்திடுவோம் என்றுரைத்து; பைம் போது அலர் சிந்தி - புதிய போதினும் அலரினும் உள்ள தேனைத் துளித்து; தொல்லை நிறம் கருகிப் பாய்ந்து - பழமையான தம் நிறம் கருகி அம்முல்லை மலர்களிலே பாய்ந்து; தும்பி துகைத்தன - வண்டுகள் சிதைத்தன.

(வி - ம்.) போது: அலரும் முகை. இம் மூன்று செய்யுட்களினும் இயற்கை நிகழ்ச்சிகளைச் சீவகன் நிலையுடன் குறித்துக் கூறினர் தற்குறிப் பேற்றங் கருதி. 'தும்பி ஆர்ந்து' என்றும் பாடம். (சூகூ)

கஉஉகூ. தோடேந்து பூங்கோதை வேண்டேங் கூந்தறேடே லெம்மில்
பீடேந் தரிவையரிற் பெயர்கென் றூடு மடவார்போற்
கோடேந்து குஞ்சரங்க டெருட்டக் கூடா பிடிநிற்குங்
காடேந்து பூஞ்சாரல் கடந்தான் காலிற் கழலானே.

(இ - ள்.) தோடு ஏந்து பூங்கோதை வேண்டேம் - இதழ் கொண்ட இம் மலர்க் கோதைகளை யாம் விரும்பிலேம்; கூந்தல் தொடேல் - (ஆதலின்) எங் கூந்தலைத் தொடாதே; எம் இல் - (நீ வழி தவறினை) இது எம் இல்லம்; பீடு ஏந்து அரிவையர் இல் பெயர்க - சிறப்புற்ற பரத்தையர் இல்லத்தை அடைக; என்று ஊடும் மடவார்போல்-என்றுரைத்துப் பிணங்கும் மங்கையரைப் போல; கோடு ஏந்து குஞ்சரங்கள் தெருட்ட - கொம்புகளை யுடைய களிறுகள் தெளிவிக்கவும்; பிடிகூடா நிற்கும் - பிடிகள் தெளியாமற் பிணங்கி நிற்கின்ற; காடு ஏந்து பூஞ் சாரல் - காடுகள் பொருந்திய அழகிய சாரலை; கழலான் காலின் கடந்தான் - கழலணிந்த சீவகன் காலாலே கடந்தான்.

(வி - ம்.) இதற்குமுன் காலால் நடந்தறியான் என்பது தோன்றக், 'காலிற் கடந்தான்' என்றார்.

பூங்கோதை வேண்டேம் என்றது, கையுறைமறுத்தல் என்னும் ஓர் அகத்துறையை நினைப்பிக்கின்றது. குஞ்சரங்கள் என்னும் பொதுப்பெயர் ஈண்டுப் பெண்ணொழித்து நின்றது. கூடா : என்பது விகுதி குன்றிய எதிர்மறை வினையெச்சம் ; கூடாமல் என்பது பொருள். (கூச)

வேறு

கஉ௫0. காழக மூட்டப் பட்ட காரிருட் டுணியு மொப்பா
ஞழளை யுடும்பு பற்றிப் பறித்துமார் பொடுங்கி யுள்ளான்
வாழ்மயிர்க் கரடி யொப்பான் வாய்க்கிலை யறித லில்லான்
மேழகக் குரலி ஞனோர் வேட்டுவன் றலைப்பட் டானே.

(இ - ள்.) காழகம் ஊட்டப்பட்ட காரிருள் துணியும் ஒப்பான் - கருமை ஊட்டப்பட்டதோர் இருளின் துண்டமும் போன்றவன் ; ஆழ் அளை உடும்பு பற்றிப் பறித்து மார்பு ஒடுங்கி யுள்ளான் - ஆழமான வளையில் உள்ள உடும்பைப் பிடித்திழுத்தலால் மார்பு ஒடுங்கியவன் ; வாழ் மயிர்க்கரடி ஒப்பான் - மயிர் வாழ்தலாற் கரடி போன்றவன் ; வாய்க்கு இலை அறிதல் இல்லான்- வாய்க்கு வெற்றிலை கண்டறியாதவன் ; மேழகக் குரலினன் - ஆட்டின் குரல்போலும் குரலினன் (ஆகிய) ; ஓர் வேட்டுவன் தலைப்பட்டான் - ஒரு வேடன் எதிர்ப்பட்டான்.

(வி - ம்.) 'வாண்மயிர்' எனவும், 'ஏழகம்' எனவும் பாடம்.

காழகம் - கருமை. இருட்டுணி - இருளினது துண்டு. வாய்க்கிலை: வெற்றிலை. வாய்க்கு + இலை = வாய்க்கிலை. வாய்க்குத் தகுதியுடைய இலை எனவே வெற்றிலையை யுணர்த்தியது. மேழகம்-ஆட்டுக்கிடாய். (கூரு)

கஉ௫க. கோடிமுதிர் கிழங்கு தீந்தேன்
கொழுந்தடி நறவொ டேந்திப்
பிடிமுதிர் முலையி னுடன்
றழைத்துகிற் பெண்ணி னேடுந்
தோடுமேரைத் தோலன் வில்லன்
மரவுரி யுடையன் றேன்ற
வடிநுனை வேலி னன்கண்
டேம்மலை யுறைவ தென்றான்.

(இ - ள்.) கொடிமுதிர் கிழங்கு தீ தேன் கொழுந்தடி நறவொடு ஏந்தி - கொடியில் முற்றிய கிழங்கும் இனிய தேனும் கொழுத்த ஊனும் கள்ளும் ஏந்தி ; பிடிமுதிர் முலையினாள் தழைத் துகில் தன் பெண்ணினோடும் - பிடி போன்ற நடையினாளும் முதிர்ந்த முலையினாளும் தழையாடையுடையவளும் ஆகிய

தன் மனைவியுடன்; தொடு மரைத்தோலன் வில்லன் மாவுரி உடையன் தோன்ற - புனைந்த மான்தோலுடனும் வில்லுடனும் மரவுரியுடனும் காணப்பட; வடி நுனை வேலினான் கண்டு எம்மலை உறைவது என்றான் - கூரிய முனையுடைய வேலனாகிய சீவகன் கண்டு, 'நீ எம்மலையில் வாழ்பவன்' என்று வினவினான்.

(வி - ம்.) கொழுந்தடி - கொழுவிய ஊன். நறவு-கள். முதிர்முலையினாள் : வினைத்தொகை. பெண், ஈண்டு மனைவி என்னும் பொருள்பட நின்றது. தோலன் - செருப்பினன். மான் தோலால் செய்த செருப்பு என்க. மரவுரியாகிய உடையினையுடையன் என்க. வேலினான் : சீவகன். (கூகூ)

கஉ௬உ. மாலைவெள் ளருவி சூடி
மற்றிதா தோன்று கின்ற
சோலைசூழ் வரையி னெற்றிச்
சூழ்கிளி சுமக்க லாற்றா
மாலையந் தினைகள் காய்க்கும்
வண்புன மதற்குத் தென்மேன்
மூலையங் குவட்டுள் வாழுங்
குறவருட் டலைவ னென்றான்.

(இ - ள்.) மாலைவெள் அருவி சூடி இதா தோன்றுகின்ற - மாலைபோல வெள்ளிய அருவியை அணிந்து இதோ காண்குறுகின்ற; சோலைசூழ் வரையின் நெற்றி - சோலை சூழ்ந்த மலையின் உச்சியிலே; சூழ்கிளி சுமக்கல் ஆற்றா மாலை அம் தினைகள் காய்க்கும் வண்புனம் - சூழ்ந்து வரும் கிளிகள் சுமக்க இயலாத, மாலை போல அழகிய தினைகள் விளைந்திருக்கும் வளமுறு புனம் ஒன்று உண்டு; அதற்குத் தென்மேல் மூலை - அப் புனத்திற்குத் தென் மேலை மூலையிலே உள்ள; அம் குவட்டுள் வாழும் குறவருள் தலைவன் என்றான் - அழகிய மலையுச்சியிலே வாழும் வேடர்களுக்குத் தலைவன் யான் என்று அவ் வேடன் விளம்பினான்.

(வி - ம்.) மற்று: அசை. இதா: திசைச்சொல்.

இதா - மரூஉமுடிபுமாம். நெற்றி - உச்சி. மாலையந்தினைகள் - ஒழுங்குபட்ட தினைக்கதிர்கள் எனினுமாம். வண்புனம் - வளப்பமுடைய கொல்லை. தென்மேல் மூலை - தென்மேற்காகிய கோணம். (கூஎ)

கஉ௬௩. ஊழினி ருண்ப தென்னென்
றுரைத்தலு முவந்து நோக்கி
மோழலம் பன்றி யோடு
முளவுமாக் காதி யட்ட

போழ்நிணப் புழுக்க றேனெய்
　　பொழிந்துகப் பெய்த மாந்தித்
தோழயாம் பெரித முண்டுந்
　　தொண்டிக்க ளிதனை யென்றான்.

(இ - ள்.) ஊழின் நீர் உண்பது என் என்று உரைத்தலும் - முறைமையால் நீர் உண்பது யாது என்று வினவினாக; உவந்து நோக்கி - விரும்பிப் பார்த்து; தோழ! - தோழனே!; மோழல் அம் பன்றியோடு முளவுமாக் காதி அட்ட போழ் நிணப் புழுக்கல் - ஆண் பன்றியுடன் எய்ப்பன்றியையும் கொன்று சமைத்த அரிந்த ஊனாகிய புழுக்கலை; தேன் நெய் பொழிந்து உகப்பெய்து மாந்தி - தேனாகிய நெய்யை மிகவும் வார்த்துத் தின்று; தொண்டிக்கள் இதனை யாம் பெரிதும் உண்டும் என்றான் - (பின்னர்) நெல்லாற் சமைத்த கள்ளாகிய இதனை யாம் மிகுதியும் பருகுவோம் என்று வேடன் விளம்பினான்.

(வி - ம்.) ஊழ் - முறைமை. மோழலம் பன்றி - ஆண்பன்றி. முளவுமா - எய்ப்பன்றி; முள்ளம்பன்றி. காதி - கொன்று. போழ்நிணப்புழுக்கல் : வினைத்தொகை. உகப்பெய்து - மிகப்பெய்து. தொண்டிக்கள் - நெல்லாலாக்கிய கள். (௬௮)

௧உ௬௪. ஊனொடு தேனுங் கள்ளு
　　முண்டுயிர் கொன்ற பாவத்
தீனராய்ப் பிறந்த திங்க
　　னினியிவை யொழிமி னென்னக்
கானில்வாழ் குறவன் சொல்லுங்
　　கள்ளொடூன் றென்கை விட்டா
லேனையெம் முடம்பு வாட்ட
　　லெவன்பிழைத் துங்கோ லென்றான்.

(இ - ள்.) ஊனொடு தேனும் கள்ளும் உண்டு உயிர் கொன்ற பாவத்து - (முற்பிறப்பில்) ஊனையும் தேனையும் கள்ளையும் உண்டு உயிரையும் கொன்ற தீவினையால்; இங்கண் ஈனராய்ப் பிறந்தது - இவ்விடத்திலே இழிந்த வேடராய்ப் பிறக்க நேர்ந்தது; இனி இவை ஒழிமின் என்ன - இனி இவற்றைக் கைவிடுங்கள் என்று கூற; கானில்வாழ் குறவன் சொல்லும் - காட்டு வாழ்வுடைய வேடன் விளம்புகிறான்; கள்ளொடு ஊன் கைவிட்டால் எவன் பிழைத்தும் - கள்ளையும் ஊனையும் நீக்கினால் எவ்வாறு உயிர் வாழ்வோம்; எம் உடம்பு வாட்டல் ஏனை (வாட்டுக) என்றான் - (ஆகையால்) எம் உடம்பை வாட்டற்க : மற்றோர் உடம்பை வாட்டுக என்றான்.

(வி - ம்.) ஈனர் - இழிந்தவர்; வேட்டுவர் என்றவாறு. இவை - ஊன் உண்ணல் தேன் கள் உண்ணல் உயிர் கொல்லல் ஆகிய இத்தீய வற்றை. எனே என்பதற்கு மற்று எனப் பொருள் கொள்க. அவ்வுடம்பு வாட்டத்தினின்று எவ்வாறு தப்புவோம் என்றும் பொருள் கொள்ளலாம். (௬௯)

கஉ௩௫. ஊன்சுவைத் துடம்பு வீக்கி நரகத்தி லுறைத னன்றே
வூன்றிஞ துடம்பு வாட்டித் தேவரா யுறைத னன்றே
வூன்றியிவ் விரண்டி னுள்ளு முறுதிநீ யுரைத்தி டென்ன
வூன்றிஞ தொழிந்து புத்தே ளாவதே யுறுதி யென்றான்.

(இ - ள்.) ஊன் சுவைத்து உடம்பு வீக்கி நரகத்தில் உறைதல் நன்றே? - ஊனைச் சுவை பார்த்து உடம்பைப் பெருக்கி நரகத்தில் வாழ்வது நல்லதோ?; ஊன் தினது உடம்பு வாட்டித் தேவராய் உறைதல் நன்றே? - ஊனைத் தின்னுமல் உடம்பை வருத்தி வானவராய் வாழ்வது நல்லதோ?; ஊன்றி இவ் இரண்டினுள்ளும் உறுதி நீ உரைத்திடு என்ன - ஆராய்ந்து இந்த இரண்டின் உள்ளும் நல்லதை நீ கூறுக என்று வினவ; ஊன் தினது ஒழிந்து புத்தேள் ஆவதே உறுதி என்றான் - ஊனைத் தின்னுமல் நீங்கி வானவனுவதே நன்மை என்று வேடன் சொன்னுன்.

(வி - ம்.) வீக்கி - பருக்கச்செய்து. தினது - தின்னுது. ஊன்றி - கூர்ந்து பார்த்து. உறுதி - நல்லது. புத்தேள் - தேவர். (எ0)

கஉ௩௬. உறுதிநீ யுணர்ந்து சொன்ஞ
யுயர்கதிச் சேறி யேடா
குறுகிஞ யின்ப வெள்ளங்
கிழங்குணக் காட்டு ளின்றே
யிறைவனூற் காட்சி கோல்லா
வொழுக்கொடூன் றுறத்தல் கண்டா
யிறுதிக்க ணின்பந் தூங்கு
மிருங்கனி யிவைகோ ளென்றான்.

(இ - ள்.) நீ உறுதி உணர்ந்து சொன்னுய் - நீ நலம் தெரிந்து கூறினை; ஏடா, உயர்கதி சேறி - (ஆதலின்) ஏடா! நீ மேல் நிலை அடைவை; இறைவன் நூல் காட்சி கொல்லா ஒழுக்கொடு ஊன் துறத்தல் கண்டாய் - அருகன் ஆகமத்திற் காணப் படுவன கொல்லா விரதமும் ஊனை நீக்கலும் ஆகும் காண்; காட்டுள் கிழங்கு உண இன்றே இன்ப வெள்ளம் குறுகினுய் - காட்டிலே கிழங்கினை உண்பதனுல் இன்றே இன்பப் பெருக்கை அடைந்தாய்; இறுதிக்கண் இன்பம் தூங்கும் இருங்கனி இவை கொள் என்றான் - நினக்கு இறுதிக் காலத்தே இன்பம் செறியும்

பெருங்கனி இவைகளே என்று கொள்வாய் என்று சீவகன் செப்பினான்.

(வி - ம்.) ஏடா : முன்னிலை ஒருமை விளி.

உயர்கதி - தேவகதி. சேறி - செல்வாய். தெளிவு பற்றி, இன்ப வெள்ளங் குறுகினாய் என்று இறந்த காலத்தாற் கூறினான். காட்டுள் கிழங்குண இன்றே இன்பவெள்ளம் குறுகினாய் என மாறுக. இறைவ னூல் - அருகாகமம். (எக)

கஉ௯எ. என்றலுந் தேனு மூனும் பிழியலு மிறுக நீக்கிச்
சென்றடி தொழுதுசெல்கேன் றேம்பெய்நீள் குன்றமென்று
குன்றுறை குறவன் போகக் கூரேரி வளைக்கப் பட்ட
பஞ்சவர் போல நின்ற பகட்டினப் பரிவு தீர்த்தான்.

(இ - ள்.) என்றலும் - என்றுரைத்தவுடன்; தேனும் ஊனும் பிழியலும் இறுக நீக்கி - தேனையும் ஊனையும் கள்ளையும் முற்றும் துறந்து; சென்று அடிதொழுது - போய் அவன் அடியைத் தொழுது; தேன்பெய் என் நீள்குன்றம் செல்கு என்று - தேன்சொரியும் என்னுடைய பெருமலைக்குச் செல்வேன் என்றுரைத்து; குன்று உறை குறவன் போக - மலை வாழும் வேடன் சென்ற பிறகு; கூர் எரி வளைக்கப்பட்ட பஞ்சவர்போல நின்ற - (அரக்கு மாளிகையிற்) பெருந்தீயினால் வளைக்கப் பெற்ற தருமன் முதலான ஐவரையும்போலக் காட்டுத் தீயால் வளைப்புற்று நின்ற; பகட்டு இனம் பரிவு தீர்த்தான் - யானைத் திரளின் துன்பத்தை நீக்கினான்.

(வி - ம்.) சுதஞ்சணன் மலைக்கும் அரணபாதத்திற்கும் நடுவே இவ்விரண்டறமும் செய்தான். மழையைப் பெய்வித்து யானைகளின் வருத்தத்தை நீக்கினான் என்பர் நச்சினார்க்கினியர். (எஉ)

வேறு

கஉ௯அ. இலங்கொளி மரகத மிடறி யின்மணி
கலந்துபொன் னசும்புகான் றொழுகி மானினஞ்
சிலம்புபாய் வருடையோ டுகளுஞ் சென்னிநீள்
விலங்கல்சென் றெய்தினான் விலங்கன் மார்பினான்.

(இ-ள்.) இன்மணி கலந்து பொன் அசும்பு கான்று சிலம்பு ஒழுகி - இனிய மணிகள் பொன்னுடன் கலந்து ஊற்றுப் பெருகி மலைமீது பரந்து; மான் இனம் இலங்கு ஒளி மரகதம் இடறி - மான்திரள் விளங்கும் ஒளியையுடைய மரகதத்தை இடறி; பாய் வருடையொடு உகளும் - பாயும் மலையாடுகளுடனே துள்ளித் திரிகின்ற; நீள் சென்னி விலங்கல் விலங்கல் மார்பினான்

சென்று எய்தினன் - நீண்ட முடியை உடைய அரணபாதம் என்னும் மலையை மலையனைய மார்பினன் சென்றடைந்தான்.

(வி - ம்.) கான்று - கக்கி, பெருகி. அசும்பு - ஊற்று.

மரகதம் - பச்சைமணி. இன்மணி - காட்சிக்கினிய மணி. சிலம்பு - மலை. வருடை - மலையாடு. சென்னி - உச்சி. விலங்கல் - மலை; ஈண்டு அரணபாதமலை. (எ௩)

கஉ௩சு. அந்தர வகடுதோட் டணவு நீள்புகழ்
வெந்தெரி பசும்பொனின் விழையும் வெல்லொளி
மந்திர வாய்மொழி மறுவின் மாதவ
ரிந்திரர் தொழுமடி யினிதி னெய்தினன்.

(இ - ள்.) அந்தர அகடு தொட்டு - வானின் நடுவைத் தீண்டி; அணவு நீள்புகழ் - பொருந்தும் பெரும் புகழையும்; வெந்து எரி பசும் பொனின் - தீயில் வெந்து ஒளிரும் புதிய பொன்போல; விழையும் வெல்ஒளி - விரும்பத் தகும், பிற ஒளிகளை வெல்லும் ஒளியினையும்; மந்திர வாய்மொழி - மந்திரமாகிய வாய்மொழியினையுமுடைய; மறுஇல் மாதவர் - குற்றம் அற்ற முனிவரரின்; இந்திரர் தொழுமடி - வானவர் வணங்கும் அடியினை; இனிதின் எய்தினன் - வருந்தாமல் அடைந்தான்.

(வி - ம்.) இச் செய்யுளால் மலையடிவாரத்தில் முனிவர்களை முதலில் வணங்கினன் என்றறிக.

அந்தரம் - வானம். அகடு - நடுவிடம். அணவுதல் - வந்தெய்துதல். விழையும்: உவமவுருபு. மந்திரவாய்மொழி - மந்திரமாகிய வாய்மொழி என்க. மாதவர் - அருக சமயத்துறவியர். (எ௪)

வேறு

கஉ௪0. முனிவரு முயன்று வான்கண்
மூப்பிகந் திரிய வின்பக்
கனிகவர் கணனு மேத்தக்
காதிகண் ணரிந்த காசி
றனிமுதிர் கடவுள் கோயி
ருன்வலங் கொண்டு செல்வான்
குனிதிரை முளைத்த வெய்யோன்
குன்றுசூழ் வதனை யொத்தான்.

(இ - ள்.) முனிவரும் வான்கண் மூப்பு இகந்து இரிய இன்பக் கனிகவர் கணனும் முயன்று ஏத்த - முனிவர்களும் வானிடத்துத் தமக்கு வரும் மூப்புக் கைவிட்டுக் கெடும்படி

யாக, ஆங்கே இன்பக் கனியை நுகரும் வானவரும் முயன்று வாழ்த்த ; காதி கண் அரிந்த காசு இல் தனி முதிர் கடவுள் கோயில் - உபாதிகளைத் தன்னிடத்தே நில்லாதவாறு வேறுத்த குற்றம் அற்ற அருகன் கோயிலை ; வலம் கொண்டு செல்வான் - வலம் கொண்டு செல்கிற சீவகன் ; குனிதிரை முளைத்த வெய்யோன் - உயர்ந்து தாழும் அலையுடைய கடலிலே தோன்றிய ஞாயிறு ; குன்று சூழ்வதனை ஒத்தான் - மேருவைச் சூழுந் தன்மையை ஒத்தான்.

(வி - ம்.) வான் - தேவருலகம். கணன் - கணம்; கூட்டம். காதி - ஞானவரணீயம் முதலிய எட்டும். தனிமுதிர் கடவுள் - ஒப்பற்ற பழைய இறைவன் ; அருகன். குன்று ஈண்டு மேரு. (எ௫)

௧௨௪௧. தண்கயக் குற்ற போதுந்
தாழ்சினை யிளிந்த வீயும்
வண்கோடிக் கோய்த பூவும்
வார்ந்துமட் டுயிர்ப்ப வேந்தித்
திண்புக ழறிவன் பாதந்
திருந்துகைத் தலத்தி னேற்றிப்
பண்புகோள் குணங்கோள் கீதம்
பாணியிற் பாடுகின் றான்.

(இ - ள்.) தண் கயம் குற்ற போதும் - குளிர்ந்த குளத்திலே பறித்த போதினையும் ; தாழ்சினை இளிந்த வீயும் - தாழ்ந்த கிளைகளில் இணுங்கின மலரையும் ; வண்கொடி கொய்த பூவும் - செழுவிய கொடிகளிற் பறித்த பூவையும் ; மட்டு வார்ந்து உயிர்ப்ப ஏந்தி - தேன் பிலிற்றிச் சிந்த எடுத்து ; திண்புகழ் அறிவன் பாதம் திருந்து கைத்தலத்தின் ஏற்றி - திணிந்த புகழையுடைய அருகன் திருவடியை அழகிய கைகளால் இட்டு வணங்கி ; பண்புகொள் குணம்கொள் கீதம் - இயல்பு கொண்ட குணங்களைத் தன்னிடத்தே கொண்ட இசையை ; பாணியின் பாடுகின்றான் - தாளத்தோடே பாடுகின்றான்.

(வி - ம்.) குற்றபோது - பறித்த மலர். இளிந்த வீ - இணுங்கின (பறித்த) மலர். மட்டு - தேன். அறிவன் - அருகக் கடவுள். பண்பு - இயல்பு. குணம் - இனிமைத்தன்மை என்க. கீதம் - இசை. பாணி - தாளம். (எ௬)

வேறு

௧௨௪௨. ஆதி வேதம் பயந்தோய்நீ யலர்பெய்ம் மாரி யமைந்தோய்நீ
நீதி நெறியை யுணர்ந்தோய்நீ நிகரில் காட்சிக் கிறையோய்நீ
நாத னென்னப் படுவோய்நீ நவைசெய் பிறவிக் கடலகத்துன்
பாத கமலந் தொழுவேங்கள் பசையாப் பவிழப் பணியாயே.

(இ - ள்.) ஆதி வேதம் பயந்தோய் நீ! - முதல் மறையை நல்கினை நீ!; அலர்பெய் மாரி அமைந்தோய் நீ! - மலர் மாரியிலே பொருந்தினை நீ!; நீதி நெறியை உணர்ந்தோய் நீ! - நன்னெறியை அறிந்தனை நீ!; நிகர்இல் காட்சிக்கு இறையோய் நீ - ஒப்பில்லாத அறிவுக்குத் தலைமையை நீ!; நாதன் என்னப்படுவோய் நீ!-தலைவனென்று கூறப்படுவோய் நீ!; உன் பாத கமலம் தொழுவேங்கள்- (இவ்வாறு) நின் திருவடித் தாமரையை வணங்குவேமுடைய; நவைசெய் பிறவிக் கடலகத்து - குற்றந்தரும் பிறவிக் கடலிலே; பசை யாப்பு அவிழப் பணியாய் - பற்றாகிய தொடர்ச்சி நீங்கும் படி திருவுள்ளம் பற்றுவாய்.

(வி - ம்.) ஆதி வேதம்: கொலை முதலியன கூறாத மறை.

ஆதிவேதம் என்றது, அருகாகமத்தை, "வேதமுதல்வன் விளங்கொளி ஓதிய வேதத்தொளி" என்றார் இளங்கோவடிகளாரும் (சிலப். க0. க௮௬-க0.) நிகரில் காட்சி என்றது, நற்காட்சியை. நாதன் - இறைவன். நவை - துன்பம். பசையாப்பு - ஆசைத்தொடர்பு. (எஎ)

கஉசஙு. இன்னாப் பிறவி யிகந்தோய்நீ
யிணையி லின்ப முடையோய்நீ
மன்னா வுலக மறுத்தோய்நீ
வரம்பில் காட்சிக் கிறையோய்நீ
பொன்னா ரிஞ்சிப் புகழ்வேந்தே
பொறியின் வேட்கைக் கடலழுந்தி
யொன்னா வினையி னுழல்வேங்க
ளுயப்போம் வண்ண முரையாயே.

(இ - ள்.) பொன் ஆர் இஞ்சிப் புகழ் வேந்தே! - பொன்னாற்செய்த மதில் சூழ்ந்த இருப்பிடத்தில் உள்ள புகழ்மிகும் இறையே!; இன்னாப் பிறவி இகந்தோய் நீ! - துன்பப் பிறவியைக் கடந்தனை நீ!; இணைஇல் இன்பம் உடையோய் நீ! - ஒப்பற்ற இன்பம் உடையை நீ!; மன்னா உலகம் மறுத்தோய் நீ - நிலையற்ற துறக்கத்தை வெறுத்தனை நீ!; வரம்புஇல் காட்சிக்கு இறையோய் நீ! - எல்லையற்ற காட்சிக்குத் தலைமையை நீ!; பொறியின் வேட்கைக் கடல் அழுந்தி - ஐம்பொறி வேட்கையாகிய கடலிலே முழுகி; ஒன்னா வினையின் உழல்வேங்கள் - பொருந்தாத தீவினையாலே வருந்தும் யாங்கள்; உயப்போம் வண்ணம் உரையாய் - வாழ்ந்துபோம் வகையை அருளிச் செய்வாய்.

(வி - ம்.) இணையில் இன்பம் - அநந்த சுகம். மறுத்தல் - இன்பத்தைத் தவிர்த்தல்.

இன்னாப்பிறவி - துன்பத்திற்குக் காரணமான பிறப்பு. மன்னா உலகம் - நிலையுதலில்லாத உலகம். இதற்கு நிலைபேறுடைய சுவர்க்கம்

என்று பொருள் கூறுவர். என்னை? அவர் உலகம் நிலையுடையது என்னும் கொள்கையுடையராகலான். இதனை "மூவா முதலா உலகம்" என்ற தொடருக்கு (க) ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறும் உரையானும் உணர்க. (எஅ)

௧௨௪௪. உலக மூன்று முடையோய்நீ
யொண்பொ னிஞ்சி யெயிலோய்நீ
திலக மாய திறலோய்நீ
தேவ ரேத்தப் படுவோய்நீ
யலகை யில்லாக் குணக்கடலே
யாரு மறியப் படாயாதி
கொலையி லாழி வலனுயர்த்த
குளிர்முக் குடையி னிழலோய்நீ.

(இ - ள்.) அலகை இல்லாக் குணக் கடலே! - அளவில்லாத பண்புறு கடலே!; உலகம் மூன்றும் உடையோய் நீ! - மூவுலகையும் உடையை நீ; ஒண்பொன் இஞ்சி எயிலோய் நீ! - சிறந்த பொன்னெயிலுடையை நீ!; திலகம் ஆய திறலோய் நீ! - சிறப்புடைய வரம்பிலா ஆற்றலுடையாய் நீ!; தேவர் ஏத்தப் படுவோய் நீ! - வானவரால் வாழ்த்தப்படுவோய் நீ!; கொலைஇல் ஆழி வலன் உயர்த்த - கொலை செய்யாத அறவாழியை வெற்றிக்காக எடுத்த; குளிர்முக்குடையின் நிழலோய் நீ! - தண்ணிய முக்குடை நீழலில் உள்ளாய் நீ!; ஆரும் அறியப்படாய் ஆதி - நீ எல்லோராலும் அறியப்படுவாய் ஆகின்றாய்.

(வி - ம்.) முக்குடை: சீவக. ௧௩௯௩ அடிக்குறிப்பை நோக்குக. படாய்: செய்யாய் என்னுஞ் சொல் செய்யென் கிளவியாய் நின்றது. இவை மூன்றும் தேவபாணிக் கொச்சக ஒருபோது எனப்படும். இவற்றால் இறைவனைப் பாடினான். (எக)

வேறு

௧௨௪௫. அடியுலக மேத்தி யலர்மாரி தூவ
முடியுலக மூர்த்தி யுறநிமிர்ந்தோன் யாரே
முடியுலக மூர்த்தி யுறநிமிர்ந்தோன் மூன்று
கடிமதிலுங் கட்டழித்த காவலனீ யன்றே.

(இ - ள்.) அடி உலகம் ஏத்தி அலர்மாரி தூவ - அடியை உலகம் போற்றி மலர்மழை பெய்ய; முடி உலகம் மூர்த்தி உற நிமிர்ந்தோன் யார்? - முடிந்த வுலகிலே இறைவனைக் காணும்படி முத்தியை அடைந்தவன் யாவன்!; முடி உலகம் மூர்த்தி உற நிமிர்ந்தோன் -; மூன்று கடிமதிலும் கட்டழித்த காவலன்

நீ அன்றே! - மூன்று காவலையுடைய மதிலையும் காவல் அழித்த காவலன் நீயே அன்றே?

(வி - ம்.) உலகம்: ஆகுபெயர். அலர்மாரி - பூவாகிய மழை என்க. முடியுலகம் : வினைத்தொகை. நிமிர்ந்தவன் - முத்தியை அடைந்தவன். மூன்று கடிமதில் - காமம் வெகுளி மயக்கம் என்கின்ற மூவகை மதில். இவை வீடுபேற்றிற்குத் தடையாய் நிற்றலின் மதில் என்றார். (அ0)

கஉசசு. முரணவிய வென்றுலக மூன்றினையு மூன்றிற்
றரணிமேற் றந்தளித்த தத்துவன்றான் யாரே
தரணிமேற் றந்தளித்தான் றண்மதிபோ னேமி
யரணுலகிற் காய வறிவரனீ யன்றே.

(இ - ள்.) முரண் அவிய வென்று - (மூன்று மதிலையும்) மாறுபாடு கெட வென்று; மூன்றின் உலகம் மூன்றினையும் தரணிமேல் தந்து அளித்த - அங்கம் பூர்வம் ஆதியென்கின்ற மூன்று ஆகமத்தாலும் உலகம் மூன்றின் தன்மையையும் உலகிலே தந்து வெளிப்படக் கூறிய; தத்துவன் தான் யார்? - உண்மைப் பொருளாவான் யார்தான்!; தரணிமேல் தந்து அளித்தான் -; தண்மதிபோல் நேமி - குளிர்ந்த திங்கள்போலும் அறவாழியையுடைய; உலகிற்கு அரண் ஆய அறிவரன் நீ அன்றே- உலகிற்குக் காவலாக உள்ள அறிவுக்கு வரனாகவுள்ள நீயே அன்றோ?

(வி - ம்.) அங்கம் முதலியன சைனாகமங்கள்.

முரண் - மாறுபாடு. மூன்றின் - ஆகமம் மூன்றனும்; அவை யாவன, அங்காகமம், பூர்வாகமம், பகுசுருதியாகமம் என்பன. தத்துவன்- உண்மைப் பொருளாயுள்ளவன். அறிவரன் - அறிவுக்கு வரனாயுள்ளவன். (அக)

கஉசஎ. தீராவினை தீர்த்துத் தீர்த்தந் தெரிந்துய்த்து
வாராக் கதியுரைத்த வாமன்றான் யாரே
வாராக் கதியுரைத்த வாமன் மலர்ததைந்த
காரார்பூம் பிண்டிக் கடவுணீ யன்றே.

(இ - ள்.) தீரா வினை தீர்த்து - நீங்காத வினையை நீக்கி; தீர்த்தம் தெரிந்து உய்த்து - ஆகமத்தை ஆராய்ந்தருளி; வாராக் கதி உரைத்த வாமன்தான் யார்? - மேல் வருதலில்லாத வீட்டினை உரைத்த வாமன் யார்தான்?; வாராக்கதி உரைத்த வாமன்-; மலர் ததைந்த காரார் பூம்பிண்டிக் கடவுள் நீ அன்றே?- மலர்கள் நிறைந்த, கார்காலத்தில் தழைக்கும் அழகிய அசோகின் நீழலில் அமர்ந்த கடவுளாகிய நீயே அன்றோ?

(வி - ம்.) பா: முற்கூறியவை. கந்தருவ மார்க்கத்தால் இடை மடங்கின. இச்செய்யுள் மூன்றும் சாரணரைப் பாடியவை. சாரண ரென்பார் அக் காலத்துத் திருக்கோயிலுக்கு வந்திருந்த முனிவர் என்பர். (அஉ)

### வேறு

கஉசங. அம்மலைச் சினகரம் வணங்கிப் பண்ணவர்
பொன்மலர்ச் சேவடி புகழ்ந்த பின்னரே
வெம்மலைத் தெய்வதம் விருந்து செய்தபின்
செம்மல்போய்ப் பல்லவ தேய நண்ணினான்.

(இ - ள்.) அம்மலைச் சினகரம் வணங்கி - அரணபாதம் என்னும் அம் மலையிலுள்ள திருக்கோயிலை வணங்கி; பண்ணவர் பொன்மலர்ச் சேவடி புகழ்ந்த பின்னர் - ஆண்டுள்ள சாரண ருடைய மலரனைய சிவந்த அடியைப் புகழ்ந்த பிறகு; வெம் மலைத் தெய்வதம் விருந்து செய்தபின் - மலைத்தெய்வமான இயக்கி விருந்தளித்த பின்னர்; செம்மல்போய்ப் பல்லவ தேயம் நண்ணினான் - சீவகன் சாரலூடே சென்று பல்லவ நாட்டை அடைந்தான்.

(வி - ம்.) அம்மலை என்றது அரணபாதம் என்னும் அம்மலையை என்றவாறு. சினகரம் - அருகன்கோயில். பண்ணவர் - சாரணர். மலைத்தெய்வதம் - அம்மலையில் உறையும் இயக்கி. செம்மல் : சீவகன். தேயம் - நாடு (அங)

கஉசசு. அரியலார்ந் தமர்த்தலி னனந்தர் நோக்குடைக்
கரியவாய் நெடியகட் கடைசி மங்கையர்
வரிவரால் பிறழ்வயற் குவளை கட்பவ
ரிருவரை வினாய்நகர் நெறியின் முன்னினான்.

(இ - ள்.) அரியல் ஆர்ந்து அமர்த்தலின் - மதுவை உண்டு பொருதலின்; அனந்தர் நோக்கு உடை - மயங்கிய பார்வை யுடைய; கரியவாய் நெடிய கண் கடைசி மங்கையர் - கொடிய வாயையும் நீண்ட கண்களையும் உடைய உழத்தியராகிய; வரி வரால் பிறழ்வயல் குவளை கட்பவர் இருவரை - வரியையுடைய வரால்கள் பிறழும் வயலிலே குவளையாகிய களையைப் பறிக்கும் இரு மங்கையரை; வினாய், நெறியின் நகர் முன்னினான் - வழி வினவி, அவ்வழியே சென்று பல்லவ நாட்டின் தலைநகரை நெருங்கினான்.

(வி - ம்.) இருவரையும் தனித்தனியே வினவினான் கூறிய வழி சரியா என்று தெரிந்துகொள்ள. குவளையல்லது களையில்லை என்க. கட்பவர் - களைபவர். வினாய் - வினவி; கேட்டு. (அச)

கஉ௫0. அன்னமு மகன்றிலு மணிந்து தாமரைப்
பன்மலர்க் கிடங்குசூழ் பசும்பொற் பாம்புரிக்
கன்னிமூ தெயில்கட லுடுத்த காரிகை
பொன்னணிந் திருந்தெனப் பொலிந்து தோன்றுமே.

(இ - ள்.) அன்னமும் மகன்றிலும் அணிந்து - அன்னத்தையும் மகன்றிலையும் அணியாகக் கொண்டு; தாமரைப் பன்மலர்க் கிடங்குசூழ் - தாமரை முதலிய பல மலர்களையுடைய அகழி சூழ்ந்த; பசும்பொன் பாம்பு உரி கன்னி மூதெயில் - பைம்பொன்னால் இயற்றப்பட்ட ஆளோடிகளையுடைய அழிவற்ற பழம்புரிசை; கடல் உடுத்த காரிகை - கடலை ஆடையாக உடுத்த நிலமகள்; பொன் அணிந்து இருந்தெனப் பொலிந்து தோன்றும்- பூண் அணிந்திருந்தாற்போல அழகுடன் காணப்படும்.

(வி - ம்.) மகன்றில்: ஒருவகைப் பறவை; ஆணும் பெண்ணும் பிரிவில்லாதன; மருத நிலத்திற்குரியன. பாம்புரி - மதிலின் அடியில் உள்ளவை; ஆளோடிகள் என்றும் பெயர் பெறும். பொன்: கருவியாகு பெயராகப் பூண்களை உணர்த்தியது. "மூதெயில்...தோன்றுமே" என வினைமுடிவு செய்க. (அ௫)

கஉ௫க. அகிறரு கொழும்புகை மாடத் தாய்பொனின்
முகிறலை விலங்கிய மொய்கொ ணீள்கொடிப்
பகறலை விலங்குசந் திராபம் பான்மையி
னிகறலை விலங்குவேற் காளை யெய்தினான்.

(இ - ள்.) அகில்தரு கொழும்புகை மாடத்து - அகில் உண்டாக்கின நல்ல புகையையுடைய மாடத்திலே; முகில்தலை விலங்கிய ஆய்பொனின் மொய்கொள் நீள்கொடி - முகில் அங்கு நின்றும் விலகற்குக் காரணமான, ஆய்ந்த பொன்னாலான நெருங்கிய நீண்ட கொடி; பகல்தலை விலங்கு சந்திராபம் - ஞாயிற்றையும் அதனிடத்தே சென்று விலக்கும் சந்திராபம் என்னும் நகரை; இகல்தலை விலங்கு வேல்காளை பான்மையின் எய்தினான்- பகைவரைப் போரிலே விலக்கும் வேலேந்திய சீவகன் முறைப்படி அடைந்தான்.

(வி - ம்.) முகில் இடத்தினின்றும் விலகுதற்குக் காரணமான நீள்கொடி என்க. பகல் - ஞாயிறு. சந்திராபம் - ஒருநகரம். காளை: சீவகன். (அ௬)

கஉ௫உ. மலரணி மணிக்குட மண்ணு நீரொடு
பலர்நலம் பழிச்சுபு பரவ வேகினா
னலர்கதிர் கரும்பினை மடுப்ப வாய்நக
ருலகளந் தானென வுள்புக் கானரோ.

(இ - ள்.) அலர் கதிர் கரும்பிளை மடுப்ப - எழுகின்ற கதிரையுடைய ஞாயிற்றைக் கரிய காக்கை வலமாக நெருங்க; ஆய்நகர் உலகு அளந்தான் என உள்புக்கான் - சந்திராப நகரைக் கண்டு உலகளந்தவனைப்போல உள்ளே சென்றவன்; மலர் அணி மணிக்குடம் மண்ணும் நீரொடு-மலரணிந்த, மணிகள் இழைத்த குடத்தில் உள்ள மண்ணும் நீரினால்; பலர் நலம்பழிச்சுபு பரவ ஏகினன் - பலரும் ஆட்டி இவனுடைய பண்பைப் புகழ்ந்தேத்தச் சென்றான்.

(வி - ம்.) கரும்பிள்ளை - காக்கை. சீவகன் வடக்கு நோக்கிச் செல்லும்போது, மேற்கிருந்த காகம் ஞாயிற்றின் மேற்செல்லவே காகம் வலமாயிற்று. இந் நிமித்தத்தின் பயனால் மண்ணு நீரால் ஆட்டும் வரவேற்புக் கிடைத்தது. 'மழகளிற் றெருத்தில் தந்த மணிக்குடம் மண்ணு நீரால் - அழகனை மண்ணுப் பெய்தாங்கு' (சீவக. கருசரு) என்பர் பின்னும். இனி நாட்டிற்கும் ஊரிற்கும் தனித்தனியே இரண்டு நிமித்தமாக்கி யுரைப்பாரும் உளர் என்பர் நச்சினார்க்கினியர். காகம் வலமாதல் நாட்டிலும், மண்ணு நீராட்டல் நகரிலும் நிமித்தமெனக் கொள்ளல் வேண்டும் அவர் கருத்துப்படி. (அஎ)

வேறு

கஉருரு. சந்தனக் காவு சூழ்ந்து சண்பக மலர்ந்த சோலை
வந்துவீழ் மாலை நாற்றி மணியரங் கணிந்து வானத்
திந்திர குமரன் போல விறைமக னிருந்து காண
வந்தர மகளி ரன்னார் நாடக மியற்று கின்றார்.

(இ - ள்.) சந்தனக் காவு சூழ்ந்து - சந்தனக் காவினைச் சூழ; சண்பகம் மலர்ந்த சோலை - சண்பகம் பூத்த பொழிலிலே; வந்துவீழ் மாலை நாற்றி - நிலத்தில் வந்து விழும் மாலைகளைத் தூக்கி; மணி அரங்கு அணிந்து-மணிகள் இழைத்த மேடையை அணிசெய்து; வானத்து இந்திர குமரன்போல இறைமகன் இருந்து காண - வானத்திலுள்ள இந்திரன் மகனான சயந்தன் போல அரசன் மகன் அமர்ந்து காணுமாறு; அந்தர மகளிர் அன்னார் நாடகம் இயற்றுகின்றார் - விண்ணவர் மகளிர் போன்றார் நாடகம் நடத்துகின்றனர்.

(வி - ம்.) சீவகன் செல்லும்போது நகரில் நாடகம் நடைபெறுகிறதென்று கொள்க.

சந்தனக்காவு - சந்தனச்சோலை. அரங்கு - கூத்தாடு மேடை இந்திரகுமரன் - சயந்தன். இறைமகன் - உலோகபாலன். அந்தர மகளிரன்னார் - தேவமகளிரை ஒத்த கூத்தியர். காவு - சோலை. நாற்றி - தொங்கவிட்டு. இஃது பிறவினை. நான்று என்பது தன்வினை. "இந்திரகுமரன் போல" என்றதற்கு ஏற்ப, "அந்தர மகளிரன்னார்" என்றார். (அஅ)

கஉருச. குழலெடுத் தியாத்து மட்டார்
கோதையிற் பொலிந்து மின்னு
மழலவிர் செம்பொற் பட்டங்
குண்டல மாரந் தாங்கி
நிழலவி ரல்குற் காசு
சிலம்பொடு சிலம்ப நீடோ
ளழகிகூத் தாடு கின்றா
ளரங்கின்மே லரம்பை யன்னாள்.

(இ - ள்.) *அரம்பை அன்னாள் நீள்தோள் அழகி* - வானவர் மகள் போன்றாளாகிய நீண்ட தோளையுடைய அழகி பொருத்தி; *குழல் எடுத்து யாத்து* - கூந்தலை எடுத்துக் கட்டி; *மட்டுஆர் கோதையின் பொலிந்து* - தேன் நிறைந்த மலர்மாலையாலே அழகு பெற்று; *மின்னும் அழல் அவிர் செம்பொன் பட்டம் குண்டலம் ஆரம் தாங்கி* - நெருப்பென ஒளிரும் செம்பொன்னாலான பட்டமும் குண்டலமும் ஆரமும் அணிந்து; *அல்குல் நிழல் அவிர்காசு சிலம்பொடு சிலம்ப* - அல்குல் மேலணிந்த மேகலைக்காசுடன் சிலம்பும் ஒலிக்க; *அரங்கின் மேல் கூத்து ஆடுகின்றாள்* - அரங்கின்மீது கூத்தாடுகின்றாள்.

(வி - ம்.) "வாடிய வண்தளிர் அன்ன மேனி - ஆடியன் மகளிர் அமைதி கூறின் - நெறியின் நீங்கிய நெடிய ரல்லோர் - குறியிற் குறைந்த குறியர் அல்லோர் - பாற்கடல் இல்லாப் பருமை யில்லோர்" என்னும் சூத்திரத்திற் கூறிய நிலைகளுடனே ஆசிரியன் இட்ட அழகு கிடத்தலின், அழகி யென்றார் - என்பர் நச்சினார்க்கினியர். (அக)

கஉருரு. தண்ணுமை முழவம் வீணை
குழலொடு குயிலத் தண்பூங்
கண்ணொடு புருவங் கைகால்
கலையல்கு னுசுப்புக் காம
ரொண்ணுதல் கொண்ட வாடற்
றெட்டிமை யுருவ நோக்கி
வெண்ணெய்தீ யுற்ற வண்ண
மாடவர் மெலிகின் றாரே.

(இ - ள்.) *தண்ணுமை முழவம் வீணை குழலொடு குயில* - தண்ணுமையும் முழவமும் வீணையும் குழலும் ஒத்திசைக்க; *தண்பூங் கண்ணொடு புருவம் கைகால் கலை அல்குல் நுசுப்பு காமர் ஒண் நுதல் கொண்ட* - தண்ணிய மலரனைய கண் முதலாக அழகிய ஒள்ளிய நுதலாள் கொண்ட; *ஆடல் தொட்டிமை*

உருவம் நோக்கி - கூத்தின் ஒற்றுமையான வடிவைப் பார்த்து; வெண்ணெய் தீ உற்ற வண்ணம் ஆடவர் மெலிகின்றார் - வெண்ணெய் தீயிலே உற்றாற்போல ஆடவர்கள் மெலிகின்றனர்.

(வி - ம்.) தண்ணுமை - குடமுழவு. முழவம் - மத்தளம். குழல் - வேய்ங்குழல். குயிலுதல் - ஈண்டு இசைத்தல். தொட்டிமை - ஒற்றுமை. (கூ0)

கஉருசு. பாடலோ டியைந்த வாடல் பண்ணமை கருவி மூன்றுங்
கூடுபு சிவணி நின்று குழைந்திழைந் தமிர்த மூற
வோடரி நெடுங்க ணம்பா லுளங்கிழிந் துருவ வெய்யா
வீடமை பசும்பொற் சாந்த மிலயமா வாடு கின்றாள்.

(இ - ள்.) பாட்டொடு இயைந்த ஆடல் பண் அமை கருவி மூன்றும் - பாட்டுடன் பொருந்திய ஆடலும் இசைபொருந்திய வாச்சியமும ஆகிய இம் மூன்றும்; கூடுபு சிவணி நின்று குழைந்து இழைந்து அமிர்தம் ஊற - கூடிப் பொருந்தி நின்று மெல்கிக் கலந்து இனிமை மிக; ஓடு அரி நெடுங்கண் அம்பால் உளம் கிழிந்து உருவ எய்யா - பரவிய செவ்வரி யுடைய நீண்ட கண்ணாகிய அம்பினால் உள்ளம் பிளந்து உருவுமாறு எய்து; ஈடு அமை பசும் பொன் சாந்தம் இலயம்ஆ ஆடுகின்றாள்-இடுதல் அமைந்த பசும்பொன் போன்ற சாந்தம் அழிய ஆடுகின்றாள்.

(வி - ம்) சாந்தம் என்பதைக் கூத்தாடுகின்றவள் பெயராக்கி அதற் கேற்பவும் உரைப்பார்கள். இலயம்ஆ - ஒன்றாக; அழிய. கூடுபு: வினையெச்சம். ஈடு: முதனிலை திரிந்த தொழிற் பெயர். (கூக)

கஉருஎ. வாணுதற் பட்ட மின்ன வார்குழை திருவில் வீசப்
பூண்முலை பிறழப் பொற்றோ டிடவயி னுடங்க வொல்கி
மாணிழை வளைக்கை தம்மால் வட்டணை போக்கு கின்றாள்
காண்வரு குவளைக் கண்ணாற் காளைமே னோக்கி னாளே.

(இ - ள்.) மாண் இழை - சிறந்த அணிகலனுடையாள்; வாள் நுதல் பட்டம் மின்ன - ஒள்ளிய நெற்றியிலே பட்டம் ஒளிபெற; வார் குழை திருவில் வீச - நீண்ட குழைகள் வான வில்லென ஒளிர; பொன் தோடு இடவயின் நுடங்க - இடப் பக்கத்தே பொன் தோடு அசைய; பூண் முலை பிறழ - முலை மிசைப் பூண்கள் பிறழ; ஒல்கி - அசைந்து; வளைக்கை தம்மால் - வளையணிந்த கைகளால்; வட்டணை போக்குகின்றாள் - வர்த்தனை செய்கின்றவள்; காண் வரு குவளைக் கண்ணால் - பார்த்தற்குரிய குவளையனைய கண்களால்; காளைமேல் நோக்கினாள் - சீவகனைப் பார்த்தாள்.

(வி - ம்.) 'வர்த்தனை' 'வட்டணை' ஆயிற்று; தற்பவம். கைவட்டணை யாவன: அப வேட்டிதம், உப வேட்டிதம், வியாவர்த்திதம், பரிவர்த்திதம்; இவை பிறைக்கையாம். 'தற்சனி முதலாப் பிடித்தல் அகம் வரின் - அத் தொழிலாகும் அப வேட்டிதமே' 'தற்சனி முதலாக விடுத்தல் அகம்வர - உய்த்தல் ஆகும் உப வேட்டிதமே' 'கனிட்ட முதலாப் பிடித்தல் அகம்வர - விடுத்தல் ஆகும் வியாவர்த்திதமே' 'கனிட்ட முதலா விடுத்தல் புறம் வரப் - படுத்தல் ஆகும் பரிவர்த் திதமே' "ஆன்ற அபவேட் டிதமுப வேட்டிதம் - தோன்றும் வியாவர்த் திதத் தோடு மூன்றும் - பரிவர்த் திதமு மெனப்பகர்ந்தா ரித்தை - உரிமைப் பிறைக்கையா லூர்.' (கஉ)

கஉருஅ. நோக்கினு ணெடுங்க ணென்னுங்
குடங்கையா னொண்டு கொண்டு
வாக்கமை யுருவின் மிக்கான்
வனப்பினைப் பருக விப்பா
லாக்கியவிலய நீங்கிற்
றணங்கனு ணெடுங்கண் பில்கி
வீக்குவார் முலையி னெற்றி
வெண்முத்தஞ் சொரிந்த வன்றே.

(இ - ள்.) நோக்கினுள் நெடுங்கண் என்னும் குடங்கையால் நொண்டு கொண்டு-பார்த்தவள் நீண்ட கண்களாகிய உள்ளங்கையாலே முகந்து கொண்டு; வாக்கு அமை உருவின் மிக்கான் வனப்பினைப் பருக-கவிகளாற் புகழ்தல் ஆகா வடிவிற் சிறந்தான் அழகினைப் பருகுதலாலே; இப்பால் ஆக்கிய இலயம் நீங்கிற்று - இவ்விடத்துக் கண் முதலியவற்றால் ஆக்கிய தாள அறுதிகள் நீங்கின; அணங்கனுள் நெடுங்கண் பில்கி - (மற்றும் இமையாமல் நோக்கியதனாற் கரித்து) தெய்வப் பெண் போன்ற அவளுடைய கண்கள் சிறு துவலையை வீசி; வார் வீக்கு முலையின் நெற்றி வெண்முத்தம் சொரிந்த - வாரினாற் கட்டப் பெற்ற முலை முகட்டிலே வெண் முத்தனைய நீர்த்துளியைச் சொரிந்தன.

(வி - ம்.) இது பெருமை பற்றிய மருட்கை யென்னும் மெய்ப்பாடு (தொல். மெய்ப் - எ.) கண்கரித்த நீர் வீழ்தலின் அழுகையென்னும் மெய்ப்பாடாகாது. (கஙு)

கஉருசு. செருக்கய னெடுங்க ணாளத் திருமகன் காண்ட லஞ்சி
நெருக்கித்தன் முலையின் மின்னு நிழன்மணி வடத்தை மாதர்
பொருக்குநூல் பரிந்து சிந்தாப் பூவெலாங் கரிந்து வாடத்
தரிக்கிலாள் காமச் செந்தீத் தலைக்கொளச் சாம்பினாளே.

(இ - ள்.) செரு கயல் நெடுங்கணாள் - பொருகின்ற கயலனைய நீண்ட கண்ணினாள்; அத் திருமகன் காண்டல் அஞ்சி-

அந்த அரசகுமரன் கண்ணீரைப் பார்த்தற்கு அஞ்சி; தன் மூலையின் மின்னும் நிழல் மணிவடத்தை நெருக்கி - தன் முலைகளினாலே ஒளிவிடும் முத்து வடத்தை நெருக்கி; பொருக்கு நூல் பரிந்து சிந்தா - அக் கண்ணீருக்கு ஒப்பாக நூலை அறுத்து முத்துக்களைச் சிந்தி; மாதர் பூ எலாம் கரிந்து வாட - அம் மாதர் மலரெலாம் கரிந்து வாடும்படி; காமச் செந்தீ தரிக்கிலாள் - காமத் தீயைப் பொறுக்க இயலாதவளாய்; தலைக்கொளச் சாம்பினாள் - தலைக்கொண்டு வருந்தினாள்.

(வி - ம்.) பொருவுக்கு: பொருக்கு: விகாரம். பொரு - ஒப்பு. மாதர்பூ - விரும்புதற்குக் காரணமான மலர்.

செருக்கயல் நெடுங்கண் - ஒன்றனோடொன்று போர்புரியும் இணைக் கயல்மீனை ஒத்த நெடிய கண்கள். திருமகன் - உலோகபாலன். நிழல் - ஒளி. (௧௪)

௧௨௬௦. கன்னிமை கனிந்து முற்றிக்
காமுறக் கமழுங் காமத்
தின்னறுங் கனியைத் துய்ப்பா
னேந்தலே பிறர்க ளில்லை
பொன்னினா லுடையுங் கற்பென்
றுரைத்தவர் பொய்யைச் சொன்னா
ரின்னிசை யிவற்க லாலென்
னெஞ்சிட மில்லை யென்றாள்.

(இ - ள்.) இன் இசை இவற்கு அலால் என் நெஞ்சு இடம் இல்லை - இனிய புகழையுடைய இவனுக்கன்றி என் உள்ளத்தில் இடம் இல்லை; கன்னிமை முற்றிக் கனிந்து காமுறக் கமழும் காமத்து - (ஆதலின்) கன்னித் தன்மையோடே முற்றிக் கனிந்து மணக்கும் காமமாகிய; இன் நறுங் கனியைத் துய்ப்பான் ஏந்தலே - இனிய பழத்தை நுகர்கின்றவன் இவ் வேந்தலே; பிறர்கள் இல்லை - வேறு இதற்கு உரியார் இல்லை; பொன்னினால் கற்பு உடையும் என்று உரைத்தவர் பொய்யைச் சொன்னார் - பொருளாற் கற்பு அழியும் என்று மொழிந்தவர் பொய்யைப் புகன்றனர். என்றாள் - என்று நினைத்தாள்.

(வி - ம்.) கன்னிமை - கன்னித்தன்மை. கனிதல் - முதிர்தல். ஏந்தலே - சீவகனே. 'பத்துப் பொன்னுக்குமேற் பதிவிரதை இல்லை' என்பது ஒரு பழமொழி. இவற்கு - இச்சீவகனுக்கு. (௧௫)

௧௨௬௧. கருஞ்சிறைப் பறவை யூர்திக் காமரு காளை தான்கொ
லிருஞ்சுற வுயர்த்த தோன்ற லேத்தருங் குருசி றான்கொ
லரும்பெறற் குமர னென்றாங் கறிவயர் வுற்று நின்றா
டிருந்திழை யணங்கு மென்றேட் டேசிகப் பாவை யன்னாள்.

(இ - ள்.) திருந்து இழை அணங்குமென் தோள் தேசிகப் பாவை அன்னாள் - செவ்விய அணிபுனைந்த அணங்கனையாளாகிய தேசிகப் பாவையாகிய அத்தகையினாள்; அரும் பெறற் குமரன் - அருமையாகக் கிடைத்த இக்குமரன்; கருஞ் சிறைப் பறவை ஊர்திக் காமரு காளை கொல்! - பெரிய சிறகுடைய மயில் ஊர்தியாகிய விருப்பூட்டும் முருக வேளோ?; இருஞ் சுறவு உயர்த்த தோன்றல் ஏத்தருங் குருசில் கொல்? - பெரிய சுறாமீனைக் கொடியில் ஏந்திய தோன்றலாகிய புகழற்கரிய காமனோ?; என்று ஆங்கு அறிவு அயர்வுற்று நின்றாள் - என்றெண்ணி அறிவு வருத்தமுற்று நின்றாள்.

(வி - ம்.) தேசிகப் பாவை: அவள் பெயர். அன்னாள் என்பது அவளுடைய கல்வி முதலியவற்றைச் சுட்டி நின்றது. 'பாவை யொப்பாள்' என்று பாடமாயின் இவளுக்கு உவமை கூறியதாகும்; பெயராகாது. ( )

கஉசுஉ. போதெனக் கிடந்த வாட்கண்
புடைபெயர்ந் திமைத்தல் செல்லா
தியாதிவள் கண்ட தென்றாங்
கரசனு மமர்ந்து நோக்கி
மீதுவண் டரற்றுங் கண்ணி
விடலையைத் தானுங் கண்டான்
காதலிற் களித்த துள்ளங்
காளையைக் கொணர்மி னென்றான்.

(இ - ள்.) போது எனக் கிடந்த வாள்கண் புடை பெயர்ந்து இமைத்தல் செல்லாது - மலர் என அமைந்த ஒளி மிகு கண் பிறழ்ந்து இமைத்தல் இல்லை; இவள் கண்டது யாது என்று - இவள் பார்த்தது எது என்றெண்ணி; ஆங்கு அரசனும் அமர்ந்து நோக்கி - அவள் நோக்கின இடத்தே அரசகுமரனும் பொருந்திப் பார்த்து; மீது வண்டு அரற்றும் கண்ணி விடலையைத் தானும் கண்டான் - மேலே வண்டுகள் முரலும் கண்ணியணிந்த சீவகனை அவனும் பார்த்தான்; உள்ளம் காதலில் களித்தது - அப்போது அவன் மனம் விருப்பத்தாலே மகிழ்ந்தது; காளையைக் கொணர்மின் என்றான் - (உடனே) அக் குமரனை இங்கே கொண்டு வருக என்று பணியாட்களைப் பணித்தான்.

(வி - ம்.) போது - பூ; ஈண்டுத் தாமரைப்பூ என்க. குவளைப்பூ என்னினும் பொருந்தும். இவள் - இக்கூத்தி. அரசன் : உலோகபாலன். அமர்ந்து - பொருந்தி. விடலை : சீவகன். காளையை-சீவகனை. இமைத்தல் செல்லாது இவள் கண்டது யாது என்று ஆய்ந்து அரசனும் அமர்ந்து நோக்கி விடலையைத் தானும் கண்டான் என வினை முடிவு செய்க. கண்ணி - மாலை. விடலை : இளைஞன். கண்ணியை பணிந்த விடலை என்க.

(கள)

வேறு

கஉசூரு. கைவளர் கரும்புடைக் கடவு ளாமெனி
னெய்கணை சிலையினே டிவன்க ணில்லையான்
மெய்வகை யியக்கருள் வேந்த னுகுமென்
றையமுற் றெவர்களு மமர்ந்து நோக்கினர்.

(இ - ள்.) கை வளர் கரும்பு உடை கடவுளாம் எனின் - கையிலே வளரும் கரும்புடைய காமன் என்றால்; எய் கணை சிலையினோடு இவன்கண் இல்லை - எய்யும் மலரம்பும் கரும்பு வில்லும் இவனிடம் இல்லை; மெய்வகை இயக்கருள் வேந்தன் ஆகும் என்று - வடிவின் திறனை நோக்கின் இயக்கரின் அரசனாவான் என்று; எவர்களும் ஐயம் உற்று அமர்ந்து நோக்கினர் - எல்லோரும் ஐயம் உற்றுப் பொருந்தப் பார்த்தனர்.

(வி - ம்.) 'கை' என்பதற்கு 'ஒழுக்கம்' எனப் பொருள் கொண்டு 'இல்வாழ்க்கை வளர்தற்குக் காரணமான கரும்பு' என்பர் நச்சினார்க்கினியர். (கூஅ)

வேறு

கஉசூச. மந்திர மறந்து வீழ்ந்து மாநிலத் தியங்கு கின்ற
வந்தர குமர னென்றுங் கியாவரு மமர்ந்து நோக்கி
யிந்திர திருவற் குய்த்தார்க் கிறைவனு மெதிர்கொண் டோம்பி
மைந்தனை மகிழ்வ கூறி மைத்துனத் தோழ னென்றான்.

(இ - ள்.) மந்திரம் மறந்து மாநிலத்து வீழ்ந்து இயங்குகின்ற - வானிற் செல்லும் மறைமொழி மறந்து நிலமிசை விழுந்து உலவுகின்ற; அந்தரகுமரன் என்று ஆங்கு யாவரும் அமர்ந்து நோக்கி - வானுறுகுமரன் என்று அங்குள்ள எல்லோரும் பொருந்திப் பார்த்து; இந்திர திருவற்கு உய்த்தார்க்கு - இந்திரனைப் போன்ற செல்வமுடைய அரசகுமரனிடம் சேர்த்தவர்க்கு; இறைவனும் எதிர்கொண்டு ஓம்பி - அரசகுமரனும் எதிர்கொண்டு பேணி; மைந்தனை மகிழ்வ கூறி - அவன் மகிழுமாறு பேசி; மைத்துனத் தோழன் என்றான் - நீ என் விளையாட்டுத் தோழன் என்றுரைத்தான்.

(வி - ம்) அந்தரகுமரன்: வானவரில் ஒரு பிரிவு. இளவரசாதலின் 'அரசன்' என்றும் (கஉசூஉ) 'இறைவன்' என்றும் கூறினர்.

மந்திரம் - வான்வழிச் செல்லுதற்குரிய மறைமொழி. அந்தரகுமரன் - தேவகுமரன். அமர்ந்து - விரும்பி. இந்திரதிருவன் - இந்திரன்போன்று செல்வமிக்க உலோகபாலன். மைந்தனை - சீவகனை. மைத்துன முறைமையினையுடைய தோழன். மகிழ்வ - மகிழத்தக்க சொற்கள். இது விளையாலணையும் பெயர். (கக)

க௨சுரு. போதவிழ் தெரிய லானும் பூங்கழற் காலி னானுங்
காதலி னொருவ ராகிக் கலந்துட னிருந்த போழ்தி
னூதவண் டுடுத்த மாலை யுணர்வு பெற் றிலயந் தாங்கிப்
போதுகண் டனைய வாட்கட் புருவத்தாற் கலக்கு கின்றாள்.

(இ - ள்.) போது அவிழ் தெரியலானும்-அரும்பு மலர்ந்த மாலையானை அவ்வரச குமரனும்; பூங் கழற் காலினானும் - அழகிய கழலணிந்த சீவகனும்; காதலின் ஒருவர் ஆகிக் கலந்து உடன் இருந்த போழ்தின் - காதலால் ஒருவரே போலாகி உளங் கலந்து ஒன்றாக அமர்ந்திருந்த போது; ஊதை வண்டு உடுத்த மாலை - முரலும் வண்டுகள் மொய்த்த மாலை போல்வாளான தேசிகப் பாவை; உணர்வு பெற்று - (இனி இவனைப் பெற்றோம் என்று) தெளிவு கொண்டு; இலயம் தாங்கி - தாள அறுதிகளைத் திரும்பவும் ஒழுங்காகக் கொண்டு; போது கண்டனைய வாள்கண் புருவத்தால் கலக்குகின்றாள் - மலரைப் பார்த்தாலனைய ஒளி மிகு கண்ணாலும் புருவத்தாலும் அவையைக் கலக்கத் தொடங்கினாள்.

(வி - ம்.) தெரியலான் - மாலையையுடையவன் : உலோகபாலன். காலினான் : சீவகன். அவையத்தோர் கண்கள் எல்லாம் அவள் அழகினைப் பருகலால் 'ஊது வண்டுடுத்த மாலை' என்றார். இலயம் - தாளவறுதி. கண் புருவ முதலியவற்றாலியற்றும் அவிநயத்தழகாற் காண்போர் உளத்தைக் கலக்கினாள் என்பது கருத்து. (௬௦௦)

க௨சுசு. தேனுகுக் கின்ற கண்ணித்
திருமக ளாட விப்பா
லூனுகுக் கின்ற வைவே
லொருமக னுருமிற் றோன்றி
வானுகுக் கின்ற மீன்போன்
மணிபரந் திமைக்கு மார்பிற்
கானுகுக் கின்ற பைந்தார்க்
காவலற் றொழுது சொன்னான்.

(இ - ள்.) தேன் உகுக்கின்ற கண்ணித் திருமகள் ஆட - தேனைச் சொரிகின்ற கண்ணி புனைந்த திருவனையாள் இங்ஙனம் ஆட; இப்பால் - இங்கு; ஊன் உகுக்கின்ற வை வேல் ஒரு மகன் உருமின் தோன்றி - ஊனைச் சிந்தும் கூரிய வேலணிந்த ஒரு வீரன் இடியெனத் தோன்றி; வான் உகுக்கின்ற மீன்போல் மணி பரந்து இமைக்கும் மார்பில் - வானிலிருந்து சிந்திய மீன்களைப் போல மணிகள் பரவி ஒளிரும் மார்பிலே; கான் உகுக்கின்ற பைந்தார்க் காவலன் தொழுது சொன்னான் - மணங் கமழும் பைந்தாரணிந்த காவலனைத் தொழுது கூறினான்.

(வி - ம்.) வந்த வீரன் கொணரும் செய்தி பதுமை யென்னும் அரசகுமரியைப் பாம்பு தீண்டிய தாதலின் 'உருமின் தோன்றி' என்றார். இனி, 'உருமிற் சொன்னான்' எனக் கொண்டு கூட்டுவர் நச்சினார்க்கினியர். (கಂக)

கஉசுஎ. கோய்தகைப் போதியிற் சோலைக்
குழவிய முல்லை மௌவல்
செய்யசந் திமயச் சாரற்
கருப்புரக் கன்று தீம்பூக்
கைதரு மணியிற் றெண்ணீர்
மதுக்கலந் தூட்டிமாலை
பெய்தோளி மறைத்து நங்கை
பிறையென வளர்க்கின் றாளே.

(இ - ள்.) கொய்தகைப் பொதியில் சோலை - கொய்யத் தகுந்த பொதியில் என்னும் சோலையிலே; குழவிய முல்லை மௌவல் செய்ய சந்து இமயச் சாரல் கருப்புரக் கன்று தீம்பூ - குழவியாகிய முல்லையினையும், செம்முல்லையினையும், செவ்விய சந்தனக் கன்றினையும், இமயச் சாரலில் வளரும் கருப்புரக் கன்றினையும், தீம் பூவையும்; கை தரு மணியின் தெண்ணீர் மதுக் கலந்து ஊட்டி-வரிசையாகப் பதித்த சந்திரகாந்தக் கல்லினின்றுந் தோன்றிய தெளிந்த நீரைத் தேனைக் கலந்து ஊட்டி; மாலை பெய்து ஒளிமறைத்து - மாலையை மூட்டாகப் பெய்து கதிரொளியை மறைத்து; பிறை என நங்கை வளர்க்கின்றாள் - பிறை போலப் பதுமை வளர்க்கின்றனள்.

(வி - ம்.) குழவிய: அ: அசை. 'பிள்ளை குழவி கன்றே போத் தெனக் - கொள்ளவும் அமையும் ஓரறி வுயிர்க்கே' (தொல். மரபு. உச.) இரண்டு மலையினும் இவன் ஆணை அறிவித்தற்குப் 'பொதியிற் சோலைக் குழவிய முல்லை' எனவும், 'இமயச்சாரற் கருப்புரக் கன்றினை'யுங் கூறினார். (கಂஉ)

கஉசுஅ. பவழங்கோள் கோடு நாட்டிப்
பைம்பொனால் வேலி கோலித்
தவழ்கதிர் முத்தம் பாய்த்தித்
தன்கையாற் றீண்டி நன்னாட்
புகழ்கோடி நங்கை தன்பேர்
பொறித்ததோர் கன்னி முல்லை
யகழ்கடற் றானை வேந்தே
யணியெயி றீன்ற தன்றே.

(இ - ள்.) அகழ் கடல் தானை வேந்தே - கடலனைய சேனையையுடைய அரசே!; பவழம் கொள் கோடு நாட்டி-பவழத்தைக் கொள் கொம்பாக நட்டு; பைம் பொனல் வேலி கோலி - புதிய பொன்னல் வேலி வளைத்து ; தவழ் கதிர் முத்தம் பாய்த்தி-பரவும் ஒளியையுடைய முத்துக்களை மணலாகப் பரப்பி ; தன் கையால் தீண்டி - தன் கையாலே தீண்டி; நல் நாள் - நல்ல நாளிலே; புகழ் கொடி நங்கை தன் பேர் - புகழ்பெற்ற கொடி போலும் நங்கையாகிய திலோத்தமையின் பெயரை; பொறித்தது ஓர் கன்னி முல்லையாகிய முல்லை - இட்டு வளர்த்ததாகிய ஒரு கன்னியாகிய முல்லை; அணி எயிறு ஈன்றது - அழகிய முறுவல் போல அரும்பியது.

(வி - ம்.) திலோத்தமை: பதுமையின் நற்றாய்.

கோடு - ஈண்டுக் கொள்கொம்பு. பாய்த்தி-பரப்பி. நங்கை : பதுமையின் நற்றாயாகிய திலோத்தமை. கன்னிமுல்லை - இளமையுடைய முல்லைக்கொடி. எயிறுபோல அரும்பிற்று என்க. (க0௩)

கஉசுகூ. வம்பலர் கோதை சிந்த மயிலென வோருத்தி யோடிக்
கோம்பலர் நங்கை பூத்தாள் போலிகெனக் குனிந்த விற்கீ
ழம்பலர் கண்ணி யார நிதியறைந் தோகை போக்கிக்
கம்பலம் போர்த்த போலுங் கடிமலர்க் காவு புக்காள்.

(இ - ள்.) வம்பு அலர் கோதை சிந்த ஒருத்தி மயில் என ஓடி - (அரும்பியது கண்டு) மணம் விரியும் மலர்மாலை சிந்த ஒரு பணிப் பெண் மயில்போல ஓடிவந்து; கொம்பு! பொலிக! அலர் நங்கை பூத்தாள் என - கொம்பனையாய்! வாழ்க! நங்கை அலர்ந் தாள் என்று சொல்ல; குனிந்த வில் கீழ் அம்பு அலர் கண்ணி - குனிந்த வில்லின்கீழ் அம்பு போல மலர்ந்த கண்களையுடைய பதுமை; நிதி ஆர அறைந்து - செல்வத் திரளை யாரும் நிறையக் கொள்ளுமாறு பறை அறைந்து; ஓகை போக்கி - மகிழ்ச்சியைப் பலரும் அறிய அறிவித்து; கம்பலம் போர்த்த போலும் கடி மலர்க் காவு புக்காள் - கம்பலத்தைப் போர்த்தாற் போலும் மணமலர் நிறைந்த பொழிலை யடைந்தாள்.

(வி - ம்) ஓகை: உவகை யென்பதன் மரூஉ.

வம்பு - மணம். ஒருத்தி - ஒருபணிமகள். கொம்பு : ஆகுபெயர்; விளி. அலர் நங்கை என்றது முல்லைக்கொடியை. கண்ணி : பதுமை. கம்பலம் என்றது சித்திரச் செய்கையுடைய வண்ணப் படாத்தை. "சித்திரச் செய்கைப்படாம் போர்த்ததுவே ஒப்பத்தோன்றிய உவவனம்" என்றார் மணிமேகலையினும் (௩. கசுஎ-க). "நீ வளர்த்த முல்லைக்கொடி நின்முறுவல்போல அரும்பீன்றது" என்று சொல்லக்கேட்ட பதுமை ஓகைபோக்கி காவுபுக்காள் என வினைமுடிவு செய்க. (க0௪)

கஉஎ௦. நறவிரி சோலை யாடி
நாண்மலர்க் குரவம் பாவை
நிறையப்பூத் தணிந்து வண்டுந்
தேன்களு நிழன்று பாட
விறைவளைத் தோளி மற்றென்
றோழியீ தென்று சேர்ந்து
பெறலரும் பாவை கோள்வாள்
பெரியதோ ணீட்டி னாளே.

(இ - ள்.) நறவு விரி சோலை ஆடி - (அடைந்தவள்) தேன் மலர்ந்த பொழிலிலே விளையாடி; நாள் மலர்க் குரவம் பாவை வண்டுந் தேன்களும் நிழன்று பாட நிறையப் பூத்து அணிந்து - நாள் மலரையுடைய குரவம் பாவையை வண்டும் தேனும் நிழல் செய்து பாட நிறைய மலர்ந்து அணிய; இறைவளைத் தோளி ஈது என் தோழி என்று - சிற்றுக்களையுடைய வளையணிந்த தோளினாள் இப் பாவை என் தோழி என்றுரைத்து; பெறல் அரும் பாவை கொள்வாள் சேர்ந்து - கிடைத்தற் கரிய குரா மலரைக் கொள்வதற்கு அதனைத் தழுவி; பெரிய தோள் நீட்டினாள் - பெரிய தோளை நீட்டினாள்.

(வி - ம்.) பாவை - குராமரத்தின் மலர். இது பாவை போலிருக்கும். குரவத்திற்கு 'நாள்மலர்' என்பது பெயரளவில் அடையாய் நின்றது. அணிந்து - அணிய: எச்சத்திரிபு. நிழன்று - நிழல் செய்து; 'ஏரோர்க்கு நிழன்ற கோலினை' (சிறுபாண். உ௩௩) என்றார் பிறரும். நறு என்பது நற என நின்றது. குரா என்பது அங்ஙனம் ஈறு குறுகி அம்சாரியை பெற்று நின்றது. (௧௦௫)

கஉஎக. நங்கைதன் முகத்தை நோக்கி
நகைமதி யிதுவென் றெண்ணி
யங்குறை யரவு தீண்டி
யேளவையோ வென்று போகக்
கோங்கலர் கோதை நங்கை
யடிகளோ வென்று கோம்பேர்
செங்கயற் கண்ணி தோழி
திருமகட் சென்று சேர்ந்தாள்.

(இ - ள்.) அங்கு உறை அரவு - (அப்போது) அக்குரா மரத்தில் வாழும் பாம் பொன்று; நங்கை தன் முகத்தை நோக்கி - பதுமையின் முகத்தைப் பார்த்து; இது நகை மதி என்று எண்ணி - இது மறுவில்லாத ஒளியுறு திங்களென்று நினைத்து; தீண்டி - (முகத்திலே தீண்டாமற் கையிலே) தீண்டியதாக;

ஔவையோ! என்று போக - (பதுமை) அம்மாவோ! என்று செல்ல; கொங்கு அலர் கோதை! நங்கை அடிகளோ என்று - மணம் விரியும் மலர்மாலையாய்! திலோத்தமையார் வந்தாரோ என்று வினவி: கொம்பு ஏர் செங் கயல் கண்ணி தோழி - பூங் கொம்பை ஒக்கும் செவ்வரி பரந்த கயலனைய கண்ணியாளான தோழி; திருமகள் சென்று சேர்ந்தாள் - பதுமையினிடம் போய்ச் சேர்ந்தாள்.

*(வி - ம்.) பாம்பு தீண்டியவுடன் பதுமை, 'அம்மாவோ!' என்று அலறி ஓடினாள். முல்லை மலர்ந்ததைப் பார்க்க வந்த பதுமை தன் நற்றாயையும் வரவேற்றாள் என்று கருதிய தோழி, 'நங்கை அடிகளோ?' என்று வினவியவாறு வந்தாள். 'அங்குறை யரவு' என்பதை 'அம் குறை அரவு' எனப் பிரித்துக், 'குறையரவு' என்பது காலம் நீட்டித் தலாற் பாம்பு குறைந்து, ஒரு கோழி யளவிற்குப் பறந்து செல்லும் என்று கூறி அதனைக் 'குக்குட சர்ப்பம் என்ப' - என்று நச்சினார்க்கினியார் கூறுவர். மற்றும், 'அது அரிகுரற் கோழி நாமத் தரவவட் கடித்ததாக' (சீவக. ௧எ௫௫) என்றதனாலும் உணர்க என்பர். மேலும் 'தடுத்ததனை வெட்டுதல் பாம்பிற் கியல்பாகலின், முகத்தை நோக்கின பாம்பு, அணுகின கையிலே தீண்டிற்று' என்பர். ஏர் - ஒக்கும். (௧0௬)*

௧௨எ௨. அடிகளுக் கிறைஞ்சி யைய

னடிகளைத் தொழுது நங்கை

யடிகளைப் புல்லி யாரத்

தழுவிக்கொண் டௌவை மாரைக்

கொடியனா யென்னை நாளு

நினையெனத் தழுவிக் கொண்டு

மிடைமின்னி னிலத்தைச் சேர்ந்தாள்

வேந்தமற் றருளு கென்றான்.

(இ - ள்.) கொடியனாய்! - கொடி போன்றவளே!, அடிகளுக்கு இறைஞ்சி - எந்தையாகிய தனபதி மன்னரைத் தொழுது; ஐயன் அடிகளைத் தொழுது - எம் தமையனாகிய உலோகபாலனுடைய அடிகளை வணங்கி; நங்கை அடிகளை ஆரப் புல்லி - நற்றாயை நன்றாகத் தழுவி; ஔவைமாரைத் தழுவிக்கொண்டு - மற்றைத் தாயரையும் புல்லிக் கொண்டு; என்னை நாளும் நினை என - என்னை எப்போதும் நினைப்பாயாக என்று கூறி; தழுவிக் கொண்டு மிடை மின்னின் நிலத்தைச் சேர்ந்தாள் - மின்னொடு செறிந்த மின்னைப் போல நிலத்திலே சோர்ந்து விழுந்தாள்; வேந்த! அருளுக என்றான் - இளவரசே! அருள் செய்க என்று வந்த வீரன் கூறினான்.

*(வி - ம்.) பதுமை தன் தோழியை நோக்கித் தனக்காகத் தந்தை முதலியோரை வணங்கவும் தழுவவும் கேட்டுக் கொண்டு சோர்ந்து வீழ்ந்தாள். அடிகளுக்கு: உருபு மயக்கம். (௧0௭)*

கஉஎங. பதுமையைப் பாம்பு தீண்டிற் றேன்றலும் பையு ளெய்திக்
கோதிநனை வேலி ஞயிங் கிருக்கேனக் குருசி லேகிக்
கதுமெனச் சென்று நோக்கிக் காய்சினங் கடிதற் கொத்த
மதிமிகுத் தவல நீக்கு மந்திரம் பலவுஞ் செய்தான்.

(இ - ள்.) பதுமையைப் பாம்பு தீண்டிற்று என்றலும் பையுள் எய்தி - (இங்ஙனம்) பதுமையைப் பாம்பு தீண்டிய தென்றவுடன் வருத்தமுற்று; கோதி நனை வேலினாய் இங்கு இருக்க என - காய்ந்த கூரிய வேலினாய்! இங்கேயே இருப்பாயாக என்று கேட்டுக்கொண்டு; குருசில் ஏகி - உலோக பாலன் அரண்மனைக்குச் சென்று; கதும் எனச் சென்று நோக்கி - விரைந்து பதுமை யிருக்குமிடம் போய்ப் பார்த்து; காய் சினம் கடிதற்கு ஒத்த - நஞ்சின் கடுமையைப் போக்குதற்குரிய; மதி மிகுத்து - அறிவினால் நுனித் தறிந்து; அவலம் நீக்கும் மந்திரம் பலவும் செய்தான் - துன்பத்தை நீக்குதற்குரிய மந்திரத்தைக் கூறி மருந்துகள் பலவற்றையும் செய்தான்.

(வி - ம்.) கஉசுசு - முதல், கஉஎங - வரை எட்டுச் செய்யுட்களையும் ஒரு தொடராக்கிப் 'பதுமையைப் பாம்பு தீண் டிற்றென்றலும் பையுள் எய்திக். கொதிநுனை வேலினானை யிருக்கெனக் குருசில் ஏக' (கஉஎங) என்பதனை முதற்கட் பெய்து, உலோகமா பாலன் போகின்ற போது, 'பாம்பு தீண்டியது எங்ஙனம்?' என வினவினதற்கு, வந்தவீரன் கூறுகின்றானாகக் கொண்டு, 'கொய்தகைப் பொதியிற் சோலை' (கஉசுஎ) முதலாகக் கூறும் செய்தியை அமைப்பர் நச்சினார்க்கினியர். 'இங்ஙனம் மாட்டுறப்பாகக் கூறாது செவ்வனே கூறிற் பாம்பு கடித்தமை கடுகக் கூறிற்றாகாமை உணர்க' என்று மேலும் அவர் காரணங் கூறுவர்.

நூலாசிரியர்க் கில்லாத கருத்தை இவர் புகுத்துகிறார் என்று கொள்ளுத லல்லது இது செவ்வன் உரையாகாது. கதை கூறும் முகத்தால் விரித்துக் கூறினார் என்று கூறுதலே சால்புடையதாகும். (க0அ)

கஉஎச. வள்ளறான் வல்லவெல்லா மாட்டினன் மற்று மாங்க
ணுள்ளவ ரொன்ற லாத செயச்செய வூறு கேளா
தள்ளிலைப் பூணி னாளுக் காவியுண் டில்லை யென்ன
வெள்ளெயிற் றரவு கான்ற வேகமிக் கிட்ட தன்றே.

(இ - ள்.) வள்ளல்தான் வல்ல எல்லாம் மாட்டினன் - உலோகபாலன் தான் கற்றுத் தேர்ந்த விஞ்சைகள் யாவற்றையும் செலுத்தினான்; மற்றும் ஆங்கண் உள்ளவர் ஒன்று அலாத ஊறு செயச் செய - மேலும் ஆங்கு உள்ளவர் எல்லோரும் பல வகையாக உறுவனவற்றைச் செய்யச் செய்ய; கேளாது - (அவற்றைக்) கேளாமல்; அள் இலைப் பூணினாளுக்கு ஆவி உண்டு இல்லை என்ன - கூரிய இலை வடிவமான பூணுடையாளுக்கு உயிர் உண்டு இல்லை என்னும்படி; வெள் எயிற்று அரவு கான்ற வேகம்

மிக்கிட்டது - வெண்மையான பற்களையுடைய பாம்பு உகுத்த நஞ்சின் வேகம் மிகுந்தது.

(வி - ம்.) ஊறு - நஞ்சிற்கு இடையூறான மந்திரமும் மருந்தும்.

வள்ளல் : உலோகபாலன். அன்இலைப்பூணினளுக்கு - நெருங்கிய இலைத்தொழிலமைந்த அணிகலனுடைய பதுமைக்கு. ஆவி - உயிர். நஞ்சின் வேகம் மிக்கது என ஒருசொல் வருவித்துக்கொள்க. (க0௯)

க௨எ௫. பைங்கதிர் மதிய மேன்று பகையடு வெகுளி நாக
நங்கையைச் செற்ற தீங்குத் தீர்த்துநீர் கோண்மி னுடும்
வங்கமா நிதியு நல்கி மகட்டரு மணிசெய் மான்றே
ரெங்களுக் கிறைவ னென்றுங் கிடிமுர செருக்கி னுனே.

(இ - ள்.) பைங்கதிர் மதியம் என்று - புதிய கதிர்களையுடைய (மறுவில்லாத) திங்கள் என்று எண்ணி; பகை அடு வெகுளி நாகம் - (மறு வுற்ற திங்களாகிய) பகையைக் கெடுக்க எண்ணி வெகுண்ட நாகம்; நங்கையை ஈங்குச் செற்றது - பதுமையை இங்குக் கையிலே கடித்தது; மணி செய் மான் தேர் எங்களுக்கு இறைவன் - மணிகளிழைத்த, குதிரை பூட்டிய தேரையுடைய எங்கள் அரசன் தனபதி; நாடும் வங்கம் ஆம் நிதியும் நல்கி மகள் தரும் - (நஞ்சைத் தீர்த்தவற்கு) நாடும் கலம் தந்த செல்வமும் கொடுத்துப் பதுமையையும் அளிப்பான்; நீர் தீர்த்துக்கொண்மின் - நஞ்சைப் போக்கும் ஆற்றலுடையீர் நீக்கி அவற்றை ஏற்றுக் கொண்மின்; என்று ஆங்கு இடிமுரசு எருக்கினுன் - என்றுரைத்து அந் நகரெங்கும் இடியென முரசு அறைவித்தான்.

(வி - ம்.) "பைங்கதிர் மதிய மென்று பகையடு வெகுளி நாகம் நங்கையைச் செற்றது" என்பதற்கு 'மறுச்சேர் மதியாகிய பகையை அடுகின்ற வெகுளியையுடைய நாகம் இது நாம் தீண்டுமதன்றி மறுவிலாத தொரு மதியிருந்ததென்று எண்ணுதலாலே நங்கையைக் கையிலே கடித்தது' எனப் பொருள்விரித்தனர் நச்சினார்க்கினியர். (கக0)

க௨எ௬. மண்டலி மற்றி தென்பா
ரிராசமா நாக மேன்பார்
கோண்டது நாக மேன்பார்
குறைவளி பித்தோ டையிற்
பிண்டித்துப் பெருகிற் றேன்பார்
பெருநவை யறுக்கும் விஞ்சை
யெண்டவப் பலவுஞ் செய்தா
மேன்றுகே ளாதி தென்பார்.

(இ - ள்.) இது மண்டலி என்பார் - இவளைத் தீண்டிய இப் பாம்பு சீதமண்டலி என்பார்; இராசமா நாகம் என்பார் - இராசமா நாகம் என்னும் பாம்பே தீண்டியது என்பார்; கொண்டது நாகம் என்பார் - கடித்தது நாகப் பாம்பே என்பார்; குறை வளி பித்தொடு ஐயில் பிண்டித்துப் பெருகிற்று என்பார் - குறைவான வாதமும் பித்தமும் சிலேத்துமத்தைவிடத் திரண்டு பெருகியது என்பார்; பெரு நவை அறுக்கும் விஞ்சை - பெருங் குற்றத்தைத் தீர்க்கும் மந்திரங்கள்; எண்தவப் பலவும் செய்தாம் - அளவின்றிப் பலவற்றையும் இயற்றினோம்; இது என்று கேளாது என்பார் - இதனை ஏன் என்று கேளாது என்பார்.

(வி - ம்.) 'என்று' என்பதைப், 'பெருநவை அறுக்கும் என்று' என முன்னர்க் கொண்டு கூட்டுவர். 'ஏன்று' எனப் பாடங்கொண்டு, 'ஏற்றுக் கொண்டு' எனப் பொருள் கூறலும் ஒன்று. 'இராசமா மந்தம்' என்றும் பாடம். (கககக)

கஉஎஎ. சிரையைந்தும் விடுது மேன்பார்
தீற்றுதுஞ் சிருங்கி யேன்பார்
குரைபுன லிடுது மேன்பார்
கொந்தழ லுறுத்து மேன்டா
ரிரையென வருந்தக் கவ்வி
யென்புறக் கடித்த தேன்பா
ருரையன்மி னுதிர நீங்கிற்
றுய்யல ணங்கை யேன்பார்

(இ - ள்.) சிரை ஐந்தும் விடுதும் என்பார் - ஐந்து சிரைகளையும் விடுவோம் என்பார்; சிருங்கி தீற்றுதும் என்பார் - சிருங்கியைப் பூசுவோம் என்பார்; குரைபுனல் இடுதும் என்பார் - ஒலிக்கும் நீரில் இடுவோம் என்பார்; கொந்து அழல் உறுத்தும் என்பார் - அழற்றும் நெருப்பினாற் சுடுவோம் என்பார்; இரையென வருந்தக் கவ்வி என்பு உறக் கடித்தது என்பார் - இரையென எண்ணி வருந்தும்படி பற்றி என்பிற்படும்படி கடித்தது என்பார்; உரையன்மின் - பேசாதீர்கள்!; உதிரம் நீங்கிற்று - இரத்தம் போய்விட்டது; நங்கை உய்யலள் என்பார் - இனி இவள் பிழையாள் என்பார்.

(வி - ம்.) சிரை ஐந்து: கையிரண்டு, காலிரண்டு, நெற்றி ஒன்று. சிருங்கி - ஒரு மருந்து; சுக்குமாம். 'சிங்கி' எனப் பாடமாயின் கற்கடக சிங்கி என்க. புனலிலிடுதல்: உயிருண்மை யறிதற்கும் நஞ்சு நீங்கற்கும். அழலுறுத்தல் உயிருண்மை யறிதற்கு. (ககஉ)

கஉஎஅ. கையொடு கண்டங் கோப்பார்
கனைசுட ருறுப்பின் வைப்பார்
தெய்வதம் பரவி யெல்லாத்
திசைதொறுந் தொழுது நிற்பா
ருய்வகை யின்றி யின்னே
யுலகுடன் கவிழு மென்பார்
மையலங் கோயின் மாக்கண்
மடைதிறந் திட்ட தொத்தார்.

(இ - ள்.) கையொடு கண்டம் கோப்பார் - கையையும் கண்டத்தையும் தடைமரத்தைக் கோப்பார்; கனைசுடர் உறுப்பின் வைப்பார் - உறுப்புக்களிலே விளக்கெரிப்பார்; தெய்வதம் பரவி எல்லாத் திசைதொறும் தொழுது நிற்பார் - தெய்வங் களைப் போற்றி எல்லாத் திக்கினும் வணங்கி நிற்பார்; உய்வகை இன்றி இன்னே உலகு உடன் கவிழும் என்பார் - இதனால் அரசன் பிழைக்க வழியின்றேல் உலகும் இன்னே கவிழும் என்பார்; மையல் அம் கோயில் மாக்கள் மடை திறந்திட்டது ஒத்தார் - (இங்ஙனம்) மயக்கத்தையுடைய அரண்மனை மக்கள் ஆரவாரத்தினாலே மடைதிறந்த தன்மையை ஒத்திருந்தனர்.

(வி - ம்.) மக்கட்குரிய மனன் இன்றி அறிவு கெட்டமையின், ஐயறிவுடையரென்று, 'மாக்கள்' என்றார். (கககூ)

கஉஎகூ. வெந்தெரி செம்பொற் பூவும்
விளங்குபொன் னூலும் பெற்றார்
மந்திர மறையும் வல்லா
ரெழாயிரர் மறுவில் வாய்மை
யந்தரத் தறுவை வைப்பா
ரந்தண ரங்கை கொட்டிப்
பைந்தொடிப் பாவை யின்னே
பரிவொழிந் தெழுக வென்பார்.

(இ - ள்.) வெந்து எரி செம்பொன் பூவும் விளங்கு பொன் னூலும் பெற்றார் - தீயில் வெந்து விளங்கும் பொன்மலரும் ஒளிரும் பொன்னூலும் பெற்றவர்களாய்; மந்திரம் மறையும் வல்லார் - மந்திரமும் மறையும் வல்லவர்களாய்; மறுஇல் வாய்மை அந்தரத்து அறுவை வைப்பார் - குற்றம் அற்ற மந்திரத்தாலே வானிலே ஆடையை நிறுவுவார்களாய் உள்ள; எழாயிரர் அந்த ணர்-ஏழாயிரவராகிய அந்தணர்கள்; அங்கை கொட்டி-கையைத் தட்டி; பைந்தொடிப் பாவை இன்னே பரிவு ஒழிந்து எழுக

என்பார் - பைந்தொடி யணிந்த பாவையனையாள் இப்பொழுதே வருத்தம் நீங்கி எழுக என்பார்.

(வி - ம்.) பொற்பூவும் பொற்பூணாலும் அத்தொழிற் றிறமுடையார் என்பதற்குப் பெற்ற சிறப்புக்கள் என்க. மந்திரமும் எனற்பால உம்மை தொக்கது. வாய்மை மந்திரத்திற்கு ஆகுபெயர். அறுவை - புடைவை. பாவை : பதுமை. (௧௧௪)

௧௨அ௰. பாம்பெழப் பாம்பு கொண்டாற் பகவற்கு மரிது தீர்த்த
றேம்பிழி கோதைக் கின்று பிறந்தநா டேளிமி னென்று
காம்பழி பிச்ச மாகக் கணியெடுத் துரைப்பக் கல்லென்
றூம்பழி குளத்திற் கண்ணீர் துகணிலத் திழிந்த தன்றே.

(இ - ள்.) பாம்பு எழப் பாம்பு கொண்டால் பகவற்கும் தீர்த்தல் அரிது-இராகு என்னும் பாம்பு ஞாயிற்றை மறைக்கும் பொழுது பாம்பு தீண்டில் இறைவனுக்கும் அதனைத் தீர்த்தல் அருமை ; தேன்பிழி கோதைக்குப் பிறந்த நாள் இன்று - தேன் பிழியும் கோதையாளுக்குப் பாம்பு எழப் பாம்பு கொண்டதும் இல்லை, பாம்பு தீண்டுகின்ற காலத்துப் பிறந்த நாளும் இல்லை ; காம்பு அழிபிச்சமாகத் தெளிமின் என்று - உதய ஆரூடக் கவிப்புக்களிற் கவிப்பாக ஆராய்ந்து தெளியுங்கோள் என்று ; கணி எடுத்து உரைப்ப - கணி நூலை யெடுத்துக் கூறக்கேட்டு ; கல்லென் தூம்புஅழி குளத்தின் கண்ணீர் துகள் நிலத்து இழிந்தது - கல்லென்னும் ஒலியுடன் மடையுடைந்த குளம்போலக் கண்ணீரானது புழுதியையுடைய நிலமிசை பெருகிற்று.

(வி - ம்.) இன்று: எதிர்மறை வினைக்குறிப்பு முற்று. பிச்சம்-பீலிக்குடை. காம்பு அழிபிச்சம்-காம்பு இல்லாத பீலிக்குடை. ஞாயிற்றின் விமானம் பீலியாற் செய்யப்படுதலின், அதனைப் பீலியாற் செய்யப்படும் பிச்சம் என்றார். எனவே, ஞாயிறு நடுவே கவிப்பாக நின்றது என்ற வாறாயிற்று. இதனாற் பயன்: 'அக் காலத்துத் தெய்வம் மாயோன் ஆதலின், அவன் கருடனுடனே உலகைப்பார்க்கின்றதால், அக்கருடன் பார்வையால் நஞ்சு நீங்குதலாம்' என்பர் நச்சினார்க்கினியர். (௧௧௫)

௧௨அ௧. நங்கைக்கின் றிறத்த லில்லை
நரபதி நீயுங் கேண்மோ
கோங்கலர் கோங்கி னேற்றிக்
குவிமுகிழ் முகட்டி னங்கட்
டங்குதே னரவ யாழிற்
றுனிருந் தாந்தை பாடு
மிங்குநம் மிடரைத் தீர்ப்பா
னிளையவ னுளன்மற் றேன்றான்.

(இ - ள்.) கொங்கு அலர் கோங்கின் நெற்றிக் குவிமுகிழ் முகட்டின் அங்கண் - மணம் பரவும் கோங்கின் உச்சியிலே குவிந்த அரும்பின் முகட்டிலே; தேன் தங்கு அரவயாழின் தான் இருந்து ஆந்தை பாடும் - தேன்போல இனிமை பொருந்திய ஒலியையுடைய யாழினைப்போல ஆந்தை அமர்ந்து பாடும்; நரபதி! நீயும் கேண்மோ - அரசனே! நீயுங் கேட்பாயாக; இங்கு நம் இடரைத் தீர்ப்பான் இளையவன் உளன் - (இந் நிமித்தத்தை நோக்கின்) இங்கே நம் துன்பத்தை நீக்கும் இளைஞன் ஒருவன் இருக்கிறான்; இன்று நங்கைக்கு இறத்தல் இல்லை - இற்றை நாளில் பதுமைக்கு இறப்புக் கிடையாது.

(வி - ம்.) 'மிதுன ராசியிலே தேன் அரவம் தங்கும் கொங்கு அலர் கோங்கின் நெற்றியில் அரும்பின் தலையில் ஆந்தை இருந்து பாடும்' என்பர் நச்சினார்க்கினியர். யாழ் - மிதுனராசி. (கக௬)

கஉ௮உ. பன்மணிக் கடகஞ் சிந்தப்
பருப்புடைப் பவளத் தூண்மேன்
மன்னவன் சிறுவன் வண்கை
புடைத்துமா ழாந்து சொன்ன
னின்னுமொன் றுண்டு சூழ்ச்சி
யென்னொடங் கிருந்த நம்பி
தன்னைக்கூய்க் கொணர்மி னென்றான்
றரவந்தாங் கவனுங் கண்டான்.

(இ - ள்.) பல்மணிக் கடகம் சிந்தப் பருப்பு உடைப் பவளத் தூண்மேல் - பல மணிகள் இழைத்த கடகம் சிந்தும்படி, பருமையுடைய பவளத் தூணின்மேல்; மன்னவன் சிறுவன் வண்கை புடைத்து மாழாந்து சொன்னான் - அரசகுமரன் தன் வளமிகு கையினை மோதி மயங்கி ஒருமொழி யுரைத்தான்; இன்னும் சூழ்ச்சி ஒன்று உண்டு - இன்னும் ஒரு சூழ்ச்சி யுள்ளது; என்னொடு அங்கு இருந்த நம்பி தன்னை - என்னுடன் நாடக அரங்கிலே இருந்த நம்பியை; கூய்க் கொணர்மின் என்றான் - கூவி அழைமின் என்றான்; தர அவனும் வந்து ஆங்குக் கண்டான் - அழைக்க, அவனும் வந்து அந் நிலையைக் கண்டான்.

(வி - ம்.) மந்திரங்கூறுவோர் மருத்துவர் முதலியோர்பால் தனக்குண்டான சினத்தால் உலோகபாலன் தூணைப் புடைத்தான் என்பது கருத்து. பருப்பு - பருமை. மாழாந்து - கையறவானே மயங்கி என்க. சூழ்ச்சி இன்னும் ஒன்றுண்டு என மாறுக. சூழ்ச்சி - ஈண்டு நஞ்சினை அகற்றும் உபாயம். (ககஎ)

கஉஅரு. பறவைமா நாகம் விழ்ந்து
பலவுடன் பதைப்ப போன்றுஞ்
சிறகுறப் பரப்பி மஞ்ஞை
செருக்குபு கிடந்த போன்றுங்
கறவைகன் றிழந்த போன்றுங்
கிடந்தழு கின்ற கண்ணு
ரிறைவளை யவரை நோக்கி
யென்கொடி துற்ற தென்றான்.

(இ - ள்.) பறவை மாநாகம் பல வீழ்ந்து உடன் பதைப்ப போன்றும் - கோழிப் பாம்புகள் பல விழுந்து ஒருங்கே பதைப்பன போன்றும்; மஞ்ஞை சிறகு உறப் பரப்பி செருக்குபு கிடந்த போன்றும் - மயில்கள் சிறகுகளை நன்றாகப் பரப்பி மயங்கிக் கிடந்தன போன்றும்; கறவை கன்று இழந்த போன்றும் - கறவைப் பசுக்கள் கன்றை இழந்து கிடப்பன போன்றும்; கிடந்து அழுகின்ற கண்ணார் இறைவளையவரை நோக்கி - கிடந்து அழுங்கண்ணினராகிய மங்கையரைப் பார்த்து; உற்றது என் கொடிது என்றான் - இவரடைந்தது என்னே கொடிதாயிருந்தது என்றெண்ணினன்.

(வி - ம்.) பறவை மாநாகம்: ஈண்டுப் பெண்பாலாகிய கூனும் குறளும். உவமேயப் பொருள்கள்: மயில் தோழியர்க்கும், கறவை செவிலியர்க்கும் உவமை. (ககஅ)

கஉஅச. ஊறுகோள் சிங்கம் போல வுயக்கமோ டிருந்த நம்பி
கூறினான் கொற்ற வேந்தன் கொழுநிதி நிலத்து மற்றுன்
வீறுயர் புகழை வித்திக் கேண்மையை விளைத்தி யின்னே
நாறுபூங் கோம்ப னாளை நோக்கென நம்பி சொன்னான்.

(இ - ள்.) ஊறுகொள் சிங்கம்போல உயக்கமோடு இருந்த நம்பி கூறினான் - வருத்தமுற்ற சிங்கத்தைப்போல வருந்தியிருந்த உலோக பாலன் கூறினான்; கொற்ற வேந்தன் கொழுநிதி நிலத்து - வெற்றி வேந்தனாகிய வளமிகு செல்வ நிலத்திலே; உன் வீறு உயர் புகழை வித்திக் கேண்மையை விளைத்தி - உன்னுடைய சிறப்பு மிக்க புகழை நட்டு நட்பை விளைக்க வல்லாய்; நாறு பூங் கொம்பனாளை இன்னே நோக்கு என - மணமலர்க் கொடி போன்ற பதுமையை இப்போதே காண்பாயாக என்று சொல்ல; நம்பி சொன்னான் - சீவகன் கூறினான்.

(வி - ம்.) விளைத்தி: படுத்தலோசையாக்குக என்பர் நச்சினார்க்கினியர்.

உயக்கம் - துன்பம். நம்பி இரண்டனுள் முன்னது உலோகபாலன் பின்னது சீவகன். வேந்தன் : தனபதி. புகழ் - ஈண்டு விச்சைக்கு ஆகு பெயர். இவனால் அவர் கேண்மை வளர்தலின் விச்சையை வித்தாகவும் கேண்மையைப் பயிராகவும் உருவகித்தார். (௧௧௯)

௧௨அ௫. புற்றிடை வெகுளி நாகம்
போக்கறக் கொண்ட தேனு
மற்றிடை யூறு செய்வான்
வானவர் வலித்த தேனும்
பொற்றொடிக் கிறத்த லில்லை
புலம்புகொண் டழேற்க வென்றான்
கற்றடிப் படுத்த விஞ்சைக்
காமரு காம னன்னான்.

(இ - ள்.) கற்று அடிப்படுத்த விஞ்சை காமரு காமனை அன்னான்-கற்றுப் பழகிய விஞ்சையையுடைய விருப்பம் பொருந்திய சீவகன் ; புற்றிடை வெகுளி நாகம் போக்கு அறக்கொண்ட தேனும் - புற்றிலுள்ள வெகுளியையுடைய நாகம் மீளாதபடி கடித்ததானாலும் ; மற்று இடையூறு செய்வான் வானவர் வலித்த தேனும் - வேறு இடையூறு செய்வதற்கு விண்ணவர் சூழ்ந்த நிலையாயினும் ; பொற்றொடிக்கு இறத்தல் இல்லை - நங்கைக்கு இறப்புக் கிடையாது ; புலம்பு கொண்டு அழேற்க என்றான் - நீ வருத்தம் கொண்டு அழாதேகொள் என்றான்.

(வி - ம்.) காமன் அன்னான் : சீவகனுக்கு ஒரு பெயர்.

போக்கு - மீட்சி. பொற்றொடிக்கு என்பது சுட்டுப்பொருட்டாய் நின்றது. அழேற்க - அழாதேகொள். (௧௨0)

௧௨அ௬. பொழிந்துநஞ் சுகுத்த லச்ச
மிரைபெரு வெகுளி போகங்
கழிந்துமீ தாடல் காலம்
பிழைப்பென வெட்டி னாகும்
பிழிந்துயி ருண்ணுந் தட்ட
மதட்டமாம் பிளிற்றி னும்ப
ரொழிந்தெயி றானஞ் செய்யுங்
கோளென மற்றுஞ் சொன்னான்.

(இ - ள்) நஞ்சு பொழிந்து உகுத்தல் அச்சம் இரை பெரு வெகுளி போகம் கழிந்து மீதாடல் காலம் பிழைப்பு என - நஞ்சைப் பெய்து சிந்துதல், அச்சம், இரையெனக் கருதுதல், பெரிய வெகுளி, இன்பம், மனக்களி மிகுந்து நின்றாடுதல்,

எதிர்ப்படும் காலம், தனக்குப் பிறர் செய்த பிழையைக் கருது தல் என்று; எட்டின் ஆகும் - எட்டுக் காரணத்தானே கடித்தல் உளதாகும்; உம்பர் தட்டம் அதட்டம் ஆம் பிளிற்றின் உயிர் பிழிந்து உண்ணும் - மேல்வாயிலே தட்டம் அதட்டம் என்னும் எயிறுகளில் உண்டான நஞ்சைக் கடித்த வாயிலே பெய்யுமாயின் உயிரைப் பிழிந்து உண்ணும்; ஒழிந்த எயிறு ஊனம் செய்யும் - மற்றை எயிறுகளிலுண்டான நஞ்சைக் கடித்த வாயிலே காலு மாயின் வருத்தம் உண்டாக்கும்; கோள் என மற்றும் சொன் ஞன் - அறிந்து கொள்ள வேண்டியவை என மேலும் அதனிலக் கணஞ் சில கூறினன்.

(வி - ம்.) உகுத்தல்: தன்னுற் பொறுத்தல் அருமையினுல், ஒன் றைக் கௌவி நஞ்சை உமிழ்தல். போகம் - பிணையுடன் இழைதல்; தட்டம் - மேல்வாய்ப்பல்; அதட்டம் - கீழ்வாய்ப்பல். கொள்ளுதல்: கோளென விகாரம். காலம் ஒழிந்த எழும் அகாலமாம். (கஉக)

கஉஅஎ. அந்தண ஞய மான்பா லவியினை யலர்ந்த காலை
நந்தியா வட்ட நாறு நகைமுடி யரச ஞயிற்
றந்தியா முரைப்பிற் ருழைத் தடமலர் வணிக ஞறும்
பந்தியாப் பழுப்பு நாறிற் சூத்திரன் பால தென்ருன்.

(இ - ள்.) யாம் தந்து உரைப்பின் - நாம் சித்தாரூடம் என்னும் நூலினை ஆராய்ந்துரைத்தால்; ஆன்பால் அவியினை நாறும் அந்தணன் - ஆவின்பாலினுற் செய்த சோறுபோல நாறு மாயின் அப் பாம்பு அந்தணன்பாலதாகும்; அலர்ந்த காலை நந்தியா வட்டம் நாறுமாயின் நகைமுடி அரசன் - அலர்ந்த காலத்தில் நந்தியாவட்டத்தைப்போல நாறுமாயின், அஃது ஒளி முடி அரசன்பாலதாகும்; தாழைநாறும் தடமலர் வணிகன் - தாழை மலர்போல நாறுமாயின் அஃது பெருமலரணிந்த வணிகன்பாலதாகும்; பந்தியாப் பழுப்பு நாறின் சூத்திரன் பாலது என்ருன் - மற்றென்றுங் கூடாத அரிதாரம்போல நாறுமாயின் சூத்திரன்பாலது என்ருன்.

(வி - ம்.) ஆன்பால் போன்று மணமுடைய பாம்பு பார்ப்பனப் பாம்பு; நந்தியாவட்ட மலர்மணக்கும் பாம்பு அரசப்பாம்பு, தாழை மலர் மணக்கும் பாம்பு வணிகப்பாம்பு, அரிதாரம் மணக்கும் பாம்பு சூத்திரப் பாம்பு என்ருன் என்க. (கஉஉ)

கஉஅஅ. கன்னியைக் கடித்த நாகங்
கன்னியே கன்னி நோக்க
மன்னதே யரசர் சாதி
மூன்றெயி றழுந்தி யாழ்ந்த

கொன்னுமா நாகங் கொண்டாற்
கொப்புளாம் விரலிற் றேய்த்தான்
மன்னிய தெண்மட் டாயின்
மண்டலிப் பால தென்றான்.

(இ - ள்.) விரலின் தேய்த்தால் - கடித்த வாயை விரலால் தேய்த்தால்; கொன்னும் மாநாகம் கொண்டாற் கொப்புளாம் - அச்சந்தரும் பெருநாகந் தீண்டியதாயின் கொப்புள் கொள்ளும்; மன்னிய தெள்மட்டு ஆயின் மண்டலிப்பாலது - பொருந்திய தெளிவான தேன்போல நீர் வருமாயின் மண்டலிப் பகுதியாகும்; கன்னியைக் கடித்த நாகம் கன்னியே - (இது கொப்புள் கொள்வதால்) இவளைக் கடித்த பாம்பு கன்னியே; அரசர் சாதி - சாதியும் அரசர் சாதியே; அழுந்தி ஆழ்ந்த மூன்று எயிறு - தைத்து அழுந்தி ஆழ்ந்த பற்கள் யமதூதி ஒழிந்த காளி, காளாத்திரி, இயமன் என்னும் மூன்றுமே; கன்னி நோக்கம் - உதயமும் கன்னியே; அன்னதே - ஆதலின் இஃது இறத்தலில்லை.

(வி - ம்.) குக்குட சர்ப்பமாதலின், அதற்குக் கேடில்லை யென்று கருதி, 'கன்னியே' என்றான்.

இது கொப்புளங் கொள்ளலின் இவளைக் கடித்த பாம்பு கன்னியே என்பது கருத்து. சாதி அரசர்சாதி என்க. காளி காளாத்திரி யமன் யமதூதி என்னும் நான்கு நஞ்சுப் பற்களுள் யமதூதி ஒழிந்த மூன்று பற்களுமே அழுந்தியுள்ளன. (௧௨௩)

௧௨அ௬. குன்றிரண் டனைய தோளான்
கொழுமலர்க் குவளைப் போதங்
கொன்றிரண் டுருவ மோதி
யுறக்கிடை மயில னுடன்
சென்றிருண் டமைந்த கோலச்
சிகழிகை யழுத்திச் செல்வ
னின்றிரண் டுருவ மோதி
நோர்முக நோக்கி னானே.

(இ - ள்.) குன்று இரண்டு அனைய தோளான் செல்வன் - மலைகள் இரண்டு போன்ற தோளையுடைய சீவகனை செல்வன்; கொழுமலர்க் குவளைப் போது அங்கு ஒன்று இரண்டு உருவம் ஓதி - வளமிகு மலராகிய குவளையை அங்கே மூன்று உருவம் ஓதி; உறக்கு இடை மயிலனாள் தன் சென்று இருண்டு அமைந்த கோலச் சிகழிகை அழுத்தி - உறக்கத்திலுள்ள மயில் போன்றவளின் நீண்டு இருண்டு அமைந்த அழகிய மயிர் முடியிலே

அழுத்தி; நின்று இரண்டு உருவம் ஓதி நேர்முகம் நோக்கினன்-பெயர்ந்து நின்று பின்னும் இரண்டு உருவம் ஓதி முகத்தை நேரே நோக்கினன்.

(வி - ம்.) மலர்க்குவளை: மலர்: அடைமொழி. ஒன்றிரண்டு: உம்மைத்தொகை. உருவம்: உரு என்பதன் திரிபு. உறக்கிடை: சாரியை இன்றி உருபேற்றது. முகம் - தியானம். இவன் ஐந்து உரு ஓதினமையின் இம் மந்திரம் பஞ்ச நமஸ்காரம். (கஉச)

கஉகூ0. நெடுந்தகை நின்று நோக்க நீள்கடற் பிறந்த கோலக்
கடுங்கதிர்க் கனலி கோப்பக் காரிரு ளுடைந்த தேபோ
லுடம்பிடை நஞ்சு நீங்கிற் றொண்டொடி யுருவ மார்ந்து
குடங்கையி னெடிய கண்ணாற் குமரன்மே னோக்கி னாளே.

(இ - ள்.) நெடுந்தகை நின்று நோக்க - சீவகன் நின்று நோக்கின அளவிலே; நீள்கடல் பிறந்த கோலக் கடுங்கதிர்க் கனலி கோப்பக் காரிருள் உடைந்ததேபோல் - பெருங் கடலிலே தோன்றிய அழகிய வெங்கதிரையுடைய ஞாயிறு எதிர்ப்படக் கரிய இருள் நீங்கியது போல; உடம்பிடை நஞ்சு நீங்கிற்று - உடம்பிலிருந்து நஞ்சு விலகியது; ஒண்தொடி உருவம் ஆர்ந்து - பின்னர் அக் கதிர் வளையாளின் உருவத்தைக் கண்ணால் அவன் நுகராநிற்க; குடங்கையின் நெடிய கண்ணால் குமரன்மேல் நோக்கினாள் - அவளும் உள்ளங்கை போன்ற நீண்ட கண்களாற் சீவகனை நோக்கினாள்.

(வி - ம்.) ஆர்ந்து - ஆர: எச்சத் திரிபு.

நெடுந்தகை: சீவகன்; நின்று மந்திரமோதி நோக்க என்பது கருத்து. நீள்கடற்பிறந்த கோலக்கடுங் கதிர்க்கனலி என்றது ஞாயிற்று மண்டிலத்தை. இவ்வுவமையடைகள் சீவகன் குடிப்பிறப்பு அழகு ஒளி முதலியவற்றை விளக்கி நின்றன. காரிருள், நஞ்சிற்குவமை. அப் பேரழகினை நோக்கற்கேற்ற கண்ணையுடையாள் என்பார் நெடிய கண்ணால் நோக்கினாள் என விதந்தார். (கஉரு)

கஉகூக. நோக்கினா ணிறையு நாணு
மாமையுங் கவினு நோய்திற்
போக்கினாள் வளையும் போர்த்தாள்
பொன்னிறப் பசலை மூழ்கிற்
றாக்கினா ளநங்க னப்புத்
தூணியை யமரு ளானா
தோக்கிய முருக னஃக
மோரிரண் டனைய கண்ணாள்.

(இ - ள்.) நோக்கினள் நிறையும் நாணும் மாமையும் கவி னும் வளையும் நொய்தில் போக்கினள் - அவ்வாறு நோக்கியவள் தன் நிறையையும் நாணையும் நிறத்தையும் அழகையும் வளையை யும் விரைவிலே போக்கினள்; பொன்நிறப் பசலை போர்த்தாள் - பொன்னிறமான பசலையை உடம்பெலாம் போர்த்தாள்; அமருள் ஆறுது ஒக்கிய முருகன் எஃகம் ஓர் இரண்டு அனைய கண்ணாள் - போரில் அமையாமல் எறிந்த முருகன் ஒருவேல் இரண்டு ஆனது போன்ற கண்ணினள் ஆகிய அவள்; மூழ்கிற்று - காமன் அம்பு உடம்பிலே மூழ்கியது; அநங்கன் அப்புத் தூணியை ஆக்கினள்- (அதனால்) காமனுடைய அம்பறாத் தூணியைத் தன் உடம் பிலே உண்டாக்கினள்.

(வி - ம்) "அஞ்சுடர் நெடுவேல் ஒன்று நின் முகத்துச்-செங்கடை மழைக்கண் இரண்டா ஈத்தது" (சிலப். உ: ௯க-உ) என்றார் பிறரும். (கஉசு)

வேறு

கஉகூஉ. ஆட்சி யைம்பொறி யாள னுடம்பெனும்
பூட்சி நீள்கோடிப் புற்றி னகத்துறை
வாட்க ணோக்கெனும் வையெயிற் றாரழல்
வேட்கை நாகத்தின் மீட்டுங் கோளப்பட்டாள்.

(இ - ள்.) ஆட்சி ஐம்பொறி ஆளன் உடம்பு எனும் - தாம் ஏவல் கொள்ளும் தொழிலையுடைய ஐம்பொறியை ஆளுதலை யுடைய சீவகனது உடம்பு என்னும்; பூட்சி நீள்கொடிப் புற்றின் அகத்து உறை - மேற்கோளாகிய நீண்ட கொடி வளரப்பெற்ற புற்றிலே வாழ்கின்ற; வாள்கண் நோக்கு எனும் வைஎயிற்று ஆரழல் வேட்கை நாகத்தின் - ஒளி பொருந்திய கண்களின் நோக்கம் என்கிற கூரிய பற்களையுடைய வேட்கையாகிய நாகத் தின் நஞ்சாலே; மீட்டும் கொளப்பட்டாள் - திரும்பவும் பற்றப் பட்டாள்.

(வி - ம்.) 'வாட்கண்' என்பதைப் பதுமைக்கு ஆக்குவர் நச்சினார்க் கினியர்.

"நாட்டம் இரண்டும் அறிவுடம்படுத்தற்குக் - கூட்டி யுரைக்கும் குறிப்புரை யாகும்" (தொல். களவு. ரு) என்பதனால், இருவரும் எதிர் நோக்கியவிடத்துக் கூட்டும் குறிப்புரை நிகழ்ந்தும் இயற்கைப் புணர்ச்சி நிகழாமையின், அவட்கு முற்செய்யுளிற் கூறிய வருத்தத்திற்கு இவன் வேட்கை நோக்கமே காரணம் என்று இக் கவியிற் கூறினார். இக் நோக்கம் இன்றேல் இவட்கு இது நிகழாதென்க; 'பெருமையும் உரனும் ஆடூஉ மேன' (தொல். களவு. எ) என்பதனால் இவற்கு வருத்தம் புலப் படாதாயிற்று. வேட்கையை நாகமாகவும், நோக்கினைப் பற்களாகவும், உடம்பினைப் புற்றாகவும் உருவகஞ் செய்தனர். (கஉஎ)

௧௨௬௩. மாழ்கி வெய்துயிர்த் தாண்மட வாளெனத்
தோழி மார்களுந் தாயருந் தொக்குடன்
சூழி யானையன் னாய்தொடி னஞ்சறும்
வாழி யென்றனர் வம்பலர் கோதையார்.

(இ - ள்.) மடவாள் மாழ்கி வெய்து உயிர்த்தாள் என - பதுமை மயங்கிப் பெருமூச்செறிந்தாள், இனி, இது வேட்கை யென்றறிந்து; வம்பு அலர் கோதையார் தோழிமார்களும் தாயரும் உடன்தொக்கு - மணம் விரிந்த மாலையராகிய தோழியரும் செவிலியரும் சேரத்திரண்டு; சூழி யானை அன்னாய்! வாழி! தொடின் நஞ்சு அறும் என்றனர் - முகபடாம் அணிந்த யானை போன்றவனே! வாழ்வாயாக! நீ தீண்டித் தீர்ப்பாயாயின் நஞ்சு நீங்கும் என்றனர்.

(வி - ம்.) 'அன்னான்' என்னும் பெயர் 'தொழிலிற் கூறும் ஆன் என் இறுதி' யின் கூறாய் ஆய் ஏற்றது: (தொல். விளி. ௧௯) (௧௨௮)

௧௨௬௪. கண்ணிற் காணினுங் கட்டுரை கேட்பினு
நண்ணித் தீண்டினு நல்லுயிர் நிற்குமேன்
றெண்ணி யேந்திழை தன்னை யுடம்பெலாந்
தண்ணேன் சாந்தம்வைத் தாலொப்பத் தைவந்தான்.

(இ - ள்.) கண்ணின் காணினும்-(தான் காதலித்தோரைக்) கண்ணாற் கண்டாலும்; கட்டுரை கேட்பினும் - அவருடைய புனைந்துரையைக்கேட்டாலும்; நண்ணித் தீண்டினும்-நெருங்கித் தொட்டாலும்; நல்உயிர் நிற்கும் என்று எண்ணி-சிறந்த உயிர் நிலைக்கும் என்று நினைத்து; ஏந்து இழை தன்னை - பதுமையை; தண் என் சாந்தம் வைத்தால் ஒப்ப-குளிர்ந்த சந்தனம் பூசினாற் போல; உடம்பு எலாம் தைவந்தான் - உடம்பு முற்றும் தடவிக் கொடுத்தான்.

(வி - ம்.) காதலித்தோரைக் காணினும் அவர் சொற்கேட்பினும் அவரைத் தீண்டினும் உயிர் நிற்கும் என்பதனை தன்னனுபவத்தா லுணர்ந்து அவள் உயிர் நிற்கும்பொருட்டும் தன்னுயிர் நிற்கும்பொருட்டும் அவளைத் தைவந்தான் என்பது கருத்து. (௧௨௧)

௧௨௬௫. மற்ற மாதர்தன் வாட்டடங் கண்களா
லுற்ற நோக்க முருதவோர் நோக்கினிற்
சுற்றி வள்ளலைச் சோர்வின்றி யாத்திட்டா
ளற்ற மில்லமிர் தாகிய வஞ்சொலாள்.

(இ - ள்.) அற்றம் இல் அமிர்து ஆகிய அம்சொலாள் - ஒருவன் கைப்படா அமிர்தாகிய அழகிய மொழியினள்; மாதர்

தன் வாள்தடம் கண்களால் - காதலையுடைய் தன் வாளனைய பெரிய கண்களாலே ; உற்ற நோக்கம் உறாதது ஓர் நோக்கினில் - தான் அவன்பாற் கொண்ட அன்புற்ற நோக்கத்தை மற்றவர் ஐயுறாத ஒரு நோக்கத்தினாலே; வள்ளலைச் சுற்றிச் சோர்வு இன்றி யாத்திட்டாள் - சீவகனைச் சூழ்ந்து தப்பாமற் கட்டினாள்.

(வி - ம்.) அற்றமில் அமிர்து - ஒருவன் கைப்படா அமிழ்தம். உறாதநோக்கு, ஏதின்மைபட நோக்கும் நோக்குமாம். அந்நோக்கத்தால் அவன் கட்டுண்டலால் யாத்திட்டாள் என்றார். மாதர் - காதல். (௧௬0)

வேறு

௧௨௬௬. விஞ்சையர் வீர னென்பார்
விண்ணவர் குமர னென்பா
ரெஞ்சிய வுயிரை மீட்டா
னிவனலா லில்லை யென்பார்
மஞ்சுசூ ழிஞ்சி மூதூர்
மாமுடிக் குரிசி லானை
நஞ்சுசூழ் வேலி னாற்கே
நங்கையைக் கொடுக்கு மென்பார்.

(இ - ள்.) விஞ்சையர் வீரன் என்பார் - (இவன்) வித்தியாதர வீரன் என்பார் ; விண்ணவர் குமரன் என்பார் - வானவர் மகன் என்பார் ; எஞ்சிய உயிரை மீட்டான் இவன் அலால் இல்லை என்பார் - போன உயிரைத் திரும்பக் கொணர்ந்தவன் இவனல்லது வேறொருவன் இல்லை என்பார் ; மஞ்சுசூழ் இஞ்சி மூதூர் மாமுடிக் குரிசில் - முகில் தவழும் மதிலையுடைய இப் பழம்பதியின் முடிமன்னன் ; நஞ்சுசூழ் வேலினாற்கே நாளை நங்கையைக் கொடுக்கும் என்பார் - இந்த நஞ்சு கலந்த வேலினானுக்கே நாளைக்கு இந்த நங்கையை நல்குவான் என்பார்.

(வி - ம்.) விஞ்சையர் - வித்தியாதரர். எஞ்சிய - இறந்த. மஞ்சு - முகில். இஞ்சி - மதில். மூதூர்-பழமையான ஊர், சந்திராபம். (௧௬௧)

௧௨௬௭. விளங்கொளி விசும்பில் வெண்கோட்
டிளம்பிறை சூழ்ந்த மின்போல்
வளங்கெழு வடத்தைச் சூழ்ந்து
வான்போனாண் டிளைப்பச் சேர்ந்த
விளங்கதிர் முலைக டம்மா
லிவனைமார் பெழுதி வைகிற்
றுளங்குபெண் பிறப்புந் தோழி
யினிதெனச் சொல்லி நிற்பார்.

(இ - ள்.) தோழி! - தோழியே!; விளங்கு ஒளி விசும்பில் - விளங்கும் ஒளியையுடைய வானிலே; வெண்கோட்டு இளம்பிறை சூழ்ந்த மின்போல் - வெண்மையான நுனிகளையுடைய இளம்பிறையைச் சூழ்ந்த மின்கொடிபோல; வளம்கெழு வடத்தைச் சூழ்ந்து வான்பொன் நாண் திளைப்பச் சேந்த - வளம் பொருந்திய முத்து வடத்தைச் சூழ்ந்து பொன்நாண் அசைதலாலே சிவந்த; இளங்கதிர் முலைகள் தம்மால் - இளமை பொருந்திய ஒளியுறு முலைகளாலே; இவனை மார்பு எழுதி வைகின் - இவன் மார்பை எழுதி வாழப் பெறின்; துளங்கு பெண் பிறப்பும் இனிது எனச் சொல்லி நிற்பார் - நிலையற்ற பெண்பிறப்பும் இனிமையுடையதாம் என்று சொல்லி நிற்பார்.

(வி - ம்.) நச்சினார்க்கினியர், "முன்பு சீவகன், 'என் கொடிது' (1283) என்றதனால், இவர்கள், 'மார்பெழுதி வைகின் இனிது என்றார்'' என்பர். (கஙஉ)

கஉகூஅ. அருந்தவஞ் செய்து வந்த
வாயிழை மகளிர் யார்கொல்
பெருந்தகை மார்பிற் றுஞ்சிப்
பெண்மையாற் பிணிக்கு நீரார்
கருங்கணின் யாமுங் கண்டாங்
காமனை யென்று சொல்லித்
திருந்தொளி முறுவற் செவ்வாய்த்
தீஞ்சொலார் மயங்கி னாரே.

(இ - ள்.) பெருந்தகை மார்பில் துஞ்சிப் பெண்மையால் பிணிக்கும் நீரார் - இப் பெருந்தகையின் மார்பிலே துயின்று பெண்மையால் வசப்படுத்தும் இயல்பினராக; அருந்தவம் செய்து வந்த ஆயிழை மகளிர் யார்கொல்? - அரிய தவம் இழைத்து வந்த அணிகலன் அணிந்த பெண்டிர் யாவரோ?; காமனை யாமும் கருங்கணின் கண்டாம் என்று சொல்லி - காமனை நாமும் நம் கரிய கண்களாற் காண்பது மட்டும் செய்தோம் என்றுரைத்து; திருந்து ஒளி முறுவல் செவ்வாய்த் தீசொலார் மயங்கினர் - விளங்கும் ஒளியை உடைய முறுவலையுஞ் செவ்வாயையுமுடைய இனிய மொழி மகளிர் மயக்குற்றனர்.

(வி - ம்.) ஆயிழை-ஆராய்ந்த அணிகலன் அணிந்த. கொல்: ஐயப் பொருட்டு. பெருந்தகை, அன்மொழி: சீவகன். துஞ்சுதல் - துயிலுதல். நீரார்-தன்மையுடையோர். காமன் உருவமற்றவன் என்ப; அவர் கூற்றுப் பொய், யாமும் அவனைக் கண்ணிற் கண்டாம் என்றவாறு. திருந்து - திருத்தமான முறுவல் - பற்கள் திருத்தமான ஒளியுடைய பற்கள் எனக் கொள்வதும் ஒன்று. (கஙங)

கஉகூகூ. பன்மலர்ப் படலைக் கண்ணிக்
குமரனைப் பாவை நல்லார்
மன்னவன் பணியின் வாழ்த்தி
வாசநெய் பூசி நன்னீர்
துன்னின ராட்டிச் செம்போற்
செப்பினுட் டுகிலுஞ் சாந்து
மின்னறும் புகையும் பூவுங்
கலத்தோடு மேந்தி னாரே.

(இ - ள்.) பன்மலர்ப் படலைக் கண்ணிக் குமரனை - பல மலர்களையும் தழைகளையும் கொண்டு தொடுத்த கண்ணியணிந்த சீவகனை; மன்னவன் பணியின் - அரசன் கட்டளைப்படி; பாவை நல்லார் - பணிப்பெண்கள்; வாழ்த்தி - வாழ்த்துக் கூறி அழைத்துச் சென்று; துன்னினர் வாசநெய் பூசி - நெருங்கி மணமிகு நெய்யைப் பூசி; நல்நீர் ஆட்டி - நல்ல நீரைக்கொண்டு முழுக்காட்டி; செம்பொன் செப்பினுள் துகிலும் சாந்தும் இன்நறும் புகையும் பூவும் கலத்தொடும் ஏந்தினர் - பொற்பேழையில் ஆடையையும் சந்தனத்தையும் இனிய நறிய புகையையும் மலரையும் பூணையும் ஏந்தி அணிந்து கொள்ளச் செய்தனர்.

(வி - ம்.) படலைக்கண்ணி - தாமரைக்கொழுமுறியினையும் அதன் மலரினையும் குவளையையும் கழுநீர் மலரினையும் விரவித் தொடுப்பதொரு மாலை. குமரன் : சீவகன். மன்னவன் : தனபதி. துன்னினர் : முற்றெச்சம். கலம் : அணிகலன். (கஙௗ௬)

கங௦௦. ஏந்திய வேற்பத் தாங்கி யெரிமணிக் கோட்டை நெற்றி
வாய்ந்தபொன் குயிற்றிச் செய்த மரவடி யூர்ந்து போகி
யாய்ந்தநன் மாலை வேய்ந்த வரும்பெறற் கூடஞ் சேர்ந்தான்
பூந்தொடி மகளிர் போற்றிப் பொற்கலம் பரப்பி னாரே.

(இ - ள்.) ஏந்திய ஏற்பத் தாங்கி - அவர்கள் ஏந்தியவற்றைப் பொருந்த மெய்யில் அணிந்து; எரிமணிக் கோட்டை - ஒளிரும் மாணிக்கக் கோட்டையை; நெற்றி வாய்ந்த பொன் குயிற்றிச் செய்த மர அடி ஊர்ந்து - நெற்றியிலே அழுத்திப் பொன்னாற் செய்த மர வடியைத் தொட்டுச் சென்று; ஆய்ந்த நல்மாலை வேய்ந்த அரும்பெறல் கூடம் சேர்ந்தான் - ஆராய்ந்த நல்ல மாலைகளைப் புனைந்த பெறற்கரிய கூடத்தை அடைந்தான்; பூந்தொடி மகளிர் போற்றிப் பொற்கலம் பரப்பினர் - அழகிய வளையணிந்த மாதர்கள் வாழ்த்துக் கூறிப் பொற்கலங்களைப் பரப்பினர்.

(வி - ம்.) ஏற்பத்தாங்கி-பொருந்தும்படி அணிந்து. கொட்டை-குமிழ். மரவடி - மரத்தாற் செய்த அடிக்காப்பு. பொற்கலம் - ஈண்டு உண்கலம். (கருரு)

கரு௦க. கன்னியர் கரக நீராற் றாமரை கழீஇய தொப்பப்
பொன்னடி கழீஇய பின்றைப் புரிந்துவாய் நன்கு பூசி
யின்மலர்த் தவிசி னுச்சி யிருந்தமிர் தினிதிற் கொண்டான்
மின்விரிந் திலங்கு பைம்பூண் வேற்கணார் வேனி லானே.

(இ - ள்) கன்னியர் கரக நீரால் தாமரை கழீஇயது ஒப்பப் பொன் அடி கழீஇய பின்றை - கன்னிப் பெண்கள் கரகத்திலிருந்த நீராலே தாமரை மலரைக் கழுவியது போலப் பொன் போன்ற அடிகளைக் கழுவிய பிறகு; புரிந்து நன்கு வாய் பூசி - விரும்பி நன்றாக வாய் கழுவி; இன் மலர்த் தவிசின் உச்சி இருந்து - இனிய மலர்த் தவிசின்மீது அமர்ந்து; மின் விரிந்து இலங்கு பைம்பூண் வேல்கணார் வேனிலான் - ஒளி மலர்ந்து விளங்கும் பைம்பூண் அணிந்த வேலனைய கண்ணார்க்குக் காமனைப் போன்ற சீவகன்; அமிர்து இனிதின் கொண்டான் - உணவை இனிய கறியுடன் உண்டான்.

(வி - ம்.) 'நீராடிக் கால்கழுவி வாய்பூசி' (கக) என்றும், 'கைப்பன எல்லாம் கடை தலை தித்திப்ப' (உசு) என்றும் ஆசாரக் கோவையிற் கூறினர். (கருசு)

கரு௦உ. வாசநற் பொடியு நீருங் காட்டிடக் கொண்டு வாய்ப்பப்
பூசறுத் தங்கை நீரை மும்முறை குடித்து முக்காற்
காசறத் துடைத்த பின்றைக் கைவிர லுறுப்புத் தீட்டித்
தூசினா லங்கை நீவி யிருந்தனன் றோற்ற மிக்கான்.

(இ - ள்.) வாசம் நல் பொடியும் நீரும் காட்டிட - மணம் உறு நல்ல பொடியையும் நீரையும் மகளிர் ஏந்த; கொண்டு வாய்ப்பப் பூசு அறுத்து - அவற்றைக் கைக்கொண்டு பூசுந் தொழிலை முடித்து; அங்கை நீரை மும்முறை குடித்து - அங்கையில் ஏந்திய நீரை மூன்று முறை குடித்து; முக்கால் காசு அறத் துடைத்த பின்றை - மும்முறை குற்றம் நீங்கத் துடைத்த பிறகு; கை விரல் உறுப்பின் தீட்டி - விரலைக் கண் முதலிய உறுப்புக்களிலே தீண்டுவித்து; தூசினால் அங்கை நீவி - மேல் ஆடையினால் அங்கையைத் துடைத்து; தோற்றம் மிக்கான் இருந்தனன் - சிறந்த தோற்றத்துடன் இருந்தான்.

(வி - ம்.) முக்காற் குடித்துத் துடைத்து முகத்துறுப்பு - ஒத்த வகையால் விரல் உறுத்தி வாய் பூசல்' (ஆசாரக் - உஅ) என்றார் பிறரும். (கருஎ)

கநு0ங. சீர்கோளச் செய்த செம்போ
னடைப்பையுட் பாகு செல்ல
வார்கழற் குருசில் கோண்டு
கவுளடுத் திருந்த வாங்கட்
போர்கோள்வேன் மன்ன னெல்லாக்
கலைகளும் புகன்று கேட்டு
நீர்கோண்மாக் கடல னாற்கு
நிகரில்லை நிலத்தி லென்றான்.

(இ - ள்.) *சீர் கொளச் செய்த செம்பொன் அடைப்பையுள் பாகு செல்ல* - சிறப்புக் கொள்ளச் செய்த பொன் அடைப்பையிலே பாக்கும் வெற்றிலையும் செல்ல; *வார் கழல் குரிசில் கொண்டு கவுள் அடுத்து இருந்த ஆங்கண்* - கட்டப்பட்ட கழலணிந்த சீவகன் அவற்றை யெடுத்து வாயிலிட்டுத் தின்றிருந்த அளவிலே; *போர் கொள் வேல் மன்னன் எல்லாக் கலைகளும் புகன்று கேட்டு* - போருக்குக் கொண்ட வேலேந்திய தனபதி மன்னன், சீவகன் கற்ற கலைகளையெல்லாம் விரும்பிக் கேட்டு; *நீர்கொள் மாக் கடலன்னாற்கு நிகர் நிலத்தில் இல்லை என்றான்* - நீர் கொண்ட பெரிய கடலன்ன கலையுடைய இவனுக்கு ஒப்பு இந்நிலவுலகில் இல்லை என்றான்.

(வி - ம்.) அடைப்பை-வெற்றிலையிட்டுவைக்கும் பை. பாகு-பாக்கு. குரிசில்: சீவகன். கவுள் - கன்னம். புகன்று - விரும்பி. பல திசைகளினும் இருந்து வரும் பல்வேறு யாறுகளும் கொணரும் நீரும் மேனீரும் கீழ் நீருமாகிய நீரெல்லாம் புகுந்து நிறைந்திருத்தலான், பல்வேறு கலைகளும் நிரம்பிய சீவகனை நீர்கொள் மாக்கடல் அன்னான் என்றார். (கநு அ)

வேறு

கநு0ச. பரிதி பட்டது பன்மணி நீள்விளக்
கெரிய விட்டன ரின்னிய மார்த்தன
வரிய போங்கணை யம்மே னமளிமேற்
குரிசி லேறினன் கூர்ந்தது சிந்தையே.

(இ - ள்.) *பரிதி பட்டது* - (அப்போது) ஞாயிறு மறைந்தது; *பல் மணி நீள் விளக்கு எரிய விட்டனர்* - பல மணிகளையும் விளக்கையும் ஒளிபெற ஏற்றினர்; *இன் இயம் ஆர்த்தன* - இனிய இசைக்கருவிகளும் ஒலித்தன; *அரிய பொங்கு அணை அம் மென் அமளிமேற் குரிசில் ஏறினன்* - தனித்தார்க்குப் பொறுத்தற்கரிய பொங்கும் அணையாகிய அழகிய மென்மையான படுக்கையின்மேற் சீவகன் அமர்ந்தனன்; *சிந்தை கூர்ந்தது* - (அப்போது) அவன் உள்ளம் காம நினைவிலே மிகுந்தது.

(வி - ம்.) அரிய என்றது அதன்கண் துணையின்றி தனித்துறை வோர் பொறுத்தலரிய என்பது பட நின்றது. சிந்தை கூர்ந்தது என மாறுக. கூர் : மிகுதிப் பொருட்டு. (கங்க)

கஙு0ரு. பூங்க ணவ்வயி னோக்கம் பொறுதபோல்
வீங்கி வெம்மைகொண் டேந்தின வெம்முலை
யீங்கி தென்னென விட்டிடை நைந்தது
பாங்கி லாரிற் பரந்துள தல்குலே.

(இ - ள்.) பூங்கண் அவ்வயின் நோக்கம் பொறுதபோல் - (பதுமையின் மலர்க் கண்கள்) அவ்விடத்து யான் நோக்கிய நோக்கத்தைத் தாங்காமல் நிலத்தை நோக்கி என்னை வருத்தி னற்போலவே; வெம் முலை வீங்கி வெம்மை கொண்டு ஏந்தின - பின்னர், முலைகளும் வீங்கிக் கொடுமை கொண்டு ஏந்தி வருத் தின; ஈங்கு இது என் என இட்டிடை நைந்தது - இவ்விடத்திற் பொறுமை என்னே என்று மெல்லிடை வருந்தியது; பாங்கு இலாரின் அல்குல் பரந்துளது - அப்போது பிறரிடுக்கண் கண்டு மகிழ்வாரைப் போல அல்குல் பரந்தது.

(வி - ம்) பரந்துளது: ஒருசொல். இனிக் கண்கள் தமக்கு முற் பட்டு வருத்தியதற்குப் பொறுதன போலப் பின்பு முலைகளும் வருத்தின என்றும் ஆம். (கச0)

கஙு0சு. முருகு வார்குழ லாண்முகிழ் மேன்முலை
பெருகு நீர்மையிற் பேதுற வெய்திநின்
றுருகு நுண்ணிடை யோவியப் பாவைத
னருகு நோக்கமே னாவி யலைக்குமே.

(இ - ள்.) முருகு வார்குழலாள் - மணமிகு நெடிய குழலா ளாகிய; ஓவியப் பாவை - ஓவியத்தில் எழுதப் பெற்ற பாவை போல்வாளின்; முகிழ் மென்முலை - முகிழ்த்த மென்முலைகளும் ; பெருகும் நீர்மையின் பேதுறவு எய்தி நின்று உருகும் நுண் இடை - அவை வளரும் இயல்பாலே துன்பம் அடைந்து வருந்து கின்ற நுண்ணிய இடையும்; அருகும் நோக்கம் - குறிக்கொண்டு நோக்காத நோக்கமும்; என் ஆவி அலைக்கும் - என் உயிரைக் கெடுக்கும் அளவாகா நின்றன.

(வி - ம்.) முருகு - மணம். குழலாள் : பதுமை. நீர்மை - தன்மை. முலையும் இடையும் நோக்கமும் என் ஆவியலைக்கும் என்க. (கசக)

கஙு0எ. புகைய வாவிய பூந்துகி லேந்தல்குல்
வகைய வாமணி மேகலை வார்மது
முகைய வாவிய மொய்குழல் பாவியேன்
பகைய வாய்ப்படர் நோய்பயக் கின்றவே.

(இ - ள்.) புகை அவாவிய பூந்துகில் ஏந்து அல்குல் - நறுமணப் புகை பொருந்திய அழகிய ஆடையும், அந்த ஆடை தாங்கிய அல்குலிலே; வகையவாம் மணிமேகலை - பலவகையான மணிகள் செறிந்த மேகலையும்; வார் மது முகை அவாவிய மொய் குழல் - வழியுந் தேனையுடைய அரும்புகள் அவாவிய செறிந்த குழலும்; பாவியேன் பகையவாய் - பாவியேனுக்குப் பகையாயினவாய்; படர் நோய் பயக்கின்ற - துன்பமாகிய நோயைச் செய்கின்றன.

(வி - ம்.) குழலை அவட்குப் பெயராக்கிக் குழலையுடையாளது அல்குலை மறைத்தமையால் ஆடையும் மேகலையும் பகையாயின என்பர் நச்சினார்க்கினியர். (சகஉ)

கூ௦அ. போது லாஞ்சிலை யோபொரு வேற்கணோ
மாது லாமொழி யோமட நோக்கமோ
யாது நானறி யேனணங் கன்னவள்
காத லாற்கடை கின்றது காமமே.

(இ - ள்.) அணங்கு அன்னவள் - தெய்வப்பெண் போன்றவளின்; போது உலாம் சிலையோ? - காமன் அம்பாகிய மலர் உலாவும் வில்லோ?; பொரு வேல் கணோ? - பொருதற்குரிய வேலாகிய கண்ணோ?; மாது உலாம் மொழியோ? - காதல் உலாவும் சொல்லோ?; மடநோக்கமோ? - இளமை பொருந்திய பார்வையோ?; காதலால் கடைகின்றது காமம் - காதலினால் காமத்தை மிகச் செய்கின்றது; யாது நான் அறியேன் - இவற்றில் இன்னதென்று யான் சிறிதும் அறிகிலேன்.

(வி - ம்.) சிலை: காமன் வில்: புருவம். இதனால் உறுப்புக்கள் யாவும் ஒக்க வருத்தின என்றானாயிற்று. 'மொழியோ?' என்றதனால் மொழியுங் கேட்டான் என்பது பெற்றாம். அன்றி, 'அடிகளுக் கிறைஞ்சி' (சீவக. கஉஎ௫) என்னும் கவியிற் கூற்றைத் தானும் பின்பு கேட்டலின், 'மொழியோ' என்றான் என்றலும் ஒன்று. (கசங)

கூ௦கூ. அண்ண லவ்வழி யாழ்துயர் நோயுற
வண்ண மாமலக் கோதையு மவ்வழி
வெண்ணெய் வெங்கனன் மீமிசை வைத்ததொத்
துண்ணை யாவுரு காவுள ளாயினாள்.

(இ - ள்.) அண்ணல் அவ்வழி ஆழ்துயர் நோய் உற - சீவகன் அங்கே அவ்வாறு ஆழுந் துயர்தரும் நோயை அடைய; வண்ணம் மாமலர்க் கோதையும் - அழகிய பெரிய மலர்க் கோதையாளும்; அவ்வழி - அங்கே; வெண்ணெய் வெங்கனல் மீமிசை வைத்தது ஒத்து - வெண்ணெயைக் கொடிய நெருப்பின் மேலே வைத்தாற்

போன்று; உள் நையா உருகா உளள் ஆயினள் - உள்ளம் நைந்து உருகி உயிருடன் இருப்பாளாயினள்.

(வி - ம்.) அவனைக் காணலாம் என்னும் நினைவால், 'உளள் ஆயினள்'. ஆழ்துயர் நோய் - அழுந்துதல் உறுகின்ற வருத்த நோய். ()

கஙகo. பெயன்ம ழைப்பிற ழுங்கோடி மின்னிடைக்
கயன்ம ணிக்கணி னல்லவர் கைதொழப்
பயனி ழைத்தமென் பள்ளியுட் பைந்தொடி
மயனி ழைத்தவம் பாவையின் வைகினள்.

(இ - ள்.) பெயல் மழைப் பிறழும் கொடி மின் இடை - பெய்தலை யுடைய முகிலிலே பிறழும், ஒழுங்குற்ற மின் போன்ற இடையும்; கயல் மணிக் கணின் - கயலனைய நீலமணிக் கண்களையும் உடைய; நல்லவர் கை தொழ - மகளிர் கைகுவித்து வணங்க; பயன் இழைத்த மென்பள்ளியுள் - துணையுடையோர்க்குப் பயன் உண்டாகப் பண்ணின மென்மையான படுக்கையிலே; மயன் இழைத்த அம் பாவையின் - மயன் பண்ணின அழகிய பதுமை போல; பைந் தொடி வைகினள் - பசிய வளையவுடைய பதுமை இருந்தனள்.

(வி - ம்.) மழை : ஆகுபெயர்; முகில். கணின் - கண்ணின். நல்லவர் - மகளிர்; பள்ளி - படுக்கை. மயன் - அசுரத்தச்சன். அம்பாவை : அழகிய பதுமை. (கசரு)

கஙகக. வணங்கு நோன்சிலை வார்கணைக் காமனே
மணங்கோள் பூமிசை மைவரை மைந்தனே
நிணந்தே னெஞ்ச நிறைகொண்ட கள்வனை
யணங்கு காளறி யேனுரை யீர்களே.

(இ - ள்.) அணங்குகாள்! - தெய்வங்களே!; என் நெஞ்சம் நிணந்து நிறை கொண்ட கள்வனை - என் உள்ளத்தைப் பிணித்து நிறையைக் கவர்ந்த அக் கள்வனை; வணங்கும் நோன் சிலை வார்கணைக் காமனே? - எல்லோரும் மனங் குழைதற்குக் காரணமான வலிய வில்லையும் நீண்ட அம்புகளையும் உடைய காமனே?; மணம் கொள் பூமிசை மைவரை மைந்தனே? - மணமுறும் மலரிலே தோன்றிய, கரிய மலைவாழ் வுறும் முருகனே?; அறியேன் உரையீர்களே? - அறிந்திலேன், நீயிர் அறிந்தால் உரையீரோ?

(வி - ம்.) ஏ: வினா விடைச்சொல். பெரும்பாலும் தெய்வத் தன்மை உடைமையின் மகனே என்றிலளாம்!

வணங்கு நோன்சிலை - எல்லாவுயிர்களுக்கும் மனம் குழைதற்குக் காரணமான வலிய கருப்புவில் என்க. கணை - மலரம்பு. பூமிசை -

பதுமப்பாயல்மேல். மைவரை மைந்தன் - மலையிலுறைகின்ற முருகன். நிணந்து - பிணைத்து. "கட்டில் நிணக்கும் இழிசினன்" (புறநா. அ௨-௩) என்புழியும் அஃதப்பொருட்டாதல் அறிக. அணங்கு-ஈண்டு இல்லுறை தெய்வம். (௧௪௬)

௩௩௰௨. கடைகந் தன்னதன் காமரு வீங்குதோ
ளடையப் புல்லினன் போன்றணி வெம்முலை
யுடைய வாகத் துறுதுயர் மீட்டவ
னிடைய தாகுமே னாருமி லாவியே.

(இ - ள்.) ஆரும் இல் என் ஆவி - போகாமல் நிறுத்துவார் இல்லாத என் உயிர்; கடை கந்து அன்ன - கடைந்து செய்த தூண் போன்ற; தன் காமரு வீங்கு தோள் - தன் அழகிய பருத்த தோள்களால்; அடையப் புல்லினன் போன்று - என் மெய்ம் முழுதும் தழுவினவன் போல; ஆகத்து அணி வெம் முலை உறுதுயர் உடைய மீட்டவன் - மார்பில் அணிந்த வெம் முலை உற்ற பசப்பு உடையும்படி தடவி மீட்டவனின்; இடையது ஆகும் - இடத்தில் உள்ளதாகும்.

(வி - ம்.) கடைகந்து : வினைத்தொகை. காமரு - அழகிய; ஆகத்து அணி வெம்முலை உறுதுயர் உடைய மீட்டவன் என மாறுக. ஆருமில் ஆவி - உயக்கொள்வோர் ஒருவருமில்லாததாகிய உயிர். (௧௪௭)

௩௩௰௩. இறுதி யில்லமிர் தெய்துந ரீண்டியன்
றறிவி னாடிய வம்மலை மத்தமா
நெறியி னின்று கடைந்திடப் பட்டநீர்
மறுகு மாக்கடல் போன்றதென் னெஞ்சமே.

(இ - ள்.) இறுதி இல் அமிர்து எய்துநர் ஈண்டி - சாதல் இல்லாமைக்குக் காரணமான அமிர்தத்தைப் பெற விரும்பிய தேவர்கள் திரண்டு; அறிவின் நாடிய - தம் அறிவினாலே அதனை ஆராய வேண்டி; அன்று அம்மலை மத்தமா நின்று - அக் காலத்தில் மந்தரமலை மத்தாக நின்று; நெறியின் கடைந்திடப்பட்ட நீர் மறுகும் மாக்கடல் போன்றது - முறைமையாகக் கடைந்திடப் பட்ட நீர் கலங்கும் கடல் போன்றதாகும்; என் நெஞ்சம் - என் உள்ளம்.

(வி - ம்.) எய்துநர்: பெயர்.

இறுதி - சாக்காடு. சாக்காடின்மைக்குக் காரணமான அமிர்து என்க. அம்மலை : உலகறிசுட்டு. மந்தரம் - மத்தம் : கடைகழி. (௧௪௮)

௩௩௰௪. நகைவெண் டிங்களு நார்மட லன்றிலுந்
தகைவெள் ளேற்றணற் றாழ்மணி யோசையும்
பகைகொண் மாலையும் பையுள்செ யாம்பலும்
புகையில் பொங்கழல் போற்சுடு கின்றவே.

(இ - ள்.) நகைவெண் திங்களும் - ஒளியுறும் வெண்மையான நிலவும்; நார்மடல் அன்றிலும்-நாரையுடைய பனைமடலில் இருக்கும் அன்றிலும்; தகைவெள் ஏற்று அணல் தாழ்மணி ஓசையும் - பெருமைமிக்க வெள்ளேற்றின் அணலிலே தங்கிய மணியின் ஒலியும்; பகைகொள் மாலையும் - பிரிந்திருப்பவர்க்குப் பகை செய்யும் மாலைப்போதும்; பையுள்செய் ஆம்பலும்-துன்பமூட்டும் ஆம்பற் பண்ணை யெழுப்பும் குழலும்; புகைஇல் பொங்கு அழல்போல் சுடுகின்ற - புகை இல்லாத பொங்கும் நெருப்பைப்போலச் சுடுகின்றன.

(வி - ம்.) புகை இல்லாத அழல்: இல்பொருளுவமை.

அன்றில் பனைமடலில் உறையும் இயல்புடையதென்ப. "மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத் துணைபுண அன்றில்" (நற்றிணை, ௩0௩. ௪-௫) என்றார். பிறரும். (௧௪௬)

௧௩௧௫. பூமென் சேக்கையு ணாற்றிய பூந்திரட்
டாமம் வாட்டுந் தகைய வுயிர்ப்பளாஇக்
காமர் பேதைதன் கண்டரு காமநோ
யாமத் தெல்லையோர் யாண்டொத் திறந்ததே.

(இ - ள்.) பூமென் சேக்கையுள் நாற்றிய பூந்திரள் தாமம்-மலரால் அமைத்த மெல்லிய அணையிலே தூக்கிய மலர்கள் திரண்ட மாலைகளை; வாட்டும் தகைய உயிர்ப்பு அளாஇ - மெலிவிக்கும் தன்மையவாகிய நெட்டுயிர்ப்பைக் கலந்து; காமர் பேதைதன் கண்தரு காமநோய் - அழகிய அப் பேதைக்குத் தன் கண் தந்த நோயாலே; யாமத்து எல்லை ஓர் யாண்டு ஒத்து இறந்தது - இராப் பொழுதின் எல்லை ஓராண்டின் அளவையொத்துக் கழிந்தது.

(வி - ம்.) நச்சினார்க்கினியர் (௧௪௪) முதல் - (௧௫0) வரை ஒரு தொடராக்கி, "அண்ணல் நோயுறுவிற்கக், கோதையும் நல்லவர் தொழச் சென்று, பள்ளியிலே வைகினாள்; அங்ஙனம் வைகியவள், 'திங்கள் முதலியன சுடா நின்றன; அதனால் என் நெஞ்சம் மறுகுகின்றது; இங்ஙனம் நிறைகொண்ட கள்வனை யான் ஐயுற்று அறிகின்றிலேன்; தெய்வங்களே! நீவிரும் உரைத்திலீர்! உரையீராயினும் என் ஆவி, துயர்மீட்டவன் இன்னும் அருளுவனோ என்று அவனிடத்தே ஆகாநின்றது' என்றுதெய்வத்தை நோக்கிக் கூறி, உயிர்ப்பளாஇ உருகிப் பின்னும் அவன் நெஞ்சிடத்தேயாதலின் இறந்துபடாள் ஆயினள். அப்பேதைக்குக் கண்தந்த நோயால் இராப்பொழுது கழிந்தது" என்று முடிப்பர். (௧௫0)

௧௩௧௬. மாதி யாழ்மழ லைம்மொழி மாதரா
டாதி யவ்வையுந் தன்னமர் தோழியும்
போது வேய்குழற் பொன்னவிர் சாயலுக்
கியாது நாஞ்செயற் பாலதென் றெண்ணினார்.

(இ - ள்.) மாதுயாழ் மழலைமொழி மாதரர்ள் - காதலை யுடைய யாழின் இசை போலும் மழலை மொழியுறு பதுமையின்; தாதி அவ்வையும் தன் அமர் தோழியும் - தாதியாகிய செவிலி யும் அவள் விரும்பிய தோழியும்; போதுவேய் குழல்பொன் அவிர் சாயலுக்கு - மலர் வேய்ந்த குழலையுடைய, பொன்னென ஒளிரும் சாயலுடையாட்கு ; நாம் செயற்பாலது யாது என்று எண்ணினர் - நாம் செய்தற்குரியது யாது என்று ஆராய்ந்தனர்.

(வி - ம்.) மாது - காதல். மழலைம்மொழி என்புழி மகரம் வண்ணநோக்கி விரிந்தது. மாதராள் : பதுமை. தாதிபவ்வை-தாதியாகிய செவிலித்தாய். அமர்தோழி : வினைத்தொகை. வேய்குழல் : வினைத் தொகை. பொன்னவிர் சாயல் : இஃது அன்மொழியாய்ச் சாயலை யுடையாளை யுணர்த்தியது. (கஙக)

கஙஎ. அழுது நுண்ணிடை நைய வலர்முலை
முழுதுங் குங்கும முத்தோ டணிந்தபின்
றொழுது கோதையுங் கண்ணியுஞ் சூட்டினா
ரெழுது கொம்பனை யாரிளை யாளையே.

(இ - ள்.) எழுது கொம்பு அனையார் இளையாளை தொழுது - எழுதும் மலர்க்கொடி போன்றவர்கள் பதுமையை வணங்கி; நுண்இடை அழுது நைய - அவளுடைய நுண்ணிய இடை அழுது வருந்துமாறு; அலர்முலை முழுதும் குங்குமம் முத்தொடு அணிந்த பின் - அலர்ந்த முலை முழுதும் குங்குமத்தைப் பூசி முத்தை அணிந்த பிறகு ; கோதையும் கண்ணியும் சூட்டினர் - மலர்மாலையும் மலர்க்கண்ணியும் அணிந்தனர்.

(வி - ம்.) சுமை பொறுக்கலாற்றாமல் நுண்ணிடை அழுது நைந்தது. தண்மைபெற இவற்றை அணிந்தனர். (கஙஉ)

கஙஅ. வேந்து காயினும் வெள்வளை யாயமோ
டேந்து பூம்பொழி லெய்தியங் காடுத
லாய்ந்த தென்றுகொண் டம்மயில் போற்குழீஇப்
போந்த தாயம் பொழிலும் பொலிந்ததே.

(இ - ள்.) வேந்து காயினும் - அரசன் சினந்தாலும் ; வெள்வளை ஆயமொடு - வெள்ளிய வளையணிந்த தோழியருடன்; ஏந்து பூம்பொழில் எய்தி - உயர்ந்த மலர்ப்பொழிலை அடைந்து ; அங்கு ஆடுதல் ஆய்ந்தது - அங்கே விளையாடுதல் ஆராயப்பட்ட தொழில் ; என்று கொண்டு - என முடிவு செய்து ; அம் மயில் போல் குழீஇ - அழகிய மயில்களைப்போற் கூடி ; ஆயம் போந்தது - ஆயம் அவளுடனே சென்றது ; பொழிலும் பொலிந்தது- மலர்ப் பொழிலும் அவர்களால் அழகுற்றது.

(வி - ம்.) வேந்தன் காய்தல் முன்னர்ப் பதுமையைப் பாம்பு தீண்டிய பொழிலிலே போகவிட்டது கருதி. காயினுஞ் செல்வேம் என்று துணிந்தனர் அங்கே சீவகனைக் கண்ட இடங்கண்டு ஆறுதல் பெறக்கூடும் என்று கருதி.

நச்சினார்க்கினியர் (கருக) முதல் (கருங) வரை மூன்று செய்யுட்களை யும் ஒரு தொடராக்கிக் கூறும் முடிபு :

" நுண்ணிடையாள் அழுது நையாநிற்கத், தாயும் தோழியும் எண்ணி, அவனை எதிர்ப்பட்ட இடங்காணினும் அவனைக் கண்ட இடங் கண்டாலும் அவனை எதிர்ப்பட்டாற் போறலின், வேந்து காயினும் பொழிலிலே சென்று விளையாடுதலே காரியம் என்று கருதி, அவளைக் கொம்பனையார் அணிந்த பின்பு கோதையையுங் கண்ணியையும் சூட்டி னார்; சூட்டி அப் பொழிலிலே போ என்று கூற, ஆயமும் திரண்டு தொழுது கூடப் போந்தது ; பொழிலும் பொலிந்தது.

'அழுது' என்பதற்குப் பாம்பு கடித்தவிடத்தே போகவிடா நின்றேம் என்று அழுதார் என்றும் உரைப்ப." (கருங)

கஙகக. அலங்க றுன்றொடுப் பாரலர் பூக்கோய்வார்
சிலம்பு சென்றெதிர் கூவுநர் செய்சுனை
கலங்கப் பாய்ந்துட னாடுநர் காதலி
னிலங்கு பாவை யிருமணஞ் சேர்த்துவார்.

(இ - ள்.) அலங்கல் தான் தொடுப்பார் - (அவ்வாயத்தார்) மாலை தொடுப்பார்கள் ; அலர்பூக் கொய்வார் - அலர்ந்த மலர் களைக் கொய்வார்கள் ; சிலம்பு சென்று எதிர் கூவுநர் - செய் குன்றோரஞ்சென்று எதிரொலி பிறக்கக் கூவுவார்கள்; செய்சுனை கலங்கப் பாய்ந்து உடன் ஆடுநர் - செயற்கைச் சுனையிலே அது கலங்குமாறு பாய்ந்து ஒருங்கே ஆடுவார்கள் ; காதலின் இலங்கு பாவை இருமணம் சேர்த்துவார் - காதலுடன் விளங்கும் பதுமைகளைப் பெருமையாக மணம் புரிவிப்பார்கள்.

(வி - ம்.) அலங்கல் - மாலை. தான் : அசை. அலர்பூ : வினைத் தொகை. சிலம்பு - ஈண்டுச் செய்குன்று. கூவுநர் - கூவுவார். ஆடுநர் - ஆடுவார். பாவை - விளையாட்டுப் பொம்மை. (கருச)

கஙஉ௦. தூசு லாநெடுந் தோகையி னல்லவ
ரூச லாடுந ரொண்கழங் காடுநர்
பாச மாகிய பந்துகொண் டாடுந
ராகி யெத்திசை யும்மமர்ந் தார்களே.

(இ - ள்.) தூசு உலாம் நெடுந்தோகையின் நல்லவர் - ஆடையிலே அசைகின்ற கொய்சகத்தையுடைய அவ்வாயத் தார் ; ஊசல் ஆடுநர் - ஊசல் ஆடுவர் ; ஒண்கழங்கு ஆடுநர் - ஒளிரும் கழங்கு விளையாடுவர் ; பாசம் ஆகிய பந்து கொண்டு

ஆடுநர் - அன்புடைய பந்தைக் கொண்டு ஆடுவர் ; ஆகி - ஆகி ; எத்திசையும் அமர்ந்தார்கள் - எல்லாப் பக்கத்தினும் போய் அமர்ந்தனர்.

(வி - ம்.) நச்சினார்க்கினியர் இவ்விரு செய்யுட்களையும் ஒரு தொடராக்குவர்.

தூசுலா நெடுந்தோகை என்றது, புடைவையிலே அசைகின்ற கொய்சகத்தை; தோகை போறலின் அஃதப்பெயர் பெற்றது. பாசமாகிய பந்து தம்பற்றிற்குக் காரணமாகிய பந்து என்க. (க௬௫)

௧௩௨௧. முருகு விம்மிய மோய்குழ லேழைத
னுருகு நோக்க முளங்கிழித் துள்சுட
வரிவை யாடிய காவகங் காணிய
வேரிகோள் வேலவ னேகின னேன்பவே.

(இ - ள்.) முருகு விம்மிய மொய்குழல் ஏழைதன் - மணம் ததும்பிய நெருங்கிய குழலையுடைய பதுமையின்; உருகும் நோக்கம் உளம் கிழித்து உள்சுட - தன் நினைவு மிக்கு வருந்திப் பார்த்த பார்வை உள்ளத்தைப் பிளந்து சுடுதலின்; அரிவை ஆடிய காவகம் காணிய-பதுமை ஆடிய பொழிலைக் காண்பதற்கு; எரிகொள் வேலவன் ஏகினன் என்ப - அனல் ததும்பிய வேலினை யுடைய சீவகன் சென்றான்.

(வி - ம்.) என்ப: அசை. அவளாடிய இடத்தைக் காண்டலும் அவளைக் காண்பதுபோல இருத்தலின் ஏகினன்.

முருகு - மணம். மொய்குழலேழை : பதுமை; பன்மொழித் தொடர். அரிவை : பதுமை. காணிய - காண : செய்யியவென் வாய்பாட்டெச்சம். வேலவன் : சீவகன். (க௬௬)

௧௩௨௨. மயிலி னாடலு மந்தியி னூடலுங்
குயிலின் பாடலுங் கூடி மலிந்தவண்
வெயிலி னீங்கிய வெண்மணற் றண்ணிழல்
பயிலு மாதவிப் பந்தரொன் றெய்தினான்.

(இ - ள்.) மயிலின் ஆடலும் - மயிலின் ஆட்டமும்; மந்தியின் ஊடலும்-பெண் குரங்கின் பிணக்கும் ; குயிலின் பாடலும் கூடி மலிந்த அவண் - குயிலின் பாட்டும் கூடி நிறைந்த அப் பொழிலிலே ; வெயிலின் நீங்கிய வெண்மணல் தண்ணிழல் - வெயிலினின்றும் நீங்கிய வெண்மையான மணல் பரவிய தண்ணிய நிழலுறும் ; மாதவிப் பந்தர் ஒன்று எய்தினான்-மாதவிப் பந்தர் ஒன்றை அடைந்தான்.

(வி - ம்.) மந்தி-பெண்குரங்கு. மாதவிப்பந்தர்-குருக்கத்திக் கொடி படர்ந்து பந்தரிட்ட இடம். (க௬௭)

கஙஉங. காது சேர்ந்த கஃடிப்பிணை கையது
தாது மல்கிய தண்கழு நீர்மல
ரோத நித்தில வட்டமோர் பொன்செய்நாண்
கோதை வெம்முலை மேற்கொண்ட கோலமே.

(இ - ள்) *காது சேர்ந்த கடிப்பிணை - காதைச் சேர்ந்தன கடிப்பிணை என்னும் அணி; கையது தாது மல்கிய தண்கழு நீர்மலர் - கையில் உள்ளது மகரந்தம் நிறைந்த தண்ணிய கழுநீர் மலர்; வெம்முலை ஓத நித்தில வட்டம ஓர் பொன்செய் நாண் - முலையிடத்தன கடல் முத்துமாலையும் ஒரு பொன்வடமும்; கோதைமேற்கொண்ட கோலம் - இது பதுமைமேற் கொண்ட ஒப்பனை.*

(வி - ம்.) *காமநோயினால் ஒப்பனை சிறிதாக இருந்தது.*

*கடிப்பிணை - ஒருவகைக் காதணி: கடிப்பு இணை எனக் கண்ணழித்தல் வேண்டும். "கோலவித்தகம் குயின்ற நுட்பத்துத் தோடும் கடிப்பும் துயல்வருங் காதினர் வாலிழை மகளிர்" எனப் பெருங்கதையினும் (உ : எ. ந௲அ) வருதல் காண்க. "வயிரக்கடிப்பிட்டு வார்காது தாழப் பெருக்கி" என்னும் பெரியாழ்வார் திருமொழியால் இவ்வணி காதினைத் தாழப் பெருக்குதற் கிடப்படுதல் உணரலாம்.* (கஙஅ)

கஙஉச. விண்பு தைப்பன வெண்மலர் வேய்ந்துளாற்
கண்பு தைப்பன காரிரும் பூம்பொழில்
சண்ப கத்தணி கோதைநின் றாடனி
நண்ப னைநினை யாநறு மேனியே.

(இ - ள்.) *சண்பகத்து அணி கோதை நறுமேனி - சண்பகத்தின் கோதையை யொத்த நல்ல மெய்யினாள்; விண் புதைப்பன வெண்மலர் வேய்ந்து - வானை மறைக்கும் வெண்மையான மலர்கள் வேயப்பெற்று; உளால் கண்புதைப்பன கார் இரும் பூம்பொழில் - உள்ளிடம் கண்ணை மறைப்பனவாகிய கரிய பெரிய மலர்ப் பொழிலிலே; நண்பனை நினையா தனி நின்றாள் - நண்பனை நினைத்துப் பொழிலிலே தனியே நின்றாள்.*

(வி - ம்.) *அப் பொழில் - அவன் சேர்ந்த மாதவிப் பொழில்.*

*விண்ணை மறைப்பனவாகிய பொழில், மலராலே வேயப்பட்டு உள்ளிடம் கண்ணை மறைப்பனவாகிய பொழில் எனத் தனித்தனிகூட்டுக.*

கஙஉடு. கறந்த பாலினுட் காசி றிருமணி
நிறங்கி ளர்ந்துதன் னீர்மைகெட் டாங்கவண்
மறைந்த மாதவி மாமை நிழற்றலிற்
சிறந்த செல்வனுஞ் சிந்தையி னேக்கினான்.

(இ - ள்.) கறந்த பாலினுள் காசு இல் திருமணி - கறந்து வைத்த பாலிலே குற்றமற்ற நீலமணி; நிறம் கிளர்ந்து தன் நீர்மை கொட்டங்கு - நிறம் கிளர அது தன் இயல்பு கெட்டாற் போல; அவள் மறைந்த மாதவிமாமை நிழற்றலின் - பதுமை மறைந்து நின்ற மாதவிப் பூவின் மேலே அவளுடைய மாமை நிறம் ஒளிவிடுதலின்; சிறந்த செல்வனும் சிந்தையின் நோக்கினன் - சிறப்புற்ற செல்வனும் தன் மனம் பொருந்த நோக்கினன்.

(வி - ம்.) மாமை: 'நீர்வளர் ஆம்பல் தூம்புடைத் திரள்கால் நாருரித் தன்ன மதனின் மாமை' (நற். கூ: க-உ) என்பதனால் அறிக. மாதவி: மலருக்கு ஆகுபெயர். இவ்வொளி யாதென்று கருதினன். ()

கஙஉசு. வரையின் மங்கைகோல் வாங்கிருந் தூங்குநீர்த்
திரையின் செல்விகோ றேமலர்ப் பாவைகோ
லுரையின் சாய லியக்கிகோல் யார்கோலிவ்
விரைசெய் கோலத்து வெள்வளைத் தோளியே.

(இ - ள்.) இவ் விரைசெய் கோலத்து வெள்வளைத்தோளி - இந்த மணங்கமழும் ஒப்பனையுடைய வளைத்தோளினுள்; வரையின் மங்கைகொல்? - மலையர மகளோ?; வாங்கு இருந்தூங்கு நீர்த்திரையின் செல்விகொல்? - வளைந்த பெரிய அசையும் நீரை யுடைய கடலில் வாழும் அரமங்கையோ?; தேன்மலர்ப் பாவை கொல்? - தேனையுடைய தாமரையில் வாழும் திருமகளோ?; உரைஇன் சாயல் இயக்கி கொல்? - புகழப்பெறும் இனிய மென்மையையுடைய இயக்கியோ?; யார்கொல் - யாவளோ?

(வி - ம்.) பதுமையை முன்பு கண்டவனாயினும் வேட்கை மிகுதியால் ஐயம் நிகழ்ந்தது.

வாங்குநீர் இருந்தூங்கு நீர் எனத் தனித்தனிக் கூட்டுக. வாங்கு - உலகினை வளைந்த. இருந்தூங்கு நீர் - பெரிய அசைகின்ற நீர். (கஙக)

கஙஉஎ. மாலை வாடின வாட்க ணிமைத்தன
காலும் பூமியைத் தோய்ந்தன காரிகைப்
பாலின் றீஞ்சொற் பதுமையிந் நின்றவள்
சோலை வேய்மருள் சூழ்வளைத் தோளியே.

(இ - ள்.) மாலை வாடின - மாலைகள் வாடியுள்ளன; வாள் கண் இமைத்தன - வாளனைய கண்கள் இமைக்கின்றன; காலும் பூமியைத் தோய்ந்தன - கால்களும் நிலமிசைத் தோய்கின்றன; இந் நின்றவள் பால்இன் தீசொல் - (ஆகையால்) இங்கே நிற்கின்றவள் பாலனைய இனிய மொழியாளாகிய; சோலை வேய்மருள் சூழ்வளைத் தோளி பதுமையே - பொழிலில் உள்ள மூங்கிலை மயக்கும் வளைசூழ்ந்த தோளியாளாகிய பதுமையே.

(வி - ம்.) 'தோளியே' என்பதன் ஈற்றிலுள்ள ஏகாரத்தைப் பதுமையின் ஈற்றிற் சேர்க்க. மருள் : உவம உருபு. (கசுஉ)

கருஉஅ. தேவர் பண்ணிய தீந்தோடை யின்சுவை
மேவர் தென்றமிழ் மெய்ப்பொரு ளாதலிற்
கோவத் தன்னமேன் சீறடிக் கோம்பனாள்
பூவர் சோலை புகுவலென் றெண்ணினான்.

(இ - ள்.) தீ தொடைத் தேவர் பண்ணிய இன்சுவை - இனியயாழினையுடைய கந்தருவர் அமைத்த இனியமணம்; மேவரு தென் தமிழ் மெய்ப்பொருள் ஆதலின் - பொருந்திய தமிழகப் பொருளில் முதற் கந்தருவமான உண்மை மணமாகும் ஆதலினால்; கோவத்து அன்னமென் சீறடிக் கொம்பனாள் பூவரு சோலை - இந்திரகோபம் போன்ற மென்மையான சிற்றடியுடைய மலர்க்கொம்பனாள் நிற்கின்ற மலர் பொருந்திய பொழிலிலே; புகுவல் என்று எண்ணினான் - யானும் சென்று இயற்கைப் புணர்ச்சியில் ஈடுபடுவேன் என்று எண்ணினான்.

(வி - ம்) முதற் கந்தருவம்: நாடக வழக்கானது. இது சுட்டி ஒருவர் பெயர் கொள்ளப்படாமல் வருவது. ஈண்டுக் கூறியது சுட்டியொருவர் பெயர் கொள்ளப்படுவதால் இரண்டாங் கந்தருவமான உலகியல் வழக்காகும் மெய்ப்பொருள் என்றார் இதனை. இது ஐந்து நிலம் பெற்றது. 'தீந்தொடைத் தேவர்' என்று இயைக்க. பூவர்: அர்: பகுதிப் பொருள் விகுதி என்பர் நச்சினார்க்கினியர். முதற் கந்தருவம் அன்மையின் எண்ணினான் என்றார். (கசுரு)

கருஉகூ. அல்லி சேரணங் கன்னவட் காயிடைப்
புல்லி நின்றமெய்ந் நாண்புறப் பட்டது
கல்செய் தோளவன் காமரு பேருணர்
வெல்லை நீங்கிற் றியைந்தன ரேன்பவே.

(இ - ள்.) அல்லிசேர் அணங்கு அன்னவட்கு - தாமரை மலர்த் திருவனையாட்கு; ஆயிடைப் புல்லி நின்ற மெய்ந்நாண் புறப்பட்டது - அவன் அங்ஙனம் எண்ணிச் சென்ற பொழுது பொருந்தி நின்ற மெய்ந்நாணம் நீங்கியது; கல்செய் தோளவன் காமரு பேர் உணர்வு எல்லை நீங்கிற்று - கல்லாலாகியது போன்ற தோளையுடையானின் அழகிய பேரறிவு அவன் எல்லையைக் கடந்தது; இயைந்தனர் - அப்போது இருவரும் கூடினர்.

(வி - ம்.) என்ப, ஏ: அசைகள்.

அல்லி - அகவிதழ்; ஈண்டுத் தாமரை மலர்க்கு ஆகுபெயர். அணங்கு - ஈண்டுத் திருமகள்; பதுமைக்குவமை. தோளவன் : சீவகன். (கசுசு)

௧௬௬௦. களித்த கண்ணிணை காம்பென வீங்குதோட்
டெளிர்த்த வெள்வளை சேர்ந்தது மாமையுந்
தளித்த சுண்ணஞ் சிதைந்தன குங்கும
மளித்த பூம்பட் டணிந்து திகழ்ந்ததே.

(இ - ள்.) கண்இணை களித்த - (அப்போது) கண்களிரண்டும் களித்தன; காம்பு என வீங்குதோள் வெள்வளை தெளிர்த்த - மூங்கில் எனப் பருத்த தோள்களில் வெள்வளைகள் ஒலித்தன; மாமையும் சேர்ந்தது - போன மாமைநிறம் வந்து சேர்ந்தது; தளித்த சுண்ணம் குங்குமம் சிதைந்தன - பூசிய சுண்ணப் பொடியும் குங்குமமும் அழிந்தன; அளித்த பூம்பட்டு அணிந்து திகழ்ந்தது - இவனால் அருள் பண்ணப்பட்ட பட்டும் அணியப் பெற்று விளங்கியது.

(வி - ம்.) புணர்ச்சி நீங்கிப் பட்டணிந்தாளாதலின் அது திகழ்ந்தது.

கண்ணிணை களித்த என மாறுக. வெள்வளை - வெள்ளிய சங்க வளையல். மாமையும் சேர்ந்தது என மாறுக. தளித்த - பூசிய. அளித்த - சீவகனால் வழங்கப்பட்ட என்க. (௧௬௫)

௧௬௬௧. குவளை யேய்ந்த கொடுங்குழை கூந்தலுட்
டிவளும் வாழிய செம்பொறி வண்டுகா
ளிவள கூரெயி றீனுந் தகையவோ
தவள மெல்லிணர்த் தண்கொடி முல்லையே.

(இ - ள்.) குவளை ஏய்ந்த கொடுங்குழை கூந்தலுள் - குவளை மலர் பொருந்திய, வளைந்த மகரக் குழையை அணிந்தவளின் கூந்தலிலே; திவளும் செம்பொறி வண்டுகாள்! - துவளும் செம்புள்ளி வண்டுகளே!; தவளமெல் இணர் தண் கொடிமுல்லை - வெண்மையான மெல்லிய பூங்கொத்துக்களையுடைய தண்ணிய கொடிமுல்லைகள்; இவளகூர் எயிறு ஈனும் தகையவோ? - இவளுடைய கூரிய எயிற்றை ஈனும் தகுதியையுடையவோ? கூறுமின்.

(வி - ம்.) வாழிய: அசை. இவள: அ: ஆறனுருபு.

ஏய்ந்த - இயைந்த. கொடுங்குழை : அன்மொழித்தொகை; பதுமை. திவள்தல் - துவளுதல். தவளமெல்லிணர் - வெள்ளிய மெல்லிய பூங்கொத்தினையுடைய. (௧௬௬)

௧௬௬௨. பொன்றுஞ் சாகத்துப் பூங்கண்கள் பொழ்ந்தபு
ணின்றிப் பூண்கொ ளிளமுலைச் சாந்தலா
லன்றித் தீர்ப்பன யாவையு மில்லையே
யென்று மாத ரேழினல மேத்தினன்.

(இ - ள்.) பொன் - பொன்னனையாய்!; துஞ்சு ஆகத்துப் பூங்கண்கள் போழ்ந்த புண் - நீ தங்கிய மார்பிலே நின் கண்களாகிய வேல்பட்டுப் பிளந்து கிடந்த பழம் புண்களை; இன்று இப் பூண்கொள் இளமுலைச் சாந்து அலால் - இன்று இந்த அணிகலன் தங்கிய இளமுலைகளில் அணிந்த சாந்தல்லது; அன்றித் தீர்ப்பன யாவையும் இல்லை-மாறுபட்டுத் தீர்ப்பன வேறொன்றும் இல்லை; என்று மாதர் எழில்நலம் ஏத்தினன் - என்று கூறிப் பதுமையின் அழகுநலத்தைப் போற்றினன்.

(வி - ம்.) இவையிரண்டும் நயப்பு. பொன்: பதுமை: உவமையாகுபெயர். இனித் தலைவியின் முன்னுதலின் 'திருமகள் துஞ்சும் ஆகம்' எனத் தன்னைப் புகழ்தலும் ஆம். ஆகம்: நெஞ்சு: இடவாகு பெயர். (கசுஎ)

கஙஙங. கண்ணி வேய்ந்து கருங்குழல் கைசெய்து
வண்ண மாலை நடுச்சிகை யுள்வளைஇச்
சேண்ண வஞ்சிலம் பேறு துகளவித்
தண்ண லின்புறத் தாற்றலி னாற்றினள்.

(இ - ள்.) கண்ணி வேய்ந்து - மலர்க்கண்ணியைச் சூடி; கருங்குழல் கைசெய்து - கரிய கூந்தலை ஒழுங்காக அணிந்து; வண்ணமாலை நடுச்சிகை உள் வளைஇ - அழகிய மாலையைக் கொண்டையின் நடுவே வளையமாக வைத்து; செண்ணம் அம் சிலம்பு ஏறு துகள் அவித்து - நுண்ணிய தொழிலையுடைய அழகிய சிலம்பிலேறின பூந்துகளைத் துடைத்து; அண்ணல் இன்புறுத்து ஆற்றலின் - சீவகன் இன்பம் ஊட்டி ஆறுதல் செய்தலால்; ஆற்றினள் - ஆறுதல் கொண்டாள்.

(வி - ம்.) கூட்டத்தின்போது சிலம்பிலே நிலமிசையுதிர்ந்து கிடந்த பூந்துகள் படிந்தது.

கண்ணி - தலையிற் சூடும் மாலை. செண்ணம் - ஒப்பனை; நுண்டொழில் என்பார் நச்சினார்க்கினியர். அண்ணல் : சீவகன். (கசுஅ)

கஙஙச. திங்க ளும்மறு வும்மெனச் சேர்ந்தது
நங்க ளன்பென நாட்டி வலிப்புறீஇ
யிங்கோ ளித்திடு வேனும ரெய்தினர்
கோங்கோ ளிக்குழ லாயெனக் கூறினன்.

(இ - ள்.) நங்கள் அன்பு திங்களும் மறுவும் எனச் சேர்ந்தது - நம்முடைய அன்பு திங்களும் அதிற் பொருந்திய மறுவும் என்னுமாறு பொருந்தியது; என நாட்டி வலிப்பு உறீஇ-என்று கூறி நாட்டி வலியுறுத்தி; கொங்கு ஒளி குழலாய்! - தேன் பொருந்திய கூந்தலாய்!; நுமர் எய்தினர் - உன் ஆயத்தார் வந்து

விட்டனர் (ஆதலால்); இங்கு ஒளித்திடுவேன் எனக் கூறினான் - இங்கு மறைந்திடுவேன் என்று கூறினான்.

(வி - ம்.) நங்கள்: கள்: அசை. நாட்டி - பிரிவென்பதொன்றுண்டென நிலைபெறுத்தி. வலிப்பு உறீஇ - பிரிந்தும் உளத்தாற் பிரிவிலேமென்று தெளியும்படி நெஞ்சை வற்புறுத்தி. உடன் தேய்ந்து உடன் வளர்தலின் மறு உவமை.

நச்சினார்க்கினியர் இவ்விரண்டு செய்யுளையும் ஒரு தொடராக்கிக் கூறும் முடிபு :

"அண்ணல் வேய்ந்து, கைசெய்து, தகளவித்து, இன்புறுத்தி, நம் அன்பு சேர்ந்ததென்று கூறி நாட்டி, வலிப்புறீஇ ஆற்றுவித்தலின் ஆற்றினாள். ஆற்றின பின்பு, குழலாய்! எய்தினார், ஒளிப்பேன் என்று கூறினான்." (கசுகூ).

கஙஙரு. மழையி டைக்குளித் திட்டதோர் வாண்மினிற்
றழையி டைக்குளித் தான்றகை வேலினா
னிழையி டைக்குளித் தேந்திய வெம்முலை
வழையி டைக்குளித் தார்வந்து தோன்றினார்.

(இ - ள்.) மழையிடைக் குளித்திட்டது ஓர் வாள் மினின் - மழையிடத்தே மறைந்திட்ட ஒரு மின்னைப்போல்; தகை வேலினான் தழையிடைக் குளித்தான் - தகுதியுற்ற வேலினான் கடிதாகத் தழையிடை மறைந்தனன்; இழையிடைக் குளித்து ஏந்திய வெம்முலை-அணிகலனிடையே மறைந்த ஏந்திய விருப்பூட்டும் முலையினாராகிய ; வழையிடைக் குளித்தார் வந்து தோன்றினார் - சுரபுன்னை மரங்களினிடையே மறைந்த ஆயத்தார் வந்து தோன்றினர்.

(வி - ம்) மழை : ஆகுபெயர். மின்னல் - ஈண்டுத்தொழில் பற்றிச் சீவகனுக்கு உவமை. குளித்தான்-மறைந்தவன். வழை-சுரபுன்னைமரம். குளித்தார் - மறைந்தார்; தோழியர். (கஎ0)

கஙஙசு. மின்னோர் பூம்பொழின் மேதகச் செல்வதொத்
தன்ன நாண வசைந்து சிலம்படி
மென்மே லம்மலர் மேன்மிதித் தேகினா
ணன்ன லம்மவற் கேவைத்த நங்கையே.

(இ - ள்.) நல்நலமே அவற்கு வைத்த நங்கை - நல்ல அன்பொன்றுமே அவனுக்குத் துணையாக வைத்த பதுமை ; மின்ஓர் பூம்பொழில் மேதகச் செல்வது ஒத்து - மின்னானது ஒரு மலர்ப் பொழிலே சிறப்புறச் செல்வதுபோல; சிலம்பு அடி மென்மெல மலர்மேல் மிதித்து - சிலம்பணிந்த அடியை மெல்ல மெல்ல மலரின்மேல் எடுத்து வைத்து; அன்னம் நாண அசைந்து ஏகினாள் - அன்னமும் வெள்குற அசைந்து சென்றாள்.

(வி - ம்) முற்பிறப்பே தொடங்கி அன்புவைத்தவள் என்றுமாம். மின், பதுமைக்கு உவமை. மே - பெருமை. நன்னலம் - சிறந்த அன்பு. அவற்கு : சீவகனுக்கு. நங்கை : பதுமை. (௧எ௧)

௧௩௩எ. திங்கள் சூழ்ந்தபன் மீனெனச் சென்றெய்தி
நங்கை தவ்வையுந் தோழியு நண்ணின
ரங்க வாய மடிப்பணி செய்தபின்
றங்கள் காதலி ஞற்றகை பாடினர்.

(இ - ள்.) திங்கள் சூழ்ந்த பல்மீன் எனச் சென்று எய்தி - திங்களைச் சூழ்ந்த பல மீன்கள் என்னுமாறு போய்ச்சேர்ந்து; அங்கு அவ் ஆயம் அடிப்பணி செய்தபின் - அங்கே அந்த ஆயத்தார் குற்றேவல் புரிந்த பிறகு; நங்கை தவ்வையும் தோழியும் நண்ணினர் - பதுமையின் செவிலியும் தோழியும் அணுகினர்; தங்கள் காதலினால் தகைபாடினர் - (பின்னர்) தங்கள் அன்பு மிகுதியால் அவள் நலத்தை எல்லோரும் சேர்ந்து பாராட்டினர்.

(வி - ம்) தவ்வை: செவிலிக்கு மூத்தவள். பாம்பு தீண்டின பொழிலாதலிற் காவலாக வந்தனர்.

திங்கள் பதுமைக்கும் மீன்கள் தோழியர்க்கும் உவமை. தவ்வை - தாய்; ஈண்டுச் செவிலி. தகை-அழகு. பாடினர்-பாடிப்பரவினர். (௧எ௨)

௧௩௩அ. தழையுங் கண்ணியுந் தண்ணறு மாலையும்
விழைவ சேர்த்துபு மெல்லென வேகினர்
முழையுண் மூரி முழங்கரி யேறனான்
பழைய நண்பனைப் பண்புளி யெய்தினான்.

(இ - ள்.) தழையும் கண்ணியும் தண்நறு மாலையும்-தழை கண்ணி நல்ல மாலை ஆகியவற்றில்; விழைவ சேர்த்துபு - அவள் விரும்புவனவற்றைச் சேர்த்து; மெல்என ஏகினர் - மெல்லக் கொண்டு சென்றனர்; முழையுள் மூரி முழங்கு அரி ஏறனான் - முழையிலே பெருமையுடன் முழங்கும் சிங்கம் போன்ற சீவகனும்; பழைய நண்பனைப் பண்புஉளி எய்தினான் - பழைய நண்பனாகிய உலோகமாபாலனை, அப் பதுமையின் பண்புகளை எண்ணியவாறு அடைந்தான்.

(வி - ம்.) பண்பு: கூட்டத்தின்போது கண்ட குணங்கள்.

விழைவ: வினையாலணையும் பெயர். துசர்த்துபு - செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். சேர்த்துபு - சேர்த்தி. முழை - மலைக்குகை. மூரி - பெருமை. அரியேறு - ஆண் சிங்கம். அன்னான் என்பது அனான் என னகர மெய் குறைந்து நின்றது. இது தொகுத்தல் விகாரம். அன்னான் - போன்றவன்; இது சீவகனையுணர்த்திற்று. பழைய நண்பன் என்றது உலோகபாலனை. உள்ளி என்பது உளி என இடை குறைந்து நின்றது. உள்ளி - நினைத்து. (௧எ௩)

வேறு

கருகூ. பூமியை யாடற் கொத்த பொறியின ஞத லானு
மாமக ளுயிரை மீட்ட வலத்தின ஞத லானு
நேமியான் சிறுவ னன்ன நெடுந்தகை நேரு மாயி
ஞமவற் கழகி தாக நங்கையைக் கொடுத்து மென்முன்.

(இ - ள்.) மாமகள் உயிரை மீட்ட வலத்தினன் ஆத லானும் - பதுமையின் உயிரைத் தந்த வெற்றியை உடையோன் ஆகையாலும்; பூமியை ஆள்தற்கு ஒத்த பொறியினன் ஆக லானும் - உலகினை ஆள்வதற்குரிய நல்லிலக்கணம் உடையனாத லானும்; நேமியான் சிறுவன் அன்ன நெடுந்தகை நேருமாயின் - திருமாலின் மகனான காமனை யொத்த சீவகன் உடன்படுவா னாயின்; நாம் அழகிதாக அவற்கு நங்கையைக் கொடுத்தும் என்றான் - நமக்கு நன்றாக நாம் பதுமையை அவனுக்குக் கொடுக்கக் கடவேம் என்று தனபதி மன்னன் கூறினான்.

(வி - ம்.) ஆடற்கு-ஆள்வதற்கு. பொறி - நல்லிலக்கணம். மாமகள்: பெருமைமிக்க பதுமை. வலம் - வெற்றி. நேமியான் சிறுவன் : திருமால் மகனான காமன்; சீவகனுக்குவமை. கொடுத்தும் : தன்மைப் பன்மை வினைமுற்று. (கஎசு)

கருசு0. மதிதர னென்னு மாசின் மந்திரி சொல்லக் கேட்டே
யுதிதர வுணர்வல் யானு மொப்பினு முருவி னானும்
விதிதர வந்த தொன்றே விளங்குபூண் முலையி னாளைக்
கோதிதரு வேலி னாற்கே கொடுப்பது கரும மென்றான்.

(இ - ள்.) சொல்லக் கேட்டு - அவ்வாறு அரசன் கூறக் கேட்டு; மதிதரன் என்னும் மாசு இல் மந்திரி - மதிதரன் எனும் பெயரை யுடைய குற்றம் அற்ற அமைச்சன்; ஒப்பினும் உருவி னானும் - ஒப்பினாலும் உருவுடைமையாலும்; விதிதர வந்தது ஒன்றே - ஊழ்தர வந்தது ஒன்றாம்; விளங்குபூண் முலையினாளைக் கொதிதரு வேலினாற்கே கொடுப்பது கருமம் - விளங்கும் அணி யணிந்த முலையாளைக் கொதியிட்ட வேலினானுக்கே கொடுப்பது கடமை; யானும் உதிதர உணர்வல் என்றான் - யானும் என் உணர்வில் தோன்ற முன்னரே உணர்ந்தேன் என்றான்.

(வி - ம்) பதுமையும் சீவகனும் மணப்பதற்கு ஒப்பானும் உருவா னும் ஊழ் கூட்டுவித்தது என்று மந்திரி கூறினான். உரு - அழகு. ஒப்பு: அரசகுடும்பமாதல் முதலான ஒப்புமை. 'பொறி' என முற்செய்யுளில் வந்தது காண்க. இனி, 'உரு உட்காகும்' எனக்கொண்டு, 'பதுமைக்குற்ற நஞ்சை நீக்கினாற்குப் பதுமையைக் கொடுப்பதாக முரசறைந்ததை மாற்றக் கூடாது என்னும் அச்சம்' என்பர் நச்சினார்க்கினியர். அது பொருந்து மேற்கொள்க. ஒப்பு: "பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு - உருவு

நிறுத்த காம வாயில் - நிறையே அருளே உணர்வொடு திருவென, முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே' (தொல்-மெய்ப். உரு) என்பதை மேற்கொண்டு, 'உரு' என இவ் வொப்பில் வந்ததால், 'உட்கு' என இதற்குப் பொருள் கொண்டனர் போலும். (கஎ௫)

கஙசக. உள்விரித் திதனை யெல்லா
முரைக்கென மொழிந்து விட்டான்
றெள்ளிதிற் றெரியச் சென்றாங்
குரைத்தலுங் குமரன் றேறி
வெள்ளிலை யணிந்த வேலான்
வேண்டிய தாக வென்று
னள்ளிலை வேல்கோண் மன்னற்
கமைச்சனஃ தமைந்த தென்றான்.

(இ - ள்.) இதனை யெல்லாம் உள்விரித்து உரைக்க என மொழிந்துவிட்டான் - (அதனைக் கேட்ட மன்னன்) இந் நிலைமை யெல்லாம் அவனுக்குத் தெளிவாக விளக்கியுரைப்பாயாக என்று, கூறிவிட்டான்; ஆங்குச் சென்று தெள்ளிதின் தெரிய உரைத்தலும் - மந்திரியும் ஆங்குச் சென்று தெளிவாக விளக்கிக் கூறலும்; குமரன் தேறி - சீவகன் தெளிய வுணர்ந்து; வெள் இலை அணிந்த வேலான் வேண்டியது ஆக என்றான் - வெற்றிலை போன்ற முகமுடைய வேலையுடைய மன்னன் விரும்பியவாறே ஆகுக என்றான்; அள் இலை வேல்கொள் மன்னற்கு அமைச்சன் அஃது அமைந்தது என்றான் - (அது கேட்டு) கூரிய வேலணிந்த மன்னனிடம் சென்று மந்திரி அஃது அப்படியே முடிந்த தென்றான்.

(வி - ம்.) இதனை-இக்கருத்தினை. குமரன் : சீவகன். வேண்டியது-தனபதிமன்னன் விரும்பியது. வெள்ளிலை - வெற்றிலை. அணிந்த : உவமவுருபு. மன்னற்கு : தனபதிக்கு. அமைச்சன் : மதிதரன். அஃது - அக்காரியம். (கஎகூ)

கஙசஉ. போன்றிய வுயிரை மீட்டான்
பூஞ்சிகைப் போது வேய்ந்தா
னன்றியு மாமேய் தீண்டி
யளித்தன னழகின் மிக்கா
ளென்றிய மகளிர் தாமே
யுற்றவர்க் குரிய ரென்றா
வேன்றிகோள் வேலி னாற்கே
பான்மையும் விளைந்த தன்றே.

(இ - ள்.) பொன்றிய உயிரை மீட்டான் - நீங்கற் கிருந்த உயிரை மீட்டான்; பூஞ்சிகைப் போது வேய்ந்தான் - அழகிய கூந்தலிலே மலரணிந்தான்; அன்றியும் மா மெய் தீண்டி அளித்தனன் - மேலும், பதுமையின் மெய்யினைத் தொட்டு அளி செய்தான்; அழகின் மிக்கான் - அழகினும் மேம்பட்டவன்; ஒன்றிய மகளிர்தாமே உற்றவர்க்குரியர் என்னு - பொருந்திய மகளிர் தாங்கள் தங்களை உற்றவர்க்கே உரியவர் என்று; வென்றி கொள் வேலினுற்கே பான்மையும் விளைந்தது அன்றே! - வெற்றியுடைய வேலினுனுக்கே அத்தன்மையும் விளைந்தது அல்லவா?

(வி - ம்.) 'உற்ருர்க் குரியர் பொற்ருெடி மகளிர்' (சிற்ற - உஉடு. பேர்-மேற்.)

பொன்றிய உயிர் என்றது இறத்தற்கிருந்த உயிர் என்றவாறு. சிகையிற் போது வேய்ந்தான் என்க. மாமெய்யும் எனவேண்டிய சிறப்பும்மை செய்யுள் விகாரத்தான் தொக்கது. (கஎஎ)

கஙசங. கோப்பெருந் தேவி கோற்றக்
கோமக னிவைக ணுடி
யாப்புடைத் தையற் கின்றே
நங்கையை யமைக்க வென்னத்
தூப்புரி முத்த மாலை
தோடக்கோடு தூக்கி யெங்கும்
பூப்புரிந் தணிந்து கோயில்
புதுவது புனைந்த தன்றே.

(இ - ள்.) இவைகள் கோப்பெருந் தேவி கொற்றக் கோமகன் நாடி - இவற்றைப் தனபதியும் திலோத்தமையும் உலோகபாலனும் தம்மிற் கூடி ஆராய்ந்து; இன்றே ஐயற்கு நங்கையை யாப்பு உடைத்து - இன்றைக்கே சீவனுக்குப் பதுமையை நல்கும் பொருத்தம் உளது; அமைக்க என்ன - (நீவிர் மணத்திற்கு வேண்டுவன) அமையுங்கோள் என்று பணியாளரை ஏவ; தூ புரி முத்தமாலை தொடக்கொடு எங்கும் தூக்கி - தூய வடமான முத்தமாலையைச் சல்லியுந் தூக்குமாக எங்கும் நாற்றி; பூப்புரிந்து அணிந்து-பூவை விரும்பி அணிந்து; கோயில் புதுவது புனைந்தது-ஒரு கோயில் புதுவதாகப் புனையப்பட்டது.

(வி - ம்.) கோ : தனபதி. பெருந்தேவி - ஈண்டுத் திலோத்தமை. கோமகன் : உலோகபாலன். கோவும் தேவியும் மகனும் என உம்மை விரிக்க. ஐயற்கு : சீவகனுக்கு. கோயில் புதுவழி புனைந்து - அரண்மனை புதியதாக அலங்கரிக்கப்பட்டது என்றும் பொருள் கொள்ளலாம். (கஎஅ)

கநூசச. கணிபுனைந் துரைத்தநாளாற் கண்ணிய கோயி றன்னுண்
மணிபுனை மகளிர் நல்லார் மங்கல மரபு கூறி
யணியுடைக் கமல மன்ன வங்கைசேர் முன்கை தன்மேற்
றுணிவுடைக் காப்புக் கட்டிச் சுற்றுபு தொழுது காத்தார்.

(இ - ள்.) கணி புனைந்து உரைத்த நாளால் - கணி ஆராய்ந்து கூறிய நாளிலே; கண்ணிய கோயில் தன்னுள் - நன்றென்று கருதிய கோயிலிலே; மணிபுனை மகளிர் நல்லார் மங்கல மரபு கூறி - மணி புனைந்த மகளிராகிய நல்லார் மங்கல மரபினை உரைத்து; அணியுடைக் கமலம் அன்ன அங்கை சேர் முன்கை தன்மேல் - அழகுறு தாமரை அன்ன அங்கையினையுடைய முன் கையிலே; துணிவுடைக் காப்புக் கட்டி - (இருவர்க்கும்) உறுதி யுறு காப்பினை அணிய; சுற்றுபு தொழுது காத்தார் - சுற்றித் தொழுது புறப்படாமற் காத்தார்.

(வி - ம்.) கணி - கணிவன். கண்ணிய - கருதிய. கட்டி - கட்ட. சுற்றுபு - சுற்றி. (கஎசு)

கநூசரு. மழகளிற் றெருத்திற் றந்த
மணிக்குட மண்ணு நீரா
லழகனை மண்ணுப் பெய்தாங்
கருங்கடிக் கோத்த கோலந்
தொழுதகத் தோன்றச் செய்தார்
தூமணிப் பாவை யன்னார்
விழுமணிக் கொடிய னாளும்
விண்ணவர் மடந்தை யொத்தாள்.

(இ - ள்.) தூ மணிப் பாவை அன்னார் - தூய மாணிக்கப் பாவை போன்றவர்; மழ களிற்று எருத்தில் தந்த மணிக்குடம் மண்ணும் நீரால் - மழகளிற்றின் பிடரிலே கொணர்ந்த மணிக் குடத்திலிருந்து குளிக்கும் நீரினால்; அழகனை மண்ணுப் பெய்து - சீவகனைக் குளிப்பாட்டி; ஆங்கு அருங்கடிக்கு ஒத்த கோலம் - அவ்விடத்தே திருமணத்திற்குப் பொருந்திய ஒப்பனையை; தொழுதகத் தோன்றச் செய்தார் - நன்கு மதிக்கும்படி விளங்க ஒப்பித்தனர்; விழு மணிக்கொடி அனாளும் - சிறந்த மாணிக்கக் கொடி போன்ற பதுமையும்; விண்ணவர் மடந்தை ஒத்தாள் - (அவ்வொப்பனையாலே) வானவர் மகள் போன்றனள்.

(வி - ம்.) மழகளிறு-இளைய யானை. எருத்து - பிடர். மண்ணுநீர்-மங்கல நீராடற்குரிய கடவுள்நீர். அழகனை : சீவகனை. மண்ணுப்பெய்து - (மங்கல) நீராட்டி. கடி - திருமணம். பாவையன்னார் - ஈண்டு வண்ணமகளிர். மணிக்கொடியனாள் : பதுமை. (கஅ0)

வேறு

கரு௬௬. கயற்க ணாளையுங் காமனன் னானையு
மியற்றி னார்மண மேத்தருந் தன்மையார்
மயற்கை யில்லவர் மன்றலின் மன்னிய
வியற்கை யன்புடை யாரியைந் தார்களே.

(இ-ள்.) ஏத்த அருந் தன்மையார் - புகழ்தற்கரிய தன்மையுடையார் ஆகிய தனபதி முதலாயினோர்; கயற்கணாளையும் காமன் அன்னானையும் - பதுமையையும் சீவகனையும்; மணம் இயற்றினர் - திருமணம் புரிவித்தனர்; மயற்கை இல்லவர் மன்றலின் மன்னிய - குற்றமற்ற கந்தருவரின் மணத்தைப் போல முன்பே பொருந்திய; இயற்கை அன்பு உடையார் இயைந்தார்கள் - இயற்கைப் புணர்ச்சியால் உள்ள அன்புடையார் தம்மிற் கூடினர்.

(வி-ம்.) கயற்கணாள் : பதுமை. காமனன்னான் : சீவகன். ஏத்தருந் தன்மையார் என்றது தனபதி முதலாயினாரை. மயற்கை-குற்றம். மயற்கையில்லவர் மன்றல் என்றது குற்றமற்ற தமிழச் சான்றோர் வகுத்த மணம் என்றவாறுமாம். முன்னரே கள்ளப்புணர்ச்சி யுடையாராகலின் இயற்கையன்புடையார் என்றார். (கஅக)

கரு௬எ. வாளும் வேலு மலைந்தரி யார்ந்தகண்
ணாளும் வார்கழன் மைந்தனு மாயிடைத்
தோளுந் தாளும் பிணைந்துரு வொன்றெய்தி
நாளு நாகர் நுகர்ச்சி நலத்தரே.

(இ-ள்.) வாளும் வேலும் மலைந்து அரியார்ந்த கண்ணாளும் - வாளையும் வேலையும் வென்று செவ்வரி பரந்த கண்ணாளும்; வார்கழல் மைந்தனும் - கட்டப் பெற்ற கழலையுடைய மைந்தனும்; ஆயிடை-பள்ளியிலே; தோளும் தாளும் பிணைந்து - தோளும் தோளும் தாளும் தாளும் பிணைதலின்; உரு ஒன்று எய்தி - ஒரு வடிவைப் பெற்று; நாளும் நாகர் நுகர்ச்சி நலத்தர் - நாள்தோறும் நாகர் நுகர்கின்ற நுகர்ச்சியின்பத்தை உடையராயினர்.

(வி-ம்.) மலைந்து-வென்று. அரி-செவ்வரி கருவரிகள். கண்ணாள்: பதுமை. மைந்தன் : சீவகன். ஆயிடை என்றது - பள்ளிக்கட்டிலிடத்தே என்பதுபட நின்றது. தோளொடு தோளும் தாளொடு தாளும் பிணைதலானே என்க. நாகர் - பவணலோகத்தார். (கஅஉ)

கரு௬அ. தணிக்குந் தாமரை யாணலங் தன்னையும்
பிணிக்கும் பீடினி யென்செயும் பேதைதன்
மணிக்கண் வெம்முலை தாம்பொர வாயவிழ்ந்
தணிக்கந் தன்னவன் ருரங் குடைந்ததே.

(இ - ள்.) தணிக்கும் தாமரையாள் நலம் தன்னையும் - (பிறரழகைக்) கீழ்ப்படுத்தும் திருமகளின் அழகையும்; பிணிக்கும் பீடு இனி என் செயும் - பிணிக்கும் இவர் தகைமை மேலும் என்ன செயும்!; பேதை தன்மணிக்கண் வெம்முலை தாம் பொர - பதுமையின் மணிக் கண்ணையுடைய முலைகள் ஆகிய யானைகள் பொருதலால்; அணிக்கந்து அன்னவன் தார் அங்கு வாய் அவிழ்ந்து உடைந்தது - அழகிய தூணனையவன் மாலை அங்கே கட்டலர்ந்து மலர்ந்தது.

(வி - ம்.) வாய் அவிழ்தல் அரும்பின் வாயவிழ்தலும் அவ்விடத்தினின்றும் நிலைகுலைதலுமாம். தார்: மாலையும், தூசிப்படையும். பிணிக்கும் பீடு: இருவருக்கும் பொது. (கஅ௩)

கஉசகூ. பரிந்த மாலை பறைந்தன குங்குமங்
கரிந்த கண்ணி கலந்த மகிழ்ச்சியி
னரிந்த மேகலை யார்த்தன வஞ்சிலம்
பிரிந்த வண்டிளை யார்விளை யாடவே.

(இ - ள்.) கலந்த மகிழ்ச்சியின் இளையார் விளையாட - கூடிய மகிழ்ச்சியினாலே இளைஞராகிய அவர்கள் விளையாடுதலினால்; மாலை பரிந்த - மார்பிலுள்ள முத்தமாலைகள் அற்றன; குங்குமம் பறைந்தன - குங்குமச் சாந்து அழிந்தன; கண்ணி கரிந்த - முடியில் அணிந்த கண்ணிகள் கரிந்தன; மேகலை அரிந்த - மேகலையிலுள்ள மணிகள் அற்றன; அம் சிலம்பு ஆர்த்தன - அழகிய சிலம்புகள் ஒலித்தன.

(வி - ம்.) இவ்விரண்டு செய்யுட்களையும் ஒரு தொடராக்கிப், 'பிணிக்கும் பீடினி என் செயும்!' என்பதை இறுதியிற் சேர்ப்பர் நச்சினார்க்கினியர். (கஅச)

க௩ூ0 கோழுமே னின்னகிற் கூட்டுறு மேன்புகை
கழுமு சேக்கையுட் காலையு மாலையுந்
தழுவு காத றணப்பிலர் செல்பவே
யெழுமை யும்மியைந் தெய்திய வன்பினார்.

(இ - ள்.) எழுமையும் இயைந்து எய்திய அன்பினர் - எழு பிறப்பும் பொருந்திப் பெற்ற அன்பினர்; கொழு மென் இன் அகில் கூட்டுறும் மென்புகை - கொழுவிய மெல்லிய இனிய அகிலுடன் கூட்டிடும் பொருள்கள் கலந்த மெல்லிய புகை; கழுமு சேக்கையுள்-பொருந்திய அணையிலே; காலையும் மாலையும் தழுவு காதல் தணப்பு இலர் செல்ப - காலையினும் மாலையினும் பொருந்திய காதல் நீங்கலராய்ச் சென்றனர்.

(வி - ம்.) கூட்டு-நேர்கட்டி முதலிய மணப் பொருள்கள்.

கொழுவிய புகை இனிய புகை மெல்லிய புகை எனத் தனித்தனிக் கூட்டுக. கழுமுதல் - பொருந்துதல். காலையும் மாலையும் பிரிதற்குரிய பொழுதுகள். அப்பொழுதும் பிரிவிலராய் என்பது கருத்து. தணப்பு - பிரிவு. எழுமையும் இயைந்து எய்திய அன்பினர் என்றது, அங்ஙனம் பிரிவிலராயதற்குக் குறிப்பேதுவாகும். (கஅ௫)

கூ௫௧. நாறி யுஞ்சுவைத் துங்நரம் பின்னிசை
கூறி யுங்குளிர் நாடக நோக்கியு
மூறின் வெம்முலை யாலுழப் பட்டுமவ்
வேற னன்வைகும் வைகலு மென்பவே.

(இ - ள்.) நாறியும் - நறுமணப் பொருள்கள் அணிந்தும்; சுவைத்தும் - சுவைப் பொருள்களை உண்டும்; நரம்பு இன் இசை கூறியும் - யாழிசையைக் கொண்டாடியும்; குளிர் நாடகம் நோக்கியும் - இனிய நாடகங்களைப் பார்த்தும் (காமத்தைப் பெருக்கி); ஊறு இன் வெம்முலையால் உழப்பட்டும் - ஊற்றினுக் கினிய முலையால் உழப்பட்டும்; அவ் ஏறு அனன் வைகலும் வைகும் - அந்த ஏறு போன்றவன் நாடோறும் தங்குவான்.

(வி - ம்) ஐம்பொறி நுகர்ச்சியுங் கூறினர். 'கண்டு கேட்டுண் டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும் - ஒண்டொடி கண்ணே உள.' என்றார் வள்ளுவர். (கஅகூ)

வேறு

கூ௫௨. விரிகதிர் விளங்கு பன்மீன்
கதிரோடு மிடைந்து திங்கட்
டெரிகதிர் திரட்டி வல்லான்
றெரிந்துகோத் தணிந்த போலுஞ்
சோரிகதிர் முத்த மின்னுந்
துணைமுலைத் தடத்தில் வீழ்ந்தான்
புரிகதிர்ப் பொன்செய் மாலைப்
புகைநுதிப் புலவு வேலான்.

(இ - ள்.) புரிகதிர் பொன் செய்மாலை புகைநுதிப் புலவு வேலான் - மிகு கதிரை யுடைய பொன்னொளி தரும் மாலையை யுடைய, சின மிகும், நுனியிலே புலாலையுடைய வேலான்; விரி கதிர் விளங்கு பன் மீன் கதிரொடு மிடைந்து - விரிகின்ற கதிர்கள் விளங்கும் பல விண் மீன்களின் கதிர்களுடன் கலக்குமாறு; திங்கள் தெரி கதிர் திரட்டி - திங்களின் விளங்குங் கதிர்களையும் சேர்த்து; வல்லான் தெரிந்து கோத்து அணிந்த போலும் - வல்லவன் ஆராய்ந்து கோத்து அணிந்தன போன்ற; சொரி கதிர் முத்தம் மின்னும் - பெய்யும் ஒளியுடைய முத்து

மாலை மின்னுகின்ற; துணைமுலைத் தடத்தில் வீழ்ந்தான் - இரு முலைகளினிடத்தே அமிழ்ந்துவிட்டான்.

(வி - ம்.) மிடைந்து - மிடைய. அணிந்த : பெயர். புரிகதிர் - மிக்க கதிர். கதிர் விளங்கு மீன்களின் கதிரோடே மிடையும்படி திங்களின் கதிரைத் திரட்டி வல்லவன் கோத்தணிந்தவற்றை யொக்கும் கதிரையுடைய முத்தமின்னும் முலையென்க. (கஅஎ)

வேறு

கஅருஅ. எழின்மாலை யென்னுயிரை யான்கண்டே
னித்துணையே முலையிற் றாகிக்
குழன்மாலைக் கோம்பாகிக் கூரெயிறு
நாப்போழ்த லஞ்சி யஞ்சி
யுழன்மாலைத் தீங்கிளவி யொன்றிரண்டு
தான்மிழற்று மொருநாட் காறு
நிழன்மாலை வேனாண நீண்டகண்ணே
நெய்தோய்ந்த தளிரே மேனி.

(இ - ள்.) எழில்மாலை என் உயிரை யான் கண்டேன் - அழகினை இயல்பாக வுடைய என் உயிரை யான் கண்டேன்; இத்துணையே - அது இவ் வளவினதே; முலையிற்று ஆகி - முலையினை உடைத்தாய்; நிழல் மாலை வேல் நாண நீண்ட கண்ணே - ஒளியை யியல்பாக வுடைய வேல் வெள்க, நீண்ட கண்களையும்; நெய் தோய்ந்த தளிர் மேனியே - நெய்ப்பை யுடைய தளிரனைய மேனியையும்; குழல் மாலைக் கொம்பு ஆகி - குழலையும் மாலையையும் உடையதொரு கொம்பாய், கூர் எயிறு நாப் போழ்தல் அஞ்சி அஞ்சி - கூரிய பற்கள் நாவைப் பிளக்குமென்று அஞ்சி அஞ்சி; உழல் மாலைத் தீ கிளவி - உழலும் இயல்புடைய நாவானது இனிய மொழியை; ஒரு நாள் காறும் ஒன்று இரண்டுதான் மிழற்றும் - ஒருநாளெல்லாம் ஒன்றிரண்டே மொழியும்.

(வி - ம்.) எழில்மாலை என் உயிர் : முதல் சினைவினையொடு முடிந்தது. இது நயப்பு.

என்உயிர் யான் கண்டேன் என்றது "காணுமரபிற்று உயிர் என மொழிவோர் பொய்ம்மொழிந்தனர் யான் கண்டேன்" என்பது படநின்றது. இச் செய்யுளொடு,

"காணு மரபிற் றுயிரென மொழிவோர்
நாணிலர் மன்ற பொய்ம் மொழிந்தனரே
யாஅங் காண்டுமெம் அரும்பெறல் உயிரே
சொல்லு மாடும் மென்மெல இயலும்

கணைக்கா னுணுகிய நுசுப்பின்
மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே."

(தொல். கள. க0. மேற்.)

எனவரும் பழம்பாட்டை ஒப்புக் காண்க. (கஅஅ)

கரு௫ச. மாநீர் மணிமுகிலின் மின்னுக்
கோடிநுசுப்பின் மயிலஞ் சாய
லேநீ ரிருபுருவ மேறி
யிடைமுரிந்து நடங்கப் புல்லித்
தூநீர் மலர்மார்பன் றொன்னலந்
தான்பருகித் துளும்புந் தேறற்
றேனீர் மலர்மாலை தேன்றுளித்து
மட்டுயிர்ப்பச் சூட்டி னானே.

(இ-ள்.) மாநீர் மணி முகிலின் மின்னுக் கொடி நுசுப்பின் மயில் அம் சாயல் - மிகு நீரையுடைய, மணிபோன்ற முகிலினிடத்து மின் கொடிபோலும் இடையினையுடைய மயில்போன்ற சாயலாளை; ஏ நீர் இரு புருவம் ஏறி - தன்னைக் கூட்டத்திற்கு ஏவும் இயல்புடைய இரு புருவமும் நெற்றியில் ஏறி; இடை முரிந்து நுடங்க - இடை ஒசிந்து அசைய; தூநீர் மலர் மார்பன் - தூய தன்மையுற்ற மலர்ந்த மார்பனான சீவகன்; புல்லி-(அவளைத்) தழுவி; தொல் நலம் பருகி - பழமையான அழகை நுகர்ந்து; துளும்பும் தேறல் தேன் நீர் மலர் மாலை - ததும்பும் மதுவினைப் பருகும் வண்டின் இயல்பினையுடைய மலர் மாலையை; தேன் துளித்து மட்டு உயிர்ப்பச் சூட்டினான் - இனிமை துளிர்த்து மதுவைச் சிந்த அணிவித்தான்.

(வி - ம்.) மணி முகிலின்: இன்: சாரியை; ஏழனுருபு என்பர் நச்சினார்க்கினியர். மேலும் 'மட்டுத் தேறல்' என மாறிக் 'காம பானத்தின் தெளிவைப் பருகி' என்பர். உயிர்த்தல் – சுமை போக்குதல். (கஅகூ)

வேறு

கரு௫௫. தேனடைந் திருந்த கண்ணித்
தேன்மட்டுத் துவலை மாலை
யூனடைந் திருந்த வேற்க
ணொண்டோடி யுருவ வீணை
தானடைந் திருந்த காவிற்
பாடினா டனிமை தீர்வான்
கூனடைந் திருந்த திங்கட்
குளிர்முத்த முலையி னாளே.

(இ - ள்.) தேன் அடைந்து இருந்த கண்ணி - வண்டுகள் பொருந்திய கண்ணியினையும்; தெள் மட்டுத் துவலை மாலை - தெளிந்த தேன் துளியையுடைய மாலையையும்; ஊன் அடைந்திருந்த வேல்கண் - ஊன் தங்கிய வேலனைய கண்களையும்; ஒண்தொடி - ஒளிரும் வளையையும்; கூன் அடைந்திருந்த திங்கள் குளிர்முத்த முலையினாள் - பிறைத் திங்கள் போலக் குளிர்ந்த முத்துமாலையணிந்த முலையையும் உடைய தேசிகப் பாவை; தான் அடைந்திருந்த காவில் - தான் தங்கிய பொழிலிலே; தனிமை தீர்வான் - தனிமையின் வெறுப்பு நீங்க; உருவ வீணை பாடினாள்-அழகிய யாழை யிசைத்துத் தன் குரலையும் இயைத்துப் பாடினாள்.

(வி - ம்.) தேன்-வண்டினம். வீணை: யாழும் மிடறும் கலந்தது.

தேன் - வண்டு. மட்டு - தேன். துவலை - துளி. ஒண்டொடி: தேசிகப் பாவை. உருவவீணை - அழகிய யாழ். திங்கள்போலக் குளிர் முத்த முலையினாள் என்க. (கக0)

கஙடுசு. வார்தளிர் ததைந்து போது
மல்கிவண் டுறங்குங் காவிற்
சீர்கெழு குருசில் புக்கான்
றேசிகப் பாவை யென்னுங்
கார்கெழு மின்னு வென்ற
நுடங்கிடைக் கமழ்தண் கோதை
யேர்கெழு மயில னாளை
யிடைவயி னெதிர்ப்பட் டானே.

(இ - ள்.) வார் தளிர் ததைந்து போது மல்கி வண்டு உறங்கும் காவில் - நீண்ட தளிர்கள் நெருங்கி மலர்கள் நிறைந்து வண்டுகள் துயிலும் பொழிலிலே; சீர்கெழு குருசில் புக்கான் - சிறப்புப் பொருந்திய சீவகன் புகுந்தான்; தேசிகப் பாவை யென்னும் - தேசிகப் பாவை யென்று அழைக்கப் பெறும்; கார் கெழு மின்னு வென்ற நுடங்கு இடை - முகிலிற் பொருந்திய மின்னை வென்ற அசையும் இடையையும்; கமழ் தண் கோதை - மணங் கமழும் குளிர்ந்த மாலையையும் உடைய; ஏர் கெழு மயிலனாளை - அழகு பொருந்திய மயில் போன்றவளை; இடைவயின் எதிர்ப்பட்டான் - அவ்விடத்தே கண்டான்.

(வி - ம்.) ததைந்து - நெருங்கி. குருசில்: சீவகன். மின்னு - மின்னல். ஏர்கெழு - அழகு பொருந்திய. மயிலன்ன தேசிகப்பாவையை எதிர்ப்பட்டான் என்பது கருத்து. (கககக)

கநுடுஎ. சிலம்பெனும் வண்டு பாட மேகலைத் தேன்க ளார்ப்ப
நலங்கவின் போது பூத்த பூங்கொடி நடுங்கி நாணக்
கலந்தனன் காம மாலை கலையின தியல்பிற் சூட்டப்
புலம்புபோய்ச் சாய லென்னும் புதுத்தளி ரீன்ற தன்றே.

(இ - ள்.) சிலம்பு எனும் வண்டு பாட - சிலம்பாகிய வண்டுகள் முரல; மேகலைத் தேன்கள் ஆர்ப்ப-மேகலை யென்னும் தேனினம் ஆரவாரிக்க; நலம் கவின் போது பூத்த - உறுப்புக்களின் இயற்கை அழகும் செயற்கை அழகும் ஆகிய மலர்கள் மலர்ந்த; பூங்கொடி நடுங்கி நாண - தேசிகப் பாவை நடுங்கி வெள்க; கலந்தனன் - கூடினான்; காம மாலை கலையினது இயல்பில் சூட்ட - காமமாகிய மாலையைக் (காந்தருவ மணங் கூறிய) நூலின இயல்பாலே அணிவித்தானாக; புலம்பு போய்ச் சாயல் என்னும் புதுத்தளிர் ஈன்றது - அக்கொடி தனிமை நீங்கி மென்மை யென்னும் புதிய தளிரை ஈன்றது.

(வி - ம்.) நலம், இயற்கை அழகு என்றும் கவின் என்றது ஒப்பனை யழகென்றும் கொள்க. பூங்கொடிபோல்வாளாகிய தேசிகப்பாவை என்க. கலையினதியல்பு - நூல்கூறுமுறை. என்றது, யாழோர் மணத்தை. ()

கநுடுஅ. சாந்திடைக் குளித்த வெங்கட் பணைமுலைத் தாம மாலைப்
பூந்தொடி யரிவை பொய்கைப் பூமக ளனைய பொற்பின்
வேந்தடு குருதி வேற்கண் விளங்கிழை யிவர்க ளுளு
மாய்ந்தடி பரவ வைகு மரிவையர்க் கநங்க னன்னான்.

(இ - ள்.) அரிவையர்க்கு அநங்கன் அன்னான் - பெண்களுக்குக் காமன் போன்ற சீவகன்; சாந்திடைக் குளித்த வெங்கண் பணை முலைத்தாம மாலைப் பூந்தொடி அரிவை-சந்தனத்தின் இடையே முழுகிய விருப்பூட்டுங் கண்களையுடைய பருத்த முலைகளையும் ஒழுங்காகிய மாலையினையும் உடைய தேசிகப் பாவையும்; பொய்கைப் பூமகள் அனைய பொற்பின் - பொய்கையிலே மலர்ந்த தாமரையில் வீற்றிருக்கும் திருமகள் போன்ற அழகினையும்; வேந்து அடு குருதி வேற்கண் விளங்கு இழை - பகையரசை அடுகின்ற குருதியையுடைய வேலனைய கண்களையும் உடைய, விளக்கமான அணிகலன் புனைந்த பதுமையும்; இவர்கள் - (ஆகிய) இவர்கள்; நாளும் ஆய்ந்து அடிபரவ வைகும் - எப்போதும் ஆராய்ந்து தன் அடிகளை வணங்கத் தங்கினான்.

(வி - ம்.) 'முலையினையும் மாலையினையும் பூமகளனைய பொற்பினையும் உடைய அரிவை' எனக் கூட்டிப் பதுமைக் காக்கி, 'வேந்து' தனபதி யெனக் கொண்டு, 'விளங்கிழை' திலோத்தமை யென்று

கொண்டு, 'அநங்கன் அன்னன் வேந்து விளங்கிழை யென்ற இவர்கள் நாளும் ஆராய்ந்து தன்னைப் பரவுதலாலே, தான் அரிவை யடியிலே தங்கா நிற்கும்' என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். இவ்வாறு கூறுதற்குப், 'பதுமையையும் பரத்தையையும் ஒக்கக் கூறலாகாமை உணர்க' என்று காரணமுங் காட்டுவர். (ககூ௩)

கஙு௯. இங்ஙன மிரண்டு திங்க ளேகலு மேக வேலா
னங்ஙனம் புணர்ந்த வன்பி னவண்முலைப் போக நீக்கி
யெங்ஙன மெழுந்த துள்ள மிருளிடை யேக லுற்றான்
றங்கிய பொறியி னாக்கந் தனக்கோர்தே ராக நின்றான்.

(இ - ள்.) இங்ஙனம் இரண்டு திங்கள் ஏகலும் - இவ்வாறு இரண்டு திங்கள் கழிந்தவுடன்; ஏக வேலான் - தனி வேலானும்; தங்கிய பொறியின் ஆக்கம் தனக்கு ஓர் தேராக நின்றான் - நிலை பெற்ற நல்வினையின் ஆக்கத்தைத் தனக்கு ஒரு தேராகக் கொண்டு நின்றவனுமாகிய சீவகன்; அங்ஙனம் புணர்ந்த அன்பின் அவள் - அவ்வாறு உழுவலான் வந்த அன்பினையுடையவளின்; முலைப் போகம் நீக்கி - முலையின்பத்தை விட்டு; இருளிடை ஏகல் உற்றான் - இருளிலே செல்லத் தொடங்கினான்; எங்ஙனம் எழுந்தது உள்ளம்? - எவ்வாறு உள்ளம் அதற்கு எழுந்ததோ?

(வி - ம்.) கொண்டுபோதலின் நல்வினை தேர் ஆயிற்று; பிரிவிற்கு நூலாசிரியர் வருந்தினர். (ககூ௪)

கஙு௰. தயங்கிணர்க் கோதை தன்மேற்
றண்ணென வைத்த மென்றோள்
வயங்கிணர் மலிந்த தாரான்
வருந்தறா வகையி னீக்கி
நயங்கிள ருடம்பு நீங்கி
நல்லுயிர் போவ தேபோ
லியங்கிடை யறுத்த கங்கு
லிருளிடை யேகி னானே.

(இ - ள்.) வயங்கு இணர் மலிந்த தாரான் - விளங்கும் பூங் கொத்துக்கள் நிறைந்த மலர்த்தாரினான்; தயங்கு இணர்க் கோதை - விளங்கும் இணரையுடைய கோதையளான பதுமை; தன்மேல் தண் என வைத்த மென் தோள் - தன்மேல் குளிர்ச்சி யாக வைத்திருந்த கையை; வருந்தறா வகையின் நீக்கி-வருந்தா வண்ணம் எடுத்து வைத்துவிட்டு; நயம் கிளர் உடம்பு நீங்கி - விருப்பம் பொருந்திய உடம்பை விட்டு; நல் உயிர் போவதே போல்-நல்ல உயிர் செல்வதைப் போல; இயங்கு இடை அறுத்த

கங்குல் இருளிடை ஏகலுற்றான் - யாவரும் செல்லும் செலவைவ நடுவறுத்த இரவில் இருளிலே செல்லத் தொடங்கினன்.

(வி - ம்.) 'நல் உயிர்' ஆன்மா. அது கனவிடைப் போய் நுகர்ந்து மீண்டும் அவ்வுடம்பின்கண் வருமாறு போல இவனும் பல மகளிரையும் நுகர்ந்து பின்பு கூடுவன். இனி, உடம்பு நல்லுயிரை நீங்கிப் போனாற் போல் என்றும் உரைப்பர். (கக௫)

வேறு

கஙௗக. நீனி றக்குழ னேர்வளைத் தோளியைத்
தானு றக்கிடை நீத்தலுந் தன்பினே
வேனி றக்கண் விழித்தன ளென்பவே
பானி றத்துகிற் பையர வல்குலாள்.

(இ - ள்.) நீல் நிறக் குழல் நேர் வளைத் தோளியை - நீல நிறக் கூந்தலையும் அழகிய வளையணிந்த தோளையும் உடையாளை; தான் உறக்கிடை நீத்தலும்-சீவகன் துயிலிடைப் பிரிந்தனனாக; தன் பினே - அவன் பிரிவிற்குப் பின்னே; பால் நிறத் துகில் பை அரவு அல்குலாள் - வெண்ணிறத் துகிலையும் பாம்பின் படமனைய அல்குலையும் உடையாள்; வேல் நிறக் கண் விழித்தனள் - வேலனைய ஒளி பொருந்திய கண்ணை விழித்தனள்.

(வி - ம்.) என்ப ஏ : அசைகள்.

நீலநிறம் - நீல்நிறம் என அகரங்கெட்டு நின்றது. தோளி : பதுமை. உறக்கு - துயில். அல்குலாள் கண் விழித்தனள் என்க. (ககசு)

கஙௗஉ. ஆக்கை யுள்ளுறை யாவி கெடுத்தவண்
யாக்கை நாடி யயர்வது போலவுஞ்
சேக்கை நாடித்தன் சேவலைக் காணிய
பூக்க ணாடுமோர் புள்ளுமொத் தாளரோ.

(இ - ள்.) ஆக்கையுள் உறை ஆவி கெடுத்து - உடம்பு தன் உள்ளே இருக்கும் உயிரைக் கெடுத்து; யாக்கை நாடி அயர்வது போலவும் - திரும்பவும் பிணித்தலை நினைத்து வருந்துவது உண்டாயின் அதனைப் போலவும்; தன் சேவலைக் காணிய - தன் சேவலைக் காணவேண்டி; சேக்கை நாடி - கூட்டிலே தேடி (அங்குக் காணாமையின்); பூக்கண் நாடும் - மலர்களிலே தேடுகின்ற; ஓர் புள்ளும் ஒத்தாள் - ஓர் அன்னப் பேட்டினைப் போலவும் ஆயினள்.

(வி - ம்) ஆக்கை - உடல். யாக்கை - கட்டுதல். சேக்கை : தங்குமிடம்; உறைபுள். சேவல் புள் என்பன பூக்கண் நாடும் என்றதனான் அன்னச் சேவலும் அதன் பெடையும் என்பது பெற்றாம். (ககஎ)

கஙசுங. புல்லும் போழ்தினும் பூணுறி னோமென
மல்லற் காளையை வைது மிழற்றுவா
யில்லி னீக்க முரைத்திலை நீயெனச்
செல்வப் பைங்கிளி தன்னையுஞ் சீறினாள்.

(இ - ள்.) புல்லும் போழ்தினும் பூண் உறின் நோம் என - சீவகன் என்னைத் தழுவும் போதும் அணிகலன் உறின் வருந்தும் என்று; மல்லல் காளையை வைது மிழற்றுவாய் - வளமுறு காளையன்னானை வைது என் மென்மையை மிழற்றினையே; நீ இல்லின் நீக்கம் உரைத்திலை என - நீ அவன் இந்த மனையி னின்றும் நீங்கிப் போதலை உரைத்திலையே என்று; செல்வப் பைங்கிளி தன்னையும் சீறினாள் - தன் காதற் கிளியையும் சீறினாள்.

(வி - ம்.) பூண் உறின் - முயக்கம் இறுகின் என்றுமாம்.

சீவகன் என்னைப் புல்லும் போழ்தினும் என்க. பூண் - அணிகலன். மல்லல் - ஈண்டு ஆண்மைப் பண்புகளின் மிகுதி. இல்லினின்றும் நீங்கிய நீக்கம் என்க. (ககஅ)

கஙசுச. ஓவி யக்கொடி யொப்பருந் தன்மையெம்
பாவை பேதுறப் பாயலி னீங்கிநீ
போவ தோபொரு ளென்றிலை நீயெனப்
பூவை யோடும் புலம்பி மிழற்றினாள்.

(இ - ள்.) ஓவியக் கொடி ஒப்பு அருந் தன்மை-ஓவியத்தில் எழுதிய பூங்கொடி உவமையாகாத் தன்மையுடைய; எம் பாவை பேதுற - எங்கள் பாவையாள் வருந்தும்படி; நீ பாயலின் நீங்கிப் போவதோ பொருள்? - நீ பாயலினின்றும் பிரிந்து போவதோ செய்யத் தகுவது?; என்றிலை நீ—என்று கூறிலை நீ; என - என்றுரைத்து; பூவையோடும் புலம்பி மிழற்றினாள் - பூவையுடன் வருந்திக் கூறினாள்.

(வி - ம்.) பாவை யென்றது, பட்டாங்கு கூறுதற்கண் வந்தது; 'அம்பலம் போற் - கோலத்தினாள் பொருட்டாக' (சிற் - உஎ) என்றாற் போல. பாயலின் நின்றும் என்பதோர் இடைச்சொல் ஐந்தாவதற்கு விரிக்க. (ககக)

கஙசுரு. தன்னைப் பாரையில் லானைத் தலைச்சென்றெம்
பொன்னைப் பாளொடும் போகெனப் போகடாய்
துன்னித் தந்திலை நீயெனத் தூச்சிலை
யன்னப் பேடையோ டாற்றக் ... றினாள்.

(இ - ள்.) தன் ஒப்பாரை இல்லானைத் தலைச் சென்று - தனக்கு நிகராவார் இல்லாதவனிடத்தே சென்று; என் பொன் ஒப்பாளொடும் போக என - என் திருவனையாளொடும் போவாயாக என்று; போகடாய் துன்னித் தந்திலை நீ என - அவனைச் செல்ல விடாயாய் என்னிடத்தே பொருந்தக் கொணர்ந்திலை நீ என்று; தூச்சிறை அன்னப் பேடையோடு ஆற்றக் கழறினள் - தூய சிறகுகளையுடைய அன்னப் பேடையுடன் மிகவும் சினந்துரைத்தாள்.

(வி - ம்.) போக விடாய்: போகடாய் என விகாரப்பட்டது.

தன்னொப்பாரையில்லான் : சீவகன். பொன் : திருமகள். தூச்சிறை - வெள்ளை நிறமுடைய சிறகுமாம். ஆற்ற - மிகவும். கழறுதல் - இடித்துரைத்தல். (௨௦௦)

௧௩௬௬. மையில் வாணெடுங் கண்வள ராதன
மெய்யெ லாமுடை யாய்மெய்ம்மை காண்டிநீ
யையன் சென்றுழிக் கூறுகென் றாய்மயில்
கையி னாற்றொழு தாள்கயற் கண்ணினாள்.

(இ - ள்.) வளராதன - துயிலாதனவாகிய; மை இல் வாள் நெடுங்கண் - மைதீட்டப் பெறாத ஒளியுறும் நீண்ட கண்களை; மெய்யெலாம் உடையாய் - உடலெலாம் உடைய மயிலே!; மெய்ம்மை காண்டி நீ - உண்மை உணர்வாய் நீ; ஐயன் சென்றுழிக் கூறுக என்று - என் தலைவன் சென்ற இடத்தைக் கூறுக என்று; கயல் கண்ணினாள் - கயலனைய கண்ணினாள்; ஆய் மயில் கையினால் தொழுதாள் - ஆராய்ந்த மயிலைக் கைகளால் தொழுதாள்.

(வி - ம்.) கண்: பீலிக் கண். துயிலாத கண்களையுடைமையின், அவனைக் காட்டும் என்று தொழுதாள். வாள் என அடை கூறினார் கண்ணென்பதற் கேற்ப.

வளராதன மையில் வாள் நெடுங்கண் மெய்யெலாம் உடையாய் என மாறுக. கண் உடையாய் என்றது மெய்ம்மை காண்டற்குக் குறிப்பேதுவாய் நின்றது. ஐயன் : சீவகன். ஆய் - அழகிய. கண்ணினாள் : பதுமை. இச்செய்யுளோடு, "ஓடா நின்ற களிமயிலே......ஆயிரங் கண்ணுடையாய்க்கு ஒளிக்குமாறுண்டோ" எனவரும் கம்பர் செய்யுளை (பம்பை - ௨௭) ஒப்பு நோக்குக. (௨௦௧)

௧௩௬௭. வளர்த்த செம்மையை வாலியை வான்பொருள்
விளக்கு வாய்விளக் கேவிளக் காயிவ
ணளித்த காதலோ டாடுமென் னாருயி
ரோளித்த தெங்கென வொண்சுடர் நண்ணினாள்.

(இ - ள்.) விளக்கே! - விளக்கே!; வான் பொருள் விளக்கு வாய் - நல்ல பொருள்களை விளக்கிக் காட்டுவாய்; வளர்த்த செம்மையை - எங்களை வளர்த்த மனக் கோட்டமிலாதாய்; வாலியை - தூய தன்மையுடையாய் (ஆதலால்); இவண் அளித்த காதலொடு ஆடும் என் ஆருயிர் - இங்கே அருளிய காதலுடன் நடந்து திரியும் என் சிறந்த உயிர்; ஒளித்தது எங்கு - ஒளித்த இடம் எங்கே?; விளக்காய் - எனக்கு விளக்கிக் கூறுவாய்; என ஒண்சுடர் நண்ணினள் - என்று வேண்டி ஒள்ளிய விளக்கினிடம் சென்றாள்.

(வி - ம்.) குழந்தைகட்கு விளக்கைக் காவலாக இடுதலின், எங்களை வளர்த்த மனக்கோட்டமிலாதாய் என்றாள்.

செம்மையை - செப்பமுடையை, அஃதாவது மனக்கோட்ட மின்மையை உடையை. "சொற்கோட்ட மில்லது செப்பம் ஒருதலையா உட்கோட்ட மின்மை பெறின்" என்பது திருக்குறள். விளக்கிற்குச் செம்மை - செந்நிறமுடைமை என்க. வாலியை - தூயை : முன்னிலை ஒருமை. என் ஆருயிர் என்றது சீவகனை. (உ0உ)

கஙசுஅ. பருகிப் பாயிரு ணிற்பி னருதெனக்
கருகி யவ்விருள் கான்றுநின் மெய்யெலா
மெரிய நின்று நடுங்குகின் றாயெனக்
குரிய தொன்றுரைக் கிற்றியென் றூடினாள்.

(இ - ள்.) பாயிருள் பருகி - (அவாவின் மிகுதியால் அரு தென்று பாராமல்) பரவிய இருளைப் பருகி; நிற்பின் அருது என வயிற்றில் இருப்பின் நீங்காதென்று கருதி ; கருகி அவ் இருள் கான்று - முகம் கருகி அந்த இருளை உமிழ்ந்து; நின் மெய் எலாம் எரிய நின்று நடுங்குகின்றாய்-பின்னும் தங்கி வருத்துமோ என்று உன் உடம்பெல்லாம் எரியும்படி நின்று நடுங்குகின்றனை; எனக்கு உரியது ஒன்று உரைக்கிற்றி - நீ எனக்குத் தக்கதை யறிந்து உரைப்பாய்; என்று ஊடினாள் - என்று வெறுத்தாள்.

(வி - ம்.) விளக்காமையின், அதனை இழித்துக் கூறுகின்றாள். உரைக்கிற்றி: இகழ்ச்சி.

பாய் இருள் - பரவிய இருள். கருகி என்றது - திரி கருகுவதனை. விளக்கு அசைதல் பற்றி நடுங்குகின்றாய் என்றாள். உரைக்கிற்றி என்றது உரைப்பாய் என்னும் பொருட்டு; அஃது உரையாய் என்னும் எதிர்மறைப் பொருள் குறித்து நின்றது. (உ0௩)

கஙசுகூ. கோடி நுண்டுகி லுங்குழை யுந்நினக்
காடு சாந்தமு மல்லவு நல்குவேன்
மாட மேநெடி யாய்மழை தோய்ந்துளாய்
நாடி நண்பனை நண்ணுக நன்றரோ.

(இ - ள்.) மாடமே! நெடியாய்! மழை தோய்ந்துளாய்! - மாடமே! நீண்டுளாய்! முகில் பொருந்தியுளாய்!; கோடி நுண் துகிலும் குழையும் ஆடு சாந்தமும் அல்லவும் நினக்கு நல்கு வேன் - கொடிகளிலே கோடியும் நுண்ணிய ஆடையும் கொடி நாட்டுதற்குப் பண்ணும் துளைகளும் பூசும் வெண்சுதையும் பிறவும் நினக்குத் தருவேன்; நண்பனை நாடி நண்ணுக - நம் நண்பனைத் தேடிக் கண்டு வருவாயாக; நன்று - அது நினக்கு நன்றாகும்!

(வி - ம்.) அரோ: அசை. 'நெடியாய்' என்பதனால் எப்பொருளையுங் காண வல்லாய் என்பதும், 'மழை' என்பதனால் ஈரம் எனும் இரக்கத் தையும் உடையாய் என்ற பொருளும் தோன்ற நின்றன. மற்றும்கோடிப் புடைவையும் மகரக் குழையும் சந்தனமும் நல்குவேன் என்பதூஉம் தோன்றின. 'நன்று' என்றாள் அவனும் பல தருவன் என்னுங் கருத்துப்பட. (உ0ச)

கருஎ0. ஆட கக்கோழும் பொன்வரை மார்பனைக்
கூடப் புல்லிவை யாக்குற்ற முண்டென
நீடெ ரித்திர ணீண்மணித் தூணொடு
சூட கத்திர டோளணி வாட்டினாள்.

(இ - ள்.) ஆடகக் கொழும் பொன் வரை மார்பனை - ஆடகம் எனும் வளமுறு பொன்மலை போலும் மார்பனை; கூடப் புல்லி வையாக் குற்றம் உண்டு என - கூடும்படி தழுவி வையாத குற்றம் நமக்கு உண்டென உரைத்து; நீடு எரித்திரள் நீள் மணித் தூணொடு - நீண்ட நெருப்புத் திரள் போலும் நீண்ட மாணிக்கத் தூணுடன் (எற்றி); சூடகத் திரள் தோளணி வாட்டினாள் - சூடகத்தையும் திரண்ட தோளணியையும் போக்கினாள்.

(வி - ம்.) சூடகம்: ஒருவகைக் கைவளையல் 'சூடக முன்கைச் சுடர்க்குழை மகளிரொடு' (பெருங். ந. : சு: கக) தோளணி: தொடி. என: இறந்தகால வினையெச்சம். (உ0ரு)

கருஎக. கோலைகோள் வேலவன் கூடல னேகினா
னிலைகோள் பூணுமக் கென்செயு மீங்கென
மலைகோள் சந்தனம் வாய்மெழுக் கிட்டதன்
முலைகோள் பேரணி முற்றிழை சிந்தினாள்.

(இ - ள்.) கொலைகொள் வேல்வன் கூடலன் ஏகினான் - கொலைத் தன்மைகொண்ட வேலினன் கூடாமற் சென்றுவிட்டான்; நமக்கு ஈங்கு இலை கொள் பூண் என் செயும் - உங்கட்கு இங்கே இலைவடிவங் கொண்ட இப்பூண்கள் என்ன பயனைச் செய்யும்?; என - என்றுரைத்து; மலைகொள் சந்தனம் வாய் மெழுக்கிட்ட - பொதிய மலைச் சந்தனத்தை மெழுகியிட்ட; முலை

கொள் பேரணி முற்றிழை சிந்தினாள் - தன் முலைகளிற் கொண்ட பெரிய அணிகளை முற்றிழையுடையாள் சிந்தினாள்.

(வி - ம்.) வேலவன் : சீவகன். கூடலன் : முற்றெச்சம். இப்பூண் எனச் சுட்டுச்சொல் வருவித்தோதுக. மலை - ஈண்டுப் பொதியின்மலை. முற்றிழை : அன்மொழித் தொகை; ஈண்டுப் பதுமை. (௨0௬)

௧௩௭௨. அருங்க லக்கோடி யன்னவ னேகினா
னிருந்திவ் வாகத் தேவன்செய்விர் நீரேனா
மருங்கு னோவ வளர்ந்த வனமுலைக்
கருங்கண் சேந்து கலங்க வதுக்கினாள்.

(இ - ள்.) அருங்கலம் கொடி அன்னவன் ஏகினான் - நமக்கு அருங்கலத்தையும் எழுது கொடியையும் போன்று நீங்காதவன் சென்று விட்டான்; நீர் இவ் ஆகத்து இருந்து எவன் செய்விர் என - இனி நீவிர் இம் மார்பிலே இருந்து என்ன செய்வீர் என்று ; மருங்குல் நோவ வளர்ந்த வன முலைக் கருங்கண் சேந்து கலங்க அதுக்கினாள் - இடை வருந்த வளர்ந்த அழகிய முலையிற் கரிய கண் சிவந்து கலங்கும்படி அடித்துக்கொண்டாள்.

(வி - ம்.) அருங்கலக் கொடி: அதுக்கினாள் என்றுமாம். அதற்கு அன்னவன் என்பதைச் சுட்டாக்குக.

அருங்கலம் - பெறலரிய அணிகலன். கலமும் கொடியும் அன்னவன் என உம்மை விரித்தோதுக. கொடி - ஈண்டு முலைமேல் எழுதும் தொய்யிற் கொடி. ஆகம் - மார்பு. இருந்து எவன் செய்வீர் என்றது நும்மால் இனிப் பயனில்லை என்றவாறு. (௨0௭)

௧௩௭௩. மஞ்சு சூழ்வரை மார்பனைக் காணிய
துஞ்ச லோம்புமி னென்னவுந் துஞ்சினீ
ரஞ்ச னத்தோடு மையணி மின்னென
நெஞ்சி னீணெடுங் கண்மலர் சீறினாள்.

(இ - ள்) மஞ்சு சூழ் வரை மார்பனைக் காணிய - முகில் உலவும் மலையனைய மார்பனைக் காண்பதற்கு; துஞ்சல் ஓம்புமின் என்னவும் துஞ்சினீர் - துயில்வதை நீக்குமின் என்றுரைக்கவும் துயின்றீர்கள் ; அஞ்சனத்தொடு மை அணிமின் என - (இனி) அஞ்சனத்தையும் மையையும் அணிந்து கொள்ளுமின் என்று; நீள் நெடுங் கண்மலர் நெஞ்சின் சீறினாள் - நீண்ட கண் மலர்களை நெஞ்சினாலே சீறினாள்.

(வி - ம்.) அணிமின்: அணியாதீர் என்னுங் குறிப்பு. பின்னும் அவை காட்ட வேண்டுதலின் அவை கேளாமற் சீறினாள். (௨0௮)

கஅஎச. அரக்குண் டாமரை யன்னதன் கண்மலர்
விருத்தி மாதர் விலக்க வெரீஇக்கோலோ
வருத்த முற்றன ளென்றுகோன் மேகலை
குரற்கோ டாது குலுங்கிக் குறைந்ததே.

(இ - ள்.) அரக்கு உண் தாமரை அன்ன தன் கண்மலர் - அரக்கின் நிறத்தைக் கொண்ட தாமரை மலர் போன்ற தன் கண் மலர்களின்; விருத்தி மாதர் விலக்க வெரீஇக் கொலோ?- அஞ்சனத்தையும் மையையும் பதுமை விலக்குதலாலே நமக்கும் துன்பம் வருமென்று அஞ்சியோ?; வருத்தம் உற்றனள் என்று கொல்? - இவள் வருந்தினள் என்றோ?; மேகலை குலுங்கி குரல் கோடாது குறைந்தது - மேகலை அசைந்து ஆரவாரியாமல் ஓசை அடங்கியது.

(வி - ம்.) விருத்தி - வாழ்வு. குலுங்கல் - அசைதல். மெய் யசையாமற் சோர்ந்ததை இங்ஙனங் கூறினர். (உ0க)

வேறு

கஅஎரு. துனிவா யினதுன் னுபுசெய் தறியேன்
றனியே னொருபெண் ணுயிரேன் னொடுதா
னினியா னிங்னே யுளனே யுரையீர்
பனியார் மலர்மேற் படுவண் டினமே.

(இ - ள்.) பனிஆர் மலர்மேல் படு வண்டினமே!- தண்மை நிறை மலரின்மேல் மெல்லிய வண்டினமே!; துன்னுபு துனிவு ஆயின செய்து அறியேன் - நான் அவனைப் பொருந்தி நின்று அவற்கு வெறுப்பானவற்றைச் செய்தறியேன், தனியேன், ஒரு பெண் உயிர் - நான் தனித்தறியேன்; என் உயிரே ஒரு பெண் ணுயிர்; என்னொடுதான் இனியான் - என்னிடம் இனியனாகிய அவன்; இஙனே உளனே? உரையீர் - இவ்விடங்களிலே உளனோ? உரைப்பீர்.

(வி - ம்.) அவன் எனக்கு இனிய னாகையால் உரைத்தீர் என்று முனியான் என்றற்கு; 'இனியான்' எனவும், பெண்ணுயிர் நீங்கிற் கண்டிருத்தல் பாவம் என்றற்குப், 'பெண்ணுயிர்' எனவும் கூறினர். (உக0)

கஅஎசு. நிரைவீ ழருவிந் நிமிர்பொன் சொரியும்
வரையே புனலே வழையே தழையே
விரையார் பொழிலே விரிவெண் ணிலவே
யுரையீ ருயிர்கா வலனுள் வழியே.

(இ - ள்.) வீழ் அருவி நிரை நிமிர் பொன் சொரியும் வரையே! - வீழும் அருவி நிரைகளையுடைய உயர்ந்த பொன்

விளங்கும் செய்குன்றே!; புனலே!-நீர் நிலையே!; வழையே!- சுர புன்னையே!; தழையே! - தழையே!; விரை ஆர் பொழிலே! - மணம்நிறை மலர்க் காவே!; விரி வெண்ணிலவே! - மலர்ந்த வெண் திங்களே!; உயிர் காவலன் உள் வழி உரையீர் - என் உயிர் முதல்வன் இருக்கும் இடத்தை உரைப்பீராக!

(வி - ம்.) நிரைவீழ் அருவி - வரிசையாக வீழ்கின்ற அருவி. செய் குன்ருகலின் நிரைவீழ் அருவி என்றார். நிமிர்பொன் - உயர்ந்த பொன். பொன்சொரிதல் - பொன்னொளி வீசுதல். வழை - சுரபுன்னை. விரை - மணம். காவலன் : சீவகன். (உகக)

கஙஎஎ. எரிபோன் னுலகின் னுறைவீ ரிதனைத்
தெரிவீர் தெரிவில் சிறுமா னிடரிற்
பரிவோன் றிலிராற் படர்நோய் மிகுமா
லரிதா லுயிர்காப் பமரீ ரருளீர்.

(இ - ள்.) எரி பொன் உலகின் உறைவீர்! - ஒளிரும் பொன் உலகிலே வாழ்வீர்!; இதனைத் தெரிவீர் -(ஆதலின்) என் காதலன் போன வழியை அறிந்திருப்பீர்; தெரிவு இல் சிறு மானிடரின் பரிவு ஒன்றிலிர் - (தெரிந்திருப்பவும்) தெரியாத சிறு மனிதரைப்போல அருளிலிரா யிராநின்றீர்; படர்நோய் மிகும் - துன்ப நோய் மிகும்; உயிர் காப்பு அரிது - (அதனால்) உயிர்காத்தல் இனி அரிது; அமரீர்! - வானவரே!; அருளீர் - உயிரைக் காக்க அவனை அருள்வீராக.

(வி - ம்.) பொன்னுலகின் னுறைவீர் என்றது இதனைத் தெரிவீர் என்றதற்குக் குறிப்பேதுவாய் நின்றது. தேவர் உலகினிகழ்ச்சிகள் எல் லாம் இருந்தவிடத்திருந்தே உணரவல்லார் ஆகலின் இங்ஙனம் கூறினள். தெரிவில் மானிடர் என்பது நம்போன்று அறியமாட்டாத இயல்புடைய மானிடர் என்றவாறு. படர் - துன்பம் அமரீர் : அமரர் என்பது விளியுருபேற்று நின்றது. (உகஉ)

கஙஎஅ. புணர்வின் னினிய புலவிப் பொழுதுங்
கணவன் னகலின் னுயிர்கை யகற
லுணர்வீ ரமரர் மகளீ ரருளிக்
கொணர்வீர் கொடியே னுயிரைக் கொணர்வீர்.

(இ - ள்.) அமரர் மகளீர்! - வானவர் மகளிரே!; புணர்வின் இனிய புலவிப் பொழுதும் - கூட்டத்தினும் இனிமையையுடைய புலவிக் காலத்தும்; கணவன் அகலின் உயிர் கையகல்தல் உணர் வீர் - கணவன் தழுவுதல் நீங்கின் உயிர் நீங்குதலை அறிவீரா கலின்; கொடியேன் உயிரை அருளிக் கொணர்வீர்! கொணர் வீர் - கொடியவளாகிய என் உயிரை அருள் செய்து கொண்டு தருவீர்! கொண்டுதருவீர்!

(வி-ம்.) நீயிரும் மகளிரே ஆதலின் கணவன் அகலின் உயிர் கையறல் உணர்வீர் என்பது கருத்து. பிறபெண்டிர்க்கிரங்குதல் மகளிர்க்கியல்பாகலின் எனக் கிரங்கிக் கொணர்வீர் என்பது கருத்து. புணர்வின் இனிய புலவி என்றதனை, 'புணர்தலின் ஊடல் இனிது' என்னும் வள்ளுவர் மொழியோடு ஒப்புக் காண்க. (உகந)

கஙஎகூ. நகைமா மணிமா லைநடைக் கோடிநின்
வகைமா மணிமே கலையா யினதே
லகையா தெனதா விதழைக் குமெனத்
தகைபா டவலாய் தளர்கோ தளர்கோ.

(இ - ள்.) நகை மாமணி மாலை நடைக்கொடி! - ஒளியுறும் மணிகளாலாகிய மாலையணிந்த நடந்து திரியுங் கொடியே!; நின் வகை மாமணி மேகலை ஆயினதேல் - நின் வகைப்பட்ட பெரிய மணிமேகலை ஆயிற்றேல்; எனது ஆவி அகையாது தழைக்கும் என-என் உயிர் தாழ்தலின்றித் தளிர்க்கும் என்று; தகை பாடவலாய்! தளர்கோ! தளர்கோ !! - என் நலம் பாராட்ட வல்லாய்! தளர்வேனோ! தளர்வேனோ!!

(வி - ம்.) இது முதல் எதிர் பெய்து பரிதல். எதிர் பெய்து பரிதலாவது தலைமகனையும் அவன் தேர் முதலியவற்றையும் தன் எதிர் பெய்துகொண்டு பரிந்து கையறல்: (தொல். மெய்ப். உஉ. பேர்.) ஓகாரம்: எதிர்மறை இறந்துபடுவேன் என்பது கருத்து. தளர்கு: தன்மையொருமை வினைமுற்று. 'வல்லாய்' என்பது பொய்யுரைக்க வல்லவன் என்பதைக் குறிக்கின்றது. (உகச)

கஙஅ0. புனைதார் பொரநொந் துபொதிர்ந் தவென
வினையா ரெரிபூண் முலைகண் குளிர
வுனகண் மலரா லுழுதோம் பவலாய்
நினையா துநெடுந் தகைநீத் தனையே.

(இ - ள்.) புனைதார் பொர நொந்து பொதிர்ந்த என - நீ புனைந்த மாலைகள் பொருதலால் நொந்து வீங்கின என்றுகூறி; வினையார் எரிபூண் முலைகண் குளிர - தொழிலமைந்த விளங்குகின்ற பூண் அணிந்த முலைகளின் கண்குளிரும்படி; உன் கண் மலரால் உழுது ஓம்ப வலாய் - உன்னுடைய கண்மலர்களால் உழுது பொய்யை மெய்யாகப் போற்ற வல்லவனே!; நெடுந்தகை!- பெருந்தகையே!; நினையாது நீத்தனையே - பிரியின் வாழாள் என்று நினையாமல் நீத்தாயே.

(வி-ம்.) கண்மலரால் உழுதலாவது இவை சாலவும் அழகுடையன என்று கூர்ந்து நெடிது நோக்கிப் பாராட்டுதல். இங்ஙனம் நோக்கிப் பாராட்டுங்கால் தன்னெஞ்சங் குளிர்ந்ததனை முலைமேலேற்றி முலை கண் குளிர என்றாள். நினையாது என்றது யாம் பிரிந்துழி இவள் நிலை என்னும் என்று கருதாதே என்றவாறு. (உகரு)

கரு௮க. அருடேர் வழிநின் றறனே மொழிவாய்
பொருடேர் புலனெய் தியபூங் கழலா
யிருடேர் வழிநின் றினைவேற் கருளா
யுருடே ருயர்கோற் றவன்மைத் துனனே.

(இ - ள்.) பொருள் தேர் புலன் எய்திய பூங்கழலாய் - பொருளைத் தேடும் அறிவிலே சென்ற பூங்கழ லணிந்தவனே!; உருள் தேர் உயர் கொற்றவன் மைத்துனனே! - ஆழிபூண்ட தேரையுடைய மேம்பட்ட அரசன் உலோகமாபாலனின் மைத்துனனே!; அருள் தேர் வழிநின்று அறனே மொழிவாய் - அருளை ஆராயும் வழியிலே நின்று அறமே கூறுவாய்; (எனி னும்); இருள் தேர் வழி நின்று இனைவேற்கு அருளாய் - இருள் நிறைந்த இடத்தே நின்று வருந்தும் எனக்கு அருள்கின்றிலை.

(வி - ம்.) நினக்குச் சொல்லுதல் எளிது, சொல்லிய வண்ணஞ் செய்தல் அரிதாக இருந்தது என்று கூறுகிறாள்.

கொற்றவனும் மைத்துனனும் என உம்மைத் தொகையாக்கியும் 'எய்திய' என்பதை வினையெச்சமாக்கியும் சொற்களைப் பல விடங்களி னின்றும் பிரித்துக் கூட்டி நச்சினார்க்கினியர் கூறும் பொருள்:

கழலாய்! தனபதியும், உலோக பாலனும் நின்னுடன் அருள் இருக் கும்படியை ஆராயுமிடத்து, அவர்கள் தத்துவத்தை ஆராயும் அறிவைப் பெறவேண்டி நின்று, அவர்கட்கு அறனே மொழிகின்ற நீ, இருள் செறிந் இடத்திலே நின்று வருந்துகின்ற எனக்கு அருளுகின்றிலை. ஆதலால், நினக்கு முற்படச் சொல்லுதல் எளிதாய்ச் சொல்லிய வண்ணஞ் செய்தல் அரிதாய் இருந்தது என்றாள்.

இவ்வாறு மாட்டேற்றுப் பொருள் கூறினும் கருத்து வேறுபாடில்லை யாதல் காண்க. (உகசு)

கரு௮உ. மிகவா யதோர்மீ ளிமைசெய் தனனோ
வுகவா வுனதுள் ளமுவர்த் ததுவோ
விகவா விடரேன் வயினீத் திடநீ
தகவா தகவல் லதுசெய் தனையே.

(இ - ள்.) தகவா! - தக்கோனே!; இகவா இடர் என் வயின் நீ ஈத்திட - நீங்காத இடரை என்னிடத்தே நீ கொடுத் திடற்கு; மிக ஆயதோர் மீளிமை செய்தனனோ? - யான்தான் அறிவின்மையான் மிகையாயதொரு வன்மை செய்தேனோ?; உனது உள்ளம் உகவா உவர்த்ததுவோ? - உன் மனந்தான் ஒரு கால் அன்பு மிக்குப் பின்பு வெறுத்ததோ?; தகவு அல்லது செய் தனையே - தகுதியல்லாத காரியத்தைச் செய்தனையே!

(வி - ம்.) 'தகவா' என்பதற்குத் 'தகும்படி வந்து முயங்குவாயாக' என்றும் பொருள் உரைப்பர் நச்சினார்க்கினியர். 'யான் வன்மை செய்

தேனோ? நின் உள்ளந்தான் உவர்த்ததோ?' என்று உருவெளியை நோக்கி உரைத்தாளாக, அது மாற்றந் தராததால் மேலும் அதனை நோக்கித் தகவல்லது செய்தனை என்றாள். (உகஎ)

கஙஅங. குளிர்துன் னியபோன் னிலமே குதலாற்
றளரன் னநடை யவடாங் கலளா
யொளிர்போன் னரிமா லையோசிந் திஙனே
மிளிர்மின் னேனமின் னிலமேய் தினளே.

(இ - ள்.) ஒளிர் பொன் அரி மாலை-விளங்கும் பொன்னரி மாலை போன்றவள்; குளிர் துன்னிய பொன் நிலம் ஏகுதலால் - குளிர்ச்சி பொருந்திய பொன் நிலத்தே உலாவுதலால்; தளர் அன்ன நடையவள் தாங்கலளாய் - தளர்ந்த அன்னம்போலும் நடையையும் பொறுதவளாய்; ஒசிந்து இஙனே மிளிர் மின் என மின் நிலம் எய்தினள் - துவண்டு இந்நிலத்தே பிறழும் மின் என ஒளிரும் நிலத்தே விழுந்தாள்.

(வி - ம்.) 'மீநிலம்' என்றும் பாடம். 'தக வா' எனப் பிரித்துத் 'தகவுற வந்து முயங்கு' என முற்செய்யுளிற் பொருள் கூறிய நச்சினார்க்கினியர் இச் செய்யுளிலும் அதற்கேற்ப, 'அவ்வுருவம் வந்து முயங்காது நிற்றலின் தன் மேனியிற் காமத் தீயாறிக் குளிர்ச்சி நெருங்க வேண்டி முயங்குதற்குப் பொன்னிலத்தே அவள்தான் சேறலின், அப்பொழுது அவசத்தாலே தளர்ந்த அன்னம்போலு நடையைத் தாங்கமாட்டாதவளாய், ஒசிந்து இந்நிலத்தே பிறழும் மின்னென நிலத்தே வீழ்ந்தாள்' என்றுரைப்பர். (உகஅ)

கஙஅச. தழுமா வலிமைந் தவெனத் தளரா
வெழுமே ழடியூக் கிநடந் துசெலா
விழுமீ நிலமேய் திமிளிர்ந் துருகா
வழுமா லவலித் தவணங் கிழையே.

(இ - ள்.) அ அணங்கு இழை - அந்த அழகிய அணிய ணிந்த பதுமை; அவலித்து - வருந்தி; தளரா எழும் - தளர்ந்து எழுவாள்; ஏழடி ஊக்கி நடந்து செலா-ஏழடி வரை முயற்சித்து நடந்து சென்று; மா வலி மைந்த எனத் தழும் - மாவலியுடைய மைந்தனே! என்று (உருவெளியைத்) தழுவுவாள்; விழும் - (அவ்வுருவம் கைக்குப் பற்ற வியலாமையின்) விழுவாள்; மீநிலம் எய்தி மிளிர்ந்து உருகா அழும் - (விழுந்து) மேலாம் நிலத்தை அடைந்து புரண்டு உருகி அழுவாள்.

(வி - ம்.) தளரா, உருகா, செலா: செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சங்கள். ஏழடி செல்வது மரபு. தழும், எழும், விழும், அழும் என்பன செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்கள்.

வேறு

கரு௮ரு. கரப்புநீர்க் கங்கை யங்கட்
கடிமலர்க் கமலப் பள்ளித்
திருத்தகு திரைக டாக்கச்
சேப்புழிச் சேவ னீங்கப்
பரற்றலை முரம்பிற் சின்னீர்
வறுஞ்சுனைப் பற்று விட்ட
வரத்தவாய்ப் பவளச் சேந்தாட்
பேடையன்ன மழுவ தொத்தாள்.

(இ - ள்.) *பரல்தலை முரம்பின் சின்னீர் வறுஞ்சுனைப் பற்றுவிட்ட-பரற்கற்கள் பொருந்திய மேட்டு நிலத்திலே சிறிதே நீரையுடைய வறிய சுனையிலே கொண்ட பற்றைவிட்ட ; அரத்த வாய்ப் பவளச் செந்தாள் பெடை அன்னம் - சிவந்த வாயையும் பவளமனைய சிவந்த கால்களையும் உடைய பெட்டை அன்னம்; கரப்பு நீர்க் கங்கை அங்கண் - சிவன் சடையிற் கரத்தலையுடைய கங்கையின் அழகிய இடத்திலுள்ள ; கடி மலர்க் கமலப் பள்ளி - மணமிகு மலராகிய தாமரை யணையிலே; திருத்தகு திரைகள் தாக்கச் சேப்புழி - அழகு பொருந்திய அலைகள் அலைத்துத் துயிற்றச் சேவலோடு துயிலும்போது; சேவல் நீங்க-சேவல் நீங்குதலால்; அழுவது ஒத்தாள் - முன்னிருந்த வறிய சுனையிலே இருந்து அழுவதைப் போன்றாள்.*

(வி - ம்.) *கரப்பு நீர்க் கங்கை - பாதாள கங்கையெனினும் ஆம். அவனைக் கூடிய பின்பு தந்தையில்லம் கங்கையாய், அவன் நீங்குதலால் அச் சுனையின் தன்மைய தாயிற்று. அன்னம் சுனையில் தங்குதல் இல் பொருளுவமை.* (உஉ௧).

கரு௮சு. மெழுகினுற் புனைந்த பாவை
வெய்துறத் தாங்கு மோவா
தழுதுநைந் துருகு கின்ற
வாயிடைத் தோழி துன்னிக்
கெழீஇயினாள் கேள்வி நல்யாழ்க்
கின்னரம் பனைய சொல்லாள்
கழிபெருங் கவலை நீங்கக்
காரண நீர சொன்னாள்.

(இ - ள்.) *மெழுகினால் புனைந்த பாவை வெய்துறத் தாங்கு-மெழுகாற் செய்த பாவையைத் தீயுறுத்தாற்போல ; ஓவாது அழுது நைந்து உருகுகின்ற ஆயிடை-ஒய்வின்றி அழுது நைந்து*

உருகுகின்ற அக்காலத்தே; கெழீஇயினள் - நெருங்கியவளாகிய; கேள்வி நல்யாழ்க் கிளை நரம்பு அனைய சொல்லாள் தோழி துன்னி-கேள்விக்குரிய நல்ல யாழின் கிளையென்னும் நரம்பினது இசையைப் போன்ற சொல்லாளாகிய தோழி ஆங்குவந்து ; கழி பெருங் கவலை நீங்க - மிகப் பெருங் கவலை தவிர; காரண நீர சொன்னாள் - காரணமான தன்மையை உடைய சொற்களைக் கூறினாள்.

(வி - ம்.) ஆங்கும்: உம்: இசை நிறை. காமமும், இருவினையும், நிலையாமையும் முதலியவற்றைக், 'காரண நீர' என்றார். பிரிவுணர்த்தி ஆற்றுவித்துச்சீவகன் பிரியாமையின் தோழி ஆற்றுவிக்கின்றாள். (உ௨க)

கரு௮எ. தேள்ளறல் யாறு பாய்ந்த திரைதவழ் கடலின் வெஃகி
யள்ளுற வளிந்த காம மகமுறப் பிணித்த தேனு
முள்ளுற வெந்த செம்போ னுற்றநீர்ப் புள்ளி யற்றாற்
கள்ளுற மலர்ந்த கோதாய் காதலர் காத லென்றாள்.

(இ - ள்.) கள் உற மலர்ந்த கோதாய் - தேன் பொருந்த மலர்ந்த மாலையாய்!; தெள் அறல் யாறு பாய்ந்த திரை தவழ் கடலின் வெஃகி - தெளிந்த நீரையுடைய ஆறுகள பாய்ந்த அலை தவழும் கடலினும் மிகுந்து; அள் உற அளிந்த காமம் அகம் உறப் பிணித்த தேனும் - நுகரும் தன்மை உறும்படி பழுத்த காமம் உள்ளம் இறுகப் பிணித்த தாயினும்; காதலர் காதல்-காதலித்தோர் காதல் ; உள் உற வெந்த செம்பொன் உற்ற நீர்ப் புள்ளி அற்று-உள்ளத்தே அடங்கிப் பிறர்க்குத் தோன்றுதிருக்க வேண்டின். வெந்த செம்பொன்னிற் பொருந்திய நீர்த்துளி போலத் தோன்றாது.

(வி - ம்.) அற்று: குறிப்பு வினைமுற்று.

வெஃகி-ஆசை மிகுந்து. கையால் அள்ளிக்கொள்ளலாம்படி கனிந்த காமம் எனினுமாம் அகம் - நெஞ்சம். உள்ளுறவேண்டின் என்க; நெஞ்சத்துள்ளேயே பொருந்திப் புறத்தார்க்குப் புலப்படாதிருக்க விரும் பின் என்பது கருத்து கள் - தேன். (உ௨உ)

கரு௮௮. ஓடரி யொழுகி நீண்ட வொளிமலர் நெடுங்க ணுரைக்
கூடரி யுழுவை போல முயக்கிடைக் குழையப் புல்லி
யாடவ ரழுந்தி வீழ்ந்தும் பிரிவிடை யழுங்கல் செல்லார்
பீடழிந் தருகும் பெண்ணிற் பேதைய ரில்லை யென்றாள்.

(இ - ள்.) ஓடு அரி ஒழுகி நீண்ட ஒளிமலர் நெடுங்கண்ணுரை - ஓடுகின்ற செவ்வரியுடன் மிகவும் நீண்ட ஒளி பொருந்திய மலரனைய நீண்ட கண்ணுரை ; கூடு அரி உழுவை போல ஆடவர் முயக்கிடைக் குழையப் புல்லி - தம் தம் பெடையுடன்

கூடும் சிங்கமும் புலியும் போல ஆடவர் கூடற் காலத்தே குழையுமாறு தழுவி; அழுந்தி வீழ்ந்தும - இன்பத்தில் அழுந்தி வீழ்ந்தாலும்; பிரிவிடை அழுங்கல் செல்லார்-பிரிவுக் காலத்து வருந்த மாட்டார்; பீடு அழிந்து உருகும் பெண்ணின் பேதையர் இல்லை என்றாள் - (அங்ஙனமின்றிப்) பிரிவிடத்துப் பெருமை கெட்டு உருகும் பெண்களைக் காட்டினும் பேதையர் இவ்வுலகத்தில் இல்லை என்று தோழி கூறினாள்.

(வி - ம்.) ஆடவர் நுகர்ச்சிக்காலத்தே மகளிரினும் மிக்கு இன்பத்திலழுந்துகின்றார், பிரிவிடை வருந்துகின்றிலர்; மகளிரோ பிரிவுக் காலத்தே துன்பத்திற் பெரிதும் அழுந்துகின்றனர். ஆதலின் மகளிரிற் காட்டிற் பேதையரில்லை என்றவாறு. (உஉரு)

கரு௮கூ. பேதைமை யென்னும் வித்திற்
பிறந்துபின் வினைக ளென்னும்
வேதனை மரங்க ணாறி
வேட்கைவேர் வீழ்த்து முற்றிக்
காதலுங் களிப்பு மென்னுங்
கவடுவிட் டவலம் பூத்து
மாதுய ரிடும்பை காய்த்து
மரணமே கனிந்து நிற்கும்.

(இ - ள்.) பேதைமை யென்னும் வித்தில் - அறியாமை யென்னும் வித்தினிடமாக; வினைகள் என்னும் வேதனை மரங்கள் பிறந்து பின் நாறி - தீவினைகள் என்கிற துன்பந்தரும் மரங்கள் முளைத்துப் பின் வளர்ந்து; வேட்கை வேர் வீழ்த்து முற்றி - ஆசையாகிய வேரை வீழ இறக்கி முதிர்ந்து; காதலும் களிப்பும் என்னும் கவடு விட்டு - காதல் களிப்பு என்னும் கிளைகளை விட்டு; அவலம் பூத்து - வருத்தம் மலர்ந்து; மாதுயர் இடும்பை காய்த்து - பெருந்துயரந்தரும் கவலை காய்த்து; மரணமே கனிந்து நிற்கும் - மரணந் தருகின்ற கையாற்றை இவ்வுடம்பு நுகரப் பழுத்துத் தந்து, பின்னும் அவ்வாறு காய்க்க அம் மரம் நிற்கும்.

(வி - ம்.) பழுத்தல் - உடம்பு போதல். தீவினை நிற்றலின் நிற்கும் என்றார். மரணமே : ஏ : தேற்றம். பெறாததன்மேற் செல்வது காதல். பெற்றதன்மேற் செல்வது களிப்பு.

வேதனை மரங்கள் பிறந்துபின் நாறி என மாறுக பிறந்து என்றது முளைத்து என்றவாறு. நாறுதல் - தோன்றுதல்; ஈண்டு வளர்ந்து என்னும் பொருள்பட நின்றது. வேதனைமரம் : பண்புத்தொகை. கவடு - கிளை. அவலம் - துன்பம். மாதுயர் இடும்பை : இருபெயரொட்டு: மிகப்பெருந் துன்பம் என்பது கருத்து. (உஉ௪)

௧௩௯௦. தேன்சென்ற நெறியுந் தெண்ணீர்ச்
சிறுதிரைப் போர்வை போர்த்து
மீன்சென்ற நெறியும் போல
விழித்திமைப் பவர்க்குந் தோன்ருு
மான்சென்ற நோக்கின் மாதே
மாய்ந்துபோ மக்கள் யாக்கை
யூன்சென்று தேயச் சிந்தித்
துகுவதோ தகுவ தென்ருள்.

(இ - ள்.) மான் சென்ற நோக்கின் மாதே! - மான் கண் போன்று செல்லும் பார்வையுடைய மாதே!; தேன் சென்ற நெறியும் - வண்டுகள் மலரைத் தேடிச் செல்கின்ற வழியும்; சிறுதிரைப் போர்வை போர்த்து மீன் சென்ற நெறியும் போல - சிற்றலையாகிய போர்வையைப் போர்த்துக் கொண்டு மீன் செல்கின்ற வழியும் போல; மக்கள் யாக்கை - மக்களின் உடம்பு; விழித்து இமைப்பவர்க்கும் தோன்ருு மாய்ந்துபோம் - விழித்து இமைப்பவர்கட்குந் தெரியாதனவாய் மடிந்து போகும்; ஊன் சென்று தேயச் சிந்தித்து உகுவதோ தகுவது? என்ருள் - மெய் சிறிது சிறிதாகத் தேயுமாறு நினைந்து கெடுதலோ தகுதியாகும்! என்ருள்.

(வி - ம்.) தேன்-வண்டு. நெறி-வழி. தேனும் மீனும் போனவழி அறியமுடியாததுபோல் மக்கள் யாக்கை அழிந்துபோம் வழியும் அறிய முடியாது என்றவாறு விழித்திமைப்பவர் - மக்கள் என்ருர் நச்சினர்க்கினியர். சிந்தித்துகுவதோ தகுவது என்றது சிந்தித்து உகாமையே தகுவது என்னும் பொருள் குறித்து நின்றது. (உஉ௯)

௧௩௯௧. பிரிந்தவற் கிரங்கிப் பேதுற்
றழுதநங் கண்ணி னீர்கள்
சோரிந்தவை தொகுத்து நோக்கிற்
றெருகடல் வெள்ள மாற்ருு
முரிந்தநம் பிறவி மேனுண்
முற்றிழை யின்னு நோக்காய்
பரிந்தழு வதற்குப் பாவா
யடியிட்ட வாறு கண்டாய்.

(இ - ள்.) முற்றிழை இன்னும் நோக்காய் - முற்றிழையே! இன்னும் மனத்தாலே நோக்குவாயாக; மேல்நாள் முரிந்த நம் பிறவி - மேல் நாட்களில் இற்ற நம் பிறவிகளிலே; பிரிந்தவற்கு இரங்கிப் பேதுற்று அழுத நம் கண்ணின் நீர்கள் - அப்பொழுது

பிரிந்தவனே கணவனாக அவற்கே பேதுற்று அழுத நம் கண்ணின் நீர்கள்; சொரிந்தவை தொகுத்து நோக்கின்-சொரிந்தவற்றைத் தொகுத்துப் பார்த்தால்; தொடுகடல் வெள்ளம் ஆற்றா - தொட்ட கடலின் பெருக்கும் உறையிடவும் போதாது; பாவாய்! பரிந்து அழுவதற்கு அடியிட்ட ஆறு கண்டாய் - பாவையே! பரிவுற்று மேலும் அழுதற்கு இந்நாள் அடியிட்டபடி யென்றறிவாய்.

(வி - ம்.) இப்பொழுது பிரிந்த இவனுக்கே என்பது படப் பிரிந்தவற்கு என ஒருமையாற் கூறினர். அன்புடைக்காதலர் பிறவிகடோறும் கணவனும் மனைவியுமாகப் பிறப்பர் என்பது ஒரு கொள்கை. இதனை,

"நினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉம்
மனக்கினி யார்க்குநீ மகளாய தூஉம்
பண்டும் பண்டும் பல்பிறப் புளவால்." (மணி. உக. உகூ-ங௧)

எனவரும் மணிமேகலையானும் உணர்க.

பரிந்தழுவதற்கு அடியிட்டவாறு என்றது இங்ஙனம் அழும் அழுகைக்கு முடிவில்லை என்றவாறு. (உஉசு)

கஙகூஉ. அன்பினி னவலித் தாற்றா
தழுவது மெளிது நங்க
ளென்பினி னாவி நீங்க
விறுவது மெளிது சேர்ந்த
துன்பத்தாற் றுகைக்கப் பட்டார்
துகைத்தவத் துன்பந் தாங்கி
யின்பமென் றிருத்தல் போலு
மரியதிவ் வுலகி லென்றாள்.

(இ - ள்.) அன்பினின் அவலித்து ஆற்றாது அழுவதும் எளிது - நம் காதலரிடம் அன்பினாலே வருந்தி ஆற்றவியலாமல் அழுவதும் எளிது; நங்கள் என்பினின் ஆவி நீங்க இறுவதும் எளிது - நம் உடம்பிலிருந்து உயிர்போம்படி இறத்தலும் எளிது; சேர்ந்த துன்பத்தால் துகைக்கப்பட்டார் - தம் காதலர் சேர்ந்து பிரிந்ததனால் பிறந்த துன்பத்தாலே வருத்தப்பட்ட மகளிர்; துகைத்த அத் துன்பம் தாங்கி - அங்ஙனம் வருத்தின அவ் வருத்தத்தைப் பொறுத்து; இன்பம் என்று இருத்தல் இவ் வுலகில் அரியது போலும் என்றாள்-இது நமக்கு இன்பம் என்று இருப்பதே இவ்வுலகில் அரியதாகும் என்றாள்.

(வி - ம்.) நங்கள் : கள்: அசை. போலும் : ஒப்பில் போலி.

அவலித்து - வருந்தி. எல்லோரும் செய்வதொன்றாகலின் அழுவது எளிது என்றாள். இறுவதும் - இறந்துபடலும். மெய்யுணர்வுடை

யார்க்குத் துன்பம் வீடுபேற்றிற்குக் காரணமாதல் பற்றி இத்துன்பமே நமக்கின்பம் என்று அவலியாதிருத்தல் கூடும் ஆயின் அங்ஙனம் இருத்தல் செயற்கரிய செயலென்பாள் 'தூகைத்த அத்துன்பந்தாங்கி இன்பம் என்றிருத்தல் போலும் அரியது இவ்வுலகில்' என்றாள். (உஉஎ)

கஙகூங. மயற்கையிம் மக்கள் யோனிப்
பிறத்தலும் பிறந்து வந்தீங்
கியற்கையே பிரிவு சாத
லிமைப்பிடைப் படாத தொன்றாற்
கயற்கணி னளவுங் கொள்ளார்
கவற்சியுட் கவற்சி கொண்டார்
செயற்கையம் பிறவி நச்சுக்
கடலகத் தழுந்து கின்றார்.

(இ - ள்.) மயற்கை இம் மக்கள் யோனி பிறத்தலும் - குற்றமுடைய இம் மக்கட் பிறப்பிற் பிறத்தலும்; பிறந்து வந்து ஈங்குப் பிரிவு சாதல் இயற்கை - பிறந்து வந்து இவ்வுலகிற் பிரிதலும் இறத்தலும் இயற்கை; இமைப்பிடைப் படாதது ஒன்றால் - இமைப்பளவும் நடுவில் தங்காதது ஒன்று, ஆதலால்; கவற்சி கயற்கணின் அளவும் கொள்ளார் - அறிஞர் கவலை மீன்கண்ணளவாயினும் கொள்ளார்; உள் கவற்சி கொண்டார் செயற்கை அம் பிறவி நச்சுக் கடலகத்து அழுந்துகின்றார்-மனக்கவலை கொண்டவர்கள் பற்றுள்ளத்தால் உண்டாகும் பிறவியாகிய நச்சுக் கடலிலே அழுந்துகின்றவர்கள்.

(வி - ம்.) (பலபிறப்பிலும்) பிறந்து வந்து இம்மக்கள் யோனியிற் பிறத்தலும் மயற்கை என்பர் நச்சினார்க்கினியர். கயற்கணின் அளவு: அளவின் சிறுமை குறிப்பது; ஒரு மாத்திரையளவு. (உஉஅ)

கஙகூச. இளமையின் மூப்புஞ் செல்வத்
திடும்பையும் புணர்ச்சிப் போழ்திற்
கிளைநரிற் பிரிவு நோயில்
காலத்து நோயு நோக்கி
விளைமதுக் கமழுங் கோதை
வேலினும் வெய்ய கண்ணாய்
களைதுய ரவலம் வேண்டா
கண்ணிமைப் பளவு மென்றாள்.

(இ - ள்.) இளமையில் மூப்பும்-இளமைக் காலத்தே மூப்பு வருமென்பதையும்; செல்வத்து இடும்பையும் - செல்வமுள்ள போதே வறுமைத் துன்பம் வருமென்பதையும்; கிளைநரில்

புணர்ச்சிப் போழ்தில் பிரிவும் - கணவருடன் கூடியிருக்கும் போதே பிரிவு வருமென்பதையும்; நோய்இல் காலத்து நோயும்-நலமுள்ள காலத்திலேயே நோய் வருமென்பதையும் ; நோக்கி - எதிர்பார்த் துணர்ந்து;விளை மது கமழும் கோதை!-விளைந்த தேன் மணக்கும் மாலையாய் !; வேலினும் வெய்ய கண்ணாய்! - வேலினும் கொடிய கண்களையுடையாய் !; துயர் களை - துயரத்தை நீக்கு வாயாக ; கண் இமைப்பளவும் அவலம் வேண்டா என்றாள் - கண்ணிமைக்கும் போதளவேனும் இந்த அவலம் வேண்டா என்றுரைத்தாள்.

(வி - ம்.) இளமைக்காலத்தே இனி மூப்பு வரும் என்று எதிர்பார்த்திருப்போர் இளமையழிவிற்கும் மூப்பிற்கும் வருந்தமாட்டார்; இங்ஙனமே செல்வக்காலத்தே வறுமையையும் புணர்ச்சிக்காலத்தே பிரிவினையும் வரும் என்று எதிர்பார்த்திருப்போர் வருந்த மாட்டார். நீயும் அங்ஙனம் இஃதுலகியல் என்றுணர்ந்து இமைப்பளவும் அவலியாதிரு என்றவாறு. "வெள்ளத்தனைய இடும்பை அறிவுடையார் உள்ளத்தின் உள்ளக் கெடும்" என்பது பற்றிக் 'கண்ணிமைப்பளவும் அவலம் வேண்டா' என்றாள். (உஉகூ)

1629 9

கஙஃகூ௦. முத்திலங் காகந் தோய்ந்த
மொய்ம்மலர்த் தாரி னனங்
கைத்தலத் தகன்ற பந்திற்
கைப்படுங் கவல வேண்டா
பொத்திலத் துறையு மாந்தை
புணர்ந்திருந் துரைக்கும் பொன்னே
நித்தில முறுவ லுண்டா
னீங்கின னல்லன் கண்டாய்.

3372729

(இ - ள்.) பொன்னே! - திருவனையாய்!; பொத்து இலத்து உறையும் ஆந்தை புணர்ந்து இருந்து உரைக்கும் - மரப்பொந்தாகிய இல்லத்தே வாழும் ஆந்தை பேடும் சேவலுமாகக் கூடியிருந்து அவன் வரவைக் கூறும்; நித்திலம் முறுவல் உண்டான் நீங்கினன் அல்லன் (ஆதலால்) முத்தனைய நின்பற்களின் ஊறிய நீரைப் பருகினவன் நின்னைப் பிரிந்தான் அல்லன்; முத்து இலங்கு ஆகம் தோய்ந்த மொய்ம்மலர்த் தாரினன் - முத்துக்கள் விளங்கும் நின் மார்பினைத் தழுவிய மலர்மாலையான்; நம் கைத்தலத்து அகன்ற பந்தின் கைப்படும் - நம் கையிலிருந்து நீங்கிய பந்து போலக் கைப்படுவான் ; கவல வேண்டா-கவலையுறல் வேண்டா.

(வி - ம்.) தாரினன்: சீவகன். கைத்தலத்து அகன்ற பந்து மீண்டும் நம் கைக்கே வருமாறுபோல என்க. பொத்து - பொந்து. இல்லம், இலம் என லகரமெய் கெட்டு நின்றது. பொன்னே : விளி. நித்தில முறுவலுண்டான் என்றது நீங்கினன் ஆகாமைக்குக் குறிப்பேதுவாகும்.

கஙூசு. வடிமலர்க் காவி னன்று
வண்டளிர்ப் பிண்டி நீழன்
முடிபொருள் பறவை கூற
முற்றிழை நின்னை நோக்கிக்
கடியதோர் கௌவை செய்யுங்
கட்டெயிற் றரவி னென்றேன்
கொடியனாய் பிழைப்புக் கூறேன்
குழையலென் றெடுத்துக் கொண்டாள்.

(இ - ள்.) முற்றிழை! - முற்றிய இழைகளையுடையாய்!; அன்று வடிமலர்க் காவின் வண்தளிர்ப் பிண்டி நீழல் - அன்றைக்கு ஆராயும் மலர்ப் பொழிலிலே வளவிய தளிரை யுடைய பிண்டியின் நீழலிலே; பறவை முடிபொருள் கூற - அப் பறவை முடியும் பொருளைக் கூறுதலின்; நின்னை நோக்கிக் கட்டு எயிற்று அரவின் கடியது ஓர் கௌவை செய்யும் என்றேன் - உன்னைப் பார்த்து இக் கூற்றுக் கட்டிய நஞ்சுடைய அரவினாலே கொடியதாகிய ஒரு துன்பத்தை உண்டாக்குவதைக் காட்டும் என்றேன்; கொடியனாய்! - கொடி போன்றவளே!; பிழைப்புக் கூறேன் - தவறுரையேன்; குழையல் என்று எடுத்துக்கொண்டாள் - வருந்தற்க என்று தழுவியெடுத்துக் கொண்டாள்.

(வி - ம்.) வடிமலர்க்கா : வினைத்தொகை; தழைத்துத் தாழ்ந்த காவுமாம். பிண்டி-அசோகமரம். 'பறவை முடிபொருள் கூறக் கடியதோர் கௌவை செய்யும் என்றேன்' என்றது மேலைச் செய்யுளில் தாரினான் கைப்படும் என்றதற்கு எடுத்துக்காட்டு. (உஙக)

கஙூஎ. அலங்கலுங் குழலுந் தோழி
யங்கையி னடைச்சி யம்பூம்
பொலங்கலக் கொடிய னாடன்
கண்பொழி கலுழி யொற்றிக்
கலந்தகி றாறு மல்குற்
கவான்மிசைக் கொண்டி ருந்தாள்
புலர்ந்தது பொழுது நல்லா
ணெஞ்சமும் புலர்ந்த தன்றே.

(இ - ள்.) தோழி-தோழியானவள்; அம் கையின்-அழகிய தன் கையினால்; அம் பொலம்கலம் பூங்கொடியன்னாள் தன் - அழகிய பொன்னாலாகிய கலம் அணிந்த பூங்கொடி போன்ற வளின்; அலங்கலும் குழலும் அடைச்சி - மாலையையும் குழலை யும் செருகி; கண்பொழி கலுழி ஒற்றி-கண்ணிலிருந்து வடியும்

நீரையுந் துடைத்து; அகில் கலந்து நாறும் அல்குல் கவான் மிசைக்கொண்டிருந்தாள்-அகில் மணம் கலந்து கமழும் அல்குலை யுடைய தன் தொடையின் மேலே கொண்டிருந்தாள்; பொழுது புலர்ந்தது - அப்பொழுது இரவும் விடிந்தது; நல்லாள் நெஞ்ச மும் புலர்ந்தது - பதுமையின் உள்ளமும் தெளிந்தது.

(வி - ம்.) அலங்கல் - மாலை. குழல் - கூந்தல். பொலங்கலம் - பொன்னாலியற்றிய அணிகலம். கொடியனாள் : பதுமை. கவான் - தொடை. (உருஉ)

கந௲அ. பண்கனிந் தினிய பாடற் படுநரம் பிளகி யாங்குக்
கண்கனிந் தினிய காமச் செவ்வியுட் காளை நீங்கத்
தெண்பனி யனைய கண்ணீர்ச் சேயிழை தாய ரெல்லாந்
தண்பனி முருக்கப் பட்ட தாமரைக் காடு போன்றார்.

(இ - ள்.) பண் கனிந்து இனிய பாடல் படு நரம்பு இளகி யாங்கு - பண் முற்றுப்பெற்று இனிய பாட்டையுடைய ஒலிக் கின்ற நரம்பு பாடலிலே நெகிழ்ந்தாற்போலே; கண் கனிந்த இனிய காமச் செவ்வியுள் - பதுமையின் மெய்யிடங் குழைந்த இனிய காமச் செவ்வியிலே; காளை நீங்க - சீவகன் நீங்கினான் ஆதலின்; தெண் பனி அனைய கண்ணீர்ச் சேயிழை தாயர் எல்லாம் - தெளிந்த பனித்துளி போன்ற கண்ணீரையுடைய பதுமையின் தாயரெல்லாரும்; தண்பனி முருக்கப்பட்ட தாம ரைக் காடு போன்றார் - குளிர்ந்த பனியினால் வெதும்பப்பெற்ற தாமரைக் காடுபோல முகம் கருகினர்.

(வி - ம்.) பண்கனிந்து படுநரம்பு இனிய பாடல் படுநரம்பு எனத் தனித்தனி கூட்டுக. கண்கனிந்து என்புழி, கண் இடம் என்னும் பொருட்டு. காளை : சீவகன். சேயிழை : பதுமை. தாயர் : நற்றாயும் செவிலித்தாயரும் என்க. (உருங)

கந௲௯. சில்லரிச் சிலம்பு சூழ்ந்த
சீறடித் திருவி னற்றாய்
முல்லையங் குழலி னாய்நின்
முலைமுதற் கொழுநன் மேனாட்
சொல்லியு மறிவ துண்டோ
வெனக்குழைந் துருகி நைந்து
மெல்லியல் கங்குல் சொல்லிற்
றிற்றெென மிழற்று கின்றாள்.

(இ - ள்.) சில் அரிச் சிலம்பு சூழ்ந்த சீறடித்திருவின் நற் றாய் - சில பரல்களையுடைய சிலம்பு அணிந்த சிற்றடியாள்

பதுமையின் நற்றாய்; முல்லை அம் குழலினாய் - முல்லைப்போது அணிந்த கூந்தலாய்!; நின்முலை முதற்கொழுநன் - நின் கொங்கையிற்றோய்ந்த கணவன்; மேல்நாள் சொல்லியும் அறிவது உண்டோ என - முன்னாளிலே தன் பிரிவு தோன்றச்சொல்லி நீ அறிந்தது உண்டோ? என்று வினவ; மெல்லியள் குழைந்து உருகி நைந்து - பதுமை அதுகேட்டு நெகிழ்ந்து உருகி வருந்தி; கங்குல் சொல் விற்று இற்று என மிழற்றுகின்றாள் - இரவு கூறியது இஃது என்று கூறுகின்றாள்.

(வி - ம்.) சில் அரி - சிலவாகிய பரல்கள். நற்றாய் : திலோத்தமை. கற்புக் கடம்பூண்டமை தோன்ற 'முல்லையங் குழலினாய், என்று விளித்தாள். முலைக்கு முதல்வனாகிய கொழுநன் என்க. கொழுநன்-கணவன். மெல்லியல் : பதுமை. இற்று - இத்தன்மைத்து. (உ௩௪)

வேறு

௧௪00. வினைக்குஞ் செய்பொருட் கும்வெயில் வெஞ்சுர
நினைத்து நீங்குத லாண்கட னீங்கினாற்
கனைத்து வண்டுணுங் கோதையர் தங்கடன்
மனைக்கண் வைகுதன் மாண்போ டெனச்சொனான்.

(இ - ள்.) நினைத்து - தன் மனைவியை நினைத்து வருந்தினாலும்; வினைக்கும் செய்பொருட்கும் - போர்த்தொழிலுக்கும் ஈட்டும் பொருட்கும்; வெயில் வெஞ்சுரம் - கோடையிலே கொடிய காட்டு நெறியிலே; நீங்குதல் ஆண் கடன் - பிரிந்து செல்லுதல் ஆடவர் தொழில்; நீங்கினால் - அவ்வாறு நீங்கினால்; கனைத்து வண்டு உணும் கோதையர் தம் கடன் - முரன்று வண்டுகள் தேனைப் பருகும் மாலையணிந்த மனைவியர் தொழில்; மாண்பொடு மனைக்கண் வைகுதல் எனச் சொனான் - இறந்துபடாமல் இல்லிலே தங்கியிருத்தலாகும் என்று கூறினான்.

(வி - ம்.) வினை: ஈண்டுப் போர்த்தொழில். செய்பொருள்: வினைத்தொகை. ஆண்கடன் : ஆடவனுக்குரிய கடமை. கனைத்து - முரன்று. கோதையர்-ஈண்டு மகளிர் என்னும் பொருட்டு. வைகுதல்-ஈண்டு ஆற்றியிருத்தல் என்பதுபட நின்றது. இச்செய்யுட் கருத்தோடு,

"ஆண்கடன் அகறல் அதுநோன் றொழுகுதல்
மாண்பொடு புணர்ந்த மாசறு திருநுதற்
கற்புடை மகளிர் கடன்." (பெருங். ௩. எ : எ - ௯)

எனவரும் பெருங்கதைப் பகுதியை ஒப்புக் காண்க. (உ௩௫)

௧௪0௧ விரைசெய் தாமரை மேல்விளை யாடிய
வரைச வன்ன மமர்ந்துள வாயினு
நிரைசெய் நீல நினைப்பில வென்றனன்
வரைசெய் கோல மணங்கமழ் மார்பினான்.

(இ - ள்.) வரை செய் கோலம் மணங்கமழ் மார்பினன் - மலைபோன்று அழகிய மணம் பொருந்திய மார்புடையான்; விரைசெய் தாமரைமேல் விளையாடிய அரச அன்னம் - மணம் கமழும் தாமரைமேல் விளையாடிய அரச அன்னங்கள்; நிரை செய் நீலம் அமர்ந்துள ஆயினும் - திரளாகிய நீல மலர்களிடையே பயின்றுளவானாலும்; நினைப்பில என்றனன் - அந்த நீலத்தை நினையா என்றும் கூறினன். (என்று பதுமை கூறினாள்)

(வி - ம்.) நீலம் - பரத்தை. தாமரை-குலமகளிர். எனவே குலமகளிரையே இனி நுகர்வேனென்றான். (உகூ)

கச0உ. பொன்வி ளைத்த புணர்முலை யாள்சொல
வின்ன ளிக்குரல் கேட்ட வசுணமா
வன்ன ளாய்மகிழ் வெய்துவித் தாளரோ
மின்வ ளைத்தன மேகலை யல்குலாள்.

(இ - ள்.) பொன் விளைத்த புணர்முலையாள் சொல - தேமலைத் தோற்றுவித்த புணர்முலையுடையாள் பதுமை இங்ஙனம் கூற; மின்விளைத்தன மேகலை அல்குலாள் - ஒளியைப் பரப்பிய மேகலை அணிந்த அல்குலையுடையாள் ஆகிய நற்றாய்; இன் அளிக்குரல் கேட்ட அசுணமா அன்னளாய் - இனிய அளிக்கத்தக்க குரல் நரம்பின் இசை கேட்ட அசுணமாவைப் போன்றவளாகி; மகிழ்வு எய்துவித்தாள்-பதுமையையும் களிப்படையச் செய்தாள்.

(வி - ம்.) அசுணமா: இசையறிவதொரு விலங்கு. சிலர் அசுணத்தைப் பறவை யென்பர். அசுணம் நல்லிசை கேட்டால் மகிழும், தீயவிசை கேட்டால் துன்புறும் என்பர். 'அசுணங் கொல்பவர் கைபோல் நன்றும்' (நற். கூ0ச) என்றார். (உகூஎ)

கச0கூ. அன்னந் தானவன் றாமரைப் போதுநீ
நின்னை நீங்கின னீங்கலன் காதலா
னின்ன தாலவன் கூறிற் றெனச்சொனாண்
மன்ன னாருயிர் மாபெருந் தேவியே.

(இ - ள்.) மன்னன் ஆருயிர் மாபெருந் தேவி - தனபதி மன்னனின் உயிராகிய பேரரசி; அவன் அன்னந்தான் - சீவகன் அன்னமாவான்; நீ தாமரைப்போது - நீ தாமரை மலராவாய்; நின்னை நீங்கினன் - அவன் வினைமேற் செலவே இப்போது நின்னைப் பிரிந்தான்; காதலான் நீங்கலான் - காதலுடையவனாகையால் நின்னை முழுக்கப் பிரிந்தானலன்; அவன் கூறிற்று இன்னது எனச் சொனாள் - அவன் கூறியதன் கருத்து இதுவே என்று நற்றாய் நவின்றாள்.

(வி - ம்.) 'நீலம் அமர்ந்துளவாயினும்' என்பதன் கருத்தைக் கூறிற்றிலள் பதுமை கேட்பின் இறந்துபடுவள் என்று கருதி. 'நின்னின் நீங்கினன்' என்றும் பாடம். (உ௩அ)

## வேறு

கச0௪. சோரிபனி முருக்க நைந்து
சுடர்முகம் பெற்ற போதே
பரிவுறு நலத்த வன்றே
பங்கய மன்ன தேபோல்
வரிவளைத் தோளி கேள்வன்
வருமேன வலித்த சொல்லாற்
றிருநலம் பிறந்து சொன்னா
டேனினு மினிய சொல்லாள்.

(இ - ள்.) சொரி பனி முருக்க நைந்து - பெய்யும் பனி வெதுப்புதலிற் கெட்டு; சுடர்முகம் பெற்றபோதே - ஞாயிறு தோன்றும் நிலைமையை அடைந்தபொழுதே; பங்கயம் பரிவுறும் நலத்த அன்றே - தாமரை அன்புறும் பண்பினையுடையவன்றோ?; அன்னதேபோல் - அதனைப் போலவே; வரிவளைத் தோளி தேனினும் இனிய சொல்லாள் - வரி வளையணிந்த தோளியாகிய தேனினும் இனிமையான சொல்லையுடையவள்; கேள்வன் வரும் என வலித்த சொல்லால் - கணவன் வருவான் என்று தாய் கூறிய உறுதிமொழியால்; திருநலம் பிறந்து சொன்னாள் - அழகிய நலத்தைப் பெற்று ஒருமொழி கூறினாள்.

(வி - ம்.) சொரிபனி : வினைத்தொகை. முருக்குதல் - அழித்தல். சுடர் - ஞாயிறு. பங்கயம் - தாமரை தோளி : பதுமை. வலித்தசொல் - துணிந்துரைத்த சொல். (உ௩௯)

கச0ரு. நஞ்சினை யமுத மென்று நக்கினு மமுத மாகா
தஞ்சிறைக் கலாப மஞ்ஞை யணங்கர வட்ட தேனு
மஞ்சிறைக் கலுழ னாகு மாட்சியோன் றுனு மின்றே
வஞ்சனுக் கினைய நீரேன் வாடுவ தென்னை யென்றாள்.

(இ - ள்.) நஞ்சினை அமுதம் என்று நக்கினும் அமுதம் ஆகாது - கண்ணுக்கினிய தோற்றத்தால் நஞ்சை அமுதென்று எண்ணி நக்கினாலும் அமுதம் ஆகாது; அம்சிறைக் கலாப மஞ்ஞை அணங்கு அரவு அட்டதேனும் - அழகிய சிறகினையும் கலவத்தையும் உடைய மயில் வருத்தும் பாம்பைக் கொல்லுந் தகையதேனும்; அம் சிறைக் கலுழன் ஆகும் மாட்சி ஒன்றானும் இன்று - அழகிய சிறகினையுடைய கருடனைப்போலத் தொலைவி

லிருந்தாலும் நினைப்பித்துப் பாம்பை அச்சுறுத்தும் பெருமை சிறிதும் மயிலுக்கில்லை; மஞ்சனுக்கு இனைய நீரேன் வாடுவது என்னை என்றாள் - ஆண்மையுடைய அவனுக்கு நஞ்சும் மயிலும் போலும் நீர்மையுடையேன் அமுதமும் கருடனும் போன்ற மகளிரைப்போல வருந்துவது யாது பயனுடையது என்றாள்.

(வி - ம்.) அவன் கூடிய பின்பு நீங்கும் இயல்பைத் தானுடைமையால் தன்னை நஞ்சு என்றாள். நீக்கம் இல்லாத இன்பந் தருதலிற் பிறரை அமுதம் என்றாள். அட்டது என்றார் பாம்பு பல்லுயிரையும் வருத்துந் தன்மையை மயில் கொன்று அஞ்சுவித்தலை உட்கொண்டு; 'செய்ந்நன்றி கொன்ற மகற்கு' (குறள். ககo) என்றாற்போல.

இதனால் தன் வீறின்மையையும் பிரிவின்கண் வருத்துந் தன்மையின்மையையும் கூறினாள். வீறு : தனியழகு. (உசo)

வேறு

கசoசு. போய்கையுட் கமலத் தங்கட்
புள்ளேனு முரச மார்ப்ப
வெய்யவன் கதிர்க ளென்னும்
விளங்கொளித் தடக்கை நீட்டி
மையிருட் போர்வை நீக்கி
மண்ணக மடந்தை கோலம்
பையவே பரந்து நோக்கிப்
பனிவரை நெற்றி சேர்ந்தான்.

(இ - ள்.) பொய்கையுள் கமலத்தங்கண் புள் எனும் முரசம் ஆர்ப்ப - பொய்கைகளிலே தாமரை மலராகிய அழகிய இடத்திலிருந்து வண்டுகள் என்னும் பள்ளியெழுச்சி முரசம் ஆரவாரிக்க; கதிர்கள் என்னும் விளங்கு ஒளித் தடக்கை நீட்டி - கதிர்களாகிய விளக்கம் பொருந்திய ஒளியுறும் பெருங்கையினை நீட்டி; மைஇருள் போர்வை நீக்கி - காரிருளாகிய போர்வையை எடுத்துவிட்டு; மண்ணக மடந்தை கோலம் - நிலமகளின் ஒப்பனையை; பையவே பரந்து நோக்கி - மெல்ல விழிகளைப் பரப்பிப் பார்க்க; வெய்யவன் பனிவரை நெற்றி சேர்ந்தான் - ஞாயிறு குளிர்ந்த உதயகிரியின் முகட்டிலே வந்து சேர்ந்தான்.

(வி - ம்.) நோக்கி-நோக்க : எச்சத்திரிபு. 'நிலமகள் கோலத்தைப் பையப்பரவி மனத்தாலே நோக்கி' என்பர் நச்சினார்க்கினியர். (உசக)

கசoஎ. செவ்வழி யாழி னூறுந் தீஞ்சொலாட் குற்ற தெல்லா
மவ்வழி யரசற் குய்த்தார்க் கரசனு மவல மெய்தி
யெவ்வழி யானு நாடி யிமைப்பின தெல்லை யுள்ளே
யிவ்வழித் தம்மி னென்று னிவுளித்தேர்த் தானை யானே.

(இ - ள்.) செவ்வழி யாழின் ஊறும் தீஞ்சொலாட்கு உற்றது எல்லாம்-மகர யாழைப்போல இனிமையூறும் சொல்லாளாகிய பதுமைக்கு நேர்ந்ததை யெல்லாம்; அவ்வழி அரசற்கு உய்த்தார்க்கு - அந் நிலையிலே அரசனுக்கு அறிவித்தவர்கட்கு; இவுளித்தேர்த் தானையான் அரசனும் - குதிரைகள் பூட்டிய தேர்ப் படையை உடைய அரசனும்; அவலம் எய்தி - வருந்தி; எவ்வழியானும் நாடி - எல்லா நெறியினுஞ் சென்று தேடி; இமைப்பினது எல்லையுள்ளே இவ்வழித் தம்மின் என்றான் - ஒரு நொடியளவிலே இங்குக் கொண்டு வருக என்று பணித்தான்.

(வி - ம்.) செவ்வழியாழ் - செவ்வழிப்பண்ணுமாம். தீஞ்சொலாள்: பதுமை. அரசன் - ஈண்டுத் தனபதி. இமைப்பினதெல்லை - ஒரு நொடிப் பொழுதில். இவுளி - குதிரை. தானையான் : தனபதி. (உ௪உ)

வேறு

௧௪0அ. மின்னுளே பிறந்ததோர் மின்னின் மேதகத்
தன்னுளே பிறந்ததோர் வடிவு தாங்குபு
முன்னினான் வடதிசை முகஞ்செய் தேன்பவே
போன்னுளே பிறந்த போன் னனைய போற்பினான்.

(இ - ள்.) பொன்னுளே பிறந்த பொன் அனைய பொற்பினான் - பொன்னிலே தோன்றிய பொன்னைப் போன்ற அழகினன் ஆகிய சீவகன்; மின்னுளே பிறந்தது ஓர் மின்னின் - மின் முகிலாக அதற்குள்ளே பிறந்த ஒரு மின்னைப்போல; மேதகத் தன்னுளே பிறந்தது ஓர் வடிவம் தாங்குபு - பொருந்துவதற்குத் தகுதியாகிய தன்னிடத்திலே உண்டாகியதொரு வடிவை (பிறர் அறியாமலிருக்க) தான் தாங்கி; வடதிசை முகம் செய்து முன்னினான் - வடதிசையை நோக்கிப்போகக் கருதினான்.

(வி - ம்.) விரைவுக்கும் வடிவிற்கும் மின் உவமை. இஃது இல் பொருளுவமை. இதனால் அரகமனங் கூறினாரென்பர் நச்சினார்க்கினியர். பொன்னுளே பிறந்தபொன் - மாசகன்ற பொன். (உ௪௩)

௧௪0௯. வீக்கினான் பைங்கழ னரல வேண்டுகி
லாக்கினா னிருதுணி யணிந்த பல்கல
னீக்கினா னேருமகற் கருளி நீணெறி
யூக்கினா னுவவுறு மதியி னொண்மையான்.

(இ - ள்.) உவவு உறும் மதியின் ஒண்மையான் - முழுத் திங்களைப் போன்ற கலைகளையுடையவனும்; பைங்கழல் நரல வீக்கினான் - முன்பு புதிய கழலை ஒலிக்கக் கட்டியவனுமாகிய சீவகன்; வெண்துகில் இருதுணி ஆக்கினான் - கடிதுசெல்ல

வெண்மையான ஆடையை இரண்டு துண்டாகக் கிழித்தணிந்தான்; பல்கலன் ஒருமகற்கு அருளி நீக்கினன் - பலவகைப் பூண்களையும் எதிர்ப்பட்ட ஒருவனுக்குக் கொடுத்துப் போக்கினன்; நீள்நெறி ஊக்கினன் - நீண்ட நெறியிலே செல்ல முயன்றான்.

(வி - ம்.) வீக்கினன் : வினையாலணையும் பெயர். துகில் இருதுணி ஆக்கினன் என மாறுக. கடிதிற் செல்லுதற்பொருட்டு நொய்தாக என்றது எதிர்ப்பட்ட ஆடையை இரண்டாகக் கிழித்தனன் என்பது கருத்து. ஒரு மகற்குஓர் ஏதிலனுக்கு என்பதுபட நின்றது. ஊக்கினன்-முயன்றான். உவவுறுமதி - கலைகணிரம்பிய முழுமதி. (உசச)

வேறு

கசசo. வேந்தனால் விடுக்கப் பட்டார்
விடலையைக் கண்டு சொன்னா
ரேந்தலே பெரிது மொக்கு
மிளமையும் வடிவு மிஃதே
போந்ததும் போய கங்குல்
போம்வழிக் கண்ட துண்டேல்
யாந்தலைப் படுது மைய
வறியி னீங் குரைக்க வென்றார்.

(இ - ள்.) வேந்தனால் விடுக்கப்பட்டார் விடலையைக் கண்டு சொன்னார்-தனபதி மன்னனால் ஏவப்பட்டோர் (வடிவை மாற்றிப் போதற்கு முயன்ற) சீவகனைக் கண்டு கூறினர்; ஏந்தலே பெரிதும் ஒக்கும் - ஏந்தலாகிய நின்னையே பெரிதும் ஒப்பான்; இளமையும் வடிவும் இஃதே - அவனுடைய இளமைப் பருவமும் வடிவமும் இத தன்மையே; போந்ததும் போய கங்குல் - அவன் வெளிவந்ததும் சென்ற இரவிலேயே; போம் வழிக் கண்டது உண்டேல் யாம் தலைப்படுதும் - நீ போந்த நெறியிலே அவனைக் கண்டிருந்தால் (அவ்விடத்தைக் கூறினால்) யாங்கள் கண்டு கொள்வோம்; ஐய! அறியின் ஈங்கு உரைக்க என்றார் - ஐயனே! அறிந்திருந்தாற் கூறுக என்று வினவினர்.

(வி - ம்) 'போகின்ற இடத்து யாங்கள் அவனைக் கண்டதுண்டாயின் அப்பொழுதே சென்று தலைப்படுவேம்' என்று பொருளுரைப்பர் நச்சினார்க்கினியர் அது வருங்கூற்றாய் முடிதல் காண்க. அற்றேல், 'கண்டதுண்டேல்' எனவும், 'அறியின்' எனவும் இருமுறை ஒரு பொருளையே தருஞ் சொற்கள் வந்தனவால் எனின், கண்டிருந்தால் அவ்விடஞ் சென்று தலைப்படுகிறோம்; ஆகவே, அறியின் உரைத்திடுக' என்றூராதலின் பயன் கருதியே இருமுறை வந்தன என்க.

இளமையும் இஃதே வடிவும் இஃதே எனச் சுட்டுச்சொல்லை ஈரிடத்தும் ஒட்டுக. (உ௭௫)

௧௪௧௧. நெய்கனிந் திருண்ட வைம்பா
னெடுங்கணாள் காத லானை
யையிரு திங்க ளெல்லை
யகப்படக் காண்பி ரிப்பாற்
பொய்யுரை யன்று காணீர்
போமினம் போகி நுங்கண்
மையலங் களிற்று வேந்தன்
மைந்தனுக் குரைமி னென்றான்.

(இ - ள்.) நெய்கனிந்து இருண்ட ஐம்பால் நெடுங்கணாள் காதலானை - நெய் நிறைந்து கறுத்த ஐம்பாலையும் நெடுங்கண்களையும் உடையவளின் கணவனை; ஐயிரு திங்கள் எல்லை அகப்படக் காண்பிர் - பத்துத் திங்களின் அளவிலே அகப்படக் காண்பீர்; இப்பால் காணீர் - இவ் வெல்லைக்குள்ளே காணீர்; பொய் உரை அன்று - யான் கூறுவது பொய்ம்மொழி யன்று; போமின் - ஆகவே, இனித் திரும்பிச் செல்லுமின்; போகி நுங்கள் மையல்அம் களிற்று வேந்தன் மைந்தனுக்கு உரைமின் என்றான் - சென்று நுங்கள், மயக்கமுற்ற களிற்றையுடைய வேந்தனுக்கும் அவன் மைந்தனுக்கும் உரைப்பீராக என்றான்.

(வி - ம்.) ஏவலாளர், 'நும்போன்ற ஒருவன்' என்றே கூறினாராக, இவன், 'நெடுங்கணாள் காதலானை' எனவும், 'வேந்தனுக்கும் மைந்தனுக்கும்' எனவும் கணியொருவன் கூறுவதுபோலக் கூறினான், தான்கூறும் மொழி உண்மையென அவர்களுணர்ந்துபோய்க் கூறுதற்கு. "ஐயிரு திங்கள் எல்லை அகப்பட' என்றது, பத்தாகிய எல்லைக்குள்ளே ஒரு திங்கள் குறைய என்றவாறு. எனவே, ஒன்பதாந் திங்களாயிற்று" என்பர் நச்சினார்க்கினியர். போமினம்: அம்: அசை. (உ௭௬)

## ௫. பதுமையார் இலம்பகம் முற்றிற்று.

ஆகக் கவி: ௧௪௧௧.

---

## ௬. கேமசரியார் இலம்பகம்

### (கதைச் சுருக்கம்)

சுதஞ்சணன் கூறிய நெறி பற்றிச்சென்ற சீவகன் சித்திர கூடம் என்னும் சிறந்ததொரு தவப்பள்ளியை எய்தினன். ஆண்டுள்ள தாபதர்களோடு அளவளாவி அவர்க்கு அறவுரை பல கூறித் திருத்தினன். அப்பள்ளியினின்றும் புறப்பட்டுத் தக்க நாட்டிற்புகுந்தனன். அந்நாட்டின் தலைநகராகிய கேமமாபுரத்தை எய்தினன்.

இனி அந்நகரத்தில் வாழும் சுபத்திரன் என்னும் வணிகனுக்குக் கேமசரி என்னும் ஓர் அழகிய மகளிருந்தனள். அம்மகள் பிறந்தபொழுது சுபத்திரன் கணிகளை அழைத்து "இவட்குக் கணவன் யாவன்?" என வினவினன். அக் கணிகள், "நின் மகள் எவனைக்கண்டு நாணுகின்றனளோ! அவ்வாடவனே இவட்குக் கணவன் ஆகுவன். இவட்குப் பிற ஆடவரைக் காணுங்கால் நாணந் தோன்றமாட்டாது," என உணர்த்தியிருந்தனர். இக் காரணத்தால் அவ்வணிகன் நாடோறுந் தன் கடைக்குவரும் அழகிய இளைஞரைத் தன்மனைக்கழைத்துச்சென்று விருந்தூட்டுவன்; அத்தகையோருள், ஒருவரையும் கேமசரி கண்டு நாணமுற்றிலள். மணப்பருவம் கழிந்து விடுமோ என்று சுபத்திரன் வருந்தியிருந்தான்.

சீவகன் ஊழ்வலியுண்மையால் சுபத்திரன் கடைக்குச் சென்றனன். இவனது எழிலும் இளமையும் கண்ட சுபத்திரன் வியப்புற்றனன். இவனையும் சுபத்திரன் தன்னில்லத்திற்கழைத்துச்சென்று விருந்தூட்டினன். சீவகனைக் கண்ட கேமசரி பெரிதும் நாணமுற்றனள். அவன்பாற் காதன்மிக்கு வருந்தாநின்றனள். அவ்வழி சுபத்திரன் சீவகனுக்குக் கேமசரியை மணம் செய்வித்தனன். அம்மங்கை நல்லாளுடன் சீவக நம்பி இரண்டு திங்கள் இன்புற்றிருந்தனன்.

பின்னர்க் கேமசரி யறியாதபடி, அவ்விடத்தினின்றும் புறப்பட்டுச் சென்றான். வழியில் ஒருவனுக்கு அறவுரை பகர்ந்து தன் அணிகலன்களை அவனுக்கு வழங்கினன். வழங்கி அவ்விடத்தினின்றும் புறப்பட்டுச் சென்றான். கேமசரி பிரிவாற்றாது பெரும் பேதுற்றனள். அவள் தாயாகிய நிப்புதி அவளை அரிதில் தேற்ற ஒருவாறு தேறியிருந்தனள்.

கசகஉ. வானின் வழங்கும் வண்கை மணிசெய் யார மார்பிற்
றேனும் வழங்கும் பைந்தார்விசையை சிறுவன்றேங்கோ
ணனம் வழங்குங் கோதை நைய வெய்ய வாய
கானம் வழங்கன் மேவிக் காலின் னேகி னனே.

(இ - ள்.) வானின் வழங்கும் வண்கை - முகிலெனக் கொடுக்கும் கொடைக்கையினையும்; மணிசெய் ஆரம் மார்பின் - முத்துக்களால் ஆகிய மாலையணிந்தமார் பினையும்; தேனும் வழங்கும் பைந்தார் - மணமேயன்றித்தேனையும் நல்கும் பசிய தாரினையும் உடைய; விசையை சிறுவன் - விசையையின் மகன்; தேம் கொள் நானம் வழங்கும் கோதை நைய - வண்டுகள் தங்கும் புழுகு கமழும்மாலையாள் பதுமை வருந்த; வெய்ய ஆய கானம் வழங்கல்மேவி - கொடியன ஆகிய காடுகளிலே செல்லுதலை மேற்கொண்டு; காலின் ஏகினன் - காலால் நடந்து சென்றான்.

(வி - ம்.) கை மார்பு தார் என்னும் மூன்றும் சிறுவனுக்கு அடைமொழிகள். கை முதலியவற்றையுடைய சிறுவன்; விசையை சிறுவன் எனத் தனித்தனி கூட்டுக. தேம் - தேன். காலின் ஏகினன் என்றது ஊர்திகளின்றி என்பதுபட நின்றது. நானம் - புழுகு. கோதை: ஆகு பெயர்; பதுமை.

'விசையை சிறுவன்', 'காலின் ஏகினன்' என்பன சீவகன் நிலைக்கு இரங்கிய நூலாசிரியரின் இரக்கமொழிகள். தேனும்: உம்: இசைநிறை. காலின் - காற்றைப்போல என்றலுமாம். (க)

கசகந. சிலைகோ ணணிற் றீராத் திருந்து கற்பி னவர்த
மிலைகோள் பூந்தா ருழுத வின்ப வருத்த நீங்க
முலைகோள் கண்கள் கண்ணி னெழுதி முள்த மொய்ம்பன்
மலைகோள் கானம் முன்னி மகிழ்வோ டேத கின்றன்.

(இ - ள்.) சிலைகொள் நாணின் தீராத் திருந்து கற்பினவர் தம் - வில் தன்பாற் கொண்டுள்ள நாண் தான் கெடுமளவும் முறுக்குடையாததைப்போல இறுமளவும் கெடாத திருந்திய கற்பினையுடைய மகளிர்பால்; இலைகொள் பூந்தார் உழுத - (தன் மார்பிலணிந்த) இலைமிடைந்த மலர்மாலை உழுததால் உண்டான; இன்ப வருத்தம் நீங்க - இன்பச் சோர்வு தவிர; முலைகொள் கண்கள் கண்ணின் எழுதி முள்கும் மொய்ம்பன் - அவர்களுடைய முலை தம்மிடத்தே கொண்டுள்ள கண்களைத் தன் கண்களால் எழுதி முயங்கும் தோள்களையுடையவன்; மலைகொள் கானம் முன்னி - மலைகளையுடைய காட்டைப் பொருந்தி; மகிழ்வோடு ஏகுகின்றான் - களிப்புடன் செல்கின்றான்.

(வி - ம்.) வில்நாண் பசையிட்டு முறுக்கப்படுதலால் தான் அழியுந் துணையும் முறுக்குடைதலின்று; அதுபோல அன்பாற் பிணைக்கப்படு

தலின் இருமளவும் பிறழ்தலில்லாக் கற்பினையுடையோர் என்பார் நாணிற் றீராக் கற்பின்னவர் என்றார். மூலைக் கண்களின் எழிலைக் கூர்ந்து நோக்கித் தன்னுள்ளக் கிழியின் எழுதிப் பின் முயங்குபவன் என்றவாறு. இதனால் காட்சியின்பமும் ஊற்றின்பமும் ஒருங்கே கூறப் பட்டன. முள்குதல் - முயங்குதல். மலையும் கானமு முதலியவற்றின் எழில்கண்டு மகிழ்வதென நோக்கம் என்று சீவகன் சுதஞ்சணனுக்குக் கூறியதற்கிணங்க (௧௧௭௫) ஈண்டு மகிழ்வோடேகுகின்றான் என்ற நயம் உணர்ந்து மகிழ்க.

இச் செய்யுளும் நூலாசிரியரின் இரக்கத்தைக் காட்டுகின்றது. (௨)

௧௪௧௪. கனிகோள் வாழைக் காட்டுட்
கருமை மெழுகி யவைபோன்
றினிய வல்லா முகத்த
முசுவுங் குரங்கு மிரியத்
துனிவு தீர நோக்கித்
தோன்றல் செல்லு முன்னாற்
பனிவெண் டிரைசூழ் கடல்போற்
பழுவந் தோன்றிற் றவணே.

(இ - ள்.) கனிகொள் வாழைக்காட்டுள் - பழமுடைய வாழைக்காட்டிலே; கருமை மெழுகியவைபோன்று இனிய அல்லா முகத்த - கரிய மையை மெழுகிவைத்தவை போலும் அழகில்லாத முகத்தையுடையனவாகிய; முசுவும் குரங்கும் இரியத் துணிவுதீர நோக்கி - முசுவும் குரங்கும் தன்னைக்கண்டு அஞ்சி ஓடுதலின், அவற்றின் அச்சம் நீங்குமாறு அருளுடன் நோக்கி; தோன்றல் செல்லும் முன்னால் - தலைவன் போகும் அவ்விடத்தின் முன்னே; பனி வெண் திரைசூழ் கடல்போல் - குளிர்ந்த வெள்ளிய அலைசூழ் கடல்போல; பழுவம் தோன்றிற்று - ஒரு காடு தோன்றியது; அவண் - அவ்விடத்தே.

(வி - ம்.) முசு - கருங்குரங்கு. இரிதல் - கெட்டோடுதல். துனிவு- துன்பம். நோக்கி என்றது அவற்றின் அச்சந்தீர்தற்குக் காரணமான அருட்பார்வையாலே நோக்கி என்பதுபட நின்றது. இதனால் சீவக நம்பியின் பேரருளுடைமை கூறப்பட்டது. "கடத்தற் கின்னாக் கல்லதர் அத்தம் இதுவே" என்றுணர்த்தற்குப் "பனி வெண்திரைசூழ் கடல் போற் பழுவம்" என்றார். பழுவம் - காடு. (௩)

௧௪௧௫. பருகு வாரிற் புல்லிப்
பயங்கண் மாறத் துறக்கு
முருகு விம்மு குழலார்
போல மொய்கோ டும்பி

யுருவப் பூங்கோம் பொசியப்
புல்லித் தீந்தேன் பருகி
யருகு வாய்விட் டார்ப்ப
வண்ணன் மெல்லச் சென்றான்.

(இ - ள்.) பருகுவாரின் புல்லி - நீரைப் பருகுவாரைப் போல ஆர்வமுறத் தழுவி; பயம் கண்மாறத் துறக்கும் - பொருள் மாறினவுடனே; தம்மை அடைந்த ஆடவரை விட்டுப் பிரிகின்ற முருகு விம்மு குழலார் போல - மணம் பொங்கும் கூந்தலையுடைய பரத்தையரைப்போல; மொய்கொள் தும்பி - செறிவுகொண்ட வண்டுகள்; உருவப் பூங்கொம்பு ஒசியப் புல்லித் தீம் தேன் பருகி - அழகிய மலர்க்கொடி சாயத் தழுவி இனிய தேனை நுகர்ந்து; வாய்விட்டு அருகு ஆர்ப்ப - தேன் வற்றிய வுடனே மலர்க்கொடியை விட்டு அருகிலேயே தூற்றுவனபோல ஆரவாரிப்ப; அண்ணல் மெல்லச் சென்றான் - சீவகன் அதனைக் கண்டு மெல்லச் சென்றான்.

(வி - ம்.) பருகுவார் என்னும் வினைக்குத் தகுதிபற்றி நீர் என்னும் செயப்படுபொருள் வருவித்துரைக்கப்பட்டது. பயம் - பொருள்; ஆகு பெயர். பயங்கண் மாறத் துறக்குங் குழலார் எனவே அவர் புல்லுவது பொருள் உளவாயபொழுதே என்பது பெறும். அகத்தே அன்பில்லார் என்பதுபட முருகுவிம்மு குழலார் என்றார். எனவே, பொருட் பெண்டிர் என்றாராயிற்று.

"பண்தேர் மொழியிற் பயன்பல வாங்கி வண்டிற் றுறக்குங் கொண்டி மகளிர்" என்றார் பிறரும் (மணி. கஅ. க0அ-கூ.) அப் பழுவத்துட் புகாமல் சித்திரகூட நோக்கிச் சென்றான் என்பது தோன்ற புக்கான் என்னாது சென்றான் என்றார் (ச)

கசகரு. செல்வர் மனத்தி னோங்கித் திருவின் மாந்தர் நெஞ்சி
னெல்லை யிருளிற் றாகிப் பூந்தா தினிதி னொழுகிக்
கோல்லும் மரவின் மயங்கிச் சிறியார் கோண்ட தொடர்பிற்
செல்லச் செல்ல வஃகு நெறிசேர் சிலம்பு சேர்ந்தான்.

(இ - ள்.) செல்வர் மனத்தின் ஓங்கி - திருவுடையார் உள்ளம்போல மேல்நோக்கி; திருஇல் மாந்தர் நெஞ்சின் எல்லை இருளிற்று ஆகி - செல்வம் இல்லாதார் நெஞ்சுபோலப் பகலினும் இருளையுடையதாய்; பூந்தாது இனிதின் ஒழுகி - மகரந்தம் இனியதுபோல ஒழுகி; கொல்லும் அரவின் மயங்கி - கொல்லும் பாம்புபோலத் தலைமறைந்து; சிறியார் கொண்ட தொடர்பின் - கீழ்மக்கள் கொண்ட நட்பைப்போல; செல்லச் செல்ல அஃகும் நெறிசேர் - செல்லச்செல்லக் குறையும் வழிபொருந்திய; சிலம்பு சேர்ந்தான் - மலையைச் சென்றடைந்தான்.

(வி - ம்.) செல்வர் மனத்தின் என்புழி ஆகூழால் திருவுடையராய கீழ்மக்களின் நெஞ்சம்போல என்று கொள்க. என்னை? "மேலலார் செல்வமேபோல் தலைநிறுவி" என இவரே முன்னருங் கூறுதல் காண்க. ஓங்குதல் மனதிற் செருக்குற்று நிமிர்தல். நெறிக்கு ஏறுதற்கரிய தாய்ச் செல்லச் செல்ல உயர்ந்துபோதல் எனக் கொள்க. இனிதின் என்புழி 'இன்' ஐந்தாவதன் உருபு; ஒப்புப் பொருளில் வந்தது. இனிது போல எனவே காட்சிமாத்திரையான் இனிதுபோலத் தோன்றிப் பின் துயர்தருவது என்பது பெற்றும். பூந்தாது துன்பந் தருவதாதலை: "மண்பக வீழ்ந்த கிழங்ககழ் குழியைச் - சண்பகம் நிறைத்த தாதுசேர் பொங்கர் - பொய்யறைப் படுத்துப் போற்று மாக்கட்குக்-கையறு துன்பங் காட்டினுங் காட்டும்" (சிலப். ௧0-௬௮-௭௧) என்றார் பிறரும். இனி, 'மாவின் மயக்கி' என்று பாடம் ஓதிப் 'புலி முதலியவற்றால் மயங்கி' யென்றும் உரைப்பர். (௫)

௧௪௧௭. சுனைகள் கண்க ளாகச் சூழ்ந்த குவளை விழியா
வினைய லாகா வுருவ நோக்கி மைந்தற் கிரங்கி
இனைவ போலும் வரையின் னருவி யினிதி னாடி
நனைகோள் போது வேய்ந்து நாதற் பாடு கின்றான்.

(இ - ள்.) வரை சூழ்ந்த சுனைகள் குவளை கண்களாக விழியா - மலைகள் தம்மிடத்திற் சூழ்ந்துள்ள சுனைகளில் உள்ள குவளை மலர்கள் கண்களாக விழித்துப் பார்த்து; மைந்தற்கு வினையல் ஆகா உருவம் நோக்கி இரங்கி - சீவகனுக்குரிய எழுத வியலாத உருவத்தைக் கண்டு வருந்தி; இனைவபோலும் அருவி - அழுவனபோலும் தோற்றமுள்ள அவ்வருவியிலே; இனிதின் ஆடி - மகிழ்வுடன் குளித்து; நனைகொள் போது வேய்ந்து - தேன் பொருந்திய சுனைமலராலே இறைவன் திருவடிகளை மறைத்து; நாதன் பாடுகின்றான் - இறைவனைப் பாடத்தொடங்கினான்.

(வி - ம்.) வரைகள் தம்மைச் சூழ்ந்த சுனைகள் கண்களாக அவற்றின் மலர்ந்த குவளை மலர்கள் கருவிழிகளாகக் கொண்டு நோக்கிக் கண்ணீர் வீழ்த்து அழுவன போலத் தோன்றுதற்குக் காரணமான இனிய அருவியின் ஆடி என்று இயைத்தல் வேண்டும் நச்சினார்க்கினியர் உரையில் தன்னைச் சூழ்ந்த என்றிருத்தல், தம்மைச் சூழ்ந்த என்றிருத்தல் வேண்டும் திருத்தாத வழி. ஒருமை பன்மைகள் எழுவாய் முதலியன தலைதடுமாறுதலுணர்க.

நாதன் - இறைவன். நச்சினார்க்கினியர் சுனைகளை எழுவாயாக்குதல் சிறப்பாகத் தோன்றவில்லை. (௬)

வேறு

௧௪௧௮. செய்தா னிருவினையின்
பயத்தைச்சேருஞ் சேன்றேன்றி
யெய்தா னதன்பயத்தைப்
பிறனேதுய்த்த லியல்பேன்றி

கோய்தாமந் தாழ்ந்தோசிந்த
குளிர்பூம்பிண்டிக் கோமானே
யிஃதேநின்சோ லியல்பென்று
லடியேனின்னைத் தோழுதேனே.

(இ - ள்.) செய்தான் இருவினையின் பயத்தைச் சென்று சேரும் என்றி - இருவினையையுஞ் செய்த ஒருவன் அவ் வினையின் பயனைச் சென்று நுகரும் என்று கூறுகின்றாய் (அவ்வாறு கூறிய நீயே); அதன் பயத்தை எய்தான் பிறனே துய்த்தல் இயல்பு என்றி - இருவினைப் பயனைச் செய்தவனே அடையான், மற்றவன் நுகர்தலே இயற்கை என்றாய்; கொய்தாமம் தாழ்ந்து ஒசிந்த குளிர்பூம்பிண்டிக் கோமானே - கொய்து தொடுத்த மாலை தங்கி நுடங்கும் தண்ணிய மலர்ப்பிண்டியின் நீழலில் எழுந்தருளிய இறைவனே !; இஃதே நின்சொல் இயல்பு என்றால் - இவ்வாறு இரண்டுபட்டிருக்கும் இதுவே நீ மொழியும் மொழிகளின் தன்மையென்றால்; அடியேன் நின்னைத் தொழுதேனே - அடியேன் அஞ்சி நின்னை வணங்குகின்றேன்.

(வி - ம்.) இருவினை - நல்வினையுந் தீவினையும். பயம்-பயன். அவை யாவன - இன்பமுந் துன்பமும்.

இஃதே என்னுஞ் சுட்டு இங்ஙனம் இரண்டுபட்டிருக்குமிதோ என்பதுபட நின்றது.

உயிர் ஒன்றாதலின் செய்தவனே வினைப்பயனைத் துய்த்தல் இயல்பு என்றும், உயிர் ஒன்றாயினும் பல பிறப்பு எடுத்துப் பல உடம்புகளினூம் அவ் வினைப்பயனைத் துய்த்தலின் பிறனே துய்த்தல் இயல்பு என்றும் கூறினர் என்க. என்றி: நிகழ்கால முன்னிலை ஒருமை முற்று. (எ)

கசகக. உண்டே தனதியல்பி
னுணருங்காலை யுயிரேன்றி
யுண்டாய வவ்வுயிரே
பிறிதி னில்லை யெனவுரைத்தி
வண்டார்த்து நாற்காதம்
வண்ணமாலை சுமந்தோசிந்து
கோண்டேந்து பூம்பிண்டிக்
கோமானின்னைத் தோழுதேனே.

(இ - ள்.) உயிர் தனது இயல்பின் உணருங்கால் உண்டே என்றி - உயிர் தனது இயல்பால் உணர்ந்தால் உண்டே என்று கூறுகின்றாய்; உண்டாய அவ்வுயிரே பிறிதின் இல்லைஎன உரைத்தி - இருக்கின்றதாக உணரப்பட்ட அவ்வுயிரே மற்றொன்

றின் இயல்பால் இல்லையென்று கூறுகின்றாய் ; வண்டு ஆர்த்து நாற்காதம் வண்ணமாலை சுமந்து ஒசிந்துகொண்டு ஏந்து பூம் பிண்டிக் கோமான்-வண்டுகள் முரன்று நாற்காதம் பரவி அழகிய மாலைகளைச் சுமந்து நுடங்கிக்கொண்டு ஏந்து மலர்ப் பிண்டிக் கோமானே !; நின்னைத் தொழுதேன் -(ஆதலால், ஒரு பொருளிலே உண்டும் இல்லையுங் கூறிய) நின்னை அஞ்சி வணங்கினேன்.

(வி-ம்.) உயிர் தனதியல்பின் உணர்தலாவது, மெய்ப்பொருளாந் தனது இயல்பில் வைத்து ஆராய்ந்துணர்தல்.

பிறிதின் இயல்பால் ஆராய்தலாவது, உடல் முதலிய பொய்ப் பொருளின்கண் வைத்து ஆராய்தல்.

இதனாற் கூறியது மெய்யுணர்வார்க்கு உயிர் உள்பொருள் ; அஃதுணரமாட்டார்க்கு அஃதில்பொருள் என்பதாம்.

பூம்பிண்டிக் கோமான் : விளி : அருகன்.

இனி ஆசிரியர் நச்சினார்க்கினியர் : "உயிர் ஒருவனிடத்துண்டு ; தூணில் இல்லை. ஆதலால், உயிர் தனக்கே உண்டும் இல்லையும் தங்கின. இத் தன்மை வேறுபாட்டால் அங்கில்லை" என்பர். (அ)

கசஉ௦. காதலா லெண்வினையுங்
கழிபவென்றி யக்காத
லாதலா லெண்வினையுங்
கழியாவென்று மறைதியாற்
போதுலாய்த் தேன்றுளித்துப்
பொழிந்துவண்டு திவண்டுலாங்
கோதைதாழ் பூம்பிண்டிக்
கோமானின்னைத் தொழுதேனே.

(இ-ள்.) காதலால் எண் வினையும் கழிப என்றி - காதலினால் எண்வகை வினையும் கழிகின்றன என்கிறாய் ; அக் காதல் ஆதலால் எண்வினையும் கழியா என்றும் அறைதி - அக் காதலே மற்றொன்றின் ஆகும்போது எண்வினையும் கழியா என்றும் அறைகின்றாய் ; போது உலாய்த் தேன் துளித்துப் பொழிந்து வண்டு திவண்டு உலாம் கோதை தாழ் பூம்பிண்டிக் கோமான் - மலர்கள் சூழ்ந்து தேன்துளிகொண்டு பெய்து வண்டுகள் அசைந்து உலவும் மாலை தங்கிய மலர்ப்பிண்டிக் கோமானே !; நின்னைத் தொழுதேன் - இவ் வேறுபட்ட மொழியால் அஞ்சி நின்னை வணங்கினேன்.

(வி-ம்.) எண்வினையாவன: அப்பிரத்தியாக்கியானக் குரோதம், அப்பிரத்தியாக்கியான மானம், அப்பிரத்தியாக்கியான மாயை, அப்பிரத்தியாக்கியானலோபம், பிரத்தியாக்கியானக் குரோதம், பிரத்தியாக்கியான

மானம், பிரத்தியாக்கியான மாயை, பிரத்தியாக்கியான லோபம் என்னு மிவ் வெட்டுமாம். இவற்றின் விளக்கம் முத்தியிலம்பகத்தில் (ங0எசு) கூறப்படும், ஆண்டுக் காண்க. இச் செய்யுள்,

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு." (குறள். ங௫0)

என்றும்,

"பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு." (குறள். ஙசஎ)

என்றும் வரும் இரண்டு திருக்குறட் கருத்தினையுந் தன்பாற் கொண்டுளது.

கழிப : பலவறிசொல்.

இவை இருபுறவாழ்த்து; தேவபாணித் தாழிசைக்கொச்சக ஒருபோகு. இவற்றின் இடையிடையே நாலசைச்சீர்களும் வந்துள்ளன.

வேறு

கசஉக. இனிதி னிங்ஙன மேத்தி வலங்கொண்டு
முனிவர் சித்திர கூடமு ளுதெனத்
தனிதி னேகுபு தாபதர் வாழ்வதோர்
பனிகோள் பூம்பொழிற் பள்ளிகண் டானரோ.

(இ - ள்.) இங்ஙனம் இனிதின் ஏத்தி வலம்கொண்டு - இவ்வாறு குரலின் இனிமையோடு வாழ்த்தி வலம்புரிந்துவிட்டு; முனிவர் சித்திரகூடம் முளது என - முனிவருடைய சித்திரகூடம் முன்னுள்ளதென்று சுதஞ்சணன் கூறியதால்; தனிதின் ஏகுபு - (அதனைக் காண எண்ணித்) தனியே சென்று; தாபதர் வாழ்வது ஓர் பனிகொள் பூம்பொழில் பள்ளிகண்டான் - தாபதர்கள் வாழ்வதாகிய ஒரு குளிர்ச்சி தங்கிய மலர்ப்பொழிலில் உள்ள பள்ளியைக் கண்டான்.

(வி - ம்.) சித்திரகூடம், பள்ளியின் பெயர். 'தனித்து' என்பது 'தனிது' என விகாரப்பட்டது. தனிதின்: இன்: அசை. அரோ: அசை. இனிதின் என்புழி இன் அசைச்சொல். என - என்று சுதஞ்சணன் முற்கூறியிருந்தமையால் (கககூ0). (க0)

கசஉஉ. புல்லு மல்லியும் போகுயர் நீள்கழை
நெல்லு நீர்விளை கேழலுந் தோரையு
மல்ல தீம்பழங் காய்கிழங் காதியா
நல்ல வேங்கர் வார்பள்ளி நண்ணினான்.

(இ - ள்.) புல்லும் அல்லியும் போகுஉயர் நீள்கழை நெல்லும் நீர்விளை கேழலும் தோரையும் - (ஊனை நுகராமல்) புல்லும்

அல்லியும் மிக உயர்ந்த மூங்கிலரிசியும் நீரில்விளை குளநெல்லும் தோரை என்னும் நெல்லும்; அல்ல தீம் பழம் காய்கிழங்கு ஆதி ஆ- ஆகிய இவையல்லாமலும் இனிய பழமும் காயும் கிழங்கும் முதலாக; நல்லவே நுகர்வார் பள்ளி நண்ணினன்-நல்லவற்றையே நுகர்வாராகிய தாபதர் வாழும் பள்ளியைச் சேர்ந்தான்.

(வி - ம்.) புல், அல்லி, நெல், கேழல், தோரை என்பன இவற்றின் அரிசிகட்கு ஆகுபெயர். போகுயர்: ஒருபொருட் பன்மொழி; மிக வளர்ந்த என்க. கேழல் - குளநெல். தோரை - மூங்கிலரிசி. அல்ல என்றது இவையல்லாதவிடத்து என்றவாறு.

நல்லவே என்புழி ஏகாரம் - பிரிநிலை; என்னை? தீயவாகிய ஊன் உணவைப் பிரித்து நிற்றலின் என்க. (கக)

கசஉ௩. அரிய கொள்கைய ராரழ லைந்தினுண்
மருவி வீடு வளைக்குறு மாட்சியர்
விரிய வேதம் விளம்பிய நாவினர்
தெரிவி றீத்தொழிற் சிந்தையின் மேயினார்.

(இ - ள்.) அரிய கொள்கையர் - அரியவான கோட்பாடுகளையுடையவர்; ஆர் அழல் ஐந்தினுள் மருவி வீடு வளைக்குறும் மாட்சியர் - நிறைந்த ஐந்தழலின் நடுவே பொருந்தி வீட்டுலகை வளைத்திடும் பெருமையினர்; விரிய வேதம் விளம்பிய நாவினர் - விளக்கமாக நான்மறை பயின்ற நாவினர்; தெரிவு இல் தீத் தொழில் சிந்தையின் மேயினார் - விளக்கமற்ற தீய தொழிலான காமத்தொழிலைச் சிந்தையிற் கொண்டவர்.

(வி - ம்.) ஆர் அழல் ஐந்திடை மருவி என்றது, நான்கு திசைகளினும் வளர்க்கப்பட்ட ஓமகுண்டத் தீயும் உச்சியிற் கதிரவனுமாகிய ஐந்து தீயின் நடுவண் நின்று என்றவாறு.

தெரிவுஇல் தீத்தொழில் என்றது, காம வேட்கையாலியற்றும் தீவினைகளை.

அரிய கொள்கையாவன: நாலிரு வழக்கில் தாபதப் பக்கம்; 'நீர்பலகால் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச் - சோர்சடை தாழச் சுடரோம்பி - ஊரடையார் - கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல் - வானகத் துய்க்கும் வழி.' (பு. வெ. கசுஅ) என்பனவும் பிறவுமாம். (கஉ)

கசஉச. வள்ளி யின்னமு தும்வரை வாழையின்
றெள்ளு தீங்கனி யுஞ்சில தந்தபின்
வெள்ள மாரிய ளுய்விருந் தார்கென
வுள்ள மாட்சியி னுருவந் தோம்பினார்.

(இ - ள்.) வள்ளி இன் அமுதும்-வள்ளிக்கிழங்காகிய சுவையுடைய உணவும், வரை வாழையின் - மலையிலுண்டாம் வாழையி

னது; தெள்ளு தீ கனியும் - ஆராய்ந்தெடுத்த இனிய பழமும் ஆகிய; சில தந்தபின் - இவற்றுள் சிலவற்றைக் கொடுத்த பின்னர்; வெள்ள மாரி அனை - நீர் பொழிகின்ற மேகத்தை யொத்தவனே; விருந்து ஆர்க என - விருந்துண்பாயாகவென்று கூறி; உள்ளமாட்சியினர்-மனமாண்புடைய முனிவர்கள்; உவந்து ஓம்பினர் - மகிழ்ந்து பேணினர்.

(வி - ம்.) அமுது: ஆகுபெயர். வெள்ளமாரியனை் என்றது பலர்க்கும் பயன்படுபவனே என்றவாறு. (கநு)

கசஉரு. பாங்கின் மாதவர் பான்மதி போன்றிவன்
வீங்கு கல்வியன் மெய்ப்பொருட் கேள்விய
ளுங்கு நாமு மளக்குவ மென்றுதம்
மோங்கு கட்டுரை யொன்றிரண் டோதினர்.

(இ - ள்.) பாங்கின் மாதவர் - நல்ல இடத்தில் உள்ள முனிவர்; இவன் பால்மதி போன்று வீங்கு கல்வியன் - இவன் முழுத் திங்கள் போலே எல்லாக் கலைகளும் நிறைந்த கல்வியன்; மெய்ப்பொருள் கேள்வியன் - உண்மைப் பொருளைக் கேட்டறிந் தவன்; ஆங்கு நாமும் அளக்குவம் என்று - இவனிடத்துள்ள அக் கல்வி கேள்விகளை நாமும் அளந்தறிவேம் என்று எண்ணி; தம் ஓங்கு கட்டுரை ஒன்று இரண்டு ஓதினர் - தம் உயர்ந்த கட்டுரைகளில் ஒன்றிரண்டுரைத்தனர்.

(வி - ம்.) பால்மதி-பால் போன்ற ஒளியையுடைய முழுத்திங்கள். ஒவ்வொரு கலையாக நாடோறும் வளர்ந்து நிரம்பிய திங்கள் ஒவ்வொரு கலையாகப் பயின்று நிரம்பிய சீவகனுக்கு உவமை. மெய்ப்பொருள் - காரண காரியங்களிரண்டுமின்றி முடிவாய் நிற்கும் பொருள். அளக்குவம்: தன்மைப் பன்மை. கட்டுரை - பொருள் பொதிந்த மொழி.

ஒன்றிரண் டென்பதோர் வழக்கு; ஒருசில என்பது கருத்து.

பாங்கு - நல்லிடம்; 'பாங்கர்ப் பல்லி' (அகம்: கூ) என்ப. (கச)

கசஉசு. ஐயர் கூறலு மண்ணலுங் கூறுவான்
சையம் பூண்டு சமுத்திர நீந்துவா
னுய்யு மேற்றொடர்ப் பாட்டினிங் கியாவையு
மெய்தி னார்களு முய்பவென் றோதினான்.

(இ - ள்.) ஐயர் கூறலும் அண்ணலும் கூறுவான் - அவர்கள் கூறுகின்ற அளவிலே சீவகனும் கூறுகின்றான்; சையம் பூண்டு சமுத்திரம் நீந்துவான் உய்யுமேல் - கல்லைக் கழுத்திலே கட்டிக் கொண்டு கடலிடை நீந்துவோன் பிழைப்பான் என்றால்; இங்குத் தொடர்ப்பாட்டின் யாவையும் எய்தினார்களும் - இவ்வுலகிற் காம

நுகர்ச்சியோடே விரதங்களைக் கொண்டவர்களும்; உய்ப என்று ஓதினான் - பிழைப்பரென்று நூல்களை எடுத்துக் காட்டி விளக்கினான்.

(வி - ம்.) ஐயர் - தலைவர்; என்றது அம் முனிவரை. சையம் - கல். இச் செய்யுளோடு,

" இயல்பாகும் நோன்பிற்கொன் றின்மை உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து." (குறள். கூசச)

என்னுந் திருக்குறளை நினைக. "எல்லாப் பொருள்களையும் விட்டு ஒரு பொருளை விடாத வழியும், அது சார்பாக விட்டனவெல்லாம் மீண்டு வந்து தவத்திற்கு இடையூறாய் வந்து மனக்கலக்கம் செய்யும் என்பான், தொடர்ப்பாட்டின் இங்கு யாவையும் உய்ப என்றோதினான் என்க. இச் செய்யுள் மனைவிமக்களோடிருந்தும் வீடெய்துதல் கூடும் என்னும் ஏனைச் சமயிகளைப் பழித்தபடியாம்.

அவர்கள் மனைவியருடன் இருத்தலின் தொடர்ப்பாடு என்றான். ()

கசஉஎ. வீடு வேண்டி விழுச்சடை நீட்டன்மெய்ம்
மூடு கூறையின் மூடுதல் வெண்டலை
யோடுகோட லுடுத்தலென் றின்னவை
பீடி லாப்பிற விக்குவித் தேன்பவே.

(இ - ள்.) வீடு வேண்டி விழுச்சடை நீட்டல் - வீடு பெற விரும்பிச் சிறப்புறச் சடையை நீட்டுதல்; மெய் மூடு கூறையின் மூடுதல் - உடம்பை மறைக்கும் துவர் ஊட்டின ஆடையினாலே போர்த்துக் கொள்ளுதல்; வெண்டலை ஓடு கோடல் - மண்டையோடு கைக்கொள்ளுதல்; உடுத்தல் - தனியே இருத்தல்; என்று இன்னவை - என்று கூறப்படும் இத்தன்மையவை; பீடு இலாப் பிறவிக்கு வித்து என்ப - சிறப்பிலாத பிறப்புக்கு வித்து என்று உண்மையுணர்ந்தோர் கூறுவர்.

(வி - ம்.) இச் செய்யுள்,

" மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின்"

என்னுந் திருக்குறளின் விளக்கமாக அமைந்துள்ளமை உணர்க. துன்பமல்லது தொழுதகவு இல்லாப் பிறப்பென்பான், பீடிலாப் பிறவி என்றான். (கரு)

கசஉஅ. ஏம நன்னெறி யெந்நெறி யந்நெறி
தூய்மையின் னெறியா மூந்துணி துவங்
காமன் றுறைதை நெறியின்கட் காளைநீ
தீமை யுண்டெனிற் செப்பெனச் செப்பினான்.

(இ - ள்.) எம் நெறி ஏமம் நல்நெறி - யாங்கள் நிற்கின்ற வழி நல்வழி ; அல்நெறி தூய்மை இல்நெறி - இஃது ஒழிந்தன நீ கூறியவாறே தூய்மை இல்லாத வழி ; யாமும் துணிகுவம் - அதனை நாங்களும் தெரிந்திருப்போம் ; காமன் தாதை நெறியின் கண் - திருமால் கூறிய இவ்வழியிடத்தில்; தீமை உண்டு எனில்- தீங்கு உண்டாயின் ; காளை நீ செப்பு எனச் செப்பினன் - காளையே ! நீ கூறுக என்று அவர்கள் வினவ, அவனும் சொன்னான்.

(வி - ம்.) ஏமம் - இன்பம். காளைபோல்வானைக் காளையென்றது ஆகுபெயர். அல்நெறி - இந் நெறியல்லாத பிற நெறிகள். காமன்தாதை- திருமால். காளை : விளி. (கஎ)

வேறு

கசஉகூ. தூங்குறிக் கிடந்து காயும்
பழங்களுந் துய்ப்ப நில்லா
பாங்கலா வினைக ளென்றார்
பகவன ரெங்கட் கென்னி
னோங்குநீண் மரத்திற் றூங்கு
மோண்சிறை யோடுங்கல் வாவல்
பாங்கரிற் பழங்க டுய்ப்பப்
பழவினை பரியு மன்றே.

(இ - ள்.) பகவனார் எங்கட்கு-திருமால் எங்களுக்கு; தூங்கு உறிக்கிடந்து காயும் பழங்களும் துய்ப்ப - தூக்கப்பட்ட உறி களிலே இருந்து காயும் கனிகளும் உண்பதனால் ; பாங்கு அலா வினைகள் நில்லா என்றார் என்னின்-நல்லவை அல்லாத வினைகள் நில்லா என்றுரைத்தார் என்றால்; ஓங்கும் நீள் மரத்தில் தூங்கும் ஒண் சிறை ஒடுங்கல் வாவல் - உயர்ந்து நீண்ட மரங்களிலே தொங்குகின்ற சிறந்த சிறகுகளையுடைய, ஒடுங்குமியல்புள்ள வௌவால்கள் ; பாங்கரில் பழங்கள் துய்ப்பப் பழவினை பரியும் அன்றே - அருகில் உள்ள பழங்களைத் துய்ப்பதனால் அவற்றின் பழவினைகள் நீங்கும் அல்லவா ?

(வி - ம்.) சமயங்கள் கூறிய புற ஒழுக்கமாத்திரையானே பழ வினைகள் கழியா என்பது இச் செய்யுளின் கருத்து.

பழங்களையே உண்டு மரத்திலே தலைகீழாய்த் தொங்குதலானே வௌவால்களின் பழவினை தீர்தல் இல்லையானாற் போன்று இவ் வொழுக்கமாத்திரையாற் பிறப்பறுது என்றபடியாம். இது மாறுபட வந்த உவமத்தோற்றம். (கஅ)

கசாகூ0. அல்லியும் புல்லு முண்டாங்
காரழ லைந்து ணின்று
சொல்லிய வகையி னோற்பத்
துணியும்வெவ் வினைக ளென்னிற்
கல்லுண்டு கடிய வெம்புங்
கானுறை புறவ மெல்லாம்
புல்லிய வினையை வென்று
புறக்கோடை காணு மன்றே.

(இ - ள்.) *அல்லியும் புல்லும் உண்டு - அல்லிக் காயில் உள்ள அரிசியையும் புல்லரிசியையும் சாப்பிட்டு; ஆங்கு ஆர் அழல் ஐந்துள் நின்று - அங்கே நிறைந்த ஐந்தழலின் நடுவே நின்று; சொல்லிய வகையின் நோற்ப - பகவனார் கூறிய நெறியிலே நோற்பதனால்; வெவ்வினைகள் துணியும் என்னின் - தீவினைகள் அறும் என்றால்; கடிய வெம்பும் கான் கல் உண்டு உறையும் புறவம் எல்லாம் - கொடிய வெப்பமுடைய கானிலே கற்களை உண்டு வாழும் புறாக்கள் யாவும்; புல்லிய வினையை வென்று புறக்கொடை காணும் அன்றே - தம்மைத் தொடர்ந்த இருவினையையும் வென்று புறங்காணும் அல்லவா?*

(வி - ம்.) *வெப்பமிக்க பாலையின்கண் கல் முதலியவற்றை உண்டு வாழும் புறாவின் பிறப்பறுமைபோல நல்லனவே உண்டு அழல் நடுவில் நின்று தவமியற்றன் மாத்திரையானே பிறப்பொழியா தென்பது கருத்து.*

*இதுவும் மாறுபடவந்த உவமத் தோற்றமே.* (கக)

கசாகூக. நீட்டிய சடைய மாகி
நீர்மூழ்கி நிலத்திற் சேர்ந்து
வாட்டிய வுடம்பின் யாங்கள்
வரகதி விளைத்து மென்னிற்
காட்டிடைக் கரடி போகிக்
கயமூழ்கிக் காட்டி னின்று
வீட்டினை விளைக்க வேண்டும்
வெளிற்றுரை விடுமி னென்றான்.

(இ - ள்.) *நீட்டிய சடையம் ஆகி - நீண்ட சடையினேம் ஆகி; நீர் மூழ்கி - நீரிலே குளித்து; நிலத்திற் சேர்ந்து - தரையிலே தங்கி; வாட்டிய உடம்பின் யாங்கள் வரகதி விளைத்தும் என்னின் - வாட்டிய உடம்பினாலே நாங்கள் மேலான வீட்டை அடைவோம் என்றால்; காட்டிடைக் கரடி போகிக் கயம் மூழ்கி-*

காட்டில் உறையும் கரடி சென்று குளத்திலே குளித்து; காட்டில் நின்று வீட்டினை விளைக்கவேண்டும் - (அதனால்) காட்டிலிருந்து வீட்டை அடையவேண்டும்; வெளிற்றுரை விடுமின் என்றான் - பொருளற்ற மொழியை விடுங்கோள் என்றான்.

(வி - ம்.) சடையுடைமை கருதிக் கரடியை உவமை கூறினன். சடை வளர்த்தலும் காட்டிடை வாழ்தலும் கயமூழ்கலும் உடைமையாற் கரடி பிறப்பொழியாமை போல இவ்வொழுக்கமாத்திரையானும் பிறப் பறாது என்பது கருத்து. இதுவும் அவ்வுவமமே. (உo)

கசஙஉ. கலைவளர் கிளவி யார்தங் காமர்மென் சேக்கை நீங்கி
யிலைவளர் குரம்பை யங்க ணிருநிலஞ் சேக்கை யாக
முலைவள ராகந் தோய முழுவினை முரியு மாயின்
மலைவளர் குறவர்க் கம்மா வினைகளு மாயு மன்றே.

(இ - ள்.) கலைவளர் கிளவியார் தம் காமர் மென் சேக்கை நீங்கி - கலை வளர்தற்குரிய மொழியாரான மகளிருடன் துயிலும் அழகிய மெல்லிய அணையை விட்டு; இலைவளர் குரம்பை அங்கண் - இலைகளால் மூடிய குடிசையிலே; இருநிலம் சேக்கை ஆக முலைவளர் ஆகம் தோய - பெருநிலமே அணையாக அக் கிளவி யாரின் முலைவளர் மார்பைத் தழுவ; முழுவினை முரியும் ஆயின் - வினைகள் யாவும் கெடுமென்றால்; மலைவளர் குறவர்க்கு அம் மா வினைகளும் மாயும் அன்றே - மலைவாழ்வினையுடைய குறவர் கட்கு அக் கொடிய வினைகளெல்லாம் கெடும் அல்லவா?

(வி - ம்.) இஃது வானப்பிரத்த நிலையினைப் பழித்தபடியாம். அந் நிலையின்கண் உளதாம் பேதைமையை விளக்குவான், காமர் மென் சேக்கையை நீங்கி இருநிலஞ் சேக்கையாக என்று விதந்தோதினன்.

இயல்பாகவே குறவர்களுக்கு இவ்வானப்பிரத்த நிலை எய்தியதாக வும் அவர் பிறப்பறாமைபோல இதனாற் பிறப்பறாது என்பது கருத்து.

கலை - ஈண்டு இசைக்கலை. காமர் மென்சேக்கை என்றதனால், கற்கள் உறுத்தும் புன்னிலச் சேக்கை எனவும், இலைவளர் குரம்பை என்றதனால் மணிமாடத்து நிலாமுற்றத்திலமைந்த காமர்மென்சேக்கை எனவும் விரித்தோதுக. (உக)

கசஙங. வெண்ணிறத் துகிலி னாங்கண் வீழ்ந்துமா சாகிநின்ற
வொண்ணிற வுதிரந் தன்னை யுதிரத்தா லொழிக்க லாமே
பண்ணிறக் கிளவி யார்தம் பசையினாற் பிறந்த பாவங்
கண்ணிற முலையி னார்தங் கலவியாற் கழிக்க லாமே.

(இ - ள்.) வெள் நிறத் துகிலின் ஆங்கண் வீழ்ந்து மாசு ஆகி நின்ற - வெண்ணிற ஆடையிலே வீழ்ந்து கறையாகி நின்ற; ஒள் நிற உதிரந்தன்னை உதிரத்தால் ஒழிக்கலாமே - ஒளிரும் நிறமுடைய குருதியைக் குருதியாலே போக்க முடியுமோ?

முடியாதன்றே (அதுபோல); பண் நிறக் கிளவியார் தம் பசையி ஞல் பிறந்த பாவம் - பண்ணின் இயல்புற்ற மொழியாராகிய மகளிரின் ஆசையினுல் உண்டான பாவத்தை; கண் நிற முலை யினுர் தம் கலவியால் கழிக்கலாமே-கண்களையுடைய ஒளிபொருந் திய முலையார்களின் சேர்க்கையினுலே போக்க முடியுமோ? (முடியாது.)

(வி - ம்.) துகிலின் கட்பட்ட குருதிக்கறையைக் குருதியாலே மாற்றல் கூடாமைபோலப் பிறவிக்குக் காரணமாகிய பற்றுலேயே பிற வியை அறுக்க இயலாது என்பதாம். பிறப்பறுக்கலுற்ருர் முலையினுர் கலவியைத் தவிர்தல் வேண்டும் என்பது கருத்து. (உஉ).

கசாநூச. நுண்டுகில் வேத லஞ்சி
நெருப்பகம் பொதிந்து நோக்கிக்
கொண்டுபோய் மறைய வைத்தாற்
கொந்தழல் சுடாது மாமே
கண்டத்தி ஞவி யார்தங்
கடிமனை துறந்து காட்டுட்
பண்டைச்செய் தொழிலிற் பாவம்
பறைக்குற்ருற் பறைக்க லாமே.

(இ - ள்.) நுண் துகில் வேதல் அஞ்சி - நுண்ணிய ஆடை வேதற்கு அஞ்சி; நெருப்பு அகம் நோக்கிப் பொதிந்து-நெருப்பை ஆடையினுள்ளே பார்த்துவைத்து மூடி; கொண்டுபோய் மறைய வைத்தால்-கொண்டு சென்று மறைவான இடத்திலே வைத்தால்; கொந்து அழல் சுடாதும் ஆமே - அப் பொங்கும் நெருப்புச் சுடாதும் விடுமோ?; கண்டத்தின் நாவியார் தம் கடிமனை துறந்து - கழுத்திலே புழுகை அணிந்த மகளிரின் காவலுறும் மனையை விட்டு நீங்கி; காட்டுள் பண்டைச் செய் தொழிலின் - காட்டிலே சென்று முன் செய்த கலவித்தொழிலையே கொண்டு; பாவம் பறைக்குற்ருல் பறைக்கலாமே - பாவத்தைப் போக்க நினைத்தாற் போக்கமுடியுமோ?

(வி - ம்.) தொன்று தொட்டுப் பிறப்புக்கடோறுந் தொடர்ந்து வரும் செயல் என்பான், "பண்டைச் செய்தொழில்" என்ருன்.

பறைக்கல் - தேய்த்தல். பறைதல் - தேய்தல். "பார்வையாத்த பறைதாள் விளவின்" என்னும் பெரும்பாணுற்றுப்படையினும் (கூடு) அஃதப்பொருட்டாதல் காண்க. சுடாதும் என்புழி, உம்மை, இசை நிறை.

மகளிரின் மனையைத் துறந்தகல (அவரை நெஞ்சாலே நோக்கிக்) காட்டிலே கொண்டுபோய் வைத்து, முன்பு செய்த தொழிலிற் பிறந்த பாவத்தைப் போக்கலுற்ருற், 'போக்க ஒண்ணுது' என்பர் நச்சினுர்க் கினியர். (உங)

௧௪௩௫. நோய்முதிர் குரங்கு போல
நுகர்ச்சிநீர் நோக்கல் வேண்டா
காய்முதிர் கனியி னூழ்த்து
வீழுமிவ் வியாக்கை யின்னே
வேய்முதிர் வனத்தின் வென்ற
னுருவோடு விளங்க நோற்றுப்
போய்முதிர் துறக்கத் தின்பம்
பருகுவ புரிமி னென்றான்.

(இ - ள்.) நோய்முதிர் குரங்குபோல நுகர்ச்சி நீர் நோக்கல் வேண்டா - காமநோயினால் முதிர்ந்த குரங்கைப்போல நீவிர் காம நுகர்ச்சியை நோக்குதல் வேண்டா; காய் முதிர் கனியின் ஊழ்த்து இவ் யாக்கை வீழும் - காய் முற்றிப் பழமாகி விழுவதைப் போல, முதிர்ச்சி அடைந்து இவ்வுடம்பு விழுந்து விடும்; வேய் முதிர் வனத்தின்-மூங்கில் முற்றிய காட்டிலே; வென்றான் உருவொடு விளங்க இன்னே நோற்றுப்போய் - காமனை வென்ற அருகப்பெருமான் உருவத்துடன் நின்று விளக்கமுற இப் பொழுதே நோற்றுச் சென்று; முதிர் துறக்கத்து இன்பம் பருகுதலைப் புரிமின் என்றான் - முற்றிய துறக்க வின்பத்தை நுகர்தலை விரும்புமின் என்று சீவகன் செப்பினான்.

(வி - ம்.) கொண்டது விடாமையானும் குரங்கு உவமையாயிற்று. 'வேண்டின் உண்டாகத் துறக்க' என்பான் இன்னே என்றான். இன்னே என்பதனை நோற்றுப்போய் என்பதனோடு கூட்டுக. வென்றான் : பெயர். (௨௪)

௧௪௩௬. மெய்வகை தெரிதன் ஞானம்
விளங்கிய பொருள்க டம்மைப்
போய்வகை யின்றித் தேறல்
காட்சியைம் பொறியும் வாட்டி
யுய்வகை யுயிரைத் தேயா
தொழுகுத லொழுக்க மூன்று
மிவ்வகை நிறைந்த போழ்தே
யிருவினை கழியு மென்றான்.

(இ - ள்.) ஞானம் மெய்வகை தெரிதல் - ஞானமாவது உண்மை அறிதல்; காட்சி விளங்கிய பொருள்கள் தம்மைப் பொய்வகை இன்றித் தேறல் - காட்சியாவது அவ்வாறு அறிந்த பொருள்களைப் பொய்யின்றாகத் தெளிதல்; ஒழுக்கம் ஐம்பொறியும் வாட்டி உய்வகை உயிரைத் தேயாது ஒழுகுதல் - ஒழுக்கமாவது ஐம்பொறிகளையும் ஐம்புலன்களிற் செல்லாமற் கெடுத்து

உயிரைக் கெடாமல் அவ்வுயிர் உய்யும் வகையிலே நடத்தல்; மூன்றும் இவ்வகை நிறைந்த போழ்தே இருவினை கழியும் என்றான் - இம் மூன்றொழுக்கமும் இப்படி நிறைந்த பொழுதே இருவினையும் கெடும் என்றான்.

(வி - ம்.) இச் செய்யுளில் நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம் என்னும் மூன்றன் இயல்பும் கூறுகின்றார். இவற்றை, இரத்தினத்திரயம் என்றும் பரத்திரயம் என்றும் வழங்குப.

இவற்றுள் நன்ஞானம்-" எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப் பொருள் மெய்ப்பொருள் காண்ப "தாகிய அறிவு, நற்காட்சி, ஐயமின்மை அவாவின்மை, உவர்ப்பின்மை, மயக்கமின்மை, அறப்பழி நீக்கல், அழிந்தாரைத் தாங்கல், அறத்துக்கு அளவளவு, அறத்தை விளக்கல் என்னும் எண்வகை உறுப்பிற்று. நல்லொழுக்கம் அணுவிரதம் மாவிரதம் என இருவகைப்படும். (உ௫)

கசஙஎ. குன்றனு னுரைப்பக் கேட்டே
பாகத்தார் குடும்ப நீக்கி
யின்றுகண் விடுக்கப் பட்டேம்
யாமேன வெழுந்து போகி
வென்றவன் பாதஞ் சேர்ந்து
வீட்டுநன் னெறியைப் பெற்றார்
சென்றது பருதி வட்டஞ்
செம்மலு மசைவு தீர்ந்தான்.

(இ - ள்.) குன்று அனன் உரைப்பக் கேட்டு - சலிப்பற்ற சீவகன் இவ்வாறு கூறக்கேட்டு; பாகத்தார் குடும்பம் நீங்கி - நல்வினை வந்தடையும் நிலையுடையார் மனைவியரைத் துறந்து; யாம் இன்று கண் விடுக்கப் பட்டேம் என எழுந்து போகி - யாங்கள் இன்று நின்னாலே அறிவுண்டாக்கப் பட்டேம் என்று கூறி எழுந்து சென்று; வென்றவன் பாதம் சேர்ந்து வீட்டு நன்னெறியைப் பெற்றார் - காமனை வென்றவனுடைய திருவடியை அடைந்து வீட்டிற்குச் செல்லும் நல்ல வழியைப் பெற்றார்; பருதி வட்டம் சென்றது - அவ்வளவிலே ஞாயிறு மறைந்தது; செம்மலும் அசைவு தீர்ந்தான் - சீவகனும் இளைப்புத் தீர்ந்தான்.

(வி - ம்.) குன்றம் சீவகனுக்குச் சலியாமை என்னும் பண்பு பற்றி வந்த பெருமித வுவமை.

பாகத்தார் என்றது இத்தகைய ஞானக்கேள்வியைக் கேட்டற்குரிய அதிகாரிகள் என்பதுபட நின்றது. குடும்பம் என்றது மனைவி முதலிய தொடர்ப்பாட்டினை.

கண் : ஈண்டு அறிவுக்கண். கண் திறப்பிக்கப்பட்டேம் என்றவாறு. முன்னர் (உச)இன்னே என்றதற்கேற்ப ஈண்டும் எழுந்துபோய் என்றார்.

எழுந்துபோய் என்றது, அப்பொழுதே எழுந்துபோய் என்பதுபட நின்றது.

'வட்டம் என்றது, ஞாயிறு நாடோறும் வட்டமாய் மாமேரு வருதலை' என்பர் நச்சினார்க்கினியர். (உசு)

வேறு

கசருஅ. அசைவு தீர்ந்திரு ளஃகிய காலையே
வசையி னீங்கியி னார்வழி காட்டலிற்
றிசையும் யாறுந் தெரிந்துகொண் டேகினான்
மிசையு மில்லதோர் மெய்ப்பொறி யாக்கையான்.

(இ - ள்.) *அசைவு தீர்ந்து இருள் அஃகிய காலையே - அங்ஙனம் இளைப்பாறி இருள்புலர்ந்த வைகறையிலே; வசையின் நீங்கினார் வழி காட்டலின் - குற்றத்திலிருந்து நீங்கினவர்கள் வழிகாட்டியதால்; மிசையும் இல்லது ஓர் மெய்ப்பொறி யாக்கையான் - மேலுலகினும் இல்லாததாகிய ஒப்பற்ற உண்மை இலக்கணம் அமைந்த உடம்பினான்; திசையும் யாறும் தெரிந்து கொண்டு ஏகினான் - திக்கும் யாறும் விளங்கிக்கொண்டு சென்றான்.*

*வசை - காமவெகுளி மயக்கமென்னும் குற்றம் இனி கூ-ஆம் செய்யுளிற் கூறப்பட்ட அப்பிரத்தியாக்கியான, பிரத்தியாக்கியான குரோதம் மானம் மாயை லோபம் என்பனவுமாம்.*

*மிசை : தேவருலகிற்கு ஆகுபெயர். மெய்ப்பொறி - உடலுக்குக் கூறு நல்லிலக்கணம். நீங்கியினார் : இன் : அசை.* (உஎ)

வேறு

கசருகூ. படம்புனைந் தெழுதிய வடிவிற் பங்கயத்
தடம்பல தழீஇயது தக்க நாடது
வடங்கெழு வருமுலை மகளிர் மாமைபோன்
றிடம்பெரி தினிதத னெல்லை யெய்தினான்.

(இ - ள்.) *புனைந்து எழுதிய படம் வடிவில் - ஒப்பனை செய்து வரைந்த படத்தின் வடிவுபோல; பங்கயத் தடம் பல தழீஇயது - தாமரைக்குளம் பல சூழ்ந்தது; வடம்கெழு வருமுலை மகளிர் மாமைபோன்று இடம் பெரிது இனிது - முத்து வடம் முதலிய பொருந்திய வளரும் முலையுடைய மங்கையரின் அழகு போல நுகர்வார்க்குப் பெரிதும் இனியது; அது தக்க நாடு - அது தக்க நாடென்னும் பெயருடையது; அதன் எல்லை எய்தினான் - அதன் எல்லையைச் சீவகன் அடைந்தான்.*

(வி - ம்.) *ஓவியப்புலவன் கிழியின்கண் தன் கலையுணர்ச்சியினாற் புனைந்து வரையப்பட்ட ஓவியம் போலத்தோன்றும் தாமரைத் தடம்பல*

தன்பால் அமைந்தது என்னும் இச்சொல்லோவியம் மிகவும் இனிதாதல் உணர்க.

மாமை - அழகு. ஈண்டு அந்நாடு தெவிட்டாத காட்சியின்பமுடைத் தாதற்கு உவமை. (உஅ)

கசசഠ. தேங்கயத் தணிமலர் தேகிழ்ந்த நாற்றமும்
பூங்குழன் மடந்தையர் புனைந்த சாந்தமு
மாங்கெலா மகிற்புகை யளாய வாசமுந்
தாங்கலாற் றக்கநா டாய தென்பவே.

(இ - ள்.) தேம் கயத்து அணிமலர் தெகிழ்ந்த நாற்றமும்- இனிய கயத்தின் அழகிய மலர் வாய்விட்ட மணமும்; பூங்குழல் மடந்தையர் புனைந்த சாந்தமும்-மலர்க்கூந்தலையுடைய மாதர்கள் அணிந்த சந்தனமும்; அகில் புகை அளாய வாசமும் - அகிற் புகை கலந்த மணமும்; ஆங்குஎலாம் தாங்கலால் தக்கநாடு ஆயது என்ப - அங்கெல்லாம் தரித்தலின் தக்கநாடு என்னும் பெயர்த்தாயிற்றென்பர்.

(வி - ம்.) தெகிழ்ந்த - நெகிழ்ந்த; மலர்ந்த என்றவாறு. தக்க நாடு- தகுதியுடைய நாடு; தகுதி - தாங்குதல். எனவே தக்க நாடென்பது அதற்குக் காரணப் பெயர் என்றவாறு.

என்ப - என்று சான்றோர் கூறுவர். (உக)

கசசக. சண்பக நறுமலர் மாலை நாறுசாந்
தொண்பழுக் காயினோ டுருவ மெல்லிலை
யுண்பத மியாவர்க்கு மூன மில்லது
வண்புகழ் நாட்டது வண்ண மின்னதே.

(இ - ள்.) சண்பக நறுமலர் மாலை - சண்பகமலர்களாகிய மணமிகு மாலையும்; நாறு சாந்து - மணக்கும் சந்தனமும்; ஒண் பழுக்காயினோடு - சிறந்த பழுக்காயுடன்; உருவம் மெல்இலை - அழகிய வெற்றிலையும்; உண்பதம் - உண்ணும் உணவும் என இவை; யாவர்க்கும் ஊனம் இல்லது - எவருக்கும் குறைவின்றி அமைந்தது; வண்புகழ் நாட்டது வண்ணம் இன்னது - வள மிகும் புகழுற்ற தக்கநாட்டின் இயல்பு இத்தகையதே.

(வி - ம்.) பழுக்காய் - பாக்கு. உருவம் - அழகு. மெல்லிலை வினைத்தொகை; வெற்றிலை. உண்பதம்: வினைத்தொகை. நாறுசாந்து என்பதும் அது. ஒண்பழுக்காய், வண்புகழ்: பண்புத்தொகைகள்.

மலர் முதலிய இன்னோரன்னவற்றால் ஊனம் இல்லது என்க. ஊனம் - குறைவு. வண்ணம் - இயல்பு. (௩0)

கசசஉ. கரும்பணி வளவயற் காமர் தாமரை
வரம்பணைந் ததனுதற் கிடந்த வார்செநே
லரங்கணி நாடக மகளி ராய்நுதற்
சுரும்புசூ ழிலம்பகத் தோற்ற மொத்ததே.

(இ - ள்) கரும்பு அணி வளவயல் - கரும்பை அணிந்த வளத்தையுடைய கழனியில்; காமர் தாமரை வரம்பு அணைந்து - அழகிய தாமரைமலர் சாய்ந்து வரம்பைச் சேர (இருக்க); அதன் நுதல்கிடந்த வார் செநெல் - அத் தாமரையின் நெற்றியிலே கிடந்த நீண்ட செந்நெற் கதிர்; அரங்கு அணி நாடகமகளிர் ஆய்நுதல் - அரங்கிலே அணிந்துவந்த நாடகமகளிரின் அழகிய நெற்றியிலே; சுரும்புசூழ் இலம்பகத் தோற்றம் ஒத்தது - வண்டுகள் சூழ்ந்த தலைக்கோலம் என்னும் அணியின் தோற்றம் போன்றது.

(வி - ம்.) அதன் - அத்தாமரை மலரினது. இலம்பகம் - தலைக் கோலம் என்னும் ஓரணிகலம். வார்செநெல் - என்புழி நகரமெய் விகாரத்தாற் கெட்டது.

அணைந்து - அணைய : எச்சத்திரிபு. சுரும்பு தாமரைமலரைச் சூழ இருக்கும். அவ்வாறே தலைக்கோலத்தைச் சூழக் கூந்தல் இருக்கும். வரம்புக்கு அரங்கு உவமை. (௩க)

கசசங. வண்டுவாழ் கொடுந்துறைக் கன்னி வாளைமே
னண்டுகி ருற்றென நடுங்கி நாணினால்
விண்டொளித் தூண்டுறந் தொடுக்கும் வீழ்புனல்
கொண்டபூங் கிடங்கணி நகரம் கூறுவாம்.

(இ - ள்.) வண்டுவாழ் கொடுந்துறைக் கன்னி வாளைமேல் - வண்டுகள் உறையும் வளைந்த துறையிலே கன்னியாகிய வாளையின் மேல்; நண்டு உகிர் உற்றென நடுங்கி - நண்டின் நகம்பட்டதாக, அதனால் நடுக்கமுற்று; நாணினால் விண்டு ஒளித்து ஊண் துறந்து ஒடுங்கும் வீழ்புனல் - நாணத்தினால் அவ்விடத்தை விட்டு உணவை வெறுத்து ஒடுங்கியிருக்கும் ஆழ்ந்த நீரை; கொண்ட பூங்கிடங்கு அணி நகரம் கூறுவாம் - தன்னிடத்தே கொண்ட அகழிசூழ்ந்த நகரத்தை இனி இயம்புவோம்.

(வி - ம்.) ஒரு கன்னி தன்மேலே உகிர் உற்றதனால் நாணத்தினால் நடுங்கி, அவ்விடத்தினின்றும் நீங்கிச்சென்று ஒளித்து ஊணைத் துறந்து ஒடுங்குமாறுபோல என வாளைக்கு உவமை கொள்க.

"வரியகட் டலவன் வள்ளுகிர் உற்றெனக் கன்னிவாளை உண்ணு தொடுங்கும் தண்பணை" என்றார் கதையினும் (க - உஞ் : க00 - உ.) (௩உ)

கசசச. அகழ்கிடங் கந்துகி லார்ந்த பாம்புரி
புகழ்தகு மேகலை நாயில் பூண்முலை
திகழ்மணிக் கோபுரந் திங்கள் வாண்முகஞ்
சிகழிகை நெடுங்கோடி செல்விக் கேன்பவே.

(இ - ள்.) செல்விக்கு - மதிலாகிய செல்விக்கு; அகழ் கிடங்கு அம் துகில் - அகழ்ந்த கிடங்கு அழகிய துகில்; ஆர்ந்த பாம்புரி புகழ்தகு மேகலை - பொருந்திய பாம்புரி புகழத்தக்க மேகலை; நாயில் பூண்முலை - ஞாயில் பூணணிந்த முலை; திகழ் மணிக்கோபுரம் திங்கள் வாண்முகம் - விளங்கும் மணிக்கோபுரம் திங்களனைய ஒளிரும் முகம்; நெடுங்கொடி சிகழிகை - நீண்ட கொடி மயிர்முடி; என்ப - என்று சொல்வார்.

(வி - ம்.) "பத்திரப் பாம்புரி அத்தகக் கலாஅய்" என்றார் கதையினும் (௩ - ௩ : கஎ)

பாம்புரி : மதிலின் அடியே உள்ள ஆளோடிகள் (சீவக. கஉ௫0 அடிக்குறிப்பு) நாயில் : ஞாயில்: போலி. ஞாயில் - மதிலின் ஓர் உறுப்பு; மதிலில் இருப்போர் வெளியார்மேல் அம்பெய்து மறையும் சூட்டு. (௩௩)

கசசரு. நாட்டிய மணிவரை கடைந்து நல்லமிர்
தூட்டினு மதனைவிட் டுறைந ரின்மையா
லீட்டிய வளநிதி யிறைகோண் மாநகர்ச்
சூட்டுவைத் தனையதச் சுடர்ப்போ னிஞ்சியே.

(இ - ள்.) அச் சுடர்ப்பொன் இஞ்சி - அந்த ஒளியுறும் பொன்மதில்; நாட்டிய மணிவரை கடைந்து நல் அமிர்து ஊட்டினும் - மந்தரம் என்று பெயர் நாட்டிய மலையாலே கடலைக் கடைந்து அமிர்தத்தை ஊட்டினும்; அதனை விட்டு உறைநர் இன்மையால் - அந் நகரைவிட்டுப் போய்த் தங்குவாரில்லாமையால்; ஈட்டிய வளநிதி இறைகொள் மாநகர் - ஈட்டப்பட்ட வளமுறு செல்வம் தங்கிய அப் பெருநகரம்; சூட்டு வைத்தனையது - நகரங்கட்கெல்லாம் தலையென்று சூட்டுவைத்தால் ஒத்தது என்க.

(வி - ம்.) இனி, அ மணிவரை நாட்டி - எனப் பிரித்துக் கூட்டிக் கண்ணழித்து அம்மணி மலையாகிய மந்தரத்தை நட்டு எனினுமாம். இதற்கு அகரச்சுட்டுப் பண்டறி சுட்டு ஆகும்.

இதற்கு நிதி, ஆகுபெயர். 'சூட்டு', என்றது சிறப்புப் பட்டத்திற்கு அடையாளமாகிய ஓரணிகலனை. (௩௪)

கசசசு. எறிசுற விளையவ ரேந்து பூங்கோடி
மறிதிரை வரைபுரை மாட மாக்கலம்
பெறலருந் திருவனை ரமுதம் பேரோலி
யறைகடல் வளநக ராய தேன்பவே.

(இ - ள்.) பேரொலி வளநகர் - பேரொலியை உடைய அவ் வளமிகு நகரம்; இளையவர் எறிசுறவு - வீரர் எறியும் சுறு மீனுக வும்; ஏந்து பூங்கொடி மறிதிரை - ஏந்திய பூங்கொடி மறிதிரை யாகவும்; மாடம் மாக்கலம் - மாடங்கள் பெரிய மரக்கலமாகவும்; பெறல் அருந் திருவனார் அமுதம் - கிடைத்தற்கரிய திருவைப் போன்ற மகளிர் அமுதமாகவும்; அறைகடல் ஆயது என்ப - ஆரவாரமுடைய கடலாயிற் றென்ப.

நகர், சுறவையும் திரையையும் மரக்கலங்களையும் அமுதத்தையும் உடையதாய்ப் பாற்கடலை ஒத்தது என்றவாறு. வீரர் எதிர்வாரை எறி தலின் சுறவினையும் கொடி காற்றால் அசைதலின் திரையினையும் மாடம் மாந்தரையும் சரக்குக்களையும் கொண்டிருத்தலின் கலத்தினையும் மகளிர் தங்காதலர் உயிர்தளிர்ப்ப முயங்கலின் அமிழ்தத்தினையும் உவமையாகக் கூறினார்.

இத் தொடர் வேறுபட வந்த உவமவிசேடமாம் என்பர் நச்சினார்க் கினியர். (தொல். உவ. ௩௨) (௩௫)

வேறு

௧௯௪௭. மதியக டுரிஞ்சுஞ் சென்னி
மாடநீண் மறுகு தோறும்
போதியவிழ் மாலை வீழ்ந்து
பொன்செய்நன் கலன்கள் சிந்தி
நிதியறை திறந்து நோக்கி
யன்னதோர் நீர்மை யெய்திப்
புதியவர்க் கியங்க லாகாப்
பொற்பொடு பொலிந்த தன்றே.

(இ - ள்.) மதி அகடு உரிஞ்சும் சென்னி மாடம்நீள் மறுகு தோறும் - திங்களின் நடுவைத் தேய்க்கும் உச்சியையுடைய மாடங்களையுடைய நீண்ட தெருக்கள்தோறும்; போதி அவிழ் மாலை வீழ்ந்து - மயிர்முடி குலைதலின் முத்துமாலை வீழ்ந்து; பொன்செய் நன்கலன்கள் சிந்தி - பொன்னால் இயற்றிய பேரணி களும் சிந்துதலாலே; நிதி அறை திறந்து நோக்கி அன்னது ஓர் நீர்மை எய்தி - நிதியறையைத் திறந்து பார்த்தால் ஒத்ததொரு தன்மை பெற்று; புதியவர்க்கு இயங்கல் ஆகாப் பொற்பொடு பொலிந்தது - அச்சமுண்டாக்குதலின் புதியவர்க்குச் செல்ல லாகாத அழகொடு விளக்கம் உற்றது.

(வி - ம்.) உரிஞ்சும் - தேய்க்கும். மறுகு - தெரு. நிதியறை - கரு வூலம். புதியவர் பொருள் கிடக்குமிடத்தே புகுதற்கு அஞ்சுதல் இயல் பாகலின் புதியவர்க்கு இயங்கலாகாப் பொற்பு என்றார். இதனால் அந் நகரத்துத் திருவுடைமை உணர்த்தப்பட்டது. (௩௬)

வேறு

௧௫௪௮. கேமமா புரமெனுங் கேடி னல்லிசைப்
பூமிமேற் றிலகம்வைத் தனைய பொன்னகர்த்
தாமநீ ணெடுங்குடைத் தரணி காவல
ணமம்வே னரபதி தேவ னென்பவே.

(இ - ள்.) பூமிமேல் திலகம் வைத்தனைய - உலகிற்குத் திலகம் இட்டால் ஒத்த; கேமமாபுரம் எனும் கேடுஇல் நல் இசைப் பொன்நகர் - கேமமாபுரம் எனும் பெயரிய கெடுதல் இல்லாத நல்ல புகழையுடைய பொன்னகரிலே; தாமம்நீள் நெடுங்குடைத் தரணி காவலன்-மாலையணிந்த நீண்ட குடையை உடைய உலக காவலன்; நாமம் வேல் நரபதி தேவன் என்ப - அச்சமூட்டும் வேலேந்திய நரபதிதேவன் என்னும் பெயரை யுடையோன் என்பார்கள்.

(வி - ம்.) நல்லிசையை நரபதி தேவனுக்கு ஆக்குவர் நச்சினார்க்கினியர். (௩௭)

௧௫௪௯. அந்நகர்க் கரசனே யனைய வாண்டகை
மெய்ந்நிக ரிலாதவன் வேத வாணிகன்
கைந்நிக ரமைந்தவேற் கமழுந் தாரினன்
மைந்நிகர் மழைக்கணார் மருட்ட வைகுவான்.

(இ - ள்.) அந் நகர்க்கு அரசனே அனைய ஆண்தகை - அந்த நகரத்திற்கு அரசனே போலும் ஆண்தகையினன்; மெய் நிகர் இலாதவன் - வடிவம் ஒப்பிலாதவன்; வேதவாணிகன் - மறைவழி ஒழுகும் வணிகன்; கைந்நிகர் அமைந்த வேல் கமழும் தாரினன் - கைக்கு நிகராக அமைந்த வேலும் மணஞ்செயும் மாலையும் உடையான்; மைந்நிகர் மழைக்கணார் மருட்ட வைகுவான் - மைதீட்டிய தம்முள் நிகர்த்த குளிர்ந்த கண்களையுடைய மகளிர் மயக்க அவர்களின்பத்தே தங்குவான்.

(வி - ம்.) இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர்.

அரசன்: நரபதிதேவன். ஆண்மைத் தன்மையில் அரசனையே ஒத்தவன் என்றவாறு.

ஆற்றலுடைய கையும், அதற்குத் தகுந்த வேலும் இவற்றால் எய்திய வெற்றி மாலையினையும் உடையோன் என்றவாறு.

மழைக்கணார் மருட்ட வைகுவான் என்றது அவனுடைய வாழ்க்கைச் சிறப்பினை விதந்தோதியபடியாம். (௩௮)

வேறு

கச௫0. வார்சிலை வடிப்ப வீங்கி
வரையெனத் திரண்ட தோளான்
சோர்புய றொலைத்த வண்கைச்
சுபத்திரன் மனைவி பெற்ற
சீர்நலங் கடந்து கேம
சரியெனத் திசைக ளெல்லாம்
பேர்நலம் பொறித்த பெண்மைப்
பெருவிளக் காகி நின்றாள்.

(இ - ள்.) *வார்சிலை வடிப்ப வீங்கி வரையெனத் திரண்ட தோளான் - நீண்ட வில்லைப் பயிற்றுதலாற் பருத்து மலைபோலத் திரண்ட தோளையுடையான்; சோர் புயல் தொலைத்த வண்கைச் சுபத்திரன் - மழைபெய்யும் முகிலை ஒட்டிய வண்மையுடைய கையினன்ஆன சுபத்திரன் என்னும் பெயரினனுக்கு; மனைவி பெற்ற - அவன் மனைவி நிப்புதியென்பாள் ஈன்ற; சீர் நலம் கடந்த கேமசரியென (ஒரு பெண்) - பிறமகளிரின் சிறந்த அழகை வென்ற கேமசரி என்று; திசைகள் எல்லாம் பேர்நலம் பொறித்த பெண்மைப் பெருவிளக்கு ஆகி நின்றாள் - திசைகளில் எல்லாம் பெயரின் நலத்தை எழுதிய பெண்மையையுடைய பெரு விளக்கு என ஆகி இருந்தாள்.*

(வி - ம்.) *ஆகி யெனவே மங்கைப்பருவமுடையாளென்பது பெற்றாம். கேமசரி என (ஒரு பெண்) என ஒரு மொழி சேர்க்க.* (௩௧)

கச௫க. மாசிலாள் பிறந்த ஞான்றே
மதிவலான் விதியி னெண்ணிக்
காசிலாள் கண்ட போழ்தே
கதுமென நாணப் பட்டான்
றாசுலா மல்கு லாட்குத்
துணைவனும் புணர்மி னென்று
பேசின னன்று கோண்டு
பெருவிருந் தோம்பு கின்றான்.

(இ - ள்.) *மாசு இலாள் பிறந்த ஞான்றே - குற்றமிலாத அவள் பிறந்தபொழுதே; மதி வலான் விதியின் எண்ணி - அறிவில் வல்லவனான கணி நூல் முறையானே ஆராய்ந்து; காசு இலாள் கண்டபோழ்தே கதும் என நாணப்பட்டான் - இவள் கண்ட பொழுதே நாணமுறப்பட்டவன்; தூசு உலாம் அல்குலாட்குத் துணைவன் ஆம் - ஆடையணிந்த அல்குலையுடையாட்குக் கணவ*

னுவான் ; புணர்மின் என்று பேசினன் - அவனுக்குக் கொடுங் கோள் என்று கூறினன் ; அன்று கொண்டு பெருவிருந்து ஓம்பு கின்றான் - அன்றுதொட்டுச் சுபத்திரன் தன் மகள் அத்தகை யானைக் காண்டற்குப் பெருவிருந்து இடுதலைக் கைக்கொண் டுள்ளான்.

(வி - ம்.) தன் கணவனைத் தவிர மற்றோர் அவட்கு ஆடவராய்த் தோன்றாரென்பது தோன்றப் பலரையும் நோக்கும் அவளை, 'மாசி லாள்' என்றும், 'காசிலாள்' என்றும் கூறினர்.

மதிவல்லான் என்றது கணிவனை. விதி - நூல் கூறும் முறை. காசிலாள்-குற்றமற்றவள் என்னும் பொருட்டு ; இது வாளா அவள் என் னுஞ் சுட்டு மாத்திரையாய் நின்றது.

பெருவிருந்தோம்புகின்றான் என்றது, அத்தகையானைக் காணும் பொருட்டு என்பதுபட நின்றது. (௪0)

கச௫௨. தாழ்தரு பைம்பொன் மாலைத் தடமலர்த் தாம மாலை
வீழ்தரு மணிசெய் மாலை யிவற்றிடை மின்னி னின்று
சூழ்வளைத் தோளி செம்பொற் றூணையே சார்ந்து நோக்கு
மூழ்படு காத லானை யொருபிடி நுசுப்பி னாளே.

(இ - ள்.) ஒருபிடி நுசுப்பினாள் சூழ்வளைத் தோளி - ஒரு பிடியில் அடங்கும் இடையினளாகிய, வளைசூழ்ந்த தோளினள் தாழ்தரு பைம்பொன்மாலை - தூங்கப்பட்ட பைம்பொன்னாலான மாலை ; தடமலர்த் தாமம் மாலை - பெரிய மலர்களால் தொடுக்கப் பட்ட மாலை ; வீழ்தரு மணிசெய் மாலை - விருப்பம் ஊட்டும் மணிகளாற் செய்யப்பட்ட மாலை ; இவற்றிடை-ஆகிய இவற்றின் இடையிலே ; மின்னின் நின்று - மின்போல நின்று; செம்பொன் தூணையே சார்ந்து - பொன்னாலான தூணைப் பொருந்திநின்று ; ஊழ்படு காதலானை நோக்கும் - ஊழ்தருகின்ற கணவனைப் பார்த்துக்கொண்டிருப்பாள்.

(வி - ம்.) தான் நோக்குழிச் சிறிது தோன்றித் தன்னைப் பிறர் நோக்குழிக் கணத்திலே தூணின் மறைந்து விடுதல் பற்றி, மின்னின், தூணையே சார்ந்து நோக்கும் என்றார்.

தந்தை செய்யும் விருந்திடையே இவள் ஒரு தூணைச் சார்ந்து நின்று தனக்கு ஊழினால் தரப்படுங் காதலனை நோக்குவாள் என்க. (௪க)

கச௫௩. சேயிழை கணவ னாகுந் திருமகன் றிறத்து நாளு
மாயிரத் தெட்டு நேர்ந்த வாரமு தடிசி லூட்டி
யேயின வகையி னாலே யாறிரண் டெல்லை யாண்டு
போயின வேன்ப மற்றப் பூங்கொடிச் சாய லாட்கே.

(இ - ள்.) சேயிழை கணவன் ஆகும் திருமகன் திறத்து - கேமசரியின் கணவனாகிய திருமகனைக் காணுதற்கு; நாளும் ஆயிரத்தெட்டு நேர்ந்த ஆரமுது அடிசில் ஊட்டி - வைகலும் ஆயிரத்தெண்மருக்கு ஆக்கிய ஆரமுது போலும் சோற்றை ஊட்ட; ஏயின வகையினாலே அப் பூங்கொடிச் சாயலாட்கு - பொருந்திய வகையாலே அப் பூங்கொடிபோலும் மென்மை யாட்கு; ஆறிரண்டு எல்லை ஆண்டு போயின என்ப-பன்னிரண்டு ஆகிய எல்லையையுடைய ஆண்டுகள் கழிந்தன என்க.

(வி - ம்.) சேயிழை : அன்மொழித் தொகை. அமுதடிசில் : உவமத்தொகை.

'திருமகன் திறத்து' என்பது, 'என்றிறத்து அவலங்கொள்ளல்' என்பதுபோல (புறநா. உ௧௩) பொருட்டு என்னும் பொருளில் வந்தது. ஊட்டி - ஊட்ட : எச்சத்திரிபு. (௬௨)

௧௬௫௪. முருக்கிதழ் குலிக மூட்டி
வைத்தன முறுவற் செவ்வாய்த்
திருக்கவி னிறைந்த வெங்கட்
பணைமுலைத் தேம்பெய் கோதைப்
புரிக்குழற் பொன்செய் பைம்பூட்
புனையிழை கோல நோக்கித்
தரிக்கிலா துருகி நையுந்
தடமலர்க் கோதை நற்றாய்.

(இ - ள்.) முருக்கிதழ் குலிகம் ஊட்டி வைத்த அன முறுவல் செவ்வாய் - முருக்கமலரின் இதழை இங்குலிகத்தையும் ஊட்டி வைத்தாற்போன்ற, முறுவலையுடைய சிவந்த வாயையும்; திருக்கவின் நிறைந்த வெம்கண் பணை முலை - திருமகளின் அழகு நிறைந்த விருப்பம் ஊட்டுங் கண்களையுடைய பருத்த முலைகளை யும்; தேன் பெய் கோதை-தேன் பொருந்திய மலர்மாலையையும்; புரிக்குழல் - நெறித்த கூந்தலையும்; பொன்செய் பைம்பூண் - பொன்னாலான புத்தணியையும் உடைய; புனையிழை கோலம் நோக்கி-கேமசரியின் கோல முதிர்ச்சியைப் பார்த்து; தடமலர்க் கோதை நற்றாய் - பெரிய மலராலான மாலையினாளின் அன்னை; தரிக்கிலாது உருகி நையும் - பொறாமல் வருந்துவாள்.

(வி - ம்.) இயல்பாகவே சிவந்த முருக்க மலரின்மேல் இங்குலிகத்தையும் ஊட்டி வைத்தாற்போன்று நனிசிவந்த வாய் என்பார், முருக்கிதழ் குலிகம் ஊட்டிவைத்தன செவ்வாய் என்றார்.

புனையிழை : அன்மொழித் தொகை; கேமசரி. இத்தகைய அழகினாட்கு இன்னும் கணவன் வாய்த்திலனே என்று நற்றாய் நோக்குந் தோறும் நைந்துருகினாள் என்பது கருத்து. (௬௩)

கசடுரு. மாவடு மருட்டு நோக்கின் மதிமுக மழைக்கண் மாசில்
பூவொடு புரையுஞ் சாயல் புனைநலந் தனித்து வைக
வேவடு பிணையி னேக்கி யிறைவளை கழல நின்ற
தாய்படுந் துயர மெல்லாந் தாரவ னீக்கி னானே.

(இ - ள்.) மதிமுகம் மாஅடு மருட்டும் நோக்கின் மழைக் கண் - திங்கள் போலும் முகத்திலே மானை வென்று, கண்டாரை மயக்கும் பார்வையையுடைய குளிர்ந்த கண்களையும்; பூவொடு புரையும் சாயல் - மலரொடு பொருந்தும் மென்மையினையும் உடைய கேமசரி; புனைநலம் தனித்து வைக - ஒப்பனை செய்த இத்தகைய் அழகுடன் தனியே தங்குதலால்; ஏஅடு பிணையின் நோக்கி - அம்பால் ஏறுண்ட மான்பிணைபோலப் பார்த்து; இறைவளை கழல நின்ற - முன்கைவளை கழலுமாறு மெலிந்து நின்ற; தாய்படு துயரம் எல்லாம் - (கேமசரியின்) அன்னை யுறுந் துயரத்தையெல்லாம்; தாரவன் நீக்கினான் - சுபத்திரன் போக்கினான்.

(வி - ம்) மாவடுப் பிளவினை ஒத்த கண் எனினுமாம். தாரவன் : சுபத்திரன். நீக்கினான் என்றது பின்வருமாறு கூறி நீக்கினான் என்பது பட நின்றது.

ஏ - அம்பு. பிணை : பெண்மான். இறை - முன்கை. தாய் : நிப்புதி. (சச)

கசடுசு. போதுவாய் திறந்த போதே
பூம்பொறி வண்டு சேர்ந்தாங்
கூதுமே மகளிர்க் கோத்த
போகமு மன்ன தொன்றே
யாதுநீ கவல வேண்டா
வாரழ குடைய நம்பி
காதலான் றவத்தின் மிக்கான்
கண்ணுறு நாளை யென்றான்.

(இ - ள்.) போது வாய் திறந்தபோதே - மலரின் வாய் நெகிழ்ந்த அளவிலே; பூம் பொறி வண்டு சேர்ந்து ஆங்கு ஊதுமே - அழகிய புள்ளிகளையுடைய வண்டு பொருந்தி நுகரு மன்றோ?; மகளிர்க்கு ஒத்த போகமும் அன்னது ஒன்றே ஆகும் - பெண்களுக்குப் பொருந்தின நுகர்ச்சியும் அத்தகையதாகிய ஒன்றேயாம்; (ஆதலின்); ஆர் அழகு உடைய நம்பி காதலான் தவத்தின் மிக்கான் - சிறந்த அழகுடைய நம்பியும் இவளாற் காதலிக்கப்படுவானும் ஆகிய தவத்திற் சிறந்தவன்; நாளை கண்

னுறும் - நாளைக்கே வந்து எதிர்ப்படுவான்; நீ கவல வேண்டா - இனி நீ சிறிதும் வருந்தல் வேண்டா (என்று ஆற்றுவித்தான்).

(வி - ம்.) இவளை நுகர்தற்குரியோன் தவத்தின் மிக்கோனும் ஆரழகுடையோனும் காதலானும் நம்பியுமாக இருத்தல் ஒருதலை என்பான், ஆரழகுடைய நம்பி காதலான் தவத்தின் மிக்கான் என்றான்.

அத்தகைய தவம் வீண்போகாது என்பான் நாளைக் கண்ணுறும் என்றான். ஆங்கு: அசைச்சொல். ஊதமே: ஏ: வினா. ஒன்றே: ஏ: தேற்றம். (௪௫)

வேறு

௧௪௫௭. பொன்னிலத் தெழுந்ததோர் பொருவில் பூங்கொடி
மின்னுவிட் டெரிவதோர் நலத்தள் வீங்கிருள்
பின்னிவிட் டனகுழற் பெருங்கட் பேதையூர்
துன்னினன் றொடுகழற் குருசி லென்பவே.

(இ - ள்.) தொடுகழல் குரிசில் - தொடுத்த கழலையுடைய சீவகன்; பொன் நிலத்து எழுந்தது ஓர் பொருஇல் பூங்கொடி - பொன்னாகிய நிலத்திலே தோன்றியதான ஓர் ஒப்பற்ற காமவல்லியைப் போல்; மின்னுவிட்டு எரிவது ஓர் நலத்தள் - ஒளிவிட்டு விளங்குவதொரு நலத்தினளாகிய; வீங்கு இருள் பின்னி விட்ட அன குழல் பெருங்கண் பேதையூர் - மிக்க இருளைப் பின்னிவிட்டாற் போன்ற குழலையுடைய பெருங்கண்ணளாம் பேதையின் ஊரை; துன்னினன் - (சுபத்திரன் தன் மனைவியைத் தேற்றுவித்துக் கொண்டிருக்கும் அவ்வளவிலே) அடைந்தனன்.

(வி - ம்.) பொன்னிலம்-வானுலகம். காமவல்லி - கற்பகமரத்திற் படர்வதொரு பொன்னிறப் பூங்கொடி. பேதை: கேமசரி. குருசில் - தலைவன்: ஈண்டுச் சீவகன். (௪௬)

௧௪௫௮. மல்லிகை மணங்கமழ் மாலை வார்குழற்
சில்சுணங் கிளமுலைச் சிறுமி தந்தையுஞ்
செல்வனைத் திருநகர்ச் சேட்பட் டானரோ
பல்கதிர் மணியொளி பரந்த பூணினான்.

(இ - ள்.) பல்கதிர் மணியொளி பரந்த பூணினான் - பல கதிரையுடைய மணிகள் ஒளிரும் பரவிய பூணினன் ஆகிய; மல்லிகை மணம் கமழ் மாலை வார்குழல் சில் சுணங்கு இளமுலைச் சிறுமி தந்தையும் - மல்லிகை மணம் வீசும் மாலையினையும் நீண்ட கூந்தலையும் சிலவாகிய தேமல் பரவிய இளமுலையினையும் உடைய கேமசரியின் தந்தையும்; செல்வனை - சீவகனை; திருநகர்ச் சேண் பட்டான் - கேமமாபுரத்திலே எதிர்ப்பட்டான்.

(வி - ம்.) சிறுமி தந்தையும் பூணினனுமாகிய சுபத்திரன் என்க செல்வன் : சீவகன். திருநகர்ச் சேட்பட்டான் என்றது, அவன் வருகையை உணர்ந்து தன்னகரத்தினின்றும் தொலைவிடத்திலேயே எதிர் சென்று கண்டு அழைத்து வந்தனன் என்பது பட நின்றது. (௪௭)

௧௪௫௯. தென்றிசை முளைத்ததோர் கோலச் செஞ்சுட
ரொன்றிமற் றுத்தரம் வருவ தொத்தவண்
மன்றல்கோண் மார்பினன் வந்தோ ரானிழ
னன்றுவந் திருந்தன னாதற் சிந்தியா.

(இ - ள்.) தென்திசை முளைத்தது ஓர் கோலம் செஞ் சுடர் - தென் திசையிலே முளைத்ததாகிய ஓர் ஒப்பனையுறுஞ் சிவந்த ஞாயிறு; உத்தரம் ஒன்றி வருவது ஒத்து - வடதிசை நோக்கி நிலத்தே பொருந்தி வருவது போல; மன்றல் கொள் மார்பினன் வந்து - மணம் கொண்ட மார்பினனாகிய சீவகன் வந்து; ஓர் ஆல் நிழல் - ஓர் ஆலமரத்தின் நிழலிலே; நாதன் சிந்தியா நன்று உவந்து இருந்தனன் - அருகனைத் தியானித்தவாறு மிகவும் மகிழ்ந்திருந்தனன்.

(வி - ம்.) இச் செய்யுளின்கண் சுபத்திரன் சீவகனை எதிர்ப்பட்ட இடமும் அவன் அவ்விடத்து இறைவணக்கஞ் செய்திருந்ததும் கூறுகின்றார்.

நாதன் - இறைவன். சிந்தியா - சிந்தித்து. நன்று - பெரிதும். தியானித்தல் : நமோ அரஹந்தாணம் என்றுகூறி மந்திரத்தியானஞ் செய்தல்.

வேற்றுநாட்டின் சுவைகளை அறிந்து நுகரவேண்டும் என்று சீவகன் கூறியதற்கிசைந்த சுதஞ்சணன் இவனுக்கு ஊழ் வகையான் உறவு கொண்டு நுகர்ச்சி எய்தும் இடங்களை நாடி ஆண்டுச் சேறற்கு வழி கூற லின், வடதிசையிற் போதல் உளதாயிற்று. விசயமாதேவியைக் கண் டாற் பின்பு இராசமாபுரம் நோக்குவான். (௪௮)

௧௪௬௦. குடைகவித் தனையது கோல மாமுடி
யடியிணை யாமையின் வடிவு கோண்டன
புடைதிரள் விலாவும்வில் வளைந்த போற்பின
கடிகமழ் தாமரை கண்ணின் வணணமே.

(இ - ள்.) கோலமாமுடி குடைகவித்தனையது - இவனுக்கு அழகிய பெருமைமிக்க தலையும் உச்சி சிறிது உயர்ந்து முறைமையுறத் தாழ்ந்து சுற்றுறுத்தலின் குடைப்புறத்தை யொக்கும்; அடியிணை ஆமையின் வடிவு கொண்டன - இரண்டு புறவடிகளும் ஆமையின் உருவத்தைக் கொண்டுள்ளன; புடைதிரள் விலாவும் வில் வளைந்த பொற்பின - பக்கந்திரண்ட விலாக்களும் வில் வளைந்தாற் போன்ற அழகின; கண்ணின் வண்ணம் கடிகமழ் தாமரை- கண்ணின் தன்மை மணங்கமழும் தாமரை மலரின் தன்மை.

(வி - ம்.) இது முதல் ஆறுபாட்டுக்கள் சீவகன் உருவச் சிறப்புக் கூறுகின்றன. ஆலமர நீழலில் இருந்த சீவகனைச் சுபத்திரன் கண்டு மனத்திடை இவ்வாறு சிந்திக்கிறான்.

கண்ணின் வண்ணம் தாமரை வண்ணம் என வண்ணத்தைத் தாமரையோடுங் கூட்டுக. (சகூ)

கசசூக. குறங்கணி மயிலோடு கோல மார்ந்தன
பிறங்கிய வுறுப்பின்மேற் பெரிய நோக்கின
கறங்கிசை மணிமுழா வெருத்தங் காண்டகு
மறங்கெழு பெரும்புலி வாயின் வண்ணமே.

(இ - ள்.) குறங்கு அணி மயிரொடு கோலம் ஆர்ந்தன - தொடைகள் அழகிய மயிருடன் அழகு பொருந்தினவாகி; பிறங்கிய உறுப்பின் மேல் பெரிய நோக்கின - பருத்த உறுப்புக்களைக் காட்டிலும் சிறப்புறும் அழகுடையன ; எருத்தம் கறங்கு இசை மணி முழா - பிடரி ஒலிக்கும் இசையையுடைய அழகிய முழவை ஒக்கும் ; வாயின் வண்ணம் மறம் கெழு பெரும்புலி - வாயின் அழகு வீரம் பொருந்திய பெரிய புலியின் வாயை ஒக்கும்.

(வி - ம்.) கோலம் - அழகு. நோக்கு - அழகு ; "நோய் இகந்து நோக்கு விளங்க" எனவரும் மதுரைக்காஞ்சியினும் அஃதப்பொருட்டாதல் உணர்க. பிறங்குதல் - பருத்தல். கறங்கிசை : வினைத்தொகை. மணி முழா என்றது குடமுழவினை. புலியின் வாய் சிறுகி வளைந்திருத்தலின் உவமையாக எடுத்தோதினர்.

வாயின் வண்ணம் புலிவாய் வண்ணம் என்க. (௫0)

கசசூஉ. வரையகன் மார்பிடை வரியு மூன்றுள
புரைதபு பொன்புரை நாவு முள்ளுடைத்
தருவரைத் தோள்களு மமரர் கோன்களிற்
றுருவுகோ டடக்கையி னுருவு கொண்டவே.

(இ - ள்.) வரை அகல் மார்பிடை வரியும் மூன்று உள - மலையைப் போன்று அகன்ற மார்பிலே வரிகளும் மூன்றுள்ளன ; புரைதபு பொன்புரை நாவும் முள் உடைத்து - குற்றம் அற்ற பொன்னைப் போன்ற நாவும் சருச்சரையுடையதாயிருக்கும் ; அருவரைத் தோள்களும் அமரர் கோன் களிற்று உருவுகொள் தடக்கையின் உருவு கொண்ட - அரிய வரையனைய தோள்களும் வானவர் கோனுடைய ஐராவதத்தின் அழகு கொண்ட துதிக்கையின் உருவத்தைக் கொண்டன.

(வி - ம்.) அகல் மார்புவரை அம்மார்பிடை என விரித்தோதி அகன்றமார்பும் மலையை ஒக்கும் அம்மார்பினிடத்தே என்க.

வரி - கோடு. "அம்பகட்டு மார்பிற் செம்பொறி வாங்கிய மொய்ம்பின்" என்றார் திருமுருகாற்றுப் படையினும். இங்ஙனம் மூன்று கோடமைதல் உத்தம விலக்கணம் என்ப. அமரர்கோன்: இந்திரன். உருவிரண்டனுள் முன்னது அழகு, ஏனையது வடிவம். (௩௧)

௧௬௪௩. இலங்குபோன் னிறுவரை யனைய வேந்தலுக்
கலங்கிதழ்த் தாமரைக் கோட்டை யன்னதாய்
வலஞ்சுழிந் தமைவரக் குழிந்த வாய்ப்பொடு
நலங்கிளர் நாபியு மினிது நாறுமே.

(இ - ள்.) இலங்கு பொன் இறுவரை அனைய ஏந்தலுக்கு - விளங்கும் பொன்னாகிய பெரிய மலையை ஒத்த தலைவனுக்கு; அலங்கு இதழ்த் தாமரைக் கொட்டை அன்னதாய் - விளங்கும் இதழையுடைய தாமரைப் பொகுட்டுப் போன்றதாய்; வலம் சுழிந்து அமைவரக் குழிந்த வாய்ப்பொடு - வலமாகச் சுழிந்து பொருந்துதல் வரக் குழிந்த இயல்போடு; நலம் கிளர் நாபியும் இனிது நாறும்-அழகு விளங்கும் நாபியும் நன்றாகத் தோன்றும்.

(வி - ம்.) இறுவரை - பெரிய மலை. பொன் இருவரை என்றது, மேருமலையினை. நாபி - உந்தி. நாறுதல் - தோன்றுதல். இனிது என்புழி இனிமைப் பண்பு கட்கினிமையைக் குறித்து நின்றது. (௩௨)

௧௬௪௪. தடித்திறை திரண்டுதம் மளவிற் கேற்றசூழ்
கெடிற்றழ கழிப்பன கிளர்போற் றோரைய
கடிப்பகை நுழைவறக் கதிர்த்த கைவிர
லடுத்தமூக் கருமணி வயிரத் தோட்டியே.

(இ - ள்.) தடித்து இறை திரண்டு கிளர் பொன் தோரைய - தடித்து வரிகள் திரண்டு விளங்கும் பொன்னிற மூங்கிலரிசி அனையவாய்; கடிப்பகை நுழைவு அறக் கதிர்த்த கைவிரல் - வெண்சிறு கடுகும் நுழைய இயலாதவாறு ஒளிசெயும் கைவிரல்கள்; தம் அளவிற்கு ஏற்ற - தம் அளவிற்குத் தகவான; சூல் கெடிற்று அழகு அழிப்பன - சூல் கொண்ட கெளிற்று மீனின் அழகைக் கெடுப்பன; அடுத்த மூக்கு அருமணி வயிரத் தோட்டி - முகத்திற்குப் பொருந்திய மூக்கும் வயிரத் தோட்டியை ஒக்கும்.

(வி - ம்.) இறை - விரலிலுள்ள கோடுகள். இலக்கண நூலிற் கூறப்பட்ட அளவிற்கு என்க. கெடிறு - கெளிறு; ஒருவகை மீன். பொன் தோரை-பொன்னிறமுடைய மூங்கில் நெல்; கடிப்பகை. ஐயவி - வெண் சிறு கடுகு. கடிப்பகையும் நுழைதற் கியலாதபடி இடைவெளியற இணைந்த என்பது கருத்து. கதிர்த்தல் - ஒளிவிடுதல். வயிரத்தோட்டி - வயிர மணியாற் செய்த தோட்டி (அங்குசம்)

தோரைய என்னும் குறிப்பு வினைமுற்று வினையெச்சமாய் கதிர்த்த என்னும் பெயரெச்சத்தைக் கொண்டு அது கை விரல் என்பதைக் கொண்டது. (௩௩)

௧௪௬௫. வார்ந்திலங் கெயிறணி பவழ மாண்டவா
யார்ந்தபூ வங்கையு மடியுந் தாமரை
தேர்ந்தனன் றிருமகள் கணவ னாமெனத்
தீர்ந்தனன் சொல்லளைஇத் தேர்க்கொண் டேறினான்.

(இ - ள்.) வார்ந்து இலங்கு எயிறு அணிவாய் பவழம் - நீண்டு விளங்குகின்ற, பற்களையுடைய வாய் பவழத்தை ஒக்கும்; அங்கையும் அடியும் ஆர்ந்த தாமரைப்பூ - அகங்கையும் உள்ளடியும் பொருந்திய தாமரைப் பூவை ஒக்கும்; (ஆதலால்) திருமகள் கணவன் ஆம் எனத் தேர்ந்தனன்-இவன் திருமாலாவான் என்று தன்னிலே ஆராய்ந்தான்; சொல் அளைஇத் தீர்ந்தனன் - சீவகனோடு கலந்து உரையாடித் திருமால் அல்லன் என்று தெளிந்தான்; தேர் கொண்டு ஏறினான் - பின்னர்த் தேரிலே அவனை அமர்த்திக் கொண்டு தானும் ஏறினான்.

(வி - ம்.) மாண்ட வாய்-மாட்சிமையுடைய வாய். பற்களால் அணியப்பட்ட வாய் என்க. அளைஇ - கலந்து. அளைஇ என்பது தீர்ந்தனன் என்பதற்குக் குறிப்பேதுவாய் நின்றது. இவனே என் திருமகள் கணவனும் என்றும் ஒரு பொருள் தோற்றி நின்றது.

சீவகனுடைய தோற்றம் இந்த ஆறு செய்யுட்களிலும் தலைதடுமாறக் கூறிற்றாயினும் தலைமுதல் அடிவரை முறையே கொள்க. (௫௪)

௧௪௬௬. தேரிவ ரூர்ந்தனர் செல்ல விற்றலைக்
கூருகிர் விடுத்ததோர் கோல மாலையைப்
பேரிசை வீணையிற் சூட்டிப் பெண்கொடிக்
காரிகை யுலகுணர் கடவுட் பாடுமே.

(இ - ள்.) இவர் தேர் ஊர்ந்தனர் செல்ல - இவர்கள் தேரூர்ந்து சென்று கொண்டிருக்கும்போது; இல்தலை - சுபத்திரன் வீட்டிலே; கூர் உகிர் விடுத்தது ஓர் கோலம் மாலையை - கூரிய நகத்தால் வசிய மலர்த்திப் புனைந்த ஒரு செங்கழுநீர் மாலையை; பேர் இசை வீணையில் சூட்டி - நல்லிசையை எழுப்பும் வீணையிலே சூட்டி; உலகு உணர் கடவுள் - உலகு உணர்ந்த கடவுளை; பெண் கொடிக் காரிகை பாடும் - பெண் கொடியாகிய காரிகை பாடுவாள்.

(வி - ம்.) ஊர்ந்தனர் : முற்றெச்சம். "தண்கயத் தமன்ற ஒண்பூங் குவளை அரும்பலைத் தியற்றிய சுரும்பார் கண்ணி" என்றும் (அகநா. ௧அ0) "காலமன்றியும் கையினெரித்த கழுநீர்க் குவளை"(பெருங். ௧-௩௫ : ௧அ௩௪) என்றும் பிறசான்றோர் கூறுதல் நோக்கி மாலை என்றது செங்கழுநீர் மாலை எனப்பட்டது.

காரிகை : கேமசரி; ஆகுபெயர். உலகு - உயர்ந்தோர். (௫௫)

வேறு

௧௫௬௭. வீங்கோத வண்ணன் விரைததும்பு பூம்பிண்டித்
தேங்கோத முக்குடைக்கீழ்த் தேவர் பெருமானைத்
தேவர் பெருமானைத் தேனார் மலர்சிதறி
நாவி னவிற்றாதார் வீட்டுலக நண்ணாரே.

(இ - ள்.) வீங்கு ஓத வண்ணன் - பொங்கும் கடல் நிறத்தவனாகிய; விரைததும்பு பூம்பிண்டித் தேங்கு ஓதம் முக்குடைக் கீழ்த் தேவர் பெருமானை - மணம் கமழும் மலர்ப்பிண்டியின் அடியிலே தங்கிய குளிர்ச்சியை உடைய முக்குடையின் கீழ் எழுந்தருளிய வானவர் தலைவனை; தேவர் பெருமானை — ; தேன் ஆர் மலர் சிதறி - வண்டுகள் பொருந்திய மலர்களை யிட்டு; நாவின் நவிற்றாதார் வீட்டு உலகம் நண்ணார் - நாவினால் கூறாதார் வீட்டுலகை அடையார்.

(வி - ம்.) எனவே, நவிற்றுவோர் வீட்டுலகம் நண்ணுவர் என்பதாயிற்று.

"அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது" (குறள். ௮)

என்றார் வள்ளுவனாரும்.

முக்குடை : சந்திராதித்தம், நித்திய விநோதம், சகலபாசனம் என்பன. ஓதவண்ணன் : நேமிநாதர். (௬௬)

௧௫௬௮. அடல்வண்ண வைம்பொறியு மட்டுயர்ந்தோர் கோமான்
கடல் வண்ணன் முக்குடைக்கீழ்க் காசின் றுணர்ந்தான்
காசின் றுணர்ந்தான் கமல மலரடியை
மாசின்றிப் பாடாதார் வானுலக நண்ணாரே.

(இ - ள்.) அடல் வண்ண ஐம்பொறியும் அட்டு உயர்ந்தார் கோமான் - உயிரை வருத்தும் இயல்பையுடைய ஐம்பொறிகளையும் வென்று மேம்பட்ட முனிவர்கள் தலைவன்; கடல் வண்ணன் - கடல் நிறத்தான்; முக்குடைக் கீழ்க் காசு இன்று உணர்ந்தான் - முக்குடையின் கீழ் அமர்ந்த குற்றமில்லாது உணர்ந்தவன்; கமல மலரடியை - அப் பெருமானுடைய தாமரை மலர்போலும் அடியை; மாசு இன்றிப் பாடாதார் வான் உலகம் நண்ணாரே - குற்றமின்றிப் பாடாதவர் விண்ணுலகை அடையமாட்டார்.

(வி - ம்.) காசு - ஐயந்திரிபு. மாசு - காமவெகுளி மயக்கம். வானுலகம் - வீடு.

"பொறிவாயி லைந்தவித்தான்" என்பது பற்றி ஐம்பொறியும் அட்டு உயர்ந்தோர் கோமான் என்றார். பொறி - மெய் வாய் கண் மூக்குச் செவி என்பன. அவற்றை அடலாவது தத்தமக்குரிய புலன்களில் செல்லாது அடக்குதல். (௬௭)

கசசுசு. பூத்தொழியாப் பிண்டிக்கீழ்ப் பொங்கோத வண்ணனை
நாத்தழும்ப வேத்தாதார் வீட்டுலக நண்ணாரே
வீட்டுலக நண்ணார் வினைக்கள்வ ராறலைப்ப
வோட்டிடுப வெண்குணனுங் கோட்பட் டுயிராவே.

(இ - ள்.) பூத்து ஒழியாப் பிண்டிக் கீழ்ப் பொங்கு ஓத வண்ணனை - மலர்ந்து மாறாத பிண்டியின் கீழ் எழுந்தருளிய பொங்குங் கடல் வண்ணனை; நாத்தழும்ப ஏத்தாதார் வீட்டுலகம் நண்ணார் - நாவானது தழும்பு உறப் போற்றாதார் வீட்டையடையார்; வீட்டுலகம் நண்ணார் - அவ்வாறு வீடடையார்; வினைக் கள்வர் ஆறு அலைப்ப - தீவினையாகிய கள்வர் வழிபறித்தலாலே; எண் குணனும் கோட்பட்டு உயிரா ஓட்டிடுப - எண் குணங் களும் கள்வராற் பற்றப்பட்டுப் பெருமூச்செறிந்து ஓடிடுவர்.

(வி - ம்.) 'ஓடிடுப' என்பது 'ஓட்டிடுப' என விகாரப்பட்டது. எண்குணம், வரம்பிலா அறிவு முதலிய பண்புகள். அருகனை வணங்கா தார்க்கு நுகரப் பெருமையால் உளதாம் பற்று ஒழிவின்றாய் வருவ தன்றி, நுகர்ச்சி எய்திப் பற்றற்று வீடுபெறுதல் கூடாதாய் இருந்த தென்பது கருத்து. முன்னர் வணங்காமையின் தானும் இவ்வருத்தம் உற்றேன் என்றாள்.

இவை படர்க்கையாதலிற் பொருள் வேறுபட்டு வந்த தேவபாணிக் கொச்சக ஒருபோகு. (கஅ)

வேறு

கசஎ0. முத்துமிழு முந்நீர் மணிவண்ணன் மூன்றுலகும்
பத்திமையாற் பாடப் படுவான்றாள் பாடக்கேட்
டொத்தரம்பை யன்னா ளுவந்திவளோ டொப்பானோர்
வித்தகனை யின்னே பெறுக வெனவுரைத்தாள்.

(இ - ள்.) முத்து உமிழும் முந்நீர் மணிவண்ணன்-முத்துக் களைக் கொழிக்கும் கடல் நீர் போன்ற நீலவண்ணனும்; மூன்று உலகும் பத்திமையால் பாடப்படுவான் தாள் பாடக் கேட்டு - மூன்றுலகும் அன்பினாற் பாடப்படுவோனுமாகிய அருகன் தாளைக் கேமசரி பாடக் கேட்டு; அரம்பை அன்னாள் ஒத்து உவந்து - அரம்பையைப் போன்ற நிப்புதி தன் கருத்தும் தன் மகள் கருத்தும் ஒத்தலின் மகிழ்ந்து; இவளொடு ஒப்பான் ஓர் வித்தகனை-இவளழகுக்கு ஏற்றவனாகிய ஒரு வித்தகனை; இன்னே பெறுக என உரைத்தாள் - இப்போதே இவள் அடையவேண்டும் என்று இறைவனைப் பரவினாள்.

(வி - ம்.) முந்நீர் வண்ணன் மணிவண்ணன் எனத் தனித்தனி கூட்டுக. முந்நீர் - மூன்று நீரையுடையது அல்லது மூன்று தொழிலை யுடையது என்னும் பொருள்பட்டுக் கடலுக்காயிற்று.

வித்தகன் - சதுரப்பாடுடையவன். இன்னே - இப்பொழுதே. உரைத்தாள் என்பது வேண்டிப்பரவினள் என்பதுபட நின்றது. (௯௯)

வேறு

௧௬௭௧. நிலந்தினக் கிடந்தன நிதியந் நீணகர்ப்
புலம்பறப் பொலிவோடு புக்க காலையே
யிலங்குபூங் கோடியன வேழை நோக்கமு
முலங்கொடோ ளுறுவலி நோக்கு மொத்தவே.

(இ - ள்.) நிலம் தினக் கிடந்த அன நிதி - மண் தின்னுமாறு கிடந்த செல்வத்தையுடைய; அந் நீள் நகர் - அப் பெரிய மனையிலே; புலம்பு அறப் பொலிவொடு புக்க காலை - அம் மனையிலுள்ளோரின் வருத்தம் நீங்க அழகுறச் சீவகன் புகுந்தபோது; உலம்கொள் தோள் உறுவலி நோக்கும் - கற்றூண் போன்ற தோளையுடைய மிகுவலியுடைய சீவகன் பார்வையும்; இலங்கு பூங்கொடி அன ஏழை நோக்கமும் - விளங்கும் பூங்கொடி போன்ற கேமசரியின் பார்வையும்; ஒத்த - ஒன்றுபடப் பொருந்தின.

(வி - ம்.) நிலந்தினக் கிடந்தன நிதியம் என்றது அழிவின்றி மிக்குக் கிடக்கும் நிதியம் என்பதுபட நின்றது. அஃதாவியல்பிற்றாய செல்வம் தங்கிக் கிடத்தற்குக் காரணங் கூறுவார் நச்சினார்க்கினியர் அறத்தால் தேடின பொருள் என்று நுண்ணிதின் உரைத்தனர்.

நிதியந் நீள்நகர் என்புழி மகரவீறு கெடாமல் நகர வீறாய்த் திரிந்து நின்றது.

பெண்டிரின் மென்மைப் பண்பு குறித்த ஏழை என்னும் சொல்லால் கேமசரியையும் ஆடவரின் வன்மையைக் குறித்த உறுவலி என்னுஞ் சொல்லால் சீவகனையுங் கூறிய நயமுணர்க. அவளைப் பூங்கொடி என்றும் அவனை உலங்கொள்தோள் உடையன் என்றலும் உணர்க. உறுவலி : அன்மொழித்தொகை : சீவகன். (௬௦)

வேறு

௧௬௭௨. கண்ணுறக் காளையைக் காண்டலுங் கைவளை
மண்ணுறத் தோய்ந்தடி வீழ்ந்தன மாமையு
முண்ணிறை நாணு முடைந்தன வேட்கையு
மோண்ணிறத் தீவினைத் தாளுருக் குற்றாள்.

(இ - ள்.) காளையைக் கண் உறக் காண்டலும் - காளையை அங்ஙனம் அவள் எதிர்ப்படக் கண்டாளாக; கைவளை மண்உறத் தோய்ந்து அடி வீழ்ந்தன - கையில் இருந்த வளைகள் மண் உறப் பொருந்திக் காலடியிலே வீழ்ந்தன; மாமையும் உள்நிறை

நாணும் உடைந்தன - மாமையும் உள்ளிருந்த நிறையும் நாணும் கெட்டன; வேட்கையும் ஒள்நிறத் தீ விளைத்தாள் உருக்கு உற்றாள் - அவாவையும் ஒளிரும் தீயென விளைவித்துக் கொண்டாள்; தானும் அத் தீயாலே உருக்குண்டாள்.

(வி - ம்.) உண்ணிறையும் நாணம் : வினைத்தொகை. (௬௧)

௧௬௭௩. வாக்கணங் கார்மணி வீணைவல் லாற்கவ
ணோக்கணங் காய்மன நோய்செய நொந்தவன்
வீக்கணங் கார்முலை வேய்நெடுந் தோளியோர்
தாக்கணங் கோமக ளோவெனத் தாழ்ந்தான்.

(இ - ள்.) வாக்கு அணங்கு ஆர் மணி வீணை வல்லாற்கு - திருத்தமுற்ற தெய்வத்தன்மை நிறைந்த அழகிய யாழ் வல்ல சீவகனுக்கு; அவள் நோக்கு அணங்காய் மனநோய் செய-அவள் நோக்கம் வருத்தமாய் மனத்தை நோய் செய்தலாலே; அவன் நொந்து - அவன் வருந்தி; வீக்கு அணங்கு ஆர் முலை வேய் நெடுந்தோளி - கச்சினால் இறுக்கப்பட்டு வருத்தம் நிறைந்த முலையினையும் வேய் போன்ற நீண்ட தோளினையும் உடையாள்; ஓர் தாக்கு அணங்கோ மகளோ எனத் தாழ்ந்தான் - தாக்கி வருத்தும் ஒரு தெய்வ மகளோ மானிட மகளோ என ஐயுற்றுக் குறைந்தான்.

(வி - ம்.) வாக்கு - திருத்தம். வாக்கணங்கு என்று கொண்டு நாமகள் எனினுமாம். இனி, அணங்கு என்றற்கு வீணைக்குரிய மாதங்கி என்னும் தெய்வம் எனினுமாம். இது நச்சினார்க்கினியர் கொள்கை. சீவக. ௫௫௦-ஆம் செய்யுளையும் உரையையும் காண்க.

தாக்கு அணங்கு : திருமகள் என்பர் நச்சினார்க்கினியர். (௬௨)

௧௬௭௪. நல்வளத் தாமரை நாணிய வாண்முகக்
கோல்வளர் வேற்கணி ளுள்குழைந் தாளெனச்
சொல்வளர்த் தாரவ டோழியர் சோர்குழன்
மல்வளர் மார்பனை வந்து வளைந்தார்.

(இ - ள்.) நல்வளம் தாமரை நாணிய வாண்முகம் - நல்ல வளமிகும் தாமரை மலர் வெள்கிய ஒளியுறும் முகத்திலே; கோல் வளர் வேற்கணினாள் குழைந்தாள் என - கொல்லுந் தொழிலிற் கிடந்த வேலைப்போன்ற கண்ணாள் வருந்தினாள் என்று; சோர் குழல் அவள் தோழியர் சொல் வளர்த்தார் - சோர்ந்த குழலையுடைய கேமசரியின் தோழிகள் சொல்லைப் பரப்பியவராய்; மல்வளர் மார்பனை வந்து வளைந்தார் - மல்லிலே மேம்பட்ட மார்பினனாம் சீவகனை வந்து சூழ்ந்தனர்.

(வி - ம்.) சோர்குழல் அவள் எனக் கூட்டுக. (௬௩)

கசஎரு. நினைப்பரு நீணிறை நிப்புதி சேர்ந்தாங்
கினத்திடை யேறனை யானெழி னோக்கிப்
புனக்கொடி பொற்பொடு புண்ணிய நம்பி
வனப்பினை யேகண்டு வாட்க ணகன்றாள்.

(இ - ள்.) *நினைப்ப அரு நீள் நிறை நிப்புதி ஆங்கு சேர்ந்து - நினைப்பில் அடங்காத பெருங் கற்பினளாகிய நிப்புதி ஆங்கு வந்து; இனத்திடை ஏறனையான் எழில் நோக்கி - ஆவின் திரளிடையே நிற்கின்ற ஏறுபோன்ற சீவகனின் அழகைப் பார்த்து; புனக்கொடி பொற்பொடு புண்ணிய நம்பி வனப்பினையே கண்டு - புனத்திற் கொடிபோன்ற கேமசரியின் அழகுடன் சீவகனின் அழகையுமே ஒப்பிட்டுப் பார்த்து; வாள்கண் அகன்றாள் - வாளனைய கண்கள் உடம்பெல்லாம் பெற்றாற் போலானாள்.*

(வி - ம்.) *'ஏறனையான் எழில் புனக்கொடி பொற்பொடு நோக்கி' என முன்னர்க் கூட்டிப், பின்னர், 'புண்ணிய நம்பி வனப்பினையே பார்த்து வாட்கண் அகன்றாள்' என்பர் நச்சினார்க்கினியர்.*

*நிப்புதி : நிஸ்ப்ருதி என்பதன் திரிபு என்பர். வாட்கண்ணாள் மீண்டுபோனாள் என்றும் உரைக்கலாம்.*

*மகளிர் கூட்டத்தினிடையே நின்றமை கருதி இனத்திடை ஏறனையான் என்றார்.* (கசு)

கசஎசு. வள்ளலை வாசநெய் பூசி மணிக்குடத்
தெள்ளற னீர்சொரிந் தாட்டினர் தேம்புகை
யுள்ளுற வுண்ட கலிங்க முடுத்தபின்
கள்ளவிழ் கண்ணி கலத்தொ டணிந்தார்.

(இ - ள்) *வள்ளலை வாச நெய்பூசி - சீவகனை மணமுறும் நெய்யைப் பூசி; மணிக்குடம் தெள் அறல் நீர் சொரிந்து ஆட்டினர் - மணிக்குடத்திலிருந்து தெள்ளிய அறலையுடைய நீரைப் பெய்து ஆட்டினர்; தேம் புகை உள்உற உண்ட கலிங்கம் உடுத்த பின் - பிறகு, இனிய புகையைத் தன்னிடம் கொண்ட ஆடையை அவன் உடுத்திய பின்னர்; கள் அவிழ் கண்ணி கலத்தொடு அணிந்தார் - (மகளிர் அவனுக்குத்) தேன் சொரியும் கண்ணியையும் பூண்களையும் அணிவித்தனர்.*

(வி - ம்.) *தானே வலியவந்து கேமசரிக்குத் தன்னையே வழங்கினமை கருதி 'வள்ளலை' என்றார். கலிங்கம் - கலிங்க நாட்டில் நெய்யப்பட்டதோர் ஆடையைக் குறித்துப் பின்னர் ஏனைய ஆடைக்கும் பொது வாய் நின்றதொரு சொல்.*

*கண்ணி - தலையிற் சூட்டுமாலை. கலத்தொடு - ஆபரணத்துடன்.* ()

௧௬௭௭. மங்கல வெள்ளை வழித்துமுத் தீர்த்தபின்
கொங்கலர் கோதையர் கொண்டக மெய்தி
யங்கதிர்ப் பொற்கலத் தாரமிர் தேந்தினர்
செங்கயற் கண்ணியர் சீரி னயின்றான்.

(இ - ள்.) மங்கல வெள்ளை வழித்து முத்து ஈர்த்தபின் - (உண்ணுமிடத்தைச்) சந்தனத்தால் மெழுகி முத்தாலே கோலம் இட்டபிறகு; கொங்கு அலர் கோதையர் செங்கயற் கண்ணியர் கொண்டு அகம் எய்தி - தேனையுடைய மலர்க் கோதையராகிய கயற்கண்ணியர் அவனை அழைத்துச் சென்று உட்புகுந்து; அம் கதிர்ப் பொற்கலத்து ஆர் அமிர்து ஏந்தினர் - அழகிய ஒளிமிகும் பொற்கலத்திலே சிறந்த அடிசிலை ஏந்தினர்; சீரின் அயின்றான் - அவனும் அவர் புகழ்ச்சியுடன் உண்டான்.

(வி - ம்.) வெள்ளை - சந்தனத்தில் ஒருவகை. இது வெண்ணிறமுடைமையின் மங்கலப் பொருளாகவும் மதிக்கப்படும். முத்தும் மங்கலங்கருதிக் கூறப்பட்டது. (௬௬)

௧௬௭௮. பத்தியிற் குயிற்றிய பைம்பொற் றிண்ணைமேற்
சித்திரத் தவிசினுட் செல்வன் சீர்பெற
நித்தில் மணியுறழ் கரக நீரினா
லத்துறை விடுத்தன னலர்ந்த தாரினான்.

(இ - ள்.) பத்தியில் குயிற்றிய பைம்பொன் திண்ணைமேல் சித்திரத் தவிசினுள் - பத்தியாகச் செய்யப்பட்ட பசும்பொன் திண்ணையின் மேல் ஓவியத் தொழில் கொண்ட இருக்கையிலே; அலர்ந்த தாரினான் செல்வன் - மலர்ந்த மாலையான் ஆகிய சீவகன் (அமர்ந்து); நித்தில மணி உறழ் கரக நீரினால் - முத்தாகிய மணியைப்போன்ற கரகத்திலிருந்து வார்த்த நீரைக்கொண்டு; சீர்பெற அத்துறை விடுத்தனன் - ஒழுங்காகப் பூசுதற்குரிய தொழில்களையெல்லாம் முடித்துவிட்டான்.

(வி - ம்.) திண்ணைமேல் இடப்பட்ட தவிசினுள் இருந்து என்க. அத்துறை - உண்ணுதலாகிய அத்துறை என்க.

கரகம் : கெண்டிகை. (௬௭)

௧௬௭௯. இளிந்தகாய் கமழ்திரை வாச மீண்டியோர்
பளிங்குபோழ்ந் தருகுபோன் பதித்த பத்தியின்
விளிம்புமுத் தழுத்திய யவனக் கைவினைத்
தெளிந்தபோன் னடைப்பையுட் பாகு சென்றவே.

(இ - ள்.) ஓர் பளிங்கு போழ்ந்து - ஒரு முழுப் பளிங்கை அறுத்து; அருகு பொன் பதித்த பத்தியின் - அதன் பக்கத்தே

பொன்னிடப்பட்ட பத்தியிலே; விளிம்பு முத்து அழுத்திய - விளிம்பில் முத்துக்களை அழுத்திய; யவனக் கைவினைத் தெளிந்த பொன் அடைப்பையுள் - யவனத் தச்சர் கைவினையுடைய தெளிந்த பொன் அடைப்பையிலே; இளிந்த காய் கமழ் திரை வாசம் பாகு ஈண்டிச் சென்ற - இணுங்கின காயும் மணங்கமழ் வெற்றிலையும் முகவாசமும் தனிப்பாகும் சென்றன.

(வி - ம்.) இணுங்குதல் - பறித்தல். காய் - பாக்கு. திரை - வெற்றிலை. யவனம் - அந்நாட்டுக் கம்மியர்க்கு ஆகுபெயர். அடைப்பை - வெற்றிலை முதலியன இட்டுவைக்கும் பை.

ஒரு பளிங்கையறுத்துப் பொன்னை விளிம்பிற் பதித்த அடைப்பையில் இணுங்கின காயும் வெற்றிலையும் பார்வைக்குச் சென்றன என்றும், யவனக் கைவினைபெற்ற முத்தழுத்திய பொன்னடைப்பையிலே பாக்கும் வெற்றிலையும் முகவாசமும் ஈண்டித் தின்றற்குச் சென்றன என்றும் நச்சினார்க்கினியர் உரைப்பார். ஒன்றாக உரைப்பாருமுளரென்றார். (௬௮)

௧௬௮௦. பாசிலை சுருட்டுபு கறித்துப் பல்லினைத்
தேசிகம் படத்துடைத் துமிழ்ந்து தேங்கமழ்
வாசம்வாய்க் கொண்டனன் மணிசெய் குண்டலம்
வீசிவில் விலங்கிவிட் டுமிழ வென்பவே.

(இ - ள்.) மணிசெய் குண்டலம் வீசி வில் விலங்கி விட்டு உமிழ - மணியாற் செய்த குண்டலம் ஒளியைக் குறுக்கிட்டு உமிழும்படி; பாசிலை சுருட்டுபு கறித்து - வெற்றிலையைச் சுருட்டிக் கறித்து; பல்லினைத் தேசிகம் படத்துடைத்து உமிழ்ந்து - (அதன் குறையாலே) ஒளியுண்டாகப் பல்லைத்துடைத்து அதனை உமிழ்ந்து; தேன்கமழ் வாசம் வாய்க்கொண்டனன் - இனிமை கமழும் வெற்றிலை முதலிய முகவாசத்தை உட்கொண்டான்.

(வி - ம்.) வெற்றிலையை முன்னிட்டுப் பின் பிளவை மெல்லுதல் வேண்டும் என்பது ஒரு விதி.

கறித்து - மென்று; இக்காலத்தே கடித்து என வழங்குவர். மெல்லுங்காற் குண்டலம் அசைதல் இயல்பாதலுணர்க.

தேசு - தேசிகம் எனத் திரிந்தது. (௬௯)

௧௬௮௧. பண்ணுலாங் கிளவிதன் பரவை யேந்தல்குல்
வண்ணமே கலையிவை வாய்ந்த பூந்துகி
லுண்ணிலாய்ப் பசுங்கதி ருமிழ்வ பாவியேன்
கண்ணையு மனத்தையுங் களங்கொண் டிட்டவே.

(இ - ள்) பண்உலாம் கிளவிதன் பரவை ஏந்து அல்குல் வண்ணமேகலை இவை - பண்ணொத்த கிளவியாளுடைய பரப்பு

டைய ஏந்திய அல்குலும் வண்ணமுறும் மேகலையும் ஆகிய இவை; வாய்ந்த பூந்துகில் உள் நிலாய்ப் பசுங்கதிர் உமிழ்வ - பொருந்திய அழகிய துகிலின் உள்ளே நிலைபெற்று நின்று புத்தொளி உமிழ்வன; பாவியேன் கண்ணையும் மனத்தையும் களம் கொண்டிட்ட - பாவியேனுடைய கண்ணையும் மனத்தையும் தமக்கு இருப்பிடமாகக் கொண்டுவிட்டன.

(வி - ம்) உலாம் : உவமப்பொருட்டு. கிளவி : கேமசரி. பரப்புடையதாய் ஏந்திய அல்குல் என்க. அல்குல் முதலியன பூந்துகிலுள் இருப்பனவாகவும் என் கண்ணினும் மனத்தினும் இருந்தன, இஃதொரு புதுமை என்று வியந்தபடியாம்.

இது முதல் 'கலைத்தொகை' (சீவக - கசுஅஅ) வரை சீவகன் கேமசரியை நினைத்து வருந்துதல் கூறப்படும். (எ0)

கசுஅஉ. கடிகமழ் குழலினாற் கட்டி மெய்யெலா
நடுவோசி நோன்சிலைப் புருவத் தாற்புடைத்
தடுமலர் நெடுங்கணா லாவி போழ்ந்திடாக்
கொடியவ ளிளமுலை கொல்லுங் கொல்லுமே.

(இ - ள்.) மெய்யெலாம் கடிகமழ் குழலினால் கட்டி - என் மெய்யையெல்லாம் மணம்கமழும் தன் குழலினாலே கட்டி; நடு ஓசி நோன்சிலைப் புருவத்தால் புடைத்து - நடு வளைந்த வலிய வில்லாகிய தன் புருவத்தாலே அடித்து; அடும் மலர் நெடுங்கணால் ஆவி போழ்ந்திடா - வருத்தும் மலரனைய நீண்ட கண்களால் உயிரைப் பிளந்திட்டு; கொடியவள் இளமுலை கொல்லும் கொல்லும் - கொடியவளுடைய இளமுலைகளாகிய யானை என்னைக் கொல்லும் கொல்லும்.

(வி - ம்.) முலை தான் வருத்தலுடைமையின் தானும் வினைமுதலாம். புருவத்தாற் புடைத்துக் கண்ணால் ஆவிபோழ்ந்திடாத கொடியவள் தன் குழலாலே கட்ட முலைகொல்லும் என முடிப்பர் நச்சினார்க்கினியர். இவையெலாம் வருத்துகின்றனவே யாதலின் புருவத்தையுங் கண்ணையுந் தீங்குசெய்யாதனவாகக் குறிப்பிடுதலிற் போதிய பயனின்றாம். போழ்ந்திடா - போழ்ந்திட்டு : செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (எக)

கசுஅந. கடியன கச்சினாற் கட்டப் பட்டன
கொடியன குங்குமங் கொட்டப் பட்டன
வடிநிலம் பரந்துமுத் தணிந்த வெம்முலை
யிடைநிலஞ் செகுப்பன வென்னை யென்செயா.

(இ - ள்.) கடியன - இயல்பாக மணமுடையனவாய்; கச்சினால் கட்டப்பட்ட - கச்சினாற் கட்டப்பட்டனவாய்; கொடியன - எழுது கொடி உடையனவாய்; குங்குமம் கொட்டப்பட்டன -

குங்குமம் இடப்பட்டனவாய்; அடிநிலம் பரந்து முத்து அணிந்த வெம்முலை - அடியிடம் பரந்து முத்துக்களை அணிந்த விருப் பூட்டும் முலைகள்; இடை நிலம் செகுப்பன - தம்மைச் சுமந் திருக்கின்ற இடையாகிய இடத்தைக் கெடுப்பன; என்னை என் செயா - யான் அகப்பட்டால் எத்துன்பத்தையும் செய்யும் அல்லவோ!

(வி - ம்.) 'உலகில் தொழிலாற் கடியவர்கள் கட்டுண்ணப்படுவ ரென்றும், மனம் கொடியவர்கள் ஒன்றூற் புடையுண்ணப் படுவரென்றும் ஒரு பொருள் தோன்றிற்று' என்பார் நச்சினார்க்கினியர்.

தம்மைத் தாங்குவதாகிய இடையினையே செகுப்பன; ஏதிலனாகிய என்னை என் செயா! எதுவுஞ்செய்யும் என்பது கருத்து. (எ௨)

௧௫அ௪. கரியவுள் வெறியன கட்டப் பட்டன
புரிவொடு புறத்திடப் பட்ட பூங்குழல்
தெரியின்மற் றென்செயா செய்ய நீண்டன
பெரியகண் போலவும் பேது செய்யுமே.

(இ - ள்.) கரிய - கருநிறமுடையனவாய்; உள் வெறியன - உள்ளே மணமுடையனவாய்; கட்டப்பட்டன - கட்டி முடிக்கப் பட்டனவாய்; புரிவொடு புறத்து இடப்பட்ட பூங்குழல் - கடை குழைதலுடன் எருத்தத்தே கிடத்தப்பட்ட பூங்குழல்கள்; செய்ய நீண்டன - செய்யனவாய் நீண்டிருக்கின்றனவாகிய; பெரிய கண்போலவும் பேது செய்யும் - பெரிய கண்களைப்போல வும் வருத்தம் புரிகின்றன; தெரியின் என் செயா - ஆராயின் எல்லாஞ் செய்ய வல்லன.

(வி - ம்.) செய்யனவும் நீண்டனவும் பெரியனவும் ஆகிய கண்கள் தம் நல்லியல்பிற்கு மாறாகத் தீங்கு செய்கின்றன; இங்ஙனமாகக் கரியன வும் வெறியனவும் புறத்தே தள்ளப்பட்டனவுமாகிய தீயவியல்புடைய ஐம் பால் அக்கண்போற் றீங்கு செய்தல் வியப்போ? ஆராயின் அவை எதுவும் அஞ்சாமற் செய்யும் என்பது கருத்து.

இதன்கண் சிறப்புப் பொருளையே உவமையாக்கி இரண்டன் தீமை யையும் விளக்குதல் உணர்க.

கொடியனவாய், உள்ளே கள்ளின் மயக்குடையனவாய்க் கட்டுண் ணப்பட்டனவாய் எப்போதும் திருகுதலுடனே தம்மிடத்தினின்றும் கீழ்ப்போந்து கிடக்கும்படி புறத்திடப்பட்டனவாய் என்றும் ஒரு பொருள் தோன்றிற்று. உள்வெறியன - உள்ளே ஒன்றுமில்லாதன வாய் எனினும் ஆம். (எ௩)

௧௫அ௫. காதன்மை கண்ணுளே யடக்கிக் கண்ணெனுந்
தூதினாற் றணிபொரு ளுணர்த்தித் தான்றமர்க்
கேதின்மை படக்கரந் திட்ட வாட்கணாேக்
கோதநீ ரமுதமு மூலகும் விற்குமே.

(இ - ள்.) காதன்மை கண்ணுளே அடக்கி - தன் வேட்கையையெல்லாம் ⁻ ⁻ கண்ணுள்ளே கிடத்தி; கண் எனும் தூதினல் துணிட ..ருள் உணர்த்தி - அக் கண்ணென்கின்ற தூதாலே தான் எண்ணிய பொருளை எனக்கு அறிவித்து; தான் தமர்க்கு ஏதின்மைபடக் கரந்திட்ட - தான் தன் சுற்றத்தார்க்கு வேட்கை யாகிய காரணம் தோன்ருதவாறு மறைத்திட்ட; வாள் கண் நோக்கு - கேமசரியின் நோக்கம்; ஓதநீர் அமுதமும் உலகும் விற்கும் - கடலில் தோன்றிய அமுதத்தையும் உலகையும் தனக்கு விலையாகக் கொள்ளும்.

(வி - ம்.) காதன்மை - காதற்றன்மை. கண்ணென்னும் தூது என்றது தாஞேக்காக்காற் றன்னை நோக்கும் களவு நோக்கத்தை. இஃது அவள் உடம்பாட்டைத் தனக்குணர்த்துதலின் தூது எனப்பட்டது. தமர் அறியாமைப் பொருட்டு என்னை ஏதின்மைபடவும் நோக்கும் நோக்கு என்க.

"ஏதிலார்போலப் பொது நோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே உள." (குறள். ௧0௯௯)

இச்செய்யுள் தேவரின் ஒப்பற்ற புலமைக்கோர் எடுத்துக்காட்டாகும்.

'கண்ணுளே' என்பதற்குத், 'தன்னுளே' என்பதூஉம் பாடம். (எ௪)

வேறு

௧௪அ௬. மிகுகோடா முத்தஞ் சூட்டி
மீளிமை தீர்த்து மின்னு
நகுகோடா மணிக ணல்ல
தெளித்துக்கொண் டெழுதி நன்பொன்
முகபடாம் வைப்ப வாட்சேற்
றழன்றுகண் கரிந்த முல்லைத்
தோதுகடாங் கோதை வெய்ய
துணைமணி முலைக டாமே.

(இ - ள்.) முல்லைத் தொகு கள்தாம் கோதை வெய்ய துணைமணி முலைகள் தாம்-முல்லைமலரின் திரண்ட தேன்பரக்கும் மாலையையுடைய இணையாகிய, மணியணிந்த வெய்யனவாகிய முலைகள்தாம்; கொடா மிகு மீளிமை தீர்த்து-ஒழிந்தவற்றிற்குக் கொடாத மிகுகின்ற வலிமையைத் தீர்த்து; முத்தம் சூட்டி - முத்துக்களை அணிந்து; மின்னும் நகுகொடா மணிகள் நல்ல தெளித்துக் கொண்டு எழுதி - மின்னும் தம்மை யிகழாத மணிகளில் நல்லனவற்றைக் கரைத்துக்கொண்டெழுதி; நன்பொன் முகபடாம் வைப்ப - நல்ல பொற்கச்சாகிய முகபடாத்தையும்

வைப்ப ; (இவ் விடையீட்டாலே வெளியே நின்று கொல்லமுடியாமல், உள்ளே நின்று); ஆள் செற்று - ஆளைச் செறுத்து ; அழன்று - நோக்கி உள்ளம் அழன்று ; கண் கரிந்த - கண் கருகின.

(வி - ம்.) ஒழிந்தவை - இம்முலைகள் ஒழிந்த ஏனையுறுப்புகள். ஏனையுறுப்புக்களினும் மிக்கு வருத்துகின்றமையால் கொடா மிகு - மீளிமை என்றார். நகு கொடா - நகுதற்கு இடங்கொடாத எனினுமாம்.

சூட்டுதலாலும் எழுதுதலாலும் முகபடாம் வைத்தலாலும் மீளிமை தீர்த்து மறைத்தலான் வெளியே நின்று கொல்லமாட்டாமல் உள்ளேயிருந்தே அழன்று கண்கரிந்தன என்பது கருத்து.

மீளிமை - கொங்கையின் வலி : பன்னீராண்டும் சென்று முலை முதிர்தலின் கண் கருகின என்றார். (எகு)

கசஅஎ. தேன்கறி கற்ற கூழைச்
சேண்பக மாலை வேற்க
ணூன்கறி கற்ற கால
ணொண்மணித் தடக்கை வைவேல்
கூன்பிறை நுதலோர் கூற்றங்
குவிமுலை நமன்கைப் பாசம்
யான்பிற னளியன் வாழ்வா
ணாசைப்பட் டிருக்கின் றேனே.

(இ - ள்.) தேன்கறி கற்ற கூழைச் செண்பகமாலை வேற்கண் - வண்டுகள் உண்ணக் கற்ற கூந்தலையுடைய கேமசரியின் கண்கள் ; ஊன்கறி கற்ற காலன் தடக்கை ஒண்மணி வைவேல் - ஊனைத் தின்னக் கற்ற, காலனுடைய பெரிய கையிலுள்ள ஒள்ளிய மணியிழைத்த கூரிய வேலாகும்; கூன் பிறை நுதல் ஓர் கூற்றம் - வளைந்த பிறை அனைய புருவம் ஒப்பற்ற காலனேயாகும் ; குவிமுலை நமன்கைப் பாசம் - குவிந்த முலைகள் நமன் கையில் உள்ள பாசம் ; வாழ்வான் ஆசைப்பட்டிருக்கின்றேனே - (இங்ஙனமாகவும்) உயிர் வாழ் ஆசைகொண்டுள்ளேனே ஆதலின்; யான் பிறன் அளியன் - யான் மக்களிடையுள்ளே னல்லேன் ; இரங்கத்தக்கேன்.

(வி - ம்.) செண்பகமாலை என்றது கேமசரி என்னும் பெயர் மாத்திரையாய் நின்றது. வேற்கண் என்புழி அடை மொழி உவமங்குறியாமல் வாளா நின்றது.

இனிக் குவிமுலை என்பதனைப் பெயராக்கிக் குவிமுலையின் கூழைச் செண்பகமாலை கைப்பாசம், கண் கை வேல் எனினுமாம்.

இருக்கின்றேனே : ஏ : தேற்றம். கூற்றம், நமன் என்பன சுட்டுப் பெயர். இனி, காலன் கூற்றத்திற்கு ஏவல் செய்பவனுமாம். (எகூ)

வேறு

௧௪௮௮. திருவிற்குங் கற்பகத் தேரியன் மாலையா
ருருவிற்கோர் விளக்கமா மோண்பொற் பூங்கோடி
முருகற்கு மநங்கற்கு மேனக்கு மோய்சடை
யொருவற்கும் பகைத்தியா லொருத்தி வண்ணமே.

(இ - ள்.) கற்பகத்தெரியல் மாலையார் உருவிற்கு ஓர் விளக்கமாம் ஒண்பொன் பூங்கொடி - கற்பகத்தில் தெரிதலையுடைய மாலை பொருந்தியதோர் உருவிற்கு விளக்கமாம் பொற்பூங்கொடி; திருவிற்கும் முருகற்கும் அநங்கற்கும் எனக்கும் மொய்சடை ஒருவற்கும் - திருமகளுக்கும் முருகனுக்கும் காமனுக்கும் எனக்கும் நெருங்கிய சடையையுடைய இறைவனுக்கும்; பகைத்தி - பகையாக இருக்கின்றாள்; ஒருத்தி வண்ணம் - ஒருத்தியின் வடிவிருந்தபடி என்னே!

(வி - ம்.) திருமகளின் அழகையும், முருகன் வேலையும், காமன் வில்லையும், சீவகன் அறிவையும், இறைவன் பிறையையும் வாங்கியதாற் பகை யென்றான். வேல் கண்ணுக்கும், வில் புருவத்திற்கும், பிறை நெற்றிக்கும் உவமையாயின. 'திருவிற்கோர்' என்பதூஉம் பாடம். இனி பூங்கொடி ஒருத்தி திரு, முருகன், காமன், இறைவன் ஆகியோர்க்கு வடிவினாலேயே பகைத்தியாயினாள்; எனக்கு உயிர்க்கே பகைத்தியாயினாள் என்றுமாம்.

திருவிற்கும் கற்பகத்தெரியலாகிய மாலையணியும் இந்திராணி முதலிய வானவ மகளிர்க்கும் அழகிற்கோர் விளக்கமாக அமைந்த கேமசரி எனினும் பொருந்தும். பூங்கொடி: கேமசரி. இறைவன் - சிவபெருமான். பகைத்தி - பகைமை யுடையவள். (௭௭)

௧௪௮௯. கலைத்தோகை நலம்பல கடந்த காளைதா
னலத்தகை யவணல நினைப்ப நாய்கனு
மலைத்தோகை மதந்தவழ் யானை மன்னவ
னிலத்தவர்க் கறிவுற நெறியிற் செப்பினான்.

(இ - ள்) கலைத்தொகை நலம்பல கடந்த காளைதான் - கலைத்தொகுதிகளின் நலம் பலவற்றையும் அறிந்த சீவகன்தான்; நலத்தகையவள் நலம் நினைப்ப-தன்மேல் அன்பின் தகைமையையுடையவள் அழகினை இவ்வாறு நினைத்திருப்ப; நாய்கனும் - சுபத்திரனும்; மலைத்தொகை மதம்தவழ் யானை மன்னவன் நிலத்தவர்க்கு - மலைகளின் திரள்போன்ற மதம்பொருந்திய யானைகளையுடைய அரசனுக்கும் தன் சுற்றத்தவர்க்கும்; அறிவுற நெறியிற் செப்பினான் - தெரியுமாறு முறைப்படி அறிவித்தான்.

(வி - ம்.) அரசன் செறிந்திருத்தலின் அவனுக்கு மணத்தினை அறிவித்தான்.

கேமசரி வருத்தம் 'கண்ணுற' 'நல்வளை' (சீவக. ௧௬௭௨, ௧௬௭௩) என்பனவற்றிற் கூறினர்.

அரசனுந் தானும் நெருங்கிய கேண்மையுடையர் ஆதலின் அவனுக்கும் ஏனையோர்க்கும் அறிவித்தான் என்பது கருத்து.

மன்னவன் என்புழி நான்கனுருபோடு உம்மையும் நிலத்தவர்க்கு என்புழி உம்மையும் செய்யுள் விகாரத்தாற் றொக்கன. (எஅ)

௧௬௯௦. இடியுமி ழெறிதிரை முழக்கிற் பல்லியங்
கோடியணி வியனகர்க் குழுமி யார்த்தெழக்
கடிமண மியற்றினர் கடவு ணாளினால்
வடிமலர்க் கோதையை மைந்தற் கென்பவே.

(இ - ள்.) கொடி அணி வியன் நகர்-கொடி அணிந்த பெரு நகரில்; கடவுள் நாளினால் - நல்லநாளிலே; மைந்தற்கு வடிமலர்க் கோதையை - சீவகனுக்குக் கேமசரியை; இடி உமிழ் எறி திரை முழக்கில் - இடியுமிழ் ஒலியும் வீசும் அலைகடல் முழக்கும்போல; பல்இயம் குழுமி ஆர்த்து எழ - பல திருமண இயங்கள் திரண்டொலிக்க; கடிமணம் இயற்றினர் - திருமணம் புரிவித்தனர்.

(வி - ம்.) இடியுமிழ் முழக்குப்போலவும் திரைமுழக்குப் போலவும் பல்லியம் ஆர்த்தெழ என்க

பல்லியம் - பலவாகிய இசைக்கருவிகள். கடவுள் நாள் - கடவுட்டன்மையுடைய நன்னாள். (எ௯)

௧௬௯௧. மணிக்குட மழுத்திவைத் தனைய தோளினன்
கணிக்கிடங் கோடாநலங் கதிர்த்த காரிகை
யணிக்கிட னாகிய வரிவை தன்னொடும்
பிணித்திடை விடாதவன் பெற்ற வின்பமே.

(இ - ள்.) மணிக்குடம் அழுத்திவைத்த அனைய தோளினன் - மணியாற் செய்த குடத்தை அழுத்திவைத்தாற் போன்ற தோளையுடைய சீவகனின்; கணிக்கு இடம் கோடாநலம் - வடிவிற்குக் கூறிய நூல் வல்லாற்கும் புகழ இடங்கொடாத நலத்தை; அணிக்கு இடன் ஆகிய அரிவை கதிர்த்த காரிகை தன்னொடும் - அணிகட்கு இடம்பெற்ற கேமசரியின் ஒளிரும் அழகுடனே; பிணித்து - அவர்கள் பிணித்ததால்; அவன் பெற்ற இன்பம் இடைவிடாது - அவன் நுகர்ந்த இன்பம் நீங்காதாயிற்று.

(வி - ம்.) கணி - கணிவன். கதிர்த்தல் - ஒளிர்தல். காரிகை - அழகு. பிணித்து என்ற செய்தெனெச்சத்தை பிணிப்ப எனச் செயவெனெச்சமாக்கி ஏதுப்பொருட்டாக்குக. (அ0)

கசகூஉ. பூந்துகில் பொருதிரை பொம்மல் வெம்முலை
யேந்திய மணிவரை யிரக்க நீர்த்தரங்
காய்ந்தவன் றோளிணை நாக மாகவைத்
தீந்தக் கடலவற் றமுத மென்பவே.

(இ - ள்.) பூந்துகில் பொருதிரை - அழகிய ஆடை மறி தரும் அலையாக; பொம்மல் வெம்முலை ஏந்திய மணிவரை-பெரிய விருப்பூட்டும் முலை ஏந்திய மலையாக; இரக்கம் நீர்த்தரங்கு-தன் அருள் நீரின் அசைவாக; ஆய்ந்த வன்தோள் இணை நாகம் ஆக-ஆராய்ந்த வலிய இரு தோள்களும் பாம்பாக; வைத்து-வைத்து; அக்கடல் அவற்கு அமுதம் ஈந்தது - அக்காமக்கடல் அவனுக்கு அமுதத்தைக் கொடுத்தது.

(வி - ம்.) வரை - மந்தரம். அருள் நெகிழ்தலுண்மையின் நீரின் அசைவு என்றார். நாகம் - வாசுகி. கடல் - பாற்கடல். அவன் கடைதலின் என ஒரு சொல் வருவித்துக்கொள்க.

இவற்றால் முயக்கமும் இதழ்பருகலும் கூறினர். அவன் காட்ட அவள் காண்டலின் 'அவற்கு' என அவன்மேல் ஏற்றினர். (அக)

கசகூங. சந்தனச் சேற்றிடைத் தாம வார்குழற்
பைந்தொடி படாமுலை குளிப்பப் பாய்தலின்
மைந்தன தார்குழைந் துடைய வாய்திறந்
தஞ்சிலம் பணியல்குற் கலையோ டார்த்தவே.

(இ - ள்.) மைந்தன தார் சந்தனச்சேற்றிடைக் குழைந்து உடைய - சீவகனுடைய தார் அவன் மார்பிலே சந்தனச்சேற்றின் இடையே குழைந்து உடையும்படி; தாமவார்குழல் பைந்தொடி படாமுலை குளிப்பப் பாய்தலின் - மலர்மாலையணிந்த நெடிய கூந்தலையும் பசிய தொடியையும் உடைய கேமசரியின் தளராத முலைகள் முழுகுமாறு பாய்தலால்; வாய்திறந்து அம் சிலம்பு அல்குல் அணி கலையொடு ஆர்த்த - வாய்விட்டு அழகிய சிலம்பும், அல்குலில் அணிந்த மேகலையும் ஆர்த்தன.

(வி - ம்.) இச்செய்யுள் கேமசரியின் முயக்கங் கூறிற்று. தார் குழைந்துடைய என்பதற்குத் தூசிப்படை உடைய என்றும் ஒரு பொருள் தோன்றிற்று; யானை பாய்தலின் தூசிப்படை சேற்றிலே உடைந்தது என்றும், அதற்குச் சிலர் ஆர்த்தனரென்றும் ஒரு பொருள் தோன்றிற்று என்றும் நச்சினார்க்கினியர் நுண்ணிதிற் கூறினர்.

காமக்கடல், அழகிய உடையாகிய அலைமோதவும், கேமசரியின் முலையாகிய மலையிற் சீவகன் தோள்களாகிய பாம்புக் கயிறு பூட்டி யிழுத்துக் கடையும்போது அவனுக்கு இன்பமாகிய அமுதத்தைக் கொடுத்தது என்க.

தார் - தூசிப்படை. (அஉ)

**வேறு**

கசசுகூச. கோதையுங் குழலும் பொங்கக்
குவிமுலைக் குழங்கன் மாலைப்
போதுகப் பொருது பூணும்
பொருகடன் முத்து மூழ்கக்
காதலுங் களிப்பு மிக்குக்
கங்குலும் பகலும் விள்ளார்
சாதலும் பிறப்பு மில்லாத்
தன்மைபெற் றவர்க ளொத்தார்.

(இ - ள்.) கோதையும் குழலும் பொங்க - அவள் தன்னுடைய மலர் மாலையும் கூந்தலும் பொங்க; குவிமுலைக் குழங்கல் மாலைப்போது உக - குவிந்த முலைமேல் அணிந்த மணமுறு மாலையிற் பூக்கள் சிந்த; பூணும் பொருகடல் முத்தும் பொருது மூழ்க - அணிகலனும் கடல் முத்தும் பிணங்கி ஒன்றில் ஒன்று மூழ்கப் (புணர்தலின்); காதலும் களிப்பும் மிக்குக் கங்குலும் பகலும் விள்ளார்-காதலையும் களிப்பையும் மிகக்கொண்டு இரவும் பகலும் பிரியாராய்; சாதலும் பிறப்பும் இல்லாத் தன்மை பெற்றவர்கள் ஒத்தார் - இறப்பும் பிறப்பும் அற்ற தன்மையுடைய வானவரைப் போன்றனர்.

(வி - ம்.) முன்னர் (அ0) அக்கடல் அமுதம் ஈந்ததென்றார் ஈண்டும் அவ்வமுதினை நுகர்ந்து மூவாமையுஞ் சாவாமையும் பெற்ற அத்தேவர்களை ஒத்தார் என்றமை உணர்க.

குழங்கல் - மணம். (அரு)

கசசுகூரு புனைமலர்த் தாரி னானும் போதணி கொம்ப னாளு
நனைமலர்க் காவு மந்தண் வாவியு நல்ல வாடிச்
சுனைமலர்க் குவளை குற்றுச் சூழ்மலர்க் கண்ணி சூட்டி
வினைநல நுகர்ந்து செல்வார் விதியினான் மிக்க நீரார்.

(இ - ள்.) விதியினால் மிக்க நீரார் - ஊழினால் அன்பு மிக்காராகிய; புனை மலர்த் தாரினானும் போது அணி கொம்பு அனாளும் - ஒப்பனை செய்த மலர்மாலையானும் மலரணிந்த கொம்பு போன்றவளும்; நல்ல நனை மலர்க்காவும் அம் தண் வாவியும் ஆடி - அழகிய குளிர்ந்த மலர்ப்பொழிலிலும் அழகிய குளிர்ந்த குளத்திலும் ஆடி; சுனைமலர்க் குவளை குற்று - சுனையிலுள்ள குவளை மலர்களைப் பறித்து; சூழ் மலர்க் கண்ணி சூட்டி - மலர் சூழ்ந்த கண்ணி புனைந்து; வினைநலம் நுகர்ந்து செல்வார் - புணர்ச்சித் தொழிலின் அழகை நுகர்ந்து போந்தனர்.

(வி - ம்.) தாரிஞனும் கொம்பஞளும் ஆடியும் குற்றும் சூட்டியும் நுகர்ந்து செல்வார் என உம்மை விரித்தோதுக.

இங்ஙனம் மாந்தர் நுகர்தற்குக் காரணம் முற்பிறப்பிலே செய்த நல்வினையே என்பார் விதியினுன் மிக்கார் என்றும் வினைநலம் நுகர்ந்து செல்வார் என்றும் விதந்தோதினர். (அ௪)

௧௪௬௬. பொழிந்துகு காதல் பூண்டு
புல்லுகை விடாது செல்லக்
கழிந்தன விரண்டு திங்கள்
காளையு மற்றோர் நாளாற்
பிழிந்துகோள் வனைய பெண்மைப்
பெய்வளைத் தோளி தன்னோ
டழிந்துவீ ழருவிக் குன்றி
லாய்மலர்க் கா்வு!புக்கான்.

(இ - ள்.) பொழிந்து உகு காதல் பூண்டு - நிறைந்து புறந் தோன்றுகின்ற காதலைப் பூண்டு; புல்லுகை விடாது செல்ல - இவ்வாறு முயங்கலைக் கைவிடாது போதர; இரண்டு திங்கள் கழிந்தன - இரண்டு திங்கள் கடந்தன; மற்றோர் நாளால் - பிறிதொரு நாளிலே; பிழிந்து கொள்வு அனைய பெண்மைப் பெய் வளைத்தோளி தன்னோடு காளையும் - வடித்துக்கொண்டாற் போலும் பெண்மையினையுடைய, வளையலணிந்த தோளியுடன் சீவகனும்; அழிந்து வீழ் அருவிக் குன்றில் ஆய் மலர்க் காவு புக்கான் - பெருகி வீழ்கின்ற அருவியையுடைய அழகிய மலர் நிறைந்த பொழிலிற் புகுந்தான்.

(வி - ம்.) உவகை அகத்தே நிரம்பியவழி மெய்ப்பாடாகப் புறத்தார்க்கும் புலப்படுதலுண்மையின் பொழிந்துகு காதல் என்றார்.

பூண்டு - மேற்கொண்டு. புல்லுகை - தழுவுதல். நாளால் - நாளில். சிறந்த பெண்மை நலத்தினும் பிழிந்தெடுத்துக்கொண்ட பெண்மை நலத்தையுடையாள் என்க. தோளி : கேமசரி. (அ௫)

௧௪௬௭. காஞ்சனக் கமுகு காய்போற்
கனிக்குலை வாழை சூழ்ந்து
பூஞ்சினை நாகந் தீம்பூ
மரக்கருப் பூரச் சோலை
மாஞ்சினை மயில்க ளாடச்
சண்பக மலர்கள் சிந்துங்
தீஞ்சுனை யருவிக் குன்றஞ்
சீர்பெற வேறி ஞனே.

(இ - ள்.) காஞ்சனக் காய்க் கமுகு - பொன்னிறக் காய்களையுடைய கமுகும்; பொன் கனிக்குலை வாழை - பொன் போலும் கனிகளையுடைய குலை பொருந்திய வாழையும்; சூழ்ந்து - சூழப்பெற்று; பூஞ்சினை நாகம் தீம்பூ மரம் கருப்பூரச் சோலை - தன்னிடத்தே மலர்க் கிளைகளையுடைய சுர புன்னை மரமும் தீம்பூ மரமும் பொருந்திய கருப்பூரச் சோலையிலே; மாஞ்சினை மயில்கள் ஆட - மாமரக் கிளைகளிலே மயில்கள் ஆட; சண்பக மலர்கள் சிந்தும் - சண்பகப் பூக்கள் சிந்துகின்ற; தீஞ்சுனை அருவிக் குன்றம் - இனிய சுனையையுடைய குன்றிலே; சீர்பெற ஏறினான் - சிறப்புற ஏறினான்.

(வி - ம்.) காஞ்சனம் - பொன்; கமுகங்காய்க்கு நிறம் பற்றி வந்தது. பொன்கனி - பொன்போலும் நிறமுடைய பழம்.

தீம்பூ மரம்: ஒருவகை மரம் (சீவக. கஉசுஎ, ககூ0க) (அசு)

கசகூஅ. தினைவிளை சாரற் செவ்வாய்ச்
சிறுகிளி மாத ரோப்பப்
புனைவளைத் தோளி சொல்லைக்
கிளியெனக் கிள்ளை போகா
நனைவினை கோதை நாணிப்
பொன்னரி மாலை யோச்சக்
கனைகழற் குருசி னண்ணிக்
கவர்கிளி யோப்பி னானே.

(இ - ள்.) தினை விளை சாரல் - (அம்மலையில்) தினை விளைந்த புனத்திலே; செவ்வாய்ச் சிறு கிளி மாதர் ஒப்ப - சிவந்த வாயையுடைய சிறிய கிள்ளைகளைக் கேமசரி ஒட்ட; புனை வளைத் தோளி சொல்லைக் கிளியெனக் கிள்ளை போகா - அழகிய வளைத் தோளியின் மொழியைக் கிளிமொழியென உட்கொண்டு கிள்ளை போகாவாக; நனை விளை கோதை நாணிப் பொன்னரிமாலை ஓச்ச - (அதற்கு) தேன்விளையும் கோதையாள் நாணுற்றுப் பொன்னரி மாலையால் துரப்பப் (பின்னும் போகாவாக); கனைகழற் குரிசில் நண்ணிக் கவர்கிளி ஒப்பினான் - (அவள் கருத்தை முடித்தற்கு) ஒலிக்குங் கழலணிந்த சீவகன் சென்று தினையைக் கவரும் அக் கிளிகளை ஓட்டினான்.

(வி - ம்.) அப்புனைவளைத் தோளியின் சொல்லை என்க.

கோதை: கேமசரி. குரிசில்: சீவகன். கவர்கிளி: வினைத்தொகை; தினைக் கதிரைக் கவர்கின்ற கிளி என்க. ஓப்புதல் - ஓட்டுதல். கேமசரி சொற்கேட்டுக் கிளி போகாதது கண்டு சீவகனே அக் கிளிகளை யோட்டினான் என்பது. (அஎ)

கசசுகூகூ. கோந்தழல் வேற்க ணாலென்
ணுவிகூட் டுண்ட கொம்பே
சேந்தழை யலங்க லேந்திச்
சீறடி பரவ வந்தே
னுய்ந்தினிப் பணிசெய் வேனோ
வுடம்பொழித் தேகு வேனோ
பைந்தழை யல்குற் பாவாய்
பணியெனப் பரவி னானே.

(இ - ள்.) கொந்து அழல்வேற்கணால் என் ஆவி கூட்டுண்ட கொம்பே - எரியும் அழலையுடைய வேலனைய கண்களினால் என் உயிரைக் கொள்ளை கொண்ட மலர்க்கொம்பே!; செந்தழை அலங்கல் ஏந்திச் சீறடி பரவ வந்தேன் - செவ்விய தழையையும் மாலையையும் ஏந்தி நின் சிற்றடிகளை வணங்க வந்தேன்; இனி உய்ந்து பணிசெய்வேனோ - இனி உயிருடன் இருந்து நின் ஏவல் செய்யக்கடவேனோ?; உடம்பு ஒழித்து ஏகுவேனோ - இறந்து படக் கடவேனோ?; பைந்தழை அல்குல் பாவாய் - பசிய தழைகளை யுடுத்த அல்குலையுடைய பாவையே!; பணியெனப் பரவினான் - (இரண்டில் ஒன்றினை) அருளிச்செய்க என்று புகழ்ந்தான்.

(வி - ம்.) துகிலும் மேகலையுஞ் சீர்பெறப் புனையுங் காலத்தும் பைந்தழை புனைதல் பழமையின் குறிப்புப்போலும். சீவகன் கிளியை ஓட்டப் பிரிந்தானாக, அவள் அப்பிரிவைப் பொறாது ஊடினாள். எனவே, புலவி தீர்க்கவேண்டியதாயிற்று.

கொம்பு : ஆகுபெயர்; விளியேற்றது. நின்னுடைய வாயுடைய தென்னுடைய வாழ்வென்பான் பணி என்றான். (அஅ)

கஙூ00. வீணையுங் குழலும் பாலு
மமுதமுங் கரும்புந் தேனும்
பாணியாழ் கனியும் வென்ற
பைங்கிளி மழலைத் தீஞ்சொல்
வாணிக மகளிர் தாமே
வாணிகம் வல்ல ரென்னாப்
பூண்முலை பொதிர்ப்பப் புல்லிப்
புணைநலம் பருகி னானே.

(இ - ள்.) வீணையும் குழலும் பாலும் அமுதமும் கரும்புந் தேனும் பாணி யாழ் கனியும் வென்ற - வீணை குழல் யாழ் பால் அமுதம் கரும்பு தேன் இசையுறும் யாழ் கனி ஆகிய இவற்றை

யெலாம் வென்ற; பைங்கிளி மழலைத் தீஞ்சொல் - கிளியின் மழலையனைய இன்மொழியுடைய; வாணிக மகளிர் தாம் வாணிகம் வல்லர் என்ன - வணிகப் பெண்கள் முதல் கெட ஊதியஞ் செய்யார் என்று வியந்து; பூண்முலை பொதிர்ப்பப் புல்லி புனைநலம் பருகினான் - அவளுடைய பூணணிந்த முலைகள் விம்மத் தழுவிப் புனைவுற்ற அழகினைப் பருகினான்.

(வி - ப்.) இவன் இறந்துபடுவேனே என்றதனைக் கேட்டுக் குறுமுறுவல்கொண்டு ஒரு மொழி கொடுப்பவே, ஊடல் நீங்கியதாகலின், அச்சொல்லை மழலைத் தீஞ்சொல் என்று மகிழ்ந்தான். அம்மொழி கூறலாகாமையின் ஆசிரியர் கூறிற்றிலர் என்ப. முதல் - தன் உயிர். ஊதியம் - ஊடல்.

வீணையும் யாழும் என வேறு கொண்டுரைப்பதும் உண்டு எனபதைக், 'குழலும் வீணையும் யாழுமென்றினையன குழைய' (கம்ப. ஊர் தேடு. சு) என்பதனாலும் அறிக. (அகூ)

கரு௦க. திங்களங் குழவி செவ்வா
னிடைக்கிடந் திமைப்ப தேபோற்
குங்கும மார்பிற் பூண்ட
குளிர்கதி ரார மின்ன
மங்கையோ டிருந்த போழ்தோர்
மணிவண்டு கண்டு சொன்னான்
கங்குறு னீங்க லுற்றுக்
கமழ்மல ரணிந்த தாரான்.

(இ - ள்.) திங்கள் அம் குழவி செவ்வானிடைக் கிடந்து இமைப்பதே போல் - பிறைத் திங்கள் செவ்வானிலே கிடந்து விளங்குவதுபோல; குங்குமம் மார்பில் பூண்ட குளிர்கதிர் ஆரம் மின்ன - தனது குங்குமம் அணிந்த மார்பிலே பூண்ட தண்ணிய கதிர் வீசும் முத்துமாலை மின்னும்படி; மங்கையோடு இருந்த போழ்தில் - தனித்துக் கேமசரியுடன் இருந்த பொழுதில்; கமழ் மலர் அணிந்த தாரன் - மணமலர் புனைந்த தொடையினான்; ஓர் மணி வண்டு கண்டு - ஒரு கரிய வண்டைப் பார்த்து; கங்குல் தான் நீங்கல் உற்று - இரவு பிரியக் கருதி; சொன்னான் - ஒரு மொழி கூறினான்.

(வி - ம்.) இதன்கண் சீவகன் கேமசரிக்குத் தான் பிரியக் கருதியிருப்பதனைக் குறிப்பால் உணர்த்துகின்றான். (௧0)

கரு௦உ. மணிவண்டிம் மாதர் கோதை
மதுவுண வந்த போழ்தங்
கிணைவண்டங் கிறந்து பாடின்
றிருக்குமே யிரங்க லின்றாய்த்

துணைவண்டு துஞ்சி னீயுந்
துஞ்சுவை யென்று நின்கட்
பணிகொண்ட தின்மை யாற்றன்
பரிவோடு மிருக்கு மன்றே.

(இ - ள்.) மணி வண்டு - கரிய வண்டே! இம் மாதர் கோதை மதுஉண வந்தபோழ்து - நீ இம் மாதரின் மலர்மாலையிலே தேனைப் பருக வந்தபோது; அங்கு இணை வண்டு அங்கு இறந்துபாடு இன்று இரங்கல் இன்றாய் இருக்குமே - அங்குள்ள நின் பெடை வண்டு அங்கேயே இறவாமலும் வருத்தம் இன்றியும் இருக்குமோ?; துணை வண்டு துஞ்சின் நீயும் துஞ்சுவை என்று - நின் பெடை இறப்பின் நீயும் இறந்துபடுவாயென்று உட்கொண்டு; நின்கண் பணிகொண்டது இன்மையால் தான் - உன்னிடத்து உரியதொரு தொழிலை முதலிலேயே தன்னிடத்துக் கொள்ளாமையால்; பரிவோடும் தான் இருக்கும் அன்றே - இறந்துபடாமல் அன்புடனே தான் ஆற்றியிருக்கும் அல்லவோ? (என்றான்.)

(வி - ம்.) 'துணைவண்டு துஞ்சின் நீயுந்துஞ்சுவை என்று' என்றது என் பொருட்டே நீ ஆற்றியிருத்தல் வேண்டும் என்னும் குறிப்புடையது.

மணிவண்டு : அண்மைவிளி. இருக்குமே : ஏ : வினா. பணி யென்றது, மகளிர் இருந்து இல்லறத்தை நிகழ்த்துதற்கு வேண்டுவன தேடி வருதல் ஆடவர்க்குப் பணியாதலை. (கூக)

கடுருக. குழவியாய்ப் பிறந்த வெய்யோன்
குமரனாய் முறுகி யிப்பால்
விழைவுதீர் கிழவ னாகி
விழுக்கதி ருலந்து வீழ
மழலைவண் டுழல நக்க
மல்லிகை யலங்கல் சூட்டிக்
குழல்புரை கிளவி யோடுங்
கொழும்புகை யமளி சேர்ந்தான்.

(இ - ள்.) வெய்யோன் குழவியாய்ப் பிறந்து - கதிரவன் காலையிற் குழவியாகத் தோன்றி; குமரனாய் முறுகி - நண்பகலிற் குமரனாகி வெம்மை மிகுந்து; இப்பால் விழைவு தீர் கிழவன் ஆகி - மாலையில் ஆசை நீங்கிய முதியவனாகி; விழுக்கதிர் உலந்து வீழ - சிறந்த கதிர்கள் கெட்டு மேற்றிசையிலே விழுதலின்; மழலை வண்டு உழல நக்க மல்லிகை அலங்கல் சூட்டி - (சீவகன்) முரலும் வண்டு உழலும்படி அலர்ந்த மல்லிகை மாலையைச் சூட்டி; குழல் புரை கிளவியோடு கொழும் புகை அமளி சேர்ந்

தான் - குழலிசை போன்ற மொழியாளோடு வளவிய அகிற் புகை யூட்டப்பட்ட அமளியை அடைந்தான்.

(வி - ம்.) மேலைச் செய்யுளில் இன்ப நிலையாமையைக்கண்ட திருத்தக்க முனிவர் இனம்பற்றித் தம் மனத்தே முகிழ்த்த யாக்கை நிலையாமையினை ஞாயிற்றின்பால் வைத்து உலகோர்க்கு நுண்ணிதின் உணர்த்துதல் உணர்க.

கிளவியோடும் : உம் இசை நிறை. (கஉ)

கரு௦௪. திருத்துயில் பெற்ற மார்பன்
றிருந்துதா ருழக்க வின்ப
வருத்தமுற் றசைந்த கோதை
வாளொளித் தடங்க ணீலம்
பொருத்தலும் பொன்ன னாளைப்
புறக்கணித் தெழுந்து போகிப்
பருச்சுடர்ப் பவழ நோன்றாழ்ப்
பன்மணிக் கதவு சேர்ந்தான்.

(இ - ள்.) திருத் துயில் பெற்ற மார்பன் - திருமகள் துஞ்சும் மார்பனை சீவகனது; திருந்து தார் உழக்க - அழகிய தார் கலக்குதலாலே; இன்ப வருத்தம் உற்று அசைந்த கோதை- இன்பத்தாற் பிறந்த வருத்தத்தை உற்று இளைத்த கோதையாள்; வாள் ஒளித் தடங்கண் நீலம் பொருத்தலும் - சிறந்த ஒளியுறும் பெருங்கண்களாகிய நீலத்தைக் குவித்த அளவிலே; பொன்னனாளைப் புறக்கணித்து எழுந்துபோகி-அவன் திருவனையாளை நீங்கக் கருதி எழுந்து சென்று; பருச் சுடர்ப் பவழம் நோன் தாழ் - பேரொளி யுறும் பவழத்தாலாகிய வலிய தாழையுடைய; பல் மணிக் கதவு சேர்ந்தான் - பலவகை மணிகளிழைத்த கதவை அடைந்தான்.

(வி - ம்) திருமகள் எப்பொழுதும் தங்கும் மார்பன் என்பார் திருத்துயில் மார்பன் என்றார்.

நீலம் பொருத்தல் என்றது இமை கூடுதலை. பொன் : திருமகள். (கங)

கரு௦ரு. அல்லியுட் பாவை யன்ன ளறிவுறு வகையி னொற்றி
மெல்லவே திறந்து நீக்கி மின்னுவிட் டிலங்கு பைம்பூட்
கோல்சின மடங்க லன்னான் கோழுநிதி மாட நீந்திப்
பல்கதிர்ப் பருதி போலப் பாயிரு ளேகி னானே.

(இ - ள்.) அல்லியுள் பாவை அன்னாள் அறிவுறு வகையின் ஒற்றி - தாமரை மலரில் திருவைப் போன்றவள் தான் கதவைத்

திறப்பதை அறியா வகையிலே கதவைத் தள்ளி; மெல்லவே திறந்து நீக்கி - மெல்லத் தாழ் திறந்து பின்னர் முற்றுந் திறந்து; கொழுநிதி மாடம் நீந்தி - வளமிகு செல்வமுடைய மாடத்தைக் கடந்து; பல்கதிர்ப் பரிதிபோல - பல கதிர்களையுடைய ஞாயிறு போல; மின்னுவிட்டு இலங்கு பைம்பூண் கொல் சின மடங்கல் அன்னான் - ஒளிவீசி விளங்கும் புத்தணியையுடைய கொல்லும் சீற்றமுறும் சிங்கம் போன்றவனான சீவகன்; பாய் இருள் ஏகினான் - பரவிய இருளிலே சென்றான்.

(வி - ம்.) அல்லியுட்பாவை: திருமகள். அல்லி: தாமரை மலர்க்கு ஆகு பெயர். ஒற்றுதல் - தள்ளுதல். (௧௪)

௧௫௦௬. தாளுடைத் தடங்கோள் செவ்வித்
 தாமரைப் போது போலும்
வாளுடை முகத்தி னாடன்
 வருமுலைத் தடத்தின் வைகி
நாளினும் பெருகு கின்ற
 நகைமதி யனைய காதற்
கேள்வனைக் கனவிற் காணாள்
 கிளர்மணிப் பூணி னாளே.

(இ - ள்.) கிளர்மணிப் பூணினாள் - விளங்கும் மணிகள் இழைத்த கலனணிந்தவளாகிய; தடம்கொள் செவ்வித் தாளுடைத் தாமரைப் போது போலும் வாளுடை முகத்தினாள் - குளத்திலே தங்கிய செவ்வியுடைய, தண்டையுடைய தாமரை மலர்போல விளங்கும் முகத்தினாள்; தன் வருமுலைத் தடத்தின் வைகி - தன் வளரும் முலைகளின்மேல் தங்கி; நாளினும் பெருகுகின்ற நகைமதி அனைய காதல் கேள்வனை - நாடோறும் வளர்கின்ற பிறைமதி போன்ற காதலையுடைய கணவனை; கனவில் காணாள் - கனவிலே காணாதவளானாள்.

(வி - ம்.) இச்செய்யுட்கு நச்சினார்க்கினியர் "கனாக் காண்கின்றவள் அவன் போகக் கண்டாள்" என்று கூறியுள்ள குறிப்பு நன்கு விளங்கவில்லை. துயில்கின்றபொழுது நாள்தோறுங் கனவிலே தன்றோள் மேல் கேள்வனைக் காணுமியல்புடைய கேமசரி அன்று கனவின் கண் அவ்வாறு காணாதவளாயினள் என்பது நூலாசிரியர் கருத்தாதல் கூடும் என்று தோன்றுகின்றது.

அவ்வாறு காணாதவள் எனவே கனவில் அவன் போகக் கண்டாள் என்பது குறிப்பாகும் என்று நச்சினார்க்கினியர் கொண்டனர் போலும். நகை - ஒளி. மதி - சந்திரன். மதி என்பது ஈண்டுப் பிறையையுணர்த்திற்று. பிறையானது நாளுக்குநாள் வளர்வது போல வளர்கின்ற காதல் என உவமைக்குப் பொருத்தம் கூறவேண்டியிருப்பதால். (௧௫)

கருஎ. அரந்தினப் பிறந்த பைம்பொ
னரும்பிய முலையி னாளைக்
கரந்தவன் கங்கு னீங்கக்
கதிர்வளை யணங்கு மென்றோள்
வரந்தரு தெய்வ மன்னாள்
வைகிரு ளனந்த றேறிப்
பரந்தெலாத் திசையு நோக்கிப்
பையவே பரிவு கொண்டாள்.

(இ - ள்.) அரம் தினப் பிறந்த பைம்பொன் அரும்பிய முலையினாளை - அரத்தால் அராவுதலால் உண்டான புதிய பொன்னனைச் சுணங்கு பொருந்திய முலையாளை; கரந்தவன் கங்குல் நீங்க - நீங்கிய சீவகன் அங்ஙனம் இருளிலே போகாநிற்க; கதிர் வளை அணங்கும் மென்தோள் வரம்தரு தெய்வம் அன்னாள் - ஒளிரும் வளையணிவதால் மெலியும் மென்மையான தோளையுடைய, வரமளிக்குந் தெய்வத்தைப் போன்றவள்; வைகு இருள் அனந்தல் தேறி - தங்கிய இருளிலே தான் கண்ட கனவாலே துயில் மயக்கம் நீங்கி விழித்து; பரந்து எலாத்திசையும் நோக்கி - எல்லாத் திசையினும் பரவிப் பார்த்து; பையவே பரிவு கொண்டாள் - முறைபட வருத்தம் கொண்டாள்.

(வி - ம்.) ஈண்டும் தன்கேள்வனைக் கனவினும் காணப் பெறாமையானே விழித்து என்னலும் பொருந்தும். பொன் என்றது அராவப் பட்ட பொற்சுண்ணத்தை; இது தேமலுக்கு உவமை.

கணவற்கு நினைத்தன கொடுத்தலின் வரந்தரு தெய்வம். (கசு)

கருஅ. திருமணி குயின்ற செம்பொற்
றிருந்துபூங் கொம்ப னாடன்
கருமணிப் பாவை யன்னான்
கரந்துழிக் காண்டல் செல்லா
ளெரிமணி விளக்க மாடத்
திருளறு காறு மோடி
யருமணி யிழந்தோர் நாக
மலமரு கின்ற தொத்தாள்.

(இ - ள்.) திருமணி குயின்ற செம்பொன் திருந்து பூங் கொம்பனாள் - அழகிய மணிகளைப் பதித்த திருந்திய பொற்பூங் கொம்பு போன்றவள்; தன் கருமணிப் பாவை அன்னான் - தன் விழியிலுள்ள கருமணியின் பாவைபோன்ற கணவன்; கரந்துழிக் காண்டல் செல்லாள் - மறைந்த இடத்தைக் காணாளாய்; எரி

மணிவிளக்கம் மாடத்து இருள் அறுகாறும் ஒடி - எரியும் மணி விளக்கின் ஒளி மாடத்தில் உள்ளவரையில் ஒடி; அருமணி யிழந்து ஓர் நாகம் அலமருகின்றது ஒத்தாள் - ஒரு நாகப்பாம்பு தன் படத்திலுள்ள கண்ணாகிய அரிய மணியை இழந்து; வருந்து வதனை ஒத்தாள்.

(வி - ம்.) விளக்கத்தால் மாடத்தில் இருள் அற்ற இடமளவும் என்க. எனவே ஒளிபரவிய அளவில் என்பதாயிற்று. ஓடி என்றது. அவள்மன நிலையைக் காட்டுகின்றது. மணி சீவகனுக்கு உவமை. அல மருதல் - மனச்சுழற்சி எய்துதல். (௬எ)

வேறு

௧௫0௬. யாண்டை யாயைய வஞ்சினே னாருயி
ரீண்டு டம்பொழித் தேக வலிக்குமா
னீண்ட தோளவ னேநிறை யானிலேன்
றீண்டு வந்தெனத் தேனின் மிழற்றினாள்.

(இ - ள்.) ஐய - ஐயனே!; யாண்டையாய் - நீ எங்கு இருக்கின்றாய்?; அஞ்சினென் - யான் தனித்திருக்க அஞ்சுகி றேன்; நீண்ட தோளவனே - நீண்ட தோள்களையுடையவனே!; ஈண்டு உடம்பு ஒழித்து ஆருயிர் ஏக வலிக்கும் - இப்போதே உடம்பைவிட்டுச் சிறந்த உயிர் நீங்கத் துணிகின்றது; யான் நிறை இலேன் - (ஆதலின்) நிறையழிந்தேன்; தீண்டு வந்து என - (இனி) தீண்டுக வந்து என்று; தேனின் மிழற்றினாள் - தேனைப் போல மிழற்றினாள்.

(வி - ம்.) முன்பும் ஒளிந்து விளையாடும் வழக்கமிருத்தலின், இப் போதும் அதுவாக எண்ணி, 'யாண்டையாய்' என்றும், 'அஞ்சினேன்' என்றும் கூறினாள். நீண்ட தோள்: உத்தம இலக்கணம். 'தீண்டு வந்து' என்பது, 'கண்டேன் சீதையை' என்பதுபோல நின்றது. (௬அ)

௧௫௧0. கனிகோள் காமங் கலந்துயி ரொன்றலி
னினியர் மங்கைய ரென்பது கூறுவாய்
பனிகோண் மாமதி போற்பசப் பூரயான்
றனிய ளாவது தக்கது வோசோலாய்.

(இ - ள்.) கனிகொள் காமம் கலந்து உயிர் ஒன்றலின் - கனிவுடைய காமம் தம்மிற் பொருந்தி உயிர் ஒன்றுபடும்போது; மங்கையர் இனியர் என்பது கூறுவாய் - மங்கையர் இனியரா யிருப்பர் (அல்லாத இடத்து இனியரல்லர்) என்று முன்னர் நீ கூறுவாய்; பனிகொள் மாமதிபோல் யான் பசப்பு ஊர - பனி மூடிய முழுமதிபோல யான் பசப்புமிகும்படி; தனியள் ஆவது

தக்கதுவோ சொலாய் - (நாம் ஒன்றி வாழும் இந்நாளிலே) தனியளாவது நினக்குத் தகுதியோ? கூறுவாய்.

(வி - ம்) கனிகொள் காமம் - முதிர்ந்த காமம். எம்மியல்பினை நன்கு அறிந்துவைத்தும் இங்ஙனம் எம்மைத் தனிக்க விடுவது நினக்குத் தகுமோ என்றவாறு. (௬௯௯)

௧௬௧௧. கழலு நெஞ்சோடு கைவளை சோருமாற்
சுழலுங் கண்களுஞ் சூடுறு பொன்னென
வழலு மேனியு மாற்றலே னையவோ
நிழலி னீப்பருங் காதலு நீத்தியோ.

(இ - ள்.) ஐயவோ-ஐயனே!; கழலும் நெஞ்சொடு கைவளை சோரும் - போகின்ற நெஞ்சுடன் கைவளையும் போகா நின்றது; கண்களும் சுழலும் - கண்களும் பரவிப் பரவி நோக்கும்; சூடு உறு பொன் என மேனியும் அழலும் - உருகும் பொன்போல மெய்யும் அழல்கின்றது; ஆற்றலேன் - ஆதலின் ஆற்றகில்லேன்; நிழலின் நீப்பருங் காதலும் நீத்தியோ - நிழலைப்போல நீத்தற்கரிய காதலையும் நீத்தனையோ?

(வி - ம்.) ஐயவோ: ஓ: இரக்கம். நீத்தியோ: ஓ: வினா. (௭00)

௧௬௧௨. திருந்து மல்லிகைத் தேங்கமழ் மாலையான்
புரிந்து சூடினும் பூங்கொடி நுண்ணிடை
வருந்து மான்மட வாயெனும் வஞ்சநீ
கரிந்தி யானையக் காண்டலும் வல்லையோ.

(இ - ள்.) திருந்தும் மல்லிகைத் தேம்கமழ் மாலை யான் புரிந்து சூடினும் - திருந்திய மல்லிகை மலர்களாலாகிய மணங்கமழும் மாலையை நான் விரும்பியணிந்தாலும்; மடவாய் பூங்கொடி நுண் இடை வருந்தும் எனும் வஞ்ச - 'பேதையே! மலர்க்கொடி யனைய நின் மெல்லிடை வருந்தும்' என்கிற வஞ்சனே!; யான் கரிந்து நையக் காண்டலும் வல்லையோ - யான் கருகி வருந்தக் கண்டிருத்தற்கும் நீ வல்லையோ?

(வி - ம்.) வல்லையோ: ஓ: வினா.

யான் கரிந்து நைதற்கு ஏதுவாகிய செயலைச் செய்யத் துணிந்த நீ முன்னர் மடவாய் நுண்ணிடை வருந்தும் என்றது வஞ்சகமொழியே என்பது அறிந்தேன் என்றவாறு. வல்லையோ-வன்மையுடையையோ. ()

௧௬௧௩. தொண்டை வாயிவ டோய்யில் வனமுலை
கண்டு தேவர் கனிபவென் றேத்துவாய்
வண்டு கூறிய வண்ண மறிந்திலேன்
விண்டு தேன்றுளிக் கும்விரைத் தாரினாய்.

(இ - ள்.) தேன்விண்டு துளிக்கும் விரைத் தாரிஞய்-தேன் பிதிர்வுற்றுத் துளிக்கும் மணமாலையாய்!; இவள் தொண்டைவாய் தொய்யில் வனமுலை கண்டு - இவளுடைய தொண்டைவாயையும் தொய்யில் எழுதிய அழகிய முலையையும் கண்டு ; தேவர் கனிய என்று ஏத்துவாய் - வானவரும் உளம் நெகிழ்வர் என்று முன் னிலைப் புறமொழியாகப் புகழ்மொழி கூறுகின்றவனே!; வண்டு கூறியவண்ணம் அறிந்திலேன் - நீ வண்டைப் பார்த்துக் கூறிய தன்மையை யான் அறிகிலேன்; (அறிந்திருந்தால் நின்னைப் பிரிய விடேன்.)

(வி - ம்.) தேவர் என்பதற்கு அயனூர் என்றும், அவர், 'உலகைப் படைக்கும் நாமே உலகை அழிக்கும் ஒருருவையும் படைத்தோமே' என்று வருந்துவர் என்றும், 'தேவர் ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி' என்றும், 'தெய்வமகளிர்' என்று கொண்டு 'வாயையும் முலையையுங் கண்டு அவர்கள் வருந்துவார் எனினும் ஆம்' என்றும் நச்சினூர்க்கினியர் கூறுவர்.

தேவர் என்புழி, சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

வண்டு - வண்டிற்கு. பெண்ணுகலின் என்பேதைமையால் அதனை யான் அறிந்திலேன் என்றிரங்கியவாறு.

வண்டு கூறியவண்ணம் என்றது வண்டிற்குக் கூறுமாற்றுல் குறிப் பாகப் பிரிவுணர்த்தியதனை.

அறிந்திலேன் என்றது அறிவனேல் நின்னைப் பிரியவிட்டிரேன் என்பது படநின்றது. (௧0௨)

வேறு

௧௫௧௪. முலைவைத் ததடத் திடைமுள் கலுறிற்
றலைவைத் துநிலத் தடிதை வருவாய்
சிலைவித் தகனே தெருளே னருளா
யுலைவித் தனையென் னுயிர்கா வலனே.

(இ - ள்.) சிலை வித்தகனே - வில் வல்லோனே !; உயிர் காவலனே - என் உயிருக்குக் காவலனே!; முலைவைத்த தடத் திடை முள்கலுறின் - என் முலைகளிடையே நீ ஊடல் தீர்த்துக் கூட நினைப்பின்; நிலத்துத் தலைவைத்து அடி தைவருவாய் - நிலத்திலே நின் தலையைப் பொருத்தி என் அடிகளைத் தடவு வாய்; உலைவித்தனை என் தெருளேன் - இப்போது சலிப்பித்தனை ஏனோ? காரணம் தெளிகின்றிலேன் ; அருளாய் - தெளியக் கூறுவாய்.

(வி - ம்.) வேலியே பயிரை மேய்ந்தாற் போன்று உயிர்காவல ஞகிய நீயே உலைவித்தனை என்னும் நயம் உணர்க.

'வைத்த நிலம்' என்பது பாடமாயின் காலை வாங்கிஞல் அந் நிலத்தில் அடிச்சுவட்டைத் தடவுவாய் என்க. முள்கல் - முயங்குதல்.

முலை வைத்த தடம் : யாம் பிறந்த இடமும் சிறிது கிடக்கவேண்டு மென்று முலைதான் அருள் பண்ணிவைத்த தடம். இது சீவகன் கூறிய கூற்றை இவள்கொண்டு கூறியது. 'எஞ்சுற்றம் என்றிரங்கா தாகமெல் லாங் கவர்ந்திருந்து' (சீவக. ௨௯0௨) என்பர் மேலும். இருவரும் முன்னர் உறுதிருத்தல் இன்மையின், 'உறின்' எனவே முன்பு ஊடல் தீர்த்துக் கூடகினைக்கின் என்பது பெற்றும். நின் வணக்கம் எல்லாம் வில்வணக்கம் போலத் தீங்கு தருவன வாயிற்றென்பது தோன்ற 'சிலைவித்தகனே' என்றாள். 'எவன்' என்னும் வினை 'என்' என நின்றது. (௧0௩)

௧௬௧௪. கடனித் திலம்வைத் தகதிர்ம் முலையி
னிடனேத் துணையத் துணையும் மெழுதி
யுடனேத் துறைவா னுழைவா ரலனேன்
மடனேத் துளதேன் னுயிர்வாழ் வதுவே.

(இ - ள்.) கடல் நித்திலம் வைத்த கதிர்முலையின் - கடல் முத்துமாலை புனைந்த ஒளிரும் முலைகளினாலே ; இடன் எத்துணை அத்துணையும் எழுதி - தன் மார்பின் இடம் எவ்வளவு உண்டோ அவ்வளவும் யான் எழுத; உடன் ஒத்து உறைவான் உழைவாரல னேல்-என்னுடன் ஒத்து உறைகின்றவன் இனி என்னிடத்திலே வாரானாயின்; என் உயிர் வாழ்வது மடன் ஒத்து உளது - என் உயிர் வாழும் நிலைமை முற்பட்ட அறியாமையை ஒக்கும்.

(வி - ம்) எழுதி - எழுத. இனி, முலையெங்கும் தொய்யில் எழுதி உறைவான் என்றுமாம். முற்பட்ட அறியாமை - வண்டிற்குக் கூறியதை அறியாதிருந்தமை. ஒத்துளது: ஒருசொல்.

கதிர்ம்முலை; விரிக்கும் வழி விரித்தல். இடன், மடன், என்ப வற்றில் மகரத்திற்கு னகரம் போலி. (௧0௪)

௧௬௧௫ பெறுமன் பினளேன் பதுபே சினலா
லறுமன் பினளேன் றறைவா ரிலையா
லிறுமேன் பொடிணைந் துநைவேற் கருளி
நறுமேன் கமழ்தா ரவனே நணுகாய்.

(இ - ள்.) நறு மென்கமழ் தாரவனே - நறிய மெல்லிய மணங்கமழும் தாரினனே !; பெறும் அன்பினள் என்பது பேசின் அலால்-(நீ என்னுடன் உறைந்த நிலைகண்டு) இவள் நாடோறும் பெறும் அன்புடையாள் என்று (என் சுற்றத்தார்) பேசின தன்றி; அறும் அன்பினள் என்று அறைவார் இலை - தேயும் அன்பினள் என்று செப்பினாரில்லை; இறும் என்பொடு இணைந்து நைவேற்கு அருளி நணுகாய் - உருகும் என்போடு வருந்தி நையும் எனக்கு இன்னும் அருளி வருவாய்.

(வி - ம்.) பெறும் அன்பினள், அறும் அன்பினள் இத்தொடர் களை அன்பு பெற்றவள், அன்பு அற்றவள் என்று விகுதி பிரித்துக் கூட்டுக. நைவேன் + கு = நைவேற்கு. இது தன்மையொருமை வினையாலணையும் பெயர். கு உருபு ஏற்றது. (௧0௫)

கஙுகஎ. நுனசீ றடிநோ வநடந் துசேலே
லெனதா வியகத் துறைவா யெனுநீ
புனைதா ரவனே பொயுரைத் தனையால்
வினையே னொழியத் தனியே கினையே.

(இ - ள்.) புனை தாரவனே - அணிந்த மாலையாய்!; வினையேன் ஒழியத் தனி ஏகினை - தீவினையேன் இங்கிருப்ப நீ தனியே ஏகினாய் (ஆதலின்); நுன சீறடி நோவ நடந்து செலேல் - நின்னுடைய சிற்றடி நோவ நடந்து செல்லாதே; எனது ஆவி அகத்து உறைவாய் - என்னுடைய உயிரகத்தே வாழ்வாய்!; எனும் நீ பொய் உரைத்தனை-என்று கூறும் நீ பொய்யுரைத்தனை.

(வி - ம்.) அடிநோவப் பொறுத நீ யான் இவ்வளவும் நோதலைப் பொறுப்பாயோ. பொறாயன்றே; எனவே, நீ கூறியது பொய்யே என்பது கருத்து. (கஓசு)

கஙுகஅ. பருமுத் துறையும் பணைவெம் முலைநின்
றிருமுத் தகலந் திளையா தமையா
வெரிமோய்த் தனலு மிகல்வே லெரிபுண்
மருமத் தனலும் வகைசெய் தனையே.

(இ - ள்.) பருமுத்து உறையும் பணை வெம்முலை - (ஐய, முன்னர் நீ இவை பரிய முத்துவடம் தங்குதற்கு இடமான பருத்தமுலை என்று பாராட்டினை அன்றோ) அம்முலைகளே இப்போதும் பரிய முத்துக்களை ஒத்த கண்ணீர்த் துளிகள் உறைதற் கிடமான வெப்பமுடையன ஆயின கண்டாய்; நின் திருமுத்து அகலம் திளையாது அமையா - இனி அவைதானும் அழகிய முத்தணிந்த நினது மார்பிடத்தில் முயங்கினால் உய்வன வல்லது முயங்காவிடின் உய்யா; எரிமொய்த்து அனலும் இகல் வேல் - இவ்வாற்றால் நீ தீ மொய்த்ததனால் காய்ந்ததொரு வேல்; எரிபுண் மருமத்து அனலும் வகை செய்தனை - தீப்பட்ட பழம் புண்ணையுடைய மார்பிலே புகுந்து சுடுவதனை ஒத்த ஒரு துன்பத்தினை உண்டாக்கிவிட்டனை.

(வி - ம்.) 'பருமுத்து உறையும் பணை வெம்முலை' என அவன் முன் கூறியதை அவள் இப்போது கொண்டு கூறுகிறாள். முத்து - முத்துவடம்; கண்ணீர். பணை - பருமை; வெம்மை - விருப்பம்; காமத்தீயால் வெதும்புதல்.

முன்னர் முயங்கிப் பிரிந்த பிரிவு புண்ணிற்கும், இப்போது முன்னின்று முயக்கங்கொடாத நிலை வேலிற்கும் உவமை. இத்துணையும் 'எதிர்பெய்து பரிதல்.' 'உடம்பும் உயிரும் வாடியக் கண்ணும்' (தொல். பொருளியல் - க) என்னும் சூத்திர விதியால் முலையை இங்ஙனம் கூறினாள். (கஓஎ)

கரு௧௯. புனமா மயிலே பொழிலே புனலே
வனமார் வழையே வரையே திரையே
யினமா மணிசூ ழெரிபூ ணவனைத்
துனயான் பெறுகோ தொழுதே னுரையீர்.

(இ - ள்.) புன மாமயிலே - தினைப்புனத்தில் வாழும் மயிலே!; பொழிலே - காவே!; புனலே - நீர் நிலையே!; வனம் ஆர் வழையே - அழகு பொருந்திய சுரபுன்னையே!; வரையே-மலையே!; திரையே - கடலே!; தொழுதேன்-யான் நும்மை வணங்கினேன் ; இன மாமணி சூழ் எரி பூணவனை யான் துனப் பெறுகோ - பல வகை மணிகள் சூழ்ந்த ஒளிவிடும் பூணவனை என் கணவனை, யான் சேரப் பெறுவேனோ?. உரையீர் - (பெறுவேனெனில்) அவனிருக்குமிடத்தைக் கூறுவீராக.

(வி-ம்.) மயில் ஆயிரங் கண்ணுடைத்துப் பொழில் நிழலுடைத்து புனல் தண்மையுடைத்து வழை நிழலுடைத்து வரை தண்மையுடைத்து திரை தண்மையுடைத்து ஆதலால் அருட்பண்புடையீர் தொழு தேன் உரையீர் என்றாள் என்க. துன - துன்ன. (௧௦௮)

கரு௨௦. கொடுவெஞ் சிலைவாய்க் கணையிற் கொடிதாய்
நடுநா ளிரவின் னவைதான் மிகுமா
னெடுவெண் ணிலவின் னிமிர்தேர் பரியா
தடுமால் வழிநின் றறனே யருளாய்.

(இ - ள் ) கொடு வெஞ்சிலை வாய்க் கணையிற் கொடிதாய் - வளைந்த கொடிய வில்லிலிருந்து வரும் அம்பினுங் கொடியதாய் ; இரவின் நடுநாள் நவைதான் மிகும் - நள்ளிரவு செய்யும் வருத்தந் தான் மிகா நின்றது; நெடு வெண்ணிலவின் நிமிர்தேர் பரியாது அடும் - நெடிய வெள்ளிய நிலவினையுடைய திங்கள் இரங்காமல் வருத்தும் ; அறனே வழிநின்று அருளாய் - அறக்கடவுளே! இத்துணைத் துன்பத்திற்கும் எனக்குத் துணையாக நின்று அருள் வாயாக.

(வி-ம்.) 'நிலவின் நிமிர்தேர்' என்றார், வட்டத்தால் தேருருள்போ லிருத்தலின்.

இரவின் நவை கணையின் நவையினுங் கொடிதாய் மிகும் என்க. தேர் : ஆகுபெயர். தேர்உருள்; இது திங்கள் வட்டத்திற்கு உவமஆகு பெயர்.

திங்கள் உருவங் குளிர்ந்திருந்தும் உள்ளத்தில் அருளின்றி அடும் என்றவாறு.

இனி இவ்வாறு அடுதல் அறனோ என்றும் இவ்வழி நின்று தலைவனே நீயும் அருள்இன்றிலை என்றும் கூறினள் எனினுமாம். (௧௦௯)

கருஉக. கயலா லிவையென் றுகவிழ்ந் துகிடந்
தயலே னறியா மையுரைத் ததெலா
மியலா ததுவோ வினியேற் கினியீ
ருயலா வதுகண் மலர்கா ளுரையீர்.

(இ - ள்.) கண் மலர்காள் - கண்மலர்களே!; இவை கயல் என்று - (அவன்) இக்கண்கள் கயலாயிருந்தன என்று நும்மைப் புகழும்போது; கவிழ்ந்து கிடந்து - (அதற்கு நீர்) அன்புற்றுக் கிடக்க; அயலேன் அறியாமை உரைத்ததெலாம் இயலாததுவோ - அயலேனாகிய நான் அறியாமல் நுமக்கு அவன் கூறியதெல்லாம் பிரிவையோ?; இனியேற்கு இனியீர் - இனியேனாகிய எனக்கு இனியராயிருந்தீர்!; உயலாவது உரையீர் - இனி உய்யலாம் வழியை உரைப்பீராக!

(வி - ம்.) கிடந்து - கிடக்க: எச்சத்திரிபு; மெய்ம்மறக்கச் செய்து தன்னுடன் கூடியிராமையின், 'அயலேன்' என்றாள். உரைத்ததனை அவன் செய்த தொழில் என்று கொள்க; 'பொன்னுரைத்தது' என்றாற் போல. அது சொல்லிற்றெல்லாம் என்றாற் போலவும் நின்றது. இனியீர்: இகழ்ச்சிக் குறிப்பு.

கண்ணிற் சிறந்த உறுப்பில்லை யென்று நும்மிடம் நான் இனியேனாக இருந்தேன் என்னுங் கருத்துடன், 'இனியேற்கு' என்றாள். 'நும்மை அவன் 'புலால் நாறுகின்ற கய'லெனப் புகழப் போக்கு உடன்பட்டீர், யான், 'கண்மலர்காள்!' எனப் புகழாநின்றேன். 'உய்யும்வழி உரைப்பீர்' என்னுங் கருத்துடன், 'கண்மலர்காள்!' என்றாள். (கக0)

கருஉஉ. நெறிநீர் வளையு நிழனித் திலமும்
பொறிநீ ரபுனைந் தெழுதிப் புகழும்
வெறிதா ரவனெவ் வழியே கினனீ
ரறிவீ ருரையீ ரமர்தோ ளிணைகாள்.

(இ - ள்.) அமர் தோளிணைகாள் - அவன் நினைவை அமர்ந்த தோளிணைகளே!; நெறிநீர் வளையும் நிழல் நித்திலமும் - கடற் சங்கவளையையும் ஒளியையுடைய முத்துக்களையும்; பொறிநீர புனைந்து - பொறித்தாற்போலும் தன்மையவாகப் புனைந்து; எழுதி - தோளிற் கரும்பையும் முலைகளில் தொய்யிற்கொடி முதலியவற்றையும் வரைந்து; புகழும் வெறிதாரவன் எவ்வழியேகினன் - நும்மைப் புகழ்ந்துரைக்கும் மணங்கமழ் மாலையான் எவ்வழிச் சென்றான்?; நீர் அறிவீர் உரையீர் - (முயக்கத்தை நெகிழ்ந்து போகவிட்ட) நீர் அவன் போன இடமும் அறிவீர்; நும்மை யின்னும் யான் புகழ்தற்கு அவ் வழியைக் கூறுவீராக.

(வி - ம்.) என்னிடத்தினுங் காட்டில் நும்பாற் பேரன்புடையன் என்பாள் எழுதிப் புகழும் தாரவன் என்றும், அங்ஙனமாகலின் அவன்

நமக்குணர்த்தாமல் பிரியான் ஆதலின் நீர் அறிவீர் என்றும் கூறினள் என்க. (கககூ)

கருஉங இழுதார் சுடர்வே லிளையா னகலத்
துழுதீ ருடன்வெம் முலைகாள் வயிரத்
தொழுவாய் விடையைத் தொடர்கிற் றிலிரேன்
றழுதா டடமா கவணங் கிழையே.

(இ - ள்.) வெம்முலைகாள் - கொடிய கொங்கைகளே !; இழுது ஆர் சுடர் வேல் இளையான் அகலத்து உழுதீர் - நெய்பூசிய ஒளி வேலவன் மார்பிலே உழுத நீர்; உடன் வயிரத் தொழுவாய் விடையைத் தொடர்கிற்றிலிர் என்று - அவ் வுழவின் பயனை முற்றப்பெற்று விடுமளவும் போகாதபடி அவனை வயிரத் தொழு வாய்ப் பிணித்திலீர், (நமக்கும் அஃது அரிதாயிற்று; இனியான் செய்வது என்) என்று; அணங்கு இழை தடமாக அழுதாள் - அழகிய அணியாள் கண்ணீர் ஒரு குளமாகும்படி அழுதாள்.

(வி - ம்.) உழுதீர் விடையைத் தொடர்கிற்றிலீர் என்றும் ஒரு பொருள் தோன்றிற்று.

விடை, காளை: சீவகன்; உவம ஆகுபெயர். விடை - விடுதல் (என்று ஒரு பொருள்.)

தொழு - மாட்டுக்கொட்டில். கண்ணீர் தடமாக என ஒருசொல் பெய்க. அணங்கிழை: அன்மொழி; கேமசரி.

ஓரிடத்தும் பற்றின்றி யிருத்தலின் விடை; முறித்தற்காகாமையின் 'வயிரத்தொழு' என்றாள். (ககஉ)

கருஉச. தகைவா டியதன் னிழல்கண் ணுகுநீர்
வகைவா டிவருந் தியழு வதுகண்
டகையே லமர்தோ ழியழே லவரோ
பகையா பவரேன் றனள்பான் மொழியே.

(இ - ள்.) பால்மொழி - இனியமொழியாளாகிய கேமசரி ; கண் உகுநீர் தகைவாடிய தன்நிழல் - தான் அழுத கண்ணீரிலே தோற்றிய தன் அழகு கெட்ட நிழல்; வகை வாடி வருந்தி அழுவது கண்டு - வகை வாடி வருந்தி அழுவதனைப் பார்த்து; அமர் தோழி அகையேல் அழேல் - எனக்கு அன்பமர்ந்த தோழியே! நீ வருந்தாதே! அழுவதுஞ் செய்யாதே!; அவர் பகையாபவரோ என்றனள் - அவர் இறுதியில் நமக்குப் பகை யாவாரோ? என்று ஆற்றுவித்தனள்.

(வி - ம்.) அவரோ: ஓ: எதிர்மறை. நிழல், பளிங்கிற்றோன்றிய நிழ லென்றலுமாம்.

பான்மொழி. அன்மொழி; கேமசரி. தகை - அழகு, வகை - தான் வருந்துமாறு. அகைதல் - வருந்துதல். (ககூ)

கருஉரு. வெறிமா லைகள்வீழ்ந் திநிலம் புதையப்
பொறிமா லைபுனே நிழல்கா ணலளாய்
நெறிநா டியபோ யினணீ டினள்கண்
டெறிவால் வளைகோண் டுவரும் மினியே.

(இ - ள்.) வெறிமாலைகள் வீழ்ந்து நிலம்புதைய - தன் முடியில் அணிந்த மணமுறும் மாலைகள் வீழ்ந்து கண்ணீரையுடைய நிலம் மறைதலின்; பொறி மாலைபுனே நிழல் காணலளாய்- ஊழை இயல்பாகவுடைய கேமசரி, அந் நிழலாகிய தோழியைக் காணுதவளாய்; எறி வால் வளை - ஒளிவீசும் வெள்வளையாள்; நெறி நாடிய போயினள் நீடினள் - அவன் போனவழியைத் தேடுதற்குப் போயினுள், நீட்டிக்கவுஞ் செய்தாள்; இனி கொண்டுவரும் - இனி அவனைக் கண்டு அழைத்து வருவாள்.

(வி - ம்.) 'எறி வால் வளை' என்பதற்கு 'அறுக்கப்படும் வெள்வளை' என்றும் உரைக்கலாம். 'அவள் அவனைக் கண்டு வளைகொண்டுவருவாள்' என்றும், 'எனவே அவனைத்தான் கொண்டு வரும் என்றுளாம்' என்றும் உரைப்பர் நச்சினுர்க்கினியர். (ககச)

கருஉசு. மடமா மயிலே குயிலே மழலை
நடைமா ணனமே நலமார் கிளியே
யுடனு டுமேனே யனேயேன் றுருகாத்
தொடையாழ் மழலை மொழிசோர்ந் தனளே.

(இ - ள்.) தொடை யாழ் மழலை மொழி - இனிய நரம்பினையுடைய யாழ்போலும் மழலை மொழியாள்; மடமா மயிலே - இளமை பொருந்திய மயிலே!; குயிலே - குயிலே!; மழலை நடை மாண் அனமே - இளமைபொருந்திய நடையினுல் மேம்பட்ட அன்னமே!; நலம்ஆர் கிளியே - அழகு பொருந்திய கிளியே!; உடன் ஆடும் என் ஐயனே என்று - என்னுடன் விளையாடும் என் தலைவனை என்றுரைத்து, (அவ்வளவிலே); உருகா சோர்ந்தனள்- உருகி அவற்றிற்குக் கூறுங் காரியத்தை மறந்தாள்.

(வி - ம்.) 'ஐயனே' என்பதற்குத் 'தேடுமின்' என்னும் வினை வருவிக்க என்பர் நச்சினுர்க்கினியர்.

மயில் சாயலானும் குயில் இசையானும் அன்னம் நடையானும் கிளி சொல்லானும் தன்னேடு உறவுடையனவாதலால் ஐயனை உடனே சென்று தேடுமின் என்றுகூறிச் சோர்ந்தாள் எனினுமாம். இதற்கு நச்சினுர்க்கினியர் கூறும் உரை மாறுபட்டது எனினும் மிகவும் இனிமையுடையதாம். முதலடியில் 'மழலை' என்பது இளமையை யுணர்த்தியது. கடையடியில் உள்ள மழலை என்பது திருந்தாத என்னும் பொருளை யுணர்த்திற்று. உருகா என்பது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். உருகி என்று பொருள்படும். தொடை - தொடுக்கப்பட்டது. நரம்பு. (ககரு)

வேறு

௧௫௨௭. மல்லுறை யலங்கன் மார்பன்
பிரிவெனு மேரியுள் வீழ்ந்து
கல்லுறை நாகு வேய்த்தோட்
கதிர்மணி முறுவற் செவ்வாய்
வில்லுறை புருவ மாதர்
வெந்தனள் கிடப்ப மின்றோ
யில்லுறை தெய்வ நோக்கி
யிரங்கிநின் றுரைக்கு மன்றே.

(இ - ள்.) கல்உறை நாகு வேய்த்தோள் - மலையிடத்தே நின்ற இளைய வேய்போலும் தோளையும்; கதிர்மணி முறுவல் செவ்வாய் - ஒளிபொருந்திய முத்தனைய பற்களையுடைய செவ் வாயையும்; வில்உறை புருவம் மாதர் - வில்லைப்போன்ற புருவத் தையும் உடைய கேமசரி; மல்உறை அலங்கல் மார்பன் பிரிவு எனும் எரியுள் வீழ்ந்து - மற்றொழில் பொருந்திய, மாலையணிந்த சீவகனுடைய பிரிவாகிய தீயில் வீழ்ந்து; வெந்தனள் கிடப்ப - வெந்து கிடக்கும்போது; மின் தோய் இல் உறை தெய்வம் நோக்கி-ஒளிபொருந்திய அவ் வீட்டில் வாழும் தெய்வம் பார்த்து; இரங்கி நின்று உரைக்கும் - இரக்கத்துடன் நின்று கூறும்.

(வி - ம்.) இதுமுதல் மூன்று செய்யுள் இல்லுறை தெய்வங் கூறிய இரக்க மொழிகள்.

மல் - ஒருவகைப் போர்த்தொழில் இது அத்தொழில்; வன்மையைக் குறித்து நின்றது. நாகுவேய் - இளமையுடைய மூங்கில். கதிர்மணி என்றது ஈண்டு முத்தினை. வெந்தனள் : முற்றெச்சம். (௧௧௬)

௧௫௨௮. புண்ணவாம் புலவு வாட்கைப்
பொலன்கழற் புனைந்த பைந்தார்க்
கண்ணவாம் வனப்பி னானைக்
காமனே கண்ட போழ்தும்
பண்ணவாம் பவளச் செவ்வாய்ப்
படாமுலைப் பரவை யல்குற்
பெண்ணவா நிற்கு மென்றாற்
பிணையனாட் குய்த லுண்டோ.

(இ - ள்.) புண் அவாம் புலவு வாள் கை-புண்ணை விரும்பும் புலால் கமழும் வாளேந்திய கையையும்; பொலன் கழல் - பொற் கழலையும்; புனைந்த பைந்தார் - தொடுத்த புதிய மாலையையும் உடைய; கண் அவாம் வனப்பினானை - கண் விரும்பும் அழ

குடையானை; காமனே கண்ட போழ்தும் - காமனே பார்த்திட்டாலும் அக்காமனுக்கு; பண் அவாம் பவளச் செவ்வாய் - பண் விரும்பும் மொழியையுடைய பவளம் அனைய செவ்வாயையும்; படாமுலை - தளராத முலையையும்; பரவை அல்குல் - பரவிய அல்குலையும் உடைய; பெண் அவா நிற்கும் என்றால் - பெண்மையை அடைய விரும்பும் ஆசை உள்ளத்திலே நிற்கும் என்றால்; பிணை அனாட்கு உய்தல் உண்டோ-இவட்குப் பிழைத்தலுளதோ?

(வி - ம்.) 'பெண்ணவாய்' என்பதூஉம் பாடம். காமனே: ஏ: பிரிநிலை.

அக்காமன் பெண்மைத்தன்மை எய்தி இவனை நுகர்தற்கு விரும்புவன்; அத்தகைய பேரழகினோனை எய்திய இவள் பிரிவினை எங்ஙனம் ஆற்றுவள் என்று இரங்கியபடியாம்.

"ஆடவர் பெண்மையை அவாவு தோளினாய்" என்பது கம்பராமாயணம்; (தாடகை - உச). (கசஎ)

கருஉகூ கடத்திடைக் கவளந் தேனெய்
கனியைத்தோய்த் தினிய துற்றத்
தடக்கையாற் கொடுத்துப் புல்லுந்
தவழ்மதக் களிறு நீங்கின்
மடப்பிடிக் குய்த லுண்டோ
வாலடிக் குஞ்சி சூட்டுங்
கோடைக்கையான் பிரிந்த பின்றைக்
கோதையாட் குய்த லுண்டோ.

(இ - ள்.) தேன் நெய் கனியைத் தோய்த்து இனிய கவளம் துற்ற - தேனாகிய நெய்யைக் கனியில் தோய்த்தலாலே இனியவாகிய கவளத்தைத் தின்னும்படி; தடக்கையால் கொடுத்துப் புல்லும் தவழ் மதக் களிறு நீங்கின் - பெரிய கையினால் ஊட்டித் தழுவும் மதம்பொருந்திய களிறு நீங்கினால்; கடத்திடை மடப்பிடிக்கு உய்தல் உண்டோ - காட்டிலே இளம்பிடிக்கு வாழ்வு உண்டோ?; (அதுபோல) வாலடிக் குஞ்சி சூட்டும் கொடைக்கையான் பிரிந்த பின்றை - இவளுடைய தூய அடியிலே தன் முடியை வைத்து ஊடல் தீர்த்துக் கூடும் வண்கையான் நீங்கின பிறகு; கோதையாட்கு உய்தல் உண்டோ - கோதையை உடைய இவளுக்கு வாழும் இயல்பு உண்டோ?

(வி - ம்.) கடம் - காடு. தேனெய் - பண்புத் தொகை. இனிய, பலவறிசொல். துற்றல் - உண்ணல். மதந்தவழ் களிறு என மாறுக. குஞ்சி - குடுமி, தலைமயிர். ஊடலை நீக்குவதற்குக் கணவன் மனைவியின் காலில் வீழ்ந்து வணங்கினான் என்று கூறுவது இலக்கிய மரபு. (கசஅ)

கரு௬0. முயங்கினன் சொன்ன வண்டாய்
முகிழ்முலைத் தெய்வஞ் சேர
வுயங்குவா ளுணர்ந்து கேள்வற்
கூனமும் பிரிவு மஞ்சி
யியங்குவா னின்ற வாவி
தாங்கின ளென்ப போலும்
வயங்குபொன் னீன்ற நீல
மாமணி முலையி னளே.

(இ - ள்.) முயங்கினன் சொன்ன வண்டாய் முகிழ்முலைத் தெய்வம் சேர - (தன்னைத் தழுவிய) கணவன் கூறிய வண்டின் வடிவாய் முகிழ்த்த முலையை உடைய இல்லுறை தெய்வம் அவள் எதிரில் வந்த அளவிலே; உயங்குவாள் - வருந்திக்கொண்டிருந்த; வயங்கு பொன் ஈன்ற நீல மாமணி முலையினள் - விளங்கு பொன் அனைய தேமலையுடைய, நீலநிற மணிக் கண்களையுடைய முலையினள்; உணர்ந்து - (வண்டை நோக்கித் தன் கணவன் கூறியதை) உணர்ந்து; கேள்வற்கு ஊனமும் பிரிவும் அஞ்சி - தன் கணவனுக்குப் பழியும் இறந்துபடுதலும் நேரும் என அஞ்சி; இயங்குவான் நின்ற ஆவி தாங்கினள் - போதற்கு ஒருப்பட்டு நின்ற உயிரைப் போகாமல் தாங்கினள்.

(வி - ம்.) என்ப, போலும்: அசைகள்.

அவன், 'துணைவண்டு துஞ்சில் நீயும் துஞ்சுவை' என்றதனை நினைத்து ஆற்றினள். அவள் நிலைகண்டு இரங்கிய தெய்வம், 'நின் இறந்துபாடு நின் கேள்வற்கு ஊனமும் பிரிவுமா'மென்று கூறுவதுபோல வண்டாய் வந்து தன் தெய்வத்தன்மையால் அவன் கூறியதை நினைப்பித்தது.

(௧௧௧)

கரு௬௧. வஞ்சவாய்க் காமன் சொன்ன
மணிநிற வண்டு காணீர்
துஞ்சுவேன் றுயரந் தீரத்
தொழுதகு தெய்வ மாவீர்
மஞ்சுதோய் செம்பொன் மாடத்
தென்மனை தன்னு ளென்றுள்
பஞ்சிமேன் மிதிக்கும் போதும்
பனிக்குஞ்சீ றடியி னளே.

(இ - ள்.) பஞ்சிமேல் மிதிக்கும்போதும் பனிக்கும் சீறடியினள் - பஞ்சியின்மேல் மிதித்தாலும் வருந்துகின்ற சிற்றடியாள்; வஞ்சவாய்க் காமன் சொன்ன மணிநிற வண்டுகாள்; வஞ்சிக்கும் வாயையுடைய காமன் கூறிய நீல்நிற வண்டுகளே!-

நீர் - நீவிர்; துஞ்சுவேன் துயரம் தீர - இறந்துபடுவேனது துயரம் நீங்கும்படி; மஞ்சு தோய் செம் பொன் மாடத்து - முகில் படியும் பொன்மாடத்திலே; என்மனை தன்னுள் - என் மனையிலே; தொழுதகு தெய்வம் ஆவீர் - தொழத்தகுந்த தெய்வமாவீர்கள்.

(வி - ம்.) துணை வண்டையும் கருத்துட் கொண்டு, 'வண்டுகாள்' என்றாள். நும்மால் இறந்துபாடு நீங்கினேன். இனி, இரங்காத நும்மைக் கண்டு, இரக்கமுந் தீரும்படி இல்லுறை தெய்வமாய் இருப்பீர் என்றாள்; 'இருக்குமே யிரங்கலின்றாய்' (சீவக. கடுOஉ) என்றாளாதலின். இது தெய்வத் தன்மையாற் கூறுவித்தது தெய்வம். (கஉ0)

கடுநூஉ. நோங்தேடுக் கலாது வீங்கும்
வனமுலை நுசுப்பிற் றேய்ந்தோர்
பந்தெடுக் கலாத நங்கை
பால்கடை வெண்ணெய்ப் பாவை
வெந்துடன் வெயிலுற் றாங்கு
மெலிந்துக விளங்கும் வெள்ளி
வந்துவா னிட்ட சுட்டி
வனப்பொடு முளைத்த தன்றே.

(இ - ள்.) வீங்கும் வனமுலை எடுக்கலாது நொந்து தேய்ந்த நுசுப்பின் - பருக்கும் தன் அழகிய முலையைச் சுமக்கமுடியாமல் வருந்தித் தேய்ந்த இடையினாலே; ஓர் பந்து எடுக்கலாத நங்கை - ஒரு பந்தையும் ஏந்தமுடியாத கேமசரி; பால் கடை வெண்ணெய்ப் பாவை வெயில் உற்று உடன் வெந்தாங்கு - பால் கடைந்தெடுத்த வெண்ணெயால் ஆன பாவை வெயிலில் உற்று உடனே வெந்தாற்போல; மெலிந்து உக - மெலிந்து கெடாநிற்க; வான் இட்ட சுட்டி வனப்பொடு - வானுக்கு இட்ட சுட்டி போன்ற அழகுடன்; வெள்ளி வந்து முளைத்தது - வெள்ளி வந்து தோன்றியது.

(வி - ம்.) இனி, நுசுப்புப்போல் தேய்ந்து என்றுமாம். 'தேய்ந்த நுசுப்பாற் பந்தெடுக்கலாத நங்கை'யென அவளியல்பு கூறினார். தேய்ந்த ஓர்: தேய்ந்தோர்: தொகுத்தல் விகாரம். இனி, 'தேய்ந்து' எனப் பிரித்து, 'வருந்தும்' என ஒரு சொல் வருவித்து முடிப்பர் நச்சினார்க்கினியர்.

இறந்துபாடு நீங்கி வருந்தினாள் என்க. (கஉக)

கடுநூநூ. எரிநுதி யுற்ற மாவி னிளந்தளிர் போன்று மாழ்கிப்
புரிநரம் பிசையிற் றள்ளிப் புன்கணுற் றழுத லாலே
யரிகுரற் கோண்ட பூச லகத்தவர்க் கிசைப்ப வீண்டித்
திருவிரி கோதை நற்றாய் நிப்புதி சேர்ந்து சொன்னாள்.

(இ - ள்.) எரிநுதி உற்ற மாவின் இளந்தளிர் போன்று மாழ்கி-எரியின் நுனியிற் பொருந்திய மாவின் இளந்தளிர்போல மயங்கி; புரிநரம்பு இசையின் தள்ளிப் புன்கண் உற்று அழுதலாலே - தன் மிடற்றை முறுக்கிய நரம்போசையினின்றும் நீக்கி வருத்தம் உற்று அழுததனால்; அரிகுரல் கொண்ட பூசல் அகத்தவர்க்கு இசைப்ப - அரித்தெழும் குரல்கொண்ட ஓசை இல்லின் உள்ளார்க்கு அறிவிக்க; ஈண்டி - அவர்கள் திரண்டு வந்தபோது; திருவிரி கோதை நற்றாய் நிப்புதி சேர்ந்து சொன்னாள் - அழகு மலர்ந்த மாலையையுடைய கேமசரியின் நற்றாயான நிபபுதி ஆங்கு வந்து கூறினாள்.

(வி - ம்.) யாழ் நரம்பிசை போன்று அவட்கியல்பாக அமைந்துள்ள குரல் துன்பத்தால் மாறி அரிகுரல் ஆயிற்றென்பது கருத்து. அரிகுரல்-அரித்தெழும் குரல். 'அரிக்கூ டின்னியம்' என்றார் மதுரைக் காஞ்சியினும், (சுகஉ.)

ஈண்டி என்னும் செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாக்குக. (கஉஉ)

கருகூச. விழுத்திணைப் பிறந்து வெய்ய
வேட்கைவே ரரிந்து மெய்ந்நின்
றிழுக்கமொன் றானு மின்றி
யெய்திய தவத்தின் வந்து
வழுக்குத லின்றி விண்ணோன்
வச்சிர நுதியி னிட்ட
வெழுத்தனன் றந்த வின்ப
மின்னுநீ பெறுதி யென்றாள்.

(இ - ள்.) விழுத்திணைப் பிறந்து - உயர்ந்த குடியிலே பிறந்து; வெய்ய வேட்கை வேர் அரிந்து - கொடிய பிறப்பின் வேரை அறுத்து; மெய்ந் நின்று - உண்மை நெறியிலே நின்று; இழுக்கம் ஒன்றானும் இன்றி - தவறு எவ்வாற்றானும் இல்லாமல்; எய்திய தவத்தின் வந்து-நமக்குக் கிடைத்த தவப்பயனாக வந்து; விண்ணோன் வச்சிர நுதியின் இட்ட எழுத்தனன் - அயன் வச்சிரத்தின் நுனியாலே இட்ட எழுத்தைப் போன்றவன்; தந்த இன்பம் - நினக் களித்த இன்பத்தை; வழுக்குதல் இன்றி நீ இன்னும் பெறுதி என்றாள் - தவறுதல் இல்லாமல் நீ மேலும் எய்துவை என்றாள்.

(வி - ம்.) விழுத்திணை - உயர்ந்த குடி. வேட்கை, ஈண்டு ஆகுபெயராற் பிறப்பினை உணர்த்திநின்றது.

வச்சிரத்தின் நுனியிற் பொறிக்கப்பட்ட எழுத்து அழியாமை பற்றி வச்சிர நுதியின் இட்ட எழுத்தன்னான் என்றாள் எனினுமாம்.

முன்னும் தவப்பயனாகவே இவனை எய்தினை அத் தவப்பயன் கெடா வியல்பிற்றாகலின் மீண்டும் நீ அவனை எய்துதல் ஒருதலை என்பது கருத்து. (கஉங)

கருகூடு. பிறங்கின கெடுங்கள் யாவும்
புணர்ந்தவர் பிரிவர் பேசி
னிறங்கின வீழு மேலா
யோங்கிய வெண்ணில் யோனிப்
பிறந்தவர் சாவர் செத்தார்
பிறப்பவே யென்ன நோக்கிக்
கறங்கிசை வண்டு பாடுங்
கோதைநீ கவல லென்றாள்.

(இ - ள்.) கறங்கு இசை வண்டுபாடும் கோதை - ஒலிக்கும் இசையுடன் வண்டுகள் முரலும் மலர் மாலையாய்!; பிறங்கினகள் யாவும்கெடும் - மிக்க வனப்புக்கள் யாவும் ஒருகாற் கெடும்; புணர்ந்தவர் பிரிவர் - கூடியவர் பிரிவர்; பேசின் - ஆராய்ந்தால்; மேலாய் ஓங்கிய இறங்கின வீழும் - மேலாக வளர்ந்தன தாழ்ந்து வீழும்; எண்ணில் யோனி பிறந்தவர் சாவர் - கணக்கற்ற பிறவிகளிற் பிறந்தவர் இறப்பர்; செத்தார் பிறப்பவே என்ன நோக்கி - இறந்தவர் பிறப்பர் என்று இன்பமுந் துன்பமும் மாறிமாறி வருமென ஆராய்ந்து; நீ கவலல் என்றாள்-நீ கவலைப்படுவதை விடுக என்றுரைத்தாள்.

(வி - ம்.) 'புணர்ந்தவர் பிரிவர்' என்பதைப் 'பிரிந்தவர் புணர்வர்' என மாற்றி இறுதியில் தந்து, 'அங்ஙனங் கெட்டாலும், பிரிந்தவர்கள் எல்லோரும் புணர்வரே யென்று பார்த்து நீ கவலாதே' என்று முடிப்பர் நச்சினார்க்கினியர்.

மேலும் நீ இவ்வுலகியற்கையினை உணர்ந்து ஆற்றியிருத்தலும் வேண்டும் என்றிதனால் ஆற்றுவிக்கின்றனள் என்க.

பிறங்கினகள் யாவும் என இயைக்க கள்: விகுதிமேல் விகுதி. (கஉச)

கருகூசு. எரிதலைக் கொண்ட காமத்
தின்பநீர்ப் புள்ளி யற்றாற்
பிரிவின்கட் பிறந்த துன்பம்
பெருங்கட லனைய தோன்றா
லுருகிநைந் துடம்பு நீங்கி
னிம்மையோ டும்மை யின்றி
யிருதலைப் பயனு மெய்தா
ரென்றியாங் கேட்டு மன்றே.

(இ - ள்.) எரிதலைக்கொண்ட காமத்து இன்பம் நீர்ப்புள்ளி அற்று - தீயைத் தன்னிடத்தே கொண்ட காமத்திலே புணர்ச்சியாற்பெறும் இன்பம் நீர்த் துளியை ஒத்திருக்கும்; பிரிவின்கண் பிறந்த துன்பம் பெருங்கடல் அனையது ஒன்று-பிரிவாற் பிறந்த துன்பம் பெரிய கடலை ஒப்பதொன்றாகும்; உருகி நைந்து உடம்பு நீங்கின் இம்மையோடு உம்மை இன்றி இருதலைப் பயனும் எய்தார் - (ஆதலின்) இப் பிரிவாலே உருகி வருந்தி உடம்பு நீங்குமாயின் இம்மையினும் மறுமையினும் செய்து கொள்ளும் நன்மையும் இல்லாமல் இரண்டிடத்தும் பெறும் பயனையும் பெறார்; என்று யாம் கேட்டும் அன்றே - என்று உணர்ந்தார் கூறக்கேட்டிருப்போம் அல்லவோ? (ஆதலின் பிரிவால் வருந்தாதே.)

(வி - ம்.) நீர்ப்புள்ளி இன்பத்தின் சிறுமைக்கும் பெருங்கடல் துன்பத்தின் பெருமைக்கும் உவமையாகக் கூறப்பட்டன.

உருகி நைதல் காரணமாக இறந்துபடின் என்றவாறு.

இருதலை - அவ்விம்மை மறுமையாகிய ஈரிடத்தும். கேட்டும் : தன்மைப் பன்மை வினைமுற்று. ஆதலின் வருந்தாதேகொள் என்பது குறிப்பு. (கஉரு)

கருநஎ. மன்னுநீர் மோக்கு ளொக்கு மானிட ரிளமை யின்ப
மின்னினேத் திறக்குஞ் செல்வம் வெயிலுறு பனியி னீங்கு
மின்னிசை யிரங்கு நல்யா ழிளியினு மினிய சொல்லா
யன்னதால் வினையி னாக்க மழுங்குவ தென்னை யென்றாள்.

(இ - ள்.) இன் இசை இரங்கும் நல்யாழ் இளியினும் இனிய சொல்லாய் - இனிய இசையொலிக்கு நல்ல யாழினது இளியென்னும் நரம்பினும் இனிய மொழியினாய்!; மானிடர் இளமை மன்னும் நீர் மொக்குள் ஒக்கும் - மக்களின் இளமை மிகவும் நீர்க்குமிழியை ஒக்கும்; இன்பம் மின்னின் ஒத்து இறக்கும் - அவர் இன்பமோ மின்னைப்போன்று தோன்றி நீங்கும்; செல்வம் வெயிலுறு பனியின் நீங்கும் - அவர்களுடைய செல்வமும் வெயிலைக் கண்ட பனிபோல் அழியும்; வினையின் ஆக்கம் அன்னது - (ஆதலின்) தீவினையின் ஆக்கம் அவ்வாறு வலியுடைத்து; அழுங்குவது என்னை என்றாள் - இதற்கு வருந்திப் பெறுவது என்னை யென்று ஆற்றுவித்தாள்.

(வி-ம்.) மன்னும் - மிகவும் என்பர் நச்சினார்க்கினியர். நீர் மன்னும் மொக்குள் என மாறி நீரிடத்தே நிலைபெற்ற மொக்குள் எனினுமாம்.

அன்னது - அத்தகைய வன்மையுடையது. விப்புதி தன் மூதுமைக் கேற்றன கூறி ஆற்றுவித்தல் அறிந்தின்புறுக. இளி - யாழிடத்து ஒரு நரம்பு. (கஉசு)

கஉருஅ. பஞ்சிறை கொண்ட பைம்பொற்
கலைபுறஞ் சூழ்ந்து வைத்து
நஞ்சிறை கொண்ட நாகப்
படம்பழித் தகன்ற வல்குல்
வெஞ்சிறைப் பள்ளி யாக
விழுமுலைத் தடத்து வைகத்
தஞ்சிறைப் படுக்க லாதார்
தம்பரி வொழிக வென்றாள்.

(இ - ள்.) பஞ்சு இறைகொண்ட பைம்பொன்கலை புறம் சூழ்ந்து வைத்து - துகில் தங்கிய புதிய பொன்மேகலையைப் புறத்தே சூழவைத்து ; நஞ்சு இறைகொண்ட நாகப் படம் பழித்து அகன்ற அல்குல்-நஞ்சு தங்கிய அரவின் படத்தைப் பழித்துப் பரந்த அல்குலை; வெஞ்சிறைப் பள்ளியாக - வெவ்விய சிறையிடமாகக் கொண்டு; விழுமுலைத் தடத்துவைக - சிறந்த முலைத்தடத்திலே தங்குமாறு ; தம் சிறைப்படுக்கலாதார் - தம் சிறையிலே கணவரை அகப்படுக்க அறியாத மகளிர் ; தம் பரிவு ஒழிக என்றாள் - பிரிவின்கண் தாம் வருந்துவதை விடுக என்றாள்.

(வி - ம்.) இது கேமசரி தன்னிலே கூறி ஆற்றியது. தாய்க் கூற்றென்பாருமுளர்.

பஞ்சு: ஆகுபெயர்; ஆடை என்க. கலை - மேகலை என்னுமோரணி கலன். இறைகொண்ட - தங்கிய. இதனைக் கேமசரி கூற்றாகக் கொள்ளலே சிறப்பு. (கஉஎ)

கஉருகூ. வாசமிக் குடைய தாரான் வண்டினுக் குரைத்த மாற்றப்
பாசத்தா லாக்கப் பட்ட வாவிய ளல்ல தெல்லாம்
பேசினோர் பிணையன் மாலை பிசைந்திடப்பட்ட தொத்தா
டேசுலாம் பரவை யல்குற் றூமணிப் பாவை யன்னாள்.

(இ - ள்.) தூசு உலாம் பரவை அல்குல் தூமணிப் பாவை அன்னாள் - ஆடை தங்கிய பரவிய அல்குலையுடைய தூ மணிப் பாவையைப் போன்றவள் ; வாசம் மிக்குடைய தாரான் வண்டினுக்கு உரைத்த மாற்றப் பாசத்தால் - மணம் மிகவுடைய மாலையான் வண்டுக்குக் கூறிய மொழியாகிய கயிற்றாலே ஆக்கப்பட்ட ஆவியள், கட்டுண்ட உயிரொன்றையுமே உடையாள் ; அல்லது எல்லாம் பேசின் ஓர் பிணையல் மாலை பிசைந்திடப்பட்டது ஒத்தாள் - அவ்வுயிரொழிய உடம்பு முழுவதும் நாம் சொல்லிற் பிசைந்து போகட்டதொரு கட்டுதலையுடைய மாலையை ஒத்தாள்.

(வி - ம்.) வண்டினுக்குரைத்த மாற்றம் என்றது, "துணை வண்டு துஞ்சின் நீயுந் துஞ்சுவை" என்றதனை (கூக). பாசம் - கயிறு. பாசம் என்றதற்கேற்ப, ஆக்கப்பட்ட ஆவி என்றதற்குக் கட்டப்பட்ட உயிர் என்னலே சிறப்பு. தா - தாய. (கஉஅ)

கஙசㅇ. பையரா விழுங்கப் பட்ட
பசுங்கதிர் மதிய மொத்து
மெய்யெரி துயரின் மூழ்க
விதிர்விதிர்த் துருகி நையு
மையிருங் குழலி ளுடன்
மைந்தனை வலையிற் சூழ்ந்து
கையரிக் கோண்டுங் காணாள்
காளையுங் காலிற் சென்றான்.

(இ - ள்.) பையரா விழுங்கப்பட்ட பசுங்கதிர் மதியம் ஒத்து - படத்தையுடைய பாம்பினால் விழுங்கப்பட்ட பைங்கதிரையுடைய திங்களைப்போன்று பசந்து; மெய் எரி துயரின் மூழ்க விதிர்விதிர்த்து உருகி நையும் - உடம்பு எரியுந், துயரத்திலே மூழ்கும்படி நடுநடுங்கி நெஞ்சுருகி வருந்துகின்ற; மை இருங் குழலினாள் தன் மைந்தனை - கரிய நீண்ட குழலாள் தன் கணவனை; வலையின் சூழ்ந்து கையரிக் கொண்டும் காணாள் - வலைபோலே சூழ்ந்துகொண்டு அரித்தல் கொண்டு தேடியும் கண்டிலள்; காளையும் காலின் சென்றான் - அவனும் காலாலே நடந்து போனான்.

(வி - ம்.) குழலினாள் : கேமசரி. தன் மைந்தனை என்றது தன் கணவனை என்றவாறு.

'நினக்கிவன் மகனாத்தோன்றியதூஉம்' என மணிமேகலையில் (உக : உரு) கணவனை மகன் எனலுங் காண்க.

அரா : அர என ஆனது விகாரம். காலின் - காற்றுப்போலென்றுமாம். (கஉகூ)

கஙசக. காழகச் சேற்றுட் டம்பால்
கதிர்மணிக் குடத்தி னேந்தி
வீழ்தரச் சோரிவ தேபோல்
விளங்கொளித் திங்கட் புத்தேள்
சூழிருட் டொழுதி மூழ்கத்
தீங்கதிர் சோரிந்து நல்லார்
மாழைகோண் முகத்திற் றோன்றி
வளைகடன் முளைத்த தன்றே.

(இ - ள்.) காழகச் சேற்றுள் வீழ்தர - கருஞ்சேற்றிலே விழும்படி; கதிர்மணிக் குடத்தின் தீ பால் ஏந்திச் சொரிவதே போல் - ஒளிவிடும் மணிக்குடத்திலே இனிய பாலை ஏந்திச் சொரிவதைப்போல; விளங்கு ஒளித்திங்கள் புத்தேள் - விளங்கும் ஒளியுறும் திங்களாகிய தெய்வம்; தீ கதிர் சூழ் இருள்தொழுதி மூழ்கச் சொரிந்து - இனிய கதிரைச் சூழ்ந்த இருள் திரளிலே முழுகும்படி பெய்து; நல்லார் மாழைகொள் முகத்தின் தோன்றி - மகளிருடைய பசத்தல்கொண்ட முகம்போலே தோன்றி; வளைகடல் முளைத்தது - வளைந்த கடலிலே தோன்றியது.

(வி - ம்.) காழகம் - கருமை. கருஞ்சேறு : இருளிற்கும் பால் நிலவிற்கும் உவமை. ஒளி வீழ்தலேயன்றி இருள் அகலாமையின் சேற்றிற் பெய்த பால் என உவமை கூறினர். புத்தேள் - கடவுள். தொழுதி - திரள். வளைகடல் : வினைத்தொகை.

மாழை - பொன். விடியற் காலத்தெழுந்த நிலவு இருளைக்கெடுத்தல் ஆகாமையின் இங்ஙனம் கூறினர். (கஈ0)

கஉசஉ. ஏறனற் கிருளை நீங்கக் கைவிளக் கேந்தி யாங்கு
வீறுயர் மதியந் தோன்ற விரைவோடு போய பின்றை
மாறிலாப் பருதி வட்டம் வருதிரை முளைத்த வாங்க
ணாறுசெ லொருவற் கண்ண லணிகல மருள லுற்றான்.

(இ - ள்.) ஏறனற்கு இருளை நீங்கக் கைவிளக்கேந்தியாங்கு - சீவகனுக்கு இருளை ஓட்ட ஏந்திய கை விளக்குப்போல; வீறு உயர் மதியம் தோன்ற - சிறப்புற உயர்ந்த திங்கள் முளைத்தலாலே; விரைவொடு போய பின்றை - சீவகன் சிறிது தூரம் விரைந்து நீங்கிய பிறகு; மாறு இலாப் பரிதிவட்டம் வருதிரை முளைத்த ஆங்கண் - மாறுபடாத ஞாயிறு, மோதும் அலையுறு கடலிலே முளைத்த அளவிலே; ஆறு செல் ஒருவற்கு - அவ்வழியே செல்லும் ஒருவனுக்கு; அண்ணல் அணிகலம் அருளல் உற்றான் - சீவகன் தன் அணிகலன்களைக் கொடுக்கவிரும்பினான்.

(வி - ம்.) ஏறனான் : ஆண் சிங்கத்தை ஒத்த சீவகன். சீவகன் இருளில் செல்லக் கண்டிரங்கிய விண்ணோர் ஒரு கை விளக்கேந்தினாற் போன்றதென்க. வீறு : வேறொன்றற்கில்லாத அழகு. திங்கள்போலத் தேய்தலும் வளர்தலும் மறைதலும் இல்லாமையின் மாறிலாப் பரிதி வட்டம் என்றார். பரிதி வட்டம் - ஞாயிற்று மண்டிலம்.

வருதிரை : கடல். வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. ஏறு + அனான் = ஏறனான். அன்னான் என்பது அனான் எனத் தொகுத்தல் விகாரம் ஆயிற்று. இல்லா என்பது இலா என நின்றதும் அது. (கஈக)

வேறு

௧௫௪௩. எவ்வூரீ ரெப்பதிக்குப் போந்தீர்நும்
மனைவியர்தா மெனைவர் மக்க
ளொவ்வாதார் தாமெனைவ ரொப்பார்மற்
றெனைவர்நீ ருரைமி னென்றாற்
கிவ்வூரே னிப்பதிக்குப் போந்தேனென்
மனைவியரு நால்வர் மக்க
ளொவ்வாதார் தாமில்லை யொப்பா
னொருவனென வுரைத்தான் சான்றோன்.

(இ - ள்.) எவ்வூரீர் - நீர் எவ்வூரிலே யிருப்பீர்?; எப்பதிக்குப் போந்தீர் - எவ்வூர்க்கு வந்தீர்?; நும் மனைவியர் தாம் எனைவர் - நும் மனைவியர் எத்துணைவர்?; மக்கள் ஒவ்வாதார் தாம் எனைவர் - மக்களில் ஒழுக்கமில்லாதார் எத்துணைவர்?; மற்று ஒப்பார் எனைவர் - ஒழுக்கமுடையார் எத்துணைவர்?; உரைமின் என்றாற்கு - கூறுமின் என வினவினாற்கு; இவ்வூரேன் - இப்போது இவ்வுடம்பினிடத்தேன்; இப்பதிக்குப் போந்தேன் - இவ்வுடம்பெடுத்தற்குப் போந்தேன்; என் மனைவியரும் நால்வர் - எனக்கு மனைவியர் நான்கு பேர்; மக்கள் ஒவ்வாதார் தாம் இல்லை - மக்களில் ஒழுக்கமிலாதார் இல்லை; ஒப்பான் ஒருவன் - ஒழுக்கமுடையான் ஒருவன் உளன்; என சான்றோன் உரைத்தான் - என்று உணர்வுடையோன் கூறினான்.

(வி - ம்.) எனைவர் - எத்தனைபேர். உலகத்தோடு ஒட்ட ஒழுகுதலே ஒழுக்கமாதலின், ஒழுக்கமுடைமையை ஒப்பு என்றும் அஃதில்லாமையை ஒவ்வாமை என்றும் கூறினார்.

இவ்வூரேன் இப்பதிக்குப் போந்தேன் என்புழி ஊர் பதி என்பன உடல் என்னும் பொருளில் கூறப்பட்டன. உணர்வு என்றது தத்துவ உணர்ச்சியினை. இஃது அணிகலன்களைப் பெறுவோன் பெறுமுன் வினவியது. (௧௩௨)

௧௫௪௪. ஒப்பா னொருமகனே நால்வ
ரொருவயிற்றுட் பிறந்தா னென்ன
நக்கான் பெருஞ்சான்றே னம்பிபோல்
யாருலகி லினியா ரென்ன
மிக்கா னுரைப்பதுவு மிக்கதே
போலுமால் வினவிக் கேட்பேன்
றக்காய் குறித்த துரையென்றான்
றானுரைப்பக் கேட்கின் றானே.

(இ - ள்.) ஒப்பான் ஒரு மகனே - ஒழுக்கமுடைய அவ்வொரு மகனே; நால்வர் ஒரு வயிற்றுள் பிறந்தான் என்ன - நான்கு தாய்மாரது ஒரு வயிற்றிலே பிறந்தான் என்று கூறினுகை; நம்பிபோல் உலகில் இனியார் யார் என்னப் பெருஞ் சான்றோன் நக்கான் - இந்த நம்பியைப்போல் உலகினில் இனியார் யாவரென்று கூறி அறிவில்லாதவன் நகைத்தான்; மிக்கான் உரைப்பதுவும் மிக்கதுவே போலுமால் வினவிக்கேட்பேன் - (நகைத்தவன் பிறகு) அறிவு மிக்கவன் கூறியமொழியும் மிக்கது போலே யிராநின்றது, யான் வினவிக்கேட்பேன் (என்றுகருதி); தக்காய் குறித்தது உரை என்றான் - நல்லோனே! நீ கூறியதன் கருத்தை விளக்குக என்று வினவினுன்; உரைப்பத் தான் கேட்கின்றான் - அவனுரைப்பத் தான் கேளாநின்றான்.

(வி - ம்.) பிறந்தான் என்ன-பிறந்தான் என்று கூறினுகைக் கருதி நக்கான் என்க. பெருஞ்சான்றோன் என்றது குறிப்புமொழி - அறிவிலாதான் என்றவாறு.

வினவிக் கேட்பேன்: ஒரு சொல். குறித்தது: நின் கூற்றாற் குறிக்கப்பட்டபொருள். (கஙஙு)

கநசரு. நற்றானஞ் சீல நடுங்காத்
தவமறிவர் சிறப்பிந் நான்கு
மற்றாங்குச் சொன்ன மனேவியரிந்
நால்வரவர் வயிற்றுட் டோன்றி
யுற்றா னொருமகனே மேற்கதிக்குக்
கொண்டுபோ முரவோன் றன்னைப்
பெற்றார் மகப்பெற்றா ரல்லாதார்
பிறர்மக்கள் பிறரே கண்டீர்.

(இ - ள்.) நல் தானம் சீலம் நடுங்காத் தவம் அறிவர் சிறப்பு இந்நான்கும் - நல்ல தானமும் ஒழுக்கமும் அசைவில்லாத தவமும் இறைவர் வழிபாடும் ஆகிய இந்த நான்கும்; ஆங்குச் சொன்ன மனேவியர் - முன் கூறிய மனேவியர்; இந்நால்வரவர் வயிற்றுள் தோன்றி - இந்நால்வர் வயிற்றினும் பிறந்து; உற்றான் ஒரு மகனே மேற்கதிக்குக் கொண்டு போம் உரவோன் - பயன் தருவானுகிய நல்வினே யென்கின்ற அவ்வொரு மகனே உயர் கதிக்குக் கொண்டு போவானுகிய உரவோன்; தன்னைப் பெற்றார் மகப்பெற்றார் - அவனேப் பெற்றவரே மகவைப்பெற்றவராவார்; அல்லாதார் பிறர் - மற்றோர் மகப்பெறார் ஆவர்; மக்கள் பிறரே கண்டீர் - பெற்ற மக்களும் அவர் மக்களல்லர் கண்டீர்.

(வி - ம்.) நால்வரவர் என்புழி அவர் என்பது வாளா பகுதிப் பொருளாய் நின்றது. மேற்கதிக்குக் கொண்டுபோம் உரவோன் என்

றமையால் அது நல்வினை என்பது பெற்றும். உரவோன் - அறிவுடையோன்; ஆற்றலுடையோனுமாம். அல்லாதார் - அவ்வுரவோனைப் பெற மாட்டாதார். பிறர் : மகப்பெறுதார்.

மக்களும் பிறரே எனற்பால உம்மை தொக்கது. (கங-ச)

கருசரு. படநாகந் தோலுரித்தாற் போற்றுறந்து
கண்டவர்மெய் பனிப்ப நோற்றிட்
டுடனாக வைம்பொறியும் வென்றார்க்
குவந்தீத லான மாகுந்
திடனாகத் தீந்தேனுந் தெண்மட்டு
முயிர்க்குழா மீண்டி நிற்றற்
கிடனாகு மூனுமிவை துறத்தலே
சீலமென் றுரைத்தார் மிக்கார்.

(இ - ள்.) படநாகம் தோல் உரித்தாற்போல் துறந்து - படத்தையுடைய நாகம் தோல் உரித்தாற் போலே அகமும் புறமும் தூயவாகத் துறந்து; கண்டவர் மெய் பனிப்ப நோற்றிட்டு - பார்த்தோர் உடல் நடுங்கும்படி நோற்று; உடன் ஆக ஐம்பொறியும் வென்றார்க்கு - தம் வயத்தனவாக ஐம்பொறிகளையும் வென்றவர்கட்கு; உவந்து ஈதல் தானமாகும் - விரும்பிக் கொடுத்தல் தானம் ஆகும்; தீம் தேனும் தெள் மட்டும் உயிர்க்குழாம் ஈண்டி நிற்றற்கு இடன் ஆகும் ஊனும் இவை - இனிய தேனும் தெளிந்த கள்ளும் உயிர்த்திரள் கூடி நிற்பதற்கு இடமாகிய ஊனும் ஆகிய இவற்றை; திடன் ஆகத் துறத்தலே சீலம் என்று மிக்கோர் உரைத்தார் - உறுதியுற நீக்குதலே ஒழுக்கம் என்று பெரியோர் கூறினர்.

(வி - ம்.) நாகம் தோலுரிக்கும்போது தன் அகத்துள்ள நஞ்சினையும் உமிழ்ந்துவிடும் என்பது பற்றி நச்சினார்க்கினியர், "படநாகந் தோலுரித்தாற் போலே அகமும் புறமும் தூயவாகத் துறந்து," என நுண்ணிதின் உரை விரித்தனர். "வாளரவு தோலும் விடமு நீத்தென்ன" (கஉ ; கஅ) என்றார் சூளாமணியாரும். (கங-கு)

கருசஎ. ஓவா திரண்டுவவு மட்டமியும்
பட்டினிவிட் டொழுக்கங் காத்த
லாவாத் தவமென்றார் தண்மதிபோன்
முக்குடைக்கீழ்த் தாதை பாதம்
பூவே புகைசாந்தஞ் சுண்ணம்
விளக்கிவற்றாற் புனைத லுளு
மேவா விவைபிறவும் பூசனையென்
றீண்டியநூல் கரைகண் டாரே

(இ - ள்.) ஈண்டிய நூல் கரை கண்டார் - அறம் பொருந் திய நூல்களைக் கற்றுத் துறைபோய துறவோர்; ஓவாது இரண்டு உவவும் அட்டமியும் பட்டினி விட்டு ஒழுக்கம் காத்தல் தாவாத் தவம் என்றார் - இரண்டு உவாவிலும் அட்டமியிலும் பட்டினி யிருந்து ஒழிவின்றி ஒழுக்கங் காத்தலைக் கெடாத தவம் என் றனர்; தண்மதிபோல் முக்குடைக்கீழ்த் தாதை பாதம்-குளிர்ந்த மதியைப்போன்ற முக்குடையின்கீழ் எழுந்தருளிய இறைவன் அடியை; பூவே புகை சாந்தம் சுண்ணம் விளக்கு இவற்றாற் புனைதல்-பூவும் நறுமணப் புகையும் சந்தனமும் சுண்ணப்பொடி யும் விளக்கும் என்ற இவற்றாற் புனைதலையும்: இவை பிறவும் பூசனையென்று ஏவா - இவைபோன்றவற்றையும் பூசனை எனக் கூறினர்.

(வி - ம்.) இரண்டுவவு - அமாவாசையும், பூரணையும். அட்டமி - எட்டாநாள். உவவு - பதினான்காநாள் என்பாருமுளர். உவா : குறி யதன்கீழ் ஆகாரம் குறுகி உகரமேற்று உவவு என்றாயிற்று. சண்டார் பூசனை என்று ஏவா, தவம் என்றார் என இயைக்க. (கஙகூ)

கருசஅ. இந்நால்வர் துணைவியராக் காதன்
மகனிவனு வுடையார் போகிப்
பொன்னார மார்பிற் புரந்தரராய்ப்
பூமி முழுது மாண்டு
மன்னாகி முக்குடைக்கீழ் வாமன்
சிறப்பியற்றி வரம்பி லின்பம்
பின்னு விளைவித்துப் பிறவா
வுலகெய்தல் பேச லாமே.

(இ - ள்.) இந்நால்வர் துணைவியர் ஆ - இந்த நான்கு பேரும் மனைவியராக; இவன் காதல் மகன் ஆ - இவனே அன் புறும் மகனாக; உடையார் போகி - உடையவர் துறக்கத்தே சென்று; பொன் ஆர மார்பின் புரந்தரராய் - பொன் மாலை மார் பினையுடைய இந்திரராய் அத்துறக்கத்தை யாண்டு; மன் ஆகி பூமி முழுதும் ஆண்டு - பின்னர்ப் பேரரசராய் நிலமுழுதும் ஆண்டு; முக்குடைக்கீழ் வாமன் சிறப்பு இயற்றி - முக்குடைக் கீழ் இறைவனுக்கு வழிபாடு முதலிய சிறப்புக்களைச் செய்து; வரம்புஇல் இன்பம் பின்னு விளைவித்து-'அதீதாவத்தை' என்னும் வரம்பிலா இன்பத்தைப் பிறகு விளைவித்து; பிறவா உலகு எய்தல் பேசல் ஆம் - பிறவாப் பேரின்ப உலகாகிய வீட்டைப் பெறுதல் உண்மையென்றே உரைக்கலாம்.

(வி - ம்.) வாமன் - அருகக்கடவுள் வரம்பிலின்பம் : இஃது அதீ தாவத்தை என்றும் அருகந்தாவத்தை என்றும் வழங்கப்படும். துணைவி

யரா, மகணிவனு, பின்னு என்னும் மூன்றிடத்தும் ஈற்றுக் ககரமெய்யும் அகரவுயிருங் கெட்டன. (கந௨எ)

கருசசூ. மட்டார்பூம் பிண்டி வளங்கெழு
முக்குடைக்கீழ் மாலே கண்டீர்
முட்டாத வின்பப் புதாத்திறக்குந்
தாளுடைய மூர்த்தி பாத
மெட்டானும் பத்தானு மில்லாதார்க்
கிவ்வுலகி லின்ப மேபோ
லொட்டாவே கண்டீர் வினையவனைத்
தேறுதார்க் குணர்ந்தீ ரன்றே.

(இ - ள்.) மட்டு ஆர் பூம் பிண்டி வளம் கெழும் முக்குடைக்கீழ் மாலே - தேன் பொருந்திய மலர்ப் பிண்டியின் அடியில் முக்குடைக்கீழ் எழுந்தருளிய அருகப் பெருமானே; முட்டாத இன்பப் புதாத்திறக்கும் தாள் உடைய மூர்த்தி கண்டீர் - தடையற்ற இன்ப வுலகிற் கதவைத் திறக்குந் தாழாகிய திருவடியை உடைய தலைவன் என்று அறிவீர்களாக!; எட்டானும் பத்தானும் இல்லாதார்க்கு இவ்வுலகில் இன்பமே போல் - எட்டேனும் பத்தேனும் இல்லாதவர்கட்கு இவ்வுலகிலே இன்பம் இல்லாததைப் போல்; அவனைத் தேறுதார்க்கு வினை ஒட்டா கண்டீர் - அவனைத் தெளியாதார்க்கு நல்வினைகள் ஒட்டா என்று அறிவீர்; உணர்ந்தீர் அன்றே - இத்தன்மையை உணர்ந்தீர் அல்லவோ?

(வி - ம்.) பிண்டி - அசோகு மால் - அருகன். முட்டாத - தடையில்லாத. புதா - கதவு. தாள் - தாழ்ப்பாள்.

புதாத்திறக்கும் தாளாகிய பாதமுடைய மூர்த்தி மாலே என்க. எட்டானும் பத்தானும் என்றது சிறிதேனும் என்னும் பொருள்பட நின்றது. இவற்றின் உள்ள ஆனும் உம்மும் அசைகள் என்பர் நச்சினார்க்கினியர். (கந௨அ)

கருகூ0. வேற்றுவ ரில்லா நுமரூர்க்கே
செல்லினும் வெகுண்டீர் போல
வாற்றுணுக் கொள்ளா தடிபுறத்து
வைப்பீரே யல்லிர் போலுங்
கூற்றங்கொண் டோடத் தமியே
கொடுநெறிக்கட் செல்லும் போழ்தி
ஞற்றுணுக் கொள்ளீ ரழகலா
லறிவொன்று மிலிரே போலும்.

(இ - ள்.) வேற்றுவர் இல்லா நுமர் ஊர்க்கே செல்லினும்- அயலார் இல்லாத நும் உறவினர் ஊருக்கே சென்றாலும்; வெகுண்டீர் போல ஆற்று உணாக்கொள்ளாது அடிபுறத்து வைப் பீரே அல்லீர் போலும் - அவருடனே சினந்து ஆண்டுச் செல்லா தீர் போலப் பொதிசோறு கைக்கொள்ளாமற் புறத்தே ஓர் அடி யிட்டிடீர் (இத்தன்மையரான நீவிர்); கூற்றம் கொண்டு ஓடத் தமியே கொடுநெறிக்கண் செல்லும போழ்தின் - கூற்றுவன் நும்மைக் கட்டிக்கொண்டு ஓடத் தனியே கொடிய நெறியிலே செல்லும்போது; ஆற்று உணாக் கொள்ளீர் - (உண்ணும் ஊணுக்குப்) பொதிசோறு இப்போதே தேடிக்கொள்கின்றிலீர் (ஆதலின்); அழகலால் அறிவு ஒன்றும் இலிரே போலும் - அழ கன்றி அறிவு சிறிதும் உடையீர் அல்லீர் போலும்!

(வி - ம்.) 'வேற்றுவர் இல்லா நுமர் ஊர்க்கே' என்றதனால் நும ரில்லா வேற்றுவர் ஊர்க்கே கூற்றங்கொண்டோட எனவும், 'கொடு நெறிக்கண்' என்றதனால், நுமரூர்க்கு நன்னெறிக்கண் செல்லினும் என வும் விரித்தோதுக. அறிவொன்றும் என்புழி ஒன்றும் என்பது சிறிதும் என்பதுபட நின்றது.

வைப்பீரே யல்லீர், இலிரே என வினைமுடிவு செய்க: இன், ஏழனுரு பாதல் புறனடையாற் கொள்க. ஏ: அசை. போலும்: உரையசை. (கஙக)

கஙுச. அளைவது காம மடுநறவு
நெய்யொழுகு மூனும் பின்னு
விளைவது தீவினையே கண்டீ
ரிவைமூன்றும் விடுமி னென்றாற்
றளையவிழ் கோதையார் தாமஞ்சேர்
வெம்முலைபோல் வீங்கிக் கண்சேந்
துளைய வுறுதி யுரைப்பாரை
யோஒபாவ முணரா ரேகாண்.

(இ - ள்.) அளைவது காமம் அடுநறவு நெய் ஒழுகும் ஊனும் பின்னு - தோய்வதாகிய காமத்தானும் துன்புறுத்தும் கள்ளா னும் நெய் ஒழுகும் ஊனானும் பின்னர்; விளைவது தீவினையே கண் டீர்-உண்டாகும் பயன் தீவினையே என்றறிவீர்; இவை மூன்றும் விடுமின் என்றால் - இவை மூன்றையும் விடுங்கோள் என்று பிறர்க்குக் கூறினால்; தளை அவிழ் கோதையார் தாமம் சேர் வெம் முலைபோல் வீங்கிக் கண்சேந்து - முறுக் கவிழ்ந்த மலர் மாலை யாரின் வெவ்விய முலைபோற் பொருமிக் கண்சிவக்கச் சினந்து; உளைய உறுதி உரைப்பாரை உணரார்காண் - தாம் வருந்த நன்மை கூறுவோரை அறியாராயினர்காண்!; ஓ! பாவம் - ஓ! இஃதொரு பாவம் இருந்தபடி என்!

(வி - ம்.) அளைவது - நுகர்வது. அடுநறவு - காய்ச்சுகின்ற கள்ளு மாம். பின்னுக என்பதன் ஈறுகெட்டது. (கசுO)

கருருஉ. இழுதன்ன வெண்ணிணத்த செந்தடிக்கே
யேட்டைப்பட் டிரும்பிற் போர்த்த
பழுதெண்ணும் வன்மனத்தா ரோட்டைமரச்
செவியர் கேளார் பால்போன்,
றொழுகியமு தூறுநல் லறத்தை
யோர்கிலரூன் செய்கோட் டக்குக்
கழுகுண்ண வள்ளூர மேசுமந்து
புள்ளிற்கே புறஞ்செய் கின்றார்.

(இ - ள்) ஊன்செய் கோட்டக்கு - ஊனாற் செய்த உடம்பிற்கு; கழுகு உண்ண வள்ளூரமே சுமந்து புள்ளிற்கே புறம் செய்கின்றார் - கழுகு உண்ணுமாறு அவ்வூனையே சுமந்து அக் கழுகிற்கே புறம் செய்வோராவர்; இழுது அன்ன வெள் நிணத்த செந்தடிக்கே ஏட்டைப்பட்டு - நெய்யனைய வெண்மை யான நிணமுடைய செவ்வூனைப்பெற வேண்டுமென்றே இளைத்து; இரும்பிற் போர்த்த பழுது எண்ணும் வன்மனத்தார் - இரும் பினாலே போர்த்த குற்றத்தை எண்ணும் வலிய மனத்தராய்; ஓட்டை மரச் செவியர் கேளார் - ஓட்டையான மரச் செவியராய் அறத்தைக் கேளார்; பால் போன்று ஒழுகி அமுது ஊறும் நல் லறத்தை ஓர்கிலர் - பால் போலப் பெருகி அமுது ஊறும் நல் லறத்தை அறிகிலர்.

(வி - ம்.) இழுது - நெய். இது நிணத்திற்குவமை. செந்தடி-சிவந்த தசை. ஏட்டைப்படுதல் - இளைத்தல்; எண்மை என்னும் பண்படியாகப் பிறந்த சொல்.

பழுது - குற்றம். 'பழுதெண்ணும் மந்திரியின்' (குறள். சுஙக). ஊனாற் செய்த உடம்பிற்கு ஊனையே சுமந்து கழுகுக்கே புறத்தைச் செய்கின்றவர் வன்மனத்தராய்ச் செவியராய்க் கேளார்; தாமே அறிவ துஞ் செய்யார் என்க. செய்கின்றவர் தாமே அறிவதுஞ் செய்யார்; கேளார் என மாற்றினும் நன்றே. கோட்டக்குப் புறஞ்செய்கின்றார், புள் ளிற்கே புறஞ்செய்கின்றார் என இரண்டிடத்துங் கூட்டுவர் நச்சினார்க் கினியர்.

ஓட்டையென்றார் உட்கொள்ளாமையின். வள்ளூரம் - ஊன். (கசக)

கருருங. கையாற் போதித்துணையே காட்டக்
கயற்கண்ணா ளதனைக் காட்டா
ளையா விளாம்பழமே யென்கின்றீ
ராங்கதற்குப் பருவ மன்றேன்

செய்கோ வெனச்சிறந்தாள் போற்சிறவாக்
கட்டுரையாற் குறித்தவெல்லாம்
போய்யே பொருளுரையா முன்னே
கொடுத்துண்டல் புரிமின் கண்டீர்.

(இ - ள்.) கையால் பொதித் துணையே காட்ட - (இறக்கும் நிலையிலுள்ள ஒருவன்) மொழியின்றிக் கையாலே பொருள் திரளின் அளவைக் காட்டினுகை; கயல் கண்ணாள் அதனைக் காட்டாள் - கயல்போலும் கண்ணாளாகிய மனைவி அதனைக் காட்டாளாய்; ஐயா விளாம்பழமே என்கின்றீர் - ஐயனே! விளாம்பழமே வேண்டும் என்கின்றீர்; ஆங்கு அதற்குப் பருவம் அன்று - அது தருதற்கு விக்குள் வந்து அடுத்திருப்பதாற் பருவம் ஆகாது; என் செய்கோ என - என் செய்வேன் என்று; சிறந்தாள் போல் சிறவாக் கட்டுரையால் குறித்த எல்லாம் - சிறந்தவளைப்போல நடித்துச் சிறவாத கட்டுரையினாலே, அவன் குறித்த பிறவற்றிற் கெல்லாமும்; பொய்யே பொருளுரையா முன்னே - பொய்ப் பொருள் கூறுமுன்னமே; கொடுத்து உண்டல் புரிமின் - கொடுத்து உண்பதை விரும்புங்கோள்.

(வி - ம்.) உரையாடாவண்ணம் "நாச்செற்று விக்குள்மேல்" வந்தமையின் பொதித்துணையைக் கையாற் காட்டினன் என்பது கருத்து.

அதனை - அப்பொற்பொதியினை. பருவம் - உண்ணுதற்கேற்ற செவ்வி. சிறந்தாள் போல் என்றது சிறவாதவளாயிருந்தும் என்பது பட நின்றது. செய்கு : தன்மை ஒருமை எதிர்கால வினைமுற்று.

இவ்வாறு நீயிர் ஈட்டியவற்றைக் கொன்னே இழப்பதன் முன்னே கொடுத்துண்மின் என்றவாறு. (௧௪௨)

வேறு

௧௨௫௪. பனிமதி யின்கதிர் பருகு மாம்பல்போன்
முனிமதி முகத்தியர் முறுவ னம்பினுர்
துனிவளர் கதிகளுட் டோன்றி நாடகங்
கனியநின் றூடுவர் கடையில காலமே.

(இ - ள்.) பனிமதி கதிர் பருகும் ஆம்பல்போல் - குளிர்ந்த திங்களின் கதிரை விரும்பிப் பருகும் அல்லிபோன்று; மதிமுனி முகத்தியர் முறுவல் நம்பினோர் - திங்களை மாறுபடும் முகமுடைய மங்கையரின் முறுவலுடைய வாயை விரும்பினோர்; துனிவளர் கதிகளுள் தோன்றி - துன்பந்தரும் தீய கதிகளிலே தோன்றி; கடைஇல் காலம் நாடகம் கனிய நின்று ஆடுவர் - அளவில்லாத காலமாக, வெவ்வேறுடம்பெடுத்து முற்றத்திரிவர்.

(வி - ம்.) மதிமுனிமுகத்தியர் என மாறுக. ஆம்பல் : ஒரு நீர்ப்பூ ; இது நிலவில் மலருமியல்புடையதாகலின் மதியின் கதிர் பருகும் ஆம்பல் என்றார்.

முறுவல் என்றது மகளிர் இன்பத்திற்கு ஆகுபெயர். துனி-துன்பம். கதி - நகரகதி முதலியன. வெவ்வேறு யாக்கைகொண்டுழலுதலால் நாடகம் என்றார்.

மதியின் கதிரை விரும்பும் ஆம்பல்போல் முகத்தியர் முறுவலை விரும்பினோர் எனக் கோடலே நூலாசிரியர் கருத்தோடியையும் எனல் அடுத்த செய்யுளாலும் உணரலாம் (கசாங)

கடுருடு. நிழனிமிர் நெடுமதி நிகரி றீங்கதிர்ப்
பழனவெண் டாமரை பனிக்கு மாறுபோற்
குழனிமிர் கிளவியார் கோல மஞ்சினர்
தொழநிமிர்ந் தமரராய்த் துறக்க மாள்வரே.

(இ - ள்.) நிழல் நிமிர் நெடுமதி நிகர் இல் தீம்கதிர் - ஒளி மிக்க பெரிய திங்களின் ஒப்பற்ற இனிய கதிருக்கு; பழனம் வெண் தாமரை பனிக்கும் ஆறுபோல் - வயலில் உள்ள தாமரை வருந்தும் தன்மைபோல; குழல் நிமிர் கிளவியார் கோலம் அஞ்சினர் - குழலிசையினும் மிக்க இனிய மொழியாரின் ஒப்பனைக்கு அஞ்சினோர்; தொழ நிமிர்ந்து அமரராய்த் துறக்கம் ஆள்வர் - பலரும் தொழுமாறு மிக்கு வானவராய்த் துறக்கத்தை ஆள்வர்.

(வி - ம்) நிழல் - ஒளி. பழனம் - கழனி. பனித்தல் - வருந்துதல். கோலம் அஞ்சினர் என்றது, அவர் இயல்பாகவே விரும்புதற்குரியரல்லர் அவர்தம் கோலமே விரும்பச்செய்வது, அதனை அஞ்சினோர் என்பதுபட நின்றது. (கசாச)

வேறு

கடுருசு. இன்னவா றுறுதி கூறி
யெரிமணி வயிர மார்ந்த
பொன்னவிர் கலங்க ளெல்லாம்
பொலிவொடு புகன்று நீட்டிச்
சென்மினீ ரென்று கூற
வலங்கொண்டு தொழுது சென்றான்
வின்மரீஇ நீண்ட தோளான்
வெயிற்கட நீந்த லுற்றான்.

(இ - ள்.) இன்ன ஆறு உறுதி கூறி - இங்ஙனம் நன்மையைக் கூறி; எரிமணி வயிரம் ஆர்ந்த பொன் அவிர் கலங்கள் எல்லாம் - ஒளிவிடும் மணியும் வயிரமும் பொருந்திய பொன்

விளங்குங் கலன்களையெல்லாம்; பொலிவொடு புகன்று நீட்டி - அழகுற விரும்பிக்கொடுத்து; நீர் சென்மின் என்று கூற - நீர் போமின் என்று கூற; வலம்கொண்டு தொழுது சென்றான் - அவன் வலம் வந்து வணங்கிப் போயினான்; வில் மரீஇ நீண்ட தோளான் வெயில் கடம் நீந்தல் உற்றான் - வில் பயின்று நீண்ட தோள்களை உடையவன் வெம்மையுறும் காட்டுவழியே செல்லத் தொடங்கினான்.

(வி - ம்) இன்னவாறு - இவ்வாறு. உறுதி: உறுதிப்பொருள். தனக்கு ஞானாசிரியனாகிவிட்டபடியால் வலங்கொண்டு தொழுது சென்றான் என்பது கருத்து. கடம் - காடு. (௧௬)

கேமசரியார் இலம்பகம் முற்றிற்று.



—